# தமிழிசைப் பேரகராதி

## (சொற்களஞ்சியம்)

நா. மம்மது

இன்னிசை அறக்கட்டளை

# தமிழிசைப் பேரகராதி

## சொற்களஞ்சியம்)

தொகுப்பாசிரியர்

**நா. மம்மது**

இன்னிசை அறக்கட்டளை
மதுரை

நூலின் பெயர்: தமிழிசைப் பேரகராதி (சொற்களஞ்சியம்)

நூற்பொருள்: இசையியல்

நூலாசிரியர்: நா. மம்மது

முதல் பதிப்பு: கி.பி. 2010

பக்கம்: 498

அளவு: (8"x11") A4

படிகள்: 2000

வெளியீடு: இன்னிசை அறக்கட்டளை,
இன்னிசை இல்லம்,
7-12/28, பனையடியான் கோயில் தெரு,
மகாத்மா காந்தி நகர், மதுரை - 625014



ஒளியச்சும்
வடிவமைப்பும்: யாழினி & சபியா படைப்பகம்

அச்சிட்டோர்: **ஸ்ரீ அருணா பிரிண்டர்ஸ், சிவகாசி.**
**செல்: 95435 84271, 97862 09110**

Thamizhisaipperakarathi (Lexicon on Tamil Music) ● Author: N. Mammathu ● First Edition 2010 Published by Innisai Trust, Innisai Illam, 7-12/28, Panayadiyan Koil Street, Mahathma Gandhi Nagar, Madurai - 625014, Tamilnadu, India ● +91-452-2640689, +91-9442984589 ● email: tamilinnisai@gmail.com ● web: www.tamilinnisai.org

# பொருளடக்கம்

# அறிமுகவுரை

பேரா. முனைவர் கு.ஞானசம்பந்தன்
தமிழ்த்துறை, தியாகராசர் கல்லூரி
மதுரை

நம் தமிழ்மொழியின் பழமையும் பெருமையும் மிகுந்த, இரண்டாயிரத்து எழுநூறு ஆண்டுகள் பழமையுடைய முதல் நூல் தொல்காப்பியம் என அறிஞர்கள் வரையறை செய்கின்றனர். இத்தொல் காப்பியம் என்னும் இலக்கண நூலுக்கு முன்னரே பற்பல இலக்கியங்கள் படைக்கப்பட்டிருக்கலாம் என்பதைத் தொல்காப்பியனாரின் மொழிவழி அறிகிறோம்.

"**இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்ப**" எனும் நன்னூலாரின் கூற்றுப்படி பழந்தமிழ் இலக்கியங்கள் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே படைக்கப்பட்டிருக்கலாம் என்பது துணிபு.

இயல், இசை, நாடகம் எனும் முக்கூறுகளையுடைய நம் மொழியில் நாடகத்திற்கு அடுத்து இசையே பழமையுடையதாகக் கருதப்படுகிறது. ஆதலால் தமிழிசையின் தோற்றமும் மிகத் தொன்மையுடையதென எண்ணத் தோன்றுகிறது.

இத்தகைய பழம்பெருமை வாய்ந்த தமிழிசை குறித்த இசைச்சொல்அகராதி தமிழிலக்கிய வரலாற்றில் முறையாகத் தொகுக்கப் படவில்லையே எனும் எண்ணம் தமிழாய்ந்த பெருமக்களின் நெஞ்சத்தில் இருந்து வந்தது. நிற்க.

2005ஆம் ஆண்டு அமெரிக்கத் தமிழ்ச் சங்கங்களின் கூட்டமைப்பான ஃபெட்னாவின் (FeTNA) மாநாடு டெக்ஸாஸ் மாநிலத்தில் டல்லஸ் மாநகரில் நடந்தது. அம்மாநாட்டினைப் பொறுப்பேற்று நடத்திய தமிழகத்தைச் சேர்ந்த அமெரிக்கச் செல்வந்தரும், அறிஞரும், தொழிலதிபருமான திருமிகு பால் சி. பாண்டியன் அவர்களின் அழைப்பின் பேரில் அம்மாநாட்டில் கலந்துகொண்டு சொற்பொழி வாற்றும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

அப்போது மாநாட்டில் கலந்துகொண்ட தமிழறிஞர்களுக்கு திருமிரு பால் சி பாண்டியன் அவர்கள் தம் இல்லத்தில் நல்விருந்து நல்கினார். அவ்விருந்தில் அவரோடு நெடுநேரம் உரையாடும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. தமிழினத்திற்கும், தமிழ் மொழிக்கும், வருங்காலத்தினருக்கும் பயன்படுகிறவகையில் 'நிலைத்த புகழுடைய செயல்கள்' ஏதேனும் செய்தல் வேண்டும் என்ற தம் உளக் கருத்தினை வெளியிட்டார். அங்கிருந்த அறிஞர் பெருமக்களும் அக்கருத்தைவரவேற்றனர். அப்போது நான் அவர்களிடத்தில். "எங்களது பேராசிரியரும் பல்துறைவித்தகருமான முனைவர் தொ. பரமசிவன் அவர்களோடு நான் உரையாடுகிறபோதெல்லாம் தமிழ்க்கலைக்களஞ்சியங்கள் போன்று தமிழ் இசைச் சொற்கள் குறித்த அகராதி ஒன்று தொகுக்கப்படல் வேண்டும் என்ற அவரது எண்ணப்படியும், நெடுநாட்களாக என் ஆழ்மனத்தில் இருந்த விருப்பப்படியும், தமிழிசைப்பேரகராதி ஒன்றை தொகுத்து வெளியிடலாமே" என நான் கூறினேன்.

இக்கருத்தினைக் கேட்டு மகிழ்ந்த திரு. பால் பாண்டியன் அவர்கள் இவ்வரிய செயலுக்கான பொருட்செலவு முழுவதையும் தாமே ஏற்றுக்கொள்வதாகப் பெருமகிழ்வோடு கூறினார். இந்த அரும் பெரும்பணியினை எவர் மூலமாக நிறைவேற்றுவது? என அவர் என்னிடத்தில் கேட்டபோது, என் நினைவில் வந்தவர் நற்றமிழ் அறிஞரும், பன்னெடுங்காலமாகத் தமிழிசை ஆராய்ச்சியில் ஆழங்கால் பட்டவருமான திரு. நா.மம்மது அவர்களே ஆவார்.

தமிழிசை அறிஞர் நா.மம்மது அவர்கள் தமிழ்மூதறிஞரும் இசைவாணருமாகிய வீ.ப.கா. சுந்தரம் அவர்களுடன் உடனிருந்து இசை ஆராய்ச்சி செய்தவர் என திரு. பால். சி. பாண்டியன் அவர்களிடம்

நான் சொல்ல, அவர் மிகுந்த மகிழ்வோடு இசைப்பேரகராதி தொகுக்கும் பணியினை அவரிடத்திலேயே ஒப்படைக்கலாம் என முன்மொழிந்தார்.

பின்னர் நான் திரு. மம்மது அவர்களிடத்தில் இப்பணியைத் தொடங்குமாறு வேண்டிக் கொள்ள, அவரும் கனிந்த மனத்தோடும் பெருமிதத்தோடும் இவ்வரிய பணிக்கான வேலைகளைத் தொடங்கினார்.

இப்பணிக்காகவே இன்னிசை அறக்கட்டளை தொடங்கப்பட்டது. திரு. பால் பாண்டியன் அவர்கள் புரவலராகவும், ஒருங்கிணைப்பாளராக நானும், தொகுப்பாசிரியராக திரு. நா.மம்மது அவர்களும் பொறுப்பேற்கப் பேரகராதிப்பணி தொடங்கியது.

கல்வித்துறை, இசைத்துறை, கல்வெட்டு மற்றும் தொல்லியல்துறை எனப் பல்துறை சார்ந்த பத்திற்கும் மேற்பட்ட அறிஞர் பெருமக்களைக் கொண்ட கருத்தாளர்கள் குழு ஒன்று அமைக்கப்பட்டது. அக்குழுவில் தமிழறிஞர்களான திருவாளர்கள் தொ. பரமசிவன், தமிழண்ணல், கி.நாச்சிமுத்து, வீ. அரசு, சு. இராமர் இளங்கோ மற்றும் இசைத்துறைப் பேரறிஞர்களான இ. அங்கயற்கண்ணி, இரா. திருமுருகன், நாடகத்துறைப் பேராசிரியர் மு.இராமசாமி ஆகியோர் உடனின்று உதவ முன்வந்தனர்.

திரு.மம்மது அவர்களின் இடையறாத பணியும், ஆண்டுக்கொருமுறை கூடிய கருத்தாளர்களின் கலந்துரையாடலும் இப்பணியின் செயல்பாட்டிற்கு வேகம் கூட்டின.

முதற்கட்டமாக ஈராயிரம் சொற்களைமட்டும் தொகுத்து அகராதியை வெளியிடலாம் எனத் திட்டமிடப்பட்டது. ஆயின், ஆழமும் வளமும் மிகுந்த தமிழிசையின் சொற்கூட்டம், மூவாயிரம், நான்காயிரம், ஐந்தாயிரம் என வளர்ந்து கொண்டே சென்றது.

திரு பால் பாண்டியன் அவர்கள் "கிடைத்திருக்கும் அத்தனை சொற்களையும் தொகுத்து அகராதி வெளியிட வேண்டும்; பொருட் செலவைக் குறித்துக் கவலை கொள்ள வேண்டாம்" என விருப்பம் தெரிவித்தார். அவரின் விருப்பப்படி 'அ', 'க' வரிசையில் முதற்றொகுதியின் முதற்பகுதியும் 'ச', 'வ' வரிசையில் முதற்றொகுதியின் இரண்டாம் பகுதியும் கொண்டு வர முதலில் முடிவு செய்யப்பெற்றது. தற்போது முழுமையாக, ஒரே தொகுதியாகக் கொண்டு வரப்படுகின்றது.

இரண்டாம் தொகுதி தமிழ்ப் பண்களின் தொகுதியாகவும் அப்பண்களை இசையோடு பாடி ஒலிக்குறுந் தகடாகக் கொண்டு வரவும் திட்டமிடப்பட்டுள்ளது.

தமிழில் வந்துள்ள இவ்வரிய இசைப் பேரகராதி செம்மையான அச்சுடனும், வணிக நோக்கமின்றியும், அனைவரையும் சென்றடையுமாறும் குறைந்த விலையுடன் வெளியிடப் பெற்றுள்ளது.

தமிழரின், தமிழமுதாம் இசைப்பண்களின் வரலாற்றினை, இவ்விசைப்பேரகராதியைக் கற்றுணர்வோர் அறிந்தறிந்து இன்புறலாம். இந்நூலின் பெருமையைச் சங்கப் புலவராகிய பொருந்தில் இளங்கீரனாரின் மொழியில் கூறுவதாக இருந்தால்,

**"விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்"**

**- கு.ஞானசம்பந்தன்.**

# அணிந்துரை

பேரா..முனைவர் **தொ. பரமசிவன்**
ஆட்சிக்குழு உறுப்பினர்,
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

தமிழ்மொழி இலக்கியம் 20 நூற்றாண்டுக்காலத் தொன்மையும் தொடர்ச்சியும் உடையது. ஆனால் இந்த இலக்கியப் பரப்பினையும் இதன் ஆழத்தினையும் அளந்தறியும் கருவி நூல்கள் தமிழில் போதுமான அளவு பிறக்கவில்லை.

கருவி நூல்கள் என நாம் குறிப்பிடுவனவற்றுள் முதன்மையானது அகராதி நூல்களாகும். அண்மையில் கிரகோரி ஜேம்ஸ் என்ற அமெரிக்கர் தமிழ் அகராதிகளின் வரலாறு (A History of Tamil Dictionaries) என்ற ஆங்கில நூலை எழுதியுள்ளார். தொல்காப்பிய உரியியல் தொடங்கி ஆராயும் இந்த நூல் இந்தியாவிற்கு வெளியேயும் உள்ள 14 நாடுகளின் நூலகங்களைப்பார்த்து ஆக்கப்பட்டது.

உருசிய மொழியிலிருந்து ஆங்கிலத்தில் ஆக்கம் செய்யப்பட்டுள்ள மற்றுமொரு சமய அகராதியின் பெயர் நம்புபவர்களுக்கும் நம்பாதவர்களுக்குமான அகராதி' (A Dictionary of Believers and Non -Believers ) என்பதாகும்.

ஐரோப்பியர்களின் மொழி, பண்பாட்டு வளர்ச்சிக்கு அறிவியல் கருவிகளோடு இந்த வகையான கருவி நூல்களும் காரணம் என்பதை நாம் மறந்து விடலாகாது.

இப்போது நா. மம்மது அவர்களால் ஆக்கப் பெற்று வெளிவரும் இந்த அகராதியின் பெயர் 'தமிழிசைப் பேரகராதி' என்பதாகும். ஒரு சொல்லுக்கு ஒரு பொருள் என்பதோடு அமையாது பொருள் விளக்கத்தோடும் போதிய எடுத்துக்காட்டுகளோடும் அமைவதால் இது 'பேரகராதி' எனப்பெயர் பெறுகிறது

இந்த அகராதியைப் பயன்படுத்துவோர் மனங்கொள்ள வேண்டிய சில செய்திகளை இனிப் பேசலாம்.

முதற்கண் இந்த அகராதி எல்லோரும் பயன்படுத்தும் மொழி அகராதி அன்று. ஓரளவு இசையார்வமும், இசையறிவும், இசையாராய்ச்சி உணர்வுடையவர்களும் பயன்படுத்த வேண்டிய அகராதி இது

மறைந்துபோனதாகக் கருதப் பெறும் தமிழிசைச் செல்வத்தை 'இலக்கியத் தொல்லியல்' ஆய்வு செய்து மீட்டெடுத்துத் தந்துள்ள அகராதி இது இந்த அகராதியினை ஆக்கிய திரு. நா. மம்மது தமிழ்த் தொல்லிசை குறித்த பயற்சியுடன் ஆங்கில, இந்துத்தானி, அரபிய இசையும் அறிந்தவர்.

ஏனைய அகராதிகளைப் போன்றே இந்த அகராதிலும் சொற்கள் அகர வரிசையில் நிரல்படுத்தப் பட்டுள்ளன. சொற்பொருள் விளக்கம் தொல்காப்பியம் தொடங்கி நமது கால திரைப்படப் பாடல்கள் வரை நீண்டுள்ளது. வேறு வகையில் சொல்வதானால் இந்த அகராதி, காலத்தினைக் கிழித்தெறிந்து பொருள் தெளிவு காட்டுகிறது.

தமிழில் போதிய பயிற்சி இல்லாதவர்களுக்காக அடிப்படைச் சொற்களுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களும் (எடு: Pitch, Mode) தரப்பட்டுள்ளன.

பண்களை நுட்பமான முறையில் இனங்காண அடிப்படைத் தேவை சுரங்களின் (ஆரோகண அவரோகணம்) வரிசை முறையாகும் அவையும் கணித அடிப்படையில் ஏறுநிரல் இறங்கு நிரல் ஆகிய தனித்தமிழ்ச் சொற்களுடன் விளக்கப்பட்டுள்ளன.

தமிழிசையும் ஆடற்கலையும் எள்ளும் எண்ணெயும் போலப் பிரிக்க முடியாதவை. எனவே இந்த அகராதி ஆடற்கலையின் அடைவுகள் சிலவற்றிற்கும் பொருள் தருகின்றது. அந்தத்துறை சார்ந்த கலைஞர்களுக்கும் இந்த அகராதி பயன் தருவதாகும்.

தொல் தமிழிசையின் ஏழிசை நிரல்களையும், ஏழ்பெரும் பாலைகளையும் அறிந்துணர விரும்பு வோர்க்கு இந்த அகராதி பாடப்புத்தகம் போல் அமையும் என்பதில் ஐயமில்லை.

சில இடங்களில் சொல்விளக்கம் ஆராய்ச்சி உணர்வுடன் அமைந்துள்ளது (எடு: வள்ளி, வட்டணை)

ஒரு சொல் காலந்தோறும் தமிழிலக்கியத்தில் பயின்று வருவதானால் இயன்றவரை அவை அனைத்தும் ஒருங்கு தொகுத்துத் தரப்பட்டுள்ளன. (எடு:- குறிஞ்சி, வாரம்)

தொல்லியல் ஆய்வுக்கு மொகஞ்சதாரோ - அரப்பா போலத் தமிழிசை ஆய்வுக்கான புதையற்களம் சிலப்பதிகாரமும், அதற்கு அரும்பத உரைகாரரும், அடியார்க்கு நல்லாரும் வரைந்த உரைகளுமாகும் எனவே இவ்விருவரும் இவ்வகராதி நூலில் பொரும்பாலும் மேற்கோள் அறிஞர்களாகக் காட்டப் பட்டுள்ளனர்.

இனி, இந்த அகராதியைப் பயன்படுத்துவோருக்காகச் சில சொற்கள். இந்த அகராதி பொது வாசிப்பாளர், தமிழிலக்கியம் பயிலும் மாணவர்கள், பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள் ஆகிய அனைவர்க்கும் பயன்படும் வகையில் ஆக்கம் பெற்றுள்ளது. இந்தப் பேரகராதியின் மொழிநடையும் அதற்கேற்ப சுருக்கமும் தெளியும் உடையதாக அமைந்துள்ளது.

ஒரு பொது வாசகர், பண், திறம் ஆகிய இரு சொற்களையும் குழப்பிக்கொள்ள நேர்வதுண்டு. ஏழு சுரங்களும் பேசும் தாய்ப்பண்ணே 'பண்' என்றும், அவ்வாறல்லாதவை 'திறம்' என்றும் புரிந்து கொள்ளலாம். இவ்வாறு பொது வாசகர்க்கு வழிகாட்டும் எளிமையான குறிப்புகள் இவ்வகராதியில் உள்ளன .

இந்தப் பேரகராதியில் பல இடங்களில் யாப்பிலக்கணச் செய்திகள் தரப்பட்டுள்ளன. மரபுத் தமிழிலக்கிய யாப்பானது இசையோடு பிசையப்பட்டது என்பதனை இந்த அகராதியைப் பயன் படுத்துபவர்கள் எளிதாகவே உணரமுடியும்.

அடுத்து தமிழிலக்கியம் பயிலும் மாணவர்க்கும் பயிற்றுவிக்கும் ஆசிரியர்க்கும் இந்த அகராதி தெளிவுகாட்டுகிறது. அதாவது சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை ஆகிய இலக்கியங்களைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள், 'சிறு', 'பெரு' ஆகிய முன்னொட்டுகளுக்கு, 'சிறிய', 'பெரிய' என்றே நெடுங்காலமாக எளிமையாகப் பொருள் சொல்லி வந்தனர். பின்னர் சிறிய, பெரிய என்பது, 'பாணர் ஏந்திய யாழ் நரம்பின் எண்ணிக்கையைப் பொருத்தது' என்று விளக்கி வந்தனர். இந்த அகராதியானது, ஏழ்பெரும் பண்களை குழலிலும் யாழிலும் இசைத்து அவற்றின் சேய்ப்பண்களையும் (ஜன்யராகங்கள்) அடையாளம் காட்டத் தெரிந்தவனே பெரும்பாணன் என்று சிலப்பதிகார வரிகள் மூலம் முழுமையான பொருள் விளக்கம் தருகிறது.

**- தொ. பரமசிவன்**

# அணிந்துரை

பேரா. முனைவர் **இ. அங்கயற்கண்ணி**
இசைத்துறைத் தலைவர்,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

பொதுவாக அகராதி, களஞ்சியம் இரண்டிற்கும் நுண்ணிய வேறுபாடு உள்ளது. அகராதி, களஞ்சியம் தயாரிப்பில் கலைச்சொற்கள் முதன்மைப் பங்கு வகிக்கின்றன. இசைக்கலைச்சொற்கள் என்னும்போது, ஒரு குறிப்பிட்ட சொல் தருகின்ற பொதுமையான பொருள், அப்பொருளுக்குரிய வழக்குச்சொல், கலைச்சொல் என்று மூன்று நிலைகளில் பிரித்து இசைக்கலைச் சொல்லினை விளக்கலாம் இன்றைய நிலையில் தற்போதுள்ள பாடப் பிரிவில் பெரும்பான்மையான இசைச்சொற்கள் வடமொழிச் சொல்லாக உள்ளன சான்றாக, சப்த சுவரங்கள் என்று ஏழு சுவரங்களைக் கூறுகிறோம். இச்சொல்லுக்குரிய தமிழ்ப்பெயர் ஏற்கனவே ஏழிசை என்று நூல்களில் உள்ளது. எனவே, சப்த சுவரம் என்பது வழக்குச் சொல்லாகவும், ஏழிசை கலைச்சொல்லாகவும் கொள்ளப்படுகிறது.

தமிழிசை தொடர்பாக வெளிவந்துள்ள அகராதிகள், களஞ்சியங்கள் ஆகியவற்றை வரலாற்று ரீதியாக ஆராய்ந்தால் தமிழ்த் தாத்தா உ. வே சாமிநாத ஐயர் அவர்களின் சங்க இலக்கிய, காப்பியப் பதிப்புக்களிலுள்ள அருஞ்சொற்பொருள் விளக்கப்பட்டியலில் காணப்படும் இசைக் கலைச்சொற்களை முதன்மையாகக் கூறலாம். இதனை அடியொற்றி 1917ஆம் ஆண்டில் தஞ்சை. மு. ஆபிரகாம் பண்டிதர் அவர்கள் வெளியிட்ட கருணாமிர்த சாகரம் என்ற நூலினை அடுத்தபடியாகக் கூறலாம். 125 இயலிசைப் புலவர்கள் பற்றிய குறிப்புக்கள் களஞ்சிய முறையில் இந்நூலில் காணமுடிகிறது. இசையறிஞர் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்கள் ஆங்கிலத்தில் மூன்று தொகுதிகளாக வெளியிட்டுள்ள (The Dictionary of Music and Musicians) என்ற இசை அகராதியை அடுத்தபடியாகக் கூறலாம். இந்நூலின் நான்காவது தொகுதியும் சமீபத்தில் வெளிவந்துள்ளது பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை ப. சுந்தரேசனார் அவர்கள் பஞ்சமரபு பதிப்புரையில் தொகுத்தளித்துள்ள தமிழிசைச் சொற்களும் ஈண்டு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன.

மேற்கத்திய இசை தொடர்பான இசை அகராதி 'The New Grove Dictionary of Music and Musicians, 2nd edn.2001' என்று 29 தொகுதிகளில் வெளிவந்துள்ளது. மேற்கண்டவற்றை அடியொற்றி 1992 முதல் 2000 ஆண்டளவில் தமிழிசையறிஞர் முனைவர் வீ. ப. கா. சுந்தரம் அவர்கள் பாரதிதாசன் பல்கலைக்கழக வெளியீடாக, தமிழிசைக் கலைக்களஞ்சியம் ஒன்றினை நான்கு தொகுதிகளில் வெளியிட்டுள்ளார். இவை தமிழிசைக்குக் கிடைத்துள்ள பெருங்கொடை எனக் கூறலாம். தமிழக அரசின் உயர்கல்வியில் தமிழ்வழிக் கல்வித் திட்டத்தின் கீழ் தமிழ்மொழியில் கலைச்சொற்களின் பேரகராதி உருவாக்கத் திட்டத்தில் தமிழ்ப் பல்கலைக்கழக இசைத்துறையில் தமிழிசைக் கலைச்சொற்கள் தொகுதி ஒன்று தயாரிக்கப்பட்டுள்ளது.

இந்நிலையில் தற்போது வெளிவரும் தமிழிசைப் பேரகராதி - சொற்களஞ்சியம், சுருங்கக் கூறி விளங்க வைக்கும் பாங்கில் சொற்களுக்குரிய பொருள் மிகச் சுருக்கமாகவும், உரிய ஆதாரங்களுடனும், அகராதியியல் அணுகுமுறையுடனும் சிறப்பாக வெளிக் கொணரப்பட்டுள்ளது. களஞ்சியம் என்ற நிலையில் இந்த அகராதியில் சொற்களுக்குரிய பொருள் எந்தெந்த நூல்களிலெல்லாம் காணப்படுகிறதோ, அவையெல்லாம் அரிதின் முயன்று தொகுக்கப்பட்டுள்ளன. மேலும் அரிய சொற்கள் நல்ல விளக்கத்துடன் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளன. சான்றாக, இசையின் ஏழு சுரங்களில் முதல் சுரமான குரல், மற்றும் குரல் தொடர்பான பிற சொற்களான, குரல்துலை, குரல்பாணி, குரல்பாலை முதலான சொற்களுக்குரிய விளக்கங்களைக் கூறலாம். மேலும் குறுங்குழல் என்ற சொல்லிற்குரிய பொருளாக, கேரளத்தில் செண்டை மேளத்தில் பயன்படுத்தப்படும் நீளம் குறைந்த நாககுரம் என்று கொடுத்திருக்கும் விளக்கம் குறிப்பிடத்தக்கது ஆகவே தமிழிசை அகராதிகள், களஞ்சியங்கள் முழுமையடையாத தற்போதைய சூழலில், தற்போது வெளிவரும் "தமிழிசைப் பேரகராதி - சொற்களஞ்சியம்" வரவேற்கத்தக்கது. ஆசிரியரின் முயற்சி பாராட்டுதற்குரியது.

தமிழ்நாடு அரசு இசைப்பள்ளிகளிலும், இசைக்கல்லூரிகளிலும், பல்கலைக் கழக இசைத்துறைகளிலும் இசை பயிலும் மாணவர்கள் பெருகியுள்ள தற்போதைய நிலையில் இசைச் சொற்களில் காலத்துக்கேற்ற மாற்றங்களைப் பதிவுசெய்து, வருங்காலத் தலைமுறையினருக்கு எடுத்துச் சொல்லும் வகையில் அமைக்கப்பட்டுள்ள தமிழிசைப் பேரகராதி - சொற்களஞ்சியம் என்னும் இந்நூல் முக்கியத்துவம் பெறுகிறது. இத்தகு நோக்கத்தை முதன்மையாகக் கொண்ட இவ்வகராதி - சொற்களஞ்சியத் தொகுப்பாசிரியரின் முயற்சி பெரிதும் பாராட்டுதற்குரியது பல்வேறு அறிஞர்களின் கருத்துக்களைத் தாங்கி நிற்கும் இந்நூல் தமிழிசை ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் நல்ல நோக்கு நூலாக அமையும் என்பதில் ஐயமில்லை இதுபோன்ற பயனுள்ள நூல்கள் பெருக வேண்டும்

ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு போன்ற மொழிகளில் தமிழிசைக் கலைச்சொற்களுக்குரிய பொருள் விளக்கங்களைத் தாங்கிய அகராதிகள் எதிர்காலத்தில் வரவேண்டும்

தமிழிசைக்கு ஆக்கமும், மேன்மையும் தரக்கூடிய இத்தகைய பணிகளுக்கு தமிழ்கூறு நல்லுலகு பேராதரவு தரவேண்டும் என விழைகின்றேன்

**- இ. அங்கயற்கண்ணி**

# ஆசிரிய முகவுரை

அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறைவெல்ல
இசை முழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருக (பெரியபு. திருஞான. 24)

*இது தமிழ் இசை இயலின் கலைச்சொல் களஞ்சிய அகராதி.*

'அகராதியைச் சொல்லேடு எனவும் பெயரிட்டுச் சிலர் சூட்டினர். இதனையும் கலைக்களஞ்சியத்தையும் வேறு வேறாகப் பாகுபடுத்தி உணர்வர். சிற்சில சமயங்களில் இவை இடைமிடையும் நிலை ஏற்படும். எனினும் பொதுவாகச் சொற்களுக்கு விளக்கம் தரும் நூல் அகராதி. . ., அகராதி சொற்களை விளக்கும்; கலைக்களஞ்சியம் பொருளை விளக்கும்'.

*(பெருஞ்சொல் அகராதி - முன்னுரை)*

ஒரு மொழியின் சொல் வளத்தையும், அதன் சொற்பொருளின் நலத்தையும், அவை பயன்படும் விதத்தையும், அவற்றின் இலக்கணக் கூறுகளையும், அவற்றின் வரலாற்று மூலத்தையும், இன்னோரன்ன பிறவற்றையும் அகரவரிசையில் தந்து நிற்பதே அகராதி எனப்படும். *(மேலதின் அணிந்துரை).*

*எனவே அகராதி விளக்கி உரைப்பது; களஞ்சியம் விரித்து உரைப்பது. இவ்வகராதி இசை பற்றிய துறை அகராதியானதால் களஞ்சிய அகராதி* (Encyclopedic Dictionary) *ஆகியுள்ளது.*

*ஒரு துறையின் வளமைக்கு மொழியின் சொல்வளம் சிறந்த எடுத்துக்காட்டாகும். தமிழ் இசைத்துறையின் கலைச்சொற்கள் தொல்காப்பியத்திற்கு முன்தொட்டே பல்லாயிரம் ஆண்டுகளாக வளர்ந்து வந்திருக்கின்றன.*

*இசை என்பது பண்பாட்டின் ஒரு கூறு (கருப்பொருள்); எனவே அது மொழி சார்ந்தது. அவ்வாறான நிலையில் ஒரு பண்பாட்டு இனத்தின் இசையை, அந்த இனத்தின் மொழியால் விளக்காது அயல்மொழிச் சொற்களால் விளக்க முற்படுவது நகைப்புக்கு இடம் தருவதாகும். அப்படியான ஒரு நிலை தமிழிசைக்கு ஏற்பட்டதால் இடைக்காலத்தில் பற்பல இசைச்சொற்கள் நம்மிடையே வழக்கில் இருந்து மறைந்தன. எதிர்காலத்தில் மேலும் பல சொற்கள் மறையவே நேரிடும். (எடு:- விட்டிசை என்பது விஸ்ராந்தி என்றும்; உரிச்சொல் என்பது உரிச்சொல் நிகண்டு என்றாகி பின், நிகண்டு என்றாகியுள்ளது) இயல் தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் இதுவே நிலை.*

"பிற அறிவியல் துறைகளில், துறைச் சொல்கள் தமிழில் ஆக்கம் பெற்றுள்ளமை போல் இசையியலிலும் பெற்றிடல் இன்றியமையாதது. வடமொழிச் சொல்களின் பொருள் உணர்ந்து கொள்ளல் கடினம். (எடு:– ஆரோகணம், அவரோகணம்)" *- வீ.ப.கா. சுந்தரம்*

*தமிழ்ச் சொற்களின் பொருளை எளிதில் அறிந்து கொள்ளலாம்; மனதில் நிலைக்க எளிதாகும். (எ.டு: ஏறுநிரல், இறங்குநிரல்: ஒப்பு: ஐரோப்பிய இசையில்* - Ascending, Descending)

"ஒரு துறையைத் தாய்மொழிச் சொற்களால் விளக்காவிட்டால் அத்துறை தாய்மொழிக்கு உரியது ஆதல் இயலாது" *என்றார் அறிவர் வ. சுப. மாணிக்கனார்.*

"தமிழ்மொழி சொல்வளம் மிக்கது; எத்தகு கருத்தையும் வெளியிடும் ஆற்றல் பெற்றது" *- என்றார் பேராயர் கால்டுவெல்.*

"மலையாளம், கன்னடம், தெலுங்கு முதலிய திராவிட மொழிகளை இணைப்பது தமிழே. இம் மொழிகட்குள் தமிழ்ச் சொல்களே அடிப்படையாய் நிற்பன; மிகுதியாய் நிற்பன; வேர்ச்சொற்களாய் நிற்பன. . ."

"ஒரு நாட்டின் செல்வம் – சொற்களாகும்; ஒரு கலை நிற்கும் அடிப்படை நிலம் கலைத்துறைச் சொல்லாகும் (Technical Terms)" *சென்னைப் பண் ஆய்வு விழாவின் தலைமை உரையில் அறிவர். வ. சுப. மாணிக்கனார் -*

*(தமிழிசை வளம் பக். 88-90)*

"பத்தாம் நூற்றாண்டுக்கு மேல் தமிழகத்தில் இசைத்துறையில் வடசொற்கள் மிகவும் வழக்குக்கு வந்து வளர்ந்தோங்கிப் படிப்படியாய்த் தமிழ்ச் சொற்களை அழியச் செய்துவிட்டன. இன்று தமிழ்நாட்டின் இசைக்கல்லூரிகளில் நூற்றுக்கு 95 விழுக்காடு வடமொழிச் சொல்களே. மேலும் இசைக்கல்லூரிகளில் தமிழிசைக்கு மூலம் வடமொழியில் எழுதப்பட்ட நூல்கள் என்று பெரும்பாலும் சொல்லி வருகின்றார்கள். வடமொழிச் சொல்களையே மேற்கோள்கள் காட்டி வருகின்றார்கள். வடமொழிச் சொல்கள் இல்லை எனில் தமிழிசை இலக்கணத்தை விளக்கவே முடியாது என்ற கருத்தும் உள்ளது. தென்னக இசைக்கல்லூரிகளில் பாடமாக வைத்துள்ள இசையியல் நூல்களில் எல்லாம் நூற்றுக்கணக்கான வடமொழிச் சொல்கள் வழங்கி வருகின்றன. ...இசை இலக்கணத்தை இன்று வரை உரிய தமிழ்த்துறைச் சொல்களைக்

கொண்டு எழுதி வெளியிட்ட நூல் ஒன்று கூட இல்லை" - (தமிழிசை வளம் பக். 71-72)

தமிழ், தனித்து இயங்கும் வளமையும் வல்லமையும் பெற்ற தொன்மையான மொழி. ஆயினும் பலர் தமது போதாமை அல்லது இயலாமையை தமிழின் போதாமை அல்லது இயலாமையாக வெளிப்படுத்திய இடங்கள் பல உண்டு

தமிழ் என்பது தனித்தமிழே. ஒரு இனத்தின் கலையை அந்த இனத்தின் மொழியால் விளக்காமல், பிறிதொரு மொழியால் விளக்க முற்படுவது அம்மொழிக்கும் அக்கலைக்கும் கேடு விளைவிப்பதாகும். கடந்த காலத்தில் தமிழில் வெளிவந்துள்ள அநேக இசை இயல் நூல்கள் இக்கேட்டையே விளைவித்துள்ளன. எனவே இவ்வகராதி தமிழ் இசையை தமிழ்ச் சொற்களால் விளக்க முற்பட்டுள்ளது. ஆயினும் இந்த அகராதியில் இன்று இசைத்துறையில் நடப்பிலுள்ள வடசொற்களும் பதிவு பெற்றுள்ளன. ஆனால் தலைச்சொற்களாக அல்ல. (விதிவிலக்காக சில சொற்கள் தவிர) நம்மிடையே வழங்கும் தெலுங்குப் பாடல்களிலுள்ள இசை வடிவம் தமிழிசையே என்பது போல் வடசொற்கள் தாங்கி நிற்கும் செய்திகளும் தமிழிசைச் செய்திகளே எனவே அச்சொற்களும் ஒப்புமைக்காகப் பதிவு பெற்றுள்ளன எதிர்காலத்தில் இந்த நிலை முற்றாகக் களையப்பட வேண்டும்; களையப்படும்.

தமிழ்நூல்களின் சான்றடிப்படையிலேயே தமிழ்இசை இந்த அகராதியில் விளக்கப் பட்டுள்ளது. அரும்பத உரைகாரரும், அடியார்க்கு நல்லாரும், பூரணரும், நச்சரும், அழகரும் தமிழ் நூல்களையே அடிப்படை நூல்களாகக் கொண்டுள்ள்னர். அவர்கள் பிறமொழி நூல்களைப் பார்வை நூல்களாகக் கொண்டதைப் போல், இந்த அகராதிக்குப் பிறமொழி நூல்கள் பார்வை நூல்களாக மட்டும் பயன்பட்டுள்ளன.

இயற்றமிழ் மட்டுமே கற்று பன்னெடுங்காலமாக இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்று மற்றிரு தமிழ்க் கூறுகளையும் மறந்து விட்டிருந்தோம். இதனால் வடமொழியிலும் தெலுங்கிலும் இசையியல் நூல்கள் வெளிவந்து தமிழிசை தேய்ந்து மாயும் நிலை ஏற்பட்டது. இப்போது தமிழ்இசை இலக்கண விளக்கங்கள், வளமைகள், முறைகள் முதலியன மீள எழுந்து மறுமலர்ச்சி பெற்று வருகின்றன ஆசிரியப் பெருமக்களும், ஆய்வாளர்களும், மாணவர்களும், ஆர்வலர் பலரும் தமிழ் இசைத்துறையிலும், நாடகத்துறையிலும் பேரார்வம் கொண்டு, விட்ட இடத்தை நிரப்பும் ஆக்கப்பணிகள் பலவற்றைச் செய்து முடிக்க முனைந்து வருகின்றனர். இந்த கால கட்டத்தில்தான் தமிழிசை அகராதியின் தேவை உணரப்பட்டது.

பேராசியர் பி. சாம்பமூர்த்தியவர்கள் தென்னிந்திய இசையும் இசையாளர்களும் (The South Indian Music & Musicians) என்னும் அகராதியை ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார். இந்த அகராதியில் பழந்தமிழ் இலக்கியம், இலக்கணம், உரை, நிகண்டு முதலிய நூற்கள் தரும் தமிழ்ச் சொற்கள் பல இடம் பெறவில்லை. வடமொழி, தெலுங்குச் சொற்களே பெரிதும் இடம் பெற்றுள்ளன.

முனைவர் வீ. ப. கா. சுந்தரம் அவர்கள் 'இசைத்துறைத் தமிழ்சொல்கள்' என்ற சிறிய அகராதியில் பல தமிழ் இசைச் சொற்களை விளக்கி வெளியிட்டுள்ளார். அவர் விரிவாக வெளிக்கொணர்ந்த தமிழிசைக் கலைக்களஞ்சியம் பல இசைத்தமிழ்க் கலைச்சொற்களைக் கொண்டுள்ளது. மூலத் தமிழ்இசைச் சொற்களைக் கண்டுபிடித்து வெளிக்கொணர்ந்த பெருமைக்குரியவர் அவரே. இவைகளையெல்லாம் உள்ளடக்கி இவ்வகராதி வெளிவருகின்றது.

நம் இசை வளத்தைப் பதிவுசெய்யும் ஓர் ஆவணமாகவும் இவ் அகராதியை நான் கருதினேன். எனவே இவ்வகராதியில் சிற்சில இடங்களில் 'அகராதி இலக்கணம்' முறையாகப் பேணப்படாத நிலை ஏற்பட்டது. சில இடங்களில் 'கலைச்சொல்' என்பது தொகைச்சொல்லாகவும், சொற்றொடராகவும், புதிய கலைச்சொல்லாகவும் கூட இவ்வகராதியில் பதிவு பெற்றுள்ளன. தமிழிசையின் வளத்தைப் பதிவு செய்யும் 'புறனடையாக' இதை எடுத்துக் கொள்ளுமாறு அறிஞர்களை வேண்டுகிறேன்.

## புரவலருக்கு நன்றி

"செந்தமிழில் புதுப்புது நூல் விளைப்பதற்குச் செலவு செய்தால் நற்றமிழ் நாடு வளராதோ" என்றார் பாவேந்தர்

ஒரு புரவலராக மட்டுமே இருப்பவரிடம் பணி செய்வது வேறு ஒரு தமிழ்ப் பற்றாளரிடம் தமிழிசை அறிந்த அறிஞரிடம் பணி செய்வது வேறு. பின்னதை நான் திருமிகு பால் பாண்டியன் அவர்களிடம் கண்டேன். அதுவே என் நெஞ்சம் நிறைந்ததாக உள்ளது

அவர் இல்லையேல் இவ்வகராதி இல்லை அந்தப் பெரியாருக்கு அனைத்துலகத் தமிழர் சார்பாக என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**காற்றைப் பிடித்துக் கடத்திலடைத் தக்கடியபெருங்**
**காற்றைக் குரம்பை செய்வார் செய்கை போலுமற் காலமெனும்**
**கூற்றைத் தவிர்த்தருள் பால்பாண்டியனார் அளித்த**
**சோற்றுச் செருக்கல்லவோ இசை அகராதி சொல்வித்ததே**

*(அடியார்க்கு நல்லார் உரைக்கான சிறப்புப் பாயிரப் பாடலைத் தழுவியது)*

# பெருமளவு நன்றிக்குரிய அரும்பெறல் சான்றோர்

அகராதி உருவாக்கத்தில்,

தொல்காப்பியம் (முதன்மையாக பிறப்பியல், கிளவியாக்கம், இடையியல், உரியியல், எச்சயியல், மரபியல்),' சிலப்பதிகாரம், அதன் இருபெரும் உரைகள், நிகண்டுகள், சதுரகராதி மற்றும் உ. . வே. சா.வின் பதிப்புநூல்களிலுள்ள 'அரும்பத முதலியவற்றின் அகராதி' (அருஞ்சொல் அகராதி) மற்றும் சிலப்பதிகாரப் பதிப்பிலுள்ள 'விளங்கா மேற்கோளகராதி' முதலியவை இந்த அகராதிக் கட்டமைப்பிலும் உள்ளடக்கத்திலும் எனக்கு அடித்தளமாகப்பயன்பட்டன. மேலும்

1. தமிழ் அகராதிக்கலை (புலவர் சுந்தர சண்முகனார்)

2. தமிழ் அகராதியியல், தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு (முனைவர் பேரா. வ. ஜெயதேவன்)

3. அகராதியியல் (முனைவர் பேரா. பெ. மாதையன்) ஆகிய நூல்கள் தமிழிசைப் பேரகராதி அமைப்பில் எனக்குப் பெரிதும் பயன்பட்டன. மற்றும் சென்னைப் பல்கலைக்கழகத்தமிழ் அகராதி ( Tamil lexicon ) யின் அறிமுக உரை (Introduction), இணைப்பு (தாரம் என்ற சொல் குறித்து), பெருஞ்சொல் அகராதி (தஞ்சைப்பல்கலைக்கழகம்)யின் முன்னுரை ஆகியன எனக்குப் பெரிதும் பயன்பட்டன தமிழ் மொழிக்கு ஞாலத்தின் மாணப் பெரிய பங்களிப்புச் செய்த இப்பெருஞ்சான்றோர் பெருமக்களுக்கு நான் என்றும் கடப்பாடுடையேன்

இசைப் பேரகராதி செயல்திட்டத்தைப் புரவலரிடம் தக்கவாறு எடுத்துக்கூறி ஒப்புதல் பெற்றுத்தந்து அகராதி ஆக்கத்தில் ஒருங்கிணைப்பாளராகச் செயல்பட்ட பாசமிகு. முனைவர் பேரா கு ஞானசம்பந்தன், அகராதியில் குறிப்பிட்டுள்ள இசைச் செய்திகளைச் சரிபார்த்துத் தந்த முனைவர் பேரா தொ. பரமசிவன், முனைவர் இரா. திருமுருகன் மற்றும் முனைவர் பேரா. இ. அங்கயற்கண்ணி, நூல்கள், குறிப்புக்கள், தொடர்புகள், கருத்துரைகள் பல தந்து பல்லாற்றானும் உதவிய முனைவர் பேரா. தொ. பரமசிவன், முனைவர் பேரா வீ. அரசு மற்றும் முனைவர் பேரா. கி. நாச்சிமுத்து ஆகியோருக்கு நன்றி.

இந்த அகராதி உருவாக்கத்தில் வடிவமைப்பு மற்றும் இசைக் குறிப்புகள் பற்றிய பங்களிப்பு செய்த திரு மு.பாலசுப்பிரமணியன் (பாமயன்) மற்றும் அகராதிக்கான ஊடகத் தொடர்புக்கு உதவிய இரா. சிவக்குமார்

அகராதி உருவாக்கத்தில் பற்பல உதவிகளைக் காலத்தால் செய்துவரும் திரு. கு. கிருபாகரன்.

எடுத்துக்காட்டுப் படியைச் சீர்தூக்கி அரும்பெரும் கருத்துரைகள் தந்த நன்றிக்குரிய சான்றோர்:

1. முனைவர் பேரா. தமிழண்ணல்

2. முனைவர் இரா திருமுருகன்

3. முனைவர் பேரா. தி. அருட்செல்வி

அகராதி ஆக்கத்தில் அரிய நூல்களைத் தேடித்தந்தும், கணினி முதலிய சாதனங்கள் தந்தும் பல்லாற்றானும் உதவிய பொறியாளர் திரு சு. சங்கரகுமரன், கிடைத்தற்கரிய பழம்நூல்கள், உரைகள், புகைப்படங்கள் தந்து உதவிய தொல்லியல் துறை ஆய்வாளர் முனைவர் வெ. வேதாசலம், அகராதி ஆக்கத்தில் உடன் பணியாற்றிய, என் இசைப்பயணத்தில் எப்போதும் என்னுடன் துணையாக வரும் என் துணைவியார், குடும்பத்தார், அகராதி உருவாக்கத்தில் கணினிப்பணியில் உதவிய திருமதி ம. பாத்திமா மில்லத் மற்றும் உதவித் தொகுப்பாளராக விளங்கிய திருமதி ம. ஆயிஷா மில்லத் (மேலாண்மைத்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி)

வரைவுப்படியைப் பார்வையிட்டுக் கருத்துரைகள் வழங்கிய பேரா. முனைவர் தொ.பரமசிவன் மற்றும் தலைமை ஆசிரியர் த கு. கருணாநிதி ஆகியோருக்கு நெஞ்சார்ந்த நன்றி.

அழகிய முறையில் அகராதியை அச்சாக்கிய அருணா அச்சகத்தார் மற்றும்

அகராதியை வெளியிட்ட மதுரை இன்னிசை அறக்கட்டளை நிறுவனத்தார் ஆகியோருக்கு நன்றி.

இச் சொற்களஞ்சியஅகராதி தமிழிசைக்கு ஒரு புதிய முயற்சி. இது மேலும் செம்மையுறுவதற்கு உதவிட அறிஞர் பெருமக்களை வேண்டுகிறேன்.

நா. மம்மது

# தமிழிசைச் சொற்களஞ்சிய அகராதியின் உள்ளடக்கம்

**1. சுரம்**

*தமிழ் இசையில் 'இசைக்கோவை'* (Musical note) *யைக் குறிப்பிட 'நரம்பு', 'கோவை', 'சுரம்' என்ற சொற்கள் இவ்வகராதியில் பயன்படுத்தப்பட்டுள்ளன. தொடக்க காலத்தில் சுரத்தல், (நீர்) ஊறுதல் என்ற பொருளில் 'சுரம்' என்ற சொல் பயன்பாட்டில் இருந்துள்ளது.* **("மேல் நின்று தான் சுரத்தலான் (சிலப்: 1: (3);" தொட்டனைத்தூறும் மணற்கேணி – குறள் 196).** *பின்னர் இசைக்கோவையைக் குறிக்க 'சுரம்' என்ற சொல் பெருமளவு பயன்பாட்டிற்கு வந்துள்ளது.*

*தமிழிசை 22 அலகு (சுருதி), 12 தானசுரம் (*Somitones*), நாற்பெரும்பண், ஏழ்பெரும்பாலை மற்றும் 32 பாலை (மேளகர்த்தா) என்ற அடிப்படையில் அமைந்தது. இவ்வகராதியும் இவ் வடிப்படையிலேயே அமைக்கப்பட்டுள்ளது.*

**2. பண்**

*'பாலை', 'தாய்ப்பண்' என்ற சொற்களால் சம்பூர்ண இராகம் (மேளகர்த்தா) குறிப்பிடப்படுகின்றது. தமிழ் இசையின் சிறப்பான பாலைகளான ஏழ்பெரும் பாலைகள் முறையே,*

*1. செம்பாலை (அரிகாம்போதி)*
*2 படுமலைப்பாலை (நடபைரவி)*
*3 செவ்வழிப்பாலை ( இருமத்திமத்தோடி)*
*4. அரும்பாலை (சங்கராபரணம்)*
*5. கோடிப்பாலை (கரகரப்பிரியா)*
*6. விளரிப்பாலை (தோடி)*
*7. மேற்செம்பாலை (கல்யாணி)*

*என சிலம்பு அரங்கேற்றுக்காதையில் இளங்கோவடிகள் குறிப்பிட்ட வரிசை முறையிலேயே இவ் அகராதியில் குறிப்பிடப்பட்டுள்ளன.*

*மொழித்துறையில், சிறப்பாகக் கலைத்துறையில், 'வழக்கிழந்த சொல்' என்று எதுவுமில்லை ஒரு காலத்தில் வழக்கிழந்ததாகக் கருதப்பட்டது மற்றொரு காலத்தில் வழக்கிற்கு வருகிறது. ஒரு வட்டாரத்தில் வழக்கிழந்த சொல்லாகக் கருதப்பட்டது இன்னொரு வட்டாரத்தில் வழக்கில் இருந்து வருவது கண்கூடு. இது திராவிட மொழிக் குடும்பத்திற்கும் அது வழங்கும் வட்டாரத்திற்கும் பெரிதும் பொருந்துவது என்பது நாம் அறிந்ததே.*

*எடு:- 'சொல்லு' என்ற பொருளில் வரும் 'பறை', 'செப்பு' என்ற சொற்கள் தமிழில் வழக்கிழந்ததாகக் கொள்ளப்படுகின்றன. ஆனால் ஏனைய திராவிட மொழிகளில் இச்சொற்கள் பயன்பாட்டில் உள்ளன.*

*1 பறை - சொல்லு (மலையாள வழக்கு)*
*2. செப்பு - சொல்லு (தெலுங்கு வழக்கு)*

**. . . உரை. . . செப்பு. . . பறை. . . . சொல்லின் பெயரே – சூடா. 10:2**

**"சொற்களும் ஒவ்வொரு வரலாற்று உண்மையை உணர்த்தக்கூடும் என்றும், விரிவான அகராதி ஒரு வரலாற்றுக் களஞ்சியம் என்றும், வரலாற்றுச் சொற்களையும் வரலாற்று நூல்களைப் போலப் போற்ற வேண்டும் என்றும் அவற்றுள்ளும் வழக்கற்ற சொற்களை மிக்க கருத்தாய்ப் போற்ற வேண்டும் என்றும் அறிக"–** *மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் (தே. நே. 24/ 13)*

**3. பன்னிரு தான சுரங்கள்**

*பன்னிரு தான சுரங்கள்* (semitones) *மெல், மென், குறை மற்றும் வல், வன், நிறை என்ற முன்னொட்டுச் சொற்களுடன் இவ்வகராதியில் நம் முன்னோர் வழங்கிய முறையிலேயே சுட்டப்படுகின்றன.*

| | | |
|---|---|---|
| 1. குரல் | சட்சம் (ஷட்ஜம்) | ச |
| 2. மென்துத்தம் | சுத்தரிஷபம் (ருஷபம், | ரி$^1$ |
| 3. வன்துத்தம் | சதுஸ்ருதி ரிஷபம் | ரி$^2$ |
| 4. மென்கைக்கிளை | சாதாரண காந்தாரம் | க$^1$ |
| 5. வன்கைக்கிளை | அந்தர காந்தாரம் | க$^2$ |
| 6. மெல் உழை | சுத்த மத்திமம் | ம$^1$ |
| 7. வல் உழை | பிரதி மத்திமம் | ம$^2$ |
| 8. இளி | பஞ்சமம் | ப |
| 9. மென் விளரி | சுத்த தைவதம் | த$^1$ |
| 10. வன் விளரி | சதுஸ்ருதி தைவதம் | த$^2$ |
| 11. மென்தாரம் | கைசகி நிஷாதம் | நி$^1$ |
| 12. வன்தாரம் | காகலி நிஷாதம் | நி$^2$ |

*(மற்றும் மென்தாரம் என்பதை குறைதாரம் போன்றும்: வன்தாரம் என்பதை நிறைதாரம் போன்றும்)*

**4. மண்டிலம்**

*வலிவு மண்டிலச் (உச்சஸ்தாயி) சுரங்கள் ச் ரி க் என்று மேலே ஒரு புள்ளியும், மெலிவு மண்டில (மந்தரஸ்தாயி) சுரங்கள் ச̣ ரி̣ க̣ என்று கீழே புள்ளியும், அதி மெலிவு மண்டில சுரங்கள் கீழே ச̤ ரி̤ க̤ என்று இரண்டு புள்ளிகள் பெற்றும் இந்த அகராதியில் அடையாளமிடப்பட்டுள்ளன. பிறவும் அவ்வாறே கொள்க.*

**5. களை**

*தாள எண்ணிக்கை ஒன்றுக்கு அடைக்கப்படும் எழுத்து எண்ணிக்கையைப் பொருத்துக் களை என்பது பலவகையாக அமைகின்றது.*

*2/2 அரைக்களை -*
ஓரெண்ணிக்கைக்குள் இருகுறில்கள் அடைந்து ஒலிக்கும் நேரம்
**தக**

*4/4 ஒருகளை -*
ஓரெண்ணிக்கைக்குள் நான்கு குறில்கள் அடைந்து ஒலிக்கும் நேரம்
**தகதின**

*8/8 இருகளை -*
ஓரெண்ணிக்கைக்குள் எட்டு குறில்கள் அடைந்து ஒலிக்கும் நேரம்
**தகதின தகதின**

*12/12 மூன்றுகளை -*
ஓரெண்ணிக்கைக்குள் பன்னிரு குறில்கள்அடைந்து ஒலிக்கும் நேரம்
**தகதின தகதின தகதின**

**6. சொற்கள்**

*தமிழிசைக் கலைச்சொற்கள் வினையடியாகத் தமிழ்நூல்களில் ஆளப்பட்டிருந்தால் அவ்வாறே அவை தேவை கருதி வினையடியாகவும் இவ்வகராதியில் ஆளப்பட்டுள்ளன.*

சிலப்பதிகார உரையாசிரியர் இருவரும் ஒரு பகுதிக்கு ஒரே உரை கூறி இருப்பின் 'சிலப்பதிகார உரை' என்று இவ்வகராதியில் குறிப்பிடப்படுகின்றது. பன்னிரு திருமுறைகளும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களும் தேவை கருதி பதிகம், திருமொழி, பத்து என்ற முறையிலும் மற்றும் அடங்கன் முறையிலும் இவ்வகராதியில் எண் பதிவு பெறுகின்றன.

இது இசைத்துறை அகராதியானதால் சொற்களின் இசைப்பொருள் மட்டுமே தரப்பட்டுள்ளது. ஆயினும் இசைப் பொருண்மை அல்லது இசைத்தொடர்பு முறைப் பொருள் இருப்பின் தேவைகருதி அவையும் சிற்சில இடங்களில் தரப்பட்டுள்ளன. மேலும் இது தமிழிசை அகராதியாக இருப்பினும் ஒரு சில இடங்களில் ஒப்பீட்டிற்காக வட இந்திய மற்றும் மேலை இசை முறைகளும் பதிவு பெற்றுள்ளன.

### 7. முத்தமிழ்ப் பிணைப்பு

"இசைத்துறையை மூன்று பெரும் பிரிவாகப் பிரிக்கலாம். அவை முழக்குத்துறை, பாடல்துறை, ஆடல்துறை என்பன. முழக்குத்துறையுள் அடங்குவது தாளவியல்; பாடல்துறையின் பாற்படுவன சுரம், சுருதி, பண், பாடல் வடிவுகள் முதலியன; ஆடல்துறையுள் அடங்குவன நடனம், நாட்டியம், கூத்து, நாடகம் முதலியன. மூன்றிலும் செய்திகள் ஒன்றிற் கொன்று உறவும் நட்புமுறப் பின்னப்பட்டுள்ளன" (மத்தளவியல் பக். XXVI).

எனவே இவ்வகராதியில், கூத்து, நாட்டியம் குறித்த ஆடல் துறைச் சொற்களும் இடம் பெறுகின்றன.

### 8. தாளம்

தாளத்தின் ஒரெண்ணிக்கையுள் 4 எழுத்துக்கள் (ஒரு மாத்திரை) ஒலித்தனவென்றால் ஓர் எழுத்துக்குக் கால் எண்ணிக்கை. 'அட்சரம்' என்பது கால் எண்ணிக்கைக்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

(, ) அல்லது ச- ஓரெழுத்துக் காலம் (ஓர்அட்சரக்காலம்); கால் எண்ணிக்கை

(;) அல்லது சா- ஈரெழுத்துக் காலம் (இரண்டு அட்சரக்காலம்); அரை எண்ணிக்கை

(,,, ) அல்லது ச,, அல்லது சா, - மூன்று எழுத்துக்காலம் (மூன்று அட்சரக் காலம்); முக்கால் எண்ணிக்கை

(; ;) அல்லது சா; அல்லது ச, ; - நான்கு எழுத்துக்காலம் (நான்கு அட்சரக் காலம்); ஒரெண்ணிக்கை

இவ்வாறே பிறவும் கொள்க.

; ; , - 1¼ எண்ணிக்கை. ; ; ; - 1½ எண்ணிக்கை. ; ; ; ; - 2 எண்ணிக்கை

மேற்கண்ட யாவும் தாளத்தின் ஓர் எண்ணிக்கையுள் 'தகதின' என்பதை அடைத்து ஒலிக்கும்போது கொள்ளப்படும் கால அளவாகும். (பார்க்க: தமிழிசைக் கலைக்களஞ்சியம் பக். V/I)

### 9. அகராதியின் பயன்பாடு

இசைப்பாடகர், இசை ஆசிரியர், இசை கற்போர், இசை ஆய்வாளர், தமிழ் ஆசிரியர், மாணவர், எழுத்தாளர், இசைக்கருவியாளர், இசை ஆர்வலர், இசையைத் தொடர்புபடுத்தும் ஏனைய துறை ஆய்வாளர், இசைத்துறைச் சொல் ஆய்வாளர் எனப் பல்வேறு நிலையிலுள்ள இசையாளர்களுக்கும் ஏனைய ஆடல் மற்றும் நாடகத்துறையாளர்களுக்கும் பயன்படும் விதத்தில் அகராதி எளிய முறையிலும், எளிதில் புரியும் அளவிலும் அமைக்கப்பட்டுள்ளது.

இசைப்பாட்டுக்கு சந்தம் எவ்வளவு இன்றியமையாததோ அதைப் போன்று யாப்பும் மிக முக்கியமானதே. எனவே யாப்பு பற்றியும் இவ்வகராதியில் விரிவாகவே கூறப்பட்டுள்ளது.

**9. சொற்பொருள் விளக்கம்**

இது தமிழிசை குறித்த சொல் அகராதி. சொல்லுக்குப் பொருள் உரைப்பது.

ஒரு சொல்லிற்குப் பல்வேறு பொருள்கள் இருப்பின் அவைகளுக்கு 1.---, 2.---, 3.--- முதலிய எண் தந்து பொருள்கள் கூறப்படுகின்றன

சொற்பொருள் கீழ்க்காணும் வரிசையில் இடம் பெறுகின்றது..

1. சொல்லுக்குரிய நேர்சொல்
2. சொல் குறிக்கும் பொருள்.
3. 'காண்க' என்பது அகராதியில் பிற இடங்களைக் காணக் குறிப்பது
4. 'பார்க்க' என்பது தொடர்புடைய வேறு நூல்களைப் பார்க்கக் கூறுவது
5. 'குறிப்பு' என்பது ஆசிரியரின் கருத்தைக் குறிப்பது.

சொற்பொருள் தரும் இந்த வரிசைகள் சில காரணங்களுக்காகச் சிற்சில இடங்களில் தேவை கருதி முன்பின் மாறி வருதலும் உண்டு எல்லாச் சொற்களுக்கும் மேற்குறித்த வரிசைமுறை அனைத்தும் இடம்பெறாமல் போவதுமுண்டு.

**சுருக்கக் குறியீட்டு விளக்கம்:**

= சொல்லுக்குரிய நேர்சொல்

→ காண்க

← பார்க்க

↑ ஆசிரியர் குறிப்பு

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

1. அக.நிக. - அகராதி நிகண்டு
2. அகம். - அகநானூறு
3. அடிக். - அடிக்குறிப்பு
4. அடியார்க் - அடியார்க்கு நல்லார்
5. அபி.சிந். - அபிதான சிந்தாமணி
6. அறப். சத. - அறப்பளீசுர சதகம்
7. அரும். - அரும்பத உரையாசிரியர்
8. அவி.தர்ப். - அவிநய தர்ப்பணம்
9. ஆ. நா. - ஆளுடையபிள்ளையும் அருணகிரிநாதரும்
10. ஆட். அக. ஆட்சிச் சொல் அகராதி
11. இ.ஆ.எ. - இறைவன் ஆடிய எழுவகைத்தாண்டவம்
12. இ.இ. - இசையும் இலக்கியமும்
13. இ.இ.இ. - இழை இழையாய் இசைத்தமிழாய்
14. இ.வ. - இசை வழக்கு
15. இராம.நாட. - இராம நாடகக் கீர்த்தனை
16. இலக். கொத்து. - இலக்கணக் கொத்து
17. இலக்கணத். - இலக்கணத்தொகை
18. இ. வி. - இலக்கண விளக்கம்
19. இலங்.வ. - இலங்கை வழக்கு
20. இளம். - இளம்பூரணர் உரை
21. இறைய. கள. - இறையனார் களவியல் உரை
22. உ.நி. - உரிச்சொல் நிகண்டு
23. உமாபதி. - உமாபதிசிவம்
24. உ.வே.சா. - உ.வே. சாமிநாதய்யர்
25. ஏரெழு. - ஏரெழுபது
26. ஐங். - ஐங்குறுநூறு
27. க.நா. - களவழி நாற்பது
28. கந்தபு. - கந்தபுராணம்
29. கயா.நிக. - கயாதரநிகண்டு
30. கருணா. - கருணாமிர்த சாகரம்
31. கல்.கலைச்.அக. - கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி
32. கல்லா. - கல்லாடம்
33. கலிங். - கலிங்கத்துப்பரணி
34. கலித். - கலித்தொகை
35. கழ. அக. - கழகத் தமிழ் அகராதி
36. கள. நாற். - களவழி நாற்பது
37. காக்.பாடி. - காக்கை பாடினியம்
38. காரைக். இரட். மணி. - காரைக்கால் அம்மையார் இரட்டை மணிமாலை
39. காளத். உலா. - திருக்காளத்தி நாதர் உலா
40. குரு.தூது. - குருநாதர் கிள்ளை விடு தூது
41. குடந். சுந்த. - குடந்தை சுந்தரேசன்
42. குற்.குற. - குற்றாலக் குறவஞ்சி
43. குறிஞ். - குறிஞ்சிப்பாட்டு
44. குறுந். - குறுந்தொகை
45. கோ.கி.பா. - கோபால கிருஷ்ண பாரதி
46. கோயிற்பு. - கோயிற்புராணம்
47. கோ.வ. - கோயில் வழக்கு
48. கை.ப. - கையெழுத்துப்படி
49. கூ. நா. கா. - கூளப்ப நாயக்கன் காதல்
50. கூத். - கூத்தநூல்
51. கூர்மபு. - கூர்ம புராணம்
52. ச.அ. - சங்க அகராதி
53. ச.இ.இ. - சங்க இலக்கியத்தில் இசை
54. ச.பொ. - சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்
55. சங். சந். - சங்கீத சந்திரிகை
56. சது. - சதுரகராதி
57. சம்ப. - சம்பந்தர்
58. சாச. தமிழ்க். - சாசனத் தமிழ்க் கவிசரிதம்
59. சி.கா.இ. - சிலப்பதிகாரத்தில் காணப்படும் இசைப்பாடல்கள்
60. சி.செ. - சிற்பச் செந்நூல்
61. சி.பா. - சிதம்பரப்பாட்டியல்
62. சி.போ. - சிவஞான போதம்
63. சி.யா. - சிலப்பதிகார யாப்பமைதி
64. சித்.பரி.அக. - சித்தர்பரிபாசை அகராதி
65. சிந்துப். - சிந்துப்பாவியல்
66. சி.மு. - சிதம்பரமும்மணிக்கோவை
67. சிலப். / சிலம்பு. - சிலப்பதிகாரம்
68. சிவ. - சிவப்பிரகாசம்
69. சிற்.வழ. - சிற்றூர் வழக்கு
70. சிறுபாண். - சிறுபாணாற்றுப்படை
71. சீவக. - சீவகசிந்தாமணி
72. சீவக.அம்மானை. - சீவகசிந்தாமணி அம்மானை
73. சீவே. சரி. - சீவேந்திரர் சரிதம்
74. சுவா. நாத. - சுவாமி நாதம்
75. சூடா. - சூடாமணி நிகண்டு

76. சூளா. - சூளாமணி
77. செ.ப.அ. - சென்னைப் பல்கலைக்கழக அகராதி ( Tamil Lexicon )
78. செந்த. செல்வி. - செந்தமிழச் செல்வி
79. சேக். - சேக்கிழார்
80. சேக்.புரா. - சேக்கிழார் புராணம்
81. சேது.பு. - சேது புராணம்
82. சேனா. - சேனாவரையர் உரை
83. சொக். உலா. - சொக்கநாதர் உலா
84. சோலை. குற. - சோலை மலைக் குறவஞ்சி
85. த.இ.பே. - தமிழ் இலக்கணப் பேரகராதி
86. த.இ.நா.ப. - தமிழ் இலக்கியத்தில் நாட்டார் பண்பாடு
87. தக்க. யாக. - தக்கயாகப் பரணி
88. த.க.க. - தமிழிசைக் கலைக் களஞ்சியம்
89. த.க.சொ. - தமிழ்க் கல்வெட்டுச் சொல்அகராதி
90. தமி. - தமிழிசையில்
91. தமிழ் நா. - தமிழ் நாவலர் சரிதை
92. த.யா.வ. - தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்
93. த.வ. - தமிழிசை வளம்
94. த.வி. தூ. - தமிழ் விடு தூது
95. த.வீ.க - தமிழ் வீரநிலைக் கவிதை
96. தற். அக. - தற்கால அகராதி
97. தாயுமா. - தாயுமானவர்
98. தாள. சமுத் - தாள சமுத்திரம்
99. தி.மா. - திணைமாலை
100. திருக்.ஞா.உ. - திருக்கைலாய ஞான உலா
101. திருத். - திருத்தாளச்சதி
102. திருப்பு. - திருப்புகழ்
103. திருமங்கை. - திருமங்கை ஆழ்வார்
104. திருமந். - திருமந்திரம்
105. திருமுறை. - தேவாரத் திருமுறை
106. திருமுறை கண். - திருமுறை கண்ட புராணம்
107. திவா.புது. - திவாகரம் புது நூற்பா
108. திருவாச. - திருவாசகம்
109. திருவாத.பு. - திருவாதவூரடிகள் புராணம்
110. திருவருட். - திருவருட்பா
111. திருவாலவா. - திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்
112. திருவிளை. - திருவிளையாடற்புராணம்
113. தெ.இ.அ. - தென்னிந்திய இசை அகராதி (A Dictionary of South Indian Music and Musicians)
114. தெ.இ. - தென்னக இசையியல்
115. தெ.இ.க. - தென் இந்தியக் கல்வெட்டு (SII)
116. தென்.குல.குடி. - தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்
117. தெ.சொ. - தெலுங்குச் சொல்
118. தெய்வச். - தெய்வச்சிலையார் உரை
119. தே.நே. - தேவநேயம்
120. தொ. - தொல்காப்பியம்
121. தொ.எ. - தொல்காப்பியம் எழுத்து அதிகாரம்
122. தொ.சொ. - தொல்காப்பியம் சொல் அதிகாரம்
123. தொ.பு. - தொல்காப்பியம் புறத்திணை இயல்
124. தொ.பொ. - தொல்காப்பியம் பொருள் அதிகாரம்
125. தொன். - தொன்னூல் விளக்கம்
126. ந.அ. - நம்பி அகப்பொருள்
127. ந.பா. - நல்லாப்பிள்ளை பாரதம்
128. நச்சி. - நச்சினார்க்கினியர் உரை
129. ந.ச.கீ. - நந்தனார் சரித்திரக் கீர்த்தனை
130. நமச். - (சங்கர) நமச்சிவாயர் உரை
131. நள. - நளவெண்பா
132. நற். - நற்றிணை
133. நன். - நன்னூல்
134. நா.தீ - நாநார்த்த தீபிகை
135. நா.நி. - நாம தீப நிகண்டு
136. நா.வ. - நாட்டார் வழக்கு
137. நாகவர்.பு. - நாகவர் புராணம்
138. நாச். திரு. - நாச்சியார் திருமொழி
139. நாஞ்.வ. - நாஞ்சில் வழக்கு
140. நாட். உரை. - நாட்டார் உரை
141. நீர. நிக. - நீரரர் நிகண்டு
142. நெடுநல். - நெடுநல் வாடை
143. நே.வெ.இ. - நேரிசை வெண்பா இலக்கியக் களஞ்சியம்
144. நேமிநாத. - நேமிநாதம்
145. ப.ஆ.இ. - பழந்தமிழர் ஆடலில் இசை
146. ப.இ. - பஞ்சமரபில் இசை மரபு
147. ப.இ.இ. - பழந்தமிழ் இலக்கியத்தில் இசையியல்
148. ப.த.நா. - பண்டையத் தமிழ்ச் சமூகத்தில் நாடகம்
149. ப.த.பா. - பரதநாட்டியத்தில் தமிழிசைப் பாடல்கள்
150. ப.தி.வ. - பன்னிருதிருமுறை வரலாறு

151. பதிற். - பதிற்றுப்பத்து
152. ப.ம.வி. - பஞ்ச மரபு விருத்தியுரை
153. ப.மு.கோ. - பண்டாரமும் மணிக்கோவை
154. பக். - பக்கம் / பக்கங்கள்
155. பஞ்ச பார. - பஞ்சபாரதீயம்
156. பதார்த்த. - பதார்த்த குணசிந்தாமணி
157. பட்டினப். - பட்டினப்பாலை
158. பரத. - பரதசாத்திரம்
159. பரிபா. - பரிபாடல்
160. பரிமேல் - பரிமேல்அழகர் உரை
161. பணவிடு. - பணவிடு தூது
162. பா.கை. - பாணர் கைவழி
163. பா.ச. - பாலசரிதம்
164. பாசுரம். - ஆழ்வார் பாசுரம் (நாலாயிரத்திவ்விய பிரபந்தம்)
165. பா.பா. - பாப்பாப் பட்டியல்
166. பிங்க. - பிங்கல நிகண்டு
167. பிரபு. லீலை. - பிரபுலிங்க லீலை
168. பிரமோத். - பிரமோத்தரகாண்டம்
169. புறப். வெண். - புறப்பொருள் வெண்பா மாலை
170. புறம். - புறநானூறு
171. பு.வ. - புதுவை வழக்கு
172. புறத். - புறத்திணை
173. பெ.அ. - பெருஞ்சொல் அகராதி
174. பெ.தி. - பெரிய திருமடல்
175. பெப். அக. - பெப்ரிசியஸ் அகராதி
176. பெரியபு. - பெரிய புராணம்
177. பெரியபு. ஆனாய. - பெரிய புராணம் ஆனாய நாயனார் புராணம்
178. பெருங். - பெருங்கதை
179. பெரும். - பெரும் பாணாற்றுப்படை
180. பெ.வா.பிள்ளை. - பெரியவாச்சான்பிள்ளை
181. பே.வ. - பேச்சுவழக்கு
182. பேரா. - பேராசிரியர் உரை
183. பொ.நி. - பொதிகைநிகண்டு
184. பொ.வே.சோம. - பொ.வே.சோமசுந்தரனார்
185. பொருந. - பொருநர் ஆற்றுப்படை
186. பொருட்.நி. - பொருட்டொகை நிகண்டு
187. ம.சூ. - மகாபரத சூடாமணி
188. மதத. - மத்தளவியல்
189. ம.த.பே. - மதுரைத் தமிழ் பேரகராதி
190. ம.வ. - மலையாள வழக்கு
191. மக்.வழ. - மக்கள் வழக்கு
192. மணிமே. - மணிமேகலை
193. மதுரைக். - மதுரைக்காஞ்சி
194. மதுரைப்பதிற். - மதுரை பதிற்றுப் பத்தந்தாதி
195. மயிலை. - மயிலை நாதர் உரை
196. மலைபடு. - மலைபடு கடாம்
197. மனோன். - மனோன்மணியம்
198. மா.அ. - மாறன் அலங்காரம்
199. மீனா.சரித். - மீனாட்சி சுந்தரம் பிள்ளை சரித்திரம்
200. மு.அ. - மு.அருணாசலம்
201. முக்.பள்ளு. - முக்கூடற்பள்ளு
202. முத்.வீ. - முத்து வீரியம்
203. முருகு. - திருமுருகாற்றுப்படை
204. முல்லைப். - முல்லைப்பாட்டு
205. மேற். - மேற்கோள்
206. யா.க. - யாப்பருங்கலம்
207. யா.கா. - யாப்பருங்கலக்காரிகை
208. யா.நூ. - யாழ் நூல்
209. யா.வி. - யாப்பருங்கல விருத்தி
210. யா.வி. ஒழிபி. - யாப்பருங்கல விருத்தி ஒழிபியல்
211. ராட். அக. - ராட்லர் வட்டார அகராதி
212. வ.வ. - வடமொழி வரலாறு
213. வச். மா. - வச்சணந்தி மாலை
214. வட.சொ. - வட சொல்
215. வண்ணத். - வண்ணத்தியல்பு
216. வாழ். களஞ். - வாழ்வியல் களஞ்சியம்
217. விநாயகபு. - விநாயக புராணம்
218. வி.வி. தூ. - விறலி விடு தூது
219. வின். அக. - வின்ஸ்லோ அகராதி
220. வீ.ப.கா.சு. - வீ.ப.கா.சுந்தரம்
221. வீர சோ. - வீர சோழியம்
222. வெ. பா. - வெண்பாப் பாட்டியல்

1. C.E.D. - Collins English Dictionary
2. D.E.D. - Dravidian Etymological Dictionary
3. E.T.L. - Encyclopaedia of Tamil Literature
4. I.M. - Indian Music (B.C. Deva)
5. O.D.M. - Oxford Concise Dictionary of Music
6. P.P.T.I. - Prepallauan Tamil Index
7. S.R. - Sangita ratnakara of Sarangadeva (Translated by R.K. Shringy and Prem Lata)
8. M.I. - The Music of India (Reginald and Jamila Massey)
9. N S. - The Natyasastra (Translated by Manomohan Ghosh)
10. T.I.T. - Traditional Indian Theatre (Kapila Vatsyayan)

# அ

**அ:** *அகரம் என்னும் எழுத்தொலி அடிப்படைக் குரலைக் (ஆதாரசட்சம்) குறிப்பது. ஒத்து (சுருதி) சேர்க்கும்போது 'அ' என்ற எழுத்தொலியினையே பாடகர் பயன்படுத்துகின்றனர். எழுத்துக்கள் நீட்டம் பெற்று ஒலிப்பதே இசை.*

அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர் (தொ. எ. 33)

*எனவே இசையின் ஏழு சுரங்களுக்கும் கீழ்க்காணுமாறு குறியீட்டு எழுத்துக்களைப் பயன்படுத்தியுள்ளனர்:*

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்ற
ஏழும் ஏழிசைக் கெய்தும் அக்கரங்கள் (பிங்க. 1415)

குரலே துத்தம் கைக்கிளை உழையே
இளியே விளரி தாரம் என்றிவை
எழுவகை யிசைக்கும் எய்தும் பெயரே (திவா. 1884)

*குரல்- ஆ; துத்தம்- ஈ; கைக்கிளை- ஊ; உழை- ஏ; இளி-ஐ; விளரி-ஓ; தாரம்-ஔ*
← *த. க. க 1/1.*

**அக்கர காலம்:** = அச்சரக்காலம், அட்சரக்காலம்
*எழுத்துக்கள் ஒலிக்கும் கால அளபு*
*இசையில் ஒரு தாள அளவை.* (Chief unit of time)
*தனிக்குறில் - ஓர் அளபு (அளபு - unit)*
*தனிநெடில் - ஈரளபு*
*அ, க - ஓர் அளபு*
*க் + அ = க; எனவே ஒற்றடுத்துவரினும் ஓர் அளபே. அதாவது இசைத் தமிழில் குற்றெழுத்து ஓசை அளபு பெறாது. இயல் தமிழில் அரை அளபு பெறும்*

ஓரளபு இசைக்கும் குற்றெழுத்தென்ப (தொ. எ. 3)

ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்தென்ப (தொ. எ. 4)

மெய்யின் அளபே அரையென மொழிப (தொ. எ. 11)
குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்
தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல (தொ. எ. 50)

*(இருகுறில் ஒரு நெடிலாகக் கொள்ளல்)*
எடு:- தொகுப்பு > தோப்பு; மிகுதி > மீதி)

| | |
|---|---|
| *தன தன* | - ¼ x 4 = 1 |
| *தானா* | - ½ x 2 = 1 |
| *தகதகிட* | - ¼ x 5 = 1¼ |
| *தானதன* | - ½ + ¼ + ¼ + ¼ = 1¼ |

**அக்கரச்சுதகம்:** ஒரு பொருள் பயப்பதோர் *சொற்கூறி அச்சொல்லில் ஓரோர் எழுத்தாக நீக்க வேறுவேறு பொருள் பயக்கும் சித்திரகவி.*
← *தண்டி: 98; யா வி. ஒழிபி உரை; செ. ப. அ. 2-3*
*எடு: பாலாவி, பாலா, பா.*

**அக்கரம்:** = அச்சரம், அட்சரம்.

1. எழுத்து

அக்கரங்கள் இன்றாம் அகர உயிர் இன்றேல்
(சி. போ. 7; பெ. அ. 6/1)

'அ'(ஆனாவுக்கு) வுக்கு அச்சாரம் தெரியாதவன் (நா. வ.) அதாவது எழுத்து அறிவு இல்லாதவர்.

2. (அட்சரம்)

*பண் நீர்மைகளில் ஒன்று* (பரத. இராக. 27)

**அக்கரவர்த்தனம்: → அக்கரவர்த்தி**

**அக்கரவர்த்தி:** = அக்கரவர்த்தனம்
*பாடல் வகையுள் ஒன்று (சித்திர கவிகளுள் ஒன்று)*
*(த. வி. தூ. 46; செ. ப. அ. 3)*

**அக அறுதி**: *4 எண்ணிக்கைக்குள் அறுதி - 4/4 - நாலன் ஒருமைத் தாளம் (சதுசுர ஏகதாளம்).*

| | | | |
|---|---|---|---|
| , | *தகிகிடதொம்* | *ததிகிடதொம்* | *ததிகிடதொம்* |
| ¼ | 1¼ | 1¼ | 1¼ = 4 |

*இந்த அறுதி மூன்று மடிப்புப் பெற்று வந்து அகத்திலே முடிவதால் அக அறுதி. இதுவே சிறப்பானது.*

**அகக்கூத்து:** *அகநாடகம். அகப்பொருள் பற்றிய கூத்து. இதன் இருவகை தேசியும் மார்க்கமும்.*
இருவகைக்கூத்தின் இலக்கணமறிந்து (சிலப். 3: 12)

**அகக்கூத்து உரு:** *அகநாடகப் பாடல். கந்தம் முதல் பிரபந்தம் ஈறாக இருபத்தெட்டு. கந்தம் - ஒருதாளப் புணர்ப்பு; பந்தம் - பல தாளப் புணர்ப்பு*

→ கந்தம், பந்தம்.

**அகச்சிறுமுழா:** = சிறுபறை, கஞ்சிரா.

*கைக்கு அடக்கமான சிறிய பறை; ஒருகண் பறை.*

**தூம்பு அகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கி (புறம். 103: 2)**

← *த. க. க. 3/I*

**அகசியக்கூத்து:** → அகசியம்

**அகசியம்:** = அகசியக் கூத்து.

*பகடிக் கூத்து; கைகால் ஆட்டியும் முகஞ்சுளித்தும் செய்யும் கூத்து.*

**ஒருபாலின அகசியங்கள் (ந. பா. இராச. 17)**

← *பெ. அ. 21/I; க. த. சொ. 15; செ. ப. அ. 8*

**அகடு:** = பத்தர், பத்தல், குடம், அகளம், பானை, வயிறு.

*யாழ் இசைக்கருவியின் குடம்போன்ற உறுப்பு.*

**அகடு சேர்பு பொருந்தி அளவினில் திரியாது (மலைபடு. 33)**

**வயிறு சேர்பு ஒழுகிய வகையமை அகளத்து (சிறுபாண். 224)**

**அகண்டி:** *ஓர் இசைக்கருவி.*

← *செ. ப. அ. 9.*

**அகத்தெழு வளி இசை:** *உள்ளிருந்து எழும் காற்றால் உருவாகும் இசை.*

**எல்லா... அகத்தெழு வளி இசை அரில்தப நாடி... (தொ. எ.102)**

← *இளம். & நச்சர். உரை*

**அகநிலை:** = அகச்சாதி, அகம்.

*அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என்ற பண்டைய பண்ணாக்க முறைகளுள் ஒன்று.*

**....உழைகுரலாய கோடிப்பாலை அகநிலை மருதமாகவும்...**

**(சிலப். 8:37–41 அடியார்க்.)**

**ஆசானுக்கு... அகச் சாதி காந்தாரம்....**

**(சிலப்.17:110–12 அடியார்க்.)**

**அகநிலை ஒத்தாழிசை:** *கலிப்பா வகை.*

← *பா. பா. 91*

**அகநிலைக் கொச்சகம்:** *கொச்சகக் கலியின் வகைகளில் ஒன்று.*

← *கலித். 119: நச்சர்.*

**அகநிலை பசாசக்கை:**

**"பசாசமென்பது பாற்படக் கிளப்பின்**
**அகநிலை, முகநிலை, உகிர்நிலை யென்னத்**
**தொகநிலை பெற்ற மூன்றுமென மொழிப"**

**பசாசமாவது பெருவிரலும் சுட்டுவிரலுமின்றி ஒழிந்த மூன்று விரலும் தம்மிற்பொலிந்து நிற்பதெனக் கொள்க. அகநிலைப் பசாசம் - சுட்டுவிரல் நுனியில் பெருவிரல் அகப்படுவது (சிலப். 3:18 அடியார்க்.மேற்)**

**அகப்படு நரம்பு:** = ஏழாம் நரம்பு, இணை நரம்பு, பட்டடை நரம்பு, இளி (பஞ்சமம்)

*குரல் நரம்பின் ஒலியுள் அகப்பட்டு இரண்டறக் கலந்து ஒலிக்கும் நரம்பு; நின்ற சுரத்திலிருந்து ஏழாவதாக வரும் சுரம்.*

| ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| 0–7; ச ப | | | | 'ச' வுக்குப் 'ப' அகப்படு நரம்பு | | | | | | | |
| 1–8; ரி$^{1}$ த$^{1}$ | | | | 'ரி$^{1}$' யிற்குத் 'த$^{1}$' அகப்படு நரம்பு | | | | | | | |
| 2–9; ரி$^{2}$ த$^{2}$ | | | | 'ரி$^{2}$' யிற்குத் 'த$^{2}$' அகப்படு நரம்பு | | | | | | | |

*(நின்ற சுரத்திற்கு ஏழாவதாக வரும் சுரம் 'இளி')*

**" . . . அகப்பட்ட நரம்பாகிய இளி நரம்பையும் . . ."**

**(சிலப். 8: 44 அரும்.)**

**அகப்பா:** 1. அகநானூறு.

2. *அகப்பொருள் அமைந்த செய்யுள்; காதல் பாடல்* (love poem, love lyrics)*; சங்க அகப் பாடல்களைப் போன்று இன்றைய நாட்டியப் பதங்களும் அகப்பாடல்களே.*

← *செ. ப. அ. 11.*

**அகப்பா அகவல்:** *அகப்பொருள் தழுவி, பத்து உறுப்புடன் வஞ்சித்தளை விரவாது முடியும் ஆசிரியப்பா வகை.*

**அகப்பாஅகவல் ஐ ஈர் உறுப்பின் ஆசிரியம்மே**

**(யா. வி. 77 உரை)**

**அகப்பாட்டு உறுப்பு:** *அகப்பொருள் பற்றிய பாடல்களின் பன்னிரண்டு உறுப்புக்கள். 1. திணை 2. கைகோள் 3. கூற்று 4. கேட்போர் 5. இடம் 6. காலம் 7. பயன் 8. முன்னம் 9. மெய்ப்பாடு 10. எச்சம் 11. பொருள் 12. துறை.*

**திணையே கைகோள் பொருள் வகை எனாஅ**
**கேட்போர் களனே காலவகை எனாஅ**
**பயனே மெய்ப்பாடு எச்ச வகை எனாஅ**
**முன்னம் பொருளே துறைவகை எனாஅ (தொ. பொ. 310)**

← *நம்பி. அகப். 211; செ. ப. அ. 11; த க. க. 8/I*

**அகப்பாட்டு வண்ணம்:** ஈற்றில் நிற்கும் எழுத்துப் பெறாது இடையடிபோன்ற அடியால் முடிவது.. அகத்திணைப் பொருள் கொண்டு வரும் அகப்பாடல்.

**அகப்புறமுழவு:** தண்ணுமை, தக்கை, தகுணிச்சம்.
"**அகப்புற முழவாவன: முன்சொன்ன மத்திமமான தண்ணுமை தக்கை தகுணிச்சம் முதலாயின**"
(சிலப். 3: 27 அடியார்க்.)

**அகப்பைக் கின்னரி:** தென்னஞ்சிரட்டை வடிவுடன், இரு தந்திகளால் ஆன ஒரு நரம்பிசைக் கருவி. வில்கொண்டு மீட்டி இசைப்பர். இன்றைய யாழ் முதலிய கருவிகளுக்கு முன்னோடி .
←செ. ப. அ. 11; த. க. க. 9/I; பெ. அ. 30/I

**அகப்பொருள்துறை:**
உரைப்போரும் கேட்போரும் இன்றிப் புலவன் தானே கூறுவது என்னும் அகப்பாட்டு உறுப்பு.
↑ கவிக் கூற்றை ஒப்பது
← பெ. அ. 30/I; ந. அ. 234

**அகம்:** அகக்கூத்து.
**அகத்தெழு சுவையான் அகம் எனப்படுமே**
**(சிலப். 3: 12 அடியார்க். மேற்.)**

**அகமார்க்க நட்டுவம்:** நாட்டிய பாவனை.
இவன் முன்பு அகமாற்க நட்டுவமாய் நின்றான்
(தெ. இ. க. 23: 306)
← பெ. அ. 33 - 34/I.

**அகமார்க்க நடம்:→ அகமார்க்கம்**

**அகமார்க்கம்:** = அகமார்க்க நடம்
1. மெய்க்கூத்து, மெய்த்தொழில் கூத்து.
**இவை அகச்சுவை பற்றி எடுத்தலின் அகமார்க்கமென நிகழ்த்தப்படும் (சிலப். 3: 12 அடியார்க்.)**
இவற்றின் வகை: தேசி, வடுகு, சிங்களம்.
2. கடினமான உயர்முறைப் பாடுவகை.
↑ **கனம் பாடுதலை ஒத்ததாகலாம்**
← செ. ப. அ. 13; பெ. அ. 34/I

**அகமுழவு:** உள் அரங்கத் தோற்கருவி; (concert or indoor percussion instrument).
மத்தளம், சல்லிகை, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழா, சிறுபறை (கஞ்சிரா), மதங்கம் (மிருதங்கம்) முதலியன.
← செ. ப. அ. 13; சிலப். 3. 27 அடியார்க்
**தரித்த மதங்கமொடு மத்தளம் சல்லி**
**பெருத்த கரடிகையே பேரி – உரத்த**
**படகம் குடமுழவம் பாங்காய வேழும்**
**அடைவே முதற் கருவியாம் (சுத்தானந்தப் பிரகாசம்)**

**அகரப்பயிற்சி:** = அகாரப்பயிற்சி, அகார சாதகம், அகார சாதனை
ஒருவகை இசைப்பயிற்சி; இசை பழகுமுறை; ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்ற உயிரெழுத்துக்களால் இசைச் சுரங்களைப் பயிற்சி செய்தல். அகரத்தை அளபெடையாக நீள ஒலித்துப் பாடும் பயிற்சிமுறை. அகார, உகார, எகாரப் பயிற்சி முறையும் உண்டு. ஐந்து உயிர்க்குறில்களும் - குறிலாகவும் நெடிலாகவும், இசைக்கால அளவுப்படி ஒலித்துப் பயிலப்படும். வண்ணம் (வர்ணம்), கீதம், கீர்த்தனை ஆகியன பாடுங்கால் இந்த அளபெடைகள் நிரம்பப் பயன்படுகின்றன.
**நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய**
**கூட்டி யெழூஉதல் என்மனார் புலவர் (தொ. எ. 6)**
**ஆஆ > ஆவா > ஆகா**
ஆகா! என்று பாடுங்கால் 'கா' என்பதை நீட்டிப் பாடுவதை, 'ஆகா ஆஆஅ' என்று முன்னர் எழுதி வந்துள்ளனர். தற்காலம் ஆகா ; ; , என்று எழுதும் முறை உள்ளது.
**குறில் எழுத்தைக் குறிப்பது: ,**
**நெடில் எழுத்தைக் குறிப்பது: ;**
← த. க. க. 11/I

**அகலக்கவி:** = அகலம், அகலப்பா, வித்தாரகவி, விருத்தக்கவி.
1. **விரிவான பாடல்:** அகலமுற (விரிவாக)ப் பாடப் படுவதால் இஃது அகலக்கவி. இது தொடர்நிலைப் பாட்டு எனவும், பல அடிகளால் நடக்கும் தனிப்பாட்டு எனவும் இருவகைப்படும்
← த. இ. பே. 6/16; வெ. பா. செய். 28; இ. வி. பாட் .763

2. அகலக்கவி பாடும் கவிஞன்; வித்தாரகவி
(வெ. பா. செய். 5 உரை)
**ஆசு, மதுரம், சித்திரம், அகலம் (இ. வி. 763)**

**அகலப்பா:** வித்தார கவி.
**ஈங்கு அகலப்பாக்கள் இரண்டாகும் (வெ. பா. செ. 28)**

**அகலம்: → அகலக்கவி**

**அகலவர்:** பாணர்
**அகலவன் பெறுகமாவே (பதிற்.43:28)**

**அகவ:** அழைக்க, விளிக்க, முழங்க, பாட.
**ஓங்கு இரும்பெண்ணை அகமடல் அகவ (குறிஞ். 220)**

விளிப்பது கவரும் தீங்குழல்... (மலைபடு. 8)
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ (முருகு. 122)

**அகவடித் தட்டுதல்:** *பாதத்தின் படத்தால் தரையைத் தட்டுவது. நடனம் ஆடுகையில் அகவடியால் தரையைத் தட்டுதல். ← த. க. க 11/I*

**அகவர்:** = சூதர் (தே.நே.136/IV). *பாணரில் ஒரு பிரிவினர்* (Bards), *மருதநிலப்பாணர், விடியற்காலைப் பொழுதில் மன்னன் துயில்நீங்கப் பள்ளி யெழுச்சி பாடுவோர்.*

சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் (தொ. பொ. 88)
நாள் ஈண்டிய நல் அகவர் (மதுரைக். 223)
அகவரென்றார்; குலத்தோரெல்லாரையும் அழைத்துப் புகழ்வர்; ஆகுபெயர், அகவல்போல (மேலது. நச்சர்)

**↑ அகவுதல் எனும் ஓசையடியால் பிறந்தது அகவல் எனும் சொல். அரசர்க்குரியது தெய்வத்திற்கானபின் மன்னர்க்கான துயிலெடை இறைவனுக்கான திருப்பள்ளி எழுச்சியாயிற்று.**

கானவர் மருதம் பாட அகவர்
நீல்நிற முல்லைப் பல்திணை நுவல (பொருந. 220 – 221)

**↑ முல்லை நிலத்தார் மருதமும், அகவர் முல்லையும் பாடுவதாக மறுதலையாகக் கூறுவதால் அகவர் மருதநிலப் பாணர் என்றறியலாம்.**

**அகவல்:** *(அகவு + அல் > அகவல்).*

1. மயில்குரல் (screech of the peacock).
அகவல், ஆலல், ஏங்கல், மயில் குரல் (பிங்க. 2318)
2. அழைத்தல் (calling, addressing)
... அகவல் என்பதும் அழைத்தலாகும் (பிங்க. 1996)
3. அகவல் ஓசை: ஓசை, ஒலி; அகவல் யாப்பிற்கான ஓசை (Rhythm peculiar to Akaval metre)
அகவல் – ஓசை (தொ. சொ. 131 நச்சர்)
4. ஆசிரியம்: *நால்வகைப் பாக்களுள் ஒன்றான முதன்மைப்பா.*
ஆசிரியம், மயில்குரல், ஆடல் (சூடா. 11. 16)
அகவல் என்பது ஆசிரியம்மே (தொ. பொ. 386)
5. நீள ஒலித்தல்.
6. எடுத்தலோசை, உயர் ஓசை, உச்ச ஓசை (Hightone, acute accent)
அகவலும் எடுத்தலோசைப் பெயரே (பிங்க. 2109)
7. அகவல் – *ஆடல்*
அகவல், தாண்டல். . . கூத்தாடல் (பிங்க. 1464)

↑ மயில், அன்றில் முதலிய பறவைகளின் நீள ஒலிக்கும் குரலிலிருந்து இச்சொல் பிறக்கிறது. எழுத்தும் சொல்லும் தோன்றுவதற்கு முன்பே இசை தோன்றிவிட்டது என்பதற்கும் கூத்திற்குப் பின்பே இசை தோன்றியது என்பதற்கும் அகவல் சான்றாகிறது.

சான்றுபிளிறலும்... அகவலும் எழுத்திலா ஓசை (திவா.1898)
*← செ. ப. அ. 15; த. க. க 12/I*

**அகவல்உரிச்சீர்:** *அகவற்பாவிற்குரிமையான ஈரசைச்சீர்கள்.*

1) நேர் நேர் – தேமா; எடு:– நேரே, தேன் பால்
2) நேர் நிரை – கூவிளம்; எடு:– மாதுளை, மான்கணம்
3) நிரை நிரை – கருவிளம்; எடு:– கருவிளை, கருங்குயில்
4) நிரை நேர் – புளிமா; எடு:– கடுமா, கடுமான்

*ஈரசைச்சீர்கள் தேவாரப் பாடல்களிலும், கீர்த்தனைகளிலும் பெரிதும் இடம்பெறுகின்றன. 'வாழ்த்து' என்னும் போற்றிப் பாடல்களுக்கு ஏற்றசீர் வகைகள் (மாச்சீர், விளச்சீர்) இவை.*
*← த. க. க. 13/I; (யா. கா. 10)*

↑ பாட்டிலும் தொகையிலும் புறப்பொருள் பற்றியன பெரும்பாலும் மன்னர்களைப் போற்றிப் பாடுபவை. எனவே அவை ஆசிரியப்பாவில் அமைந்துள்ளன
→ இயற்சீர்

**அகவல் ஓசை:** *ஆசிரியப்பாவின் ஓசை; இது ஈரசைச் சீரால் கட்டப்படும் தளையால் பிறக்கும் ஓசை. தான் கருதியவற்றையெல்லாம் ஒருவனை அழைத்துத் தானே நேராகக் கூறுமிடத்துத் தொடர்ந்து வரும் ஓசை. உடுக்குப் பாட்டிலும், ஏற்றப்பாட்டிலும் இவ்வோசை கேட்கும்.*
*← பஞ்சமரபு, 233; தொ. சொ 81. நச். & பேரா*

**அகவல் சுரிதகம்:** *ஆசிரியச் சுரிதகம், ஆசிரியப் பாவால் முடியும் கலிப்பாவின் ஈற்றுறுப்பு*
→ சுரிதகம்

**அகவல் தாழிசை:** *ஆசிரியத் தாழிசை; மூன்றடியால் வரும் பாவினம் (யா. வி. 75)*

**அகவல் துள்ளல்:** *துள்ளல் ஓசை வகையினில் ஒன்று. வெண்டளையும் கலித்தளையும் கலந்து வருவதால் பிறக்கும் ஓசை*
*← யா கா. செய். 1. உரை; செ ப அ. 15*

**அகவல் துறை:** → ஆசிரியத் துறை

**அகவல் தூங்கல்:** *தூங்கல் ஓசை வகையினில் ஒன்று. ஒன்றாத வஞ்சித் தளையான் வரும் தூங்கல் ஓசை.*
*← யா கா. செய். 1. உரை; செ ப அ. 15*

**அகவல் பா:** = ஆசிரியப்பா, தொகை.
*'சிறுகுடியீரே சிறுகுடியீரே' என அகவி (அழைத்து)ப் பாடுவதால் அகவல்பா. ← சிலப். 24: 11*

அகவன் மகளே! அகவன் மகளே!! (குறுந். 23)
அகவிக் கூறலின் அகவல் ஆயிற்று . . . அதனை வழக்கினுள் அழைத்தல் என்ப (தொ. பொ. 81. நச்.)

**அகவல் விருத்தம்:** *ஆசிரிய விருத்தம் எனும் பாவினம். அடிதொறும் ஆறு சீருக்குக் குறையாமல் நாலடியால் வருவது.*

**அகவலன்:** *போர்க்களம் பாடும் பாணன்; போர்க் களத்து நிகழ்வுகளை ஊர்மன்றத்தில் பாடும் பாணன்.*

மன்றம் படர்ந்து மறுகு சிறைப்புக்கு
கண்டி நுண்கோல் கொண்டு களம்வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே (பதிற். 43: 26 – 28)

**அகவன் மகள்:** = அகவுநர்மகளிர், கட்டுவிச்சி, கொடிச்சி, பெண்பூசாரி, முதுவாய்ப்பெண்டிர், பாண்மகள், புலைமகள்
*கையில் சிறுகோல் கொண்டு பாடிக் குறிசொல்லும் குறிஞ்சி நிலக் குறத்தி. அகவிக் கூறுவதால் அகவன் மகள் என்றாயிற்று.*

வெண் கடைச்சிறுகோல் அகவன் மகளிர் (குறுந். 298: 6)
அகவன் மகளே பாடுக பாட்டே (குறுந். 23: 3)
அந்தீங்குறிஞ்சி அகவன் மகளிர் (சிலப். 28: 35)
கட்டினும் கழங்கினும் (தொ. கள. 24)

*கட்டு – பின்னால் வருவதை முன்கூட்டியே கூறுவது.*
*ஒப்பு:- கட்டியம், கட்டியங்காரன்*
↑ பழங்குடிச் சமூகத்திலுள்ள, தெய்வத்தை அழைக்கும் அகவன் மகளிரின் அழைப்புமுறைப் பாடலிலிருந்து அகவற்பா தோன்றியிருக்கலாம். இது மேலும் ஆய்தற் குரியது.

**அகவினம்:** *உரக்க விளித்துப் பாடுதல்* (doubling sound)

அகவினம் பாடுவாம் தோழி (கலித். 40: 1)
அகவினம் பாடுவாம் நாட (கலித். 40: 7)

**அகவுதல்:**

1. கூத்தாடுதல்
அகவல் தாண்டல்... கூத்தாடல் (பிங்க. 1464)

2. ஒலித்தல்: சிறப்பாக மயில் ஒலித்தல்.
ஆடுமயில் அகவும் நாடன் (குறுந். 264)

3. கூப்பிடுதல்
... புதவின் அரந்தைப் பெண்டிர்... அகவ (மதுரைக். 165 – 66)

4. பாடுதல்
வள்ளை அகவுவம் வா (கலித். 42: 8)

5. இசைத்தல்
யாழ்அகவி. . . நகரார் எதிர்கொள்ள (சூளா. 1528)

6. ஆரவாரித்தல்
...காக்கையொடு கழுகு விசும்பு அகவ (ஐங். 314)
இருங்குயில் ஆனாது அகவும் பொழுதினான் (கலித். 92: 63–64)

7. நெடுமையாதல் (to be long)

8. அழைத்தல் (to call, summen)
← *செ. ப. அ. 15*

**அகவுநர்:**

1. பாடுநர்
இன்குரல் அகவுநர் (அகம். 249: 4)
பகர்குழல்... அகவுநர் நாநவில் பாடல் (பரிபா. 15: 42–43)
2. வாழ்த்திப் பாடும் பாணர்.
புன்தலை... அகவுநர் பெருமகன்... அஃதை (அகம். 113: 3 – 4)
3. ஆடுபவர்
அகவல், தாண்டல்... கூத்தாடல் (பிங்க. 1464)

**அகவுநர் மகளிர்:** → **அகவன் மகள்**

**அகளம்:** → **அகடு**

**அகார சாதகம்:** → **அகரப்பயிற்சி**

**அகார சாதனை:** → **அகரப்பயிற்சி**

**அகாரப் பயிற்சி:** → **அகரப்பயிற்சி**

**அகி:**
= சிலம்பு, நூபுரம், சதங்கை, சலங்கை, அறக்கலம், அடிக்கலம்.
*மகளிர் அணியும் காலணி வகையுள் ஒன்று.*
← *பொ. நி.*

**அகுன்றி:** *ஓர் இசைக்கருவி.* ← *அ. நி.*

**அகைப்பு:** = அகைப்பு வண்ணம்.
*ஒருவழி நெடிலும், ஒருவழிக் குறிலும் பயின்று, விட்டுவிட்டுச் செல்லும் வண்ண வகையுள் ஒன்று.*
ஆடு சிறை அறுத்த நரம்பு சேர் இன்குரல் (பதிற். 43: 21)
அகைப்பு வண்ணம் அறுத்தறுத்து ஒழுகும் (தொ.பொ.541. பேரா)
*(அறுத்தல் - இடைவிடுதல்; விட்டுவிட்டுச் செல்லல்)*
வாரா ராயினும் வரினு மவர் (தொல். பொ. 541. பேரா. மேற்)
*இது அடியின் முற்பகுதியில் நெடிலாகவும் பிற்பகுதியில் குறிலாகவும் அமைந்த அகைப்பு வண்ணம்.* ← *செ. ப. அ. 18*
பாலே சேர் வா யே னோர் காண்
பயில் கண முனிவர்களும் (சம்ப. திருத்)
ஒசித்தல், கோட்டல், ஒடித்தல், அகைத்தல்
ஞெமிர்தல், இறுத்தல், வளைத்தல் ஆகும் (திவா. 1575)
உலைத்தல், ஒறுத்தல், தீர்த்தல், அடல், மிறைசெயல்
அகைத்தல், வேதனை, அலைப்பு என மொழிப (திவா. 1672)

**அகைத்தல்:** அடித்தல் என்று ஒரு பொருள் உண்டு. அடித்தலின் பெயராகத் திவாகரம் 1770 க்குப் பிந்திய புதிய நூற்பா:

கொட்டல், மொத்தல், அறைதல், அகைத்தல்...

என்று அகைத்தலை அடித்தல் (கொட்டல்)ஆகக் கூறுகின்றது.

**அகைப்பு வண்ணம்:** → அகைப்பு

**அங்ககாரம்:**

1. நாட்டியவகை இருபதுள் ஒன்று.

அங்ககாரமே யிரேசித மென்னக் கொண்ட
நாலைந்து பேதமும் கற்று (திருவிளை. கால்மாறி. 4: 24: 9)

2. இரண்டு மூன்று கரணங்களின் சேர்க்கை. (கரணம் - நாட்டியத் தொழிலின் உடல்நிலை)

← த. க. க. 186 /III

**அங்கக்காரன்:** பல வேடங்கொண்டு நடிக்கும் வேடதாரி.

அங்கக்காரன் துதிப்பும் (ஓழிவி. துறவு. 19: உரை)

← பெ. அ. 51/I

**அங்கக் கிரியை:**

1. தாளம் போடும்போது கையினால் செய்யும் வினைகள்.

2 . கூத்துத் தொழில்:

நாட்டியத்தின் போது உறுப்புக்களால் செய்யும் வினைகள். 16 கூத்துத் தொழில்களாவன:

1. சரிகை - சார்புக்கை
2. புரிகை - தொழிற்கை
3. சமகலி - சமக்கை
4. திரிகை - திரிகை
5. ஊர்த்துவகலிகை - ஊர்த்துவக்கை
6. பிருட்டகம் - பூட்டுக்கை
7. அர்த்த பிருட்டகம் - அரைப் பூட்டுக்கை
8. சுவத்திகம் - மங்கலக்கை
9. உல்லோலம் - பொருந்திணைக்கை
10. குர்த்தனம் - பெருஞ் சினக்கை
11. வேட்டனம் - சுற்றி வருங்கை
12. உபவேட்டனம் - சுற்றிவரும் துணைக்கை
13. தான பதப்பிராய விருத்தம் - சொற்பொருட்கை
14. உச்சேபணம் - விசிறிக்கை அல்லது எழும்புதற்கை
15. அவச்சேபணம் - விழுதற்கை
16. நிருஞ்சனம் - உய்வு அறுகை (உய்ஞ்சனம் = உய்வு)

(சுத்தானந்தப் பிரகாசம் எனும் தமிழ்ப் பரதநூலில் கண்ட இப்பதினாறு கூத்துத் தொழில்களுக்கும் இணையான மேற்கண்ட தமிழ்ச்சொற்கள் வீ. ப. கா. சு. வினால் தரப்பட்டுள்ளன)

← த. க. க. 15/I

**அங்கசாலை:** நடன சாலை (அங்கம் - நாடகம்)

சோடிமுகம் பார்வை அங்கசாலைகள்... (தெ. இ. க. 17.736)

← பெ. அ. 53/III.

**அங்கண் முழவு:** அழகிய கண் முழவு; கிணை, மதங்கம் (மிருதங்கம்) போன்ற தோற்கருவிகளின் வலப்புறத்தின் வாய்த்தோல் மத்தியில் நிரந்தரமாக ஒருவகைக் கருப்புப் பசையை ஒட்டி வைத்து முழக்கும் முறை உள்ளது. அது அழகிய கண்போன்று காட்சியளிப்பது. ( அம் - அழகிய).

அங்கண் மாக்கிணை அதிர ஒற்ற (புறம். 373: 31)
அங்கண் அறைய அகல்வாய்ப் பைஞ்சுனை (நற். 357: 7)

**அங்கணர்தம் பாணி:**

=ஆசான், ஆசான் திறம், காந்தாரம், அரசன் சாதி, ஆசான் சாதி.

பாணி என்பதால் இது ஒரு திறப்பண் (சேய், ஜன்யம்).

தானநிலைக் கோல்வடித்துப் படிமுறைமைத் தகுதியினால்
ஆன இசை ஆராய்வுற்று அங்கணர்தம் பாணியினை
(பெரியபு. சம்பந். 135)

ஆசான் திறத்தின் அமைவரக் கேட்டுப் பாடற் பாணி ...
(சிலப். 13. 112 – 13)

ஆசான் திறம் - காந்தாரம்; ஆசானென்று ஒரு பண்ணிற்குப் பேராகவும் இசைத்தமிழிற் கூறுப
(மேலது. அரும்.)

...ஆசானென்னும் பண்ணியலாகிய...(மேலது. அடியார்க்.)

**அங்கதச் செய்யுள்:** → அங்கதம்

**அங்கதம்:**

=அங்கதச் செய்யுள். வசைப்பாடல், கேலிப் பாட்டு, வசைக்கவி.

வசையொடும் நசையொடும் புணர்ந்தன்றாயின்
அங்கதச் செய்யுள் என்மனார் புலவர் (தொ: பொரு: 434)

கைக்கிளை பரிபாட்டு அங்கதச் செய்யுளொடு(தொ: பொரு: 423)

அங்கதம் தானே அரில்தபத் தெரியின்... (தொ. பொ. 429; இளம்)

அங்கதப் பாட்டளவு அவற்றோடு ஒக்கும் (தொ. பொ. 461; இளம்)

ஆற்றல் நன்னெடுங் கவிஞன் ஓர் அங்கதம் உரைப்ப
(கம்ப. 6: 14: 248)

(அங்கதம் – வசை)

**அங்கதாளம்:** = அங்கம், எண்ணிக்கைத் தாளம். அங்கம் - உறுப்பு (தாள உறுப்பு); தாளத்தின் உறுப்புக்களின் வழியாக அமைந்த எண்ணிக்கைத் தாளம். தாள ஆவர்த்தத்தின் மொத்த எண்ணிக் கையை அரைத் துரிதம், துரிதம், அலகு (லகு)

வகைகள் என்றும் அங்கங்களின் வழியாக விரலால் எண்ணியும், கையைத் தட்டியும், கையை வீசியும் போடும் தாளம்.

← த. க. க். 18/I;→ அங்கம்

**அங்கம்:** உறுப்பு.

1. கூத்துள் ஒரு பகுதி (Act)

...ஆக இந்தக் கூத்து ஏழு அங்கமும் ஆடுவதாகவும்

(தெ. இ. க. III,202,V.718, த. க. சொ. 5)

2. இசைக்கூறு, இசைப்பகுதி, பாகம் (phrase). இசை உருப்படியின் எடுப்பு, தொடுப்பு, முடிப்பு முதலியன.

3. தானப்பகுதி, பாகம் (tetrachord)
முன்னர்ப் பாகம் (பூர்வாங்கம்) - ச ரி க ம
பின்னர்ப் பாகம் (உத்தராங்கம்) - ப த நி ச்

4. தாளவகை. (அனுதுரிதம், துரிதம், அலகு, குரு, காகபாதம், புலுதம்)

அங்கதாளம்... என ஆறுவித்மாகக் கூறுவர்

(பரத. 3: 4 உரை)

5. தாள அடையாளம்: பிறை, மதி, கோல், வில், பாம்பு, புள்ளடி ஆகியன.

6.நாடக வகையினுள் ஒன்று: நாடகவிலக்கு உறுப்புக்கள் பதினான்கில் முதலாவதாகிய பொருளின்மேல் நாடகம், பிரகரணம், பிரகரணப் பிரகரணம், அங்கம் என்ற நான்கு வகைகளுள் அறம் ஒன்றே கருப்பொரு ளாகக் கொண்டு வரும் அங்கம் என்ற நாடகம்.

அவை தாம் நாடகம், பிரகரணப் பிரகரணம், ஆடிய பிரகரணம், அங்கம் என்றே ஓதுப நன்னூல் உணர்ந்திசினோரே

(மதிவாணனார் – சிலப்: 3: 13 அடியார்க். மேற்.)

**அங்கம் ஏழு:** முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என்ற நாடக ஐவகைச் சந்திகளின் முகமானது எழுவகை அங்கங்களைக் கொண்டது. இவற்றுள் முகமாவது: எழுவகைப்பட்ட உழவினால் சமைக்கப்பட்ட பூமியுள் இட்ட வித்துப்பருவச் செய்து முளைத்து முடிவதுபோல்வது (சிலப்: 3: 13 அடியார்க்.) உவேசா அடிக்குறிப்பு: ஆரம்பத்திற்கு ஏழங்கமுண்டென்று வடநூலாரில் சிலர் கூறுவராதலின் அதற்குப் பொருந்த எழுவகைப்பட்ட உழவென்றார்.

**அங்கமாலை:** ஆண் பெண் எனும் இருபாலாருடைய அங்கங்களை (உறுப்பு) வெண்பா அல்லது வெளி விருத்தத்தால் கடவுளர்க்காயின் பாதாதி கேசம் – மக்கட்காயின் கேசாதிபாதம் என்னும் முறை பிறழாமல் அந்தாதித் தொடை அமையப் பாடுவது

(இ. வி. பாட் . 75)

எடு:– அப்பர் தேவார திரு அங்கமாலை
இது உடல் உறுப்புக்களை இறைப்பணி செய்யும்படி அப்பர் பாடிய திருப்பதிகம். ← த. இ. பே. 8/16.

**அங்குச முத்திரை:** சுட்டுவிரலைக் கொக்கி (அங்குசம்) போல் வளைப்பதாகிய முத்திரை.

← சங். அ. ; செ. ப. அ. பிற். 13.

**அங்குட்டம்:** பெருவிரல் (Thumb, great toe) (செ. ப. அ. 22)

**அச்ச அவிநயம்:** = பயச்சுவை அவிநயம்.

அச்ச அபிநயம் ஆயுங்காலை ஒடுங்கிய உடம்பு நடுங்கிய நிலையும் மலங்கிய கண்ணும் கலங்கிய உளனும், கரந்துவரல் உடைமையும் கை எதிர்மறுத்தலும், பரந்த நோக்கமும் இசை பண்பினவே

(சிலப்: 3: 13 அடியார்க். மேற்.)

**அச்சரக்காலம்:** → அக்கரக்காலம்

**அச்சரம்:** = அக்கரம், அட்சரம்.

1. எழுத்து: (அச்சு - எழுத்து;) எடு:- பஞ்சாட்சரம் - ஐந்து எழுத்து.
2. அசை (syllable).

**அச்சாப் பொங்கோ:** பெண்கள்ஆடும் ஆட்ட வகையுள் ஒன்று; விளக்கைச் சுற்றி வட்டமாக நின்று ஆடும் ஆட்டம். (செ. ப. அ. 24)
அச்சோ + பெண்காள் > அச்சோப் பொண்காள் > அச்சாப் பொங்கோ.
↑ 'திருவிளக்குப்பிச்சி' (சிலப்: 3: 13 அடியார்க்.மேற்) மற்றும் மலைநாட்டின் 'விளக்குநிலை' ஆடல் ஆகியன அச்சாப் பொங்கோவுடன் எண்ணத்தக்கன.

**அச்சாளத்தி:** = காட்டாளத்தி.

அச்சு - எழுத்து; இசையின் சுரங்கள் மற்றும் தாள எழுத்து (சொற்கட்டு)க்களால் ஆளத்தி (ஆலாபனம்) செய்வது. இது குற்றெழுத்துக்களால் நிகழும்.
அச்சுக்கு எழுவாய் குற்றெழுத்து... காட்டாளத்தி அச்சுடன் நிகழும் (சிலப்: 3: 26 அடியார்க்.)

↑ஈர நிலத்தின் எழுத்து எழுத்தாக (சிலப்: 3: 68) என்பதால் சுர ஆலாபனம் பாடியதை அறியலாம்.

**அசபா நடனம்:** திருவாரூர் கோயிலில் நிகழும் தியாகேசரது நடனம்.

← செ. ப. அ. பிற். 90

**அசம்யுத ஹஸ்தம்:**→ ஒற்றைக்கை

**அசலசுரம்:** → அசைவிலாக்கோவை

**அசுணம்:** = அசுணமா, கேயப்புள், கேகயப்புள்.
இசை உணர்வுள்ள பறவை, விலங்கு; இனிய இசைக்கு செவிசாய்த்தும், பறையின் பேரொலிக்கு

உயிரை விட்டுவிடுவதுமான இயல்புள்ளது.

இருங்கடல் விடர் அளை அசுணம் ஓர்க்கும் (அகம்: 88 – 12)
அசுணம் கொல்பவர் கைபோல் (நற்: 304: 8)
இசை கொள் சீறியாழ் இன்னிசை கேட்ட
அசுண நன்மா அந்நிலைக் கண்ணே
பறையொலி கேட்டுத் தன்படி மறந்ததுபோல் (பெருங்: 1: 4: 241)
பறைபட வாழா அசுணமா... (நான்மணி: 4: 1)
இன்ன ளிக்குரல் கேட்ட அசுணமா (சீவக: 1402)
நறையடுத்த அசுண நன்மாச் செவி (கம்ப: பாயிர: 7)

← செ. ப. அ. 32; பிற். 222.

**அசுணமா:** → அசுணம்

**அசுர வாத்தியம்:** முரசு முதலிய பேரொலி தரும் இசைக்கருவிகள். தற்காலம் நாகசுரம் மற்றும் தவுல் இசைக்கருவிகள் அசுரவாத்தியங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

**அசை:**

1. செய்யுள் உறுப்பு: எழுத்திற்கு அடுத்த அடிப்படை உறுப்பு.

ஓரசை - (Mono syllabic) - நேரசை - தனிக்குறில்/தனிநெடில்/இவையடுத்த ஒற்று.

ஈரசை - (Dysyllabic) - நிரையசை - குறில்இணை/குறில்நெடில்/இவையடுத்த ஒற்று.

2. 'அலகு (லகு): தாளத்தின் ஒரு மாத்திரைக் காலம். கொட்டும், அசையும், தூக்கும், அளவும் ஒட்டப் புணர்ப்பது பாணியாகும் (சிலப். 3: 16 அடியார்க். மேற்.)

அசை ஒரு மாத்திரை; அதற்கு வடிவு எ... ககரம் கொட்டே, எகரம் அசையே... அசையாவது – தாக்கி எழுதல் (சிலப். 3: 16 அடியார்க்.)

| பழமுறை | நிகழ் (இன்றைய) முறை |
|---|---|
| அசை | (அலகு) 'லகு |
| ஒருமாத்திரை | ஒரு மாத்திரை |
| வடிவு – எ | வடிவு – 1 |
| தாக்கி எழுதல் | தட்டு அல்லது வீச்சு (எண்ணுதல்) |

**அசை அந்தாதி:**

1. செய்யுளில் ஓரடியின் ஈற்றசை அடுத்த அடிக்கு முதல் அசையாக வரும் தொடை.

"ஓரடியுள் இறுதிச் சீருள் ஈற்றசையும் மற்றையடியின் முதற்சீரின்முதலசையும் ஒன்றத்தொடுப்பது அசையந்தாதி".

குன்றச் சாரல் குதித்தன கோண்மா
மாவென மதர்த்தன கொடிச்சி வான்கண் (தொ. பொ. 411 பேரா.)

2. இசையில் சுரம் பாடும்போது அசை அந்தாதித்து வருவது.

சா<u>ரீகா</u> <u>ரீகா</u>மா - இதில் ரீகா என்பது அந்தாதித்து வந்துள்ளது.

← த. க. க. 38/I; செ. ப. அ. 35.

**அசைத் தொங்கல்:** வண்ணப் பாடல்களின் கண்டிகைகளில் அசை தொங்கலாகி வருவது.

நிராமய பராபர புராதன
பராவுசி வராகவ – **ருளென்**
திராவுமெ திராயது பராநினை
புராணன மராதப – **தியாம்** (தேவா. 3: 67: 6)

'ருளென்', 'தியாம்' என்ற அசை, தொங்கலாகியுள்ளது. இவை அசைத் தொங்கல்.

← ஆ. அ. பக். 4 & 5,→ தொங்கல்

**அசைதல்:** கூத்தாடுதல்.

← செ. ப. அ. 34

**அசைநிலை அளபெடை:** யாப்பிற்காக அசை அளபெடுப்பது. அசைகோடல் பொருட்டுக் கொண்ட அளபெடை

← செ. ப. அ. 35

**அசையடி:** = அம்போதரங்கம்

கலிப்பாவின் உறுப்புக்களுள் ஒன்று.

← இ. வி. 738; செ. ப. அ. 35,→ அம்போதரங்கம்

**அசையும் கோவை:** = வகைபெறுகோவை

இசையின் ஏழு கோவைகளில் துத்தம் (ரி), கைக்கிளை (க), உழை (ம), விளரி (த), தாரம் (நி) ஆகிய ஐந்து சுரங்களும் குறை, நிறை என்ற வகைபெறும். அவை:

| | | |
|---|---|---|
| மென் துத்தம் | - $ரி^{1}$ - | சுத்த ரிசபம் |
| வன் துத்தம் | - $ரி^{2}$ - | சதுசுருதி ரிசபம் |
| மென் கைக்கிளை | - $க^{1}$ - | சாதாரண காந்தாரம் |
| வன் கைக்கிளை | - $க^{2}$ - | அந்தர காந்தாரம் |
| மெல் உழை | - $ம^{1}$ - | சுத்த மத்யமம் |
| வல் உழை | - $ம^{2}$ - | பிரதி மத்யமம் |
| மென் விளரி | - $த^{1}$ - | சுத்த தைவதம் |
| வன் விளரி | - $த^{2}$ - | சுதுசுருதி தைவதம் |
| மென் தாரம் | - $நி^{1}$ - | கைசகி நிசாதம் |
| வன் தாரம் | - $நி^{2}$ - | காகலி நிசாதம் |

**அசைவிலாக் கோவை:** = வகைபெறாக்கோவை (அசல சுரம்)

இசையில் குரல் (ச) மற்றும் இளி (ப) ஆகிய கோவைகள் ஏனைய துத்தம் (ரி), கைக்கிளை (க), உழை (ம), விளரி (த), மற்றும் தாரம் (நி) போன்று நிறை, குறை (ஏற்றம், இறக்கம்) என்ற வகை பெறுவதில்லை. எனவே குரல் மற்றும் இளி அசைவிலாக் கோவைகள்.

சலம் - அசைவது.
அசலம் - அசைவு இல்லாதது.

எனவே மலை அசலமானது; அருணாசலம் போன்று.

**அஞ்சலிக்கை:** → வணக்கக்கை

**அஞ்சி:** நடை (step). நாட்டியத்தில் வரும் ஒரு நடைவகை. குறவஞ்சி நாடகங்களில் வருவது.

**அஞ்சித பதம்:** → **அஞ்சிதம்**

**அஞ்சிதம்:** = அஞ்சித பதம்.
நாட்டியத்தில் குதிக்காலைத் தரையில் ஊன்றிப், படத்தை மேல் நோக்கி வைத்து நிற்கும் நிலை.
(பரத. பாவ. 83)
← செ. ப அ 38

**அஞ்சித முகம்:** நாட்டிய அபிநயத்துள் ஒன்று. வருத்தம் ஆற்றாது தோள்மேல் தலை சாய்க்கும் அபிநய வகை.
← பெ அ 102/I

**அட்சரக்காலம்:** → **அக்கரக்காலம்**

**அட்சரம்:** → **அக்கரம், அச்சரம்**

**அட்டநாகபந்தம்:** எட்டு நாகம் அமைந்த வரைபடத்தில் பொருந்தும்படியான ஒரு சித்திரகவி.
← செ. ப. அ 40.

**அட்ட மங்கலம்:**
1. எண்வகை மங்கல உறுப்புக்கள்: முரசு, நிறைகுடம், விளக்கு, கவரி, கண்ணாடி, தோட்டி, இணைக்கயல், கொடி.
... தீபம், கவரி, கண்ணாடி, தோட்டி, புணர்மீனே, முரசு,
கும்பம் பொலிகொடி சுபம் ஏர் எட்டே (சூடா. 12: 90)
2. எட்டு மங்கலப் பொருட்களையும் ஆசிரிய விருத்தத்தால் பாடும் சிற்றிலக்கியம் (இ. வி. 843)
← செ. ப அ. 41

**அட்டை ஆடல்:** = கவந்தம், அவிப்பலி
தலை துண்டிக்கப்பட்டும் வீரரின் உடல் வீரச்செயல் காட்டி ஆடும் ஆடல்.
உடம்பு ஆடுதலின் அட்டை ஆடல் எனவும் அதனைக் கூறுப.
(தொ.பொ. 71. நச்சர்)
← பெ. அ 115/I; பு. வெ. வாகை 30:184,→ **கவந்தம்**

**அடக்கம்:** அடங்கிய ஓசைத் தோற்கருவிகளுள் ஒன்று.
.. நிசாளந் துடுமை சிறுபறை அடக்கம் .. (சிலப். 3: 27 அடியார்க்.)
அடக்கம் > அடக்கா > டக்கா > டங்கா (?)
← தே. நே. 158/I

**அடக்கல்:** இசை அல்லது ஆடல் அரங்கில் ஏனைய இசைக்கருவிகளின் மிகுதியான வாசிப்பை அடக்கும் தண்ணுமையோன் அமைதி.
ஆக்கலும் அடக்கலும் மீத்திறம் படாமை (சிலப். 3: 53)
அடக்கல் – மற்றக் கருவிகளின் மிகுதியை அடக்குதல்.
(மேலது. உரை)

**அடக்கியல்:** = சுரிதகம், அடக்கியல் வாரம், போக்கு, போக்கியல், வைப்பு.
சுரிதகம் என்னும் கலிப்பாவின் இறுதி உறுப்பு. கலிப்பாவின் பிற உறுப்புக்களான தரவு, தாழிசைகளில் கூறப்பட்ட பொருளைச் சுருக்கி அல்லது தன்னுள் அடக்கிக் கூறும் முடிவு உறுப்பு. எனவே அடக்கியல் எனப்பட்டது.
அடக்கியல் இன்றி அடிநிமிர்ந் தொழுகியும் (தொ. பொ. 452)
போக்கியல் வகையே வைப்பு எனப்படுமே (தொ. பொ. 441)
அடக்கியல் வாரம் தரவோடு ஒக்கும் (தொ. பொ. 447)
தரவும் போக்கும் பாட்டிடைமிடைந்தும் (தொ. பொ. 457)
← வீ. சோ யாப். 11. உரை; செ. ப. அ. 43;தே. நே241/3

**அடக்கியல் வாரம்:** → **அடக்கியல்**

**அடகு:** மகளிர் விளையாட்டுள் ஒன்று.
கோடாப் புகழ்மாறன் கூடல் அனையாளை
ஆடா அடகினும் காணேன்... (திணை. 4: 1 – 2)

**அடகு பிடித்தல்:** = அடவு பிடித்தல், அடைவு பிடித்தல். நிருத்தக்கை பிடித்தல்.
அடைவு > அடவு > அடகு (திரிந்தவழக்கு).
← செ. ப. அ. பிற். 23, 24.

**அடங்கன் முறை:**
மூவர் தேவார அடங்கன் முறை; சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரின் ஏழு திருமுறைத் தொகுதிகளும் பண்முறையில் ஒழுங்குபடுத் தப்பட்ட முறை.
← செ. ப. அ. 43.

**அடங்கு புரி:**
முறுக்கு அடங்கிய புரியை உடைய யாழின் புரி நரம்பு என்ற உறுப்பு; முறுக்கிய நாரால் இயன்றது. புரி நரம்பு திவவால் கட்டப்பட்டது. புரி நரம்பு இன்று வீணையின் மெட்டாக மாறியுள்ளது.
அமிழ்து பொதிந்து இலிற்றும் அடங்கு புரி நரம்பின்
(சிறுபாண். 227)

**அடதாளம்:**
ஏழுதாள வகையுள் ஒன்று. இத்தாளம் ஐந்து தாள இனங்களுடன் சேர்ந்து ஐந்து அட தாளங் களாகின்றன. இரண்டு அலகும் இரண்டு துரிதமும்

என்ற உறுப்புகளைக் (அங்கம்) கொண்டது.
இதன் உறுப்புகள் - 1100

1) மூன்றன் (திசுர) அடம் - $1_3\ 1_3$ 00 = 10
2) நாலன் (சதுசுர) அடம் - $1_4\ 1_4$ 00 = 12
3) ஐந்தன் (கண்ட) அடம் - $1_5\ 1_5$ 00 = 14
4) ஏழன் (மிசுர) அடம் - $1_7\ 1_7$ 00 = 18
5) ஒன்பான் (சங்கீரண)அடம் - $1_9\ 1_9$ 00 = 22

← பரத. தாள. பக். 23; செ. ப. அ. 44

**அடம்பை:** கூத்தாடலுள் ஒருவகை (இல. வ)
← பெ. அ. 120/I.

**அடர் பாண்டில்:** = குளித்தாளம்.
நடுவில் குழியுடைய வட்ட வடிவ தாளக்கருவி
நுண்ணுருக் குற்ற விளங்கடர் பாண்டில் (மலைபடு. 4)
ஒப்பு: பாண்டி – பாண்டில் விளக்கு ← நெடுநல். 175
← த. வ. 156.

**அடவுக் கூத்து:** சிவதாண்டவங்களிலிருந்து வந்த பன்னிரு கூத்துக்களுள் ஒன்று. பன்னிரு கூத்தாவன: அடவு, இசைவழி, அவிநயம், சாரிகை, பேரணி, ஓவியம், இலயம், பரவை, சாளயம், அரசம், பட்டம், பித்தம்.
அடவே, இசை, அவிநயம்... ஈராறு என்ப (கூத். 139)
(இலயம் - இலாசியம்; பரவை - பரதம்)
← பெ. அ. 123/I.

**அடவு பிடித்தல்:** → அடகு பிடித்தல்

**அடி:**
1. எழுத்து, அசை, சீரால் இயன்றது; ஐவகையினது; குறளடி, சிந்தடி, அளவடி (நேரடி), நெடிலடி, கழிநெடிலடி (இ. வி. 711)

← செ. ப. அ. 46

| | | | | |
|---|---|---|---|---|
| குறளடி | - | இருசீர் | | |
| சிந்தடி | - | முச்சீர் | | |
| அளவடி | - | நாற்சீர் | | |
| நெடிலடி | - | ஐஞ்சீர் | | |
| கழிநெடிலடி | - | அறுசீரும் மேற்பட்டதும். | | |
| இருசீரடி | - | இரண்டடி | - | (Dimetre) |
| முச்சீரடி | - | மூன்றடி | - | (Trimetre) |
| நாற்சீரடி | - | நாலடி | - | (Tetrametre) |

2. தாளத்திற்கான சொல்: அடித்தல் - தாளம் தட்டல்.
3. ஆட்டத்தில் எடுத்து வைக்கும் பாதநிலை - (Dance step).

**அடி அளபெடைத்தொடை:** அடிகள்தோறும் முதற் கண் அளபெடை வரத் தொடுப்பது (யா. கா. உறு. 18. உரை)

**அடி எதுகை:** = அடியாகெதுகை (அடி + ஆகு + எதுகை), அடி எதுகைத்தொடை.
அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது
(யா. கா. உறு. 18. உரை)

**அடிக்கலம்:** சிலம்பு.
அடிக்கலம் அரற்ற ... (சீவக. 2041)
அடிக்கலம் திருத்தி ... (சூளா. 1114)
→ அகி

**அடிச்சொல்:** வேர்ச்சொல், மூலச்சொல், (stem, etymon); தமிழ்மொழியின் அடிச்சொற்கள் யாவும் நேரசை அல்லது நிரையசையாக உள்ளன.
எடு:– நேரசை – கல்; நிரையசை – இசை.

**அடித்தல்:**
1. முழக்குதல்: முழவு முதலியன இயக்குதல்.
விசிகூடு முழவின்பாடு இனதெண்கண் கனிசெத்து அடிப்பின்
(புறம். 128: 2 – 3)
2. ஒலித்தல்: கோவில் மணி அடிக்கிறது (நா. வ.)
3. (பந்து முதலியவற்றை அடித்து) ஆடுதல்.
தென்னன் வாழ்க வாழ்க என்று சென்று பந்து அடித்துமே
(சிலப். 29 (20): 3)

**அடித் தாளம்:** = ஆதிதாளம், எட்டன் மட்டம், சதுசுர திரிபுடைத்தாளம்;அடி - முதல்.
← தே. நே. 12/V

**அடித் தொங்கல்:** திருப்புகழ் அடியின் ஈற்றில் வரும் தனிச்சொல் போன்ற அமைப்புடைய சொல் அல்லது தொடர்.
எடு:– அகரமு மாகி அதிபனு மாகி
அதிகமு மாகி – அகமாகி
இதில் 'அகமாகி' என்பது தொங்கல்; அடிதோறும் வரும் தொங்கல் அடித்தொங்கல்.

**அடித் தொண்டை:** கனத்த குரல், கரகரத்த குரல், தாழ்ந்த குரல் (BARITONE).
அடித்தொண்டையில் பேசுகிறான் (நா. வ.)
← பெ. அ. 130/I.

**அடித் தோழி:** முதல் தோழி.
எடு:– அடித் தோழி அரற்று (சிலம்பு: வாழ்த்துக் காதை)
← செ. ப. அ. 48

**அடிதாளம்:** = கைத்தாளம், சப்பாணி, பாணித்தாளம் கைகளால் போடும் தாளம். அடிதாளம் போடா விட்டால் பாட்டு வராது என்பார்கள்.
(மதி மோச. ii/ 72; செ. ப. அ. பிற். 25)
→ பாணி

**அடிப்படைஒத்து:**=அடிப்படைக்குரல், அடிப் படை ஒலி (ஆதார சுருதி, தூய சுருதி, ஆதார சட்சம்) மந்தக் குரல், தண் குரல் (சுருதி) சுதி, கேள்வி, (pitch, tonic).

இசைச்சுரங்கள் ஏழில் ஏதாவது ஒன்றை அடிப்படை ஒத்தாக (ஆதார சுருதி) பாடகர் கொண்டு பாடும் முறை அடிப்படையானது இதுவே அடிப்படை ஒத்து.

→ அடிப்படைக்குரல்.

**அடிப்படைக் குரல்:** = குரல்(சட்சம்), தாழ்குரல், அடிப்படை ஒத்து, சுதி.

*சமன்தானத்து (middle octave) குரல் (ச) ஒலியையே நம் இசையில் ஆதார சுரமாகக் கொள்கிறோம். இதன் பிற விகிதங்களே (அல்லது துடிப்புக்களே) ஏனைய சுரங்களின் அளவுகள். எனவே சமன்தானக்குரல் அடிப்படைக்குரல் (ஆதார சுருதி) ஆகிறது*

*இவ்வொலியே பாடகர்க்கும் பிற கருவியாளர்க்கும் தம்புரா, சுதிப்பெட்டியில் தொடர்ந்து ஒலித்து இசைக்கு உதவுகின்றது. ஏனைய நரப்பிசை, தோலியல் கருவியாளர்களும் இவ்வொலிக்கே ஒத்துக் கூட்டிக் கொள்கின்றனர்*

*ஆடவர்க்கு 1-3 வரை ஆதார சுதி அமைகிறது; மகளிர்க்கு 4-7 வரை ஆதார சுதி அமைகிறது.*

*நரப்பிசைக் கருவியில் தந்தியின் முழுநீளமும் அசையும்போது உருவாவது இந்த அடிப்படை ஒலி.*

குரல் மந்தமாக... (சிலப். 17: (8))

*மந்தக்குரல் - சமன்தானக்குரல் - மத்தியஸ்தாயி சட்சம்*

தாழ்குரல் தண்ணுமை... (சிலப். 17: 27)

*தாழ்குரல் - சமன்தானக்குரல் - மத்தியஸ்தாயி சட்சம்.*

↑ அடிப்படைக்குரலின் (மத்திய சட்சம்) துடிப்பு எண் 240, 256, 264 என்று தமிழ் இசையியலாளர் கூறியுள்ளனர். ஆயினும் ஒத்து தரப்படுத்தல் (pitch standardization) இதுவரை நம் இசையில் செய்யப்படவில்லை. ஐரோப்பிய இசையில் (International phil-harmonic pitch) 261.46 என (Middle 'c') தரப்படுத்தப் பட்டுள்ளது. பிறகு 256 ஆகக் குறைக்கப்பட்டது. மேலும் (middle A) $த^2$ = 440 ஆகவும் தரப்படுத்தப்பட்டுள்ளது.

← தெ. இ *அ.64*/IV; Ox.con.Dic.of Music pp. 492,583

**அடிப்படைக் கோவை:** = சுருதி கட்டை

*பாடுதுறை வழக்கில் சுருதி (scale) என வழங்கப்படுகிறது. எந்த அடிப்படைக் கோவையிலிருந்து மெலிவு மண்டிலத்தில் (மந்தரஸ்தாயி) நான்கு கோவைகளும் (ம ப த நி) வலிவு மண்டிலத்தில் (தாரஸ்தாயி) மூன்று கோவைகளும் (ச ரி க) இயற்கையாக, கடினப் பாடின்றி ஒலிக்க இயலுமோ, அந்த சுரமே அவரது அடிப்படைக் கோவை (ஆதார சட்சம்) ஆகும்.*

"கன்னிய கீழ் மூன்றாகி மேலும் நண்ணல் வேண்டும் ஈரிரண்டு நரம்பே" (சிலப். 8: 27 அரும்.)

**அடிபெயர்த்தாடல்:** பாதத்தால் தாளம் இட்டு ஆடல்.

துடியின் அடிபெயர்த்து (பரிபா. 29: 19)

*துடியின் தாளத்திற்குஒப்ப (பாதத்தை அசைத்து ஆடுதல்)*

களரி மருங்கின் கால் பெயர்த்தாடி (புறம். 359: 6)

ஆடுநர் பெயர்ந்து வந்து அரும்பலி,தூஉய்க் (பதிற். 17: 6)

நடுவூர் மன்றத்து அடிபெயர்த்து ஆடி (சிலப். 12: 11)

"அச்சாலினி... கைகளை ஒற்றையும் இரட்டையுமாக்கி அவிநயத்தோடே கூட்டித் தாளத்திற்கொப்ப அடிபெயர்த்துக் கானவர் வியப்ப ஆடி என்க" (மேலது . அரும்.)

ஆய்வளைச் சீர்க்கு அடிபெயர்த்திட்ட அசோதையார் தொழுதேத்த (சிலப். 17: ஆடுநர்ப் புகழ்தல்)

கோத்தகைகளில் அணிந்த அழகிய வளையல்கள் ஒலிக்கின்றதாளத்திற்குஒக்க அடியைப் பெயர்த்து (மேலதுநாட்டார் உரை)

*அடி - பாதம்; பெயர்த்தல் - தாளமிடல்*

→ அடி

**அடிமடக்கு:** *பாடலின் ஓர் அணி; பொருள் வேறுபட்டு அல்லது வேறுபடாது, பாடலின் அடி மீண்டும் மீண்டும் வரும் பாடல் அணி*

நடுவடிமடக்கால் நான் கடியாகி (யா. வி: 74)
உச்சிக்கு மேலே உணர்வுக்கும் கீழே
வைச்ச பொருளின் வகையறிவார் இல்லை
வைச்ச பொருளின் வகையறி வார்க்கு
எச்ச எருதும் இள எருதாமே (திருமந். 3090)
விண்டலர் பொழிலனி வெங்குருகு மேவிய
வண்டமர் வளர்சடை யீரே
வண்டமர் வளர்சடை யீர் உமைவாழ்த்தும் அத்
தொண்டர்கள் துயர்பிணி இலரே
(சம்ப. 3: திருவெங்: 4: (திருமுக்கால்)

பையூரிலே இருந்து பாழூரிலே பிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்
பையூரும் மெய்யூரும் – என்கண்ணம்மா
பாழாய் முடியாவோ (அழுகுணிச்சித்தர்)

**அடிமணை:** = ஏழாம் நரம்பு(பஞ்சமசுரம்) இளி, பட்டடை நரம்பு, இணை நரம்பு.

*பட்டறையிலுள்ள அடிமணையானது உலோகக் கருவி களைச் செம்மையாக உருவாக்குவதுபோல் இளி நரம்பு (பஞ்சம சுரம்) பண்களை உருவாக்குகின்றது. 'ச' சுரத்திலிருந்து பட்டடை செய்தால் (7ஆம் நரம்பினைத் தொடுத்துச் சென்றால்)*

*சப, பரி$^2$, ரி$^2$த$^2$, த$^2$க$^2$, க$^2$நி$^2$, நி$^2$ம$^2$ என்று நரம்புகள் கிடைத்து ச ரி$^2$ க$^2$ ம$^2$ ப த$^2$ நி$^2$ என்ற*

மேற்செம்பாலைப் (கல்யாணி) பண் உருவாகும். இவ்வாறு பண்ணாக்கலில் 7ஆம் நரம்பு ஆதாரமாக அமைவதால் இதற்கு அடிமணை என்று பெயர்.

வண்ணப்பட்டடை யாழ்மேல் வைத்து (சிலப். 3: 63)

(வண்ணம் - நிறம் - பண்)

பட்டடையென்றது நரம்புகளில் இளிக்குப் பெயர்; என்னை? எல்லாப் பண்ணிற்கும் அடிமணையாதலின் (மேலது. அரும்.)

பட்டடை – நரம்புகளில் இளிக்குப் பெயர்; என்னை? எல்லாப் பண்ணிற்கும் அடிமணை யாதலின் (மேலது. அடியார்க்.)

அடிமணை - அடைக்கல்

**அடிமறி மண்டிலம்:** = அடிமறிமாற்று.
அகவல் பாவகையுள் ஒன்று.
← தொ. சொ. 407; நன். 419; யா. கா. செய். 8

**அடிமறிமாற்று:** → அடிமறி மண்டிலம்

**அடிமுரண்தொடை:** செய்யுளில் முதலில் வருஞ் சொல்லாவது பொருளாவது அடுத்த அடியின் சொல் லோடும் பொருளோடும் மாறுபடத் தொடுப்பது (யா. கா உறு. 18. உரை)

**அடிமோனைத்தொடை:** அடிகள்தோறும் மோனை எழுத்தோசை ஒன்றிவரத் தொடுப்பது (யா. கா. உறு 18 உரை)

**அடியந்தாதி:** ஒரு செய்யுளின் ஈற்றடி அடுத்த செய்யுளின் முதல் அடியாகத் தொடுக்கப்படுவது (யா. வி 52)

**அடிவட்டம்:**
நாகசுரத்தின் அடிப்பூண் (பரத. ஒழிபி. 6)
அடிவட்டம் சூரியன் மேற்சுற்று அட்டநாகம் (மேலது உரை)

**அடிவரவு:** பாட்டின் முதற்குறிப்பு. சிறப்பாக ஆழ்வார்களின் பாசுரங்களில் முதற்சொற்களால் ஆன நினைவூட்டலுக்கான முறை.

**அடுக்கியல்:** = வண்ணகம், அராகம், முடுகியல்.
வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவின் உறுப்புக்களுள் ஒன்று. தாழிசை, அம்போதரங்கம் என்னும் உறுப்பு களுக்கு இடையில் வருவது.
← வீ. சோ. 117; யா. கா 32 உரை

**அடுக்கு அணி:** = அலங்காரம்.
வெவ்வேறு தாளங்களின் அங்க அமைப்புக்குத் தக்க வகையில் வெவ்வேறு விதமாக அமைக்கப்பட்ட சுரவரிசை. தாளத்திற்கு ஏற்ப சுரங்கள் அடுக்கி வருவதால் அடுக்கு அணி. இது இசைப் பயிற்சிக்குரிய ஒரு முறை.
← தெ. இ 7

**அடுக்கு அந்தாதி:** இசையில் சுரம் பாடும்போது சுரங்கள் அடுக்கி அந்தாதித்து வருதல்.
சச, ரிரி, கக
ரிரி, கக, மம
கக, மம, பப.
← த. க. க. 38/I

**அடுக்குத்தொடர்:** அசைநிலைக்காகவும்,விரைவு, துணிவு, வெகுளி, உவகை, அச்சம் முதலிய பொருள் நிலைக்காகவும், இசை நிறைக்காகவும் ஒருசொல் ஒருமுறைக்கு மேல் அடுக்கி வருவது.

**அடுத்தல்:** கூத்தாடல்.
அடுத்தல் கூத்தாடல் (பிங்க. 1464)

**அடை:** = அடைநிலை,அடைநிலைக்கிளவி, தனிச் சொல், தனிநிலை.
கலிப்பாவின் உறுப்புகளுள் ஒன்று.
அடைநிலைக்கிழவி தாழிசைப் பின்னர் (தொ. பொ. 440)
இடைநிலைப்பாட்டொடு தரவு, போக்கு, அடை என– (மேலது. 444. பேரா.)

**அடைக்கலக்கை:** = அருட்கை (அபயஹஸ்தம், அபயமுத்திரை, அபயகரம், அபயவரதக்கை) அமைத்த கை.

1. அச்சத்திலிருந்து பாதுகாப்பு அளிப்பதாகக் காட்டும் தெய்வத் திருமேனியின் வலது கை முத்திரை.
2. காத்தலைக் குறிக்கும் ஒற்றைக்கை நாட்டிய முத்திரை.

← செ. ப. அ. 89-90; பரத. பாவ. 55

**அடைசுகை:** = அடைசுகைச் சாலி
மத்தளத்தில் தொப்பித்தோல் மீது அடித்த இடக்கையை மேலே தூக்கிவிடாமல் தொப்பித் தோலுடனே ஒட்டி, சிறிது அழுத்தி வைத்துக் கொண்டிருப்பதே அடைசுகை.
ஆமே... கண்ணுதலான் தான் அடைசுகை (மத். 64)
அடை - சேர், பொருந்து; அடைசுகை - தொப்பி யுடன் பொருந்தும் கை.
அடைசுகையாக வைத்து, கண்புரத்துச் சொற்கட்டு களை நெடுக முழக்கல் அடைசுகைச் சாலியாகும்.
ஆய்ந்த அழகம்... ஏந்தும் அடைசுகை... (பஞ்ச. 122)

**அடைசுகைச் சாலி:** → அடைசுகை

**அடைத்த:** *உரிமையான.*

... காய்ந்த வாகைநெற் றொலிப்ப... (பெ. தி. 68)
காய்ந்த இத்யாதி – காய்ந்த வாகையிலே நெற்றானது த்வநிப்ப.
பாலைநிலத்துக்கு அடைத்த வ்ருக்ஷங்களில்... (பெ. வா. பிள்ளை)
*மேலதற்கான விளக்கம்: "பாலைநிலத்துக்கு அடைத்த மரங்களில் இவற்றையும் சொல்வர்". (அடைத்த - உரிமையான; பாலைநிலத்துக்கு உரிமையான மரங்கள்).*

*← பெ. தி. உரையும் விளக்கமும், பக். 257*

... அக்கூத்துக்களுக்குரிய பாட்டுக்களும் அவற்றுக்கு அடைத்த வாச்சியக்கூறும் (சிலப். 3: 12–25 உரை)

**அடைத்த பாடல்:** *இசையமைத்த பாடல்; மெட்டமைத்த பாடல்; இசை உருவிற்கு ஏற்றவாறு சொற்களைக் கட்டியமைத்த பாடல் அதாவது இசை வடிவிற்குப் பொருந்த சொற்களை வைத்த பாடல்*

*(த. க. க 21/I)*

*ஒப்பு: மெட்டுக்குப் பாட்டு (இ வ)*

...இவற்றுக்கு அடைத்த பாடல்களும்... (சிலப். 3: 25. உரை)
... அப்பண்ணுக்கு அடைத்த பாட்டின்... (சிலப். 8: 43 –4 அரும்.)
வேனிற் காலத்துக்கு அடைத்த பண்ணை... (மேலது)

**அடைத்து:** *இசையமைத்து, மெட்டுப்போட்டு*

திவ்ய பிரபந்தங்களைத் திவ்விய கானத்திலே அடைத்து...
(குருபரம்பரை ப்ரபாவம். 6000 படி. 1878 பக். 94)

*← த. இ. வ. 65/II*

**அடைநிலை:** = தனிநிலை, தனிச்சொல்.

கலிப்பா உறுப்புக்களுள் ஒன்று. முன்னே தரவு, தாழிசை என்னும் உறுப்புக்களையும், பின்னே வரும் சுரிதகத்தையும் அடைய நிற்றலின் அடைநிலை எனப்பட்டது. அது தனிநின்றும் சீராகலின் தனிநிலை எனவும், தனிச்சொல் எனவும் கூறப்படும்.

(தொல். செய். 132 நச்.)

→ அடை

**அடைநிலைக்கிளவி: → அடை**

**அடைவு:** = *கரணம், கால், கால்கிரியை, கால்தொழில்*

*அடைவு > அடவு - திரிபுச்சொல், எளிய வழக்கு. சிறப்பாக நாட்டியக் கால்வகை, பாதவினை, ஆடலின் பாத அசைவு* (Dance step, Foot work)
*எடு:- குத்தடைவு, தட்டடைவு*
*தாளத்திற்கேற்ற கால் அடியும், உடல்நிலையும், ஆடல் முத்திரையில் அமைந்த கைஅசைவும் ஒருங்கே பொருந்தி அமையும் ஆடல்நிலை, அடைவு ஆகும்.*
*"அடவுகளில் தாண்டடத்துக்குரியவை, இலாசியத்துக் குரியவை என வேறுபாடு இல்லை. சொற்கட்டுக் களுக்கு ஆடும் அடைவுக்கோவைகள்... கம்பீரத்தோடு ஆடும்போது அவை தாண்டவ முறையாகவும். மென்மையோடு ஆடும்போது அவை இலாசிய முறையாகவும் அமையும்".* (ப. நா.த. 188)

ஆடல் பதினோர் உறுப்பும் அடைவாக (திருமந். 2781)
சுற்றுதல்... கால் கத்திரிகை கூட்டுதல் கால்தொழில் (பஞ்ச. 167)

**அடைவு பிடித்தல்: → அடகு பிடித்தல்**

**அண்ணாவி:** *ஆசிரியர், ஆசான், புலவர், கூத்துத் தலைவன், கட்டியங்காரன்; இசை மற்றும் நாடக ஆசிரியர். தென் தமிழகத்தில் வில்லுப்பாட்டுக் குழுத்தலைவர்; இவரே தலைமைப் பாடகர். இவரைப் புலவர் என்றும் அழைக்கின்றனர். நாடக நடத்துனரைக் கட்டியங்காரன் என்பர்.*

*← செ. ப அ. 60 & பிற். 30*

**அணங்காட்டு: → அணங்காடல்**

**அணங்காடல்:** = அணங்கு, வெறியாட்டு, அணங்காட்டு

*தெய்வம் ஏறப்பெற்று ஆடுதல்.*

துணங்கையர் குரவையர் அணங்கு எழுந்து ஆடி (சிலப். 5: 70)
அணங்கெழுந்தாடி – தெய்வமேறி ஆடி (சிலப். 5: 70 அரும்.)
அணங்காட்டு முதியோள் (கல்லா. 17)

**அணங்கு:**

1. வருத்துகின்ற தெய்வம்.

தாக்கு அணங்கு அனையோர் நோக்கு வலைப்பட்டாங்கு
(சிலப். 14: 160)
தாக்கு அணங்கு – தீண்ட வருத்தம் செய்யும் தெய்வம்
(மேலது. அரும்.)
அரவின் பொறியும் அணங்கும் புணர்ந்த (கலித். 50: 6)

2. யாழ்த்தெய்வம்: *மாதங்கி.*

அணங்கு மெய்ந்நின்ற அமைவரு காட்சி (பொருந. 20)

3. வெறியாட்டு, வேலன் வெறியாட்டு

4. தெய்வமேறி ஆடல்

அணங்கு அயர் வியன்களம் பொலிய (அகம். 382: 6)

**அணங்குடையாட்டி:** = அணங்குறைவாள்

*தெய்வ ஆவேசங் கொண்டு ஆடுபவள்*

வாழ்த்தும் அணங்குடையாட்டி (பெரியபு. 10: 67)
ஊணும் உறக்கமும் இன்றி அணங்குறைவாள் (பெரியபு. 10: 153)

**அணங்குறைவாள்:→ அணங்குடையாட்டி**

**அணி:**

1. ஒப்பனை, அலங்காரம்

கொற்றவை கொண்ட அணிகொண்டு நின்றஇப்
பொற்றொடி மாதர் தவமென்னை கொல்லோ
(சிலப். 12: வள்ளிக்கூத்து)

2. ஆடுங்காலத்துப் பிறக்கும் அவிநயச்சுவை (பாவரசம்)

ஆடலும் கோலமும் அணியும் கடைகொள (சிலப். 6: 74)

அணி – ஆடுங்காலத்துப் பிறக்கும் அணி – பாவரசம் (மேலது. அரும்.)

3. அணி அடுக்கு, அலங்காரம்.

*இசைப் பயிற்சியில் ஒரு பாடம். ஏழு தாளங்களில் இலக்கணப் பாடல்களைச் சுரப்படுத்தித் தரும் பயிற்சி.*

← *த. க. க. 29/I*

4. செய்யுள் அணி (Rhyme)

*செய்யுளை ஓசையால் அழகுபடுத்த வரும் தொடை*

*1) மோனை* - Alliteration
*2) எதுகை* - Second letter rhyme
*3) இயைபு* - End rhyme
*4) அளபு* - Elongated rhyme
*5) முரண்* - Oxymoron

**அணி அடுக்கு:** → அணி

**அணிவிரல்:** = பவித்திர விரல், அநாமிகை

*மோதிரவிரல்: ஆடலின் போது கைமுத்திரை காட்டுவதிலும் மற்றும் புல்லாங்குழல் வாசிப்ப திலும் பங்கு கொள்ளும் விரல்.*

... பதாகக்கையின் அணிவிரல் முடக்குவது...
(சிலப். 3: 18 அடியார்க்.)

அநாமிகை –அணிவிரல் – பவித்திரவிரல்
(மேலது. அடியார்க்.)

**அணைசு:** *நாகசுரம் போன்ற குழல் கருவிகளின் நுனிப் பகுதி. இது ஒலியை மிகுதிப்படுத்தும் விரிந்த வாய்ப்பகுதி.*

வெண்கலத்தால் அணைசு பண்ணி ... (சிலப். 3: 26 அடியார்க்.)

கஞ்சத்தால் குமுதவடிவாக அணைசு பண்ணி...
(சிலப். 17: 20 அடியார்க்.)

← *த. க. க 29/I*

**அணைத்தல்:** *உடலவர்த்தனையுள் ஒன்று. அகக் கூத்துக்குரிய உடலவர்த்தனை ஒன்பதுள் நான்கா வதான தழுவுதல் (சிலப் 3: 15 உ. வே. சா. அடிக்.)*

**அத்தம்:**

1. அருஞ்சுரம், காடு: பாலை நிலம்.

ஆளில் அத்தமாகிய காடே (புறம். 23: 22)
கல்லதர் அத்தம் கடக்க (சிலப். 16:57)

2. அருநெறி, கடியவழி:

கல்பிறங்கு அத்தம் சென்றோர் கூறிய' (குறுந். 66: 2)
அத்தம் செல்வோர் அலறத் தாக்கி (பெரும்பாண். 39)
ஒருநாள் மீனும்... அருநெறியும்... அத்தம் (பிங்க. 3056)

**அத்தி:** → அலாரிப்பு

**அதமக்கருவி:** = புறமுழவு.

*கணப்பறை போன்றவை.*

புறமுழவாவன:– முன்சொன்ன அதமக் கருவியான கணப்பறை முதலாயின (சிலப். 3: 27 அடியார்க்.)

**அதிதார மண்டிலம்:** = (அதிதார ஸ்தாயி), வலிவின் வலிவு மண்டிலம், (Second Higher Octave). *இது இசையின் மேல் மண்டிலத்து அடுத்தமேல் மண்டிலம். இதன் சுரங்கள் இரண்டு மேற்புள்ளிகள் இட்டு குறியீடாகக் காட்டப்பெறும்.*

| ச ரி க ம | ச ரி க ம (ஒற்றை மேற்புள்ளி) | ச ரி க ம (இரட்டை மேற்புள்ளி) |
|---|---|---|
| *சமன் மண்டிலம்* Middle octave | *வலிவு மண்டிலம்* Higher octave | *வலிவின் வலிவு மண்டிலம்* Second higher octave |

← *த. க க. 30/I*

**அதிதார ஸ்தாயி:** → அதிதார மண்டிலம்

**அதிர்தல்:** → ஒலித்தல்

**அதிர்வு:** *நடுக்கம், சிதறுதல், விட்டுவிட்டு ஒலித்தல்,* (Noncontineous, Nonsustain); *யாழ் நரம்பின் நடுக்கம்; தொடர்ந்து வராமல் விட்டுவிட்டு ஒலித்தல்.*

செம்பகை ஆர்ப்பே அதிர்வே கூடம் (சிலப். 8: 29)

சிதற உந்தல் அதிர்வு என நாட்டினரே
(பஞ்ச பாரதீயம்; சிலப். 8: 29 அடியார்க். மேற்.)

அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும் (தொ. சொ. 316)

அதிர்விலாச் சீர்முழா (கள. நாற். 20)

அதிர்வெனப்படுவது இழுமெனல் இன்றிச் சிதறி உரைக்குநர் உச்சரிப்பிசையே (சீவக. 717 நச்சர். மேற்.)

இழுமெனல் இன்றி – தொடர்ச்சியின்றி (Non contineous) ↑ தமிழ்இசை இழுமென்னிசை – ஒழுகிசை – (contineous Music). ஒத்திசைப்பெட்டி (Harmonium) தொடர்ச்சியான ஒலி (Sustain) யின்றி, விட்டுவிட்டு இசை தருவது. ஒத்திசைப்பெட்டி தரும் இசையானது தொடர் இசையன்று (Non-contineous music). அதாவது அதிர்வு இசை. எனவே ஒத்திசைப்பெட்டி போன்ற இசைக்கருவிகள் தமிழ் இசைமுறையில் உருவாகவில்லை.

**அதிர்வு எண்:** துடிப்பு எண் (Pitch / vibration)
நரம்பிசைக் கருவிகளின் தந்தியை மீட்டும் போது ஒரு நொடிக்குள் பிறக்கும் துடிப்பலைகளின் எண்ணிக்கையே அதிர்வு எண் எனப்படும்.
(Pitch = number of viberation /second)
குறிப்பிட்ட எண்ணிக்கையிலான இந்த துடிப்பு எண் கொண்ட ஒலிகளே பல்வேறு சுரங்களாகின்றன.

**அதிரா மரபு:** கோவை கலங்காத முறை; சுரங்கள் ஒன்றுக்கொன்று விரவாத இசைமுறை.
அதிராமரபின் யாழ்கை வாங்கி (சிலப். 8: 23)
அதிர்தல் – துளங்குதல்; அதிராமரபு – கோவை கலங்காத முறை (மேலது. அரும்.)
அதிரா மரபு என்பது கோவை கலங்காதது; ஒத்து (சுருதி) கலையாதது; பகைச் சுரம் கலவாதது; நரம்பொலிச் சிதறல் இல்லாதது; சுர நடுக்கம் இல்லாதது முதலிய பொருண்மையுடையது.
முதிரும் பரவை முகந்த கொண்மூ முகடேறி முன்னி அதிரும்
(தெ. இ. க. 4: 167. த. க. சொ. 17)

↑ யாழ் மற்றும் முழவுக் கருவிகளைச் சரியான ஒத்து (சுருதி)க்கு முறுக்கு (விரைப்பு) ஏற்றல் வேண்டும். விரைப்பு கூடினால் அதிர்வு ஏற்பட்டு இன்னா ஓசை பயக்கும். சரியாகச் சுருதி சேர்த்தல் என்பதை பண்டையோர் அதிராமரபு என்றனர்.
அதிர்விலாச் சீர்முழா பண்ணமைப்பான் போன்ற
(களா: நாற்: 20)
பண் - ஒத்து, சுருதி
← த. க. க. 30/I

**அதீத எடுப்பு:** → பின் எடுப்பு

**அதீத கிரகம்:** → பின் எடுப்பு

**அதைப்பிடம்:** மத்தள வலந்தலையில் (வலப் பக்க வாய்) கரணையின் சற்று மேடான மைய இடம். இது மையத்தில் அதைத்து (மேடாகி) இருக்கின்ற மையால் அதைப்பிடம் எனப்பட்டது. இவ்விடம் தட்டினால் சற்று அமுங்கிக் கொடுக்கும்.
தகுமே அதைப்பிடத்தில்... (மத்: 54)
← த. க. க. 34/I,→ கரணை

**அதைப்பு:** → அதைப்பிடம்

**அந்தசரிகை:**=தொகரா, தொகையறா (தொகையறவு)
இசை நாடகங்களில் பல்வேறு நிகழ்ச்சிகளை எளிதில் இணைக்கப் புனையப்படும் பாடல். இவ்வாறு அரிகதைகளில் வழங்கியது தொகரா எனப்பட்டது.

**அந்தர உழை:**= வல் உழை, பிரதி மத்யமம்,( $F^{\#}$) ம$^2$
தமிழிசையின் முதன்மைப் பாலையான செம்பாலைப் (அரிகாம்போதி) பண்ணில் வராத உழை (ம$^2$) சுரம். எனவே இது அந்தர உழை எனப்பட்டது
← தே. நே. 215/V

**அந்தர ஓசை:** இசைக்குற்றம்
அந்தர ஓசை என்றும் கூறுதல் தேவர் கருத்தன்மை உணர்க
(சீவக. 735. நச்சர்.)

**அந்தரக்கொட்டு:** = முகம், ஒத்து
கூத்து தொடங்குவதற்கு முன்னர் திரைக்குப் பின்னால் கொட்டப்படும் முழக்கு. திரைக்குப் பின்பான இந்த முழக்குக்கு மட்டுமே முதலில் ஆடல் அமையும். இதன் பின்னரே உரு என்ற பாடல் பாடப் பெறும். கூத்துக் கலைஞர் அந்தரக் கொட்டுக்கு ஆடிப் பாடிய பின்னரே திரைவிலகி மேடையில் தோன்றுவர்
அந்தரப் பல்லியம் கறங்க... (முருகு. 119)
அந்தரக் கொட்டுடன் அடங்கிய பின்னர் (சிலப். 3: 147)
அந்தரக்கொட்டு என்றும், முகம் என்றும், ஒத்து என்றும் இதற்குப் பெயர். இந்த ஒத்து ஆடிய பின்னர் அல்லது உருபு காட்டுகை வழக்கல்ல என்றவாறு (மேலது. அடியார்க்)
↑ ஆடல் இன்றி திரைக்குப்பின் முதலில் பாடி திரைவிலகி நடிகர் தோன்றும் இம்முறை சங்கரதாசு சாமிகளின் நாடகங்களிலும் பின்பற்றப்பட்டுள்ளது.
(அந்தரம் - தனித்து நிற்பது)
← த. க. க 39/I

**அந்தரக் கொட்பினர்:** கொட்பு - வட்டமடித்து ஏறுதல் / இறங்குதல்.
அந்தரக் கொட்பினர் வந்து உடன்காண (முருகு: 174)

**அந்தரக் கோல்:**
→ அந்தர நரம்பு, குறைச் சுரங்கள்

**அந்தரத் தாரம்:** = நிறைதாரம், வன்தாரம், ஏறிய தாரம், காகலி நிசாதம், தீவிர நிசாதம்
அந்தரக்கோலில் ஒலிப்பதுவே தாரம்... இந்தத் தாரத்தினைத் தற்காலம் காகலி நிசாதம் அல்லது தீவிர நிசாதம் எனவும் வழங்குகிறார்கள்' (பா. சை. 171)
... இவ்விடத்தில் தார நரம்பின் அந்தரக்கோலை...
(சிலப் 8: 35அடியார்க்.)
அரும்பாலை (சங்கராபரணம்), மேற்செம்பாலை (கல்யாணி) ஆகிய பண்களில் இத்தார சுரம் ஒலிக்கும். இதன் குறியீடு 'நி$^2$'.
→ மந்தரத் தாரம்

**அந்தரத் துந்துபி:** *தேவ வாச்சியம்.*

அந்தர துந்துபி நின்று இயம்ப (யா. வி: 13: மேற்.)

அந்தர துந்துபி இயங்க அமரர்கணம் நடமாட (வீ. சோ: 115 உரை. மேற்.)

அந்தர துந்துபி முழங்க (சிதம். மும்: 59: 243)

**அந்தர நரம்பு:** = அந்தரம், அந்தரக்கோல், அந்தரம் ஐந்து, குறைச்சுரம்

*வன்கைக்கிளை (க²) முதல் இணை நரம்பு (7ஆம் நரம்பு) தொடுத்துத் தொகுக்கக் கிட்டிய ஐந்து நரம்புகள் - ரி¹ க¹ ம² த¹ நி² இவையே அந்தர நரம்புகள் ஆகும்.*

*தமிழிசையின் தொல் ஏழிசையான செம்பாலை (அரிகாம்போதி) யில் வராத சுரங்கள் இவை.*

"அந்தர நரம்புகள் முல்லைப் பண்ணில் இடம்பெறாமை யாலும்... (ஆசிரியர் முகவுரை, த. க. க. IV)

அந்தரக் கோல்கள் எதுவும் இதில் இடம்பெறவில்லை (மேலது. 4/IV)

**அந்தரப் பல்லியம்:** *ஆடல் பாடலுக்கு முன் முழங்கும் பல்வகை வாத்தியங்கள் அந்தரம் - தனித்து நிற்கும் தன்மை; பல்லியம் - பல் + இயம் இயம் - இசைக்கருவி*

அந்தரப் பல்லியம் கறங்க... (முருகு: 119)

**அந்தரம்:** = அந்தரக்கோல், அந்தரம் ஐந்து, குறைச் சுரம். *மேலே, அயலானது, மேல் வெளி, தனித்து நிற்பது.*

*12 தான சுரங்களில் அந்தர சுரங்கள் - ரி¹, க¹, ம², த¹, நி². செம்பாலைக்கு (அரிகாம்போதி) வராத சுரங்கள் அந்தர சுரங்கள் செம்பாலையின் சுரங்கள்- சரி² க² ம¹ ப த² நி¹. இவையே இயல் சுரங்கள்; சுத்த சுரங்கள்* (Natural notes) *எனவே செம்பாலை தமிழிசையின் தலைமைப் (தொல்பழமை* - primordial / Aboriginal scale) *பாலையாகிறது.*

அந்தரம்... அயலானது (நா. தீ. 452)

குறிக்கப்படாத இராசிகள் ஐந்திலும் அந்தரம் ஐந்தும் அடைவே நிற்பன (யா. நூ. 87 – 88)

*அந்தரம் நிற்கும் ஓரைகள் (இராசிகள்):-*

*1) விருச்சிகம் - ரி¹*
*2) மகரம் - க¹*
*3) மேழம் - ம²*
*4) மிதுனம் - த¹*
*5) கன்னி - நி²*

... இவ்விடத்தில் தார நரம்பின் அந்தரக் கோலை... (சிலப். 8: 35 அடியார்க்.)

*(தார நரம்பின் அந்தரக்கோல் - நி² - வன்தாரம்)*

அந்தரம் ஐந்து நீக்கி உறழ்ந்து கண்டுகொள்க (சிலப். 8: 35 அடியார்க்.)

← *தே. நே. 161/13; பெ. அ. 214/I,*→ அந்தர நரம்பு

**அந்தரம் ஐந்து:** → அந்தரம்

**அந்தர மகளிர்:**

*வானுலக இசை மகளிர், கந்தர்விகள்.*

அந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே (ஐங். 76: 4)

**அந்தரி:**

1. ஒருவகைத் தோல் கருவி

... தண்ணுமை தாவில் தடாரி அந்தரி முழவொடு... (சிலப். 3: 27 அடியார்க். மேற்.)

2. அந்தத்தில் (இறுதி) முழக்கப்படும் முழக்கு

**அந்தரிக்கோலம் பாடும் பாணர்:**

*அம்பணவர். கொற்றவைக் கோலத்தைப் பாடும் பாணர்.*

ஆடியல் கொள்கை அந்தரி கோலம்
பாடும் பாணரின் பாங்குறச் சேர்ந்து (சிலப். 13: 104 – 5)

அவ்விடத்துத் துர்க்கையது வெற்றி பொருந்திய அசுரரோடு பொருத போர்க்கோலத்தைப் பாடும் பாட்டாண்மையுடைய அம்பணவரில் தானும் ஒருவனாகக் கலந்தென்க. (மேலது. அடியார்க்.)

பாடும்பாணர் – அம்பணவர் (மேலது. அரும்)

வரி நவில் கொள்கை மறைநூல் வழுக்கத்துப்
புரிநூல் மார்பர் உறைபதிச் சேர்ந்து (சிலப். 13: 38 – 9)

வரி – இசைப்பாட்டு; நவில் கொள்கை – பாடும் வழமை
வழுக்கம் – தப்புதல்

நாவால் மறைநூல் நவிலாது வரிப்பாட்டை நவிலும் கோட்பாட்டையுடைய நூலணி மார்பர் (மேலது. அடியார்க்.)

*(அந்தரி - கொற்றவை, துர்க்கை)*

**அந்தாதி:**

1. *ஒரு செய்யுளின் (பாடல்) இறுதி எழுத்து அல்லது அசை அல்லது சீர் அல்லது சொல் அல்லது அடி அடுத்த செய்யுளின் முதலில் அமைவது.*

அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி (யா. கா. 17)

*எடு.-*

மண் திணிந்த நிலனும்
நிலன் ஏந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித்தலை இயதீயும்
தீமுரணிய நீரும் என்றாங்கு (புறம். 2)

படையமை சேக்கைப் பள்ளியுள் வீழ்ந்தும்
வீழ்துய ருற்றோர் விழுமம் கேட்டு (சிலப். 13 :70 – 71)

தாழ்துயர் எய்தித் தான் சென்று இருந்தும்
இருந்துய ருற்றோன் இணையடித் தொழுதேன் (சிலப். 13: 72 – 73)

மண்ணுடை முடங்கல் மாதவி ஈத்ததும்
ஈத்த ஓலைகொண் டிடைநெறித் திரிந்து (சிலப். 13: 76 – 77)
*நாட்டார் பாடலிலும் அந்தாதித் தொடை பெருகவே பயின்றுவரும்.*

2. மேற்கண்ட முறையில் அமைந்திடும் இலக்கிய வகைமை.

↑ பண்டைய குரவை, அம்மானை, கொண்டு நிலைபாடல் முறையிலிருந்து அந்தாதி அமைப்பு தோன்றியிருக் கலாம்.
← *த. க. க. 38/I; பதிற். 4ஆம் பத்து; அற்புதத் திருவந்தாதி; ப த. நா. 340.*

**அந்தாதி அடுக்கணி:** *இசைப் பயிற்சிகளுள் ஒன்று*
*சரி, ரிக, கம, மப - இதில் 'சரி' என்பது தொடுப்பு. சரி என்பதில் 'ரி' அந்தமாக வந்து அடுத்த அடுக்கான 'ரிக' வில் 'ரி' ஆதியாக வருகிறது. இனி, சரிக, கமப, பதநி போன்றும் இந்த அணி அமையலாம்.*
← *ப. இ. இ. 75*

**அந்தாதி அலங்காரம்:** *அலங்காரம் என்ற இசைப் பயிற்சியில் சுரங்கள் ஓர் அடுக்கு, ஈரடுக்காக அந்தாதித்து வருதல்.*
1. சரிக, கமப, பதநி, நிசரி
2. சரிக, ரிகம, கமப, மபத
← *த. க. க. 38/I*

**அந்தாளி:** → அந்தாளிக்குறிஞ்சி

**அந்தாளிக் குறிஞ்சி:** = அந்தாளி
*சாமாப் பண் (ஓதுவார் முறை); குறிஞ்சி யாழ்த்திற வகையுள் ஒன்று என்பதாக, அதாவது குறிஞ்சிக்கு (நடபைரவி) புறநிலையாக அந்தாளி (103 பண்ணில் 38ஆவது பண்) குறிப்பிடப்படுகிறது.*
↑ *தற்காலம் பாடபடும் சாமாப் பண்ணின் சுரங்கள்:*
ஏறுநிரல்: ச ரி$^2$ ம$^1$ ப த$^2$ ச்
இறங்குநிரல்: ச் த$^2$ ப ம$^1$ க$^2$ ரி$^2$ ச
ஏறுநிரலில் கொன்றைக்குழல் (சுத்த சாவேரி) இறங்குநிரலில் பூரண காம்போதி. எனவே, சாமாப்பண் செம்பாலை (அரிகாம்போதி)யின் திறப்பண் (ஜன்யம்) ஆகின்றது. க$^2$ த$^2$ என்ற சுரங்கள் நடபைரவிக்கு உரிய சுரங்கள் அல்ல.
ஆகவே அந்தாளிக் குறிஞ்சி என்பது சாமாப்பண் ஆகமுடியாது. ஓதுவார் முறையில் அந்தாளிக் குறிஞ்சியில் அமைந்துள்ள பதிகங்களைச் சாமாப்பண்ணில் பாடிவருவர். இது ஆய்வுக்குரியது.

**அந்தி:** = ஆந்தி.
*பண்களில் ஒன்று (பஞ்ச 76) பாலை யாழ்த்திறம்.*
கவ்வாணம்... அந்தி... ஆறாம் சாமத்திற்கு அடை (பஞ்ச. 79)
பாலையாழ்த் திறத்து ஓர் இசைப்பெயரும் மாலைக்காலமும் மற்றிவை அந்தி. (பிங்க. 3063)
அந்தி, பாலையாழிசை, இரவு, மாலை (சூடா. 11: 7)

**அந்தியப் பண்:** *மேல்தானத்துக் குரல் (ச்) வரை செல்லாத, அதாவது சுரம் வராத பண்.*

| | | |
|---|---|---|
| எடு:– பஞ்சமாந்தியப் பண் | – | நவரோசு |
| பதநிச ரிகமப | – | மகரி சநி தப |
| தைவதாந்தியப்பண் | – | குறிஞ்சி |
| சநி சரிகமபத | – | தபமகரிச நிச |
| நிசாதாந்தியப் பண் | – | நாதநாமக்கிரியை |
| சரிகம பத நி | – | நிதபமகரிச நி |

**அந்திரம்:** = மந்தரம்
*முழுச்சுரம் (Full tone). இசையின் பன்னிரு தான சுரங்களில் தமிழிசையின் தலைமைப்பாலையான செம்பாலை (அரிகாம்போதி)யின் சுரங்கள் முழுச்சுரங்கள். அவையாவன: ச ரி$^2$ க$^2$ம$^1$ ப த$^2$ நி$^1$*

**அந்து:** *பாத கிண்கிணி (Anklet) மகளிரும் குழந்தைகளும் அணியும் அணிகளில் ஒன்று.*

**அநாகத நாதம்:** → **இயற்கை இன்னொலி**

**அநாமிகை:** = பவித்திரவிரல்; அணிவிரல்.
மோதிரவிரல். *குழல், யாழ் வாசிப்பில் இடம்பெறும் விரல்*
சுட்டும் பேடும் அநாமிகை சிறுவிரல்... என்ப
(சிலப். 3: 18: அடியார்க்.)
அநாமிகை – பவித்திர விரல் (மேலது. அடியார்க்.)

**அப்பர் தேவாரம்:** *மூன்று திருமுறைகளில் தொகுக்கப் பட்டுள்ளது.*
*4ஆம் திருமுறை - 113 பதிகங்கள்; 1 - 21 மட்டும் பண்ணில் அமைந்தவை. 22 - 79 திருநேரிசை (6 சீர் விருத்தம்); 80-113 திருவிருத்தம் (கட்டளைக் கலித்துறை, 5 சீர் விருத்தம்)*
*5ஆம் திருமுறை - 100 பதிகங்கள்; திருக்குறுந்தொகை (4 சீர் ஆசிரிய விருத்தம்)*
*6 ஆம் திருமுறை - 99 பதிகங்கள்; திருத்தாண்டகம் (8 சீர் ஆசிரிய விருத்தம்)*
*மொத்த பதிகங்கள்: 312; மொத்த பாடல்கள் 3066.*
*திருநேரிசை - அறுசீர்ஆசிரிய விருத்தம். இதை மரபாக ஓதுவார்கள் சுத்த சாவேரியிலும், திருத்தாண்டகத்தை அரிகாம்போதியிலும் பாடுவர். எனவே அரிகாம்போதிக்குத் தாண்டகப் பண் என்ற பெயரும் உண்டு.*

**அப்பர் பண்கள்:** *அப்பர் தேவாரத்திலுள்ள பண்களாவன: 1. இந்தளம், 2. காந்தாரம், 3. காந்தார பஞ்சமம், 4. சீகாமரம், 5. குறிஞ்சி, 6. கொல்லி, 7. சாதாரி, 8. செவ்வழி, 9. பஞ்சமம், 10. பழந்தக்கராகம், 11. பாலையாழ், 12. பியந்தைக் காந்தாரம், 13. பழம் பஞ்சுரம்.*

**அப்பியாச கானம்:**→பயிற்சிப்பாடல்

**அப்புதல்:** அகக்கூத்தைச் சேர்ந்த தேசிக்குரிய கால்கள் இருபத்து நாலில் பதினாறாவதான கால் அப்புதல்
(சிலப். 3:16 உ. வே. சா அடிக்குறிப்பு)

**அபங்கம்:** *மராட்டிய இசைவகை; பண்டரிபுர இறைவன் திருமால் - விட்டலன் (புரந்தரன்) மீது பாடப்பட்ட நாம சங்கீர்த்தனங்கள். பல்லவி, சரணம் அமைப்புக் கொண்டது. தஞ்சை மராட்டியர் ஆட்சியில் வழக்கிற்கு வந்த இசை வடிவம்.*

**அபந்யாசம்:** → இடைமுடிவுச்சுரம்

**அபய கரம்:** → அடைக்கலக்கை

**அபயமுத்திரை:** → அடைக்கலக்கை

**அபய வத்தம்:** *நாட்டிய இரட்டைக் கையுள் ஒன்று.* இருகையும் சுகதுண்டமாக நெஞ்சுற நோக்கி நெகிழ்ந்து நிற்பது என்னை? "அபய வத்தம்மே அறிவுறக் கிளப்பின் வஞ்சமில் சுகதுன்ப இருகையு மாட்சியில், நெஞ்சுர நோக்கி நெகிழ்ந்து நிற்பதுவே" (சிலப். 3:27. அடியார்க்.)
← *செ. ப அ. 90*

**அபய வரதக்கை:** → அடைக்கலக்கை

**அபய ஹஸ்தம்:** → அடைக்கலக்கை

**அபவேட்டிதம்:** *வருத்தனை நான்கனுள் ஒன்று.*
... வருத்தனை நான்கு... (சிலப். 3: 13 அடியார்க்.)
*வருத்தனை நான்காவன:*
*1) அபவேட்டிதம் 2) உபவேட்டிதம் 3) வியாவர்த்தியம் 4) பராவர்த்திதம் (மேலது உ. வே. சா. அடிக்.)*
← சீவக. 1257 நச்சர்.

**அபிநயக்கை:** → அவிநயக்கை

**அபிநயசிரம்:** → அவிநயசிரம்

**அபிநயம்:** → அவிநயம்

**அபிநயன்:** → அவிநயன்

**அம்:** *ஏழிசையாதி அளவு;* (Measure of the musical notes)
← *செ ப. அ. பிற். 48*

**அம்சசுரம்:** → உயிர்ச்சுரம்

**அம்பணம்:**
1. அம்பணவம்: *யாழ் வகையுள் ஒன்று. அம்பணவர் இசைப்பது.*
அம்பண காதலி (திருப்பு: 126)
→ *அந்தரிகோலம் பாடும் பாணர்*

2. ஒருவாய்க்கோதை.

**அம்பண முழவு:** *மூங்கிலினால் செய்யப்பட்ட மரக்கால் வடிவ முழவு.*
← *த. க. க. 38/1*

**அம்பண யாழ்:** *பெருத்த அடிமூங்கிலை அறுத்து, உழக்கு போன்ற பாகத்தை உண்டாக்கி அதிலே யாழ் எனும் இசைக்கருவியைச் செய்தனர். அவ் யாழ் அம்பண யாழ் எனப் பெயர் பெற்றது.*
... வீணை சாபம்பட்டு அம்பண மாயதென்க... (சிலப். 6:22 அரும்.)

↑ இந்திரகுமரன் சயந்தன் மூங்கிலாகப் பிறக்கச் சாபம் எய்தியதும், உருப்பசியின் வழித்தோன்றலான மாதவி மூங்கிலால் செய்த தலைக்கோல் பெறுவதும் மூங்கில் (சயந்தன்) மாதவியைச் (உருப்பசியின் வழித்தோன்றல்) சேர்வதும் ஆராயத் தக்கது.
← *சிலப். 3: 114-5; 6: 18-25. அடியார்க்.*

**அம்பணவர்:** *மறை ஓதாது இசைபாடும் பார்ப்பனர்.*
பாடும் பாணரிற் பாங்குறச் சேர்ந்து (சிலப். 3: 105)
'... போர்க்கோலத்தைப் பாடும் பாட்டாண்மையுடைய அம்பணவரில் தானும் ஒருவனாகக் கலந்தென்க.' (சிலப். 3:105 அடியார்க்.); பாடும் பாணர்– அம்பணவர் (அரும்.)
வரிநவில் கொள்கை மறைநூல் வழுக்கத்துப்
புரிநூல் மார்பர் உறைபதிச் சேர்ந்து (சிலப். 13: 38 – 9)
*(வரி - இசைப்பாட்டு; நவில் கொள்கை - பாடும் வழமை; வழுக்கம் - தப்புதல்)*
நாவால் மறைநூல் நவிலாது வரிப்பாட்டை நவிலும்...
(சிலப். 13; 38–9. அடியார்க்.)

**அம்பணவம்:** → அம்பணம்

**அம்பலக் கூத்தன்:** → அம்பலத்தாடி

**அம்பலத்தாடி:** = அம்பலக் கூத்தன்
*சிவன்; இப்பரமே, சிவனாருக்குக் கூத்தாடும் களம். இப்பரத்திலே கூத்து நிகழ்த்துவதால் இறையனாரை அம்பலக் கூத்தாடி, அம்பலக் கூத்தன் என்று அழைக்கிறோம்.*
அம்பலத்தே கூத்தாடி (திருவா. 12: 17)
அம்பலக் கூத்தன் (திருவா. 21: 7)
*(பேரம்பலம் - பரவெளி;*
*சிற்றம்பலம் > சிதம்பரம் - பொன் அம்பலம்)*

**அம்பலம்:** = அரங்கம், வெளிஅரங்கம் (Open theatre)

1. கோயில்

செம்பொன் அம்பலத்துள் நின்ற அத்தனை (தேவா. 5: 2: 5)
அம்பலம் செம்பொற்கோவில் கொண்டு ...
(திருமாளிகைத்தேவர். திருவிசைப்பா. 5)

*(செம்பொன் அம்பலம் - பொன் அம்பலம் - சிற்றம்பலம் - சிதம்பரம்)*

2. கூத்துக்களம், கூத்தம்பலம்

ஆடஅம்பலமும் அரங்கமும் காலையும் (சீவக. 2112:3. நச்சர்)

3. பரவெளி, விசும்பு

எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம் (திருமந். 2722)

4. ஊர்ப் பொதுமண்டபம்

*அம்பலம் தண்ணீரட்டு வார்க்கும் தீயெரிப்பானுக்கு மாகப் பங்கொன்றும் (தெ. இ. க. 12·99. த. க. சொ. 21)*

**அம்பலவாசிகள்:** → தளியிலார்

**அம்பலி:** *பண்டைய தோல் இசைக்கருவி.*

அம்பலிக் கணுவை ஊமை சகடையோடு ஆர்த்த (கம்ப. 6: 21: 5)

← *செ. ப. அ. 96*

**அம்பாஆடல்:** *முதுதாயர் வழிகாட்டப் பாடிய வாறு மகளிர் தைநீர் ஆடல்.*

அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர் (பரி. 11: 81)

*அம் > அம்மாள் > அம்பா(ள்) - தாய்த்தெய்வம். (அம் - பால்)*

**அம்புக்கை:** *அவிநயக்கை வகையுள் ஒன்று.*

பெருவிரல் நகநுனியினைச் சுட்டுவிரலின் முன்வரையில் ஊன்றி மற்றைவிரல்களின் நகநுனிகளை உள்ளங்கையில் ஊன்றும் அவிநயக்கை வகை (பரத. பாவ 27)

*(சிலீமுகம் = அம்பு)*

← *செ. ப. அ. 1438*

**அம்போதரங்க அணி:** *இசைப் பயிற்சிகளுள் ஒன்று. தரங்கம் - அலை. கடல் அலை கரைசேரக் கரைசேர ஒருகாலைக் கொருகாலை குறைந்து வருவது போன்று சுரங்களை அடுக்கிப் பயற்சி செய்வது.*

'... எறிதரங்கம் உடுக்கும்...' (மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ்)
அம்போத ரங்கம் அறுபதிற் றடித்தே (தொ. பொ. 454)
கொச்சக ஒருபோ கம்போ தரங்கமென்று (தொ. பொ. 451)

*இது இருவகைப்படும்:*

| 1. நிறைப்பு அணி | 2. குறைப்பு அணி |
|---|---|
| நி ச் ா | கம பத நி ச் ா |
| த நி ச் ா | மபத நி ச் ா |
| ப த நி ச் ா | பத நி ச் ா |
| ம ப த நி ச் ா | த நி ச் ா |
| க ம ப த நி ச் ா | நி ச் ா |

ஒப்பு: கல்கணாரின் இராஜதரங்கிணி; குச்சுபுடியின் தரங்கம்.

**அம்போதரங்க ஒத்தாழிசைக் கலி:** ஒத்தாழிசைக் கலிப்பா வகையுள் ஒன்று. *அராக உறுப்பின்றி தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஐந்து உறுப்பான் வருவது.*

← *வீ. சோ. 117; த. இ. பே. 44/14*

**அம்போதரங்க ஒருபோகு:**

= அம்போதரங்கம்.

ஒத்தாழிசைக் கலிப்பாவின் ஒருவகை.

வண்ணகம் நீங்கி அம்போதரங்க உறுப்பு பொருந்திவரும் கலிப்பாவகை (த. யா. வ. 538); (வண்ணகம் = அராகம்)

*அகநிலை ஒத்தாழிசை, ஏனை ஒத்தாழிசை என்பவற்றுள் ஏனை ஒத்தாழிசை வண்ணகம், ஒருபோகு என இருவகைப்படும். அவற்றுள் ஒருபோகு என்பது கொச்சக ஒருபோகு, அம்போதரங்க ஒருபோகு என இருவகைப்படும்.*

*எருத்து (தரவு), கொச்சகம், அராகம், சிற்றெண், அடக்கியல் என்னும் ஐந்துறுப்புக்கள் உடையது அம்போதரங்க ஒருபோகு.*

எ-டு: 'கண் அகன் இரு...' என்று தொடங்கும் முல்லைக் கலியின் 2ஆம் பாடல்.

← *பா. பா. 105; தொ. பொ. 151 நச்; த. இ. பே. 46-7/14; தொல். செய். 451, 454*

**அம்போதரங்கம்:**=அசையடி, பிரிந்திசைக்குறள், சொற்சீரடி, எண், பேரெண், சிற்றெண், அளவெண், இடையெண்.

1. கடல் அலை: *தோன்றும்போது பெரிதாகிக் கரையைச் சேரச் சேரச் சிறிதாகி வரும் கடல் அலை.*

எடு:- கல்கணாரின் இராஜதரங்கிணி; குச்சுபுடியின் தரங்கம்.

2. ஒத்தாழிசைக் கலிப்பாவகை;

அம்போதரங்க ஒருபோகு (தொ. பொ. 463 பேரா.)

3. அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா உறுப்பினுள் ஒன்று (இ. வி. 738 உரை)

தரங்கம் – நீர் அலை; அம்பு + தரங்கம் > அம்போதரங்கம்

எடு:- அணிதவத் தவர்களுக் கதிகவித் தகனும் நீ

*(இது முதலிய நான்கும் நாற்சீர் ஓரடி அம்போதரங்கம்)*

மறையவர்க் கொருவன் நீ

*(இது முதலிய நான்கும் முச்சீர் ஓரடி அம்போதரங்கம்)*

அரியை நீ

*(இது முதலிய எட்டும் இருசீர் ஓரடி அம்போதரங்கம்) (தேவா. 11: 39; நம்பி. நம்பி. ஆளுடையபிள்ளை திருக்கலம்பகம்)*

← செ. ப. அ 98; த. இ. பே. 47/14 & 88/15; யா. கா. 31 உரை; யா. கா. 86 & 125 (தமிழண்ணல்)

**அம்மனை:** = அம்மானை.

1. தாய்
அன்னை, பயந்தாள், ஆய், யாய், அம்மனை
அவ்வை, ஈன்றாள், மோய், தாய், என்ப (திவா. 314)
யானும் ஓர் அம்மனைக் காவல் உள்ளேன் (முத். 34)

2. மகளிர் விளையாட்டு
*அம்மானைக் காய்களைக் கையில்கொண்டு சிறுமியர் விளையாடும் ஆட்டம்*
அம்மானை அம்மனை (திவா. 1309; புதுநூற்பா. 150)
ஆடும் கழங்கு அம்மானை ஊசல் (இ. வி. 807)

அம்மனை என்பது பல்வரிக் கூத்துள் ஒன்றாகிய மகளிர் விளையாட்டு; விளையாடுங்கால் ஒருவர் கருதியதோர் பொருள்பற்றி வினாவுதலும், மற்றொருவர் விடை கூறுதலும், வினாவின்றியும் அம்மானாய் எனவமைத்துப் பாடுதலுமுண்டு. முதலாமவர் முடிப்புரை தருவதுமாகவும் அமையும். ஈற்றுச்சொல் அம்மானாய் என விளியாய் அமையும்.
(சிலப். 29: அம்மானை வரி; நாட். உரை.)

3. கலம்பக உறுப்புள் ஒன்று; அம்மானைப் பருவம்.
*பெண்பால் பிள்ளைத் தமிழ்ப் பருவங்கள் பத்தினுள் ஒன்பதாம் பருவம்.*
'தெரிவையர்க்குப் பெறாகழங்கு அம்மானை ஊசல் பெறும்' (சி. பா. 28)
4. தலைவி, பெண்.
நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய் (திருப்பாவை 10)
*(அம்மனை-அம்மனாய்; பாவை > பாவாய்)*
5. ஒருவகைப்பாடல்
*இது தரவு கொச்சகத்தில் அமையும்.*
← *திருவம்மானை (திருவாச. 8)*
6. நாட்டார் சிற்றிலக்கிய வகையுள் ஒன்று.
← சிலப். 29; அம்மானை வரிப்பாடல்கள் 16 – 19

**அம்மனை மடக்கு:** = அம்மானை மடக்கு.
*கலித்தாழிசையில் வினாவிடையாக மகளிர் இருவர் இருபொருள்பட உரையாடுவதாக இயற்றும் பாட்டு* ← *மா. அ. 267*

**அம்மானார்:**
1. அம்மனை, அம்மானை: *பெண்களின் ஆட்டம்.*
2. *அம்மானை எனும் இலக்கிய வடிவம்*
3. *அம்மானை இலக்கியத்தில் இடை இடையே வரும் விளிச்சொல்.*
ஆரை இனிப்பாடி யாடுவோம் அம்மானார்
(சீவக. அம்மானை பக். 32)
← பெ. அ. 265/I,→ அம்மனை

**அம்மானை:** → அம்மனை

**அம்மானைப் பருவம்:** *பெண்பாற் பிள்ளைத் தமிழ்ப் பருவங்களுள் ஒன்று.*

**அம்மானைப் பாட்டு:** → **அம்மானை வரி**

**அம்மானை மடக்கு:** → **அம்மனை மடக்கு**

**அம்மானை வரி:** = அம்மானைப் பாட்டு
*மகளிர் அம்மானை ஆடும்போது பாடும்பாட்டு. இது இசைப்பாடல் ஆதலால் வரி எனப்பட்டது.*
பாவை பாட்டும் அம்மானைப்பாட்டு... (தொ. பொ. 461. பேரா.)
↑ கூற்றும் மாற்றமும் இடைமிடைந்து உறழ்கலியான் அம்மானைவரி அமையும்.
← *சிலப். 29: பாடல் 16 - 19*

**அம்மானை வள்ளை:** *மகளிர் உலக்கையால் தானியங்களைக் குற்றியவாறு பாடும் அம்மானைப் பாட்டு.*
பன் மலர்க்காவின் அம்மானை வள்ளையும் (பெருங். 1: 40: 85)
அப்பொன் மலை சிலம்பு அம்மனை வள்ளையுடன் (சூளா. 1660)

**அம்மியம்:** = காளம், எக்காளம்.
*காற்றுக் கருவிகளுள் ஒன்று.*

**அம்மை:**
1. அழகு:
*அம் - அழகு; அம் > அம்மை*
எடு:– அம்தீம் குறிஞ்சி (சிலப். 28: 35)
2. அழகியல், வனப்பு; (Literary Aesthetics).
வனப்பியல் தானே வகுக்குங் காலை
சின்மென் மொழியால் தாயபனுவ லொடு
அம்மை தானே அடிநிமிர்பு இன்றே (தொ. செ. 1491)

**அமண்:** *வரிக்கூத்து வகை.*
சீலமிகும் ஆண்டி அமண் புனவே டாளத்தி கோப்பாளி...
கோத்தவரிக் கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**அமணக் கூத்து:** *அம்மணக் கூத்து,* (Wanton, Naked dance) *ஆடையின்றி ஆடும் கூத்து; நாணமின்றி நிர்வாணமாய் ஆடும் கூத்து.*
← பெ. அ. 269/I

**அமரோசை:** = அவரோகணம், இறங்குநிரல், இறங்குவரிசை, (Descending order of notes)
*இசையின் சுரங்கள் இறங்கு வரிசையில் சுர 'அலகு* (vibretion of notes / pitch) *குறைந்து வருவது (குறித்த அளவில்) குறைந்து வருவதால் அமரோசை.*

எடு:– ச் நி த ப ம க ரி ச
அமர் - அமர்தல்; அமர் > அமர் + ஓசை > அமரோசை
அவரோகணம் - இறங்குதல்
ஒப்பு: அவதார் > அவதாரம் - மேலிருந்து கீழே இறங்குதல்.
ஆரோசை அமரோசைகளில் அமைத்தார்
(பெரியபு. ஆனாய. 14: 24)

**அமலை:** = வாளமலை (வாள் + அமலை), அமலைக் கூத்து
1. ஓர் ஆடல் வகை, கூத்து, வென்றிக்கூத்து, வாள் கூத்து.
தோல்வியுற்ற வேந்தனை சூழ்ந்து நின்று வீரர் திரண்டு 'வாளை உயர்த்தி ஏந்தி' ஆடும் ஆட்டம்.
பட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர் ஆடும் அமலையும்
(தொ. பொ. 17)
அவுணர் வீழ நங்கை மரக்கால் மேல் வாள் அமலை ஆடும்போலும் (சிலப். 12: (12) 2)
வாள் அமலை > வாள் கூத்து. (சிலப். 12: (12) 2; நாட். உரை)
2. பாடல் வகையுள் ஒன்று.
பட்ட வேந்தனை நெருங்கி வீரர் திரண்டு பாடும் பாட்டு
(தொ. பொ. 17: இளம்.)

**அமலைக் கூத்து:** → அமலை

**அமைத்த கை:** = அபய முத்திரை, அபய ஹஸ்தம், அபய கரம்.
காத்தல் தொழிலைக் குறிக்கும் ஒற்றைக் கை முத்திரை (அவிநயம்).
→ அடைக்கலக்கை

**அமைதி:** இலக்கணம்; ஆடலாசிரியன், இசையாசிரியன், பாடலாசிரியன், தண்ணுமையாசிரியன், குழலாசிரியன்,யாழாசிரியன், ஆகியோரின் இலக்கணங்களை (அமைதியினை) அரங்கேற்றுக் காதையுள் இளங்கோ அடிகள் கூறுகிறார்.
ஆடலாசிரியன் அமைதி - ஆடலாசிரியர் இலக்கணம்.
ஒப்பு: காலவழு அமைதி

**அயர:** (கூட்டிசை ஒலி, ஆடல் குறித்த சொல்)
1. ஆட
வான்றோய் மீமிசை அயருங் குரவை (மலைபடு. 322)
மல்லல் ஆவணம் மாலை அயர – வளப்பத்தையுடைய அங்காடித் தெருவெல்லாம் மாலைக் காலத்தைக் கொண்டாட
(நெடுநல். 44. நச்சர்.)
விருந்தாட்டு அயருமோர் விஞ்சை வீரன் (சிலப். 6: 4)
2. பாட
வாகை வனமாலை... படுபேய்க்குப் பாட்டு அயரும்...
(முத்தொள்.)

**அயல்கோவை:** = அன்னிய சுரம், இடைப் பிறவரல் கோவை, அயல்விரவு. (Accidental note, foreign note).
தாய் (மேளம்)ப் பண்ணிற்கு உரித்தல்லாத கோவை ஒரு சேய்ப் பண்ணில் வந்து ஒலித்தால் அது அயல்கோவை.

**அயல் பண் விரவு:** = அன்னிய இராகக் காகு பாடும்போது எடுத்த பண்ணில் வேறொரு பண்ணின் சாயல் கலப்பதாகிய குற்றம்.
← த. க. க. 98/I

**அயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா:**
கலிப்பா வகையுள் ஒன்று
எடு:- சிலம்பு ஊர் சூழ்வரி மற்றும் 'காமர் கடும்புனல்' என்று தொடங்கும் கலித். 39ஆம் பாடல்.
ஊர் சூழ்வரியில் 64 - 65ஆம் அடிகளாகிய,
"அழுதேங்கி நிலத்தின் வீழ்ந் தாயிழையாடன் கணவன் தொகுதகைய திருந்தடியைத் துணை வளைக்கையால் பற்ற"
வெண்பா யாப்பில் வந்துள்ளன. கலிப்பாவில் அயலதாகிய வெள்ளடிகள் மயங்கி வந்தமையால் இது அயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவாகும். ஊர் சூழ்வரியை, "இஃது அயன் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா" என்பார் அடியார்க்கு நல்லார். இவ்வாறு தரவும், தாழிசைகளும், அகவல் சுரிதகமும் இடையிடையே தனிச்சொல்லும் பெற்று வேற்றடி விரவி வருவது அயல் மயங்கிசைக் கொச்சகக் கலி.

**அயல்விரவு:** → அயல்கோவை; அயல் விரவுப்பண்

**அயல்விரவுப் பண்:** = பாஷாங்க இராகம்.
தாய்ப்பண்ணில் வராத சுரங்கள் வரும் சேய்ப் பண்.
எடு:– காம்போதி (தக்கேசி – ஓதுவார் முறை)
இப்பண்ணின் சுரம் – ச ரி² க² ம¹ ப த² ச்
ச் நி¹ த² ப ம¹ க² ரி² ச
காம்போதி பாடும்போது சில இடங்களில் 'சநி² பத²ச்' என்று வரும். காம்போதியின் தாய்ப் பண்ணான செம்பாலையின் (அரிகாம்போதி) சுரமல்லாத 'நி²' (காகலி நிசாதம்) என்ற அயல் சுரம் விரவி வரும். எனவே காம்போதி அயல் விரவுப்பண். இது இனிமைக்காக வருவது.
'வருவது ஒற்றி என்றது – அந்தப் பண்ணுக்கு அயல் விரவாமல் நோக்கி என்க' (சிலப். 3: 65உரை)
← த. வ. 84; த. க. க 245/I
↑ பிலகரிப் பண்ணில் (தாய்–அரும்பாலை–சங்கராபரணம்)

மென்தாரம் நி[1] (கைசகி நிசாதம்) அயல்கோவை. எனவே பிலகரிப் பண் அயல்விரவுப்பண் ஆகும்.

→ அயல்கோவை.

**அயிர்ப்பு:** = அனுத்திர பஞ்சமம்

*(அயிர் - நுண்மை; அயிர்ப்பு - நுண்ணிய குறைப்பு) ஒப்பு: அயிரை மீன்*

1. குறைந்த இளி (பஞ்சமம்); *அதாவது இளி (ப)க்குரிய அலகு (சுருதி) சற்று நுண்ணிய அளவிலே குறைந்து ஒலிப்பது.*

அயிர்ப்பு அனுத்திரள் பஞ்சமமாகும் (பிங்க. 1393)

↑ அனைத்துச் சுரங்களும் மென்வகையைக் கொண்டது விளரிப்பண் (தோடி).

ச ரி[1] க[1] ம[1] ப த[1] நி[1] ச்

எல்லாச் சுரங்களும் மென்மையானவை ஆதலால், இப்பண்ணின் இளி (ப) யும் சற்றுக் குறைந்து ஒலிக்கும்.

2. ஒரு பண் → அனுத்திர பஞ்சமம்

← *த. க. க.* 51/I

**அயிராணி:** = அயிராணி ஆடல், இந்திராணி கூத்து, கடையம், கடையக் கூத்து.

*பதினொரு ஆடலில் ஒன்று; இந்திரனின் தேவி அயிராணி ஆடிய ஆடல்; வீழ்ந்தாடும் வகையது.*

'கடைய மயிராணி...';'துடி கடையம் பேடு... வீழ்ந்தாடல்...'; 'கடைய மயிராணி யாடிற்று...' (சிலப். 3: 14அடியார்க்.)

கடையம் ... (சூடா. 9: 51)

அயிராணியின் ஆடற்பெயர் கடையம் ஆகும் (திவா. 1757)

**அயிராணி ஆடல்:** → அயிராணி

**அயிற்பெண்டு:** *மகளிர் ஆடும் வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

சிந்து... பிச்சி திருக்குன்று அயிற்பெண்டு... கோத்த வரிக்கூத்தின் குலம் (சிலப். 3: 13.அடியார்க்.மேற்.)

**அர்க்கார்:** = அரிக்காரன்

*வெள்ளிப் பூண்தடி பிடித்துக் கட்டியங் கூறுவோன்.*

← *செ. ப. அ.* 124

**அர்த்தகம்பித இராகம்:** → சில்கோவை உள்ளோசைப்பண்

**அர்த்த சூசிக்கை:** → அரைஊசிக்கை

**அர்த்த பதாகம்:** → அரைக்கொடி

**அர்த்த பாசாங்கப் பண்:** → மாத்திரை குறைந்த பண்

**அர்த்த பிருட்டகம்:** *கூத்தின் அங்கக்கிரியை பதினாறனுள் ஒன்று.*

← *சிலப். 3: 12. அடியார்க்.*

**அரங்கக் கூத்தி:** = அரங்கியன் மகளிர்.

1. நாடக சாலையில் ஆடும்பெண்

அரங்கியன் மகளிர்... (பெருங். 1: 35: 71)

2. பரத்தை

அரங்கக் கூத்திகண் அன்பின் மனையவள் துறந்து செல்பவர்; அரங்கக் கூத்தி என்றது பரத்தையை (சீவக. 1557: 2 நச்சர்.)

அரங்கக் கூத்தி சென்று ஐயம் கொண்டதும் (மணி. 24: 22)

← கூர்ம. சந்திர. 55

**அரங்க சாலை:** → ஆடகசாலை, அரங்கு

**அரங்கத் தாளம்:**

1. நாட்டியத்திற்கான தாளம்

பாடுவார் பாணிச்சீரும் ஆடுவார் அரங்கத்தாளமும் (பரிபா. 8: 109)

ஆடுவார் ஆடல் அமர்ந்த சீர்ப்பாணி (பரிபா. 10: 117)

2. ஐம்பொன்(தாளக்)கருவி

→ ஐம்பொன் கருவி

**அரங்கி:**

1. நாடகக்காரி

மடவார் ஆயிரம்பேர் உண்டு என்று அரங்கி அறியாளோ (கூளப்ப. காதல். 359)

2. பரத்தை

*ஆரை நம்பினாலும் அரங்கியை நம்பக்கூடாது* (நா. வ.)

**அரங்கிசைப் பாடல்:** = இலட்சியகீதம், சபாகானம்

*இசை அரங்குகளில் பாடக்கூடிய பொருள் நோக்கினை உணர்த்தும் பாடல்.*

**அரங்கியல்கூத்து:** *உள்அரங்கில் நடத்தப்பெறும் செவ்வியல் ஆடல்.*

...அரங்கியல் கூத்து நிரம்பி வினைமுடிக்க...' (சிலப். 6: 35; 6 அடியார்க்.)

**அரங்கியன் மகளிர்:** → அரங்கக்கூத்தி

**அரங்கின் அமைதி:** *ஆடல் அரங்கின் இலக்கணம்; அமைதி - இலக்கணம். சிலப்பதிகார*

அரங்கேற்றுக் காதையில் 95ஆம் அடிமுதல் 113ஆம் அடிவரை வேத்தியல் அரங்கின் இலக்கணம் கூறப்படுகின்றது.

**அரங்கு:** = அரங்கம், களம், வட்டாடுமிடம், அவை, மனை, நாடகசாலை, மேடை, ஆற்றிடைக் குறை, கோலம், கூடம், மண்டபம், அம்பலம், கூத்தம்பலம், ஆடுகளம், களரி, மன்றம், திணை, சபை, கூடம், பொது இல், நடசாலை

1. நாடகசாலை
அரங்கு போரிடம் வட்டாடுமிடம் சபை மனை விகற்பம் (சூடா. 11: 38)

நடசாலை - நானாவித நடசாலை என்ற நாடக அரங்கு திருவாவடுதுறையில் இருந்துள்ளது (ARE. 152, 1925)

திருவிடைமருதூரில் நாடகசாலைகளில் ஊர்க்கூட்டம் நடந்துள்ளது (ARE 65, 1914)

ஆடம்பலமும் அரங்கமும் (சீவக. 2119)

திருவாய்ப்பாடி ஸ்ரீ கூடத்தே குறைவறக் கூடியிருந்து (தெ. க. வெ. 111, 35)

அரங்கத்து நால்வர்... கற்பிச்சு (TAS,IV, P,22-25)

2. நாடகம், நாட்டியம் (Theatre)
அரங்கும் ஆடலும் தூக்கும் வரியும் (சிலப். 10: 10)
பாரதி ஆடிய வியன் பாண்டு அரங்கமும் (சிலப். 6: 45)

3. உள்அறை, (Indoor Hall)
அரங்கனின் (திருமால்) உள் அறைகளம், அரங்கம்.
அரங்கு வீடு - உள் அறை (நா. வ.)

4. சுடுகாடு
பாரதி ஆடிய பாரதி அரங்கத்து (சிலப். 6: 39)
அரங்கம் - ஆடுகளமாகிய சுடுகாடு.
இவளாடுதலாற் பாரதியரங்கென்று சுடுகாட்டுக்குப் பேராயிற்று (மேலது. அரும்.)

பிறைக்கொள் சடைதாழப் பெயர்ந்து நட்டம்
பெருங்காடு அரங்காக நின்றாடல் என்னே (தேவா. 7: 9 : 8)

5. திரை அரங்கு
அரங்கு நிறைந்த காட்சி (House full show) (நா. வ.)
↑ தமிழகத்தின் தொடக்ககால அரங்கு வட்ட வடிவமானதே.
கட்டளை அன்ன வட்டரங்கு இழைத்து (நற். 3: 3)

**அரங்கொழிசெய்யுள்:** புறநாடக உருக்களுள் ஒன்று.
புறநாடகங்களுக்குரிய உருவாவன: தேவபாணி முதலாக அரங்கொழி செய்யுள் அந்தமாகச் செந்துறை விகற்பங்க ளெல்லாமென்றவாறு (சிலப். 3: 14. உரை)

**அரங்கம்:** → அரங்கு

**அரசக்கூத்து:** ஒரு பக்கம் தாண்டவ வேகமும், மறுபக்கம் இலாசியத் தழைவும் என இருவகையாக ஒரே சமயத்தில் விளங்குமாறு ஆடும் கூத்துவகை.
'... இவ்வண்ணம் இருபக்கமும் இருவகையாக இயங்கி இரண்டு இயக்கமும் ஒரேசமயத்தில் ஒன்றாக இணையக் கூத்திடல் அரசக்கூத்து' (கூத்த நூல். 352)
← பெ. அ. 320/I

**அரசர் பா:** = ஆசிரியப்பா, அகவற்பா, தொகை
← தொ. பொ. 419, இ. வி. 873

**அரசவைக் கலைஞர்:** சூதர், மாகதர், வைதாளிகர் ஆகியோர்; பாணர், விறலியர்போல் அல்லாது அரசவையிலேயே வீற்றிருந்த கலைஞர்.

**அரசன் விருத்தம்:** ஒரு சிற்றிலக்கிய வகை; 30 கலித்தாழிசை, 10 கலித்துறை, 30 விருத்தப்பாக்களால் மன்னனின் வீரம், இயற்கை வளம் முதலியவை களைப் பாடுவது.
← செ. ப. அ 118

**அரட்டம்:** பாலை நிலம் (யாழ் அக. அனு)

**அரந்தை:** =குறிஞ்சி, குறிஞ்சியாழ், படுமலைப் பாலை, நடபைரவி.
அரந்தைப் பெண்டிர் இணைந்தனர் அகவ (மதுரைக். 166)
குறிஞ்சி யாழிசையும் துன்பமும் அரந்தை (பிங்க. 3079)
அரந்தை என்பது குறிஞ்சி யாழிசை துன்பம் ஆகும் (சூடா. 11: 38)
← த. க. க. 57/I

**அரலை:** இசைக்கருவியின் நரம்புகளில் காணும் குற்றமாகிய கொடுமுறுக்கு.
புரி நரம்பின் அரலை தீர உரீஇ (மலைபடு. 23 – 4)
'...கொடும்பை அரலையென்றார்' (மேலது, நச்சர்.)
கொடும்பு – கொடுமுறுக்கு – கொடிமுறுக்கு (உவேசா அடிக்குறிப்பு); கொடு – வளைந்த.

**அரவம்:**
1. காற்சிலம்பு, மாணிக்கக்கல் பரல்களாக உள்ள சிலம்பு (எடு: கண்ணகியின் சிலம்பு)
அரவம் நூபுரம் பாம்பு ஓசை... (சூடா. 11: 4)
அரவ நூபுரமும் பாம்பும் ஓசையுமாம் (பிங்க. 3082)
2. ஒலி
அரவக்கடல் தானை அதிகனும் கரவாது (சிறுபாண். 103)
வண்டரவு கொன்றை (தேவா. 89: 3)
அரவம் இல்லாமல் ஆள் வருகிறான் (நாட். வ.)
3. பொருள் விளங்கா ஒலி
ஆனைச்சாத்தன்... பேச்சரவம் (திருப்பாவை: 7/480)
ஓசைபடுத்த தயிரரவம் (திருப்பாவை: 7/480)
4. தமிழ்மொழி (தெலுங்கர் வழக்கு)

**அரவர்:** *தமிழர் (அரவாளு - தெலுங்கர் வழக்கு)*
அரவர் என்பதுவே தமிழர் ஆகும் (அக. நிக. அம்முதல். 44)

**அரற்றல்:** *யாழ் மீட்டோசை.*
கறங்கல் அரற்றல் இசைத்தல்... யாழ் நரம்போசை (பிங்க. 1441)
← *செ. ப. அ. 122*

**அரற்று:** *குறிஞ்சிப்பண்ணின் திறத்துள் ஒன்று (நடபைரவியின் ஜன்யம்).*
நைவளம் அயிர்ப்பு ... அரற்று செந்திறம்... குறிஞ்சி யாழ்த்திறனே (பிங்க. 1377)

**அராகம்:**
1. முடுகியல், வண்ணகம், முடுகு.
அராக முடுகியல் வண்ணமாகும் (பிங்க. 2083)
*கலிப்பாவின் உறுப்புக்களுள் ஒன்று; நான்குசீர்களால் முடுகி வருவனவற்றை அராகம் என்றும், ஐந்து முதல் ஏழுசீராகவும் வருவனவற்றை முடுகியல் என்றும் வழங்குதல் மரபு.*

2. பண்: *அராகம் என்பது ஒரு பண்ணைக் குறித்தது;*
*அராகம் > இராகம்*
திரு + இராகம் > திருவிராகம் > ஸ்ரீராகம் ஆகி இருக்கலாம்
பாவமொடு அராகம் தாளம் இம்மூன்றும் (திரு. கான். 8)

3. பாலையாழ்த்திறம்
அராகத்தோடு... பாலைத்திறங்கள் (சூடா. 11: 33)
4. பாடல்
5. தக்கராகம்
ஆடகம் தக்கராகம் அராகம் (பிங்க. 3084)
← *தொ. செ. 121; த. இ. பே. 48 - 49/14*

**அரால கடாமுகம்:** *நிருத்தக்கை முப்பதனுள் ஒன்று,* (Hand pose).
(சுத்தானந்தப் பிரகாசம். சிலப். 3: 13. உ. வே. சா. அடிக்.)

**அராளம்:** → வளைந்தகை

**அரி:**
1. சிறியது, நுண்மை, மென்மை
*அரிக்குரல் - நுண்ணியதாய் ஒலிக்கும் குரல்*
எடு:– அரிக்குரல் தட்டை
அரிக்கூடு இன்னியம் கறங்க (மதுரைக். 612)
அரிச்சிறு பறையும்... (பெருங். 1: 37: 90)

2. இசைக் கமகங்களை உருவாக்கும் நுண்ணிய ஒலி அலை
சில்அரி கறங்கும்... (அகம். 301: 20)
3. மருதநிலப் பறை
அரியொடு ஆகுளி ஆலித்து அதிர்ந்தன (சூளா:872)
4. நவதாளங்களுள் ஒன்றான அரிதாளம்
அடியினில் சமதாளத்தோடு அருமமே அரிதாளம்... (சூடா. 12: 103)

5. விசிப்பலகை
அரிதலே, சயனம், நேமியடல், விசி, பறை யரித்தல் (சூடா. 11: 34)
6. மூங்கில்
7. வண்டு
8. சிலம்பு
கிண்கிணிப்பரலும்... வண்டும்... மூங்கிலும்... அரி எனலாகும் (பிங்க. 3085)
என்கால்சிலம்பு மணியுடை அரியே (சிலப். 20:67)

**அரிக்கணம்:** *(அரி - சிறிய, துளித்துளியான, நொய்(ம்) மையான); துளித்துளியாக, நொய்மையான முறையில் இசைக்கும் அழகிய கூட்டம்.*
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும் (முருகு. 76)
ஒப்பு: அரிமணல், அரிநெல்லி.

**அரிக்காரன்:** *வெள்ளிப்பூண் தடி பிடித்துக் கட்டியம் கூறுவோன்,* (*செ. ப. அ. 124*)
→ அர்க்கார்

**அரிக்குரல்:** *நொய்மையான குரல்; விட்டுவிட்டு ஒலிக்கும் ஓசை, இடைவிடுகை* (Intervel of Space or tune).
அரிக்குரல் தடாரியின் யாமை மிளிர (புறம். 249: 4)
நடுவுநின்று இசைக்கும் அரிக்குரல் தட்டை (மலைபடு. 109)
வெண்நுதல் கம்புள் அரிக்குரல் பேடை (ஐங். 85: 1)
ஒரு திறம் ஆடுசீர் மஞ்ஞை அரிக்குரல் தோன்ற (பரிபா. 17: 19)
அரிக்குரல் கோழி (சீவக. 1755)

**அரிக்குரல்தட்டை:** =தட்டைப்பறை, அரிப்பறை. *மூங்கிலைப் பிளந்துகொண்டு கைப் பக்கம் பிளக்காமல் வைத்துத் தட்டும் கருவி.*
நடுவு நின்றிசைக்கும் அரிக்குரல் தட்டை (மலைபடு. 9)
கண்விடுபு உடையூஉத் தட்டை கவினழிந்து (மதுரைக். 305)
தழலும் தட்டையும் குளிறும் பிறவும் (குறிஞ். 43)

**அரிக்கூடுஇன்னியம்:** *அரித்தெழும் ஓசையையுடைய அரிப்பறை, தடாரி, கிணை, சல்லரி சிறுபறை போன்றவை.*
அரிச்சிறுபறை (பெருங். 1: 37: 90)
அரிப்பறை (சீவக. 2685)
அரிக்கூடு மாக்கிணை (புறம். 378 – 8)
அரிக்கூடின்னியம் (மதுரைக். 612)

**அரிக்கோல்:** *பறையில் ஓசையை விட்டுவிட்டு எழுப்பும் கோல்.*
அரிக்கோல் பறையின் ஐயென ஒலிக்கும் (அகம். 151: 10)
விசிபிணித்து யாத்த அரிக்கோல் தெண்கிணை (அகம். 249: 3)

**அரிகண்டம் பாடுதல்:** *கழுத்தில் கத்தியைக்*

கட்டிக் கொண்டு எதிரி கொடுக்கும் சமுத்திக்கு இணங்கப் புலவர் கவிபாடுதல் (ச. அ.)
← செ. ப. அ. 124

**அரிகதை:** அரிகதை (காலட்சேபம்) இசைச் சொற்பொழிவு.
← செ. ப. அ. 3921

**அரிகாம்போதி:** =முல்லை, முல்லையாழ், முல்லைப் பண், செம்பாலை.
வண்டு மூங்கிலில் செய்த துளையில் காற்றுப் புகுவதால் எழும் பண் (அரி - வண்டு; காம்பு - மூங்கில்).
ஒப்பு:-
ஆடு அமைகுயின்ற அவிர்துளை மருங்கின்
கோடை அவ்வளி குழலிசையாக (அகம். 82: 1 – 2)

**அரிகாம்போதியின் சுதி அளவு:** → செம்பாலையின் மாத்திரை

**அரிகிணை:** கிணைப்பறை வகை; நெல்லரி கிணை.
நொய்மையான குரலையுடைய விட்டுவிட்டு ஒலிக்கும் கிணைப்பறை.
அரிகிணை முழக்கி அறம் வளர நாட்டினை (கல்லா. 51)

**அரிச்சிலம்பு:** உட்கூட்டிலுள்ள பரல்கள் உள்ளே மோதுவதால் விட்டுவிட்டு நொய்மையான ஒலி எழுப்பக் கூடியசிலம்பு.
அரி ஆர் சிலம்பு (குறுந். 369: 2)
ஆய்பொன் அரிச்சிலம்பும் (சிலப். 12: (12))
அரிச்சிலம்பு ஒன்றேந்திய கையள் (சிலப். 20: 27)

**அரிசேவை (ஹரிசேவை):** திருப்பதிக்கு யாத்திரை செல்வோர் நிகழ்த்துகின்ற வழிபாடும், கூத்தும்.
← பெ. அ. 351/I

**அரித்தல்:** அரித்தெழுகின்ற ஓசை, (intermittent noise, reverberate).
எடு:- அரிக்குரல் தட்டை

**அரிதாரம்:** ஆடல் மற்றும் கூத்துக் கலைஞர்களின் ஒப்பனை வண்ணப்பூச்சு.
வானுரிஞ் சிற்றறிதாரம் போல் குளிருந்தன்மைத்தே
(AVNM,7, P. 14; த. க. சொ. 38)

**அரிதாளம்:** நவதாளத்துள் ஒன்று
→ அரி

**அரிப்பறை:** பறைத்தோலின் நடுவே குறுக்காக ஒரு நரம்பை இறுக்கிக் கட்டிக்கொண்டு முழக்கினால், 'டர்ர் டர்ர்' என்று விட்டுவிட்டு ஒலிக்கும். இதுவே அரிப்பறை.
ஒப்பு: அரிச்சிலம்பு, அரிக்கட்டை (castanets)
அரிப்பறை வினைஞர் அல்கும் இசைக்கூட்டும் (ஐங். 81: 2)
வன்கை வினைஞர் அரிப்பறை இன்குரல் (மதுரைக். 262)
அரிப்பறை மேகலையாகி ஆர்த்தவே (சீவக. 2685)

**அரியம்:** ஓர் இசைக்கருவி; (அரி + இயம்)
வாச்சியம், வாத்தியம், ஒருபறை (ம. த. பே)

**அரில்:** குரல்
அரில்... குரல் (பொ. நி. 2: 97)

**அருகல்:** சுருங்கல், குறைதல்.
அருகலே சுருங்குதல் சார்தல் (சூடா. 11: 11)
அருகல் சுருங்கலும் சார்தலும் சொல்லும் (திவா. 2223)
ஒப்பு: அருகியல்

**அருகியல்:** = அருகு, அருகுசாதி.
பெரும்பண்களின் அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என்ற நான்கு இனங்களுள் ஒன்று.
(அருகல் - அருகியல் : அருகுதல் - குறைதல்)
அகநிலை மருதமும் புறநிலை மருதமும்
அருகியல் மருதமும் பெருகியல் மருதமும் (சிலப். 8: 39 – 40)
பாலைக்கு... அருகு சீர்கோடிகம் (சிலப். 14: 160 – 67 அடியார்க்.)
ஆசானுக்கு... அருகுசாதி தசாக்கிரி(சிலப். 13: 110 – 12 அடியார்க்.)

**அருகியல் மருதம்:**
1. செம்பாலை, அரிகாம்போதி, முல்லை, முல்லை யாழ்
அருகியல் மருதமும் பெருகியல் மருதமும் (சிலப். 8:40)
அருகியல் மருதம் குரல் கிழமை கைக்கிளை, விளரி, இளி, குரல் நிறையாம் ஏனைத் துத்தம், தாரம், இளி இவை நிறையே இதன்பாட்டு: வன்தாள் ஊரன் மென்தோள் வளைய, கன்றாய் போது காணாய் தோழி. நரம்பு பதினாறு. (மேலது, அரும்.)
குரல் நரம்பே முதலு முடிவுமாகவும்... அருகியல் மருதமும்...
(சிலப். 8: 43 – 44 அரும்.)
குரல் குரலாய செம்பாலை அருகியல் மருதமாகவும்...
(சிலப். 8: 37 – 41 அடியார்க்.)
2.செம்பாலை, ஒரு தாவரம் - Rosy milk wort - Asclepias rosea alias periplcca esculenta
அருகு –அருகல் – ஓரம் (edge)
← டி.வி.சாம்பசிவம் பிள்ளை அகராதி.பக்.413 / I

**அருகு:** → அருகியல்

**அருகு சாதி:** → அருகியல்

**அருசுரம்:** = அருஞ்சுரம்

1. பாலைநிலம்
அருஞ்சுரம் இறந்த அம்பர்ப் பருந்து பட (பெரும்பாண். 117)

2. கடத்தற்கரிய காடு
அருஞ்சுரம் இறந்து நீர் செய்யும் பொருளினும் (கலித். 5: 3)

3. நிழலற்ற நெடியவழி (ச. அ.)
← பெ. அ. 368/ I

**அருட்கை:** = உத்தித்தாங்குலி, அபயஹஸ்தம்
இறைவனின் அடைக்கலம் தரும் கைமுத்திரை
(ஹஸ்தம் - கைமுத்திரை)
→ அடைக் கலக்கை

**அருட்புரி:** குறிஞ்சி யாழ்த்திறத்து அருகியலில் 59ஆம் பண்.
நட்டபாடை... அருட்புரி... குறிஞ்சியாழ்த்திறமாகக் கூறுவர் (பிங்க. 1382)
திறம் - கிளைப்பண் - சேய்ப்பண் (ஜன்யராகம்)
← யா. நூ. 145

**அருத்த ரேசிதம்:** நிருத்தக்கை முப்பதுள் ஒன்று
← சிலப். 3: 12 அடிக்.

**அருத்தி:** கூத்து
← செ. ப. அ. 133

**அருநிலம்:** பாலைநிலம்.
அடுக்கன் மீமிசை அருப்பம் பேணாது
இடிச் சுரநிவப்பின் இயவுக் கொண்டொழுகி (மலைபடு. 19 – 20)
(அருப்பம் - அருமை)
மலையிடத்து மிக்க உயர்ச்சியில் கல்லையிடித்த அருநிலத்தில் (மேலது. நச்சர்.)
(அருநிலம் - அரும்பாலை - பாலைநிலம்)

**அரும்பாலை:**

1. பாலைநிலம்
அரும் - மலை (குறிஞ்சி, பாலையான நிலம்)

2. = பாலை, பாலையாழ், மருவின் பாலை, பஞ்சுரம், பழம் பஞ்சுரம், பழஞ்சுரம்.
பாலைநிலப் பெரும்பண் (சங்கராபரணம்)
உழை குரலாயது அரும்பாலை (சிலப். 17:13 அடியார்க்.)
செம்பாலை (அரிகாம்போதி)யின் உழை (ம)யைச் குரலாக (ச)க் கொண்டு பண் பெயர்க்கக் கிடைக்கும் பண்

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | * | | * | | * | * | | * | | * | * | |
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| அரும்பாலை | ப | | த$^2$ | | நி$^2$ | ச | | ரி$^2$ | | க$^2$ | ம$^1$ | |

**அரும்பெறல்:** பெறுதற்கரியது.
அரும்பெறல் மரபின் பெரும்பாண் இருக்கையும் (சிலப். 5: 37)
பாணர் மரபு பெறுதற்கரிய மரபு.
அரும்பெறல் பாவையை அடைக்கலம் பெற்ற (சிலப். 16: 1)
அரும்பெறல் – பெறல் அரும் எனமாறுக (சிலப். 16: 1 நாட். உரை)
அரும்பெறல் மரபின் மண்டப மன்றியும் (சிலப். 5: 110)
பெரியோரால் ஏத்தப்படும் பெறுதற்கரிய தன்மையுடைய மண்டபம் (மேலது, நாட். உரை)
முறைமையிலரும் பெறல் தமையனை (தெ. இ. க. 5.976, த. க. சொ. 28)

**அருமதாளம்:** ஒன்பதுவகைத் தாளங்களில் ஒன்று.
அடியினில் சமதாளத்தோடு அருமமே... நவதாளம் இவைகளாமே (சூளா. 12: 103)

**அருமவதி:** பண்களில் ஒன்று
நட்டபாடை அருமவதி... பிறவும் பண்ணே (திவா. 2161)

**அருள் நட்டம்:** → ஊர்த்துவ தாண்டவம்

**அரை:** கூத்தின் ஒருவகை ஆட்டம் (இ. வ.)

**அரைஊசிக்கை:** = அர்த்தசூசி
நாட்டியத்தில் அரை மண்டியிலிருந்து இரண்டு கால்களின் குதிக்கால்களையும் உயர்த்தி வலது கையைப் பதாகமாக்கி விரல்நுனிகள் மேலே நோக்குவதாகப் பிடித்து, இடதுகை பதாகம் உள்ளங்கை மேலே நோக்க மார்பின் நேராகப் பிடிப்பது அர்த்த சூசி. அர்த்த - அரை; சூசி - ஊசி

**அரைக்களை:** தாளத்தின் ஓர் எண்ணிக்கைக்கு இரு குறில்கள் அடைக்கப்பெறுவது; 2 x ½ =1.
இதன் அடையாளம் - 2/2; குறில் ½ எண்ணிக்கை; நெடில் 1 எண்ணிக்கை.

**அரைக்கொடி:** = அர்த்த பதாகம்.
கைமுத்திரை வகையுள் ஒன்று. பதாகம் - கொடி.

**அரைச்சுழி:** சுழியின் பாதி; அரைவட்டம்.
→ அரைத்துரிதம்

**அரை செம்புடை:**
= அரைசெம்பை, அரை ஜம்பை.
கண்ட சாய்ப்புத் தாளம்.

**அரைசெம்பை:** → அரைசெம்புடை

**அரைத்துரிதம்:** = அனுதுரிதம், அனுத்ருதம், அனுதுருதம்.
*தாள உறுப்புள் ஒன்று; தாளக் குறியீடு, தாள அங்கம், துரிதத்தின் செம்பாதி.*
*இதன் குறியீடு - அரை வட்டம் - இதன் அளவு - ஓர் எண்ணிக்கை; ஒரு தட்டு மட்டும்.*

**அரையர்:** வைணவக் கோவில்களில் ஆழ்வார் *பாசுரங்களைப் பாடி அபிநயத்துடன் ஆடுவோர்.*

**அரையர் கானம்:** → அரையர் சேவை

**அரையர் சேவை:** = அரையர் நடனம், அரையர் கானம், திருவாய்மொழி உற்சவம்.

*பெருமாள் கோவில்களில் மார்கழி (டிசம்பர்-சனவரி) மாதத்தில் ஆடப்படும் வைணவரின் நடனம். ஆழ்வார்களின் பாசுரங்களுக்குத் திருவரங்கம், ஆழ்வார் திருநகரி, திருவில்லிபுத்தூர் ஆகிய வைணவச் சிறப்புத் தலங்களில் இவ்வைபவம் நடைபெறுகின்றது. தலைப்பாகை அணிந்து, மாலை சூடி, கைத்தாளத்துடன் முன்னும் பின்னுமாக ஆடி அசைந்து, அபிநயத்துடன் பாடி ஆடுவார்கள். இதற்கு 'அரையர் சேவை' என்று பெயர்.*

*நாதமுனி, தம் மருமக்கள்மாரான மேலைஅகத்தாழ் வார் கீழைஅகத்தாழ்வார்களைக் கொண்டு ஆழ்வார் பாசுரங்களைப் பண்ணுடன் பாடி ஆட வைத்தார். இது அரையர் சேவை எனப்பட்டது. இவ்விருவரே முதல் அரையர்கள்.*
**"காளம் வலம்புரியன்ன நற்காதல் அடியவர்க்குத் தாளம் வழங்கித் தமிழ்மறை இன்னிசைத்த வள்ளல்"** *என்று 'அரையர் சேவை' முறையை ஏற்படுத்திய இராமானுசரை வேதாந்த தேசிகர் புகழ்கிறார்.*
**அது முதலாக, பாடுவாருக்கு அந்த இரண்டு பட்டப் பேரும் அரையர் என்கிற வியவகாரமும் நடந்து வருகின்றது (கோயி. 34)**
*(அரையர், தம்பிரான் - அரசர்)*

↑ **பாசுரங்களை எடுத்து விளக்கி, பண்ணுடன் பாடி அவிநயித்து ஆடுவதால் அரையர் சேவை ஒரு முத்தமிழ்க் கலை நிகழ்ச்சியாகும்.**
← *த. க. க. 236/I*

**அரையர் நடனம்:** → அரையர் சேவை

**அல்பத்துவம்:** → குறை

**அல்பநியாசம்:** → குற்றியல் கோவை

**அல்லிப்பாவை:**= பாவைக்கூத்து, பொம்மலாட்டம், (Puppet show); *ஆண்கோலமும் பெண் கோலமும் கொண்டு கூத்தாடுவதற்குரிய பாவை; அல்லிக் கூத்தில் ஆட்டும் பொம்மை.*

**1. பொம்மலாட்டம்**

**2. ஆணும் பெண்ணும் ஆடும் ஓர் ஆட்டம்**

**அல்லிப்பாவை ஆடு வனப்பு ஏய்ப்பக்**
**காம இருவர்... (புறம். 33: 17–18)**
← PPTI. 58

**அல்லிய ஆடல்:** → அல்லியம்

**அல்லியத் தொகுதி:** → அல்லியம்

**அல்லியம்:** = அலிப்பேடு, அல்லியத்தொகுதி, அல்லிய ஆடல்.

**1. அலிப்பேடு:** *நின்றாடல் வகை; திருமால் ஆடிய கூத்து பத்துள் ஒன்று.*
**அஞ்சன வண்ணன் ஆடிய ஆடலுள் அல்லியத்தொகுதி... (சிலப். 6: 47– 48)**
**அல்லியத்தொகுதி – அல்லிய ஆடல்; யானையை மருப்பொசித்து ஆடல் (மேலது. அரும்.)**
**அல்லியம் என்பதனை அலிப்பேடு என்பாரும் உளர் (மேலது. அடியார்க்.)**

**2. ஆனந்தத் தாண்டவம்:** *சிவன் ஆடிய பன்னிரு கூத்துக்களுள் ஒன்று.*
**அல்லியத்தின் முதற்படிமம் தில்லை மன்றுள் ஆடும் ஆனந்தத் தாண்டவம் (கூத்த நூல். 218)**
← *செ. ப. அ. 141; பெ. அ. 399/I*

**அல்லீசம்:** நடுவில் ஒருவரும் அவரைச் சுற்றிப் பலரும் இருந்து ஆடும் கும்மி, கோலாட்டம் போன்ற விளையாட்டு.
**தக்க அல்லீசம் லலிதமோடு ஆடுவேன் (பா. ச. 4: 5)**
← *பெ. அ. 399/I*

**அலகர்:** கோழிகளைக் கொண்டு குறி சொல்லுவோர்.
**சொரி வெள் அலகரும் பழுதில் வாய்மையர் (கல்லா. 15: 7)**

**அலகிடல்:** = சந்தக்குழிப்பு
*தன, தனன முதலிய சந்த வாய்பாடுகளால் பாடற் சொல்லில் அடங்கிய குறில் நெடில் எழுத்துத் தன்மையையும், வலி, மெலி முதலிய ஓசைத் தன்மையையும் அளவிட்டுக் காட்டுவது.*
← *த. க. க 79/I*
வல்லின மெய்வரின் 'த்' (தத்த) என்றும் மெல்லின மெய்வரின் 'ன்', 'ந்' (தன்ன, தந்த) என்றும், இடையின மெய்வரின் 'ய்' (தய்ய) என்றும் சந்தக் குழிப்பு குறித்தல் மரபு.

**அல்கு:** = மாத்திரை.

*அடிப்படைத் தாங்களவு (தாங்கல் அளவு).*

1. அளவு, (unit, measure, Quantity).

**அலகு இன் மாலை ஆர்ப்ப வட்டித்து** **(புறம். 399: 25)**
**அலகு இலா விளையாட்டுடையார்** **(கம்ப. கடவுள்: 1)**
*ஒப்பு: அளவடி - நாற்சீர் நாலடி.*

**2. மாத்திரை, சுருதி, சுதி, கேள்வி.**

*ஒரு இசைச்சுரத்திற்கும் அடுத்த சுரத்திற்கும் இடையிலுள்ள ஒலி அளவு. நம் இசை ஒரு தானத்தில் (octave) 22 அலகு (சுருதி) கொண்டது.*

**... குரல் நரம்பு பெற்ற நால் அலகில்... (சிலப். 3: 72-8 அரு.)**
**ஒற்றை அலகு – குற்றிசை; இரட்டை அலகு – முற்றிசை;**
**மூவலகு – பற்றிசை; நால் அலகு – நெட்டிசை** **(யாழ் நூல். 81)**

**3. எண்**

**அலகு அளவுகண்ட சீர் ஆழியாய் (இயற். முதல் திருவந். 10/2091)**

**4. கோல், லகு, அம்பு, நேர், (section)**

*தாள அங்கம், தாளக்குறியீடு, தாளஉறுப்பு, தாளஅளவு. இதன் அளவு 4 எண்ணிக்கை (4 மாத்திரை). இதன் குறியீடு - /*

↑ **அலகு என்பதே தற்காலம் 'லகு' என்று அழைக்கப்படுகிறது.**

**5. ஒரு குறில் அளவு (duration of one short syllable)** *(இ. த. சொ. 31-32)*

**6. <u>3, 4, 5, 7, 9</u> அளவுடைய தாளப்பகுதி.**

*எடு:- மூன்றன் அலகு (திசுரலகு); நாலன் அலகு (சதுசுரலகு)*

← *செ. ப. அ. பிற். 69; பெ. அ. 402/I; த. க. க. 5/I*

**அலகுப் பெயர்ப்பு:** கோவைகளின் அலகு *(சுருதி) அளவுகளை மாற்றுவதன் மூலம் புதிய பண் உண்டாக்கும் முறை.*

*எடு:- செம்பாலை (அரிகாம்போதி)யின் அலகு அளவுகளை மாற்றுவதன் மூலம் படுமலைப் பாலை (நடபைரவி) உருவாகும்.*

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
| படுமலைப்பாலை | நி$^{1}$ | | ச | | ரி$^{2}$/ | க$^{1}$ | | ம$^{1}$ | | ப | த$^{1}$ | |

*செம்பாலை (அரிகாம்போதி) - ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ ப த$^{2}$ நி$^{1}$*
*படுமலைப்பாலை(நடபைரவி) - ச ரி$^{2}$ க$^{1}$ ம$^{1}$ ப த$^{1}$ நி$^{1}$*

← *த. க. க. 82-3/I*

**அலங்கல்:** *ஒலி எழுப்புதல், அசைதல்.*

**அலங்கல் என்பது பூமாலை அசைவொடு தளிர் இலங்கல் (சூடா. 11: 4)**

**அலங்கார அளகம்:** மத்தளமுழக்கு முறைகள். *இதன் வகைமைகள்: தார்மருவுதாக்கு, தண்டிப்பு, தார்திரள், திரள்சாலி, களைக்கை, அளகக் களைக்கைச் சாலி.*

← *மத். 74*

**அலங்காரச் சாலி: → அளக்கை**

**அலங்கார பஞ்சகம்:** *வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், சந்த விருத்தம் ஆகிய இவ்வைந்தாலும் அந்தாதியாகப் பாடப்படும் சிற்றிலக்கியம்* **(இ. வி. 844)**

**அலங்காரம்:** = அணி

1. **எழால், கமகம்;** (Graces, ornaments, Embellishments of melody).

*எழால் எழுப்பும் எட்டு முறைகளாவன:-*

**பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல்**
**கண்ணிய செலவு, விளையாட்டுக், கையூழ்**
**நண்ணிய குறும்போக்கு என்று நாட்டிய**
**எண் வகையால் இசையெழீஇ** **(சிலப். 7: 5 – 9)**

**2. ஒப்பனை: அழகமையச் செய்யும் புனைவு.**

**பெருமகன் எழுதிய பேரலங்காரம்** **(பெருங். 4: 13: 98)**

**3. செய்யுளில் அமையும் அழகுகளைப் பற்றிய அணி இலக்கணம்.**

**4. அணி இலக்கணம் கூறும் நூல்**

*எடு:- மாறன் அலங்காரம், தண்டி அலங்காரம்*

**5. சிற்றிலக்கிய வகை**

*எடு:- கந்தர் அலங்காரம்*

**6. இசைப்பயிற்சிகளில் ஒன்று:** *தாளத்திற்கேற்ப அமைந்த சுரவரிசைப் பயிற்சி.*

← *த. க. க. 289/I; செ. ப. அ. 144,→* **அடுக்கு அணி, கோவை அணி**

**அலங்காரை:** மன்னனாலோ மற்றோராலோ அவளுடைய தகுதியினால் கோயிலுக்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்டவள் *(ஞா. கா. 240)*

**அலபதுமம்:** நாட்டியக்கை முப்பதுள் ஒன்று.
*(சிலப். 3: 12. அடி , உ. வே. சா. அடிக்.)*

**அலாபத்திரம்: →மலர்ந்த தாமரைக்கை.**

**அலபதுமம்: →மலர்ந்த தாமரைக்கை.**

**அலாரிப்பு:** = புஷ்பாஞ்சலி, மலர் அஞ்சலி, அத்தி, மொகரா.

*நாட்டியத் தொடக்க வகை. முதலில் ஆடும் ஆடல் (மொகரா); தாஅம், தித்தாஅம் என்பது போன்ற சொற்கட்டுகளுக்கு ஆடப்படுவது.*

*அலர் - மலர்; அலர்தல் - மலர்தல்*

*(முகம் > முகர் > முகரை > முகரா > மொகரா)*

**கோடுயர் கோங்கலர் வேங்கை அலர்**

(தேவா. 7: திருநெல்வாயில் அரத்துறை பாடல் 4 )
*கொங்கலருந் நறும் பொழில்* (EI, XVII, 16; *த.க.சொ 31*)

↑ இது அவை வணக்கமுறை ஆடல். இறைவன், நட்டுவ ஆசிரியர், தண்ணுமை ஆசிரியர், சபையோர் முதலியோரை வணங்கும் முறையில் அவிநயித்து ஆடுவது.
← *பெ. அ. 411-416; த. க. க. 87/I; வா. க. 834/I; செ. ப. அ. 147*

**அலிக்கை:** *அலிச்செயல் காட்டும் அவிநயக்கை ஆறாகும்.*
சர்ப்பசிரம் வண்டு தளிமுகுளம் கத்தரிகை,
விற்பனஞ்சேர் கோசங்க வித்தமுடன் –அற்புதமே,
ஆகும் அலிக்கை களா றென்றுரைப்பரே
பாகனைய சொல்லாப் பரிந்து
(சிலப். 3: 18. அடியார்க். மேற். சுத்தானந்தப் பிரகாசம்)
← *த. க. க 87/I; செ. ப. அ. 147*

**அலிப்பேடு:** → அல்லியம்

**அலுக்கு:** = கமகம், உள்ளோசை, ஏழால், (Graces)
← *தே. நே. 270/8.*

**அலுக்குதல்:** பாடும்போது குரலை இனிமையாக உருட்டுதல்.
*இசையரங்கில் பாடகர் நன்றாய் அலுக்கிப் பாடுகிறார் (இ. வ.)*
↑சீருடன் உருட்டல்... (சிலப். 8: 13) இதனுடன் ஒப்புமை உடையதாகலாம் சீர் – அழகு.

**அவதாளம்:** தாள இயல்பு அற்றது; தாளக் குற்றம். *தாளம் x அவதாளம்* (Antonym).
'இனிச்சீரியல் பொலிய நீரல நீங்க என்பதற்குத் தாள இயல்பு பொலிவுபெற அவதாளம் நீங்க வென்றுமாம்'
(சிலப். 3:135–6 அடியார்க்.)
'நீரல்லாதன... அவதாளம்' (சிலப். 6:38 அரும்.)
'... அவதாளம் நீக்குதலால் தாள இயல்பு பொலிவு பெறா நிற்க...'
(சிலப். 6:38 அடியார்க்.)

**அவரோகணம்:**→ அமரோசை, இறங்கு நிரல், இறங்கு வரிசை

**அவலச்சுவை அவிநயம்:** = அவலத்தின் அவிநயம்
*துன்ப உணர்ச்சி தோற்றும் உறுப்புச் செய்கை.* (Dramatic action expressive of grief)
*அவலம் - சோகம்; எண்வகை மெய்ப்பாடுகளுள் ஒன்று.* (Pathos, Pathetic sentiment)
'அவலத்து அவிநயம் அறிவரக் கிளப்பின், கவலையொடு புணர்ந்த கண்ணீர் மாரியும், வாடிய நீர்மையும், வருந்திய செலவும், பீடழி இடும்பையும், பிதற்றிய சொல்லும், நிறைகை அழிதலு நீர்மையில் கிளவியும், பொறை யின்றாகலும் புணர்த்தினர் புலவர்'
(சிலப். 3: 13 அடியார்க்.)
← *செ. ப. அ. 155*

**அவலத்தின் அவிநயம்:** → அவலச்சுவை அவிநயம்

**அவலிடி:** = வள்ளைப்பாட்டு, உலக்கைப் பாட்டு, உலக்கை.
*வரிக்கூத்து வகையுள் ஒன்று,* (masquerade dance)
'...உந்தி அவலிடி ஊராளி யோகினிச்சி... கோத்தவரிக் கூத்தின் குலம்' (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**அவவேட்டிதம்:** *அவிநய வகையுள் ஒன்று.*
← *சீவக. 1257 நச்சர்.*

**அவிக்ருதி சுரம்:** → அசைவிலாக் கோவை

**அவிநய ஆடல்:** = நிருத்தியம்
*உள்ளத்து உணர்ச்சிகளைக் காட்ட உடல் உறுப்பு அடையாளங்களால் நடித்து ஆடுதல்.*
→ அவிநயக்கூத்து

**அவிநயக் களம்:** நான்குவகை அவிநய ஆடல் *நிலை; நின்றாடல், இயங்கி ஆடல், இருத்தலாடல், கிடந்தாடல்.*
நால்வகை மரபின் அவினயக் களத்தினும் (சிலப். 14: 152)
அவினயம் –"நிற்றல், இயங்கல், இருத்தல், கிடத்தல் என்றத் தகு நான்கே அவிநயக் களனே" (மேலது. அரும்.)

**அவிநயக் கூத்து:** = அவினிய நட்டுவம், (Dancing using gesture language)

1. சாந்திக்கூத்து நான்கினுள் ஒன்று (சொக்கம், மெய், அவிநயம், நாடகம்)
'சாந்திக் கூத்தே... ஈரிரு நடமவை சொக்க மெய்யே அவிநய நாடகம்...' (சிலப். 3: 12 அடியார்க்.)

2. *பாடற்பொருளை மெய்ப்பாடுகளால் காட்டி ஆடும் கூத்து.*
'அவிநயக் கூத்தாவது கதை தழுவாது பாட்டினது பொருளுக்குக் கைகாட்டி வல்லபம் செய்யும் பலவகைக் கூத்து' (மேலது)
*எடு:- 'துன்பம் நேர்கையில்' என்ற பாரதிதாசன் பாடலுக்குப் பொருள் உணர்த்தி மெய்ப்பாடுகள் காட்டி ஆடுதல்.*

3. *பன்னிரு சிவதாண்டவத்திலிருந்து வந்த அடைவு முதலாய பன்னிரு கூத்துக்களுள் ஒன்று* (கூத்த நூல். 353)
*இக்கோயிலுக்கு... ஏற்றமாக அவினிய நட்டுவமாக ஒருபேர் முதல்கொண்டு* (*தெ. இ. க. 23-306*)
← *செ. ப. அ. 157*

**அவிநயக் கை:** = அபிநயக்கை (Gesture by hand)
நாட்டியத்தில் பாடற்பொருளை உணர்த்தக் கையால் செய்யப்படும் அடையாளம். இது மூன்றாகவும் வகுக்கப்படும்.
1. **தொழில்கை** - அவிநயம் செய்யும் கை.
2. **எழில்கை** - ஒரு கை தொழிற்கையாக அவிநயம் செய்யும்போது மறுகை தொழில் செய்யாது எழிலார்ந்து விளங்குவது.
3. **பொதுக்கை** - அவிநயம் இலாது பொதுவாக வைத்துக் கொள்வது ( ? ).
கைவகை வருமாறு:

| கைவகை | அரும்பத உரைகாரர் கூறுவது | அடியார்க். கூறுவது |
|---|---|---|
| ஒற்றைக்கை | 24 | 33 |
| இரட்டைக்கை | 13 | 15 |

இவற்றோடு ஆண்கை, பெண்கை, அலிக்கை பொதுக்கை என நான்கை கூட்டுவாருமுளர். பொருட்கை என்ற ஒன்றும் கூறப்பட்டுள்ளது. இது ஒற்றைக்கை, இரட்டைக்கை, எழிற்கை, தொழிற்கை, பெண்கை, ஆண்கை எனப் பலவாறு வகுக்கப்பட்டுள்ளது. இது மனக்கருத்தைக் குறிப் பாய் விளக்கும் அங்கச் செய்கை. உரையாசிரியர் இருவரின் காலத்துக்கேற்பவும் அவிநயங் களின் எண்ணிக்கை அதிகரித்திருக்கலாம் (ப. த. நா. 318)

↑ "சாந்து... அவைக்களத்தார் ஐந்து (157 உரை) எனக் காட்டுவர் அரும்பத உரையாசிரியர்"என இந்திரவிழா ஊர் எடுத்த காதையுள் அடியார்க்கு நல்லார் குறிப்பிடு வதால் இவர் பிந்திய காலத்தவர் என்பது பெறப்படும். நல்லார் அதிகமான அவிநயக்கை வகைகளைக் கூறுவது அவருடைய (பிந்திய) காலத்து வளர்ச்சியாகலாம்.
← சிலப். 3: 18 அடியார்க்.

**அவிநய சிரம்:** = அபிநய சிரம்.
தலையால் செய்யும் அவிநயம்.

**அவிநயம்:** = சைகை, நளிநயம், கைகாட்டுமுறை, பாவகம், கைமுத்திரை, அபிநயம், (mime, Gesticulation,Gesture)
ஆடலின் (நாட்டியம்) மெய்ப்பாட்டுச் செய்கை. கண், கை, முகம் முதலியவற்றால் உளக்கருத்தை வெளிப் படுத்தும் ஆடல் தொழில். இது எண்வகை மெய்ப் பாடுகளைத் தோற்றுவிப்பது. 24, 83 என்று இதன் வகைமை பெருகியுள்ளது. இது விலக்கு உறுப்புள் ஒன்று. பாடலின் பொருளைத் தோற்றுவிப்பது.
பாடலின் பொருளைக் குறிப்பாய்க் காட்டும் அங்கவினைகள் வருமாறு:
1. ஆங்கிகம் - உடம்பால் செய்தல்
2. வாசிகம் - வாக்கினால் செய்தல்
3. ஆசாரிகம் - அலங்காரத்தால் செய்தல்
4. சாத்விகம் - நடனபாவம் மற்றும் இலயத்தால் செய்தல்

அவலத்து அவிநயம் அறிவரக் கிளப்பின் (சிலப். 3: 13 அடியார்க்.)
ஆடல் மகளிர் அவிநயம் வியப்பவும் (பெருங். 4: 12: 188)

ஆடற் கூத்தினொடு அவிநயம் தெரிவோர்
நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர் (மணி. 19: 79 – 80)

'அவிநயமென்றது – பாவகம்; அஃது இருபத்து நான்கு வகை...
(சிலப். 3: 13 அடியார்க்.)

'கதை தழுவாதே பாட்டுக்களின் பொருள் தோன்றக் கைகாட்டி அவிநயிப்பது' (சீவக. 672 நச்சர்.)
'வேறு 24 அவிநயங்கள் உள: வெகுண்டோன் அவிநயம்...'
(சிலப். 3: 13 நாட். உரை)

24 வகை அவிநயங்கள்:
வெகுண்டோன், ஐயமுற்றோன், சோம்பினோன், களித்தோன், உவந்தோன், அழுக்காறுடையோன், இன்பமுற்றோன், தெய்வமுற்றோன், ஞஞ்ஞை யுற்றோன், உடன்பட்டோன், உறங்கினோன், துயிலுணர்ந்தோன், செத்தோன், மழைபெய்யப் பட்டோன், பனித்தலைப்பட்டோன், வெயில்தலைப் பட்டோன், நாணமுற்றோன், வருத்தமுற்றோன், கண்ணோவுற்றோன், தலைநோவுற்றோன், அழல் திறப்பட்டோன், சீதமுற்றோன், வெப்பமுற்றோன், நஞ்சுண்டோன்.
← மகா. சூடா. அபிநய. பா. 4; தே.நே. 274/8

**அவிநயமுறை:** உடலின் உறுப்புகளால் நடித்துக் கருத்தை விளக்கி ஆடும்போது பல்வேறு உடல் அசைவுகளைக் காட்டும் முறை.
உச்சிமுதல் கழுத்துவரை முதன்மை அவிநயம் கொண்டது – கதகளி
கழுத்து முதல் இடுப்புவரை முதன்மை அவிநயம் கொண்டது – மணிப்புரி.
இடுப்புமுதல் பாதம் வரை முதன்மை அவிநயம் கொண்டது – கதக்.
உச்சிமுதல் பாதம் வரை (உடல் முழுவதும்)
அவிநயத்துக்கு உள்ளாவது – சதிர் (பரதம்)

**அவிநயன்:** =அபிநயன்
கூத்தன் (male dancer); நாட்டியம், நாடகத்தில் ஆடும் ஆண் கலைஞன். கூத்து நிகழ்த்துவோன் (யா. அ)
கூத்தர் அவிநயர் என்றும் கூறும் (சூடா. 2: 38)

**அவிப்பலி:** → அட்டையாடல், கவந்தம்

**அவினிய நட்டுவம்:**→ அவிநயக்கூத்து

**அவுணன்:** வாணசுரன், பாணாசுரன்.
அல்லியத் தொகுதியும் அவுணற் கடந்த
மல்லினாடலும். . . . (சிலப். 6: 48 – 9)
'வாணனாகிய அவுணனை. . .' (சிலப். 6: 48–9. அடியார்க்.)

**அவை:** = அரங்கம், சபை, நாடக அரங்கு, மண்டபம்.
கூத்தாட்டு அவைக்குழாத்து (குறள். 322)
கலைத்தொழில் அவையம் கைதொழப் புக்கு (பெருங். 1: 37: 158)
→ அரங்கு; ஆடுகளம்

**அழக்கை:** → அளக்கை

**அழல் திறப்பட்டோன் அவிநயம்:**
*24 அவிநய வகையுள் ஒன்று.*
அழல் திறப்பட்டோன் அவிநய முரைப்பின்
நிழல் திறம் வேண்டு நெறிமையின் விருப்பும்
அழலும் வெயிலும் சுடரும் அஞ்சலும்
நிழலு நீருஞ் சேறு முவத்தலும்
பனி நீருவப்பும் பாதிரித் தொடையலும்
நுனிவிரல் ஈரம் அருநெறி ஆக்கலும்
புக்க துன்பமொடு புலர்ந்த யாக்கையும்
தொக்க தென்ப துணி வறிந்தோரே (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**அழிஞ்சுக்காடு:** *பாலைநிலம்*
'பெருவிடாயன் ஆனவன் அழிஞ்சுக்காடு ஏறப்போக மாட்டானே'
(திருவாய். 6, 2 ஈடு – பிர.)
← *பெ. அ. 454/I*

**அழுக்காறுடையோன் அவிநயம்:**
'அழுக்காறுடையோன் அவிநய முரைப்பின் இழுக்கொடு புணர்ந்த விசைப் பொருளுடைமையும், கூம்பிய வாயும், கோடிய உரையும், ஒம்பாது விதிர்க்கும் கைவகை உடைமையும், ஆரணங்காகிய வெகுளி உடைமையும் காரணமின்றி மெலிந்த முகமுடைமையும் மெலிவோடு புணர்ந்த விடும்பையுமே வரப் பொலியுமென்ப பொருந்து மொழிப் புலவர்' (சிலப். 3: 13. அடியார்க்.)

**அழுகணிச்சிந்து:** *ஒப்பாரி*
*ஒப்பாரி அல்லது அழுகணிச் சிந்து எனப்படும்... (தொ. அ. 12)*

**அழுங்கல்:** → கம்பலை

**அழுங்கு:** *துன்புறல், உழத்தல்; பாலையாழ்த் திறம் இருபதுள் ஒன்று.*
திராடம் அழுங்கு தனாசி... இருபதும் பாலை யாழ்த்திறம் என்ப.
(பிங்க. 1381)

**அழுத்தம்:** செறிவு (Density). *இசை ஒலிக்கு உரிய 1) நீட்சி* (Duration) *2) செறிவு* (Density) *3) தரம்* (Pitch) *4) துடிப்பு (சுதி) அளவு* (vibration value) என்னும் நான்கு இயல்புகளுள் செறிவு என்பது அழுத்தம். பாடலுக்கு அடிப்படையாய் நிற்கும் ஒரு கட்டைச் சுருதிக்கு ஒலிக்கும் வீணை நரம்பின் ஒலியினும், அதே சுருதிக்கு ஒலிக்கும் புல்லாங்குழலின்ஒலி, செறிவு மிக்கது. ஆனால் இரண்டும் ஒரு கட்டைச் சுதிக்கு ஒலிப்பனவே.
← *த. க. க. 91/I*

**அழுந்துபடுதல்:** *அடிப்படுதல், தொன்று தொட்டு வருதல்.*
அழுந்து பட்டிருந்த பெரும்பாண் இருக்கையும் (மதுரைக். 342)
'நெடுங்காலம் அடிப்பட்டிருந்த பெரிய பாண் சாதியின் குடியிருப்பினையும்' (மேலது, நச்சர்.)

**அழுவம்:** *முரசு, பறை, கடல்.*
திண்டியொடு அழுவம் ஆர்ப்ப (திருக்கோவ. பு. 14: 230)
← *பெ. அ. 463/I*

**அள்ளல்:** நெருக்கம், (crowdedness, closeness).
*அள்ளுதல் - அடர்த்தியாதல்* (to be dense, thickly interwoven). *வார்தல், வடித்தல் முதலிய எட்டுவகை இசைக்கரணத்துள் ஒன்று. மிக விரைவில் பல சுரங்களை ஒன்றுகூட்டி அள்ளி ஒலித்தல் அள்ளல் ஆகும்.*
சீருடன் உருட்டல் தெருட்டல் அள்ளல் (சிலப். 7:13)
ஒலியின் செறிவு அல்லது அடர்த்தியே அள்ளல் எனப்பட்டது(ப. இ. இ. 223)
← *த. க. க. 91/I*

**அளக்குநர்:** *நாழிகை அளந்து சொல்லும் கணக்கர். இவர்கள் இசையுடன் நாழிகைக் கணக்கை அறிவிப்பர்.*
பெரும்பகல் நாழிகை பிழையாது அளக்குநர் (பெருங். 1: 57: 79)

**அளக்கை (அழக்கை):** = அளகம், அளகச்சாலி, திரள்சாலி, அலங்காரச் சாலி. அலங்கார அளகம். *மத்தளமுழக்கு முறைகளுள் ஒன்று.*
சாயாமல்... எவ்விடமும் ஆனது அளகமாம் (மத்த.72)
ஆய்ந்த அழகம் அருங்காத்திரம்... (பஞ்ச.122)

**அளகச் சாலி:** → அளக்கை

**அளகம்:** → அலக்கை

**அளத்தல்:** *தாளம் போடுதல்.*
நித்தம் திகழும் நேர் இறை முன் கையால்
அத்தக அரிவையர் அளத்தல் காண்மின் (பரிபா. 12: 43 – 4)

**அளத்தி:** *நெய்தல் நிலப்பெண்* (Woman of maritime tract). *அளம் (உப்பளம்) - நெய்தல் நிலம்.*

**அளபிறந்துஉயிர்த்தல்:** *அளபிறந்து இசைத்தல். இசைநிறைக்க உயிர் ஒலிகள் நீண்டு வருவது; உயிர் எழுத்துக்கள் தமக்குரிய மாத்திரையின் அளவினைக் கடந்து ஒலித்தல்.* (Lengthening of a vowel sound in music).
ஓரளபு இசைக்கும் குற்றெழுத்தென்ப (தொ. எ. 3)
ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து என்ப (தொ. எ. 4)
*இந்த அளவினைக் கடந்து கூடுதலாக இசையில் நீண்டு ஒலித்தலே அளபிறந்து உயிர்த்தல்*
அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும் (தொ. எ. 33)
நீட்டம் வேண்டின் அவ்வளபு உடைய
கூட்டி எழுஉதல் என்மனார் புலவர் (தொ. எ. 6)

...இந்நீட்சிக்கு வரையறையில்லை. பண்களை இசைக்குங்கால் இந்நீட்சி நிகழும்... இந்நீட்சி விளித்தற் கண்ணும் இசைநூற்கண்ணும் நீளும் என்பது இளம்பூரணம்.

...செய்யுளை ஓதும்போது ஏற்படும் ஒலி அழுத்தத்தால் இதனை உணரமுடியும் என்பது நச்சினார்க்கினியம்.

ஏஎஎ வம்பன் மொழிந்தனள் (தொ. சொ. 405 இளம்.)
தூஉஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்தது கொல்
பா அஅய்ப் பகல்செய்வான் பாம்பின் வாய்ப்பட்டான் கொல்
மாஅ மிசையான் கோன் நன்னன் நறு நுதலார்
மாஅமை எல்லாம் பசப்பு
(மலைபடு. இறுதியின்கண் உள்ள வெண்பா)
ஏஎ ஒஒ என விளி ஏற்பிக்க
ஏஎ ஒஒ என்றேலா அவ்விளி
அவ்விசை முளை யேற்றழைப்ப, அழைத்துழி (பரிபா. 19: 61 – 3)
ஆவியும் ஒற்றும் அளபிறந்து இசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற்று ஆதியில் (நன். 102)

← தொ. க. க. 40; → அளபெடை

**அளபெடை:** அளபெடுத்தல், எழுத்து மாத்திரை மிக்கொலித்தல், (Elongation, to lengthen the sound of a letter) மாத்திரை குறையின் சீர்குன்றித் தளை கெட நின்ற வழி யாப்பு அழியாமைப் பொருட்டு நெட்டுயிர் ஆறும் (ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ ), மெய் (எழுத்துக்கள்) ங், ஞ், ண், ந், ம், ன், வ், ய், ல், ள் என்னும் பத்தும் ஆய்தமும் தம் மாத்திரையில் நீண்டு ஒலித்தல் அளபெடையாம் (த. இ. பே. 53/ 14)

↑ வல்லின மெய்களான க், ச், ட், த், ப், ற் என்பன வெடிப்பொலியாகவும் (plosives) நிறுத்தொலியாகவும் (stops, Pure mutes) இருப்பதாலும், மேலும் இடையின மெய்களான 'ர்' மற்றும் 'ழ்' ஆகியனவும் அளபெடுப்பதில்லை.

இவை உயிரளபெடை, ஒற்றளபெடை என இரண்டு வகைப்படும். இசைத்தமிழிலும் இவ்வளபெடை இசை நீட்டத்திற்காகப் பயன்படுகிறது. அது இசையளபெடையாகும். சொற்களில் இசை குறையும்போது அளபெடை என்ற முறை தழுவப் படுகிறது. இக்குறை ஏற்படின் அச்சொல்லிலுள்ள நெட்டெழுத்து நீண்டு ஒலிக்கிறது.

சிறாஅஅர்! துடியர்! பாடுவல் மகா அஅர் (புறம். 291)

← 'இசைகெடின்' மற்றும் ங ஞ ண... என்ற நன்னூல் நூ. 91 - 92

**அளபெடைவண்ணம்:** அளபெடை மிகுதி யாக வரும் வண்ணப்பாடல்; (Rhythm produced by using frequently the lengthened letter known as 'alapetai')

அளபெடை வண்ணம் அளபெடை பயிலும் (தொ. பொ. 520)
அளபெடை பயின்று வருவது அளபெடை வண்ணமாம் என்றவாறு (தொ. பொ. 520, இளம்.)

இது தொல்காப்பியர் கூறும் இருபது வண்ணங் களுள் ஒன்று. பாடல்களில் உயிரளபெடை, ஒற்றளபெடை பயின்று வரப்பாடுவது.

உயிரளபெடை: 'மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்'
ஒற்றளபெடை: 'கண்ண் டண்ண் ணெனக் கண்டும் கேட்டும்' (மலை. 352)

அளபெடை கொண்ட சொல்: தழூஉ - துணங்கை.

**அளவடி:** = நாற்சீரடி, நேரடி, (line of 4 metrical feet)
நாற்சீர் கொண்ட அடி அளவடி எனப்படும்; நேரடி என்பதும் அது. (த. இ. பே. 59, 14)

← யா. கா. உறுப்பு 12 உரை.

**அளவடி விருத்தம்:** கலி விருத்தம்; நாற்சீர் நாலடியால் வருவதால் இப்பெயர் பெற்றது (யா. கா. 13; செய்யுள்)

**அளவழிச் சந்தம்:** அளவு + அழி + சந்தம். தனித்தனியே 4 எழுத்துச் சிறுமையும் 26 எழுத்துப் பெருமையும் பெற்று எழுத்தளவு ஒத்தனவாய்க் குருவும் இலகுவும் ஒவ்வாத அடிகளால் வரும் செய்யுள்.

← யா. வி. 95

**அளவழித் தாண்டகம்:** 27 எழுத்து முதலாக வந்து அளவு ஒவ்வாத அடிகளுடைய செய்யுள் (யா.வி. 95)

**அளவியல் தாண்டகம்:** 27 எழுத்து முதலாக வரும் அளவொத்த அடிகளுடைய செய்யுள்(யா. வி. 95)

← சீவக. நச்சர்.

**அளவியற் சந்தம்:** 4 முதல் 26 எழுத்துவரை அளவொத்து வரும் அடிகளுடைய செய்யுள் (யா. வி. 95)

← சீவக. நச்சர்.

**அளவு:**

1. தாளவகையுள் ஒன்று.

கொட்டும் அசையும் தூக்கும் அளவும் ஒட்டப் புணர்ப்பது பாணியாகும் (சிலப். 3: 16. அடியார்க்.)

இதன் அளவு 3 மாத்திரை; வடிவு : ஃ

அளவாவது தாக்கின ஓசை நேரே மூன்று மாத்திரை பெறுமளவும்... (சிலப். 14: 150. அடியார்க்.)

இச்சொல் தாளத்தின் காலத்தை அளப்பதைக் குறிப்பதால் 'அளவு' எனப் பெயர் பெற்றது.

2. மாத்திரை (unit)

எழுத்து ஒலிக்கும் காலஅளவு; (The measurement of time of a letter for its articulation).

மெய்யின் அளபே அரையென மொழிப (தொ. எ. 11)
மூவளவு இசைத்தல்... (தொ. எ. 5)
மூன்று மாத்திரையாக ஒலித்தல் (மேலது. இளம்.)
அளவு என்பது தொல்காப்பியத்தில் 'மாத்திரை' என்பதைவிட விரிந்த பொருள் தன்மை உடையது (தொ.க.க. 40)

3. அளபெடை

அளவு எனினும் அளபெடை எனினும் புலுதம் எனினும் ஒக்கும் (யா. கா. 1)

4, நான்கு என்பதைக் குறிப்பது
எடு:- அளவடி - நான்கடி
← செ. ப. அ. 169; பெ. அ. 471/I; தொ. க. க. 40

**அளவு நிரம்ப நிறுத்தல்:** வாரநடையில் நான்கு சுரங்கள் ஒலித்தன என்றால் அதற்குரிய கூடைநடையில் எட்டுச் சுரமும் திரள் நடையில் பதினாறு சுரமும் என இரட்டித்துச் செல்லும் இந்த அளவில் சுரங்களைக் கால அளவுக்குள் நிரப்பிப் பாடுதல் அளவு நிரம்ப நிறுத்தல்.
. . . அளவு நிரம்ப நிறுத்த வல்லனாயென்க (சிலப். 3: 67அடி.)
← த. க. க 93/I

**அளவெண்:** = பேரெண், இடையெண், சிற்றெண், அம்போதரங்க உறுப்பு.
நாற்சீர் ஓரடியாய் வரும் கலிப்பாவின் அம்போதரங்க உறுப்பு. அவற்றைப் பேரெண், அளவெண், இடை யெண், சிற்றெண் என்று பெயரிட்டு வழங்குவாரும் உளர் (யா. கா. 31– 38)

**அளிக்கை:** = ஆற்றுகை, நிகழ்த்துகை (performance)

**அற்புத அவிநயம்:** ஆடலில் வியப்பைக் காட்டும் மெய்ப்பாட்டுத் தொழில்.
அற்புத அவிநய மறிவரக் கிளப்பின்
சொற்சோர் உடையது சோர்ந்த கையது
மெய்ம்மயிர் குளிர்ப்பது வியத்தக வுடைய
தெய்திய திமைத்தலும் விழித்தலு மிகவாதென்
றையமில் புலவ ரன்றந் தனரென்ப (சிலப். 3. 13 அடியார்க். மேற்.)

**அற்புதக் கண்:** அவிநயக் கண்வகை, வியப்பைக் காட்டும் உருள்கின்ற கண் அவிநயம் ( Rolling eyes of a dancer indicating wonder)
← பரத. பாவ. 95; செ. ப. அ. 172

**அறக்கலம்:** சிலம்பு → அகி

**அறப்பாடல்:** அற்றுப்போகச் செய்யும்பாடல்.
கேடு விளைவிக்கும் சொல் பயின்றுவரும் பாட்டு. புலவர்கள் சிலர் அறம் பாடி கேடு விளைவிப்பதாக அச்சுறுத்துவர் (பே. வ)
← பெ. அ. 491/I

**அறல்:** தாள அறுதி; தாள வரையறுப்பு.

**அறவாழிக்கை:** நடனத்திற்கு உரிய இணைக்கை வகை அமைதி (சி. செ. 43)
← பெ. அ. 493/I

**அறற்குழல்:** ஏழிசை நரம்பிக்குரிய ஒத்து (சுருதி) அளவில் ஏழு சுரங்களும் ஒலிக்குமாறு இடைவெளிகளை வரையறுத்துத் துளைகள் இடப்பட்ட குழல்.
அறற்குழல் பாணி தூங்கியரொடு (சிறுபாண். 162)
அறல் - வரையறல்.
← த. க. க. 95/I

**அறிமுகதரு:** → பிரவேசதரு, வருகைதரு

**அறிவன்:**
1. அறிந்து சொல்லும் வேலன்; வெறியாட்டாளன்
அன்னை தந்தது ஆகுவது அறிவன் (ஐங். 247: 1)
2. கணி, கணியன்
நெறி அறி செறிகுறி புரி திரிபு அறியா அறிவன் (கலித். 39: 46)

**அறிவன் நாள்:** முரசு நாள் (உத்திரட்டாதி)
முரசுபிற் கொழுங்கோல் மன்னன்...
அறிவன் நாள் உத்திரட்டாதி (பிங்க.264)

**அறு:** இடைவிடுதல்.
அகைப்பு வண்ணம் அறுத்தறுத்து ஒழுகும் (தொ. பொ. 530. இளம்.)

**அறுகரணம்:** ஒன்றைப் போலவே ஒலித்தல்.
செந்தீக் கருந்துளைய தீங்குழல் யாழ் தேம் தேம் என்னும் மணிமுழவமும்
தந்தாங் கிளையார் மெல்விரல்கள் ஈண்டத் தாம் தாம் என்றிரங்கு தண்ணுமைகளும்
(சீவக. 292: 1 – 2)
முழவம் – தேம் தேம் என்றொலித்தது
தண்ணுமை – தாம் தாம் என்றொலித்தது
தேம் தேம், தாம் தாம் – அறுகரணம் (மேலது. நச்சர்)

**அறுசரம்:** ஆறு தந்திகள் கொண்ட இசைக்கருவி
தந்திரி... அறுசரம்... யாழின் பெயரே (திவா.1245)

**அறுத்து இசைப்பு:** வேற்றிசை (Rhythm) கலந்து வரும் ஒருவகை யாப்பு வழு (யா. வி. 95)

**அறுதி:** தாளத்தின் முடிவுப்பகுதி; பாடல் அடிகளின் ஈற்றில் முழக்குவது, (அறுதி - முடிவு, கடைசி)
1. முழக்குச் சொற்கட்டுகளைத் 'தகதின, தகதின, தகதின' என்பது போன்று முழக்கிச் செல்லுங்கால் (ஆவர்த்தன) தாளமுடிவைக் காட்ட முழக்கப்படும் சொற்கட்டு என்பது அறுதி. அறுதி இருவகைப் படும்:அக அறுதி, புறஅறுதி.
2. கீர்த்தனையின் பல்லவி அமைப்பில் தொடக்கம், நடை, துள்ளல், அறுதி, அறுதிவீழ்ச்சி,(பதகர்ப்

பவீழ்ச்சி) விட்டிசை, தனிச்சொல் என்னும் பகுப்புக்கள் உண்டு. தனிச்சொல்லுக்கு முன்னர் ஒருநெட்டிசை உண்டு. இந்த நெட்டிசைக்கு முன்னர் வரும் சொல் அமைப்புக்கு அறுதி என்று பெயர்.

**அறுதியில் எடுப்பு:** ஒரு பாடல் முன்னெடுப்பாக இருந்தால் முந்திய ஆவர்த்தனத்தின் முடிவில் எடுக்கப்படுவதாகக் கொள்ளலாம். இதுவே அறுதியில் எடுப்பு. ← தெ. இ. அ. 28/I

**அறுபத்துநாலு கலை:** அறுபத்து நான்கு கலைகளையும் அறிந்தவராகக் கணிகையர் சிறந்துள்ளனர்.

எண்ணெண் கலையு மிசைந்துடன் போகப் (சிலப். 8: 64)
எண்ணெண் கலையோர் இருபெரு வீதியும் (சிலப். 14: 167)
எண்ணாண் கிரட்டி யிருங்கலை பயின்ற (சிலப். 22: 138)

**அறுபதம்:** =ஆறுபதம்.
ஆறுகால்களையுடைய வண்டு, (beetle, as six footed). பாதம் முதற் குறையாகி பதம் ஆகியது.
ஒப்பு: பதம் - நாட்டியப் பதம் - நாட்டியப்பாதம்
மதுநுகர் அறுபத முரல (தேவா. 568:5)

**அறுமுகத்தோன் ஆடல்:** = குடைக்கூத்து.
கந்தனாடியகுடையாடல்இதுபதினோராடல்களுளொன்று.
'கடையம் அயிராணி மரக்கால் விந்தை கந்தன்குடை...'
(சிலப். 3: 14அடியார்க்.)
'அறுமுகத்தோன் ஆடல் குடை மற்றதற்குப் பெறும் உறுப்பு நான்கா மெனல்' (மேலது)
'... முருகன் தன்குடையை முன்னே சாய்த்து அதுவே ஒருமுக எழினியாக நின்றாடிய குடைக்கூத்தும்' (சிலப். 6: 52 – 3 அடியார்க்.)

**அறுவகைத்தேவதாசியர்:** கோவில் பணிபுரியும் ஆறுவகைப்பட்ட தேவரடியார்.
1. பதியிலார் - பழமையான உயர்வகைத் தேவதாசியர்
2. ஈசான பத்தினியர் - ஈசான தெய்வமான சிவன் மனைவியர்.
3. தேவரடியார் - இறை அடிமையர்.
4. தத்தை (tattai) - தாசியாகக் கோவிலுக்கு வழங்கப்பட்டவர்.
5. அலங்காரதாசி - அணி - (அழகு) யுடைய தாசி
6. உருத்திர கணிகை - சிவன் கோயில் தாசி.
(தகவல்: பி. ஆர். திலகம் - நி. சு. 183)

**அறுவகை நிலை:** கூத்தின் நிலைகள். 1) வைணவம் 2) சமநிலை 3) வைசாகம் 4) மண்டலம் 5) ஆலீடம் 6) பிரத்தியாலீடம்
'... அறுவகை நிலையும்...' (சிலப். 3:12. அடியார்க்.மேற்.)
(நிலை _ pose)

**அறுவடைப் பாடல்:** கதிர் முற்றி அறுத்துக் களத்திற்கு வரும்போது பாடும் பாடல்.

**அறைதல்:**
1. பறை முதலியன கொட்டுதல் (to beat).
விழுக்கடிப்பு அறைந்த முழுக்குரல் முரசம் (புறம். 366: 1)
நாதப்பறை அறைமின் (திருவா. 46: 1)
அறை பறை யன்னர் கயவர் (குறள். 1076)

2. ஒலித்தல், கூவுதல்
செங்கண் இருங்குயில் அறையும் பொழுதே (ஐங். 346)
அறைகழல் அரசர் (கலித். 265)

3. உரக்கச் சொல்லுதல்
கணியாது முழுதுணர்ந்த கடவுளென்று அறையுமே (சூளா. 182)

**அறைந்து:** பறை சாற்றி, பறை அறைந்து.
இவர்களுக் கறைந் தாழி போக - EI, XXXVi, 20.
← த. க. சொ. 40/I

**அறைபறை:** மன்னரின் ஆணையைப் பறை அறைந்து அறிவித்தல்.
அறைபறை யெழுந்த பின் அரிமான் ஏந்திய (சிலப். 26: 1)

**அன்னப் பறை:** வரிக்கூத்துள் ஒன்று.
சிந்துப்பிழுக்கை... அன்னப்பறை... கோத்தவரிக் கூத்தின் குலம்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**அன்ன அலகுக்கை:** → அன்னவாய்க்கை

**அன்னநடை நடனம்:** = கம்சபதம்.
அன்னம்போல் நடையிட்டு ஆடும் நடனம்.
(கம்சம் - அன்னம்)

**அன்ன பக்கம்:** நாட்டியத்தில் அவிநயம் காட்டும் பெண்கை வகை.
'கடகம் சுகதுண்டம்... அன்னபக்கம்... இன்ன எட்டும் பெண்ணாகுமே' (சிலப். 3: 18 அடிக். ; சுத்தாந்தப் பிரகாசம்)

**அன்ன முகக்கை:** → அன்னவாய்க்கை

**அன்னமுரசு:** சோறு அளிக்க அழைக்கும் பறை

**அன்னவாய்க்கை:**=அன்னஅலகுக்கை, அன்ன முகக்கை(ஹம்ஸாஸ்யம்)
அன்னப் பறவையின் வாய் போன்று அமைத்து மெய்ப் பாடு வெளிப்படுத்தும் கைவகை. பெருவிரல், சுட்டுவிரல், நடுவிரல்களைச் சேர்த்து மோதிரவிரல் சுண்டுவிரல்களை விரித்து மேல் நோக்கிப் பிடிப்பது.

(பரத. 1: 34 உரை)
← பெ. அ. 525; செ. ப. அ. 186

**அன்னியசுரம்:** = வேற்றுவரவுச் சுரம், இடைப்பிறவரல் கோவை, வேற்றுவிரவல் சுரம், அயல் விரவல், (Accidental note, visiting note)
பாடும்போது, ஒரு பண்ணுக்கு உரிமையில்லாத வேற்றுச் சுரம் வருதல் உண்டு. இவ்வேற்றுச் சுரமே அன்னிய சுரம்.
**வேறுசில விரவின** (சிலப். 8: 43 – 4அரும்)
இவ்வாறு அன்னிய சுரம் வரும்பண் 'பிறவரல்பண்' (பாசாங்கம்) எனப்படும்.
எடு:- காம்போதியில் 'வன்தாரம்' (காகலி நிசாதம்) அயல்விரவு சுரம். காம்போதிப்பண் அரிகாம்போதி என்ற பெரும்பண்ணின் திறப்பண். அரிகாம்போதிக்கு உரிமையான சுரம் 'மென்தாரம்' (கைசகி நிசாதம்)
← த. க. க 98/I, → அயல்கோவை.

**அன்னிய ராகக்காகு:** → அயல்பண் விரவு

**அன்னிய ஸ்தான சுரம்:** → பிறநிலக் கோவை

**அனந்தல்:** மந்தமான ஓசை
**உன்மகள்தான் ஊமையோ அன்றிச் செவிடோ அனந்தலோ** (திருப்பாவை. 9: 482)
**எடுத்து எறி அனந்தல் பறைச்சீர் தூங்க** (புறம். 62: 5)
← ச. பொ. 143/I
**ஆற்ற அனந்தலுடையாய் அருங்கலமே** (திருப்பாவை. 10: 483)

**அனந்தல் பறை:** சாப்பறை
**எடுத்து எறி அனந்தல் பறைச்சீர் தூங்க** (புறம். 62: 5)

**அனாகத எடுப்பு:** → முன் எடுப்பு

**அனாவிதம்:** யாழ் வகையுள் ஒன்று. (பரத. ஒழிபி. 15)

**அனு:** வழி, துணை, சிறியது, இணை
வடமொழியில் பெயர்ச்சொல் அல்லது வினைச் சொல்லுக்கு முன்னர் இடப்படுகின்ற முன்னொட்டு (ச. அ). அல் - அன் - அனு - உடன் (தே.நே. 247,V)
எடு:- அனுபல்லவி, அனுசுரம் (அநுஸ்வரம், அநுராதா)
அனுபல்லவி - பல்லவியின் கூடவருவது - துணைப்பல்லவி.
← பெ. அ. 547/I

**அனு எழுத்து:** மோனை எழுத்து,( Alliterative or monai letter). பாடலின் முதல் எழுத்து (ஒன்றி வருவது மோனைத்தொடை)
முகம் > முகனை > மோனை

**அனுக்கம்:** கம்பித இசை, (Embellishment in singing) நுண் சுரங்களை அமைத்துப் பாடுதல்
அனு - சிறியது, நுண்ணியது
← செ. ப. அ. 192

**அனுக்கல்:** வடுகுக் கூத்திற்குரிய 14 கால்களில் பத்தாவது கால் (சிலப். 3: 14; உ. வே. சா. அடிக்.)

**அனுக்கிரக தாண்டவம்:** → ஊர்த்துவ தாண்டவம்

**அனுக்கு சிரம்:** சிர அபிநய வகை (பரத. பாவ. 78)
← செ. ப. அ. 192

**அனுகரணம்:** ஓர் ஒலியை நீட்டி ஒலிக்கும் செய்கை.
**பண்டமாற்றின் கண்ணும் விளித்தற் கண்ணும் அளபெடை அனுகரணங்கள் வந்து** (யா. வி. 4. உரை)

**அனுசாரணி:** → அனுசாரணை

**அனுசாரணை:** = அனுசாரணி
யாழின் பக்க நரம்புகளுள் ஒன்று. சாரணி நரம்புக்கு அடுத்தது அனுசாரணி நரம்பு.
← த. க. க. 99/I

**அனுசுரம்:** ஒரு பண்ணின் சாயலை நன்கு வெளிப்படுத்து வதற்காக பண்ணின் ஒரு சுரத்தைப் பாடும்போது அதன் கீழ் அல்லது மேல் சுரத்தைத் தொட்டுப் பாடுவது.
அனு - துணை, சிறியது, தொடர்வது, அடுத்துவருவது

**அனுசுருதி:** இணை சுருதி.
← சீவக. 657. உரை

**அனுத்திர பஞ்சமம்:** குறிஞ்சி யாழ்த் திறனில் ஆறாம் திறனின் முதற் பிரிவாகிய அகநிலையில் உள்ள 57 என்ற எண் கொண்ட பண்.
**நட்டபாடை... அனுத்திர பஞ்சமம்... இவை முப்பத் திரண்டும் குறிஞ்சி யாழ்த்திறமாகக் கூறுவர்** (பிங்க. 1382)
→ அயிர்ப்பு

**அனுதாளம்:** இணைதாளம்.
தாள வகை (பரத. தாள. 4)

**அனுதுரிதம்:** → அரைத்துரிதம்; துணைதுரிதம்

**அனுத்ருதம்:** → அரைத்துரிதம்

**அனுதுருதம்:** = அனுதுரிதம், அரைத்துரிதம்
ஓர் எழுத்தளவு (அட்சரம்) கொண்ட தாள உறுப்பு வகை. ஒரு தட்டு (beat) மட்டும் கொண்டது.
*இதனடையாளம் அரைவட்டம், அரைப்பிறை (◡),*
*← பரத. தாள. 35*

**அனுபல்லவி:** =தொடுப்பு, துணைப்பல்லவி, உபபல்லவி.
*கீர்த்தனையின் இரண்டாம் உறுப்பு. அனுபல்லவி பாடுவது மேல்தானத்தில் அமைந்து வரும்.*
*அனு - அடுத்து வருவது, தொடர்வது*

**அனுபாவம்:** *இணை பாவனை.*
1. *அவிநயம்* (நா. தீ. 435)
2. *உள்ளத்து உணர்வுகளை மெய்ப்பாட்டால் பிறருக்கு உணர்த்துவது.*

*← பெ. அ. 556/I*

**அனுமதம்:** *யாழ் வகையுள் ஒன்று* (பரத. ஒழிபி. 15)
*← செ. ப. அ. 195*

**அனுமந்திரம்:** *யாழில் மந்தரத் தந்திக்குத் துணையாயுள்ள நரம்பு*

**அனுமோனை:** இன எழுத்தால் வரும் மோனைத் தொடை.
*← செ. ப. அ. 196*

**அனுலோமம்:** *இசையின் கால அளவை வகை,* (a time measure)

**அனுவாதி சுரம்:** = *நட்புச் சுரம்; இணக்கமுள்ள சுரம்* (A subsidiary note that harmonises with the chief note; Major 3rd)
*← செ. ப. அ. 196*

**அனைத்து உள்ளோசைப் பண்:** = சர்வசுர ரக்தி ராகம், சர்வசுர கமக வரிக ராகம், முக்தாங்க ராகம். *ஒரு பண்ணின் கோவைகள் அனைத்தும் உள்ளோசை (கமகம்) பெற்று வரும் பண்.*
*எடு:- 1. பாலைப்பாணி (சுத்த சாவேரி)*
*2. முல்லைப் பாணி (மோகனம்)*
*3. மேற்செம்பாலை (கல்யாணி)*
*← த வ. 96*

**அனைத்துக்கோவை மாறுமுதல் பண்:**
**→அனைத்துச்சுரப் பெயர்ப்புப்பண்**

**அனைத்துச் சுரப் பெயர்ப்புப் பண்:**
=அனைத்துக் கோவை மாறுமுதல் பண், சர்வசுர மூர்ச்சனக்கார ராகம்.
*பண் பெயர்ப்பில் ஒரு பண்ணின் அனைத்துச் சுரங்களும் பிற பண்களைத் தோற்றுவித்தால், அப்பண் அனைத்துச் சுரப் பெயர்ப்புப் பண்.*
*எடு:- முல்லைக்குழல் (மோகனம்) - ச ரி$^2$ க$^2$ ப த$^2$*
*இதன் பண் பெயர்ப்பில் கீழ்க்காணும் பிற பண்கள் உருவாகின்றன.*

| | |
|---|---|
| *ரி$^2$ முதல்* | *குறிஞ்சிப்பாணி (மத்தியமாவதி)* |
| *க$^2$ முதல்* | *நெய்தற்பாணி (இந்தளம்)* |
| *ப முதல்* | *பாலைப்பாணி (சுத்தசாவேரி)* |
| *த$^2$ முதல்* | *மருதப்பாணி (சுத்த தன்யாசி)* |

*எனவே முல்லைப்பாணி அனைத்துச் சுரப் பெயர்ப்புப் பண்.*

# ஆ

**ஆ:** *'அ' என்ற அகரம் 'ஆ' என்ற ஆகாரத்தின் குறுக்கம். உயிரொலிகள் எல்லாம் இயற்கையாக நெடிலாகவே தோன்றிப் பிறகு குறுகின.*

← *தே.நே. 132/I*

↑ மேற்கண்ட கூற்று இசையிலிருந்தே இயல்(மொழி) தோன்றியதற்கான ஒரு சான்றாகும்.

**ஆ:** 1. குரல் சுரத்தின் ஒலிக்குறியீடு 'ஆ'

ஆஈ... ஏழும் ஏழிசைக்கெய்தும் அக்கரங்கள் (திவா. 1884)

(Symbol representing the first note of the gamut) -'*ச*'

2. *இசை*

3. *ஆச்சாமரம்* (Ebony)

*இம்மரம் உறுதிமிக்கதால் புல்லாங்குழல், நாகசுரம் செய்வதற்கு ஏற்றது.*

ஆவே, ஆச்சா, (திவா. 632)

ஆவென்பது இரக்கம் பெற்றம் ஆச்சாவோடு இசைவிப்பாம் (சூடா. 11: 13)

← *த க. க. 105/I*

**ஆக்கல்:** *தாளம் தவறி முழக்குதல்மற்றும் வேற்றுத் தாளத்திற்கு முழக்குதல் முதலிய குறைகளை அகற்றி நிறைவு செய்தல்.*

ஆக்கலும் அடக்கலும், மீத்திறம் படாமை (சிலப். 3: 53)

**ஆக்காட்டிப் பாட்டு:**

*கூடுகட்டி வாழாத கணந்துள்* (நற். 212; குறுந். 358) *என்ற பறவையே ஆக்காட்டி (ஆட்காட்டி)ப் பறவை. பாறைப்பொந்து இடுக்குகளில் வாழும் இயல் புள்ளன. அவை பற்றிய பாடல் ஆக்காட்டிப் பாட்டு. ஆக்காட்டி - கணந்துள், புள்ளு*

நெடுங்காற் கணந்துள் ஆள் அறி உறீஇ (குறுந். 350: 5)

உள்ளும் ஊரலும் புள்ளும் புதாவும் (சிலப். 10: 117)

எடு:- ஆக்காட்டி ஆக்காட்டி ஆவாரம்பூ ஆக்காட்டி
எங்கங்கே முட்டை வைத்தாய் ?
கல்லைத் திறந்து கருங்காட்டுப் பாறையிலே
இட்டது நாலு முட்டை
பொரித்தது மூணுகுஞ்சு...

*(கொங்கு மாடு மேய்க்கும் சிறுவன் பாடியது; பெரியசாமித் தூரன் தொகுப்பு. த. இ. நா. ப. 114)*

← *த. ப. வ. 511-12/III*

**ஆகண உழை:** *மெல் உழை (சுத்த மத்திமம்)* 'F'

← *தே.நே. 215/V*

**ஆகணக் கைக்கிளை:** *மென் கைக்கிளை (சாதாரண காந்தாரம்) - 'க*[1]*'* *(க. அ.)*

**ஆகணம்:** = அந்தரம்

*அரைச்சுரம்,* (semitone)

*அந்தரம் ஐந்து - ரி*[1] *க*[1] *ம*[2] *த*[1] *நி*[2]

*தமிழிசையின் அடிப்படைப் பாலையான முல்லை (முல்லை யாழ், செம்பாலை) என்ற அரிகாம் போதிக்கு வராத மேற்கண்ட ஐந்து சுரங்களும் அந்தர சுரங்கள்*

← *தேவ. 118/II*

**ஆகதம்:**

1. பத்து வகை உள்ளோசை(கமகம்)களுள் ஒன்று (ம. சூ. 4: 71)

2. இசைக்கருவி (ச. அ.)

← *செ. ப. அ. 203*

**ஆகம்:** *பறை* *(க. அ)*

**ஆகம்பித சிரம்:**

ஒப்புதல் காட்டும் தலை அபிநய வகை (பரத. 1: 71)

← *செ. ப. அ. 203 - 4*

**ஆகரி:** *மருத யாழின் புறநிலைப் பண்*

மருதத்திற்குப் புறம் ஆகரி (சிலப். 14: 160–67அடியார்க்.)

செம்பாலையுள் பிறக்கும் பண்கள் பாலையாழ்... ஆகரி ... தோடி... உதயகிரி என இவை (மேலது. 8: 35அடியார்க்.)

யாமத்துரிமை ஆகரி பாடலே (தொ. வி)

← *பரத. ராக. 75*

**ஆகற்பம்:** *ஒப்பனை, உடை* *(க. அ.)*

**ஆகாச கம்பிதம்:** *மூவகைத் திறத்தில் ஒன்றாகிய சாளவத்தை ஏந்திசையாகப் பாடும்முறை (பஞ்ச. 47. உரை)*

**ஆகாரிக அவிநயம்:** *உடையாலும், நகை முதலிய ஒப்பனைகளாலும் செய்யப்படும் அவிநயம்.*
← *த. க. க 187/III*

**ஆகாய சாரி:** → வான்சாரி

**ஆகிரி:** = ஆசாரி. *விளரிப்பண்ணின் திறம்.*
அனுமத்தோடி மேளத்தில் ஆகிய ஆகிரி (ம. சூ. 4: 151)
ஆசாரி –ஆகிரியின் திரிந்த வடிவம் (பஞ்ச. உரை. 54)

**ஆகிரி நாட்டை:** *பண்களில் ஒன்று (பரத. ராக.102)*
தீரசங்கராபரணத்து ஆகிய ஆகிரி நாட்டை (ம. சூ. 4: 188)

**ஆகிருதி:** *அடிதோறும் ஒற்றுநீக்கிய 22 உயிர் எழுத்துக் கொண்ட நான்கடியை உடையதாய் வரும் சந்தப்பாடல்*
← *வீர. யா. 33*

**ஆகுதி:** =ஆகுளி. *ஒருவகைச் சிறுபறை.*
தொண்டக மொந்தை துடி ஆகுதி (குரு. தூது. 114)
← *பெ. அ. 29/II; செ ப. அ. பிற் 96*

**ஆகுளி:** *சங்ககாலச் சிறுபறை.*
... நுண்ணீர் ஆகுளி இரட்ட (மதுரைக். 606)
*(இரட்ட = ஒலிக்க)*
மெல்லிய நீர்மையினையுடைய சிறுபறை ஒலிப்ப (மேலது. நச்சர்.)
நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கி (புறம். 64: 1)
இடக்கையின்... ஆகுளி சிறுபறைப்போர் (சூடா. 7: 39)
ஆகுளி சிறுபறை (திவா. 1233)

**ஆகோட்பறை:** = தொண்டகப்பறை.
*ஆ + கோள் + பறை; கொள் > கோள்;*
*ஒப்பு:- கால்கோள்*
*பசுக்களைக் கொள்வோர் அதன் அடையாளமாக முழக்கும் பறைக்கருவி*
தொண்டகப்பறை துடியொடு ஆர்த்தெழ (சீவக. 418: 2)

**ஆங்கிகாபிநயம்:** → உடல் அவிநயம்

**ஆஞ்சி:**
1. *கூத்து* (அ. நி)
2. *வெறியாட்டு*
ஆஞ்சியே வெறியாட்டு ஏலம் சோம்பலோ டலையல் நாற்பேர் (நா. தீ. 179)
3. *விளையாட்டு* (ம. அ.)
← *பெ அ. 56/II*

**ஆச்சாமரம்:** → ஆ

**ஆசாரி** → ஆகிரி

**ஆசான்:** = ஆசான் திறம்
*ஒரு பண்ணியல், அதாவது 6 சுரப்பண் (சாடவம்).*
ஆசான் திறத்தின் அமைவரக் கேட்டு (சிலப். 13: 112)
ஆசான் என்னும் பண்ணியலாகிய... (மேலது. அடியார்க்.)
ஆசான் திறம் – காந்தாரம் (மேலது. அரும்.)
ஆசான் திறத்தின் (13: 112) என்பதனால் காந்தார பஞ்சமும் கூறினார் (அடியார்க். பதிகம்)
அராகம், நேர்திறம், உறுப்பு, குறுங்கலி, ஆசான் ஐந்தும் பாலையாழ்த் திறனே (பிங்க. 1376)
குரற்குரிய திறம் ஆசான் திறமே (பிங்க. 1423)

↑ இன்றைய ஓதுவார் முறையில் காந்தார பஞ்சமம் என்ற பண் கேதார கௌளையில் பாடப்படுகின்றது. காந்தாரப்பண் மலைநாட்டுக் கதகளியில் பாடப் படுகிறது.
← *த. க. க. 105/I*

**ஆசான் சாதி:** → அங்கணர்தம் பாணி

**ஆசான் திறம்:** → ஆசான்

**ஆசான்திறங்கள்:** *பாலையாழில் (அரிகாம்போதி) பிறக்கும் பண்ணியலான ஆசான் என்ற 6 சுரப் பண்ணிற்குரிய நான்கு இனங்கள்.*
*1) அகநிலை - காந்தாரம்*
*2) புறநிலை - சிகண்டி*
*3) அருகியல் - தசாக்கிரி (தேசாக்கிரி)*
*4) பெருகியல் - சுத்த காந்தாரம்*
← *சிலப் 13. 110 - 12 அடி.*

**ஆசிடுதல்:** → ஆசு, ஆசிடை வெண்பா

**ஆசிடை வெண்பா:** = நேரிசை வெண்பா, ஆசிடை நேரிசை வெண்பா.
*முதற்குறளின் இரண்டாமடி ஈற்றுச் சீரையும் மூன்றாம் சீரையும் விட்டிசைப்பதை அகற்றிக் கூட்டி இசைக்க அங்கு ஓர் ஆசுபெற்று வரும் வெண்பா வகை. இவ் ஆசு, ஓரசை அல்லது ஈறசையால் வரும்.*
எடு:– தாமரையின் தாதாடி தண்டுவலைச் சேறளைந்து
தாமரையின் நாற்றமே தானாறும் – தாமரைபோல்
*தானாறும் மற்றும் தாமரைபோல் ஆகிய சீர்களுக்கு இடையே வரும் நாறும் என்பதே ஆசு.*
*ஆசு - பற்றாசு (உலோகங்களை இணைப்பது)*
← *பா பா. 7; த இ. பே. 66-7, 114, 126; செ. ப. அ. பிற். 98*

**ஆசிடை நேரிசை வெண்பா:**→ஆசிடை வெண்பா

**ஆசிய நாடகம்:** = ஆசியம்
*நகைச்சுவை நாடகம், பகடிக்கூத்து* (Farce)
(ஆசியம் – ஏளனம் (நா. வ)
← *செ. ப. அ. பிற் 98; பெ அ. 47/II*

**ஆசியம்:** → ஆசிய நாடகம்

**ஆசிரிய உரிச்சீர்:** → இயற்சீர்

**ஆசிரிய ஒத்தாழிசை:** இது நிலைமண்டில *ஆசிரியப் பாவின் இனம். எவ்வகைச் சீரானும், தளையானும் ஒரு விகற்பமாய் வந்து ஒரு பொருள் மேல் மூன்றடுக்கின வாய்ச் சமமான மூன்றடிகளான் வரும் பாடல்கள்.*
எடு:- கன்றுகுணிலா, பாம்புகயிறா, கொல்லையம் சாரல் *ஆகிய மூன்றும் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்த ஆசிரிய ஒத்தாழிசைப் பாடல்கள் இவை இயற்சீர்ச் சிறப்புடைய வெண்டளையான் வந்த ஆசிரிய ஒத்தாழிசை.*
← *யா.க. 75 & 77*

**ஆசிரியச் சுரிதகம்:** *சுரிதகம் என்பது கலிப்பாவின் இறுதி உறுப்பு. இவ்வுறுப்பு ஆசிரியத்தால் அமைவது ஆசிரியச் சுரிதகம். சுரிதகத்தில் தாழிசை மற்றும் தரவுகளில் கூறிய திரண்ட பொருளை உரைப்பது மரபு.*
← *இ.வி. 738; செ ப. அ. 212*

**ஆசிரியத் தளை:** மா முன் நேரும், விளம் முன் நிரையும் வரத் தொடுக்கும் செய்யுள் தளை (யா. கா. உறுப். உரை)

**ஆசிரியத் தாழிசை:** = அகவல் தாழிசை.
*சமமான மூவடியாக ஒருபொருள் மேல் தனித்தோ இரட்டித்தோ வருவது*
எடு:- கன்றுகுணிலா, பாம்புகயிறா, கொல்லையம் சாரல் *எனவரும் சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவைப் பாடல்கள்.*
மூன்றடி ஒத்து முடிவன ஆய்விடின் ஆன்ற அகவல் தாழிசை...
(இலக். விளக். 735)
← *இ. வி. 735; த. இ.பே. 70/15; தொ.செ.484இளம்; தொ.செ.461 பேரா; த.இ.பே. 70-71/14*

**ஆசிரியத் துறை:** = ஆசிரிய நேர் துறை, அகவல் துறை
*நான்கடியாய் இடையிடை சீர் குறைந்து வருவது முதலடியும் ஈற்றடியும் அளவொத்து வருவது.*
எடு:- துறைமேய் வலம்புரி என்று தொடங்கும் முகமில் *வரியாக வந்த பாடல் முதல் கானல் வரி 8, 9, 10ஆம் பாடல்கள் ஈற்றயலடி (மூன்றாமடி) குறைந்து வந்துள்ளன.*
← *திருப்பாணாழ்வார் - அமலாதிபிரான் பாடல் 927- 936, திருமங்கை - 1048 - 1057, நம்மாழ்வார் - 3238 - 3248;யா கா.செய்.9; யா.வி.76; செ. ப. அ 15 ; த. இ. பே. 70/15*

**ஆசிரிய நேர்துறை:** →ஆசிரியத்துறை

**ஆசிரியப்பா:** = அகவல், அகவல்பா, தொகை
*இது ஒரு வண்ணனைப் பா வடிவம்,* (Narrative muse)
*அகவல் = அழை, கூப்பிடு, பாடு*
*தளைக்கட்டுப்பாடுகள் அதிகம் இல்லாத ஆசிரியப் பாடல் முதலில் தோன்றியது எனலாம் (ப. இ. இ. 24)*
அகவல்பா தொகை (சூடா. 10: 29)
அகவலும் தொகையும் ஆசிரியப் பாவே (திவா. 1849)
தொல்காப்பியர் காலத்தில் அகவல் என்னும் பெயர் ஆசிரியம் என்னும் பெயரால் அகற்றப்பட்டுவிட்டது... ஆசிரியம் என்பதற்கு ஆசிரியர்களது என்பது பொருளாகும். எனவே அழை, கூப்பிடு, பாடு என்னும் சொற்களின் பொருள் விளக்கு, கற்பி, அறியுரை என்ற பொருள்களுக்கு மாறின. (த. வீ. க. ப. 175)

↑ மேற்கண்ட கூற்று, புலவர் மரபு மேலோங்கி பாண்மரபு வீழ்ச்சியுறும் தொல்காப்பியர் கால நிலையைக் காட்டுகின்றது.
*“அகவலில் அளவு சுருங்கிய ஈற்றயலடி பாடலின் முடிவு நெருங்கியதைக் குறிப்பதாகலாம் என்று டாக்டர் மார் சரியாகக் குறிப்பிடுகின்றார்” (மேலது. 204)*

↑ பண்டைப் பாணரின் நீண்ட கதைப்பாடலின் பாடல் முடிவைக் காட்டுவதற்கான ஈற்றயலடி முச்சீரடியாக அமைந்திருக்கலாம்; கருத்து முடிவைத் தெரிவிக்கும் நீதிமொழியாகவரும் குறும்பாடலான வெண்பாவின் ஈற்றடி முச்சீரான் அமைந்தது இயல்பானதே. அதன் தேவையும் அதுவே.
→ அகவல், அகவன் மகள், அகவுநர்

**ஆசிரிய மண்டில விருத்தம்:** ஆசிரிய *விருத்தம் அடி மறியாய் வருவது (மண்டிலம் - வட்டம், மீண்டும் வருவது)*

**ஆசிரிய விருத்தம்:** =அகவல் விருத்தம்
*அறுசீரடி முதலாக மிக்க அடியான் நான்கடியும் ஒத்து வருவது*
← *த. இ. பே. 71/15; யா. கா. செய். 9*

**ஆசில்:** *வாழ்த்து,* (Blessing)

**ஆசு:** *பற்றாசு; இணைக்கும் பொருள்.*
1. நேரிசை வெண்பாவில் இரண்டாமடி ஈற்றுச் சீரை தனிச்சொல்லோடு இணைக்கும் அசை.
→ பற்றாசு

2. ஓர் இசைக்கருவி
ஆசு, பாணி என்னும் வாத்தியங்களை இசைக்கும் மாரான்கள் (தெ. கு. கு. 30; பெ. அ. 52/II)
← யா. கா. 3.24 & ஒழிபி. 6 ; செ. ப. அ. 213

**ஆசு எதுகை:** ய், ர், ல், ழ் என்ற மெய்களில் ஒன்று அடி எதுகை இடையே ஆசாக வருவது.
← யா. கா. ஒழிபி. 6

**ஆசுகவி:** நால்வகைக் கவிகளில் ஒன்று
1. அவையில் தரப்படும் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி முதலியவற்றால் உடன் பாடப்படும் பாடல்.
2. மேற்கண்டவாறு பாடவல்ல கவிஞன்.
கொடுத்திடும்... ஆசு சொல்வான்... (சூடா. 12: 23)
← வெ. பா. செய். 2; இ. வி பாட். 4; த. இ. பே. 20/16

**ஆட்டக் கச்சேரி:** சதிர், (Nautch)

**ஆட்டக்கதை (ஆட்டக்கதா):** → கதகளி

**ஆட்டக்காரி:** ஆடுகள மகள்.
நாட்டியம் ஆடுபவள் (நா. வ.)

**ஆட்டப் பாடல்:** நாட்டியத்திற்குப் பாடப்படும் பாடல், நிகழ்வு அல்லது கதைசார் (கதைப்)பாடல்.
ஆடலும் ஒல்லார் தம் பாடலும் மறந்தே (புறம். 153: 12)
பாடகர்கள் கதைசார் பாடலைப் பாடிக் கொண்டிருக்க சிலர் பெரும்பாலும் ஒரு குழுவினராக அதற்கு நடனமாடினர் (ப. த. நா. 202)

**ஆட்டம்:** கூத்தாட்டு, நாட்டியம், ஆடல் (Dancing)
ஆட்டங்கொண்டார் தில்லைச் சிற்றம்பலத்தே (தேவா. 7: 17: 6)
ஆட்டம் மேவி அலைந்து அழைத்து அயர்வு எய்தும் மெய்யடியார்கள் (பெருமாள் திருமொழி2: 9)
புக்கதுறை வல்லவத் தலைக்கோலியை ஆட்டங் கண்டருளா நிற்க (தெ. இ. க. 17: 606)
ஆட்டு > ஆட்டம் (விளையாட்டு)

**ஆட்ட வர்ணம்:** → பதவண்ணம்

**ஆட்டன்:** ஆடுகள மகன், ஆடலன்.
ஆட்டன் அத்தி நலன் நயந்து (அகம். 222: 7)
வஞ்சிக்கோன் - ஆட்டனத்தி என்பான் (சிலப். 21: 11 - 15 உ.வே.சா. அடிக்.)

**ஆட்டு:** 1. கூத்து, (Dancing)
மன்றுதொரு நின்ற குரவை சேரிதொறும் உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ (மதுரைக். 615–6)
கொட்டு ஆட்டொடு பாட்டொலி (தேவாரம். 7: 13: 6)
பாட்டுக்கும் ஆட்டுக்கும் பண்பா போற்றி (தேவாரம். 6: 5: 2)

2. விளையாட்டு, ஆடல்
வளை - பொந்து, மறைவிடம்
வளை > விளை - ஒளிந்து ஆடும் ஆட்டம், வளையாட்டு > விளையாட்டு ஆகியிருக்கலாம்.

**ஆட்டுவிப்போன்:** =நட்டுவன்.
நாட்டியக் கலையைக் கற்பிப்பவன் (நா. நி. 176)

**ஆடகசாலை:** = அரங்கு, அரங்கசாலை
விழவோடு ஒலிமிகு மங்கையர் தகுமாடக சாலை (தேவாரம் 1 : 12 : 7)

**ஆடகப்பொது:**=ஆடகப்பொதுவில், ஆடகத் திருமன்றம், ஆடகப் பொன்வேய்ந்த மன்றம்
தில்லை பொற்சபை
ஆடகத் திருமன்றத்து அனவரத நடஞ்செய்வோய் (சிதம். செய். கோவை 59)
ஆடகப் பொதுவில் நாடகம் நவிற்றும் (கோயில் நான்மணிமாலை 20)
← பெ. அ. 67/II

**ஆடகபொதுவில்:** → ஆடகப்பொது

**ஆடக மாடம்:** ஆடகப் பொன்னால் செய்த மாடம்.
ஆடகமாடத்து அறிதுயில் அமர்ந்தோன் (சிலப். 26: 62)
ஆடகமாடத்து அரவணைக் கிடந்தோன் (சிலப். 30: 51)
ஆடகமாடம் (இறை. 23 மேற்.)
ஆடகமாடம் - திருவனந்தபுரம்; இரவிபுரம் என்பாரும் உளர் (சிலப். 26: 62 அரும்.)

**ஆடகத் திருமன்றம்:** → ஆடகப்பொது

**ஆடம்பரம்:**
1. போர்ப்பறை
2. பல இசைக்கருவிகளின் முழக்கம்
ஆடம்பரம் பல்லிய முழக்கம் (நா. தீ. 256)
← பெ. அ. 69/II

**ஆடம்பலம்:** = கூத்தம்பலம், ஆடரங்கு, ஆடலரங்கு, அரங்கு, அவை, சபை, நடனசாலை, ஆடலிடம், அம்பலம்.
ஆடம்பலமும் ஆவன மறுகும் (பெருங். 2: 7: 130)
வாயிலும் கோயிலும் ஆடம்பலமும் (சீவக. 2112)
அம்பலமே ஆடரங்கம் ஆயிற்றே (தேவாரம் 2: 9 பூந்து. திருவிசை.)
ஐந்து கோலளவின் ஆடரங்கு (சூளா. 1778)
ஆடலிடமும் அவையும் அரங்கம் (திவா. 1029)

## ஆடரங்கு: → ஆடம்பலம்

## ஆடல்:

1. கூத்து(play), நாட்டியம் (Dancing)
ஆடலும் ஒல்லார் தம் பாடலும் மறந்தே (புறம். 153: 12)
பாடலார் ஆடலார் (தேவாரம்: 225: 2)
2. அகக்கூத்து மற்றும் புறக்கூத்து
ஆடலும் பாடலும் பாணியும் தூக்கும் (சிலப். 3: 16)
ஆடலுமென்றது – அகக்கூத்தினும் புறக்கூத்தினுமுள்ள ஆடலுமென்றவாறு (மேலது. அரும்.)
3. ஆடவல்லான் ஆடிய எழுவகைக் கூத்து (தாண்டவம்)
*ஆடல் என்பதற்குக் "கூத்து..." என்றே(சிலம்பு 3: 8- 9) அரும்பத உரைகாரர் பொருள் கூறுகிறார்*
4. நடித்தல்
சொல்லல், கூத்து வெற்றி (பிங்க. 3126)
நடித்தல், பெயர்தல், ஆலல், அகவல், தூங்கல், அசைவு (சூடா. 9: 48)

**ஆடல் ஆறுவகை:** *நின்றாடல் வகை; அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல் என்பன இவ் ஆறும் நின்றாடல் வகைப்படும் இது 11 ஆடலுள் 6*
"அல்லியம் மாயவன் ஆடிற்று .. கொட்டி கொடுவிடையோன் ஆடிற்று.. அறுமுகத்தோன் ஆடல் குடை.. குடத்தாடல் குன்றெடுத்தோன் ஆடல் . பாண்டரங்கம் முக்கணான் ஆடிற்று .. நெடியவன் ஆடிற்று மல்லாடல் .. அல்லியம் கொட்டி குடை குடம் பண்டரங்க மல்லுடன் நின்றாடல் ஆறு
(சிலப். 3·14 – 5 அடியார்க். மேற்.)

↑ பாண்டரங்கம் என்ற பாரதி அரங்கை, பாரதி (பைரவி)யே ஆடியதாக சிலம்பு மூலத்தில் உள்ளது. உரையாசிரியருள் அடியார்க்கு நல்லார் அதை முக்கணான் ஆடியதாகக் கூறுகின்றனர். அரும்பத உரைகாரர் கூற்றாவது: "பாரதி – பைரவி. அரங்கம் – சுடுகாடு. இவள் ஆடுதலால் பாரதி அரங்கென்று சுடுகாட்டுக்குப் பேராயிற்று"
(சிலப். 6:39 அரு.)
பாரதி ஆடிய பாரதி அரங்கத்து (சிலப். 6: 39)
பாரதி ஆடிய வியன் பாண்டரங்கமும் (சிலப். 6: 45)
பாரதி வடிவாய இறைவன் வெண்ணீற்றை அணிந்தாடிய பாண்டரங்கக் கூத்தும் (சிலப். 6:44–5 அடியார்க்.)

**ஆடல் இரண்டு:** *நிலை நின்றாடல் மற்றும் பதம் வீழ்ந்தாடல் என்ற இருவகை. நின்றாடல் ஆறும் வீழ்ந்தாடல் ஐந்தும் ஆகும்.*
நிலையும் படிதமு நீங்கா மரபில் (சிலப். 6: 65)
"... நிலை நின்றாடல், பதம் வீழ்ந்தாடல் என இருவகைய...
(மேலது . அரும்.)

**ஆடல் ஐந்து:** *துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை என்பன. இவ்வைந்தும் வீழ்ந்தாடல் வகைப்படும். இது 11 ஆடலுள் 5.*
"துடியாடல் வேல்முருகன் ஆடல்... கடையம் அயிராணி ஆடிற்று ... காமனது ஆடல் பேடு... மாயவன் ஆடன் மரக்கால்... பாவை திருமகள் ஆடிற்று..."
"துடி, கடையம், பேடு, மரக்காலே, பாவை வடிவுடன் வீழ்ந் தாடலைந்து" (சிலப். 3: 14 அடியார்க். மேற்.)

**ஆடல் கூத்தியர்:** *நடனமாடும் மகளிர்; அகக்கூத்து ஆடும் கணிகையர்.*
காவல் கணிகையர் ஆடல் கூத்தியர் (சிலப்:5:50)
அகக்கூத்து முதலியன ஆடுவார் (மேலது.அரும்)

**ஆடல் தரு:** *நாட்டியத்தின்போது வண்ணித்துப் பாடப்படும் நீண்ட பாடல்.*
கூத்துப் பாட்டு வகை (வி. அ.)

**ஆடல் தோற்றம்:** *ஆடலின்போது ஆடல் மகளிர் அவிநயத்துடன் தோன்றும் நிலை (Dancing Pose).*
கூடன் மகளிர் ஆடல் தோற்றமும் (சிலப் . 16: 131)
கூடலில் நாடக மகளிருடைய ஆடலிடத்துத் தோன்றும் முகத்தோற்றமும் அவர் ஆடல் விகற்பமும் அவ்வாடல் விகற்பத்துக்கேற்றப் பாடல் வேறுபாடும் யாழிசையின் பயன்களும் (மேலது அடியார்க்)

**ஆடல் நூல்:** *நாட்டிய நூல், நாட்டிய நன்னூல். ஆடல் இலக்கணம் கூறும் நூல்.*
நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து (சிலப். 3: 40 & 158)
ஆடல்நூல் வரம்பு கண்டவராகி
(திருவிளை. கால்மாறி. 7/ 4: 24: 7)

**ஆடல் பத்து:** *அஞ்சனவண்ணன் ஆடிய ஆடல்.*
அஞ்சனவண்ணன் ஆடிய ஆடல்பத்துள்
(சிலப். 5:47 அரும். & அடியார்க்.)

**ஆடல் பதினொன்று:** *அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை. இவைகளுள் நின்றாடல் ஆறு. வீழ்ந்தாடல் ஐந்து.*
பதினோராடலும் பாட்டும் கொட்டும் (சிலப். 3:14)
பதினோராடலும் பாட்டின் பகுதியும் (சிலப். 6:66)
*பதினோராடலாவன:-*

1) அல்லியம் – திருமால் ஆடியது
2) கொட்டி – சிவனார் ஆடியது
3) குடை – முருகன் ஆடியது
4) குடம் – நீலநிறவண்ணன் ஆடியது
5) பாண்டரங்கம் – பாரதி ஆடியது
6) மல் – திருமால் ஆடியது
7) துடி – அறுமுகன் ஆடியது
8) கடையம் – இந்திராணி ஆடியது
9) பேடு – காமன் ஆடியது
10) மரக்கால் – மாயோன் ஆடியது
11) பாவை – திருமகள் ஆடியது

*← சிலப் 3:14; 6:39 - 66 மற்றும் உரை.*

**ஆடல் பேரறை:**
1. **கூத்தப்பள்ளி:** கூத்து பயிலும், ஆடும் இடம்.
2. **அரண்மனை அரங்கசாலை**
← ம. த. பே.

**ஆடல் மகள்:** கூத்தாடும் பெண், ஆடல்கலை வல்லவள், கூத்தியர்.
ஆடன் மகளே யாதலின் ஆயிழை (சிலப். 8: 109)
ஆடன் மகளிர் ஆயமொடு... (பெருங். 1: 37: 100)
ஆடல் > ஆடன் (stem alternate)

**ஆடல் வென்றி:** துடிக்கூத்தை மகளிர் தங்கள் மெய்ப்பாட்டினால் விளக்கி ஒருவருக்கொருவர் வெல்லுதலைப் பற்றிக் கூறும் புறத்துறை.
பாடாண் பகுதியுள்... ஆடல்வென்றி பதினெட்டுமாம் (பு. வெ. 18)

**ஆடலரங்கு:** → ஆடம்பலம்

**ஆடலயம்:** ஆடல்மா; நாட்டியமாடும் குதிரை (ம. தபே)

**ஆடலாசான்:** = நட்டுவன், ஆடலாசிரியன். நாட்டியம் கற்பிப்போன்.
ஆடற்கமைந்த ஆசான் தன்னொடும் (சிலப். 3: 25)
ஆடவும் ஆட்டுவிக்கவும் வல்ல ஆடல்ஆசிரியனோடு (சிலப். 3: 25. அடியார்க்.)

**ஆடலாசிரியன்:** → ஆடலாசான்

**ஆடலிடம்:** = அரங்கம், மேடை, அரங்கு, களம், ஆடவை (stage, theatre)
ஆடல் நிகழ்த்துமிடம்

**ஆடலின் கூறுபாடு மூன்று:** தாண்டவம், நிருத்தம், நாட்டியம் என மூன்றும் ஆடலின் கூறுபாடுகள்.
...தாண்டவம், நிருத்தம், நாட்டியமென்னும் மூன்று கூறுபாட்டினும் (சிலப். 3: 158–9. அடியார்க்.)

**ஆடலின்றி:** தொழிற்படாது நிற்கும் எழிற்கை போல்வன.
அஞ்சனவண்ணன் ஆடிய ஆடலுள்
அல்லியத் தொகுதியும்... (சிலப் . 6: 47–8)
தொகுதியென்றார் முகம் மார்பு கை கால்களின் வட்டணை அவிநய முதலியன இருந்தும் தொழில் செய்யாது நிற்றலின்; "ஆடலின்றி நிற்பவையெல்லா மாயோன் ஆடும் வைணவ நிலையே" என்றார் (மேலது. அடியார்க்.)
ஆடலில் இது தொழில்படாது நிற்கும் 'எழில்கை' முதலிய நிலையைக் குறிப்பது.
→ எழில்கை.

**ஆடலுடன் பாடல்:** விளையாட்டும், கூத்தும், கதைப் பாட்டும், ஆடலும் பாடலும் கூடியே வருவது.
பாடி ஆடிப் பரவுவார் (தேவா. 1: 28: 7)
பாடல் ஆடல்... பேணித் தொழுவார் (தேவா. 1: 52: 2)
அடியார் பரவி ஆடல் பாடல் செய் பழநகரே (தேவா. 1: 67: 3)
பண்ணிய நடத்தோடு இசைபாடும் (தேவா. 2: 33: 2)
பாடி ஆடும் மெய்பக்தர் (தேவா. 2: 109: 9)
பாடல் ஆடலராய் வணங்கும் (தேவா. 3: 104: 9)

**ஆடவல்லான்:** நடராசன்; முதலாம் இராசராசன் காலத்தில் சிவத் திருமேனிக்கு வழங்கிய பெயர்; தஞ்சைப் பெரியகோவிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமான். அளவைப் பெயராகவும் வழங்கியது.

**ஆடவை:** நடனசபை (Dancing hall). (ஆடு + அவை)

**ஆடி:**
1. **கூத்து நிகழ்த்தி**
அம்மான் அனல் ஆடி (சேரமான் மும்மணி. 8: 8)
2. **ஆடுபவன்**
நட்டம் ஆடியை நம்பெருமானை (தேவா. 7: 62: 3)
ஒப்பு:- அம்பலத்தாடி - சிவபெருமான்

**ஆடிச்சி:** கழைக்கூத்தாடிப் பெண் (பு. வ) (A woman of acrobat community)

**ஆடிநார்:** நடனக்காரர்.
திருவிழாவில் சேவித்தாருக்கும் ஆடிநார்க்கும் பாடினார்க்கும் (Ee, X, kl. 112a)
← த. க. சொ. 49

**ஆடி முதிர்ந்தார்:** = தோரிய மகளிர்.
தொன்னெறி இயற்கைத் தோரிய மகளிரும் (சிலப். 3: 134)
தோரிய மடந்தையராவார் – ஆடி முதிர்தவர்; "இந்நெறி வகையால் இடத்தூண் சேர்வோள், தொன்னெறி மரபில் தோரிய மகளே" எனவும் "தலைக்கோலரிவைக் குணத்தொடு பொருந்தி, நலத்தகு பாடலும் ஆடலும் மிக்கோள் சொலப்படு கோதைத் தோரிய மகளே..." (மேலது. அடியார்க்.)
வாரம்பாடும் தோரிய மடந்தையும் (சிலப். 14: 155)
தோரிய மடந்தை வாரம் பாடலும் (சிலப். 6: 19)
தோரிய மடந்தை – பற்றுப்பாடுவாள் (மேலது. அரும்.)

**ஆடியல்:** கூத்து, வென்றிக்கூத்து, போர்க்கோலப் பாட்டு.
பாணியோடு இலயங்கொள்ள ஆடியல் எடுத்துக்கொண்டு... ஆடுகின்றாள் (சூளா: 1566)

ஆடியல் கொள்கை அந்தரி கோலம் (சிலப். 13: 104)
போர்க்கோலத்தைப் பாடும் பாட்டாண்மையுடைய
(மேலது. அடியார்க்.)
ஆடு – வெற்றி.

## ஆடு:

1. கூத்து

ஆடு அணி அயர்ந்த அகன் பெரும்பந்தர் (அகம். 98: 15)
← *செ. ப. அ. பிற். 101*

## ஆடுகளம்: = மறுகு, முற்றம், மன்று, தலைக்கோல் தானம், மன்றம், வெளி, அரங்கு, களம், அவை.

1. கூத்தாடுமிடம்

கூத்தர் ஆடுகளம் கடுக்கும் அகநாட்டையே (புறம். 28–13–4)
நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த (பெருங். 55)
கூத்தாட்டு அவைக் குழாத்திற்கே பெருஞ்செல்வம் (குறள். 332)
ஆடுகள மகளிரும் பாடுகள மகளிரும் (சிலப். 6: 157)

2. வெறியாடுமிடம்

அணங்குறு மகளிர் ஆடுகளம் கடுப்ப (குறிஞ். 175)
ஆடுகளம் சிலம்பப் பாடி (முருகு. 245)

## ஆடுகள மகள்: *கூத்தி, ஆடல் மகள்.*

யானும் ஓர் ஆடுகள மகளே (குறுந். 31)
ஆடுகள மகளிரும் பாடுகள மகளிரும் (சிலப். 6: 157)

## ஆடுகள மகன்: *கூத்தன்.*

குரிசிலும் ஓர் ஆடுகள மகனே (குறுந். 31)

## ஆடுகை: *கூத்தாடுகை.*

முன்னாள் அணங்கமாலை முரிகுழலாள் ஆடுகைக்கு
(சீவே. சரி. 1260)
← *பெ. அ. 78/II*

## ஆடுநர்ப் புகழ்தல்: வேடமிட்டு ஆடும்

*ஆடுநரைப் புகழ்ந்து பாடும் பாடல்.*
*'கொற்றவை கொண்ட அணி கொண்டு நின்ற' என்று தொடங்கும் வேட்டுவ வரிப் பாடல் முதலிய மூன்றும் ஆடுநர்ப் புகழ்தலாக வந்தவை.*
← *உ. வே. சா. சிலம்பு. அடிக். 315*

## ஆடும் கூத்தர்: *நடிகர், கூத்துக் கலைஞர்.*

ஆடும் கூத்தர் போல் ஆருயிர் ஒருவரி (சிலப். 28: 165)
ஆடும் கூத்தர் அணியே போல (மணி. 12: 5)

## ஆடும் பாத்திரம்: *நாட்டியப் பெண்(நாஞ். வ.)* (Dancing woman)

← *செ. ப. அ. பிற். 101*

## ஆடுமகள்:

1. கூத்தாடும் பெண்

இன்னியம் கறங்க ஆடுமகள் (குறிஞ். 193)

2. தேவராட்டி, வெறியாடுபவள்

அணிதுறந்து ஆடுமகள் போல (அகம். 370: 14– 15)
மஞ்ஞை ஆடுமகள் வெறியுறு (குறுந். 105)

## ஆடுவார் அரங்கத்தாளம்: *ஆடுவார் தாளால் (பாதம்) அரங்கத்தில் கொட்டலால் தாளமாயிற்று*

*(அரங்கம் - ஆடுகளம்)*

பாடுவார் பாணிச்சீரும் ஆடுவார் அரங்கத்தாளமும் (பரிபா. 8: 109)
*பாடுவாருக்கு கைத்தாளமும், ஆடுவாருக்கு அவர் தம் காலால் இடும் தாளமும்.*
*பாணி - கை; சீர் - தாளம்*
*பாணிச்சீர் - கையால்போடும் தாளம்.*

## ஆண் கூத்து: *நடன்; நாடகத்துள் வரும் ஆண் பாத்திரம்* (Male character in a drama).

## ஆண் கை:

*நாட்டியத்தில் ஆண்கள் செய்யும் அபிநயக் கை வகை.*
முட்டி சிகரமலர் பதுமஞ்சந்தஞ்சம் விட்ட சிலந்தி மிகுசூசி ஒட்டும்,
சதுரம் பதாகந் தருதிரிபதாகம் அதிகமுறு மாண்கை நவமாம்
(சிலப். 3: 18. அடியார்க்.)

## ஆண் சுருதி / பெண் சுருதி:

*ஆண்கள் பொதுவாக 1 - 1½ என்ற சுருதியிலும் பெண்கள் பொதுவாக 4½ - 5 என்ற சுருதியிலும் பாடுவார்கள். இதுவே ஆண்சுருதி, பெண் சுருதி எனப்படும்.*

## ஆண் சோடனை: = ஆண் சோடினை

*கூத்துக்கு ஆண்கள் செய்யும் ஒப்பனை* (attire of a male character for the stage)

## ஆண் சோடினை: → ஆண்சோடனை

## ஆண்டி:

*வரிக்கூத்து வகை* (an opera, a masquerade dance)
ஆண்டி யமன் புனவே டாளத்தி... கோத்தவரிக் கூத்தின் குலம்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## ஆண் வண்டு: = சுரும்பு, மதுகரம், தும்பி.

சுரும்பு மதுகரம் தும்பி ஆண்வண்டே (பிங்க. 2383)

## ஆணி: = சுள்ளாணி, துரப்பமை ஆணி.

*யாழ்த் தந்தியைக் கட்டும் ஆணி மற்றும் பத்தரைச் சேர்க்கும் ஆணி.*

பத்தரும் கோடும் ஆணியும் நரம்பும்... (சிலப். 7: 1)
துளைவாய் தூர்ந்த துரப்பு அமை ஆணி (பொரு. 10)
இலங்கு துளை செறிய ஆணி முடுக்கி (மலைபடு: 27)
தந்தியும் ஆணியும் தளர்ந்த யாழ்மேல் (இ.வி. 8)

**ஆதங்கம்:** *முரசின் ஒலி.*
ஆதங்கம்... முரசின் ஒலி (நா. தீ. 401)

**ஆதல்:** *கூத்து, ஆடல்*
ஆதல் தானே... கூத்தும் (அ. நி. ஆமுதல் 49)

**ஆதவ வாத பய சாயை:** *யாழ்க் குற்றங்கள் வெயில், காற்று, நீர், நிழல்; யாழுக்குக் குற்றம் வருவதற்குக் காரணமானவை இவை நான்காம்*
இத்திறத்துக் குற்ற நீங்கிய யாழ்... (சிலப். 7: 4)
நோய் நான்கு நீங்கி (சீவக. 720)

**ஆதாரசுருதி:** → அடிப்படை ஒத்து

**ஆதி:**
**1. ஆதிதாளம், எட்டன் மட்டம், சதுசுர திரிபுடை தாளம்**
*தொன்மையான தாளங்களுள் ஒன்று. 8 எண்ணிக்கை கொண்டது.*
*(ஆதி - முதல்)*
ஏர் மேவும் ஆதிதாளம் (பரத. 3: 3)
**2. நெடுஞ் செலவு, ஓட்டம்:**
*குதிரைக்கதி ஐந்துள்ஒன்று*
அடிபடு மண்டிலத்து ஆதிபோகிய (மதுரைக். 390)
ஆதி என்னும் கதியில் ஓடின (மேலது. நச்.)
ஆதிக்கொளீஇ அசையினை ஆகுவை (கலித். 96: 20)
→ ஆதிதாளம்

**ஆதி இசைகள்:** *பண்டைப் பண்கள்.*
இசையாவது நரப்படைவால் உரைக்கப்பட்ட 11, 991 ஆகிய ஆதியிசைகளும் (சிலப். 3: 45 உரை)
உயிருயிர்... தொண்டுமீண்ட பன்னீராயிரம்...
(மேலது. அடியார்க். மேற்.)
↑'பூர்வீக சங்கீத உண்மை' என்ற நூல் ஆதி இசைகளை நெறிப்படி பட்டியலிட்டுள்ளது.
← *பூ. ச. உ. 4; த. க. க 299/III*

**ஆதிக்கொட்டு:** *மத்தளம் முதலிய கருவிகளில் முதலில் கொட்டும் முழவுச் சொல்லாகிய தகாரம்*
ஆதிக்கொட்டுத் தகாரமாகும் (பஞ்ச 1 124 உரை)
*ஆதி - முதல்*

**ஆதிதாளம்:** = ஆதி, எட்டன் மட்டம், எட்டு எண்ணிக்கைத் தாளம், சதுசுரதிரிபுடைத் தாளம், நான்கன் திரிபுடை, அடிதாளம்
*இது மட்டதாளப் பிரிவைச் சேர்ந்தது. பண்டைய தாளங்களுள் ஒன்று. எனவே ஆதிதாளம் எனப்பெயர்.*

*இதன் குறியீடு - /400*
*4 + 4 = 8 - எட்டன் மட்டம்*
*32 கால் மாத்திரை கொண்டது - 32 x ¼ = 8 மாத்திரை.*
முல்லையம் புறவிற் குவிமுகை அவிழ்ந்த
முல்லை சான்ற கற்பின் மெல்லியல் (சிறுபாண். 29 – 30)
அகலிரு விசும்பின் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி (பெரும்பாண். 1 – 2)
*8 சீர்களில் இரண்டு அடிகளில் பொருள் முடிகிறது. இங்கு ஓர் ஆவர்த்தமாகத் தாளம் முடிவு பெறுகிறது. நாற்சீர் நாலடியாக வரின் இரு ஆவர்த்தமாகத் தாளம் முடிவுபெறும்*
↑ 108 தாளத்தில் வரும் ஆதிதாளம் 4 எண்ணிக்கை கொண்டது; தற்காலம் ஆதிதாளம் 8 எண்ணிக்கை கொண்டதாக நடப்பில் உள்ளது. எனவே ஆதிதாளம் என்பது தொடக்கத்தில் ஒன்றன் தாளமாகவே (சதுசுர ஏகம்) வழங்கியுள்ளது.
→ ஆதி

**ஆதிநாட்டை அந்தம் சுருட்டி:** *இது இசை பற்றிய ஒரு பழமொழி. இசை அரங்கில் நாட்டைப் பண்ணில் பாடல் தொடங்கி, சுருட்டிப் பண்ணில் முடிப்பது.*

**ஆதிப்பா விருத்தி:** *ஆடல் நிலைகளில் நிற்றல், இருத்தல், கிடத்தல், இயங்கல் என்னும் விருத்தி வகைகளை தொகை வரையறை செய்யப்பட்ட 50 விருத்திகள்*
ஆதிப்பா விருத்தி ஐம்பதில் புலவோர் ஓதிக்கொண்டனர் ஒன்பான் விருத்தி (சிலப். 8: 23 – 6 அடியார்க்.)
விருத்தி – இருப்பு (இருத்தல்)
இதனுள் விருத்தி என்பது இருப்பு (மேலது)

**ஆதி பைரவி:** *படுமலைப் பாலையின் (நடபைரவி) திறப்பண்.*
நடபைரவி மேளம் பகருமே ஆதிபைரவி (ம. சூ. 4: 169)

**ஆதியாழ்:** *1000 புரிநரம்புள்ள (மெட்டு) யாழ்.*
ஆயிரம் நரம்பிற்று ஆதியாழாகும் (சிலப். உரைப்பாயிர. மேற்.)
→ பெருங்கலம்

**ஆந்தி:** → அந்தி

**ஆந்திரியம்:**
*இசைப்பாட்டின் இறுதி அடி.* (பஞ்ச. பக். 86)

## ஆந்தோளம்:

உள்ளோசை (கமகம்) பத்தனுள் ஒன்று (பரத. 2: 24)
*மேல் சுரத்திலிருந்து கீழ்சுரத்திற்கு வரும் உள்ளோசை.*
(Musical swing, a turn of note followed by a higher note).

## ஆந்தோளி: = ஆந்தோளிகம்

1. *பண்களில் ஒன்று* (ம. த. பே.)
↑ இன்றைய ஆந்தோளிகா என்ற பண் ஆகலாம்
2. சிவிகை (நா. நி.)

## ஆந்தோளிகம்: → ஆந்தோளி

## ஆநகம்:

1) தம்பட்டம்
2) போர்ப்பறை
3) முரசம்
4) மேளம்
5) மத்தளம் (ச. அ.)

## ஆபாதம்: *நட்டம் செய்கை. நாட்டியம் ஆடல் (ச. அ)*

## ஆபீரு: *47ஆம் பாலை சொர்ணாங்கியில் பிறக்கும் திறப்பண்*

இதன்மேல் விரும்பும் ஆபீரு (ம. சூ. 4: 208)

## ஆபேரி: *9ஆம் பாலையான படுமலைப்பாலையின் (நடபைரவி) திறப்பண்.*

மகிழும் ஆபேரி (ம. சூ. 4: 168)
→ காந்தாரம்

## ஆபோகம்:

*இசை உருப்படியான கீத உறுப்பு நான்கில் ஒன்று*
நான்கின் ஒரீஇய நன்கனம் அறிந்து (சிலப். 3: 150)
நாலுறுப்பும் குறைபாடில்லாத உரு .. (மேலது. அரும்.)
நாலுறுப்பாவன: உக்கிரம், துருவை, ஆபோகம் பிரகலை (மேலது. அடியார்க்.)
← *சிலப். உ. வே. சா அடிக்.*

## ஆம்தாளி: *15ஆம் பாலையான செம்பாலை (அரிகாம் போதி)யின் திறம்*

வாசி ஆம்தாளி (ம. சூ. 4: 183)

## ஆம்பல்:

**1. மலர்; மருதநில மலர்; வெள்ளாம்பல், அல்லி, குமுதம்.**
*நெய்தல், அல்லி, குமுதம் - மாலையில் மலரும் மலர்*
ஆம்பலும் நெய்தலும் அல்லியும் குமுதம் (பிங்க. 3024)
மெல்லிலை அரி ஆம்பல் (மதுரைக். 251)
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் (மூதுரை: 17)
*பொதுவாக வெள்ளை யாம்பலைக் குறிக்கும்.*
வெள்ளாம்பல்... குமுதப் பெயரே (திவா. 830)

**2. இசைக்குழல்**
இசையின் குழலும்... மூங்கிலும் அல்லியும்... ஆம்பலாகும் (பிங்க. 3133)

**3. பண்** *(பாணி);* = காமரம், சுத்த தன்யாசி, ஆம்பலந் தீங்குழல், மருதப்பாணி, சீகாமரம், ஆம்பல்குழல்
ஆம்பல் நாறும் தேம்பொதி நறுவிரை (சிலப். 4: 73)
ஆம்பல்... பண்ணுமாம் (மேலது. அடியார்க்.)
*(நாறும் - தோன்றும்)*
ஆம்பல் - வாய்க்கு அடை. இனிப்பெண்பாலாதலின் பண் தோற்றும் வாயென வாய்க்கு அடை யாக்கலும் ஒன்று பாணைப் பாட்டாக்கி வண்டின் வாய்க்கு அடையாக் கினும் அமையும் (மேலது. அடியார்க்.)
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி (சிலப். 17 பாடல். 2)
ஆம்பலந் தீங்குழல் தெள்விளி பயிற்ற (குறிஞ். 220)
தீங்குழல் ஆம்பலின் (ஐங். 215)
ஐயவி சிதறி ஆம்பல் ஊதி (புறம். 281: 4)
பகைகொள் மாலையும் பையுள் செய் ஆம்பலும் (சீவக. 1314)
ஆம்பல் குழலால் பயிர்பயிர் எம்படப்பை (கலித். 108: 62)
ஆம்பல் பண்ணை உடைய குழல் (மேலது. நச்.)
ஆம்பல் அம் குழலின் ஏங்கிக் (நற். 113: 11)
ஆபெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇ (அகம். 214: 12)
ஆம்பல் என்னும் பண் (சீவக 1662. நச்சர்)
கொன்றைப் பழக்குழல் கோவலர் ஆம்பலும் (வளை. 72: 3)
ஆம்பலும் - ஆம்பல் பண்ணையுடைய குழலும் (அடிக்.)
உடை திரை முத்தம்... ஆம்பல் (சீவக. 2652)
பொறைமலி பூங்கொம்பேற வண்டு ஆம்பல் ஊதும் புகாரே எம்மூர் (சிலப். 7 சார்த்துவரி. 29)
காமரு தும்பி காமரம் செப்பும் (சிறுபாண். 77)
*கானபாடி மூவர்க்கு... காமரப் பேரையனுக்கு*
*(தெ. இ. க. 2 66, த. க. சொ. 172)*
↑ ஆம்பலந் தீங்குழலுக்குரிய இன்றைய இராகம் சுத்த தன்யாசி – ச க[1] ம[1] ப நி[1]
← த. க. க 128-29/ I & 323/II

**4. மூங்கில்**
இசையின் குழலும்... மூங்கிலும்... ஆம்பல் ஆகும் (பிங். 3133)

## ஆம்பி: =பத்தர், வயிறு.

ஆம்பியும் கிழாரும் வீங்கிசை ஏத்தமும் (சிலப். 10: 110)
ஆம்பி - பத்தர் (மேலது. அரும்.)
பன்றிப் பத்தர் (மேலது. அடியார்க்.)

## ஆமந்திரிகை: = பல்லியம், பல்லியக் கூட்டிசை, மேளப் பிராப்தி, மேளம் கட்டல், கூட்டியம் கூட்டின்னியம் (Orchestra, Band)

பல கருவிகளும் ஒருங்கிசைக்கும் ஆமந்திரிகை...
(யா. நூ. பக். 137)
*இசை, கூத்து மற்றும் நாட்டிய நிகழ்ச்சியின் தொடக்கத்தின்போது பல்வேறு இசைக்கருவி களைக் கொட்டி முழக்கல்.*
குழல்வழி யாழ் எழீஇத் தண்ணுமைப் பின்னர் முழவு இயம்பல்

ஆமந்திரிகை (சீவக. 675 நச். மேற்.)
பாடலின் இறுதியில் (தனி ஆவர்த்தனம்) கருவிகளை எல்லாம் ஒன்றாகக் கூட்டி இசைக்கும் கூட்டிசை (வாழ்வி. களஞ். 2 பக். 521)

கூடிநின்றிசைத்தது ஆமந்திரிகை (சிலப். 3: 142)
முரசு எழுந்து இயம்ப பல்லியம் ஆர்ப்ப (சிலப். 3: 125)
பால்கெழு சிறப்பின் பல்லியம் சிறந்த (சிலப். 13: 139)
↑ அரங்கிசையின் இன்றைய தனி ஆவர்த்தன இறுதியில் இந்த ஆமந்திரிகை – கூட்டின்னிய மரபு தொடர்கின்றது.

**ஆமாம்பூசாரி:** ஊரகக் கோவில் விழாக்களின் போது தலைமைப் பூசாரியின் கூற்றுக்கு 'ஆமாம்', 'ஆமாம்' என்று பின்பாட்டுப்போல் சொல்லும் துணைப்பூசாரி.
← தெ. இ அ. 12/I

**ஆமைக்கை:** = கூர்மக்கை, கூர்மம் இரட்டைக்கைஅவிநயம்.
பெருவிரலை நீட்டி மற்றை விரல்களை வளைத்துக் கீழ்நோக்கிப் பிடிக்கும் அபிநயக்கை (பரத. பாவ. 39)
← செ ப. அ 1075

**ஆய்க்குழல்:** = ஆயர்குழல், ஆயன்குழல், (pond, flute). ஆயக்குழல் - (பு. வ.)
ஆயர்குழல் - புல்லாங்குழல், (பெப் அக.)

**ஆய்ச்சியர் குரவை:** மகளிர் எழுவர் வட்டமாக நின்று பாடி ஆடும் கூத்து. குரவை என்றது கூத்தால் பெற்ற பெயர்.
'... ஆய்ச்சியர் குரவையெனக் கூத்தால் பெற்ற பெயர்' (சிலப். பதிகம் 77: அடியார்க்.)

**ஆயக்குழல்:** → ஆய்க்குழல்

**ஆயத்தம்:** (ஆட்சிப்திகா)
1. பண் ஆளத்தியின் (ஆலாபனம்) முதற்பகுதி
2. பண்களில் ஒன்று (செ. ப. அ. பிற். 107)
3. இசைக்கிளையில் ஒன்று (பெரியபு ஆனாய. 26 உரை)

**ஆயப்பாலை:** பாலை (பெரும்பண்) உருவாகும் முறையான, பாயப்பாலை நான்கினுள் ஒன்று. அவையாவன: ஆயப்பாலை, சதுரப்பாலை, திரிகோணப்பாலை, வட்டப்பாலை
ஆயஞ்சதுரம் திரிகோணம் வட்டமெனப் பாய நான்கும் பாலையாகும்
ஆயப்பாலையாய் நின்ற பதினாற் கோவை (சிலப். 3. 70 - 71 அரு.)

**ஆயம்:**
1. மகளிர் கூட்டம்.
ஆயமே... மாதர் கூட்டம் (சூடா. 11: 1)
ஆயத்தார் – தோழியர்
2. தோழி
ஓரை, பொய்தல், இருளை, ஆயம், தோழி, சேடி, இணங்கு, பாங்கி (திவா. 329)
3. மல்லரி எனும் பறை (ச. அ & அ. நி.)
4. ஆடலும் பாடலும் உடைய நாடகமகளிர்
...நாடகமகளிர் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் (தொ. மெ. 249 பேரா.)

**ஆயர்குழல், ஆயன்குழல்:** → ஆய்க்குழல்

**ஆயுதம்:**
1. இசைக்கிளையில் ஒன்று
தீப்தம் ஆயுதம் மிகுதி மத்தியம் கருணை என்ன கழறினார் சாதி (பரத. 2: 47)
2. கூத்துப் பயிலும் இடம் (சது. அக.)

**ஆர்க்க:** ஒலிக்க; எழுந்தொலிக்க.
முன்னின்றடிக் கட்டிய கழலார்க்க நின்றம் பலத்தாடு (தெ. இ. க. 4 167)
← த. க சொ 53/I

**ஆர்க்கை:** யாழில் நரம்பை இறுக்கிக் கட்டுகை
நரம்பால் ஆர்க்கையிட்டு (கந்தர. 44)

**ஆர்ப்ப:**
1. ஒலிப்ப
வளைநரல வயிர் ஆர்ப்ப (மதுரைக். 185)
வயிர் ஆர்ப்ப - கொம்பு ஒலிப்ப (நச்சர்.)
2. ஒத்து (சுருதி) இசைத்தல்
வீழ்தும்பி வண்டொடு மிஞிறு ஆர்ப்ப (பரிபா. 8: 23)

**ஆர்ப்பு:**
1. மாத்திரையிறந்த சுருதி, செம்பகை.
சுருதி அளவு கூடி இசைத்தல், (Excessive pitch of a lute string).
சொன்ன மாத்திரையில் ஓங்க இசைத்திடும் சுருதி ஆர்ப்பே (பஞ்ச. பார.)
செம்பகை ஆர்ப்பே கூடம் அதிர்வே (சிலப். 8: 29)
ஆர்ப்பு - மாத்திரையிறந்த சுருதி - ஓங்க இசைத்தல் (அடியார்க்.)
நரம்பு தேன் ஆர்த்து எனத் தீண்டி நல்லாள் வீணைபொல்லாமை நரம்பு இசையால் பிறந்த பொல்லாமை (சீவக. 717: 3 நச்சர் மேற்.)

2. ஆரவாரமாய் ஒலித்தல், பேரொலி, (loud noise).
சங்கம் முழங்க வயிர் ஆர்ப்ப (மதுரைக். 155)

**ஆரத்தி:** → ஆரத்திப் பாட்டு

**ஆரத்திப் பாட்டு:** = ஆலத்தி, ஆலாத்தி, ஆளத்தி, ஆளாத்தி, ஆரத்தி, ஆலத்திப்பாட்டு, ஆரதி ஆரத்தி சுற்றும்போது பாடும்பாட்டு; சடங்கு மற்றும் விழா முடிவில் சூடம் கொளுத்தி அல்லது மஞ்சள் நீரில் சுண்ணாம்பு கலந்து நடுவில் வெற்றிலை இட்டு செந்நிறமாக்கி மங்கல மகளிர் வலமாகச் சுற்றி ஆரத்தி நீரைப் பொட்டிட்டு கண்ணேறு கழிக்கும் போது பாடும் பாட்டு.

**ஆரதி:** → ஆரத்திப் பாட்டு

**ஆரபடி:** நாடகவிருத்தி நான்கனுள் ஒன்று ஆடவர் ஆடும் கூத்து. பொருள் பொருளாக வீரன் தலைவனாக வரும் நாடகவிருத்தி.
ஆரபடியாவது: பொருள் பொருளாக வீரராகிய மாணிடர் தலைவராக வருவது (சிலப். 3:13 அடியார்க்.)
ஆரபடி சாத்துவதி என்றிரு விருத்தியும் (சிலப். 23: கட்டுரை. 10)
நால்வகை விருத்தியுள் ஒன்று கூத்துப்பாணி (தேசி) நான்கில் ஒன்று.
விருத்தி - பாணி, வட்டார வழக்கு, தேசி (style, local usage)
ஆரபடி - violent style - பாஞ்சாலி தேசி (பாணி) பாஞ்சாலம், காசுமீரம், கங்கைவடகரை முதலிய வட்டாரங்களில் ஆடப்படும் கூத்துப்பாணி (style)
←பரதரின் நாட்டிய சாஸ்திரம் (மனோ மோகன் கோஸ்) மொழிபெயர்ப்பு - சுலோகம் 36-49; 197-99 / I
"...As people have different native countries, costumes, languages and manners, I have prescribed a four fold classification of the Dramatic performance attached to (four) different styles... the violent (arabhati). Because of this four Local usages develop, and Performances (following them) originate"
The Natyasastra - Bharata -muni - Trans. Manmohan Ghosh. P.198 / I

← கைசிகி, சாத்துவதி, பாரதி

**ஆரபி:** திறப்பண். அரும்பாலை (சங்கராபரணம்) யின் சிறுபண்.
ஆரபிராகம் பயிலும் அயிழையே சங்கமே (வி. வி. தூ. 20)
ஆரபி பௌளம்... களம் என்ப (பரத. 2: 65)

**ஆரவாரம்:** பேரொலி, அதிர்ச்சி தரும் பேரோசை. தமரம் (டமாரம்), திமிலம் (திமிலை) போன்ற இசைக்கருவிகள் பேரொலி தருபவை; ஆரவாரத்தை ஏற்படுத்துகின்றவை.
... அதிர்ச்சி... ஆரவாரம் (திவா. 1899)

**ஆராட்டு:** = தாலாட்டு, ஓராட்டு, ராராட்டு, ரோராட்டு (to lull to sleep).
முக்காண ஏரி கேசரி... முன்னவர் ஆராட்டு...
← பெ. அ. 191/II; செ. ப. அ. 242

**ஆராய்தல்:** எண்வகை இசை எழால்களில் ஒன்று. ஒத்து (சுருதி) சேர்ப்பது (to set the pitch of a musical instrument, tuning).
பண்ணல் பரிவட்டணை ஆராய்தல் தைவரல் (சிலப். 7: 5)
ஆராய்தல் என்பது அமைவரக் கிளப்பின், குரல் முதலாக இணை வழி கேட்டும், இணை இலாவழிப் பயனொடு கேட்டும் தாரமும் உழையும் தம்மிற் கேட்டும் குரலும் இளியும் தம்மிற் கேட்டும், துத்தமும் விளரியும் துன்னறக் கேட்டும், விளரி கைக்கிளை விதியுளிக் கேட்டும், தளராதாகிய தன்மைத்தாகும் (அரும்.)
எண்வகையால் இசை எழீஇ (சிலப். 7: 8)
ஆன இசை ஆராய்வுற்று அங்கணர்தம் பாணியினை (பெரி. சம். 135)
வைத்ததுளை ஆராய்ச்சி வக்கரணை வழிப்போக்கி (பெரியபு. ஆனாய. 24)

**ஆராரோ:** ஆர்+ ஆர் + ஓ.
மகளிர் பாடும் தாலாட்டு எடுப்புச் சொல்.
ஆராரோ ஆரிரரோ – என் கண்ணே
ஆரிரரோ ஆராரோ.

**ஆரி:** நீட்டிப்பாடுதல்.
சொற்கட்டில் ஆரி தொடுத்தாள்... (வி. வி. தூ. கண்ணி. 413)
மயில் + ஆரி > மயிலாரி > மல்லாரி (நீட்டிப்பாடுதல்)
ஒப்பு + ஆரி > ஒப்பாரி (நீட்டிப்பாடுதல்)
மல்லாரி அல்லது மயிலாறு (ஆந். நாட். வழக்காற். பக். 126)

**ஆரித்தல்:** ஒலித்தல், பாடுதல்.
பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல் (சிலப். 29: (26)
→ ஆரி

**ஆரியக்கூத்து:**
1. கழைக்கூத்து
காருகம் மேலெடுத்து ஆரியக்கூத்து வீக்குமால் (தேம்பா. 1: 1: 47)
2. பாவைக்கூத்து (யா. அ)
3. கோவில்களில் ஆடும் ஒருவகைக்கூத்து: பழங்கதை (புராணம்), இதிகாசக் கதைகள் தழுவி வரும் கூத்து
எடு:- புரிசைக் கண்ணப்பத் தம்பிரானின் கர்ணமோட்சம் திரௌபதிவஸ்திராபரணம் மற்றும் ஆற்காடு பகுதிகளில் ஆடப்படும் படுகளம் போன்றவை.
4. சிவனுடைய பல்வேறு ஆற்றல்களை விளக்கும் கூத்தாக கி.பி. 11ஆம் நூற்றாண்டு வரை திருவிடை மருதூர் கோவிலில் இக்கூத்து ஆடப்பட்டுள்ளது.

*திருவிடைமருதூரில் ஸ்ரீமூலஸ்தானத்தில் பெருமா னடிகளுக்கு ஆரியக் கூத்தாட திருவெள்ளறை சாக்கைக்கு நிவந்தம் செய்து* (தெ. இ. க. 5 718)

*பெருமானடிகளுக்கு ஆரியக் கூத்தாட...* (தெ. இ. க. 3: 202)

*இது ஏழு அங்கம் ஆடப்பட்ட செய்தி முதலாம் இராசராசனது 9ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் உள்ளது* (ARE 120/1925)

*அரிய + கூத்து > ஆரியக்கூத்து*
*ஒப்பு: பெரிய + ஆறு > பேரியாறு*
*சிறிய + யாழ் > சீறியாழ்*
*(முதல் நிலை நீளல்)* (Compensative lengthening)
← *த. க. க. 192/*II; *செ. ப. அ. 244*

**ஆரிய குச்சரி:** *மருதயாழ்த்திறம்; கோடிப்பாலை (கரகரப்பிரியா) யின் சேய்ப்பண்.*
**தக்கேசி கொல்லி ஆரியகுச்சரி... மருதயாழ்த்திறனே (பிங்க. 1383)**

**ஆரிய நடம்: → ஆரியம்**

**ஆரியப்பாவை:** *பாவைக்கூத்துவகை* (Kind of pupet show) *(வின். அக.)*

**ஆரியப் பொருநர்:** *வடநாட்டு மல்லர்*
**எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன் (அகம். 386: 5)**
*இவன் மற்போரில் வல்ல பாணன் ஒருவனோடு பொருது தோள்களற்று மாய்ந்தான்.*

**ஆரியம்:**
**1. ஆரியம் பாடல், வடநாட்டு இசையைப் பாடுதல்**
*ஆரியம் பாடுவார் மூவர்க்கு அரையன் அம்பலநாதன் ஆன செம்பியன்* (தெ. இ. க. 2. 66)
**2. கூத்து வகையுள் ஒன்று**
**இருவகைக் கூத்தாவன வசைக்கூத்து... ஆரியம் தமிழ்... எனப் பலவகைய (சிலப். 3: 12 அடியார்க்.)**
**→ ஆரியக்கூத்து**

**ஆரியவராடி:** *வராடி வகையுள் ஒன்று.*
**ஆரியவராடி... அடைத்தபல் பெயரே (திவா. 1889)**

**ஆரியவேளர் கொல்லி** = ஆரியவேளா கொல்லி
*செவ்வழி யாழ்த்திறத்துள் ஒன்று.*
**குறண்டி ஆரிய வேளர்கொல்லி... பதினாறும் செவ்வழி யாழ்த்திறம் என்ப (பிங்க. 1384)**

**ஆரியவேளா கொல்லி: → ஆரியவேளர்கொல்லி**

**ஆரியன்:** *கழைக்கூத்தாடி* *(ச. அ.)*

**ஆரோகணம்:**
**1. கல்படி, சோபானம்**
**ஆரோகணம், சோபானம், கற்படி... (திவா. 1010)**
**2. ஏறுகை, ஏறுநிரல், ஆரோசை,** (ascending)
**3. உள்ளோசை பத்தனுள் ஒன்று** *(பரத. இராக. 24)*
**→ ஆரோசை; ஏறுநிரல்**

**ஆரோகி:** *இசைப்பாட்டு வகையுள் ஒன்று* (variety of musical composition).
← *செ. ப. அ. 245*

**ஆரோசை:** = ஆரோகணம், ஏறுநிரல், ஏறுவரிசை (ascending)
*இசைச்சுரங்களின் ஏறுவரிசை - ச ரி க ம ப த நி ச்*
**மணி ஆர்த்த தூவெண் மணல் (சேர. உலா. 94)**
**ஆரோசை அமரோசைகளில் அமைத்தார் (பெரியபு. 14: 24)**
*(ஆர் - த்தல் = மேலெழுதல்) (ஆர் = ஒலி) கோவைகள் முதல் கோவையினின்றும் ஒரு குறித்த அளவில்* (vibration) *உயர்ந்து செல்வதால் ஆரோசை.*

**ஆலங்காட்டாண்டி:** *வரிக்கூத்து வகையுள் ஒன்று* (a masqurade dance)
**சிந்து... ஆலங்காட்டாண்டி... கோத்தவரிக் கூத்தின் குலம்**
← *சிலப். 3: 13அடி. மேற்; செ. ப. அ. 246/*I

**ஆலத்தி, ஆலத்திப்பாட்டு : → ஆரத்திப்பாட்டு**

**ஆலல்:**
1. *குதிரையின் கனைப்பொலி.*
**2. ஒலி எழுப்புதல்**
**அன்னச்சேவல் மாறெழுந்து ஆலும் (புறம். 128:4)**
**ஆலல், ஆடுதல், ஒலிப்பேர் (சூடா. 11: 3)**
*பொன்னி நாட்டாலிக்கும் தானை அபையன் குலமகளிர்* (IPS/*651; த. க. சொ. 55)*
**3. மயில்குரல்**
**அகவல் ஆலல் ஏங்கல் மயில்குரல் (பிங்க. 2318)**

**ஆலாத்தி: → ஆரத்திப்பாட்டு**

**ஆலாபகம்:** = ஆலாபம்
*கூத்தின் ஒரு விகற்பம்* *(ம. அ.)*

**ஆலாபம்: → ஆலாபகம்**

**ஆலாபனம்:** = ஆலாபித்தல், ஆளத்தி, ஆளாபம் பண் விரிவாக்கம் (Improvised introduction to a melody)

**ஆலாபித்தல்:**
**1. பண் விரிவாக்கம்;** பாடல் இன்றி பண் ஒன்றை மட்டும் விரிவாக்கம் செய்தல், இராக ஆலாபனை.
**2. ஒத்து (சுருதி) கூட்டுதல்** (ச. அ.)

**ஆலாபினி:** சுரபேதம் (பரத இராக. 44)

**ஆலிங்கியம்:** மார்பில் தாங்கிக் கொட்டுவதாகிய ஒருவகை இசைக்கருவி (ம. அ.)

**ஆலித்தல்:** கனைத்தல்
பந்திதோறும் நின்ற புரவிகள் போர் நினைந்து ஆலிக்கு மோதையும் (சிலப். 13 147அடியார்க்.)

**ஆலீடம்:** ஆடல்நிலை அறுவகையுள் ஒன்று; (நிலை - pose). வைணவம், சமநிலை, வைசாகம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம். இடக்காலை நீட்டி வலக்காலை மடக்கி இருக்கும் வில் எய்வோர் அல்லது ஆடுவோர் நிலை.
வலக்கால் மண்டிலித்து இடக்கால் முந்துருதல் பெயர் ஆலீடநிலையதாகும் (பிங்க. 1471)
மண்டி - மண்டிலித்தல் - வளைதல்
எடு:- முழுமண்டி, அரைமண்டி, மண்டிபோட்டு நிற்றல்
ஆலீடம் x பிரத்தி ஆலீடம்
← சிலப் 3: 12 உ வே சா. அடிக்.
→ பிரத்தி ஆலீட நிலை

**ஆலுதல்:** → ஒலித்தல்

**ஆலோலம் பாடுதல்:** கிளிபோன்ற பறவைகளை விரட்டப் பாடப்படும் பாடல்.
ஆல் + ஒல் + அம் -ஆலோலம்
பூவைகாள் செங்கட் புறவங்காள் ஆலோலம் (கந்த. வள்ளி. 54)

**ஆலோலிதமுகம்:** ஆசையால் மலர்ந்த முகத்தோடு ஒருவனை அழைக்கும் அவிநய வகை (சது அக. பக். 18)

**ஆவஞ்சி:** பசுவின் வயிற்றுத் தோலால் ஆன ஒரு தோற்கருவி.
ஆவஞ்சியெனினும் குடுக்கை எனினும் இடக்கை எனினும் ஒக்கும்; ஆவினுடைய வஞ்சித் தோலால் போர்த்தலால் ஆவஞ்சி. சிலப். 3: 27அடியார்க்.
→ செ. ப. அ. 249; த. க. க 137/I

**ஆவர்த்தம்:** = ஆவர்த்தனம், வட்டணை (cycle of rhythm), ஆவிருத்தி, தாளமுழுமை.
**1. தாள ஆவர்த்தம்:** ஒரு தாளத்தின் உறுப்பு (அங்கம்) முழுமையும் ஒருமுறை வட்டமாகக் கொட்டி முடிப்பது.
சான்று: ஆதிதாளத்தின் ஆவர்த்தம் 8 எழுத்துக் காலம் (எண்ணிக்கை) கொண்டது.
ஆவர்த்தம் - தடவை (turn) நிறைவித்தல்.
வருநிதி பிறர்க்கு ஆர்த்து மாசாத்துவான் என்பான் (சிலப். 1: 33)
ஆர்த்தும் - நிறைவிக்கும் - மேலது அடியார்க்.
ஆர்த்து > ஆவர்த்து > ஆவர்த்தம் = தாளத்தை நிறைவிப்பது.
**2. சுழலுகை**
ஆவர்தம் சிந்தனம்... சுழற்றேர் மேகர் (நா. தீ. 937)
← செ. ப. அ 250 - 251

**ஆவலம்:** களிக்கூத்து (பெ. அ. 226/II)

**ஆவலி:** → ஆவளி

**ஆவளி:** = ஆவலி
வரிசை, ஒழுங்கு.
தீப + ஆவளி = தீபாவளி
சுர + ஆவளி > சுராவளி = சுரவரிசை.

**ஆவாலை:** பாட்டு வகையுள் ஒன்று,
← செ ப அ. 251

**ஆழ்வார்:**
1. உயர்குடிப்பெண் (பெருந்தேவி)
2. தாளம்
அரையர் சேவையில் தாளத்தை ஆழ்வார் என்றே அழைப்பர் (அரையர். பக். 9)

**ஆளத்தி:** =ஆலப்தி, ஆலாபனை, ஆலாபம், ஆலாபனம், சஞ்சாரம், எழீஇ, செலவு, வக்கிரித் திட்டம், பண்ணீர்மை, ஆளம், ஆளாபம் (Improvisation, elaboration)
**1. இசையை விரிவாக்கம் செய்தல்:** பண், தாளம் முதலியவைகளைப் பாடல் இன்றி விரிவாகப் பாடுதல்.
ஆல - பாட (சிலப். 26· 112)
அகல் > ஆல்; ஆல் + அத்து + இ > ஆலத்தி > ஆளத்தி (செதில் > செதிள்)
ஒப்பு: ஆல் - அகன்ற சட்டி
ஆலக்கரண்டி - அகலக்கரண்டி
ஆலம் - அகலம்; ஆலமரம்
அகலப்புழை > ஆலப்புழை
வண்டுகளானவை ஆளத்தி வைத்து (பெ. தி. 1:2:6 வியாக்.)
ஆளத்தியிலே நிரம்பப் பாடுதல் செலவு (சீவக. 657 நச்சர்.)

வண்டினங்கள் ஆளம் வைக்கும் அரங்கமே (பெரியாழ். திரு. 4:8:6)
ஆளத்தியாவது கானத்துக்குப் பூர்வாங்கமான ஆலாபம் (பெரிய. வா. உரை)
உருகின மரம் கல்லும் ஓர்த்து எழீஇ பாடுகின்றாள் (சீவக. 723)
எழீஇ – ஆலாபனம் செய்து – அடிக்.
ஆளாபம் செய்து பாடும்படி (சீவக 1959. நச்சர்)
தேதா என்றே தேனொடு வண்டுதிசை பாடும் (சூளா. சுய. 194)
தேதா என வண்டொடு தேன்வரி செய்ய (சீவக. 1066)
தேதா – ஆளத்தி (நச்சர்.) தேதா – ஒலிக்குறிப்புச் சொல் (அடிக்.)
*தே, தா என்பவை தாளச் சொற்கள்*
மகரத்தின் ஒற்றால் சுருதி விரவும்,
பகரும் குறில்நெடில் பாரித்து – நிகரிலாத்
தென்னா தெனாவென்று பாடுவரேல் ஆளத்தி
மன்னா இச்சொல்லின் வகை (சிலப். 3: 26 அடியார்க். மேற்.)
இசையோன் வக்கிரித் திட்டத்தை உணர்ந்தாங்கு (சிலப். 3: 41)
இசைப்புலவன் ஆளத்தி வைத்த பண்ணீர்மை(மேலது உரை)
*← செ. ப. அ. 186; 246-47; 255; பெ. அ. 248/II*

2. ஒருவகைவரிக்கூத்து
சிந்து ... புனவேடு ஆளத்தி ... கோத்தவரிக் கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)
→ ஆரத்திப்பாட்டு

**ஆளத்தி பாடும்முறை:** *பதினொரு முறைகளில் ஆளத்தி பாடுதல் வேண்டும்.*
*1) முதல் 2) முறை 3) முடிவு 4) நிறைவு*
*5) குறைவு 6) கிழமை 7) வலிவு 8) மெலிவு*
*9)சமன் 10) வரையறை 11) நீர்மை*
*← சிலப். 3: 41-42 அரும் & அடியார்க்.*

**ஆளத்திமுகம்:** *பண் ஆளத்தியின் (ஆலாபனை) யின் முதற்பகுதி.*
*ஏனைய பகுதிகள்: 1) வளர்ச்சி 2) உச்சம் 3) முடிப்பு.*

**~~ஆளத்தி மூன்றுவகை:~~** ~~பாரணை~~ ஆளத்தி வகை
**பாரணை ஆளத்தி** *- நெட்டெழுத்து கொண்டு கூத்துடன் நிகழும். இவைகொண்டு ஆளத்தி நிகழுங்கால் ஆளத்தி மூன்றுவகையில் அமையும்.*
*1) காட்டாளத்தி - அச்சுடன் நிகழும் - அச்சு > எழுத்து அதாவது சுர ஆளத்தி - சுர ஆலாபனை.*
*2) நிற ஆளத்தி - நிறம் குலையாமல் பாரணையுடன் நிகழும்.*
*3) பண் ஆளத்தி பண்ணையே கருதி வைக்கப்படும்*
*← சிலப். 3: 26 அடியார்க்.*

**ஆளத்தியின் எழுத்துக்கள்:** *இசை விரிவாக்கத் திற்குப் பயன்படும் எழுத்துக்கள்:*
*1) ஐந்து உயிர்க் குறில்கள் - அ, இ, உ, எ, ஒ*
*2) ஐந்து உயிர் நெடில்கள் - ஆ, ஈ, ஊ, ஏ, ஓ*
*3) இரண்டு உயிர்மெய் - தா, நா*
*4) ஒரு மெய் - ம்*
குன்றாக் குறில் ஐந்தும், கோடா நெடில் ஐந்தும்
நின்றார்ந்த மந்நகரந் தவ்வொடு – நன்றாக
நீளத்தாலேழு நிதானத்தான் நின்று இயங்க
ஆளத்தி யாமென் றறி (சிலப். 3: 26 அடியார்க். மேற்.)

**ஆளம்:** → ஆளத்தி

**ஆளாத்தி:** → ஆரத்திப்பாட்டு

**ஆளாபம்:** → ஆலாபனம்

**ஆற்றுப்படை:** *இலக்கிய வகைமையுள் ஒன்று. பரிசில்பெற்ற ஒரு பாணன் அதுபெறக் கருதியவனை ஒரு வள்ளலிடம் (மன்னன்) வழிப்படுத்துதலாகப் பாடப்படும் இலக்கியம்.*
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறார்க் கறிவுறீஇச்
சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும் (தொ. பொ. 88)
வணர்கோட்டுச் சீறியாழ்... யார் என் இடும்பை தீர்க்க என
கிளக்கும் பாண! கேள் இனி... (புறம். 155: 1 – 3)
↑ பாணனை ஆற்றுப்படுத்தல் என்ற முறையில் இவ் இலக்கியங்கள் அமைந்திருந்தாலும் மன்னன் புகழ், நாட்டுவளம் முதலியன பற்றிப் பாடவே புலவர் மரபு இவ்வகை இலக்கியங்களைப் படைத்திருக்கின்றது. இவ்வகை இலக்கியங்களே பின்னாளில் பெரும் காப்பியங்கள் எழுவதற்குத் தொடக்கம் தந்துள்ளன.

**ஆற்றுவரி:** *இசைப்பா வகையுள் ஒன்று; ஆற்றைப் பற்றிய இசைப்பாட்டு.*
இசைப்பாவின் பகுதி... ஆற்றுவரி... மண்டிலம் என்ப (சிலப். 6: 35 அடியார்க்.)
*சிலப்பதிகார கானல்வரியில் திங்கள் மாலை, மன்னு மாலை, உழவரோதை என்று தொடங்கும் 7: 2, 3, 4, 25, 26, 27ஆம் பாடல்கள் ஆற்றுவரியாகும். இவை அறுசீர் விருத்தங்கள். இவை ஒழுகுவண்ணம் என்று அடியார்க்கு நல்லார் கூறியுள்ளார். யாழிலிட்ட பாடல்கள் என அரும்பத உரைகாரர் கூறியுள்ளார். 'தாங்கு, தாங்கு ததீம்' என்னும் சந்தத்தில் மும்மை நடையில் உருவக (ரூபகம்) தாளத்தில் பாடல்கள் அமைந்துள்ளன.*
*← த. க. க. 145/I*

**ஆறாங்காலம்:** *ஒரு தாளத்திற்கு ஏற்பட்டுள்ள காலத்துள் 32 இசைச்சுரங்களைப் பாடுதல்.*

| சுரம் | காலம் | அக்கரம்,அட்சரம் (சுரஎண்ணிக்கை) |
|---|---|---|
| ச | 1 | 1 |
| சரி | 2 | 2 |
| சரிகம | 3 | 4 |
| சரிகமபதநிச் | 4 | 8 |
| சரிகமபதநிச் ச்நிதபமகரிச | 5 | 16 |
| சரிகமபத நிச் ச்நிதப மகரிச<br>சரிகமபத நிச் ச்நிதப மகரிச | 6 | 32 |

**ஆறாரச் சக்கரம்:** *மிறைக்கவி; சக்கரபந்தத்துள் ஒன்று.*
← *மா. அ. 282; செ. ப அ 259*

**ஆறிருமதி:** *பன்னிரு ஓரை (இராசி).*
ஆறிரு மதியினுங் காருக வடிப்பயின் (சிலப். 26: 25)
ஆறிரு மதியினும் - இராசி பன்னிரண்டிலும் (அரும்.)
↑ பன்னிரு ஓரைகளில் 12 தான சுரங்களை அடைத்து பண்டைத்தமிழர் பண் கண்டுள்ளனர்.
→ வட்டப்பாலை – பக்கம் 476–77

**ஆறு எழுத்துக்காலம்:** = *ஆறு அக்கரகாலம், ஆறு அட்சரக்காலம், ஆறு அச்சரக்காலம்.*
*ஒன்றரை எண்ணிக்கை: , , , , , , அல்லது ; ; ;*
← *த. க. க* V/I

**ஆறுபதம்:** → அறுபதம்

**ஆறும் நாலும் அம்முறை போக்கி:**
ஆறும் நாலும் அம்முறை போக்கிக்
கூறிய ஐந்தின் கொள்கை போல (சிலப். 3: 154 – 5)
ஆறன் (உருவகம்) மற்றும் நாலன் நடைக்கு ஆடுதல்.
*முறைபோக்கல் 6/2 + 4/2 = 3 + 2 = 5 கண்ட நடைக்கு ஆடுதல்.*
*ஐந்தின் கொள்கை - கண்ட நடை*
← *தமிழிசையியல் 209; த. க க 86/*IV

**ஆறெறிபறை:** *பாலைநிலத்து மறவர் வழிப் பறியின் போது கொட்டும் பறை.*
ஆறெறி பறையும் சூரைச் சின்னமும் (சிலப். 12: 40)
வழிபறித்துக் கொட்டும் பறை (அரும்.)

**ஆன்மணி:** *மாடுகளின் கழுத்தில் கட்டும் மணி*
கறங்குமணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை (மலைபடு. 573)

**ஆனகத்துந்துபி:** → ஆனகம்

**ஆனகம்:** = *ஆனகத் துந்துபி.*
1. *ஒருமுகமுடைய முரசு வகை* (*செ ப. அ. 261*)
*ஒரு போர்ப்பறை* (*கதி. அ.*)
*மத்தளம், தம்பட்டை* (*ம. அ.*)
ஆனகம் முரசம் சங்கம் முருட்டொடும் இரட்ட ஆடி(கம்ப.6: 24: 3)
ஆனகம், படகம், பேரி, மிருதங்கம், முகில், முழக்கம் (நா. தீ. 464)
ஆனகம் படகத்தின்பேர் ஆகும் துந்துபியும் அப்பேர் (சூடா. 11: 2)
2. தேவதாரு (Red cedar)

**ஆனந்தக் களிப்பு:** *மகிழ்ச்சி மிகுதியால் பாடும் ஒருவகைப்பாடல். நாட்டுப்புற இசை வடிவம். ஒரெதுகையில் அமைந்த இரண்டு அடிக்கண்ணி (வாழ் கள. 2 பக். 774)*

*பொதுவாக ஆனந்தக்களிப்பு நாதநாமக்கிரியை, ஆனந்தபைரவி, செஞ்சுருட்டி ஆகிய பண்களில் ஏழன் சாய்ப்பு (மிசுரம்) தாளத்தில் பாடப்படுகிறது.*

↑ மகிழ்ச்சி மிகுதியால் ஒரு குறிக்கோளை அடைவதற்கு முன்பே அதை அடைந்ததான மனநிலையில் பாடும் களிப்பு மிகுதிப் பாடல்.
*எடு:-* 'ஆடுவோமே பள்ளு பாடுவோமே ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமே' *என்பது பாரதியின் ஆனந்தக் களிப்புப் பாடல். இது வெள்ளையரிடமிருந்து சுதந்திரம் பெறும் முன்பே அதை அடைந்து விட்டதான மனநிலையில் பாடியது.* ஆனந்தம் என்ற *சொல், களிப்பு என்றே பொருள்படும் ஆனந்தக் களிப்பில், ஆனந்தம், களிப்பு என்ற ஒரு பொருள் இரு சொற்கள் அடுக்கி வந்துள்ளது. மாணிக்க வாசகரின்,*
"ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்" (திருவாசக. திருவம். 3)
*என்ற பாடல் ஆனந்தக்களிப்புச் சிந்துப்பா வகைக்கு அடி எடுத்துத் தந்ததாகக் கொள்ளலாம். தாயுமானவர் ஆனந்தக்களிப்பு புகழ்பெற்றது.*
பாவஞ் செய்யாதிரு மனமே - *கடுவெளிச் சித்தரின் ஆனந்தக்களிப்பு. இப்பாடலில் வரும் தாழிசை (சரணம்)யே* "நந்தவனத்தி லோராண்டி" *என்ற பாடல்* "நாதர் முடிமேலிருக்கும் நாகப் பாம்பே" *என்பது பாம்பாட்டிச் சித்தரின் ஆனந்தக்களிப்பு.*

**ஆனந்தக் கூத்து:** *உவகை நடனம்*
துணங்கை அடித்து ஆனந்தக் கூத்து நடிப்பார் (ஒழிவி. 8: 13)
ஆனந்தக் கூத்து ஆடி... சென்றே அறியேனோ (திருவருட். 237)

**ஆனந்த தாண்டவம்:** *தில்லைப் பொன் அம்பலத்தில் நடராசர் புரியும் ஆடல். இது எழுவகைத் தாண்டவங்களுள் ஒன்று. இறைவனின் ஐந்து செயல்களையும் ஒருங்கே காட்டுகின்ற தாண்டவம்.*
*1) ஆக்கல் - துடி ஏந்திய கை*
*2) காத்தல் - அருட் கை*
*3) அழித்தல் - தீச்சுடர் ஏந்திய கை*
*4) மறைத்தல் - ஊன்றிய திருவடி*
*5) அருளல் - தூக்கிய திருவடி*
தோற்றம், துடியதனில்... நாதாந்த நாடகத்தை...
(உண்மை விளக்கம் 40)

**ஆனந்த பைரவம்:** → ஆனந்தபைரவி

**ஆனந்த பைரவி:** = *ஆனந்தபைரவம் (சது. அக)*
*இது படுமலைப்பாலை (நடபைரவி)யின் திறப்பண்.*
சாளகபைரவி, ஆனந்தபைரவி (பரத. 2: 55)

ஆனந்த பைரவம். . . வருதிரி தோடம் போமே (பதார்த்த. 1235)

← பெ. அ. 276 / II

**ஆனந்தம்:** *திருமணப்பாட்டு வகையுள் ஒன்று. திருமணத்தில் திருநாண் (தாலி - மாங்கல்யம்) பூட்டியதும் 'ஆனந்தம் ஆனந்தம்' என்று நாகசுரத்தில் பாடும் பாட்டு*

**ஆனந்தை:** *குறிஞ்சியாழின் (படுமலைப்பாலை - நடபைரவி) திறப்பண்ணான செந்திறத்தின் (மத்ய மாவதி - குறிஞ்சிப்பாணி) பெருகியல் திறத்துள் ஒன்று.*

நட்டபாடை... ஆனந்தை என... (பிங்க. 1382)

**ஆனைமேல் பறை:** *பறையை யானைமேல் வைத்துப் பறை அறைந்து போர் முதலிய செய்திகளைத் தெரிவிக்கும் பண்டைய மரபு.*

அறை பறை என்றே அழும்பில் வேள் உரைப்ப (சிலப். 25: 177)

வடதிசைக்குச் செலவு ஆனைமேல் இங்கே பறையறைய
அடுக்கு மென்றான் (மேலது அரும்)

# இ

**இகரம்:** *செய்யுள், சந்தம், ஓசைநயம்* *(சங் 26)*

## இகுத்தல்:

**1. இசைக்கருவி வாசித்தல்**

நும் மருப்பு இகுத்து (மலைபடு. 391)

**2. ஒலித்தல்**

கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு (அகம். 82: 5)

## இசை:

1. *இனிய ஓசை; சுரங்களின் சேர்க்கை அல்லது இசைவு; தாளம், பண், சொல், பொருள், ஒத்து (சுருதி) சுரம், குரல், கருவிஇசை முதலியவை இசைவது இசை.* (cluster of notes or beats, when combined together, convey a meaning ie., melody or rhythm).

யாழும் குழலும் சீரும் மிடரும் (சிலப். 3: 26)

பல இயற்பாக்களுடனே நிறத்தை இசைத்தலால் இசையென்று பெயராம் (சிலப் 3: 26 அடியார்க்.)

இசைப்பு இசையாகும் (தொ. சொல். 303)

தாழ்குரல் தண்ணுமை ஆடலொடு இவற்றின் இசைந்த பாடல் (சிலப். 3: 27 – 28)

**2. இசைப்பாடல்:**

← *கல்லா. 90: 13*

அவனே பெறுக என் நா இசை நுவறல் (புறம். 379: 2)

இசைபெறு திருவின் வேத்தவை ஏற்ப (மலைபடு. 39)

எழூஉப் புணர் யாழும் இசையுங்கூட (பரிபா. 7: 78)

**3. ஓசை, ஒலி**

அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும் (தொ. எழு. 33)

**4. சுரம்**

ஏழிசையாய் இசைப்பயனாய் (தேவா. 7 திருவாரூர். 10)

*ஐந்திசைப்பண் = ஐந்து சுரப்பண்*

*(முதல் ஐந்திசைப்பண் - குடந். சுந்த. நூல்)*

**5. பண்:**

இசை வழாத கின்னர மிதுனம் (கூர்ம. திருக். 57)

11,991 ஆகிய ஆதி இசைகள் (சிலப். 3:45 உரை)

**6. இனிமை** *(அக. நிக.)*

**7. பொருந்து, உடன்படு, இயை,** (to fit in)

*ஏ > ஏய் - பொருந்து / ஏ > இய > இயை > இசை > இணை = பிணை.*

*இசை - பொருந்து* *(தேவ. 45/4)*

*சப பரி[2] போன்ற இசைச்சுரங்களால் ஆனது ஏழ்பெரும்பாலை.*

இணைவழி ஆராய்ந்து இணைகொள முடிப்பது (சிலப் 7: 5 – 8 அரும்)

*இயம் < இய - இயை - இசை*

*(இயம் - காடு, இனிமை) ; இய > இயக்கி > இசக்கி என்பதாகலாம்*

*இசை - மக்கள் வழக்கு; இயை - புலவர் வழக்கு*

*இசை என்ற வழக்குச் சொல்லே புலவர் வழக்காகியது*

ஒப்பு: முசல் > முயல்; புசல் > புயல்; மசக்கை > மயக்கை; இசக்கி > இயக்கி.

← *த. க. க.* VIII/I

**8. ஒத்து (சுருதி).** *தாளம் பண்ணிற்கு இசைந்துள்ளது; அதாவது சுருதி சேர்ந்துள்ளது.*

**9. பொருந்துமாறு ஒலி செய்**

பறை எழுந்து இசைப்ப (கலித். 104: 29)

**10. இசை(த்தல்), இசைக்கருவியை இயக்கு**

இன்னிசை வீணையில் இசைத்தோன் காண்க (திருவா. 3: 35)

துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்(தொ. சொ. உரி. 60)

**11. இசைத்தமிழ்**

முத்தமிழுள் ஒன்றான இசைத்தமிழ். அது முத்தமிழ்க்கும் பொது (சிலப்: 6: 35 அடியார்க்.)

. இயலிசை நாடகமென்று சொல்லப்பட்ட மூவகைத் தமிழ்களும் (சிலப். 3: 45 அடியார்க்.)

**12. சொல்லுதலின் ஒருவகை**

*இசைத்தல் - ஒன்றைக் கோவைபட அல்லது ஒழுங்குபடச் சொல்லுதல்* *(தே. நே. 191/11)*

**13. ஓசை** (sound, noice, rhythm) *(தொ. க. க 28)*

← *தமிழும் இசையும் 15; த. க. க* X/III; *153 - 4/I*

## இசை அமைத்தல்:

= இசைப்புணர்ப்பு, நல்லிசை நிறுத்தல், பண்அமைப்பு, மெட்டுப்போடுதல், இசைப்படுத்தல்.

*இசை அளவு கொள்ளும் பாடலுக்குப் பண், தாளம், மற்றும் நடையுடன் இசைப்படுத்துதல்.*

இசைந்த பாடல் இசையுடன் படுத்து (சிலப். 3: 28)

இன்புற இயக்கி இசைபட வைத்து (சிலப். 3: 66)

காந்தாரம் இசையமைத்துக் காரிகையார் பண்பாட (தேவா. 1: 130: 6)

விண்ண அதிர் இமிழ் இசைகடுப்ப பண் அமைத்து (மலைபடு. 2)

→ இசைப்படுத்தல், இசைப்புணர்ப்பு.

**இசை அமைப்பாளன்:** → இசையாசிரியர்

**இசை அரங்கு:** = (சங்கீதக் கச்சேரி)
*பாடல் அரங்கம் (Concert)*
யாணர் வண்டினம் யாழிசை பிறக்க...
இரங்கு முரசினான் குன்று (பரிபா. 21: 35 – 38)
இமிழ் இசை அருவியொடு இன் இயம் கறங்க (முருகு: 240)
தீம்கனி... இசைமணி எறிந்து காஞ்சிபாடி...
நெடுந்தகை புண்ணே (புறம். 281: 1 – 9)
வரிநவில் பனுவல் புலம்பெயர்ந்து இசைப்ப...
நல் இசை உள்ளி (புறம். 135: 6 – 9)
கட்டளை அன்ன வட்டரங்கு இழைத்து (நற். 3: 3)
அவைபுகழ் அரங்கின் மேல் ஆடுவாள் அணிநுதல் (கலித். 79: 4)
பாடுவார் பாடல் பரவல்...
கொண்டிய வண்டு கதுப்பின் குரல் ஊத (பரிபா. 10: 116 – 120)
ஒருதிறம் யாணர் வண்டின் இமிர்இசை எழ...
ஒருதிறம் மண்ணார் முழவின் இசை எழ (பரிபா. 7: 10 – 13)

**இசை அளவு பா:** *சொல் உருவம் பெற்றுப் பின்னர் இசை உருவம் பெறுவன.*
இசைப்பா, இசைஅளவுபா என்னும் இருபகுதியுள்
(சிலப். 6. 35அடியார்க்.)
*எடு:- பரிபாடல்கள் சொல் உருவம் பெற்றுப் பின்னர் இசைப்படுத்தப் பட்டவை.*

**இசை இடைவெளி:** *இசைச்சுரங்களுக்கு இடையே உள்ள அலகு (சுருதி) இடைவெளி.*
*எடு:-*
*செம்பாலை (அரிகாம்போதி - ச ரி² க² ம¹ ப த² நி¹*
*4 4 3 2 4 3 2*
*'ச' வுக்கும் 'ரி²'வுக்கும் இடையிலுள்ள இடைவெளி - 4 அலகு.*
*← சிலப். 3: 70 - 71அடியார்க்.*

**இசை இயல்:** இசை இலக்கணம், இசை அறிவியல், இலட்சணம் (Musicology, Theoretical music, The science of music, Pure Music)
*தாளம், ஒத்து (சுருதி), சுரம், பண், இசைவடிவம் (இசை உரு), இசைக்கருவி முதலியவைகளைப் பற்றிய இலக்கணம்.*
*← த. வ 1- 2*

**இசை உருப்படிகள்:** *இசைப்பாடல்கள் கண்ணி, சிந்து, வண்ணம், சந்தம், கீதம், கீர்த்தனை, பதம், முதலியன இசை உருப்படிகளாகும்.*

**இசை உருவு:** *இசைஉருவம், இசைவடிவம். பாடலின் ஒலிவடிவம் இது பண்ணினாலும் இசைச்சுரங்களாலும் தாளத்தாலும் ஆக்கப்படுவது.*
*← த. க. க. 177/I*

**இசை உளவியல்:** *மானிடர் இசையினை எவ்வாறு உள்வாங்குகின்றனர் அல்லது இசையோடு எத்தகைய நடத்தை முறைகளை மேற்கொண்டிருக் கின்றனர் என்பவற்றை ஆராய்வது.*
*← வாழ். களஞ். 3 பக். 14*

**இசை ஊதுதல்:** *ஒத்து ஊதுதல், சுருதி வாசித்தல், கேள்விகூட்டல்.*
பண்ணார் தும்பி பரந்து இசை ஊத (பரிபா. 17: 12)

**இசை எடுத்தல்:** *இசைபாடுதல்.*
என்னை ஆளுடை நாயகிக்கு இசை எடுப்பவள் (கம்ப. t 9 மிகை 3 – 3)
*← பெ அ. 312/II*

**இசை எழால்:** *இசையை எண்வகையால் எழுப்பல்; இசை உருவாக்கம்*
பண்ணல் பரி வட்டணை ஆராய்தல் தைவரல்
கண்ணிய செலவு விளையாட்டு கையூழ்
நண்ணியகுறும் போக்கு என்று நாட்டிய
எண் வகையால் இசை எழீஇ (சிலப். 7: 5 – 8)

**இசை எழுத்து:**
*கு து கை உ இ வி தா எனவும்*
*ச ரி க ம ப த நி எனவும்*
*இசைக்குறியீடாக வரும் 7 ஒலி எழுத்துக்கள்.*
ச ரி க ம ப த நி என்று ஏழு எழுத்தால் தானம்
வரிபரந்த கண்ணினாய் வைத்து (சிலப். 3: 26அடியார்க். மேற்.)

**இசை ஏழு:**
**1. இசையின் ஏழு கோவைகள்** - *குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் - கு, து, கை, உ, இ, வி, தா - ச ரி க ம ப த நி.*
**2. ஏழ்பெரும்பாலை** - *செம்பாலை (அரிகாம்போதி), படுமலைப் பாலை (நடபைரவி), செவ்வழிப்பாலை (இரு மத்திமத்தோடி), அரும்பாலை (சங்கராபரணம்), கோடிப்பாலை (கரகரப்பிரியா), விளரிப்பாலை (தோடி), மேற்செம்பாலை (கல்யாணி)*
குரல் முதலாயுள்ள ஏழிசையிலும், சரிகமபதநி என்னும் ஏழு எழுத்தினையும் (சிலப். 5: 35 _ 7அடியார்க்.)
.. யாழின் ஏழிசை இன்பமும் தெரியப்பாடும் பாடலையும் (சிலப். 6. 18 _ 25அடியார்க்.)

**இசை ஒலிப்புமுறை:** *சொற்கட்டுமுறை*
*1) சரிகம - கோவை (சுர) ஒலிப்பு சொற்கட்டு*
*2) தனதன - சந்தக்குழிப்புச் சொற்கட்டு*
*3) தகதிமி - (மத்தள) முழவுச் சொற்கட்டு.*

**இசைக் கணித இயல்:** *இசை பற்றிய கணக்கு இயல் அலகுக்கணிதம், ஒலி அளவுக் கணிதம், அலகு*

மாற்றுக் கணக்கு, இணை, கிளை, நட்பு, பகை நரம்பு களைக்கண்டுபிடிக்கும் கணக்குமுறை, தானத்தில் நிற்கும் சுரங்களின் அலகு (சுருதி) அளவுக் கணக்குகள், ஒலியியல் கணக்குகள், இசை மண்டில அளவுகள், தாள இயல் கொட்டு முழக்கு வகைகளின் கணக்குகள் முதலியவை (த. க. க. 154/I)

## இசைக் கதைச்சொற்பொழிவு:

= கதாகாலட்சேபம், கதைப்பிரசங்கம், பிரசங்கம், சங்கீத உபன் யாசம்.

கதாகாலட்சேபம் என்பது ஒரு தனிநபர் நடிக்கும் நாடகம் (Mono acting) மராத்திய மொழியில் கையாளப்பெற்ற 'அபங்' என்ற வடிவமே கதாகாலட் சேபமாகத் தமிழ்நாட்டில் உருவெடுத்ததாகக் கூறுவர். இதை நடத்துபவர் பாகவதர் என்று அழைக்கப் பட்டனர். உசித்தாளம், குழித்தாளம், இலைத்தாளம், சப்புளாக் (சிப்ளா) கட்டை, மத்தளம், கஞ்சிரா, கடம், மோர்சிங் பயன்படுத்துவர். வைணவக் கோயில்களில் நடைபெறும் அரையர் சேவைக்கும் அரிகதாகாலட்சேபத்திற்கும் நெருங்கிய தொடர்புண்டு.

↑ உடுக்கடிப்பாட்டு, நொண்டிநாடகம், குறவஞ்சி நாடகம் முதலியவற்றினின்றும் இவ்வடிவம் வந்திருக்கலாம்.

← இசை நாடகமரபு பக் 28 - 29

## இசைக் கரணம்:

இசையின் நுண்தொழில்; இசை நரம்புகளை அசைக்கும் வகை; இசைக் கருவிகளை இயக்கும் பல்வேறு தொழில்நுட்பங்கள். அவை எண் வகைப்படும்:

1) வார்தல் 2) வடித்தல் 3) உந்தல் 4) உறழ்தல்
5) உருட்டல் 6) தெருட்டல் 7) அள்ளல் 8) பட்டடை

திறத்து வழிப்படூஉந் தெள் இசைக்கரணத்து (சிலப். 8: 43)
வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல்
சீருடன் உருட்டல் தெருட்டல் அள்ளல்
ஏருடைப் பட்டடை என இசையோர் வகுத்த
எட்டுவகையின் இசைக்கரணத்து (சிலப். 7: 12 – 15)
எண்ணுறு வார்த்தல் வடித்திடல் முதலாம்
எட்டுஇசைக் கரணமும் பயப்ப (திருவிளை. இசைவாது. 37)
(பாணபத்திரனின் மனைவி வார்தல் முதலிய எண்வகை இசைக்கரணத்துடன் பாடினாள்)

← கூர்மபுராணம், கண்ணனை மணம்புணர்ந்த அத்தியாயம்.

## இசைக்கருவி:

= இயம், தூரியம், கலம், வாத்தியம், வாச்சியம்.

இசை நிகழ்ச்சிகளில் முதன்மையாகவும், துணையாக வும் (பக்க வாத்தியம்) பயன்படும் இசைக்கருவிகள்

இயங்கல் ஓம்பிநும் இயங்கள் தொடுமின் (மலைபடு. 277)
அந்தி விழவின் தூரியம் கறங்க (மதுரைக். 460)
காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை (புறம். 206: 10)

இவ் இசைக்கருவிகள் பல வகைப்படுவன.

1. **தோல்கருவி** - பறை, மத்தளம், தவுல், உடுக்கை (membrano phones)
2. **துளைக்கருவி (காற்றுக்கருவி)** - புல்லாங்குழல், முகவீணை, நாகசுரம் (Aero phones)
3. **நரம்புக்கருவி (தந்திக்கருவி)** - யாழ் (வீணை), துந்தினா, கின்னரம் (வயலின்) (Chordo phones)
4. **கஞ்சக்கருவி** - சிங்கி, இலைத்தாளம், குழித்தாளம் (Auto phones or Idio phones)
5. **திண்பொருள்கருவி** - பூமித்துந்துபி
6. **இயந்திரக்கருவி** - ஆர்மோனியம், பியானோ, ஆர்கன்
7. **மின்கருவி** - கீ போர்டு.

← த. க. க. 157/I; த. ப. வ. 289/III

இவ்வகை இசைக்கருவிகள் பல, அவை எழுப்பும் ஒலியடிப்படையிலும் பெயர் பெறுவன.

**மத்தளம்** - மத்து, மத்து என்று ஒலி எழுப்புவதால்.
**சல்லரி** - சல் சல் என்று ஒலி எழுப்புவதால்.
**கிண்கிணி (கிங்கிணி)** - கிண்கிணி என்று ஒலி எழுப்புவதால்
**சாலர்** - சலசல என்று ஒலி எழுப்புவதால்.
**சிங்கி** - சிங்சிங் என்று ஒலி எழுப்புவதால்.
**டங்கா** - டங்டங் என்று ஒலி எழுப்புவதால்.
**டமாரம்** - டம் டம் என்று ஒலி எழுப்புவதால்.
**மொந்தை**- மொந்து, மொந்து என்று ஒலி எழுப்புவதால்

← தே.நே. 155/IV

## இசைக்கவை:

(Tuning fork): இசைக்கருவிகளில் ஒத்து (vib. of notes)சேர்த்தல் மற்றும் ஒலி இசைவு உண்டாக்குவது முதலியவைகளுக்குப் பயன்படும் கருவி.

## இசை கடவுதல்:

பாடுதல்.

வண்டு இசை கடவாத் தண்பண்ம் போந்தை (பதிற். 70: 6)

## இசைகாரர்:

= பாடுவோர், பாணர், இசையோர்.

பாலேய் தமிழர், இசைகாரர், பத்தர், பரவும் ஆயிரத்தின் பாலே (திருவாய். 1: 5: 11)
விண்ணப்பமும் செய்வார் நம் பாடுவான் இசைகாரர்... (அரையர் பக். 2)
இன்னிசைகாரர், மதங்கர், பாணர் (திவா. 213)
பெரும்பாணர் - குழலர்பாணர் முதலாய பெரிய இசைகாரர் (சிலப் 5: 35.7அடியார்க்.)
இசையோன் பாடிய இசையின் இயற்கை (சிலப். 3: 64)

## இசைக்கிளவி:

= இசைப் பாடல்.

பண்ணும் இசைக்கிளவி பத்திமை பாடவல்லார்...(தேவா. 7: 84: 10)

இசைப்பாடல்கள் மீண்டும் மீண்டும் வழிவழியாகக் கேட்கப்பட்டுக் கற்கப்படுவதால் இசைக்கிளவிகள் எனப்பெயர் பெற்றன

கிளத்தல் - மீண்டும் மீண்டும் சொல்லுதல்

← த. க. க. 158/I

**இசைக்கிளை:** இசைபாடும் முறை.

ஆயத்தம், எடுப்பு, உற்கிரகம், சஞ்சாரம், இடாயம் என்ற ஐந்து இசைவகை

← பெ. அ. 309/II

**இசைக்குழல்:** குழல்கருவி; புல்லாங்குழல், பெருவங்கியம், திமிரி, வங்கியம் முதலியன

வாரி, வங்கியம் மற்றிவை இசைக்குழல் (பிங்க. 1428)

**இசைக்குழல்பிண்டிஇலக்கணம்:** முறைப் படி கடைந்து, இட முகத்தை அடைத்து, வல முகத்தை வெளியாக இட்டு, சீராகத்துளை அமைக்கும் புல்லாங்குழல் செய்முறை இலக்கணம்.

← சிலப். 3: 26 பிண்டி இலக்கணம். அடியார்க்.

**இசைக்குறுந்தகடு:** ஒலிக்குறுந்தகடு, இசைக் குறுவட்டு (Audio Compact disc (C.D).

இசைத்தட்டு, ஒலிநாடா என தொடக்கத்தில் பதிவுபெற்ற இசைமுறை தற்காலம் குறுந்தகடு களுக்கு (Compact disc) மாறியுள்ளது. அவ்வாறு இசைப்பதிவு பெற்றவை இசைக்குறுந் தகடுகளாகும்.

**இசைக்கூறு:** இசைப்பகுதி, பாடலின் பகுதி, (phrase)

எடு:- எடுப்பு (பல்லவி), முடுகியல்அடி போன்றன பெரியபாடலின் கூறாகிய சிறுதுணுக்கு

(சிதம்பரம் செட்டியாரின் ஆங். தமிழ் சொற்களஞ். 733)

**இசைக் கூறுபாடு:** பாடலை இசைப்படுத்தும் போது வலிவு, சமன், மெலிவு ஆகிய தானங்களுக்கு ஏற்றவாறு இசையமைத்தல்

வலிவு மெலிவு சமனுமெல்லாம்
பொலியக் கோத்த புலமையோனுடன் (சிலப். 3: 93 – 94)

இப்படியால் வலிவும், மெலிவும், சமனுமெனப் படாநின்ற தானநிலையுடைய இசைக்கூறுபாடு... (மேலது அடி)

(தான நிலை - இயக்கு, ஸ்தாயி, octave)

**இசைகொள் எழுத்து:** காதுக்கு இனிமை தரும் பாடல்களை இயற்றுவதற்குரிய எழுத்துக்கள். நெடில் எழுத்துக்களும், மெல்லின, இடையின, ஒற்றுக்களும் மிகுதியாகப் பயின்றுவரும் பாடல்களே இனிமை பயக்கும். இவையே இசைகொள் எழுத்துக்கள்.

எடு:– 1. நாகநாறு நரந்தம் நிரந்தன
ஆவும் ஆரமும் ஓங்கின எங்கணும் (சிலப். 12: பாடல் 1)

நாக, நாறு, ஆவும், ஆரமும், ஓங்கின-நெடில் எழுத்துப் பயின்று வந்துள்ளன.

2. மாசில் வீணையும் மாலை மதியமும்... (தேவா. 4: 90:1 (6112)

என்ற பாடலில் ம், ன், ண், ந் போன்ற மெல்லின ஒற்றுப் பயின்று வந்துள்ளன.

3. சுடரொடு திருதரு முனிவரு மமரரு... (சிலப். 12: (17)

ர், ல், ன், ள் போன்ற இடையின ஒற்றுப் பயின்று வந்துள்ளன

சொல்லிய இயல்பினில் சித்திர வஞ்சனை
புல்லிய அறிந்து புணர்ப்போன் (சிலப். 3: 56 – 57)

சித்திரப் புணர்ப்பாவது - இசைகொள்ளும் எழுத்துக்களின் மேல் பண்ணீர்மை நிறுத்தல் (அரும்)

→ இசைகொள்ளா எழுத்து

**இசைகொள்ளா எழுத்து:** வல்லின மெய்.

க், ச், ட், த், ப், ற் என்னும் ஆறு வல்லின மெய்கள் வரும் இடங்கள் இசை தடைபடும் இடங்களாகிறது இவை குரலை அடைப்பதால் இழும் எனும் இசையைத் தடுக்கும்.

வல்லொற்றுக்கள் - நிறுத்தொலிகள் (stops), அடைப் பொலிகள் (Pure mutes) வெடிப்பொலிகள் (plosives) என வழங்கப் படுகின்றன. சிலப்பதிகாரத்தில்

பொழில் தரு நறுமலரே புதுமணம் விரி மணலே

இது முதல் 3 பாடல்களும் (7: பாடல் 14,15,16) மற்றும் 7: பாடல் 35 ஆகியவற்றுள் ஒரு வல்லொற்றுக்கூட வரவில்லை.

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது (தொ.பொ. 543)

சொல்லிய இயல்பினில் சித்திர வஞ்சனை (சிலப். 3: 56)

வஞ்சனைப் புணர்ப்பாவது - இசை கொள்ளா எழுத்தின் மேல் வல்லொற்று வந்துழி மெல்லொற்றுப்போல் நெகிழ்ந்துப் புணர்த்தல் (அரும். உரை)

←சிலப். தமிழன் படைத்த கலைக்கருவூலம் பக். 26,27,72

**இசைகோள்:** தாளம்

**இசைச்செறிவு:** கூடைப்பாடல் இசைச் செறிவுடையது. கூடை நடை என்பது மூன்றாம் காலம் பாடுவது.

| முதல் நடை (விளம்பம், சௌக்கம்) | வாரம் (இரண்டாம் நடை) | கூடை (மூன்றாம் நடை) | திரள் (நான்காம் நடை) |
|---|---|---|---|
| ச | சரி | சரிகம | சரிகமபதநிச் |
| 1 | 2 | 4 | 8 |

முதல்நடையில் ஓர் எழுத்தென்றால் கூடைநடையில் பாடும்போது 4 எழுத்துக்களை அடக்கிப்பாடல் வேண்டும். எனவே இந்நடையில் இசை செறிவுபெறும்

...கூடைப்பாடல் சொற்செறிவும் இசைச்செறிவும் உடைத்தாதலானும்... (சிலப். 3: 67அரும்.)

**இசைஞானி:** இசைஞானியார்; சுந்தரமூர்த்தி நாயனாரின் அன்னையார்.

இசைஞானி சிறுவன்... உரைசெய் பண் பயிலும் பத்து

(தேவா. 7: 16: 11)

**இசைத்தமிழ்:** இசையின் இலக்கண மரபு; இசையியல் (Musicology)
இயல்தமிழ் - தமிழ் இயலின் இலக்கணம்
இசைத்தமிழ் - தமிழ் இசையின் இலக்கணம்
நாடகத்தமிழ் (கூத்துத்தமிழ்) - தமிழ் நாடக இலக்கணம்
இயல்தமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் (பிங்க. 1332)
இயற்றமிழ் இசைத்தமிழ். மூன்று பண்டத்தினையும் (மாறனலங். பாயி. 20 உரை)
இனி இசைத்தமிழில் வருங்கால்.. (சிலப். 6: 35 அடியார்க்.)
இயல் இசை நாடகம் என்று சொல்லப்பட்ட மூவகைத் தமிழ்களும் (சிலப். 3. 45 உரை)
→ இசை

**இசைத்தல்:**
1. ஓசை வேறுபாட்டுடன் சொல்லுதல்
2. பாடுதல், இசைக்கருவி மீட்டுதல்
← தே.நே. 227/9
3. பேசுதல்
இசைத்தல், இறுத்தல், இயம்பல், புகறல், பிதற்றல் என்றிவை பேசுதலாகும். (பிங்க. 2005)
4. புணர்த்தல் *(நா.தீ.)* (to join, unite)
5. உச்சரித்தல், ஒலித்தல்
மொழியின் எழுத்துக்களை உச்சரித்தல், இசைச் சுரங்களை, சொல்லை ஒலித்தல் (the articulation of a letter or note or word)

**இசைத்தூண்கள்:** இசையின் எழுவகைச் சுரங்களையும் எழுப்பவல்ல உட்துளையுடைய கல்தூண்கள்.
மதுரை, நெல்லை, ஆழ்வார் திருநகரி, கிருட்டிணாபுரம், செண்பகராம நல்லூர், திருப்பெருந்துறை, தென்காசி, குற்றாலம், சுசீந்திரம், திருவானைக்கா, தாடிக்கொம்பு, தாராசுரம் முதலிய ஊர்க் கோயில்களில் இசைத் தூண்கள் உள்ளன.

**இசைதிரிந்து இசைத்தல்:** சொல்லொடு சொல் தொடர்புபடும் வாய்பாட்டான் தொடராது பிறதொரு வாய்பாட்டான் தொடருதல்.
தாரினனாய், மாலையனாய், கண்ணியனாய் என்று தொடர்பு ஏற்படும் வாய்பாட்டான் தொடராது,
தாரன், மாலையன், மலைந்த கண்ணியன் (அகம். கட. வாழ்த்.) என்று வருதல் போல்வன. (தொ. பொ. 193. இளம்.)

**இசைநாடகம்:** = கீர்த்தனை நாடகம் (Opera)
பல்வேறு இசை வடிவங்களைக் கொண்டு இசைக்கு முக்கியத்துவம் தந்து கதையை விளக்கும் நாடகம். இந்த இசை வடிவங்களுள் கீர்த்தனையே முக்கியமானது. எனவே இசை நாடகங்களைக் கீர்த்தனை நாடகம் என்கிறோம்.
எடு:- அருணாசலக் கவிராயரின் இராம நாடகக் கீர்த்தனை. குறவஞ்சி, பள்ளு முதலியவை இசை நாடகங்களே
ஒரு பாரம்பரிய நாட்டுக் கூத்தனுக்கு நடிப்பைவிட அவனது அசைவுகள், தாள அளவு முக்கியம். விலாச வகை நாடகங்கள் மேற்கிளம்பியதுடன் முதன் முதலாகக் கூத்துக்கள் நடன அசைவிலிருந்து விடுபட்டன. ஆனால் நடன இழப்பை ஈடுசெய்ய இசைக்கு அழுத்தம் கொடுக்கப்பட்டது. (ப. த. நா. 388)
↑ இவ்வாறு இசைத்தமிழின் ஒருகூறான ஆடல் நமது கூத்துக்களில் மறையலாயிற்று. பின்னர் தோன்றிய விலாச நாடகம், பார்சி நாடகம், ஸ்பெஷல் நாடகங்களில் இசை கோலோச்சியது. பம்மல் சம்பந்த முதலியார் போன்றோர் மற்றும் மேல்தட்டினர் நாடகத்துறையுள் நுழைந்தபோது இசைத்தமிழின் மற்றொரு கூறான இசையும் நமது நாடகத்திலிருந்து மறையலாயிற்று. இன்று நமது நாடகங்கள் வெறும் உரையாடல் (இயல்தமிழ்) நாடகங்களாகவே உரு மாறியுள்ளன. இது மேல்தட்டு நாடகத்தார் மத்தியில் நடந்த மாற்றம் மட்டுமே. ஆனால் தெருக்கூத்து போன்ற நாட்டார் கூத்து முத்தமிழையும் உள்ளடக்கியதாகவே உள்ளது.

**இசைநிறை:** இசைநிறைத்தல் (expletive, sound filler)
இசைநீண்டு இசைக்குறைவை நிறைத்தல். செய்யுளில் சில சொற்களில் தாளத்திற்கு வேண்டிய எழுத்துக்கள் குறையும்போது சில எழுத்துக்கள் நீண்டு ஒலித்து இசையை நிறைவு செய்யும் (Poetic expletive used to fill a gap in the metre)
துவரிதழ்ச் செவ்வாய்த் துடியிடை யோயே (சிலப். 6: 26)
யோயே என்பதிலுள்ள 'ஏகாரம் இசைநிறை' (அடியார்க்.)
உய்திக்காலம் உரையீரோ என (சிலப். 10: 240)
உரையீரோ - ஓகாரம்; இசைநிறை (அடியார்க்.)
← த. க. க. 166/I; தொ. க. க. 44

**இசைநிறை அசை:** அசையே இசைநிறைக்காக வருவது.
ஏ, குறை இசைநிறை அசைச்சொல் (பிங்க. 2097)
ஏயும் குறையும் இசைநிறை அசைநிலை (திவா. 1814)

**இசைநிறை அளபெடை:** செய்யுள் யாப்பு தவறாகாத வாறு இசைநிறைக்க வரும் அளபெடை.
கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் (குறள். 2)
தொழார் என்றிருப்பின் வெண்பாத் தவறாகும். 'ழாஅ' என்று ஓசையை நீட்டி 'புளிமா'வாகச் செய்யப்பட்டதால் வெண்பா ஓசை நிறைவு பெறுகிறது.
(தொழாஅர் - நிரைநேர் - புளிமா)
← கவிஞராக. 165

**இசைநிறை ஏகாரம்:** = ஈற்றசை ஏகாரம்.
பாடலில் ஈற்றசை இசைக்காக நீட்டம் வேண்டி ஏகாரமாய் முடிவது. (ம. அ.)

சிலம்பு குன்றக்குரவையில் பாடல் 4, 5, 6 ஆகியவை களில் 'நெஞ்சன்றே' என்பதிலுள்ள ஏகாரம் - இசைநிறை ஏகாரம்.

'ஏயே இவளொருத்தி பேடி' இங்கு ஏயே என்பதில் பின்புள்ள 'யே' (ஏ) என்பது இசைநிறை ஏகாரம்.

பிரிநிலை வினாஎண் ஈற்றசை தேற்றம் இசைநிறை எனவா றேகா ரமமே (நன். 422)

நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய கூட்டி... (தொ. எ. 6)

← த. க. க. 303, → ஈற்றசை ஏகாரம்

**இசைநிறைக் கிளவி:** தாளம் முடிவு பெறுவதற்காக அல்லது யாப்பு நிறைவிற் பொருட்டு இசைப் பாடல்களின் இறுதியில் வரும்சொல்

சிலப்பதிகாரம் குன்றக்குரவையில் 'என்றொன்றும் காணேம்' என்று தொடங்கும் பாடல் முதல் 4, 5, 6ஆம் பாடல்கள் வரை ஈற்றடிகளில் வரும் 'நெஞ்சன்றே' என்பதிலுள்ள 'அன்றே' இசைநிறைக்கிளவி.

அன்றே என்றது இசைநிறைக்கிளவி

(சிலப்: 24· (4) அரும். உரை)

**இசைநிறைச்சொல்:** இசையை நிறைவிக்கும் சொல் இசைநிறைப் பொருளைத் தரும். ஏ, ஓ, தெய்ய, மாது, அம்ம, தில்ல என்னும் மொழிகள் (ம. அ.)

எடு:- தில்லேலோ > தில்ல + ஏலோ

**இசைநூல்:** = நரம்பின் மறை, யாழ்நூல்

இசைக்கலை பற்றிய பனுவல்; இசை இலக்கணம் கூறும் நூல்.

இசை நூல்வழக்காலே இணை நரம்பு தொடுத்து...

(சிலப். 3: 60அரும்.)

இசை நூல் வழக்காலே... (மேலது. அடியார்க்.)

இசையொடு சிவணிய நரம்பின் மறைய (தொ. எ. 33)

இசையொடு சிவணிய யாழின் நூலும் (பெருங். 1: 32: 5)

**இசைநெறி மூன்று:** நிலம், கலம், கண்டம்

இசைக்கு அடிப்படை தாளமாதலால் முதலில் நிலம் கூறப்பட்டது.

நிலம், கலம், கண்டம் என்னும் நெறிமூன்றினும்...

(சிலப். 8: 24அரும்.)

நிலம் - தாளம்; கலம் - இசைக்கருவி; கண்டம் - வாயால் பாடுதல்

← த. க. க. 215/III

**இசைப்படுத்தல்:** இசையமைத்தல்

இசைந்த பாடல் இசையுடன் படுத்து (சிலப். 3: 28)

உருவுக்குச் சொற்படுத்தியும் இசைப்படுத்தியும் ..

(சிலப். 3:150அடியார்க்.)

→ இசை அமைத்தல், இசைப்புணர்ப்பு.

**இசைப்பயிற்சிவரிசைமுறை:** இசைப்பயிற்சி பெறுவதற்கு ஏற்பட்ட வரிசைமுறை. இவை ஒவ்வொன்றையும் படிமுறையாகக் கற்றுத் தருவது மரபாகும்

1) சுரவரிசை - சுராவளி
2) இரட்டை வரிசை - ஜண்டை வரிசை
3) மேல்தான வரிசை - மேல் ஸ்தாயிவரிசை
4) கீழ்த்தான வரிசை - கீழ் ஸ்தாயி வரிசை
5) தாண்டு வரிசை - தாட்டுவரிசை
6) அணி வரிசை - அலங்காரம்
7) உருப்படி - கீதம்
8) வண்ணம் - வர்ணம்

**இசைப் பழமொழி:**

1) பாடப் பாட ராகம், மூட மூட ரோகம்
2) குரல் இல்லாதவனுக்கு விரல்
3) இழுக்குடைய பாட்டுக்கு இசைமேல்
4) உரலுக்கு ஒரு பக்கம் இடி
மத்தளத்துக்கு இருபக்கம் இடி
5) காரிகை கற்றுக் கவிதை பாடுவதைவிட
பேரிகை கொட்டிப் பிழைப்பு நடத்தலாம்.
6) ஒத்து ஊதுகிறான்
7) தலைச்சன் பிள்ளைக்காரிக்குத் தாலாட்டும்,
புருசனை இழந்தவளுக்கு ஒப்பாரியும் தானே வரும்.
8) ஏற்றப்பாட்டுக்கு எதிர்ப்பாட்டு இல்லை
9) பின்பாட்டுப் பாடறான்
10) ஆடிக்கறக்கிற மாட்டை ஆடிக்கறக்கணும்.
பாடிக்கறக்கிற மாட்டைப் பாடிக் கறக்கணும்.
11) இங்கிதம் தெரியாதவனுக்குச் சங்கீதம் எதற்கு
12) தண்டோரா போட்டுவிட்டான்
13) ஆதி நாட்டை அந்தம் சுருட்டி

**இசைப்பா:** இசையொடு சேர்ந்த பாட்டு இசைப்பாட்டு. (Lyric, musical composition, libretto). பாடல் இயற்றும் போதே இசை உருவம் பெற்று சொல்லுடனும் இசை உருவுடனும் சேர்ந்தே மலர்ந்துள்ள பாடல். இவை:

செந்துறை வெண்டுறை தேவபாணி இரண்டும்
வந்தன முத்தகமே வண்ணமே – கந்தருவத்
தாற்றுவரி கானல்வரி முரண் மண்டிலமாகத்
தோற்றும் இசை இசைப்பாச் சுட்டு – (இசைநுணுக்கம்)
செப்பரிய சிந்து திரிபதை சீர்ச்சவலை
தப்பொன்றுமிலாச் சமபாதம் – மெய்ப்படியும்
செந்துறை வெண்டுறை தேவபாணி வண்ணமென்ப
பைந்தொடியா இன்னிசையின் பா (பஞ்சமரபு. 87)

← த. க. க 169

**இசைப்பாட்டு:**

பாணி, வரி, பண், இசை, கானம், கொளையே
பாணே, கீதம், கந்தருவம், கேயம்
காமரம் என்று இவை இசைப்பாட்டு ஆகும் (திவா. 1866)
வரி, பண், கேயம், விளி, இராகம்

கொளை, கந்தருவம், கீதம், பாணி, காமரம் (சூடா. 10:2)
... இசைப்பாட்டும் உடைய..
(சிலப். பதிகம். 55 _ 60 அடியார்க்.)

## இசைப்பாணர்:
இசைவல்ல பாண் பிரிவினர் (Bards, Minstrel)
புரவலரை அணுகி இசைபாடிப் பரிசில் பெற்று வாழ்ந்த பாடகர் பிரிவினர் இவர்கள் பாணருள் ஒரு வகையினர்.
இயற்புலவரே பொருள்வைப்பார் இசைப்பாணரே கூடஞ்செய்வார் (தெ. இ. க. 17 592)
பாணரும் இசைப்பாணரும் யாழ்ப்பாணரும் மண்டைப் பாணரும் எனப் பலராம் (தொல். பொருள். 91 நச்சர்)
← த. க. சொ. 61/1

## இசைப்பாவின் சாதி ஓசை:
இவை மூன்று. சுத்தம், சாளகம், தமிழ்.
.. சுத்தம் சாளகம் தமிழென்னும் சாதியோசைகள் மூன்றினுடனும் (சிலப் 6· 35 அடியார்க்.)

## இசைப்பு:
சேருதல், புணர்ச்சி, இசைவு, இயைபு.
1. யாழ் முதலியன வாசித்தல் (தொ. சொ. 310)
2. இசைவு - இயைபு (combination)
இயைபே புணர்ச்சி இயைப்பு இசைவு ஆகும் (திவா. 1710)
இசைப்பின் பேர் புணர்ச்சி மற்றை இசைவும் ஆம் இயையும் ஆமே
(சூடா. 9: 22)
3. பொருந்துகை, புணர்ச்சி, சேருதல் (joining so as to fit in)

## இசைப்புகல் நான்கு:
குழலில் காற்றுப் புகுந்து நான்குவகைப் பண்களை உருவாக்கும் முறை.

| 7 துளை (ஏழ்புழை) | 6 துளை | 5 துளை (ஐம்புழை) | 4 துளை |
|---|---|---|---|
| பண் | பண்ணியல் | திறம் | திறத்திறம் |
| 7சுரப்பண் | 6 சுரப்பண் | 5சுரப்பண் | 4 சுரப்பண் |
| சம்பூர்ணம் | சாடவம் | ஔடவம் | சுராந்தரம் |
| Heptatonic | Hexatonic | Pentatonic | Quadrupletonic |

ஏழ்புழை, ஐம்புழை... (பரிபா. 8: 22)
ஆய இசைப்புகல் நான்கில் அமைந்த புகல் வகை
(பெரியபு. ஆனாய. 26)

## இசைப் புணர்ப்பு:
இசையமைத்தல், மெட்டமைத்தல். பாடலைப் பண்ணுக்கும் தாளத்துக்கும் பொருத்துதல்.
புல் > புள் > புண் - புணர்தல் - பொருத்துதல்
பண் பொருந்த இசைபாடும் (தேவா. 268: 5)
பண்ணிமை அடைத்த பலகட் பொருநர் (கம்ப. ஊர். 162)
பொருந்தல் - பொருத்தல் - இணைப்பு.
பொரு > பொருநன் - பண் மற்றும் பாடலை இணைப்பவன்.
→ இசை அமைத்தல், இசைப்படுத்தல்
← தே. நே. 210, 214-16, 10

## இசைப் புலவன்:
வாக்கேயக்காரன். பாடல் ஆசிரியனும் ஒருசேர இசைவல்ல அறிஞனுமாய் இருத்தல்.
நூல் வழக்காலே வகுக்கவும் விரிக்கவும் வல்லனாயுள்ள இசைப்புலவன் (சிலப். 3: 26 _ 36 அடியார்க்.)
(வாக்கு - பாட்டு; கேயம் - இசை)

## இசைப்புள்:
இசைபாடும் பறவை.
1. அன்றில், குயில் (சங். அக)
2. பூவை, நாகணவாய்ப்பறவை (ம. அ)

## இசைப்பேருரை:
= இசைக்கதைச் சொற்பொழிவு, கதாகாலட்சேபம்.
கதைகளை இசையுடன் எடுத்துரைக்கும் நிகழ்ச்சி.
→ இசைக்கதைச் சொற்பொழிவு

## இசை புணர் குறிநிலை:
இசையில் ஒரு சுரத்துடன் பிறிதொரு சுரம் சேர்ந்து ஒலிக்கும் நிலை.

| ச | ரி¹ | ரி² | க¹ | க² | ம¹ | ம² | ப |
|---|---|---|---|---|---|---|---|
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |

இணை - ச - ப - 0 > 7 - Consonance - சம்வாதி
கிளை - ச - ம¹ - 0 > 5 - Consonance - சம்வாதி
நட்பு - ச - க² - 0 > 4 - Major 3rd - அனுவாதி
பகை - ச - க¹ - 0 > 3 - Dissonance - விவாதி
பகை - ச - ம² - 0 > 6 - Dissonance - விவாதி
இணை கிளை பகை நட்பு என்று இந்நான்கின்
இசை புணர்குறிநிலை... (சிலப். 8: 33)

## இசைமடந்தை:
பாடினி (ம. த.பே.)

## இசைமணி:
1. போரில் பதினாயிரம் பேரை வென்ற வேந்தர் வலக்காலில் அணியும் பொன்னால்ஆகிய வீரத் தண்டை
2. மணி, சிங்கி, சாலர், கைமணி
இசைமணி எறிந்து காஞ்சி பாடி (புறம். 281: 5)

## இசைமரபு:
1. இசையின் இலக்கணம்
2) இசைப்பாரம்பரியம்
3) ஓர் இசைநூல் (சீவக. 658. நச்சர்)

## இசைமுடி:
= இசைமூடி
கிரந்தி நாயகம்/ சிலந்தி நாயகம் என்னும் செடி.
(ஞானப்பிர.சொற். அக. பக்கம். 256)

## இசைமூடி: → இசைமுடி

## இசைமொழி: = வாசகம்

*இசைவான மொழி, ஏற்றபடி மொழிதல்.*

தென்னவன் இசைமொழி ஏத்தக் கேட்டதற்கு (சிலப். 10: 208)
என்றம் மறையோற்கு இசைமொழி உணர்த்தி (சிலப். 11: 162)
என்றவள் எழுதிய இசைமொழி உணர்ந்து (சிலப். 13: 93)

## இசையாசிரியன்: = இசைப்புலவன், இசையோன், இசை அமைப்பாளன், (Musical composer)

இயலாசிரியனும் இசையாசிரியனும்... (சீவக 672 நச்சர்)
இசையாசிரியன் அமைதி (சிலப். 3: 26-36 அரும்.& அடி. தலைப்பு)
அசையா மரபின் இசையோன் (சிலப். 3: 36)

## இசையிடன் அருகல்: குறைந்து ஒலித்தல், (sound diminision)

*ஓரெழுத்தானது குறிப்பிட்ட இடச்சூழலில் தன்னோசையில் குறைந்து ஒலிப்பது. மகரமெய் தனக்குரிய அரை அளபிலிருந்து குறுகிக் கால் அளபாக ஓசை குறைந்து ஒலிக்கும் (தொ. க. க 45)*

அரை அளபு குறுகல்மகரம் உடைத்தே
இசை இடன் அருகும் தெரியும் காலை (தொ. எ. 13)

## இசையின் இரந்திரம்: = மீத்திரம்

*இசையில் இடைவெளி ஏற்படல். தாளக் கணக்கில் தவறாக நேர்ந்திடும் இடைவெளி மற்றைக்கருவிகளில் தாளக் குறைவை நிரப்பும்போதும், மிகுதியை அடக்கும் போதும் தோற்கருவியாளர் வாசிப்பில் இடைவெளி ஏற்படாது முழக்குதல்.*

ஆக்கலும் அடக்கலும் மீத்திறம் படாமை (சிலப். 3: 53)
மீத்திரம் படாமை - ஆக்குமிடத்தும் அடக்குமிடத்தும் இரந்திரம் தோன்றாமல் செய்கை (மேலது அரும்.)
.. இசையில் இரந்திரம் தோன்றாதபடி .. (மேலது. அடியார்க்.)
இரந்திரம் - இடைவெளி (உ. வே. சா அடிக்.)

## இசையின் பாகுபாடு: ஆளத்தி (ஆலாபனை) முறை; இவை பதினொன்று வகையானவை.

1. முதல் - எடுப்பு (கிரகம்)
2. முறை - ஆளத்தியை வளர்க்கும் முறை
3. முடிவு - முடிப்பு (நியாசம்)
4. நிறை - சுரங்களைப் படிப்படியாக ஏறு நிரலாக வளர்த்தல் (பகுத்துவம்)
5. குறை - சுரங்களை இறங்கு நிரலில் குறைத்தல் (அல்பத்துவம்)
6. கிழமை - இசைச்சுரங்களுக்குள்ள உறவு
7. வலிவு - மேல்தானத்தில் இசைத்தல் (மேல் ஸ்தாயி சஞ்சாரம்)
8. மெலிவு - கீழ்த்தானத்தில் இசைத்தல் (கீழ்ஸ்தாயி சஞ்சாரம்)
9. சமன் - நடுத்தானத்தில் இசைத்தல் (மத்திய ஸ்தாயி சஞ்சாரம்)
10. வரையறை - பண்களைப் பாட காலம், பொருள், முதலியன பற்றி வரையறுத்து அறிதல்)
11. நீர்மை - பண் வடிவு

இசையோன் வக்கிரித் திட்டத்தை உணர்ந்து ஆங்கு(சிலப். 3: 41)
'.. இசைப்புலவன் ஆளத்திவைத்த பண்ணீர்மையை முதலும் முறைமையும், முடிவும் நிறைவும் குறையும் கிழமையும் வலிவும் மெலிவும் சமனும் வரையறையும் நீர்மையும் என்னும் பதினொரு பாகுபாட்டினாலும்... ' (மேலது உரை.)

## இசையொழுக்கம்: = ஒழுகிசை, இழுமென்னிசை (contineous music)

*நீர் ஒழுக்குப்போல ஒரே ஒழுங்காக இடையீடின்றித் தொடர்ந்து இழுமென இசை தொடர்வது. (Agglutinative character)*

வாரப்பாடல் சொல் ஒழுக்கமும், இசை ஒழுக்கமும் உடையது (சிலப் 3·67 அடியார்க்.)
எடு:- ஒழுகு வண்ணம்

## இசையோர்: பாணர், கூத்தர், விறலியர், கடம்பர், துடியர், பறையர், சூதர், மாகதர், வேதாளிகர், யாழோர், முழவர், நாட்டியர், நாடகத்தார், கந்தருவர் முதலியோர்

இசையோர் தேய இயக்கம் (பெருங். மகத 14: 267)
← பஞ்ச, 288

## இசைவரவு: = நரப்படைவு, பண் வரவு

*ஒரு பண்ணிற்குரிய சுரம்; உரிமைக் கோவைகள்.*

இசை வரவுகள் இட்டு இயல் கேட்பித்து (தேவா. 3: 9: 6/2894)
பண் வரவுக்குச் சுரம் குறைவுபடாமல் நிறுத்தல் (சிலப் 3: 65அடியார்க்.)

## இசைவு:

1. ஓசை

மந்தார வளத்திடையார் மணி முழவின் இசை அரங்கம் (சூளா: 2053)

2. சேருதல், பொருந்துதல், (concordance, consonance) பொருந்து சுரங்கள் சேருதல்; (combination of concordant notes, chords, consonant notes)

ச - ப - இணை - (fifth)
ச - ம$^1$ - கிளை - (fourth)
ச - க$^2$ - நட்பு - (Major third)

## இசை வேளாளர்: = மேளக்காரர்

*நாகசுரம் மற்றும் நட்டுவம் ஆகிய கலைகளை யுடைய பிரிவினர். இவர்களில் ஆண்கள் பாடகர்களாகவும் கருவி (தவில்), வாசிப்பாளர்களாகவும் சிறப்பாக நாகசுரக்கலைஞர்களாகவும், நாட்டியம் பயிற்றும்*

நட்டுவர்களாகவும், பெண்கள் பாடகர்களாகவும் சிறப்பாக நாட்டியக் கலைஞர்களாகவும் விளங்கும் மரபினர்.
↑ இப்பிரிவு பண்டைப் பாணர், பாடினியர், விறலியர் என்ற மரபு நீட்சியாகலாம்.

**இட்டுப் புகுதல்:** தேசிக்குரிய 24 கால்களுள் 22வது கால்.
தேசிக்குரிய கால்களும்...' (சிலப். 3: 16 அடியார்க்.)
(கால் - அடைவு)
← மேலது. உ. வே சா. அடிக்

**இடக்கண் இளியாய்:** மத்தளம் முதலிய இருமுகத் தோற்கருவிகளுக்கு இடப்பக்கம் இளிக்கும் (பஞ்சமம்) வலப்பக்கம் குரலுக்கும் (சட்சம்) ஒத்து (சுருதி) சேர்க்கப்படுகிறது.
இடக்கண் இளியாய் வலக்கண் குரலாய்
நடப்பது தோலியல் கருவியாகும் (சீவக. 675: நச்சர். மேற்.)

வாமபாகத்தில் ஒலிக்கும் சுரம் பஞ்சமம்
தட்சண பாகத்தில் ஒலிக்கும் சுரம் சட்சம்
(சங்கீ. ரத்னா. 6 வாத்திய. சுலோகம். 1607)
(வாமபாகம் - இடப்பக்கம்; தட்சணபாகம் - வலப்பக்கம்)
← பா. கை. 59

**இடக்கா:** → இடக்கை

**இடக்கை:** = இடக்கா, இடய்க்கா (ம. வ), ஆவஞ்சி, குடுக்கை.
ஒரு முகப்பறை; பெருமுரசு வகையுள் ஒன்று; பெரிய உடுக்கு போன்ற தோற்றமுடையது
ஆவஞ்சி எனினும் குடுக்கை எனினும், இடக்கை எனினும் ஒக்கும் (சிலப். 3: 27 அடியார்க்.)
பேரிகை படகம் இடக்கை உடுக்கை (மேலது)
மத்தளம் தண்ணுமை இடக்கை சல்லிகை
(சிலப். 14:151 அடியார்க்.)
மன்னிய சீர் மத்தளம் சல்லி இடக்கை (பஞ்ச. 96)
இடக்கையும் உடுக்கையும் அதிர (திருப்பு. 1002,1007)

**இடக்கைக்கூறு:** = இடய்க்கா கூறு (ம. வ.)
பாட்டுடன் அல்லாது இடக்கையில் தனியாக வாசிக்கப்படும் தாளத்தில் அமைந்த சதிச்சொற் கட்டுகள்.
ஒப்பு:- ஒடக்கூறு.

**இடக்கை மாராயன்:** இடக்கை என்ற இசைக்கருவி வாசிக்கும் குழுத்தலைவன்.
இடக்கை மாராயனுக்குப் பிடிபாடு குடுத்த பரிசாவது
(தெ. இ. க. 5:419)

**இடங்காரம்:**
1. மத்தளத்தின் இடப்பக்கம் (ச. அ.)
2. வில்லின் நாண் ஓசை (மேலது)

**இடங்கை:** பறைவகைகளில் ஒன்று; பாலை நிலத்துக் குரியது (ம. த. பே)

**இடபத் தளியிலார்:** சிவன் ஊர்தியான காளை இலச்சினை இடப்பட்டு சிவன்கோவிலில் பணிபுரியும் ஆடல் மகளிர்
← தமிழகத்தில் அடிமைகள்

**இடமாரம்:** = இடம்மாரம், டமாரம், டம்மாரம்
1. பறைவகையுள் ஒன்று
கோட்டு வெங்கரி ஒட்டகை... இடம்மாரம்
(திருநெல். 4 விட்டுணு. 25)
2. மாமரம் (ம. த. பே.)
← பெ. அ. 330/II
(இடம்மாரம் > டம்மாரம் > டமாரம்)

**இடமுறை:** = இடமுறைத்திரிபு (Anti clockwise rotation)
இறங்கு நிரலில் பண்ணாக்கும் முறை.
... குரல்குரலாய அரும்பாலை... (சிலப். 3:90 உரை)
இடமுறையில் பெரும்பண் (பாலை) உருவாக்கத்தில் அரும்பாலை (சங்கராபரணம்) தலைமைப் பாலை யாகிறது.
← ப. இ. இ 252

**இடமுறைத் திரிபு:** → இடமுறை

**இடமுறைத்திரிபுப் பாலைகள்:**
இடமுறை (Anti clockwise rotation) யில் குரல் குரலாக வரும் அரும்பாலை முதல் கிடைக்கும் பெரும் பண்கள்:
1. குரல் குரலாக – அரும் பாலை – சங்கராபரணம்
2. தாரம் குரலாக – கோடிப்பாலை – கரகரப்பிரியா
3. விளரி குரலாக – விளரிப்பாலை – தோடி
4. இளி குரலாக – மேற்செம்பாலை – கல்யாணி
5. உழை குரலாக – செம்பாலை – அரிகாம்போதி
6. கைக்கிளை குரலாக – படுமலைப்பாலை – நடபைரவி
7. துத்தம்குரலாக – செவ்வழிப்பாலை – இருமத்திமைத்தோடி
படுமலை செவ்வழி..... திரிந்தபின் என்றது;– கைக்கிளை குரலாகப் படுமலைப்பாலையும், துத்தம் குரலாகச் செவ்வழிப்பாலையும், குரல்குரலாக அரும்பாலையும்...
(சிலப்.3:84–5 உரை)
...இளிகுரலாகிய மேற் செம்பாலையும்....உழைகுரலாகச் செம்பாலை.....தாரம் குரலாகக்கோடிப்பாலை......விளரிகுரலாகவிளரிப்பாலை...
(சிலப். 3:90 உரை)

**இடய்க்கா:** → இடக்கை

**இடய்க்கா கூறு:** → இடக்கைக்கூறு

**இடவயின் தழீஇ:** இடத்தோள் பக்கம் தழுவி, தற்காலம் தம்புரா வாசிப்பதுபோல் நட்டுக்குத்தலாக வைத்து யாழ் பண்டைக்காலத்தில் வாசிக்கப்பட்டது. அதாவது இடதுதொடையில் வைத்து இடத்தோள் பக்கமாகத் தழுவிக்கொண்டு இசைக்கப்பட்டது.

தொடையமை கேள்வி இடவயிற்றழீஇ (பெரும்பாண். 16)
இடத்தோள் பக்கத்தே அணைத்து (நச்சர்)
இன்குரல் சீறியாழ் இடவயிற்றழீஇ (சிறுபாண். 35)
இடவயின் தழீஇ - இடப்பக்கத்தே அணைத்து
மணம்புரி காதலற்கு இடவாயின் இருத்தல் கடவாதலில் (பெருங்.2:5:76)
(இடவயின் – இடப்பக்கம்)

**இடாயம்:** இசை பாடுதலின் ஐந்து பிரிவுகளுள் ஒன்று

இசையின் பிரிவாயிருக்கின்ற ஆயத்தம், எடுப்பு, உக்கிரம், சஞ்சாரம், இடாயம் என்னும்... (பெரியபு. 14: 26 உரை)
← பெ. அ. 309/II; → இசைக்கிளை

**இடிப்பு:** அதிர்ப்பு; கரடியின் குரல் ஏற்படுத்துவது.

இடிதரும் உளியமும் (சிலப். 13: 32)
உற் டட்ட டட்ட எனப் பற்பறை கொட்டல் (மேலது அடியார்க்.)

**இடுக்கை:** தோற்கருவிகளுள் ஒன்று.

பேரிகை படகம்... இடுக்கை.. தோலால் செய்யப்பட்ட கருவிகள் (சிலப். 3· 27 அடியார்க்.)

**இடு-தல்:** வைத்தல்.

ஏறியதாரமும் உழையும் கிழமைகொள இடும்தானம் (பெரியபு. ஆனாய. 25)
காயத்து இடுவாய் (திருவாசக. 33: 8)

**இடுதிரை:** → எழினி

**இடை இசைவண்ணம்:** = இடை வண்ணம், இயைபு வண்ணம், இடையிட்டு வண்ணம் (ம. த பே.) இடையின எழுத்துக்கள் மிகுந்துவரும் வண்ணவகை.

இயைபு வண்ணம் இடை எழுத்து மிகுமே (தொல். பொ. 216)
இடையின மிடுவன விடையிசை யெனவே (முத். வீ. 985)

**இடைஎண்:** = அம்போதரங்கம், அசையடி, பிரிந்திசைக் குறள், சொற்சீரடி, எண்.
முச்சீர் ஓரடி எட்டால் வரும் அம்போதரங்கம் இடைஎண் எனப்படும் எட்டு நான்காய்ச் சுருங்கிவரினும் ஆம்.

காமரு கதிர்மதி முகத்தினை
சாமரை இடைஇடை மகிழ்ந்தனை
தாமரை மலர்புரை அடியினை
தாமரை மலர்மிசை ஒதுங்கினை
← யா. கா. 31; வீ. சோ. 117; த. இ. பே. 92/14

**இடைக்கருவி:** = சல்லி, சல்லியம், சல்லிகை. சல்லிகை என்றது - சல்லென்ற ஓசையை உடைத்தாதலால் பெற்ற பெயர்.

... இடைக்கருவி சல்லி; இடைகொள வைத்ததாகலின். அவற்றுள் அகமுழவாவன ..சல்லிகை...(சிலப்.3: 27அடியார்க்.)
தரித்த மதங்கமொடு மத்தளஞ்சல்லி...
சுத்தானந்தப் பிரகாசம்) (மேலது. உ. வே. சா. அடிக்.)

**இடைக்கியம்:** இசைக்கருவிகளுள் ஒன்று; தோற்கருவி.

இடைக்கியம் இலங்கு பெரிய மேளம்
← பெ. அ . 353/II

**இடைக்குறள் ஆசிரியம்:** → இணைக்குறள் ஆசிரியம்

**இடைக்குறை:** இடைக்குறுக்கப்படுத்தல் (Syncopation) இழுப்பிசை யாக்கும்போது சொல்லின் இடையிலுள்ள எழுத்தைக் குறைத்துச் சந்தப்படுத்துதல்.

மைத்துனன் நாரனம்பி (திருப்பாவை)
நாராயணன் > நாரன்
← சிதம்பரம் செட்டியார் ஆங்கிலம்-தமிழ்ச் சொற்களஞ் பக். 1043

**இடைச்சீலை:** → எழினி

**இடை சுருங்குபறை:** துடி (Small drum taping in the middle like an hour - glass)
உடுக்கை, துடி முதலியன இருமுகமும் அகலமாய் அமைந்து, நடுப்பகுதி சுருங்கிய வடிவம் கொண்டுள்ளதால் இப்பெயர் பெறுகின்றன (திவா. 7.122)
← செ. ப. அ 286

**இடைநிலை:**

1. தனிச்சொல், கூன்
நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவின் ஓர் உறுப்பு. தாழிசைக்கும் சுரிதகத்திற்கும் இடையில் வரும். பிற கலிப்பா வகையிலும் வெவ்வேறிடத்தே தனிச் சொல்லாகிய இக்கலிப்பா உறுப்பு வரும்
← யா. க. 82; த. இ. பே. 93/14

2. தாழிசை, இடைநிலைப்பாட்டு, இடைப்பாட்டு கலிப்பாவில் தரவுக்கும், தனிச்சொல், சுரிதகங்கட்கும் இடையில் அமையும் தாழிசை.

இடைநிலைப்பாட்டே தரவு அகப்பட்ட மரபின என்ப
(தொல். பொரு. 439: இளம்.)

இடைநிலைப்பாட்டும் . வந்த ஒத்தாழிசைக் கலி
(கலித். 16: நச்சர்.)

செய்யுளிடையே நிற்றலானும், தாழம்பட்ட வோசையின்றியும் வருவனவுங் கோடற்கும் தாழிசையென்னாது பொதுவாக இடைநிலையென்றார்.
(தொல் செய் 132 நச்சர்.)

## இடைநிலைப்பாட்டு: → தாழிசை

## இடைநிலைப் பாலை:
இசைச்சுர இடைவெளி (Interval space method). இசைச்சுர (சுருதி) இடைவெளி வேறுபாட்டால் உருவாகும் பண்கள்.

ஈரேழ் சகோடமும் இடைநிலைப் பாலையும் (சிலப்.10:கட்டுரை.14)

இடைநிலைப்பாலை. கோடி, விளரி, மேற்செம்பாலை முதலாயின (அரும்.)

குடமுதல் இடைமுறையாக் ... (சிலப். 17 எடு:– 8)

வட்டப்பாலையில் பண்கள் உருவாகின்றமுறையை அரும்பத உரையாசிரியர் கூறுகிறார். அடியார்க்கு நல்லார் பண்களை உருவாக்கும் ஆயப்பாலை, சதுரப்பாலை, திரிகோணப்பாலை, வட்டப்பாலை முறைகளைக் கூறுகிறார்

## இடைநெரித்தல்:
உடல் அவர்த்தனை ஒன்பதுள் ஒன்று.

← சிலப்: 3: 16. உ. வே. சா. அடிக்.

## இடைப்படு தானம்:
நடுமண்டிலம், மத்திம தானம், (middle octave - மத்திமஸ்தாயி)
பாடல்கள் பாடப்படும், அதாவது இசை இயக்கப்படும் மூன்று தானங்களில் பெரும்பாலும் இசை இயங்கு கின்ற தானம் இடைப்படு தானமாகும்.

## இடைப்பாட்டு:
1. தலைமைப் பாடகர் முன்னர் பாடியதைப் பின்பாட்டுக்காரர் மீண்டும் பாடுதல்.

தலைப்பாட்டுக் கூத்தியும் இடைப்பாட்டுக் கூத்தியும்(சிலப். 14: 156)

2. இடையர் பாட்டு (ம. அ.)

## இடைப்பாட்டுக் கூத்தி: → இடைப்பாட்டு

## இடைப்பாரி:
நாகசுர வகையுள் ஒன்று. திமிரி நாயனத்திற்கும் பாரி நாயனத்திற்கும் இடைப்பட்ட நீளம் மற்றும் ஒத்து (சுருதி) அளவு கொண்டதால் இடைப்பாரி எனப்பெயர்.

| நாயன வகை | - ஒத்து (சுருதி) அளவு |
|---|---|
| 1) திமிரி | - 5 - 5½ |
| 2) இடைப்பாரி | - 3 - 4½ |
| 3) பாரி | - 1½ - 2½ |

திமிரி நீளம் குறைந்தது; பாரி நீளம் கூடியது; இடைப் பாரி நாயனம் திமிரிக்கும் பாரிக்கும் இடையிலானது.

## இடைப்பிறவரல் கோவை:
→ அயல்கோவை

## இடைப்பிறவரல் பண்:
= பாஷாங்க ராகம்.
தாய்ப்பண்ணிற்கு உரிமையில்லாத அன்னிய சுரங்கள் அதன் சேய்ப்பண்ணில் வந்தால், அச்சேய்ப்பண் இடைப்பிறவரல் பண் ஆகும்.
எ-டு: காம்போதி - இது ஒரு இடைப்பிறவரல் பண். காம்போதிப் பண்ணின் தாய்ப்பண் அரிகாம்போதி. அரிகாம்போதியின் உரிமைக்கோவை மென்தாரம் (கைசகி நிசாதம்). காம்போதிப் பண் விரிவாக்கத்தில் வன்தாரம் (காகலிநிசாதம்) அயல் சுரமாக வரும். எனவே காம்போதி இடைப்பிறவரல் பண்.

← த. வ 96; → அயல் விரவுப்பண்

## இடைமடக்கு:
இசைப்பாடல்களில் இரண்டாம் அடி, சீர், அசை போன்றன இன்னோசைக்காகப் பாடல் களில் மீண்டும் இடைமடங்கி வருதல்.

இரண்டாம் அடியை இனிதின் மடக்காலும்
இரண்டாம் அடியின் இறுதிச்சீர் மடக்காலும்
இரண்டாம் அடியின் ஈற்றசை மடக்காலும்
இவ்வாறென்ப மடக்குதல் தானே (யா. செய். 23 உரை: மேற்.)

எடு:– எற்றொன்றும் காணோம் புலத்தல் அவர்மலைக்
கல்தீண்டி வந்த புதுப்புனல்
கல்தீண்டி வந்த புதுப்புனல் மற்றையார்

இங்கு இரண்டாமடி மீண்டும் மூன்றாம் அடியாக மடங்கி வந்துள்ளது
இதுமுதல் பாடல் 4, 5, கானல்வரி பாடல் 43 - 46 (46 இல் முதலடி மடங்கி இரண்டாம் அடியாகவும் நான்காம் அடியாகவும் வந்துள்ளது) மற்றும் பாடல்கள் 34, 36, 25, 26, 27, 20-22, 2, 3, 4 ஆகியனவும் அடிமடங்கி வந்த பாடல்கள்)

## இடைமுடிவுச் சுரம்:
= அபந்யாசம்
பாடலின் இடைப்பகுதியை முடிக்கும் சுரம்.

← யா. நூ. 154

## இடையாகெதுகை:
(இடை + ஆகு + எதுகை); எதுகை, (second letter rhyme); அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றிவரல் எதுகையாகும்.

எடு:– அகரமுதல எழுத் தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு (குறள். 1)

அக, பக என்பதில் இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகை.

**இடையிட்டு வண்ணம்:** → இடைஇசை வண்ணம்

**இடையின எதுகை:** இடையினத்துள் வந்த எழுத்தன்றி அவ்வினத்து வேறு எழுத்து இரண்டாம் எழுத்தாய் நிற்கவரும் எதுகை.
← யா கா. ஒழிபி. 6; செ. ப.அ. 288

**இடையின மோனை:** இடையினத்துள் யகர வகரங்கள் ஒன்றற்கொன்று மோனையாக வருவது.
← யா. கா ஒழிபி 6; செ. ப.அ. 288

**இடையீட்டெதுகை:** இடையிடு + எதுகை. ஒவ்வோரடி இடையிட்டு வரும் எதுகை.
← யா. கா. ஒழிபி. 6; செ. ப.அ. 288

**இடையொத்து:** தாளவகையுள் ஒன்று(variety of time - measure).
பண்: புறநீர்மை தாளம்: இடையொத்து (திருவாய்மொழி. 2:1 தலைப்பு)

**இடைவண்ணம்:** → இடைஇசை வண்ணம்

**இடைவிட்டொலித்தல்:** = வர்ஜப் பிரயோகம், உறழ்தல்.
இசைக்கோவைகள் ஒன்று இடைவிட்டும், இரண்டு இடைவிட்டும் ஒலித்தல்.
ஒற்றை உறழ்தல் - சகமா பகரி மரிசா
இரட்டை உறழ்தல் - சமபா ரிமபா
← ப. இ இ. 222

**இடைவெளி:** இசை இடைவெளி, அந்தரம்.
இசையின் இரண்டு சுரங்களுக்கு இடையிலான ஒத்து (சுருதி) அளவு (frequency ratio)
1) முற்றிசை அலகு இடைவெளி - $9/8 = 1\frac{1}{8}$
2 பற்றிசை அலகு இடைவெளி - $10/9 = 1\frac{1}{9}$
3) நெட்டிசை அலகு இடைவெளி - $16/15 = 1\frac{1}{15}$
4) குற்றிசை அலகு இடைவெளி - $256/243 = 1\frac{13}{243}$
← யா. நூ. 81

**இடோல்:** பறைவகையுள் ஒன்று
↑ இது தற்போதைய 'டோல்' என்ற தோற்கருவி யாகலாம். தோல் > டோல் – டோலக் என்பதும் ஆய்வுக்குரியது.

**இணை:**

1. ஒத்த இரண்டின் இசைவு
இணையே கைகோள் (இறை. அகப். 1. உரை)

2. ஒப்பு ;-
இணையீர் ஓதி நீ யழத்துணை (ஐங். 269)
தமக்கென்றும்... இணையாதும் இன்றி
(காரைக். இரட். மணி. 19)

3. சேர்தல்
இணைத்த கோதை அணைத்த கூந்தல் (முருகு. 200)

4. இணைப்பு - இசைப்பு
இணைப்பு அரும்பெருமை (திருவா. 3: 46)
இணைச்சுரங்கள் ( 0 → 7) சேர்வது (இணைப்பு) இசைப்பு ஆகி இசையாகிறது.

5. இரண்டு நரம்பு
இணை எனப்படுவ கீழும் மேலும் அணையத் தோன்றும் அளவினவென்ப (சிலப். 8: 33 – 4 அடியார்க்.)
↑ ஒரு சுரத்துடன் முற்றிலும் இணைவது அதனுடைய கீழ் மற்றும் மேல் தானத்து அதே வகைச் சுரங்கள் தான். ஆகவே இணை எனப்படுவ கீழும் மேலும் அணையத் தோன்றும் என்றார். பொதுவாக இணை எனின் ஒரு சுரத்திற்கு அதனுடைய இளி (பஞ்சமம்) சுரமே இணைச்சுரம்.
← தேநே. 200/II

6. ஏழாம் நரம்பு
ச ரி¹ ரி² க¹ க² ம¹ ம² ப த¹ த² நி¹ நி²
0 1 2 3 4 5 6 7 8
ச ப - 0 - 7; ரி¹ த¹ - 1 - 8 - இணைச்சுரங்கள்
ஏழாம் நரம்பு இணை - (இசைமரபு நூற்பா. கல்லாடம் 100 உரை மேற்கோள்).
இணைகிளை பகை நட்பு என்றின் நான்கின்
இசைபுணர் குறிநிலை எய்த நோக்கி (சிலப். 3: 33 – 34)
உறவு இணை நட்பு கிளை இயப்பெய்த (கல்லா. 14: 13)
வரும் இணை கிளை நட்பொடு
பொருபகை பிரிவின் யாத்த (நாகூர் புரா. விவா. 84)

**இணை இயைபு:** பாடலின் ஓரடியில் இறுதிச்சீர் இரண்டும் இணைந்து வருவது.
← யா. கா உறுப். 16; செ. ப. அ. 291

**இணை எதுகை:** பாடலின் ஓரடியிலுள்ள முதல் இருசீரும் எதுகை பெற்றுவருவது.
← யா. கா. உறுப். 16; செ. ப. அ. 291/I

**இணைக்குறள் ஆசிரியம்:** = இடைக்குறள் ஆசிரியம்
பாடலின் இடையே குறளடி, சிந்தடி பயின்று வருவது.
ஆசிரியப்பாவில்,
இடையிடை முச்சீர்வரின் இணைக்குறளாசிரியம் என்ப
(தொ. பொ. செய். 422 இளம்)
அளவடி அந்தமும் ஆதியும் ஆகிக்
குறளடி சிந்தடி என்று ஆயிரண்டும்
இடைவரநிற்பது இணைக்குறளாசிரியம் (காக்கைபாடினியம்)

காமருசீர் இடைபல குன்றின் இணைக்குறள் (யா.கா. 34)
இணைக்குறள் இடைபல குன்றின் இணைக்குறள்
(யா. வி. செ. 19 உரைமேற்.)
இணையாம் ஏற்ற அடியின் இடைபல குறைந்தன
(யா. வி. செ. 17 உரை விளக்கம்)
← சி யா. 69 - 70; 137 - 38; செ. ப. அ. 291

↑ சிலப்பதிகாரப் பதிகம் மற்றும் **'சிறியகட்பெறினே'** (புறம். 235) முதலியவை இணைக்குறள் ஆசிரியத்தில் அமைந்தவை. சிலப்பதிகாரப் பதிகம் அறுபத்து எட்டாம் அடியுள், **'கடலாடு காதையும்'** எனக் குறளடியும், **'வாழ்த்து வரந்தரு காதையோடு'** (85) எனச் சிந்தடியும், **'இவ்வாறைந்தும்'** (86) எனக் குறளடியும் வந்து, ஈற்றயலடியே ஆசிரிய மருங்கில், தோற்ற முச்சீர்த்தாகுமென்ப (தொ. செய். 68) என்ற ஆசிரியர் இடையும் வரையார் (தொ. செய். 69) என்றதனால் குட்டச் செந்தூக்கு ஆயிற்று (சிலப். பதிகம். அடியார்க்.)

**இணைக்கை:** = இரட்டைக்கை, இரட்டைக்கை, வண்ணம், பிணையல், பிணையற்கை, இரட்டி (சம்யுதஹஸ்தம்)
*இரண்டு கைகளால் புரியும் அவிநயம்.*
பிண்டியும் பிணையலும் (சிலப். 3: 18)
அஞ்சலி, புட்பாஞ்சலி... வகுத்தமானம்... பதினைந்தென்ப
(சிலப் 3. 18அடியார்க்.)
பிணையல் - இரட்டைக்கை. அவை அஞ்சலி முதலாகப் பதின்மூன்று (3.18. அரும்)
பிணையலுமென்றது இரட்டைக்கை. அஃதாவது இணைக்கை (சிலப். 3· 18 அடியார்க்.)
↑ அரும்பத உரைகாரர் பதின்மூன்றும், அடியார்க்கு நல்லார் பதினைந்துமாக இணைக்கை வகைகளைக் கூறுகின்றனர். இது அடியார்க்கு நல்லார் கால வளர்ச்சியைக் காட்டுவதாகும்.
← தேநே. 274/3

**இணைச்சுரம்:** = புணர்வுச்சுரம்
*இரண்டறக் கலக்கும் சுரம். ஓர் இயக்கிலுள்ள (octave) இசையின் தான சுரங்கள் பன்னிரண்டில் எடுத்துக்கொண்ட சுரத்தினின்று அதைவிடுத்து ஏழாவதாக வரும் சுரம்.*
ஏழாம் நரம்பு இணை (கல்லா. 100 உரை. மேற். இசைமரபு நூற்பா)
இணைகிளை பகை நட்பு என்றின்னான்கின் (சிலப். 8: 33)
*ச $ரி^1$ $ரி^2$ $க^1$ $க^2$ $ம^1$ $ம^2$ ப $த^1$ $த^2$ $நி^1$ $நி^2$ ச்*
*0 1 2 3 4 5 6 7 8 9 10 11 12*
*ச ப, $ரி^2$ $த^2$ - இணைச்சுரங்கள்*
*அதாவது நின்ற சுரத்திற்கு அதைவிடுத்து ஏழாம் வீட்டுச் சுரம் இணைச்சுரம் இது ச ப முறைப்படி உண்டான சுரங்களுக்குப் பேர்*
*(கருணா. 659)*
இணை - இணை சேர்தல் - (Mating, copulation)
*இரண்டறக் கலத்தல்; ச ப உறவான இணைமுறையில் இருசுரங்கள் சேரும்போது ஒரே சுரம்போல் இரண்டறக் கலந்து இனிமை பயப்பது*
இணை, விழைச்சு என்ப புணர்வுப் பெயரே (திவா. 1641)
இயைபே, புணர்ச்சி, இயைப்பு, இசைவு ஆகும் (திவா. 1710)

**இணை நரம்பு:** = ஏழாம் நரம்பு, பட்டடை நரம்பு
*நின்ற சுரத்திலிருந்து, அதைவிடுத்து வரும் ஏழாம் சுரம்.*
இணை - இசைவு, (Union, conjunction).
இணை நரம்புடைய அணைவுறக் கொண்டாங்கு(சிலப். 3: 90)
இசைநூல் வழக்காலே இணை நரம்பு தொடுத்துப் பாடும் (சிலப். 3: 59_60அரும்)

**இணைமுகப்பறை:** இருமுகப்பறை; பம்பை, மத்தளம் போல்வன.
இணைமுகப்பறை அறை கடிப்புடைத் தோகை (கல்லா. 83: 23)

**இணைமுரண்:** *ஓரடியின் முதல் இருசீரும் முரண்பட இணைந்து வரும் தொடை. (யா. கா. உறுப். 16)*
← செ. ப. அ 291

**இணைமுறை:** = ஏழன் முறை, குரல் இளிமுறை, சட்பஞ்சம பாவம், பட்டடை பண்ணல், பஞ்சம பாவம், சட்சக்கிரமம் (Order of fifth)
*குரல் இளி முறை (ச, ப) யில் ஏழாவது நரம்பாகத் தொடுத்தல் இம்முறையில் ஏழு பெரும்பாலைகளும் வரும்.*
*5 6 7 0 1 2 3 4*
*ச $ரி^1$ $ரி^2$ $க^1$ $க^2$ $ம^1$ $ம^2$ ப $த^1$ $த^2$ $நி^1$ $நி^2$*
*0 1 2 3 4 5 6 7 8 9 10 11*
*0 > 7 - ச ப*
*7 > 2 / 0 - 7 - ப $ரி^2$ என்பதைப் போலத் தொடுத்தல்*
தாரத்து உழை தோன்றப் பாலையாழ் (பஞ்ச. 22)
*(தாரம் - நிசாதம்; உழை - மத்திமம்)*
*அடைந்த சுரங்கள்: ச $ரி^2$ $க^2$ $ம^1$ ப $த^2$ $நி^1$ - பாலையாழ்/ செம்பாலை (அரிகாம்போதி).*
*தமிழ் இசைத் தலைமைப் பாலைக்குச் சிறப்புக்கருதி பாலையாழ் என்று பெயர்.*
*பாலையாழ் - செம்பாலை - அரிகாம்போதி*
ஏழுபாலையினையும் இணை நரம்பு தொடுத்து நிரம்ப நிறுத்திக் காட்டல் (சிலப். 3· 70 _ 71அடி..)
குரல் முதலாக இணைவழி கேட்டும் (சிலப். 7:5. அரும் மேற்.)
இணைவழி ஆராய்ந்து இணைகொள முடிப்பது
(சில. 7: 5அரும். மேற்.)
ஏற்றிய குரல் இளி என்றிரு நரம்பின்
ஒப்பக் கேட்கும் உணர்வினன் ஆகி (சிலப். 3: 59 – 60)
இணை நரம்புடையன அணைவுறக் கொண்டு (சிலப். 3: 90)
குரல் வாய் இளி வாய்க் கேட்டனள் (சிலப். 8: 35)
வலக்கைப் பெருவிரல் குரல்கொளச் சிறுவிரல் விலக்கின்றி இளிவழி கேட்டும் (சிலப். 7. பண்ணல் என்பதற்கான அரும். மேற்.)
இணை நரம்பு தொடுத்துப் பாடும் அறிவினை உடையனாய் (சிலப். 3· 59 _ 60 அரும்.)

**இணைமோனை:** ஓரடியின் முதல் இரு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது (இ. வி. 723 உரை)

← செ. ப. அ. 291

**இணையா வினைக்கை:** = ஒற்றைக்கை,பிண்டி, பிண்டிக்கை

ஒரு கையால் புரியும் அவிநயம்

பிண்டியும் பிணையலும்... (சிலப். 3: 18)

பிண்டியும் என்றது - ஒற்றைக் கையுமென்றவாறு (அடியார்க்.)

பிண்டி- ஒற்றைக்கை, அவை பதாகை முதலாக இருபத்து நான்கு (அரும்.)

பிண்டிக்கு காட்டிய முப்பத்து மூன்று வகை... (அடியார்க்.)

↑ அரும்பதவுரைகாரர் இருபத்து நான்கும், அடியார்க்கு நல்லார் முப்பத்து மூன்றுமாக ஒற்றைக்கை வகைகளைக் கூறுவது பின்னவர் காலத்து வளர்ச்சியைக் காட்டுவதாகலாம்.

**இந்தளங் குறிஞ்சி:** இது இந்தளம் மற்றும் குறிஞ்சி என்று இரு பண்களைக் குறிப்பதாகலாம்.

... பண் இந்தளம் குறிஞ்சி – தாளம் ஒன்பதொத்து (திருவாய். 4: 5)

'வீற்றிருந்து ஏழுலகும்' என்ற பாடல் (பாசுரம் 3051) பண் இந்தளம் மற்றும் குறிஞ்சிக்கு உரியது

## இந்தளம்:

1. தூபமூட்டி, தடவு - நெருப்பு மூட்டிக்கட்டை

தூபமூட்டி இந்தளம் தடவு எனச் சொல்ப (திவா. 1225 புது.நூ:93)

பகுவாய்த் தடவில் செந்நெருப்பு ஆர (நெடுநல். 65)

மடவரல் மகளிர் தடவு நெருப்பமர்ந்து (சிலப். 14: 99)

2. வடுகு, நோதிறம், துக்கராகம், தடவு, மருள், மருள்இந்தளம், நெய்தல்குழல், நெய்தலந்தீங்குழல், நெய்தல்பாணி, நெய்தலந்தீம்பாணி.

தடவு - நெய்தல் நிலத்திற்குரிய ஐந்துசுரப்பாணி

இந்தளம் வடுகெனல் (பிங்க. 1397)

துக்கராகம் நோதிறமாகும் (திவா. 13)

முறையால் வரு மதுரத்துடன் மொழி இந்தள முதலில் (பெரியபு. தடுத். 75)

நோய் சேர்ந்த திறம் பண்ணி (கலித். 77: 18)

நோவு சேர்ந்த திறப்பண்ணைப் பண்ணி (நச்சர்)

பண் தடவு சொல்லின் மலைவல்லி (தேவா. 3:74.3/3594)

இரங்கல் நெய்தலுக்கு உரியது. நெய்தலுக்கு உரிய விளரி (தோடி), செவ்வழி (இரு மத்திமைத்தோடி), இந்தளம் இரங்கல் சுவையுடையவை.

குரல்முதல் கிளைமுறை தொடுக்க இப்பண் கிடைக்கிறது. (கிளைமுறை - ஐந்தன்முறை - மத்திம பாவம்)

0 1 2 3 4 5

ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$

0 1 2 3 4 5

சம$^1$, ம$^1$'நி$^1$, நி$^1$ க$^1$, க$^1$ த$^1$ → ச க$^1$ ம$^1$ த$^1$ நி$^1$- இந்தளப்பண்

முறையால் வருமதுரத்துடன் மொழி இந்தள முதலில்
குறையா நிலை மும்மைப்படி கூடுங் கிழமையினால் (பெரியபு. தடுத். 75)

மும்மைப்படி - கிளைமுறை 3 x 2 = 6

1 2 3 4 5 6

ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$

1 2 3 4 5 6

சம$^1$, ம$^1$'ந$^1$, நி$^1$ க$^1$, க$^1$ த$^1$ → ச க$^1$ ம$^1$ த$^1$நி$^1$- இந்தளப் பண்

## இந்தளம் பயின்ற தேவாரம்:

| பாடியவர் | திருமுறை எண் | பதிகம் | அடங்கன் |
|---|---|---|---|
| காரைக்கால் அம்மையார் | 11 | எட்டி யிலவம் | மூத்த திருப்பதிகம் |
| அப்பர் | 4 | 16, 17, 18 | 4314 – 4344 |
| சம்பந்தர் | 2 | 1 – 39 | 1470 – 1894 |
| சுந்தரர் | 7 | 1 – 12 | 7225 – 7346 |

## இந்தளம் பயின்ற பாசுரம்:

| பாடியவர் | ஆயிரம் | பத்து | பாடல் எண் | தாளம் |
|---|---|---|---|---|
| நம்மாழ்வார் | 4ஆம் | 1ஆம் | 8 | ஏழொத்து |
| நம்மாழ்வார் | 4ஆம் | 2ஆம் | 8 | ஏழொத்து |
| நம்மாழ்வார் | 4ஆம் | 3ஆம் | 1 | நடையொத்து |
| நம்மாழ்வார் | 4ஆம் | 3ஆம் | 8 | ஏழொத்து |
| நம்மாழ்வார் | 4ஆம் | 4ஆம் | 5* | ஒன்பதொத்து |
| நம்மாழ்வார் | 4ஆம் | 8ஆம் | 7 | ஏழொத்து |
| நம்மாழ்வார் | 4ஆம் | 10ஆம் | 1 | ஏழொத்து |
| நம்மாழ்வார் | 4ஆம் | 10ஆம் | 6 | கடையொத்து |
| நம்மாழ்வார் | 4ஆம் | 10ஆம் | 8 | ஏழொத்து |
| *(வீற்றிருந்து என்ற பாடல் குறிஞ்சிக்கும் வகுக்கப்பட்டுள்ளது) | | | | |
| திருமங்கை | 2ஆம் | 1ஆம் | 1 | ஒன்பதொத்து |
| திருமங்கை | 2ஆம் | 3ஆம் | 8 | ஒன்பதொத்து |
| திருமங்கை | 2ஆம் | 6ஆம் | 10 | இடையொத்து |

→ இந்தளங் குறிஞ்சி

**இந்திராணி கூத்து:** = அயிராணி கூத்து, கடையம், கடையக்கூத்து, கடைசிக்கூத்து
கடையக்கூத்து அயிராணி ஆடியது (சது. அக. 191)
அயிராணி மடந்தை ஆடிய கடையமும் (சிலப். 6: 63)
அயிராணி - இந்திராணி. கடையம் - கடைசிக்கூத்து (அரும்.)
கடையம் அயிராணி.. கடையம் அயிராணி ஆடிற்று (அடியார்க்.)

**இந்து:** → சுழி

**இந்துத்தானி இசை:** = வட இந்திய இசை, இந்துஸ்தானி இசை.
*தமிழிசை (தென்இந்திய இசை - கர்நாடக இசை) மற்றும் இந்துஸ்தானி இசை (வடஇந்திய இசை) இரண்டும் ஒரே இசைமுறையின் இருபிரிவுகள்.*
"... She has developed two subsytems of music - karnatic and Hindustani. Both the systems received thier nourishment from the same original source..." *(தெ. இ. அ. 231/II)*

**இந்துஸ்தானி இசை:** → இந்துத்தானி இசை

**இந்துத்தானி தாளங்கள்:** *வடஇந்திய இசையில் பயன்படும் தாளங்கள்:*
*1) கேகருவா - 4 மெல்லிசையில் பயன்படுகிறது*
*2) தாத்ரா - 3 + 3 = 6 மெல்லிசையில் பயன்படுகிறது.*
*3) தீப்சந்தி - 3 + 4 + 3 + 4 = 14*
*4) சௌதால் - 2 + 2 + 2 + 2 + 2 + 2 = 12 துருபத் மற்றும்தமார்*
*5) தமார் - 5 + 2 + 3 + 4 =14 ஆகியவைகளில் பயன்படுகிறது.*
*6) ரூபக் - 3 + 2 + 2 = 7*
*7) சப்தால் - 2 + 3 + 2 + 3 = 10*
*8) ஏக்தால் - 4 + 4 + 2 + 2 = 12*
*9) சும்ரா - 3 + 4 + 3 + 4 = 14*
*10) திரிதால் - 4 + 4 + 4 + 4 = 16*
*11) தில்வாடா - 4 + 4 + 4 + 4 = 16*
(Indian Music - B.c. Deva. P. 41)

**இந்துமதி:** *திறப்பண் வகையுள் ஒன்று. 22 ஆம் பாலை (51ஆம் மேளம்) காமவர்த்தியினில் பிறந்தது.*
*← பெ. அ. 394/II*

**இமிர்:** = ஒத்து, கேள்வி, சுருதி.
*வண்டு எழுப்பும் 'இம்' என்ற ஒலி.*
வரி ஞிமிறு இமிரும் (பதிற். 50: 18)
வண்டு இமிர் இன்இசை கறங்க (நற். 323: 9)
ஒருதிறம் யாணர் வண்டின் இமிர் இசை எழ (பரிபா. 17: 10)
அரும்மொழி அவிழ்ந்த சுரும்பு இமிர் தாமரை (சிலப். 2: 15)
கைகவர் நரம்பின் இம்மென இமிரும் (குறிஞ். 147)
இன்னிசை இமிழ் இயம்கடுப்ப இம்மென (அகம். 172: 3)

**இமிர்தல்:** *ஒலித்தல்,* (to sound, hum)
சுரும்பி இமிர்ந்து இம்மென (கலித். 119: 8)

**இமிர்பு:** *'இம்' எனும் ஒத்து (சுருதி).*
இம்மென் கடும் பொடு இனியர் ஆகுவிர் (மலைபடு. 286)
சுரும்பு இமிரப் பெரும்புலவர் புகழ்பாட...(சிலப். 5: 89 – 94 அடியார்க்.)
கை வைத்து இமிர்பு குழல் (பரிபா. 19: 41)

**இமிழ்:**
1. ஒலி (sound, hum, roar)
தெரி இமிழ் கொண்ட நும் இயம்போல் இன்னிசை(மலைபடு. 296)
படுகண் இமிழ் கொளை (பரிபா. 16: 12)
இன்பல் இமிழ் இசைகேட்டு... (அகம். 82: 7)

2. இசை
இமிழே இனிமையும் இசையும் என்று இருபேர்
(அக. நிக. இம்முதல். 70)
புள் இமிழ்ந்து ஒலிக்கும் இசையே என்றும் (மதுரைக். 111)
இமிழ் இசை அருவியோடு இன்னியம் கறங்க (முருகு. 240)
இம் எனும் ஒலியால் பாடுதல்; ஒப்பு: மகரத்தின் ஒற்றால் சுருதி விரவும் (சிலப். 3: 26 அடியார்க்.)
*இம் + இழ் - இமிழ்*

3. பறை *(ச. அ.)*
கோடு முழங்கு இமிழிசை எடுப்பும் (பதிற். 50: 25)

**இமிழ்தல்:** *யாழ் ஒலித்தல்.*
சிலம்பல் இரங்கல் இமிழ்தல் விம்மல் இரட்டல்...
இசைத்தல் என்றிவை யாழ் நரம்போசை (பிங்க. 1441)

**இமிழி:** *இசை(அ. நி.)* (melody)

**இயக்கம்:**
1 = மண்டிலம், தானம், தானநிலை, நிலை, வட்டம், தாயி, *(ஸ்தாயி* - octave)
*தாழ்ந்தகுரல், சமன்குரல், உச்சக்குரல் எனும் மூன்று தானங்களிலும் இசை இயங்குவது.*
மூவகை இயக்கமும் முறையுளிக் கழிப்பி (சிலப். 8: 42)

2. தாள இயக்கம் *பாடல் வேகம் (*Tempo*)*
*தாளம் இயங்கும் வேகம்; பாடல் நடைவேகம்*
*முதல் நடை, வாரநடை, கூடைநடை, திரள் நடை.*

3. ஒத்து (சுருதி)
வலிவும், மெலிவும் சமனுமென்னும் மூவகைப்பட்ட சுருதியும்... (சிலப். 8: 42 அடியார்க்.)
4. இயக்குதல் - *ஒலிப்பித்தல்.*
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி (முருகு. 246)

## இயக்கமும் நடையும்:

*இயக்கம் என்பது தானம், தாயி* (octave).
*நடை- வேகம்* (tempo)
இயக்கமும் நடையும் எய்திய வகைத்தாய்
(*சிலப். 7* 'செலவு' என்பதற்கான அரும். மேற்.)

## இயக்கிகானம்: → யட்ச கானம்

## இயந்தை:

1. **செவ்வழி யாழ்த்திறத்துள் ஒன்று.**
குறண்டி, ஆரியவேளர் கொல்லி, தனுக்காஞ்சி இயந்தை
யாழ் பதம் காளி (பிங்க. 1384)

2. **பறை வகையுள் ஒன்று** (*ம த. பே*)

## இயம்:

1. **இயம்ப,** *ஒலிக்க*
வென்றி கெழு தொண்டகம் வியன்துடி இயம்ப (கந்தபு. வள். 92)
ஞானக் கொடிதனை இயம்புவோமே (குற். குற. 7)
இயமுறை எனது குள நடு நடஞ்செய் எந்தை (திருவருட். 3976)
*கொற்ற மூன்றுட னியம்ப* - EI,XVII/ *16; த. க சொ. 66*/I

2. **இசைக்கருவி** - *பல்லியம், வாத்தியம், வாச்சியம்*
நும் இயம் தொடுதல் ஓம்புமின் (மலைபடு. 232)
கூடுகொள் இன் இயம் (புறம்.153: 11)
குறமகள் முருகு இயம் நிறுத்து (முருகு. 243)
கலித்த இயவர் இயம் தொட்டன்ன (மதுரைக். 304)
பல்லியத் தோளினர் (சிலப். 26: 227)
இடி உறழ் இசையின் இயம் எழுந்து ஆர்ப்ப (கலித். 104: 54)
இயம் என்ப ஒலியே வார்த்தை வாச்சியம் இம்முப்பேரே (சூடா.11: 2)

3. **காடு**: *எ-டு: மதிச்சியம், தனிச்சியம்*
*கா > கான் >கானம்*
↑ காட்டிலிருந்து இசை பிறந்தது என்பதற்கு இயம், கானம் என்ற சொற்கள் சான்றாகின்றன.

4. **இனிமை**: *இயம்புதல் - இனிமையுடன் சொல்லுதல்.*

5. **இசை**: *இயம் < இய > இயை > இசை*

## இயம்பல்: *இயம்புதல் இசைக்கருவி வாசித்தல், இசைத்தல்.*

துவைத்தலும் இயம்பலும். . இசைப்பொருட் கிளவி
(தொ. சொ. 352)
← *தே.நே. 227/9*

## இயம்புணர்தூம்பு:

= *நெடுவங்கியம், நெடுங்குழல்*
*ஒருவகை நீண்ட குழல், குழல் இசைக்கருவி.*
*தூம்பு - துளையுடைய இசைக் கருவிக்குப் பொதுபெயர்.*
↑ மேற்பகுதிக் குழல் ஒத்துக் குழலாகவும் (சுருதிநாடி) கீழ்ப்பகுதிக்குழல் பண்குழல் (சுரநாடி) ஆகவும் இசைக்கப்படும் நெடுங்குழல் ஆகலாம்.
இயம்புணர் தூம்பின் உயிர்க்கும் அத்தம் (ஐங். 377)
↑ ஏனைய இசைக்கருவிகளுக்கு ஒத்து (சுருதி) தரும் (இயம்புணர்) தூம்புக் கருவியாகலாம். இயம்புணர் என்பது தூம்பின் பெயர் அடை (adjective) ஆகலாம்.

## இயமரம்: *காற்று இசைக்கருவி வகையுள் ஒன்று.*

குழலின் இனி இயமரத்தோசை நன்கின்னா (இன்னா. 35: 2)
சிலம்பின் இயமரம் தெழித்த சங்கமே (சீவக. 779)
இயமரம் நின்றார்ப்ப (நளவெண். 1: 75)
*(இயம் + மரம்)*
← *செ. ப. அ. 300*

## இயல்:

1. **இயல் பாட்டு**
நல் இயல்கவிஞர் (கம்ப. 6: 15: 22)
புரியுறு நரம்பும் இயலும் புணர்ந்து (பரிபா. 18: 51)
2. **இயல் தமிழ்**
இயல், இசை, நாடகம் நடக்கும் (ஏரெழு. 18)
நீர் கற்ற இயலும்... (சீவக. 149 உரை)

## இயல் ஐந்து:

*எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி.*
எண்ணும் எழுத்தும் இயல் ஐந்தும்... (சிலப். 3: இறுதி வெண்பா)

## இயல் கும்மி: *இதனை வெண்பாவின் இனம் என்பர்.*

எடு:– கும்மியடி தமிழ்நாடு முழுதும்
← *கவிஞராக பக். 296*

## இயல் சாத்தல்: *பண் வகுக்கப்பெறாத ஆழ்வார் பாசுரங்களைக் குழுவாக நின்று ஓதுதல்.*

*ஸந்நதியில் இயல் சாத்துகிறபோது* (TDI,ii,95; *த. க. சொ. 66*)

## இயல்சீர் வெண்டளை:

*மாமுன் நிரையும் விளமுன் நேரும் வரும் தளை*
மாமுன் நிரையும் விளமுன் நேரும் இயற்சீர் வெண்டளை
(முத். வீ. 870)

## இயல் சுரம்: = *சுத்த சுரம், பிரகிருதி சுரம்*

*தமிழ் இசையின் தலைமைப் பாலை /அடிப்படைப் பாலையாவது பாலையாழ் (முல்லை - முல்லை யாழ் - செம்பாலை - அரிகாம்போதி).*
*இப்பெரும்பண்ணின் சுரங்கள் - ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ ப த$^{2}$ நி$^{1}$*
*எனவே இச்சுரங்களே சுத்த சுரங்கள் - இயல் சுரங்கள்.*
↑ ஐரோப்பிய இசையின் இயல் சுரங்கள் – ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$த$^{2}$நி$^{2}$ இந்தச் சுரங்களால் ஆன பாலை – பாலையாழ் – அரும்பாலை –

சங்கராபரணம் – ( Major; Major scale) இதுவே ஐரோப்பிய இசையின் தலைமைப் பாலை /அடிப்படைப்பண் ஆகிறது.
இந்துத்தானி இசையின் அடிப்படைப் பாலையும் (பிலாவல் தாட்) இதுவே. முன்பு மருதம் – மருதயாழ் – கோடிப்பாலை – கரகரப்பிரியா (காஃபிதாட்) இந்துத்தானி இசையின் அடிப்படைப்பண் ஆக இருந்துள்ளது.

## இயல் தமிழ்:

1. *இசையும், நாடகமும் அல்லாத தமிழின் இலக்கணம். இலக்கிய இலக்கணங்கள் செய்யுளும், உரைநடையுமாக இயல்வன இயல் தமிழுள் அடங்கும்.*

2. *இசை, நாடகமல்லாத தமிழ் நூல்கள்.*
**அஃது இயல் தமிழில் வருங்கால்...** (சிலப். 6: 35 அடியார்க்.)
**இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழென** (பிங்க. 1332)

## இயல்தரவு கொச்சகம்: → தரவு கொச்சகக் கலிப்பா

## இயல் தளை: *இயல்தளை வெள்ளடி... (யா. கா. 39)*

## இயல் தானம்: = மத்திம ஸ்தாயி, நடுத்தாயி, நடுத்தானம், சமன் மண்டிலம், மந்தம்.

இசை பெரும்பாலும் நடுத்தானத்தில் இயங்கும். (middle octave)
↑**மக்களின் பேச்சு நடுத்தானத்திலே அமைந்துள்ளது.** *பாடல்களும் இத்தானத்திலே தான் பெரும்பாலும் இயங்குகின்றன எனவே இதுவே (இயற்கைத்தாயி) இயல்தானம்.*

## இயல்பகுப்புமுறை: = விகிதப் பகுப்பு முறை, பின்னப்பகுப்புமுறை (Just Intonation)

*இசைச்சுரங்களின் அளவுமுறை: குரல் (ச) சுரத்தின் (சுருதி - frequency) துடிப்பைப் போல, இளி (ப) சுரத்தின் துடிப்பு 1½ மடங்கு ஆகும். இந்த முறையில் 12 தான சுரங்களையும் கண்டமுறை இயல் (இயற்கை) பகுப்பு முறையாகும்.*
**எடு:- (இணைமுறை)**

ச = 1; ப = 1½ = $\frac{3}{2}$

ரி$^2$ = $\frac{3}{2}$ x $\frac{3}{2}$ x ½ = 9/8

த$^2$ = 9/8 x $\frac{3}{2}$ = 27/16

*இது தமிழிசை முறை; மாறாக ஐரோப்பிய இசைமுறை என்பது சமபகுப்பு இசை (Equal Temperament) முறையைச் சேர்ந்தது.*

← த. க. க. 173/III; → விகிதப் பகுப்பு முறை

## இயல்பா:

1. *ஆசிரியப்பா, அகவல்பா* (ம. அ)

2. *ஆழ்வார் பாசுரத்துள் ஒரு பகுதி.*
**எக்காலும் புகழ் மிக்காம் எங்கள் இயற்பா ஓதி வியப்பாரும்** (சோலை. குற. 152)

3. **செய்யுள்; இசைப்படுத்தாத பாடல்**
**பல இயல்பாக்களுடனே நிறத்தை இசைத்தலால் - இசை என்று பெயராம்** (சிலப். 3: 26 அடியார்க்.)

← *பெ. அ. 426/*II

## இயல்புக் கூத்து: *கூத்துவகையுள் ஒன்று.*

**இயல்புக்கூத்து தேசிக்கூத்து எனப் பல வகைய** (சிலப். 3: 12அடியார்க்.)

## இயல் புலவன்: *இசைப் பாடல் இயற்றும் (எழுதும்) பாடல் ஆசிரியன் (lyricist); இசைப் புணர்ப்பு செய்பவன்; இசையமைப்பாளன்; இசை யாசிரியன் (composer).*

**கவியது குறிப்பும் என்றது - இயல்புலவன் நினைத்த கோட்பாடு மென்றவாறு** (சிலப்: 3: 33அரும்.)
*இயல் புலவரே பொருள் வைப்பார்... (தெ. இ. க. 17: 592)*

## இயல் மயங்கிசைக் கொச்சகக் கலி:

*ஒருவகை மயங்கிசைக் கொச்சகக் கலி.*
*வேறு பாக்கள் வாராது, கலிப்பாவுக்கு ஓதிய உறுப்புக்களால் மட்டுமே உறுப்புக்கள் (மாறி மாறி) மயங்கி வரும் மயங்கிசைக் கலிப்பா வகை.*
எடு:- சிலம்பின் முதல் காதையான மங்கல வாழ்த்துப் பாடல்.
→ *அயல்மயங்கிசைக் கொச்சகக்கலி*

## இயலசை: *நேர் மற்றும் நிரை அசைகள்.*

**இயலசை முதலிரண்டு ஏனைய உரி அசை** (தொ. பொ. 314)
**முதல் இரண்டு இயல்அசை** (யா. வி. 95 உரை)

## இயலடி: *இயல் சீரான் வரும் அடி* (ம. அ.)

## இயலிசை நாடகப் பொருள் தொடர் நிலைச் செய்யுள்: இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் கொண்டு தொடர்ந்துவரும் (நீண்ட) இலக்கியம். *(செய்யுள் - இலக்கியம்)*

*எடு:- சிலப்பதிகாரம்.*
**செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்** (தொ. சொ. 67)
*ஒப்பு:- பாட்டுடைச் செய்யுள் (சிலப் பதிகம். 60)*
**பல பாக்களோடு உரைப்பாட்டையும், இசைப்பாட்டையு முடைய இயலிசை நாடகப் பொருள் தொடர்நிலைச் செய்யுள்** (சிலப். பதிகம். 55-60 அடியார்க்.)
← *சி. யா. பக். 7*

## இயவர்: *தோற்கருவியாளர், (பொதுவாகக்) கருவி வாசிப்பவர் (Instrumentalist). முரசு அறைந்து முரசிற்குப் பலியிடவும் மன்னர் அருகில் சென்று பாடிடவும் உரிமை பெற்றவர்.*

கலித்த இயவர் இயம் தொட்டன்ன (மதுரைக். 304)
இயவரும் அறியாப் பல்லியம் கறங்க (புறம். 336: 6)
... தொடித் தோள் இயவர் (பதிற். 17: 7)
இயவர் புகழ் எறி முரசு ஆர்ப்ப (பு. வெ. 58)
இயவர் தோற்கருவி இசைக்கும் மக்கள் (திவா. 217& சூடா. 796)
← தேவ. 137/4

**இயவாகு:** *இசைக்கருவியுள் ஒன்று* *(ம. அ.)*

**இயற்கை இன்னொலி:** = அநாகத நாதம்
*இயற்கையில் ஒலிக்கும் (உண்டாகும்) இனிய ஒலி. எடு: அருவியோசை, வண்டின் ஒலி, அலைகடலோசை மயிலின் அகவல்.*
ஒரு திறம் அண்ணல் நெடுவரை அருவிநீர் ததும்ப (பரிபா. 17: 14)
ஒருதிறம் யாணர் வண்டின் இமிரிசை எழ (பரிபா. 17: 10)
கத்துகடல் சூழ் காத்தான் சத்திரத்தில் (காளமேகம்: தனிப்பாடல்)
ஒருதிறம் ஆடுசீர் மஞ்ஞை அரிக்குரல் தோன்ற (பரிபா. 17: 19)

**இயற்கையில் இசை:** *காட்டிலிருந்து இசை உருவானது. கா > கானம் - பாடல், இசை. வானம்பாடி;* Lyre bird - *(ஆசுத்திரேலியா)*
இமிழிசை அருவி (புறம். 369: 23)
கிளைக்குற்ற உழைச் சுரும்பின் கேழ் கெழுபாலை (பரிபா. 11: 127)

**இயற்சீர்:** = அகவல் உரிச்சீர், ஆசிரிய உரிச்சீர்
*இயல் அசையான் வரும் ஈரசைச்சீர்*
ஈரசைச்சீர் இயற்சீர் எனச் செப்பினர் புலவர் (காக். பாடி. 8)
இயற்சீரை ஆசிரிய உரிச்சீர் என்று வழங்குவாரும் உளர்
(யா. வி. 11 உரை)
→ அகவல் உரிச்சீர்

**இயன்மொழி வாழ்த்து:** *முன்னோர்களின் மேதக்க செயல்களை வீரன் ஒருவன் மீது ஏற்றிப் புகழ்தல்.*
இயல்மொழி வாழ்த்தாக அமைந்தவை (பதிற். 18, 20, 24, 43 &48)
← *த. வீ. க. 271*

**இயை:** **1. இசைப்பு, இசைதல், புணர்தல்**
*ஒத்து (சுருதி), சுரம், தாளம், பண் ஆகியன இயைந்து (பொருந்தி) வருவது இசை.*
பண் என்னாம் பாடற்கு இயைபு இன்றேல் (குறள். 573)

**2. இயைகை, கூடுகை, பொருந்துகை**
இயைந்த கேண்மை இல்லாகியரோ (புறம். 190: 5)
கோவலர் குறவரோடு ஒருங்கு இயைந்து ஆர்ப்ப (மலைபடு. 333)
அன்போடு இயைந்த வழக்கென்ப (குறள். 73)
மதுவோடு நார் இசைக்குமாறு (பழமொழி நா. 356)
இசைபே, புணர்ச்சி, இயைப்பு, இசைவு ஆகும் (திவா. 1710)
↑ இசை என்பதற்கான இலக்கியவழக்குச் சொல்லே இயை என்பது. எனினும் நாட்டுவழக்குச் சொல்லான இசை என்பதே இசைத் துறையில் ஆட்சி பெற்றுள்ளது.
*முசல் - முயல்; புசல் - புயல்; மசிர்- மயிர்; இசை - இயை*
← *தே.நே. 201/2; செ. ப. அ. 304/I*

**இயைபு:**
**1. பொருத்தம்**
பண் என்னாம் பாடற்கு இயைபு இன்றேல் (குறள். 573)
**2.** *பாடல் அணிகளுள் ஒன்று; தொடைகளுள் ஒன்று; இயைபுத்தொடை* (Rhyme).
இறுவாய் ஒன்றல் இயைபின் யாப்பே (தொல். செய். 95)
திருவே நினைக்காதல் கொண்டேனே– நினது
திருஉரு வேமறவா திருந்தேனே
(பாரதியின் பாரதக் கனவு)
**3. தாது; இளி ஒத்து**

**இயைபு வண்ணம்:** → இடை இசைவண்ணம்

**இரங்கல்:**
**1. இசைத்தல், ஒலித்தல்**
துவைத்தலும், சிலைத்தலும், இயம்பலும், இரங்கலும்
இசைப்பொருட்கிளவி என்மனார் புலவர் (தொ. சொ. 352)
... தாம் தாம் என்று இரங்கு தண்ணுமைகளும் (சீவக. 292: 2)
கல்யாறு ஒலிக்கும் விடர் முழங்கு இரங்கு இசை (மலைபடு. 324)

**2. யாழ் நரம்போசை,** (Sound of the yal)
சிலைத்தல்... இரங்கல்... (பிங்க. 1441)
கலித்தல்... இரங்கல்... இவை யாழ் நரம்போசை (பிங்க. 1441)

**இரங்கல்பண்:** *ஏழ்பெரும்பாலை என்ற ஏழ் பெரும் பண்களில் செவ்வழிப்பாலையும் (இருமத் திமைத் தோடி), விளரிப் பாலையும் (தோடி) இரங்கல் சுவை தரும் பண்கள்.*
*செவ்வழிப் பாலை - ச ரி¹ க¹ ம¹ ம² த¹ நி¹*
சிறிய யாழை இரங்கல் பண்ணாகிய செவ்வழி என்னும் பண்ணிலே வாசிக்கும் (யா. நூ. 22)
*விளரிப் பாலை (தோடி) - ச ரி¹ க¹ ம¹ ப த¹ நி¹*
இரங்கல் பண்ணாகிய விளரியைச் சென்று இறுகின்ற இனிய நரம்புத்தொடை (யா. நூ. 22)
↑ இவ்விரு பெரும் பண்களும் நெய்தல் நிலத்துக்குரியவை. மாலை நேரப்பண்கள். இரங்கல் நெய்தல் திணைக்குரியது.

**இரங்கற்பா:** = கையறுநிலைப்பாடல், சரமகவி (Elegy).
*இறப்புக்கு இரங்கிப் பாடப்படும் பாடல்.*
எடு:–
தொடியுடைய தோள் மணந்தனன்
. . . . . . . . . . . . . . .
இடுக ஒன்றோ! சுடுக ஒன்றோ
படுவழிப் படுக, இப்புகழ் வெய்யோன் தலையே (புறம். 20–2)

**இரசித்தல்:** → சுவைத்தல்

## இரட்ட:

1. ஒலிக்க

இருவிரல் உயர்த்திச் செருநிலை இரட்ட (கல்லா. 8: 20)
கல் எறி இசையின் இரட்டும் (அகம். 89: 5)

2. மாறி மாறி ஒலிக்க, ஒலி இரட்டி வருவது

தாளக்கருவிகளின் கண் பகுதியில் குறுக்கே கட்டப் பட்ட கயிற்றினால் ஒரு தட்டு தட்டும்போது இரட்டை ஒலி வருவது.

குடிஞை இரட்டும் நெடுமலை அடுக்கத்து (மலைபடு. 141)
பாடு இன் படுமணி இரட்ட (முருகு. 115)

## இரட்டி:

1. இரட்டைக்கை, பிணையல், இணைக்கை, பிணையல்கை: இரண்டு கைகளால் செய்யும் அவிநயம்.

→ இணைக்கை

... ஒற்றையில் செய்த கைத்தொழில் இரட்டியில் புகாமலும் (சிலப் 3. 20 _ 21 அரும்)

2. தாளம் அல்லது நடை, இரண்டின் மடங்காகப் பெருகி நடைபோடுதலை இரட்டிக்கிரட்டி என்பர்.

→ இரட்டிக்கிரட்டி

## இரட்டிக்கிரட்டி:

பாடிய காலத்து மேற்காலம் பாடும்போது இசை இரண்டு மடங்காக உயர்ந்து செல்லும். உயரும்போது இரண்டிரண்டு மடங்காகவும் உயரும்; குறையும் போது பாதி, பாதியாகக் குறையும்.

| முதல்காலம் | இரண்டாம் காலம் | மூன்றாம் காலம் | நான்காம் காலம் |
|---|---|---|---|
| முதல்நடை | வாரநடை | கூடைநடை | திரள்நடை |
| 2 | 4 | 8 | 16 |
| (1 x 2 = 2) | (2 x 2 = 4) | (4 x 2 = 8) | (8 x 2= 16) |

... ஒட்டம் அதற்கு இரட்டி உற்ற அதற்கிரட்டி (தாளசமுத். 65)
... இரட்டியும் இரட்டிக்கிரட்டியும் .. (சிலப். 3: 20 _ 21 அரும்.)
. இரட்டிக்கிரட்டியாக... (சிலப். 3: 154 அரும்.)

## இரட்டித்தகுரல்:

= உச்சக்குரல், மேல்மண்டிலக் குரல், வலிவுத்தானக்குரல், தாரசட்சம், மேல் குரல் (upper octave C).

சமன் மண்டில சுரத்தின் அசைவு எண்ணைப்போல் மேல் மண்டிலத்தின் அதே வகைமைச் சுரத்தின் அசைவு எண் இருமடங்கு ஆகும். கீழ்மண்டிலத்தில் பாதியாகும்.

| கீழ்மண்டிலம் | சமன்மண்டிலம் | மேல்மண்டிலம் |
|---|---|---|
| lower octave | Middle octave | upper octave |
| ச̣ | ச | ச் |
| 132 | 264 | 528 |

எனவே இரட்டித்த குரல் (264 + 264 = 528) என்றனர்.
இரட்டிக்கிரட்டி - 132, 264, 528

→இரட்டி$^2$ , இரட்டிக்கிரட்டி

## இரட்டித்த குரலாகிய அரும்பாலை:

இடமுறை (இறங்குநிரல் முறை)த் திரிபு என்ற பண் பெயர்க்கும் முறையில், மேல்தாயிக்குரல் (ச்) முதல் இறங்கு நிலையில் பண் பெயர்க்கும் போது, தலைமைப் பாலையாக வரும்பாலை, அரும்பாலை (சங்கரா பரணம்) ஆகும்.

இரட்டித்த குரல் - மேல்தானக்குரல் - ' ச் '

படுமலை... அரும்பாலை எனக்குரல் குரலாக (சிலப். 3: 84 – 5)
அரும்பாலைக்கு நரம்பு இரட்டித்த பெற்றித்தென்றவாறு (மேலது. அரும்)
இரட்டித்த குரல் குரலாகிய அரும்பாலை (சிலப்: 390 அரும்.)

## இரட்டித்து ஒத்தல்:

= வாரநடை, இரண்டாம் காலம், ஈரொற்று வாரம்.

தாள எண்ணிக்கை ஒவ்வொன்றுக்கும் இரண்டு எழுத்தாக இசைத்தல்.

தேசிக்கு இரட்டித்து ஒத்தலுமே.. (சிலப். 3:153 அரும்.)
வாரத்தினும் தேசிக்கூத் தெல்லாம்...(மேலது. அடியார்க்.)

← த. க. க. 345/I; → ஈரொற்று வாரம்

## இரட்டுமி:

பறைவகையுள் ஒன்று

## இரட்டை அடுக்கு:

(ஜண்டை வரிசை)

இரட்டை அணி, இரட்டைச் சுரம், ஜண்டை சுரம், (double note).

ஒருவகை இசைப்பயிற்சி சுராவளி கற்றபின் கற்பது. இசைப்பயிற்சியின்போது சுரங்களை இரண்டு இரண்டாக அடுக்கிப் பயிலுதல். கோவைகளை இரண்டிரண்டாக அடுக்குவதால் இரட்டை அடுக்கு.

எடு:- சச, ரிரி, கக, மம...

இரட்டை அடுக்கில் வரும் (ச ச என்பதில் இரண்டாவது வரும்'ச') இரண்டாவது சுரத்தை சற்று நீட்டிப் பயிற்சி செய்தல் முறை. சசா, ரிரீ, க கா, ம மா போன்று.

← இ. து. த. சொ. 11

## இரட்டை அணி:

→ இரட்டை அடுக்கு

## இரட்டை ஒற்றைக்கை:

= கூடைக்கை

இரண்டு கைகளையும் குவித்து ஒற்றைக்கையாக்கி அவிநயத்தல்.

நாடகமடந்தையர் ஆடரங்கு யாங்கணும்
கூடையிற் பொலிந்து கொற்ற வேந்தே (சிலப். 26: 69)
கூடையிற் பொலிந்து - குவித்த கையுடனே பொலிந்து; கூடைக்கை - இரட்டை ஒற்றைக்கை (மேலது. அரும்)
கூடை செய்த கை வாரத்துக் களைதலும்
வாரம் செய்த கை கூடையில் களைதலும் (சிலப். 3: 20 – 21)
அகக்கூத்து நிகழுமிடத்து ஒற்றையில் செய்த கைத்தொழில் இரட்டையில் புகாமலும், இரட்டையில் செய்த கைத்தொழில் ஒற்றையில் புகாமலும் களைதல் (மேலது. அடியார்க்.)

**இரட்டைக் கை:** → இணைக்கை

**இரட்டைக்கைவண்ணம்:** → இணைக்கை

**இரட்டைச்சுரம்:** → இரட்டை அடுக்கு

**இரட்டைச் சின்னம்:** (double clarion)
இரட்டையான ஊது குழல் வகை (தக்க. யாக. 344 உரை)
← பெ. அ. 444/II

**இரட்டைச் சீர்** = எட்டன் மட்டம், ஈரொத்துடைத் தடாரம் இருசீர்ப்பாணி, இரட்டைத்தாளம், சதுசுர திரிபுடை
கைக்கசடு இருந்த என் கண் அகன் தடாரி
இருசீர்ப் பாணிக்கு ஏற்ப (பொருந. 70 – 1)
இரட்டைத் தாளத்திற்குப் பொருந்த ஒரு பாட்டினை .. பாடுதற்கு (நச்சர்)

**இரட்டைச் சீவாளி:**
*காற்றுக்கருவிகளில் ஊதும் போது இருபக்கமும் துடிக்கும் சீவாளி.*
*சான்று: நாகசுரம் மற்றும் ஒஃபேயின் சீவாளி.*

**இரட்டை சுரம்:** → இரட்டை அடுக்கு

**இரட்டைத் தொடை:**
ஓரடி முழுதும் ஒரு சொல்லே வரத் தொடுப்பது (யா. கா. உறு.17)
எடு:–
பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றை (குறள் 350)
← செ. ப. அ. 308

**இரட்டை மணிமாலை:** *சிற்றிலக்கிய வகையுள் ஒன்று. வெண்பா மற்றும் கட்டளைக் கலித்துறையில் அந்தாதித் தொடை கொண்டு பாடப்படும் சிற்றிலக்கியம்.*
*எடு:- காரைக்கால் அம்மையாரின் இரட்டை மணிமாலை*
வெண்பா முதலா... இருபது இரட்டை மணிமாலை
(பன்னிரு பாட். 151)
← இலக். வி. 819; செ ப. அ. 309

**இரண்டாம்காலம்:** → இரட்டித்து ஒத்தல், வாரநடை, மத்திமகாலம்

**இரண்டிற்கும் வாசித்தல்:** *(உபயானுகம்)*
*அரங்கிசைக்கும், நாட்டியத்திற்கும் இசைக் கருவிகளை வாசித்தல்.*

**இரண்டு ஒத்துடைத் தடாரம்:** = எட்டன் மட்டம், சதுசுர திரிபுடை.

மலர்மிசைத் திருவினை வலத்தினி லமைத்தவன்
மறிதிரைக் கடலினை மதித்திட வடைத்தவன்
இல கொளித் தடவரை கரத்தினி லெடுத்தவ
னின நிரைத் தொகை கழையி சைத்தலி லழைத்தவன்...
இஃது எண் சீரான் வந்த கொச்சக ஒரு போகு; பண் கௌசிகம். தாளம் இரண்டொத்துடைத் தடாரம்.
←சிலப். 6: 35 அடியார்க்.→ இரட்டைச்சீர்

**இரண தூரியம்:** *போர்ப்பறை* (ம. அ.)
இரணம் – போர் (பிங்க. 1473)
← செ. ப. அ. 310

**இரதபந்தம்:** *ஒருவகைச் சித்திரகவி. (மா. அ. 286) தேர்போன்ற படத்தில் அமைந்த பாடல்*

**இரதம்:** *சுவை, ரஸம்.*
உருக்களை (பாடல்) இரதம் பொருந்தும்படி புணர்க்கவும் வல்லவனாய் (சிலப் 3: 26 – 36 அரும்)
இசை கொள்ளும் படியும் சுவை பொருந்தும் படியும் புணர்க்க வல்லனாகி (மேலது. அடியார்க்.)
இன்புற இயக்கி என்றது – வண்ணமுதலாகக் காட்டப்பட்ட பாடலியல் வழக்கெல்லாம் இரதம் பொருந்த நிரம்பக் காட்டி என்றவாறு (அரும்.)
புவியோர்க்கு இரதம் தரும் தீங்கரும்பு (ந. பா. நாட்டு. 16)
தேரும்... சுவையும் இரதம் என்ப (பிங்க. 3166)

**இரலை:** *துத்தரிக்கொம்பு, ஊது கொம்பு. இரலை மானின் கொம்பை வைத்து இசைத்த கருவி*
இரலையும் துடியும் ஆர்ப்ப (சீவக. 434)
இரலைக்கிளவி மானின் ஏறும் – தலைநாளும்
ஊதும் கொம்புமாகும் (பிங்க. 3167)
இடைப்படாது ... இரலை வாய் வைத்து (சீவக. 447)
... துத்தரிக் கொம்பை ஊதி (நச்சர்.)
இரலையே கலை ஊது கொம்பு... (சூடா. 11 : 4)

**இரவானம்:** இசைக்கருவி வகையுள் ஒன்று *(ச. அ.)*

**இராக்கடை வேசையர்:** *காவற்கணிகையர், இராக் கிடைப் பெண்டுகள். இரவு நேரங்களில் பணிபுரியும் அரண்மனைக் காவற் பெண்டிர்.*
காவற் கணிகையர் ஆடற் கூத்தியர் (சிலப். 5: 50)
காவற்கணிகையர் – இராக்கடை வேசையர் (அரும்.)
கர்வற்கணிகையர் – களத்தாடும் கூத்திகள் (அடியார்க்.)

**இராக ஆலாபனை:** → பண் ஆளத்தி

**இராகச்சாயாசுரம்:** → பண்சாயல் கோவை

**இராகசஞ்சாரம்:** → பண் ஆளத்தி

**இராக தாள மாலிகை:** → பண்தாள மாலை

**இராகப் புள்:** *கின்னரம்* (sweet singing bird)
மிதுனம் கின்னரம் இராகப்புள்ளே (பிங்க. 2361)

**இராகம்:**
1. பண்
2. காதல், காமம்
காசை ஆடை மூடி ஒடிக்காதல் செய்தானவள் ஊர் (பெ. திரு. 111)
'ஜநனி என்று பாராதே... ராகத்தைப் பண்ணின பையனுடைய ஊரானது...' (பெ. வா. பிள்ளை)

**இராகஸ்புடம்:** *பண் உருவாகும் முறை.*
*பண்ணின் விரிவாக்கம் (ஆலாபனை) எம்முறையில் உருவாகிறது என்பதைக் காட்டும் முறை. இது தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் முதன்முதலாகக் கண்ட முறை. ஒரு பண்ணின்போக்கு (சஞ்சாரம்) எவ்வகைச் சுரங்களால் எப்படி உருவாகின்றது என்பதை இதன் மூலம் அவர் கண்டுபிடித்துள்ளார்.*
← *கருணாமிர்த சாகரம்.*

**இராசி:** = ஓரை, மதி, கோள், உடுமண்டலம், நட்சத்திரக் கூட்டம்
படைத்துக் கோள் பெயரிடுவாள் (சிலப். 17. எடுத். 7)
ஆறிருமதியினும் காருக வடிப்பயின் (சிலப்: 26:25)
ஆறிருமதியினும் - இராசிபன்னிரண்டிலும் (அரும்.)

**இராமனாட்டம்:** *பண்டைய சாக்கைக் கூத்தின் மரபு வழியாக வந்த கூத்து வகை. கோட்டயத்து அரசனால் கண்ணன் ஆட்டத்திற்குப் போட்டியாக உருவாக் கப்பட்டது. இதன் பிதாமகன் கோட்டயத்து அரசன். இராமனாட்டத்தின் பிரிவே கதகளி*
*(சிலம்பு வழங்கும் செல்வம் பக். 44-46)*

**இராப் பண்:** *இராக் காலத்தில் பாடற்குரிய பண்கள்*

**இராப் பாடி:** *இரவில் பாடிப் பிச்சை எடுக்கும் புதர் வண்ணான்* (Night singer).
← *செ. ப அ 3424 & 323*

**இராமக்கிரி:**
குறிஞ்சிப் பண் வகையுள் ஒன்று (பிங். 1382)
இராமக்கிரி... பண்ணே (திவா. 1894)

**இராம கலி:** *பண்களில் ஒன்று (பரத. இராக. 103)*

**இராமப் பிரியா:** *23வது (52வது மேளம்) பாலை.*

**இராவணா சுரம்:**
இராவணன் வாசித்த யாழ் (பரத. 4: 15)

**இராவணாத்தம்:** *ஒருவகை யாழ்; சிரட்டைக் கின்னரி.*
இராவணாத்தம் கின்னரி ஐவகையான முப்பத்திரண்டு வாத்தியங்களும் (இராமலிங்கர் உரைநடை பக். 13)
← *செ ப. அ. 325*

**இருக்குக்குறள்:** *சிறிய பாவகை,* (A Kind of short verse). *இரு சீரான் இயன்ற அடி உடைய பாட்டு. திரு இருக்குக்குறள் எனச் சம்பந்தர் தேவாரத்துள்ளும் திருவாய்மொழியுள்ளும் காணப்படும் பாவகை.*
ஏகபாதம் தமிழ் இருக்குக்குறள் சாத்தி (பெரியபு. திருஞான. 276)
எடு:– அரனை உள்குவீர்
பிரமனூருளெம்
பரனையே மனம்
பரவி உய்ம்மினே (தேவா. 1: 90: 1)

**இருகளை:** = இருகளைச்சவுக்கம்.
*விளம்பகாலம்*
*8/8 - இருகளை - ஓர் எண்ணிக்கையுள் 8 குறில்கள் அடைந்து ஒலிக்கும் நேரம்*
*எ-டு:* தகதின தகதின
*(8 எழுத்து - 8 குறில் - 1 எண்ணிக்கை - 8 x ¼ = 2 மாத்திரை)*

**இருகளைச் சவுக்கம்:** → இருகளை

**இருகுறள் நேரிசை வெண்பா:** = நேரிசை வெண்பா
*இருகுறள் வெண்பாவுடன், முதல் குறள் இரண்டாமடியின் ஈற்றில் தனித் சீருடன் பாடப்படும் வெண்பா.*
எடு: "வண்டார் வளவயல்" என்று தொடங்கும் நளவெண்பா
← *யா. கா. செய்: 3; செ. ப. அ. 326/I*

**இருந்தேத்துவார்:** = மாகதர்
சூதர் வாழ்த்த மாகதர் நுவல (மதுரைக். 670)
சூதர் மாகதர் வேதாளிகர்... (சிலப். 5: 48)
*சூதர் - கைவாரிகள்.*

**இருபத்தொருதிறம்:** இருபத்தொரு
*கிளைப்பண்கள், (ஜன்யங்கள், Derivatives). ஒரு பாலையில் (மேளகர்த்தா) கிடைக்கும் கிளைப்பண்கள் 21:*
*பண்ணியல் ( 6 சுரப்பண்; சாடவம்) - 6*

திறம் ( 5 சுரப்பண்: ஔடவம்) - 15 = 21

← த. க. க. 216-17; → எழுமூன்று திறம்

## இருபெண்டிர்: பொதுமகளிர்

.... அடியாள் வீடும் இரு பெண்டிர் வீடொன்றும் உழமை சைவதாகவும் (Ec,X,M b, 49a; த. க. சொ. 71)

## இரும்பேர் ஒக்கல்:→ கண்ணுளங்கடுப்பு

## இரும்பொலம் பாண்டில்: இலைத்தாளம்.

இது வட்ட வடிவும், நடுக்குழியும் உடைய, அகலமான, மெல்லிதான தாளக்கருவி.

இரும்பொலம் பாண்டில் (அகம். 376:9)

(இரும் = பெரிய, அகன்ற; பொலம் = அழகிய)

← த. வ. 156

## இருமத்திமத்தோடி: → செவ்வழி

## இருமருப்பு: கரிய யாழ்த்தண்டு.

மணிவார்ந்தன்ன மாஇருமருப்பின் (பெரும்பாண். 14)

பாம்பு அணந்தன்ன ஓங்கு இரு மருப்பின் (பொருந. 13)

கருங்காலி மரத்தால் யாழ்க்கோடு செய்யப்படுவதால் கருமைநிறம்.

(இரு > இருள் - கருமை).

## இருமுற்றிரட்டை: ஒரு செய்யுளில் ஓரடி முற்றெதுகை யாய் மற்றையடி மற்றொரு முற்றெதுகையாய் வருவது.

← செ. ப. அ. 333

## இருமுறைபாடல்: பாட்டின் ஒரு வரியை

அல்லது முதல் அடியை அல்லது எடுப்பை (பல்லவி) இருமுறை பாடுதல் வழக்கு.

பாடுகம் வா வாழி தோழியாம் பாடுகம்
பாடுகம் வா வாழி தோழியாம் பாடுகம் (சிலப். 24: 21)

↑ பாடலின் திரண்டபொருள் முதலடியில் அமைகிறது. எனவே பொருள் அழுத்தம் தர மீண்டும் பாடப்படுகிறது. **இசைபாடும்போது பண்ணின் சரியான வடிவத்தைக் கொண்டு வரவும் இம்முறை பயன்படுகிறது.**

## இருவகைக் கூத்தின் இலக்கணம்: கூத்தின் அனைத்து இலக்கணம்.

அறுவகை நிலையும் ஐவகைப் பாதமும், ஈரெண் வகைய அங்கக்கிரியையும் வருத்தனை நான்கும், நிருத்தக்கை முப்பதும், அத்தகு தொழில் ஆகுமென்ப.(சிலப். 3: 12 அடியார்க். மேற்.)

நிலை = தோற்றம், (pose); பாதம் = அடைவு (அடவு)

← உ. வே சா அடிக்

## இருவகைக் கூத்து: ஈரிரு வகையான எதிரெதிர் கூத்துக்கள்.

| | | |
|---|---|---|
| வசைக்கூத்து | x | புகழ்க்கூத்து |
| வேத்தியல் | x | பொதுஇயல் |
| வரிக்கூத்து | x | வரிச்சாந்திக்கூத்து |
| சாந்திக்கூத்து | x | விநோதக்கூத்து |
| ஆரியம் | x | தமிழ் |
| இயல்புக்கூத்து | x | தேசிக்கூத்து |
| தேசிகம் | x | மார்க்கம் |

இருவகைக் கூத்துத்தானே இயன்ற தேசிகமே மார்க்கம் (சூடா. 12: 4)

← சிலப். 3: 12. அடியார்க்

## இருவகைத் தாளம்: மட்டதாளம் இரு சமமாக வருவது (சமநிலை); சாய்ப்புத் தாளம் (சாப்பு) சமம் இன்றி வருவது (வியநிலை).

| 1) மட்டதாளம் | 2) சாய்ப்புத்தாளம் |
|---|---|
| 2 + 2 = நாலன் மட்டம் (சதுசுர ஏகம்) | 1 + 2 = மூன்றன் சாய்ப்பு (திசுரம்) |
| 4 + 4 = எட்டன் மட்டம் (சதுசுர திரிபுடை) | 2 + 3 = ஐந்தன் சாய்ப்பு (கண்டம்) |
| 6 + 6 = பனிரண்டன் மட்டம் (ரூபகம்) | 3 + 4 = ஏழன் சாய்ப்பு (மிசுரம்) |
| | 4+5 = ஒன்பான் சாய்ப்பு (சங்கீரணம்) |

## இருவகை விலக்குறுப்பு:

பலவகைக் கூத்தும் விலக்கினில் புணர்த்து (சிலப். 3: 13)

இருவகை பலவகை விலக்குறுப்பு... (சிலப். பதிகம்)

இருவகை பல்வகை யென்னும் விலக்கோடு...

(சிலப். பதிகம். 73: அடி.)

## இருவளையின் வாய்க்கை: = கடகா வருத்தம், கடகா வருத்தக்கை.

இரட்டைக் கைகளுள் ஒன்று.

இரண்டு கையும் கடகமாய் மணிக்கட்டுக்கு ஏற இயைந்து நிற்பது என்னை? கருதிய கடகா வருத்தக் கையே இருகையும் கடக மணிக்கட்டியைவது (சிலப். 3: 18 அடியார்க்.)

## இரு விகற்ப நேரிசை வெண்பா: வெண்பா

வின் முதல் குறள் ஓர் எதுகையிலும் இரண்டாம் குறள் பிறிதோர் எதுகையிலும் முதல் குறள் ஈற்றில் தனிச்சொல் பெற்றும் அமைவது. இரண்டாம் அடியின் இறுதிச்சீர் முதற் சீருடன் ஒத்த எதுகைபெற்றுத் தனிச்சீராக வரப்பெறும்.

எடு:– 'வண்டார் வளவயல் சூழ்' என்ற நளவெண்பா.

'சிலைவிலக்கு' என்ற தண்டி: 1 6: மேற்.

← யா க. 60. உரை

## இருள்பாலை: ஏழிலைம்பாலை - ஏழிலைப்

பாலை (seven leaved poon tree, Alstonia scholaris). ஏழு பிரிவாக இலைகளை உடைய பாலைநிலத் தாவரம்.

ஏழு சுரப்பண் 'பாலை' என்று இதன் வழியாகப் பெயர் பெற்றது எனலாம்.

இரு - இருள் - கருமை

← செ. ப. அ. பிற். 131; Music in Cilapathikaram.p.7

## இருளன்:

1. வரிக்கூத்து வகையுள் ஒன்று.

சிந்து... இருள் முகத்துப் பேதை இருளன்... என்றெண்ணிக் கோத்த வரிக்கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

2. வேடர் சாதியுள் ஒருவன்.

## இரேகுப்தி: (ச. அ.) இரேகுத்தி (வி. அ.)

பண்களில் ஒன்று

↑ இது தற்காலத்திய இரேவகுப்தி ஆகலாம்.

## இரேசிதம்:

1. நாட்டியக்கை முப்பதுள் ஒன்று.

நிருத்தக் கை முப்பதாவன: சதுச்சிரம்...இரேசிதம் (சிலப். 3: 12 உ. வே. சா. அடிக்.)

2. நாட்டியவகை

அங்ககாரமே இரேசிதம் என்ன (திருவிளை. 4: 24: 9)

← பெ. அ. 522/II

## இரைத்தல்: ஒலித்தல்

இரைக்கின்ற பாம்பினை (காரைக். திருவிரட். 7)

இரையும் தெழு தூநீர் வையை (திருவிளை. பரிநரி. 57)

தண்ணுமை திமிலை முன் இரைந்தன (பிரபு. லீலை. 4: 23)

திரை உந்து இரையும் நதி (தாயுமா. பா. 28: 12)

## இலக்கண கீதம்: தாளம் முதலிய இசை இலக்கணம் அமைந்த பாடல்கள். இசைப்பயிற்சி வரிசையில் சுரவரிசை (சுராவளி) தாயிவரிசை, அலங்காரத்திற்குப் பின் கீதம் கற்றுத் தருகையில் சஞ்சாரிகீதம் மற்றும் இலக்கண கீதங்கள் கற்றுத் தரப்படும்.

கொன்றை வேய்ந்த செல்வன் அடியினை

என்றும் ஏத்தித்தொழு வோம்யாமே (கொன்றை வேந்தன். 1)

பண்ணத்திக்கு உரிய (செம்பாலைக்கு) இசைப் பாடலாக (இலக்கணகீதம்) இளம்பூரணர் தரும் காட்டுப்பாடல்.

## இலக்கிய வழக்கு: இது செவ்வியல் வழக்கு.

மக்கள் வழக்கிலிருந்து புலவர் மரபு ஆக்கிக் கொண்டது. இயல்பான தன்மை குறைந்து செயற்கைத் தன்மை மிகுந்தது.

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்

பாடல் சான்ற புலன் நெறி வழக்கம் (தொ. பொ. 56)

(நாடகவழக்கு - புலவர் வழக்கு - புனைந்துரை வழக்கு- இலக்கிய வழக்கு)

செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும் (தொ. சொ. 456)

(செய்யுள் - இலக்கியம்; வழக்கியல் - உலகியல்)

செய்யுள் மொழியால் சீர் புனைந்து யாப்பின் (தொ.சொ. 537)

இலக்கிய வழக்கு என்பது அதன் தொடக்கத்தி லிருந்து ஒரு செயற்கையான ஊடகம் என்பதை ஒத்துக் கொண்டாக வேண்டும் (த. வீ. க. 255)

## இலகு:

1. இலேசு (சூடா)
2. சிவமை (உ. நி)
3. 4 அக்கரகாலம் (அட்சரக்காலம், அச்சரக்காலம்) (பரத. தாள. 35)
4. குற்றெழுத்து (யா.வி. 95)

← செ. ப. அ. 340

## இலகு கோட்டு வாத்தியம்: இலகு வீணை போன்று நீளம் குறைந்த கோட்டுவாத்தியம். கையடக்கமான எளிதில் வெளியில் எடுத்துச் செல்ல ஏதுவான சிறிய நரம்பிசைக் கருவி. பண்டைய கைவழி என்ற சிறிய யாழை ஒத்தது. (கைவழி - சிறிய யாழ் - portable yal)

## இலகு தாளம்: → ஒற்றைத்தாளம்

## இலட்சண கீதம்: → பயிற்சிப்பாடல்

## இலட்சிய கீதம்: → அரங்கிசைப் பாடல்

## இலதை: = இலதைக்கை

இணையாவினைக்கையுள் ஒன்று.

இலதையாவது நடுவிரலும் சுட்டுவிரலும் கூடி நிமிரப் பெருவிரல் அவற்றின் கீழ்வரை சேர ஒழிந்த இரண்டு விரலும் வழிமுறை பின்னே நிமிர்ந்து நிற்பது.

இலதை என்பது இயம்புங்காலைப் பேடியும் சுட்டும் பிணைந்துடன் நிமிர்ந்து, கூடிய பெருவிரல் கீழ்வரை குறுகக், கடையிரு விரலும் பின்னர் நிமிர்த்த நடையின தென்ப நன்னெறிப்புலவர் என்றாராகலின் (சிலப். 3: 18 அடியார்க். மேற்.)

## இலதைக்கை: → இலதை

## இலய அறிவு: = லய ஞானம்.

சுருதி ஒப்புமை காணும் அறிவு.

← செ. ப. அ. 342

## இலயம்: லயம், தாளநடை, வேகம் குறிப்பது.

பொதுவாகத் தாளத்தைக் குறிப்பது.

பொருந்தி ஒன்றிவிடும் தன்மை. பாட்டுடன், பொருளுடன் காலக்கணக்குடன் கொட்டு முழக்கு பொருந்தி ஒன்றுவதே இலயம்.

1. **தாளம்** *ஒப்பு: - இலயக் கருவி - தாளக்கருவி*
கூடிய இலயம் சதி பிழையாமை (தேவா. 7வடதிருமுல்லைவாயில்.2)
ஆக்கிய இலய நீங்கிற்று அணங்கனாள் நெடுங்கண் பிலகி
(சீவக. 1268)
இலயம் நீங்கிற்று - தாள அறுதிகள் நீங்கின (நச்சர்)
பேசிய இலயம் பிழையா மரபில், பாடன் மகளிர் பாணி அளப்பவும்
(பெருங். 4: 12: 189 – 90)

2. **நடை, வேகம்** (tempo, speed)
*மெதுநடை - விளம்பித இலயம்* - slow tempo
*சமன்நடை - மத்தியஇலயம்* - Medium tempo
*வேகநடை - துரித இலயம்* - Fast tempo

3. = இலையம், இலாசியம்.
*கூத்து, கூத்தின் வேறுபாடு, பெண்கள் ஆடும் மென்வகை ஆடல்.*
இவ்வதிகாரத்து எடுத் தோத்தே.
இலேசேயன்றி இவ்வாற்றான் முடியாது (தொ.எ.456 இளம்.)
*இலேசு > இலாசியம்.*
ஏறுடைய கொடியுண்டோ இலயம் உண்டோ (தேவா. 6: 97: 5)
கொன்பெறும் இலயம் புரிபத விகசக் கொண்டலே
(திருமழிசை. பதிற். 13)
நடமே... அவிநயம் இலையம்... கூத்தெனப்பகர்வர் (பிங்க. 1444)
பைபருகும் அங்குல் இலயம் பற்றிப் பதன் அமைத்த பாவை நிருத்த நோக்கி (சீவக. 683)
*இலயம் - கூத்தில் தாள அறுதியைத் தொடங்கிக் காலமைத்த கூத்து.*
பிரமரி... இலயம்... பரதம் (சூடா. 9:49)
பண்ணிய இலயம் பற்றிப் பாடிய வனப்பு நோக்கி (சீவக. 727)
இலயமே கூத்தும் கூத்தின் விகற்பமும் (சூடா. 11: 13)
நடமே, நாடகம்... அவிநயம் இலையம்... கூத்தெனப் பகர்வர்
(பிங்க. 1444)
உப்பிதம், புரியம், இலயம், பரதமும் அப்பெயர்க்காம்
(திவா. புது. 257)
பிரமரி... இலயம்... பரதம் (சூடா. 9: 49)
கூடிய இலயம் சதி பிழையாமை (தேவா. 7 வடதிருமுல்லை. 2)

4. முழக்குமுறையில் எழுத்துகட்கு இடையே விடும் இடத்தின் அளவு முறைகளை இலயம் என்கிறோம். (மத்தளவியல். XLII)
*← இ. து. த சொ. 36*

## இலயாங்கம்: *பாடலைத் தாளத்துடன் பாடுவது*
*ஒப்பு: இலயக்கருவி - தாளக்கருவி அங்கம் உறுப்பு*
*(சுத்தாங்கம் தாளமின்றிப் பாடுவது)*
→ சுத்தாங்கம்

## இலலித கலை: → நுண்கலை

## இலலித பஞ்சமம் = இலலித பஞ்சமி
*பண்களில் ஒன்று* *(பரத. ராக. 103)*
பைரவி... இலலித பஞ்சமி... (பரத. 2: 55)

## இலலித பஞ்சமி: → இலலித பஞ்சமம்

## இலலிதம்: = இலலிதை, லலிதா, இலளிதை (ச. அ.)
1. *பண்களில் ஒன்று*
2. **ஒருவகை அவிநயம்**
*இலதை - இலதைக்கை ஆகலாம்*
← *பெ. அ. 546/II* ; → இலளிதை

## இலவண்டை: கோவில் சடங்குகளில் இசைக்கப்படும் ஒருவகைப்பறை.

## இலளிதை: நிருத்தக்கை முப்பதுள் ஒன்று (சிலப். 3: 13 உ. வேசா. அடிக்.)

## இலாசகி: = இலாசிகை *(கதி. அக.)*
*ஆடல்மகள்*(Female dancer)
*ஒப்பு:- இலாசியம் - மகளிர் ஆடும் இலேசு வகை நடனம்*

## இலாசிகை: → இலாசகி

## இலாசியம்: = இலயம், இலையம், நளிநடம்.
1. **மகளிர் ஆடும் இலேசு வகை நடனம்**
*இலேசு > இலாசு > இலாசியம் (லாஸ்யா - பெண்)*
*இலேசு - எளிது, சாதாரணம், நொய்ம்மை, மென்மை, கனமின்மை.*
இலேசாகக் கருதி (தொ. சொ. 58. நச்சர்)
இலேசு - சிறுமை (சீவக. உரை. பக் 1563)

2. **சக்தி நடனம், சக்தி தாண்டவம்**
*சக்தி தனித்தாடுவது.*

3. **நின்ற நிலையில் காட்டும் அவிநயம்.**
சுகுமார லாசியம் – உட்கார்ந்து அவிநயித்தல்
(அவி. தர்ப். 61 & ம. சூ. பக். 23)

4. **சிருங்கார நாட்டியம்**
*(மொழி முதல் லகரம், ரகரம், வராதாகையால் இ, அ, என்ற உயிர் சேர்த்தல். லேசு > இலேசு; ரத்தம் > அரத்தம்)*
→ தாண்டவம், இலயம், இலையம், இலாசகி
← *பெ அ. 550/II*

## இலாலி = இலாலினை
*லாலிப்பாடல்; தாலாட்டுப்பாடல்*
*லாலி (தெவ) - தாலாட்டு*
*← ஆந்திர நாட்டார் வழக்காற்றியல்*

## இலாலினை: → இலாலி

**இலாவணி:** காமன் விழாப்பாடல். டேப்பு என்ற ஒருவகை ஒருமுகப் பறையைப் பயன்படுத்திப் பாடப் படும் வினாவிடைப் பாடல். ஒருவகைப் போட்டிப் பாடல். ஏசல் பாடல். பண்டைய உறழ் கலி மற்றும் குறவஞ்சியின் சிங்கன், சிங்கி பாடலை ஒத்தது. தர்க்கப் பாடல் வடிவம் கொண்டது.

காமனைச் சிவனார் எரித்த கதையைச் சீரிய பல மெட்டுகளில் எரிந்தகட்சி, எரியாத கட்சி எனப் பிரிந்து இசைவாதம் புரிவது. எரிந்த கட்சியினர் புராண நம்பிக்கையும், எரியாத கட்சியினர் சித்தர் வழியும் உடையவர்கள்

இலாவணி - தொடுதல், நடுதல் (மராத்தியச் சொல்) மராட்டிய நாட்டார் பாடல்.

கூற்றும் மாற்றமும் இடைஇடை மிடைந்தும்
போக்கின்றாகல் உறழ்கலிக்கு இயல்பே (தொ. செய். 458)
வினவல் விடுத்தல் என இருபுலவர்
பாடும் அமைப்பினைக் கூடும் இலாவணி (சிந்துப். 45)
இலாவணி மெட்டுப்பாடல்:
மாசில்லா மதுரகவி ராஜசிங்கமே உமது
வாலை மடக்கியே வையும் அய்யா! அய்யா!!
மங்கையொடு பங்குடைய சங்கரன் விழி நுதலால்
மன்மதன் எரிந்த கதை பொய்யா! பொய்யா!!
(த. ப. வ.552–54)
இந்தக் கணபதிக்குத் தொந்தி பெருத்தவிதம்
காரணம் என்ன என்று – கூறு! கூறு!!
இந்தக் கணபதிக்குத் தொந்தி பெருத்தவிதம்
கொழுக்கட்டை தின்னதனால் – தம்பி! தம்பி!!
← த. க. க. 193/III

**இலீனம்:** நாட்டியத்தில் இருகால்களையும் சேர்த்து நிமிர்ந்து நின்று இரு கரங்களையும் மார்புக்கு நேராய்ச் சேர்த்து சபை வணக்காய் நிற்கும் நிலை.

**இலைக்குழல்:** பூவரசு இலை போன்ற இலைகளைச் சுருட்டி ஊதும் ஊதுகருவி.
அண்ணல் இலக்குழல் ஊதி (பெரிய. திருமொழி. 10: 7: 6)

**இலைத்தாளம்:** ஒருவகைக் கஞ்சக்கருவி. சாலர், சிங்கி என்பது போன்ற கஞ்சக்கருவிகளை விட அகலமாகவும் பருமனாகவும் உள்ள அமைப்பை உடையது. 5 அங்குல விட்டமும் 1/5 அங்குல பருமனும் உடையது.

**இலையம்:** கூத்து, கூத்தின் விகற்பம் (அக. நி.)
நடமே நாடகம் நடனம் நட்டம்... அவிநயம் இலையம் பாணி, குரவைக்கூத்து எனப்பகர்வர் (பிங். 1444)
இலையம் - இலாயம் - இலாசியம் - மகளிர் ஆட்டம்
→ இலயம், இலாசியம், நளிநடம்

**இழவுக் கடித்தல்:** = மாரடித்தல்.
இறப்பு வீட்டில் மார்பில் அடித்துக் கொள்ளல் (ச. அ)

**இழிசினன்:** = இழிஞன், புலைமகன், இழியினன், இழிபிறப்பினோன்.
சாந்திழிசிய கோலம் (பெரிய திருமொழி. 2: 8: 7)
இழிஞன் புலைக்கரந்தீண்டி (காஞ்சிப்பு. பாசிரா. 42)
இழிசினர்க்கே யானும் பசித்தாம் கண் ஈதல் (சிறுபஞ். 77)
இழி வழக்கு (தொ. எ. 64 நச்சர்)
(இழிசினர் வழக்கு - இழிவழக்கு)
இழிவு தொடக்கிற்று (பெரியபு. நமிகள். 24)
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது (புறம். 82)
துடி எறியும் புலைய (புறம். 287: 1)
கேட்டியோ வாழி பாண...
மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே (புறம். 289: 8 –10)
இழி பிறப்பாளன் கருங்கை சிவப்ப
வலிது ஏந்து சிலைக்கும் வன்கண் கடுந்துடி (புறம். 170: 5 – 7)
இழிபிறப்பினோன் ஈயப்பெற்று (புறம். 363: 14)
துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று
இன்நான்கு அல்லது குடியுமில்லை (புறம். 335: 7 – 8)
↑ புலையர், பாணர், துடியர், கடம்பர் என்ற இழிசினரிடமே இசை இருந்துள்ளது. இழிசினர் வழக்காக இசை கருதப்பட்டுள்ளது, அல்லது இசை இருந்தோர் இழிசினர் ஆக்கப்பட்டனர்.

**இழிதல்:**
1. தாழ்தல்
இழிந்துழி இழிவே சுட்டலான (தொல். பொ.91 இளம்)
இழிந்ததோ கூனின் பிறப்பு (கலித். 94: 28)
2. அலகு (சுருதி) இறங்குதல்
அரியாவிழவின் இழியாத் திவவின் (பதிற். 29: 7)

**இழிப்பின் அவிநயம்:**
இழிப்பின் அவிநயம் இயம்பும் காலை
இடுங்கிய கண்ணும் எயிறு புறம் போதலும்
ஒடுங்கிய முகமும் உஞற்றாக் காலும்
சோர்ந்த யாக்கையும் சொல் திறம்பாமையும்
நேர்ந்தனவென்ப நெறி அறிந்தோரே (சிலப். 3: 13: அடியார்க்.)

**இழிப்புச் சுவை அவிநயம்:** →இழிப்பின் அவிநயம்

**இழுகுபறை:** துடிப்பறை, துடி
உடுக்கை இனத்ததாகிய இழுகுபறையினது ஒலியை (அகம். 194 உரை)

**இழும்:** - இழுமென்னோசை.
1. மெல்லொலி, ஓசை, இனிமை
இழும் என்மொழியான் விழுமியது நுவலினும்
(தொ. பொ. 539)

அவன் இழும் என் சும்மை இடன் உடைவரைப்பின் (பொருந. 65)
இழும் என இழி தரும் அருவி (முருகு. 316)
இழும் என் புள்ளின் ஈண்டு கிளைத்தொகுதி
(பெரும்பாண். 406)

2. இன்னோசைக் குறிப்பு
இழும் எனல் ஓசையும், இனிமையும் ஆகும் (திவா. 11. 46)
(இழுமென்னோசை – இனிய ஓசை)
இழும் எனல் ஓசை என்ப இனிமையும் இயம்பும் அப்பேர்
(சூடா. 11: 3)
இம்எனல், கல்எனல், இழும் எனல்... அனுகரண ஓசை
(பிங்க. 7: 358, 2116)
இம் எனல் கல் என்றிட்டல் இழும் எனல்... அனுகரணத்தின் ஓசை
(சூடா. 10: 48)

## இழுமென்:

1. பெருத்த ஓசை
இழுமென் புள்ளின் ஈண்டு கிளைத்தொழுதி (பெரும்பாண். 406)
2. ஒலிக்குறிப்பு
ஏம முரசம் இழுமென முழங்க (புறம். 3: 3)
→ இழும்

## இழுமென்னிசை: →இசையொழுக்கம்

## இழுமென் பாண்டில்: *இனிய ஓசையுடைய கஞ்சக்கருவிகளுள் ஒன்று.*

இடிக்குரல் முரசம் இழுமென்பாண்டில் (சிலப். 26:194)

## இழை: *அவிநயம்.*

அகவழி குணனோ_ துள்ளும் தூக்கு அவை இழையே (கூத்த நூல். 76)

## இழைபு வண்ணம்: *வல் ஒற்று இன்றி இழுமென் உயர் மொழியால் ஆகிய சந்தப்பாடல்.*

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடங்காது (தொ. பொ. 543)

## இழைவு: இசைப்பாட்டு

தேர் ஊர்ந்து இழைவு உணர்ந்தார் (பாரி காதை. 104)
← *பெ. அக. 582/II*

## இளம்பிறை: = இளம்பிறைக்கை.

ஒற்றைக்கை அவிநயத்துள் ஒன்று. இணையா வினைக்கை முப்பத்து மூன்று வகையுள் ஒன்று.
சுட்டும் பேடும் அநாமிகை சிறுவிரல் ஒட்டி அகம் வளைய ஒசித்த பெருவிரல் விட்டு நீங்கும் விதியிற்றென்ப
(சிலப் 3:18 அடியார்க்.)
பேடு _ நடுவிரல் (பேடி): அநாமிகை _ அணி விரல், பவித்திர விரல் (மேலது. அடிக்.)

## இளம்பிறைக்கை: →இளம்பிறை

## இளமைச் சிறப்பு: *ஆழ்வார் பாசுரங்கள் ஓதும் திருவிழா.*

*திருவத்தி என இரண்டாந் திருநாள் கிளரொளி இளமைச் சிறப்புக்கு.* (TDI,IV/156; *த. க. சொ. 76*)

## இளவேனில்: = இளவேனல்

*வசந்தகாலம், சித்திரை, வைகாசிக் காலம்.*
கொந்தார் இளவேனல் வந்ததால் (சிலப். 8 வெண்பா. 1)
இளவேனல் வந்தது (நளவெண்பா)
*(வேன்ல் - வேனில்)*

## இளி = அகப்படுநரம்பு, ஏழாம் நரம்பு, பட்டடை நரம்பு, இணைநரம்பு (பஞ்சமசுரம்) 'ப'

**1. இசையின் ஏழுசுரங்களுள் ஒன்று.**
*குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி...(ச, ரி, க, ம, ப...) என்ற இசையின் ஏழுசுரங்களுள் ஐந்தாவதாக வருவது. தானசுரங்கள் பன்னிரண்டில் (ச - ப; 0 > 7) ஏழாவதாக வருவது.*
இளி - இணங்கு - ; இளிதல் - சேர்தல், இணைதல்; இணக்கம் *(ச. அ.)*
*குரல் (ச) நரம்பொடு இளி (ப)நரம்பு ஒன்றித்து இரண்டறக் கலந்து இணைந்து ஒலிப்பதால் இளி என்றாயிற்று.*
இளி இசை இசித்தல் எல்லே இணங்குதல் உரித்தற்குப் பேர்
(சூடா. 11: 3)
யாழின் இளிகுரல் சமங்கொள் வோரும் (பரிபா. 19: 42)
இளிப்படுதல் - அகப்படுதல்
அகப்பட்ட நரம்பாகிய இளி நரம்பையும்... (சிலப். 3:43 _ 44 அரும்.)
2. *பருந்தின் சேவல் தன்பெடையை அழைக்கும் ஒலி இளியாகும்.*
பருந்தின் பெடைபயிர் குரலோடு (புறம். 370)
இளிதேர் தீங்குரல் இசைக்கும் (அகம். 33: 7)
*(தேர் மணியின் ஒலி இளி எனும் சுரமாக ஒலித்தது)*
இளிபுணர் இன்சீர்... (மணி. 19: 26)
ஏற்றிய குரல் இளி என்றிரு நரம்பின் (சிலப். 3: 59: 87)
இளிகிளையில் கொள்ள (சிலப். 7: 48)
குரல்வாய் இளிவாய்க் கேட்டனள்... (சிலப். 8: 35)
கைக்கிளை உழை இளி விளரி தாரம் என (சிலப். 17: எடுத்து. 9: 12)
குரல் மந்தமாக இளி சமனாக (சிலப். 7: 18)
← *த. க. க. 247/III* ; → இளிவாய்
*3. எட்டுவகை மெய்ப்பாடுகளுள் ஒன்று*
நகையே அழுகை இளிவரல் மருட்கை... அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப (தொ. பொ. 247)

## இளி ஒத்து: = பஞ்சம சுருதி.

*குரல் ஒத்து, இளி ஒத்து என்று ஒத்துக் கூட்டுதலில் இரு முறை உண்டு. ஒத்து நாகசுரம், சுதிப்பெட்டி ஆகியவை ஒற்றைச்சுரம் மட்டுமே ஒலித்து குரல் ஒத்து (ஆதார சட்சம்) தருகின்றன. தம்புரா முதலியவை குரல் இளி (ச ப) ஒலித்து இளி ஒத்து (பஞ்சம சுருதி) தருகின்றன.*

சமன்குரல், சமன் இளி, தாரக்குரல் என்னும் மூன்றும் (ச ப ச்) ஒத்திசைக்குமாயின் அது இளிச் சுருதியாகும்.

← த. க. க. 259/I

திருந்துஇன் இளி வண்டு படை இருந்தும்பி இன் குழல் ஊதும் (கார்நாற்பது. 15)

இளிப்பயிர் இமிரும் குறும்பரந் தூம்பொடு (மலைபடு. 7)

(இளி என்ற பஞ்சம சுருதி தரும் தூம்பு)

↑ தம்புராவின் நான்கு தந்திகளையும் 'ச, ப, ப, ப' என்ற முறையில் (இரட்டைத் தம்புரா) ஒத்துக் கூட்டப்படுவதுண்டு. இதில் இளி (பஞ்சமம்) நரம்புகள் மூன்று அமைந்து உள்ளதால் இது இளி ஒத்து ஆகின்றது.

← தெ. இ. அ. 35/IV

**இளிக்கிரமம்:** இளிக்கிரமத்தாலே பண்களை யாழ்மேல் வைத்து... (சிலப். 3: 63 அடியார்க்.)

→ இணைமுறை, ஏழன்முறை

## இளி குரலாக ஏழு நரம்பும் வாசித்தல்:

தமிழிசையின் முதன்மைப் பாலையானது செம்பாலை (அரிகாம் போதி). செம்பாலையின் (அரிகாம்போதி) இளி (பஞ்சம சுரம்) குரலாக (சட்சம்) வைத்துப் பண் பெயர்த்தால் கிடைப்பது கோடிப்பாலை (கரகரப் பிரியா). இது முதல் ஏனைய ஆறு பாலைகளையும் பண் பெயர்த்து யாழில் வாசித்தாள் என்பது.

| | |
|---|---|
| இளி குரலாக | கோடிப்பாலை (கரகரப்பிரியா) |
| விளரி குரலாக | விளரிப்பாலை (தோடி) |
| தாரம் குரலாக | மேற்செம்பாலை (கல்யாணி) |
| குரல் குரலாக | செம்பாலை (அரிகாம்போதி) |
| துத்தம் குரலாக | படுமலைப்பாலை (நடபைரவி) |
| கைக்கிளை குரலாக | செவ்வழிப்பாலை (இருமத்திமத் தோடி) |
| உழை குரலாக | அரும்பாலை (சங்கராபரணம்) |

குரல் வாய் இளிவாய்க் கேட்டனள்... (சிலப். 8: 35)

குரல் முதலாகவும் குரல் ஈறாகவும் (சிலப். 8: 38)

குரல் குரலாகவும் குரல் தாரமாகவும் வாசித்தாளென்றவாறு (மேலது. அரும்.)

**இளிப் பயிர் இமிரும் தூம்பு:** இளி (பஞ்சமம்) என்ற சுர ஒலியையும் ஒத்து (சுருதி) ஆகத் தரும் தூம்புக்கருவி. மேற்கண்ட கருவியில் Grum Horn போன்று குரல் துளையும் இளித்துளையும் (C + G) இடம்பெற்றன... இது 'ச - ப' ஒலித்தது... (த. க. க. 97/II)

கண்ணறுத்தியற்றிய தூம்பொடு சுருக்கி (பதிற். 41: 4)

என்றதனால் இது துளைகளிட்ட கருவி.

தூம்புடைத் தடக்கை... (புறம். 19: 10)

கண் இடைவிடுத்த களிற்று உயிர்த்தூம்பின்

இளிப்பயிர் இமிரும் குறும்பரந்தூம்பொடு (மலைபடு. 6 – 7)

தூம்பு அகச் சிறுமுழா... (புறம்: 102: 2)

கண் விடுதூம்பின் களிற்று உயிர் தொடுமின் (புறம். 152: 15)

தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும் (அகம். 111. 9)

↑ மகுடியில் ஒத்துக்குழல் தனியே உண்டு அது உழை ஒத்து (மத்திம சுருதி) கொண்டது.

← த. க. க. 69/II; 3/IV

**இளி முடிவுப்பண்:** = பஞ்சமாந்திய இராகம் ஏறு நிரலில் நடுத்தானத்து இளியை (மத்தியஸ்தாயி பஞ்சமம்) இறுதிச் சுரமாகக் கொண்ட பண்.

எடு:-

1) நவரோசு - ப த நி ச ரி க ம ப - ம க ரி ச நி த ப

2) சைந்தவி - த நி ச ரி க ம ப - ப ம க ரி ச நி த

**இளிமுறை:** = இணைமுறை, ஏழன்முறை, சட்சபஞ்சம பாவம், பஞ்சமபாவம், இளிக்கிரமம், பஞ்சமக்கிரமம்

சப, பரி$^2$.... என்ற இளி (பஞ்சமம்) சுரத்தொடர் (cycle/ progression/ succession/ of fifths).

சரிகமபதநி என்ற இசையின் ஏழு சுரமுறையில் 'ப' ஐந்தாவதாக வருவதால், ஐரோப்பிய இசைமுறையில் cycle of fifth ஆகிறது.

ச ரி க ம ப
1 2 3 4 5

ஏழன்முறை:

ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$
0 1 2 3 4 5 6 7 8 9 10 11

## இளிகுரலாகமேற்செம்பாலை:

இது இடமுறையில் வரும் கல்யாணிப் பண். அதாவது இறங்கு நிரல் முறை என்ற இடமுடைத் திரிபில் இளி என்ற நரம்பை இட முறைத் திரிபின் தலைமைப் பாலையான அரும்பாலை (சங்கராபரணம்) யின் குரலாக (சட்சம்) வைத்துப் பண் பெயர்த்தால் கிடைப்பது மேற்செம்பாலை (கல்யாணி).

| | | * | | * | * | | * | | * | | * | * |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அரும்பாலை | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ | ச் |
| மேற்செம்பாலை | | த$^2$ | | நி$^2$ | ச | | ரி$^2$ | | க$^2$ | | ம$^2$ | ப |

யாழ்மேல் பாலை இடமுறை மெலிய (சிலப். 3: 91)

... இரட்டித்த குரல் குரலாகிய அரும்பாலையும் இளி குரலாகிய மேற்செம்பாலையும் (மேலது. அடியார்க்.)

**இளி முதலாகிய எதிர்படு கிழமை:** இது பண்ணாக்கும் முறைகளில் ஒன்றான இடமுறைத் திரிபு கூறுவது. தலைமைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி)யின் உச்சக்குரலை இளி (பஞ்சமம்) ஆக வைத்து இறங்கு நிரலில் (இடமுறை) பண் பெயர்த்தால் அரும்பாலை (சங்கராபரணம்) வரும். இதையே இளி முதலாகிய எதிர்படுகிழமை என்று குறிப்பிடுவது.

இளி முதலாகிய எதிர் படுகிழமையும் (சிலப். 3: 87)

← ப. இ. இ. 239

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | * | | * | * | | * | | * | * | | * |
| செம்பாலை | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ | ச் |
| அரும் பாலை | | த$^{2}$ | | நி$^{2}$ | ச | | ரி$^{2}$ | | க$^{2}$ | ம$^{1}$ | | ப |

என்று வரும் பன்னிரு தான சுரமுறையில் 'ப' ஏழாவதாக வருவதால் இது தமிழிசையில் ஏழன்முறை.

இணை கிளை பகை நட்பு என்றின்னான்கின் (சிலப். 8: 33)

... ஐந்தினும் ஏழினும் (சிலப். 8: 36)

குரல்வாய் இளிவாய்க் கேட்டனள் (சிலப். 8: 35)

ஏற்றிய குரல் இளி என்றிரு நரம்பின் (சிலப். 3: 59)

**இளியுள் துத்தம்:** குரல் இளி (சப) முறை கூறுவது. இசையின் ஏழாம் சுரங்கள் ஒன்றித்துக்கலந்து இனிய ஓசையாக மாறுவது. இளி (ப) யுடன் சேர்ந்து ஒலிப்பது துத்தம் (ரி$^{2}$).

ச ப  0 > 7

ப ரி$^{2}$  0 > 7 (ப - இளி; ரி$^{2}$ - துத்தம்)

இளியுள் துத்தம் பிறக்கும் (சிலப். 8: 39_41 அரும்.)

**இளிவண்டு:** பஞ்சம சுருதி தரும் வண்டு.

இன் இளி வண்டு பாட இடும் தும்பி

இன்குழல் ஊதும்... (கார்நாற்பது. 15: 3 – 4)

இளிவாய்ப் பிரசம் யாழாக இருங்கண் தும்பி குழலாக (சீவக. 2691)

(பிரசம் - வண்டு)

**இறங்கச் சங்கு:** கோயிற்கு உபகரித்த பெரியோர் சிவிகை முதலியவற்றிலிருந்து இறங்கும்போது மரியாதையாக ஊதப்படும் சங்கு.

இறங்கச் சங்கு x ஏறச்சங்கு

← செ .ப. அ. 361

**இறங்குநிரல்:** → அமரோசை

**இளிவாய்:** இளி (பஞ்சமம்) குரலாகக் கோடிப்பாலை (கரகரப்பிரியா) பாடுவது; அடிப்படைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி) யின் இளி குரலாகப் பண் பெயர்த்துப் பாடுவது.

இளிவாய் வண்டினொடு... (சிலப். 5:202)

இளி என்னும் இசையைப் பாடும் (அடியார்க்)

(வாய் - முதலாக, குரலாக)

இளிவாய்க் கேட்டனள் (சிலப். 8: 35)

இளி குரலாக வாசித்தாள் (அரும்.)

இளி குரலாயது கோடிப்பாலை (சிலப். 17:13 அடியார்க்.)

இளிதேர் தீங்குரல் இசைக்கும் அத்தம் (அகம். 33: 7)

யாழின் இளிகுரல் சமம் கொள்வோரும் (பரிபா. 19: 42)

↑ இளி குரலாக வரும் கோடிப்பாலையை (கரகரப்பிரியா) 'இளி' என்றே சுரப்பெயரால் அடியார்க்கு நல்லார் குறிப்பிடுகின்றார். தாரப்பண் (கல்யாணி) போன்று இதுவும் சுரத்தால் பெற்ற பெயர்.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | * | | * | | * | * | | * | | * | * | |
| செம்பாலை | ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
| கோடிப்பாலை | ம$^{1}$ | | ப | | த$^{2}$ | நி$^{1}$ | | ச | | ரி$^{2}$ | க$^{1}$ | |

**இறங்கு வரிசை:** → அமரோசை

**இறவாணம்:**

1. தோற்கருவி வகையுள் ஒன்று (யாழ். அக.)
2. வீட்டுறுப்புக்களுள் ஒன்று - கூரைச்சார்பு

← செ. ப அ. 362

**இறவைப்பாட்டு:** → ஏற்றம்

**இறுதிஆதியாக:** பண் பெயர்ப்பில் இடமுறைத் திரிபு என்று (வம்புறு மரபு) ஒரு வகை. அதற்குரிய முதல் சுரம் உயர்குரலான (இரட்டித்தகுரல்) ச். ச் என்பது வலமுறைத்திரிபில் இறுதிச்சுரம். இவ் இறுதிச்சுரமே இடமுறைத்திரிபில் முதல் சுரமாக வருவதால் இறுதி ஆதியாக என்கிறார். இடமுறைத்திரிபில் அடிப்படைப் பாலை அரும் பாலை (சங்கராபரணம்).

இறுதி ஆதியாக...குரல் குரலாகத் தற்கிழமை திரிந்தபின் (சிலப். 3: 82 – 85)

குரல் குரலாக அரும்பாலையும்... (மேலது. உரை.)

← ப இ. இ. 240

**இறை:** பறை (சது. அக.)

**இறைச்சி:** = இறைச்சிப் பொருள்

குறிப்புப் பொருள். வெளிப்படக்கூறப்பட்ட கருப் பொருளின் புறத்தே தோன்றும் குறிப்புப் பொருள்.

எடு:-

நிலத்தினும்பெரிதே...
கருங்கோல்குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே (குறுந். 3)

"என்றவழி நாட்டிற்கு அடையாகி வந்த குறிஞ்சிப்பூவும் தேனும் இறைச்சிப்பொருள் என்றுகொள்க" (இளம்)

இறைச்சிதானே பொருள் புறத்ததுவே (தொ.பொ. 225)

இறைச்சியிற் பிறக்கும் பொருளுமார் உளவே
திறத்தியல் மருங்கின் தெரியு மோர்க்கே (தொ.பொ. 226)

← ப. த. நா. 98

**இறைபயிரு முரசு:**

ஞாலம் காவலர் நாட்டு இறைபயிரும் (சிலப். 26: 52)

அரசர் இடும் திறையை அழைக்கும் முரசம் (அரும்.)

**இன்கவி:** மதுரகவி (யா. வி. 95)

**இன்பச்சுவை அவிநயம்:** = காம அவிநயம்

காம அவிநயம் கருதுங்காலைத் தூவுள்ளுறுத்த வடிவும் தொழிலும், காரிகை கலந்த கடைக்கணும், கவின்பெறும் ஊரன் முறுவல் சிறுநிலா வரும்போது மலர்ந்த முகனும் இரந்த மென்கிளவியும் கலந்தன பிறவும் கடைப் பிடித்தனரே (சிலப்: 3: 13 அடியார்க்.)

**இன்பநடம்:** = புஜங்கலளிதம், சந்தியா தாண்டவம்

இன்பக்காத்தல் தொழில் புரியும் ஆடவல்லான், தாண்டவத் தலைவன் சிவபெருமான் மதுரை வெள்ளி அம்பலத்தில் ஆடிய சந்தியா தாண்டவம்.

நிரைநீர் வளைக்கும் புகழ்நீர்க்கூடல்
வெள்ளியம் பொதுவில் கள் அவிழும் குழலொடும்
இன்ப நடம் புரியும் தேவநாயக (கல்லா: 28)

**இன்னா இசை:** துன்பம் தரும் இசை, இரங்கிசை

இன்னா இசை ஒலி (மணிமே. 6: 79)

**இன்னிசை:** இனிய இசை,. ஒற்றைச்சுர வரிசை இசை, படுக்கை இசை (Melodic music, linear music, single diamentional music, Horizontal music)

ஒவ்வொரு சுரமாக வரிசையாக இசைப்பது (the music progress in succession of single notes). இது தமிழிசை, தென்னக இசை, இந்திய இசை என்ற இசை முறையாகும்.

மானிடக்குரல், யாழ், குழல், நாகசுரம் ஆகியவைகளால் ஒரு நேரத்தில் ஒரு சுரம் மட்டுமே எழுப்ப முடியும். எனவே தமிழிசை ஒற்றைச்சுர இசையாகும்.

↑ எனவே ஒத்திசைப்பெட்டி (Harmonium), பியானோ, ஆர்கன் போன்ற பல சுரங்களை ஒரே நேரத்தில் எழுப்பும் இசைக்கருவிகள் தமிழகத்தில் தோன்றவில்லை.

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்... (தேவா. 7: 6: 8)

இன்னிசை வழியது அன்றி இசைத்தல் செம்பகையதாகும்
(சிலப். 8: 29 – 30 அடியார்க். மேற். பஞ்சபாரதீபம்)

**இன்னிசை அளபெடை:** இனிய இசைக்காக குறில் நெடிலாக அளபெடுக்கும் உயிரெளபெடை.

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச்...
எடுப்பதூஉம் எல்லாம் மழை (குறள். 15)

கெடுப்பதூம் எடுப்பதூம் என்றாலும் யாப்புத் தவறாகாது. ஏனெனில் கருவிளம் (நிரை நிரை) முன் நேர் வந்துள்ளது. ஆயினும் கெடுப்பதூஉம், எடுப்பதூஉம் என்று இன்னிசைக்காக அளபெடுத்து வந்துள்ளது.

அளபிறந்து உயிர்த்தலும்... உள என மொழிப (தொ. எ. 33)

↑ கெடுப்பதும், எடுப்பதும் என்பதில் இனிமை இல்லை.

← கவிஞராக 165 - 66

**இன்னிசைக் கலிவெண்பா:**

தனிச்சொல் பெறாத கண்ணிகள்

எ-டு:

நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும் என் நெஞ்சின் நீங்காதான் தாள் வாழ்க

ஈசனடி போற்றி எந்தையடி போற்றி
தேசனடி போற்றி சிவன் சேவடி போற்றி
நேயத்தே நின்ற நிமலனடி போற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே (திருவாசக. சிவபுராணம்)

**இன்னிசைச் சிந்தியல்:** = வெண் ஒத்தாழிசை, வெண் தாழிசை, சிந்தியல் வெண்பா.
*மூன்றடியால் அமையும் வெண்பா வகை.*
நேரிசை இன்னிசை போல நடந்த அடி மூன்றில் வந்தால்
நேரிசை இன்னிசைச் சிந்தியலாகும் (யா. கா. 28)
எடு:– 'திங்களைப்போற்றுதும்' (சிலப்.1: (1), (2), (3), (4)) முதலிய நான்கு பாடல்.

**இன்னிசை வெண்பா:** = இன்னிசை வெள்ளை.
*இது இசைப்பதற்குரிய யாப்பு. நான்கடியாய்த் தனிச் சீரின்றி வரும் வெண்பா.*
...தனிச்சொல் இயற்றப்படாதன இன்னிசை வெண்பா (யா. வி. 61)
... நான்கடியாய்த் தனிச் சொல்லில்லாமல் நடப்பின் அது இன்னிசை வெண்பா எனப்படும் (யா.கா. 26 உரை)
*அரச வாழ்த்துப் பொருண்மை பயின்ற இசைப் பாடல்களைப் பாடுதற்குரிய வெண்பா வகையாக இன்னிசை வெண்பா யாப்பு சிலம்பில் வழங்கி யுள்ளது.*
எடு:- 'கயிலைநன்' என்று தொடங்கும் சிலப். குன்றக் குரவைப் பாடல்கள் 16, 17, 18 குறுஞ்சீர் வண்ணமாக வந்த இன்னிசை வெண்பா.
← செ. ப. அ. 369

**இன்னியம்:** *இனிய இசைக்கருவி.*
இமிழ் இசை அருவியொடு இன்இயம் கறங்க (முருகு. 240)
கூடுகொள் இன் இயம் கறங்க (அகம். 98: 14)
இன் இயம் கறங்கப் பாடி (நற். 322: 11)
வீசிவீங்கு இன்னியம் கடுப்பக் கயிறு பிணித்துக் (பெரும். 56)
கருங்கோட்டு இன் இயம் இயக்கினிர் கழிமின் (பெரும். 392)
கூடுகொள் இன் இயம் கறங்க (புறம். 153: 11)

**இன்னியர்:** *கருவியாளர், பாடகர்* (Instrumentalist, singer).
1. பாணர்; *இனிய இயம் வாசிக்கும் பாடகர்.*
இன்னியர் தானே பாணராகும் (அ. நி. இம்முதல் 48)
2. இசைக்கலைஞர் (பெப். அக.)

**இன்னொலியன்:** *இன்னோசை உடைய உயிர் எழுத்து.* (sonants / vowals).
← *த. க. க.* 1-1

**இன எதுகை:** இன எழுத்தால் வரும் எதுகை. வல்லின எதுகை, மெல்லின எதுகை, இடையின எதுகை என இன எதுகை மூவகைப்படும்
*(யா. கா. ஒழிபி. 6)*
← *செ. ப. அ. 370*

**இனமோனை:** இன எழுத்தால் வரும் மோனை. வல்லினமோனை, மெல்லின மோனை இடை இனமோனை என இனமோனை மூவகைப்படும்
*(யா. கா. ஒழிபி. 6)*
← *செ. ப. அ. 370*



**ஈ:** ஏழிசையின் இரண்டாம் சுரமாகிய(ரி) துத்தத்திற்குரிய எழுத்து.
ஆஈ... ஏழும் ஏழிசைக்கெய்தும் அக்கரங்கள் (பிங்க. 1415)

**ஈகாமிருகம்:** பத்துவகை நாடகத்துள் ஒன்று. நான்கு அங்கமுடையது. சாதியாவது என்பதற்கான அடியார்க்கு நல்லாரின் உரை (சிலப். 3: 13) கிடைக்க வில்லை. உவேசா அடிக்குறிப்பு: நிறுத்தமுறையே சுவையின் பின்னர் வகைகாட்டுதற்குரிய சாதி பத்து வகைப்படும்: அவை நாடகம், பிரகரணம், பாணம், பிரகசனம், டிமம், வியாயோகம், சமவாகாரம், வீதி, அங்கம், ஈகாமிருகம் என இவை.
← செ. ப. அ. 374

**ஈசமனோகரி:** பண்களில் ஒன்று (பரத. 2: 55)

**ஈடுசுரம்:** பதிலியாக இடும் சுரம்; கல்பனாசுரம்.

**ஈமமுரசம்:** ஏமமுரசம்.
ஏமமுரசம் இழும் என முழங்க (புறம். 3: 3)
ஏமம் - காவல்

**ஈர்ந்தண் முழவு:** ஈரப்படுத்திய தோல் பகுதியை உடைய முழவு. முழவின் தோல் நெகிழ்ந்து கொடுத்து இனிய ஓசையை எழுப்புவதற்காகச் சிறிதளவு தண்ணீர் தடவி ஈரப்படுத்தி முழக்குதல் மரபு.
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப (புறம். 194: 2)
ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்ப (அகம். 186: 11)
தாழ்குரல் தண்ணுமை (சிலப். 3: 27)

**ஈரசைசீர்:→ இயற்சீர்; ஆசிரிய உரிச்சீர்**

**ஈரநிலம்:**
1. ஒன்றாம் நடை, முதல்காலம் (முதல்வாரம்) தாளத்தின் ஓர் எண்ணிக்கைக்கு ஓர் எழுத்தாக இசைத்தல்.
ஈரநிலத்தின் எழுத்தெழுத்தாக (சிலப். 3: 68)
2. பாடலின் சொற்களைச் சிதையாது இசைத்தல்: பாடலிடத்துச் சொன்னீர்மையின் எழுத்துக்கள் சிதையாமல் எழுத்தை எழுத்தாக இசைக்கும்... (மேலது. அரும்.)
3. சரிகமபதநி என்று சுரம் பாடுதல்
... அன்றியும் சரிகமபதநி என்பாருமுளர் (மேலது. அடியார்க்.)
← த. க. க 107/IV

**ஈரடிக்கண்ணி:**
தண்மதி ஒண்முகப்பெண் மணியே – உன்னைத்
தான்கொண்ட நாயகர் ஆரேடி
அண்மையில் பொன் அணி அம்பலத்தாடல் செய்
ஐயர் அமுதர் அழகரடி (திருவருட். 1872, 1–5 திருமுறை)
முதல் கண்ணியில் கேள்வியும், இரண்டாம் கண்ணியில் பதிலும் உள்ளது. இந்நான்கு வரிகளும் சேர்ந்து ஈரடியாகி, ஈரடிக்கண்ணி யாகியுள்ளது.
தாழிசைப்பா சுருங்கில் இரண்டடி யோக்கம் இரட்டி (யா. கா. 57)

**ஈரடி:**
ஈரடி வெண்பா, குறள் வெண்பா (யா. கா. செய். 3)
← செ. ப. அ. 380

**ஈரடி மேல்வைப்பு:** பாடலுக்குரிய அடிகளுக்கு மேல் அவற்றை அடுத்து ஓரடியோ ஈரடியோ வைத்துப் பாடுவது மேல் வைப்பு.
ஈரடி மேல் வைப்பு:
எடு:– கொட்ட மேக மமும் கொள்ள பூதூர்
நட்டம் ஆடிய நம்பனை உள்கச்
மேல் வைப்பு
செல்ல உந்துக சிந்தையார் தொழ
நல்கு மாறருள் நம்பனே (தேவாரம். 3: 6: 1)
சம்பந்தரின் 3: 5 & 6 பதிகங்கள் இவ்வாறானதே. 'தக்கன் வேள்வி' முதலிய 8 பாடல்க்ள் (திருப்பூந்தராய்) மற்றும் 'கொட்டமேகமமும்' முதல் 'கொன்றைசேர் சடையன்' முடிய 11 பாடல்கள் (திருக்கொள்ளம்பூதூர்) ஈரடி மேல் வைப்புகள்.
சிலம்பு: காதை 29 (13) (14) ஆகிய வாழ்த்துப் பாடல்களும் (20) (21) (22) ஆகிய சுந்துகவரி

பாடல்களும் ஈரடி மேல் வைப்புகளே.
↑ மேல் வைப்பு என்னும் இசை முறையானது இசைத்துறையில் மீண்டும் மீண்டும் பாடப்படும் எடுப்பு (பல்லவி) போன்ற அமைப்புக்குத் தோற்றுவாயாக அமைந்தது எனலாம்.
தென்னவன் வாழ்க வாழ்கவென்று சென்று பந்தடித்துமே
தேவரார மார்பன் வாழ்க என்று பந்து அடித்துமே
என்ற மேல்வைப்பு அடிகள் மேற்குறிப்பிட்ட 20, 22 ஆகிய மூன்று பாடல்களிலும் மீண்டும் மீண்டும் வருவது நோக்கத்தக்கது

← த. க. க. 225/I

**ஈரணம்:** அடியில் பெரியதும் மேலே சிறியதுமாக ஒன்றன் மேல் ஒன்றமைத்து இயக்கும் இசைக்கருவி.

← பெ. அ. 36/III

**ஈரிசை:** இருவகை இசை.

நாட்டார் இசை x செவ்விசை
பொது இசை x வேத்திசை (வேந்திசை)
பொது இயல் x வேத்தியல்

இருவகையான் இசை சான்ற (மதுரைக். 121)
இசைபெறு திருவின் வேத்தவை ஏற்ப (மலைபடு. 39)

**ஈரெழுத்துக் காலம்:** தாளத்தின் இரண்டு அக்கர (அட்சர)க் காலம்; அரை எண்ணிக்கை குறியீடு: ; அல்லது 'சா' அல்லது 'சரி'
; என்பதை , , என்று குறிப்பதும் உண்டு.
- கால் எண்ணிக்கை. ; - அரை எண்ணிக்கை.

**ஈரேழ்:** இது இசையின் 7 சுரமுறையில் 14 தான சுரங்களை (12 தான சுர முறையில் 24 தான சுரங்களை) குறிப்பது.

ஏழுசுரமுறை: ம ப த நி ச ரி க ம ப த நி ச ரி க

பன்னிரு தான சுரமுறை: ம[1] ம[2] ப த[1] த[2] நி[1] நி[2]

ச ரி[1] ரி[2] க[1] க[2] ம[1] ம[2] ப த[1] த[2] நி[1] நி[2]

ச ரி[1] ரி[2] க[1] க[2]

(சுரங்கள் கீழே புள்ளியிட்டவை கீழ் மண்டிலத்தையும், மேலே புள்ளியிட்டவை மேல் மண்டிலத்தையும் குறிக்கும்)

ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி (சிலப். 3: 70)
பாலை ஈரேழுகோத்த பண்ணியங் கருவி வீக்கி
(பெரியபு. திருநீல யாழ். 2)
மேலது உழை கீழது கைக்கிளை (சிலப். 3: 80)
உழை முதல் கைக்கிளை இறுவாய்க்கட்டி (சிலப். 8: 31)
ஈரேழ் சகோடமும் இடைநிலைப்பாலையும் (சிலப். 10: 14)
வலிவிற்கெல்லை வன்கைக்கிளையே (சிலப். 8: 43 – 4 அரும். மேற்.)
(வன்கைக்கிளை – க்[2] – மேல்தாயி அந்தரகாந்தாரம்)

← ஆசிரியரின் கட்டுரை (யாழ்நூல்)

**ஈரொத்துடைத்தடாரம்:** = சதுசுரதிரிபுடை தாளம், ஆதிதாளம்
'மலர்மிசைத் திருவினை' என்ற மேற்கோள்பாடலுக்கு (சிலப்: 6: 35) அடியார்க்கு நல்லார் பண் கௌசிகம் என்றும் தாளம் இரண்டு ஒத்துடைத் தடாரம் என்றும் குறிப்பிடுகிறார். பாடல் எண்சீர்க் கொச்சக ஒருபோகு. பாடலின் ஓர் அடி எண்சீராக இருப்பதால், சதுசுரதிரிபுடைக்கு ஓர் ஆவர்த்த மாகிறது. எனவே ஈரொத்துடைத் தடாரம் என்பது இன்றைய சதுசுரதிரிபுடை ஆகலாம். இது மேலும் ஆய்வுக்குரியது.

**ஈரொற்று வாரம்:** வாரம் பாடுதலில் முதல் நடை (ஒரு மாத்திரை) இரண்டாம் நடை (இரண்டு மாத்திரை) என்று இரட்டித்துப் பாடுவது.

வாரம் இரண்டும் வரிசையில் பாட (சிலப்: 3: 136)
வாரமிரண்டாவன: ஒரொற்றுவாரம், ஈரொற்றுவாரம் என்னும் செய்யுள். அவை தாளத்து ஒரு மாத்திரையாகவும் இரண்டு மாத்திரையாகவும் பெற்றுவரும் (மேலது. அரும்.)

(ஒத்து - பற்று - தாளம்); இரு + ஒத்து - ஈரொற்று

← செ. ப. அ. 382; சிலப். 14. 155அடியார்க்

**ஈளி:** = இளி.
இசையின் ஏழு சுரங்களில் ஐந்தாவதாக வரும் இளி (பஞ்சம) சுரம்.

ஈளிதாரம் இயம்பிய வண்டுகள் (கம்பரா. 6: 14: 9)

**ஈற்றசை ஏகாரம்:** = இசைநிறை ஏகாரம்.
- பாடலின் இறுதி அசையான ஏகாரம் - (Terminative expletive)

துவரிதழ்ச் செவ்வாய்த் துடியிடையோயே (சிலப். 6: 26)

'துடியிடையோயே' என்பதிலுள்ள 'யே' என்ற எழுத்தில் ல்+ஏ என்பது ஈற்றசை. இது இசையை, பாடலை அழகுபடுத்தும் அணி.

ஏகாரம்: இசைநிறை

← த. க. க. 303/I → இசைநிறை ஏகாரம்

**ஈற்று நின்று இசைக்கும்:** பாடலின் இறுதியை இசைக்கருவியில் இசைத்து உடன் தொடர்ந்து பாடிச் செல்லல்.

பாடிய வாரத்து ஈற்றின் நின்று இசைக்கும்
கூடிய குயிலுவக் கருவிகள் எல்லாம் (சிலப். 3: 137 - 8)
... பாடலின் ஈற்றிலே நின்று கூடி இசைக்கப்படா நின்ற கருவிகள் எல்லாம்... (மேலது அரும்.)

↑ யாழ், கின்னரம் (வயலின்) முதலிய கருவிகள் பக்கவாத்தியமாக வைத்து அரங்கிசையில் பாடும்போது; பாடகர் பாடிய இறுதியை இக்கருவியாளர் இசைத்துத் துணை செய்யும் முறை இன்றும் தொடர்ந்து வருகின்றது.

# உ

**உக்கரைத்தட்டு:** = உட்காரத்தட்டு
*மதங்கத்தின் (மிருதங்கம்) வலந்தலையின் நடுப்பாகத்துக்கு மேலுள்ள பாகம்.*
*உட்காரத்தட்டு - திரிந்த வடிவம்.*

**உக்கி:** *அம்மானை விளையாட்டில் பயன்படுத்தும் பந்து.*

← *பெ. அ.* 57/III

**உக்கிர சிரம்:** = உத்துத முகம்
*நாட்டியத்தில் முகம், வானத்தை நோக்கும்படியான ஒருவகை நடன அவிநயம்.*
**உக்கிரசிரத்தை உரைக்குங்காலை... முகட்டினைப் பார்த்தல்** (பரத. 75)

**உக்கிரம்:** *உரு வடிவுள் ஒன்று.*
**உருவின் நாலுறுப்பாவன; உக்கிரம், துருவை, ஆபோகம், பிரகலை** (சிலப். 3: 150 அரும்.)

**உகச்சர்:** → உவைச்சர்

**உகச்சன்:** *மத்தளம் கொட்டுவோன்.*
*இத்தேவர்க்குக் கொட்டும் உகச்சன் சேடன் கடம்பனும்* (தெ. இ. க. 17· 243)

**உகச்சு:** = உவச்சு, உவைச்சர்
**1. இசைக்கருவி வாசிப்பாளர் குழு,**
**2. தோல்கருவிகளுள் ஒன்று, உகச்சுத் தலைப்பறை.**
*உகச்சுத்தலைப் பறையொன்று மத்தள மூன்றும் கரடிகை ஒன்றும் சங்கிரண்டும்* (தெ. இ. க. 13: 170; த. க. சொ. 84)

**உகச்சுகள்:** → உவைச்சர்

**உகம்:** தலைப்பாட்டு, (Leading song)
**தலைப்பாட்டாவது உகம்** (சிலப். 14: 156 அடியார்க்.)

**உகிர்நிலைப் பசாசம்:** *ஆடலில் சுட்டுவிரல் பெருவிரல் நகனுனிகள் கவ்வி/ பொருந்தி நிற்கும்படி செய்வதாகிய கை அவிநயம்.*
**பசாசம் தான் மூன்று வகைப்படும்: அகநிலைப் பசாசம், முகநிலைப் பசாசம், உகிர்நிலைப் பசாசம்**(சிலப். 3: 18. அடியார்க்.)

**உகைச்சர்:** மேளம் கொட்டுவோன்.
*இருபத்தேழு பட்டியில் உகைச்சர்களுக்கு நிலம் கலந்தவாறு ஐஞ்சு பட்டிநிலம்* (தெ. இ. க. 17· 243)

**உங்காரம்:** வண்டின் ஒலி.
**உங்கார மது கரங்கள்** (பாரத. வசந்த. 3)

← *செ. ப. அ. 387*

**உச்சக்கட்ட மகுடம்:** *கணியான் கூத்து என்ற மகுட ஆட்டத்தில் 1 ½ அடி விட்டத்தில் எருமையின் கழுத்துப் பகுதித் தோலால் செய்யப்பட்ட மகுடம் இசைக்கப்படுகிறது. இது கணீர் என்ற உச்ச ஓசையைத் தருவதால் இதற்கு உச்சக்கட்ட மகுடம் என்று பெயர்.*

→ மந்தக் கட்ட மகுடம்

**உச்சக்குரல்:** = தாரக்குரல், உயர்குரல், வலிக்குரல், வன்குரல், இரட்டித்தகுரல், தாரசட்சம், கெச்சுசட்சம், மேல்மண்டிலக்குரல், 'ச்'
மேல் இயக்குக் குரலைக் குறிப்பது *(தாரஸ்தாயி சட்சம்)*
**... தார நீண்ட உச்சமே வல்லிசைப் பேர்** (சூடா. 10: 40)
**தாரமும் உச்சமும் வல்லிசையாகும்** (பிங்க. 1421)

**உச்சத்தொனி:** *மிடற்றிசையின் - (குரல் இசை) உச்சநிலை.*
**உச்சத்தொனியில் உயிர்ப்பு எழல் இயல்பே** (மனோன். 1: 2: 2)

← *பெ. அ.* 71/III.

**உச்சம்:** *வல்லிசை. எண்வகைப் பாடல் பயன்களுள் ஒன்று.*

இன்பம் தெளிவே... உச்சம்... பாடலின் பலனே
(சிலப். 3: 16 அடியார்க்.)
தாரமும் உச்சமும் வல்லிசையாகும் (பிங்க. 1421)

**உச்சிக்கடன்:** கோயில்களில் நடைபெறும் நடுப்பகல் வழிபாடு. உச்சிக்கடன் கழிப்பின் (கூர்மபு. 2: 18)

← பெ. அ. 75/III

**உச்சித்தம்:** = மகரக்கை
நாட்டியத்தில் மகர (மீன்) அவிநயம் காட்டும் கை. கபோதமிரண்டு கையும் அகம் புறம் ஒன்ற வைப்பது.
மகரமென்பது வாய்மையின் உரைப்பின்
கபோதம் இரண்டு கையும் அகம் புறம்
ஒன்றவைப்பது என்று உரைத்தார் புலவர் (சிலப். 3: 18.அடியார்க்.)

**உச்சிப் பொழுதில் வந்தோன் அவிநயம்:**
உச்சிப்பொழுதின் வந்தோன் அவிநயம்
எச்சமின்றி இயம்பும் காலைச்
சொரியாநின்ற பெருந்துயர் உழந்து,
தெரியாநின்ற உடம்பெரியென்னச்
சிவந்த கண்ணும் அயர்ந்த நோக்கமும்
பயந்த தென்ப பண் புணர்ந்தோரே
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**உசா:** 1. உழை > உசை >உஷை ; உசா > உஷா
சூரியன் மனைவியர் இருவர்: 1) உஷா 2) பிரதிம் உஷா
↑ உழையின் ஒரு வகை; வல்லுழை – பிரதி மத்திமம்.
2. உஷை; வாணன் மகள்.

**உசித்தாளம்:** தாளத்திற்குரிய எண்ணிக்கைகள் முழுவதிலும் தட்டுதல்களாகத் தட்டிப் பின்னர் இறுதி எண்ணிக்கையில் மட்டும் ஒலி இன்றிக் கையை மேலே வீசுதல். இசைக்கதை (காலட்சேபம்) நிகழ்த்துங்கால் இன்றும் இத்தாளம் பயன் படுத்தப்படுகிறது.
← த. க. க. 233/I

**உசேனி:** மருத யாழ்த்திறத்துள் ஒன்று.
பண்களில் ஒன்று (பரத. இராக. 104)

**உட்காரத்தட்டு:** → உக்கரைத்தட்டு

**உட்டிக் கொட்டல்:** (ம.வ) இடக்கை, மத்தளம், திமிலைக் கலைஞர்கள் சேர்ந்து வாசிப்பது. மிக மிக மெதுவான நடையில் தொடங்கி மிக வேகநடையில் முடிவு பெறுவது.

**உடகைச் சுற்று:** நாட்டியத்தில் இடக்கைப் புறமாகச் சுற்றுக்கை (செ. ப. அ. 393)

**உடல்:**
1. = ஒடல் (பே. வ). பெரிய நகரா (Big Drum)
2. → தவில்

**உடல் அவிநயம்:** = ஆங்கிகாபிநயம்
அவை:- அங்ககாரம், சிரோபேதம், பாதசாரி, தாண்டவம், தானப்பிரமணம், கரணம், அஸ்தம், நேத்திரபேதம், உருசரசக்தி, சப்தம், நாட்டியம், மண்டலம்.
← ம. சூ பா. 32 & 33

**உடல்கூற்று வண்ணம்:** உடலின் தோற்றம், வளர்ச்சி, முடிவு ஆகியன பற்றிப் பாடப்படும் வண்ணப் பாடல்கள்.
பட்டினத்தார் பாடியது. இவ்வண்ணம் ஒவ்வொரு கலையும் நான்கு குழிப்பும் ஒரு தொங்கலுமாக அமைந்துள்ளது. முதற்கலையையும் மூன்றாம் கலையும் எதுகையும், முதலாவதும் இரண்டாவதும், இரண்டாவதும் மூன்றாவதும் மோனையும் பெறு கின்றன தாயுமானவர் பாடும் வண்ணங்களிலும் இவ்வமைப்பைக் காணலாம். (இலக்கணத். முன். பக். 102)
← த. இ. பே 234/15

**உடல் கூறு:** → தவில்

**உடல் தூக்கு:** உடலவர்த்தனை. நாடகம் நடனம் போன்றவற்றில் உடலால் செய்யும் அவிநயம்.
உடல் தூக்கு முதலாகிய உடலவர்த்தனையும் அகக் கூத்துக்குரியன (சிலப். 3: 16 அடியார்க்.)

**உடல் மெய்ப்பாடு:**
= அங்கக்கிரியை, உடல் மொழி (Body language) உடல் அவிநயம், விறல், சத்துவம், ஆங்கிக அவி நயம், உடல், உடல்நிலை (pose) இரேசிதம். (Gait) உள்ளத்து உணர்வு (சுவை) வெளிப்பட உடல் அசைவுகளால் செய்யப்படும் வினைகள்
“ ...ஈரெண்வகைய அங்கக்கிரியையும்...”
(சிலப். 3:12. அடியார்க். மேற்.)
அங்கக்கிரியை பதினாறாவன:– (1) சரிகை...... (16) நிகுஞ் சனமென்ப (மேலது அடியார்க்.)

**உடலவர்த்தனை:** உடலால் செய்யும் அவிநயம்.
மெய்சாய்த்தல், இடைநெரித்தல், சுழித்தல், அணைத்தல், தூக்குதல், அசைத்தல், பற்றல், விரித்தல், குவித்தல் என இது ஒன்பது வகைப்படும். (சிலப். 3·16 உ. வே. சா. அடிக். சுத்தானந்தப் பிரகாசம்)

**உடன் எடுப்பு:** *சமஎடுப்பு (On-beat). தாளமும் பாட்டும் சேர்ந்து தொடங்குவது*

**உடன்பட்டோன் அவிநயம்:**

**சிந்தை உடம்பட்டோன் அவிநயம் தெரியின்**
**முந்தையாயினும் உணரா நிலைமையும்**
**பிடித்தகைமேல் அடைத்த கவினு**
**முடித்தல் உறாத கருமநிலைமையும்**
**சொல்லுவது யாதும் உணரா நிலைமையும்**
**புல்லுமென்ப பொருந்துமொழிப் புலவர்** (சிலப்: 3: 12 அடியார்க். மேற்.)

**உடன்பாடுவான்:** *சேர்ந்து பாடுகிறவன், பின்பாட்டுக் காரன், இடைப்பாட்டுப் பாடுபவன், பக்கப்பாட்டுக் காரன்*

*நிவந்தத்திற் நன்கு பாடுவான் 3 கூறும் உடன்பாடுவான் 2 கூறும்* (*தெ. இ. க. 1374, த. க. சொ. 86-87*)

*வீணை வாசிப்பானுக்கும் உடன்பாடுவானுக்கும்* (*தெ. இ. க. 7· 66*)

ஒப்பு: **இடைப்பாட்டுக் கூத்தி** **(சிலப். 14: 156)**

**உடனிலை:** *உடன் இருந்த இருவரைப் பாடும் ஒரு புறத்துறை. எ-டு:- புறம்58. இப்புறப்பாடலில் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், பாண்டியன் வெள்ளியம் பலத்துத் துஞ்சிய பெரு வழுதி என்ற உடனிருந்த இருவரைக் காவிரிப் பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியுள்ளார்.*

**உடனிலைத் துள்ளல்:** *தாளமுழக்கில் 'தக்தின திகதின' என்னும் சொல்நடையில் ஒரு குறித்த எழுத்தை அழுத்திச் சொல்லுதல்.*

**துள்ளல் கண்ணும் குடக்குத் துள்ளும்**
**தன்னதாகிய உடனிலைப் புணர்ச்சி**
**கொள்ளுவன எல்லாம் குறும்போக்கும்**
(சிலப். 7: 5 - 8 அரும். மேற்.)

← *த. க. க. 55/III*

**உடனிலைப் புணர்ச்சி:** *யாழ் வாசித்தல் வகையுள் ஒன்று; குறும்போக்கின் ஒருபகுதி.*

**துள்ளற் கண்ணும்... உடனிலைப்புணர்ச்சி ... குறும்போக்கும்** (சிலப்: 7:5-8.அரும்.மேற்.)

**உடுக்கடி:**

→ **உடுக்கடிப்பாட்டு, உடுக்கைப்பாட்டு**

**உடுக்கை:** = *உடுக்கு, உதடு, இடை சுருங்கு பறை, டமருகம், தமருகம், நுண்ணூல் சிரந்தை. நடுப்பகுதி சுருங்கியும், இரு பக்கமும் விரிந்தும் செல்லும் இருமுகப்பறை. வலப்பக்கத்தில் கையால் அடித்து இயக்கப்படும் இருகண்பறை. இதன் சிறிய வடிவம் குடுகுடுப்பை; பெரிய வடிவம் துடி. உடுக்கடிப் பாடகர், அம்மன் பூசாரியர், குறி சொல்பவர், பழங்கதை பாடுவார் பயன்படுத்துவது.*

**உலரிய உடுக்கை** **(சீவக. 1: 72: 76)**
**தண் குடுக்கை தாளந்தக்கை** **(தேவா. 1: 65: 10)**
**தாட உடுக்கையன்** **(தேவா. 4: 19: 10)**
**உதடு – உடுக்கை, துடி** **(சது. அக.)**
**மறம் கடைக் கூட்டிய துடிநிலை...** **(தொ. பொ. 62)**

*மூன்று சந்தியும் உடுக்கை வாசிப்பானொருவனுக்கு* (*தெ. இ. க. 5: 721*)

*... நிலையாய் உடுக்கை வாசிப்பான் ஒருவனும்...* (*மேலது. 2· 254 தஞ்சைப் பெரியகோவில் கல்வெட்டு*)

**... பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம்** (சிலப். 3: 27 அடியார்க்.)

**துடியடிக்குழவிய பிடி இடை மிடைந்த** **(புறம். 369)**
**உருந்துடி மகுளி ...** **(அகம். 9: 4)**

← *த. க. சொ. 87/I;* → **இருமுகப்பறை**

**உடுக்கைக் கோலம்:** *இது ஒரு தாள முறை. (மத்தியம யதி, யதி தமரு) சொற்கள் தொடக்கத்தில் பெருகி நடுவில் வரவரக் குறுகி மீண்டும் இறுதியில் பெருகி வருவது. இது மத்தளக் கோலத்திற்கு எதிரான அமைப்பை உடையது.*

*எடு:-*

*தகிடதோம், கிடதோம், தோம், கிடதோம் தகிடதோம்*
*பதநிச், தநிச், நிச், தநிச், பதநிச்*

← *இ. து. த. சொ. 37*

**உடுக்கைப் பாட்டு:** = *உடுக்கடிப் பாட்டு, உடுக்கடி*

*உடுக்கையை முதன்மையாகக் கொண்டு தென்மாவட்டங்களில் இசைக்கப்படும் கதைப்பாடல். காத்தவராயன் கதை பாடுவதே பெருவழக்கு. மழை வறட்சிக் காலத்தில் நிகழ்த்தப்படுவது.*

*காப்புப் பாடல்:*

**முந்தி முந்தி விநாயகனே – விநாயகனே,**
**முருக நல்ல சரசுவதியே – சரசுவதியே**
**கந்தனுக்கு முன்பிறந்த கணபதியே**
**முன் நடவாய் ! முன் நடவாய் !!**

*உடுக்கைப் பாட்டு என்பது உடுக்கை அடித்துக் கொண்டு முன்னும் பின்னுமாக இருவர் பாடுவது. பாட்டு - முன்பாட்டு, பின்பாட்டு எனவும், பாடுவோன் முன்பாட்டுப் பாடுவோன், பின்பாட்டுப் பாடுவோன் எனவும் வழங்கும். அடி அல்லது பாட்டு முடிந்ததும் பின்பாட்டுக்காரன் முன் பாட்டுக் காரனாக மாறியும் இருவரும் சேர்ந்தும் பாடுவர்* (*தொடையதிகாரம். 294*)

**தலைப்பாட்டுக் கூத்தியும் இடைப்பாட்டுக் கூத்தியும்** **(சிலப். 14: 156 )**

↑**தலைப்பாட்டு முன்பாட்டு எனவும் இடைப்பாட்டு**

பின்பாட்டு எனவும் காலப்போக்கில் பெயர் பெற்றிருக்கலாம்.

← த. ப. வ. 554 - 55

**உடுக்கையதி:** → உடுக்கைக்கோலம்

**உடுக்கு:** → உடுக்கை

**உடைய கூத்து:** உடையவக் கூத்து.

← உ. வே. சா. சிலப். பக். 739; சிலப். 3:12அரும். (பி-ம்)

**உடோளக்கை:** → ஊஞ்சல்கை

**உடோளம்:** → ஊஞ்சல்கை

**உத்சேபணம்:** உடல் உறுப்பு அவிநயம் பதினாறுள் ஒன்று. .(சிலப். 3: 12: உ. வே. சா. அடிக்.)

**உத்தமத் தோற்கருவி:** மத்தளம், தண்ணுமை, இடக்கை, சல்லிகை என்பன.

மத்தளம் தண்ணுமை, இடக்கை, சல்லிகை என வைத்த நான்கும் உத்தமக்கருவி (சிலப். 14: 151: அடியார்க். மேற்.)

**உத்தர பிரதிஉத்தர தரு:** நாடக நடிகர் இருவரிடையே நடக்கும் உரையாடலைச் சித்தரிப் பதாக உள்ள பாடல்.

**உத்தராங்கம்:** → தாரபாகம்

**உத்தளம்:** மத்தளம்.

இத்தகைய மத்தளப் பேர்... உத்தளமே (பரத. ஒழிபி. 13)

**உத்தான வஞ்சிதம்:** நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று.

'நிருத்தக்கை முப்பதாவன; சதுச்சிரம்... உத்தான வஞ்சிதம். . . என்பன (சிலப். 3:13. உ. வே. சா. அடிக்.)

**உத்திரட்டாங்கம்:** பத்து வகையான நாடகங் களுள் ஒன்று (சங். அக.)

**உத்துவீதம்:** நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று.

நிருத்தக்கை முப்பதாவன: சதுச்சிரம், உத்துவீதம். . . என்பன (சிலப். 3:13. அடிக்.)

**உதடு:** → உடுக்கை

**உதயகாந்தாரி:**

பண்களில் ஒன்று (பரத. இராக. 103)

**உதயகிரி:** குறிஞ்சி / முல்லை யாழ்த் திறத்துள் ஒன்று.

செம்பாலையுள் பிறக்கும் பண்கள்: பாலையாழ்... உதயகிரி (சிலப். 8: 35. அடியார்க்.)

நட்டபாடை .... உதயகிரி. . . . குறிஞ்சி யாழ்த் திறமாகக் கூறுவர் (பிங்: 1382)

**உதயபானு:** பண் வகையுள் ஒன்று. (பரத. இராக. 103)

**உதய ரவி** = உதய ரவிச்சந்திரிகா, சுத்த தன்யாசி, ஆம்பல் பண். → ஆம்பல்

**உதயரவிச்சந்திரிகா:** → உதயரவி

**உதயராகம்:** காலைப்பண் (பரத. இராக. 69 உரை)

**உதரத்தோல்:** பசுவின் வயிற்றுத் தோலால் முழவு அமைப்பது வழக்கம். அது விரிந்து நெகிழ்ந்து கொடுக்கும் தன்மையது. எடு:- ஆவஞ்சி.

உதரம் - வயிறு.

← த. க. க. 243

**உதைத்தல்:** யாழ் நரம்பைத் தெறித்தல்.

உதைத்து விடு நரம்பின் இம்மென இமிரும் (அகம்: 317)

வளைசேர் செங்கைமெல் விரல் உதைத்த (மணிமே: 7: 48)

**உந்தல்:** = ஜாரு

எண்வகை யாழ்த்தொழில் (கரணம்)களுள் ஒன்று. இது இறங்கு ஜாரு, ஏற்ற ஜாரு என்று இக்காலம் அழைக்கப்படுகிறது.

வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும் (பொருந: 23)

வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல் (சிலப்:7:(1): 12)

உந்தல் என்றது நரம்புகளை உந்தி வலிவில்பட்டதும், மெலிவில் பட்டதும் நிரல் பட்டதும் நிரல் இழி பட்டதும் என்று பலவகைப்படும் (மேலது. அரும்.)

யாழ் நரம்பு தடவுகை, நரம்பு முழுதினையும் தடவித் தள்ளல் உந்தி (கூர்மபு: கண்ணன் மணம். 146)

← செ .ப. அ. 417.

**உந்தி:** = குதிரை (Bridge)

**1. யாழ் உறுப்புள் ஒன்று:** பத்தரின் வாயை மூடியுள்ள போர்வையின்மேல் உந்தி என்னும் உறுப்பு நிற்கும். இக்காலம் இது குதிரை என்று அழைக்கப்படுகிறது.

கவடுபடக் கலை இய சென்று வாங்கும் உந்தி (மலைபடு. 34)
ஆணிகளும் திவவும் உந்தியும் பெற்று...
(சிலப்: உரைப்பாயிரம். அடியார்க்)
*(உந்தி - தூக்கி இருக்கச் செய்தல்). நரம்புகளை உயரமாகத் தூக்கி (உந்தி) இருக்கச் செய்வதால் உந்தி.*
... உந்திநிவந்து செல் நீத்தம் குளம் கொளச் சாற்றி
(மதுரைக். 245 – 246)
உந்தி . . . தேர் உருளும்... யாழ்க் கண்ணதோர் உறுப்பும் வரையார் (திவா. 1906)

**2. பெண்டிர் விளையாட்டு:** *குழுவாய்க் கூடி மகளிர் ஆடும் விளையாட்டுள் ஒன்று.*
பேதையார் விரும்பி ஆடலும் ... உந்தியாகும் (பிங். 3196)

**3. திரு உந்தியார்:** *மாணிக்கவாசகர் பாடிய திருவாசகத்தின் பதினான்காவது பகுதி.*

**4. சைவசித்தாந்த, சாத்திர நூல்கள் பதினான்கில் முதலாவது நூல் 'திருவுந்தியார்'.**

**5.** *சிறுமியர் விளையாட்டாகிய 'உந்தி பறத்தல்' என்பதனை 'உந்தீபற' என இரண்டாம் மூன்றாம் அடியின் ஈறாகக் கொண்ட மூன்றடிப் பாடல்.*
← *த. க. க. 243/I*

**உந்தீ பறத்தல்:** *மகளிர் தம்முள் கூடி 'உந்தீ பற' என்ற ஈற்றுடைய பாடல்களைப் பாடி பந்து ஆடும் ஒரு விளையாட்டு.*
உந்தி பறந்த ஒளியிழையார்கள் (பெரியாழ்:திரு. 3: 9: 11)
உந்தி பறந்து இளைத்து உண்ணீரே (கலிங். 582)
பாலமுது உண்டேன் என்று உந்தீ பற (திருவருட். 4895)

**உப்பிதம்:** *கூத்தின் விகற்பம். கூத்தின் வகையுள் ஒன்று.*
கரணம் உப்பிதம் மலைப்பு... கூத்தின் விகற்பமாகும் (பிங். 1445)

**உப்பு:** *பண்களில் ஒன்று.*
உப்பே இராகமும்... இனிமையும் ஐந்தே (அ. நி. உம் முதல் 90)

**உபசன்:** → உவைச்சர்

**உபசாரக்கை:** *இரட்டைக்கை வகையுள் ஒன்று. இரண்டு கைகளையும் குவித்து மார்போடு அணைத்து உபசாரமாகக் காட்டும் இணைக்கை வகை.*
உபசாரக்கை... குடங்கை இரண்டும் கூப்பி மார் பிருத்தல் (பரத. 1: 55)

**உபபல்லவி:** → அனுபல்லவி

**உபயாங்கம்** = உபயானுகம்
*பாட்டுக்கும் நாட்டியத்திற்கும் துணையாக முழவினை முழக்குதல்.*
உபயானுகம் - இரண்டுக்கும் வாசிப்பது (சிலப். 3: 14 அடியாக்.)
உபயானுகம் - இரண்டுக்கும் வாசித்தல்(சிலப். 3: 14 அரும்.)
*த. க. க. 135/II;* →இரண்டுக்கும் வாசித்தல்

**உபயானுகம்:** → உபயாங்கம்

**உபவேட்டனம்:** *கூத்தினுள் உடலசைவு வகை பதினாறனுள் ஒன்று.*
அங்கக்கிரியை பதினாறாவன: சரிகை... வேட்டனம் உபவேட்டனம்... என்பன (சிலப். 3:12 உ. வே. சா. அடிக்.)

**உபவேட்டிதம்:** *அவிநய வகையுள் ஒன்று.*
அபவேட்டிதம், உபவேட்டிதம், விவாவர்த்திகம், பரவர்த்திகம் (சீவக. 1257: நச்சர்.)

**உபாங்கம்:**
**1. பறை வகையுள் ஒன்று**
... உபாங்கம் நாழிகைப்பறை... தோலால் செய்யப்பட்ட கருவிகள் (சிலப். 3:27 அடியார்க்.)

**2. உபாங்கதாளம்**
அங்கம் உபாங்கம் ஆகிரு நேர் பங்கமுடன்
(பரத. தாள. 4 உரை)

**3. கூத்து வகையுள் ஒன்று**
உரையங்கம்... உபாங்கம் என்று உரைத்த ஆடல்
(சீகாழித் தலபு. சீகாழி. 5)

**உபாங்க இராகம்:** → கிளைப்பண்

**உம்மை:**
**1. இசை நிறைவிற்காக வருவது**
அவளுந்தான் (சிலப். 1: 25)
*அவளுந்தான் - அவள் + உம் + தான்; உம்மை இசைநிறை.*

**2. முற்றுப்பு**
உம்மைப் பயன் கொல்... (சிலப். 15: 92)

**உயர்குரல்:** = தாரக்குரல், இரட்டித்தகுரல், உச்சக்குரல், தாரசட்சம், கெச்சு சட்சம், மேல்ஸ்தாயி சட்சம் - ' ச் '
ஒத்த கிழமை உயர்குரல் மருதம் (சிலப்: 8: 39. அரும்.)
இரட்டித்த குரல் (சிலப். 3:90 அடியார்க்.)

**உயிர்:**
**1.** ஓசை - வள் உயிர்த் தெள்விளி (குறிஞ். 100)
**2.** இசை
**3.** → புலிதம்
வல்லோன் தைவரும் வள் உயிர்ப்பாலை (அகம். 355: 4)

**உயிர்ச்சுரம்:** = சீவசுரம், அம்சசுரம், சாயாசுரம் (Governing note of a melody)
ஒரு பண்ணின் தனித்தன்மையை, வடிவத்தை (பாவம், சாயல்) காட்டும் சுரம். பண்ணில் அடிக்கடி ஒலிப்பது; நீண்டு ஒலிப்பது; பண்ணின் சுவையை வெளிப்படுத்துவது. ஆளத்திக்குரிய பண் நீர்மைகளுள் ஒன்று.
← இ. து. த. சொ. 18
எடு:- ஆனந்த பைரவியின் உயிர்ச்சுரம் - இளி (ப)

**உயிரளபெடை:** தனக்குரிய மாத்திரையிலிருந்து மிக்கு ஒலிக்கும் உயிரெழுத்து (நன். 91. உரை)
எடு:- **ஓஒதல் வேண்டும்**
**அளபிறந்து உயிர்த்தலும்** **(தொல். எழுத். 33)**
10 சார்பு எழுத்துக்களுள் ஒன்று.
தொல்காப்பியம் அளபெடையைச் சார்பு எழுத்து எனத் தொகைப்படுத்தாததால் உயிரளபெடை ஒற்றளபெடை போன்ற சொற்களை ஆளவில்லை. எழுத்துப்போலி என்ற கருத்தைக் குறிப்பிடினும் எழுத்துப்போலி என்ற சொல்லாக்கம் காணப்படவில்லை (தொ. க. க. 33)
உயிரளபெடை செய்யுளில் ஓசை குறைந்தவிடத்து நிறைக்கும் பொருட்டும் குறையாவிடத்து இன்னிசைக்காகவும் நெட்டெழுத்துக்கள் தமக்குரிய மாத்திரை அளவிற்கேற்பப் பெற்று வருகை.
"உயிரளபெடை மூன்று மாத்திரை"(தொ. பொ.311: இளம்)
← பெ. அ. 283/III

**உரப்பார் சுவார்த்த மண்டலி:** நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று (சிலப். 3: 12 உ. வே. சா. அடிக்.)
மண்டிலி - மண்டிலித்தல் - சுற்றி வருதல் - வட்டமடித்தல்.

**உரி:** = உரிச்சொல்.
1. நால்வகைச் சொற்களுள் ஒன்றாய் இசை, குறிப்பு, பண்பு இவற்றின் அடியாகத் தோன்றிப் பெயர், வினை போன்றும் அவற்றின் வேராயும் பெயர்க்கும், வினைக்கும் அடையாகவும் செயல்படும் உரிச்சொல்.
**பெயர் வினை இடை உரி என நால்வகைத்தே (இலக். வி. 40)**
2. உரிப்பொருள்; உரிமையான பொருள்; உரியபொருள்; அகத்திணைப் பாடல்களின் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளுக்கு உரிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்னும் பொருள்கள்.
← பெ. அ. 296/III

**உரிச்சீர்:** மூவசைச்சீர் (foot of 3 Accai)

**உரிச்சொல்:** → உரி

**உரிமைக்கோவை:** → கிழமைக்கோவை

**உரிமைக்கோவைப் பண்** = கிழமைக் கோவைப் பண்.
ஒரு பண்ணிற்கு உரிய கோவைகள் மட்டுமே ஒலிக்கும் பண்.
எடு:- முல்லைத் தீம்பாணி (மோகனம்)
இப்பண்ணிற்கு உரிய ச ரி$^2$ க$^2$ ப த$^2$ என்ற கோவைகள் மட்டுமே ஒலிப்பதால் இது உரிமைக் கோவைப்பண்
← த. வ. 96

**உரியசை:** நேர்பு நிரைபு அசைகள் (particular kind of metrical syllables)
**இருவகை உகரமொடு இயைந்தவை வரினே**
**நேர்பும் நிரைபும் ஆகும் (தொ. செய். 4)**
எடு:- கல் > கல்லு (கல் +உ ); கால் > காலு (கால் + உ)
← செ. ப. அ. பிற். 151

**உரு:**
1. இசைப்பாடல், உருப்படி
அகநாடக உரு (சிலப். 3:14 அடியார்க்.)
தாளத்தின் வழி உரு எடுத்து (உத்தரரா. சீதைவ. 25)
பாட்டுடைச் செய்யுள் (சிலப். பதிகம். 60)
உரு ஆகிய பாட்டுக்களையுடை காவியம் (மேலது. அரும்)
2. பாட்டுவகை: பாட்டு என்றது அகநாடகங்களுக்கும் புறநாடகங்களுக்கும் உரிய உருக்களும் (மேலது. அரும்)
← செ. ப. அ. 443

**உரு அமைத்தல்:** மெட்டுப்போடுதல், பண் அமைத்தல், இசை அமைத்தல்.
பண், தாளம், நடை முதலியன பாடலுக்கு அமைத்து இசை உரு ஆக்கல்.

**உருக் காட்டுதல்:** நடிகர் திரைக்குப் பின் இருந்து முதலில் பாடி ஆடிய பின்பே மேடையில் தோன்றி தன் உருவைப் பார்வையாளருக்குக் காட்டுதல் மரபு.
ஒத்து ஆடிய பின்னர் அல்லது உருக்காட்டுதல் வழக்கல்ல (சிலப். 3:147. அடியார்க்)
→ அந்தரக்கொட்டு

**உருட்டல்:** = பரண்
இசைத்தொழில் எட்டனுள் ஒன்று; புரளும் குரல் இசை (Quavering note).
**சீருடன் உருட்டல் தெருட்டல் அள்ளல் (சிலப். 7: 13)**
உருட்டலென்றது இடக்கைச் சுட்டுவிரல் தானே உருட்டலும் வலக்கைச் சுட்டுவிரல் தானே உருட்டலும், சுட்டொடு பெருவிரல் கூட்டி உருட்டலும், இருபெரு

விரலும் இயைந்து உடன் உருட்டலும் எனவரும்
(மேலது. அரும்.)

நரம்பை அடிதொட்டு ஈற்றளவு நன்கின் வருடல் உருட்டல்
(கூர்ம. பு.1: 30: 147)

சீர்தரு கேள்வன் உருட்டும் துடிச்சீரால் (பரிபா. 21: 60)

நால்வகை நடைகளுள் கூடை, திரள், (மூன்றாம், நான்காம் நடை) உருட்டல் தொழில் செய்ய உரியவை. நாலைந்து சுரங்களைச் சேர்த்து 3 ஆம் 4 ஆம் காலத்தில் விரைந்தொலித்தல்.

← பெ. அ. 313/III; ப. இ. இ. 222 - 23; செ. ப. அ. 445

**உருட்டு:** தாளக்கிரியை எட்டனுள் ஒன்று.

... எடுத்தல் ... உருட்டு தாக்கு என இவை
(சிலப். 3: 26 அடியார்க்.)

**உருட்டுதல்: 1. தோற்கருவியை முழக்குதல்**

கேள்வன் உருட்டும் துடிச்சீர் (பரிபா. 21: 60)

**2. யாழ் நரம்பு தடவுதல்**

சீருடன் உருட்டல் (சிலப். 7: 13)

→ உருட்டல்

**உருட்டு வண்ணம்:** அராகம் தொடுத்து வரும் சந்தம்.

உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும் (தொ. பொ. 544)

எடு:- கதறி மனமுருக நானழைக்கவோ
இதர மாதருடன் நீ களிக்கவோ

(அலைபாயுதே என்ற ஊத்துக்காட்டார் பாடல்)

உருட்டு வண்ணம் முடுகு வண்ணமென்று ஆங்கென மொழிப
(இலக். விள. 757)

உருட்டாம் அராகத் தொடு வருவனவே (முத்துவீரி. 988)

(அராகம் - முடுகு)

← செ. ப அ. 446; பெ. அக. 315/III

**உருத்திர கணிகையர்:** சிவன் கோவில் தேவரடியார், ஆடல் மகளிர். (உருத்திரன்- சிவன்; தேவரடியார் - பெண் மக்கள்).

வேந்தாகி விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும்...
தேந்தாமென்று
அரங்கேறிச் சேயிழையார் நடம் ஆடும் திருவையாறே
(தேவா. 1: 130: 6)

அருமணித்தடம் பூண்முலை அரம்பையரொடு அருப்பாடியர்
உரிமையில் தொழுவார் உருத்திர பல் கணத்தார்
(தேவா. 4: 200 அப்பர் திருவாரூர்ப் பதிகம்)

கோதில் குலத்தரதன் கோயில் பிணாப்பிள்ளைகள்
(திருவெம்பாவை 10)

கதிர்மணி பிறந்தது என்ன உருத்திர கணிகைமாராம்
(பெரியபு: தடுத்தாட். 132)

பதியிலார் குலத்துள் தோன்றிப் பரவையார் என்னும் நாமம்
(பெரியபு. தடுத்தாட். 2)

உருத்திர கணிகையர் கவரிவீச (பரத. ஒழிபி. 29: உரை)

உருத்திர கணிகையர் மரபில் தோன்றினவள் (பரத. 4: 32: உரை)

கோவிலில் நிவந்தம் அல்லது கூலிபெற்று ஆடுபவள்
(ஞானாகானம். 240)

சுத்தம், மிசிரம், கேவலம் என்ற மூவகை ஆடல்களில் சுத்த நிருத்தமே (சொக்கம் - Pure dance) உருத்திர கணிகைக்கு விதிக்கப்பட்டது.

இச்சை சிவசக்தியின் கால் சிலம்போசையிலிருந்து உருத்திர கணிகையும், ஞான சிவசக்தியின் கால் சிலம்போசையிலிருந்து உருத்திர கண்ணிகையும், கிரியா சிவசக்தியின் கால் சிலம்போசையிலிருந்து உருத்திர தாசியும் தோன்றியதாக காமிக ஆகமம் கூறும்.

**உருத்திரச் சுவை அவிநயம்:**

கைபிசையா வாய் மடியாக் கண் சிவவா வெய்துயிரா,
மெய்குலையா, வேரா வெகுண்டெழுந்தான்
(தண்டி. அலங். 70. மேற்.)

**உருத்திர வீணை:** யாழ்வகையுள் ஒன்று.

**உருத்திரிகை:**

வீணை வகையுள் ஒன்று (பரத. ஒழிபி. 15)

**உருப்படி:** = உரு, உருவகை, கிருதி, பனுவல், பணு, கவனம்.

இசைப்பாடல்

சில பழைய உருப்படிகளும் எனக்கு அக்காலத்தில் பாடமாயின
(மீனா. சரித். 2: பக். 19)

இதன் வகைமைகள்:

1) செவ்விசை உருப்படி (Art musical form)
2) பத்திமை உருப்படி (Devotional musical form)
3) உலகியல் உருப்படி (Secular musical form)
4) நாட்டிய உருப்படி (Dance musical form)
5) இசை நாடக உருப்படி (Opera musical form)
6) நாட்டார் இசை உருப்படி (Folk musical form)

← த. க. க. 249/I

**உருவக தாளம்:** = உருவகம், உரூபகம், ரூபகம், ரூபகதாளம், உரூபகதாளம் பன்னிரண்டன் மட்ட தாளம்.

ஏழு தாளத்துள் ஒன்று. இத்தாளம் ஐந்து தாள இனங்களுடன் நேர்ந்து ஐந்து உருவக தாளங் களாகின்றன. ஓர் அலகும் (லகு) ஒரு துரிதகும் என்ற உறுப்பு (அங்கம்) களைக் கொண்டது.

இதன் உறுப்பு - 01

1. மூன்றன் (திசுர) உருவகம் - $0 1_3$ = 5
2. நாலன் (சதுசுர) உருவகம் - $0 1_4$ = 6
3. ஐந்தன் (கண்ட) உருவகம் - $0 1_5$ = 7
4. ஏழன் (மிசுர) உருவகம் - $0 1_7$ = 9
5. ஒன்பான் (சங்கீரண)உருவகம் - $0 1_9$ = 11

தகிட தகிட தகிட தகிட தகிட தகிட தகிட தகிட
1½ 1½ 1½ 1½ = 6 +
1½ 1½ 1½ 1½ = 6 = 12

*'மண்டேய்த்த' (சிலப்: 1: 36-39) மற்றும் கானல்வரி 7: (2); (3);( 4) ஆகிய பாடல்கள் இத்தாளத்தில் அமைந்துள்ளன.*

**உருவகம்:** = 1. *நாடகம்.*

உருவகம் நாடகம் ஓரலங்கரரம் (நா. தீ. 729)

2. ஒருதாளம்; உருவகதாளம்

→ உருவக தாளம்.

**உருவகை:** → உரு

**உருவடி:** *சரணம், தொடுப்பு, தாழிசை.*

← *தேவ: 12/I*

**உருவின் உறுப்பு:** *இசை வடிவு.*

*இசைப்பாடல்களுக்கான உறுப்புகள் நான்கு: உக்கிரம், துருவை, ஆபோகம், பிரகலை.*

நான்கின் ஒரீஇய நன்கனம் அறிந்து (சிலப். 3: 150)

நாலுறுப்பும் குறைபாடில்லாத உரு... (மேலது. அரும்)

துருவை என்றது துருமை எனவும், ஆபோக மென்றது ஆயோகமெனவும் பிரதிகளில் வேறுபட்டிருக்கின்றன.

(உ. வே. சா. அடிக். (சுத்தா. பிரகாசம்)

**உருவுதல்:** *இசை மீட்டுதல்.*

பண்ணமை மகர வீணை நரம்பு உரீஇப் பாவைபாட

(சீவக. 1984)

அங்கூத்தை ஆராயும் முதல் நரம்பை உருவி வாசிக்கும் நாரதனார் (சிலப். 17:25 அடியார்க்.)

**உருவு திரை:** *ஒருமுக எழினி, திரைச்சீலை.*

ஒருமுக எழினியும் பொருமுக எழினியும் (சிலப். 3: 109)

இடத்தூணிடத்தே உருவு திரையாக ஒருமுக எழினியும் (சிலப். 3: 109 - 10 அடியார்க்.)

எலிமயிர்ப் போர்வையை வைத்து உருவு திரையை வளைத்தார் (சீவக. 247 நச்சர்)

**உரூபகம்:** → உருவகதாளம்

**உரை:** 1. சொல், தனிச்சொல்

நாட்டம் இரண்டும் அறிவுடம்படுத்தற்குக்

கூட்டி உரைக்கும் குறிப்புரையாகும் (தொ. பொ. 93)

மூதூர் மலிந்தன்று அவர் உரை (பரிபா. 12: 94)

உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் (சிலப். பதிகம். 87)

← (தொ. பொ. 475 இளம்.)

என ஆங்கு (கலித். 56: 27)

அவளுந்தான் (சிலப். 1: 25)

2. ஒலி, ஒலித்தல்

உரையே பாடு சத்தம் ஒலி எனல் (பிங். 2107)

3. உரையாடலைக் கொண்ட நாடகம்

தென்குருகூர்த் தென்ன உரைக்கும் இயற்கும் இசைக்கும் சிகாமணியே (சடகோபர் அந்: 55)

**உரைச் சூத்திரம்:** *உரை இடையே உரைகாரர் இயற்றிய நூற்பா (இலக். கொத். 25)*

← *த. இ. பே. 131/14*

**உரைச் செய்யுள்:** *கவிதை வடிவில் அன்றிக் கட்டுரை, வாக்கிய நடையாலாகிய செய்யுள். மூவகைச் செய்யுள் நூற் செய்யுள்... உரைச் செய்யுள் என்பன (இலக். கொத். வேற். 13: 1-8)*

← *பெ. அ. 343/III*

**உரைத்தல்:** *ஒலித்தல்.*

உரை சங்கு ஒலியொடு உணராவகையில் (சூளா. 1076)

வண்டு உரைத்து மலர்ந்த அலர்ப்புண்ணலால் (தேம்பா. 1: 1: 75)

**உரைத்தொடர்:** *இது நாடகக் கூறு; நாடகத்தில் வரும் உரைநடை.*

*எடு:-*

இவள் போலும் நம் குலக்கோர் இருந்தெய்வம் இல்லை; ஆதலின் (சிலப். 24: 9–10)

*மற்றும் கானல்வரிக் கட்டுரை, ஆய்ச்: குரவை கருப்பம், வாழ்த்: காதையின் உரைப் பாட்டுமடை .*

← *சிலப். யாப். 290*

**உரை நடைப் பாடல்:** *பாட்டிற்குரிய எதுகை மோனையுடன் எழுதப்பட்ட உரைநடை; காப்பியங்களில் உரைநடையில் அமைந்த தொடர்.*

*எடு:-*

ஒருமொழி வைத்து உலகாண்ட சேரலாதற்குத் திகழ் ஒளி ஞாயிற்றுச் சோழன் மகள் ஈன்ற (சிலப். 29: (1)

உரைப்பாட்டுமடை – உரைச்செய்யுள் இடையிலே மடுத்தல்

(சிலப். 12. உரைப். மடை. அரும்)

நேரிசை ஆசிரியத்தால் அமைந்த உரைப்பாட்டு மடை

(சிலப். 12: 1– 74)

*கூத்து, உடுக்கடிப்பாட்டு, வில்லுப்பாட்டு இவைகளில் உரைப்பாட்டுப் பயிலப்படுகிறது.*

உரையும் பாடையும் விரவியும் வருமே (தண்டி. பொது. 11)

பாட்டுடைச் செய்யுள் - பல பாக்களோடு உரைப் பாட்டையும் இசைப்பாட்டையுமுடைய.. (சிலப். பதிகம். அடியார்க்.)

இஃது உரைப்பாட்டு; இதன் முன்னே மடுத்தலான் மடையாயிற்று (சிலப். 29: அரும்)

← *தே.நே. 12/I; த. க. க. 253/I; 107/II;*

*த. இ. பே. 133/14.* → உரைச் செய்யுள்

**உரைப்பாட்டு** = விருத்தம், தொகையறா, தொகையறவு, கட்டுரைநடை, உரைபெறு கட்டுரை, கட்டுரைச்செய்யுள், உரைச்செய்யுள்,தண்டகம். (சுலோகம்) (Prosaically written poetry, Rhetorical prose, prosaic poem, Blank verse, verse libre).

**உரைப்பாட்டு மடை:**
*உரையும், பாட்டும் மற்றும் உரைப்பாட்டும் இயல்பாடல்களின் ஊடே கலந்துவருவது.*
உரைப்பாட்டுமடை– உரைப்பாட்டை
நடுவேமடுத்தல் (சிலப். 12:72–4. அடியார்க்.)
உரைச்செய்யுளை இடையிலே மடுத்தல் (மேலது அரும்.)
*(மடுத்தல் - தேக்கியது)*
*எடு:-* 1) கடுங்கதிர்... இவளோ ... எனவே (சிலப்.12:1–74)
'இவளோ' என்ற உரை (சொல்) (அடி47) வந்தது.
2) குடப்பால்உரையா......வருவதொன்றுண்டு (சிலப்.17:(2)– (4)
3) குருவியோப்பியும்.......வளம் சுரக்கெனவே (சிலப் 24:1–20)
*← சி.யா. 240*

**உரைபெறுகட்டுரை:**
உரைபெறு கட்டுரை – இவை முற்கூறிய கட்டுரைச் செய்யுள்; 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள், 'உரைசால் அடிகள் அருள' (பதி. 87–8) என்றமையால், காப்பியங்கட்குச் சிறுபான்மை இவ்வுறுப்புக்களும் சில வருமெனக் கொள்க. என்னை? உரையும் பாடையும் விரவியும் வருமே (தண்டி. பொது. 11) என்பது அணி இயல் ஆகலின்' (சிலப்: உரைபெறு கட்டுரை. அடியார்க்.)

**உரையிடையிட்ட பாட்டு:** *பாட்டின் நடுவே உரைநடை பயில்வது.*
*எடு:- கலித்தொகை, பாடல் 56: 27 (எனவாங்கு)*
*பாடல் 64: 19 & 8 (எல்லா, ஏ எ எல்லா)*
*பாடல் 88:5 (கடியர் தமக்கு யார் சொல்லத்தக்கார் மாற்று)*
உரையிடை இட்ட பாட்டுடைச் செய்யுள் (சிலப். பதிகம். 87)
பாட்டும் உரையும் கலந்து வந்த காவியம் (மேலது. அரும்.)
*(செய்யுள் - இலக்கியம்; இங்கு காவியம்; பாட்டு - இசைப்பாட்டு)*

**உரையும் பாட்டும்:** *பாட்டிலும் கூத்திலும் இடையிடையே உரை வருவது உரைப்பாட்டு; உரை என்பது கூத்து மற்றும் பாடல் உறுப்பு. இது புனைந்துரை யாகவும் வரும்.*
உரையும் பாட்டும் உடையோர் சிலரே (புறம்: 27: 5)

**உரையும் பாட்டும் ஆட்டும்:** *உரை - புனைந்துரை; பாட்டு - இசைப்பாட்டு; ஆட்டு - கூத்து (நாடகம், நாட்டியம்).*
மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்
உரையும் பாட்டும் ஆட்டும் ... (மதுரைக். 615 – 16)

↑ குரவை முதலிய மக்கள் கூத்தில் உரை, பாட்டு, ஆடல் (இயல், இசை, நாடகம்) ஆகிய முத்தமிழும் விரவி வந்துள்ளது.

**உரைவகை நடை நான்கு:** *உரை வகைகள் நான்காகும்.*
*1) பொருள் குறிப்பு 2) செய்யுள் தொடர்*
*3) பொய்ம்மொழி 4) நகைமொழி*
பாட்டிடை வைத்த குறிப்பினானும் ... உரைவகை நடையே நான்கு எனமொழிப (தொல். பொ. 475)

**உரோ மண்டலி:** *நாட்டிய அவிநயங்கள் முப்பதனுள் ஒன்று.*
நிருத்தக்கை முப்பதாவன: சதுச்சிரம்... உரோ மண்டலி...
(சிலப். 3: 12 அடிக்.)

**உல்லோலம்:** *கூத்தில் இடம்பெறும் அங்கச் செய்கைகளுள் ஒன்று.* அங்கக்கிரியை பதினாறாவன: சரிகை... உல்லோலம்... என்பன
(சிலப். 3: 12 அடிக்.)

**உலக்கை:** = உலக்கைப்பாட்டு, வள்ளை, வள்ளைப் பாட்டு (Pestle song)
*தானியங்களை உரலில் இட்டுக் குத்தும்போது மகளிர் பாடும் பாடல்.*
உலக்கைப் பாட்டே வள்ளைப் பாட்டென்ப (பிங்க. 2094)
பறவைப் பேடுகள் உலக்கைப் பாட்டால்
(திருவள்ளுவ. மாலை. 5. உரை)
வெள்ளி விழுத்தொடி மென்கருப்பு உலக்கை (அகம். 286:1)
தொடிமாண் உலக்கை ஊழின்போக்கி (அகம். 393: 11)
குரைத்தொடி மழுகிய உலக்கை வயின் தோறு (பதிற். 24: 19)
அவல் எறி உலக்கை வாழைச் சேர்த்தி (பதிற். 29: 1)
குறுங்காழ் உலக்கை ஒச்சி... (பெரும். 97)
குற்று ஆனா உலக்கையான் (புறம். 22: 18)
தொடிமாண் உலக்கைப் பரூஉக் குற்று அரிசி (புறம். 399: 2)
பவள உலக்கை கையால் பற்றி (சிலப். 7: (20)
'தீங்கரும்பு நல்லுலக்கை' *முதலிய மூன்று பாடல் களும் வள்ளைப்பாட்டு (சிலப். 29: (26) (27)(28))*
கொடிபாடித் தேர்பாடிக் கொய்தண் தார் மாறன்
முடிபாடி முத்தாரம் பாடித் – தொடி உலக்கை
கைம்மனையில் ஓச்சப் பெறுவெனோ? யானும் ஓர்
அம்மனைக் காவல் உளேன் (முத்தொள்.)
இதை உரல்கண் இவ்வரிசி
எல்லாம் பெய்து கொல்யானைத்
தந்த உலக்கை தனை ஓச்சிச்
சலுக்கு முலுக்கெனக் குற்றீரே (கலிங். 526)
தணந்த மெலிவு தான்தீரத்
தடித்த உடல் வெம்பசி தீரப்
பிணந்தரு நாச்சியைப் பாடீரோ
பெருந்திரு வாட்டியைப் பாடீரோ (கலிங். 527)
*இவை முதல் 10 பாடல்கள் உலக்கைப்பாட்டு*
... நெல்லிடிக்கும்

கோற்றொடியார் குக்குவெனக்
கொஞ்சும் ஒலியினும் (பாரதி குயில்பாட்டு)
வள்ளி கதையைச் சொல்லி
முறத்திலே நெல்லை அள்ளி
பொன்குந்தாணியை நீ தள்ளி
குத்தண்டி உன்பாட்டைச் சொல்லி

**உலக்கைப்பாட்டு:** → உலக்கை

**உலா:** = போதரல், கொடுபோதல், பவனி, ஊர்வலம்.
உலாவரும் மன்னன் மற்றும் தெய்வங்களைப் புகழ்ந்து பல்பருவ நங்கையர் பாடுவது.

1. **ஊர்வலம்**

பின்னு முன்னும் எங்கணும் பெயர்ந்து வந்து எழுந்து உலாய் (சிலப். 29: (21): 1)
போதரல் கொடுபோதல் (திவா. 1596)
பவனி, உலாப்போதல் (திவா. 1597)
நாள் உலா எழுந்த கோள்வல் உளியம் (அகம். 81: 1)
எடு:- சாந்துப்பொட்டு தளதளங்க
சந்தனப்பொட்டு கமகமங்க
மதுரைக் கோபுரம் தெரியக் கட்டிய
மருதுபாண்டியர் வாரதப் பாரடி

2. **சிற்றிலக்கிய வகை**

கோவை உலா மடல் கூறி (திருப்பு. 48)
கலிவெண்பா உலாவாம் (வெண்பாப். செய்.50)

3. **கூத்தில் ஒருவித ஆட்டம்**

... பூசாண மாம் உலா ஒய்யாரம் அடம்பை (நீர. நி. 5: 12)
உலவு > உலா; முழவு > முழா; புழவு > புழா - மலம்புழா
← செ. ப. அ. 458; பெ. அக. 374/III; தமிழர் இசை. 529.

**உலாமடல்:**

கலிவெண்பாவில் அமைந்த ஒரு சிற்றிலக்கியம்
← (இலக். வி. 857)
கலிவெண்பா உலாவாம் (வெண்பா. செய். 50)
கோவை, உலாமடல் கூறி (திருப்பு. 48)

**உலாவி:** = சௌராட்டிரப்பண்

உலாவிராகம் சௌராட்டிரமே (பொருட். நி. 224)
← பெ. அ. 375/III

**உலோகக்கருவி:** = கஞ்சக்கருவி.
தாளக்கருவி வகைகளுள் ஒன்று; வெண்கலம் போன்ற உலோகத்தால் ஆகிய இசைக்கருவிகள்.
... நரம்புக்கருவி உலோகக் கருவி என ஐந்தாக (மத். 20 உரை)

**உலோலிதமுகம்:** பதினான்கு முக அவிநயங் களுள் ஒன்று. (ச. அ.)

**உவகைப்பறை:**
மகிழ்ச்சியைக் குறிக்கும் பறை, மங்கலப்பறை
துளியம் உவகைப்பறை எனச் சொல்ப (திவா. 1335)

**உவச்சகள்:** → உவைச்சர்

**உவச்சம்பணி:** மத்தளம் முதலியன கொட்டும் பணி.
நியதம் ஆராளிட்டு உவச்சப்பணி செய் (தெ.இ.க. 484 தகசொ. 98)

**உவச்சர்:** → உவைச்சர்

**உவச்சிகள்:** → உவைச்சர்

**உவச்சு:**

1. **மத்தளம்**

உவச்சுப் பறையும் கொட்டக் கடவதல்லன் (தெ. இ. க. 7: 456)

2. **சேகண்டி**

**உவச்சக்காணி:** = உவச்சகளன், உவச்ச விருத்தி.
உவச்சனுக்குக் கோயில் கொட்டு ஊழியத்திற்காக விடப்படும் நங்கை (மானியம்).
உவச்சக் காணியாக ஒரு உவச்சைக்கு
←செ. ப. அ. 462
(உவச்சு - உவைச்சர்)

**உவந்தோன் அவிநயம்:** உவந்தோன் அவிநயம் உரைக்கும் காலை, நிவந்தினிதாகிய கண்மலருடைமையும், இனிதியன்றஉள்ளமுடைமையும், முனிவின கன்ற முறுவன் நகை உடைமையும், இருக்கை யும் சேறலும் கானமும் பிறவும் ஒருங்குடனமைந்த குறிப்பிற்றன்றே (சிலப்:3:13. அடியார்க்.)

**உவைச்சர்:** = உகச்சு, உகச்சர்,உகச்சகள், உகைச்சர்,உவச்சர், உவச்சு, உவச்சகள், உவச்சிகள், உபசன்.

1. **இசைக்கலைஞருள் ஒருவர்.** கோவில் மணி அடிப்பவர்; கைம்மணிக் கலைஞர்; சேகண்டிக் கலைஞர்; சங்கு ஊதும் கலைஞர்.

உவச்சர்க்கு பூதி ஆதித்த (தெ. இ. க. 8: 629)
உகச்சகள் தலைப்பறை ஒன்றும் மத்தளி இரண்டும் (மேலது. 3: 128)
உகைச்சர்களுக்கு நிலம் (மேலது. 17: 243)
உவச்ச கட் கைங்கலம் (TAS, 111, P. c03 - 05)
உவச்க உட்டு ஆள் கொண்டு கொட்டுவாராக (தெ. இ. க. 7· 499)
... உவச்சிகள் சேகண்டிகைச் செய்க்கு (தெ. இ. க. 8 639)
பழம்படி சங்கூதும் உவச்சர்களிருவருமேய் புது நிவந்தமான

*காளம் இரண்டு சங்கிரண்டனோடும் ஊதுவதாக*
*(மேலது. 13 17)*
*உவைச்சன்* *(மேலது. 2· 275)*
*உபசன்பர் அசு உறை கொட்டு பிதோன்* (E. E. I. 329)
*கம்பர் உவச்சர் பிரிவைச் சேர்ந்தவர்.*
சோழநாட்டுத் திருவழுந்தூர் உவச்சன்
*(கம்ப. சிறப். பாயி. பாடபேதம்)*

**2. பூசாரி சாதியான்:** *இவ்வூர்களின் கொல்லை நிலங்களில் உவச்சர்களுக்கு நிலங் கலந்த வண்ணம் இரண்டாயிரங்குழி*
*(தெ. இ. க. 17. 243)*

← *செ. ப. அ. 462; பெஅ. 391/III; த. க. சொ. 84, 98, 99/I*

## உழத்திப் பாட்டு:

*உழவர் பாட்டு; சிந்தும் விருத்தமுமாக அமைவது. சிற்றிலக்கிய வகைமையுள் ஒன்று.*
*உழவுத்தொழிலாகிய உழுதல், நீர்பாய்ச்சுதல், கதிரடித்தல் முதலிய தொழில்களைச் செய்யும்போது பாடும் தொழிற்பாட்டு வகை.*
வெட்சி மலர் புனைய வெள்வாள் உழத்தியும் (சிலப். 12: (13)
தொடுப்போர் உழவர் ஓதைப் பாணியும் (சிலப். 27: 230)
புரவலர் கூறி அவள் வாழிய என்று... உழத்திப் பாட்டே
(பன்னிரு. பாட். 216)
↑ பிற்காலத்தில் பள்ளு இலக்கியமாக உழத்திப்பாட்டு விரிவு பெற்றுள்ளது.
ஆற்றுவெள்ளம் நாளை வரத்தோற்றுதே குறி – மலை
யாளமின்னல் ஈழமின்னல் சூழ மின்னுதே (முக். பள்ளு. 35)
← *பெ. அ. 407/III; த. இ. பே. 36-37,16; செ. ப. அ. 466.*

## உழவர் ஓதைப்பாணி:

= மருதப்பாணி, காமரம், சுத்ததன்யாசி.
தொடுப்போர் உழவர் ஓதைப்பாணியும் (நீர்ப். 27: 230)
*மருதப் பண்ணான கோடிப்பாலை (கரகரப்பிரியா) யின் தலையாய திறம். ச க[1] ம[1]ப நி[1] என்ற சுர நிரல் கொண்டது. நிலத்தால், தொழிலால் பண் பெயர் பெற்றது.* ← *த. க. க 255/I*

## உழிஞை:

**1. தாவர வகையுள் ஒன்று; சிறுபூளை, முடக்கொற்றான்**
உழிஞை, சிறுபூளை என உரைத்தனரே (திவா. 755)

**2.பன்னிரு புறத்திணையுள் ஒன்று; மதிலைக் கைப் பற்றும் போது பாடுவது; உழிஞைத் திணைக்குரிய பாடல்.**
உழிஞைத்தானே மருதத்துப் புறனே (தொ. பொ. 66)
பணியாமரபின் உழிஞை பாட (பதிற். 46: 6)

**3. ஒருபண்:** *பயிரவி*

## உழிஞை மாலை:

மதிலைக் கைப்பற்றும் போது பாடும் பாடல் (தொன். 283 உரை)
→ உழிஞை

## உழை:

**1) இடம்**
உழை தங்கட் சென்றார்க்கு (நாலடி. 167)
பெண்ணை வேலி உழைகண்சீறூர் (நற். 392: 6)
சிறப்புச் செய்து உழையராய்... (கலித். 25: 15)
உழைப்புலிக் கொடித்தேர் உரவோன் கொற்றமொடு
(சிலப். 10: 142)
புலியை இடத்திலே உடைய கொடி (மேலது. அரும்.)

**2. பூ இதழ்**
வால் உழை எருக்கமும் (கல்லா. 19)

**3. பாணாசுரன் மகள்:** உழை > உஷை
தன் மகள் உழை காரணமாக வாணன் (அடியார்க். 6: 54 – 5)

**4. உஷை** - *சூரியனின் மனைவி (மற்றொரு மனைவி - பிரதிம் உஷா).*
உருக்கொள் சாயையும் உழையும் (பாரத. சாம்பவ. 34)

**5. அருகில், மருங்கில் (byside)**
அருந்ததி அன்னாளை உழையதாக உருட்டுவோனாக
(சிலப். 1: 60 – 68 அடியார்க்.)
உழையோர் தன்னினும் பெருஞ்சாயலரே (புறம். 262: 6)
படம் புகு மிலேச்சர் உழையர் ஆக (முல்லை. 66)
உழைக்கடல் வழங்கலும் உரியன் (அகம். 190 – 9)
அவனுழை இருந்த தண்டமிழ்ச் சாத்தன் (சிலப். பதிகம். 10)
அடிகள் உழை வந்த சாத்தன் (மேலது. 87 அரும்.)
உழை நின்று புகழ்ந்து (சிலப். 5: 128 அடியார்க்.)

**6. ஏழு இசைச்சுரங்களில் ஒன்று** - *உழைச்சுரம் - 'ம' - மத்திமம்.*
உழைச் சுரும்பு (பரிபா. 11: 127)
மேலது உழை கீழது கைக்கிளை (சிலப். 3: 80)
தாரத்து உழை தோன்றப் பாலையாழ் (பஞ்சமரபு. 22)
உழையே மாறும் யாழில் ஓர் நரம்பும்
அருகிடனதுவும் அறைதற்கு உரித்தே (திவா. 2252)
↑ ஏறுநிரலில் இசையில் பொருந்தும் இளி(ப)யைப் போன்று இறங்குநிரலில் 'ச' வோடு(ம) பொருந்துவதால் இசைக்குப் பொருந்துதலில் இளிபோன்று உடன் இருத்தலால் '**உழை**' என்று பெயர்.

**7. அணுக்கத்துள்ளோர்**
... உழையோர் இல்லா
ஒரு தனி கண்டு... (சிலப். 16: 95 – 96)
உழை பேணாக் கூளன் (திருப்புகழ். 109)

8.*பாலையாழ், உழைப்பாலை, உழைப்பண், அரும்பாலை, சங்கராபரணம்.*
வால் உழை எருக்கில் உழை பாடியும் (கல்லா. 54: 2)
↑ எருக்கு – சிவன் அணியும் மலர்; சங்கராபரணம் – சிவனுக்குரிய பாலைநிலப் பெரும்பண் (பாலையாழ்)
→ பாலையாழ்; உழைகுரலாயது அரும்பாலை.

## உழைஒத்து:

= மத்திம சுருதி, மத்தியம சுருதி, உழைச்சுருதி
*சமன் குரலும், சமன் உழையும் (ச, ம) சேர்ந்து ஒலிக்குமாயின் அது உழை ஒத்து. அதாவது உழை (ம) ஆதார சட்சமாகும். தந்திகள் ச ம ச் என்று ஒத்துக் கூட்டப்படுகின்றன. இந்த ஒத்துக் கூட்டலுக்கே தாரம் (நிசாதம்) வரைக்கும் இசைக்கப்படும் சில*

நாட்டார் பண்கள் பாடப்படுகின்றன.
எடு:- குறிஞ்சி, நாதநாமக்கிரியை, புன்னாகவராளி, செஞ்சுருட்டி.
"பெரும்பாலும் (நாட்டார்) பாடல்கள் மத்தியம சுருதியிலும் வர்ஜ ராகங்களிலும் அமைந்திருக்கும்" (இ. இ. பக். 94)
← த. க. க. 259/ஐ; தெ. இ. அ. 17/III

## உழை ஒத்துப் பண்கள்:

உழை ஒத்துக்குப் பாடப்படும் பண்கள்.
சான்று:– நவரோசு, இந்தளம், செஞ்சுருட்டி, நாத நாமக்கிரியை, புன்னாகவராளி, சைந்தவி, குறிஞ்சி முதலியன.
(உழை ஒத்து- மத்திம சுருதி)

...உழைகுரலாகச் செம்பாலைக்கு உழைபெய்தும்..... (சிலப். 3:90 உரை)
→ உழைகுரலாகச் செம்பாலை

## உழைச்சுருதி: → உழைஒத்து

## உழை பிறப்பிக்கும் செம்பாலை:

ஏழன் முறை என்ற இணைமுறையில் (ச - பமுறை) ஏழாவது. ஏழாவது சுரமாக மென் தார (நி1) சுரத்திலிருந்து தொடுத்துச் சென்றால் கிடைப்பது

## உழைகுரலாகச் செம்பாலை:

இறங்கு நிரல் என்ற இடமுறைத்திரிபில் (Anticlockwise rotation) மெல்உழை (ம) யைக் கொண்டு பண் பெயர்க்கக் கிடைப்பது செம்பாலை (அரிகாம்போதி).
அடிப்படைப் பாலையாவது: வலமுறைத் திரிபில் செம்பாலை; இடமுறைத் திரிபில் அரும்பாலை.

| | | * | | * | * | | * | | * | | * | * |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அரும்பாலை | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ | ச் |
| செம்பாலை | | ப | | த$^{2}$ | நி$^{1}$ | | ச | | ரி$^{2}$ | | க$^{2}$ | ம$^{1}$ |

உழை குரலாகச் செம்பாலை... (சிலப். 3: 90உரை.)

## உழைகுரலாகச் செம்பாலைக்கு உழை பெய்தல்:

இடமுறை என்ற இறங்கு நிரல் (அவரோகணம்) முறையில் அரும்பாலையின் உழைகுரலாகச் செம்பாலை வரும். அச்செம்பாலைக்கு உழை (ம$^{2}$) பெய்தால் ' வாசஸ்பதி' என்ற பண் வரும்.
செம்பாலை
(அரிகாம்போதி) - சரி$^{2}$க$^{2}$ **ம$^{1}$** பத$^{2}$ நி$^{1}$
வாசஸ்பதி - சரி$^{2}$க$^{2}$ **ம$^{2}$** பத$^{2}$ நி$^{1}$

செம்பாலை (அரிகாம்போதி) என்ற அடிப்படைப் பாலை
தாரத்துள் உழையும்... தம்மிற் பிறக்குந் தகுதிய வென்ப (பிங். 1411)
சிலப்பதிகார வேனிற்காதை (8: 39 - 41) க்கான அரும் பதவுரை:
தாரத்துள் தோன்றும் உழை - நி$^{1}$ - ம$^{1}$
உழையில் குரல் பிறக்கும் - ம$^{1}$ - ச
குரலுள் இளி பிறக்கும் - ச - ப
இளியுள் துத்தம் பிறக்கும் - ப - ரி$^{2}$
துத்தத்துள் விளரி பிறக்கும் - ரி$^{2}$ - த$^{2}$

## உழை குரலாயது அரும்பாலை:

தமிழிசையின் தலைமைப்பாலையான செம்பாலையின் உழை குரலாகப் பண் பெயர்த்தால் கிடைப்பது அரும்பாலை

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
| அரும்பாலை | ப | | த$^{2}$ | | நி$^{2}$ | ச | | ரி$^{2}$ | | க$^{2}$ | ம$^{1}$ | |

செம்பாலை (அரிகாம்போதி) - ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ ப த$^{2}$ நி$^{1}$
அரும்பாலை (சங்கராபரணம்) - ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ ப த$^{2}$ நி$^{2}$
(உழை - மத்திம சுரம்) ...உழை குரலாயது அரும்பாலை (சிலப். 3;(13) அடியார்க்.)

*விளரியுள் கைக்கிளை பிறக்கும்* - த² - க²
**ச ரி² க² ம¹ப த² நி¹** – செம்பாலை
↑ தாரத்து உழை தோன்றப் பாலையாழ் (பஞ்சமரபு.22)
**செம்பாலையை இங்கு பாலையாழ் என்றது அடிப்படைப் பாலையாகிய செம்பாலையின் சிறப்பு கருதி.**

## உழைமுதல் கைக்கிளை இறுதியாக:
இது சகோட யாழில் புரி நரம்பு (மெட்டு) அமைந்திருந்த முறை.
*ம¹ ம² ப த¹ த² நி¹ நி² (கீழ்த்தானம்)*

*ச ரி¹ ரி² க¹ க² ம¹ ம² ப த¹ த² நி¹ நி²* (நடுத்தானம்)

*ச ரி¹ ரி² க¹ க²* (மேல்த்தானம்)

*ஆக 24 புரி நரம்புகள் (இது பன்னிரு தான சுரமுறை). இன்று தம்புரா மீட்டுவதுபோல் பண்டை நாளில் யாழ் நட்டுக் குத்தலாக வைத்து வாசிக்கப்பட்டது. எனவே கீழ்த்தானத்து உழை ம¹ (மந்தர சுத்த மத்திமம்) விற்கான புரிநரம்பு யாழில் மேல்பகுதியில் கட்டப் பட்டிருந்தது.* எனவே,
**மேலது உழை கீழது கைக்கிளை (சிலப். 3: 80)**
**உழை முதல் கைக்கிளை இறுதியாக மெலிவு நான்கும், சமம் ஏழும் வலிவு மூன்றும் (மேலது. ஈருரை)**

*ம ப த நி   ச ரி க ம ப த நி   ச ரி க*

**ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி (சிலப். 3: 70)**
*(இது ஏழு சுரமுறை)*
**உழை முதல் கைக்கிளை இறுவாய்க்கட்டி (சிலப். 13: 109)**
**வலிவிற்கெல்லை வன்கைக்கிளையே (சிலப். 8: 43 – 4அரும்)**
*(வலிவு) வன்கைக்கிளை (தாரஸ்தாயி அந்தர காந்தாரம்) - க்² ; வலிவு - வலிவு மண்டிலம் (தாரஸ்தாயி)*
**உழை குரலாகவும் கைக்கிளை தாரமாகவும் நரம்புகளை நிறுத்தி என்க (சிலப். 13. 109 அடியார்க்.)**
*(குரலாகவும் - முதல் சுரமாகவும்; தாரமாகவும் - இறுதிச் சுரமாகவும்)*
*← யாழ்நூல் 3ஆம் பதிப்பு - நூலைப்பற்றி ஆசிரியர் கட்டுரை;* My life, My Music - *பண்டிட் ரவிசங்கர்.*

## உழையுளி:
*உழை - மத்திம சுரம்*
*இசையின் ஏழு சுர நரம்புகளில் நான்காம் சுரம்.*
**மேலது உழையுளி கீழது கைக்கிளை (சிலப். 3. 80)**
**உழையுளி என்று உழைக்குப் பெயர் (சிலப். 17: (14)அரும்)**

## உழைவு:
*யாழிசையின் உள்ளோசை (கமகம்).*
**உழைவும் நுணுக்கமும் உள்ளோசையாகும் (திவா. 2165)**
*← செ. ப. அ. 470*

## உள்துளை:
*உள்துளையுள்ள இசைக்கருவிகள்.*
**குழல், கதிர், தூம்பு, நாழி, புரை, வேய், வேணு, சுரை, நாளம் (சூடா. 6)**

## உள்வரி ஆடல்:
*வருத்தம் அறிந்து தன் வடிவு கரந்து சிலதியர் வடிவுடன் தமர் அறியாமல் வந்து நடித்த நடிப்பு.*
**ஒரு தனி வந்த உள்வரி ஆடலும் (சிலப். 8: 89)**
**உள்வரி - வடிவு மறைத்தல் (மேலது: அரும்)**
*அதாவது தன் வடிவு மறைத்தல்.*
→ உள்வரிக்கோலம்

## உள்வரிக் கோலம்:
= கோலச்சாரி, கிருத்திரிம வேடம், பொய்உரு.
*வரிக்கூத்துள் ஒன்று; வேற்றுருக் கொண்டு ஆடுதல்; மாறுவேட ஆடல்.*
**பேடிப் பெண் கொண்டு ஆடுகை கடுப்ப (அகம். 206: 2)**
**உள்வரிக் கோலத்து ஊறுதுணை தேடி (சிலப். 5: 216)**
**உள்வரிக் கொண்ட... மணிமேகலை (மணிமே. 1(:29)**
**ஒருதனி வந்த உள் வரி ஆடலும் (சிலப். 8: 89)**
**உள்வரிக் கோலத்து உறுதுணை தேடி (சிலப். 5: 216)**
*வேட்டுவ வரியுள் வேட்டுவ மகள் சாலினி கொற்றவை உருக்கொண்டு ஆடக் காண்கிறோம். இது வரிக் கூத்தினுள் ஒன்றான உள்வரியின் பாற்படும்.*
**உள்வரி என்பது உணர்த்துங் காலை மண்டலமாக்கள் பிறிதோர் உருவம் கொண்டு கொள்ளாதும் ஆடுதற் குரித்தே (சிலப். 8: 84 - 89 அடியார்க். மேற்.)**
**உள்வரி என்றது வேற்று உருக்கொண்டு நடித்தல் (மேலது. அடியார்க்.)**
**உள்வரி - வடிவு மறைத்தல் (மேலது. அரும்.)**
**உள்வரி - வேற்று உருக்கொள்ளல் (மேலது. நாட்.)**
*கோலம் - வேடம்; உள்வரி - மாறுவேடம்* (Disguise)
**உள்வரிக்கோலம் - கிருத்திரிம வேடம் (சிலப். 5: 216. அரும்)**
*← தே.நே. 54/13*

## உள்வரிப் பாணி:
= உள்வரி வாழ்த்து.
*உள்வரிக் கோலத்தில் பாடும் பாட்டு.*
**உள்வரிப் பாணி ஒன்று உற்று (சிலப். 17:ஆடுநர்ப் புகழ்தல்)**
**உள்வரி வாழ்த்து என்பது பிறிதோர் உருவங்கொண்டும் கொள்ளாதும்... வாழ்த்துவது (மேலது. அரும்)**
**உள்வரியாகிய ஒரு பாட்டினார் என்க (மேலது. அடியார்க்.)**
*ஆய்ச்சியர் குரவையுள் 'கோவா மலையாரம்' என்ற பாடலில் மாலவன் பாண்டியனாகவும் 'பொன் இமயக் கோட்புலி' என்ற பாடலில் மாலவன் சோழனாகவும் 'முந்நீரினுள் புக்கு' என்ற பாடலில் மாலவன் சேரனாகவும் உருக்கொண்டமை கூறுதலில் இவை உள்வரி வாழ்த்து. பாணி - பாட்டு; உள்வரி - வேற்றுறுக் கொண்டு நடிப்பது.*
*← த. க. க. 259/1.;* → **உள்வரிக் கோலம்**

## உள்வரி வாழ்த்து:
→ உள்வரிப்பாணி

## உள்ளாளப் பாட்டு:
→ உள்ளாளம்

**உள்ளாளம்:** = உளாளம், உள்ளாளனம்

**1.** *மூலாதாரத்திலிருந்து கிளம்பும் நாதத்தை பிரம மந்திரம் வரை எடுத்துச் சென்று இசைக்கும் ஒரு பாடல் நெறி.*

இடையினோடு ஏனைப் பிங்கல இயக்கம்...
நடைபெற இசைக்கும் உள்ளாளம் (திருவிளை. இசைவாது 39/2185)
கந்தருவர் உள்ளாளப் பாடல் உணர் (சீவக. 658. உரை மேற். இசைமரபு)

→ கனம் பாடுதல்

**2. கூத்தின் விகற்பம்:** *சின்னஞ்சிறிய அழகுடைய அசைவு. இது தேசிக்குரிய கால்களுள் ஒன்று (சிலப். 3: 16அடிக்.)*

**3. கமகம்:** *சுரங்களின் சின்னஞ்சிறிய அசைவு.*

← *செ. ப. அ. 473; பெ. அக. 435/III*

**உள்ளுறை உவமம்:** = உள்ளுறை

*மறைமுகமாகத் தோன்றும் குறிப்புப் பொருள்* (connotation) *(புதை நிலைப் பொருள்). உள்ளுறை உவமமாவது கருப்பொருட்களுள் தெய்வம் நீங்கிய கருப்பொருட்களை (மா, மரம், புள், யாழ் முதலியன) இடமாகக் கொண்டு வரும்.*

உடனுறை உவமம் கட்டு நகை சிறப்பென்று
கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே (தொல். பொருளியல். 48)
உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத்
தள்ளாது ஆகுந் திணை உணர் வகையே (அகத். நூ. 46)
உள்ளறை தெய்வம் ஒழிந்ததை நிலம் எனக்
கொள்ளும் என்ப குறி அறிந்தோரே (அகத். நூ. 47)
உள்ளுறுத்து இதனொடு ஒத்துப் பொருள்முடிகென
உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம் (அகத்.நூ. 48)
தன்பார்ப்புத் தின்னும் அன்பின் முதலையொடு
வென்பூம் பொய்கைத்து அவனூரென்ப (நச்சர்.எடு:-)

← *புதிய ஆராய்ச்சி ஏப்ரல். 2009 பக். 65*

**உள்ளோசை:** = உள்ளாளம், கரணம், எழால், எழீஇ, கமகம் (embellishment, Graces, deflection of note, glide, trill, swings, shakes).

*ஒரு சுரத்தின் துடிப்பைக் கூட்டி அல்லது குறைத்து இசை இனிமை என்ற அழகு செய்வது. மற்றும் பல்வேறு முறைகளில் சுரங்களை அசைப்பதாலும் வழுக்குதலாலும், இரட்டுதலாலும் உள்ளோசை உருவாக்கப்படும். இவ்வாறு பல்வகை இசைத் தொழில்களால் (இசைக் கரணங்கள்) தோன்றும் நுண் ஒலிகளே உள்ளோசை யாகும். இவ் உள்ளோசைகளால் உருப்பெறுவதே பண்.*

முரல்வு நரல்வு, தெளிர், நெளிர், விழைவு நுணுக்கமும் உள்ளோசை என்ப (பிங்க. 1436)

← *ப. இ. இ. 219*

**உளகு:** *யாழின் தண்டு,* (stem of yal)

உளகு புரையு முன்கை அவளொடும் (சேதுபு. தருமம். 22)

← *பெ. அக. 441/III*

**உளர்தல்:** 1. தடவுதல்

*உளர் > உளர்வு - தடவு; உளர்தல் - தடவுதல்.*

"வல் வில்ஞாண் உளர் தீயே"

இதிலிருந்து வில் போன்ற 'Bow', வழக்கில் இருந் *துள்ளது அறியலாம் .*

எரிமலர்ப் பவளச் செவ்வாய் இன்நரம்பு உளர (சீவக. 662)

**2. யாழ் (நரம்பு) முதலிய வாசித்தல்**

மென்மொழி மேவலர் இன்னரம்பு உளர (முருகு. 142)
கை உளர்வின் யாழிசை கொண்ட இன வண்டு (கலித். 131: 8 – 9)

**3. ஒலித்தல்**

வண்டு உளர் கோதை மாதர் (கம்ப. 1: 17: 9)

**4. குரவை (குலவை) யிடல்** *(ச. அ.)*

← *செ. ப. அ. 476*

**உளர:** *தடவ, யாழின் நரம்பைத் தடவ.*

எரிமலர்ப் பவளச் செவ்வாய் இன் நரம்புளர (சீவக. 662)
நரம்புளர - யாழின் நரம்பைத் தடவ (அடிக்.)

**உளி (உழி):** இடம்

உழை உளி (உழையுளி) (சிலப். 3: 80)

'உழையிளி' என்னும் பாடம் வழுப்பட்டதாகல் வேண்டும் ; ஈண்டு இளி என்பதற்குப் பொருளொன்று மின்மையும் பழைய உரைகளில் இச்சொல் வறிதே விடப்பட்டிருத்தலும் காண்க (மேலது. நாட். உரை.)

உழையுளி என்று உழைக்குப் பெயர் (உவேசா. சிலம்பு. 440)

**உளை:** *ஒலி, எடுத்தல் ஓசை* (Hightone voice)

ஆண்பான்... இசையும் சத்த ஒலியும் உளை எனலாகும் (பிங்க. 3211)

**உளைத்தல்:**

**1. யாழ் ஒலித்தல்**

**2. ஒலித்தல்**

விளை உளைப்ப நடப்பாய் (திருமாளிகை: திருவிசை. 3: 7)
உவப்பின்ப மோடு உளைக்கும் ஓதையும் (மணிமே. 6: 111)

**உற்கடிதம்:**

**1. ஐவகை நாட்டியப் பாதங்களுள் ஒன்று.**

ஐவகைப் பாதமாவன: சமநிலை, உற்கடிதம், சஞ்சாரம், காஞ்சிரம், குஞ்சிதம் (சிலப். பக். 81 அடிக்குறிப்பு)

**2. ஐவகைத்தாளத்துள் (பஞ்சதாளம்) ஒன்று**

*(பரத. தாள. 15)*

← *செ. ப. அ. 478*

**உற்கிரகம்:** *இசைக்கிளை ஐந்தனுள் ஒன்று.*

*(பெரியபு. ஆனாய. 26 உரை)*

**உற்சங்கம்:** *உற்சங்கக் கை; இணைக்கை வகையுள் ஒன்று.* *(பரத. பாவ. 46)*

இணைக்கை பதினைந்து வகை... உற்சங்கம், புட்படம்... என்றிவை - ஒருவகை பிறைக்கையாகக் கொண்டு... என்றாராகலின் (சிலப். 3: 18 உரை)

**உற்சவமூர்த்தி:** → எழுந்தருளும் திருமேனி

**உற்பணம்:** *நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று.* *(சிலப். 3: 13 அடிக்.)*

**உற்பவ மாலை:** *திருமால் பிறப்புப் பத்தினையும் ஆசிரிய விருத்தத்தால் கூறும் சிற்றிலக்கிய வகைமை* *(தொன். 283உரை)*
← *செ. ப. அ. 479*

**உற்பவ முத்திரை:** *கை முத்திரை வகையுள் ஒன்று.* (A Hand pose).

**உற:** *அமைய.*
*பண்ணமர் கோவில் பாங்குறச் செய்வித்து*
*(தெ. இ. க. 14, 45. த. க. சொ. 102)*

**உறங்கினோன் அவிநயம்:** துஞ்சாநின்றோன் அவிநயம் துணியின், எஞ்சுதலின்றி யிருபுடை மருங்கு, மலர்ந்துங் கவிழ்ந்தும் வருபடை இயற்றியும், அலர்ந்து யிர்ப்புடைய வாற்றலுமாகும் (சிலப். 3: 13 அடியார்க்.)

**உறழ்:** *ஒப்பிடு; பெருக்கு எ-டு: உறழ்கலி.*
*உறழ்தரம்* (comparitive degree) *(தே. நே. 210/13)*

**உறழ்கலி:**
**1. (மாறுபட்ட) ஒப்பிட்டுப் பாடப்படும் பாடல்.**
ஒப்பு: உறழ்கலி – மாறுபட்ட கலிப்பா
உறழ்ச்சி வாரத்து (தொ. எ. 102)
செறுநர்த் தேய்த்த செல் உறழ் தடக்கை (முருகு. 5)

**2. கலிப்பா வகை**
கூற்றும் மாற்றமும் இடை இடை மிடைந்தும்
போக்கு இன்றி ஆகல் உறழ்கலிக்கு இயல்பே (தொ. பொ. 458)
*வினாவிடை அமைப்பில் அமைந்த பாடல்:*
*எடு:- எதிர்ச்சிந்து, தர்க்கதரு, சிங்கன்சிங்கி பாடல், ஏசல், ஏசல்பாட்டு, இருசொல் அலங்காரம் போல்வன.*
தண்மதி ஒண்முகப் பெண்மணியே – உன்னைத்
தான் கொண்ட நாயகர் ஆரேடி – *(தோழியின் வினா)*
அண்மையில் பொன் அணி அம்பலத்தாடல் செய்
ஐயரமுதர் அழகரடி – *(தலைவியின் விடை)*
(திருவருட்பா – 1872)

**3. உரையாடல் பாட்டு**
*எடு:- நிறைகடல் முகந்துராய், மன்மிசை அவிழ்துழாய் என்ற 6, 8 ஆகிய பரிபாடல்கள். கலித்தொகையில் 32 உரையாடற் பாடல்கள் உள்ளன. கலித்தொகை 60, 87, 91, 113, 114 என்பன உறழ்கலி என நச்சினார்க்கினியர் அடையாளங் கண்டுள்ளார்.*
*(ப. த. நா. 262)*
யாரிவன் என் கூந்தல்... *கலித். 89 இளம். எடுத்துக்காட்டு. சிலம்பின் வழக்குரை காதை, உறழ்கலிப்பா வகையில் அமைந்தது.*
↑ பண்டைய **'அம்மானைவரி'**, **'திருச்சாழல்'** முதல் இன்றைய திரைப்பட **'இரட்டையர் பாடல்'** (duet) (**'ஊரார் உறங்கையிலே உற்றாரும் தூங்கையிலே'**, **' யானையைப் பிடித்து ஒரு பானைக்குள் அடைத்து வைத்து'** என வரும் பாடல்கள்) முதலியன பண்டைய உறழ்கலி வகையைச் சேர்ந்த பாடல்களே.

**உறழ்தல்:** *தாண்டு - தாட்டு வரிசை என்ற இசைப்பயிற்சி.*
*எண்வகை இசைத்தொழில் (கரணம்) களுள் ஒன்று.*
வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல் (சிலப். 7: 12)
எட்டுவகையின் இசைக்கரணத்து (சிலப். 7: 15)
வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும் (பொருந. 23)
ஒன்று இடையிட்டும் இரண்டு இடையிட்டும் ஆராய்தல் (சிலப். 7:(1) 12_16 அரும்.)
*ஒன்று இடையிடல்: சகம, ரிமப*
*இரண்டு இடையிடல்: சமப, ரிபத*

**உறழ்ப்பு:** 1. பாலை யாழ்த்திறம்; காந்தார பஞ்சமம்
உறழ்ப்பு நெருக்கமோர் பாலையாழ்த் திறம் (நா. தீ. 1042)
காந்தார பஞ்சமம் உறழ்ப்புக் காந்தார பஞ்சமமாகும் (பிங். 1387)
**2. ஒருவகை இன்னிசை** ← *செ. ப. அ. 482*

**உறழ்பொருள்:** உறழ்பொருளாவது ஒப்புமை கூறாது மாறுபடக் கூறப்படுவது. (தொல். சொல். 16 சேனா.)
செப்பினும் வினாவினும் சினை முதல் கிளவிக்கு
அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே (தொ. சொ. 16)

**உறிக்கா:** *கா என்பது காவடி. இசைக்கருவிகளைப் பையிலிட்டு காவடியில் தூக்கிச் செல்வது பண்டைய மரபு. உறிக்கா - உறிகளைச் சுமக்கும் காவடி*
உறிக்கா ஊர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல் (பெரும். 171)
கண்ணறுத்தியற்றிய தூம்பொடு சுருக்கிக்
காவில் தகைத்த துறைகூடு கலப்பையர் (பதிற். 41: 4–5)
மறித்தோள் அவிநயத்து உறிக்கா வாளரொடு (சிலப். 15: 205)
தோளிலே உறிகட்டின காவையுடைய... (மேலது. அடியார்க்.)

**உறுஒத்து:** *உறுசுருதி*
*ஒவ்வொருவருக்கும் உரிய குரல் அளவு; சுருதி அளவு* (Scale)
←*மத்தளவி. பக்.25*

ஒருமுக எழினி: ஒருபக்கத்திலிருந்து இயங்கும் நாடக அரங்கின்திரை.
ஒருமுக எழினியும் பொருமுக எழினியும்
கரந்துவரல் எழினியும் புரிந்துடன் வகுத்தாங்கு
(சிலப். 3:109– 10. அடியார்க்.)
ஒருமுகம் - ஒருபக்கம்

**உறுப்பு:** 1. பாலை யாழ்த்திறத்துள் ஒன்று.
அராகம் நேர்திறம் உறுப்பு குறுங்கலி...
ஏழும் பாலை யாழ்த்திறம் என்ப (திவா. 2142)
பையுள் உறுப்பின் பண்ணுப் பெயர்த்தாங்கு (பதிற். 65:15)
2. அடைவு (அடவு)
... கொட்டி கொடு விடையோன் ஆடிற்று. அதற்கு உறுப்பு ஒட்டிய நான்காமெனல் என்பவாகலின் என்க. இவற்றை இக்காலத்தார் அடவு அல்லது அடைவு என்று வழங்குப (கல்லா. 19: 8–10 உரை)

**உறுபு:** பாலையாழ்த் திறத்துள் ஒன்று.
→ உறுப்பு

**உறுமி:** = உறுமை, உறுமிமேளம், உறுமிக்கொட்டு, உறுவிமேளம்.
தோற்கருவிகளுள் ஒன்று. வளைந்த குச்சிகொண்டு ஒரு பக்கத்தில் தேய்ப்பதால் எழும் உறுமல் ஓசைகொண்ட மேளம்.
உறுமுதல் - முறுமுறுத்தல்
கம்பலி உறுமை தக்கை... ஆர்த்த (கம்ப. 6: 21: 51)
← பெ. அ. 485/III ; செ. ப. அ. 485

**உறுமிக்கொட்டு, உறுமிமேளம், உறுமை, உறுவி மேளம்:**
→ உறுமி

**உறை:** பை, கலப்பை. இசைக்கருவிகளுக்கு இடப்படும் போர்வை, (பொதிப்பை)
கண்ணறுத்தியற்றிய தூம்பொடு சுருக்கிக்
காவில் தகைத்த துறை கூடு கலப்பையர் (பதிற். 41: 4–5)
யாழின் உறையினை எடுத்தாள் (குடும்பவிளக்கு. 1)

**உன்மத்த நடனம்:** உன் மத்தநிலையில் ஆடும் நடனம். போதையின் வசப்பட்டவன் போல் ஆடும் நடனம்.
(உன்மத்தை > ஊமத்தை)
திருநள்ளாற்றில் தியாகராசப் பெருமான் ஆடும் கூத்து.
(சிவ. மஞ்ச. ப. 14)
← பெ. அ. 494/III.

**உன்னக்கை:** = உன்னம், உன்னநிலை, உன்னை நிலை, திரிசூலக்கை, மூவிலைவேல் கை.
ஒற்றைக்கை முப்பத்து மூன்றுள் ஒன்று.
சிறுவிரலும் பெருவிரலும் தம்முட் கூட ஒழிந்த மூன்று விரலும் விட்டு நிமிர்வது உன்னை? உன்ன நிலையே உணருங் காலைப் பெருவிரல் சிறுவிரல் என்றிவை இணைய, வருமுறை மூன்று மலர்ந்து நிமிர்வதுவே (சிலப். 3:18அடியார்க்.)
ஒரு கனிட்டிகை அங்குட்டம் வளைந்து விரலை நீட்டில் திரிசூலக்கை (அவிநயதர்ப்பணம். செய். 76)
உன்னம் - மூவிலை வேல் (திரிசூலம்).

**உன்னநிலை, உன்னைநிலை, உன்னம்:** →
உன்னக்கை

# ஊ

**ஊ:** ஏழிசையுள் மூன்றாவதாகிய கைக்கிளை என்னும் இசைச் சுரத்தினைக் குறிக்கும் அடையாளம்.

ஆ ஈ ஊ ... ஏழிசைக்குரிய (திவா. 2149)

தற்காலம் இது காந்தாரம் என்று அழைக்கப் படுகிறது. இதன் குறியீடு 'க'.

**ஊகூ:** கந்தருவருள் ஒருவன்.

ஆகாவும் ஊகூவும் (விநாயகபு. 80: 127)

← செ. ப. அ. 490

**ஊசல்:** ஊஞ்சல்

1. **ஊசல் பருவம்;** பெண்பால் பிள்ளைத்தமிழில் பாடப்பெறும் இறுதிப் பருவம் ஊசல் பருவமாகும்.

கழங்கு அம்மனை ஊசல் என்றிவை கூட்டி... பெண்பாற் பிள்ளைக் கவி எனப்படுமே (முத்துவீ. 1039)

2. **கலம்பக உறுப்புகளுள் ஒன்று:**
தலைவன் தேவியரொடு ஊஞ்சல் ஆடுதலைப் புகழ்ந்து பாடும் துறை (இலக். வி. 812)

3. **ஒரு சிற்றிலக்கியம்**
ஆசிரிய விருத்தம் அல்லது கலித்தாழிசையால் சுற்றத்தோடும் பொலிக எனக்கூறி 'ஆடீர் ஊசல் ஆடாமோ ஊசல்' எனச் செய்யுள்தோறும் முடிப்பது (இலக். வி. பாட். 85)

← செ. ப. அ. 491; த. இ. பே. 37-38

**ஊசல்சீர்:** → ஊசல்வரி

**ஊசல் பருவம்:** பெண்பால் பிள்ளைத் தமிழின் பருவங்களுள் ஒன்று.

← செ. ப. அ. 491

**ஊசல் வரி:** = ஊஞ்சல் பாட்டு, ஊசல் பாட்டு, ஊசல் சீர், ஊஞ்சல், ஊசல்.

ஊஞ்சல் ஆடும் போது பாடும் பாடல்.

நாம் பாடும் சேய் உயர் ஊசல் சீர் (கலித். 131. 23-24)

நாம் பாடும் மிக உயர்ந்த ஊசல் பாட்டை (நச்சர்.)

இரும்பனைத் தொடுத்த பலர் ஆடு ஊசல் (அகம். 372: 7)

ஊசல் ஊர்ந்து ஆட ஒரு ஞான்று வந்தானை (கலித். 37: 14)

சேய்உயர் ஊசல்சீர் நீ ஒன்று பாடித்தை (கலித். 131: 24)

உறுகயிறு ஊசல் போல ஒன்று விட்டு ஒன்று பற்றி (தேவா. 4: 26)

ஊசல் ஆடு பைங்கமுகு... (சீவக. 68)

ஊசல் ஊஞ்சல் ஆம் என உரைப்பர் (திவா. 1269)

சிலப்பதிகார வாழ்த்துக் காதை (29: (23) (24) (25)யில் வரும் 'ஆடாமோ ஊசல்' என்று முடியும் 'வடம் கொள் மணியூசல்' முதலிய மூன்று பாடல்களும் மற்றும் 'திருப்பொன்னூசல்' ஆகியன ஊசல் வரி.

**ஊசிக்கை:**

ஒற்றைக்கையுள் ஒன்று

"...நடுவிரல், பெருவிரல் என்றிவை தம்மில் அடைவு டன் ஒற்றிச்சுட்டுவிரல் நிமிர ஒழிந்தன வழி வழி முடங்கி நிற்ப மொழிந்தனர்..." (சிலப். 3: 18 அடியார்க். மேற்.)

**ஊஞ்சல்கை:** = தோரம், டோளம், உடோளம், உடோளக்கை.

விரல்களை நெருக்கிக்கொண்டு தோளுக்கு நேராக இருகைகளையும் நீட்டும் இணைக்கை (பரத. பாவ. 52)

தோரமாவது - இரண்டு கையும் பதாகையாக்கி அகம் புறம் ஒன்றி முன் தாழ்ந்து நிற்பது. என்னை? தோரமென்பது துணியுங்காலை இருகையும் பதாகை அகம் புறம் ஒன்ற மருவி முன் தாழும் வழக்கிற்றென்ப (சிலப். 3: 18. அடியார்க்.)

தோரம் - உடோளம் எனவும் இது கூறப்படும் (உ. வே சா. அடிக்.)

← செ. ப. அ. பிற். 143

**ஊஞ்சல்:** → ஊசல்வரி

**ஊட்டுறு பச்சை:** யாழிற்குப் பயன்படும் நிறமூட்டிய தோல்.

உள்ளகம் புரையும் ஊட்டுறு பச்சை (பெரும்பாண். 6)

**ஊத்து:**

1. **காகளம் என்னும் இசைக்கருவியின் ஒலி**
← பெ. அ. 18/IV

2. ஊதுகை (blowing of a musical instrument)

**ஊதிலி:** மகுடி. பாம்பாட்டியின் ஊது குழல்.
← செ. ப. அ. பக். 495 ; தே.நே. 296/3

**ஊது:**
**1. ஊதுகுழல், ஊதுகுழாய்**
ஊதும் இசைக்குழல் (செ. ப அ. 495)
கொம்பு என்பன ஊர்வலத்தில் ஊதிச் செல்லும் இசைக் கருவிகள்.

**ஊர் விருத்தம்:** தலைவன் ஊரை விருத்தச் செய்யுள் பத்தினால் சிறப்பிக்கும் சிற்றிலக்கிய வகை.
← இலக். வி. 853; செ. ப. அ. 500

**ஊர் விலக்கு:** நாடகத்தில் பாடப்படும் பாட்டு வகைகளுள் ஒன்று.
**...ஊர் விலக்குமென்று சொல்லா நின்ற விலக்குகளாகிய பாட்டுக்களுக்கு...** (சிலப். 3: 13 அரும்)

**ஊர் வெண்பா:** தலைவன் ஊரை வெண்பாப் பத்தினால் சிறப்பிக்கும் சிற்றிலக்கிய வகை.
← வெண்பா. செய். 37; செ. ப. அ. 500

**ஊராளி:** வரிக்கூத்து வகையுள் ஒன்று.
**சிந்து... உந்தி, அவலிடி, ஊராளி... கோத்த வரிக்கூத்தின் குலம்.** (சிலப். 3: 13 அடியார்க்.மேற்.)

**ஊரில் ஆடல்:** கூத்தில் பயிற்சி பெற்றபின் ஆடும் முறை (இலங். வழ.)
← பெ. அ. 40/IV

**ஊரெறிபறை:** பாலை நிலத்துப் பறை (இறைய. அகப். உரை.) ஊர் எறிதல் - ஊரைக் கொள்ளை யிடுதல்.
← செ. ப. அ. 501

**ஊழிக்கூத்து:** உலக முடிவுக் காலத்தே சிவன் ஆடும் கூத்து; (இந்திய. பண்பாடு 12. பக். 298)
← பெ. அக. 45/IV

**ஊறுகொள்ளுதல்:**
முரசு போன்ற தோற்கருவிகளை குறுந்தடியால் அடித்து முழக்குதல்.
**ஊறுகொண்ட முரசு உமிழ் ஓதையை** (கம்ப. 2: 10: 17)

# எ

**எஃகு செவி:** *இசைச்செவி. இசைச்சுரங்களின் சரியான (சுருதி) அளவை உணரும் செவி; இசையை நுட்பமாகக் கேட்கும் திறனுடைய காது.*
செவி நேர்பு வைத்த செய்வுறு திவவின் (முருகு. 140)
எஃகு செவியாலே சுருதியை அளந்து நரம்பைக் கட்டிய (மேலது. நச்சர்)
குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பு (மலைபடு. 23)
எஃகுநுண் செவிகள் வீழ (சீவக. 2718)
எஃகுநுண்செவி - கூரிய நுண்செவி (மேலது. நச்சர்)
எண் எழுத்தில் திண்ணியராய் எஃகு செவியராய் (யா. வி. 32)
← *த. க. க. 275*/I

**எக்கத்தாளம்:** *தாள வகையுள் ஒன்று*

**எக்கம்:** = ஏகதந்திரி.
1. **ஒற்றை நரம்பு யாழ்**
2. **தாளம்** (cymbal)
3. **தலைப்பறை வகையுள் ஒன்று**

தண்ணுமை எக்கம் மத்தளி தாழ்பீலி (பெரியாழ். 3: 4: 1)
ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி யாழ்
குழல் முழவமொடு இசை திசை கெழுமி
(தொண்டரடிப்பொடி. திருப்பள்ளி. 9)

**எக்கமத்தளி:** *முழவு வகையுள் ஒன்று.*
← *பெரியாழ். 3: 4: 1. வியாக்.*

**எக்காளம்:** = காளம், காகளம், தாரை, ஏக்காளம், (trumpet, clarion)
*நீண்ட ஊதுகொம்பு, சின்னம்.*
இறைத்திருமேனி உலா வருகையிலும், ஏனைய வரவேற்பு மற்றும் விழாக்களிலும் 'பொம்' எனும் ஒலி எழும்புமாறு வாசிக்கப்பெறும் பித்தளையிலான நீண்ட ஊதுகருவி.
*போனகமும்காளமும்ஏற்றி (திருவல்லம் கொலரம்மாள் கோவில்கல்வெட்டு)*
பேரிகை எக்காளம் பெரிய மேளம் (கூ. நா. கா. 282)
*காள் + அம் -காளம் - நீண்டு ஒலிப்பது; காளம் - எக்காளம்.*
→ காகளம்
← *செ. ப. அ. 508; பெ. அ. 63*/IV; *த. க. க. 276*/I

**எக்காளை:** *ஒரு கஞ்சக்கருவி,* (a kind of cymbal)

**எகரப்பயிற்சி:** *எகர ஒலிப் பயிற்சியால் சுரங்களை ஒலித்துப் பழகுதல்.*
*ச ரி க ம ப த நி ச் என்ற இசை எழுத்துக்களை 'எ' என்ற எழுத்தால் ஏறுநிரல் இறங்குநிரல் மற்றும் காலமுறைப் படுத்தி ஒலித்தல் ஆகிய முறைகளில் ஒலித்துப் பயிலுதல்.*

**எகனை:** → எதுகைத்தொடை

**எகிறல் அடைவு:** *அரை மண்டியிலிருந்து அதே இடத்தில் இரண்டு கால்களும் தொடையில் பின்பகுதியில் படும்படி எகிறுவது. தெருக்கூத்தில் விசுப்பலகை மீதிருந்து தரையில் குதிக்கும்போது இவ் அடைவு காணப்படுகிறது.*

**எகினம்:** *புளியமரம், புளிமா*
அன்னமும் ... புளியும் புளிமாப் பெயரும் எகினம் (பிங்க. 3221)

**எச்சரிக்கை:** = எச்சரிக்கைப் பாட்டு
கோவிலில் இறைத்திருமேனிக்கு முன்பு பாடப்படும் பத்திமைப் பாடல்கள். ஒவ்வொரு பாடலும் இறுதியில் எச்சரிக்கை என முடிவு பெறும்.
← *செ. ப. அ. 509*

**எச்சரிக்கைப் பாட்டு:** → எச்சரிக்கை

**எச்சு**
1. **உயர்ந்த ஓசை,** (High pitch)
*எடு:- எச்சு ஸ்தாயி - மேல் மண்டிலம்,* (upper octave)
2. **மிகுதி** (excess), *உச்சம், உச்சநிலை*
எச்சு x தக்கு
3. **இசைக்கருவி** *(யாழ். அக)*
← தே. நே. *42*/IV; பெ. *அ. 72*/IV.

**எச்சு ஸ்தாயி:** → மேல்மண்டிலம்

**எட்டடி:** நாற்சீர் எட்டடி ஒரு விகற்பக் கொச்சகக் கலிப்பா.
எடு:-
"மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்" முதலிய 30 பாடல்களும் இந்த யாப்பால் அமைந்தவை.

**எட்டடைவு:** = நடையடைவு.
எட்டு வைத்து நடப்பது போன்ற நாட்டிய அடைவு.
← த. க. க. 25/I

**எட்டன் மட்டம்:** = ஆதிதாளம், சதுசுர திரிபுடைதாளம், எட்டு எண்ணிக்கைத் தாளம், அடிதாளம்.
மட்டதாள வகையுள் ஒன்று. 4 + 4 = 8 என இருபக்கமும் சமமாக வருவதால் எட்டன்மட்டம் என்று பெயர்.
ஆறன் மட்டம் என்பனவும் எட்டன் மட்டம் என்பனவும் (சிலப். 3: 16 உரை)
எட்டன் இயல்பும் ஆறன் இயல்பும்... (சிலப். 7: 12-16 அரும்.)
" சிறப்புடைய எட்டு எண்ணிக்கையுடைய தாளம்" (த. க. க. 106/II)

**எட்டு எழுத்துக்காலம்:** தாளத்தின் எட்டு அக்கரக் காலம் (அட்சரக்காலம்); இரண்டு எண்ணிக்கை. தககிமி, தககிமி , , , , , , , , - 2 எண்ணிக்கை.
← த. க. க. V/I

**எடுத்தல்:**
1. எடுத்தல ஓசை, உயர்த்தி ஒலிக்கும் ஓசை, உரக்கக் கூவுதல்.
எடுத்து ஒரு வாரணம் அழைப்ப (கம்ப. 3: 1: 48)

2. குரல் எடுத்துப் பாடுதல்
கொடிச்சியர் எடுத்த இன் குறிஞ்சி (கம்ப. 2: 9: 24)

3. ஒலிமிகுதல், நீளுதல்
அளபின் எடுத்த இசைய என்க (தொல். சொல். 261. சேனா.)
← செ. ப. அ. 514; பெ. அ. 84/IV; தொ. க. க. 61

**எடுத்துக்கட்டி:** தேவாரப் பாடல்களை எழுதிய சீடர்கள்.
"ஒரு தலத்தில் நின்றுகொண்டு மெய்ம்மறந்து பாடப் பட்ட தேவாரப் பாடல்களை எடுத்துக்கட்டி என்று சொல்லப்பட்ட சங்கீத ஞானமும் சாகித்ய ஞான முடைய சீடர்கள் ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதினார்கள்". (பி.சாம்பமூர்த்தி- பண்ணாராய்ச்சி மன்ற உரை).
← த. ப. வ. 190/III

**எடுத்துக்காட்டு:** சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையில் வரும் பகுதி.
"பெண்களைத் தொன்றுபடு முறையால் நிறுத்தி, இடைமுதுமகள் ஒவ்வொருவரையும் பெயரிட்ட ழைப்பாள். ஒவ்வொருவரையும் எடுத்துச்சுட்டி ஒருவகைப் பெயரால் அழைத்தலால் இப்பகுதி எடுத்துக் காட்டு என்னும் பெயரதாயிற்று".
'தொழுவிடை' என்பது முதல் 'முத்தைக்கு நல்விளரி தான்' முடிய எடுத்துக்காட்டுப் பகுதி.
குரல் - மாயவனாகவும், இளி - பலராமன் ஆகவும் படைத்துக்கோள் பெயரிட்டுச் சுட்டி அழைக்கிறாள் மாதரி.

**எடுத்துக்கோள் வரி:** ஒருவகை நடம் - நடிப்பு.
எடுத்தவர் தீர்த்த எடுத்துக்கோள் வரியும் (சிலப். 8: 108)
கையற வெய்தி வீழ்ந்தாளாக வீழ்ந்து பிறர் எடுத்துக் கொள்ளும்படி நடத்தல் (மேலது. அரும்)
எடுத்துக்கோளை இசைக்குங்காலை,
அடுத்தடுத்து அழிந்து மாழ்கி அயலவர்
எடுத்துக்கோள் புரிந்தது எடுத்துக்கோளே
அவர் முன்புதான் மேன்மேலு மயங்கிய மயக்கத்தை அவர் எடுத்துத் தீர்த்த எடுத்துக்கோள்வரி என்னும் நடிப்பும் (மேலது. அடியார்க்.)

**எடுப்ப:** பாட .
முனிவர் கணந்துதி யெடுப்ப (CHEN, 14, பக். 363 - 64; த.க.சொ. 110)

**எடுப்பு:** 1) கிரகம்; தாளத்தின் தொடக்கமுறை
இவை நான்காகும்
1) முன் எடுப்பு - அதீத எடுப்பு
2) பின் எடுப்பு - அனாகத எடுப்பு
3) சமன் எடுப்பு - சம எடுப்பு
4) சமனில் எடுப்பு - விசம எடுப்பு - இது முன் எடுப்பு மற்றும் பின் எடுப்பைக் குறிப்பது.

2. தொடங்குகை (வின். அக)

3. இசைக்கிளை ஐந்தனுள் ஒன்று
(பெரியபு: ஆனாய. 26 உரை)

4. பல்லவி: இசைப்பாட்டின் தொடக்கப்பகுதி; தொடக்கத்தில் எடுப்பாக சில அடிகளை உயர்த்திப் பாடுவது.
தமர் பாடும் துணங்கையுள் வந்து எடுப்புமே (கலித். 70: 14)
கோடு முழங்கு இமிழிசை எடுப்பும் (பதிற். 50: 25)
ஏற்றல், உணர்த்தல், எடுப்பல், எழுப்பல் (திவா. 1707)

5. முதல் (கிரகம்): பாடலில் முதலில் எடுக்கும் சுரம்.
"கீதத்தின் முதலில் எடுக்கும் சுவரம் தமிழிசை மரபில் முதல் எனப்படும். வடமொழி மரபில் 'கிரகம்' எனப்படும்" (யாழ் நூல். பக். 154)
எடு:- ஆனந்தபைரவியின் எடுப்புச் சுரம் இளி (பஞ்சமம்)

**எடுப்புக் கோவை:** = கிரக சுரம் (clef)
பண்ணினைத் தொடங்கும் கோவை. ஒரு பண்ணிற்கு இரண்டு மூன்று எடுப்புக்கோவைகளும் இருப்பதுண்டு.
முல்லைத் தீம்பாணி (மோகனம்)
- எடுப்புச்சுரம் - $ச^{2}$, $ப^{2}$, $த^{2}$
அரும்பாலை (சங்கராபரணம்) - எடுப்புச்சுரம் - $ச^{2}$, ப
← த. க. க. 280/I; 337/II; பெ. அ. 90/IV

**எடுப்புதல்:** எழுப்புதல், இசை எழுப்புதல்.
மகரவீணைத் தெள்விளி எடுப்பி (சீவக. 608)
ஏற்றல், உணர்தல், எடுப்பல், எழுப்பல் (திவா. 1707)
← செ. ப. அ. 516

**எடை:** துயில் எழுப்புகை, துயில் எடைநிலை.
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் (தொ. பொ. 88)

**எண்:** = அம்போதரங்கம்.
கலிப்பா உறுப்புள் ஒன்று.
அளவடி ஒன்றால் வருவது - அளவெண்
அளவடி இரண்டால் வருவது - பேரெண்
ஒருசீரால் வருவது - சிற்றெண்
குறளடியால் (இருசீர்) வருவது - இடையெண்
முதல் தொடை பெருகிச் சுருங்குமன் எண்ணே (தொ. செ. 448)
← தொ. செ. 149. இளம்; த. இ. பே. 138/14

**எண்கலை விருத்தம்:** கண்டிகை ஒன்றும் தொங்கலும் சேர்ந்தது ஒரு கலை. இவ்வாறு எட்டுக்கலைகள் அமைந்த விருத்தம்.
எடு:- 'கஞ்சமாமலர்' என்று தொடங்கும் திருப்புகழ் பாடல்.
← த. இ. பே. 236/15

**எண்சுவைக்குரிய பண்கள்:**
1) உவகை - காபி, தன்யாசி, கல்யாணி, சுருட்டி, பூபாளம்.
2) நகைச்சுவை - தோடி, வசந்தா, காபி
3) கருணை - காம்போதி, பலமஞ்சரி, கானடா, ஆகிரி.
4) வீரம் - நாட்டை, அடாணா
5) அச்சம் - மாளவி, அசாவேரி
6) அவலம் - ஸ்ரீராகம், கேதார கௌளை, முகாரி
7) வெகுளி - பேக்கடை, பைரவி, அடாணா
8) வியப்பு - மோகனம், பங்க்ளா

↑ **இசை அமைப்பாளன் தன் திறமையால் ஒரு சுவைக்குரிய பண்ணை இன்னொரு சுவைக்கும் உரியதாக்கலாம்.**
← இசையியல் 64 - 65; த. க. க 206/I

**எண்ணிக்கை:** தாளங்களின் எண் வரிசைகளைக் கணக்கிடுகை.
எ-டு: எட்டு எண்ணிக்கை தாளம், ஆதிதாளம்:
தனதன - ஓர் எண்ணிக்கை - ஒரு மாத்திரை
¼ ¼ ¼ ¼ - 4 x ¼ = 1 மாத்திரை
← த. க. க. 281/I

**எண்ணிக்கைத்தாளம்:** → அங்கதாளம்

**எண்ணும் எழுத்தும்:** எண் என்பது தாளம்; எழுத்து என்பது பண் (சுரஎழுத்து). தாளமும் பண்ணும் சேர்ந்தது பாடல் என்பதைக் குறிப்பது இது.
எண்ணும் எழுத்தும் குறியும் அவர் (தேவா)
எண்ணும் ஓர் எழுத்தும் இசையின் கிளவி தேர்வார்
(தேவா. 2: 34: 4)
எண்ணானாய் எழுத்தானாய் (தேவா. 6: 12: 5)
எண்ணானாய் எழுத்தானாய்
எழுத்தினுக்கோர் இயல்பானாய் (தேவா. 4: 13: 7)
← த. க. க. 283/I

**எண்ணுமுறை:** வரிசைமுறை; வரையறை செய்து வரிசையில் நிலை நிறுத்திய பண்கள்.
எடு:- ஏழ்பெறும் பாலைகளின் வரிசை முறை. அடிப் படைப் பாலையான செம்பாலை (அரிகாம் போதி) யின் சுரங்களால் பண் பெயர்க்கும்போது, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை என்ற பண்கள் வரிசையில் வரும். படுமலைப்பாலை முதலிய ஏனைய ஆறு பாலைகளின் பண்ணுப் பெயர்ப்பிலும் இந்தவரிசை முறை மாறாது ஏனைய ஆறுபாலைகளே வரும்.
எண்ணுமுறை நிறுத்த பண்ணினுள்ளும் (அகம். 352: 15)
பெறுமுறை வந்த பெற்றியின் நீங்காது (சிலப். 3: 83)
(பெறுமுறை - பண்ணுப்பெயர்ப்பால், பண் பெறுமுறை - வரிசை முறை)
இந்த வரிசை முறை:
வம்புறு மரபில் செம்பாலை ஆயது (சிலப். 3: 81)
படுமலை, செவ்வழி, பகர் அரும்பாலை (சிலப். 3: 84)
கோடி, விளரி, மேற்செம்பாலை என (சிலப். 3: 88)
← சிலப். 17 (13) அடியார்க்.

**எண்ணுவண்ணம்:** எண்ணிடைச்சொல் பயின்று வரும் சந்தம். எண்ணிக்கை முறைப் பாடல்கள்; எண்ணின் பெயர்களை உடைய பாடல். நாட்டார் பாடல்கள் ஒருவகை எண்ணிக்கை முறைப்பாடல்கள். உழைப்பாளர் பாடல்களான ஏற்றப்பாடல்கள் முதலியன இவ்வகையின:
எடு:- 1. பாவேந்தர் ஏற்றப்பாட்டு.
2. இருமூன்று எய்திய இயல்பினில் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி

அறு நான்கு இரட்டி இளமை நல்யாண்டு
ஆறினில் கழிப்பிய அறன் நவில் கொள்கை
மூன்று வகைக்குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப்பாளர் பொழுது அறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
ஆறெழுத்து அடக்கிய அருமறைக்கேள்வி (முருகு. 178–186)

3. ஒருகுடம் தண்ணீர் விட்டு ஒரு பூப் பூக்கட்டும்
இரு குடம் தண்ணீர் விட்டு இரு பூப் பூக்கட்டும்

4. முக்கை முனிவ! நாற்கை அண்ணல்!!
ஐங்கை மைந்த! அறுகை நெடுவேள்!!
எழுகை யாள! எண்கை ஏந்தல்
ஒன்பதிற்றுத் தடக்கை மன் பேராள
பதிற்றுக்கை மதவலி! நூற்றுக்கையாற்றல்!!

எண்ணுவண்ணம் எண்ணுப் பயிலும் (தொ. பொ. 529)

**எண்ணெண் கலையர்:** தேவதாசியர்
*64 கலைகளும் அறிந்த ஆடல் மகளிர் (அ. நி.)*
எண்ணெண் கலையும் இசைந்துடன் போக (சிலப். 8: 64)
எண்ணெண் கலையோர் இருபெரு வீதியும் (சிலப். 14: 167)
எண்ணான்கு இரட்டி இருங்கலை பயின்ற (சிலப். 22: 138)
*← பெ. அ. 94/IV*

**எண்வகை இசைக் கரணம்:**
*யாழ்க்கரணங்கள்; யாழில் செய்யப்படும் இசைத் தொழில்கள்.*
வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல்.
சீருடன் உருட்டல், தெருட்டல், அள்ளல்
ஏருடைப் பட்டடை என இசையோர் வகுத்த
எட்டு வகையின் இசைக்கரணத்து (சிலப். 7: 12 – 15)
*கரணம் - தொழில், செயல், வினை.*

**எண்வகை எழால்:** *எண்வகைக்கலைத் தொழில் முறையால் இசையில் உள்ளோசைகளை (கமகம்) உருவாக்குதல். அவை:*
*பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு விளையாட்டு, கையூழ், குறும்போக்கு.*
பண்ணல். . . . குறும்போக்கு (சிலப். 7: கட்டுரை. 5–8)
*←சீவக. 657 நச்சர், →* எழால்

**எண்வகைச் சந்தங்கள்:** *தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய.*
தத்தயும். . . எண்வகைச் சந்தம் என்பார் பெரியோர்
*← வண்ணத். 4*

**எண்வகை வரி:** *எட்டுவகையான நடம் - நடிப்பு. கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சி வரி, காட்சி வரி, எடுத்துக்கோள் வரி*
*(சிலப். 8: 77 - 108)*
வரியாவது அவரவர் பிறந்த நிலத்தன்மையும்-பிறப்பிற்கேற்ற தொழில் தன்மையும் தோன்ற நடித்தல்
(மேலது. அடியார்க்.)
*← சிலப். 3: 13; 14: 150 அடியார்க். ; த. க. க. 285-6/I*

**எத்துக்கடை:** *இணையாக அமைந்த அமைப்பு. முன்னர் நின்ற இசை உருவத்திற்கு இணையாக அமையும் சிறிய அமைப்பு.*
*எ-டு: எத்துக்கடைப் பல்லவி, எத்துக்கடைச் சுரம்.*
*← த. க. க. 286/I*

**எத்துக்கடை எடுப்பு** = எத்துக்கடை பல்லவி.
*எடுப்பு (பல்லவி) போன்ற சுரக்கோப்பு இணைப்பு. வண்ணத்தில் (வர்ணம்) தாழிசை (சரணம்)க்குப் பின்னர் எடுப்(பல்லவி)பின் இசை உருவத்தைத் தழுவி அமைக்கப்படும் சுரக்கோப்பு அமைப்பு.*
*← த. க. க. 286/I*

**எத்துக்கடைச் சிட்டை:** தொடுப்பினை *(அனுபல்லவி) ஒட்டி வரும் சிட்டா சுர அமைப்பு. முன்னர் நின்ற இசை உருவத்திற்கு இணையாக அமையும் சிறிய சிட்டைச் சுரம்.*
*(சிட்டை - சிறிய).*
*ஒப்பு: சிட்டுக்குருவி. சிட்டு > சிட்டை > சிட்டா.*
*சிறுபெண்ணை 'சிட்டு' என்று செல்லமாக அழைப்பது சிற்றூர் வழக்கு.* *← த. க. க. 286/I*

**எத்துக்கடைச் சுரம்:** *தாழிசை (சரணம்) போன்ற சுரக்கோப்பு இணைப்பு. வண்ணம் (வர்ணம்) என்பதன் ஓர் உறுப்பு. நாட்டியத்திற்குரியது. தாழிசைக்கு முன்னர்ப் பாடும் அமைப்பு.*
*← த. க. க. 286/I*

**எத்துக்கடைப்பல்லவி: →**
**எத்துக்கடைஎடுப்பு**

**எதிர்:** = எதிர் வீசாணம்.
*கூத்தில் ஆடப்படும் ஒரு வித ஆடல்.*
அரையே குறுக்குடன் எதிர் என நான்காகும் வீசாணம்
(நீர. நிக. 5: 12)
*← பெ. அ. 115/IV*

**எதிர்ப் பாட்டு:** *போட்டிப் பாடல்; போட்டி அமைப்பில் இருவரின் பாட்டுத் திறமையைக் காட்டுவதற்குப் பாடும் பாடல்.*
*ஒருத்தி:*
பாட்டுக்குப் பாட்டெடுப்பேன்
பாட்டையாவைத் தோற்கடிப்பேன்
எதிர்ப்பாட்டுப் படியாட்டா
ஏணி வைச்சுப் பல்லுடைப்பேன்
*மற்றொருத்தி:*

பாட்டுக்குப் பாட்டெடுப்பேன்
பதில் பாட்டு நான் படிப்பேன்
எதிர்ப்பாட்டுப் படியாட்டா
ஏணி வச்சுப் பல்லுடைப்பேன்
*(தமிழ்நாட்டுப் பாமரர் பாடல்கள் நா. வா. பக். 149 - 151)*

**எதிர்படுகிழமை:** *இறங்குமுறையாகிய எதிர் படுகின்ற வரிசையில் குரல் இளி என இணைதல். இடமுறைத் திரிபில், இடமுறைக்கு அடிப்படைப் பாலை அரும்பாலை (சங்கராபரணம்) ஆகும். இது செம்பாலை (அரிகாம்போதி)யின் இளி (ப) முதல் இறங்கு நிரலில் பண் பெயர்த்தது.*

இளி முதலாகிய எதிர்படுகிழமையும் (சிலப். 3: 87)
← *த. க. க. 286/I; ப. இ. இ. 239*
→ *இளி முதலாகிய எதிர்படு கிழமை*

**எதிர்வீசாணம்:** → எதிர்

**எதிரும் ஓரை:** *எதிராக அமைந்து நிற்கும் ஓரை. 12 ஓரைமுறையில் 'துலாம்' ஓரையில் குரல் (ச) நரம்பு நிற்கும்போது அதன் இணை நரம்பான இளி (ப) 'காளை' (இடபம்) ஓரையில் நிற்கும் அதாவது எட்டாவது இடத்தில். எனவே குரலும் இளியும் இணை நரம்பாகின்றன. அப்பொழுது துலாமும் காளையும் எதிரும் ஓரையாகின்றன.*
*(ஓரை - இராசி)*

எதிரும் இராசி வலம் இடமாக (சிலப். 17 (13) அடியாாக் மேற்.)
← *த. க. க. 287/I;* →*வட்டப்பாலை பக். 476*

**எதுகுலக்காம்போதி:** = *எருக்கலக்காம்போதி, எரிசலக்காம்போதி* *(ச. அ.)*
*பண்களில் ஒன்று* *(வின். அக.)*

**எதுகை இலாச் செய்யுள்:**
= உரைப்பா (Unrhymed poetry)
*எதுகைத் தொடை அமைந்து வராத செய்யுள்.*

**எதுகைத் தொடை:** = எகனை *(நாட். வழ.)*
*பாடல் சொற்களில் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.*

இரண்டாம் எழுத்து ஒன்றின் எதுகை (யா. கா. உறுப். 16)
← *இலக். விள 723*

**எம்பெருமானடியார்:** வைணவக் கோயில்களில் *ஆடல் பணிபுரிந்த மகளிர்.*

**எய்திய கோவை:**
*இணை (பஞ்சம பாவம்) மற்றும் கிளை (மத்திம பாவம்) முறையில் அடையும் சுரம். மற்றும் நட்பு, பகை, தொடுப்பதில் அடையும் நரம்புமாம் (சுரம்).*

*இணை - ச - ப - எய்தியகோவை 'ப'*
*கிளை - ச - ம$^1$ - எய்தியகோவை 'ம$^1$'*
*நட்பு - ச - க$^2$ - எய்தியகோவை 'க$^2$'*
*பகை - ச - ம$^2$ - எய்தியகோவை 'ம$^2$'*
*பகை - ச - க$^1$ - எய்தியகோவை 'க$^1$'*
*(நரம்பு - கோவை - சுரம்)*

**எய்திய பண்:** *பண் பெயர்ப்பில் கிடைக்கும் புதிய*

| பண். | * | | * | * | | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கோடிப்பாலை (கரகரப்பிரியா) | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| விளரிப்பாலை (தோடி) | நி$^1$ | | ச | ரி$^1$ | | க$^1$ | | ம$^1$ | | ப | த$^1$ | |

*கோடிப்பாலையின் துத்தத்தை (ரி$^2$) குரலாகக் (ச) கொண்டு பண் பெயர்த்தால் விளரிப்பாலை கிடைக்கிறது. இங்கு விளரிப்பாலை எய்தியபண்.*
← *த. க. க. 250/III;* → நின்றயண்

**எரிசலக்காம்போதி,எருக்கலக்காம்போதி:**
→ எதுகுலக்காம்போதி

**எருக்குதல்:** *தாக்கி ஒலி எழச்செய்தல், முரசறைதல்.*

இன்னிசை முரசம் இயமரம் எருக்க (பெருங். 5: 6: 63)
ஆங்கு அடிமுரசு எருக்கினானே (சீவக. 1275)

**எருக்குரல்:** *தாக்குதலால் உண்டாகும் ஒலி*

இன் கட் பம்பை எருக்குரல் உறீஇ (பெருங். மகத. 26: 36)

**எருத்தடி:**
*ஈற்றயலடி*

குட்டம் எருத்தடி உடைத்தும் ஆகும்
(தொ. பொ. 421 இளம்)

நான்கடியாய் எருத்தடி நைந்தும் (யா. கா. 36)
→ கொச்சகம்

**எருத்தம்:** *தரவு. கலிப்பா உறுப்புள் ஒன்று.*

எருத்தம் - தரவு என்றதன் பொருண்மை என்னை யெனின் முகத்துத் தரப்படுவதென்ப(தொ. பொ. 444 பேரா)
தரவு எனினும் எருத்தம் எனினும் ஒக்கும்
(வீர. யா. 11 உரை)

**எருத்து:** → கொச்சகம்

**எருமன்றம்:** *ஆயர் பொதுவிடம்; ஆடுகளம். பாடுகளமாகவும், ஆடு அரங்காகவும் பயன்பட்டது.*

எருமன்றத்துத் தூங்கும் குரவையுள் நின் பெண்டிர் கேளாமை
(கலித். 108: 60–61)

ஆயர்பாடியில் எருமன்றத்து (சிலப். 17: (5)
எருமன்றத்தாடும் குரவை (சிலப். 17: (28)
எருமன்றம் - சாணம் கரைத்துத் தெளித்த களம்.
↑ விழாநாளில் புத்தாடை உடுத்துவதுபோல் களத்தை சாணம் தெளித்தல், புதுமணல் பரப்பல், கோலமிடல் முதலிய புதுவது புனைதல் தமிழர் மரபு. இது விழா நாளில் பூமித்தாய்க்குப் புத்தாடை புனைவது போன்றது.
← த. க. க. 289/I

## எருவை:

1. பருந்து, வேட்டைப்பறவை, (Hawk)
மான்றுவேட்டு எழுந்த செஞ்செவி எருவை (அகம். 3: 5)
இருசிறகர் ஈர்க்குப் பரப்பி எருவை (களவழி. 20:1)
காய்ந்த பசி எருவை கவர்ந்து ஊண் ஒதையும் (மணிமே. 6: 117)

2. *கொறுக்கை, கொருக்கு, கொருக்கச்சி, கொருக்கந் தட்டை, பஞ்சாகோரை, பஞ்சாங்கோரை, நெகிழி, , சீவாளி (Reed).*
*நாகசுரம் போன்ற காற்றுக் கருவிகளுக்கான சீவாளி என்ற கொருக்கு; கொருக்கந் தட்டையிலிருந்து செய்யப்படுகிறது.*
எருவை, செருவிளை, மணிப் பூங்கருவிளை (குறிஞ்சிப். 68)
எருவை பஞ்சாய் கோரை என்ப (திவா. 818)
எருவை வேழம் கொருக்கை (பிங்க. 2993)
எருவை சாய் பஞ்சாய் திரட்கோரை என்ப (பிங்க. 2994)

## எல்லரி: = *சல்லி, சல்லிகை, சல்லரி*

*ஒருமுகப்பறையுள் ஒன்று. சல், சல் என்று ஒலிப்பது.*
கடி கவர்பு ஒலிக்கும் வல்வாய் எல்லரி (மலைபடு. 10)
பேரிகை படகம்... சல்லிகை... (சிலப். 3:27. அடியார்க்.)
ஒருவாய் திறந்து உட்கடிப்பு விசித்த சல்லரி (கல்லா. 8: 17)
← த. க. க. 289/I

## எல்லியம்: கூத்தனும் கூத்தியும் இணைந்து ஆடும் கூத்து.

கூத்தனும் கூத்தியும் கோத்த கூத்துருவம்
எல்லியத் தோரிழை என்மனார் புலவர் (கூத். தொகை. 92)

## எவ்வடைவு: *அடைவு வகைகளுள் ஒன்று விரல் பகுதியை ஊன்றிக்கொண்டு முழு உடலையும் மேலே தூக்கி எவ்வுவது.* ← த. க. க 23/I

## எழவுப்பாட்டு: → ஒப்பாரி

## எழால்: 1. புல்லூறு, வல்லூறு, கொக்கு, நாரை

மயிலுள் எழாலும் பயிலத்தோன்றும் (தொ.பொ. 589 இளம். மரபு. 44 உரை)
செங்கால் பேடை எழால் (குறுந். 151 :1–2)
சிறுபுன் புறவொடு சிற்றெழால் சீறும் (திணைமொழி. (50) 15: 1)
நிழல்அறு நனந்தலை எழால் ஏறுகுறித்த (அகம். 103:1)

2. ஆண்மயில் *(சயா. நிக. 180)*

3. மக்கள் மிடற்றிசை
பாணர் படுமலை பண்ணிய எழாலின் (குறுந். 323: 2)
களம் படும் எழாலி னோடு (திருவிளை: தருமிக்கு: 76)

4. யாழ் நரம்பின் இன் இசை, (musical notes of yal).
இன்குரல் சீறியாழ் எழாஅல் வல்லை (நற். 380)
எழாலை அன்ன சொல் ஏந்திழை மாதராள் (கந்தபு.திருக்கல்.15)
எழாலே யாழ் எழும் இன்னிசை என்ப (பிங்க. 1427)

5. யாழ்
பயனுடைய எழால் கோடியர் தலைவ (பொருந. 56–57)

6. எழீஇ, கமகம், உள்ளோசை, நுண்ணோசை, அனுசுரம் (Grace notes, embellishments,ornaments adornments)
பாடல் பற்றிய பயனுடை எழாஅல் (பொருந. 56)
எண் வகையால் இசை எழீஇ (சிலப். 7:8)
எழால் உற வீழ்ந்தெனக் கணவற்காணாது (குறுந். 151: 2)
பாணர் படுமலை பண்ணிய எழாலின் (குறுந். 323: 2)
குடுமி எழாலொடு கொண்டு... (பதிற். 36: 10)
எழீஇப்பாடும் பாட்டு அமர்ந்தோயே (பரிபா. 14: 24)
*எழால் - எழீஇ - எழுவி. எழு + ஆல் - எழால்.*

## எழிலிப் பண்: *மேகப்பண்.*

ஒரு விறலி பாடல் இசை எழிலிப்பண் அமைத்து
(திருமயிலை. உலா. 544)
*எழிலி - மேகம்.*
← பெ. அ. 167- 68/IV

## எழிலை யாழ்:

எழிலையாழ் செய்கைப் பசுங்கலன் விசும்பின்
(கருவூர்த்தேவர். 10: 7: 1)

## எழிற்கை: *நாட்டியத்தில் தொழில்படாக் கை; அழகுக் கை. ஒரு கை தொழில்படும்போது அழகாக (எழிலாக) வைத்துக் கொள்ளும் தொழில்படாத மறுகை.*

பிண்டியும் பிணையலும் எழிற்கையும் தொழிற்கையும் (சிலப். 3:18)
எழிற்கை - அழகுபெறக் காட்டும்கை (மேலது அரும்)
அவைதாம் எழிற்கை அழகே.. பொருளாகும்மே (அரும்.மேற்.)
... எழிற்கையும் தொழிற்கையும் அகக்கூத்திற்குரிய கை...
(அரும்)
*தொழில்கை x எழில்கை*
மனமும் முகமும் கையும் ஒரு தொழிலைச் செய்தலின் ஏனைக்கை தொழில் இன்றி மருங்கிலே கிடந்தது
(முருகு. 108 நச்சர்)

## எழினி: = *இடுதிரை, இடைச்சீலை, திரைச்சீலை.*

*நாடக அரங்கில் கட்டப்படும் திரைச்சீலை.*
எழினி வாங்கிய ஈரறைப் பள்ளியுள் (முல்லைப். 64)

ஒருமுக எழினியும் பொருமுக எழினியும் கரந்துவரல் எழினியும் (சிலப். 3: 109–10)
தொடுகண் மருங்கில் சூழ்தரல் எழினியும் (சிலப். 6: 158)
பொருமுகப் பளிங்கின் எழினி வீழ்த்து (மணிமே. 5: 3)
*இடுதிரை (பெ. அ. 168/IV)*
*இடைச்சீலை, திரைச்சீலை (கதி. அக. 319)*

**எழினி மூன்று:** *நாடக அரங்கில் கட்டப்பட்ட திரைகளின் மூன்று வகை.*
*1) ஒருமுக எழினி 2) பொருமுக (இருமுக) எழினி*
*3) கரந்துவரல் எழினி*
ஒருமுக எழினியும், பொருமுக எழினியும், கரந்துவரல் எழினியும் (சிலப். 3: 109–10)

**எழீஇ:**
**1. ஆளத்தி (ஆலாபனை) செய்தல்**
தொட்டு எழீஇப் பண் எறிந்தாள் கின்னரரும் மெய்ம் மறந்து சோர்ந்தார் அன்றே (சீவக. 647: 4)
உருகின மரமும் கல்லும் ஓர்த்து எழீஇப் பாடுகின்றாள் (சீவக. 723: 4)
*எழீஇ - ஆலாபனம் செய்து - (நச்சர்.)*
*எழு - எழுவி - எழீஇ*

**2. எழால், உள்ளோசை, கமகம்**

**3. எழால்** [6]

**எழுகூற்றிருக்கை:** *மிறைக்கவிகளுள் ஒன்று. ஒன்று முதல் ஏழு வரையும் எண்கள் முறையே ஒவ்வொன்றாக ஏறியும் இறங்கியும் வருமாறு பாடப்படும் மிறைக் கவிவகை (மாற. அல. 297-99)*
*எடு:- சம்பந்தர் பாடிய திருஎழுகூற்றிருக்கை.*

**எழுச்சி கொட்டுதல்:**
*புறப்பாட்டுக்குரிய வாத்தியம் முழக்குதல்.*
வருகிறார் என்று எழுச்சி கொட்டாதிருக்க (பாசுரம். திருநெடுந். 21 வ்யாக். 182)
← *செ. ப. அ. 540.* → மல்லாரி.

**எழுச்சிப் பாலை:** *படை எழுச்சியை அறிவிக்கப் பாடும் பண். படையின் புறப்பாடு இதன் மூலம் அறிவிக்கப்படும். சேரன் செங்குட்டுவன் வடநாடு நோக்கிப் படையுடன் எழுந்தபோது பாடப்பட்ட பண் எழுச்சிப்பாலை எனப்பட்டது.*
முழுத்தம் ஈங்கியது முன்னியதிசை மேல்
எழுச்சிப் பாலை யாகு என்று ஏத்த (சிலப். 26: 30–31)
*முழுத்தம் - முகூர்த்தம் (திரிபுச்சொல்) - நல்லநேரம்*
*பாலை - பெரும்பண்*
← *த. க. க. 299/I*

**எழுச்சி பாடுவான்:** *திருப்பள்ளி எழுச்சி பாடுவோன்*
எழுச்சி பாடுவான் பாடல் கேட்டு (சேதுபு. முத்தீர்த்த. 37)
சூதர் ஏத்திய துயில் எடை நிலையும் (தொ. பு. 36)
← *(பெ. அக. 171/IV)*

**எழுச்சி முரசம்:**
**1. பள்ளி எழுச்சி முரசம்**
*மன்னர் காலையில் விழிப்பதற்காக இசைக்கப்படும் முரசு.*

**2. புறப்பாட்டு முரசம்:** *அரசர், தெய்வம் நகர் வலப்புறப் பாட்டில் முழங்கும் முரசம் .*
எழுக வான் பயணம் என்று அங்கு எழு முரசு இயம்புவித்தான் (கோயிற்பு. 5: 116)

**எழுசீர்ச் சந்த விருத்தம்:** *எழுசீரால் அமைந்த விருத்த யாப்புடைய சந்தப் பாடல்.*
எடு:- சிறந்து நின்ற சிந்தை யோடு
தேயம் நூறு வென்றிவள் (பாரதி. ஜெயபாரதம்)

**எழுத்தந்தாதி:**
1. *பாடல் அடியின் ஈற்றெழுத்து அடுத்த அடியின் முதலெழுத்தாக வரத் தொடுத்துப் பாடுவது.*
← *யா. வி. 52; செ. ப. அ. 541*
**2. இசைச்சுர அந்தாதி:** *இசையில் சுரம் பாடும்போது எழுத்து அந்தாதித்து வருதல்.*
*சரிகா - காமகா என்பதில் கா, கா என்பது அந்தாதி.*
← *த. க. க. 38/I*

**எழுத்தல் இசை:** *எழுத்திலா இசை. எழுத்து வடிவம் தர இயலாத இருமல், முனகல் போன்ற ஒலிகள்.*
எழுத்தலிசை என. . . குறிப்பிசை என்க (இலக். வி. 755)
*(எழுத்து + அல் + இசை)*

**எழுத்தின் நாதம்:** *இசைச்சுரங்களின் இனிய ஒலி. இந்த ஒலியே ஆளத்தியாகி பண்ணாகி இசையளிக்கிறது.*
. . . எழுத்தின் நாதம் ஆளத்தியாய்ப் பின் இசையென்றும் பண் என்றும் பெயராம் . . . (சிலப்: 3: 26. அடியார்க்.)
*நாதம் - இசை ஒலி.*

**எழுத்து:** *இசைக்குறியீட்டின் எழுத்துக்கள்; இசையின் ஏழு எழுத்துக்கள்.*
ச்ரிகமபதநி என்னும் ஏழெழுத்தினையும் (சிலப். 5: 35_7 அடியார்க்.)
ஈரநிலத்தின் எழுத்தெழுத்தாக (சிலப்: 3: 68)
*எழுத்துப் புணருத்தான்* (ARE, 1961-62/280-82)
← *த. க. சொ 115/I*

**எழுத்துக்காலம்:** = அட்சரக்காலம், அச்சரக்காலம், மாத்திரை.

*தாளத்தின் ஓர் எண்ணிக்கைக்குள் 4 எழுத்துக்கள் (அட்சரம்) ஒலித்தன என்றால் ஓர் எழுத்துக்குக் கால் எண்ணிக்கை.*

*சுடரொடு*

*த க தி ன*

*¼ ¼ ¼ ¼ = 1 எண்ணிக்கை; 1 மாத்திரை; 4 எழுத்துக் காலம்.*

*அச்சு - எழுத்து* (பரத. தாள. 50)

*ஒப்பு: அச்சகம், அச்சுக்கலை.*

← த. க. க. V/I; VIII/III

**எழுதல்:** *முழங்குதல், ஒலித்தல்.*

காலை முரசம் கடைமுகத்து எழுதலும் (சிலப். 26: 53)

சேரிக்குரவை எழ. . . (முக். பள்ளு. 32)

**எழுதுவரிக் கோலம்:** *தொய்யில், வரிக்கோலம்.*

எழுதுவரிக் கோலமுழு மெயுமுறீஇ (சிலப். 5: 226)

அவரெழுது வரிக்கோலம் _ தொய்யில் (மேலது. அரும்.)

**எழுந்தருளும் திருமேனி:** = உற்சவமூர்த்தி.

*கோவில் திருவிழாவில் புறப்பாட்டிற்கென அமைந்த இறைத் திருமேனி.*

*உற்சவமூர்த்தி ஸ்ரீபலி எழுந்தருளும் திருமேனியும்*

← தெ. இ. க. 19: 99; த. க. சொ. 116.

**எழுநரம்பு:** *யாழில் இழுத்துக் கட்டப்பெற்ற ஏழோசைகளை ஒலிக்கும் நரம்புகள்.*

எழு நரம்பால் கட்டிய இனிய ஓசைகள் (கலித். 9: 18 நச்சர்)

**எழுமூன்று திறம்:** *ஒரு பெரும்பண்ணில் (பாலை) கிடைக்கும் 21 திறப்பண்கள்.*

ஈரிறுபண்ணும் எழுமூன்று திறனும் (பிங்க. 1380)

மூவேழ் திறத்தொடு முற்றக்காட்டி (பெருங். 1: 37: 116)

மூவேழ் துறையும் முறையுளிக்கழிப்பி (புறம். 152: 19)

ஏழே ஏழே நாலே மூன்று (தேவா. 1: 126: 11)

... பண்களுக்கு இன்றியமையாத மூவேழு திறத்தையும் குற்றமின்றாக இசைத்துக் காட்டவல்ல பெறுதற்கு அரிய இசைமரபை அறிந்த குழலர் பாணர்... (சிலப். 5: 35_7 அடியார்க்.)

இசைபெறு திருவின் வேத்தவை ஏற்பத்

துறைபல முற்றிய பைதீர் பாணரொடு (மலைபடு: 39–40)

→ இருபத்தொருதிறம்

**எழுமை நடை:** *ஏழன் நடை, மிசுரம், மிசுர நடை.*

*தகிட தகதிமி என்று வரும் ஏழன் நடைத்தாளம்.*

*(மிசுரம் - கலப்பு)*

*மும்மை + நான்மை நடைக்கலப்பால் (மிசுரம்) எழுமை நடை ஆகியது.*

**எழுவகைக் கூத்து:** *ஏழுவகைக் கூத்துகள்.*

எழுவகைக் கூத்தும் இழிகுலத்தோரை ஆட வகுத்தனன் அகத்தியன் தானே (சிலப். 3: 12 அடியார்க். மேற்.)

*எழுவகைக் கூத்தாவன: குரவை, கலிநடம், குடம், கரணம், நோக்கு, தோற்பாவை, விதூடம் (நகைச்சுவை)*

**எழுவகைத் தாண்டவம்:** *ஆடவல்லான் சிவபெருமான் ஆடிய எழுவகைத் தாண்டவங்கள்:*

| | தாண்டவத்தின் பெயர் | இறைத் தொழில் | ஆடிய அரங்கம் | ஆடிய ஊர்(பதி) |
|---|---|---|---|---|
| 1 | ஆனந்ததாண்டவம் | பொது | பொன் அம்பலம் | தில்லை(சிதம்பரம்– சிற்றம்பலம்) |
| 2 | சந்தியாதாண்டவம் (புஜங்கலளிதம்) | இன்பக் காத்தல் | வெள்ளி அம்பலம் | மதுரை |
| 3 | கௌரி தாண்டவம் (புஜங்கத்திராசம்) | துன்பக் காத்தல் | சிற்சபை | திருப்புத்தூர் |
| 4 | திரிபுரதாண்டவம் | மறைத்தல் | சித்திரசபை | குற்றாலம் |
| 5 | காளி தாண்டவம் (ஊர்த்துவதாண்டவம்) | அருளல் | இரத்தினசபை | திருவாலங்காடு |
| 6 | காளிகா தாண்டவம் (முனிதாண்டவம்) | ஆக்கல் | தாமிரசபை | திருநெல்வேலி |
| 7 | சங்கர தாண்டவம் | அழித்தல் | இருண்ட நள்ளிரவில் சுடுகாட்டில் இறைவன் ஆடுவது | |

இன்புறும் ஏழினும்... (திருமந். 2782: 3)

ஏழினில் ஏழாய் ... ஏழிசை நாடகத்தே இசைந்தானே (திருமந். 2783)

அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்

அரன் அங்கி தன்னில் அறையிற் சங்காரம்

அரன் உற்றணைப்பில் அமரும் திரோதயி

அரன்அடி யென்னும் அனுக்கிரகம் என்னே (திருமந். 2799)

*திதி - காத்தல்.*

**எழுவகை நரம்பு:** = *எழு வகை நிலம் இசையின் ஏழு சுரங்கள்.*

*குறியீடு: ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஐ, ஔ*

*கு, து, கை, உ, இ, வி, தா*

*குரல் - சட்சம்*

*துத்தம் - ரிடபம்*

*கைக்கிளை - காந்தாரம்*

*உழை - மத்திமம்*

*இளி - பஞ்சமம்*

*விளரி - தைவதம்*

*தாரம் - நிடாதம்*

சரிகமபதநி என்னும் எழுவகைப்பட்ட எழுத்தடியாகப் பிறக்கும் குரல் முதலாகிய ஏழும் (சிலப்.14:152_4 அடியார்க்.)

இவ் ஏழு துளைகளிலும் இசை பிறக்குமாறு: சரிகமபதநி என்னும் ஏழெழுத்தினும் பிறக்கும். (சிலப். 17: 20 அடியார்க்.)

**எழுவகை நிலம்:** → எழுவகை நரம்பு

**எழுவகை மாதர் ஆடல்:** *துடி ஆடல்.*

எழுவர் மங்கையர் ஆடல் துடியே (திவா. 1758)

துடி என்பது எழுவர் மாதர் தூங்கலின் நாமம் ஆகும் (சூடா. 9: 51)

↑ தூங்கல் = ஆடல் ; எழுவகைமாதர் – சப்த மாதர் ஆகலாம் ; குரவை போன்று ஏழு மகளிர் ஆடும் ஆடலாகவும் துடி ஆடலைக் கொள்ளலாம்.

**எழுவகை முழவுகள்:**

*அகமுழவு, அகப்புறமுழவு, புறமுழவு, புறப்புறமுழவு, பண்ணமை முழவு, நாள் முழவு, காலை முழவு.*

*பண்ணமை முழவு: ஒத்துக் கூட்டிய (சுருதி சேர்க்கப் பட்ட) முழவு*

*பண் - ஒத்து, சுருதி ← சிலப். 3: 27. அடியார்க்.*

**எழுவகை வரி:**

1. **இசைப்பாடல்கள்:** *ஆற்றுவரி, சாற்றுவரி, திணை நிலைவரி, மயங்குதிணை நிலைவரி, முகமுடைவரி, முகமில்வரி, படைப்பு வரி.*

எழுவகை நிலத்தினும் எய்திய வரிக்கும் (சிலப். 14: 153)

2. **இசையின் ஏழுசுரங்கள்**

...குரல் முதலான ஏழு நரம்பு என்றுமாம் (மேலது அரும்)

*வரி - இசைப்பாடல், இசைச்சுரம்*

**எழுவுதல்:** *ஒலி எழுப்புதல்.*

எழுவும் முரசு (சூளா. கலியாண. 248)

**எழூஉ:**

1. மிடற்றுப்பாடல், வாய்ப்பாட்டு

எழூஉப் புணர் யாழும் இசையும் கூட (பரிபா. 7: 78)

2. கணையமரம்

... எழூஉத்தாங்கிய கரவம்... (புறநா. 97:8)

எழூஉ நிவந்தன்ன... (பதிற். 31: 20)

எழூஉத்திணி தோள்... (அகம். 375: 10)

**எறமணி:** → எறிமணி

**எறிதல்:**

*அடித்தல் (To beat)*

*தோல் இசைக்கருவி முழக்குதல்.*

தண்ணுமைக்கருவிக் கண்எறி தெரிவோர் (மணிமே. 19:82)

*கண் எறி - திறமையான தோல்கருவி வாசிப்பு (skillful playing on the drum)*

சிறுவரை நின்றே எறிப பறையினை (நாலடி. 24)

**எறிமணி:** = சேகண்டி, எறமணி.

*ஒலிக்கின்ற மணி (Gong)*

எறிமணி சேகண்டி என நவிலுவரே (திவா. 1225)

... குழிக்குழலும் எறிமணியுமாகிய... (சிலப். 12:41 அடியார்க்.)

*எறிமணி திருவடிநிலை இருபதின் பலத்தால் (தெ. இ. க. 19: 99)*

**எறும்புக்கோலம்:** = பிபீலகயதி.

*தொடக்கமுதல் முடிவுவரை ஒரே அளவில் சொற்கள் ஒலிப்பது.*

| | | | | |
|---|---|---|---|---|
| *எ-டு:* | *தகதின,* | *தகதிமி,* | *தகசனு,* | *தாதீம்* |
| | *சா;* | *நீ;* | *தா;* | *பா;* |

*← இ.து.த.சொ. 37*

**என்று:** *இசைப்பொருண்மை தரும் இடைச்சொல்.*

*← பெ. அ. 201/IV*

# ஏ

**ஏ:**

1. இசைநிறை ஏகாரம்

ஏவுங் குரையும் இசைநிறை அசைநிலை (தொ. சொ. 272. சேனா)
ஏஎ இவளொருத்தி பேடியோ என்றார்(நன். 422. விருத்.)
ஏ என்னும் சொல்லும் குரை என்னும் சொல்லும் இசை நிறைத்தலாகியும் அசைநிலை யாகியும் வரும்
(தொ. சொ. 267. தெய்வச்.)

2. உழை இசையின் அக்கரம் (திவா.)
'ம' எனும் சுரத்தின் குறியீடு.
ஆ, ஈ, ஊ, ஏ... ஏழிசைக்குரிய (திவா. 2149)

3. எழு, உயர், பெரு.
ஏ - ஏழ் - ஏழு
ஏழ் - எழு - எழுவு; எழுவுதல் - ஒலியை எழுப்புதல்.
ஏழ் - யாழ் - ஒலி எழுப்புதல், இசை, பண் நரப்பிசைக் கருவி.
← தே. நே. 39/IV

**ஏக்காளம்:** → எக்காளம்

**ஏக்தர்:** துந்தனாவின் வகையுள் ஒன்று; ஒற்றைத் தந்திரி அமைந்த ஒத்துக்கருவி, (Monochord, one stringed tambura).

**ஏக்தால்:** இந்துத்தானித் தாள வகையுள் ஒன்று.
இதன் அளவு: 4 + 4 + 2 + 2

**ஏக கண்டமாய்:** ஏககண்டமாக; ஒரே குரலாய்.
ஆச்சார்யர்களாலும் ஏககண்டமாகப் பிரதி பாதிக்கப் பட்ட பிரபலாதிசயம் (குருபரம். ஆறா. ப. 2)
← பெ. அக. 210/IV

**ஏகசுர சுருதி:** சில ஒத்துக்கருவிகள் ஒற்றைச் சுரத்தை ஒத்து (சுருதி) ஆகத் தரும்
எடு:- ஒத்து நாகசுரம், ஒத்துசெனாய், ஏக்தர், துந்தினா, துத்தி, துருத்தி.

**ஏக சூத்திரம்:** உடுக்கை (ச. அ.)

**ஏகதந்திரி:** → எக்கம்

**ஏகதாளம்:** → ஒற்றை

**ஏக பாதம்:** மிறைக்கவியுள் ஒன்று
நான்கு அடியும் ஒரே எழுத்துத் தொடரால் அமைந்து வரும் மிறைக்கவி.
← செ. ப அ. 552

**ஏக முடி:** கூத்தாடுவோர் வளர்த்துள்ள நீளமான முடி (தற். அக.)
← பெ. அ. 216/IV

**ஏகராகயாழ்:** → ஒற்றைப்பண்யாழ்

**ஏகாரம்:** இசைநிறை ஏகாரம், (Poetic expletive).
எடு:- ஏயே இவள் ஒருத்தி பேடி
துவரிதழ்ச் செவ்வாய்த் துடியிடை யோயே (சிலப். 6: 26)
ஏயே என்பதிலுள்ள யே (ஏ) மற்றும் யோயே என்பதிலுள்ள யே (ஏ) இசைநிறை ஏகாரம்.
→ ஏ

**ஏங்கல்:** யாழ் நரம்பின் ஓசை
கலித்தல்... ஏங்கல்;... யாழ் நரம்போசை (பிங்க. 1441)

**ஏங்குதல்:** → ஒலித்தல்

**ஏசல்:** = ஏசல் பாட்டு.
பழிப்பதுபோல் புகழ்வதும், புகழ்வதுபோல் பழிப்பது மாக அமைந்த (வினாவிடை) பாட்டு.
எ-டு: மாப்பிள்ளை ஏசல்:
பெண்வீட்டார்: நீங்க கீழத்தெருவில கீரவித்தது தெரியாதா !
மாப்பிள்ளை வீட்டார்: நீங்க தெக்குத்தெருவில தேங்கா வித்தது தெரியாதா !
சிந்து கலித்துறைகள் ஏசல் (திருப்பு. 198)
குளுவ நாடகங்களிலும், குறவஞ்சி நாடகத்தின் இறுதிப் பகுதியிலும் குறவனும் குறத்தியும் பாடும் ஏசல் பாடல்கள் இடம்பெறும்.

நந்தனார் சரித்திரக் கீர்த்தனை ஏசல்பாட்டு:
புலையர்:
பாப்பார தெய்வமது பலிக்காது பறையரைக்
காப்பாற்ற மாட்டாது கைவிடுமென்றார்
நந்தனார்:
பார்ப்பார் பறையரென்ன பாராது பகுதி போல்
காப்பாற்று மல்லவோ கண்ணுதலே என்றார்.
← முச்சந்தி இலக்கியம். 39. → உறழ்கலி

**ஏசல் இலக்கியம்:** ஒருவரைப் பழிப்பது அல்லது இகழ்தல் போல் இயற்றப்படும் இலக்கியம்.
ஏசல், இலக்கு, குறம், மறம், பள்ளு நாடகங்கள் (சுவா. நாத. 166.)
முக்கூடற்பள்ளுவை மாதைப்பள்ளு நூலாசிரியர் கூறுவது: 'தேசமெல்லாம் புகழ் நாடகப்பண் ஏசல்'
← த. க. க. 305/I

**ஏசல்பாட்டு:** → ஏசல்

**ஏடு பார்ப்போர்:** கூத்துப் பயிற்சியாளரின் உதவியாளர்; இருமோடித் தென்வடக்கில் நாடகம் எனும் கூத்தாடும் குருவானவர்.
அண்ணாவியர்த்து ஏடு பார்ப்போர் (நீர். நிக. 5: 6)
← பெ. அ. 228/IV

**ஏத்த:** வாழ்த்த.
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் (தொ. பொ. 88)

**ஏத்தம்:** → ஏற்றம்

**ஏத்தல்:** புகழ்தல்.
தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும் (தொ. கற். 27)
ஆயினும் நச்சர் நுகர்ச்சி 'ஏற்றலும்' என்றே பாடம் கொள்கிறார்.
ஏத்தல் - உலக வழக்கு; ஏற்றல் - இலக்கிய வழக்கு.

**ஏத்தாளர்:** மன்னரைக் காலைநேரம் தவிர பிற நேரங்களில் புகழ்ந்து பாடுபவர்.
← தே. நே. 294/9

**ஏத்து:** வாய்ப்பாட்டு
குழலொலி யாழொலி கூத்தொடு ஏத்தொலி...
(சேந்தனார் திருப்பல். 11)

**ஏதிலார்:** பரத்தையர்
ஏதிலார்ப் புணர்ந்தமை (கலித். 78–13)

**ஏந்தல் வண்ணம்:** விளக்கத்தின் பொருட்டும் வற்புறுத்தல் பொருட்டும் ஒரு சொல்லே மிக்கு வரும் சந்தம்.
ஏந்தல் வண்ணம் சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்
(தொ. பொ. 532)
எடு:-சேரமான் பெருமாள்நாயனாரின் பொன்வண்ணத் தந்தாதி:
பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வீழ் சடை வெளிக்குன்றம்
தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மால்விடை தனைக் கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் ஆகிய ஈசனுக்கே
(தேவா. 11: 6: 1)

**ஏந்திசை:** செய்யுள் ஓசை வகை (A rhyme in verse)

**ஏந்திசை அகவல்:**
நேரொன்றாசிரியத் தளையால் பிறக்கும் ஓசை (யா.கா. செய். 1 உரை)
← செ. ப. அ. 560

**ஏந்திசைச் செப்பல்:**
வெண்சீர் வெண்டளையால் பிறக்கும் ஓசை (யா. கா. செய். 1 உரை)
காய்ச்சீர் முன் நேரசை சேர்ந்து வெண்பாவில் தோற்று விக்கும் ஓசை.
← செ. ப. அ. 560

**ஏந்திசைத் துள்ளல்:**
கலித்தளையால் பிறக்கும் ஓசை (யா. கா. செய். 1 உரை)
காய்ச்சீர் முன் நிரையசை சேர்ந்து கலிப்பாவில் தோற்று விக்கும் ஓசை.
← செ. ப. அ. 560

**ஏந்திசைத் தூங்கல்:**
ஒன்றிய வஞ்சித்தளையால் பிறக்கும் ஓசை (யா. கா. செய். 1 உரை)
கனிச்சீர் முன் நிரையசை சேர்ந்து வஞ்சிப்பாவில் தோற்றுவிக்கும் ஓசை.

**ஏந்திசை வண்ணம்:** ஏந்திசை வண்ணம் இருபது வகையது.
குறில், நெடில், வலி, மெலி, இடை வண்ணங்களால் அகவல், ஒழுகல், வல்லிசை மெல்லிசை என விரவி(உறழ்ந்து) இருபதாகும்
எடு:- குறில் மெல்லிசை ஏந்திசை வண்ணம்
கரியமலர். . . . எம்மூர் (சிலப். 7: (5) – சார்த்துவரி)
↑ இது அறுசீர் ஆசிரிய நிலை விருத்ததால் ஐந்தன் நடை (கண்டம் ) யால் அமைந்தது.
← யா. வி. ஒழிப 2

**ஏம முரசம்:** காவல் முரசம்.

ஏமமுரசம் இழுமென முழங்க (புறம். 3: 3)

ஏமம் - காவல்

→ ஈமமுரசம்

**ஏமவதி:**

1. பண்களில் ஒன்று
2. வசம்பு (ச. அ.) (கடுக்காய்)

← செ. ப. அ. 561

**ஏயில்:**

1) இசை (song, music)

←திருவாய்மொழி 4: 6: 2 ஈடு

2) பண்களில் ஒன்று (க. அ.)

← பெ. அ. 251/IV → ஏழில்

**ஏர்க்களம் பாடுவோர்:** நெற்களத்தில் நின்று நெற்களம் பொலிக! என்று வாழ்த்திப் பாடும் பாணர் பிரிவினர்.

பொருநரும் ஏர்க்களம் பாடுநரும் (தொ. பொ. 91. நச்சர்)

**ஏர்மங்கலம்:** தலை உழவில் பொன்ஏர் பூட்டி ஏரைப் பாடும் மங்கலப் பாடல்; இஃது இசைப் பாடல்.

ஏரொடு நின்றார் ஏர் மங்கலமும் (சிலப். 10: 135)

அறுகையும் குவளையும் கலந்து கதிரொடு தொடுத்த மாலையை ஏரிலே சூட்டிப் பாருடைப்பனர்போல் ஏரொடு நின்றார் (மேலது. அரும்.)

ஏர் மங்கலம் பொலிய இனிது உழுநாள் (ஏர் எழுபது (1))

ஏர் பூட்டின் அல்லது மற்று

இரவியும் தேர் பூட்டானே (ஏர் எழுபது: கண்ணி (17)

ஏர் - கலப்பை.

← த. க. க. 308/I

**ஏலப்பாட்டு:** = கப்பல் பாட்டு, ஏலேலப்பாட்டு, ஏலேலோப்பாட்டு, ஓடப்பாட்டு, படகோட்டிப்பாடல், கட்டுமரப்பாட்டு

ஏலோ, ஏலேலோ எனும் சொற்கள் படகுக்காரர் பாடல்களில் மீண்டும் மீண்டும் வருவதால் இப்பெயர்.

← செ. ப. அ 565; த. இ. பே. 41/ 16

→ ஓடப்பாட்டு

**ஏலம்:**

1. வாசனை (க்கொடி)ப் பொருள், துடி, ஆஞ்சி
2. துடி: இசைக்கருவியுள் ஒன்று

ஏலமாந் துடியோடு ஆஞ்சி... (சூடா. 5: 34)

**ஏலா:** உலாவுதல், ஊஞ்சல் ஆடல், படகில் உல்லாசமாகச் செல்லுதலின்போது பாடப்படும் ஆளத்தி (ஆலாபனை) தொடங்கி பின்புதாளம், பாடல், அபிநயம் எனப் புனைவுடன் அமைந்த பாடல்.

← பரத. நாட். சாஸ். |Xi

**ஏலேலப்பாட்டு:** → ஏலப்பாட்டு

**ஏலேலோ:** படகு வலிக்கும்போது ஏலேலோ என்று சிலர் பின்பாட்டுப் பாடுவர். தாழிசை (சரணம்) யின் இறுதியில் மீண்டும் மீண்டும் ஏலேலோ என்று வந்து இசை இனிமை கூட்டும்.

**ஏலேலோப்பாட்டு:** → ஏலப்பாட்டு

**ஏவல் வியன் பணை:** போர்ப்பெரும்பறை பதிற்றுப்பத்தில் நாலாம்பத்து 9ஆம் பாடல் (39) தலைப்பு.

எடுத்தெறிந்து இரங்கும் ஏவல் வியன்பணை (பதிற். 39: 5)

பணை - போர்முரசும்.

**ஏழ்:** எழும் இசை.

இசைச்சுரங்கள் ஏழு என்ற மானிடர் கண்டுபிடிப்பால், ஏழாவது எண் ஏழ் என்று பெயர் பெற்றது.

← தே.நே. 39/IV

**ஏழ் சுரங்கள்:** இசையின் ஏழு சுரங்கள்.

| எண் | சுரம் | குறியீடு | வடமொழி |
|---|---|---|---|
| 1 | குரல் | கு | ச - சட்சம் (ஷட்சம்) |
| 2 | துத்தம் | து | ரி - ரிசபம் (ருஷபம்) |
| 3 | கைக்கிளை | கை | க - காந்தாரம் |
| 4 | உழை | உ | ம - மத்திமம் |
| 5 | இளி | இ | ப - பஞ்சமம் |
| 6 | விளரி | வி | த - தைவதம் |
| 7 | தாரம் | தா | நி - நிசாதம் ( நிஷாதம்) |

குடமுதல் இடைமுறையாக் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என விரி தரு பூங்குழல் வேண்டிய பெயரே (சிலப். 17: எடுத்துக்காட்டு)

**ஏழ்புணர் இன்னிசை:** ஏழுசுரங்களும் ஒன்றோ டொன்று சேர்ந்து இனிய இசையாகின்றது.

ஏழ் புணர் இன்னிசை... (கலித். 9: 18)

**ஏழ்புழை:**

1. ஏழு துளைகளையுடைய புல்லாங்குழல், வேய்ங்குழல், வங்கியம்.
2. ஏழுசுரப் பண்

எடு:-செம்பாலை (அரிகாம்போதி) - ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^1$

3. ஏழுசுரங்கள்
ஏழ்புழை, ஐம்புழை, யாழிசை கேழ்த்தன்ன (பரிபா. 8: 22)
புழை - துளை.

## ஏழ்புழை ஐம்புழை:

1. ஏழுசுரம், ஐந்து சுரம்
2. ஏழுதுளைகளையுடைய ஐந்து துளைகளையுடைய புல்லாங்குழல்
3. ஐந்து சுரப்பண் - பாணி (ஔடவம்)
ஏழு சுரப்பண் - பண் ( சம்பூரணம்)

ஏழ்புழை ஐம்புழை யாழிசை கேழ்த்தன்ன
இனம் வீழ்தும்பி வண்டொடு மிஞிறு ஆர்ப்ப (பரிபா. 8: 22–23)
(புழை - துளை) ← த. க. க. 310/I

## ஏழ்பெரும்பண்:

= ஏழ்பெரும் பாலை, ஏழு சாதிப்பெரும் பண், ஏழு மூர்ச்சனைக்கார மேளம்.
தமிழிசையின் 32 பாலைகளில் (தாய்ப்பண்), 7 பாலைகள் சிறப்பான பெரும்பண்கள், பெரும் பாலைகள் என்று கூறப்படுகின்றன. நடப்பிலுள்ள திறப்பண்களில் பல (சேய்ப்பண்கள் - ஜன்யராகம்) இவ் ஏழு பெரும் பண்களிலிருந்தே பிறக்கின்றன.
திறத்து வழிப்படூஉம்... (சிலப். 8: 43)
திறங்கட்குப் பிறப்பிடமாயுள்ள இச்சாதிப் பெரும் பண்கள்... (மேலது. அடியார்க்.)
→ ஏழ்பெரும்பாலை; பக். 473

## ஏழ்பெரும்பாலை:

யாழ் மற்றும் பாலை என்கிற 32 பெரும் பண்களில் சிறப்பான ஏழு பாலைகள்.
1) செம்பாலை - முல்லை, முல்லையாழ் - அரிகாம்போதி
2) படுமலைப்பாலை - குறிஞ்சி, குறிஞ்சியாழ் - நடபைரவி
3) செவ்வழிப்பாலை - நெய்தல், நெய்தல்யாழ் - இரு மத்திமத்தோடி
4) அரும்பாலை - பாலை, பாலையாழ் - சங்கராபரணம்
5) கோடிப்பாலை - மருதம், மருதயாழ் - கரகரப்பிரியா
6) விளரிப்பாலை ........ - தோடி
7) மேற்செம்பாலை ................ - கல்யாணி

நாற்பெரும் பண்ணும் எழுவகைப் பாலையும் (பெருங். 1: 37: 115)
செம்பாலை... படுமலை, செவ்வழி... அரும்பாலை,
... கோடி, விளரி, மேற்செம்பாலை... (சிலப். 3: 81 – 88)

குரல் குரலாயது செம்பாலை
துத்தம் குரலாயது படுமலைப்பாலை
கைக்கிளை குரலாயது செவ்வழிப்பாலை
உழை குரலாயது அரும்பாலை
இளி குரலாயது கோடிப்பாலை
விளரி குரலாயது விளரிப்பாலை
தாரம் குரலாயது மேற்செம்பாலை என வலமுறை
ஏழுபாலையும் கண்டு கொள்க (சிலப். 17: 13 அடியார்க்.)

உயிருயிர் மெய்யென உரைத்த ஐம்பாலினும்
உடல் தமிழ் இயல் இசை ஏழுடன் படுத்து...
(சிலப். 3: 45அடியார்க். மேற்.)

திருமணி வீணைக் குன்றத்து இழிந்த தீம்பாலை... (சீவக. 619:3)
பாலையாவன: செம்பாலை முதல் ஏழு பாலைகளையும் குறிப்பிடுகிறார்(உ. வே. சா. குறிப்பு)
புரிநரம்பின் கொளைப்புகல் பாலை ஏழும் (பரிபா. 7:77)
ஏழ்புணர் சிறப்பின் இன்தொடைச் சீறியாழ் (மதுரைக். 559)

← யா. நூ. 96;பிங். 1403 - 1409.→ ஏழ்பெரும்பண்[redacted]

## ஏழ்பெரும்பாலைவரிசை:

இணைமுறை (பஞ்சம பாவம்), கிளைமுறை (மத்திமபாவம்) பண் பெயர்ப்பு ஆகிய முறைகளில் பெறப்படும் ஏழு பாலை வரிசை மாறுவதில்லை.
இதை நினைவில் கொள்ளும் சுருக்கக் குறியீடு:
செம், படு, செவ்வழி, அரும், கோடி, விளரி, மேல்.

| | | |
|---|---|---|
| செம் - | செம்பாலை | - அரிகாம்போதி |
| படு - | படுமலைப்பாலை | - நடபைரவி |
| செவ்வழி - | செவ்வழிப்பாலை | - இருமத்திமத்தோடி |
| அரும் - | அரும்பாலை | - சங்கராபரணம் |
| கோடி - | கோடிப்பாலை | - கரகரப்பிரியா |
| விளரி - | விளரிப்பாலை | - தோடி |
| மேல் - | மேற்செம்பாலை | - கல்யாணி |

(பாடகர் சீர்காழி கோவிந்தராஜன் கூறியது).
← த. க. க. 250, III

இப்பண்களின் இக்காலப் பெயர்களின் சுருக்கக் குறியீடு:
அரி, நட, இரும, சங், கர, தோடி, கல்

| | |
|---|---|
| அரி | - அரிகாம்போதி |
| நட | - நடபைரவி |
| இரும | - இருமத்திமத்தோடி |
| சங் | - சங்கராபரணம் |
| கர | - கரகரப்பிரியா |
| தோடி | - தோடி |
| கல் | - கல்யாணி |

## ஏழன் அலகு:

= மிசுரலகு
ஐவகைத்தாள அலகுகளுள் ஒன்று. இது 3 + 4 என்ற பகுப்புகளை உடையது. ஒரு தட்டும் ஆறு எண்ணிக்கை யும் கொண்டது.
இதன் குறியீடு: $l_7$ (மிசுரம் = கலப்பு)
← த. க. க. 33/IV; த. க. க பக். V/I

## ஏழன் ஒற்றைத்தாளம்:

= மிசுர ஏகம்.
35 தாளங்களுள் ஒன்று. சாய்ப்புத் தாள வகையது. ஒரு தட்டும் ஆறு எண்ணிக்கைகளும் கொண்டது.
← த. க. க. 33/IV → ஏழன் தாளம்

## ஏழன் சாய்ப்பு:

→ ஏழன்தாளம்

## ஏழன் தாளம்:

= மிசுரதாளம், ஏழெண்ணிக்கைத்

தாளம், ஏழன் சாய்ப்புத் தாளம், மிசுரசாய்ப்பு (சாப்பு) இது சாய்ப்பு (சாப்பு) தாளங்களுள் ஒன்று. 3 + 4 என்ற எண்ணிக்கை உடையது. இரு உறுப்புகள் கொண்டது. ஒரு மூன்றன் அலகு + துரிதம் + துரிதம். சாய்ப்பு (சாப்பு) த்தாளம் என்று குறிப்பிட்டால் அது ஏழன் சாய்ப்பையே குறிக்கும்.

இதன் குறியீடு: $|_3 00 = 3 + 2 + 2 = 3 + 4 = 7$

← த. க. க. 33/IV

சாப்பு என்பது சாய்ப்பு என்பதின் திரிந்த வடிவம்.

**ஏழன் நடை:** → எழுமை நடை

**ஏழன்முறை:** → இணைமுறை

**ஏழாம் நரம்பு:** = இணைநரம்பு, பட்டடை நரம்பு, அகப்படு நரம்பு.

ஏழாம் சுரம்:- நின்ற நரம்பிற்கு அதை விடுத்து ஏறு நிரலில் ஏழாம் நரம்பு இணை நரம்பாகும்.

| ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |

0 - 7; ச - ப , 1 - 8; ரி$^1$ - த$^1$ இணைச்சுரங்கள்

ஏழா நரம்பிணை நாலு நட்பாகும்
ஐந்து கிளை ஆறும் மூன்றும் பகையே
(இசைமரபு நூற்பா. கல்லாடம்:100 உரை மேற்கோள்)

| ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |

1 - 8; ச - ப; தொடக்க வீட்டுச்சுரமும் எட்டாம் வீட்டுச் சுரமும் இணைச்சுரங்கள்.

← த. க. க. 311/I; → இணைநரம்பு

**ஏழிசை:**

1. இசையின் ஏழு சுரங்கள் - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்.

இதன் குறியீடு: கு, து, கை, உ, இ, வி, தா
ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ
ச ரி க ம ப த நி

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ வென்று
ஏழும் ஏழிசைக் கெய்தும் அக்கரங்கள் ( பிங்க. 1415)
சவ்வும், ரிவ்வும், கவ்வும், மவ்வும்
பவ்வும், தவ்வும், நிவ்வும், என்று இவை
ஏழும் அவற்றின் எழுத்தே ஆகும் (திவா. 1886)
இறுத்தானை ஏழு நரம்பின் இசை கேட்டானை
(தேவா. 6: 43: 10)
ஏழு நரம்பின் இன்னிசை கேட்டு இன்புற்றானை
(தேவா. 6: 54: 10)
ஏழுநரம்பின் இசை பாடல் இனிது... (தேவா. 6: 68: 10)
ஏழு நரம்பின் இசை இனிது... (தேவா. 6: 69: 10)
ஏழிசைச் சூழல்புக்கோ இறைவா (திருக்கோ. 4: 19)
இசை ஏழ் உகந்தார் (தேவா. 7: 19: 4)
குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என
(சிலப். 17 ( 13) : 8–10)
எழுமதி வாழி! ஏழின் கிழவ ! (பொருந. 63)

2. பண், ஏழு பெரும்பாலைகள்

**ஏழிசைக் கருவி:** யாழ்.

ஏழிசைக்கருவி வீற்றிருந்து (கம்ப. 6: 14: 101)

**ஏழிசைச் சூழல்:** இசை ஆராய்ச்சி மன்றம்.

ஏழிசையின் அடிப்படையாகிய இசை இலக்கணங் களை ஆராய் தலுக்கு எனக்கூடிய கூடல். ஏழ் இசை நரம்புகளையும் அவற்று வழிப் பிறக்கும் ஏழ்பெரும் பாலைகளையும் பிற பண் வகைகளையும் பற்றி ஆராய்ச்சி செய்த மன்றம்.

ஏழிசைச் சூழல் புக்கோ (திருக்கோவையாறு.20)

← த க. க. 313/I

**ஏழிசை நூற்சங்கம்:** ஏழிசை பற்றிய நூல்களுக் குரிய சங்கம் இருந்தது. இது வடிவம்பலம்ப நின்ற பாண்டியன் காலத்தில் இருந்தமை அறியலாகும்.

ஆழிவடிவம்பலம்ப நின்றானும் அன்றொரு நாள்
ஏழிசைநூற் சங்கத் திருந்தானும் (நளவெண்பா. 137)

← த. க. க. 315

**ஏழிசை பிறக்கும் முறை:** தமிழிசையின் அடிப் படைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி) பிறக்கும் முறை.

தாரத்துள் உழையும், உழையுள் குரலும்,
குரலும் இளியும் இளியுள் துத்தமும்,
துத்தத்துள் விளரியும், விளரியுள் கைக்கிளையும்
தம்மில் பிறக்கும் தகுதிய என்ப (பிங்க. 1411)

தாரத்துள் - உழை - நி$^1$ - ம$^1$
உழையுள் - குரல் - ம$^1$ - ச
குரலுள் - இளி - ச - ப
இளியுள் - துத்தம் - ப - ரி$^2$
துத்தத்துள் - விளரி - ரி$^2$ - த$^2$
விளரியுள் - கைக்கிளை- த$^2$ - க$^2$
செம்பாலை - ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^1$

தாரத்து உழை தோன்றப் பாலையாழ் (பஞ்ச (22)
தாரத்துள் தோன்றும் உழை (பஞ்ச. 17)

**ஏழிசைவாணர்:** கந்தர்வர்.

ஏழிசை வாணரும் சித்தரும் (சேதுபு. விதூம. 4)

← செ. ப. அ. 568

**ஏழில்**

1. இசை; ஏழ் சுரங்களால் ஆனது. (பாலை, மேளம்)
2. ஏழிலைப்பாலை, ஏழிலம் பாலை (கதி. அக.)

எம்மில் அயலது ஏழில் உம்பர் (குறுந். 138)

ஏழு பிரிவுகளாக இலையையுடைய மரவகை. (Seven leaved milk plant - Alstonia scholaris).

வேம்புவகை. . . ஏழிலைப்பாலை. . . ஆகியவை தூண்களுக்கும் உத்திரங்களுக்கும் மேலாகச் செய்யப்பெறும் வேலைகளுக்கு ஏற்ற மரங் களாக வகைப்படுத்தப் பெற்றுள்ளன. (கோபுரக் கலைமரபு. ப. 76)

ஏழிலைம்பாலை - இருட்பாலை - (seven leaved poon tree)

சிறப்பு மிகு பெண்டிர் தொடுகையால் மலரும் மலர்கள்: மகிழ், ஏழிலைம் பாலை (செ.ப.அ. 2982)

பூத்த ஏழிலைப் பாலையைப் பொடிப்பொடியாக... (கம்ப. 1:14:6)

ஏழிலைப்பாலை... குங்குமம் திரள்சோலை (சீராபு. 1:21: 6)

ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பின் (அகம். 152: 13)

இனமழை தவழும் ஏழில் குன்றத்து (அகம். 345: 8)

ஏழிற் குன்றத்துக் கவாஅன், கேழ்கொள (அகம். 349: 9)

ஏழிற் குன்றம் பெறினும், பொருள் வயின் (நற். 391: 7)

நிரை ஏழ் அடுக்கிய நீள் இலைப்பாலை (பரிபா. 21: 13)

↑ ஏழு சுரங்களைக் கொண்ட பண்கள், பாலை என்று பெயர் பெற்றது, ஏழ் பிரிவுடைய இலைகளைக் கொண்ட ஏழிலைப் பாலையால் என்று கொள்ளலாம்.

← செ. ப. அ. பிற் 168; Music in Cilapathikaram p.7

→ ஏழிலைக்கிழங்கு

**3. ஏழ்துளை இசைக்கருவி**

கோழி சிலம்பச் சிலம்பும் குருகு எங்கும்
ஏழில் இயம்ப இயம்பும் வெண் சங்கு எங்கும் (திருவா. 7: 8)

எரிந்தார் அனல் உகப்பர் ஏழில் இசை (தேவா. 6: 17: 9)

↑ ஏழில் என்பது இன்றைய நாகசுரத்தின் தொடக்க வடிவான திமிரி, முகவீணை (கட்டைக்குழல்) போன்றவற்றைக் குறித்திருக்கலாம்.

← செ. ப. அ. 568; பெ. அ. 269/IV

**4. நன்னனது குன்றின் பெயர்** (குறுந். 138)

## ஏழிலை:

சரக்கொன்றை மரம் (சித். பரி. அக. பக். 69)

## ஏழிலைக் கிழங்கு:

ஏழிலைப்பாலைக் கிழங்கு, வள்ளிக்கிழங்கு, குச்சிக்கிழங்கு, குள்ளி வள்ளி, கப்பக்கிழங்கு - (Topioca - whose leaves divide at top into 7 forks)?

ஏலப்பிலக்கிழங்கு - நெல்லை வழக்கு

ஏழிலைப் பாலைக்கிழங்கு என்பதின் திரிந்த வடிவம்.

↑ பாலை – 7 சுரப்பண் – பாலை என்ற தாவரப்பெயராகலாம்

→ பக். 473

## ஏழினும்:

இணைமுறை, ஏழன்முறை (பஞ்சமபாவம்)

ஏழாம் நரம்பு இணை... (கல்லா. 100 உரைமேற். இரைமரபு நூற்பா)

வரன்முறை மருங்கின் ஐந்தினும் ஏழினும் (சிலப். 8: 36)

## ஏழு:

இசையின் ஏழு கோவைகள் (சுரங்கள்)

எழுமதி வாழி! ஏழின் கிழவ (பொருந. 63)

## ஏழுஎழுத்துக்காலம்:

= ஏழு அக்கரக்காலம், ஏழு அட்சரக்காலம்.

ஒன்றே முக்கால் எண்ணிக்கை கொண்டது.

; ; ; , - 1¾ எண்ணிக்கை ; - அரை. , - கால்.

## ஏழுசாதிப்பெரும்பண்:

→ ஏழ்பெரும்பாலை

## ஏழுதந்தி தம்புரா:

இளி (பஞ்சமம்), சாரணி, அனுசாரணி இவற்றின் தந்திகள் இரட்டையாகவும் மந்தரத்தந்தி ஒன்றாகவும் ஆக ஏழு தந்திகளை உடையது. இது கேரளத்து சட்கால கோவிந்த மாரார் (1798 - 1843) அறிமுகப்படுத்தியது. இவர் கேரளக் கோவில்களில் சோபானம் பாடும் நிகழ்ச்சியில் இடக்கை வாசிக்கும் பாணர் பிரிவினர் (மாரார்)

## ஏழுதாள அங்கம்:

1) துருவதாளத்தின் அங்கம் - l o l l
2) அடதாளத்தின் அங்கம் - l l o o
3) ஒற்றை தாளத்தின் அங்கம் - l (ஏகம்)
4) திரிபுடை தாளத்தின் அங்கம் - l o o
5) உருவக தாளத்தின் அங்கம் - o l (ரூபகம்)
6) செம்புடை தாளத்தின் அங்கம் - l U o (சம்பை)
7) மட்டிய தாளத்தின் அங்கம் - l o l

(U = 1; o = 2)

## ஏழுதாளம்:

துருவம், அடம், ஒற்றை(ஏகம்), திரிபுடை, உருவகம்(ரூபகம்), செம்புடை(சம்பை), மட்டியம்.

## ஏழுபேரிசை:

= சுத்த சுரங்கள், மந்தர சுரங்கள், (Natural notes)

தமிழிசையின் அடிப்படைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி) என்ற பெரும் பண்ணின் 7 சுரங்களே ஏழு பேரிசைகளாகும்

அவை: ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^1$

ஏழிசை ஏழ் நரம்பின் ஓசையே (தேவா. 7: 83: 6)

(இசை - சுரம்)

## ஏழு மூர்ச்சனைக்காரமேளம்:

→ ஏழ்பெரும்பாலை

## ஏழுவிரல்:

புல்லாங்குழல் வாசிக்கப் பயன்படுத்தப்படும் ஏழு விரல்கள்

ஏழுவிரலாவன. இடக்கைப் பெருவிரலும் சிறுவிரலும் நீக்கி மற்றை மூன்று விரலும், வலக்கையிற் பெருவிரல் ஒழிந்த நான்கு விரலும் ஆக ஏழு விரலுமென்க. என்னை வளைவா யருகொன்று முத்திரையாய் நீக்கித்

துளையேழின் நின்ற விரல்கள் - விளையாட்
டிடமூன்று நான்குவல மென்றார் காணேகா
வடமாரு மென்முலையாய் வைத்து
(சிலப். 3: 26 அடியார்க். மேற்)

**ஏழெண்ணிக்கைத்தாளம்:** → ஏழன்தாளம்

**ஏழே ஏழே நாலே மூன்று:** *இது இருபத்தொரு திறப்பண் குறித்தது.*

*ஒரு பெரும்பண்ணிற்கு (மேளகர்த்தா) உரிய 21 கிளைப்பண்கள் (ஜன்யராகம்) பற்றிக் குறிப்பிடும் திருஞானசம்பந்தரின் திருத்தாளச்சதிப் பாடல் அடி.*

ஏழே ஏழே நாலே மூன்று... (தேவா. 1: 126: 11)

ஒப்பு: மூவேழு திறத்தையும் குற்றமின்றாக இசைத்துக் காட்டவல்ல (சிலப். 5: 35 - 7 அடியார்க்.)

→ எழுமூன்று திறம்

**ஏழொத்து:** *ஏழொத்துடைத் தடாரம் ; பண்டைத் தாளவகையுள் ஒன்று.*

*திருவாய்மொழி (2. 6) யின் தாளம்.*

**ஏற்றப்பாட்டு:** → ஏற்றம்

**ஏற்றம்:** = ஏற்றப்பாட்டு, இறவைப்பாட்டு, துலாப் பாட்டு, ஏத்தம்.

*ஏற்றம் இறைக்கும்போது பாடும்பாட்டை அடியொற்றி வெவ்வேறு கதைகளை உரைப்பது ஏற்றப்பாட்டு (முச்சந்தி இலக்கியம். 42)*

*எடு:- அரிச்சந்திரன் ஏத்தப்பாட்டு*

ஏற்றநீர்ப் பாட்டின் இசையினிலும்... (குயில் பாட்டு 35)

ஏற்றமுன்னா ஏற்றம் இதிலே இருக்குது முன்னேற்றம்
(பட்டுக்கோட்டை)

*மூங்கில்இலை மேலே தூங்கும் பனி நீரே*
*தூங்கும் பனிநீரை வாங்கும் கதிரோனே*
*(கம்பர் கேட்டு வியந்த ஏற்றப்பாட்டு. நாட். வழ.)*

விளைப்பகடு ஏற்றம் ஏழி கிணைத் தொடா (புறம். 388: 11)

ஆம்பியும் கிழாரும் வீங்கிசை ஏத்தமும் (சிலப். 10: 110)

நீர்த் தெவ்வு நிரைத் தொழுவர்
பாடு சிலம்பும் இசை ஏற்றத்தோடு (மதுரைக். 89–91)

... குளங்களில் நீரை இடாவான் முகந்துகொள்ளும் நிரையாக நின்று தொழில் செய்வோரிடத்தே ஒலிக்கும் ஓசை (மேலது. நச்சர்)

*இடா - இறைகூடை*

பேர் இடாக் கொள்ள முன் கலித்து (பெரியபு. இளையான்குடி 17)

*எண்ணிக்கை குறைஞ்சா ஏறாது ஒரு மூலை*
*பாட்டிலே குறைஞ்சா பாயாது ஒரு பக்கம்*
*(த. ப. வ. 466/III)*

*நான் இறைக்கப் போறேன் மாமரத்தின் கீழே*
*நீ குளிக்க வாடி பூ மரத்தின் கீழே*
*நான் இறைக்கும் தண்ணீர் பூ மணக்கும் பெண்ணே*
*நீ குளிக்கும் மஞ்சள் நிறம் கொடுக்கும் தோழி*

**ஏற்றழிவு:** *பாலைநிலம்.*

ஏற்றழிவும் கவலைச் சின்னெறியுமா இருப்பது
(சிலப். 11; 68-78. அடியார்க்.)

**ஏற்ற ஜாரு** → உந்தல்

**ஏற்றிறக்கு அடுக்கணி:** *இசைப் பயிற்சிகளுள் ஒன்று. ஏறுநிரல் இறங்குநிரல் அணி (ஆரோகண அவரோகண அலங்காரம்) ஏறுநிரல்இறங்குநிரல்பட இசைச்சுரங்களை அடுக்குவது.*

*சரிக - கரிச; சரிக - ஏற்றம்; கரிச - இறக்கம்*

**ஏற்று உரிமுரசம்:** *பகை விலங்கை எதிர்த்து வெற்றி கொண்ட காளையின் மயிர் சீவாத உரியால் (தோல்) ஆன முரசு.*

ஏற்றுரி போர்த்த இடி முரசின் (மணிமே. 1: 29)

ஏற்றுரி முரச நாண (சீவக. 2142)

சாற்றிடக் கொண்ட ஏற்றுரி முரசம் (பெருங். 1: 38: 100)

ஏற்றுரி முரசின் இறைவன் மூதூர் (பெருங். 1: 43: 195)

கொல் ஏற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த, மயிர்க் கண்முரசம்...
(மதுரைக். 732 – 33)

மயிர்க்கண் முரசொடு வான் பலியூட்டி (சிலப். 5: 88)

← *த. க. க 8/IV*

**ஏறங்கோட்பறை:** = ஏறங்கோள், ஏறுகோள்.

*முல்லை நிலப்பறை; ஏறுகொள் பறை; ஏறுதழுவும் போது கொட்டப்படும் பறை.*

ஏறங்கோள் முழங்க (சீவக. 489)

ஏறங்கோள்... பழஞ்சோறு எனவரும் (தொ. எ. 417. நச்சர்)

ஏறு தழுவுதற்குரிய முல்லை நிலப்பறை(இறைய. அகப். 1 உரை)

"ஏறங் கோட்பறை என்பதனால் பறையும்"
(முல்லைத் திணை கூறும்போது) (சிலப். பதிகம். அடியார்க்.)

முல்லை நிலப்பறை – அந்நிலப்பறை ஏறுகோள்... (பிங்க. 4: 97)

← *த. க. க. 319/I*

**ஏறங்கோள்:** → ஏறங்கோட்பறை

**ஏறியதாரம்:** = நிறைதாரம், வன்தாரம்

→ அந்தரத்தாரம்

**ஏறுகோள்:** → ஏறங்கோட்பறை

**ஏறுநிரல்:** =ஆரோகணம், ஆரோசை (Ascendng order).

*இசைச்சுரங்களின் ஏறுவரிசை.*

*ஏறுநிரல் - சரிகமபதநிச்*

நிரல் இயைந்து ஒன்றிய செலவின் (அகம். 400: 8)

→ ஆரோசை

**ஏறுநிரல் இறங்குநிரல்:** =ஆரோகணம், அவரோகணம், ஆரோசை அமரோசை. இசைச்சுரங்களின் ஏறுவரிசை, இறங்குவரிசை.
ஏறு நிரல் - சரிகமபதநிச்
இறங்குநிரல் - ச்நிதபமகரிச

**ஏறுபடி:** கோவில் விழாக்களில் வரும் மேளக்குழு (கோ.வ)
← பெ. அ. 285/IV

**ஏறுவரிசை:** → ஏறுநிரல், ஆரோசை

**ஏனை:** இசைவிகற்பத்துள் ஒன்று. (A musical note)
ஏனை சீர் இசை விகற்பம் என்ப (பிங்க. 1422)
ஏனை என்பது ஓர் இசை விகற்பம் ஆகும் (திவா. 1867)

**ஏனைய கும்பம்:** தெருக்கூத்தில் 'இருபது' என்ற எண்ணை மறைமுகமாகக் குறிக்கப் பயன்படுத்தும் சொல்.
← பெ.அக. 290/IV

**ஏனைய கும்பமிட்டான்:** தெருக்கூத்தில் 'இரண்டா யிரம்' என்ற எண்ணை மறைமுகமாகக் குறிக்கப் பயன்டுத்தும் சொல்.
← பெ. அக. 290/IV

**ஏனையமிட்டான்:** தெருக்கூத்தில் 'இருநூறு' என்ற எண்ணை மறைமுகமாகக் குறிக்கப் பயன்படுத்தும் சொல்.
← பெ. அக. 290/IV

# ஐ

**ஐ:** இசையின் ஏழு சுரங்களில் இளி (ப) எனும் ஐந்தாம் சுரத்திற்கான குறியீடு.
ஆ, ஈ, ஊ, ஏ, ஐ... ஏழிசைக்குரிய (திவா. 10: 154)

**ஐஞ்செயல்:** ஆடவல்லானின் ஐந்து செயல்கள்.
ஆக்கல், காத்தல், அருளல், மறைத்தல், அழித்தல் என்பன

**ஐந்தன் அலகு:** - கண்டலகு
தாளக்குறியீடு; ஒரு தட்டுதலும் நாலுவிரல் எண்ணிக்கைகளும். இதன் குறியீடு - |5
← த. க. க. 21/II; V/I

**ஐந்தன் சாய்ப்பு:** = கண்ட சாப்பு
சாய்ப்புத் தாளங்களுள் ஒன்று - 2 + 3 / 3 + 2
சாப்பு என்பது சாய்ப்பு என்பதின் திரிந்த வடிவம்.

**ஐந்தன் நடை:** = கண்டம், (Quintuple time - 5/5)
ஐம்மை நடை.
தகதகிட, தனதனன என்ற நடையில் வரும் தாளம்.
எடு:- போதிலார் திருவினாள்... (சிலப். 1: 26)
நிராமய புராதன பராபர வராம்ருத (திருப்புகழ்)
தலைவாரிப் பூச்சூடி உன்னை (பாவேந்தர்)

**ஐந்தன் நடை ஒற்றைத்தாளம்:** = கண்ட ஏகம், கண்ட சாதி ஏகதாளம்.
தகதகிட, தகதகிட, தகதகிட, தகததீம்
1 2 3 4 = 4 எண்ணிக்கை
1¼ 1¼ 1¼ 1¼ = 5 மாத்திரை
← த. க க 272/II

**ஐந்தன் முறை:** = கிளைமுறை, மத்திம பாவம்
. . . கின்னரம்போலக் கிளை அமைந்த
தீந்தொடையாழ்
அந்நரம்பும் அச்சுவையும் ஆய்ந்து (இறைய. கள. 360)
இதன் உரை: ...இணை, கிளை, பகை, நட்பு இனமென்னும் வகையின் ஐந்தாவதாகிய கிளைத் தொடர்ச்சி அமைந்த...
வரன்முறை மருங்கின் ஐந்தினும் ஏழினும் (சிலப். 8. 36)
→ கிளைமுறை

**ஐந்திசைப் பண்:** = திறம், பாணி, ஔடவம்
ஏறு நிரலிலும் இறங்கு நிரலிலும் ஐந்து சுரங்கள் கொண்ட திறப்பண்.
எடு:-
முல்லைத் தீம்பாணி (மோகனம்) - ச ரி² க² ப த²
← முதல் ஐந்திசைப் பண்

**ஐந்து எழுத்துக் காலம்:** தாளத்தின் ஐந்து அச்சர (அட்சர)க் காலம் - ஒன்றே கால் எண்ணிக்கை.
, , , , ,  ; ; ,  - 1¼ எண்ணிக்கை.
, - கால் எண்ணிக்கை - கால் மாத்திரை.
; - அரை எண்ணிக்கை - அரைமாத்திரை

**ஐந்து சிற்றிசை:** ரி¹ க¹ ம² த¹ நி² என்ற ஐந்தும் சிற்றிசைகளாகும். தமிழிசையின் அடிப்படைப் பாலையான முல்லையாழ் (அரிகாம்போதி) பெறும் சுரங்களே, ஏழு பேரிசைகளாகும்.
ஏழு பேரிசை - ச ரி² க² ம¹ ப த² நி¹
(இசை = சுரம்)
ஏழிசை ஏழ் நரம்பின் ஓசையே (தேவா. 7: 83: 6)

**ஐந்துதாள இனங்கள்:**
1. மூன்றன்தாளம் - திரிசுரம் - Triple
2. நான்கன் தாளம் - சதுசுரம் - Quadruple
3. ஐந்தன்தாளம் - கண்டம் - Quintuple
4. ஏழன் தாளம் - மிசிரம் - Septuple
5. ஒன்பான்தாளம் - சங்கீரணம் - Nonuple

**ஐந்து மண்டிலங்கள்:** இசை இயங்கும் ஐந்து இயக்குகள். (மண்டிலம் - ஸ்தாயி, octave)

| | | | |
|---|---|---|---|
| 1 | அதிமெலிவுமண்டிலம் | அனுமந்தரம் | ச̤ ரி̤ க̤ ம̤ ப̤ த̤ நி̤ |
| 2 | மெலிவுமண்டிலம் | மந்தரம் | ச̣ ரி̣ க̣ ம̣ ப̣ த̣ நி̣ |
| 3 | சமன்மண்டிலம் | மத்திமம் | ச ரி க ம ப த நி |
| 4 | வலிவுமண்டிலம் | தாரம் | ச் ரி் க் ம் ப் த் நி் |
| 5 | அதிவலிவுமண்டிலம் | அதிதாரம் | ச̈ ரி̈ க̈ ம̈ ப̈ த̈ நி̈ |

**ஐந்நிலப் பண்:** முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை, மருதம், என்ற ஐந்து பெரும்பண்கள்; ஐந்து பாலைகள் என்றும் பெயர் பெறும்.

| எண் | நிலம் | பெரும்பண் | பாலை | தற்காலப்பெயர் |
|---|---|---|---|---|
| 1 | முல்லை | முல்லையாழ் | செம்பாலை | அரிகாம்போதி |
| 2 | குறிஞ்சி | குறிஞ்சியாழ் | படுமலை | நடபைரவி |
| 3 | நெய்தல் | நெய்தல்யாழ் | செவ்வழி | இருமத்திம தோடி |
| 4 | பாலை | பாலையாழ் | அரும்பாலை | சங்கராபரணம் |
| 5 | மருதம் | மருதயாழ் | கோடிப்பாலை | கரகரப்பிரியா |

**ஐந்நிலப்பறை:** ஐந்து நிலத்திற்குரிய பறை வகைகள்.

| நிலம் | பறை |
|---|---|
| முல்லை | - ஏறுகோட் பறை |
| குறிஞ்சி | - தொண்டகப்பறை |
| நெய்தல் | - மீன்கோட்பறை |
| பாலை | - ஆறெறி பறை (சூறைகோட் பறை) |
| மருதம் | - கிணைப்பறை |

**ஐம்புழை:**

1. ஐந்து துளைகள் அமைந்த புல்லாங்குழல்
2. ஐந்து சுரம்
3. ஐந்து சுரப்பண்

எ-டு: முல்லைத் தீங்குழல் - மோகனம் - ச ரி² க² ப த²
மடகாஸ்கரில் துளை வேறுபாடுகள் அமைந்த பல்வகைப் புல்லாங்குழல்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

← PPTI 177

ஏழ்புழை ஐம்புழை யாழிசை கேழ்த்தன்ன (பரிபா. 8: 22)

(புழை = துளை)

→ ஏழ்புழை, ஏழ்புழை ஐம்புழை

**ஐம்பொன் கருவி:** = பஞ்சலோகக்கருவி, பொற்றாளம், அரங்கத்தாளம்.
தங்கம், வெள்ளி, பித்தளை, இரும்பு, ஈயம் என்னும் ஐந்து உலோகக் கலப்பால் செய்யப்படுகிறது. இது பெரிதும் இன்னோசை தரக்கூடியது ஐம்பொன்னால் தாளக்கருவிகள் செய்யப்பட்டன. இவற்றிற்குப் பொற்றாளம் என்றும் அரங்கத்தாளம் என்றும் பெயர்கள் உண்டு

(பொன் - உலோகம், metal)

← த. க க. 329/I

**ஐம்முக முழவு:** = பஞ்சமுக வாத்தியம், முழவம், குடமுழா, பஞ்சமகா ஓசை, பஞ்சமகா சத்தம்.
ஐந்து முகங்களையுடைய இசைக்கருவி. நடுமுகம் பெரியது. மற்ற நான்கும் சிறியவை. பசுத்தோல் போர்த்தியது. வடக்குமுகத் தட்டின் அருகில் நின்று வாசிப்பர்.

தடாவுடல் உம்பர்த் தலைபெறு முழவ
நான்முகந் தட்டி நடுமுகம் உரப்ப (கல்லா. 8: 15-16)
முகம் வேறு இசைக்கும் குடமுழவு இரட்ட (கல்லா. 21:34)
ஐந்து முகன் மணந்த முழவம் (கல்லா. 85: 20)

திருவாரூர், திருத்துறைப்பூண்டிக் கோவில்களில் இசைக்கப்படுகிறது

← த. க. க. 329/I

**ஐயமுற்றோன் அவிநயம்:** பொய்யில் காட்சிப் புலவோர் ஆய்ந்த, ஐயமுற்றோன் அவிநயம் உரைப்பின், வாடிய, உறுப்பு, மயங்கிய நோக்கமும், பீடு சுழி புலனும் பேசாதிருத்தலும், பிறழ்ந்த செய்கையும், வான்திசை நோக்கலும் அறைந்தனர் பிறவும், அறிந்திசினோரே (சிலப். 3: 13. அடியார்க். மேற்.)

**ஐயனுக்குப் பாடும் பாட்டு:** வரிக்கூத்தின் வகையுள் ஒன்று.
சிந்து... கொய்யுமுள்ளிப்பூ ஐயனுக்குப் பாடும் பாட்டு.. கோத்த வரிக்கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.

**ஐரோப்பிய ஏழு பாலைகள்:**

1) அரிகாம்போதி - Mixolydian - செம்பாலை
2) நடபைரவி - Aeolian - படுமலைப்பாலை
3) இருமத்திமத்தோடி - Hypophrygian - செவ்வழிப்பாலை
4) சங்கராபரணம் - Ionian - அரும்பாலை
5) கரகரப்பிரியா - Dorian - கோடிப்பாலை
6) தோடி - phrygian - விளரிப்பாலை
7) கல்யாணி - Lydian - மேற்செம்பாலை

**ஐலசா:** ஒலிக்குறிப்புச் சொல்(Refrain)
படகு வலிப்போர், பாரம் தள்ளுவோர் முழங்கும் ஒலிக்குறிப்புச் சொல்.

**ஐவகை இசைக்கருவி:**
தோல்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, கண்டக்கருவி.
... தோல், துளை, நரம்பு, கூறிடும் கஞ்சம், கண்டம் (சூடா. 12: 43)

**ஐவகைக் கால்:** = ஐவகைப்பாதம்
நாட்டியத்தில் ஆடும்போதான ஐந்து கால் நிலைகள். சமநிலை, உற்கடிதம், சஞ்சாரம், காஞ்சிதம், குஞ்சிதம்.

← சிலப். 3: 13 அடியார்க். உவேசா. அடிக்.

**ஐவகைச்சந்தி :** அவை முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு,துய்த்தல் என இவை... இவை ஐந்து சந்தியும் நாட்டியக்கட்டுரை (சிலப். 3: 13. அடியார்க்.)



**ஒக்கட்டு வெட்டல்:** *(ஒக்க + அடுத்து + வெட்டல்)*
*மத்தளத்தைத் தட்டியும் தேய்த்தும் ஒரே நேரத்தில் பொருந்த ஒலி எழுப்புகை.*
ஒரே சமயத்தில் ஒக்குமாறு அடுத்து வெட்டுதலே ஒக்கட்டு வெட்டல் (மத். 75. உரை)

**ஒக்கடித்தல்:** தாளம் கொட்டுதல்
கையால் அல்லது கைமணியால் தாளமிடுதல்; தாளத்தை ஒரே சீராய்க் கொட்டுதல். இடைவெளி ஒக்குமாறு அடித்தல் (த. க. க. 332/I)
*கொட்டி - ஒக்கடித்து (சீவக. 156. நச்சர்)*
காலமானக்கிரியை முதலிய பிறழாமல் கூத்துக் கேற்க ஒக்கடித்தல் (கல்லா: 22. உரை)
*(ஒக்க = ஒப்ப, இசைய)*
*← செ. ப. அ. 582/I*

**ஒக்கல்:** *பாணர் குழு, பாடற் குழு, நாடகக்குழு, பாண்கடும்பு*
இரும் பாண் ஒக்கல் கடும்பு புரந்ததூஉம் (புறம். 224)
இரும்பேர் ஒக்கலொடு ஒருங்கு இனிது அருந்தி (புறம். 320)
பண் அமை நல்யாழ்ப் பாண் கடும்பு அருத்தி (புறம். 170–13)
பாணர்காண்க இவன் கடும்பினது இடும்பை (புறம். 173–2)
உண்ணா வறுங்கடும்பு உய்தல் வேண்டின் (புறம். 181)
பாணர் ஒக்கல் (திருச்சிற். கோவை. 400)
காரென் ஒக்கல் கடும்பசி இரவல (புறம். 141)
இரும்பேர் ஒக்கலொடு திண்ம் எனத்தருதலின் (புறம். 150)

**ஒட்ட நாடகம்:** = ஒட்டராசா நாடகம்
*இது ஒரு நாட்டுப்புறக் கதை நாடகம். தரு, முதலிய இசைவடிவங்களுடனும் உரையாடலுடனும் நிகழ்த்தப் படும் கலை வடிவம்*
*(இசை நாடக மரபு. பக். 45)*
*(ஒட்டர் - ஒற்றர்)*

**ஒட்டராசா நாடகம்:** → ஒட்ட நாடகம்

**ஒட்டியம்:** *மிறைக்கவிகளுள் ஒன்று.*
இதழ் குவிந்து இயைந்து இயல்வதுவே ஒட்டியம் (மாற. அல. 275)
*← செ. ப. அ. 619/I*

**ஒட்டிய மேளம்:** *ஒட்டர் பயன்படுத்தும் இசைக்கருவி.*
*← செ. ப. அ. 585*

**ஒடக்கூறு:** → தவில்

**ஒடல்:** → உடல், தவில்

**ஒடிசி நடனம்:** = ஒரிசி நடனம்
*ஒரிசா மாநிலத்தில் (கலிங்க நாடு) ஆடப்படும் நாட்டியம். தேவதாசிகளான (மகரி) பெண்களும், ஆண்களும் (கோத்திப்புவர்) இந்த நாட்டியத்தை ஆடுகின்றனர். ஒடிசி ஆடல் நிலைகளை கொனாரக் சூரியகோவில் சிற்பங்களில் காணமுடிகின்றது.*

**ஒத்தளத்தல்:** → ஒத்தறுத்தல்

**ஒத்தறுத்தல்:** = ஒத்தளத்தல்
*(ஒத்து - தாளம்; ஒத்து + அறுத்தல்)*
1. *பாட்டின் சொல் அமைப்புக்குத் தாளச் சொற்கட்டு ஒத்து வரையறுத்துச் செல்வதே ஒத்தறுத்தல்.*
கைந்நிறைந்த ஒத்தறுத்து... (பெரியபு. சம்பந். 102/ 2005)
மன்னிய அன்பின்றும்... ஒத்துறுத்து மது தொட்டில் தாலாட்ட (மனோன்மணி. 4: 1: 109–111)
2. *தாள வரையறைசெய்தல்; தாள இடைவெளி வேறுபடாமல் செல்வது.*
வட்டித்தல், தட்டல், வட்டணை, ஒத்தறுத்தல் (பிங்க. 1459)
*← த. க. க. 333 - 34/I; இ. து. த. சொ. 36*

**ஒத்தாழிசை:** *கலிப்பா வகையுள் ஒன்று.*
*ஓசையாலும், பொருளாலும், அளவாலும் ஒத்த தாழிசைகள் மூன்றடுக்கி வருவது.*
ஒத்தாழிசைக்கலி, கலிவெண்பாட்டே
கொச்சகம், உறழொடு கலிநால் வகைத்தே (தொ. பொ. 129)
ஒத்து மூன்றாகும் ஒத்தாழிசையே (தொ. பொ. 4461)
*← த. இ. பே. 163/14*

ஒத்தாழிசைக்கலி விரிவு:




**ஒத்திகை:** நாடகம், நாட்டியம், இசை முதலியன அரங்கேற்றம் செய்வதற்கு முன் நடித்தும், ஆடியும், இசைத்தும் பார்க்கும் பயிற்சி *(ஆட். அக. ப. 240)*

**ஒத்திசை:** ஐரோப்பிய இசைமுறை(Harmonic music, Symphony) பல சுரங்களை, சுரத்தொகுதி (chord) களாக வரிசையில் இசைப்பது. அதாவது இசையின் பல சுரங்களை ஒரே நேரத்தில் இயக்கி அவற்றின் இணைப்பில் பிறப்பது ஒத்திசை.
← *த. க. க. 334/I , ப. ஆ. இ. 146*

**ஒத்து:**

1. தாளம்

ஒத்தளந்து சீர்தூக்கி ஒருவர் பிற்படார் (பரிபா. 12: 42)
... ஒத்துடனே மங்கலம் பாடுவார்... (ஆதி உலா. 11: 8: 50)
ஒத்து அறமிதித்து நடமிட்ட ஒருவர் (தேவா. 3: 76: 5)
திமித திமித திமி... துகு துகு துத்தென ஒத்துக்கள் (திருப்புகழ்)
துடிக விடிமிக ஒத்து முழங்கிட (திருப்புகழ்)

2. = கேள்வி, நரம்பு, குரல், தாது, ஆர்ப்பு, இமிர்பு, பற்று, ஓரிசை, ஒற்று, அலகு, மாத்திரை, கூட்டொலி, அடிப் படைக்குரல், பயிர்,பண், சுதி, சுருதி(Drone) அனைத்துக் கோவைகளையும் அவ்வகைகட்குரிய விழுக்காட்டளவில் ஒத்துஒலிக்கச் செய்வதற்கு அடிப் படையாய் நிற்கும் ஒலி(சுருதி)யாதலால் ஒத்து எனப்பெயர் பெற்றது *(த.வ. பக். 41)*

குரல் குரல் தும்பி அவிழ்மலர் ஊத (பரிபா. 21: 34)
ஒன்றல் சுரும்பு நரம்பென ஆர்ப்பவும் (வளையா. 72: 4)
மகரத்தின் ஒற்றால் சுருதி விரவும் (சிலப். 3: 26 அடியார்க்.)
இரங்கிசை மிஞிறொடு தும்பி தாது ஊத (கலித். 33: 2–3)
ஒரு திறம் யாணர் வண்டின் இமிர்இசை எழ (பரிபா. 17: 10)
ஒத்ததாக நிற்கும் நரம்பினை ஒற்று நரம்பு என்று கூறுவதுண்டு (ப. இ. இ. 81)
ஒற்றுறுப்புடைமையின் பற்று வழிச் சேர்த்து (சிலப். 13: 108)

3. நாகசுரத்துக்குக் கேள்வி (ஒற்றைச்சுருதி) கூட்டும் ஓர் ஊதுகுழல் (monophonous drone)

ஒத்தை ஊதுநரை ஏய்க்கும் (திருவாலவா. 49: 18)
ஒத்துகள் துடிகள். . . . முழக்கிட (திருப்பு. 899)
நாகசுரம் ஒத்து வகைக்கு பணம் 1க்கு
(TAS,V,P. 116-119; த. க. சொ. 351)
ஒத்து (ஊமைக்குழல்) என்னும் ஒரிசைக்குழல்
*(தே. நே. 300/IX)*

4. ஒருவகை ஆடல், அந்தரக் கொட்டு, முகம். திரைக்குப்பின் நாடக, ஆடல் மாந்தர் தொடக்கத்தில் வருவது.

இந்த ஒத்து ஆடிய பின்னர் அல்லது உருவு காட்டுகை வழக்கல்ல (சிலப்: 3. 147. அரும்.)
அத்தாளத்தாளம் அதில் அசை விற்கால் ஒத்து ஆடவே (திருமந். 3095)

**ஒத்துக்கவுத்துவம்:** → கவுத்துவம்

**ஒத்துக்குழல்:** = பகர்குழல், சுருதிக்குழல், சுருதிநாடி

ஒத்து (சுருதி) என்ற இசையின் அளவுகோலாக விளங்கிய குழல்கருவி.

ஒத்தகுழலின் ஒலி எழ... ஒத்து அளந்து சீர்தூக்கி
(பரிபா. 12: 40 – 42)
*(ஒத்த என்பது ஒத்து என்பதின் பாடபேதமாகலாம்)*
பகர்குழல் பாண்டில் இயம்ப (பரிபா. 15: 42)

**ஒத்துக் கூட்டுதல்:**= நல்லிசை நிறுத்தல்

சுருதி சேர்த்தல்.

→ ஒத்துடன் இசை

**ஒத்துச் சங்கு:** ஒத்தாக (சுருதி) ஒலிக்கும் சங்கு.
*சங்கு ஊத அதற்கு ஏற்ப பம்பை, நாகசுரம், தவில் முதலிய கருவிகள் முழங்கும்... இதில் ஒரே துளை இருப்பதால் ஒரே ஒலி எழுந்து ஒத்தாக நின்றது. ஒத்து இசைக்கருவிகளுள் சங்கே தொன்மையானது.*
←ப. இ. இ. 86-87

**ஒத்துடன் இசை:** ஒத்து (சுருதி)டன் இசை பாடுதல், இசைக்கருவி மீட்டல்.
**முரங்குகுரல் தும்பி அவிழ்மலர் ஊத**
**யாணர் வண்டினம் யாழிசை பிறக்க** (பரிபா. 21: 34:35)
*இதன் உரை: தும்பிகள் குரல் என்ற ஒத்து (சுருதி) ஊத வண்டுகள் கூடி யாழில் எழு இசையைப் பாடின.*
↑ **ஒத்துடன் (சுருதிக்கு) இசைபாடிய வரலாற்றை இப்பாடல் தெரிவிக்கின்றது.**

**ஒத்துதல்:** தாளம் போடுதல்.
**குணலைக்கு ஒத்தினபாணி** (கோயிற்பு. நட. 30)
(ஒத்து - தாளம்)

**ஒத்து நாடி:** → **பண் நாடி**

**ஒத்துமாற்றம் :** = சுருதிபேதம், (Modulation)
*ஒரு கட்டைக்குப் பாடிய பின் 1½, 2 என ஒத்து (சுருதி) மாற்றிப் பாடுதல். அதாவது அடிப்படைக் குரலை (ச) ஆதாரசுரமாக வைத்துப் பாடுவதிலிருந்து ரி, க போன்ற ஏனைய சுரங்களை ஆதார சுரமாக வைத்துப் பாடுவது.*

**ஓதுக்கம்:** = ஒருக்கல்
*அபசுரம்,* (defective note in music).
*பாடும்போது உரிமையல்லாத வேறு சுரம் ஒலிப்பது.*
**...மேல் ஒருக்கல்...** (திருவாலவா. 57: 26)
**...ஒருக்கி. ஒதுக்கம், புரைத்தல்**
**(இசை மரபு – திருவாலவா. 57:14 உரை. மேற்.)**

**ஒப்பக்கேட்கும்:** *இசையில் குரலும் இளியும் (ச, ப) ஒன்றிக்கலந்து கேட்பதற்கு இனிமை தரும்; இதை இணைமுறை (பஞ்சமபாவம்) என்றனர் பழந்தமிழர். ஒத்து (சுருதி) சேர்ப்பதும் இந்த இரு சுரங்களைக் காதால் கேட்டே செய்துள்ளனர். இந்த இரு சுரங்கள் சேர்ந்தாலே இனிய இசைச்சூழல் உருவாகி விடும்.*
**செவி நேர்பு வைத்த செய்வுறு திவவின்**
**நல்யாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்**
**மென்மொழி மேவலர் இன் நரம்பு உளர** (முருகு. 140–42)
**ஏற்றிய குரல் இளி என்றிரு நரம்பின்**
**ஒப்பக் கேட்கும் உணர்வினனாகி** (சிலப். 3: 59–60)
**குரல்வாய் இளிவாய்க் கேட்டனள்** (சிலப். 8: 35)
**இணை நரம்புடையன அணைவுறக் கொண்டு...** (சிலப். 3: 90)
**பட்ட வகைதன் செவியின் ஓர்த்து** (சிலப். 7: 16)
**இணை, கிளை, பகை நட்பு என்று இந்நான்கின்**
**இசைபுணர் குறிநிலை எய்த நோக்கி** (சிலப். 8: 33–34)

**ஒப்படி இருக்கை:** யாழை மீட்டுதற்கு அமரும் நிலைகள் ஒன்பதனுள் ஒன்று.
**ஒன்பான் விருத்தியுள் தலைக்கண் விருத்தி** (சிலப். 8: 25)
**இதனுள் விருத்தியென்பது இருப்பு** (மேலது. அடியார்க்.)
**பதுமுகம், உற்கட்டிதம், ஒப்படி இருக்கை...**
(அடியார்க். மேற்.)

**ஒப்பனை:** = அலங்காரம், அணி, கோலம், புனைவு
**மாலைமணி விளக்கங்காட்டி இரவிற்கோர் கோலம்...**
(சிலப். 9: 3–4)
**கோலம் - ஒப்பனை** (சிலப். 9: 1-4 அடியார்க்.)
**... உடுத்தும் புனைந்தும் ஒப்பித்த கோலம்**
(மேலது. அரும்.)
**தன்குலக் கோதிய தகை சால் அணியினர்** (சிலப். 26: 107)
**குலத்திற்கு ஓதிய ஒப்பனையினராய்** (மேலது. அரும்)
**படுநுகம் பூணாய் பகடே மன்னர் அடித்தளை நீக்கும் வெள்ளணி...**
(சிலப். 27: 228–229)
**வெள்ளணி - பிறந்த நாள் ஒப்பனை** (மேலது. அரும்)

**ஒப்பாரி:** = புலம்பல், ஒப்பு, மாரடிப்புப் பாட்டு, பிணக்கானம் (பிலாக்கணம்) கையறுநிலைப் பாடல், முதுபாலை, இரங்கற்பா, எழவுப்பாட்டு, விண்ணாலம், கைலாசப்பாடல்
*இறந்த ஒருவரை இந்திரனுக்கும் சந்திரனுக்கும் ஒப்பு வைத்துப் பாடுவது.*
**கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ**
**ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்** (தொ. பொ. 77)
**தனிமகள் புலம்பிய முதுபாலையும்** (தொ. பொ.77)
*ஒப்பு + ஆரி - ஒப்பாரி*
*மயில் + ஆரி - மயிலாரி - மல்லாரி*
← *ஆந்திரநாட்டார் வழக்காற்றியல்.*
*ஒப்பு: - இணை*(equal, peer, similarity) *வைத்தல், ஒப்பு + வரி(ப்பாட்டு) எனவும் கூறுவர். ஏற்றிப்பாடுதல்*
*சிலம்பு:-* **ஊர் சூழ்வரி அடி 3–14; 40–59;** *முதலியன மற்றும் துன்ப மாலையுள் வரும்* **'இன்புறு தன் கணவன், நறைமலி, தம்முறு பெருங்கணவன்'** *ஆகிய தாழிசைகள் ஒப்பாரிப் பாடல்கள்.*

**ஒப்பு:** → **ஒப்பாரி**

**ஒய்யாரம்:** *ஆடல் வகையுள் ஒன்று. ஒயில் கும்மி (?)*
**வீசாணம். . . பூசாணமாம், உலா, ஒய்யாரம், அடம்பை**
(நீர. நிக. 5: 12)
← *பெ. அ. 367/IV*

**ஒயில்:** → **ஒயில்கும்மி**

**ஓயில்கும்மி:** = ஒயில், ஒய்யாரம், ஒயிலாட்டம். நாட்டார் ஆடல் வகையுள் ஒன்று.

1. இது கும்மி வடிவத்துள் ஒன்று. ஆடவர்க்குரியது. மேல் துண்டு அல்லது கைக்குட்டையை வீசிக்கொண்டு பாடலின் தாளத்துக்கேற்ப அடி வைத்து குதித்தாடும் நாட்டார் ஆடல் வகை.
உடுக்கு, கஞ்சிரா, புல்லாங்குழல், கைச்சதங்கை, கைத்தாளம்,, உடலம் (டோலக்) பயன்படுத்தப் படுகிறது. தெம்மாங்கு, நொண்டிச்சிந்து, காவடிச் சிந்து, கிளிக் கண்ணி முதலிய வடிவங்களில் பாடல் பாடப்பெறும். குத்தடைவு, தட்டடைவு, நட்ட டைவு, சுற்றடைவு தாண்டடைவு, துள்ளல் அடைவு முதலிய அடைவுகள் இந்த ஆடலில் காணப் படுகின்றன.
மும்மையில் விரையும் முடுகியல் தாங்கியும், எதுகையும் இயைபும் இடை இடை மிடைந்தும், ஒலி சிறந்திசைப்பது ஒயில் கும்மியாகும் (சிந்துப் பாவியல். 92-93)

← கவிஞராக 296-97

2. ஒயில் ஆட்டத்தில் பாடப்படும் பாட்டு.
எடு:- முருகன் ஒயில் கும்மி.
← செ. ப. அ. 596; தே.நே. 106/III; த. இ. பே. 43/16; த. க. க 337/I

**ஓயிலாட்டம்:** → ஓயில்கும்மி

**ஓரிசி நடனம்:** → ஓடிசி நடனம்

**ஓரியல்:** தாள ஓரியல்.
தாளக்கருவியாளர் ஒன்றுபட்டு முழக்கும் முழக்கு. மோரா, முத்தாய்ப்பு எனும் பகுதிகளுக்கு இவ்வாறு முழக்கப்படும்.
தாள ஓரியல் என்பனவும்... (சிலப். 3: 16. அடியார்க்.)
(ஓரியல் - ஒற்றுமை; ஒன்றாக இயல்வது)

**ஒருக்கல்:** → ஓதுக்கம்

**ஒருகட்பகுவாய்:** = பதலை, ஒரு கண் மாக்கிணை, ஒருவாய்க்கோதை, ஒருவாய்ப்பறை.
ஒரு கண் பறை; இருகண் முழவை இரண்டாகப் பகுத்து ஒருகண் பறையாக ஆக்கியது.
பதலை ஒரு கண் பையென இயக்குமின் (புறம். 152: 16)
மரக்காலன்ன ஒருவாய்க்கோதை (கல்லா. 8: 27)
ஒரு கண் மாக்கிணை ஒற்றுப்பு கொடாஅ (புறம். 392: 5)
பகுவாய் – பக்கவாட்டிலும் விரிந்தவாய்; வாய் – திறப்பு வாயில்
← செ. ப அ. 597; பெ. அ. 370/IV.→ ஒருகண் பறை

**ஒருகண் பறை:** ஒருமுகப்பறை இது ஒரு பக்கம் மட்டும் முழக்கப்படும் முழவு.
எ-டு: கிணைப்பறை, கஞ்சிரா, தப்பு.
ஒருகண் பறை (புறம்: 394. உரை)
ஒருகண் மாக்கிணை ஒற்றுப்பு கொடாஅ (புறம். 392–5)
← த. க. க. 340/I

**ஒருகண்மாக்கிணை:** → ஒருகட்பகுவாய்

**ஒருகளை:** = ஒருகளைச் சவுக்கம் என்பது தாளத்தின் ஓர் எண்ணிக்கைக்கு நாலு குறில்கள் அடைக்கப் பெறுவது.

த க தி ன
¼ ¼ ¼ ¼ = 4 x ¼ = 1

இதன் அடையாளம் - 4/4
(குறில் - ¼ எண்ணிக்கை; நெடில் - ½ எண்ணிக்கை)

**ஒருகளைச்சவுக்கம்:** → ஒருகளை

**ஒருசீர் செந்தூக்கு:** செந்தூக்கு என்பது பழைமையான தாளமுறைகளில் ஒன்று.
தூக்கும் என்றது - இத்தாளங்களின் வழிவரும் செந்தூக்கு. ... ஒருசீர் செந்தூக்கு. . . (சிலப். 3: 16அடியார்க். மேற்)
தூக்காவது தாக்கித் தூக்குதல்... (சிலப். 14: 150. அடியார்க்.)

**ஒருதூக்கு இன்னியம்:** தாளத்தின் வழிப்படும் ஒரு தூக்கினையுடைய வாச்சியம்.
வேறுபல் குரல ஒரு தூக்கு இன்னியம் (அகம். 382: 4)

**ஒருநெடில் இருகுறிலாக:** இசையில் ஒருநெடில் இருகுறிலாகவும், இருகுறில் ஒரு நெடிலாகவும் கணக்கிடப்படும்.
எடு:– வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும் (தேவா. 6:18:1)
தகதகிட தகதகிட ததீம் ததீம்
வடிவேறு என்பதிலுள்ள 'வே' என்ற நெடிலும், திரிசூலம் என்பதிலுள்ள 'சூ' என்ற நெடிலும் இருகுறிலாகக் கணக்கிடப்பட்டுள்ளன.
குறுமையும் நெடுமையும், அளவில் கோடலின்
தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல (தொ. எ. 50)
இருகுறில் ஒருநெடில்போல அளவுபெறும்.
எடு:- பகுதி > பாதி

**ஒருபா ஒருபஃது:** அகவல், வெண்பா, கலித்துறை என்பனவற்றுள் ஏதேனும் ஒருபாவில் பத்துப்பாடல்களால் அமைந்த சிற்றிலக்கியம்.
← இலக். வி. 823

**ஒருபொருள்மேல்மூன்றடுக்கி வந்த ஒத்தாழிசை:**→ ஒத்தாழிசை

**ஒருபோகு:** ஒத்தாழிசைக்கலியுள் ஒன்று. தரவு, தாழிசை, வண்ணகம் (அராகம்) எண் (அம்போதரங்கம்), தனிச் சொல், சுரிதகம் ஆகிய கலி உறுப்புகளில் ஓர் உறுப்பு நீங்கிவரின் ஒருபோகு. கொச்சக ஒருபோகு அம்போதரங்க ஒருபோகு என்று ஒருபோகு இருவகைப் படும்

ஒரு போகு இயற்கையும் இருவகைத்தாகும் (தொ. பொ. 450)
ஒரு போகு வெண்பாக்கலித்துறை (இலக். விள. 812)
தரவு இன்றாகித் தாழிசை பெற்றும்...
கொச்சக ஒருபோகு ஆகும் என்ப (தொல். பொ. 452)

**ஒருமுக எழினி:**
ஒருபக்கத்திலிருந்து இயங்கும் நாடக அரங்கின்திரை
ஒருமுக எழினியும் பொருமுக எழினியும்
கரந்துவரல் எழினியும் புரிந்துடன் வகுத்தாங்கு
(சிலப். 3:109– 10. அடியார்க்.)
ஒருமுகம் - ஒருபக்கம்

**ஒருமுற்று இரட்டை:** ஓரடி முற்று எதுகையாய் வருவது; அனைத்துச் சீர்களும் எதுகை பெறுவது
← ச.ெ ப. அ 602

**ஒருவாய்க் கோதை:** = மரக்கால் பறை, ஒரு கண் பறை, ஒருவாய்ப்பறை, அம்பணம், ஒரு கட் பகுவாய் மரக்கால் வடிவான ஒருமுகப்பறை.
மரக்கால் அன்ன ஒருவாய்க்கோதை (கல்லா. 8: 27)
← த. க. க. 340/I

**ஒருவாய்ப்பறை:** → ஒருகட்பகுவாய்

**ஒரூஉக் கோவை:** = வர்ஜசுரம்.
ஒரு பண்ணில் சில கோவை நீக்கப்பட்டு கிளைப்பண் உருவாக்கம் பெறுகின்றது. அவ்வாறு நீக்கப்பட்ட சுரம். ஒரூஉக் கோவை.
ஒரூஉ - விலகியது; விலக்கப்பட்டது.
ஒப்பு: ஒரூஉ மோனை. ஒருவுதல் - நீங்குதல்
← இ து. த. சொ. ப 17

**ஒரூஉத் தொடை:** பாடல் அடியில் நடு இருசீர்கள் தவிர முதல் மற்றும் நான்காம் சீரில் மோனை முதலாயின தொடை வரத் தொடுப்பது.
← இலக் விள. 722

**ஒரூஉப் பண்:** = குறைச்சுரப்பண் (வர்ஜராகம்)
பண்களுக்குரிய சுரங்களில் ஒன்றோ சிலவோ நீக்கம்பெற்று உருவாக்கப்பெறும் கிளைப்பண் (ஜன்யராகம்)
எடு:- செம்பாலை (அரிகாம்போதி)யில் 'ம' மற்று 'நி' சுரங்கள் நீக்கப்படும்போது முல்லைத் தீம்பாணி (மோகனம்) வருவதால் முல்லைத் தீம்பாணி ஒரூஉப்பண்
செம்பாலை (அரிகாம்போதி) - ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^1$
முல்லைத்தீம்பாணி (மோகனம்)- ச ரி$^2$ க$^2$ ப த$^2$
← இ. து. த. சொ, 17 & 22

**ஒரூஉ வண்ணம்:** ஆற்றொழுக்காப் பொருள் கொண்டு செல்லும் சந்தம்.
பாஅ வண்ணம்... ஒரூஉ வண்ணம்... (தொ. செய். 514)
← செ. ப. அ. 603

**ஒலி:**
1. ஒழுங்குபட்ட ஓசை என்பது ஒலி.
ஒழுங்குபடாதது ஓசை : எடு:- இடியோசை.
ஓசை, காற்று, இடி (சூடா. 11. லகர. 5)
ஓசை... ஒலி என் கிளவி ... (திவா 1896)
ஓசை ஒலி எலாம் ஆனாய் நீயே (தேவா. 6: 38: 1/ 6623)
சுருதி... ஒலியினைப் பகரும் (திவா. புதுநூற்பா. 280)
ஒத்து (சுருதி) என்பது ஒரே அளவுள்ள துடிப்பலை கொண்டது. அதுவே ஒலி என்பது.
எ-டு: குரல் ஒலி, முழவொலி
ஓசை - பொருளற்றது. ஒலி - பொருளுள்ளது (அப்பர் தேவாரம் காசித் திருமடம் பக் 105)
→ ஓசை

2. பண்: ஒழுங்குபட்ட ஓசை (சுருதி - ஒலி) களால் இணைவதால் பண் இனிமை பெறுகிறது.
ஒலிகொள் இன்னிசைச் செந்தமிழ் பத்தும் (தேவா. 7: 67: 11)

3. பாடல், இசை
யாழொலி (தேவா. 2: 12: 3)
ஒலி செய்த குழலின் முழவ (தேவா. 3: 121: 8)
ஒத்த குழலின் ஒலி எழ (பரிபா. 12: 40)
← த. க. க 341 - 42/I

**ஒலி குறித்த சொற்கள்:**
அரவம், களன், ஓதை, ஆகுலம், ஆரவாரம், சுருதி, கோடனை, புலம்பு, தொனி, இயம், துழனி, ஓசை, உரை, இசை, இடி, நாதம், கோசணை, பாடு, இரை, அம்மை, வகுணி (சூடா. 10: 44)

**ஒலி அடர்த்தி:** → ஒலிச்செறிவு

**ஒலி அந்தாதி:** = ஒலியல் அந்தாதி.
ஈண்டிய முப்பதாய் ஈரெண் கலைவண்ணம், மூண்டது ஒலி அந்தாதி
(வெண்பாப். செய். 36)
← செ. ப. அ. 605

**ஒலிச்செறிவு:** = ஒலிஅடர்த்தி - (Density of sound)
யாழ், கின்னரி முதலிய கருவிகளின் ஒலியை விட குழல் ஒலி அடர்த்தி மிக்கது. நெருக்கம், செறிவு

உடையது. எனவே நரம்பு ஒலியை விட மேலோங்கி நிற்கும்.

← த. க. க. 343/I

**ஒலித்தரம்:** ஒலியின் ஒத்து, சுருதி (pitch of the sound) ஒரு நொடியில் ஒலி எத்தனை அதிர்வுகளைக் கொண்டுள்ளதோ அதுவே ஒலித்தரம்.

$த^2$ என்ற விளரி நரம்பிற்கு - 440 HZ (440 vibs./ second) என உலகளவில் தரப்படுத்தப்பட்டுள்ளது. இதனின் றும் ஏனைய சுர அளவுகள் கணக்கிடப் பட்டுள்ளன.

← The New Harward. Dic of Music 1986 p. 638, Ox Con Dic.of Music 2007 p 583, த. க. க. 343/I

**ஒலித்தல்:** = ஆலுதல், இசைத்தல், இயம்புதல், ஏங்குதல், முரலுதல், சிரற்றல், கலித்தல்.

இருங்குயில் ஆல இன வண்டு யாழ் செய (சிலப். 26: 112)
வழுவின்று இசைக்கும் குழலோன் தானும் (சிலப். 3: 69)
முரசு இயம்பின முருடு அதிர்ந்தன (சிலப். 1: 46)
ஏங்கிய மிடறு இசைவன கேட்ப (சிலப். 3: 51)
மோது முது... முரல் வாய்ச்சங்கம் (சிலப். 7: 7)
சிரற்றல்... ஒலித்தலுக்கு ஏற்கும் (திவா. புது. 279)
கலித்தல் ஒலித்தலை இசைக்கும் (திவா. 1895)

ஒலித்தலைக் குறிக்கும் சொற்கள்:

சிரற்றல், தொனித்தல், தெழித்தல், குமிறல், விம்மல்
உரற்றல், அரற்றல், உரைத்தல், உளைத்தல், ஏங்கல்
இரைத்தல், இரட்டல், இடித்தல், இமிழ்தல், குரைத்தல்
முழக்கல், குளிறல், இசைத்தல் (சூடா. 10: 46)
சிலம்பல், இயம்பல், சிலைத்தல், துவைத்தல், அலம்பல்
கறங்கல், அழுங்கல், தழங்கல், சிலும்பல், கலித்தல்
தெவிட்டல், கனைத்தல், உலம்புதல், புலம்பல் (திவா. 1895)

**ஒலித்தன்மை:** (Timbre of the sound, Tonal colour, Quality of the sound)

குழல், யாழ் போன்ற கருவிகளின் ஒலி, மக்கள் பேச்சு ஒலி மற்றும் பல்வேறு ஒலிகளிலும் ஒலிப்பது எது அல்லது யார் என இனம் காண முடியும் தன்மையே ஒலித்தன்மை

← த. க க. 343/I

**ஒலி நீள்காலம்:** ஓர் ஒலி, ஒலிக்கும் காலஅளவு (Duration of the sound)

மரக்கட்டையின் மேல் தட்டுதலால் கிட்டும் ஒலியைக் காட்டிலும், வெண்கலம், ஐம்பொன் (பொற்றாளம்) மேல் தட்டுதலால் எழும் ஒலி நீண்டு ஒலிக்கும்

← த. க. க. 343/I

**ஒலிப்பதிவு:** கருவிகள் மூலம் ஒலியைப் பதிவு செய்யும் பணி. தட்டு, நாடா, குறுந்தகடு, மின்னணுச் சில்லு (Electronic chip) என்று ஒலிப்பதிவுமுறை வளர்ச்சிபெற்று வருகின்றது.

**ஒலிமானி:** ஒலி(அதிர்வு)யை அளக்கும் கருவி, (Tuning fork)

மானம் - அளவு; மானம் > மானி

**ஒலியல் அந்தாதி:** → ஒலிஅந்தாதி

**ஒழி இசை:** ஒழி இசை எச்சமான மூன்று: அவை. மன்னை ஒழி இசையும் தில்லை ஒழி இசையும். ஒகார ஒழி இசையும் என... (தொ எச். 428 இளம்

தம்முடைய... எம்மை நினையாது விட்டாரோ... (சிலப். 7: (32)
விட்டாரோ - ஒகாரம் ஒழி இசை (மேலது. அரும்)

**ஒழுகிசை:** இடையறாது வரும் இசை.

பண்ணிசை, தொடர் இசை, நேர்கோட்டு இசை, (contineous music, linear music, Horizontal music, melodic music).

1. விட்டுவிட்டு இசையாமல் நீர் ஒழுகுவதுபோல் தொடர்ந்து இடையறாது ஒலித்துச் செல்வது.

ஒழுகு - தொடர்ந்து வரல் (to flow contineously as a stream)

ஒப்பு:- கோயில் ஒழுகு. (ஒழுகு - வரலாறு, தொடர்ந்து வரும் நிகழ்வுகள்).

இன்னிசையாம் ஒழுகிசைமரபு (melody) இந்திய இசைக்கான தனி மரபு. இது தமிழர் இசைமரபு. இணை, கிளை, நட்பு என்ற உறவுள்ள சுரங்களை ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கிப் பிறப்பிக்கும் (இராகம் அல்லது) பண்ணிசை ஒழுகிசையாகும்

இழுமென் மொழியான் விழுமியது நுவலினும் (தொ. பொ. 539)
ஒழுகல் என்பது நெடுமைப் பண் புணர்த்தும் (சிறுபாண். 21: உரை)

2. ஒழுங்குபட்ட இசை. ஒழுகிய- ஒழுங்குபட்ட

உவலைக் கூரை ஒழுகிய தெருவில் (முல்லைக். 29)

← த. க. க. 344/I ; ப. ஆ. இ. 146,→ இசை யொழுக்கம்

**ஒழுகிசை அகவல்:** நேரொன்றாசிரியத் தளையும், நிரையொன்றாசிரியத் தளையும் விரவிவந்த அகவல் ஓசை.

← யா. கா. செய். 1; செ. ப. அ 607

**ஒழுகிசைச் செப்பல்:** இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை இரண்டும் விரவிவந்த வெண்பாவின் ஓசை.

← யா. கா. செய். 1; செ ப. அ. 607

**ஒழுகு வண்ணம்:** ஒழுகிய ஓசையால் செல்லும் சந்தம்.

ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும் (தொ. பொ. 527)

பதிற்றுப்பத்தின் 68 பாடல்கள் ஒழுகு வண்ணங் களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

பாடல் எண்: 11 - 13, 15 - 18, 21, 23 - 24, 27 - 49, 52 - 68. 70, 72 - 81, 83 - 89.

சிலம்பு கானல்வரியின் ஆற்றுவரிப் பாடல்களான (2), (3), (4)ஆம் பாடல்கள் இவ்வண்ணத்தில் அமைந்தவை. இவை மூன்றும் ஆற்றுவரி. வண்ணம் ஒழுகு வண்ணம்
(மேலது: அரும்.)

## ஒள்வாள் அமலை: = அமலை

1. வெற்றி நடனம், வென்றிக்கூத்து

வாள் அமலை - வாளை உயர்த்தி ஆடும் கூத்து.

போர்க்களத்தில் வெற்றிக்குப் பின் வீரர் வாளை உயர்த்திச் சுழற்றி ஆடுதல். அரசன் வாளைச் சுழற்றுவதோடு வீரக்கழல் அணிந்த வீரர்களும் இணைந்து ஆடும் ஆடல்.

வலம்படு முரசம் துவைப்ப வாள் உயர்த்து (பதிற். 56: 4)
வடிவாள் விதிரா வயவர்... அயர்ந்த ஒள்வாள் அமலையும்
(இலக். வி. 611)
களிற்றுஉடனிலையே ஒள்வாள் அமலை (புறப்:வெண். 7; 9)
ஒள்வாள் அமலை ஆடிய ஞாட்பின் (அகம். 142: 14)

2. புறத்திணையுள் ஒன்று

பட்ட வேந்தனை அட்ட வேந்தன்
வாளோர் ஆடும் அமலையும் (தொ. பொ. 72)

← த. வீ. க. 272), → அமலை

## ஒளியுடைப்பாணி: = விருந்திற் பாணி

புதிய பாடல்; புதிய பண்

ஊரகத்தேரும் ஒளியுடைப் பாணியும்
வெண்கட் தொலைச்சிய விருந்திற் பாணி... (சிலப். 10: 131)

ஒளியுடைப் பாணி: வெங்கட் தொலைச்சிய விருந்திற் பாணி. ... கள்ளை உண்டு தொலைத்ததனால் உண்டான பண் நிறத்தில் சேர்ந்து பழகிப் போகாத பாட்டுமென்க... தம் இசையில் புதுமை உண்டாகப் பாடும் பாட்டெனினும் அமையும் (மேலது: அடியார்க்.)

## ஒற்றளபு: → ஒற்றளபெடை

## ஒற்றளபெடை: = ஒற்றளபு, ஒற்றளவு

மெல்லின மற்றும் குறிப்பிட்ட இடையின மெய்கள் தமக்குரிய மாத்திரையினின்றும் கூடுதலாக ஒலிப்பது. ங் ஞ் ண் ந் ம் ன் ய் ல் வ் ள் ஆகிய பத்து மெய்களும், ஆய்தமும்(குறிலை அடுத்தும் இரு குறிலைஅடுத்தும்) தமக்குரிய அரைமாத்திரை அளவிலிருந்து ஒரு மாத்திரையாக ஒலிப்பது (Lengthening of the pure consonants)

... ஒற்றிசை நீடலும் (தொ. எ. 33)
ஒற்றளபாய் விடின் ஓரலகாம் (யா.கா. 51)
குற்றியல்... ஒற்றளவு பதினொன்று... (இலக். விளக். 5)
**ங, ஞ, ண, ந, ம, ன, வ, ய, ல, ள** ஆய்தம் அளபு ஆம் (நன். 92)
கொல்ல் ஏற்றின் மருப்புப் போன்றன (புறம். 4: 4)
செம்ம் பிறப்பும் வெண்ண் பிறப்பும் (நீலகேசி)

குற்றெழுத்தை அடுத்த ஒற்றளபெடை:
மங்ங்கலம், மஞ்ஞ்சு, மண்ண்ணு, பந்ந்து, அம்ம்பு, மின்ன்னு, வெய்ய்யர், செல்ல்க, தெவ்வ்வர், கொள்ள்க, எஃஃகு.

இரண்டு குறிலை அடுத்த ஒற்றளபெடை:
அரங்ங்கம், முரஞ்ஞ்சு, முருண்ண்டு, பருந்ந்து, அரும்ம்பு, முரன்ன்று, குரவ்வ்வை, அரய்ய்யர், குரங்ங்கர், திரள்ள்கள், வடிஃஃகு.

ஒற்றெழுத்து அளபெடுத்தால் ஒரு மாத்திரை அலகு பெறும்.

கண்ண் டண்ண் எனக் கண்டும் கேட்டும் (மலைபடு. 52)

கண் - ஓரசை
கண்ண், டண்ண் - நேர்நேர் - தேமா - ஈரசையாகிறது எனவே ஆசிரிய யாப்பு வழுவாது வந்தது.
(கண்ண் - 1 + ½ + ½ = 2 மாத்திரை)

← செ. ப. அ. 610, → ஒற்றிசை நீடல்

## ஒற்றளவு: → ஒற்றளபெடை

## ஒற்றறுத்தல்:

1. தாளம் இடுதல்

ஒற்று - தாளம்; ஒற்று - ஒத்து

வட்டித்தல் ஒற்றறுத்தல்... தாளம் போடுதலின் பெயரே
(சூடா. 9: 54)
ஒற்றி அறுப்பன (திருப்புகழ் .பூதவேதாள)
ஒற்றுறுப் புடைமையின் பற்றுவழிச் சேர்த்து (சிலப். 13: 108)

(ஒற்று உறுப்பு - தாள உறுப்பு, ஒத்து உறுப்பு)
ஓர் ஒத்துடை தடாரம் - ஒருவகைத்தாளம்

2. தாள அறுதி இடல்: தாளம் அமைத்தல்.

பாடலை ஒற்றைத் தாளத்தில் அமைப்பதும் இரட்டைத் தாளத்தில் அமைப்பதும் பாடல் பொருள் முடியும் யாப்பு அமைப்பைப் பொறுத்து அமைகின்றது.

எடுத்த முதலா ஈண்டிய அடியில்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பெனமொழிப யாப்பறி புலவர் (தொ. பொ. 383)

## ஒற்றறுத்துப் பாடுதல்: ஒற்று - சதி (ஜதி), தாளம், சொற்கட்டு. (ஒற்றுதல் - தட்டுதல்)

நாட்டியத்திற்குச் சொற்கட்டுப் பாடுதல்

ஆடன் மகளிர் காலுக்கு ஒற்றறுத்துப் பாடுங்கால் (சிலப். 14: 155)
↑ தலைக்கோலரிவை குணத்தொடு பொருந்தி (உ. வே. சா. 118) என்பதற்கான பாடபேதம் (உ. வே. சா. 379) தலைக் கோலரிவை தாளத்தோடு பொருந்த என்றுள்ளதால் ஒற்று என்பது தாளத்தையே குறித்துள்ளது. தாளத்தில் அமைந்த இச்சொற்கட்டுகள், தகதின, தகசொனு, தகதீம், தாதீம் என்ற வாறெல்லாம் இந்நாள்வரை ஆடலில் தொடர்ந்து வருகின்றது.

## ஒற்றறுத்துப் பாடுமவள்: தோரிய மடந்தை.

தோரிய மடந்தை என்பாள் – ஆடி முதிர்ந்தாற் பின்பு ஆடன் மகளிர் காலிற்கு ஒற்றறுத்துப் பாடுமவள். (சிலம்பு. 6: 18: 252 அடியார்க்.)

→ ஒற்றறுத்தல்

**ஒற்றறுப்பைப் புறங்காத்தல்:** ஆடலர் அன்றி வெளியே இருக்கும் ஒருவர் தாளத்தைப் போட்டு வரல்(காத்து வரல்)
கதிர்திகிரி... பிஞ்ஞை சீர் புறங்காப்பார் முதுமறை தேர் நாரதனார்...
(சிலப். 17: (26)
அவருடைய தாள ஒற்றறுப்பைப் புறங்காக்கின்றவர் முதிய வேதத்தின் சிக்கை யென்னும் அங்கத்தை ஆராயும் முதல் நரம்பை உருவி வாசிக்கும் நாரதனார் என்க. (மேலது: அடியார்க்)
சீர் = தாளம்; சிக்கை = இசை; பிஞ்ஞை - பின்னை - இராதை.
முதல் நரம்பு - யாழின் (தம்பூர் - தும்புரு) ஒற்றுறுப்பான தாள, சுருதித்தந்தி; அல்லது ச என்ற இசையின் முதல் சுரமும் ஆகலாம்.

**ஒற்றித்து ஒத்தல்:** தாள எண்ணிக்கை ஒவ்வொன்றுக்கும் ஓர் எழுத்தாக இசைத்தல்.
தேசிக்கு ஒற்றித்து ஒத்தலும் (சிலப். 3: 153அரும்)
ஓர் எழுத்தாக இசைத்தல் - ஒன்றாம் காலத்தில் இசைத்தல்
← த. க. க. 345/I

**ஒற்றிசை நீடல்:** ஒற்று அளபெடை கொள்ளல். இசையில் ஒற்றெழுத்துக்கள் நீண்டு வருதல் (Elongated sound of the pure consonant )
அளபு இறந்து இசைத்தலும் ஒற்றிசை நீடலும்
உள எனமொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர் (தொ. எ. 33)
தெரி கோல் ஞமன்ன் போல ஒரு திறம் (புறம். 6:9)
எவன் ஆய்ந்தனர் கொல் – தோழி! ஞெமன்ன் (அகம். 349:3)
கரும்ம் பிறப்பும் கருநீலப் பிறப்பும்
பசும்ம் பிறப்பும் செம்ம் பிறப்பும்
பொன்ன் பிறப்பும் வெண்ண் பிறப்பும் (மணிமே. 27: 150 – 52)
இசையில் மெய்யோசை நீளும். இந்நீட்சி விளித்தற் கண்ணும் இசை நூற் கண்ணும் நிகழும் என்பது இளம் பூரணம்
← த. க. க. 92/I, → ஒற்றளபெடை

**ஒற்று:** = ஒத்து
1. கேள்வி (சுருதி)
மகரத்தின் ஒற்றால் சுருதி விரவும் (சிலப்: 3: 26)
எனவே சுருதிக்கு ஒற்று என்று பெயர்
ஒற்றுறுப்புடைமையின் பற்று வழிச் சேர்த்து (சிலப். 13: 108)
(ஒற்றுறுப்பு - சுருதியும் தாளமும் தரும் உறுப்பு)
2. சதி (ஜதி), சொற்கட்டு
ஆடன் மகளிர் காலுக்கு ஒற்று அறுத்துப் பாடுங்கால் (சிலப்· 14: 155: அடியார்க்.)
3. தாளம்: ஒற்றுதல் - தட்டுதல்.
ஒற்று அறுத்துப் பாடு மவள் (சிலப்.6:18_25 அடியார்க்.)
கையதனால் ஒத்து அறுத்துப் பாடுதலும்
(பெரியபு. சம்பந். 103/2006)
4. மெய்யெழுத்து
அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும் (தொ.எ. 33)
ஓங்குயிர்கள் ஒற்றின் மேல் ஏறி உயிர் மெய்யாய் (நேமி.நாத.3)

**ஒற்றுதல்:** தாளம்போடுதல்.
காமருதாளம் பெறுதற்கு ஒத்துவதும் காட்டுவபோல்
(பெரியபு. சம்பந். 46/ 1949)
← செ. ப. அ. 611

**ஒற்றுப் பெயர்த்தல்:** ஒருமிறைக்கவி. ஒரு மொழியும் தொடர் மொழியுமாக நின்று வெவ்வேறு பொருள் தருவதாகப் பாடப்படும் மிறைக்கவி.
← தண்டி. 95; செ ப. அ 612

**ஒற்றுறுப்பு:** = சாரணி, பக்கமீட்டு, தாளத்தந்தி, சுருதித்தந்தி.
யாழிலுள்ள ஓர் உறுப்பு. பக்கச் சாரணி. இது ஒத்தும் (சுருதி) தாளமும் வழங்கும் உறுப்பு. பண் நரம்புகளுக்கு அருகேயுள்ள சுருதி சேர்க்கப்பட்ட தந்திகள்
ஒத்து > ஒற்று - தாளம், சுருதி.
ஒற்றுறுப்புடைமையின் பற்றுவழிச் சேர்த்து (சிலப்.13: 108)
ஒற்று உறுப்பு என்னும் நரம்புகளும் இடம் பெற்றிருந்தன. இவை சுருதியும் தாளமும் தந்த நரம்புகள் (த. க. க. iii/IV)
ஒப்பு: துந்தனாவின் ஒற்றைத் தந்தி தாளத்தையும் சுருதியையும் தருகின்றது.

**ஒற்றை:** = ஒரொத்து, ஓர்ஒற்றுத்தாளம், ஒரொத்துடைத் தடாரம், ஏகதாளம், ஒன்றன் பகுதி, இலகுதாளம்.
ஒருதட்டு(beat)மட்டும்கொண்டது;ஆதலால் ஒற்றைத் தாளம்.
ஒரு அலகு (லகு) மட்டும் கொண்டது; (குறியீடு - | ) ; எனவே லகு தாளம்.

1. கதிர்திகிரி யான்மறைத்த கடல்வண்ண னிடத்துளாள்
2. மயிலெருத் துறழ்மேனி மாயவன் வலத்துளாள்

என்று தொடங்கும் ஆய்ச்சியர் குரவை 17: (26) மற்றும் (27)ஆம் பாடல்கள். ஐந்தன் ஒற்றைத்தாளத்தில் (கண்ட ஏகம்) அமைந்துள்ளன இதை அடியார்க். 'ஒன்றன் பகுதி - ஒற்றைத் தாளத்தின் கூறு' என்று கூறுகிறார்.
ஏகதாளமுதலாக... (சிலப். 3: 16. அடியார்க்.)
கவுத்துவ முக்கோல் ஒரொற்றுக்கான செம்படையன்
(பஞ்ச. 143: 1)
ஒரொத்துடைய ஏகதாளத்தில் முடித்து (சிலப்:3:151: உரை)
வடங்கொள் மணி ஊசல் மேல் இரீஇ ஐயை
உடன் ஒருவர் கைநிமிர்ந் தாங்கு ஒற்றை மேலூக்க
(சிலப். 29: (23)
வடங்களைக் கொண்ட அழகிய ஊசல் மீது இருத்தி ஐயையுடன் நின்ராறில் ஒருவர் கையை நிமிர்த்து ஒற்றைத் தாளத்துடன் மேலே செலுத்த (நாட்: உரை)

ஒற்றை - ஒற்றைத்தாளம் (மேலது: அரும்)
ஒன்றன் பகுதி - ஒற்றைத் தாளத்தின் கூறு
(சிலப். 17. (24) உரை)

2. ஒருதுளைக்கருவி
முன் ஒற்றை இரு சங்குமுடன் ஊத (பாரதம். நிரைமீட்சி. 5)
← பெ. அ. 421/IV

**ஒற்றை ஒத்து:** ஒற்றைச் சுருதி.

*முழுமையான ஒற்றைச் சுருதி - 256/ 243*
*நியூன ஒற்றைச் சுருதி - 25/ 24*
*பிரமாண ஒற்றைச் சுருதி - 81/ 80*
← தெ. இ. 160

**ஒற்றைக் கை:** = இணையா வினைக்கை, பிண்டி, பிண்டிக்கை (அசம்யுத ஹஸ்தம்)
*நாட்டியத்தில் ஒரு கையால் செய்யும் அவிநயம்; ஒற்றைக் கைத்தொழில்.*

**ஒற்றைக்கைவண்ணம்:** → ஒற்றைக்கை

**ஒற்றைத்தாளம்:** → ஒற்றை

**ஒற்றைச்சீவாளி:**
*காற்றுக்கருவிகளில் ஊதும் போது ஒரு பக்கம் மட்டும் துடித்து ஒலி தரும் சீவாளி*
*சான்று: சாக்போன், கிளாரி நெட் ஆகிய கருவிகளின் சீவாளி*

**ஒற்றைப்பண் யாழ்:** = ஏகராக யாழ்
*ஒரு பண்ணிற்குரிய சுரத் தந்திகளையுடைய யாழ். இது வில்யாழ் (Harp) என்ற தொடக்ககால யாழைக் குறித்த தாகலாம்.*
படுமலை நின்ற யாழ் (நற். 139: 4)
*என்பது ஒற்றைப்பண்யாழ் குறிப்பதாகலாம்.*

**ஒற்றொழி பாட்டு:**
ஒற்றெழுத்து இல்லாப் பாட்டு
மெய் எழுத்து இல்லாப் பாட்டு (சூடா. 12: 26)

**ஒன்பது தாளம்:** *சமதாளம், அருமதாளம்,* அடதாளம், படிமதாளம், சயதாளம், மட்டியதாளம், விடதாளம், நிவிர்த்த தாளம், துருவதாளம் (சூடா. 439)

**ஒன்பதொத்து:** ஒன்பது எண்ணிக்கைத் தாளம், சங்கீர்ண ஏகம்
*ஆழ்வார் பாசுரங்களில் குறிப்பிடப்படும் தாளத்துள் ஒன்று*
*எடு:- நம்மாழ்வாரின் திருவாய்மொழி முதற்பத்தின் 10 பாடல்களும் இத்தாளத்திலமைந்துள்ளன*
← த க க. 358 - 59/I, → ஒன்பான் ஒற்றை

**ஒன்பது எண்ணிக்கைத் தாளம்:** → ஒன்பதொத்து

**ஒன்பான் அலகு:** = சங்கீரணலகு
ஒரு தட்டும் எட்டு எண்ணிக்கையும் கொண்டது
இதன் குறியீடு: |9
← த. க. க. V/I

**ஒன்பான் ஒற்றை:** = சங்கீரண ஏகம், ஒன்பது எண்ணிக்கைத் தாளம், ஒன்பான் நடை ஒற்றைத் தாளம்.
*தரிகிட தகதகிட தரிகிட தகதகிட தரிகிட தகதகிட*
2¼ 2¼ 2¼
*தரிகிட தகதகிட*
2¼ = *9 எண்ணிக்கை*

**ஒன்பான் சாய்ப்பு:** → ஒன்பான் நடை

**ஒன்பான் நடை:** = சங்கீர்ண சாய்ப்பு, ஒன்பான் சாய்ப்பு
*தாளநடையுள் ஒன்று; தகதிமி தகதகிட என்ற நான்மை + ஐம்மை (4+5) நடைக்கலப்பால் வருவது 5+4 என்ற முறையிலும் இத்தாளம் அமையும்.*
*எடு:-*
வண்ணமலர்ச் சரங்கோத்து.. (சிலப். 6: 35 அடியார்க். மேற்.)
பெருநில முழுதாளும்... (சிலப். 1: 31 – 34)
*இது தகதிமி தகதகிட என்று 4 + 5 ஆக வரும் ஒன்பான் நடை.*
நாகநீ ணகரொடு... (சிலப். 1: 21–24)
*இது தகதகிட தகதிமி என்று 5 + 4 ஆக வரும் ஒன்பான் நடை.*

**ஒன்பான் நடை ஒற்றைத்தாளம்:** → ஒன்பான் ஒற்றை

**ஒன்றன் பகுதி:** → ஒற்றைத்தாளம்

**ஒன்றாம் காலம்:** → ஓரொற்றுவாரம்

**ஒன்றாம் வாரம்:** → ஓரொற்றுவாரம்

**ஒன்று:** *அண்டப் பேரொலி*
யாழ் என, கால்என, பாகு என (பரிபா. 3: 77)

**ஒன்று கூட்டு:** கொண்டு கூட்டு (யாழ் அக.)



## ஓ:

1. விளரி (தைவதம்) எனும் சுரத்தின் குறியீடு (திவா. 2149)
ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ... என்ற எழும்
ஏழிசைக் கெய்தும் அக்கரங்கள் (பிங்க. 1415)
2. இசைப்பாடல்களில் ஓகார ஒலியானது இசை நிறைக்காக வரும்.
எடு:– உய்திக்காலம் உரையீரோ என (சிலப். 10: 240)
உரையீரோ என்பதிலுள்ள 'ஓ' இசைநிறை ஓகாரம்.
ஓகாரம் - இசைநிறை - மேலது அடியார்க்
← த. க. க. 360/1

## ஓகாரம்: → ஓ

## ஓச்சியம்: சங்கு (சித். பரி. அக. பக் 161)

## ஓசை: நுண்மையும் இனிமையும் அற்றது. ஒத்து (சுதி) டன் இணையாதது; ஒழுங்கற்றது (sound, noise)

எ-டு: இடியோசை,
அரவமே,... ஓதை... ஓசை... (சூடா. 10:44)
← த. க. க. 341/1
↑ ஓசை, ஒலி என்ற சொற்கள் வேறுபாடு இன்றி பிற்காலத்தில் ஆளப்பட்டுள்ளன.
1. ஒலி
கடிமரம் தடியும் ஓசை (புறம். 36: 9)
மறைநா ஓசை அல்லது யாவதும் மணிநா ஓசை (புறம். 23: 32)
2. இசை
ஆயன் உவந்து ஊதும் சீர்சால் சிறுகுழல் ஓசை (ஐந்திணை 50: 7)
→ ஒலி

## ஓசை உடைமை: நன்னூல் குறிப்பிடும் அழகு பத்தனுள் ஒன்று நூற்பா, செய்யுள் ஆகியன சந்த இன்பம் உடையதாதல் வேண்டும்.

எடு:– நடவா மடிசீ (நன். 137)
இது 'தனனா, தனனா' என்ற சந்தமுறையில் இருப்பதால் ஓசை இனிமை தருகிறது.
← த. இ. பே. 247/16

## ஓசைக் கட்டளை:

யாப்பு; ஓசையால் அமைந்த யாப்புமுறை; சந்த யாப்பு.
ஓசைக் கட்டளைக் கூறுபாடு (சிலப். 3. 45–55 அரும்.)
யாப்பு வகையினைக் கட்டளை என வழங்குதல் மரபு
(பன். திரு. வர. பக்: 450/1)
இக்கட்டளை அமைப்பினை அடியொற்றியே இசைப் பாடல்களின் தாளம் முதலிய பண்ணீர்மை அமைதல் இயல்பு (மேலது. பக். 451)
வட்டணையும்.. கட்டளைய கீதக் குறிப்பும் ..
(சிலப். 3 அடியார்க்.)
எடு:- கட்டளைக் கலித்துறை; கட்டளைக் கலிப்பா; கட்டளை ஆசிரியம்; கட்டளை வஞ்சி
. கட்டளை விகற்பங்கள் யாப்பியல் கருவியாக அறிதற்குரிய (யாழ் நூல். பக். 213)
← பன் திரு. வர. பக் 446& 452/1

## ஓசைக்கட்டளைக் கூறுபாடு: தாளம் அமைந்த எழுத்தால் கட்டப்படும் சொற்கட்டுகள்; நாட்டிய சதி

ஓசைக் கட்டளைக் கூறுபாடு (சிலப். 3. 45–55 அரும்.)
→ ஓசைக்கட்டளை

## ஓட்டந் துள்ளல்: மலைநாட்டின் களியாட்ட நாடகம் துள்ளல் - துள்ளி ஆடும் ஆட்டம்

"வினோதக்கூத்து. இது புறக்கூத்தின் ஒருவகை. இதுவே மலையாள நாட்டின் ஒட்டந் துள்ளலாக வளர்ந்திருக்க வேண்டும்.
(சிலம்பு வழங்கும் செல்வம் பக். 38 & 46)

## ஓடப்பாட்டு: =படகோட்டிப் பாடல், கட்டுமரப்பாட்டு

கட்டுமரம் கட்டி மீன் பிடிக்கச் செல்லுங்கால் துடுப்பு வலிக்கும்போது சோர்வு ஏற்படாமல் இருக்கப் பாடும் தொழில் முறைப்பாட்டு. பாட்டின் இடையே ஓய்வுக் காக (Refrain) ஏலேலோ ஐலசா (ஐ! இலேசா) என்று குரல் தருவது வழக்கம். பாடலில் ஓர் அந்தாதி அமைப்பும் உண்டு.ஓடப்பாட்டு பெரும்பாலும் புன்னாகவராளியில் பாடப்படுகிறது.
எடு:- மண்ணநம்பி - ஏலேலோ
மரம்இருக்க - ஐலசா
மரத்தை நம்பி - ஏலேலோ
கிளை இருக்க - ஐலசா
உன்னை நம்பி - ஏலேலோ

நானிருக்கேன் - ஐலசா
(நாட்டுப்புற இயல் ஆய்வு மேற். பாடல்)
→ ஏலப்பாட்டு

**ஓதுவார்:** = பிடாரர்
தேவார இசைபாடும் சைவப் பெரியோர் சிவன் கோயில்களில் தேவாரம் பாடி தமிழிசையை மரபாகப் பேணி வந்த இசைப் பாடகர்.
← செ. ப. அ 624

**ஓதை:** ஓசை, ஓதம், ஆரவாரம், பேரொலி
உழவர் ஓதை மதகு ஓதை (சிலப். 7: (4))
கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும் (சிலப். 5: 62)
உழவர் ஓதை மறப்ப (புறம். 65:4)
→ ஓசை

**ஓர் எழுத்து மடக்கு:** வந்த எழுத்தே மடங்கிவரும் சொல் அணி.
எடு:- நாநா நாதங் கூடிசை நாடுந்
← செ. ப. அ. 628

**ஓர்க்கும்:** செவிகொடுத்துக் கேட்கும்.
பல்கால் பறவை கிளை செத்து ஓர்க்கும் (பெரும்பாண். 183)

**ஓர்த்தது இசைக்கும் பறை:** பறை வாசிப்பவன் நினைத்ததை எல்லாம் பறை இசைக்கும் (பாடும்)
ஓர்த்தது இசைக்கும் பறை (கலித். 92: 21)
ஒப்பு: குசவன் மனத்துற்றது எல்லாம் வனைவன் (திருமந். 443)

**ஓர்த்தல்:** நினைத்தல், கேட்டல்
ஓர்த்தது இசைக்கும் பறை (கலித். 92: 21)
குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர் புரி நரம்பு (மலைபடு. 23)
ஓர்மை - நினைப்பு (ரா. வட். அக)
திரிபுரி நரம்பின் தீந்தொடை ஓர்க்கும் (பட்டினப். 254)
அந்தணர் வேள்வி ஓர்க்கும் (முருகு. 96)

**ஓரங்க நாடகம்:** ஒற்றை அங்கத்தை உடைய நாடகம்(One Act Play).
ஒரு நடுக்கருத்தை மட்டுமே சுற்றி அமையும் நாடகம். நாடகத்துக்கும் ஓரங்க நாடகத்திற்குமுள்ள தொடர்பினை புதினத்திற்கும் (Novel) சிறுகதைக்கும் உள்ள தொடர்போடு ஒப்பிடலாம்
← த க. க. 367 - 68/I

**ஓரடிக்கண்ணி:**
அம்பலத்தில் ஆடுகின்றார் பாங்கிமாரே – அவர்
ஆட்டங்கண்டு நாட்டங் கொண்டேன் பாங்கிமாரே (திருவருட். 2971)
மேற்கண்ட இரண்டு வரிகளும் சேர்ந்து ஓரடியாகிறது. எனவே இது ஓரடிக்கண்ணி.
→ கண்ணி

**ஓரடிப்பதம்:** → ஓரடிப்பாட்டு

**ஓரடிப்பாட்டு:** = ஓரடிப்பதம்.
ஒருவகை இசைப்பாட்டு எடுப்பு, தொடுப்பு, ஒரு முடிப்பு மட்டும் கொண்ட இசை வடிவு அல்லது தரு
← செ. ப. அ. 627

**ஓரடி மேல்வைப்பு:** பாடல்தோறும் இறுதியில் ஓரடியை மிகுதியாக வைத்துப்பாடுவது.
எடு:- அப்பரின் 4ஆம் திருமுறை திருவையாற்றுப் பதிகம் 'மாதர் பிறைக்கண்ணியானை' என்று தொடங்கும் பாடல் முதல் 11 பாடல்களும் 'வருவன கண்டேன்' என்ற முடிப்புடன், 'கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்' என்ற அடி, பாடலின் நான்கடிக்கு மேல் ஓரடியாக வருகிறது.
திருஅதிகை வீரட்டானம் (திருக்கெடிலப்புனல்) பதிகத்தில் 'ஒருவர் தமர் நாம்' என்ற முடிப்புடன், 'அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை' என்ற அடி, பாடலின் நான்கடிக்கு மேல் ஓரடியாக வருகிறது. இவை ஓரடி மேல்வைப்புகளாகும்
↑ இந்த ஓரடி மேல்வைப்பு என்ற முறையே பின்னாளில் எடுப்பு (பல்லவி) என்ற அமைப்பாகி இருக்கலாம்.

**ஓராட்டு:** = ஓலாட்டு, ராராட்டு, தாலாட்டு, ஆராட்டு (lullaby)
ஓல் - ஒலி; ஓலாட்டு - ஓராட்டு.
→ ஆராட்டு

**ஓரெழுத்துக்காலம்:**
தாளத்தின் ஓர் அக்கர (அட்சர)க் காலம்; கால் எண்ணிக்கை கொண்டது.
இதன் அடையாளம் - , அல்லது ச
← த.க.க.V / I

**ஓரேழ் பாலை:** தமிழிசையின்,சிறப்புடைய பெரும் பண்களான ஏழு பாலைகள்
ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியில் ஓரேழ் பாலை நிறுத்தல் வேண்டி (சிலப். 3: 70–71)
→ ஏழ்பெரும் பாலை

**ஓரை:**
1. 5 நாழிகை நேரம்; 2 மணி நேரம்: 30 பாகை(degree)
2. இராசி (Sign of the Zodiac)
12 ஓரைகளில் 12 தான சுரங்களை நிறுத்தி, பண்டைத்

தமிழர் பல்வேறு பண் கண்டனர்.
மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும் (தொ.களவி.45)
ஆறிருமதியினும் (சிலப். 26: 25)
(மதி - ஓரை)

3. மகளிர் விளையாட்டு (பாவை விளையாட்டு)
ஓரைப் பாவையைக் கொண்டு விளையாடும் (கலித்.81:9 நச்சர்)
ஓரை ஆயத்து ஒண்டொடி மகளிர் (புறம். 176:1)
ஓரை ஆயம் கூறக் கேட்டும் (குறுந். 48)
விளையாட்டு ஆயமொடு ஓரை ஆடாது (நற்.68:1)
ஓரை மகளிரும் ஊர் எய்தினரே (நற். 398–5)
தருமணல்... ஓரை ஆயமும் (நற்.143:2 – 3)
கோதை ஆயமொடு ஓரை தழீஇ (அகம். 49: 16)
கூட்டமும், மகளிர் விளையாட்டும் இராசி... ஓரைக்கிளவி கூறும் (திவா. 2121)
தொடலை... கிரீடையே, கேளி, ஓரை... ஆடன் மெச்சல் (சூடா. 9:3)

4. குரவை நடனம்: பன்னிரு ஓரைகளில் 7 ஓரைகளில் 7 மகளிரை நிறுத்தி, சிலம்பில் ஆய்ச்சியர் குரவை தொடங்குகிறது.
மகளிரீட்டமு மற்றவ ராடலு – மவர் விளையாடுங்
களமு மிராசியு – மோரிடைச் சொல்லுங்குரவையும் (பிங். 3255)

5. மகளிர் ஆடும் களம்
பைந்தொடி மகளிர் ஆடும் களம் ஓரை என்ப (சூடா. 7: 61)

**ஓரொத்து:** = ஒற்றை (ஏகதாளம்)
ஒரு தட்டு மட்டும் கொண்டது. எனவே ஓரொத்து.
(ஒத்து = தட்டு)
மூன்றளந்து ஒன்று கொட்டி (சிலப். 3: 151)
(3 வீச்சும் + ஒரு தட்டும் உடைய நாலன் ஓரொத்து (சதுசுர ஏகம்) குறிப்பிடுகின்றார்)
மூன்றொத்துடைய மட்டத்தாளத்திலே எடுத்து, ஓரொத்துடைய ஏகதாளத்திலே முடித்து (மேலது. அடியார்க்.)

**ஓரொத்துடைத் தடாரம்:**
→ ஓரொத்து, ஒற்றை

**ஓரொற்று வாரம்:** = முதல் வாரம், ஒன்றாம்வாரம், ஒன்றாம் காலம், முதல் நடை.
தாளநடையில் ஒரு தட்டுக்கு ஓர் எழுத்தாகப் பாடுதல்; ஒன்றாம் காலம் பாடுதல்
வாரம் இரண்டும் வரிசையில் பாட (சிலப். 3: 136)
தாளத்து ஒரு மாத்திரையும் பெற்றுவரும் (மேலது. அரும்)
வாரம் பாடும் தோரிய மடந்தையும் (சிலப். 14: 155)
வாரமாவது பற்று... ஓரொற்று வாரம்... தாளத்து ஒரு மாத்திரையும்... பெற்று வருமெனக் கொள்க (மேலது. அடியார்க்.)

**ஓல்:** = ஓலாட்டு
1. தாலாட்டு
ஓல் உடன் ஆட்ட பால் உடன் உண்டு (இறை. அகப். 2: 27)
அஃது ஓல் உறுத்துதலால் துயில் கொள்ளும் (கலித் 42: 1-3 உரை)
2. ஒலி

**ஓலாட்டு:** → ஓல், தாலாட்டு

**ஓலைத்தூக்கு:** சீட்டுக்கவி. பரிசில் வேண்டிய கவி.
மன்னுடை மன்றத்து ஓலைத்தூக்கினும் (நன். 53)
← செ. ப. அ. 630

**ஓவர்:** மாகதர், இருந்து ஏத்துவார்
← தே நே 137/IV

# ஔ

**ஔ:** தமிழிசை ஏழுள் தாரமென்னும் (நி) ஏழாம் இசையின் (சுரம்) குறியீடு.
ஆ, ஈ, ஊ,,ஏ, ஐ, ஓ, ஔ என்றேழும் ஏழிசைக்கு எய்தும் அக்கரங்கள் (பிங்க. 1415)
... ஆங்குள ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எனும் ஏழும் தீங்கிலா அக்கரங்கள் செப்பும் ஏழிசைக்கும் தானே (சூடா. 10: 37)

**ஔகம்:** இடைப்பாட்டு; நாட்டிய நிகழ்ச்சியில் துணைப்பாடகர் திரும்பப்பாடும் தலைமைப் பாடகரின் பாடல்.
தலைப்பாட்டுக் கூத்தியும் இடைப்பாட்டுக் கூத்தியும் (சிலப். 14: 156)
. இடைப்பாட்டைப் பாடும் கூத்தியும்... இடைப் பாட்டாவது ஔகம் (மேலது. அடியார்க்.)

**ஔடவம்:** → ஐந்து சுரப்பண்

**ஔவை:** ஒரு பாடினி; முதுமகள், யாழுடை முதுமகள்
நரம்புக் கருவியோர் நண்ணிடு சேரியில்
பாணர் அகத்தில் ஔவை வளர்ந்தனள் (கபிலர் அகவல் 109& 110)
← தே.நே. 129/8

# க

**க:** இசையின் மூன்றாம் சுரமாகிய கைக்கிளையின் (காந்தாரம்) குறியீடு.
சவ்வும், ரிவ்வும், கவ்வும் ... ஏழும் அவற்றின் எழுத்தே ஆகும் (திவா. 1886)

**ககரம் கொட்டே:** தாளத்தின் நால்வகையுள் ஒன்று கொட்டு; அரை மாத்திரை அளவுள்ளது. அதற்கு வடிவு 'க'
ககரம் கொட்டே... கொட்டாவது அமுக்குதல் (சிலப். 3: 16)
← சிலப் 14: 150 அடியார்க்.

**ககன சாரிகை:** பரத நாட்டிய உறுப்புள் ஒன்று (திருவிளை. கான்மாறி 12)

**ககுளம்:** ஒருவகைச் சுரம்; ஒரு பண் (பரத. இராக 23)

**கச்சபீ:** கலைமகளின் வீணை (பரத. ஒழிபி. 15)

**கஞ்சக்கருவி:** → கஞ்சம், உலோகக்கருவி

**கஞ்சரி:** → கஞ்சிரா

**கஞ்சம்:**
1. வெண்கல இசைக்கருவி ஐவகை இசைக்கருவி களுள் ஒன்று கைமணி, சிங்கி போன்றவை. இவை வெண் கலத்தால் உருவானதால் கஞ்சக்கருவி எனப்பெயர்.
கஞ்சம் - வெண்கலம் ( 76% செம்பு + 24 % தகரம்)
கஞ்சக் கருவிகளின் எடையின் மும்மடிமூலத்திற்கு (cubic Root) எதிர்நிலையில் இதன் ஒத்து (சுருதி) மாறும். (The pitch of a bell varies inversly with the cubic root of its weight)
கஞ்சக்காரர் - வெண்கலம் விற்பார் (சிலப் 5: 28.அரும்)
கஞ்சகாரரும் - வெண்கலக் கன்னாரும் (நாட் உரை)
2. தாளம்; கைத்தாளம் (சது. அக.)
கைத்தாளம் வெண்கலம் (பிங்க. 3265)
கஞ்சமே, தாளம், குல்லை, கமலம், வெண்கலம், வட்டப்பம் (சூடா. 11:1)
பாண்டில் - கஞ்சதாளம் (சிலப். 26· 194 அரும்)

**கஞ்சனம்:** கைத்தாளம் (சது. அக 45)

**கஞ்சிரா:** = கஞ்சரி, தாதப்பலகை, கஞ்சுரா, கிஞ்சுரி. சிறு பறைவகையுள் ஒன்று உடும்புத் தோலால் ஆனது. உட்புறம் நீர் தெளித்து ஒத்து சேர்க்கப் படுகிறது.
← த. ப. வ. 307/III; தே.நே. 136/I

**கஞ்சுரா:** → கஞ்சிரா

**கட்கா:** = கடுக்கா.
இசைக்கதைச் சொற்பொழிவில் (கதாகாலட் சேபம்)மற்றும் நாடகத்தில் பாடப்படும் ஒருவகை இசை உரு. வழி எதுகைகள் நிறைந்தது
வழி எதுகை; எடு:-
1. இடித்தலை வானவன் முடித்தலை உடைத்த
தொடித்தோள் தென்னவன் கடிப்பிகுமுரசே (சிலப். 17: (38)
2. உடைப்பெரும் செல்வர் மனைப்புகும் அளவும்
இடைக்குல மடந்தைக்கு அடைக்கலம் தந்தேன் (சிலப். 15: 129–30)
கட்கா. எடு:-
அரகரசிவசிவ என்ற (ந.ச.கீ.) பாடல்

**கட்டல்:** பிணித்தல், யாத்தல்
அசைத்தல், இமிழ்த்தல், ஆர்த்தல், யாப்பு, சிமிழ்த்தல்,
பிணித்தல், சுருக்கல், தொடுத்தல் – கிட்டல், துவக்கல்
கட்டுதலாகும் (பிங். 2141)
எடு:- பாட்டுக் கட்டல்

**கட்டளை:**
1. வேறுபட்ட சீர்களுடன் கூடிய யாப்பு; இயல் பாடலின் யாப்பு அமைப்பு; யாப்பு விகற்பம். எனவே ஓசை பற்றியது.
எடு:- 1 கட்டளைக் கலித்துறை (திருவிருத்தம்)
2. தேவாரக் கட்டளை வகுப்பு (நம்பியாண்டார் நம்பி)
.. யாப்பு வகையினைக் கட்டளை என வழங்குதல் மரபு (பன். திரு. வர பக். 450)
.. ஓசைக் கட்டளைக் கூறுபாடுகளும் (சிலப். 3: 45–55அரும்)

எழுத்தாலே கட்டப்பட்ட வாக்கியக் கட்டளை என்பது கட்டளைக் கலித்துறைக்கு மூலமாகிறது. கட்டளைக் கலித்துறை எழுத்து எண்ணிப் பாடப் படுவது

கட்டு + அளை; அளை - அளவு

← த. க. க. 246/I; தெ. இ. அ. 308/II

**2. இசைப்பாடலின் தாளம் பற்றியது**

இது சந்தக்குழிப்பு, சந்த வாய்பாடு என்றும் பெயர் பெறும்.

எடு:- முத்தைத்தரு பத்தித் திருநகை
தத்தத்தன தத்தத்தனதன (கட்டளை)

**3. இசையமைப்பு, மெட்டு, (Tune)**

சொல் நட்டபாடைக்குத் தொகை எட்டுக் கட்டளையாம் என்பது 8 மெட்டுக்களை உடைய பாடல்கள்

← திருமுறை. கண். 35

**4. வழி (Space)**

வேனிற்பள்ளித் தென்வளி தரூஉம் நேர் வாய்க்கட்டளை (நெடுநல். 61–62)

**5. உரைகல்**

பெருமைக்கும் . . . கருமமே கட்டளைக்கல் (குறள். 5)

சால்பிற்குக் கட்டளை யாதெனில்... (குறள். 6)

**6. தரப்படுத்துதல், நிர்ணயித்தல், (standardisation)**

கட்டளை வலிப்ப... (பதிற். 81: 17)

**கட்டளை அடி:** எழுத்துக் கணக்கில் அமைந்த செய்யுள் அடி.

எடு:- கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா

← செ. ப அ. பிற் 179

**கட்டளை ஆசிரியம்:** எல்லா அடிகளும் ஒற்று நீங்க எழுத்தொத்து வரும் அகவல் (யா. வி. 95)

← செ. ப. அ. 647

**கட்டளை எழுத்துச் சந்தம்:** குறில் அல்லது நெடில் அல்லது குறில் நெடில், நெடில் குறில் எழுத்தாலும் அமையும் சந்தம்.

← த. க. க. 5/II

**கட்டளைக் கலி:** எல்லா அடிகளும் ஒற்று நீங்க எழுத்து ஒத்து வரும் கலிப்பா.

← யா. வி. ; செ. ப. அ. 647

**கட்டளைக்கலித்துறை:**= திலதம், திருவிருத்தம்

ஐஞ்சீர், நாலடி கொண்ட வெண்டளை யாப்பு. நேரசை தொடக்கமாயின் ஓரடி (ஒற்று மற்றும் ஆய்தமும் நீங்கிய) 16 எழுத்தும், நிரையசையானால் 17 எழுத்தும் கொண்டது. முதல் கட்டளைக் கலித்துறை காரைக்கால் அம்மையார் பாடியுள்ளார். எடு:- 'நீயே சரணம்' என்ற பாரதியின் விநாயகர் நான்மணிமாலை.

← செ. ப. அ. 647; த. க. க 6/II; த. இ. பே. 183-84.

**கட்டளைக் கலிப்பா:** முதல்சீர் மாச்சீரும் பின்மூன்று ஈரசைச்சீரும் கொண்ட அரையடியும், பின்வரும் அரையடி நான்கு சீராகவும் உடைய எண் சீரடிக் கலிப்பா. நேரசையில் தொடங்கினால் அரையடிக்கு எழுத்துப் பதினொன்றும் நிரையசையில் தொடங்கினால் பன்னிரண்டு எழுத்தும் பெற்று வந்து ஏகாரத்தில் முடியும் கலிப்பா வகை.

← தொ. வி. 236; த. இ. பே. 184/ 14; யா. கா. 199

**கட்டளைக் குரல்:** தொடக்க சுரத்தின் ஒலி (Asbolute pitch). தொடக்க சுரமான குரல் (ச) என்பதன் துடிப்பு அளவு. ஒரு நொடிக்கு 264 துடிப்புகள் கொண்ட கோவையே அடிப்படைக் குரல் (மத்திம சட்சம்) என்று தரப்படுத்தப் பட்டுள்ளது. (264 vib/second)

(கட்டு + அளை; அளை - அளவு)

← ப. இ. இ. 89; தமிழிசை வேர்கள். முன்னுரை

**கட்டளைப் பா:** கட்டிய எழுத்தோசை அளவுகளை உடையது கட்டளைப்பா. இங்கு அளவு என்பது அளை எனப்பட்டது.

← பஞ். மர. 291

**கட்டளை வஞ்சி:** எல்லா அடிகளும் ஒற்று நீங்க எழுத்தொத்து வரும் வஞ்சிப்பா.

← யா. வி. 95, 470 ; செ. ப. அ. 647

**கட்டளை வெண்பா:** எல்லா அடிகளும் ஒற்று நீங்க எழுத்தொத்து வரும் வெண்பா.

**கட்டியக்காரன், கட்டியங்காரன்:** → கட்டியன்

**கட்டியம்:**

**1. கூத்தாடு களத்தில் முன் வரவு**

**2.** கூத்து; கூத்துவகை (யா. அக.)

கதை, பாட்டு, உரை, கூத்து முதலியன கட்டப்பட்டு இயக்கப்படுவதால் கட்டியம்.

இருடியோர்கள் கட்டியம்பாட (திருப்பு. 730)

**3.** புனையப்பட்டது, புனைகதை, புனைந்துரை.

→ கட்டியன்

**கட்டியம் கூறல்:** விரிச்சி கூறல்.

பின்னால் வருவதை முன் கூட்டியே கூறுவது.

கட்டினும் கழங்கினும் (தொ. பொ. 113)

**கட்டியர்:** → கட்டியன்

**கட்டியன்:** = கட்டியக்காரன், கட்டியங்காரன், கட்டியர்
1) கூத்தின் சூத்திரதாரி; கோமாளி; தொப்பக் கூத்தாடி; கூத்தில், பின்னால் வரும் கூத்து நிகழ்ச்சிகளை முகவுரையாக வழங்குவோன்; கூத்து நிகழ்ச்து முறைக்காரன்; கதை சொல்லி. மந்திரி, தோழன், தேரோட்டி, தூதுவன் போன்ற பாத்திரமும் ஏற்று வருவோன்.
கதமில் கட்டியங்காரர் பல்லோர் (சேதுபு. விதூம. 5)
கார்கொண்ட முகிலேறு என்னக் கட்டியக்காரன் வந்தான். (குற். குற. II;1)
2. மன்னர் வரவு கூறுவோன் (Herald)
கட்டியரை நோக்கி... சேனாபதிகளுக்குச் சொல்லு மென்றான் (கூ. நா. கா. 11)
இருடியோர்கள் கட்டியம் பாட (திருப்பு. 730)
← தேவ. 232/I

**கட்டு:** = குறி, விரிச்சி.
ஒருவகைப் புனைந்துரை; பின்னால் நடப்பதை முன்கூட்டிக் கூறுதல்.
கட்டு > கட்டுவிச்சி
கட்டு > கட்டியம், கட்டியக்காரன்
கட்டு > கட்டுரை (புனைந்துரை)
கட்டினும் கழங்கினும் (தொ. பொ. 113)
கட்டின் கேட்கும் ஆயின்... (நற். 288: 7)
கட்டு அறி மகடூஉக்கடி முறத்திட்ட (பெருங். 1: 37: 236)

**கட்டு அடைவு:** ஒரு காலால் மறு காலைக் கட்டிச் சுற்றிக் கொள்ளும் அடைவு.
← த. க. க. 25/I

**கட்டுமரப்பாட்டு:** → ஏலப்பாட்டு

**கட்டுமரம்:** கூத்தாண்டை என்ற பாரதக் கதை பற்றிய (அரவான் படுகளம்) விழாவில் அரவானைப் பலியிட கட்டி வைக்கும் மரம்.
← செ. ப. அ. 653

**கட்டுரை:**
1. பொருள் பொதிந்த சொல்
கட்டுரையாட்டியேன் யான் நின் கணவற்கு (சிலப். 23: 23)
2. புனைந்துரை
உலவாக் கட்டுரை பல பாராட்டி (சிலப். 2: 81)
பல பல கட்டுரை பண்டையின் பாராட்டி, இனிய சொல்லி... (கலித். 14: 7–8)
3. உரைநடைப்பகுதி (தொ. பொ. 428)
கட்டுரையாவது - பாட்டின்றி தொகுக்கப்பட்டு வருவது
4. முடிவுப்பகுதி
எடு:- வஞ்சிக்காண்ட இறுதிப்பகுதி; கானல் வரி 7: 24
5. நாடகப்பகுதி, நாடகக்கூற்று
... நாடகத்திற்குரிய கட்டுரை, உரைப்பாட்டு...
(சிலப். நாட். உரை. முகவுரை.பக்கம். 12)
எடு:- 'சித்திரப் படத்துட் புக்கு... மாதவி தன் மனம் மகிழ வாசித்தல் தொடங்குமன்' என்று முடியும் (கானல்வரி 1-20) பகுதி (நாடகக் கட்டுரையாகும். இப்பகுதி எவ்வகை யாப்பையும் தழுவாத சந்த இனிமை பெற்ற உரைநடையால் (Rhymed prose) அமைந்தது.
← சி. யா. பக். 206
கட்டுரை நடை - உரைப்பாட்டு

**கட்டுவிச்சி:** = அகவன் மகள், கொடிச்சி
குறி சொல்பவள்; பின்னால் நடக்க உள்ளதை முன் கூட்டிச் சொல்பவள். அகவிப்பாடிக் குறி சொல்லுதலால் அகவன் மகள்.
அகவன் மகளே... பாடுக பாட்டே இன்னும் பாடுக பாட்டே (குறுந். 23)
... கட்டுவிச்சி கட்டேறி (திருமங்கை. சிறிய திருமடல். 20/ 2673: 20)
கட்டுவித்தி (திருக்கோ. 285: கொளு)
வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர் (குறுந். 298)
முந்நாழி முச்சிறங்கை... எக்குறி தப்பினும் தப்பாது இக்குறி காணம்மே (மீனாட். குறம். 26)

**கட்டை:**
1. இசை பாடுவதிலுள்ள குற்றத்துள் ஒன்று (flatting)
தனிபடு கட்டை ... (திருவாலவா. 57: 26)
கட்டை – நிறமும், தானமும் குறையும் கீழிசை
2. ஒத்திசைப் பெட்டியின் கட்டை (Key in Harmonium)
3. மத்தளத்தின் மரத்தால் ஆன பாகம்
4. பாடகரின் அடிப்படைக் குரல் (ஆதாரசுருதி)
← செ.ப. அ. 655; பிற். 180), →கட்டைஒத்து

**கட்டைஒத்து:** = உறு ஒத்து.
வாய்ப்பாட்டின் குரல் எல்லை.
ஆண்கள் - 1 - 3
பெண்கள் - 4 - 7

**கட்டைக் குரல்:** = கட்டைச் சாரீரம்
தடித்த (தாழ்ந்த) குரல்; கம்மின குரல். (bass voice),

**கட்டைக்கூத்து:** → தெருக்கூத்து

**கட்டைச்சுருதி:** → கட்டைஒத்து

**கட்டைத் தாளம்:** மரக்கட்டையால் ஆன தாளக்கருவி
சிப்ளாக்கட்டை (Castanets) போன்றவை

**கட்டைச்சாரீரம்:** → கட்டைக்குரல்

**கடக்கை:** வாத்திய வகையுள் ஒன்று.
இடக்கை, கடக்கை, மணிக்காளம் (சேக். புரா. 73)

**கடகக்கை:** → வளையின் வாய்க்கை

**கடகம்:** → வளையின் வாய்க்கை

**கடகமுகம்:** → வளையின் வாய்க்கை

**கடகா வருத்தக்கை, கடகாவருத்தம்:** → இருவளையின் வாய்க்கை

**கடபயாதி:** எண்களை வடமொழி எழுத்தால் குறிப்பதற்கு அமைந்த ஒருமுறை (சாச. தமிழ்க். 87)
← செ. ப. அ. பிற். 181

**கடம்:**
1. குடம், பானை
மண்ணால் செய்த இசைக்கருவி
கடமே குடமும்... (திவா. புது. 2161)
கடமுழக்கு இன்னிசை இடை இடை இயம்ப (பெருங். 2: 1: 14)
அநித்தம் கடம் போல் (மணிமே. 29: 73)
ஒத்த அநித்தம் கட ஆதிபோல் (மணிமே. 29: 128)
அநித்தம் கட ஆதி அன்னு வயத்து (மணிமே. 29: 139)
அநித்தியக் கடத்தை நித்தியம் என்றல் (மணிமே. 29: 159)
அநித்தம் கட ஆதியின் ஒத்தலின் கடம்போல் (மணிமே. 29: 240)
சபக்கக்கட ஆதிகள் தம்மில் (மணிமே. 250)
காற்றைப் பிடித்துக் கடத்தில் அடைத்து (சிலப். அடியார்க். சிறப்புப் பாயிர பாடல்)
குடம் > கடம் - பானை தே. நே. 248/V
ஒப்பு: குட்டை > கட்டை; துளிர் > தளிர்.

2. வெங்கடம்; பாலைநிலவழி
கடத்து ஏகினான் பின் - EI/ 13: 10
← த. க க. 13/II, → கடாஅம்

**கடம்பகம்:** → கடம்பம்

**கடம்பம்:** = கடம்பகம்
முரசு, பேரி, பேரிசை,
தாரையும் பேரியும்மே கடம்பகமும் (தெ. இ. க. 5 976)
ஒப்பு: கடம்பன் - முரசு கொட்டுவோன்.
← த. க. சொ 455

**கடம்பறுத்தியற்றிய முரசு:** காவல் மரமாகிய கடம்பம் திண்ணிய மரம். அதன் அடிமரத்தில் செய்யப்படும் முரசு.
கடம்பு அறுத்து இயற்றிய பண்ணமை முரசு (அகம். 347: 4–5)
கடம்பு அறுத்து இமயத்து (அகம். 127: 4–5)
கடம்பு அறுத்து இயற்றிய வலம் படுவியன் பணை (பதிற். 17: 5)
(கடம்பு - கடப்பமரம்)

**கடம்பன்:**
1. **வேலன்:** வெறியாட்டுப் பாடல் பாடுகின்றவன்; இசைக்குடியுள் ஒருவன்.
ஒருவகை இசைக்குடியினர் கடம்ப மரத்தில் உறையும் முருகனை ஏத்தி வணங்கி வெறியாடினர். ஆதலால் இவர்கள் கடம்பர்கள் எனப்பட்டனர். (த. க க. 6/I)
... கடம்பன் என்றே வெறியாட தான் விரும்பி வேலன் வருகென்றாள் (சிலப். 24: (11)
துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று இந்நான்கல்லது குடியும் இல்லை (புறம். 335)

2. **முரசு அறைவோன்:** காவல் (கடம்ப) மரத்தால் செய்த கடம்ப முரசு இசைப்பவன்.
இத்தேவர்க்கு கொட்டும் உகச் சந் சேடந் கடம்பனும்
(தெ. இ. க. 17: 243; த. க. சொ. 211)
← த. க. க. 14/II, → கடம்பறுத்தியற்றிய முரசு

**கடவாத்தியம்:** மண்குடத் தாளஇசைக் கருவியுள் ஒன்று.
→ கடம்

**கடவுள் சடை:** வரிக்கூத்து வகையுள் ஒன்று.
சிந்து. . கடவுள் சடை வீரமாகேசம். . . கோத்த வரிக்கூத்தின் குலம் (சிலப். 3: 13: அடியார்க். மேற்)

**கடாஅம்:** - ஓசை கடம் > கடாம் > கடாஅம்
ஒப்பு: மலைபடு கடாஅம் மாதிரத்து இயம்ப (மலைபடு: 348)
கடாம், ஆகுபெயராய் அதனால் பிறந்த ஓசையை உணர்த்திற்று (நச்சர்.)

**கடி:** → கடிப்பு

**கடிகவர்பு ஒலித்தல்:** கஞ்சிராவில் 'சல் சல்' என ஒலிக்கும் காசுகளை இணைத்திருப்பர். கஞ்சிரா ஒலிப்பில் இடையிடையே 'சல் சல்' ஒலி சேர்ந்து இனிமை தரும். இதுவே கடிகவர்பு ஒலித்தல்.
கடிகவர்பு ஒலிக்கும் வல்வாய் எல்லரி (மலைபடு. 10)
← த. க. க. 16/II

**கடிகை:** = கடிகை மாக்கள்
மங்கலப் பாடகர்
மங்கலப் பாடகர், எட்டர், கடிகை மாக்கள் (திவா. 264)
தம்மை ஆதரிப்போரைப் புகழ்ந்து பாடும் பாடகர்.
கடிகையர் கவியோதை (கம்ப. எழுச். 79)

ஒப்பு:- கடிகை முத்துப்புலவர், கடிகை நமச்சிவாயப் புலவர்.

**கடிகைமாக்கள்:** → கடிகை

**கடிகை மாராயன்:** தலைமை வாத்தியக்காரன்
(சாச. தமிழ்க். 197)
← செ. ப. அ. பிற். 182

**கடிகையார்:**
1. கன்னல் எண்ணுளர், நாழிகைக் கணக்கர், நாழிகை வட்டிவிடுவார்,
நேரம் அறிவிப்பவர்.
அரசனுக்குக் கழிந்த நாழிகைக்குக் கவி சொல்வார்.
பூமென்கணையும் பொருசிலையும் கைக்கொண்டு
காமன் திரியுங் கருவூரா – யாமங்கள்
ஒன்றுபோய், ஒன்றுபோய், ஒன்றுபோய், நாழிகையும்
ஒன்றுபோய், ஒன்றுபோய் ஒன்று (சிலப். 5: 49 அடியார்க். மேற்.)
நாழிகைக்கணக்கர் நயம்பெறு கண்ணுளர் (சிலப். 5: 49)
நாழிகைக் கணக்கர் – கடிகையார் (மேலது அரும்)
நாழிகை வட்டிவிடுவாரு மென்ப. " சூதர் வாழ்த்த... நாழிகை இசைப்ப " (மதுரைக். 670–71) என்றார் பிறரும்" மேலது அடியார்க்)
2. பறைமூலம் அரசாணையை அறிவிப்போர் (தண்டோராக்காரன்)
திருக்கொடியேற்று நாளன்று திருப்பறை அறைவு கேட்பிக்குங் கடிகையார் இவர்க்கு (தெ. இ. க. 2. 25)
3. யாழ் மகளிர், கடிகை
காவல் மன்னரும் கடிகையும் கடவது நிறைத்தார் (சீவக. 2367)

**கடிகைவெண்பா:** அரசர், கடவுளர் முதலியோரது அருஞ்செயல்கள் ஒரு நாழிகையில் நடந்தனவாக 32 நேரிசை வெண்பாவில் கூறும் சிற்றிலக்கியம்.
← தொன். வி. 283. உரை; செ. ப. அ. 668

**கடிசரி:** தேசிக்குரிய கால்களுள் ஒன்று.
கீற்று, கடிசரி முதலாகத்தேசிக்குரியகால்களும்(சிலப்.3:16. அரும்)

**கடிதல்:** அபசுரம், (discordant note).
(கடிதல் - விலக்குதல்)

**கடிப்பு:** = குணில், கோல்
குறுந்தடி, குச்சி, (Drum stick)பறையை முழக்கப் பயன்படும் குச்சி
கடிப்புடைய திடும்... முரசம் (பதிற். 84: 1–2)
நாக்கடிப்பாக வாய்ப்பறை அறையினும் (சிலப். 14:29)
இணைமுகப்பறை யறை கடிப்புடைத்தோகை (கல்லா. 83: 23)
எண்கடிப்பு விசித்த கல்லல் (கல்லா. 85: 23)
குணிலே கடிப்பின் கூற்றாகும்மே (பிங்க. 1512)

**கடிப்பேறு:** முரசறைதல்.
கடிப்பேற்றினால் முரசு சார்வாக ஒலி பிறந்தாற் போல
(நீலகேசி. 509 உரை)

**கடிமுரசு:** வீரமுரசு, அரச முரசம்.
கடிமுரசு தன்பியரறைய (தெ. க. சொ. 139)

**கடுக்கா:** → கட்கா

**கடுந்துடி:** கடுமையான ஒலியையுடைய துடி. கதகளியில் இசைக்கப்படுகிறது.
கடுந்துடி தூங்கும் கணைக்கால் பந்தர் (பெரும்பாண். 124)

**கடுப்ப:** முழங்க
... வன் துடிவாய் கடுப்ப... (பெரிய. திரு. (62))

**கடுவாய்:** = கடுவை
ஒரு வகைப்பறை
பவணம் ... கடுவை ... பல்வகைப்பறையே (பிங்க 6: 429)
கடுவாய் இரட்ட வளை விம்ம (நந்திக். 6)
கடல் போல் முழங்கும் குரல் கடுவாய்ப் பறை... (பெரிய. திரு. 2: 9: 9)

**கடுவை:** → கடுவாய்

**கடைக்கருவி:** உடுக்கை.
கடைக்கருவி உடுக்கை; கடைக்கட்டட்டுக்கு உரித்தாகலின் (சிலப். 3: 27. அடியார்க்.)

**கடைக்காப்பு:** பதிகத்தின் இறுதியில் அமையும் முத்திரைப்பாட்டு.
திருப்பதிக நிறையித்துத் திருக்கடைக் காப்புச் சாத்தி
(பெரியபு. சம். 80)

**கடைக்கூழை:** அளவடியுள் முதல் சீர் தவிர ஏனைய மூன்று சீர்களிலும் வரும் தொடை வகை.
← யா. கா. ஒழிபு. 5; செ. ப. அ. 677

**கடைகழி மகளிர்:** பொதுமகளிர்.
கடைகழி மகளிர் காதலம் செல்வரொடு (சிலப். 14: 71)
கடைகழி மகளிர் _ பரத்தையர் (மேலது. அரும்)
(கடை - வீட்டு முன் கதவு)
ஒப்பு:- கலிங்கத்துப்பரணியின் 'கடைத்திறப்பு'

**கடைசிக்கூத்து:** = கடையம்; 11 ஆடலில் ஒன்று. வீழ்ந்தாடல் வகையது. இது பாணாசுரனுடைய 'சோ' எனும் நகரில் வடக்கு வாயிற் கண்ணுள்ள

வயலிடத்தே நின்று இந்திராணி (அயிராணி) ஆடியது.
கடையம் அயிராணி ஆடிற்று அதனுக், கடைய உறுப்புக்கள் ஆறு (சிலப். 3. 14 அடியார்க்.)
அயிராணி மடந்தை ஆடிய கடையமும் (சிலப். 6: 62–63)
.கடைசியர் வடிவுகொண்டு அயிராணி ஆடிய கடையமும் (மேலது: அரும்)
கடைசி > கடைசம் > கடையம்

**கடைதிறப்பு:** கதவு திறக்கை. பரணி இலக்கியத்தின் உறுப்புள் ஒன்று. (இலக். வி. 839)

**கடைநிலை:**
1. ஒரு துறை (சூழல்)
புறத்திணையான பாடாண் திணையுள் ஒருதுறை
← புறம்: 127, 382, 396
2. வாயில் காப்போனிடம் பாணர் வழி நடைத்துயரம் கூறும் சூழல்.
காவலர்க் குரைத்த கடை நிலையானும் (தொ பொ. 87)

**கடைநிலை விடை:** கடைநிலைத் துறைக்கான விடை (புறம். 397: சொல்)

**கடைமுரண்:** அடிதோறும் இறுதிச்சீரில் சொல்லாலும் பொருளாலும் மறுதலைப்படத் தொடுக்கும் தொடை
← யா வி. 39; செ. ப அ. 681

**கடைமோனை:** அடிதோறும் கடைச்சீரின் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுக்கும் மோனைத் தொடை.
← யா. வி. 39; செ. ப அ. 681

**கடையக் கூத்து:** → இந்திராணி கூத்து

**கடையம்:** → கடைசிக்கூத்து, அயிராணி

**கடையாகெதுகை:** இன எழுத்து எதுகையாக வரும் தொடை.
← யா. கா. ஒழிபி. 6. உரை; செ ப. அ. 681

**கடையிணைத்தொடை:** மோனை முதலியவை அடிகளின் ஈற்றிரண்டு சீர்களில் வரத் தொடுக்கும் தொடை
← யா. கா. 5. உரை; செ. ப அ. 681

**கண்:**
1. கண்பக்கம். மத்தளத்தின் வலப்பக்கம். இதனுடைய மத்தியில் நிலையாகக் கறுப்புச் சாந்து பூசப்பட்டிருக்கும். இது கண் என்று அழைக்கப்படுகிறது.
பண்ணமை முழவின் கண் எறி அறிந்து (சிலப். 3: 61)
2. → சுழி

**கண் எறி:** தண்ணுமை முதலிய தோற்கருவிகளை சிறப்பாக வாசித்தல்.
தண்ணுமைக் கருவிக் கண் எறி தெரிவோர் (மணிமே. 19: 82)

**கண்கூடு:** 1. யாழ்த் திவவிலுள்ள துளை, தொண்டு.
கண்கூடு இருக்கைத் திண்பிணித் திவவின் (பொருந. 15)
ஒப்பு:- தொண்டுபடு திவவு
2. வரிக்கூத்துள் ஒன்று
→ கண்கூடுவரி

**கண்கூடுவரி:** = பிரிய தரிசனம், கண்கூடு
காதலில் தோன்றிய கண்கூடு வரியும் (சிலப். 8: 77)
அஃதாவது காட்சி. அஃது ஒருவர் கூட்ட அன்றித் தானே வந்து நிற்கும் நிலைமை; என்னை? கண் கூடென்பது கருதும் காலை, இசைப்ப வாராது தானே வந்து. தலைப்பெய்து நிற்கும் தன்மைத்தென்ப (மேலது. அரும்)

**கண்ட ஏகம்:** → ஐந்தன் நடை ஒற்றைத்தாளம்

**கண்டக் கருவி:** மிடற்றுக்கருவி, சாரீரவீணை, (larynx, cavity in throat containing vocal cord).

**கண்டகட்டு:** பாவகையுள் ஒன்று (யா. வி)

**கண்ட காந்தாரம்:** பண்களுள் ஒன்று.

**கண்ட கூனிகை:** வீணை (யாழ். அக). ( the Indian lute)

**கண்ட சாதி:** → ஐந்தன் நடை

**கண்டசாதிஏகதாளம்:** → ஐந்தன்நடை ஒற்றைத் தாளம்

**கண்ட சாப்பு:** → ஐந்தன் சாய்ப்பு

**கண்ட நடை:** → ஐந்தன் நடை

**கண்டப் பாடல்:** வாய்ப்பாட்டு, குரல் இசை, மிடற்றுப்பாடல் (vocal song)
... யாழும் குழலும் ஏங்கிய மிடறும்... (சிலப். 3: 50 – 51)

யாழ்ப்பாடலும், குழலின் பாடலும், கண்டப்பாடலும்..
(சிலப். 3. 45-55அரும்)

## கண்டம்:

1. குரல், சாரீரம், மிடறு, வாய்ப்பாட்டு, (vocal sound).
நிலம், கலம், கண்டம் நிகழக்காட்டும் (மணி. 28. 42)
கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தால் பாடத் தொடுங்குமன் (சிலப். 3. கட்டுரை 24)
ஊழ்மணி மிடறும் ஒன்றாய்... (சீவக. 728)
2. கண்ட நடை, ஐந்தன் நடை
← த க க. 21/II

## கண்டலகு: → ஐந்தன் அலகு

## கண்டன கூறிற்றாக யாழிலிட்ட பாட்டு:

'திங்கள் மாலை' முதலாயின மூன்றும் முகமுடை வரி. இவை கண்டன கூறிற்றாக யாழிலிட்ட பாட்டு
(சிலப். 7. (4) அரும்)

## கண்டாமணி: = காண்டாமணி.

பெருமணி; யானை கழுத்தில் கட்டும் மணி.
← செ ப அ 688

## கண்டாரவம்:

1. மணியோசை
2. பண்களில் ஒன்று
↑ கண்டாராகம் என்பது கண்டாரவம் ஆகலாம்.
← செ. ப அ. 688; → கண்டாராகம்

## கண்டா ராகம்: பண்களில் ஒன்று

கண்டா ராகத்தில் வல்ல காரிகையே (விறலி. விடு. 9)

## கண்டிகை:

1. பதக்கம், மதானி, தொங்கட்டான்.
கண்டிகை, உருத்ராக்ஷம் ஒன்றும் தூரி ஒன்றும் உட்பட
(தெ. இ. க. 3 83)
2. முத்தாய்ப்பு முழக்குப் பகுதி
முத்தாய்ப்பு என்னும் மத்தள முழக்கில் மூன்று கண்டிகைகள் (முப்பகுதிகள்) உண்டு. இம்மூன்றும் சமமான கால அளவு கொள்ளல் வேண்டும்.
3. மாலை, ஆரம், கழுத்தணி
கண்டிகை மதானி, ஆரம் (பிங்க. 1171 & சூடா. 7: 3)
4. திருப்புகழ்க் கண்டிகை
திருப்புகழில் ஓர் அடியில் மூன்று சந்தக் குழிப்புகளும் ஒரு தொங்கலும் உண்டு - இது ஒரு கண்டிகை எனப்படும்.

| | | |
|---|---|---|
| பாதி மதி நதி | - | 1 குழிப்பு |
| போது மணி சடை | - | 1 குழிப்பு |
| நாத நரு ளிய | - | 1 குழிப்பு |
| குமரேசா | - | தொங்கல் = 1 கண்டிகை |

5. ஒருவகைச் சிறுபறை
அணிகலச் செப்பும், அக்கமணியும், வாச்சியத்தொன்றும் பதக்கமும் கண்டிகை (பிங்க. 3283)
பணவம்... கண்டிகை... பல்வகைப் பறையே (பிங்க. 1529)
← த க க. 21/II

## கண்டிகைத் தொங்கல்: திருப்புகழ்

கண்டிகையின் மூன்று மடிப்பின் ஈற்றில் வருவது கண்டிகைத் தொங்கல்.

| | |
|---|---|
| அகரமுமாகி | அதிபனுமாகி |
| அதிகமுமாகி | அகமாகி |

அகமாகி - என்பது கண்டிகைத் தொங்கல்

## கண்டித்தல்: (Permutation and combination)

மூன்றன் நடையையும் ஏழன் நடையையும் கண்டித்தது கண்டம் (ஐந்தன் நடை)
3/2 + 7/2 = 10/2 = 5 - ஐந்தன் நடை (கண்ட நடை)
திச்ர மிச்ரத்தைக் கண்டித்தது கண்டம் (இ. இ. பக். 40)

## கண்டியர்: பாணர் (அ நி); (Bards, Lyricists)

## கண்டை:

1. காண்டாமணி, பெரியமணி, யானைமணி
கண்டை, யானைமணி, கைமணித் தொடர்பே (திவா. 1223)
.. சேடகச் சண்டையும் கண்டையும் (தெ. இ. க. 7 863)
மத்தளம் எட்டும். . . . கண்டையாறும் .. (த. க. சொ 144)
கண்டை > கண்டா > காண்டா
2. தோற்கருவி
பணவம், திண்டி,... கண்டை... பல்வகைப் பறையே(பிங்க. 428)
3. கண்டை → கெண்டை

## கண்ணகம்: தோல் கருவியில் வாசிக்கும்போது அடிபடும் இடம்.

... தெண்கண் மாக்கிணை கண்ணகத்து யாத்த நுண் அரிச்சிறுகோல் (புறம். 382: 18-19)
மண்ணார் முழவின் கண்ணகத்து அசைத்த (அகம். 155: 14)
... கண்ணகத்து எழுதிய குரீஇப் போல (நற். 58: 3)

## கண்ணன் ஆட்டம்:

இதன்பிதாமகன் கோழிக்கோடு சிற்றரசன் சாமூதிரி பண்டைய சாக்கைக் கூத்தின் மரபு வழியாக உருவானது கண்ணனாட்டம்
←சிலம்புவழக்கும் செல்வம். ப. 48

## கண்ணி: ஒத்த இரண்டடிகள் ஓர் எதுகையில் வரும் இசைப்பாடல் (couplet)

எண்ணும் இரண்டடி எதுகை ஒன்றின்,
கண்ணி என்று கருதப்படுமே (சிந்துப். 33)

முதல்வரி நாற்சீர்; இரண்டாம் வரி முச்சீர்; தனிச்சொல் விளியாக, வெண்டளை யாப்புடன் வருவது கண்ணி.
எடு:- பாரதியின் கிளிக்கண்ணி, தாயுமானவர் பராபரக்கண்ணி, குணங்குடிமஸ்தான் மனோன் மணிக் கண்ணி
கொன்றையும் துளவமும் குழுமத் தொடுத்த
துன்று மலர்ப்பிணையல் தோள்மேல் இட்டாங்கு (சிலப். 12: (11)
கனாத்திறம் உரைத்த காதையும் வஞ்சின மாலையும் கண்ணிகளே.
எடு:- ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்
ரெண்ணியி ருந்தவர் மாய்ந்துவிட்டார் (பாரதி)

மந்தையின் மாடுதி ரும்பையி லேஅவள்
மாமன் வரும் அந்தி நேரத்திலே (பாரதிதாசன்)
← பாவலர் பண்ணை. பக் 124
↑ குறள் ஓரடிக்கண்ணி; வெண்பா ஈரடிக்கண்ணி;
கன்று குணிலா (சிலப். 17: (19)) தாழிசைக்கண்ணி;
திங்களைப் போற்றுதும் (சிலப். 1: (1) மூன்றடி (சிந்தியல்) வெண்பாக்கண்ணி;
ஆராரோ ஆரிரரோ என் கண்ணே நீ
ஆரிரரோஆராரோ – தாலாட்டுக் கண்ணி.
→ஓரடிக்கண்ணி, ஈரடிக்கண்ணி, மூன்றடிக் கண்ணி

**கண்ணிமை:** கண் இமையை இமைக்கும் காலநுட்பம். ஒரு மாத்திரைக் கால அளபே கண்ணி மையை இமைப்பதற்காகும் கால அளபாகும்
(தொ க க. பக். 70)

**கண்ணிமை நொடி:** கண் இமைகளை இமைத்தலும், கை விரல்களை நொடித்தலும் ஒரு மாத்திரை (ஒருநொடி) அளவு ஆகும்.
கண்ணிமை நொடி என அவ்வே மாத்திரை (தொ. எ. 7)

**கண்ணிரங்குதல்:** ஒலித்தல்.
கலாபம் வீங்கி மிளிர்ந்து கண்ணிரங்க (சீவக. 1985)

**கண்ணுள்:** கூத்து, ஆடல், கண்ணுளம்
கூத்து நடமே நாடகம் கண்ணுள் நட்டம் (திவா 9 191)

**கண்ணுளங் கடும்பு:** = இரும்பேர் ஒக்கல். கூத்தாடு சுற்றம்.
... எம் கண்ணுளங் கடும்பே (புறம். 153: 6)
(கண்ணுளம் - கூத்து)

**கண்ணுளம்:** → கண்ணுள்

**கண்ணுளர்:** = கண்ணுளாளர்.
ஆடலர், சாந்திக்கூத்தர், மதங்கர், குழலர், பெரும்பாணர், மாறுவேடம் பூண்டு ஆடுவோர் (Mosquerader)
கலம் பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ (மலைபடு. 50)
வயிரியர் கண்ணுளர்க்கு ஓம்பாது வீசி (பதிற். 20: 16)
கண்ணுளர் - கோலத்தாலும் கூத்தானும் அழகுபெறும் சாந்திக்கூத்தர் (சிலப். 5 49 நாட். உரை)
கண்ணுளாளர் கருவிக் குயிலுவர் (சிலப் 5·184)
கண்ணுளர் - மதங்கர் ஆவார் பெரும்பாணர்: குழலருமென்ப (5· 184_6. அடியார்க்.)
கண்ணுளர் ஆடல்தோறும் (கம்ப வரைக் 44)

**கண்ணுளாளர்:** → கண்ணுளர்

**கண்நோவுற்றோன் அவிநயம்:** கண்நோவுற்றோன் அவிநயம் காட்டி, நண்ணிய கண்ணீர்த் துளி விரல் தெறித்தலும், வளைந்த புருவத்தொடு வாடிய முகமும், வெள்ளிடை நோக்கின் விழிதரு மச்சமும், தெள்ளிதிற் புலவர் தெளிந்தனர் கொளலே (சிலப் 3 13 அடியார்க்)

**கண்படை:** உறக்கம்
1. மன்னர் துயிலுவதற்குப் பாணர் பாடிய நிலை கண்படை
அடுபுகழ் மேவலோடு கண்படை இலனே (அகம். 214: 7)
மண்டு அமர் நசையொடு கண் படை பெறாஅது (முல்லைப். 67)
கண்படை ஈயா வேலோன் ஊரே (புறம். 322–10)
வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு, கண்படை பெறேன்
(அகம். 55: 8–9)
கனை இருங்கங்குலும் கண்படை இலெனே (நற். 348: 8)
நள்ளென் யாமத்தும் கண்பெடை பெறே என் (நற். 178–8)
கண்படை பெறாஅது தண்புலர் விடியல் (நற். 60: 3)
ஊடல் என ஒன்று தோன்றி அமைஉறாஉம் ... காளையைக் கண் படையுள் பெற்று (முத்தொள்.)
களவு, துயிலே, கண்படை., அனந்தல், படலே
நித்திரை, பள்ளி, உறக்கம், துஞ்சல், உறங்கல் (பிங்க. 2039)
படு > படை - மூடுகை, மூடுதல்; படு + அல் > படல் - கண்களை மூடுதல், உறக்கம்.

2. ஒருபுறத்துறை; பாடாண் திணை
கண்படை கண்ணிய கண்படைநிலை (தொ. பொ. 87)
சூதர் ஏத்திய கண்படைநிலையும் (தொல். பொ. 88)
வேந்தன் கண் படைநிலை மலிந்தன்று (பு. வெ. 8:29: கொளு)
கண்படை, கண்வளர்தல்... பள்ளி, துயிறல் ஆகும் (திவா. 1572)
(கண் வளர்தல் - தூங்கல்; - கண் வளராயோ, கண்மணியே - தாலாட்டுப்பாடல்)

**கண்பு:** ஒருவகை சம்பங்கோரை; நெகிழி; ஊது கருவிகளின் சீவாளி செய்வதற்குப் பயன்படுவது.
... செருந்தியொடு கண்பு அமன்று ஊர்தர (மதுரைக். 172)
கண்புமலி பழனம் கமழ... (மலைபடு. 454)
காமரு பழனக் கண்பின் அன்ன (புறம். 334:1)

**கண்மலர்நிலை:** துயில் எழுப்பும் நிலை, பள்ளி எழுச்சி, துயில் எடைநிலை மன்னரைக் காலையில்

எழுப்புவதற்காகப் புகழ்ந்து பாடுதல். கண்மலர்தல் - கண் விழித்தல்
சூதர் ஏத்திய துயில் எடை நிலையும் (தொ. பொ. 88 )

**கண்வளையம்:** மத்தளத்தின் கண்ணைச் சுற்றியுள்ள வட்டம் (பரத ஒழிபு. 12: உரை)

**கண்விடுதூம்பு:** ஊதுகருவிகளுள் ஒன்றான பெருவங்கியம்; நெடுவங்கியம்.
கண்விடுதூம்பின் களிற்று உயிர் தொடுமின் (புறம். 152: 15)
... பெருவங்கியத்தை இசையுங்கள் (பழைய. உரை.)
கண்ணறுத்து இயற்றிய தூம்பொடு சுருக்கி (பதிற். 41: 4)
மூங்கிலின் கணுக்களை அறுத்து இயற்றப்பட்ட பெருவங்கியத்தோடு (பழைய உரை)
கண்ணிடைவிடுத்த களிற்றுயிர்த் தூம்பின் (மலைபடு. 6)
கழைவளர் தூம்பின் கண்ணிடம் இமிர (மலைபடு. 533)
மூங்கிலாகிய இசைவளரும் பெருவங்கியத்தினது (மேலது. நச்சர்)
கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு (அகம். 82: 5)
தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும் (அகம். 111:9)
குறுநெடுந் தூம்பொடு முழவுப் புணர்ந்து இசைப்ப (அகம். 301: 17)
... தூம்பின் உயிர்க்கும் அத்தம் (ஐங். 377:2)
. நெடுவங்கியம் போல (பழைய உரை)
விரல் செறிதூம்பின் விடுதுளைக் கேற்ப (பரிபா. 21: 33)
வாயிலும் உள்துளைப் பொருளும் மூங்கிலு
மரக்காலு மதகுந் தூம்பு எனல் ஆகும் (பிங்க. 3669)
← த. க. க 24-25/II

**கணக்காயன்:** கவிஞன் (நா தீப. ) (Poet)

**கணங்கொட்டல்:** கணம் கொண்டு தாள முழக்கல் ஓர் எண்ணிக்கைக்குள் எட்டுக்குறில் எழுத்து ஒலிக்குமாறு கொட்டுவது கணம்கொட்டல் அதற்கான முழவுச் சொல்: கிடதக தரிகிட - 8/8
கணம் கொண்டு துவைப்ப அணங்குமுன் நிறீஇ (சிலப். 12: 42)
கணம் - நொடியில் பாதி
← த. க. க 115/IV

**கணப்பறை:** தோற்கருவி வகைகளுள் ஒன்று
திமிலை குடமுழாத் தக்கை கணப்பறை
(சிலப் 3· 27 அடியார்க் மேற் )
கணம் என்பது நொடியில் பாதி; இந்த நுண் கால அளவில் கொட்டும் பறை
கணங்கொள் அருவி (அகம். 22:2)
கணங்கொள் இன்னிசை (நற். 197:9–10)
சத்தக் கணப்பறையும் (திருப்பு. 139)

**கணி:** → கணிக்காரிகை, கணியான்

**கணிக்காரிகை:** = கட்டுவிச்சி, கணி, அகவன் மகள். குறிசொல்லும் பெண்
← செ. ப. அ 704

**கணிக்கை:** → வெறியாடுமகள்

**கணிகை:** ஆடல் மகள், பொதுமகள், பதியிலார் (Harlot, courtesan)
கணி > கணிகை: தாளம் கணித்து (அளவிட்டு) ஆடுவோள்
கண் - கணி - கணித்தல் - அளவிடுதல்.
வடமொழியில் பெண் ஈறான' ஆ 'பெற்று கணிகை என்பது கணிகா ஆனது (தே.நே. 22/X ,154/IV, 207/IX)
கடவுள் கணிகை காதல் அம்சிறுவர் (மணிமே. 13: 95)
கணிகை ஒருத்தி கைத்தூண் நல்க (மணிமே. 16: 6)
மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக் கணிகை (பரிபா. 20: 49)
நாடகம் ஏத்து நாடகக் கணிகையொடு (சிலப். பதிகம். 15)
கணிகையர் வாழ்க்கை... (சிலப். 11: 183)

**கணியாட்டம்:**→ கணியான் கூத்து

**கணியான்:** = கணி, கண்ணுளர்
ஆடலன், நடிகன், கூத்தாடி (யா அக) (Dancer, actor)
கண் > கணி > கணியான்
கண் + உளன் - கண்ணுளன்

**கணியான் ஆட்டம்:**→ கணியான் கூத்து

**கணியான் கூத்து:** = மகுடாட்டம், கணி ஆட்டம், கணியான் ஆட்டம்.
நெல்லை மாவட்டத்தில் வழக்கில் உள்ளது தமிழகத் தென்மாவட்டச் சிற்றூர்ச் சுடலைமாடன் கோவில் களில் நிகழ்த்தப்பெறும் ஒருவகைச் சடங் காட்டக் கதைப்பாடல் நிகழ்கலை ஆட்டத்தில் தப்பு மகுடமாக விளங்குவதால் மகுடாட்டம்; ஒருபறை தாழ்குரலிலும் மறுபறை உச்சக்குரலிலும் முழக்கப் படுவது கதை, பாட்டு, ஆடல் மூன்றும் கலந்த கலை கணியான் என்ற பிரிவினரால் மட்டும் ஆடப்படுகிறது எனவே இது ஓர் இன வரைவியல் கலை (Ethnographical Art).
← த. க. க 26/II; தமிழ் இலக் களஞ். 460/I

**கணுவை:** தோற்கருவிகளுள் ஒன்று
கணுவை, ஊமை, சகடை யோடு ஆர்த்த வன்றே (கம்ப. பிரமாத். 5)

**கணைக்கோல்:** புரிநரம்பு
...கணைக்கோல்இன்னிசைநல்யாழ்ப்பத்தரும்
(மலைபடு. 380–381)

**கணையம்:** தோற்கருவிகளுள் ஒன்று.
(கந்தபு கயமுகனு 214)

**கத்தரி:** =கத்தரிகை
தலைவிரிபறை.
குழை, உடல், தலைவிரிபறை கத்தரியே (பிங்க: 1527)
கத்தரிகை துத்தரி . . . கருவித்திரள் அலம்ப (தேவா: 837: 5)

**கத்தரிகை:**
1. கத்தரிகைக்கை. ஒற்றைக் கை வகைகளுள் ஒன்று
திரிபதாகையின் முடங்கிய அணிவிரல் புறத்ததாகிய நடுவிரலைச் சுட்டு விரலொடு பொருந்த நிமிர்ப்பது: என்னை? கத்தரிகையே காண்டக விரிப்பின், அத்திரி பதாகை யினணியின் புறத்தைச் சுட்டகமொட்டவிட்டு நிமிர்ப்பதுவே (சிலப் 3: 18 அடியார்க்.)
2. கத்தரி

**கத்தரிகைக்கால்:** வடுகிற்குரிய கால்கள் பதினான்கனுள் ஒன்று (சிலப் 3: 16 அடிக்)
கால் - அடைவு (அடவு)

**கத்தரிகைக்கை:** → கத்தரிகை

**கத்த்ரி சோத்திகம்:** இணைக்கை வகையுள் ஒன்று சுட்டுவிரல்களை ஒருங்கிணைத்து ஏனைய விரல்களை மடக்கி கத்தரி போன்று அவிநயம் செய்தல் (பரத பாவ. 64)

← செ ப. அ. 708

**கத்திரம்:** → காத்திரச்சொற்கட்டு

**கதக்:** வடநாட்டு நடனவகை. சொற்கட்டுகளுக்கும் (சதி) மற்றும் தபேலா தாளத்திற்கும் ஏற்ப ஆடும் நாட்டியம். சுற்றடைவுகள் நிறைந்தது பாதங்களை வேகமாகத் தட்டிஆடுவது, இந்தஆடலில் முதன்மை நிலையாக அமையும்.

**கதகளி:** = ஆட்டக்கதை (ஆட்டக்கதா)
கதை தழுவி வரும் கூத்து. கதைகளி என்பதின் திரிந்த வடிவம். (Pantomime art)
கதை + களி; களி - மகிழ்ந்தாடல்
பண்டைய சேர நாடகம். இன்று மலைநாட்டில் ஆடப்படுவது. சாக்கையர் கூத்தின் மரபில் வந்த ஆட்டத்தின் ஒரு பகுதி கதகளி உரையாடல் இன்றி ஆண்கள் மட்டுமே ஆடும் ஆடல்.
தனிமை, துணைமை, இணைமை, வன்மை
கதைக்களி, காப்பியம், கூத்து அறுவகையே (கூத்தநூல்: 23)

**கதாகாலட்சேபம்:** → இசைக்கதைச் சொற்பொழிவு

**கதி:** → நடை

**கதிபேதம்:** → நடையுள் நடை

**கதிர்:** → சுழி

**கதுவாய்:** வடு, குறை. மோனை முதலிய தொடை விகற்பம்.
கழிப்பிணிப் பலகையர்கதுவாய் வாளர் (புறம்: 345: 15)
← இலக்: வி: 723
கதுவாய் வடுப்படல் (திவா: 1667)

**கதைப்பாடல்:** இசைக்கதை (Ballad poetry).
ஒரு கதையைப் பாட்டாகப் பாடுவது.
எடு:- கோவிலன் சரித்திரம், முத்துப்பட்டன் கதை, வல்லரக்கன் கதை, நல்லதங்காள் கதை, பொன்னர் சங்கர் கதை, காந்தி மகான் கதை
↑ இம்மரபே பின்னாளில் இசைக்கதைச் சொற்பொழிவு (கதாகாலட்சேபம்) ஆகியது எனலாம்.

**கதைப்பிரசங்கம்:** → இசைக்கதைச் சொற்பொழிவு

**கந்த உரு:** ஒரு தாளத்திற்குப் புணர்க்கப்பட்ட இசை உரு அதாவது ஒரு தாளத்தில் அமைக்கப் பட்ட இசைப்பாடல்.
கந்தமென்றது - அடிவரையறை உடைத்தாய் ஒரு தாளத்தால் புணர்ப்பது. (சிலப்· 3: 14. அடியார்க்)

**கந்தம்:**
1) கந்து, தூண், இலிங்கம் (தமிழர் தாயகம். பக்: 54), கம்பம், ஆதீண்டு குற்றி, யானை கட்டும்தறி(முருகப்பெருமானது தனிப்பெரும் காட்சி – மருத்துவர் தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை)
கலிகெழு கடவுள் கந்தம் கைவிட (புறம்: 52: 12)
களிறு கதன் அடக்கிய வெளிறுஇல் கந்தின் (பெரும்: 396)
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையிலும் (முருகு: 226)
. . . தொன்றுமுதிர் கந்தில். . . . (மணிமே: 21: 131)

2) ஒரு தெய்வம் (முருகன்; கந்தன்)
கந்திற் பாவை வருவது உரைத்த காதை (மணிமே:21ஆம் காதை
புலம் கந்தாக இரவலர் செலினே (அகம்: 303: 8)
கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து (அகம்: 307–12)
கந்து > கந்தம் > கந்தன்
↑ கந்து – தூண்; முருக வழிபாடு தூண் அடையாள வடிவிலே

தொன்மையில் நிகழ்த்தப்பட்டது. இலிங்க வழிபாடும் (Phallic Worship) இத்துடன் இணைத்து எண்ணத்தக்கதே. குறிஞ்சி நில ஓர் இறை கந்தன் என்ற அடிப்படையில் ஒரு தாளத்திற்குப் பாடலை இசைத்தது கந்தம் ஆகி இருக்கலாம்.

3) ஒரு தாளத்திற்குப் புணர்க்கப்பட்ட இசைப்பாடல்

கந்தமென்றது. . . ஒரு தாளத்தில் புணர்ப்பது

(சிலப். 3: 14: அடியார்க்)

கந்தத்தால் எண்திக்கும் (சம்பந்தர் – திருத்தாளச்சதி)

## கந்தர்வஆசாரி: *கந்தர்வர்களுக்குத் தலைமையாக இருந்தோர்.*

→ கந்தர்வ நாயகம், கந்தர்வர்

## கந்தர்வநாயகம்:

*கந்தர்வர்களுக்குத் தலைமையாக இருந்தோர்*

→ கந்தர்வர்

## கந்தர்வர்: = கந்தர்விகள், காந்தருவர், கந்தருவர்.

1. யாழ்வல்லோர், கின்னரர்

கந்தருவர் யாழ் வல்லோரே, காந்தருவர் கின்னரரும் ஆமே (சூடா. 1: 44)

2. *கந்தர்விகள் என்போர் இராசஇராச சோழன் காலத்தில் தேவாரம் பாடிய ஓதுவார் பிரிவினர். இவர்கள் தேவாரம் ஓதும் நெறி கந்தர்வநெறி அல்லது கந்தர்வ மார்க்கம்.*

*தளிச்சேரிப் பெண்டுகட்கும் கந்தர்விகளுக்கும் நாயகம் செய்ய*

*(ஐயாறப்பர் கோவில் கல்வெட்டு)*

*மார்க்கம் - வழி, நெறி, மரபு*

← *த க. க. 34-5/II*

## கந்தர்விகள்: → கந்தர்வர்

## கந்தருவ நூல்: = கந்தருவ வேதம்

*இசைநூல், நரம்பின்மறை* (A treatise on music)

கந்தருவ நூலின் கண்ணும் ஒரு சீரில் சுருங்கின வாரா

(தொ· பொ· 457 உரை)

## கந்தருவம்:

1) குதிரை

2) இசை, (Music, Harmony, song)

கந்தருவம் பண் வாசி. . . (சூடா: 11: 6)

இராவணனைக் கந்தருவத்தால் பிணித்து

(தொ· பாயி: நச்சர்)

சாமவேதம் கந்தருவம் விரும்புமே (தேவா: 964:1)

கானமும் குதிரையும் கந்தருவமென்ப (பிங்க: 3291)

## கந்தருவ மார்க்கம்: = கந்தருவ மார்க்கச் செய்யுள்.

இசைப்பாட்டின் முறை: அடிமடங்கி வரும் பாடல்

(தொ பொ 149 நச்)

*சீவக சிந்தாமணியில் அடி (இடை) மடங்கி வரும் பாடல்: 724-726; 1245, 1247, 1609, 1611, 2561-63, 2739-41.*

இத்தாழிசைக் கொச்சக ஒரு போகுகள் கந்தருவ மார்க்கத் தான் இடை மடக்கின இது,மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும் (சீவக. 724_26· நச்சர்.)

## கந்தருவ மார்க்கச் செய்யுள்: → கந்தருவ மார்க்கம்

## கந்தருவர்: → கந்தர்வர்

## கந்தருவவேதம்: → கந்தருவநூல்

## கந்தழி:

1. பரிசு, கொள்ளை, மிகுதி

தொல்லாணை நல்லாசிரியர் புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்

(மதுரைக். 761–62)

பழைய ஆணைகளையுடைய நல்ல ஆசிரியர் தாங்கள் பின்பு கூடின கந்தழியாகிய கொள்ளையை அவரிடத்தே பெற்று அனுபவித்த (மேலது· நச்சர்)

தொல்லாணை நல்லாசிரியர் உறழ் குறித்து எடுத்த உருகெழு கொடியும் (பட்டினப் 170_71, முருகு. 317 நச்)

2. புறத்துறையுள் ஒன்று; *மாற்றாரது அரண் அழித்த வெற்றி.*

*எடு:- கண்ணன் வாணாசுரனின் சோ நகரை அழித்ததைக் கூறுவது.*

கொடிநிலை கந்தழி வள்ளி... (தொல்: பொ: 85)

← *புறப். வெண். 9: 40*

## கந்தன் பாட்டு: = கந்தியின் பாட்டு

*வரிக்கூத்துள் ஒன்று.*

சிந்து. . . . கந்தன் பாட்டு. . . கோத்தவரிக் கூத்தின் குலம்

(சிலப்: 3:அடியார்க். மேற்)

கந்தியின் பாட்டு - பாடபேதம் (மேலது. அடிக்)

## கந்தார்த்தம்: *ஓர் இசைப்பாட்டு; இசைப்படுத்திய பாட்டு.*

## கந்தாரம்: = காந்தாரம்

*காந்தாரப்பண்.*

கந்தாரஞ் செய்து களிவண்டு முரன்றுபாட (சீவக: 1959)

காந்தாரம் என்னும் பண்ணை ஆக்கி (நச்சர்)

கந்தாரம் பாடும் களித்து (திணைமாலை:150 106: 4)

காந்தாரப் பண்ணில் இசைப்படுத்தப்பட்டவை (பரிபா: 19, 20, 21)

கந்தாரம் தாம் முரலாப் போகா நிற்க

(அப்பர் திருத்தாண்:2: திருவாமாத்தூர்: 6331)

கந்தாரம் அந்தேன் இசைபாட (பாசுரம்: 1218)

**கந்தாளனசிரம்:** *முன்னும் பின்னும் மாறிப் மாறிப் பார்க்கும் சிர அவிநயம் (பரத பாவ. 76)*
*← செ ப அ 718*

**கந்தியின் பாட்டு:** → கந்தன் பாட்டு

**கந்திரம்:** *இசை*
கந்திரம் முரலும் சோலைக் காலைங்கெடிலத்தாரே
(திருநேரிசை: திருஅதிகை வீரட்: பா:10/ 4440)

**கந்திருவர்:** *காந்தப்பர், கந்தருவர், தந்திரர், கின்னரர், யாழோர் (வைணிகர்).*
கந்திருவர் அங்கா தரித்து இன்னிசைபாட
(அஷ்டப்: திருவரங்கத்தந்தாதி: 1)
தந்திருவர் கின்னரர் வீணை வல்லவர்
கந்திருவர் பெயர் எனக்கருதல் வேண்டும் (திவா: 34)

**கந்துகவரி:** = பந்தாட்டப்பாடல், பந்தடிப்பாட்டு
*மகளிர் பந்துகளை எறிந்து பாடிக் கொண்டே ஆடும் ஆடல்*
ஆயமொடு கெழீஇப் பந்து வழிப்படர்குவன் ஆயினும்
(அகம்: 153: 2–3)
பந்து ஆடு மகளிரின் படர் தரும் (ஐங்: 295: 5)
ஆடேடிபந்து ஆடேடிபந்து (திருவருட். 4932)
சாவாவரம் தந்து வாழ்வாயே பந்தே
சாவாமல் என்னோடு வாழ்வாயோ பந்தே (திருவருட். 4962)
கந்துகங்கள் கைத்தலத்தால் ஏறுண்டு பொங்கி (சூளா. 1755)
← பெருங். 4:12: 87–9; சூளா. சுயம். 201–4;
த. ப. வா. 565 – 6/III; சிலப். வாழ்த். காதை கந்துகவரி

**கப்பல் பாட்டு:** → ஏலப்பாட்டு

**கபித்தக்கை, கபித்தம்:** → விளாம்பழக்கை

**கபோதம், கபோதக்கை:** → புறாக்கை

**கம்சபத நடனம்:** → அன்ன நடை நடனம்

**கம்சபதம்:** → அன்ன நடை நடனம்

**கம்பக் கூத்து:** *கழைக்கூத்து,* (pole dance, acrobatic performance).

**கம்பம்:** → கம்பலை

**கம்பராமாயண யாப்பு:**

| | | |
|---|---|---|
| 1 | கலிவிருத்தம் | 5094 |
| (இவற்றுள் பெரும்பான்மை வெண்டளை பயின்ற தரவு கொச்சகம் 86) | | |
| 2 | 6 சீர் ஆசிரிய விருத்தம் | 3195 |
| 3 | 7 சீர் ஆசிரிய விருத்தம் | 178 |
| 4 | 8 சீர் ஆசிரிய விருத்தம் | 6 |
| 5 | கலி நிலைத்துறை | 1805 |
| 6 | வஞ்சிவிருத்தம் | 294 |
| 7 | வஞ்சித்துறை | 4 |

*(இலக்கணத்: முன்: பக்: 95-96)*
*← த இ. பே. 49/16*

**கம்பலை:** = சும்மை, கலி, அழுங்கல்
1. *ஆரவாரம், ஓசை, ஒலி, ஓலம், அரவம்,* (roar, clamour)
கம்பலை, சும்மை, கலியே அழுங்கல்
என்றிவை நான்கும் அரவப்பொருள் (தொ. பொ. 343)
இவை இசை பற்றி வந்தன (மேலது. இளம்)
அழுங்கல் ஊரே (நற். 203)
*கண்ணீரும் கம்பலையுமாக வந்தாள் (நாட். வழ.)*
2. கம்பம், (Tenor)
*நடுங்கி ஒலித்தல்; கம்பலை எனும் உள்ளோசை இவ்வகை உள்ளோசை மேலை நாட்டுக் குரல் இசையில் மிகவும் வழக்குப் பெறுகின்றது*
நடுக்கமும் தூணும் நடுதறியும் கம்பம் (பிங்க. 3297)
இன்னாங்கு, ஓசை, நடுக்கம், அச்சம் கன்னித் தமிழோ கம்பலை என்ப (திவா. 1980)
*← ப இ. இ. பக். 226*

**கம்பிகை:** *தோற்கருவியுள் ஒன்று (ச. அ.)*

**கம்பித்தல்:**
1. *முழங்குதல்; அசைத்தல்* (to roar; to shake, to vibrate).
2. *தேசிக்குரிய கால்கள் (அடைவுகள்) 24 இல் ஒன்று.*
*(சிலப்: 3: 16:அடிக்)*

**கம்பித சுரம்:** *கம்பீரசுரம்; உயிர்ச்சுரம் (ஜீவசுரம்)*
*சில பண்களில் குறிப்பிட்ட சில சுரங்களைக் கனமாக அசைத்துப் பிடித்துப் பாடுவதால் அந்தப் பண் கம்பீரமும் தனி அழகும் பெறும். மேலும் இக்கம்பித சுரங்கள் பண்ணின் சாயலைத் தனித்துக் காட்டவல்லன.*
எடு:– தன்யாசிப் பண்ணின் கம்பித சுரங்கள் – கா, நி

**கம்பிதம்:** இசைக்கிரியை எட்டனுள் ஒன்று.
(சிலப் 3: 26: அடியார்க்)
← பரத. இராக. 24, → கம்பலை (கம்பம்)

**கம்பீரநாட்டை:** → நாட்டம்

**கம்புக் கூத்து:** → தெருக்கூத்து

**கமகம்:** = உள்ளோசை. விவரிப்பு, சுரவிரிவாக்கம்; பல்வேறு ஏற்ற இறக்கம், அசைப்பு, வளைப்பு முதலியவற்றால் சுரத்தை விரித்தல் (Quiver of notes, deflection of notes, Graces, curves, embellishments, nuances, shakes, ornaments).
→ கமகன்

**கமகன்:** விவரிப்போன்.
அரும்பொருளைச் செம்பொருள் நடையாகக்
காட்டி விவகரிப்போன் கமகன் (சூடா. 12: 22)

**கமல கோசிகம்:** → தாமரை மொட்டுக்கை

**கமல நடனம்:** = கமல நிருத்தம்
கூத்துள் ஒன்று(யாழ். அக.). தென்றலில் ஆடும் தாமரை போல் ஆடும் நடனம்

**கமல மனோகரி:** பண்களில் ஒன்று(பரத. இராக 55)

**கமல வருத்தனை:**
தொழுதற்கு அறிகுறியாகத் தாமரை மொட்டுப் போலக் கைகளைக் குவிக்கை
← செ. ப. அ. 730

**கமனப்பிரியா:**= கமனாசிரமம்; ஏழுசுரப் பண்களில் ஒன்று; 24ஆம் பாலை (மேளம் 53)

**கமனா சிரமம் :** → கமனப்பிரியா

**கமாசு:** பண்களில் ஒன்று.

**கயிசிகை:** → கைசிகம்

**கர்ணா:** இசைக்கருவிகளுள் ஒன்று.
கர்ணா வோடு சிறந்த கொம்புகள். . . முழுங்கி வர
(இராமநாட: யுத்த 87)
→ கருணா

**கர்த்தா:** → தாய்ப்பண்

**கர்நாடக இசை:**

**1) பழமையான இசை**
'இவன் சுத்த கர்நாடகமான ஆள்' (நாட். வழ.)
(பழமையான ஆள்)

**2) கரைநாட்டு இசை**
தமிழகம் (தென்னகம்) முப்பகுதிகளிலும் கடல் (கடற்கரை) சூழ்ந்த நாடு; எனவே கரைநாடு அங்கு வழங்கும் இசை கரைநாட்டு இசை - கர்நாட்டு இசை - கர்நாடக இசை.

**3) தென்னாட்டு இசை**
தென்னாடு (தமிழ்நாடு) வடவர்களால் கர்நாடகம் என்று குறிப்பிடப்பட்டது சோமேசமல்லர் எழுதிய மானச சொல்லேசம் என்ற நூலில் (கி. பி. 12ஆம் நூற்றாண்டு) கர்நாடகம் என்ற சொல் வருவதாகக் கூறப்படுகிறது. எனவே தென்னாட்டில் வழங்கும் இசை கர்நாடக இசை என்று வழங்கப்படுகிறது. ஆர்க்காடு நவாப், கர்நாடக நவாப் என்றும் ஆர்க்காடு யுத்தம் கர்நாடக யுத்தம் என்றும் வெள்ளையர்களால் கூறப்பட்டது.
சங்கீத இரத்தினாகார உரையில் கல்லிநாதர் குறிப்பிடுவது: கிருட்டிணா நதிக்கும் காவிரி நதிக்கும் இடைப்பட்ட நிலம் கர்நாடகதேசம்.
மின்விளக்கு பற்றிய கீர்த்தனை;
எடுப்பு:- கர்நாடகம் தன்னிலே
கைவிளங்கும் மெய் விளங்கும்
மேற்கண்ட பாடலில் தமிழகமானது கர்நாடகம் என்றே குறிப்பிடப்படுகிறது.
"தொழிலாளர்கள் அடர்ந்து வசிக்கும் சூளைப் பகுதியைச் சுற்றி அன்றைய காலத்தில் தென்னகத்தின் மிகப்பெரிய நெசவாலையாக விளங்கிய பக்கிங்காம் கர்நாட்டிக் (பின்னி) ஆலையும்..."
← முச்சந்தி இலக். பக். 62
தமிழகத்தின் நெசவாலை பக்கிங்காம் கர்நாட்டிக் ஆலை என்றே வழங்கியுள்ளது. எனவே தமிழகம் ஒருகாலத்தில் கர்நாடகம் (கர்நாட்டிக்) என்றே அழைக்கப்பட்டுள்ளது.
1) சூளை - சென்னை சூளைமேடு
2) பக்கிங்காம் - சென்னை பக்கிங்காம் கால்வாய்
அரிபாலரின் சங்கீத சுதாகரம் (கி.பி. 14ஆம் நூற்றாண்டு) என்ற நூலிலுள்ள ஒரு சுலோகத்தில் கர்நாடக சங்கீதம் என்ற சொல்லாட்சி இடம் பெற்றுள்ளதாகக் கூறுவர் ஆனால் இந்தச் சுலோகம் ஓர் இடைச்செருகல் என்று கண்டுபிடித்து சென்னை மியூசிக் அகாடமியில் என். எஸ். இராமசந்திரன் என்ற தில்லி வானொலி அதிகாரி கட்டுரை அளித்துள்ளார். (27ஆவது கருந்தரங்க மலர் 91-93யில் இடம் பெற்றுள்ளது (திராவிட இசை. பக்: 124-26)
Now (it is said) on this connection (lit. there) that the southern (countries) favour various kinds of dance, song and instrumental music, an abundance of the Graceful (kaisiki) style and clever and graceful gestures. They are as follows: - ...Kosala, ...kalinga... and

*கரகரப்பிரியா (மருதயாழ்) வில் பிறந்த பண்ணே (காமரம், சீகாமரம்) சுத்த தன்யாசி.*

திரண்ட சாதாளியே காமரம் செம்பாலை (பஞ்ச. 72)
தாவில் புகழ்க் காமரத்தின் தன்மை தனக்கு இரண்டு அமைத்தார் (திருமுறைகண்ட. 36)
வண்டினங்கள் காமரங்கள் பாடும் (குலசேகரஆழ்வார்)
போதலர் காவில்... வண்டின் காமரம் கேட்டு... (நாச். திரு. 5: 3/547)
காரடைந்த சோலை சூழ்ந்து காமரம் வண்டிசைப்ப (தேவா. 1: 47: 3)

↑ *இங்கு 'கா' மற்றும் 'சோலை' என்ற சொல்லால் மருதநிலம் சுட்டப்படுவதால் மருதநிலச் சிறுபண் - காமரம் - சுத்ததன்யாசி என்பது பெறப்படுகின்றது*

ஏமஇன் துணை தழீஇ இறகு உளர்ந்து
காமருதும்பி காமரம் செப்பும்
தண்பணை தழீஇய தளரா இருக்கை (சிறுபாண். 76–78)
மருதம் சான்ற மருதத் தண்பணை (சிறுபாண். 186)

*மருதநிலத்தில் காமரப் பண்ணை அமைத்துக் காட்டுகிறார்.*

**3. இசை**

வண்டினங்கள் காமரங்கள் இசைபாடும் கணபுரத்தென் கருமணியே (பாசுரம். 723)
வண்டின் காமரம் கேட்டு உன் காதலியுடன் வாழ் குயிலே (பாசுரம். 547)
இசை, இசைப்பொதுப் பெயர், எடுப்பும் காமரம் (பிங்க. 3350)
மண் கணை முழவின் தலைக்கோல் கொண்டு
தண்டு காலாகத் தளர்ந்த லோம்பி (மலைபடு. 370)
மார்ச்சனை செறிந்த முதலிடத்தில் காமரத்தை நுமக்குக் காலாக வாங்கிக் கொண்டு (நச்சர்). *இங்கு இசையைக் காமரம் என்று கூறுகிறார்.*

*காமரப் பண்ணிற்குரிய பதிகங்கள்:*

*2ஆம் திருமுறை - 40-53 பதிகம்*
*4ஆம் திருமுறை - 19-20 பதிகம்*
*7ஆம் திருமுறை - 86-89 பதிகம்*

*காழி - சீகாழி; காமரம் சீகாமரம்*

↑ சீ – சிறப்பு குறித்த முன் ஒட்டு.

*எடு:- சீகாரியம், சீபண்டாரம். இன்று சீகாமரம் என்பது வேறு ஒரு பண்ணின் பெயராக உள்ளது. (ஓதுவார் முறையில் சீகாமரம், நாதநாமக் கிரியையாக உள்ளது) குறிஞ்சி நிலத்துப் பெரும்பண்ணான பயிரவி (பைரவி) என்பது வேறு ஒரு பண்ணின் பெயராகவும், அத்துடன் நட என்ற முன் ஒட்டு சேர்ந்து நடபயிரவி என்ற பெயரால் குறிஞ்சி நிலத் தலைமைப் பாலை ஆகியுள்ளதைப் போல.*

*.. சீகாமரம் என்பதை நாதநாமக்கிரியை என்பது ஏற்றற்குரியதன்று* (த. வ. 78)

காளம், கௌளை, வரி, கந்தருவம், கீதம், இராகம், கேயம், பாணி, நாதம், இசை, பண், காமரம் (பிங்க. 1374)

**காமர யாழ்:** = காமரம் - காமரப்பண்

பின்னுமோர் காமர யாழ் அமைத்து (ஆதிஉலா)

→ காமரம்

**காமவர்த்தனி:** → பந்துவராளி

**காமன்:** *வரிக்கூத்துள் ஒன்று.*

சிந்து . காமன், மகிழ்சிந்து. . . கோத்தவரிக் கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**காமன் ஆடல்:** *பேடு, பேடு ஆடல்.*

*காமன் ஆடிய ஆடல்; பதினொரு ஆடல்களுள் ஒன்று.*

நீள் நிலம் அளந்தோன் மகன் முன்னாடிய பேடிக் கோலத்துக் பேடு (மணி. 3: 124 – 25)
நெடிய காமன் கொண்டாடும் நிருத்தமே விதித்த பேடாம் (சூடா. 9: 51)
பதினோராடலாவன கடையம்... மதன் பேடு... கூத்து (சிலப். 3: 14 அடியார்க்.)
காமன் ஆடிய பேடி ஆடலும் (சிலப். 6: 57)

**காய்ச்சீர்:** *நேர் ஈற்று மூவசைச்சீர்* (யா. வி. 1)

**காயக் கரணம்:** *உடல் உறுப்புக்களால் செய்யும் அவிநயம்.*

காயக்கரணமும், கண்ணியது உணர்த்தலும் (மணிமே. 2: 25)

**காயகன்:** *பாடகன்* (songster, vocal musician)

கலைமுழுதுணர்ந்த செல்வக்காயகன் (திருவாலவா. 54: 12)

ஒப்பு: *துருபத் காயகி (இந்துத்தானி பாடுமுறையுள் ஒன்று)*

→ காயகி

**காயகி:** = பாணி, பத்ததி (style)

இந்துத்தானி இசையின் நிகழ்த்து முறையுள் ஒன்று
*எ-டு: துருபத் காயகி.*

↑ இதை அலாவுதீன் கில்ஜி மன்னரின் அவைக்களப் பாடகர் அமீர்குஸ்ரு கண்டுபிடித்ததாகக் கூறுவர்.

**கார் குரவை:** *மழை (கார்)க் காலத்தில் ஆடப்படும் குரவை ஆட்டம்.*

காஅர்க்குரவையொடு கருங்கயல்நெடுங்கண் (சிலப். 26: 120)

**கார்வை:**

1. (சுரம்) **இசையின் ஒலி நீட்சி,** (a prolonged musical note)
2. நெட்டிசைப்பு. *மத்தளச் சொற்கட்டில் எழுத்துகளுக்கு இடையே நீண்டிசைப்பதே கார்வை எனப்படும்.*

← *த. க. க. 90/II*

**காரிகை:**

1. *கட்டளைக் கலித்துறை.*

அழகும், மாதரும் அதனொடு

கட்டளைக்கலித்துறையும் காரிகை எனப்படும் (திவா. 1941)
காரிகை, அழகு, பெண்ணே, கலித்துறை ஓர் நூற்கும் பேர் (சூடா. 11: 23)

2. *யாப்பருங் கலக்காரிகை*
காரிகை படித்துக் கவிதை பாடுவதைவிட
பேரிகை அடித்துப் பிழைப்பு நடத்தலாம் (பழமொழி)

**கால்:** → அடைவு

**கால் கிரியை:** *கால்தொழில்.*
→ அடைவு

**கால்பெயர்த்தாடுதல்:** = அடிபெயர்த்தாடல்
*காலால் (பாதம்) தாளமிட்டு ஆடுதல்*
களிமருங்கின் கால் பெயர்த்து ஆடி (புறம். 359: 6)
நடுவூர் மன்றத்து அடி பெயர்த்து ஆடி (சிலப். 12: 11)
→ அடிபெயர்த்தாடல்
*(பெயர்த்தல் - தாளமிடல்)*

**கால அளவை:** *காலப்பிரமாணம், காலமானம்*
(Measure of time)
*தாளம் என்பது பாடலின் கால அளவைக் காட்டுவது. பாடல் செல்லவேண்டிய வேகத்தைத் தாளமே நிர்ணயிக்கிறது. இதை அக்கரக்காலம் (அட்சரக்காலம்) என்றும் கூறுவர்.*
*மானம், பிரமாணம் - அளவை*

**காலக்கணக்கு:** *இசையின் கால அளவுக் கணக்கு. இசை என்பது ஒழுங்கான ஒலிகளைக் கொண்டது* (fixed pitch). *எனவே அது இயற்பியல் மற்றும் கணக்கை அடிப்படையாகக் கொண்டது. இசையில் காலக் கணக்கு என்பது தாளத்தைக் குறிப்பது. அது பாடல் செல்லும் வேகத்தை நிர்ணயிப்பது மண்டிலம் (ஸ்தாயி) முதலியனவும் காலக்கட்டுப் பாட்டிற்கு உரியனவே.*

**காலப்பண்கள்:** *ஆண்டின் ஆறு பெரும் பொழுதுகள், நாளின் ஆறு சிறுபொழுதுகள், காலை, இரவு, என்ற காலங்களில் பாடவேண்டிய பண்கள்*
1. **இளவேனில்:** *காம்போதி, அசாவேரி, தன்னியாசி.*
**வேனிற் காலத்துக்கு அடைத்த பண்ணை** (சிலப். 8: 43-4 அரும்.)
**வேனல் பாணி கலந்தாள்** (சிலப் 8. வெண்பா 2)
கிணைநிலைப் பொருநர் வைகறைப் பாணியும் (சிலப். 13: 148)
*வைகறைப் பாணி - பண்ணிற்கு சிறுபொழுதின் பெயர்*
*பகல்பண், இராப்பண், பொதுப்பண் என்ற பகுப்பும் தேவாரம் பாடுதலில் உண்டு.*
*← கருணா பக். 645*

**காலப்பிரமாணம்:** → காலஅளவை

**காலம்:** *தாளக்காலம்; இவை நான்கு:*
*1) முதல் காலம் -*
*முதல்நடை - விளம்பகாலம், சவுக்ககாலம்*
*2) இரண்டாம் காலம் -*
*வாரநடை - மத்திமகாலம், சமன்காலம்*
*3) மூன்றாம் காலம் -*
*கூடை நடை - துரிதகாலம்*
*4) நான்காம் காலம் -*
*திரள் நடை - அதிதுரித காலம்*
*இவை ஒன்றுக்கொன்று இரட்டித்த கால அளவு உடையவை.*
.. **இரட்டியும், இரட்டிக்கிரட்டியும்** .. (சிலப். 3: 20-21 உரை)

**காலம் பாடுதல்:** *தாளம் மற்றும் பாடல்களின் நடையை ஒன்றாம் காலம், இரண்டாம் காலம் முதலிய காலங்களில் பாடுதல். மற்றும் மத்திம காலம் பாடுதல் (தானம்) என்பதையும் குறிப்பது. நான்கு காலங்களில் (சதுர்காலம்) பாடும் மரபும் உண்டு ஆறுகாலங்களில் பாடிய (ஷட்காலம்) மலைநாட்டுப் பாணர், சட்கால கோவிந்தமாரார் என்றே சிறப்புடன் அழைக்கப் பட்டார்*

**காலமானம்:** → காலஅளவை

**காலை முரசம்:** *அரண்மனையில் காலையில் மன்னனைத் துயிலெழுப்ப ஒலிக்கும் முரசு. பள்ளி எழுச்சிமுரசம், கிணைப்பறை, மருதப்பறை, கூத்தர் பறை, நாள்முரசு.*
காலை முரசக் கனைகுரல் ஓதையும் (சிலப். 13: 140)
காலை முரசக்கனைகுரல் இயம்புமாகலின் (சிலப். 17: 6)
காலைமுரசக் கண்ட முகத் தெழுதலும் (சிலப். 26: 53)
**காலை முரசம் - பள்ளி எழுச்சி முரசு** (மேலது அரும்)
கிணைநிலைப் பொருநர் வைகறைப் பாணியும் (சிலப். 13: 148)
**கிணை - மருதப்பறை; கூத்தர் பறையுமாம்** (மேலது அடியார்க்.)
நாள்முரசு இரங்குமிடனுடை வரைப்பில் (புறம். 161: 29)
படுகண் முரசம் காலை இயம்ப (மதுரைக். 232)
தழங்குரல் முரசம் காலை இயம்ப (ஐங். 448: 1)

**காவடி:** = கா, காவுத்தண்டு, காவுதடி
1. **காவு; காவி;** *(காவுதல்) தண்டின் இருபுறமும் கவைபோல் கலத்தை அல்லது பொருளைத் தொங்கவிட்டுத் தோளில் சுமத்தல்.*
காவில் தகைத்ததுறைக்கூடு கலப்பையர் (பதிற். 41: 5)
காவி னெங்கலனே (புறம். 206)
ஊன்னைக் காவியுழிதர்வர் (தேவாரம்)
மறித்தோள் நவியத்து உறிக்கா வாளரொடு (சிலப். 15: 205)

உறியைக் காவிய இடையர் களோடு (நாட்டார் உரை)
கா அய்க் கொண்ட நும் இயம்... (மலைபடு. 365)
காவிக் கொண்டநும் முடைய வாச்சியங்கள்... (நச்சர்)
காஅய்க் கொண்ட நுகம்... (மலைபடு. 515)
காஅய், காவி _ தோளில் சுமந்து (உவேசா அடிக்.)
2. மரத்தடிக் கோவிலுக்குக் கால் நடையாக செல்லல்
*காவு - காடு; காவு + அடி - காவடி.*
3. காவடிப்பாட்டு, காவடிச்சிந்து,காவுடி
*காவு + அடி - காவுடி - காவடி*
கரம்ப வயக்காட்டுப் பக்கத்திலே – நல்லா
காவுடி ஆடுற முனியப்புள்ளே
காவுடி ஆடவும் சத்தியில்லே – இந்த
கங்காணிப் பயலுக்கு வெக்கமில்லே... (சந்தனத்தீ. பக். 65)

**காவடிச் சிந்து:** = காவடி, காவடிப்பாட்டு
*சிந்து இசைப்பாடல் வகையுள் ஒன்று. முருகன் முதலிய இறைக் கோவில்களுக்குக் காவடி எடுத்துச் செல்லும் போது பாடப்படும் சிந்துவகை இசைப்பாடல்.*

**காவடிப்பாட்டு:** → காவடி, காவடிச்சிந்து

**காவதன்:** *வரிக்கூத்து வகையுள் ஒன்று.*
சிந்து.. பத்தன், குரவையே, காவதன்... கோத்தவரிக் கூத்தின்குலம் (சிலப்: 3: 13: அடியார்க்: மேற்)
↑ இதுவே பின்னாளில் காவடி, காவடியாட்டம் ஆகியிருக்கலாம்.

**காவல்:** *தம்பட்டம்* (a kind of drum).
← *செ ப. அ. பிற். 220*

**காவற்கணிகை:**
*அரண்மனைக் காவல் பணி செய்யும் ஆடல் மகளிர்*
காவல் கணிகையர் ஆடல் கூத்தியர் (சிலப். 5: 50)
இராக்கடை வேசையர் (மேலது. அரும்)
களத்தாடும் கூத்திகள் (மேலது. அடியார்க்)
காவல் கணிகை தனக்கு ஆம் காதலன் (மணிமே. 22: 30)

**காவன் முரசம்:** *அரசமுரசு* (Royal drum)
காவன் முரசம் நாட்காலையிலே முழங்க (புறப்.வெண்.9:14 உரை)

**காவுத்தண்டு:** → காவடி

**காவுதடி:** → காவடி

**காவுடி:** → காவடி, காவடிச்சிந்து

**காளகம்:** = காளம், எக்காளம், காகளம்
*உலோகத்தால் ஆன நீண்ட ஊதுகுழல்,* (long trumpet). *இது ஓர் அடையாளக்கருவி எக்காளம், கௌரி காளம் முதலியன இதன் வகைமைகள்.*
குலக்கலிக்குக் காளம் பிடித்திடில் சின்னம் படும் (தமிழ்நா. 83)
கடுகியபீலி சின்னம் காகளம் காளம் ஆமே (சூடா. 7: 35)
*போனகமுங் காளமும் (தெ. இ. க. 3. 89)*
காகளம், காளம் (திவா. 1226)
*எக்காளம் (வழக்கு)*

**காளம்:** → எக்காளம்

**காளம்பாட்டு:** *காளி பூசையில் பாடும் பாடல் கைம்மணி மற்றும் நந்துனி தாளக்கருவியாகக் காளம் பாடலில் வாசிக்கப்படுகிறது*

**காளிதாண்டவம்:** → ஊர்த்துவ தாண்டவம்

**காளியாங்கம்:** *கூத்து வகையுள் ஒன்று.*
*ரேயணி நாள்க் காளியாங்கங் கூத்தாடுமவறு இருபத்தைம்பறை*
(TAS,II,p. *173-207; த க சொ. 178)*

**காற்சிலம்பு:** = சலங்கை, சதங்கை.
*நடனமாதர் காலில் அணியும் சதங்கை. வெள்ளியிலானதும், உட்கூடுடையதும்,பரல்கள் நிறைந்துள்ளதும் ஆனதால் ஆடலின் போது ஒருவகை இசை ஒலியைத் தருகிறது.*

**கான்:** *இசை. கான் - கானம் (இசை).*
கான் பாடல் தங்கு மறையோசை (சொக். உலா. 9)

**கானக் குறிஞ்சி:** *பண்களில் ஒன்று. மலைநாட்டுக் கதைகளி(கதகளி)யில் இப்பண் பாடப் படுகிறது*

**கானகக் கூத்து:** *கூத்து வகையுள் ஒன்று.*
கானகக் கூத்தும் கழைக்கூத்தும் (தொ. பொ. 91: உரை)

**கானக கீதம்:** *கருவண்டு (யாழ். அக.)*(Black beetle)

**கானபாடி:** *இசை பாடுவோர்.*
*கானபாடி மூவர்க்கு முண்டதாரி அணுக்கனுக்கு (தெ. இ. க. 2. 66, த. க. சொ. 178)*
*கானம்பாடி - கானபாடி.*

**கானம்:** *கான் - கானம், பாடல்.*

*ஒப்பு: கா, காடு, கான், கானம், கானல், கானகம், காவு காட்டிலிருந்து (இயற்கை) எழுந்தது இசை, பாடல்*

சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினேமாக (புறம். 144: 2–3)
கொண் பெருங் கானம் பாடல் எனக்கு எளிதே (புறம். 154: 13)
பாணி... கானம்... இசைப்பாட்டு ஆகும் (திவா. 10: 1866)
காடும், இசையும் கானமாகும் (பிங். 3362)
கானம், தேர், இசையே, பேதை, காடு, தற்பாடி, ஐம்பேர் (சூடா. 11: 12)

↑ கானத்திலிருந்து (காடு, முல்லைநிலம்) அதாவது வண்டு, பறவை, அருவி, காற்று முதலியவைகளிலிருந்து தொடக்க காலத்தில் இசை (பாடல்) உருவானதால் காடு என்ற பொருளில் கானம் என்பது இசை மற்றும் பாடலுக்கான பெயராக வந்தது.

எடு:– ஒரு திறம் பாணர் என்ற பரிபாடல் (17: 9–21)
*'ஆடமைக்குயின்ற' என்ற அகநானூற்றுப் பாடல் (82)*

## கானல்பாணி:

1. *கடற்கரைச் சோலையின் சூழலில் பாடப்படும் பாடல்*
*கானல் - கடற்கரைச் சோலை.*

கானல் பாணிக் கலந்தாய் காண் (சிலப். 8: (2): 4)
கானல் பாணி கனக விசயர்தம் (சிலப். 27: 50)

2. **நெய்தல் பாணி, செவ்வழிப்பாணி**
*இந்தளப்பண், நோதிறம். பாணி என்றதால் 5 சுரப் பண்ணைக் குறித்தது (ஔடவம்) நெய்தல் பண்களான செவ்வழி மற்றும் விளரி (தோடி)யில் இப்பண் பிறப்பதால் இது நெய்தலுக்குரிய சிறுபண் (பாணி) எனவே கானல் பாணி.*

கா விரை நோக்கினவும் கடற்கானல் வரிப்பாணியும் (சிலப். 7: 19)

## கானல் வரி:

1. *வரிப்பாடல்களுள் ஒன்று; கடற்கரைச் சூழலில் பாடப்படும் இசைப்பாடல்,* (love songs of fisherman sung in Coastal tract).
*கானல் - கடற்கரைச் சோலை; வரி - இசைப்பாடல்*

அங்ஙனம் கடலாடிய கோவலனும் மாதவியும் கழிக்கான லிடத்து யாழ்ப்பாட்டு நிகழ்த்திய கானல் வரியும், இஃது இசைப்பாவால் பெற்ற பெயர் (அடியார்க்.)
இசைப்பாவின் பகுதி என்ப. அது பத்து வகைப்படும். செந்துறை.. கானல்வரி.. மண்டிலம் என. என்னை? செந்துறை... இசைப்பாச்சுட்டு (இசை நுணுக்கம்)
(அடியார்க். மேற்.)

*'நிணங்கொள்' மற்றும் 'வலைவாழ்நர்' என்று தொடங்கும் சிலம்பு கானல்வரியின் 9 மற்றும் 10ஆம் பாடல் கானல்வரி என்ற இசைப்பாடல் வகையாகும்*

இவை கானல் வரி (மேலது.அரும்)
கானல் வரி யான் பாட (சிலப். 7: கட்டுரை)

## கானல் வரிப்பாணி: *கானல் - கடற்கரைச் சோலை*

*கா > கான் > கானல்*
*கடற்கரைச் சோலையில் வைத்துப் பாடிய வரிப்பாடல்*

காவிரியை நோக்கியும் கடற்கானல் வரிப்பாணியும் (சிலப். 7: 19)

## கானா: *ஓர் இசைக்கருவி.*

வாங்காவும் கானாவும் (மான்விடு. 239)

## கானா இசை: *சென்னையிலுள்ள சேரிகளில் ஏழ்மையான நிலையில் வசித்துவரும் எளிய மக்களின் நாட்டுப்புற இசை. இசை (கானம்) காட்டில் (கானம்) இயற்கையாகப் பிறப்பது. எனவே கானா இசை என்பது சேரியில் பிறக்கும் இயல்பான இசை*

# கி

**கிஞ்சுகம்:** → அசுணம்

**கிஞ்சுரி:** → கஞ்சிரா

**கிட்டம்:** = கரணை.
*மத்தளத்தின் கண் புறத்தில் உள்ள கெட்டியான கறுப்பு வட்டப்பகுதி கிடகிட கிட்டக்கிடகிட எனும் முழவுச் சொற்கள் இப்பகுதியில் பிறப்பது*
← *த. க. க. 114/*II,→ கரணை

**கிட்டான்:** *மத்தளத்தின் கண்ணில் பூசப்படும் சோற்றுடன் கூடிய இரும்புத்தூள்*

**கிட்டி:** *கைத்தாளம், கைம்மணி, சிங்கி, சாலர்.*
தாளமும் தலையீற்றுப் பசுவும் கிட்டி (பிங்க. 3368)

**கிடிக்கிட்டி:** → கிடுக்கட்டி

**கிடுக்கட்டி:** = கிரிக்கட்டி, கிரிக்கிட்டி, கிடிக்கிட்டி, கிடுகொட்டி.
*ஒருமுகப்பறை இரண்டு சேர்ந்த ஒருவகை இரட்டைப் பறை நாகசுரத்திற்கு துணைக் கருவியாக இடுப்பில் கட்டி நின்று கொண்டு வாசிக்கப்படும் கருவி.*
← *த. க. க. 114-5; 235/*II

**கிடுகிடு:** *ஒரு சிறு பறை.*
தவளம் தப்புடனே கிடுகிடு (திருப்பு. 590)

**கிடுகு:** *வட்டவடிவமான பறைவகை.*
கிடுகு கொட்டின (பரத. அணி. 15)
← *தே.நே. 106/*V

**கிடுகொட்டி:** → கிடுக்கட்டி

**கிடுபிடி:** *நீளவட்ட வடிவான சிறுபறை.*
(a tambourine of oval form)
← *செ. ப. அ 918*

**கிடுமுடி:** *ஒருவகைச் சிறுபறை.*
கொம்பு கிடுமுடி முரசம் (அறப். சத. 63)

**கிண்கிணி:**
1. *சிறுவர் காலில் அணியும் ஓர் அணிகலன்.*
*படுகண்ணுங் கள்ளிப் பூவுங் கிங்கிணி பெரு நாணும்*
*(தெ. இ. க. 2. 93)*
← *த க. சொ 179*

பொலம் கிண்கிணி (கலித். 96: 17)
தேரை வாய்க் கிண்கிணி (கலித். 86: 9)
அரிபெய் கிண்கிணி ஆர்ப்ப... (நற். 250: 2)
குரும்பை மணப்பூண் பெரும் செங் கிண்கிணி (நற். 269:1)
பரிபுரம்... பாதகிண்கிணி மணியே (திவா. 1187)
தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடி (சீவக. 243)
தவளை வாஅய பொலம் செய் கிண்கிணி (குறுந். 148: 2)
கிண்கிணி களைந்தகால் ஒண் கழல் தொட்டு (புறம். 77:1)
பல்சில கிண்கிணி சிறு பரடு அலைப்ப (பதிற். 52: 20)

2. **சதங்கை:** *நடனமாடும் மங்கையர் காலில் கட்டிக் கொள்ளும் சதங்கை மாலை.*
தவளைக் கிண்கிணித் தாமம் சேர்த்தியும் (சீவக. 3126)

3. **ஓர் இசைக்கருவி**
செருக்குரல் சிறுபறை, சிலம்பு, கிண்கிணி (சீவக. 2688)
*(சிலம்பு வேறு; கிண்கிணி வேறு)*

4. **குதிரையின் அணிகலன், தார்.**
தண்ணடை மன்னர் தார் உடைப் புரவி (புறம். 299: 5)

**கிணி:** *கைத்தாளம்,* (cymbal)

**கிணை:** = தெண்கிணை, தெண்கண் மாக்கிணை
*சிறு கோலால் இயக்கப்படும் ஒரு கண் பறை.*
1. *தடாரி, துடி, மருதப்பறை, நெல்லரிகிணை. கூத்தர் பறை, புட்பறை.*
நுண்கோல் தகைத்த தெண்கண் மாக்கிணை (புறம். 70: 3)
பாடுகின் தெண்கிணை (அகம். 301: 10)

கிணை மகட்கு எளிதால், பாடினள் வரினே (புறம். 111: 4)
தென்கிணைப் பொருநர் செருக்குடன் எடுத்த (சிலப். 10: 138)
கிணை நிலைப் பொருநர் வைகறைப் பாணியும் (சிலப். 13: 148)
கிணை - மருதப்பறை (சிலப் 13: 148 அடியார்க்.)
கிணை - தடாரி ; புட்பறை என்பதுங் கொள்க
(சிலப் 10: 138-9 அடியார்க்.)

2. போர்ப்பறை
அரிக்கூடு மாக்கிணை இரிய ஒற்றி (புறம். 378: 8)
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்பஒற்றி (புறம். 397: 10)
வினைப்பகடு எற்றமேழி கிணைத்தொடா (புறம். 388: 11)
நுண்கோல் தகைத்த தெண்கண் மாக்கிணை (புறம். 70: 1–3)

**கிணைஞன்:** = கிணைவன், துடியன், கிணைமகன், கிணையன்
*தடாரி கொட்டுவோன், கிணைப் பொருநன்.*
சேய்நாட்டுச் செல்கிணைஞனை (புறம். 377: 14)
கொன்வரல் வாழ்க்கை நின் கிணைவன் கூற (புறம். 379: 11)
இதற்கொண்டு அறிநை; வாழியோ, கிணைவ (புறம். 381: 20)
அங்கட் கிணையன் துடியன் (புறப். வெண். 1: 16)

**கிணைநிலைப்பொருநர்:** → கிணைப்பொருநர்

**கிணைப் பொருநர்:** = கிணைநிலைப் பொருநர்
*கிணைப்பறை கொட்டிப்பாடும் பொருநர்.*
கிணைநிலைப் பொருநர் தஞ்செல்லல் கீழ்ப்பட (சீவக. 61)
கிணைநிலைப் பொருநர் செருக்குடன் எடுத்த (சிலப். 10: 138)
கிணைநிலைப் பொருநர் வைகறைப் பாணியும் (சிலப். 13: 148)

**கிணைமகள்:** *விறலி*
கிணை மகட்கு எளிதால் பாடினள் வரினே (புறம். 111: 4)

**கிணைமகன்:** → கிணைஞன்

**கிணையன்:** → கிணைஞன்

**கிணைவன்:** → கிணைஞன்

**கிந்நரர்:** *கின்னரர்.*
*கனமாகச்செய்த கிந்நரர் இருவர்*
*(தெ. இ. க. 2. 50, த. க. சொ. 180)*
→ கின்னரர்

**கிம்புரி:** *மகரவாய் அடியில் அமைந்த தூம்பு.*
கிம்புரிப் பகுவாய் அம்பணம் நிறைய (நெடுநல். 96)

**கிம்புருடர்:** *வானுலக யாழிசையினர்.*
*18 கணங்களுள் ஒரு வகையினர்.*
*மனித முகமும் குதிரை உடலும் கொண்ட தேவர்கள்.*
கின்னரர், கிம்புருடர்.. சித்தர் பலர். (சிலப். 5:176 அடியார்க்.)

**கிரக சம்பூர்ணராகம்:** → நேர் நடைப்பண்

**கிரக சுர பேதம்:** → பண்ணுப்பெயர்த்தல்

**கிரகசுரம்:** → எடுப்புக்கோவை

**கிரகபேதம்:** → பண்ணுப்பெயர்த்தல்

**கிரகம்:** → எடுப்பு

**கிரமகதிப்பண்:** → நேர் நடைப்பண்

**கிரமசாய்ப்பு:** → நேரியசாய்ப்பு

**கிரமம்:** → இணைமுறை, கிளைமுறை

**கிரிக்கட்டி:** → கிடுக்கட்டி

**கிரிக்கிட்டி:** → கிடுக்கட்டி

**கிரியை:**
1. தாளக் கிரியை: *தாளத்தின் எண்ணிக்கைகளைக் கையால் எண்ணி அமைத்துக் கொள்ளும் கைச்செயல்கள்*
2. பண்ணிற்குரிய கிரியை எட்டு:
எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என இவை (சிலப். 3: 26: அடியார்க்.)
3. முழக்குதல், வாசித்தல்
*சல்லியக்கிரியை பண்ணுவார் இருவருக்கும்*
*(EI, 21. 38, த. க. சொ. 180)*

**கிருத்திரும வேடம்:** → உள்வரிக்கோலம்

**கிருதி:** = பனுவல், பணு, கவனம், உருப்படி. *இசைப்பனுவல்.*
*கிருதிகள் எழுத்துச் சுருக்கம் கொண்டவை இசை வடிவம் முக்கியமானது. விரிவாக்கங்கள் (சங்கதி) நிறைந்தது*

கிருதி - செய்யுள்
கிருதி - செய்யப்படுவது
செய்யுள் - செய்யப்படுவது

நெகிழ்வான தன்மையும், இலக்கண வரம்புகள் குறைந்ததுமான இசை உரு. உள்ளக்கிடக்கைகளை வெளியிடச் சிறந்த இசை வடிவம். எனவே அழகியல் நிறைந்தது

← தெ இ அ 337/II, → உருப்படி

**கிருதை:** = ஹ்ருதை

*யாராலோ கட்டாயப்படுத்தி, கோவிலுக்குக் கையளிக்கப்பட்டவள் அல்லது விற்கப்பட்டவள்*

*(ஞானா கானம் பக் 240)*

**கிருட்டிணன் ஆட்டம்:** *நாட்டிய நாடக வகையுள் ஒன்று. கோழிக்கோட்டு மன்னரால் 1654இல் உருவாக்கப்பட்ட நாட்டிய வகை*

**கிழமை:**

1. உரிமை

உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும் (குறள் 785)

கிழமை மூப்பு உரிமை (சூடா. 11: 1)

*எ-டு: கிழமைக் கோவை - பண்ணின் உரிமைக் கோவை*

→ கிழமைக்கோவை

2. ஆளத்தி முறை

ஒருதிறம் பாடினி முரலும் பாலையங்குரலின்
நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற (பரிபா. 17: 17–19)

3) நாலுதாக்குடைய தாளவகை *(செ. ப. அ பிற் 225)*

**கிழமைக் கோவை:** =(ஸ்வகீயசுரம்)

*உரிமைக்கோவை ஒரு பண்ணிற்கு உரிமை உடைய சுரங்கள் –*

*(கிழமை - உரிமை)*

*எடு:- முல்லைப் பாணி (மோகனம்)யின் உரிமைச் சுரங்கள் - ச ரி² க² ப த²*

*இப்பண்ணிற்கு ஏனைய சுரங்கள் அன்னிய (பகைச்) சுரங்களாகும்*

உரிமை கிழமை ஆட்சியும் ஆகும் (பிங்க.2214)

→ கிழமை

**கிழமைக்கோவைப்பண்:** → உரிமைக் கோவைப்பண்

**கிளர்வரி:** *எண்வகை நடிப்பு, நடனத்துள் ஒன்று*

கிளர்ந்து வேறாகிய கிளர் வரிக்கோலமும் (சிலப்: 8: 101)

கிளர்வரி என்றது நடுநின்றார் இருவருக்கும் சந்து சொல்லக் கேட்டு நிற்பது. என்னை? கிளர்வரி என்பது கிளக்குங்காலை, ஒருவர் உய்ப்பத்தோன்றி அயர்வாய், இருபுற மொழிப் பொருள் கேட்டு நிற்பதுவே

(மேலது: அடியார்க். மேற்)

**கிளிக்கண்ணி:** *கிளியை விளித்துப் பாடும் ஈரடிக் கண்ணி அமைப்பிலுள்ள பாடல்.*

சிறையாரும் மடக்கிளியே (சம்பந்தர்)

சொல்லாய் பைங்கிளியே (திருமங்கை)

திருத்தசாங்கம் (தசாங்கப்பத்து) (மாணிக்கவாசகர்)

*இவை கிளிக்கண்ணிப்பாடலுக்குத் தோற்றுவாயாய் அமைந்தவை*

*எடு : -*

வள்ளிக்கணவன் பேரை வழிப்போக்கன் சொன்னாலுமே
உள்ளம் உருகுதடி – கிளியே
ஊனும் கரையுதடி

(கிளிக்கண்ணிசுப்பராய சாமி)

← த. க க 125/I

**கிளிகடி:** = தட்டை, தட்டைத்தண்ணுமை, தட்டைப் பறை, தழல், குளிர்

*கிளியோட்டப் பயன்படும் கருவி*

புனவர் தட்டை புடைப்பின் அயலது (புறம். 49: 3–6)

தழலும் தட்டையும் குளிறும் பிறவும் (குறிஞ். 43–44)

கிளிகடி மரபின் ஊழ் ஊழ் வாங்கி

கிளிகடி மகளிர்விளிபடு பூசல் (மலை. 328–29)

தினை விளை சாரல் கிளிகடி பூசல் (மதுரைக். 291)

தட்டைத் தண்ணுமைப் பின்னர் இயவர் (ஐங். 215)

தட்டைப் பறையின் கறங்கும் நாடன் (குறுந். 193)

→ கிளிகடி பாடல்

**கிளிகடிகோல்:** → தட்டை

**கிளிகடி பாடல்:** *தானியங்களைக் கொத்தவரும் கிளிகளை விரட்டப் பாடப்படும் பாடல்.*

கிளிகடி பாடலும் ஒழிந்தனள் (அகம். 118: 13)

↑ சங்கரதாசருடைய வள்ளி திருமணம் நாடகத்தில், தோழியருடன் வள்ளி பாடும் தினைப்புனக் காவல் பாட்டு இம்மரபில் வந்தது.

**கிளை:**

1. ஐந்தாம் நரம்பு

→ கிளைச்சுரம்

2. புல்லாங்குழல் வகையுள் ஒன்று

தண்ணுமை யாழ், முழவம், கிளை, துந்துபி(பெரியபு. திருநாவு. 76)

3. யாழிசை

கேளும் மூங்கிலும் யாழிசையும் கிளை (பிங்க. 3372)

4. பண்களில் ஒன்று

கீசகப் பேரியாழ் கிளையுடன் முரல (கல்லா. 82: 21)

கீசகம் எனும் பெயரினையுடைய யாழ். பண்ணோடு பாடாநிற்பவும் என்க (உரை)

**கிளைக்குற்ற உழை:** *செவ்வழிப்பாலை (இரு மத்திமத்தோடி)வருமுறை கூறுவது.*

... குரல் கொண்ட கிளைக்குற்ற உழை (பரிபா. 11: 126–27)
இங்கு கிளைமுறை (ஐந்தன்முறை - மத்திமபாவம்) யில் செவ்வழிப்பண் வருமுறை கூறுகிறார்.
0 - 5 - கிளைமுறை, ஐந்தன்முறை
0 1 2 3 4 5
ச ரி¹ ரி² க¹ க² ம¹ ம² ப த¹ த² நி¹ நி²
0 1 2 3 4 5
ச ம¹, ம¹ நி¹, நி¹ க¹, க¹ த¹, த¹ ரி¹, ரி¹ ம²
ச ரி¹ க¹ம¹ம² த¹நி¹ - செவ்வழிப்பண்
ச ம¹ - குரல் (ச) கொண்ட கிளைக்குற்ற (ஐந்தாவது சுரம்) உழை (ம¹)

**கிளைச்சுரம்:** ஓர் இயக்கில் (octave) உள்ள தான சுரங்கள் பன்னிரண்டில் எடுத்துக் கொண்ட சுரத்தி னின்று, அதை விடுத்து ஐந்தாவதாக வரும் சுரம்.
ச ரி¹ ரி² க¹ க² ம¹ ம² ப த¹ த² நி¹ நி²
0 1 2 3 4 5
ச ம¹ - ரி¹ ம² - கிளைச் சுரங்கள்
"... குரலுக்கு இளியின் பொருத்தத்தைப் போலச் சற்றுக் குறைந்து, சேர்ந்து நிற்கக்கூடிய சுரத்தையே கிளை என்றார்... ஆரம்பிக்கும் சுரத்தினின்று ஐந்தாவது இராசியில் நிற்கும் சுரம் கிளை நரம்பென்று தோன்று கிறது. இது குரலுக்கு உழையாகிறது (ச – ம)" (கருணா. 661)
இணைகிளை பகை நட்பு என்று இந்நான்கின் (சிலப். 8: 33)
கிளை - ஐந்தாநரம்பு (மேலது. அரும்)
கிளையில் காட்டி ஐம்முறை கிளத்தி (கல்லா. 100: 14)
ஏழா நரம்பிணை, நாலு நட்பாகும்; ஐந்து கிளை ஆறும் மூன்றும் பகையே. (கல்லா. 100: உரை. மேற். இசை மரபுடையார் நூற்பா)
வரன்முறை மருங்கின் ஐந்தினும் ஏழினும் (சிலப். 8: 36)

**கிளைப்பண்:** = திறம் (ஜன்யராகம், உபாங்கராகம் Derivative)
தாய்ப் பண்ணிலிருந்து (ஜனகராகம்) கிளைத்த திறப் பண் (ஜன்ய ராகம்)
(கிளைத்தல் - பிரிதல், தோன்றி அமைதல்)
எடு:- முல்லைப் பாணி (மோகனம்) என்ற திறப்பண், செம்பாலை (அரிகாம்போதி)யின் கிளைப்பண்.
← இ. து. த சொ. பக். 22

**கிளைமுறை:** = ஐந்தன்முறை, மத்திமபாவம், மத்திமக்கிரமம், (cycle of fourth).
எடுத்துக்கொண்ட சுரத்திற்கு ஐந்தாவது ஐந்தாவதாகச் சுரம் தொடுக்கும் முறை.
ச ரி¹ ரி² க¹ க² ம¹ ம²
0 1 2 3 4 5
0 – 5 கிளைமுறை, ஐந்தன்முறை. இதன் இசை இடைவெளி 4/3 ($1\,^1/_3$) அளவுடையது. பன்னிருதான சுரமுறையில் உழை (ம) ஐந்தாவதாக வருவதால் இது ஐந்தன்முறை என்றழைக்கப்படுகிறது.
ச ரி க ம ப த நி
1 2 3 4
ஏழுசுர முறையில் உழை (மத்திமம்) நான்காவதாக, வருவதால் ஐரோப்பிய இசை முறையில் **'cycle of fourth'** என்று அழைக்கப்படுகிறது.
கிளையில் காட்டி ஐம்முறை கிளத்தி (கல்லா. 120: 14)
கிளை நரம்பு இசையும் கூத்தும்... (சீவக. 2598)
கிளைக்கு உற்ற உழைச் சுரும்பு (பரிபா. 11: 127)
வரன்முறை மருங்கின் ஐந்தினும் ஏழினும் (சிலப். 8: 36)
. . . ஐந்துநரம்பான முறைமையின் (மேலது. அடியார்க்.)
இளி கிளையிற் கொள்ள (சிலப். 7: (48)
→ கிளைச்சுரம், கிளை

**கிறிக்கி:** → சுற்றடைவு

**கின்னரம்:**
1. யாழ்,
கின்னரம், நீர்ப்புள் யாழாம். . . (சூடா. 11: 5 & பிங்க. 3374)
மிதுனம், கின்னரம் இராகப் புள்ளே (பிங்க. 2361)
பாடுகின்ற கின்னர மிதுனங்கள் பாராய் (கம்ப:சித்திரகூட. 12)
பாடுவன பறவையோ கின்னரங்கள் பலவுமே (தக்க. 114)
கின்னரம் முரலும் அணங்குடைச்சாரல் (பெரும்பாண். 494)
2. கின்னாரம், கின்னரி
துந்தனா போன்ற நரம்பிசைக் கருவி (small lute).
தம் தம் கின்னரந் தொடுகிலோமென்றனரே (பெரியாழ். 3: 6: 5)
கிழவன் சொல்லைக் கின்னாரக்காரன் கூட கேட்க மாட்டான் (பழமொழி)
கீதராய்க் கீதங் கேட்டுக் கின்னரம் தன்னை வைத்தார் (தேவா. 4: 33: 7)

**கின்னரர்:**
1. வானுறை இசையாளர்
சிறப்பாகக் குழலிசையிலும், நடன நாட்டியங் களிலும் தேர்ச்சியடைந்தவர்கள்
2. பதினெண்கணத்துள் உள்ள இசைவாணர் ஒருவர்
அரிய கின்னரர் பாட அமர்ந்து தம் (சீவக. 3068)
கின்னரகீதத்துக் கேள்வி மாந்தர் (பெருங். 1: 37: 108)
கின்னரர் கிம்புருடர்... சித்தர் பலர் (சிலப் 5:176_8 அடியார்க்.)
← த. க. க. 129/II

**கின்னராகம்:** ஒரு பெரும் பண்.
ஈரிரு... கின்னராகம்... பதினாலும் பெரும்பண் (பிங்க. 6: 279)
தக்கராகம்... கின்னராகம்... என இசைத்தனர் புலவர்(திவா. 1887)



**கீசக யாழ்:** *நூறு நரம்புகளைக் கொண்டது.*
தந்திரி நூறு தழங்கிய முகத்த
கீசகப் பேரியாழ் கிளையுடன் முரல (கல்லா. 82: 20–21)

**கீத உறுப்பு:** *இசைப்பாட்டின் கூறு. இது நாலு றுப்புக் கொண்டது.*
உக்கிரம், துருவை, ஆபோகம், பிரகலை என்பன (சிலப். 3:150 உரை)

**கீதம்:** *இசைப்பாடல், இசை* (song, music)
*எளிய இசை உருவமும் சொல் வடிவும் உடையது. கீதங்கள் கண்ணிகளே எடுப்பு (பல்லவி) தொடுப்பு (அனுபல்லவி) கீதத்தில் வருவதில்லை. கீதம் என்பது இசைவடிவங்கள் அனைத்தையும் சுட்டுவதோர் சொல் இசைப்பயிற்சியில் நான்காவதாகக் கீதம் பயிற்று கின்றனர்*
பத்து வாய்கீதம் பாட (தேவா. 70: 10: 3)
செந்தமிழ்க் கீதம் ஓதி (சம்பந். 246: 3)
மதுரகீதம் பாடினள் மயங்கி (சிலப். 8: 24)
வட்டணையும்... கீதக்குறிப்பும்... (சிலப்: 3: 10: அடியார்க். மேற். (பரதசேனாபதியார்)
↑ பழைய தாழிசையின் வடிவமே கீதம். தரவின்றித் தாழிசை பெற்ற கொச்சக ஒரு போகு பிற்கால கீத அமைப்பிற்கான முன்னோடி யாகலாம்
← *த. க. க. 131/*II

**கீதவடிவு மூன்று:** *உக்கிரம், துருவை, ஆபோக மென்பன.*
கீத வடிவுகள் மூன்றென்பர். சுத்தானந்தப் பிரகாச முடையார்; மூன்றாவன: உக்கிரம், துருவை, ஆபோகம் என்பன. துருவை என்றது துருமை எனவும் ஆபோக மென்றது, ஆயோகமென்றும் பிரதிகளில் வேறுபட்டிருக் கின்றன. (சிலப். 3: 150 அடியார்க். உ. வே. சா. அடிக்.)

**கீதாங்கம்:** = கீதானுகம், பாட்டாங்கம்
*பாட்டுக்கு முழவினை முழக்குதல்.* (Instrumental accompaniment to vocal music). *பாட்டுக்கு மத்தளம் கொட்டும்போது பாடலில் சொற்கள் தெளிவாய்க் கேட்கும்படி அடக்கமாகவும் எடுப்பு, களை, வேகம், பொருட்சுவை முதலியவைகளை அறிந்தும் முழக்குதல் வேண்டும்.*
கீதாங்கம் _ கீதத்துக்கு வாசிப்ப(சிலப். 3: 14 உரை. கொட்டும் என்ற பகுதியுள்)
← *த. க. க 135/*II

**கீதானுகம்:** → **கீதாங்கம்**

**கீதி:**
1. பாட்டுப் பாடுகை, (singing, chanting).
2. கீதம் (song), சந்தப்பாடல்.
3. பாடகன் (யாழ்.அக.)

**கீர்:** *பாட்டு,* (song)
கீர் என்று பாட்டாய் அதுக்கு நிறம் சிவப்பாகி
(திவ்ய. பெரியாழ். 1. 5. அவ. பக். 86)

**கீர்த்தனம்:** → **கீர்த்தனை**

**கீர்த்தனை:** = கீர்த்தனம்
இசைப்பாடல், (psalm, hymn)
*எடுப்பு (பல்லவி) அதன் இருபங்கு தொடுப்பு (அனுபல்லவி), அதன் இரு பங்கு முடிப்பு (சரணம்) என்ற அளவால் பெரும்பாலும் அமைந்து வரும் இசைப்பாடல். இதில் செய்யுள் (சாகித்தியம்) முக்கிய மானது.*
*இதன் உறுப்புகள்:*
*1) எடுப்பு (பல்லவம், பல்லவி, (பல்லவம் - துளிர்)*
*2) தொடுப்பு (அனுபல்லவி, உபபல்லவி, துணைப் பல்லவி)*
*3) முடிப்பு, தாழிசை (சரணம் - அடி, பாதம்)*
*4) முடுகு*
*5) தொகையறா (விருத்தம், சுலோகம், சுத்தாங்கம் பாடுதல்)*
*(கீர்த்தனை - புகழ்ச்சி)*
*சித்தர் பாடல்களில் எடுப்பு (பல்லவி) அமைப்பு உண்டு.*
ஆடுபாம்பே தெளிந்தாடு பாம்பே – சிவன்
அடியினைக் கண்டோ மென்றாடு பாம்பே

முடுகு:

**தெளிந்து தெளிந்து ஆடுபாம்பே – சிவன்**
**சீர்பாதம் கண்டு தெளிந்து ஆடுபாம்பே**

*கீர்த்தனையின் பல்லவி அமைப்பில் உள்ள அறுதி, அறுதிவிழ்ச்சி, விட்டிசை, தனிச்சொல் முதலியன. 'ஆடுபாம்பே. . . சிவன்' என்ற முதல் அடியில் உள்ளன.*

← *செ. ப. அ. 946; ப. இ. இ. 40 & 44; த க. க 135/II*

**கீர்த்தனை நாடகங்கள்:** *கீர்த்தனைகளை மிகுதியாய்ப் பயன்படுத்தி அமைந்த நாடகங்கள். நாடகக் கீர்த்தனை, கீர்த்தனை என்ற பெயரிலேயே இவை உருவாக்கப் பட்டன.*
*எடு:- குறவஞ்சி, பள்ளு, நொண்டி நாடகம், இராம நாடகக் கீர்த்தனை, நந்தனார் சரித்திரக் கீர்த்தனை*

**கீர்வாணி:** → **கீர்வாணம்**

**கீர்வாணம்:** = கீரவாணி, கீர்வாணி.

1. **பண்களில் ஒன்று**
2. **கீர்வாணம் - வடமொழி**

*ஆரியம், சமற்கிருதம், கீர்வாணம், தேவபாடை, வடமொழி என்பன ஒருபொருட் சொற்கள் (தே.நே: 194/V)*

← *செ. ப. அ. 946*

**கீரணாவளி:** *பண்களில் ஒன்று (பரத. இராக. 104)*

**கீரவாணி:** → **கீர்வாணம்**

**கீழ்க்கணக்கு:**

1. **துணைக்கணக்கு**
2. **சிறிய நூல்**

**எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே (அப்பர். தேவாரம்)**
**வெள்ளைத் தொகையும்அவ்வகை எண்பெறின் எள்ளுறு கீழ்க்கணக்கு... (பன்னிருபாட். 346)**

**கீழ்க்கதுவாய்த் தொடை:** *அளவடியுள் ஈற்றயல் சீர்க்கன்றி ஏனைய மூன்று சீர்களிலும் மோனை முதலாயின வரத்தொடுப்பது*

← *இலக். வி. 723; செ. ப. அ. 949*

**கீழ்க்குரல்:** **→கீழ்மண்டிலக்குரல்(மந்தர சட்சம்)**

**கீழ்த்தானவரிசை:** → **கீழ்மண்டில வரிசை**

**கீழ்மண்டில வரிசை:** = மெலிவு மண்டில வரிசை, கீழ்த்தான வரிசை (தக்குஸ்தாயி வரிசை, கீழ்ஸ்தாயி வரிசை, மந்திரஸ்தாயி வரிசை)
*இசைப் பயிற்சிகளில் ஒன்று. நடுமண்டிலம் குரலுக்குக் (மத்திய ஸ்தாயி சட்சம்) கீழே உள்ள சுரங்களில் கீழ் மண்டில இளி (பஞ்சமம்) வரை இசைப்பயிற்சி அளிப்பது.*
*கீழ் மண்டில வரிசை - ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$*

← *இ. து. த சொ. பக் 10*

**கீழ்ஸ்தாயி வரிசை:** → **கீழ்மண்டில வரிசை**

**கீழிசை:** = கீழோசை
பாடுதற் குற்றங்களுள் ஒன்று
**வெள்ளை, காகுளி, கீழோசை, வெடிகுரல், நாசி**
**(திருவிளை: விறகு விற்: 30)**

**கீழோசை:** → **கீழிசை**

**கீஸ்தி:** *யாழ் வகையுள் ஒன்று (பரத ஒழிபி. 15)*

# கு

**குக்குட்ட நடனம்:** *சேவலைப்போல் ஆடுகின்ற நடனம்.*

**குகப்பிரியா:** *பண்களில் ஒன்று.*

← *செ. ப. அ. 953*

**குச்சரி:**

**1. 36 வகை ஆடைகளுள் (துகில்) ஒன்று**
தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி... (சிலப். 14: 106–12)

**2. பண் வகைகளுள் ஒன்று:** *எடு:- ஆரியக்குச்சரி, தமிழ் (தட்சிண) குச்சரி.*
குச்சரி, குறுங்கலி, சொல், கொல்லி (இரகு. தேனு. 25)

← *செ. ப. அ. 955*

**குச்சிகை:** *யாழ் வகையுள் ஒன்று (பரத. ஒழிபி. 15)*

**குச்சிபுடி:** = கூசுபடி, கூச்சுபுடி.
*ஆந்திர மாநிலம் குச்சிபுடி என்ற சிற்றூரில் சித்தேந்திர யோகி என்பார் உருவாக்கிய ஆடல் முறை. தரு, தரங்கம், சப்தம் போன்ற இசை உருக்கள் இடம் பெறும். பெண்களின் பாத்திரங்களை, ஆண்களே ஏற்று ஆடுவர். தாம்பாளத் தட்டின் மீது நின்றாடும் 'தரங்கம்' - தாளத்திற்கேற்ப ஆடுவது இதன் சிறப்புக் கூறு.*

**குச்சில்:**
*ஒட்டிக் கொள்ளும் நாகசுரச் சீவாளியைத்திறக்க உதவும் தந்தத்தால் ஆனகுச்சி*

**குஞ்சி:** → **குஞ்சித நடம்**

**குஞ்சித்தல்:** *குந்தி நிற்றல், தூக்கிய திருவடி, குஞ்சித பாதம்.*
*இடக்காலைச் சற்று வளைத்து ஊன்றி வலக்காலைக் குஞ்சிதபாதமாகத் தொங்கவிட்டு நிற்கும் நிலை*
குந்திய கால்நிலை குஞ்சித்தலாகும் (பிங்க. 1462)

← *த. க. க. 23/I*

**குஞ்சித நடம்:**=குஞ்சிதபாதம்,குஞ்சி (upraised and bent)
*ஒருகாலைத் தூக்கி வளைத்து ஆடும் நடராசர் கூத்து.*
*(குஞ்சிதம் - வளைந்தது)*

**குஞ்சிதபாதம்:** → **குஞ்சித நடம்**

**குஞ்சிதம்:** குஞ்சிதபாதம்; பாதம் ஐந்தனுள் ஒன்று. அவை சமநிலை, உற்கடிதம், சஞ்சாரம். காஞ்சிதம். குஞ்சிதம் என்பன... ஐவகைப் பாதமும் (சிலப் 3: 13 அடியார்க். மற்றும் அடிக்.)

**குட்டச் செந்தூக்கு:** *ஆசிரியப்பாவின் ஈற்றயலடி; இது முச்சீர் பெற்றுவரும்.*
ஈற்றயலடியே ஆசிரியமருங்கில் தோற்ற முச்சீர்த்தாகு மென்ப (தொல். பொ. 374)
இடையும் வரையார் தொடை யுணர் வோரே (தொல். பொ. 375)

**குட்டம்:** = தரவு
**1. கலிப்பாவின் ஓர் உறுப்பு**
தரவு, கொச்சக ஒருபோகு (தொ. செய். 12 இளம்)
**2. குறைந்த சீருள்ள அடி**

**குடக்குத் துள்ளல்:** *குறும்போக்கில் ஒன்று.*
1. *தாளமுழக்கில் த x திமி என்று ஊடே எழுத்து விட்டு ஒலித்தல்.*
2 *யாழ் வாசிக்கும் முறைகளுள் ஒன்று.*
**துள்ளல் கண்ணும் குடக்குத் துள்ளும்** (சிலப். 7:5_8 அரும். மேற்.)

← *த. க. க. 55/III*, → குறும்போக்கு

**குடக்கூத்து:** = கரகம், குடம், கரகாட்டம், கும்பம், கும்பாட்டம்
*11 ஆடலுள், நின்றாடல் வகையது.*
பாணனுடைய சோ நகரில் திருமால் ஆடியது
(சிலப். 6: 54_5 அடியார்க்.)
↑ தண்ணீர் சுமக்கும் பெண்களின் பேரெழில் நடையிலிருந்து மலர்ந்தனவே குடக்கூத்துகள்

← *த க. க. 99/IV*

வெள்ளி வெண்குடத்துப் பால் சொரிவது போல் (மணிமே. 6: 7)
நீள்நிலம் அளந்தோன் ஆடிய குடமும் (சிலப். 6: 55)
இடவல குடவல கோவல காவல (பரிபா. 3: 83)
குறிய மாண் உருவாகிய நீள்குடக் கூத்தனுக்கு ஆட் செய்வதே (பாசுரம். 3115/ 4: 10: 10)
கொண்டல் வண்ணா குடக்கூத்தா (பாசுரம். 8: 5: 6)
குடங்கள் எடுத்து ஏறவிட்டுக் கூத்தாட வல்ல எங்கோவே (பாசுரம். 188: 529)
குடமாடுகூத்தா (பாசுரம். 207)
குடமாடு கூத்தனை (பாசுரம். 3677)
குடங்கலந்த கூத்த (பாசுரம். 789)
குடம் நயந்த கூத்தனாய் (பாசுரம். 2354)
சுழலக் குடங்கள் தலைமீது எடுத்துக் கொண்டாடி (பாசுரம். 2615)
குடக்கூத்த அம்மானை (பாசுரம். 2839, 3506)

↑ இன்றைய கரகாட்டத்தின் மூலம் குடக்கூத்து; இது அம்மன் கரகம் என்ற தாய்த்தெய்வச் சடங்கிலிருந்து வந்தது. பால்குடம் எடுத்தல் என்பதை இத்துடன் சேர்த்து எண்ணலாம்.
*← தென்னிந்தியக் கிராமிய நடனங்கள் பக். 10; த. க. க. 141-2/II; ப. த நா. 285.*

**குடகர் குரவை:** *குடகர் ஆடிய குரவை.*
காஅர்க் குரவையொடு கருங்கயல் நெடுங்கண்
கோல் தொடி மாதரொடு குடகர் தோன்ற (சிலப். 26: 120–21)

**குடங்கை:** *ஒற்றைக்கை அவிநயம்.*
எல்லா விரலும் கூட்டி உட்குழிப்பது; என்னை? குடங்கை என்பது கூறுங்காலை உடங்கு விரல் கூட்டி உட்குழிப்பதுவே (சிலப். 3: 18 அடியார்க். மேற்.)
*குடங்கை - உள்ளங்கை*

**குடத்தாடற்கு உறுப்பு ஐந்து:**
குடத்தாடல் குன்றெடுத் தோன் ஆடல் அதனுக் கடைக்குப ஐந்துறுப்பு ஆய்ந்து(சிலப் 3 14 அடியார்க். மேற்.)

**குடந்தர்:** *ஆடல் வகையுள் ஒன்று. கைகூப்பி மெய் கொட்டி நிற்றல்; வணங்கும் கைநிலை.*
நால்விரல் முடக்கிப் பெருவிரல் நிறுத்தி
நெஞ்சிடை வைத்து மெய் கொட்டி நிற்றல் (சூடா. 9: 53)
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி (முருகு. 229)

**குடப்பறை:** *குடவடிவான பன்றிப் பறை,* (pot shapad drum)
பல்லள கொடிய பன்றிப் பறை குடப்பறை யென்றாமே (சூடா. 7: 40)
பன்றிப் பறையே குடப்பறையாகும் (பிங்க. 1518)

**குடம்:**
1. பானைத்தாளம், கடம்
2. குடக்கூத்து; → கரகாட்டம்
*← தேநே: 190/V*
3. → அகடு; பத்தர்

**குடமுழா:** = குடமுழவு, குடப்பறை, குடமுழவம்
1. பன்றிப்பறை, குடப்பறை, மண்கணை முழவம்
*இது ஒருமுக முழவு.*
பன்றிப் பறையே குடப்பறையாகும் (பிங்க. 1518)
பன்றிப் பறையும் குன்று அகச்சிலம்பும் (மலைபடு. 344)
மண்கணை முழவம், குடமுழவின் பெயரே (திவா. 1239)
... தண்ணுமைப் பின் வழி நின்றது முழவே (சிலப். 3: 140–41)
2. ஐம்முக முழவம், பஞ்சமுக வாத்தியம்
நான்முகம் தட்டி நடுமுகம் உரப்ப (கல்லா. 8: 16)
முகம் வேறு இசைக்கும் குடமுழவு (கல்லா. 21: 34)
ஐந்து முகமும்வெவ் வேறாக இசைக்கும் குடமுழவ மாகிய முதல் கருவியினை (மேலது உரை)
*← பா கை. பக். 58*

**குடவிலக்கு:** *கும்ப ஆரத்தியும் புட்பாஞ்சலியும் சேர்ந்த ஆடல்வகை (நித்திய சுமங்கலி. பக் 75)*

**குடவு:** = குடை.
*குமரன் ஆடிய குடைக்கூத்து (யாழ். அக)*
→ குடைக்கூத்து, குடை

**குடிகை:** *மங்கலப் பாடகன் (தே.நே. 122/IV)*

**குடிஞைப்பள்ளி:** *கண்ணுளர் தங்குதற்குரிய நாடக அரங்கின் பகுதி,* (A portion in green room)
.. கண்ணுளர் குடிஞைப் பள்ளியும்... (சிலப். 3:105அடியார்க்.)

**குடிலம்:** *உள் வாங்கிப் பாடும் இசைத்தொழில்,* (modulation of voice in singing)
குடிலம் உள் வாங்கிப் பாடல் (சீவக. 735 உரை)

**குடுக்கம்:** *துணைத்தாளம் ஐந்தனுள் ஒன்று (பரத. தாள. 3)*

**குடுக்கை:**
1. இடக்கை: குடுக்கை எனினும் இடக்கை எனினும் ஒக்கும் (சிலப். 3: 26 அடியார்க்.)
2) யாழ் உறுப்பு, பத்தர் (belly of the yal)

**குடுகுடுக்கை:** *ஒரு தாளக்கருவி.*
*குடுகுடு என்று ஒலியைத் தரும் கொப்பரைத் தேங்காய்க் கருவி தேங்காயின் காலிஇட உட்கூட்டில் கற்களை இட்டு முழக்கும் தாளக்கருவி*
*← த. க. க. 144/II*

**குடுகுடுப்பை:** = இடைசுருங்குபறை, சிற்றுடுக்கை
*நடுப்பகுதி சுருங்கியும், இருபக்கங்களும் விரிந்து செல்லும் இருமுகப்பறை. உடுக்கை வடிவில் சிறிதாக*

இருப்பதால் சிற்றுடுக்கை.
← செ.ப. அ. 973

**குடை:** குடைஆடல், குடைக்கூத்து. நின்றாடல் வகையுள் ஒன்று. 11 ஆடல்களுள் ஒன்று இது வென்றிக்கூத்தின் பாற்படுவது. அசுரரோடு பொருத போர்க்களத்தில் முருகன் குடையைத் தாழ்த்து, அதுவே ஒருமுக எழினியாக ஆடியது.
படைவீழ்த்து அவுணர் பையுள் எய்தக்
குடைவீழ்த்து அவர்முன் ஆடிய குடையும் (சிலப். 6: 52–53)

**குடைக்கூத்து:**→ஆறுமுகத்தோன்ஆடல், குடை

**குடைக்கூத்து உறுப்பு:** இதன் உறுப்புகள் நான்கு.
அறுமுகத்தோன் ஆடல் குடை, மற்றதற்குப் பெறும் உறுப்பு நான்காமெனல் (சிலப். 3· 14 அடியார்க். மேற்.)

**குடைமங்கலம்:**
மன்னவனின் கொற்றக்குடையைப் புகழ்தல்.
குடையும் வாளும் நாள்கோள் அன்றி (தொ. பொ. 69)
உச்சி நின்ற உவவுமதி கண்டு...
மாலை வெண்குடை ஒக்குமால் எனவே? (புறம். 60: 3–12)
இது குடைமங்கலம் என்ற துறையது.
திங்களைப் போற்றுதும்... வெண்குடை... அளித்தலான் (சிலப். 1: 1–3)
மதிவாழி, ரவிவாழி, மழை வாழியே (தக்க. 9 உரை)
இத்தொடர் திங்களைப் போற்றுதும் என்பது முதலிய மூன்றையும் பின்பற்றி நிற்கும் முறை இங்கே அறிதற்பாலது (மேலது. உவேசா. அடிக்.)
குடைமங்கலமும் வாள் மங்கலமும் வகுத்து
(TAS, i, p 115-15. த. க. சொ. 189)

**குண்டக் கணிகை:** பரத்தைத் தன்மைக்குப் புதியவள்.
வம்பப் பரத்தை... (சிலப். 10: 219)
.. குண்டக்கணிகை ஒருத்தியும் (மேலது அடியார்க்.)
(குண்டம் - வேசை)

**குண்டக் கிரியை:** ஒரு பண் (பரத. இராக. 56)

**குண்டு:** = மணிக்காய்
1. தம்புராவில் ஒத்து (சுருதி) சேர்க்க உதவும் தந்தியின் மேலுள்ள பகுதி
2. கோட்டு வாத்தியத்தில் தந்தி மீது வாசிக்க உதவும் இடக்கையிலுள்ள உருண்டைக் குழல்

**குணக்குரல்:** = கொனுக்கோல், கொன்னக்கோல் சொற்கட்டு.
குணக்குரல் - கொனுக்கோல் (தே. நே. 121/II)

**குணத்தொனி:** வில்லின் நாண் ஓசை, (twang of a bow string)

**குணலை:** = குணலைக் கூத்து.
வளைந்தாடும் கூத்து. (தே.நே. 30/IV)
குணங்கு - வளைவு; குணலை - உடல் வளைவு
அந்தணர் குணலை கொள்ள (திருவாலவா. 4: 22)
மலர் மழை... கணங்களெல்லாம் குணலையிட்டன (காரைக். பு. 51)
சிந்து .. குந்திவரும் பாரன் குணலைக் கூத்து... கோத்தவரிக் கூத்தின்குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)
குணலைத் திறனில் களிக்குமொரு திரள்
(திருப்புகழ் செருகளத்து அலகை வகுப்பு)

**குணலைக்கூத்து:** → குணலை

**குணாட்டம்:** வரிக்கூத்துள் ஒன்று.
சிந்து... நாட்டம் குணாட்டம்... கோத்தவரிக் கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**குணாலம்:** மகிழ்ச்சிக் கூத்துள் ஒன்று.
குணால மாடித் திரிமினோ (பாசுரம். 4: 6: 9)
← செ. ப. அ. 984

**குணில்:** = கடிப்பு, தலைக்கோல், கவண், கோல். குறுந்தடி, வளைந்த குச்சி, (drum stick). முரசினை முழக்க பயன்படும் புரசை மரத்தால் ஆன நுனி வளைந்த குறுந்தடி.
குணில் வாய்முரசு... (குறுந். 328: 3)
கன்று குணிலா... (சிலப். 17: (19)
குணிப்பாய் முரசின்... (புறம். 143: 9)
ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்ப (அகம். 186: 11)
தடிகதை... குணில் குறுந்தடிப் பேர்காட்டும் (சூடா. 7:13)
மண்கனை முழவின் தலைகோல் கொண்டு (மலைபடு. 370)
குறுந்தடியும், கடிப்பும், கவணும் குணிலே (பிங்க. 3387)

**குணுங்கர்:** குயிலுவர், இசைக்கருவியாளர், நரம்புக் கருவியாளர், தோல் கருவியாளர், சண்டாளர், புலையர் (Drummers, lute players)
குணுங்கர், தோற்கருவிமாக்கள், குயிலுவர், இழிஞர் (சூடா. 11: 12)
தோல் கருவியொடும், புலையரும், குணுங்கர் (பிங்க. 3388)

**குத்தடைவு:** = குத்தல் அடைவு
நாட்டியத்தில் அரைமண்டி நிலையில் இரண்டு பாதங்களின் முன் படங்களும் பூமியில் இருக்க, குதிகால் மட்டும் தூக்கி அடித்தல் குத்தடைவு.
கரகாட்டத்திலும் ஆரவல்லியிலும் தெருக்கூத்தான`

'துகில்' நாடகத்திலும் துரியோதனன் போரில் எல்லாம் இழந்த நிலையில் நிற்கின்ற காட்சியிலும் இவ் அடைவு காணப்படுகின்றது (பா. இராசு. மண். இதழ். நவம். 1999)

தாளம், சொற்கட்டுகளுக்கு ஏற்ப (தத், தித்) தரையில் குதிகாலால் குத்தி ஆடுவது. தெருக்கூத்தில் சிறப்பாக வழங்குவது குத்தடைவு

ஒப்பு:- குத்துமிதி

↑ குத்து > கூத்து; முதல் நிலை நீண்டு வந்திருக்கலாம்.

→ குத்துதல்

**குத்தல் அடைவு:** → குத்தடைவு

**குத்துதல்:** தேசிக்குரிய கால்களுள் ஒன்று.
குத்துதல் - கூர்மையாகத் தாக்குதல். கால் - அடைவு.
← சிலப். 3: 16 அடியார்க். அடிக்

**குதிரை:** → உந்தி

**குதிரை மணி:**
கறங்குமணி வால் உளைப் புரவியொடு (சிறுபாண். 91–2)

**குதிரையோட்டம்:** ஒருவித தாளகதியில் குதிரையின் ஓட்டம் அமைந்திருக்கும்.
பணைநிலை முனைஇய வினை நவில் புரவி (அகம். 254: 12)
பணைநிலை முனைஇய பல் உளைப் புரவி (நெடுநு. 93)
பல்படைப் புரவி எய்திய தொல்இசை (அகம்:345:5)
பாணி பிழையா மாண் வினைக் கலிமா (அகம். 360: 11)
பொற்புடைப் பாணிநடைப் புரவி (இலக். விளக். 608 உரை)

**குந்தல வராளி:** பண்களில் ஒன்று (பரத இராக. 35)

**குந்தாளம்:** கூம்பு வடிவான இரு தோற்கருவிகள் இணைந்தது. புரவி (பொய்க்கால் குதிரை) ஆட்டத்தில் பயன்படுவது.

**கும்ப காம்போதி:** பண்களில் ஒன்று.

**கும்பம்:** → குடக்கூத்து

**கும்ப முத்திரை:** முத்திரை வகையுள் ஒன்று: வணங்கல் முறைக் கைமுத்திரை
← செ ப. அ. பிற். 233

**கும்பாட்டம்:** → குடக்கூத்து

**கும்பிகை:** பறை வகையுள் ஒன்று.

**கும்மட்டம்:** சிறுபறை வகையுள் ஒன்று.

**கும்மட்டி:** கும்மாளமடித்து ஆடும் கூத்து. (a rustic dance)

**கும்மி:** = கொம்மை, கொம்பல், கொம்மல், முலை, கொம்மை கொட்டுதல், கும்மியாட்டம், கொம்மி (தெ. வ.) மகளிர் கைகுவித்து ஆடும் ஆட்டம். இதன் வகைமை: ஓரடிக்கும்மி, இரட்டைக் கும்மி, ஒயில்கும்மி, இயற்கும்மி.
சிந்துப் பிழுக்கையுடன் சந்தி ஓர் முலை... கோத்தவரிக் கூத்தின் குலம் (சிலப். 3:13 அடியார்க். மேற்.)
கொம்மியடிப் பெண்கள் கொம்மியடி – இரு
கொங்கை குலுங்கவே கொம்மியடி –நடேசர் கொம்மி
(வள்ளலார்)
கொம்மை கொட்டுவ (சீவக. 2230)
கொம்மை கொட்டி... (சீவக. 1109: 2)
கொம்மை அம் பசுங்காய்க் குடுமி விளைந்த (அகம். 15: 3)
நாறுஐங்கூந்தல் கொம்மை வரிமுலை (அகம். 65: 18)
கொம்மை வாடிய இயவுள் யானை (அகம். 29: 16)
வாரணி கொம்மை... (பரிபா. 22: 30)
வார் - மார்க் கச்சை; கொம்மை - (திரட்சியான, வட்ட வடிவான) இளமுலை.
தட்டியாங் கொட்டுதல், கொண்டான் கொட்டுதல்
(தென். ஆர்க். மாவட்ட வழக்கு)
← தே.நே. 187/III; 253/VIII; த. க. க 338

**கும்மிப்பாடல்:** கும்மி ஆடலுக்கான இசைப் பாடல். ஈரடியாக எண்சீராய் வருவது.
கும்மிப் பாடல்களின் சீர்கள் 3 உயிர்கள் உடைமையால் பாடும்போது அவை மூன்றும் தகிட என்ற மும்மை நடை நடக்கின்றன... அவை மும்மை நடைக்குரிய சீர்கள்...
(ஏழிசை எண்ணங்கள். பக். 118)
எ–டு:–
1. பூங்காவில் ரீங்கார வண்டுகளாம் – நீங்க
புத்திகெட்டு போன அசல் மண்டுகளாம்
2. கொங்கலர் தார் சென்னி குளிர் வெண் குடையோன் (சிலப். 1: 1–2)
3. செந்தமிழ் நாடெனும் போதினிலே - பாரதி
4. பொன்னி லங்கு பூங்கொ டிபோ லஞ்செய் கோதை வில்லிட
(சிலப். 29:(20)
மேற்கண்ட பாடல்கள்தகிட தகிட என்ற மும்மை நடையன.
வட்டமிட்டுப் பெண்கள்
வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டியிசைத் திடுமோர்
கூட்டமுதப் பாட்டினிலும் – பாரதி குயில்பாட்டு
மங்கையராகப் பிறப்பதற் கேநல்ல
மாதவம் செய்திட வேண்டும் அம்மா – கவிமணி
→ கொம்மை; கும்மி

**குமண்டை:** *மகிழ்ச்சிச் சிந்து.*
இட்ட குமண்டைய பேய் (பாரத. பதினாறாம். 51)

**குமரன்:** → வேலன்

**குமரிக்கோலத்துக் கூத்து:** *மரக்கால் ஆடல், வாள்கூத்து, வென்றிக்கூத்து.*
குமரிக் கோலத்துக் கூத்துள் படுமே (சிலப். 12: (11)
இது வென்றிக்கூத்து... நங்கை மரக்கால் மேல் நின்று வாள் கூத்தை ஆடாநிற்கும் (மேலது அடியார்க்.)

**குமுதப்பிரியா:** *பண்களில் ஒன்று.*

**குமுதம்:** *ஆம்பல்*
நெடுந்திசை யானையில் ஒன்று நெய்தலும் அடுப்பும் ஒலியும்
தருப்பையும் குமுதம் (பிங்க. 3393)

**குயில்:**
1. குயில்(லு) தல்: *கூவுதல்,* (to call).
2. குயில்(லு)தல். *வாத்தியம் ஒலித்தல்;*
வீணை குழலொடு குயில (சீவக. 1255)
3. இசைத்தல்: *இசைச்சுரங்களை வரிசையாகக் கோத்தல்;*
ஒப்பு:– திருமணி குயிற்றுநர் – முத்துக் கோப்பவர்
(சிலப். 5: 46: அடியார்க்)
*குயிலுதல் - கோத்தல்*
4. நரம்புக்கருவி இசைத்தல்:
குயிலுவத் தொழிலே நரம்புக்கருவி
பயிலும் பாடல் பின்பற்று ஆகும் (திவா. 1751)

**குயிலவர்:** *இசைப்பாணருள் ஒருபிரிவினர்.*
*நல்லிசைப்பாணரும் கோடியவருங் குயிலவரும் (தெ. இ. க. 5 645. த. க. சொ. 192)*

**குயிலுவக் கருவிகள்:** *பக்க வாத்தியக் கருவிகள்*
'... முன் சொன்ன குயிலுவக் கருவிகள் அனைத்தும்...'
*(சிலப். 3: 143 உரை)*
கூடிசைக் குயிலுவக் கருவியுமுணர்ந்து *(சிலப். 14: 151)*

**குயிலுவம்:** *வாத்தியம் கொட்டல்.*
குயிலுவம் வாத்தியம் கொட்டல் ஆகும் (திவா. 2370)

**குயிலுவர்:** = குயிலுநர்
1. தோற்கருவியாளர்(கருவிக் குயிலுவர்), கண்ணுளாளர்
கருவிக்குயிலுவர் - தோற்கருவி வாசிப்பார்
(சிலப்.5:184_6 அடியார்க்.)
2. நரம்புக் கருவியாளர்.
குயிலுவர் நரம்பின் ஆய கருவியைக் கொளுத்து மாக்கள்
(சூடா. 2: 39,795)
குயிலுவர் நரம்புக்கருவி கொளற்குரியோர் (திவா. 218)

**குயிலுநர்:** → குயிலுவர்

**குயிறல்:** *கூவல்.*
குயிறல், கூவல், செறிதலும், குடைதலும் (திவா. 1975)

**குர்சரி:** *ஆரியகுர்சரி, தட்சிணகுர்சரி போன்று குர்சரி என்ற பின்னொட்டுப் பெற்ற பண்கள் உண்டு. குர்சரி என்பது: குசராத்தி மக்களைத் தமிழில் குச்சரர், குச்சிரியர், குச்சரியர் என்று வழங்குவதுண்டு. இவற்றின் திரிந்த வடிவே குஜிலி (முச். இலக். பக். 26)*

**குர்த்தனம்:** *கூத்தின் அங்கக்கிரியை பதினாறனுள் ஒன்று.*
சரிகை, புரிகை... குர்த்தனம்... (சிலப்:3:13 அடியார்க். அடிக்.)

**குரம்பை:** *இசைவகை* *(அக. நி.)*
↑ பண்களில் ஒன்று ஆகலாம்.

**குரல்:**
1. இசையின் ஏழு சுரங்களில் முதல் சுரம் - *ச (ஷட்ஜம்)*
குரலாதியேழிசை... (திவா. 1886 புதுநூற்பா)
2. குரல்ப்பாலை, முல்லை, முல்லையாழ், செம்பாலை, அரிகாம்போதி.
*குரல் என்ற கோவை வழிப்பெற்ற பெயர்*
*ஒப்பு: விளரிவழி - விளரிப்பாலை*
குரல் புணர் நல்யாழ் முழவோடு ஒன்றி (மதுரைக். 605)
கூடுகொள் இன்னியம் குரல் குரலாக (சிறுபாண். 229)
குரல்புணர் இன்னிசைத் தழிஞ்சி பாடி (பதிற். 57: 9)
ஒரு திறம் பாடினி முரலும் பாலை அம்குரலின் (பரிபா. 17: 17)
குழலினும் யாழினும் குரல் முதல் ஏழும் (சிலப். 5: 35)
குரல் குரலாக வருமுறைப் பாலை (சிலப். 3: 33)
குரற்குரிய திறம் ஆசான் திறமே (பிங்க. 1423)
*(இங்கு குரல் என்றது குரல்குரலாக வரும் செம்பாலையை - அரிகாம்போதி)*
*← சிலப். 17: (13) அடியார்க்.*
குரல்வாய் இளிவாய்க் கேட்டனள் (சிலப். 8: 35)
குரல் முதலாக எடுத்து (மேலது. உரை)
*குரல் முதலாக எடுத்து - குரல் குரலான செம்பாலை (அரிகாம்போதி) பாடி.*
குரல்வாய்ப் பாணரொடு... (சிலப். 5: 200)
குரல் என்னும் இசையைப் பாடும் (மேலது. அடியார்க்.)
'குழலினும் யாழினும் குரல் முதல் ஏழும்'
*இங்கு குரல் (குரல்பண்) என்றே அடிகள் குறிப்பிடுகின்றார். விளரிப்பண், தாரப்பண் போன்று குரல், குரல் பண் என்பது சுரவழிப் பெற்ற பெயர்.*
3. ஒத்து, கேள்வி, சுதி, சுருதி, ஆதார சுருதி, (Drone, keynote) *அடிப்படைக் குரல், ஆதார சட்சம்.*

நரம்பின் தீங்குரல் நிறுக்கும் குழல் போல (கலித். 33: 22)
குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின் (மலைபடு. 23)
உருமு நிலன் அதிர்க்கும் குரலொடு கொளை புணர்ந்து
(பதிற். 30: 42)
(கொளை – இசை, பாடல்)
இமிழ் குரல்முரசம்... (புறம். 58: 12)
குரல்புணர் சீர்க்கொளைவல் பாண்மகனும்மே (புறம். 11: 15)
*பழைய உரை: முதல் தானமாகிய குரலிலே வந்து பொருந்தும் அளவுடைய பாட்டை வல்ல பாணன்.*
(அதாவது சுதிக்குப் பாடியது)

4. யாழ் நரம்பு *(அக. நிக) கோல், தந்தி, தந்திரி* (string of a lute)
கோலே, தந்திரி, குரல் இவை நரம்பே (பிங்க. 1434)
குரலே கதிரும் யாழில் ஓர் நரம்பும் (திவா. 2240)

5. இசை
இளிதேர் தீம்குரலிசைக்கும் அத்தம் (அகம். 33: 7)

6. கிண்கிணி மாலை
கிண்கிணி மாலையும்... யாழினோர் நரம்பும்... குரல் என மொழிப
(பிங்க. 3398)

7. மிடற்றொலி, பேச்சொலி
செறி இலைப் பதவின் செங்கோல் மென்குரல் (அகம். 34: 5)
சேவல் பயிற்பெடைக்குப் பேசும் சிறுகுரல் கேட்டு
(நளவெண்.சுயம்வ. 41)

8. ஓசை
இமிழ் குரல் முரசம் (புறம். 58: 12)
அரிக்குரல் தட்டை (மலைபடு. 9)
பாடு உலர்ந்தன்றே பறைக்குரல்... (அகம்: 23: 2)
பறைக்குரல் பேய் மகள் பாணிக்காட (சிலப். 26: 208)

9. *ஒன்றோடு ஒன்றற்குள்ள சேர்க்கை* (link, tie, bond) *குரல் சுரத்தோடு மற்ற சுரங்கள் ஒன்றுவதே இசை*

10. *இசைக்கருவி, சத்தக்குழல், சத்தக்கட்டை, பிணாயல், பீக்கி, ஒத்துக்குழல், முகவீணை*
"தமிழகப்புலையினர் இதனை **'கொரல்'** (குரல்) என்பர்."
(நாட்டுப்புற இசைக்கலை பக். 20)
*← செ. ப அ. பிற். 234*

**குரல் இரட்டித்த பெற்றி:** *ஒரு தானத்தின் குரல் (ச) சுரத்தைப் போல அதன் மேல்தானத்து குரல் (ச்) இருமடங்கு துடிப்பு அளவு உடையது இரட்டித்த அதிர்வு உடையது.*

| சுரம் – | ச (கீழ்ப்புள்ளி) | ச | ச் | ச் (மேற்புள்ளி) |
|---|---|---|---|---|
| ஒலிஅலைத் துடிப்பு – | 132 | 264 | 528 | 1056 |

(The pitch of 'C' (*ச*) - 264 vib/sec or 264 Hz)
அரும்பாலைக்குக் குரல்நரம்பு இரட்டித்த பெற்றித் தென்க
(சிலப். 3: 84–5 உரை)
*இடமுறைத்திரிபு என்பது இறங்குநிரல் (அவரோகணம்) முறையில் சுரத்தொடக்கம் கொள்வது. மேல்தான 'ச்' சுரம் முதலாக இடமுறைத் திரிபின் அடிப்படைப் பாலை - அரும்பாலை என்ற சங்கராபரணம்.*

*ச = 264; ச் = 528*

*எனவே அரும்பாலைக்குக் குரல் நரம்பு இரட்டித்த பெற்றித்து என்றார்.*

**குரல் இளி:** = இணை நரம்பு
*குரல் என்பது 'ச' சுரம் ( ஷட்ஜம்); இளி என்பது 'ப' சுரம் (பஞ்சமம்)*
*குரல் சுர ஒலியின் அலைத் துடிப்பைப் போல் இளியின் துடிப்பு ஒன்றரை மடங்காகும். இந்த அளவுள்ள சுரங்கள் ஒன்றிக் கலந்து இசையாகி இனிமை பயக்கும் தன்மை உடையவை. ச, ப சேர்ந்து ஒரே சுரம் போல் ஒலிப்பவை. இந்த சுரங்கள் ஒன்றிக் கலந்தாலே இசை பிறந்து விடும்.*
... குரல் இளி என்றிரு நரம்பின்
ஒப்பக் கேட்கும் உணர்வினன் ஆகி (சிலப். 3: 59–60)
இணை, கிளை, பகை, நட்பு என்றின் நான்கின்
இசைபுணர் குறிநிலை எய்த நோக்கி
குரல் வாய் இளிவாய்க் கேட்டனள் (சிலப். 8: 33–35)
இணை நரம்புடையன அணைவுறக் கொண்டாங்கு (சிலப். 3: 90)
யாழின் இளிகுரல் சமங் கொள்வோரும் (பரிபா. 19: 42)

**குரல் இளி ஒத்து:** *ச, ப முறையில் ஒத்து (சுருதி) சேர்ப்பது*
கண்ணிடை விடுத்த களிற்று உயிர்த்தூம்பின்
இளிப்பயிர் இமிரும் குறும் பரந்தூம்பொடு (மலைபடு. 6–7)
இளி என்னும் நரம்பினுடைய ஓசையைத் தான் ஒலிக்கும் குறிய மேலாகிய தூம்பொடே (நச்சர்)
*தூம்பு - 'ச' ஒத்து தருவது. குறுந்தூம்பு-'ப'- ஒத்து தருவது.*

**குரல் இளிமுறை:** = இணை முறை; சட்ச பஞ்சம உறவு (பஞ்சமபாவம்), இளிக்கிரமம், பட்டடை பண்ணல், ஏழன் முறை, (order of fifth)
*ஏழு சுரமுறை: ச ரி க ம ப த நி*
*1 2 3 4 5*
*ச - ப*
*1 - 5 குரல் இளி முறை* - (the fifth)
*12 தான சுரமுறை - ச ரி¹ ரி² க¹ க² ம¹ ம² ப த¹ த² நி¹ நி²*
*0 1 2 3 4 5 6 7 8 9 10 11*
*ச - ப*
*0 - 7 குரல் இளி முறை - ஏழன் முறை*
*தானக் குரல்களை* (octave notes) *(ச, ச்) அடுத்து, ச, ப (0 - 7) சுரங்கள் ஒன்றிக் கலந்து இணையும் சுரங்கள். எனவே இதை இணை உறவு, குரல் இளி உறவு என்றனர்.*
ஏழாம் நரம்பு இணை (கல்லாடம். 100க்கான இசைமரபு நூற்பா. மேற்.)
இணை வழி ஆராய்ந்து இணை கொள முடிப்பது (சிலப். 8: 5 அரும். மேற்.)
குரல் முதலாக இணை வழி கேட்டும் (மேலது.)
→ இணைமுறை

**குரல் ஈறாகவும்:** குரல் ஈறாக என்பது குரல் தாரமாக; அதாவது தாரம் குரலாக வாசித்தல். இவ்வாறு வாசிக்க மேற்செம்பாலைப்பண் தோன்றும். அதாவது தமிழிசையின் அடிப்படைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி)யில் தாரம் குரலாக (நிசாதம் சட்சமாக) என்பது.

குரல் முதலாகவும் குரல் ஈறாகவும் (சிலப். 8: 38)
குரல் ஈறாகவும் - குரல் தாரமாகவும் (மேலது. அரும்)
தாரம் குரலாவது மேற்செம்பாலை... (சிலப். 17: (13) அடியார்க்.)

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| மேற்செம்பாலை | ரி$^2$ | | க$^2$ | | ம$^2$ | ப | | த$^2$ | | நி$^2$ | ச | |

*(மேற்செம்பாலை - கல்யாணி)*

**குரல் ஊத:** → குரல் தும்பி

**குரல் எல்லை:** மாந்தர் பாடும்போது உச்சமாகவும் மற்றும் கீழ் நிலையிலும் பாடும் திறன். கீழ்த்தான 'ம' முதல் மேல்தான 'க்$^2$' வரை குரல் எல்லை அமைந்திருக்கும். நல்ல சாரீர வளமுள்ளவர்கள் கீழ்த் தான 'ப' முதல் மேல்தான 'ப்' வரை பாட இயலும்.

மேலது உழை கீழது கைக்கிளை (சிலப். 3: 80)
உழை முதல் கைக்கிளை இறுதியாக மெலிவு நான்கும், சமம் ஏழும், வலிவு மூன்றுமாய் (அரும்.)
உழை முதல் கைக்கிளை இறுவாய்க்கட்டி (சிலப். 13: 109)
ஈரேழ் கோவையும் இடைமுறைப் பாலையும் (சிலப். 17)

**குரல் ஒத்து:** = சட்ச சுருதி

'ச' என்ற ஒரே சுரத்தை ஒத்தாக (சுருதி) ஊதுவது. நாகசுர ஒத்துக்கருவி, இவ்வாறான ஒற்றைச்சுர, சுருதியைத் தருகின்ற கருவி தம்புராவில் நான்கு தந்திகளையும், 'ப, ச, ச, ச்' என்று ஒத்துக்

கூட்டினால்,
குரல் (ச) நரம்புகள் மூன்று அமைந்துள்ள காரணத்தால் அது குரல் ஒத்தாக அமையும். இது இரட்டைத் தம்புராவை ஒத்துக் (சுருதி) கூட்டும் முறை.

← தெ. இ. அ. பக். 35/II ; → குரல் தும்பி

**குரல் ஓர்த்துத் தொடுத்தல்:** யாழில் புரிநரம்பு கட்டும்முறை; யாழில் மெட்டு அமைத்தல்; குரலுக்கு இளி காணல்; அந்த இளிக்கு இளி காணல் அதாவது குரல் இளி முறையில் (சட்சபஞ்சமபாவம்) 12 தான சுரங்களைக் கண்டு யாழில் புரிநரம்பு (மெட்டு) அமைத்தமுறை.

ச, ப; 'ப' வின் பஞ்சமம் ரி$^2$; ரி$^2$ வின் பஞ்சமம் த$^2$ அதாவது சப, பரி$^2$, ரி$^2$த$^2$, த$^2$க$^2$, க$^2$நி$^2$, நி$^2$ம$^2$, ம$^2$ரி$^1$, ரி$^1$த$^1$, த$^1$க$^1$, க$^1$நி$^1$, நி$^1$ம$^1$, ம$^1$ச என்று வந்து ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$ என்றுஅடைந்து (12 முறை திரிக்க இசையின் ஓர் இயக்கிலுள்ள (ஸ்தாயி) 12 தான சுரங்களையும் கண்டு) யாழில் புரிநரம்பு கட்டியமுறை.

இப்படியால் பன்னிருகால் திரிக்கப்பன்னிரு பாலையும் பிறக்கும் (சிலப் 3: 70-8 அரும்)

*(பாலை - சுரம், தானசுரம்)*

குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர் புரிநரம்பின் (மலைபடு. 24)
திவவு மெய்ந்நிறுத்தி (மதுரைக். 604)
சுகிர் புரி நரம்பின் சீறியாழ் பண்ணி (புறம். 109: 15)
செவி நேர்பு வைத்த செய்வுறுதிவவின் (முருகு. 140)
சூழ்மணிக்கோட்டு வீணைச் சுகிர்புரி நரம்பு. . (சீவக. 728)

**குரல் குரலாக அரும்பாலை:**

இரட்டித்த குரல்குரலாகிய அரும் பாலையும்(சிலப். 3: 90 அரும்)
குரல் குரலாக அரும்பாலையும் (சிலப். 3: 84-85 அரும்)

வலமுறைத் திரிபில் செம்பாலை (அரிகாம்போதி) முதல் பாலையாவதுபோல் இடமுறைத் திரிபில் அரும்பாலை (சங்கராபரணம்) முதல் பாலையாம்.

இடமுறை - இறங்குநிரல் முறை (அவரோகணம்)

ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$ ச்

அரும்பாலை (சங்கராபரணம்)

இறங்குநிரல் முறை ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^2$ ச்

இரட்டித்த குரல் (ச்) குரலாக வருவது; அதாவது மேல் தானத்து 'ச்' என்பது முதல் சுரமாக வருவது.

→ குரல் இரட்டித்த பெற்றி; குரல் குரலாகச் செம்பாலை

**குரல் குரலாகச் செம்பாலை:** குரல் குரலாக வரும் பண் செம்பாலை (அரிகாம்போதி).

கூடுகொள் இன்னியம் குரல் குரலாக (சிறுபாண். 229)
பழைய உரை: இசைநூல் கூறுகின்ற முறைமையாலே செம்பாலையாக வாசித்து
குரல்குரலாகப் பண்ணி (சீவக. 723)
செம்பாலையைப் பண்ணி (மேலது. நச்சர்)
குரல் குரலாக வருமுறைப் பாலையில் (சிலப். 28: 33)
குரல் முதலாகவும் குரல் ஈறாகவும் (சிலப். 8: 38)

↑ வலமுறைத் திரிபில் (ஏறுநிரல் – ஆரோகண முறையில்) குரல்குரலாக வரும் பெரும்பண் செம்பாலை.

**குரல்கொண்டகிளைக்குற்றஉழைச்சுரும்பு:** (மத்திமக்கிரமம்) கிளைமுறை (ஐந்தன் முறை)யில் செவ்வழிப்பாலை வரும் முறை கூறுவது இது.

0 1 2 3 4 5
ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$
0 1 2 3 4 5
கிளைமுறை
ஐந்தன்முறை: ச ம$^1$; ம$^1$ நி$^1$, நி$^1$ க$^1$, க$^1$ த$^1$, ரி$^1$ ம$^2$

இருமத்திமதோடி: ச ரி$^1$ க$^1$ ம$^1$ ம$^2$ த$^1$ நி$^1$ - செவ்வழி
குரல் - சட்சம் - 'ச' ; உழை - மத்திமம் - 'ம'

...குரல் கொண்ட கிளைக்குற்ற உழைச்சுரும்பின் கேழ்கெழுபாலை... (பரிபா. 11: 126–27)

## குரல் திரிபு: → பண்ணுப்பெயர்த்தல்

**குரல்தும்பி:** *அடிப்படைக்குரல் என்ற ஒத்து அதாவது ஆதாரசட்சத்தைச் சுருதியாக ஊதுகின்ற தும்பி.*

*குரல் - அடிப்படைக்குரல்*

விரல் செறி தூம்பின் விடுதுளைக்கேற்ப
முரல் குரல் தும்பி அவிழ்மலர் ஊத (பரிபா. 21: 33–34)

*சுருதிக் கருவியான தூம்பின் குரல் ஒத்து (சட்சசுருதி) க்கு ஏற்ப தும்பி குரல் ஒத்து (சுருதி) ஊதுகின்றது.*

↑ இவ்வாறு ஒத்து – ஊதுவதால் (சுருதி) ஒத்து என்று பெயர் வந்தது.

வண்டு இமிர்குரல் (பரிபா. 14: 4)
... வண்டு கதுப்பின் குரல் ஊத... (பரிபா. 10: 120)
இமிழ்குரல் முரசின் எழுவரொடு முரணி (புறம். 99: 9)

**குரல் துலை:** *சிலம்பு ஆய்ச்சியர் குரவையில் எழுவர் இளங்கோதையரை வலமுறையில் நிறுத்தி தமிழிசையின் முதல் பாலையான செம்பாலை (அரிகாம்போதி) வரும் முறையை - நரப்படைவு என்ற சுரநிரல்களுடன் வட்டப்பாலையாக இளங்கோ அடிகள் கூறுகின்றார்*

(சிலம்பு. 17: எடுத்துக்காட்டு)

| ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{1}$ | ப | த$^{2}$ | நி$^{1}$ |
|---|---|---|---|---|---|---|
| குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் |
| துலை | வில் | கும்பம் | மீனம் | ஏறு | கற்கடகம் | அரி |
| துலாம் | தனுசு | கும்பம் | மீனம் | ரிசபம் | நண்டு | சிம்மம் |

*மேற்கண்டவாறு மேற்கோள் பாடல் மூலம் அரும்பத உரைகாரர் அதை விளக்குகின்றார்.*

குரல் துலை, வில் துத்தம், கைக்கிளை கும்பம்
பரிய உழை மீனம் – பாவாய்
அரிதாரம், கொல்லேறு இளி, விளரி கற்கடகம் கோப்பமைந்த
தொல்லேழிசை நரம்பிற்காம் (சிலப். 17: (13) அரும். மே.)

→ *வட்டப்பாலை பக். 476-77*

**குரல்பாணர்:**

*வாய்ப்பாட்டு (கண்டப்பாட்டு)ப் பாடும் பாணர்; பாடற்பாணர்; இசைப்பாட்டு இயற்றுவோர்; இசைப்பாணர்.*

குரல் வாய்ப்பாணரொடு நகரப் பரத்தரோடு
திருதருமரபின் கோவலன் போல (சிலப். 5:200–201)
பாடும் பாணரில் பாங்குறச் சேர்ந்து (சிலப். 13:105)
'அகவன் மகளே (குறுந்: 23)

*இதுபாடினி ஔவை இயற்றிப் பாடிய இசைப்பாட்டு (வாய்ப்பாட்டு)*

**குரல் பாணி:** *குரல் என்பது குரல் பண் - முல்லை -செம்பாலை (அரிகாம்போதி) அதன் தலையாய சிறுபண் - பாணி - மோகனம். எனவே குரல் பாணி என்பது முல்லைத் தீம்பாணி.*

கழல்கண் கூகைக்குழல் குரல் பாணி (பதிற். 22: 36–37)

*(பாணி - ஐந்து சுரப்பண் - ஔடவம்)*

*தாரப்பண்திறம் (103வது பண்) போன்று குரல்பாணி என்பது சுரவழிப் பெற்ற பெயர்.*

**குரல் பாலை:** செம்பாலை (அரிகாம்போதி).

*குரல் குரலாக வரும் பாலை. விளரிப்பாலை போன்று சுரத்தால் பெற்ற பெயர் குரல் பாலை.*

→ குரல்

**குரல் புணர் நல்யாழ்:**

1. **மேற்செம்பாலை (கல்யாணி):** *குரல் (ச) சுரத்திலிருந்து இணைமுறையில் (பஞ்சமபாவம்) கிடைக்கும் பண்.*

5 6 7 0 1 2 3 4
ச ரி$^{1}$ ரி$^{2}$ க$^{1}$ க$^{2}$ ம$^{1}$ ம$^{2}$ ப த$^{1}$ த$^{2}$ நி$^{1}$ நி$^{2}$
0 1 2 3 4 5 6 7

சப, பரி$^{2}$, ரி$^{2}$த$^{2}$, த$^{2}$க$^{2}$, க$^{2}$நி$^{2}$, நி$^{2}$ம$^{2}$ → ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{2}$ ப த$^{2}$ நி$^{2}$

*மேற்செம்பாலை (கல்யாணி)* ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{2}$ ப த$^{2}$ நி$^{2}$

2. **குரல் ஒத்துடன் சேரும் பெரும்பண் (பாலை)**

*குரல் - குரல் ஒத்து; யாழ் - பெரும்பண், பாலை*

குரல் புணர் நல்யாழ் முழவொடு ஒன்றி (மதுரைக். 605)
கூடு இயத்து அன்ன குரல் புணர் புள்ளின் (மலைபடு. 269)
குரல் புணர் சீர்க்கொளைவல் பாண் மகன்... (புறம். 11: 15)

← *பஞ்ச பக். 6*

**குரல் மந்தமாக:** *இது சிலம்பு ஆய்ச். குரவையில் வரும் முக்கியமான வெண்பா. இதில் முல்லைப் பாணி என்ற மோகனப்பண்ணிற்குரிய சுர நிரல்களை (நரப்படைவு) இளங்கோ அடிகள் குறிப்பிடுகிறார். ஏழன்முறை என்ற இணைமுறையில் சுரங்கள் அடைவு பெறுவதை குறிப்பாகத் தெரிவித்துள்ளார்.*

**குரல்** மந்தமாக **இளி** சமனாக
வரன் முறையே **துத்தம்** வலியா – உரன்இலா
மந்தம் **விளரி** பிடிப்பாள் அவள் **நட்பின்**
பின்றையைப் பாட்டெடுப்பாள்(சிலப்.ஆய்ச்.(17) கூத்துள் படுதல்)

5 6 7 0 1 2 3 4
ச ரி$^{1}$ ரி$^{2}$ க$^{1}$ க$^{2}$ ம$^{1}$ ம$^{2}$ ப த$^{1}$ த$^{2}$ நி$^{1}$ நி$^{2}$
0 1 2 3 4 5 6 7

**குரல்** *மந்தமாக* **இளி** *சமனாக* — *0-7 - ச , ப*
**இளி** *சமனாக வரன்முறையே***துத்தம்** — *0-7 - ப , ரி$^{2}$*
**துத்தம்** *வலியா உரன் இலா மந்தம்* **விளரி** — *0-7-ரி$^{2}$, த$^{2}$*
**விளரி... நட்பின் பின்றையை** — *0 - 7- த$^{2}$க$^{2}$*

*முல்லையந் தீங்குழல் (மோகனம்)* - ச ரி$^{2}$ க$^{2}$ ப த$^{2}$

*குரல் - ஷட்ஜம் 'ச' ; துத்தம் - ரிஷபம் 'ரி'; இளி - பஞ்சமம் 'ப'; விளரி - தைவதம் 'த'; நட்பின் பின்றை - வன் கைக்கிளை - (அந்தர காந்தாரம்) க$^{2}$*

*நட்பின் பின்றை - நாலாவது நாலாவதாக வரும் சுரம் நட்புச்சுரம். ஏழாவது ஏழாவதாக வரும் சுரம்,*

ஐந்தாவது ஐந்தாவதாக வரும் சுரம் ஆகியவை தவிர குரல் (ச) சுரத்துடன் சேருவது (பொருந்துசுரம்) நாலாவதாக வரும். 'க²' என்ற சுரம். இது நட்புச்சுரம். ச சுரத்துடன் 'க' என்ற மூன்றாவது சுரமும் ஓரளவு சேரக்கூடியதே ஐரோப்பிய இசையில் 'Minor third' என்று 'க1' சுரத்தைக் குறிப்பிடுகிறார்கள்.'Major third' - 'க²'; எனவே நட்பின் முன்னை - 'க1'; நட்பின் பின்னை (நட்பின் பின்றை) - 'க²' என்ற சுரமாகிறது.

**குரல் முதலாக ஏழிசை:** குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்ற இசையின் ஏழு சுரங்களால் (ச, ரி, க, ம, ப, த, நி) இணை, கிளை தொடுக்க அல்லது பண் பெயர்க்க ஏழுபாலைகளே கிடைக்கும்.

**குரல் முதல் ஏழும்... (சிலப். 5: 35)**
**குரல் முதலாயுள்ள ஏழிசையிலும் (மேலது. அடியார்க்.)**
**எழுவகை நிலத்தினும் எய்திய வரிக்கும் ( சிலப். 14: 153)**
**சரிகமபதநி என்னும் எழுவகைப்பட்ட எழுத்தடியாகப் பிறக்கும் குரல் முதலாகிய ஏழும் (அரும்)**

"இவ்வாறே திரிக்க இவ் ஏழு பாலைகளும் பிறக்கும்; பிறக்குங்கால் திரிந்த குரல் முதலாக ஏழும் பிறக்கும்... வலமுறையே ஏழு பாலையும் கண்டு கொள்க..." அவை பிறக்குமாறு:-

1) குரல் குரலாயது - செம்பாலை (அரிகாம்போதி)
2) துத்தம் குரலாயது - படுமலைப்பாலை (நடபைரவி)
3) கைக்கிளை குரலாயது - செவ்வழிப்பாலை (இருமத்தி மத்தோடி)
4) உழை குரலாயது - அரும்பாலை (சங்கராபரணம்)
5) இளி குரலாயது - கோடிப்பாலை (கரகரப்பிரியா)
6) விளரி குரலாயது - விளரிப்பாலை (தோடி)
7) தாரம் குரலாயது - மேற்செம்பாலை (கல்யாணி)

← சிலப். 17: (13) அடியார்க்

**குரல் முதலாகவும்:** குரல் முதலாக என்பது குரல் குரலாக வாசித்தல். இவ்வாறு வாசிக்க செம்பாலை (அரிகாம்போதி) என்ற பண் தோன்றும்.

**குரல் முதலாகவும் குரல் ஈறாகவும் (சிலப். 8: 38)**
**குரல் முதலாகவும் - குரல் குரலாகவும் (மேலது. அரும்)**
**குரல் குரலாய்ச் செம்பாலை (மேலது. அடியார்க்.)**
**குரல் குரலாயது செம்பாலை (சிலப் 17:(13) அடியார்க்.)**

**குரல் முதலிய ஏழு நரம்பு:**

1) குரல் - கு - ஷட்ஜம் - ச
2) துத்தம் - து - ரிஷபம் - ரி
3) கைக்கிளை - கை - காந்தாரம் - க
4) உழை - உ - மத்திமம் - ம
5) இளி - இ - பஞ்சமம் - ப
6) விளரி - வி - தைவதம் - த
7) தாரம் - தா - நிஷாதம் - நி

**எழுவகை நிலத்தினும்... குரல் முதலான ஏழு நரம்பு**
**(சிலப்: 14: 153· அரும்)**
**... குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்...**
**(சிலப். 17: எடுத்துக்காட்டு)**

**குரல் வளை:** ஒலியை எழுப்பப் பயன்படும் உறுப்பு.
மானிடக்குரல் வளை - LARYNX
கிளி, வானம்பாடி, குயில், நாகணவாய்ப்புள் முதலிய பறவைகளின் ஒலி எழுப்பும் உறுப்பு - SYRINX.
← த. ப. வ. 263/II

**குரல் வாய்:** குரல் குரலாக என்பது. அதாவது செம்பாலைப் பண் (அரிகாம்போதி).

**குரல்வாய் இளிவாய்க் கேட்டனள் (சிலப். 8: 35)**
**குரல் முதலாக எடுத்து இளி குரலாக வாசித்தாள் என்க (மேலது உரை)**
**குரல்வாய்ப் பாணரொடு... (சிலப். 5: 200)**
**குரல் என்னும் இசையைப் பாடும் .. (மேலது. அடியார்க்.)**

குரல் குரலாக வரும் பண்; குரல்பண் - செம்பாலை - அரிகாம்போதி (வாய் - முதலாக)
குரல்வாய் - குரல் குரலாக; இளிவாய் - இளிகுரலாக
→ குரல் (2)

**குரல்வாய்ப் பாலை:** → குரல்வாய்

**குரலின் பாகம்:** → முன்னர்ப்பாகம்

**குரலுள் இளி பிறத்தல்:** → குரல் இளி முறை

**குரலே துத்தம் இளி இவை நான்கும்:** சுரங்களின் அலகு (சுருதி) அளவுகளைக் கூறுவது. நான்கு அலகு பெறும் சுரமாவன: குரல், துத்தம், இளி.

| கு | து | கை | உ | இ | வி | தா |
|---|---|---|---|---|---|---|
| குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் |
| ச | ரி | க | ம | ப | த | நி |
| 4 | 4 | 3 | 2 | 4 | 3 | 2 |

**குரலே துத்தம் இளிஇவை நான்கும்**
**விளரி கைக்கிளை மும்மூன்றாகித்**
**தளராத் தாரம் உழை இவை ஈரிரண்டு**
**என எழும் என்ப அறிந்திசி னோரே (சிலப். 8: 31 – 2 அரும்)**

**குரவை:**

**1.** மகளிர் கைபிணைந்து வட்டமாக நின்று ஆடும் ஆடல்களுள் ஒன்று; வரிக்கூத்தின் வகையது. ஆடவரும் முதிய பெண்டிரும் குரவையாடியுள்ளனர் கற்கடகக் (நண்டுக்கை) கைகோத்து ஆடுவது. அனைத்து நிலத்த வரும் ஆடிய ஆடல் எழுவகைக் கூத்துள் ஒன்று சடங்கு, மகிழ்வளிப்பு, போர்க்களம் என குரவை ஆடப் பட்டுள்ளது

**காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின் மரேனும் கைபிணைந்து ஆடுவது (சிலப். 3: 12 அடியார்க்.)**
**குழாஅ மகளிர் குரவை காண்மின் (பெருங். 1: 40: 146)**

ஆயர் தம் பாடியில் குரவை பிணைந்த எம்கோவலன்
(பெரிய. திரு. பா. 74/ 1021)
... குரவை முன்னே கோத்தனைக் குடமாடு கூத்தன் தன்னை
(பெரிய. திரு. பா. 144/1091)
வான்தோய் மீமிசை அயரும் குரவை (மலைபடு. 322)
மாயவன் தன் முன்னினொடும் வரி வளைக்கைப் பின்னையொடும்.
... மன்றத்தாடும் குரவை (சிலப். 17)
மாமணி வண்ணனும் தம்முனும் பிஞ்ஞையும் ஆடிய குரவை
(மணிமே. 19: 65–6)
வேங்கை முன்றில் குரவையும் கண்டே (புறம். 24: 6)
பரதவர் மகளிர் குரவையொடு ஒலிப்ப (மதுரைக். 97)
குரவைக் கூத்தே கைகோத்தாடல் (சிலப் 5:70 அரும்)
மன்றுதொறும் நின்ற குரவை...
சேரிதொறும் உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ (மதுரைக். 615)
குரவைக் கூத்தே கைகோத்து ஆடல் (திவா. 1761)

2. நாடகத்திற்குப் பொருத்தமான வெண்டுறைச் செய்யுளின் 4 வகைகளுள் ஒன்று.
*(ஏனையன: வரி, மண்டிலம், சேதம்)*
*← பத. நா. பக். 342*

குரவை - வரிக்கூத்தின் ஓர் உறுப்பு (சிலப் 3 12 அடியார்க்)
*பண்டைய குரவையின் இன்றை வடிவங்கள்:*
*கும்மி - தமிழ்நாடு*
*கைகொட்டிக்களி - கேரளம்*
*கர்பா நடனம் - குஜராத்*
↑ இன்றைய கும்மி என்பது பண்டைய குரவையின் நீட்சியாகலாம். குரவை நாட்டார் கூத்து. எனவே செவ்வியல் மரபினரான விறலியர் குரவை ஆடுவதில்லை.
*ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை - குரவைக் கூத்தால் பெற்ற பெயர்.*
*ஆய்ச்சியர் குரவை - முல்லை நில ஆயர் ஆடியது*
*குன்றக்குரவை - குறிஞ்சி நிலக் குறவர் ஆடியது*
குரவையும் வரியும் விரவல செலுத்தி (சிலப். 3: 24)
குரவை முதலியோர் அரவம் கேட்டு (சிலப். 18: 6)
குரவை ஆடுதும் யாமென்றாள்... (சிலப். 17 கருப்பம்)
*குரவை ஆடலின் 27 இலக்கிய மேற்கோள் பட்டியலைக் கா. சிவத்தம்பி தருகிறார்*
*← ப த. நா. பக். 337 & 38; செ. ப. அ. 1012,*→ குலவை

## குரவைக்குரிய கால்கள்:
*குரவை ஆடலுக்குரிய பாத அடைவுகள்*
குரவையும் வரியும் விரவல செலுத்தி (சிலப். 3: 24)
குரவைக் கூத்திற்குரிய கால்களும் வரிக்கூத்திற்குரிய கால்களும் தம்மில் விரவாதபடியே (மேலது. உரை)
*இதனால் குரவைக்கூத்து மற்றும் வரிக்கூத்திற்குரிய கால்கள் (அடைவுகள்) வெவ்வேறானவை என்பது அறியப்படுகிறது*

## குரவைக் கூத்து: → குரவை, குரவை நாடகம்

## குரவைச்சீர்: 
= குரவைச்செய்யுள், குரவைவரி.
*குரவைக் கூத்தில் பாடப்படும் இசைப்பாடல் குரவை வரிக்கூத்தின் வகையது; இசைப்பாட்டுடன் கூடிய ஆடல் (கூத்து)*
குரவை தொடுத்து ஒன்று பாடுகம் வா தோழி (சிலப். 24: (7)
வரியும் குரவையும் விரவிய கொள்கையின்(சிலப். 30 கட்டுரை. 9)
வரியும் குரவையுமாகிய பாட்டும் கூத்தும் (நாட். உரை)
*(வரி - இசைப்பாடல்)*
தண்குரவைச் சீர் தூங்குந்து (புறம். 24: 6)
குரவைச் செய்யுள் பாட்டாக. கைபிணைந்தாடுவது
(சிலப். 3: 12. அடியார்க்)
கோத்தகுரவை... கடிப்பிகுமுரசே (சிலப். 17 (38)
இது குரவைச் செய்யுள் (மேலது அரும்)
*... நாற்சீரடி மூன்று தாழிசையாக ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வரவும், நாற்சீரடி நான்கு இடைமடக்காக வரவும் வழிபடு கடவுளை முன்னிலைப் படுத்தியும் படர்க்கையாகத் தனியே நிறுத்தியும் வழுத்துவதாகப் பாடுவது குரவைப் பாட்டு. (த. இ. பே பக். 65)*
↑ கொடைக்கானல் மலைச் சாதியினர் குரவைப் பாட்டை, குன்னூட்டுப் பாட்டு என்று பாடுகின்றனர்.
குன்னூட்டுப் பாட்டு - குன்று + ஊட்டு + பாட்டு ஆகலாம்.

## குரவைச் செய்யுள்: → குரவைச்சீர்

## குரவை நாடகம்: 
குரவைக்கூத்து
'பிஞ்ஞையோடு ஆடிய குரவை நாடகத்தை...'
(சிலப் 17. (5) அடியார்க்)
... வாழ்த்தி குரவை நாடகத்தை ஆடி முடித்தாரென்க'
(சிலப். 17 (38)அடியார்க்)
→ குரவை

## குரவை நிலை: 
*புறத்துறையுள் ஒன்று. மகளிர் கைபிணைந்து ஆடுதல்; மகளிர் போர் வீரரோடு சேர்ந்து தலைவனின் வெற்றியைக் கொண்டாடும் ஆடல்*
*← பதிற். 52*

## குரவைப் பறை: 
*குறிஞ்சிப்பறை வகைகளுள் ஒன்று. (இறை 1: 17 உரை)*

## குரவைவரி: → குரவைச்சீர்

## குரு: 
*தாள அங்கம்; தாளக்குறியீடு; 8 எண்ணிக்கை கொண்டது. இரண்டு மாத்திரை அளவுடையது இதன் குறியீடு: 8*
↑ பெயரளவில் இது பயன்பாட்டில் உள்ளது. ஓரை (இராசி) வீடுகளில் 8 ஆம் இடத்தில் குரு இருப்பது நல்லது என்பது நம்பிக்கை. எனவே எட்டு எண்ணிக்கையை குரு என்றனர்.
*← த. க க V/I; பரத தாள 35*

**குரை:**

1. ஓர் இசைநிறை; ஓர் அசைநிலை; ஓர் இடைச்சொல், (an expletive, addl. syllable added for the shake of metre)

ஏயும் குரையும் இசைநிறை அசை நிலை (தொ. சொ. 267)

← செ. ப. அ 1020

2. ஒலி

குரையே ஒலியும் இடைச்சொல்லும் கூறும் (திவா. 2181)

**குலக்கிளை:** முல்லை; முல்லையாழ்; செம்பாலை; (அரிகாம்போதி)

கூவிளங்கண்ணியில் குலக்கிளை முரற்றியும் (கல்லா. 54: 3)

குலக்கிளை- திருமாலுக்கு உகந்த செம்பாலை (முல்லை நிலப்பெரும்பண்)

கூவிளம் - வில்வம் - திருமாலுக்கு உகந்த மலர்.

**குலப் பரத்தை:** காமக்கிழத்தி; கணிகையர் குலத்தவள்; ஒருவற்கே உரிமை பூண்டொழுகும் பரத்தை குலத்தைச் சேர்ந்தவள்

← செ ப. அ. 1022; நம்பியகப். 113

**குலமுதல் பாலை:** செம்பாலை; முல்லைநிலப் பெரும்பண்; அரிகாம்போதி.

நனி நாகரிகம் தோன்றிய முல்லை நிலப் பெரும் பண்ணான முல்லை யாழே தமிழிசையில் முதன்மைப் பாலை. எனவே அது குலமுதல் பாலை எனப்பட்டது.

இது குலமுதல் பாலைத் திரிவெனக் கொள்க

(சிலப். 13. 109. அடியார்க்.)

**குலவை:** மகளிர் விழாக்காலங்களில் நாவால் இடும் மகிழ்ச்சி ஒலி.

குரவை, கும்மி போன்ற ஆடல்களில் குலவை ஒலியால் ஒத்து (சுருதி) கூட்டுவது மரபு.

குரவை என்னும் சொல்லே குரல் என்பதுடன் தொடர்புடையதாகும். DED குரல் என்பதிலிருந்து இச்சொல் பிறந்ததாகக் கொள்கிறது (ப. த. நா. 341)

... குலவை எனப் பேச்சு வழக்கில் கூறப்படும்.

குலவை > குரவை

ஒப்பு:- குதில் > குதிர்; பந்தல் >பந்தர்

↑ குரவை என்பது குலவையிட்டு ஆடும் ஆட்டத்தால் பெற்ற பெயராகலாம்.

**குவிகாங்கூலம்:** ஒற்றைக் கையுள் ஒன்று.

காங்கூலம்மே கருதுங்காலைச் சுட்டும் பேடும் பெருவிரன் மூன்றும், ஒட்டி முன்குவிய அநாமிகை முடங்கிச் சிறுவிரல் நிமிர்ந்த செய்கைத்தாகும்... குவிகாங் கூலம் குவிவிழுந்ததுவே

(சிலப். 3: 18 அடியார்க்.)

**குழகம்:** = இலாசியம்; சொக்கம்.

மென்மையான ஆடல்; மகளிர் ஆடுவது.

பேய் முழவங்கொட்டக் கூளி பாடக் குழகன் ஆடும் (மூத்த. 1: 9)

குழகம் ஆடியதால் குழகன்.

கொட்கப் பெயர்க்கும் குழகன் (திருவாசக: திரு அண்டப். 12)

... குழகன்... (பெரு. திருமொ. 7ஆம் பத்து. 7ஆம் பாட்டு)

**குழமணி தூரம்:** = குணாலைக் கூத்து.

தலைகீழாக நின்று ஆடும் கூத்து.

. குணாலையே... கோத்தவரிக் கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

ஏத்துகின்றோம்... கூத்தர்போல ஆடுகின்றோம் குழமணி தூரமே (திருமங்கை. 10ஆம் பத்து. 3ஆம் திருமொழி. 1/ 1868)

← ஞானாகானம். பக். 93

**குழல்:**

1. துளை

குழலே துளையும் மயிரும் கூறும் (திவா. 1955)

நினையா மாக்கள் தீங்குழல் (அகம். 305: 16)

குழல்கால் சேம்பின் கொழுமடல் அகல்கிளை (அகம். 336: 1)

2. =புல்லாங்குழல், வாரி, வங்கியம், வேணு, வேய்ங்குழல், முரளி(flute)

வாரி வங்கிய மற்றிவை இசைக்குழல் (பிங்க. 1428)

குழலன் கோட்டன் குறும் பல்லியத்தன் (முருகு. 209)

குழல்இனை வதுபோல் அழுதனள் பெரிதே (புறம். 143: 15)

3. குழிக்குழல்: சூறைகொள்ளும்போது ஊதும் குழல்களில் ஒன்று, (pipe).

கோடும் குழலும் பீடுகெழு மணியும் (சிலப். 12: 41)

சூறைகொள்ளும் கால் ஊதும்... குழிக்குழலும்... (அடியார்க்.)

4. காளம்: ஸ்ரீ ராஜராஜ என்னும் திருநாமம் வாங்கி கங்கில் ஒன்றும் குழல் இரண்டும் மோதிரம் ஐஞ்கம் உடைய

(தெ. இ. க. 2. 1. த. க. சொ. 195)

5. இசைக்கருவி, தொளையுடைய பொருள்.

இருபான் மயிரும் இசையின் கருவியும் – தொளையுடைய பொருளும் குழல் என்றாகும் (பிங்க. 3407)

6. ஐந்து சுரப்பண் எ–டு:– முல்லைக் குழல்

**குழல்ப்பாணர்:**

துளைக்கருவியாளர்; குழலர்

குழலினும் யாழினும்... (சிலப். 5:35)

துளைக்கருவியானும், நரம்புக்கருவியானும்... (மேலது அடியார்க்.)

**குழல் பாணி:** முல்லைப்பாணி, மோகனம்.

முல்லையாழ் (அரிகாம்போதி) என்ற பண்ணிற்கு குழல் துளையிடப்பட்டது. எனவே முல்லையாழின் திறப்பண்ணான முல்லைப்பாணி (மோகனம்) குழலின் பாணி என்ற பெயர் பெறுகின்றது. இது கருவியால் பண் பெற்ற பெயர்.

அறல் குழல் பாணி தூங்கி (சிறுபாண்.162)

(தூங்கி - பாடி, இசைத்து)

கோவலர் ஊதும் குழலின் பாணியும் (சிலப். 27: 241)

(பாணி - ஐந்து சுரப்பண்; ஔடவம்)

**குழல் வாசித்தற்குரிய விரல்கள்:** *புல்லாங் குழல் வாசிப்பதற்குரிய விரல்கள்.*

இடக்கையின் பெருவிரலும் சிறுவிரலும் நீக்கி மற்றை மூன்று விரலும். வலக்கையில் பெருவிரல் ஒழிந்த நான்கு விரலும் ஆக ஏழு விரலுமென்க. என்னை? வளைவாய் அருகு ஒன்று முத்திரையாய் நீக்கித் துளை ஏழில் நின்ற விரல்கள் விளைாட்டிட மூன்று நான்கு வலமென்றார்...
(சிலப். 3: 26 அடியார்க்.)

↑ ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்பும் இதே விரல் முறைப்படி தான் புல்லாங்குழல் இன்றும் ஊதப்படுகின்றது. தமிழிசையின் அறாத் தொடர்ச்சி இது.

**குழலின் துளை அளவு:** '..நீளம் இருபது விரல்; இதிலே தூம்பு முகத்தின் இரண்டு விரல் நீக்கி முகத்தின் முதல்வாய் விட்டு, அம்முதல் வாய்க்கு ஏழு அங்குலம் விட்டு வளைவாயினும் இரண்டு விரல் நீக்கி நடுவில் நின்ற ஒன்பது விரலினும் எட்டுத் துளையிடுக இவற்றுள் ஒன்று முத்திரை யென்று கழித்து நீக்கி நின்ற ஏழினும் ஏழுவிரல் வைத்து ஊதப்படும். துளைகளின் பரப்பு ஒருவிரல் அகலம் கொள்ளுக' (சிலப். 17 (20) அடியார்க்.)

**குழலின் பிண்டி இலக்கணம்:** *குழலின் செய்முறை, ஊதுமுறை முதலியன பற்றிக் கூறும் இலக்கணம்.*
← *சிலப். 3: 26அடியார்க்*

**குழலோன்:** *புல்லாங்குழல் கலைஞன்.*

வழு இன்று இசைக்கும் குழலோன் தானும் (சிலப். 3: 69)

'. ஆடலோனும், இசையோனும், இயல் புலவனும், தண்ணுமையோனும், குழலோனும் யாழோனும்...'
(சிலப் 3 175 அடியார்க்.)

**குழித்தாளம்:** *தேவார ஓதுவார் பயன்படுத்தும் நடுப் பகுதியில் குழியுடைய கைமணி வகை,* (tinkling basin cymbals).

**குழிப்பறை:** → நிலப்பறை

**குழிப்பு:** *சந்த, வண்ணப் பாடல்களில் பல துள்ளல்கள் சேர்ந்தது ஒரு குழிப்பாகும்.*

முத்தைத்தரு பத்தித் திருநகை
*தத்தத்தன தத்தத் தனதன 1 குழிப்பு*
*(தத் தத் தன - என்பது துள்ளல்)*

**குழிமணி:** *கேரளத்தில் பத்ரகாளிப் பாட்டுக்களில் பயன்படுத்தப்படும் கைம்மணித் தாளக்கருவி.*

**குழு இசை:**

1. பல்லிய இசை, ஆமந்திரிகை
*காற்றுக்கருவி, நரம்புக்கருவி, தோல்கருவி (தாளக்கருவி) எனப்பல்லியம் முழங்குவதே குழு இசை.*

குழல் வழி நின்றது யாழே ; யாழ் வழித்
தண்ணுமை நின்றது தகவே ; தண்ணுமைப்
பின்வழி நின்றது முழவே ; முழவொடு
கூடி நின்றிசைத்தது ஆமந்திரிகை (சிலப். 3: 139 – 142)

2. *பலர் குழுவாகச் சேர்ந்து ஒன்றாகப் பாடுவது.*

**குழு நடனம்:** = பிண்டிபந்தம்
*ஆட்டத்தில் பலர் கலந்து கொண்டு கூடி ஆடும் ஆடல்.*

**குளகச்செய்யுள்:** → குளகம்

**குளகம்:** = குளகச் செய்யுள்.
*குறுஞ்சீர் வண்ணம். குற்றெழுத்துத் தொடர்ந்து வரும் பாட்டு.*

குற்றெழுத்துத் தொடரின் அது குளகச் செய்யுள் (திவா. 1851)
குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும் (தொ. பொ. 522)

**குளித்தாளம்:** → அடர்பாண்டில்

**குளிர்:**

1.= கிளிகடி, தழல், தட்டை, குளிறு
*கிளிகடியும் இசைக்கருவி*

படுகிளி கடியும் கொடிச்சி கைக் குளிரே (குறுந். 291: 2)
உண் கிளி கடியும் கொடிச்சி கைக்குளிரே (குறுந். 360: 6)
குளிர் படுகையன் கொடிச்சி செல்க என (நற். 306: 3)
குளிர்புரை கொடுங்காய் கொண்டன... (மலைபடு. 110)
குளிர் கொள் தட்டை.... (அகம். 32: 6)
தழலும், தட்டையும், குளிறும், பிறவும் கிளி கடிமரபின...
(குறிஞ். 43–4)
குளிரும், தழலும், தட்டையும் மூன்றும் கிளிகடிகருவி...
(திவா. 1275)

2. குடமுழவு
முழவு குளிரே (பிங்க. 1509)
கிளிகடி கருவியும்... குளிரிப்பெயர் குடமுழவும் இரண்டும்
(திவா. 2081)

*சேடகச் சண்டையுங் கண்டையுங் தாளமுங் காளமுங்*
*கொண்டதிர் படகமுங் குளிறு மத்தளங்களும்*
*(தெ. இ. க. 7 863. த. க. சொ. 197)*

கடும்பெயல் குளிறில் கலிமயில் என்ன (கல்லா. 84: 13)
குளிறு - குளிர் என்றும் பாடம் (மேலது. உரை)
→ கிளிகடி

**குளிர்த்திப் பாடல்:** *ஈழத்தில் கண்ணகி வழிபாடு வைகாசிமாதம் முழுநிலவு நாள் முதல், ஏழு நாள்*

நடைபெறும். ஏழாம் நாள் இறுதியில் குளிர்த்தி விழா நடக்கும் கோபத்துடன் இருக்கும் கண்ணகியைக் குளிர்ச்சி அடையச் செய்யும் பொருட்டு தயிர், சர்க்கரை முதலான பொருள் கொண்டு பானம் தயாரிப்பர். பின்பு பாடல் இசைப்பர். ஏழு நாள் சடங்கிலும் கண்ணகியின் வரலாறு பாடலாகப் பாடப்படும். இதுவே குளிர்த்திப் பாடல்

குளிர்ச்சி > குளிர்த்தி

அச்சன் < – > அத்தன் ; தாளிச்சு > தாளித்து.

**குளிறு:** → குளிர்

**குளுவ நாடகம்:** இருவர் ஆடும் ஆடல். குளுவன் சிங்கனின் தோழனாக வருவான். குறவஞ்சி நாடகத்தின் இணை நாடகமாக உருவானது கண்ணிகள், ஏசல் பாடல்கள் இடம்பெறும்.

எடு:- மிதிலைப்பட்டி வைத்தியலிங்க குளுவ நாடகம்

சின்னமகிபன் குளுவ நாடகம்

கோட்டூர் நயினார் குளுவ நாடகம்.

**குற்றிசை:** குறுகிய சந்தம் (short metre) விருத்த யாப்பில் பயின்று வருவது.

குற்றிசை x நெட்டிசை

**குற்றியல் கோவை:** = அல்ப நியாசம், குறுமை ஒலிக்கோவை.

ஒரு பண்ணில் குறுகிய நேரம் ஒலிக்கும் சுரம்.

எடு:- பைரவியில் - நிறை விளரி (சதுசுருதி தைவதம்) - த$^2$

ஆரபியில் - நிறை கைக்கிளை (அந்தர காந்தாரம்) - க$^2$

← த. வ பக். 85; இ து. த. சொ. 17

**குற்றெழுத்து:** உயிர்க்குறில்; குறுகிய ஓசையை உடைய எழுத்து (குறு + எழுத்து) (short vowal; A letter which has the sound upto single unit)

அ, இ, உ, எ, ஒ என்ற ஐந்தும் குற்றெழுத்துக்கள். இவை ஓர் அளபு (unit) இசைக்கும்

ஓர் அளபு இசைக்கும் குற்றெழுத்து என்ப (தொல். எழுத். 3)

குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும் (தொல். செய். 219)

**குறண்டி:** பண்களில் ஒன்று. (பிங்க.)

குறண்டி... செவ்வழியாழ்த் திறமென்ப (பிங்க. 6: 284)

இராமக்கிரி... குறண்டி... பண்ணே (திவா. 1894)

**குறம்:**

1. குறத்தி சொல்லும் குறி
2. குறவர் கூற்றாக வரும் கலம்பக உறுப்புப் பதினெட்டனுள் ஒன்று.

தவங்குற மறம்பாண் (இலக். வி. பாட். 52)

3. குறத்தி தலைவிக்கு குறி சொல்வதாக அமையும் சிற்றிலக்கியம்.

எடு:- மீனாட்சியம்மை குறம்.

**குறவஞ்சி:**

1. குறிசொல்லும் குறமகள்
2. இசைநாடகம், (A kind of dramatic poem) நாடகத்தமிழ் இலக்கியம், குறத்திபாட்டு.

**குறவன் குறத்திபாடல்:** சிங்கன் சிங்கிபாடல், குறவன் குறத்தி ஆட்டப்பாடல். குறம், குறவஞ்சி நாடகங்களில் வரும் பாடல்.

எடு:-

பச்சைமலை பவளமலை எங்கமலை சாமி.. (து. ப. வ. பக். 580, III.)

**குறள்:** குட்டையான

குறுந்தாள் வரகின் குறள் அவிழ்ச் சொன்றி (பெரும்பாண். 193)

மாணிக்குறளனே தாலேலோ... (பாசுரம்)

**குறள் தாழிசை:** நாற்சீரின் மிக்க சீர்களால் வரும் அடி இரண்டாய், ஈற்றடி குறைந்து வருவனவும், வேற்றுத் தளை தட்டுக் குறள்வெண்பாவில் சிதைந்து வருவனவுமாகிய பாவினம் (யா. கா செய். 6. உரை)

← செ. ப. அ. 1045

**குறள்மிடை மண்டிலம்:** குறள் பாக்களையும் தனிச் சொல்லையும் நிலை மண்டில ஆசிரியத்தின் இடையே மடுப்பது. இது புதிய இயற்றமிழ்ப் பாவகை. சிலம்பில் கட்டுரை காதையில், இரண்டு நிலை மண்டில ஆசிரியப்பாவின் இடையில் குறட்பாக்கள் வருவது.

கட்டுரை காதையில் 'சடையும் பிறையும்... அறிதியோஎன' - இது ஒரு நிலைமண்டிலம். அடுத்து 'பெருந்தகை, தோழி நீ, மாதரா' என்று தொடங்கும் மூன்று குறட்பாக்கள் வருகின்றன. அடுத்து 'காதில்' எனும் தனிச்சொல். அடுத்து வரும் 'மறைநாவோசை. ...கண்ணகிதானென்' என்பது மற்றுமோர் நிலைமண்டிலம்.

← சி. யா. பக் 12

**குறள் வெண் செந்துறை:** = குறுவெண்பாட்டு, செந்துறை வெள்ளை.

அந்தம் குறையாது அடியிரண்டாமெனில்

செந்துறை எனும் சிறப்பினதாகும்

(காக். பாடி – யாப். விரு. செய். 10. உரை. மேற்.)

ஒத்த அடித்தே செந்துறை வெள்ளை – அவிநயனார் . மேலது

ஒழுகிய ஓசையின் ஒத்தடி இரண்டாய்

விழுமிய பொருளது வெண் செந்துறையே – மேலது

சிலம்பு. ஆய்ச். குரவையுள், 'குடப்பால் உறையா' முதலிய மூன்றும் குறள் வெண் செந்துறை.

**குறள் வெண்பா:** *கண்ணி* (Dimetric)

*முதலடி நாற்சீரும், இரண்டாமடி முச்சீரும் பெற்று வரும் ஈரடி வெண்பா (இலக் விள. 730 உரை) சிலம்பில் குன்றக்குரவை 25ஆம் பாடலாக வரும் தாழிசையில் இறுதி இரண்டடி 'பொற்றொடி மாதர்... பெற்றியுடையது இவ்வூர்' என்பது குறள் வெண்பா*

**குறளடி:** *இருசீரால் வரும் அடி (இலக். விள. 719) 'கடலாடு காதையும்' எனவரும் சிலம்பு பதிகத்தின் 68ஆம் அடி குறளடி.*

**குறளடி நான்கால்வந்த கொச்சக ஒருபோகு:**
வெற்றிவேல் மணிமுடி கொற்றவன் ஒருமகள்
அற்றமில் பெரும்படை சுற்றமொடு இயங்கினாள் (சீவக. 565)
*சீவக. 565 - 580 வரை இந்த யாப்பில்அமைந்தவை.*

**குறளடி வஞ்சிப்பா:** *குறளடியால் மூன்று முதல் பல அடிகொண்டு தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று வரும் வஞ்சிப்பா (யா. கா செய். 24)*

**குறி:**

**1. வரையறை,** (to determine); *அளவு.*
இணைகிளை, பகை, நட்பு என்று இந்நான்கின்
இசைபுணர் குறிநிலை எய்த நோக்கி (சிலப். 8:33–34)
*இசைச்சுரங்கள் இணையும் வரையறுக்கப்பட்ட நிலைகளாவன: இணை, கிளை, பகை, நட்பு ஆகிய சுரங்கள்.*
குறி கலந்த இசை (தேவா. 1: 2: 1)
குறியார் பண் செய் கோலக்காவையே (தேவா. 1: 23: 8)
குறி நரம்பு எறிவுற்று எழுவுதண்டமிழ்
யாழினும் இனிய சொற்கிளியே (கம்ப. அயோத். 764/ 2: 9: 28)
கூர் உகிர்க் கரணம் குறியறிந்து செலுத்தி (சிலப். 3: 52)
குறி ஒன்றும் இல்லாத கூத்தன் தன் கூத்தை (திருவாசக. 51: 2)
எண்ணும் எழுத்தும் குறியும் அவர் (தேவா. 4: 90: 6/ 5026)
கூறிய உறுப்பில் குறியொடு புணர்ந்து...
(சிலப். 3. 106_7 அடியார்க்.)
கூடம் என்பது குறியுற விளம்பின்
(சிலப் 8· 29 அடியார்க். மேற் சீவக 672 நச்சர். மேற்.)

2. *சேரும் இடம்*
குறி கலந்த இசை (தேவா. 1: 2: 1 திருத்தாளச்சதி)
குறிகொள் பாடலின் இன்னிசை கேட்டு (தேவா. 7 திருப்புன் 9)
நாப்பயிர் குறிநிலை கொண்ட கோடே (அகம். 318: 15)

**3. இலக்கணம்**
குச்சையிர்மத்தகக் குறியின் ஓரத்தி (கல்லா. 98: 18)
கூடமென்பது குறியுற விளம்பின் வாய்வதின் வராது மழுங்கிசைப்பதுவே (சிலப். 8: 29_30 அடியார்க். மேற்.)
நெறியல்லா... குறி ஒன்றும் இல்லாத கூத்தன்தன் கூத்தை...
(திருவாசகம். அச்சோபதிகம்)
*குறி - இலக்கணம் (மேலது. உரை)*

இசைபுணர் குறி நிலை... (சிலப். 8:34)
*(இசையில் ஒரு சுரத்துடன் பிறிதொரு சுரம் சேர்கின்ற இலக்கணம்)*
உள்ளுறை தெய்வம்... என்ப குறியறிந்தோரே (தொ.பொ. 50)

**4. குறி (சொல்லல்),** *கட்டு, விரிச்சி* (omen, sooth)

**குறவெயினி:** *வெறியாடு குறமகள்.*
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள் முருகுஇயம் நிறுத்து...
(முருகு. 242 – 43)
*(குற + எயினி - குறவெயினி)*

**குறிக்கோள்:** *யாழ்க் கரணம்*
பண்ணல்... குறும்போக்கு (சிலப். 3: 16)
பண்ணல் முதலிய எட்டு வகைப்பட்ட குறிக்கோளும்
(மேலது. அடியார்க்)

**குறிஞ்சி:**

1. *நிலம் ; மலையும் மலை சார்ந்த இடமும்* (Hill tract)
குறிஞ்சி எல்லையின் நீங்கி (சீவக. 1563)

2. *திணை, குறிஞ்சிநில ஒழுக்கம், உரிப்பொருள், புணர்தல்.*
திணைக்குரிய பொருளே (தொல். அகத். 14)

3. *மலர், குறிஞ்சி நிலத்துக்குரிய சிறப்பான மலர். குறிஞ்சி, சிறுகுறிஞ்சி, பெருங்குறிஞ்சி, செம்முள்ளி*

4. *குறிஞ்சி நிலப் பெரும்பண்*
= குறிஞ்சி யாழ், படுமலைப்பாலை, நடபைரவி, யாமயாழ், கோசிகம், கௌசிகம், கொல்லி, கவ்வாணம், கொல்லிக் கவ்வாணம் (melody of Hill tract)
குரல் குரலாக வருமுறைப் பாலையில்
துத்தம் குரலாத் தொன்முறை இயற்கையின்
அம்தீம் குறிஞ்சி அகவன் மகளிரின் (சிலப். 28: 33– :35)
அம்தீம்குறிஞ்சி என்பதனால் யாழும் (சிலப். பதிக. உரை. அடியார்க்.)
குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின் (சிலப். 24: 18)
கொடிச்சியர் எடுத்த இன்குறிஞ்சி கலந்த பாடல் கேட்டு
(கம்ப. அயோத். 760/ 2: 9: 24)
கருங்கோல் குறிஞ்சி அடுக்கம் பாட (புறம். 374: 8)
நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடி (மலைபடு. 359)
*(அடுக்கத்துக் குறிஞ்சி - மலையகத்துக் குறிஞ்சிப்பண்)*
குறிஞ்சி மருள் இசைபாடும் வேங்கடம் (திருமங்கை. 1049)
கோவலர் கோவிந்தனைக் குறமாதர்கள் பண் குறிஞ்சிப் பாவொலி
பாடி நடம் பயில் மாலிருஞ் சோலையதே (பெரியாழ்வார். 3: 4/ 352)
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி (முருகு. 239)
குறிஞ்சி பரதவர் பாட (பொருந. 219)
வில்யாழ் இசைக்கும் விரல்எறி குறிஞ்சி (பெரும்பாண். 182)
பெருவரை மருங்கில் குறிஞ்சி பாட (அகம். 102: 6)
*(வரை - மலை)*
உருகெழு மரபின் குறிஞ்சி பாடி (நற். 255: 2)
கொய்யாக்குறிஞ்சி பல பாடி (புறப். வெண். 79)
யாம நல்யாழ் நாப்பணின்ற (மதுரைக். 584)

*(குறிஞ்சிப்பண்ணிற்கு சிறுபொழுதால் இயன்ற பெயர் யாம நல்யாழ் - குறிஞ்சி யாமத்திற்குரிய பண்)*
குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர் (தொ. பொ. 6)
பாணர் படுமலை பண்ணிய எழால் (குறுந். 323)
படுமலை நின்ற நல்யாழ்... (நற். 139: 4)
பாடல் பயிலும். . . இன்தீம் குறிஞ்சி இசை (தண்டி. அலங். நுட்ப அணி. சான்றுப் பாடல்)
கருகு குழல் மடவார் கூடி குறிஞ்சியது பாடி (தேவா. 1: 12: 10)
படுமலை நின்ற பயங் கெழுசீறியாழ் (புறம். 135: 7)
படுமலை செவ்வழி பகர் அரும்பாலை (சிலப். 3: 84)
துத்தம் குரலாவது படுமலைப்பாலை (சிலப். 17(13) அடியார்க்.)
↑ இக்காலம் குறிஞ்சி என்பது வேறொரு பண்ணின் பெயராக உள்ளது. சங்கீத இரத்னா காரமும், நாரதரின் சங்கீத மகரந்தமும் குறிஞ்சியை, '**குரஞ்சி**' என்று குறிப்பிடுகின்றன.
குறிஞ்சி ஓரிசை, ஓர் பண்ணே குறிஞ்சி, செம்முள்ளிக்கும் பேர் (சூடா. 11: 2)
ஐவகை நிலத்தோர் நிலமும், ஓர் மரமும், ஓர் இசையும், யாழும் ஓர் பண்ணும் குறிஞ்சி (பிங்க. 3412)
மலைச் சார்பு நிலனும் செம்மலர் முள்ளியும் குறிஞ்சி அந்நிலப் பாடலும் பெறுமே (திவா. 2212)
← *பரத. இராக. 56; செ. ப. அ 1048;*
→ குறிஞ்சி யாழ், படுமலைப் பாலை, கவ்வாணம்

## குறிஞ்சிக்கு அருகு: *மண்டிலம்.*
...குறிஞ்சிக்கு அருகு மண்டிலம். . . (சிலப். 14.160_67அடியார்க் )

## குறிஞ்சிக்குப் புறம்: *செந்து.*
குறிஞ்சிக்குப் புறம் - செந்து (சிலப். 14.160_67 அடியார்க்.)

## குறிஞ்சிக்குப் பெருகு: *அரி*
குறிஞ்சிக்குப் பெருகு அரி (சிலப். 14: 160 _ 67 அடியார்க்.)

## குறிஞ்சிப் பறை: *தொண்டகம், முருகியம், துடி ஆகியன குறிஞ்சி நிலப் பறைகள்.*
தொண்டகம், முருகியம், துடி என மூன்றும்
வென்றி கொள் குறிஞ்சிப் பறை என விளம்புவர் (திவா. 1228)
தொண்டகம் தொடுமின் சிறு பறை தொடுமின் (சிலப். 24: 16)

## குறிஞ்சிப் பாணி: = செந்திறம், துருத்தி, செந்துருத்தி, செந்திருதி, மதுமாதவி
*குறிஞ்சி நிலச் சிறுபண்; மத்யமாவதி.*
குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும் (சிலப். 27: 224)
பறைந்த... செந்திறம்... (சூடா. 10: 33)
நைவளம்... செந்திறம்... (திவா. 1876)

## குறிஞ்சி யாழ்: *குறிஞ்சிநிலப் பெரும்பண்.*
...ஓரும் உழை தொன்றக் குறிஞ்சியாழ் (சிலப். 17·(13) அடியார்க்.)
→ குறிஞ்சி, படுமலைப் பாலை, கவ்வாணம்

## குறிப்பு: *நாட்டியம்.*
உன்னமே... குறிப்பாம்... நாட்டியம்... (சூடா. 8: 34)
→ நாட்டியம்

## குறில் மெல்லிசை ஏந்திசை வண்ணம்:
*சந்த இசைப்பாடல்.*
எடு:– கரிய மலர் நெடுங்கண்... புகாரே எம்மூர் (சிலப். 7: (5)
பல தொகையும் விராய் வந்து ஒரு சொல் நடையவாய்த் தம்மை முடிப்பனவற்றோடு முடிந்தன (தொல். எச்.24நச்சர்)
← *யா. வி. ஒழிபு. மேற்*

## குறில் வண்ணம்: → குறுஞ்சீர் வண்ணம்

## குறுக்கம்:
*இசையில் எழுத்துக்கள் குறுக்கம் பெறுதல் (corruption). ஐ, ஔ, ம, ஃ போல் இசையிலும் எழுத்துக்கள் குறுக்கம்பெறும்.*
நீட்டும் வழி நீட்டலும் குறுக்கும் வழிக் குறுக்கலும் (தொ. எச். 7)
*க், ச், ட், த், ப், ற் என்ற வெடிப்பொலி (plosives, நிறுத்தொலி stops, pure mutes) இசையில் வருங்கால் இவ்வெழுத்துக்களை மெல் ஒற்றுப்போல குறுக்கிப் பாடவேண்டும். இது வஞ்சனைப் புணர்ப்பு எனப்படும்.*
→ வஞ்சனைப் புணர்ப்பு

## குறுக்கு உடல் நிலை:
= சுவஸ்திக உடல் நிலை,
*நாட்டிய உடல் நிலை (Pose). அரைமண்டியிலி ருந்து வலது காலைத்தூக்கி முழங்கால் வரைமடித்து கைகள் இரண்டையும் குறுக்காகப் பிடித்தல், ஆடலில் குறுக்கு உடல் நிலையாகும்.*
*(சுவஸ்திகம் - குறுக்கு)*

## குறுக்குக்கை: = சுவத்திகம்
1. அங்கக்கிரியை பதினாறனுள் ஒன்று
(சிலப். 3: 13. அடியார்க். அடிக்.)
2. *இரட்டைக்கையுள் ஒன்று*
சுவத்திகமென்றது – மணிக்கட்டில் பொருந்திய பதாகை இரண்டையும். மணிக்கட்டி லேற்றி வைப்பது; என்னை?"
சுவத்திகமென்பது சொல்லுங்காலை, மணிக் கட்டமைந்த பதாகை இரண்டையுமணிக்கட்டேற்றி வைப்பதாகும்."
(சிலப் 3: 18.அடியார்க்.)
3. *விருத்தி என்ற இருத்தலில் ஒன்று*
*(இருத்தல் - அமர்ந்தநிலை)*
திரிதரவில்லானவாகிய 9 வகை இருத்தலில் ஒன்று.
(சிலப்.3: 23 – 6அடியார்க்.)

## குறுங்கலி:

1. சோமராகம், பாலை யாழ்த்திறத்தினுள் ஒன்று.

குறுங்கலி என்பது சோமராகம் (பிங்க. 1388)
அராகம், நேர்திறம், உறுப்பு, குறுங்கலி (திவா. 1878)

2. புறத்துறையுள் ஒன்று எடு:- புறம். 143-147

## குறுங்குழல்: குட்டைக்குழல்.

கேரளத்தில் செண்டை மேளத்தில் பயன்படுத்தப் படும் நீளம் குறைந்த நாககரம்.

## குறுஞ்சீர் வண்ணம்: = குறில் வண்ணம், முடுகியல்

குறில் எழுத்துக்களால் ஆன சந்த (வண்ண) ப் பாக்கள், (a rhythm produced by using short syllables)

குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும் (தொ. செய். 219)

எடு:- 'சுடரொடு', 'துடியொடு', 'அணிமுடி' எனத் தொடங்கும் பாடல்கள் (சிலப். 12: (12) (19) (20))

'... இவை மூன்றடுக்கி முடுகியலாய் வந்த தாழிசைக் கொச்சக ஒரு போகு' (தொ. செய். 149 நச்சர்)

பிடியத, னுருவுமை... (தேவா. 1: 124: 5)
மறையவன் மதியவன் (தேவா. 1: 125: 5)
அவரவர் தமதம (பாசுரம். 2679 (திருவாய்)
துளைபடு குழலிசை துடியொடு சிறுபறை
கிளையொடு படலிகை கிளையொடு கிளர்தர (சூளா. 936: 1–2)
'அழகிய தமிழ்மகள் இவள் – இரு
விழிகளி லெழுதிய மடல்'

→ முடுகியல்

## குறுந்தூம்பு: → குறும்பரந்தூம்பு

## குறும்பரந் தூம்பு: குறுந்தூம்பு, வங்கியம்.

இளிப்பயிர் இமிரும் குறும்பரந் தூம்பொடு (மலைபடு. 7)

**குறும் பல்லியம்:** சிற்சில கருவிகளைக் கொண்ட வாத்தியக்குழு

நெடும் பல்லியத்தை (குறுந். 178, 203)
குழலன் கோட்டன் குறும் பல்லியத்தன் (முருகு. 209)

இயங்கள் குறும்பல்லியம், நெடும்பல்லியம் என இருவகைப்படுவன போலும் (மேலது. உவேசா. அடிக்.) நெடும்பல்லியத்தனார் (புறம். 64) என்று நல்லிசைப் புலவர் ஒருவர் பெயர் பெற்றுள்ளார்

## குறும்போக்கு: = குடக்குத் துள்ளல்.

1. யாழ் வாசிக்கும் முறைகளுள் ஒன்று (சீவக.657 உரை)

எண்வகை இசை எழாலகளில் ஒன்று.

நண்ணிய குறும்போக்கு என்று நாட்டிய
எண்வகையால் இசையெழீ இப் (சிலப். 7: 7–8)

துள்ளற் கண்ணும் குடக்குத் துள்ளும். குறும் போக்காகும் (மேலது: அரும்)

சிறு துள்ளல்களைப் புணர்ந்து இணைந்து ஒலித்துச் செல்வது குறும்போக்கு (பஞ்ச. 97)

2. தாளமுழக்கு முறைகளுள் ஒன்று → குடக்குத்துள்ளல்
← த. க. க. 179/I.

## குறுமை ஒலிக்கோவை:→ குற்றியல் கோவை

## குறு வெண்பாட்டு:→ குறள் வெண்செந்துறை

## குறை:

1. அல்பத்துவம் (வ.சொ.)

பண் ஆளத்தியில் ஒரு சுரத்தை குறைந்த அளவு அல்லது பட்டும் படாமலும் ஒலித்தல்

பகூத்வம், அற்பத்துவம் என்பன தமிழில் நிறை, குறை என நின்றன (யாழ்நூல். 154)

2. குறைச்சுரம், மென்சுரம், கோமளம், இறங்கிய சுரம், (Flat note)

எடு:- ரி$^1$ க$^1$ போன்றவை

← த. க. க 217/III

## குறைச் சுரங்கள்: = அந்தரக்கோல் (un-natural notes)

முல்லை - முல்லையாழ் - செம்பாலை என்ற அரிகாம்போதிப் பண்ணுக்கு வராத சுரங்கள் குறைச்சுரங்கள் அவை.

ரி$^1$ க$^1$ ம$^2$ த$^1$ நி$^2$ = 5

தார நரம்பின் அந்தரக்கோலைத் தாரமென்றார் (சிலப் 3· 72–8 அடியார்க். மேற்.)

தார நரம்பின் அந்தரக்கோல்- நி$^2$ (காகலி நிஷாதம்)

...என அந்தர் அமைந்து நீக்கி உறழ்ந்து கண்டுகொள்க (சிலப்: 8: 33–34 உரை)

→ நிறைச் சுரங்கள்

## குறைச் சுரப்பண்: ஒருஉப்பண் (வர்ஜராகம்).

ஏறுநிரலில் அல்லது இறங்குநிரலில் அல்லது இரண்டிலும் கோவை(கள்) குறைந்து வரும் பண்.

எடு:- கொன்றைக்குழல் - பாலைப்பாணி சுத்தசாவேரி

ச ரி$^2$ ம$^1$ ப த$^2$

இதில் கைக்கிளை (காந்தாரம்) மற்றும் தாரம் (நிஷாதம்) குறைந்து வருவதால் இது குறைச்சுரப்பண்.

## குறை நரம்புப் பண்கள்: 4, 5, 6 சுரங்கள்

கொண்ட பண்கள். அவை:

4 சுரப்பண் - திறத்திறம் (சதுர்த்தம்) (Quadratonic)
5 சுரப்பண் - திறம் (ஔடவம்) (Pentatonic)
6 சுரப்பண் - பண்ணியல் (சாடவம்) (Hexatonic)

## குறைப்புமுறை: → அம்போதரங்கம்

**குன்னூட்டுப் பாட்டு:** *கொடைக்கானல் பகுதியில் வாழும் பழங்குடியினரிடையே காணப் படும் ஆடல் வகைப்பாடல்.*
↑ குன்னூட்டுப்பாட்டு என்பது பண்டைய குன்றத்தின் குறமக்கள் ஆடிய குன்றக்குரவையின் அறாத் தொடர்ச்சியாகலாம். குன்னூட்டுப் பாட்டு – குன்று + ஊட்டு + பாட்டு ஆகலாம்.

**குனித்தல்:**
1. ஆடுதல்
... மருட்பேய் குனிப்ப (கல்லா. 99: 40)
2. **குரல் நடுங்குதல்,** (to quaver, shake, as the voice in singing)

**குனிப்பு:** *வளைந்தாடுதல்; வளைந்தாடும் கூத்து* *(தே. நே: 30/IV)*
*குனி - குனிதல் - வளைதல், வணங்குதல்.*
ஆனந்தத்தேன் சொரியும் குனிப்புடையானுக்கே(திருவாசக. 10: 3)
ஒப்பு:– குனித்த புருவமும் (அப்பர். தேவாரம். 4: 81: 4/4941)

# கூ

**கூசுபிடி; கூச்சுபுடி:** → குச்சிபுடி

**கூட்டக் கூத்தியர்:** *இடைப்பாட்டுக் கூத்தியர்.*

தலைப்பாட்டுக் கூத்தியும் இடைப்பாட்டுக் கூத்தியும்
(சிலப். 14: 156)

இடைப்பாட்டைப் பாடும் கூத்தியும்.. இவர் கூட்டக் கூத்தியர் (மேலது. அடியார்க்.)

**கூட்டி எழூஉதல்:** *உயிர் எழுத்துக்கள் தம் மாத்திரையிலிருந்து நீண்டு ஒலிக்கும்போது அவ்வோசை நீட்சியை ஒலி வடிவில் கூட்டி ஒலித்தல்.*

நீட்டம் வேண்டின் அவ்வளபு உடைய
கூட்டி எழூஉதல் என்மனார் புலவர் (தொ. நூ. 6)

*கூட்டி ஒலிக்கவேண்டும் என்பதற்கு எழூஉதல் என்பதிலேயே அகக்காட்டு அமைந்திருக்கிறது.*

**கூட்டிசைப் பாடல்:** *குழுப் பாடல்; குழுவாகக் கூட்டமாகச் சேர்ந்து பாடும் பாடல். (poly phony); பங்கேற்பாளர் ஒருமித்துப் பாடுதல் இசையில் ஓர் இனிமை பயப்பது.*

வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்க
கொட்டி இசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்
(குயில்பாட்டு. 39–40)

**கூட்டியம்:** → ஆமந்திரிகை

**கூட்டின்னியம்:** → ஆமந்திரிகை

**கூட்டினை:** *இணைக்கை, இரட்டைக்கை.*

மான்தலைக் கரத்தினில் கூட்டினை வயக்கி (கல்லா. 99: 4)

**கூட்டை:** *கூத்துள் ஒருவகை* (அ. நி.)

**கூட்டொலி:** ஒத்து, கேள்வி.

*கேள்வி கூட்டொலி, சுதி கூட்டுகின்ற ஒலி.*

**கூடம்:**

**1. பகைச்சுரம், இசை நிறவாதது.**

செம்பகை ஆர்ப்பே கூடம் அதிர்வே (சிலப். 8: 29)

கூடமெனினும் பகை எனினும் ஒக்கும் (மேலது. அரும்.)

நின்ற நரம்பிற்கு ஆறும் மூன்றும் சென்று பெற நிற்பது கூடமாகும்.
(மேலது அடியார்க். மே)

*ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$*

*0 1 2 3 4 5 6*

*ச - நின்ற நரம்பு*

*0 - 3 ச - க$^1$*

*0 - 6 ச - ம$^2$ ஆறும் மூன்றும் பகை - க$^1$ மற்றும் ம$^2$*

கூடம் _ பகைநரம்பு (மேலது. அரும்)

தன் பகையாகிய ஆறா நரம்பின் இசையில் குன்றித் தன்னோசை மழுங்கல்... மன்னிய இசைவராது மழுங்குதல் கூடமாகும்
(பஞ்சபாரதீயம்)

கூடமென்பது குறியுற விளம்பின் வாய்வதின் வராது மழுங்கிசைப்பதுவே (சிலப் 8: 29 _ 30 அடியார்க். மேற்.)

**2. ஒருவகை இசைமுறை**

*... இயல் புலவரே பொருள்வைப்பார் இசைப்பாணரே கூடம் செய்வார் (இரண்டாம் இராசராசனின் மெய்க்கீர்த்தி / தெ இ. க. 1 7 592)*

*← த இ. வ (கி. பி 901-1300) பக். 168.*

**கூடிசைக் குயிலுவர்:** *சேர்ந்து வாசிக்கும் இசைக் கருவியாளர்.*

கூடிசைக் குயிலுவர் இரு நூற்றெண்மரும் (சிலப். 26: 129)

கூடிசைக் குயிலுவர் கருவியாளரும் (சிலப். 26: 142)

**கூடியாட்டம்:** *கேரளக் கூத்தம்பலங்களில் சாக்கையர்களால் கூடி ஆடப்படும் ஆடல் வடிவு. சேர மன்னன் குலசேகரவர்மனின் 'ஆட்டப் பிரகாரம்' என்ற நூல் இவ்ஆட்டக்கலையை முறைப்படுத்தியுள்ளது. சாக்கியர்களும், அம்பலவாசி நம்பியார் இன ஆண்கள் பெண் வேடமேற்றும் (நங்கையரம்மா) ஆடுகின்றனர். மிழவு (முழவு) எடக்கா (இடக்கை) குழித்தலம் (குழித்தாளம்) முக்கிய இசைக்கருவிகள்.*

↑ பண்டைய சாக்கைக் கூத்து என்பதின் இன்றைய வடிவம் கூடியாட்டமாகலாம்.

**கூடை:**

1. கூடை நடை; மூன்றாம் காலம்; துரித காலம். பாடல், தாளம் என இசைக்கப்படும் இசையின் வேகத்தைக் குறிப்பது. (tempo)

கூடைப்பாடல் சொற்செறிவும், இசைச்செறிவும் உடையது (சிலப் 3: 67 அரும்)

. .கூடைப்பாடல் சொற்செறிவும் இசைச்செறிவும் உடைத்தாகலானும். (சிலப்.3·67. அடியார்க்)

கூடைநடைப் பாடல்: எடு:- இராமநாடகக் கீர்த்தனைப் பாடல் 72, 85.

2. கூடைக்கை, அவிநயக்கை, இரட்டை ஒற்றைக்கை ஒற்றைக்கை, மற்றும் இரட்டை ஒற்றைக்கையாகிய குவித்த கையையும் இது குறிக்கும்.

கூடை செய்தகை வாரத்திற் களைதலும் வாரம் செய்தகை கூடையிற் களைதலும் (சிலப். 3: 21–22)

ஐதுமண்டிலத்தால் கூடை போக்கி (சிலப். 3: 152)

கூடை போக்கி என்றது - தேசிக்கு ஒற்றித்து ஒத்தலும், இரட்டித்து ஒத்தலுமே யாகலின், தேசிக்கூறெல்லாம் ஆடிமுடித்தென்க (மேலது. அரும்)

மான்தலை கரத்தினில் கூட்டினை வயக்கி (கல்லா. 99: 4)

கூட்டினை வயக்கி - கூடையில் வயக்கி என்றும் பாடம் (மேலது உரை)

நாடக மடந்தையர் ஆடரங்கு யாங்கணும்
கூடையில் பொலிந்து கொற்ற வேந்தே (சிலப். 26: 68 – 9)

நாடகமகளிர் ஆடுகின்ற அரங்குகள் எங்கும் கூப்பிய கையுடன் விளங்கி... (மேலது நாட் உரை)

↑ இன்றைய நாட்டியத்தில் அலாரிப்பு (புட்பாஞ்சலி) எனும் தொடக்க வடிவில் கூப்பியகையுடன் அவை வணக்கம் செலுத்துவதைக் காணலாம்.

**கூடைக் கதி:** = கூடை, கூடைநடை, மூன்றாம் காலம்.

கூடைக் கதியாகச் செய்தகை வாரக்கதியில் புகுதாமலும்... (சிலப் 3: 12 - 25 அரும்)

→ கூடை, கூடைநிலம்

**கூடைச் செய்யுள்:** = கூடைப்பாடல்

சொற்செறிவும் இசைச்செறிவும் உடைய வரிப்பாட்டு வகையுள் ஒன்று. இது மூன்றாம் காலத்தில் நடப்பது.

கூடை என்பது கூறுங்காலை: நான்கடியாகி இடையடி மடக்கி, நான்கடியஃகி நடத்தற்கும் உரித்தே (சிலப். 7: 12 - 16 அரும்)

எடு:- அழலணங்கு... சொல்லா வன்றே - இது கூடைச்செய்யுள் (மேலது) ← சிலப். 3:67 உரை

**கூடைநிலம்:** இசையின் நால்வகை நடையில் ஒன்று மூன்றாம் காலம் துரிதகாலம்

கூடை நிலத்தைக் குறைவின்று வளர்த்து (சிலப். 3: 48)

ஓர் உருவை இரட்டிக்கிரட்டி சேர்த்த இடத்து.. (மேலது. உரை)

↑ தண்ணுமை ஆசிரியன் அமைதியில் கூறப்படுவதாலும் இரட்டிக்கிரட்டி என்பதாலும் இது இசையின் நடையைக் குறிக்கின்றது.

→ கூடை[1]

**கூடைப்பாடல்:** → கூடைச்செய்யுள்

**கூத்தக் காணி:** கூத்தர்களுக்கு அளிக்கப்பட்ட நிலம் (ARE,90/1932)

**கூத்தச் சாக்கையர்:** கூத்து நிகழ்த்தும் சாக்கையர் பிரிவினர்.

கொட்டிச்சேதம்... பறையூர் கூத்தச் சாக்கையன் ஆடலின் (சிலப். 28: 75–77)

பறையூரில் கூத்தச் சாக்கையன் ஆடுதலின் மகிழ்ந்தென்க (மேலது. அரும்)

**கூத்தப் பள்ளி:** → பள்ளி

**கூத்தப் பறை:**

கிணை – மருதப்பறை – கூத்தர் பறையுமாம் (சிலப். 13: 148அடியார்க்.)

**கூத்தப் பிள்ளைகள்:** நாட்டிய மாடுவோர்.

கூத்தப் பிள்ளைகள் இருபத்து நால்வோம் (தெ. இ. க. 13 230. த. க. சொ. 202)

**கூத்தம்பலம்:** கோவிலில் உள்ள ஆடல் அரங்கு (TAS.2:143)

**கூத்தர்:** = கோடியர், பொருநர், நாடகியர்,நிருத்தர், கண்ணுளர், வயிரியர், வினைஞர், நடர் , கூத்தாடி.

ஆடல் மற்றும் நாடகம் நிகழ்த்துவோர்

பூம்போது... கூத்தர் ஆடுகளம் கடுக்கும் அகநாட்டையே (புறம். 28: 13 – 14)

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் (தொ. பொ. 88)

பாரதியாவது: கூத்தன் தலைவனாக .. (சிலப் 3: 13 அடியார்க்.)

ஆடு கூத்தராகி எங்கணும் (சிலப்: 26: 228)

ஆடும் கூத்தர் போல் ஆருயிர் ஒரு வழி (சிலப்: 28: 165)

ஆடும் கூத்தர் அணியே போல (மணிமே: 12: 51)

கூத்தராற்றுப்படை- மலைபடுகடாம் (பு. வெ. 9: 29) 2381 சங்கப்பாடல்களில் கூத்தர் என்ற சொல் புறம். 28இல் மட்டுமே வந்துள்ளது. (ச. இ. இ பக். 60)

← திவா. 265; பிங்க; 824

**கூத்தறாத பள்ளி:** → பள்ளி

**கூத்தனார்:** கூத்தர்.

**கூத்தாட்டு:** நடிப்பு.
கூத்தாட்டு அவைக் குழாத்தற்றே (குறள். 332)

**கூத்தாடி:** → கூத்தர்

**கூத்தாடிச்சி:** (நா. வ). கூத்து நடிப்பவள்.

**கூத்தால் பெயர் பெற்ற புலவர்கள்:**
தமிழ்க் கூத்தனார் (புறம். 334)
உறையூர் முதுகூத்தனார் (அகம். 137, 329)
மதுரைத் தமிழ்க் கூத்தன் நாகன் தேவனார் (அகம். 164)
மதுரைக் கூத்தனார் (அகம். 334)
மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார் (அகம். 348; நற். 273)
வேம்பாற்றூர்க் கண்ணன் கூத்தன் (குறுந். 362)
← ப. த. நா பக். 234

**கூத்தால் பெற்ற பெயர்:** சிலம்பில் வேட்டுவ வரியும், குன்றக் குரவையும் கூத்தால் பெற்ற காதைப் பெயர்கள்.
← சிலம்பு. உ. வே. சா. பதிப்பு. பக். 26;27; 328; 457

**கூத்தி :**
1. நாடகக்கணிகை, கூத்தியல் மடந்தை (Actor, Dancer)
ஆடும் கூத்தியர் அணியே போல (மணிமே. 12: 51)
வாளாடு கூத்தியர் கண்போல். . . (நாலடி. 191: 3)
கூத்தியல் மடந்தையர்க்கு எல்லாம் கூறும் (மணிமே. 18: 6)
பன்னிருவர் கூத்திகளை (தெ. இ. க. 4 827, த. க. சொ. 202)
காவல் கணிகையர் - களத்தாடும் கூத்திகள் (சிலப். 5 50 அடியார்க்.)
கண்ணிலி... கணிகை மகள் எனக் கூத்தி மருங்கில் குணம் பழிப்போரும் (பெருங். 1: 35: 163 – 64)
காவல் கணிகையர் ஆடல் கூத்தியர் (சிலப். 5: 50)
ஆடல் கூத்தியர் - அகக்கூத்து முதலியன ஆடுவார் (மேலது. அரும்)
2. வேசை, காவல் கணிகையர் - இராக்கடை வேசையர் (சிலப். 5· 50 அரும்)

**கூத்து:** = கோலம்
ஆடல்; நாடகம், (Dance, Theatre)
குத்துதலும், தாண்டுதலும் கூத்து. இவ்விரு தொழிலாலும் நாட்டியம் மற்றும் கூத்து ஆடப்படுகின்றன. 'தத்' என்ற சொற்கட்டில் குத்துதலும் 'தா' என்ற சொற் கட்டில் தாண்டுதலும் நடைபெறும். குத்துதல் கூத்தில் முதன்மையானது.
எடு:- குத்தடைவு, குத்துமிதி
குத்து > கூத்து (முதல்நிலை நீளல்)
தேசிக்குரிய கால்கள் (அடைவுகள்) 24இல் ஒன்று குத்துதல் மற்றது கட்டுதல்.இவ்விரு கால்களிலும் காலைத்தரையில் குத்தி ஆடுதல் முக்கியமானது. வடுகிற்குரிய கால்கள் 14இல், போக்கல் என்பதில் தரையில் காலைக் குத்தி ஆடுவது முக்கியமானது. வைத்துக் குத்துதல் என்பது சிங்களத்திற்குரிய கால்களுள் ஒன்று.
நடமே, நாடகம், கண்ணுள், நட்டம்
படிதம், ஆடல், தாண்டவம், பரதம்
ஆலுதல், துணங்கை, தூங்கல், பாணி
குரவை, நிருத்தம், கூத்து எனப்படுமே (திவா. 1752)
நடமே, நாடகம், நடனம், நட்டம்
படிதம், மண்டிலம், தாண்டவம், பரத
நிலைய, நிருத்தம், ஆடல், தூக்கு
ஆலுதல், துணங்கை, அவிநயம், இலையம்
பாணி குரவை கூத்தெனப் பகர்வர் (பிங்க. 1444)
நடை, நட்டம், நாடகம், நாட்டியம், நட்டணம்
நிருத்தம், தூக்கு, படிதம், கண்ணுள், தாண்டவம் (சூடா. 9: 48)
... பாட்டும் கொட்டும், கூத்தும் நிகழ்த்தி...(சிலப். 3: 150 அரும்)
. மாதவியுடைய கூத்துக்கும் பாட்டுக்கும்...(சிலப். 3: 159–60 அடியார்க்.)
பெண்ணணி கோலம் பெயர்ந்த பிற்பாடு (சிலப். 13: 1)
... அணிந்த கோலமும் கூத்தும் முடிந்த பின் .. கோலம் எனவே கூத்தும் அடங்கிற்று (மேலது அடியார்க்.)
ஆடுதுங்கூத்தே (பாசுரம். 10: 1: 5)
உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ (மதுரைக். 616)
(முத்தமிழும் விரவியது கூத்து)
நெறியல்லா... குறியொன்றும் இல்லாத கூத்தன்தன் கூத்தை...
(திருவாசகம் – அச்சோப்பதிகம்)
வீழ்க்கைப் பெருங் கருங்கூத்து (கலித். 65: 29)
செருக் குறித்தாரை உவகைக் கூத்தாட்டும் (கலித். 85: 34)
கூத்து என்ற சொல் தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளில் உள்ளது. கூத்து அல்லது ஆடல் (DED. 1570: 290) தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய எல்லா மொழிகளிலும் நடனத்தையும் நாடகத்தையுமே குறித்தது (ப த நா பக் 361)
குரவை - குரவைக்கூத்து (சிலப். 17 கருப்பம். அரும்)
குரவை - குரவை நாடகம் (சிலப். 17 கருப்பம்: அடியார்க்)
← பஞ்ச. பக். 397-400

**கூத்து எழுவகை:** குரவை, கலிநடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை, நகைத்திறச் சுவை (விதூடக்கூத்து; வசைக்கூத்து) அல்லது வெறியாட்டு
எழுவகைக் கூத்தும் இழிகுலத் தோரை ஆட வகுத்தனன்
அகத்தியன் தானே (சிலப். 3: 12 அடியார்க். மேற்.)

**கூத்துக் களரி:** நாடகசாலை, (play house, theatre).

**கூத்துக் காணம்:** = நட்டுவப் பாங்கு.
கூத்துக் கலைஞர்களுக்கு மானியமாகத் தரப்பட்ட நிலம்; (சுந்தர பாண்டியன் - தெருக்கூத்து கட்டுரை - தீராநதி; சூன், 2002)

**கூத்துப் பதினொன்று:** *11 ஆடல்கள். கொடு கொட்டி, பாண்டரங்கம், அல்லியம், மல், துடி, குடை, குடம், பேடு, மரக்கால், பாவை, கடையம்*
பதினோராடலும் பாட்டும் கொட்டும் (சிலப். 3: 14)
பதினோராடலும் பாட்டின் பகுதியும் (சிலப். 6: 66)

**கூத்துப் பாட்டு:** *நாடகப்பாடல்; செந்துறைப் பாடல்* (songs of dance and drama)
*புறநாடகங்களுக்குரிய உருவாவன:*
.. செந்துறை விகற்பங்கள் எல்லாம் (சிலப். 3: 14 அடியார்க்.)
நாடகத் தமிழில் தேவபாணி வருங்கால்.. (சிலப் 6: 35 அடியார்க்.)

**கூத்தும் தாளமும்:** *பலவகைக் கூத்துக்களும் (ஆடல்களும்) தாளத்தை (அல்லது சொற்கட்டை) அடிப்படையாகக் கொண்டவை. இன்றைய பரதமும் அதன் தொடர்ச்சியே.*
. என இவை தாளத்தின் இயல்பினவாகும்(சிலப்.3: 13 அடியார்க் )
*வென்றிக்கூத்தும் வசைக்கூத்தும் தாள இயல்புடையன என்றபடி (மேலது. அடிக்)*

**கூத்துவகை:**
கர்ணம், வித்தம், மலைப்பு, பவுரி
பிரமரி, வீரட்டானம், குனிப்பே
உள்ளாளம், கடகம் என்ன ஒன்பதும்
ஒள்ளிய கூத்தின் விகற்பம் ஆகும் (திவா. 1760)
உம்பிதம், புரியம், இலயம், பரதமும்
அப்பெயர்க்காம் என்று அறைந்தனர் புலவர் (திவா. புது. 257)
பிரமரி, வீரட்டானம், உப்பிதம், மலைப்பு, புரிதம்
இலயம், உள்ளாளனம், கரணம், பரதம் (சூடா. 9: 49)

**கூத்துள் படுதல்:** *கூத்தாடல், ஆடத் தொடங்குதல்.*
கூத்துள் படும் - கூத்தாடும் என்கின்றது (அரும்)
அகவல், தாண்டல், ஆடுதல், நடித்தல், அசைதல், பெயர்தல், அடுத்தல், கூத்தாடல் (பிங்க. 1464)
மற்றும் கூத்தாடலின் பெயர்: –
மாறல் என்பதும் கூறலாகும் (பிங்க. 1465)
குமரிக் கோலத்துக் கூத்துள் படுமே (சிலப். 12: (11)
கூத்துள் படுதல் - தான் கூத்துக்குள் ஒத்தாடுதல் (சிலப். 17 (17) அரும்)
கூத்துள் படுதல் - ஆடத்தொடங்குதல் (மேலது அடியார்க்.)

**கூத்துள் படுவோன்:** *ஆடலாசிரியன், நட்டுவன், ஆடல் தலைவன், கூத்துத் தலைவன்.*
கூத்துள் படுவோன் காட்டிய முறைமையின் (சிலப். 26: 125)

**கூர்ச்சரி:** *பண்களின் ஒன்று (பரத. இராக. 56)*
↑ குர்சரி, குர்ச்சரி இதுவாகலாம்.

**கூர்ந்த பஞ்சமம்:** *மருதயாழ்த் திறவகை (பிங்க.1383) கரகரப் பிரியாவின் கிளைப்பண்.*

**கூர்மக்கை, கூர்மம் : → ஆமைக்கை**

**கூர்மிகை:** *யாழ் வகையுள் ஒன்று (பரத. ஒழிபி. 15)*

**கூரம்:** *யாழ் வகையுள் ஒன்று.*
கூர நாண்குரல் கொம்மென ஒலிப்ப (பரிபா. 19: 44)
கூரத்து உழைதோன்றக் குறிஞ்சியாழ் (பஞ்ச. 22)

**கூவிளங்கனி:** *நேர் நிரை நிரை குறிக்கும் வாய்பாடு (யா. கா. உறுப். 7.உரை)*

**கூவிளங்காய்:** *நேர் நிரை நேர் குறிக்கும் வாய்பாடு (யா. கா. உறுப். 7. உரை)*

**கூவிளந் தண்ணிழல்:** *நேர்நிரை நேர் நிரை குறிக்கும் வாய்பாடு (யா. கா. உறுப். 8 உரை)*

**கூவிளந் தண்பூ:** *நேர் நிரை நேர் நேர் குறிக்கும் வாய்பாடு (யா. கா. உறுப். 8. உரை)*

**கூவிள நறுநிழல்:** *நேர் நிரை நிரை நிரை குறிக்கும் வாய்பாடு (யா கா உறுப் 8. உரை)*

**கூவிள நறும்பூ:** *நேர் நிரை நிரை நேர் குறிக்கும் வாய்பாடு (யா. கா. உறுப். 8. உரை)*

**கூவிளம்:** = கூவிரம், வில்வம், வில்லம், ஆலூரம், கூவிளை, வில்லுவம்.
கொடிஞ்சியும், தேரும், கூவிளமும், கூவிரம் (பிங்க. 3420)
உரிது நாறு... கூவிளம் (குறிஞ். 65)
கூவிளம் ததைந்த கண்ணியன்... (நற். 119: 9)
கூவிள விறகின் ஆக்குவரி நுடங்கல் (புறம். 372: 6)
வில்லம் ஆலூரம் கூவிளம் இவை வில்வப் பேரே (சூடா. 4: 20)
கூவிளம், வில்வம், ஆலூரம், கூவிளை (பிங்க. 2723)
கூவிளங்கண்ணி கொடும்பூண் எழினியும் (புறம். 158: 9)
கூவிளம், வில்லுவம், ஆலூரம், கூவிளை (திவா. 673)
*← செ. ப. அ. 1078*

**கூழை:** *முரசு (அ. நி.)*

**கூழைத்தொடை:** *ஈறிலி கூனடி. அளவடியும் இறுதிச் சீர்க்கணின்றி ஒழிந்தமூன்று*

*சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது*
*(இலக். வி. 723. உரை)*
*(கூழை - குட்டை)*
*← செ. ப. அ. 1079*

**கூறியது கூறல்:** *இயல் தமிழில் கூறியது கூறல் நூல் பிழையாகும்; நூற் குறை; இசைத்தமிழில் கூறியது கூறல் நிறை.*
*(தாள) வட்டணை, வட்டம் (ஸ்தாயி), ஏழு சுரங்கள் எடுப்பு (பல்லவி) அடிகளை மீண்டும் மீண்டும் பாடுதல் என இசையில் அனைத்தும் மீண்டும் மீண்டும் வந்து இனிமை பயப்பது.*

**கூறுபாடல்:** *வாய்ப்பாட்டு,* (vocal music)
கூறுபாடலும், குழலின் பாடலும் (கம்ப. நாட்டுப். 56)

**கூன்:** *தளை பொருந்திவரும் நேரிசை வெண்பாவின் இரண்டாமடி ஈற்றுச்சீராக வரும் தனிச்சொல் போல் அல்லாது மற்றும் செய்யுள் அடியில் இடம்பெறாது செய்யுளுக்கு வெளியே தனியாக வரும் சொல். அதாவது பாடல் அடியில் அடங்காத தனிச்சொல் ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பாவில் வருவது. செய்யுளின் அசையாக, சீராக வரும் உரையின்பாற் பட்ட பகுதி. அடிமுதற் கண் பொருள் பெற நிற்கும் சொல். அல்லது அடியே கூனாகவும் வரும்.*
மாவே, எறிபதத்தான் இடம் காட்ட (புறம். 4: 7)
*(மா என்ற அசை, கூனாக வந்தது)*
சிறுகுடியீரே ! சிறுகுடியீரே!! *(சிலப். 24: 1) என்ற கொச்சகக் கலியுள் ஓரடியே கூனாக வந்தது*
மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅர்?
ஒருதிறம் பாணர் யாழின் தீங்குரல் எழ (பரிபா. 817: 9)
*இதில் முதல் அடி உரைநடையில் உள்ளது. இங்கும் அடியே கூனாக வந்தது.*
அவரே... யானே... (குறுந். 216)
*'அவரே, யானே' என பாடல் தொடக்கத்தே மற்றும் இடையே என முறையாக சீர் கூனாய் வந்தது.*
யானோ தேறேன் **அவர்** பொய் வழங்கலரே (குறுந். 21)
குருகும் உண்டு **தான்** மணந்த ஞான்றே (குறுந். 25)
சான்றோர் அல்லர் **யாம்** மரீஇயோரே (குறுந். 102)
வருந்துக்கில்ல **யாய்** ஓம்பிய நலனே (அகம். 276: 15)
*அவர், தான், யாம், யாய் என்றவை ஆசிரிய அடியின் இடையில் (அசை) கூனாக வந்தவை*
**நீயே,**
வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய அம்பு தெரிதியே (கலித். 7: 9– 10)
*இங்கு* **'நீயே'** *என்ற சீர் கூனாக செய்யுளின் வெளியே வந்தது*
பூத்தலை அறா அப் புனை கொடி முல்லை
**யானே,**
பரிசிலன் மன்னும் அந்தணன் நீயே (புறம். 200)
*யானே என்ற தனிச்சொல் அடியில் அடங்காமல் வந்ததால் 'கூன்' ஆகியது*
*சிலம்பின் 'மங்கல வாழ்த்துப்பாடல்' (மயங்கிசைக் கொச்சகக்கலி) பெற்றகூன்களாவன:*
*ஆங்கு(13,30), அதனால்(20), அவளுந்தான்(25), அவனுந்தான்(35), அவரை(40), அவ்வழி(45).*
*வஞ்சிப்பாவில், அடிமுதலில் கூன் அசையாக வரும்:*
வாள், வலம்தர மறுப்பட்டன - *வாள் - நேர் அசை - கூனாக வந்தது.*
அடி, அதர்சேறலின் அகம் சிவந்தன -*அடி நிரை அசை - கூனாக வந்தது.*
வண்டு, மலர் சேர்ந்து வரி பாடின - *வண்டு - நேர்பு அசை - கூனாக வந்தது*
களிறு, கதவெறியாச் சிவந்துராய் - *களிறு - நிரைபு அசை - கூனாக வந்தது.* (புறம். 4)
*← த. இ. பே. பக். 586/15; அடை*

# கெ

# கே

**கெச்சுக்கட்டை மத்தளம்:** = தக்குக்கட்டை மத்தளம்.
ம[1], ம[2], ப, த[1] (4, 4½, 5, 5½ ) என்ற ஒத்து அளவில் (சுருதிக் கட்டை), ஒத்து (சுருதி) சேர்க்கப்பட்ட மத்தளம் (மிருதங்கம்); மகளிர் பாடும்போது துணை வாத்தியமாகப் பயன் படும் நீளம் குறைந்த மத்தளம் (மகளிர்குரல் அளவு இவ்வாறான சுருதிக்கட்டையில் அமைந்திருக்கும்).

**கெச்சுசட்சம்:** → உச்சக்குரல், இரட்டித்த குரல்

**கெச்சைநடை:** கூத்தின் விரைந்த நடை (A quick or hurried step in dancing)
← செ. ப. அ. 1083

**கெண்டை:** = கண்டை
நாகசுர (மற்றும் ஒத்து நாகசுர)த்துடன் சீவாளியை இணைக்கும் பகுதி.

**கெத்:** → கெத்துவாத்தியம்

**கெத்து:** → கெத்துவாத்தியம்

**கெத்து வாத்தியம்:** = கெத், கெத்து.
நரம்புக் கருவியான தாளக்கருவி. இதன் தந்திகளைச் சிறுகோலில் தட்டித் தாளத்திற்கு முழக்குவர். புதுக்கோட்டை ஆவுடையார் கோவிலில் இக்கருவி பயன்பாட்டில் உள்ளது.
← த. ப. வ. 340-41/III; த க. க. 235/II

**கெஜ்ஜை:** → சலங்கை

**கேகயப்புள்:** → அசுணம்

**கேகயம்:** பண்களின் ஒன்று, மயில், அசுணமா
கேகயம் மஞ்ஞை, ஓர் பண், அசுணமா (சூடா. 11: 18)

**கேகருவா:** 4 அளவுடைய இந்துத்தானித் தாளவகை.

**கேட்பித்தல்:** திருப்பதியம் (திருப்பதிகம்) விண்ணப்பம் செய்தல்.
நாவலூரர் தம் முன்பு நன்மை விளங்கக் கேட்பித்தார்
(பெரியபு. கழறிற். 69/3821)

**கேதார கௌளம்:** = கேதார கௌளை.
பண்களில் ஒன்று (பரத. இராக. 55)
பண் காந்தார பஞ்சமம்; தேவார ஓதுவார் மரபில் கேதார கௌளையாகப் பாடப்படுகின்றது.

**கேதாரகௌளை:** → கேதார கௌளம்

**கேதார நாட்டை:**
பண்களில் ஒன்று (பரத. இராக. 102)

**கேதாரம்:** பண்களில் ஒன்று (பரத. இராக. 102)

**கேதாளி:** குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று
நட்டபாடை.... கேதாளி... குறிஞ்சி யாழ்த்திறமாகக் கூறுவர்
(பிங்க. 1382)

**கேய சரித்திரம்:** உரைநடைப் பாட்டுக் கதை.
உரையாலும் பாட்டாலும் விரித்துச் சொல்லக் கூடிய வடிவிலான கதை. ஒருவகை உரைநடைப்பாட்டால் நடப்பது.
எடு:- நாயன்மார் வரலாறு - இராமசாமி சிவன்
← த. க. க 201/II; தெ. இ. அ/II

**கேயப்புள்:** → அசுணம்

**கேயம்:** இசைப்பாட்டு (திவா: 1866) வரி...
கேயம்... இசைப்பாட்டு (சூடா: 10: 32)
கேயத்தீங்குழல் ஊதிற்றும் (பாசுரம். 10: 4: 2)
*ஒப்பு:- 1. கேய நாடகம் (இசைநாடகம், வரிக்கூத்து)*
*2. வாக்கேயக்காரர் (பாடல் எழுதி இசையமைத்தவர்)*
*(வாக்கு - பாடல்; கேயம் - இசை)*
↑ இயம் என்ற சொல்லிலிருந்து கேயம் வந்திருக்கலாம்.

**கேரளப் பாணர்:** *இவர்கள் பல பிரிவினர். திருவரங்கப் பாணன், மீன்பிடிப் பாணன், குடை கட்டிப் பாணன், புள்ளுவப் பாணன், மன்னான், மாரார்.↑*
சோபானம் பாடும் மாரார் என்பவர்களும் பாணர் பிரிவினரே.
*எடு:- சட்கால கோவிந்த மாரார்*

**கேலகன்:** *கழைக்கூத்தாடி* *(யாழ் அக.)*

**கேலிக்கூத்து:** *கேலி நாடகம்,* (comedy, farce)
*← செ. ப அ. பிற 243.*

**கேள்வி:**
1. ஒத்து, சுருதி, (microtoned interval or pitch difference) *நுட்பமான சுர இடைவெளி; சுரத்துடிப்பு வேறுபாடு.*
நாடகங்கண்டு பாடற் பான்மையில் கேள்வி இன்னிசையோடு (மணிமே. 25: 82– 3)
... கேள்விபோகாக் குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின் (மலைபடு. 22– 23)
கேள்வி போகிய நீள்விசித் தொடையல் (பொருந. 18)
கிளை ஆய்ந்து பண்ணிய கேள்வி யாழ்ப்பாணனும் (பு. வெ. 7)
அணிமுலை தடத்தில் ஒன்றி வெப்பரால் தட்பம் ஆற்றி (சீவக. 1746)
தன்மையில் திரிந்த இன்குரல் தீந்தொடை
கொம்மை வருமுலை வெம்மையில் தடைஇ (நெடுநல். 68– 9)
முலைவேதின் ஒற்றி முயங்கிப் பொதிவேம் (கலித். 106: 35)
கொம்மை வரிமுலை வெம்மை வேதுஉறீஇ (சிலப். 28: 16)
தடமுலை வேதுகொண்டு ஒற்றியும் (கலிங். கடை. 13)
↑ காதால் கேட்டு ஒத்து (சுருதி) சேர்க்கப்படுவதால் கேள்வி என்ற பெயர்.
சில் செவித்து ஆகிய கேள்வி (புறம். 68: 3)

2. பண்
கோடி விளரி மேற்செம்பாலை என
நீடிக்கிடந்த கேள்வி... (சிலப். 3: 88– 9)

3. யாழ்
ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி (சிலப். 3: 70)
தொடையமை கேள்வி இடவயின் தழீஇ (பெரும்பாண். 15– 16)

4. இசை
பாடுதுறை முற்றிய பயன் தெரி கேள்வி (சிறுபாண். 228)

**கேள்வி கூட்டொலி:** *குரல் எல்லை,* (scale), *சுருதிக் கட்டை*
*பாடல் பாடும் குரல் திறன்:*
*பெண்கள்: 4 - 7 கட்டை (ம$^1$ - நி$^2$)*
*ஆண்கள்: 1 - 3 கட்டை (ச - க$^2$)*
*(கட்டை - ஒத்திசைப் பெட்டகத்தின் (ஆர்மோனியம்) சுரக்கட்டை)* *← த. வ. 42*

**கேள்வி பதினான்கு:** *யாழில் சுர (கேள்வி) மெட்டுக்கள் (புரிநரம்பு) பதினான்கு கட்டியது*

*7 சுரமுறை: ம ப த நி   ச ரி க ம ப த நி   ச் ரி க்*

*4   7   3 = 14*

ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி (சிலப். 3: 70)
மேலது உழை கீழது கைக்கிளை (சிலப். 3: 80)
பிழையா மரபின் ஈரேழு கோவையை
உழை முதல் கைக்கிளை இறுவாய்க்கட்டி (சிலப். 8: 32)
உழை முதல் கைக்கிளை இறுவாய்க்கட்டி (சிலப். 13: 109)
பாலை ஈரேழு கோத்த பண்ணியங்கருவி வீக்கி (பெரியபு. திருநீல. யாழ். 2)
*14 புரிநரம்பு என்பது 7 சுர முறையில் கூறியது; 12 சுர முறையில் 24 புரிநரம்பு யாழில் கட்டப்பட்டது.*

*ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$ - 7*

*ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$ - 12*

*ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ - 5*

*= 24*

*← ஆசிரியர் கட்டுரை - யாழ் நூல். பக்.* XIII

**கேளிக்கை:** *மகளிர் நடனம்* *(உ. நி.)*
கோவில் திருமண மண்டபத்தில் தெய்வத் திருமேனி வீற்றிருக்கும்போது ஆடல் மகள் ஆடும் நாட்டிய வகை.

# கை

**கை:** = நளிநயக்கை, அவிநயக்கை, கைகாட்டுமுறை, கைஅடையாளம், கைமுத்திரை, ஹஸ்தம், ஹஸ்த முத்திரை (Gesture)

*உள்ளத்துச் சுவையைக் கைமுறையில் காட்டும் கைச்சின்னம்; கை அடையாளம் காட்டி பொருள் உணர்த்துவது. இவை நான்கு வகையன:*
*பிண்டி, பிணையல், எழிற்கை, தொழிற்கை.*

**'. . . பிண்டி, பிணையல், எழிற்கை, தொழிற்கை என்னும் அந்த நான்கினையும்'** (சிலப். 3: 12_ 25 உரை)

→ கைகாட்டுமுறை

**கை அடையாளம்:** = ஹஸ்த முத்திரை

*நாட்டியத்தில் கையால் செய்யப்படும் அவிநயம்,* (Gesture)

**ஹஸ்த முத்திரையாலே தலைகாட்டா நின்றாள்** (ஈடு. 4: 4: 1)

**கைக்கிளை:**

1. *இசையின் ஏழு சுரங்களில் மூன்றாம் சுரம் (காந்தாரம்) - 'க'* (சிலப் 3: 74, 75, 80)

**ஒரு தலைக்காமமும் யாழில் ஓர் நரம்பும்**
**தெரியின் கைக்கிளை எனும் பெயர் சிவணும்** (திவா. 2254)

2. *கை* **என்பது சிறுமை பற்றி வரும்** (தொ. பொ அகத். இளம்)

*கிளை - உறவு. கைக்கிளை - சிறுமை உறவு.*
*இளி (ப), உழை* **(ம$^1$)***யை அடுத்து 'ச' வுடன் சேருவதில் சிறுமையளவு உறவு கொள்வது* **க$^2$** *என்ற வன் கைக்கிளைச்சுரம். எனவே கைக்கிளை என்ற பெயர்.*

ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப
0 1 2 3 4 5 6 7

*0 - 7 - ச - ப - இசையில் முதல் நிலை ஒன்றிப்பு*
*0 - 5 - ச, ம$^1$ - இசையில் இரண்டாம் நிலை ஒன்றிப்பு*
*0 - 4 - ச க$^2$ - இசையில் மூன்றாம் நிலை ஒன்றிப்பு*

**கைக்கிளை குரலாகச் செவ்வழி:**

*தமிழிசையின் முதற்பாலையான செம்பாலை (அரிகாம்போதி) யின் கைக்கிளை குரலாகப் பண்ணுப்பெயர்த்தால் கிடைப்பது செவ்வழி (இருமத்திமத்தோடி); இது ஈர் உழைகளும் (ம$^1$ ம$^2$) கொண்ட பாலை.*

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| செவ்வழி | த$^1$ | | நி$^1$ | | ச | ரி$^1$ | | க$^1$ | | ம$^1$ | ம$^2$ | |

*செவ்வழி - ச ரி$^1$ க$^1$ ம$^1$ ம$^2$ த$^1$ நி$^1$*

**கைக்கிளை குரலாயது செவ்வழிப்பாலை** (சிலப் 17 (13) அடியார்க்.)

*கைக்கிளை (காந்தாரம்) - க$^2$; குரல் (ஷட்ஜம்) - ச*

**கைக்கிளை குரலாகப் படுமலை:** *மேற்செம் பாலை (கல்யாணி) யின் கைக்கிளை (க$^2$ -காந்தாரம்) குரலாக (ச - ஷட்ஜம்) பண்ணுப் பெயர்த்தால் கிடைப்பது படுமலைப்பாலை (நடபைரவி).*

| | * | | * | | * | | * | * | | * | | * |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மேற்செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| படுமலைப்பாலை | த$^1$ | | நி$^1$ | | ச | | ரி$^2$ | க$^1$ | | ம$^1$ | | ப |

*படுமலைப்பாலை - ச ரி$^2$ க$^1$ ம$^1$ ப த$^1$ நி$^1$*

**கைக்கிளை குரலாகப் படுமலை...** (சிலப். 3: 90அரும்)

**கைக்கிளை மருட்பா:** *முதலிரு அடிகளும் நேரிசை வெண்பா அடிகளாலும், பின்னை ஈரடிகள் ஆசிரியத் தாலும் வரும் பாவகை.*

எடு:– **அம்புந்து கண்ணிமைக்கும் ஆன நுதல் வியர்க்கும்**
**வம்புந்து கோதைமலர் வாடும் – சம்பந்தன்**
**காமரு கழுமலம் அனையாள்**
**ஆமிவள் அணங்கலள் அடிநிலத்தனவே** (தேவா. 11: 39: 42)

*← பா பா. 132; செ. ப. அ. பிற். 244*

**கைக்கூத்து:** *நாடகக்கூத்து* (சிலப். 3: 13 அரும்; உரை (பிம்)

*← உ. வே. சா. சிலம்பு. பக். 739*

**கைகாட்டுமுறை:** = கைவினை, கைத்தொழில், *அவிநயம். ஆடலில் காட்டப்படும் முத்திரை.*

**வா எனக் கூறுவென் போலக்காட்டி** (கலித். 47)

↑ **சதிர் மரபில் கைமுத்திரையானது கைகாட்டுமுறை என்று அழைக்கப்படுகிறது.**

*← நித்திய சுமங்கலி 136,* → **கை**

**கைகொட்டிக்களி:** *தமிழகக் கும்மியைப் போன்ற, கேரள மகளிர் கைகொட்டி ஆடும் நாட்டார் ஆடல் வகை.*

**கைகோத்தாடும் கூத்து:** குரவை; ஆடுமகளிர் தங்கள் கைகளைக் கோத்து ஆடுதல்
குரவைக் கூத்தே கைகோத்தாடல் (சிலப். 5: 70 அரும்)
குரவை - கைக்கோத்தாடும் கூத்து (மேலது. அடியார்க்.)
அவர் தாம் செந்நிலை மண்டிலத்தால் கற்கடகக் கைகோத்து (சிலப். 17: (17)

**கைச்சிலம்பு:** =பூசாரி கைச்சிலம்பு,சிரட்டைச்சிலம்பு நீள் வட்ட வடிவமான, உட்கூடுடைய பரல்கள் நிறைந்த ஒருவகைச் சிலம்பு. இரு கைகளிலும் இச்சிலம்பை ஏந்தி ஆட்டும்போது ஒருவகைத் தாள இலயத்துடன் கூடிய இனிய ஓசை எழும் மாரியம்மன் விழாக்களிலும் கரகாட்டத்திலும் பயன்படுகிறது

**கைசகி நிஷாதம்:** → மென்தாரம்

**கைசிக ஏகாதசி:** திருக்குறுங்குடியில் நம்பாடுவான் என்ற பாணன் கைசிகப்பண் பாடுவதில் வல்லவன். இப்பண் பாடியே திருமாலைத் துதித்து வந்தான் பிரம்ம இராக்கதனால் பிடிக்கப்பட்டு மீண்ட பாணனின் நினைவாக, பாணன் கைசிகப் பண்பாடிய கார்த்திகை மாத வளர்பிறை ஏகாதசியானது கைசிக ஏகாதசி விழாவாக வைணவ மரபில் கொண்டாடப்படுகிறது. இது மக்கட் சமூகம் ஒரு பண்ணிற்கு வைத்திருந்த ஏற்றத்தைக் காட்டும். இச்செய்தி கைசிக புராணம் என்ற வடமொழி நூலுள் விரிவாகச் சொல்லப் பட்டுள்ளது

**கைசிகம்:** = கௌசிகம், கவுசிகம், கோசிகம், கயிசிகை (நட)பயிரவி, படுமலைப்பாலை, யாமயாழ்.
தேவாரப் பண்களுள் ஒன்று
காலமாறாத... கவுட பயிரவி... கயிசிகை
(திருப்புகழ் பூதவேதாள வகுப்பு)
... கவுசிகத்துக் கூறும் வகை சொல்லிரண்டாக்கி
(திருமுறைகண்ட. 37)
↑பயிரவி என்ற இப்பண் முன் ஒட்டு (நட)ப் பெற்று நடபைரவியானது. இன்று பயிரவி (பைரவி) என்ற பெயர் வேறொரு பண்ணிற்கு ஆகி வழங்குகின்றது.
← பரத. இராக. 56

**கைசிகன்:** நம்பாடுவான். கைசிகம் (கௌசிகம்) என்ற பண் பாடி கார்வண்ணனைத் துதித்தவன்
(பாசுர வியாக். பக்.102)
← செ. ப. அ. பி. ற். 245, →கைசிக ஏகாதசி

**கைசிகி:** = கைசிகி விருத்தி
நால்வகை (சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி) நாடக விருத்தியுள் ஒன்று; தேசி நாட்டிய வகை.
கைசிகியாவது காமம் பொருளாகக் காமுகராகிய மக்கள் தலைவராக வருவது (சிலப் 3: 13 அடியார்க் & நாட் உரை. பக். 80)
"I have prescribed a four fold classification of the dramatic performance attached to (four) different styles.(Different) countries are attached to performance which relate to the styles such as Verbal (bharati), the Grand (sattvadi), the Graceful (Kaisiki), and the Violent (arabati). Because of this four Local usages develop, and perfomances (following them) originate`` - slogam: 36: chap: 14.
Daksinatya Local usage:-
``Now (it is said) on this connection... that the Southern (countries) favour various kinds of dance, song and instrumental music, an abundance of the Graceful (kaisiki) style, and clever and graceful gestures, they are as follows:- Kosala... **Dramida**, Andhra, Maha - vainna and vanavasika which lie between the southern ocean and the vindhya (mountain) are always to take to the Daksinatya Local Usages`` - slogam: 38 - 39; chap:14.
The Natyasastra - Bharata Muni. Trans. by Manomohan Ghosh P 197 - 198.
Local Usage - வட்டார வழக்கு, தேசி
Dramida - திராவிடம் (தமிழ்நாடு)
Daksinatya Local Usage - தென்னக வட்டார வழக்கு; தமிழக வட்டார வழக்கு.

**கைசிகி நிசாதம்:** → மென்தாரம்

**கைசிகிவிருத்தி:** → கைசிகி

**கைத்தாளம்:**
1. சிங்கி, சாலர், சாலரா, (cymbals)
ஓரணை கைத்தாளமுமிரண்டு காகாளமும்
(TAS 2. பக். 173-207) (த க. சொ 207)
கொக்கரை கைத்தாள மொந்தை (தேவா. 965: 7)
2. கையால் போடும் தாளம், பாணித்தாளம்
செத்தவர் எழுவார் என்று கைத்தாளம் போடு
(அருட்பா. 6: நாமாவ. 161)
→ அடித்தாளம்

**கைத்திரி:** துடி, உடுக்கை, இடக்கை
இடைசுருங்கு பறை போன்ற வடிவுடைய இசைக்கருவி. இடக்கையால் கயிற்றை அழுத்தி ஒலியைத் திரித்து (சுருதி மாற்றி) இயக்கப்படுவதால் கைத்திரி.
கயந்தலை அடியெனக் கயிறமை கைத்திரி (கல்லா. 8: 19)
குழையுடல் தலைவிரி கைத்திரி கறங்க (கல்லா. 8: 12)
(இங்கு கைத்திரி என்பது துடி)
யானைக்கன்றின் அடிபோன்று பரந்த கண்களை யுடைய கயிறுகள் அமைந்த துடி.. கையினால் ஒலியைத் திரித்தலால் கைத்திரி என்று பெயராயிற்று.
(மேலது. உரை)

**கைநிலை:** = கைகாட்டுமுறை
கைஅவிநயம், அவிநயக்கை.

**கைம்மணி:** = கைய்ம்மணி, வட்டிகை, படலிகை, தூபமணி, பரந்த வட்டம், இசைமணி.

இசைமணி எறிந்து காஞ்சிபாடி (புறம். 281: 5)
கைம்மணிச் சீரன்றிச் சீர்அறியாக் கம்பநாடன் சொன்ன மும்மணிக் கோவை முதற்சீர்பிழை. . . ( கம்பன்மீது வாணியன் தாதன் பாடிய அங்கதம்)
கரடிகைத் தொகுதியுங் கைம்மணிப் பகுதியு (தெ. இ. க.7 863. த. க. சொ. 208)
சேகண்டிகை ஒன்றும் காளம் இரண்டும் கைம்மணி ஒன்றுமாக (தெ. இ. க. 3 128)
கைய்ம்மணி ஒன்றும். (தெ. இ. க. 23 258)
(பரந்த) வட்டிகை, கைம்மணி, படலிகை (திவா. 1224)
கைம்மணி தூபமணி (திவா. 1225 புதுநூற்பா. 95)
படலிகை, வட்டம், தூபமணி (பிங்க. 1260 & 1263)
தூபமணியின் பெயர்; படலிகை, பரந்த வட்டம் (சூடா. 7: 34 & 35)

**கைமுத்திரை:** அவிநயம், நாட்டியக் கைவினைகள், (Hand gesture) (ஹஸ்தம்)
நாட்டியத்தில் பாடப்படும் பாடலிலுள்ள பொருளைக் கையால் (கைவிரல்) அடையாள மிட்டுக் காட்டுதல்
→ கை, கைகாட்டுமுறை

**கைம்முறை:** நாட்டியம், (Dance)
நின்று பண்ணும் கைம்முறை தப்பா (பணவிடு. 417)
← செ ப அ. பி ற். 246

**கைய்ம்மணி:** → கைமணி

**கையறம்:** கையறுநிலைப் பாடல், சரமகவி, இரங்கற்பா (Elegy).

**கையறுநிலை:** இறந்துபட்ட வீரனைப் புலவர்கள் கையற்ற நிலையில் பாடும் பாடல்
புறநானூற்றில் 43 கையறுநிலைப் பாடல்கள் உள்ளன.
முற்பட்டவை : 65; 112-20; 217 - 27; 239 - 45 = 37
ஏனையவை : 260 -1; 263 - 5; 270 = 6
← த. வீ. க. பக். 39, → கையறம் ; இரங்கற்பா

**கையறுநிலைப்பாடல்:** → கையறுநிலை

**கையூழ்:** இசையின் எண் வகை எழால்களுள் ஒன்று; யாழ்த்தொழிலுமாம். ஓரிரு சுரங்களை இடையே விட்டிசையாக விடுத்து ஒலிப்பது. பல்வேறு ஓசைகளாகிய நிறங்களை மலரச் செய்வது கையூழ்.
கை - கரம், ஊழ் - முறை
நிக்ரீ நிரீநி - கநிதம - ரிநிதம என்னும் கல்யாணிப் பண் இசைப்பு (ஆளத்தி) கையூழ் ஆகும்.
கையூழ் என்பது... இன்பமும் சுவையும் செவ்விதில் தோன்ற...
பாற்படத்தோன்றும் பகுதித்தாகும் (சிலப். 7: 5–8 அரும்)
எடு:-
(இசைப்பயிற்சியில்) - தாண்டு வரிசை (தாட்டுவரிசை)
← த. க க. 293

**கைலாசப்பாடல்:** → ஒப்பாரி

**கைவட்டணை:** கையால்செய்யும் அவிநயம்
(சீவக. 1257: உரை)

**கைவழி:** சீறியாழ்.
சிறிய அளவினதாகவும், எளிதாக எடுத்துச் செல்லவும், இரு கைகளிலும் ஏந்தி வாசிக்கப்படவும் ஏதுவான சிறிய, கையடக்கமான யாழ் (portable lute, handy yal).
காலை கைவழி மருங்கின் செவ்வழி, பண்ணி (புறம். 149: 3 –4)
. கையகத்து எப்பொழுதும் இருத்தலான் யாழைக் கைவழி என்றார் ஆகுபெயரான் (பழைய உரை)
பாணர் கையது பணி தொடை நரம்பின் (பதிற். 57: 7)
ஒப்பு:- 'பாணர் கைவழி' - வரகுண பாண்டியரின் யாழ் ஆய்வுப் பெருநூல்
→ கைவீணை

**கைவாரிகள்:** = சூதர்.
நின்றேத்துவார்; நின்றுகொண்டு மன்னனைப் புகழ்ந்து வாழ்த்துவோர்.
சூதர் மாகதர் வேதாளிக ரொடு (சிலப். 5: 48)
சூதர் கைவாரிகள்; நின்றேத்துவார் (மேலது. அரும்)

**கைவீணை:** ஒருவகை நரம்புக்கருவி
கைவீணை முழங்க (கொண்டல்விடு தூது. 511)
காணும் இசை ராகங் கைத்தாளம் மத்தளம்
கைவீணை பலகை தித்தி வேணுசுரம் (வி. வி. தூ. கண்ணி 407)
↑ கைவழி என்றது பின்னர் கைவீணை ஆகியிருக்கலாம்.
← செ. ப அ. 1123 ; → கைவழி

# கொ

**கொக்கரி:** கொக்கரை, கொருக்கலி.

காணிக்காரர்களால் இறைச்சடங்கில் இசைக்கப் படும், விட்டிசைக்கும் இசைக்கருவி.

விட்டிசைப்பன கொக்கரை (தேவா. 7: 49: 6/ 7727)
கொக்கரையோடு பாடல் உடையான் (தேவா. 3: 59: 4)
குடமுழவம் கொக்கரை வீணைகுழல் யாழ் (ஆதிஉலா)
தாளமலி கொக்கரை (தேவா. 11:41: 7)
கொக்கரையுடையான் குடமூக்கிலே (தேவா. 5: 28: 4)
உருள் வாய்க் கொக்கரை உம்பர் நாட்டு ஒலிக்க (கல்லா. 85: 25)

**கொக்கரை:**→ கொக்கரி

**கொச்சக ஒருபோகு:** ஒருபோகு கொச்சகக் கலிப்பா; தரவு, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் முதலிய கலிப்பா உறுப்புகள் குறைந்தும் வரிசை பிறழ்ந்ததுமான ஒரு போக்கில், நெடுமையாக வருவது கொச்சக ஒருபோகு.

எ-டு:-

1. சிலம்பு, துன்பமாலை.
2. நம்பியாண்டார் நம்பியின் ஆளுடைய பிள்ளை யார் திருக்கலம்பகம்.
3. சீவகசிந்தாமணி: பாடல் 565-80; 648-50; 652-3.

மலர்மிசை... இது எண்சீரான் வந்த கொச்சக ஒருபோகு (சிலப். 6. 38 உரை)

கலித்தொகையின் 18 பாடல்கள் கொச்சக ஒரு போகு.

| | |
|---|---|
| கடவுள் வாழ்த்து | 1 |
| பாலைக் கலி | 19, 21, 33 |
| குறிஞ்சிக் கலி | 54, 62 |
| மருதக் கலி | 68, 85 |
| நெய்தற் கலி | 118, 119, 120, 122, 125,129, 130, 133, 148, 149 |

தரவின்றாகித் தாழிசை பெற்றும். . . கொச்சக ஒருபோகு ஆகும் என்ப (தொ. செ. 148)
கொச்சகம் இழத்தலின் ஒருபோகு ஆயிற்று (பேரா)

போகு - நெடுமை

புதவம் பல உள போகு இடைகழியன (சிலப். 10: 119)

**கொச்சகக் கலி:** தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகியலடி பெற்று வரும் கலிப்பா வகை.

எடு:- சிலம்பின் மங்கல வாழ்த்துப் பாடல்.

.. இஃது ஆசிரியப்பாவால் வாராது கொச்சகக் கலியால் வருதலானும் (சிலப்: பதிகம். 62_ 3 அடியார்க்.)

**கொச்சகச் சார்த்து:** முகச்சார்த்து, முரிச்சார்த்து, கொச்சகச் சார்த்து என சார்த்து மூவகைப்படும். கொச்சகக் கலி போன்று முடிவது.

**கொச்சகம்:** = முகநிலை, எருத்து, கொச்சகக் கலிப்பா.

ஒரு பொருள் மேல் மூன்றும் அதற்கு மேலும் அடுக்காகப் பாடல் வருவது; தரவு, தரவிணை, சில்தாழிசை, பல்தாழிசை, மயங்கிசை என்ற ஐம்பிரிவுடைய கலிப்பாவகை. ஐஞ்சீரடுக்கி வருவனவும் ஆசிரிய அடி, வெண்பாஅடி, வஞ்சியடி, கலியடி, சொற்சீரடி, முடுகியலடி ஆகிய அறுவகை அடியானும் அமைந்த பாக்களை உறுப்பாக உடைத்தாகி வெண்பா இயலாய்ப் புலப்படத் தோன்றுவது. (தொ. செ. 117 இளம்)

எடு:- சிலம்பு கானல் வரிப்பாடல்கள்.

← யா. கா. செய். 12; யா. வி. 81

**கொச்சகக்கலிப்பா:**→ கொச்சகம்

**கொச்சக வரி:** கொச்சகக் கலிப்பாவால் பாடப் பட்ட இசைப்பாடல்; யாப்பு மற்றும் இசைப் பாடலால் பெற்ற பெயர்.

**கொட்டாட்டப் பாட்டு:** = நிருத்த கீத வாச்சியம் கொட்டும் ஆட்டும் பாட்டும்; தாளமும் ஆடலும் பாடலும்

கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானை (தேவா. 7: 30: 3)
கொட்டாட்டுப் பாட்டொலி யோவாத் துறையூர் (தேவா. 7: 13: 6)
பாடலொடு இயைந்த ஆடல் பண்ணமைக்கருவி மூன்றும் (சீவக. 1256)

கொட்டு - தாளம்; ஆட்டு - ஆடல்.

## கொட்டாட்டு:
தாளத்திற்கு ஆடும் ஆடல்; சொக்கம் (தனித்த நட்டம், சுத்த நிருத்தம்). தாளத்திற்கு, சொற் கட்டுகளுக்கு ஆடும் நாட்டியம்.

கொட்டாட்டுப் பாட்டாகி (தேவா. 7: 30: 3)
கொட்டாட்டுப் பூ சாந்தம் (தக்க. 114 உரை)

*கொட்டு - தாளம்; ஆட்டு - ஆடல்.*

## கொட்டி:
**1. கொடுகொட்டி, கொடுங்கொட்டி, கொட்டிச் சேதம்.**

*11 ஆடலில் ஒன்று. திரிபுரம் எரித்தபின் விரிசடைக் கடவுள் (சிவபெருமான்) ஆடியது.*

... அல்லியம் முதலாகக் கொடுகொட்டி ஈறாகக் கிடந்த பதினொரு கூத்துக்களும்... (சிலப். 3: 12 _ 25 அரும்)
உமையவள் ஒரு திறனாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும் (சிலப். 6: 42 – 3)
உமையவள் ஒரு திறனாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம் (சிலப். 28: 74 – 75)
கொட்டி கொடு விடையோன் ஆடிற்று(சிலப் 3· 14 அடியார்க் )
படுபறை பல இயம்பப் பல்லுருவம் பெயர்த்து நீ கொடுகொட்டி ஆடுங்கால் (கலித். கடவுள் வாழ்த்து)
கொடுகொட்டிக்குக் குறியடுத்து எடுக்கும்
புங்கவம், வாரம், புடை, நிலை பொறுத்து (கல்லா. 99: 9 – 10)
புங்கவமும், வாரமும், புடையும், நிலையும், ஆகிய நான்கு உறுப்புக்களையும் மேற்கொண்டு என (மேலது. உரை)
*கொடு - கடுமை* (DED 1710)
*கொட்டி என்பது தாள அலகு* (DED 1717)

**2. தாளம்.** (Time measure)

கொண்ட பாணி, கொடுகொட்டி தாளங்கள் (தேவா. 5: 92: 1)
கொட்டி அமைந்தமையாப் பாடலும் இன்னாதன (திரிகடுகம். 58)
*(தாளத்தில் அமையாத பாடல் இனிமை அற்றது)*

**3. ஓர் இசைக்கருவி**

*கொட்டி, சகடை, உவைச்சு, முத்திரைச் சங்கு (தெ. இ. க. 2 66)*
குடமுழவம் கொடு கொட்டி குழலும் ஓங்க (தேவா. 225: 2)
கொடுகொட்டியோர் வீணை உடையவனே
(தேவா. 7 திருவஞ்சமாக். 9)
விட்டிசைப்பன கொக்கரை கொடுகொட்டி தத்தகளம்
(தேவா. 7 திருமுருகன் பூண்டி. 6)

↑ கிரிக்கட்டி என்ற தாளக்கருவியின் பண்டையப் பெயர் கொடுகொட்டி.

## கொட்டிகள்:
இசைக்கருவியாளர்

*தட்டழி கொட்டிகளுக்குப்பங்கொன்றும் (தெ. இ. க. 297)*
*தட்டளி கொட்டிகளுக்குக் கொற்று நெல்லு (தெ. இ. க 14 164) (த.க.சொ. 275)*

## கொட்டிச்சேதம்: → கொட்டி

## கொட்டி மத்தளம்:
பெரிய மத்தளம்.

*கொட்டி மத்தளம் வாசிப்பான் (தெ. இ. க.2 254)*
*கொட்டி மத்தளம் வாசிக்கும் குணப்புகழ் (தெ. இ. க. 2. 65: த. க. சொ. 210)*

## கொட்டின் அளவு:
*தாள அளவு; அரை மாத்திரையுடையது. இதன் வடிவு 'க'.*
*அவற்றுள் கொட்டென்பது அரைமாத்திரை. வடிவு 'க' (சிலப். 14: 150 & 3: 16 உரை)*

## கொட்டு:
1. தோல்கருவிகளை முழக்குதல், அடித்தல், (drum beat) தாளம் கொட்டுதல்.

மள்ளர் கொட்டின் மஞ்ஞை ஆலும் (ஐங். 371)
*இத்தேவர்க்கு கொட்டும் உகச்சர் (தெ. இ. க. 17· 243. த. க. சொ. 211)*
மத்தளம் கொட்ட வரி சங்கம் நின்றூத (நாச். திரு. 6: 6)

**2. இசைக்கருவி:** *பறைப்பொது, முழவு, தவில்; மேளத் (தவில்) தைக் கொட்டு என்பது சிற்றூர் வழக்கு.*

**3. தாளம்**

பதினோராடலும் பாட்டும் கொட்டும் (சிலப். 3: 14)

4. *தாளத்தின் அரை மாத்திரைக் காலம்*
(சிலப். 3: 16 உரை)

## கொட்டுக்காரர்:
*மேளகாரர்; மத்தளம் தவில் முதலிய தோல்கருவி வாசிப்போர். கொட்டு - தாளம்.*

## கொட்டுத்தட்டு:
*மத்தளத்தின் வலந்தலையின் நடுப்பாகம்*

*← செ. ப. அ. பிற். 248*

## கொட்டுமுழக்குக் கோலம்:
= யதி.

*கொட்டு முழக்குகளின் வடிவமே யதி; ஒலியால் கோலம் போடுதல்.*

*← இ து த. சொ. பக். 36*

## கொடிக்கை:
= பதாகம், பதாகை, பதாகைக்கை

1. *நால்வகை ஆண் கைகளுள் ஒன்று.*

"முட்டி... பதாகம்... ஆண்கை நவமாம்"
(சிலப். 3: 18 அடியார்க். அடிக்.)

2. *நாட்டிய ஒற்றைக் கையுள் ஒன்று.*

"பதாகை என்பது பாடுங் காலைப் பெருவிரல் குஞ்சித்தலா விரல் நான்கு மருவி நிமிரு மரபிற் றென்ப" (சிலப். 3: 18 அடியார்க். மேற்.)

*படாகம், பதாகம் = கொடி*

வலக்கை பதாகை கோட்டொடு சேர்த்து (சிலப். 8: 27)
பதாகையானது ... "பெருவிரல் குஞ்சித்து ஏனைய நான்கும் நிரலே நிமிர்தல் பதாகையாகும்" (மேலது அரும்.)

**கொடிச்சி:** = அகவன் மகள், கட்டுவிச்சி மலைநிலத்துக் குறத்தி; குறிஞ்சி நிலப்பெண். இவர்கள் பாடும் பாடல் கட்டுவிச்சி பாடல், கொடிச்சியர் பாடல்.
குன்றக்குரவையொடு கொடிச்சியர் பாடலும் (சிலப். 25: 24)
அறல் வாழ்கூந்தல் கொடிச்சியர் பாடல் (மலைபடு. 304)
கொடிச்சி பெருவரை மருங்கில் குறிஞ்சி பாட (அகம். 102: 5 – 6)
மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி (நற். 373: 3)
கொடிச்சி காக்கும் பெருங்குரல் ஏனல் (ஐங். 296)
கொடிச்சியர் கூப்பி வரை தொழு கைபோல் (கலித். 40: 11– 13)

**கொடிநிலை:** மன்னனின் கொடியைப் பற்றிய புகழ்ச்சிப் பாடல்.
கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற... (தொ. பொ. 88)
எடு:- 'தாயின் மணிக்கொடி பாரீர்' என்ற பாரதி பாடல்.

**கொடிப்பாலை:**
1. குடசப்பாலை, வெட்பாலை, கறிப்பாலை, மலை மல்லிகை, பாலொடுவை, பாலைக்கொடி, (Green wax flower), நஞ்சறப் பாய்ஞ்சான் (நஞ்சு + அற + பாய்ந்தான்), நஞ்சறுப்பான், கழுரைப் பாலை (A kind of herb), படுவங்கீரை (யாழ். அக)

2. மருதம், மருதயாழ், கோடிப்பாலை, கோடி,கொடி, கரகரப்பிரியா.
இளி குரலாகிய கொடிப்பாலை என்க (பிங்க. 1407)
கோடிப்பாலை. ஏழுபாலையினையும் (சிலப்.3·70_71 அடியார்க்.)
இதனை இக்காலத்துக் கொடிப்பாலையென வழங்குகின் றனர். (மேலது அடிக்.)
இளி குரலாயது கோடிப்பாலை (சிலப் 17: (13) அடியார்க்.)
பட்டடை குரலாய்க் கோடிப்பாலை... (பெரியபு. ஆனாய. 25)
பட்டடை எடுத்துப் பாலையில் கொளுவி (கல்லா. 100: 13)
← செ. ப. அ. 963; 1135; 2133; 2632
தோடி, நட்டராகம், சுரம், கொடி (பஞ்சமரபு. 72)
(கொடி - கொடிப்பாலை)

**கொடுகொட்டி:** → கொட்டி

**கொடுங்கொட்டி:** → கொட்டி

**கொடுபோதல்:** → உலா

**கொடும்பாவிப் பாடல்:** மழை பெய்யாக் காலத்தில் வைக்கோலில் பொம்மை செய்து கொடும்பாவி எனப் பெயரிட்டு தீமைகளும் பாவங்களும் நீங்க அதைக் கொளுத்தும்போது பாடும் பாடல்.
எடு:– கொடும்பாவி சாகானோ!
கோடி மழை பெய்யாதோ!
மாபாவி சாகானோ!
மாரிமழை பெய்யாதோ!
(மந்திரச் சடங்குகள்)

**கொடுமணி:** ஓசை கடிதானமணி.
கொடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின் (சிலப். 24: 17)
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி (முருகு. 246)

**கொண்டக்கிரி:** → கொண்டைக்கிரி

**கொண்டாடுதல்:** ஒரு பொருளைக் கையில் பற்றி அல்லது தலைமேற்கொண்டு கூத்தாடுதல்(தே. நே. 169/V)
(கொண்டு + ஆடுதல் - கொண்டாடுதல்)

**கொண்டி நைவேத்தியம்:** தேர் புறப்பாட்டிற்கு முன்பு கோவில் தேவதாசிக்கு வழங்கப்படும் கொடை (பிரசாதம்) (நித்திய சுமங்கலி பக். 77)

**கொண்டி பரம்பரை:** திருவாரூரில் உள்ள ஒரு தேவதாசி பரம்பரை. புகழ்பெற்ற திருவாரூர் தேவதாசி திருமதி பி ஆர். திலகம் மற்றும் மாணிக்க நாச்சியார் இப்பரம்பரையைச் சேர்ந்தவர்.
→ கொண்டி மகளிர்

**கொண்டி மகளிர்:** போரில் வென்றபின் எதிரி நாட்டிலிருந்து கொண்ட மகளிர் ; விலை மகளிர் ஆக்கப்பட்டவர்.
வண் புற்றுறக்கம் கொண்டி மகளிர் (மணிமே. 18: 109)
நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டிமகளிர் (மதுரைக். 583)
தண்டவாளியை... கொண்டி... கோதையே (தேவா. 5296)
கொண்ட (மகளிர்) > கொண்டி

**கொண்டுகூட்டு:** → கொண்டு மாட்டு

**கொண்டுநிலை பாடல்:** ஒரு சொல் அல்லது தொடர் அல்லது அடியானது பிறபாடகரால் மேற்கொண்டு பாடப்படுவது.
குரவைதழீஇ யாம் ஆடும்குரவையுள் கொண்டு நிலை பாடி...
(கலித். 39: 28 – 29)
ஒருவர் கூற்றினை ஒருவர் கொண்டு கூறுதலின் கொண்டு நிலை ஆயிற்று (கலித். 39: 28 – 29 நச்சர்)
ஒருவர் பாடி முடிக்க அதனைத் தொடர்ந்து பாடுவது
(கலித். 112 நச்சர்)
கொண்டு நிலை பாடி ஆடும் குரவை... (சிலப். 24: (26)
கொண்டு நிலை – ஒருவகைச் செய்யுள் என்பர்
(மேலது: அடிக்)
எ–டு:– 'மறுதர வில்லானை...' முதல் [சிலப். 24: (23):(24):(25) (26)] மூன்று பாடல்களும், திங்கள் மாலை வெண்குடையான் முதலிய 3 பாடல்களில் [சிலப். 7: (2) (3) (4)]: இரண்டாம் அடி

மற்றும் ஆற்றுவரி. (7); (25) (26) (27)ஆகியன கொண்டுநிலை பாடல்கள்..

↑ ஒருவர் பாடியதை, குழுவினர் மீண்டும் பாடும் மரபு இன்றைய கும்மியிலும் உள்ளது.

**கொண்டுமாட்டு:** = கொண்டு கூட்டு

*ஒரு சொல்லோடு பிற சொற்களை வரிசையாகக் கூட்டிப் (சேர்த்து) பாடும்முறை.*

*கொண்டு மாட்டு பாடும்முறை:-*

1. அருச்சுனற்குப் பாசுபதம் கொடுத்தானை (தேவா. 4: 7: 10/ 4229)

*கொடுத்தானை, பதம் கொடுத்தானை, பாசுபதம் கொடுத்தானை, அருச்சுனற்குப் பாசுபதம் கொடுத்தானை.*

2. சிறையாரு மடக்கிளியே (1: 60: 10 / 654)

*கிளியே, மடக்கிளியே, சிறையாரு மடக்கிளியே*

→ மாட்டு

**கொண்டைக்கிரி:** = கொண்டக்கிரி

பண்களில் ஒன்று

**கொந்தளம்:**

1. *களம்அழிப்பு*
2. *கூத்துவகை* (w)

**கொந்தி:** = முகமூடி (mask)

*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

சிந்துப் பிழுக்கை... கொந்தி... கோத்தவரிக் கூத்தின் குலம்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**கொநுகோலு:** → கொன்னக்கோல்

**கொப்பி:** *கும்மியாட்டம், கொப்பி கொட்டல்.*

*கொப்பி - வட ஆர்க்காட்டு வட்டார வழக்கு*

→ கும்மி; தோணோக்கம்

**கொம்பல்:** → கும்மி, கொம்மை

**கொம்பு:** *ஒரு வாத்தியம்; ஊதுகுழல்.*

வயிரே, இரலை, ஆம்பல், கோடு என்று
இனைய நான்கும் கொம்பு என இசைப்பர் (திவா. 1244)
கோடும் இரலையும், வயிரும், கொம்பே (பிங்க.1268) மற்றும்
கொம்பின் பெயர் – ஆம்பலுமாம் என்று அறையப்படுமே
(பிங்க. 1269)

**கொம்புப் பாடல்:** *ஈழத்தில் மழை இல்லாத காலங்களில் மழை வேண்டிப் பாடப்படும் பாடல்*
*(மண் இதழ், நவம். 1999. பக் 46)*

**கொம்மல்:** → கொம்மை

**கொம்மை:** = கும்மி, கொம்பல், கொம்மல், கொப்பி.

கைகுவித்துக் கொட்டியாடும் ஆடல்.

குளிர்தரு கொம்மலோடு குயில்பாடக் கேட்ட (தேவா. 2380: 3)
வாரணி கொம்மை வகையமை மேகலை (பரிபா. 22: 30)
கூற்றம்புறம் கொம்மை கொட்டினார் இல் (பழமொழி. 291)
குஞ்சரம் கூற்றொடு கொம்மை கொட்டுவ (சீவக. 2230)
கூற்றத்தைக் கொம்மை கொட்டுவ (சீவக. 1109)
கூற்றொடும் கொம்மை கொட்டிக்குளிக்கும் (நைடதம். போர். 27)
மழவு... கொம்மை... இளமைப் பெயர் என நவில்வர் (திவா. 1510)
கொம்மை – வட்ட, திரண்ட வடிவின் பெயர்; வலயம்... கொம்மை...
வட்டவடிவிற்கு ஒட்டிய பெயரே (திவா. 1346)
பந்தம்... மண்டிலம் பாண்டில்... கொம்மை... திரள்வடிவு என்ப
(திவா. 1348)
கொங்கையும், கைகுவித்துக் கொட்டலும், அழகும், வலியும் மார்பும்,
திடரும் கொம்மை (பிங்க. 3437)
கொம்மை என்பது நாளடைவில் மருவிக் கொம்மி, கும்மி என்றும்
ஆயிற்று (சிந்துப்பாயியல். பக். 91)

*கொம்மை - இளமுலை; இளமை*

→ கும்மி

**கொரல்:** *குரல் என்பதின் கன்னட வடிவம் (தே. நே. 121/V)*

**கொருக்கலி:** → கொக்கரி

**கொல்லர்:** = கருங்கை

*பாணருள் ஒரு பிரிவினர்.*

கொல்லன் துடியன் கொளை புணர் சீர் வல்ல நல்லியாழ்ப் பாணர்
(சிலப். 12: (15)

*பாட்டொலிக் கருங்கைக் கடையர் பெருங்கைக் கடவர்*
*(தெ. இ. க. 7 863)*

**கொல்லிப்பண்:** *இறைவனின் (இன்பக்) காத்தலைத் தெரிவிப்பது, சந்தியா தாண்டவம். (இன்ப நடனம் - புஜங்கலளிதம்) அதற்குரிய பண் கொல்லி. தாளம் இலக்மீசம். இது காரண ஆகமக்கூற்று. (இ. தா. பக். 73)*

கொல்லியாம் பண்ணுகந்தார் (அப்பர்தேவாரம்)

→*படுமலை*

**கொலைச்சிந்து:** *கொலை பற்றிய எழுச்சி மற்றும் நீதி கூறும் பாடல்கள். 20ஆம் நூற்றாண்டு முற்பகுதி வரை தமிழகத்தில் வழங்கிய கொலை பற்றிய ஒருவகை இலக்கியம். இதை நாட்டுப்புறக் கவிஞர்கள் வீதிதோறும் டேப்பு இசைத்துப் பாடி வந்தனர். கடவுள் வாழ்த்து, கீர்த்தனை, கும்மி, இலாவணி, நொண்டிச்சிந்து, விருத்தம், தெம்மாங்கு, குறவஞ்சி, உரையாடல் இவைகளுடன், உரையிடையிட்ட*

*பாட்டுடைச் செய்யுட்களாக அமைந்தவை.*

*←தமிழில் கொலை சிந்து, அரு. மருததுரை, அருணா வெளியீடு, 1991; முச்சந்தி இலக்கியம்)*

**↑ பொழுதுபோக்குக் கலையாக மட்டும் இதைப் பயன்படுத்தாமல் அறத்தை மக்களிடம் நிலைநிறுத்த வேண்டும் என்பதில் இக்கவிஞர்களும் கலைஞர்களும் ஆர்வம் கொண்டிருந்தனர்.**

*← த. க. க. 218/II*

## கொளு: = கொளு சூத்திரம்.

*நாடக உறுப்புள் ஒன்று. நாடகத்தடம். நாடகக் கருத்து* (clue, gist). *செய்யுள் முதலியவற்றின் கருத்துச் சொல். பின்னால் வர இருக்கும் கதையைக் கூறுவது. நிகழப்போகும் நிகழ்ச்சியில் யார் யார் நடிக்கப் போகிறார்கள் என்பதும் என்ன நடக்கப் போகிறதென்பதும் கொளுவில் கூறப்படும்.*

*எடு:- ஆய்ச். குரவை மற்றும் குன்றக்குரவை - கொளுச்சொல்*

**பாட்டின் கருத்துடைச் சொல் (சிலப். 24) கொளுச்சொல்** **(நாட்டா. உரை)**

**கொளுச்சொல் – குரவைக் கூத்திற்குக்கருத்து** **(சிலப். 17: கொளு. அடியார்க்.)**

**கொளு – குரவைக்குக் கருத்து** **(மேலது. அடியார்க்.)**

**கொளுச்சொல் என்றது, மேற்சொல்லுகின்ற மூன்று பாட்டின் சொற்களைப் போதந்... இப்பாட்டின் கருத் தென்றுமாம்** **(சிலப்.24 கொளுச்சொல். அரும்)**

**ஆடலும் பாடலும் பாணியும் தூக்கும்**
**கூடிய நெறியின கொளுத்துங்காலை** **(சிலப். 3: 17)**

**கொளுத்துங்காலை _ ஆட்டுவிக்கு மிடத்தென்க** **(மேலது. அடியார்க்.)**

**பகுதிப் பாடலும் கொளுத்துங்காலை** **(சிலப். 3: 34)**

*கொளுத்து - ஆட்டுவித்து, நிகழ்த்து, நடத்து.*

*ஒப்பு:- கொளுவி; கொளுக்கி > கொக்கி - தாங்கி நிற்பது.*

**கஞ்சிகைக் கொளுவொடு கயிற்றுநிலை அமைத்து** **(பெருங். உஞ்சைக். 58: 52)**

*← சி. யா. பக். 291; கொளு: புறப். வெண்; திருச்சிற்றம்பலக் கோவையார்;* E.T.L. p. 141

## கொளுசூத்திரம்: → கொளு

## கொளுத்துதல்:

**1. யாழ் முதலிய மீட்டல்**

**நரம்பினாய கருவியைக் கொளுத்து மாக்கள்** **(சூடா. 2: 39)**

**2. நடத்துதல், நிகழ்த்துதல், ஆடுவித்தல், பாடுவித்தல்**

**ஆடலும் பாடலும் பாணியும் தூக்கும்**
**கூடிய நெறியின கொளுத்தும் காலை** **(சிலப். 3: 17)**
**பகுதிப் பாடலும் கொளுத்தும் காலை** **(சிலப். 3: 34)**

## கொளை:

**1. ஒத்து, கேள்வி, சுருதி**

**நாரதனார் கொளை புணர் சீர் நரம்புளர் வார்** **(சிலப். 17 ஒன்றன்பகுதி. பாடல்)**

**கொல்லன் துடியன் கொளை புணர் சீர் வல்ல நல்லியாழ்ப் பாணர்** **(சிலப். 12: (15)**

**கொளை என்பது ஒற்றுறுப்பு** **(சிலப். 17: 26–27 அடியார்க்.)**

**ஒற்றுறுப்பு – ஒத்து (சுருதி) தரும் நரம்பு**

**2. பாடல், இசை** (melody)

**குரல் புணர்சீர்க் கொளைவல் பாண் மகன்** **(புறம். 11 – 15)**
**தீங்குரவைக் கொளைத் தாங்குந்து** **(புறம். 396: 9)**
**கொளைவல் வாழ்க்கை...** **(பதிற். 49: 1 – 3)**
**கொளை வல்** **(சிலப். 7 (48)**
**யாழ் வண்டின் கொளைக்கேற்ப** **(பொருந. 211)**
**காடு கெழு நெடுவேட் பாடு கொளைக்கு ஏற்ப** **(அகம். 382: 5)**
**வண்டினம் யாழ் கொண்ட கொளை** **(பரிபா. 11: 125)**
**வண்டினம் யாழ் கொண்ட கொளை** **(கலித். பாலைக். 2)**
**கோல்வரி கொளை நறை ....** **(பரிபா. 17: 6)**
**புரி நரம்பின் கொளைப் புகல் பாலை ஏழும்** **(பரிபா. 7: 77)**

*(கொளை - இசை; புகல் - சுரம்)*

**கொண்ட இன்னிசைத்தாளம் கொளை சீர்க்கும் விரித்தாடும்** **(பரிபா. 11: 129)**

**3. யாழ் நரம்பு:** *யாழ் நரம்பு இசையைப் பிறப்பிப் பதால் இசைக்குக் கொளை என்று பெயர்; ஆகுபெயர்.*

**4. ஒற்றுறுப்பு**

**கொளை என்பது ஒற்றுறுப்பு (சிலப். 17 26 _ 27 அடியார்க்.)**

## கொற்ற வள்ளை:

1. *போர் வெற்றியை வள்ளைப் பாட்டாகப் பாடி ஆடுதல்.*

**குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளையும்** **(சிலப். 25: 145)**

*(கொற்றம் - வெற்றி; கொற்றவை - வெற்றித்தேவதை)*

**2. புறத்திணை**

*அட்டவேந்தனின் வெற்றியையும் பட்டவேந்தனின் அழிவையும் பாணர் பாடும் துறை*

**கொற்ற வள்ளைத்துறையில் அமைந்தவை : புறம். 4,7, 41**

**வென்றோர் விளக்கமும், தோற்றோர் தேய்வும்**
**குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளையும்** **(தொ. பொ. 63: 11)**

*(வள்ளை - உலக்கைப் பாடல்)*

## கொற்றி: *வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

**சிந்துப்பிழுக்கை... கொற்றி... கோத்தவரிக்கூத்தின் குலம்** **(சிலப். 3 13 அடியார்க். மேற்)**

## கொறுக்கை:

**1. கொறுக்கச்சி, நாணல் வகையுள் ஒன்று.**

**2. சீவாளி,** (Reed).

*கொறுக்கைத் தட்டையிலிருந்து சீவாளி செய்யப் படுவதால் சீவாளிக்குக் கொறுக்கை என்று பெயர்.*

## கொன்றை: = கொன்றைக்குழல், கொன்றையந் தீங்குழல்.

*பாலை நிலச்சிறுபண். பாலைப்பாணி, பண் சுத்தசாவேரி.*

தோகைமாமலர்க் கொன்றைபாடி

(திருவாசக: திருப்பொற்சுண். 17)

கொன்றைக்குழல் ஊதிக்கோவலர் பின் நிரைத்து

(ஐந்திணை. 70: 22)

கூறு கொண்டெழு கொன்றையந்தீங்குழல் (சூளா. 14: 2)

... கோவலர் கொன்றையந்தீங்குழல் (சூளா. 34: 3)

கோவலர் கொன்றைக் குழலர்... (அகம். 11)

கொன்றை அக்குழலர் பின்றைத் தூங்க (அகம். 54: 11)

கொன்றை அம் சினைக்குழல் பழம் கொழுதி (அகம். 15: 15)

... கொன்றைத் தீங்குழல் முரல்சியர் (கலித். 106: 3)

கொன்றை அம்தீங்குழல் மன்றுதோறு இயம்ப (நற். 364: 10)

கொன்றையந்தீங்குழல் கேளாமோ தோழி (சிலப். 17: (19)

கொன்றையந்தீங்குழல் ஊதிய கோவலர் (கைந்நிலை. 30: 3)

கொன்றை வேய்ங்குழல் கோவலர் முன்றில் (கம்ப. 65)

கொன்றைப் பழக்குழல் கோவலர் ஆம்பலும் (வளையாபதி. 72: 3)

த. க. க. 219 – 222/II

**கொன்றைக்குழல், கொன்றையந் தீங்குழல்:** → கொன்றை

**கொன்னக்கோல்:** =கொனக்கோல், கொனுக்கோல், கொநுகோலு, குணக்குரல்.(தே. நே. 121/II)

*வாயால் தாளத்தைச் சொற்கட்டாகக் கூறுதல்.* (vocalising rhythmical mnemonic syllables) *இது ஓர் அருகிய கலை வடிவம். இசை நிகழ்ச்சிகளிலும், நாட்டிய நிகழ்ச்சிகளிலும் கையாளப்படுகிறது. த, ன, தை, ந, நம், தம், தின் முதலிய மெல்லோசையில் அமைத்துச் சொற்கட்டுகளை முழக்குதல்.*

*கொன்ன - காலம் வாயில் எழுவது; கோல் - ஓசை, சுரம், சொல்.*

← *த. க. க. 222/*II, → *கொனுப்பித்தல்*

**கொனக்கோல்:** → கொன்னக்கோல்

**கொனுக்கோல்:** → கொன்னக்கோல்

**கொனுப்பித்தல்:**=கொலுப்பித்தல், கொன்னக் கோல், கொனுக்கோல்.

*நாட்டியத்திற்குரிய பாடல்களில் அல்லது இசை அரங்குப் பாடல்களில் சதி அல்லது தாளச் சொற் கட்டுகளை வாயால் இசைத்தல்.*

# கோ

**கோகிலப்பிரியா:** *பண்களில் ஒன்று.*

**கோசகம்:** = கோசங்கம்.
*அவிநயத்திற்குரிய அலிக்கை வகையுள் ஒன்று.*
*(கோசா - அலி)*
**சர்ப்பசிரம்... கோசங்கம் .. ஆகும் அலிக்கை(சிலப் 3 4 அடியார்க்.)**

**கோசங்கம்:** → **கோசகம்**

**கோசலம்:** *பண்களில் ஒன்று.*

**கோசிகம்:** = கௌசிகம், கைசிகம்.
*பண்களில் ஒன்று; பயிரவி. (நடபைரவி)*
**தக்கேசி... கௌசிகம்... மருதயாழ்த்திறனே (பிங்க. 1383)**
**மருத யாழிசையும் கூகையும் பட்டும் சுடர்நிலைத் தண்டும் சொல்லிற் கௌசிகம் (பிங்க. 3460)**
**பண் கௌசிகம் (சிலப். 6: 35 அடியார்க்.)**
**கோசிகம் சாமவேதம் கூறு பட்டு ஆடைக்கும் பேர் (சூடா. 11)**
**→ கைசிகம், கைசிக ஏகாதசி**

**கோட்டம்:** *யாழ்*
**தந்தி... கோட்டம்... யாழ்ப் பெயர் கூறும் (பிங்க. 1430)**

**கோட்டன்:** *கொம்பு ஊதுவோன்.(கோடு - கொம்பு)*
**குழலன், கோட்டன், குறும் பல்லியத்தன் (முருகு. 209)**

**கோட்டின் அமைதி:** *யாழ் இலக்கணம்.*
**கோட்டினமைதியும் கொளுவிய ஆணியும்,**
**ஆட்டிய பத்தரின் வகையு மாடகமும்,**
**தந்திரி அமைதியும் சாற்றிய பிறவு,**
**முந்திய நூலின் முடிந்தவகையே (சிலப். 3: 26 உரை. மேற்.)**
*கோடு - யாழ்; அமைதி - இலக்கணம்.*

**கோட்டு:** → **கோட்டு வாத்தியம்**

**கோட்டு வாத்தியம்:** = கோட்டு, மகா நாடகவீணை
*சிறிய மரக்கட்டை (குழறி, உருளை)யால் இயக்கப் படும் நரம்பு இசைக்கருவி.*
*மரக்கட்டை - மரக்கம்பு - கோடு; கோடு + வாத்தியம்*
*கோட்டம் - யாழ் (பிங்க. 1430)*

**கோட்பறை:**
1. *சூறை (கொள்ளை) கொள்ளும் போதும், முடிந்த பின்னும் அதைத் தெரிவிக்கும் பறை.*
*சூரங்கோட்பறை.-*
*கொள் > கோள் + பறை - கோட்பறை.*

2. *செய்திகளை நகரத்தார்க்குத் தெரிவிக்கும் பறை,* (proclamation drum; tom tom)
**கொள்ளென் குரலொடு கோட்பறை கொளீஇ**
**(பெருங். வத்தவ. 5: 62)**
*ஒப்பு:- தற்காலத்திய 'தண்டோரா'.*

**கோடணை:** *இசைக்கருவி, வாச்சியப்பொது.*
**பாடி இமிழ் பனித்துறைக் கோடணை அரவமும்**
**(பெருங். உஞ்சைக். 41: 3)**

**கோடபதி:** = கோடம், கோடவதி
*உதயணனுடைய யாழ்.*
**கூட்டமை வனப்பில் கோடபதிக்குரல் (பெருங். வத்தவ. 3: 123)**
**தந்திரி... கோடவதி... யாழின் பெயரே (திவா. 1245)**
**தந்தி, வீணை... கோடம், கோடவதி... யாழ்ப்பெயர் கூறும்**
**(பிங்க. 1430)**
**மன்னிய யாழ்ப் பேர் கோடவதியொடு விபஞ்சியாகும் (சூடா. 10: 42)**

**கோடம்:** → **கோடபதி, யாழ்**

**கோடவதி:** → **கோடபதி**

**கோடாங்கி:**
1. **குடுகுடுப்பை:** *உடுக்கை (துடி) அமைப்புடைய சிறிய தாளக்கருவி.*

2. குடுகுடுப்பைக்காரன்: குடுகுடுப்பையை ஒலித்து குறி சொல்லும் குறிகாரன் (sooth sayer)
எடு:- சாமக்கோடாங்கி; குடுகுடுப்பைக்காரன்.
3. வரிக்கூத்துள் ஒன்று.
← செ. ப. அ. 1176 - 77

**கோடி:** = கோடிப்பாலை, மருதம், மருதயாழ், கொடி, கொடிப்பாலை (கரகரப்பிரியா)
மருதநிலப் பெரும்பண், ஏழ்பெரும் பாலையுள் ஒன்று. ஏழுசுரப் பண்.
கோடி விளரி மேற்செம்பாலையென (சிலப். 3: 88)
குழல்மேல் கோடி வலமுறை மெலிய (சிலப். 3: 92)
... இளி குரலாயது கோடிப்பாலை (சிலப். 17:(13) அடியார்க்.)
பட்டடை எடுத்துப் பாலையில் கொளுவி (கல்லா. 100: 13)
இளி குரலாக ஏழு நரம்பும் வாசித்தாள் (சிலப். 8. 26 அரும்)
கூறிய பட்டடை குரலாய் கோடிப்பாலையில் நிறுத்தி
(பெரியபு. ஆனாய. 25)
கூறிய பட்டடை குரலாய் கோடிப்பாலையில் நிறுத்தி என்றமையின் ஆனாய நாயனார் வேய்ங்குழலில் இசைத்தது கரகரப்பிரியா ராகமாதல் பெறுதும் (யாழ்நூல். பக். 280)

**கோடிப்பாலை:** → கொடிப்பாலை, கோடி

**கோடியர்:**
1. கூத்தர் (professional dancer), பாடகர், கருவியாளர்.
கூத்தாடுவோர் (சிறுபாண். 107 - 9; 125 நச்சர்)
கொடும்பறைக் கோடியர் (மதுரைக். 523)
பாடிவந்ததெல்லாம் கோடியர் (புறம். 368: 16)
கோடியர் முழவின் முன்னர் ஆடல் (பதிற். 56: 2)
ஆடுமயில் முன்னது ஆக் கோடியர் (அகம். 352: 4)
நல்லிசைப் பாணரும் கோடியருங் குயிலவரு (தெ. இ. க. 5 645. த. க. சொ. 219)
2. கழைக்கூத்தர் (தே நே: 137/IV)
3. கொம்பு (கோடு) என்ற கருவியை வாசிப்பவர்; யாழ் வாசிப்போர்; நீலகிரியின் கோத்தர்கள் ஆடலில் பிரிக்க முடியாத கருவி கொம்பு வாத்தியம். கேரளத்தின் சாக்கைக் கூத்து, கூடியாட்டம் இவைகளில் இவ்வாத்தியம் ஊதப்படுகிறது.
முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த (பட்டினப். 253)
முதுவாய்க் கோடியர் முழவின் ததும்பி (குறுந். 78)
சுரஞ்செல் கோடியர் முழவின் தூங்கி (மலைபடு. 143)
கோடியர் தலைவ!... (பொருந. 57)

**கோடு:**
1. சங்கு
கோடு முழங்கி இமிழிசை எடுப்பும் (பதிற். 50: 25)
கோடு உடைந்தன்ன கோடல் பைம்பயிர் (அகம். 23: 6)
2. யாழின் தண்டு, மருப்பு, தந்திரிகரம், தகைப்பு, தண்டம்.
↑தொடக்ககால யாழான, வில்யாழின் (lyre) தண்டு வளைந்திருந்ததால் அது பெற்ற பெயரான கோடு என்பது வளையாத நேர்கோட்டு யாழிற்கும் ஆகி வந்தது.
மகர யாழின் வான்கோடு தழீஇ (மணி. 4156)
கருங்கோட்டுச் சீறியாழ் பணையம்இது கொண்டு (புறம். 316: 7)
... செழுங்கோட்டின் மலர்புனைந்து (சிலப். 7: 1)
கோடு - யாழ்க்கோடு (மேலது. அரும்)
களங்கனி அன்ன கருங்கோட்டுச் சீறியாழ் (புறம். 127: 1)
3. துத்தரிக் கொம்பு, ஊதுகொம்பு, (Blowing horn)
கோடும் குழலும் பீடுகெழு மணியும் (சிலப். 12: 41 நாட்: உரை)
கோடே சங்கும் ஊது கொம்பும்... (திவா. 1951)
கருங்கண் காவலர் கொடுங்கோடு சிலைப்ப
(பெருங். உஞ்சைக். 58: 25)
4. யாழ்
... கோட்டினது அமைதியும்... (சிலப். 3: 26 அடியார்க்.)
5. கோட்டு வாத்தியத்தில் தந்திகளின் மீது பயன்படுத்தப் படும் குச்சி, உருளை.

**கோணக்கொம்பு:** = வாங்கால்
கொம்பு வகைகளுள் ஒன்று (S shaped horns).
← செ. ப. அ. 1181

**கோணங்கிக் கூத்து:** கோமாளிக்கூத்து, (Dancing of a clown). கோணங்கி - கோமாளி - (clown)
← செ. ப. அ. 1181

**கோணங்கி தரு:** கோமாளி தரு.
நாடகத்தில் வரும் கோமாளி இசைக்கும் பாடல் மரபாகக் காம்போதிப் பண்ணில் ஆதிதாளத்தில் இது அமைந்திருக்கும்.

**கோத்தும்பி:**
1. திருவாசகத்தின் பத்தாம் பகுதி. நாலடித் தரவு கொச்சகக் கலிப்பா இருபது உடையது. கோத்தும்பி என்று பாடல் முடிவதால் திருக்கோத்தும்பி என்று பெயர். இசையமைப்பாளர் இளையராசா கோத்தும்பிப் பாடல்களை ஆம்பல் பண் என்ற சுத்த தன்யாசியில் மேலை இசையில் (A classical crosso-ver) இசையமைத்து (Budapest symphony Orchestra) குறுந்தகடாக (2004) வெளிக் கொண்டு வந்துள்ளார்.
2. தும்பிதுள்ளல் (கேரளம்) என்ற மகளிர் விளையாட்டு

**கோதை:** மரக்கால் பறை; ஒரு கண் பறை.
மரக்கால் பறையே கோதையாகும் (பிங்க. 1528)
மரக்கால் அன்ன ஒருவாய்க் கோதை (கல்லா. 8: 27)

**கோப்பாளி:** வரிக்கூத்து வகையுள் ஒன்று.
சிந்துப்பிழுக்கை... கோப்பாளி... கோத்தவரிக்கூத்தின் குலம் (சிலப். 3: 12 அடியார்க்.)

**கோபிகா வசந்தம்:**
பண்களில் ஒன்று (பரத. இராக. 102)

**கோபுரமணி:** பொதுமக்கள் நேரம் அறியுமாறு, நாழிகை தோறும் அடிக்கக் கோபுரத்தில் கட்டப் பட்ட வெண்கலத்தால் ஆன பெருமணி
(தே. நே. 58/IV)

**கோமளம்:** மென் சுரம், (flat note)
எடு:- ரி¹, க¹, த¹ போன்றவை.

**கோமாளிக்கூத்து:**→ கோணங்கிக் கூத்து

**கோமாளி தரு:** → கோணங்கி தரு

**கோமுகம்:** இசைக்கருவிகளுள் ஒன்று.
← செ. ப. அ. 1190

**கோயில்:** → பொதியில்

**கோயில் தூக்கு:** எழுவகைத் தூக்குகளில் ஒன்று. (A variety of time measure). தாள வகையது.
இத்தாளங்களின் வழிவரும் கோயில் தூக்கு... எனப்பட்ட ஏழு தூக்குகளும் (சிலப். 14: 150 அடியார்க். & 3· 16 அரும்)
ஆடலும் பாடலும் பாணியும் தூக்கும் (சிலப். 3: 16)
ஆடலும் வரியும் பாணியும் தூக்கும் (சிலப். 14: 150)
↑ பாணியும் தூக்கும் என்பதால் பாணி என்பதில் பாடலுக்கான தாளம் கூறிவிட்டார். எனவே தூக்கு என்று தனியே ஒன்று கூறியதால் இது ஆடலுக்கான சொற்கட்டு ஆகலாம்.

**கோல்:**
1. யாழ் மீட்ட உதவும் சிறுகுச்சி
கோல் பொரச்சிவந்த... விரல் (சீவக. 459)
2. புரிநரம்பு
திருந்து கோல் நல்லியாழ் (சிலப். 6: 172)
புரிநரம்புகளான் திரண்ட திண்மையான கோல் (சீவக. 559 நச்சர்)
3. கோவை, சுரம், தானசுரம்
... விரல் கவர்பு இசைக்கும் கோல் ஏழும்... (கலித். 8: 9)
↑ இசை ஒலியை அளந்து நிறுத்தும் கோலின் அடிப்படையில் இசைக்கோவையானது கோல் எனப்பெயர் பெற்றது.
(கோல் - துலாக்கோல் - அளவை (நிறுவை) க் கருவி)
← சங்க அகராதி; தானசுரம்
4. நுண்கோல்
அகவுநர், அகவன் மகளிர் கையில் கொண்ட கோல். இஃது இவ்வகைப் பாணர்களின் தனிச்சிறப்புடை அடையாளம் அல்லது உடைமை... (த. வீ. க. பக். 161)
... நுண்கோல் கொண்டு களம் வாழ்த்தும் அகவலன் பெறுக மால (பதிற். 43: 27–28)
... சிறுகோல் வணங்கு இறை மகளிரொடு அகவுநர்... (அகம். 97: 10–11)
நுண்கோல் அகவுநர்ப்புரந்த பேரிசை (அகம். 152: 4)
நுண்கோல் அகவுநர்... (அகம்:208:3)
மதலை மாக்கோல் (புறம். 152: 17 உரை)
5. அலகு (லகு) அம்பு, நேர்,
இதன் குறியீடு - / அல்லது ↑
இதன் அளவு - 4 எண்
← ப. இ. இ. 293

**கோல் கூத்து:** வரிக்கூத்து வகையுள் ஒன்று.
சிந்துப்பிழுக்கை... கோத்த பறைக்குடும்பு கோல் கூத்து... கோத்தவரிக்கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க்.)
↑ கோல் கூத்து - கோலாட்டம் ஆகலாம்

**கோலச்சாரி:** வேட்டுவமகளாகிய சாலினியானவள் கொற்றவை உருக்கொண்டு ஆடிய ஆடல்.
வேட்டுவ மகளாகிய சாலினி கொற்றவை உருக்கொண்டு ஆடிய கோலச் சாரியும் (சிலப். பதிகம். 73 அடியார்க்.)
வரி என்பது கோலச்சாரி. . . (மேலது. அடியார்க்.)
(கோலம் - வேடம்; சாரி - அடைவு )
← செ. ப. அ. 1195; → உள்வரிக்கோலம்

**கோலம்:**
1. ஒப்பனை, வேடம், அணி, (costume, adornment, decoration). கோலம் என்பது ஒரு நடிகரால் அணியப் படும் உடை போன்ற எல்லாப் பொருட்களையும் குறித்தது.
கோலம் கொண்ட மாதவி அன்றியும் (சிலப். 4: 34)
அம்முயக்கத்தால் முன் குலைந்த ஒப்பனையை (நாட். உரை)
புறஞ்சுவர் கோலம் செய்து (பாசுரம். திருமாலை. 6)
கோலங்காண் படலம் (கம்ப.)
உள்வரிக்கோலத்து (சிலப். 5: 216)
பெண் அணி கோலம் பெயர்ந்த பிற்பாடு (சிலப். 13: 1)
கோலம் - மலையாளம்
கோல - கன்னட
கோலமு - தெலுங்கு
கோல - துளு (பேய்நடனம், DED. 1855)
2. கோலம் (இடுதல்)
விழாநாட்களில் வீட்டிற்கு வெள்ளை அடிப்பது போல, மக்கள் புத்தாடை உடுத்துவது போல, தெய்வம் இறங்குவதற்காகப் பூமித் தாய்க்குப் புத்தாடை உடுத்துவது போன்றது விழாக்களில் கோலம் இடுதல்.

எ–டு:– தாதெருமன்றம் (சிலப். 17: (28) – சாணமிட்டு மெழுகிய களம்

3. முகமூடி அணிந்து ஆடும் கூத்து
4. மத்தள முழக்கு முறை - யதி

→ கூத்து

**கோலம் கட்டுதல்:** நாடகம் முதலியவற்றிற்கு வேடம் பூணுதல்.

← செ ப. அ. 1194

**கோலம் துள்ளல்:** கோலம் என்ற வேடமுக (முகமூடி) நடனத்தின் ஒரு சடங்கு வடிவம், கோலம் துள்ளல் ஆகும். திருவிதாங்கூர் காளி கோவில்களில் கணியராலும் வேலன்களாலும் சமய விழாக்களில் நிகழ்த்தப் படுவது. இது கொற்றவைக்குரிய பேய் வழிபாட்டுடன் ஒப்புமை உடையது.

← ப. த. நா. பக். 381-82

கொற்றவை கொண்ட அணி கொண்டு நின்ற இப்பொற்றொடி மாதர்... (சிலப். 12: (4)

**கோலாட்டத் தரு:** கோலாட்டம் ஆடும்போது பாடப்படும் வண்ணனை (வர்ணனை)ப் பாடல். இவை கண்ணிகளாக அமைந்து வரும்.

**கோலாட்டம்:** பல வண்ணங்கள் தீட்டிய அழகிய குச்சிகளை இரு கைகளிலும் பிடித்து, தட்டி, ஆடிப்பாடும் ஆட்டம். தாளத்திற்குக் கால் பெயர்த்து ஆடுதலும், கை பெயர்த்து வீசுதலும் இவ் ஆட்டத்தில் சிறப்பிடம் பெறுகின்றன.

← த. க. க. 236/II

**கோவை:**

1. = நரம்பு, தந்திரி, தந்தி, கோல், கேள்வி, சுரம் (musical note)

மூன்று தான நிலைகளிலும் கோவைகள் (சுரம்) ஒன்றுடன் ஒன்று கோக்கப்பட்டு இசைக்கப் படுவதால் கோவை

வலிவும் மெலிவும் சமனும் எல்லாம்
பொலியக் கோத்த புலமையோனுடன் (சிலப். 3: 93 – 94)
பதினாற்கோவையாகிய சகோட யாழை வாங்கி (சிலப். 8: 43_4 அரும்)

கோ என்பது ஓரெழுத்து ஒருமொழி. அதன் பொருள். - சேர், இணை, பொருந்து என்பன. எனவே கோக்கப் பட்டது கோவை.

ஒப்பு:- திருக்கோவை, கலிக்கோவை, கோவைத்துறை.

பதினாற் கோவைப் பாலை (சிலப். 3: 86 _ 9 அரும்)

இங்கு பாலை என்றது 14 சுரங்களை; இசையில் கோக்கப் படுவதால் கோவைப் பாலை என்றார்.

பாலை ஈரேழு கோத்த பண்ணியங்கருவி வீக்கி (பெரியபு. ஆனாய)
ஈரேழ் தொடுத்த - பதினாற் கோவைபொலிந்து (சிலப். 3: 70 _71 அரும்.)

2. இலக்கிய வகையுள் ஒன்று: கட்டளைக் கலித்துறை யால் பாடப்படுவது.

எடு:- மாணிக்கவாசகரின் திருச்சிற்றம்பலக் கோவையார் - இது 400 க. க. துறைப் பாக்களால் ஆனது.

← இ. து. த. சொ. பக். 4; த. வ. பக். 74; ப. இ. இ. பக். 47

**கோவை அடைவு:** = நரப்படைவு

பண்ணின் (ஏறுநிரல், இறங்குநிரல் ) சுரவரிசை

எடு:- செம்பாலை (அரிகாம்போதி)யின் கோவை அடைவு:

VW Ãu± : ச ரி² க² ம¹ ப த² நி¹ ச்

இறங்குநிரல் : ச் நி¹ த² ப ம¹ க² ரி² ச

**கோவை அணி:** = அலங்காரம்.

இசைப்பயிற்சிகளுள் ஒன்று.

கோவைகளை ஒரு தாளத்தில் பல முறைகளில் ஏறு நிரலிலும் இறங்கு நிரலிலும் ஒருங்குற அடுக்கி இசைத்துப் பழகுவது.

கீதக்குறிப்பும் அலங்காரமும் கிளரச் சோதித்து அரங்கேற... (சிலப்: 3: 10 _ 11 அடியார்க்.)

(அணி - அலங்காரம், அழகு, ஒப்பனை)

← ப. இ. இ. பக். 74

**கோவை கலங்காத முறை:** → அதிரா மரபு

**கோவைச்சுர இசை:** = ஒத்திசை

பொருந்து சுர அடுக்குகள் (chords) பல, பல தானங்களில் (octave) ஒத்து இசைக்கும் இனிய இசை முறைகளுள் ஒன்று. இது ஐரோப்பிய இசைமுறை.

← தெ. இ. பக். 10

**கோவைப் பயிற்சி:** → கோவை வரிசை

**கோவை வரிசை:** = சுராவளி

சுரவரிசை. இசைகற்றலில் கோவை வரிசை கைவரப் பெற பல்வேறு வரிசைகளில் சுரங்களை இசைத்துப் பயிற்சி பெறுவது.

எடு:- இரட்டை வரிசை - சச, ரிரி, கக, மம (ஜண்டை வரிசை)

தாண்டு வரிசை - சகரி, ரிமக, கபம (தாட்டு வரிசை)

← ப. இ. இ. பக். 73

**கோழிக்கை:**

இணையா வினைக்கையுள் ஒன்று.

நடுவிரலும், சுட்டுவிரலும், பெருவிரலும் தம்மில் நுனி ஒத்துக்கூடி வளைந்து சிறுவிரலும் அணிவிரலும் முடங்கி நிமிர்வது; என்னை ?

"தாம்பிர சூடமே சாற்றுங்காலைப், பேடே சுட்டுப் பெருவிரல் நுனி ஒத்துக் கூடி வளைந்து சிறுவிரல் அணிவிரல், உடன் அதின் முட்ங்கி நிமிர நிறுத்துவே" (சிலப். 3: 18 அடியார்க்.)

**கோள்:** = மதி, ஓரை (இராசி), வீடு (கிரகம்)
குடையும் வாளும் நாள் கோள் (தொ. பொ. 69)
நாள்கொள்ளலாவது நாளும் ஓரையும் (நச்சர்)
படைத்துக் கோள் பெயரிடுவாள் (சிலப். 17)
ஆறிருமதியினும்... (சிலப். 26: 25)
ஆறிரு மதியினும் - இராசி பன்னிரண்டிலும் (மேலது. அரும்)
↑ இப்பன்னிரு ஓரைகளிலும், பன்னிரு தானசுரங்களை நிறுத்திப் பண்களைக் கண்டுள்ளனர்.
*சான்று: ஆய்ச். குரவை உரை, வட்டப்பாலை.*

# கௌ

**கௌசிகம்:** → **கைசிகம்**

**கௌடி:** *பண்களில் ஒன்று.*

**கௌத்துவம்:**→ **கவுத்துவம்**

**கௌரி:** *பண்களில் ஒன்று.* *(பரத. இராக. 104)*

**கௌரி காளம்:** = கௌரி காளை
*கோவில் விழாக்களில் பயன்படும் பித்தளையால் ஆன ஊதுகுழல்.* (A long brass trumpet).
← *செ. ப. அ 1206*

**கௌரி காளை:** → **கௌரி காளம்**

**கௌரி மனோகரி:** *பண்களில் ஒன்று; 32 தமிழிசைப் பாலைகளுள் 12 ஆவது பாலை* *(மேளஎண். 23)*

**கௌவாணம்:** → **கவ்வாணம்**

**கௌளம்:** = கௌளை.
*பண்களில் ஒன்று.* *(பரத. இராக. 55)*

**கௌளி:** = கவுளி
*பண்களில் ஒன்று.* *(பரத. இராக. 56)*

**கௌளி பந்து:** *பண்களில் ஒன்று.*
'தருணம் ஈதம்மா' *என்ற தமிழ்ப்பாடல் (சியாமா சாஸ்திரி) இந்தப் பண்ணில் அமைந்துள்ளது.*

**கௌளை:** → **கௌளம்**



**சக்கணி:** கூத்து வகையுள் ஒன்று

சக்கணியிலோர் தழுவும் சாதித்து (பணவிடு. 186)

சக்கணி நாட்டியத்தாலே அந்தப்பிரபுவை நன்றாக வசீகரிக்க (கோயிலொழு. 23)

← செ. ப. அ 1209; தே.நே. 245/VIII

**சக்கடம்:** → சகடம்

**சக்கரவாகம் :** = சக்கரப்புள்

1. ஒருபறவை; அன்றில், ஆழி, ஆனைக்குருகு, நேமிப்புள், பனங்காடை

சக்கரவாகம், கோகம், நேமி, கொம்பி, சக்கரம் ஆனைக்குருகு (நாமதீப. 245)

2. பண்களில் ஒன்று; ஏழுசுரப்பண்

தமிழிசைப்பாலை வரிசையில் 7 ஆம் பாலை (16 ஆவது மேளம்)

**சக்கினி தரு :** முற்பகுதியில் சதிகளையும், பிற்பகுதியில் சொற்களையும் கொண்ட இரண்டாம் கால நாடகப் பாடல்.

**சக்குவரி :** ஒற்று ஒழித்து அடி ஒன்றுக்கு 14 எழுத்துக்கள் கொண்ட நாலடி விருத்தம் .(வீரசோ. யாப். 33உரை)

← செ. ப. ஆ. 1213

**சக்கை:**→ தவில்

**சகடம் :** துந்துபி (large drum)

சகடும், பண்டியும், சிகரமும், சகடம் (பிங்க. 3462)

→ சகடை

**சகடை:** = சகண்டை, சக்கடம், சகடம்,சகடு.

1. சேகண்டி

2. பறைப்பொது; வட்டமானபறை(தே.நே.251;270/V)

← செ. ப. அ. 1215

**சகடைகொட்டி :** சகடை எனும் இசைக் கருவிவாசிப்போன்.

**சகண்டை:** → சகடை

**சகர ஒலி :** கேள்வி, சுருதி ஒலி, ஒத்து

காற்றுவெளிவரும் போது ஓசை பெரும்பாலும் சகர ஒலியால் வரும்...

சகரம் - உரசொலி (fricative)

சகர ஒலியானது, ஒலிக்க எளிதான ஒலி. வாய் அமைப்பு சகர ஒலிப்புக்கு ஏதுவாக அமைந்துள்ளது. எனவே இசையில் 'ச' என்ற முதல் சுரமே ஒத்து (சுருதி) ஆகியுள்ளது.

← தே.நே. 295/ III

**சகலவாத்தியம் :** பண்ணிசைக் கருவியாகவும், அதே நேரம் ஒத்து (சுருதி)க்கருவியாகவும் உள்ள இசைக்கருவி.

எடு:-

யாழ் - ஒற்று (சுருதி) த்தந்தி 3 உடையது.

மகுடி - ஒத்து (சுருதி) தருவதற்காக சுருதி நாடி உடையது.

நெடுங்குழல் - மேற்பாகம் சுருதிக்குழலாக உள்ளது.

**சகலவல்லகி :**

யாழ் வகையுள் ஒன்று (பரத. ஒழிபி. 15)

**சகானா :** பண்களில் ஒன்று. (பரத. இராக. 55)

**சகோடம் :**

1. = சகோரம், சகடம்

சக்கரப்புள்

2. சக்கரப்புள் வடிவான யாழ் (தே.நே. 270, V)

பதினாற்கோவையாகிய சகோடயாழ் (சிலப். 8: 27– 44. அரும்)

ஈரேழ்சகோடமும் இடைநிலைப் பாலையும் (சிலப். 10கட்டுரை.14)

.... பதினாற் கோவையாகிய சகோடயாழை ... (சிலப். 8 : 31 – 2.அடியார்க்)

பேரியாழ் பின்னும் மகரம், சகோடமுடன் (பஞ்ச. மரபு. 7)

தாராசுரம் கோவிலிலுள்ள திருநீலகண்ட யாழ்ப் பாணரின் சிலையிலுள்ள யாழ் சகோட யாழாகும்.

**சங்க இலக்கியப் பண்கள் :** சங்க இலக்கியங்களில் 11 பண்கள் பதிவு பெற்றுள்ளன
முல்லை, குறிஞ்சி, மருதம், செவ்வழி, பாலை, நைவளம், நோதிறம், ஆம்பல், காஞ்சி, விளரி, காந்தாரம்.

1. முல்லை - அரிகாம் போதி
பாணர் முல்லைபாட (ஐங். 408: 2)
2. குறிஞ்சி - படுமலை - நடபைரவி
உறுகெழு மரபின் குறிஞ்சி பாடி (நற். 255: 2)
3. மருதம் - கரகரப்பிரியா
யாழோர் மருதம் பண்ண (மதுரைக். 658)
4. செவ்வழி - இருமத்திமத் தோடி
சீறியாழ் செவ்வழி பண்ணி (புறம். 144: 2)
5. பாலை - பஞ்சுரம் - சங்கராபரணம்
வல்லோன் தைவரும் வள்ளுயிர்ப்பாலை (அகம். 355: 4)
6. நைவளம்-நட்டபாடை - நாட்டை - கம்பீரநாட்டை
நைவளம் பழுநிய பாலை வல்லோன் (குறிஞ். 146)
7. நோதிறம் - இந்தளம் - இந்தோளம்
பரிபாடல் 13-17 இப்பண்ணில் இசையமைக்கப் பட்டுள்ளது.
8. ஆம்பல் - காமரம் - சுத்த தன்யாசி
ஆபெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇ (அகம். 214: 12)
9. காஞ்சி
இசைமணி எறிந்து காஞ்சி பாடி (புறம். 281: 5)
10. விளரி - தோடி
சிறுநா ஒண்மணி விளரி ஆர்ப்ப (குறுந். 336: 3)
11. காந்தாரம் - கர்நாடக தேவகாந்தாரி (ஆபேரி)
பரிபாடல் 18 -21 இப்பண்ணில் இசையமைக்கப் பட்டுள்ளது

**சங்கதி :** - வேறுபாடு, மாற்றம், இசைவிகற்பம்.
பாடல் வரிகளை நுட்பமாக வெவ்வேறு முறைகளில் வேறுபடுத்திப்பாடுதல் (finer variation of a malodic line). பாடல்களிலோ, பண்ணிலோ சங்கதி இயல்பாக அமைந்திருப்பதில்லை. சங்கதி என்பது பாடகரின் இசைத்திறன் மற்றும் கற்பனை வளம் மூலம் பாடகரால் அமைக்கப்படுவது.
(சங்கதி - ஒருகொச்சை வழக்கு)

**சங்கம் :** = கோடு, வளை, பணிலம்
1. சங்கு
சங்கும் ஓர்எண்ணும் கணைக்காலும் சவையும் நுதலும் கவிஞரும்
சங்கம் என்ப (பிங்க . 3466)
குளிர் வெண்கவரியும் முரசுஞ் சங்கமும்
(IPS. 366. த. க. சொ. 228)
நக்கன்தித்தன் குடுத்த சங்கு இரண்டு (தெ. இ க. 5 615)
கோடு முழங்கு இமிழிசை எடுப்பும் (பதிற். 50: 25)
... வெண்கோடு இயம்ப (நற். 58: 7)
வளை நரல வயிர் ஆர்ப்ப (மதுரைக் . 185)
நலன்தரு ... வெள்ளை, சங்காம் (சூடா. 3 : 72)
2. குரல்
சங்கு .... அவற்று ஒசை (திவா. 10 : 155)
3. இணையா வினைக்கையுள் ஒன்று (சிவப். 3 : 18 உரை)

**சங்கராபரணம்:** → அரும்பாலை, பாலை

**சங்கிரம ராகம்:** → சாயாலகப்பண்

**சங்கீதக் கச்சேரி:** → இசை அரங்கு

**சங்குக்கை :** = சங்கு.
சங்குமுத்திரை. ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று. பெருவிரல் நிமிர ஒழிந்த நான்கு விரலும் வளைந்து நிற்பது; என்னை?
"சங்கு எனப்படுவது சாற்றுங்காலைச்
சிறுவிரல் முதலாச் செறிவிரல் நான்கும்
பெறு முறைவளையப், பெருவிரல் நிமிர்ந்து ஆங்கு
இருமுறைத் தென்ப இயல் புணர்ந் தோரே"
(சிலப். 3: 28 அடியாக்)

**சங்கீத மேளம் :** நட்டுவ மேளம்
நட்டுவனார், முட்டுக்காரர், நடனப்பெண்டிர், பாட்டுக்காரர் ஏனைய பக்க இசைக்கருவிக்காரர்கள் கொண்ட குழு (மேளம் - குழு)
←வாழ். களஞ். பக் 272 /XII

**சங்கீர்ண சாதி:** → சங்கீர்ணம்

**சங்கீர்ண ராகம் :** → சாயாலகப் பண்

**சங்கீர்ணம் :** = சங்கீர்ண சாதி, சங்கீரணம்
1. ஒன்பது எழுத்துக் காலம் கொண்ட தாள அளவை
(பரத. தாள 47 உரை)
2. மத்தள வகையுள் ஒன்று
→ ஒன்பான் சாய்ப்பு

**சங்கீரண சாய்ப்பு(சாப்பு):** → ஒன்பான் நடை

**சங்கீரணம்:** → சங்கீர்ணம்

**சங்கீரணலகு:** → ஒன்பான் அலகு

**சச்சரி :** = சச்சரை. பறைவகையுள் ஒன்று
இப்பெயர் ஒலிக்குறிப்பு அடிப்படையில் தோன்றியது (வ. வ. 137)
←தே. நே. 216/V
கொக்கரையின் சச்சரியின் பாணியானை (தேவா. 6: 29: 1)
சச்சரி கொக்கரை தக்கையொடு (மூத்ததிரு. 1)
குழையார்... சச்சரியும் கொள்கை கண்டேன் (தேவா. 6: 77: 7)

**சச்சரை:** → சச்சரி

**சஞ்சாரம் :**
1. நடனத்திற்குரியபாதம் ஐந்தனுள் ஒன்று.
(சிலப். 3: 13அடியார்க். அடிக்)
2. சுர இயக்கம்; சுரப்போக்கு; சுரச்செலவு.
பண்இயக்கம். பண்ணின் ஏறுநிரல், இறங்குநிரல் கதியைத் தழுவி வருவது.

**சஞ்சாரி பாவம்:**
பாடலின் ஒருவரிக்கு ஆடல் நிரவல் செய்தல். அதாவது பாடலின் ஒருவரியை நிரவலாக மீண்டும் மீண்டும் பாடும் போது அந்த வரியுடன் தொடர்புடைய செய்திகளை அவிநயம் செய்தல்.
← த. க. க. 267/II

**சஞ்சாரி கீதம் :** பண் நீர்மைப்பாடல்.
பண்ணில் இயங்கும் கீதம். இசைப்பயிற்சி வரிசையில் சுரவரிசை (சுராவளி), தாயிவரிசை, அலங்காரம் முதலியன முடிந்தபின் 'கீதம்' (இசை உரு) பயிற்றுவது வழக்கம். பண்ணின் நீர்மையை (தன்மை) அறிந்து கொள்ளும் விதமாக சஞ்சாரி கீதங்கள் பயிற்றுவிக்கப்படுகின்றன
← த. க. க. 134 /II,→ இலக்கணகீதம்

**சஞ்சாரி வரிசை:** → நடைப்பாங்குவரிசை

**சஞ்சோளி :** பண்களுள் ஒன்று (பரத. இராக. 104)

**சட்சசுருதி:** → குரல் ஒத்து

**சண்டதாண்டவம் :** = ஊர்த்துவதாண்டவம்
காளியோடு சிவன் ஆடியது (ச அ.)

**சண்டை:** → செண்டை

**சண்முகப்பிரியை:**
பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 104)

**சத்தக்கருவி :** தோல், துளை, நரம்பு, கஞ்சம், மிடறு என்ற ஐவகை இசைக்கருவி
← செ. ப. அ. 1247

**சத்தக்குழாய் :** = முகவீணை, மோர்வியம் (முகர்வியம்)
நாட்டுப்புற ஊதுகுழல். சிறிய நாகசுரம் போன்ற உருவை உடையது.
நீலகிரி இருளர் - பீக்கி
முதுவர் - கரும்பு (சுரும்பு)
புலையர் - கொரல் (குரல்)
(கொரல் - குரல் என்பதன் கன்டைவடிவம்)

**சத்தபகுணி :** ஒருவகைப் பால் தாவரம்; ஏழிலை கொண்டது. (seven - leaved milk plant)
→ ஏழிலைப்பாலை

**சத்தம் :** = சப்தம்
1. ஒலி
2. ஏழு
"... சத்தமே ஒலி, ஏழாம்..."
இசையில் ஏழு சுரங்கள் இருப்பதால் 'ஏழு' என்ற ஒலியின் பெயரையே ஏழாம் எண்ணிக்கைக்கு நம் முன்னோர் வைத்துள்ளனர்.

**சத்தி :** இசைச்செய்யுள் - (அ நி.) (A melodious verse)

**சத்துவம் :** = விறல், மெய்ப்பாடு
விலக்குறுப்புக்கள் 14 இல் ஒன்றாய் வருவது. உள்ளத்து உணர்வு முகத்தில் வெளிப்படத் தோன்றும் மெய்ப்பாடு
← சிலப். 3: 13 அடியார்க்.

**சதங்கை :** கிண்கிணி, சலங்கை
பரியகம், நூபுரம், பாடகம், சதங்கை (சிலப். 6: 84)

**சதி :** = ஜதி - 1. தாளம்
தடவரைகள் ஏழுமாய்... குழல் முழவச் சதிவழியே அனல்கை ஏந்திக்கூத்தாடவல்ல குழகன் (தேவா. 6: 83: 3)
கைச்சதி யினாமுறைவி தித்தவா...
(திருப்புகழ். திருவகுப்பு 6. பூதவேதாள.)
சதி = தாளம்; கைச்சதி = கைத்தாளம்
சதி பாய்ந்து செல்லும் கலையையுடைய பாவை
(சிலப். 13: 1110 – 12. அடியார்க்)
சதியும் சீரும் தாள ஒத்தின் பெயர் (பிங்க. 1466)
அதனின் நடிக்கும் நடம் நாடகமாம் (பிங்க. 1467)
சதி திகழ் நவ்வினில் ஆறு மூன்று மூன்றும் (சிதம். பாட். 23: 1)
சதி உரோகிணி கல்பாட்டி வஞ்சனை தாள ஒத்து (சூடா. 11: 6)
சம்பந்தரின் : திருத்தாளச்சதி
தாளச்சதி - தாளச்சொற்கட்டு
குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் ஒற்றும் அளபெடையும்...
சதிசேரும் வாச்சிய மாய்ச் சாற்று (பஞ்ச. 121)
நன்மாதர் சதிபட மாநட மாடி (தேவா. 2: 96: 3)
தாள ஒத்து, மயனாளும் வட்டமும், கற்பாட்டியும்,
சோறும், சதி எனலாகும் (பிங்க. 3471)
2. (தாள) சொற்கட்டு, சொல்லுக்கட்டுபாடம் (solfa syllables, rhythmic mnemonics), போல் (இந்துத்தானி).
தா, தின், கிண, தொம் என்று தாளத்தில் அமைந்த இசைச்சொற்கள். 'தித்தித் தத்தை தாம் தரிகிடதக தீம் தகணக தாம் தரிகிடதக' என்று நாட்டியத்தில் வரும் தாளத்தால் அமைந்த சொற்களே, சொற்கட்டுகள் அல்லது சதி.
தருக் கொண்டாள் மற்றோர் சதிகொண்டாள்
(விறலிவிடு. கண்ணி. 415)

சுர தலந் தருள் தமருக சதி போதி
கழல் புனைந் தசெம் பரி புர ஒலியொடு (தக்க. காப்பு)
(வேறு)
சதகோடி விதத்தாள சதியாய... (தக்கயாகப்பரணி. 3: 4)

மாதர்சதிபட நடம் ஆட (சம்பந்தர் 232: 3)
கூட்டிய இலயம் சதி பிழை யாமை (தேவா. 7: 69: 2)
வட்டித்தல்... தாள ஒற்றுக்கிளர்ந்த பேர் சதியே... (சூடா 9:54)
விதி வழி ... சதி வழி வருவதோர் சதிரே
(சம்பந்தர் 3: 98:2 /3854)

3. முத்திரை, ஆட்டமுத்திரை
↑ கதகளி ஆட்டத்தின் 24 முத்திரைகள் 'சதுர்விம்சதி' என்று அழைக்கப்படுகிறது.
4. → சப்தம்
→ சதிர்

**சதிசுரம் :** = சுரபல்லவி, ஜதிஸ்வரம்
பாடல் (சாகித்தியம் libretto) இல்லாத சதிக் கோவைகளைக் கொண்ட நாட்டிய இசை உரு. சுரங்கள் தாளக்கட்டுடன் அமைவது. இசை அரங்கில் பாடப்படும் சுரசதியை ஒத்தது. (சுரசதியில் பாடல் உண்டு); சொக்க (நிருத்தம்) ஆடலுக்கான இசை வகை.

**சதிர் :** 1. = சதுர், சதிராட்டம், சதிர்க்கச்சேரி, சதிர் மேளம், தேவரடியார் முறை, தாசிஆட்டம், சின்னமேளம் (Nautch).
தாளத்திற்கு ஆடும் ஆடல்; தாளத்தால் அமைந்த சொற்கட்டு(சதி)க்கு ஆடும் நாட்டியம்; உடல் அவிநயம் (body language, gesture) காட்டி ஆடும் ஆட்டம்.
சதர் - சதரம் -சதிரம் (உடம்பு)
'ஏ! உன் சதிரம் உக்கிப்போகலியா' (நெல்லை வழக்கு)
சதரம் – சதிரம் – கொச்சைத்திரிபு (வ. வ. 140 – 141)
சதி > சதிர்
சதுரன், சதுரி - ARE 90/1932
நாட்டியத்தில் தாளத்திற்கேற்ப காலடிவைக்கை
(செ. ப அ. 3863)
சதுரான் சதுரி (ARE 147/1912)
மாந்தர் தம்பால்...வாய் முரிபாடி...சதிர் செய்வதோர் இவர் சார்வே
(தேவா. 1: 44: 5)
விதி வழி... நடம் சதிவழி வருவ தோர் சதிரே (தேவா. 3: 98: 2)
→சதி
சதிரும் சீரும் தாள ஓர்த்து (பிங்க. 1466)
↑ஆடல், கூத்து, தேவரடியார் முறை , தாசி ஆட்டம், சதிர், சதிர்க்கச்சேரி, சதிராட்டம், சின்னமேளம் எனத்தொன்று தொட்டு வழங்கிய தமிழர் ஆடல் முறை காலத்துக்குக்காலம் பெயர் மாற்றி அழைக்கப்பட்டுள்ளது. இந்த மரபான ஆடல் முறை தற்காலத்தில் பரதநாட்டியம் என்று அழைக்கப்படுகிறது.
→ பரதம்
2. பேரழகு, பேரழகு மிக்க மங்கையர்
சதிர் நாட்டியம் என்பது பேரழகுமிக்க நாட்டியம். இது நளினங்கள் நிறைந்ததாய் நளி நடனம் அல்லது இலாசியம் என்றழைக்கப்பட்டது. கடினமான கரணம் மற்றும் தாண்டவம் எளிய முறையில் சதிரில் ஆடப்படுவதால் இது இலாசியம் ஆயிற்று
சதிர் இள மடவார் – நம்மாழ்வார்
↑ திருவாரூர் வீதிவிடங்கப்பெருமாள் கோவில் வேங்கைவாசல் கல்வெட்டு சோமாஸ்கந்தரை 'சதிரவிடங்கன்' என்று குறிப்பிடுகிறது.

**சதிர்க்கச் சேரி:** → சதிர்

**சதிர்ப்பெண்டிர்:** → பதியிலார்

**சதிர்மேளம்:** → சதிர்

**சதிர் வரிசை :** சதிர் என்ற ஆடல் வகையில் பயிற்சி பெறும் வரிசை முறை :
1) அலாரிப்பு
2) சதிசுரம்
3) சப்தம்
4) வண்ணம் (வர்ணம்)
5) பதம்
6) சாவளி
7) தில்லானா
8) சுலோகம்
↑ இது தஞ்சை நால்வர்களான சின்னையா, பொன்னையா, சிவானந்தம், வடிவேலு ஆகியோர் பண்டைய சதிரிலிருந்து அமைத்த முறை.

**சதிராட்டம்:** → சதிர்

**சதிரி:** → சதுரி

**சதுர்:** → சதிர்

**சதுர்த்தம்:** → திறத்திறம்

**சதுர் மாடி :** தஞ்சை அரண்மனையில் சதிர் நாட்டியம் நிகழ்த்தப்பட்ட அரங்கு.

**சதுர உடல்நிலை :** = சதுரம், சதுரக்கரணம்
நாட்டியத்தில் அரைமண்டியில் இடது காலை ஊன்றி வலதுகாலின் குதிகாலைத்தூக்கி, மெட்டியை மட்டும் தரையில் ஊன்றி, இடது கையை வலது தொடைஅருகே உஞ்சல் (டோளம்) ஆக்கி வலதுகையை வலது தோளின் மேல் கொடி (பதாகம்) ஆக்குதல் சதுரம் (சதுரக் கரணம்) ஆகும். இந்த உடல் நிலை கரகஆட்டவகையில் ஒன்றான ஆரவல்லி நடனத்தில் காணப்படுகிறது

**சதுரக்கரணம்:** → சதுர உடல்நிலை

**சதுரக்கை :** ஒற்றைக்கை அவிநயம்

சதுரமாவது – சுட்டுவிரலும் நடுவிரலும் அணி விரலும் தம்முள் சேர்ந்து இறைஞ்சப் பெருவிரல் அகம்வர வைத்துச் சிறுவிரல் பின்பே நிமிர்ந்து நிற்பது; என்னை? சதுரமென்பது சாற்றுங்காலை,
"மருவிய மூன்று நிமிர்ந்து அகம் வளையப்
பெருவிரல் அகமுறப் பொற்பச் சேர்த்திச்
சிறுவிரல் பின்பேநிமிர்ந்த செவ்வியின்
இறுமுறைத் தென்ப இயல் புணர்ந் தோரே"
(சிலப். 3: 18அடியார்க். மேற்.)

**சதுரச்சிரம் :** = சதுரசிரம், சதுரம்

நாட்டியக்கை முப்பதனுள் முதலாவது கை.
(சிலப். 3: 13அடியார்க். அடிக்.)

**சதுரசிரம்:** → சதுரச் சிரம்

**சதுரம்:** → சதுர உடல்நிலை,சதுரக்கை, சதுரச்சிரம்

**சதுரமூன்று :**

*யாழ் உறுப்பான மாடகத்தின் அமைப்பு கூறுவது.*
மாடகமென்பது வகுக்குங்காலைக், கருவிளங் காழ்ப்பினை நால்விரல் கொண்டு, திருவியல் பாலிகை விடிவாகக் கடைந்து, சதுர மூன்றாத் துளையிடற்குரித்தே (சிலப். 8: 27 – 8அரும்)
*←பாணர்கைவழி. பக். 128 - 134*

**சதுரப்பாலை :**

*பண்ணாக்கும் பண்டைய முறைகளுள் ஒன்று.*
பாலை நான்கு வகைப்படும் : ஆயப்பாலை, சதுரப்பாலை, திரிகோணப்பாலை, வட்டப்பாலையென, என்னை? "ஆயம், சதுரம், திரிகோணம், வட்டம் எனப் பாய நான்கும் பாலையாகும்" என்றார்.
(சிலப். 17 : (13) அடியார்க்)
*← தமிழர் இசை பக். 257*

**சதுரன் :**

*ஆடலில் வல்ல ஆணுக்கான சிறப்புப் பெயர்*
*சதுரன், சதுரி* (ARE 90/1932)

**சதுராட்டி :** = நான்கன் உரு

*நான்கு வரிகள் கொண்ட கீதம்.*
சான்றோர் சதுராட்டி சாவட்டணை முகண்டி (பஞ்ச. 88)
சதுரம் இங்கு நான்கு வரிகளைச் சுட்டியது (மேலது உரை)
*சதுராட்டி என்பது நான்கு வரிகள் கொண்ட கீதம் இதனைச் சிலப்பதிகாரம் நான்கன்உரு என்றது. சதுரமாகி ஆள்வது - சதுராட்டி.*
*← சிலப். 3: 150அடியார்க் அடிக்.*

**சதுரி :** = சதிரி

*ஆடலில் வல்ல மகளிர்க்கான சிறப்புப் பெயர்.*
*சதுரன், சதுரி* (ARE 90/1932)
"விரலியும் சதுரியும் சொற்பொருள் நிலையில் ஒரே தன்மையினரே"
*(கா. சிவத். கட்டுரை. ஞானா கானம் பக். 13)*
....முக்கூடல் சதுரி பார்த்துச் சிரிக்கவோ கிடந்தாய்
(முக்கூட. பாடல் 118)
*(சதுரி - நடிப்புக்காரி என்ற பொருளில் ஆளப் பட்டுள்ளது).*
*ஆடல் மகள் பிற்காலத்தில் சதுரி எனப்பட்டாள் சதுரி என்பது வினைத்திறன் மிக்க, நுண்ணறிவு மிக்கபெண் என்ற கருத்தை உடையது* (DED. 1920)
*(ப. த. நா. பக். 227)*
*சதி > சதிர் > சதிரி > சதுரி*

**சந்தக்கலித்துறை :** நேரசை முதலாய்வரின் ஓரடிக்கு எழுத்து 14; நிரையசை முதலாய்வரின் ஓரடிக்கு எழுத்து 15 எனவரும் கலித்துறைப்பா வகை. எடு:- 'மூவாமுதலா' எனத் தொடங்கும் சீவகசிந்தாமணி கடவுள் வாழ்த்து
*← த. இ. பே. 247/ 15; → காப்பியக் கலித்துறை*

**சந்தக்கலிவிருத்தம் :** நேரசையால் தொடங்கினால் 11 எழுத்தும், நிரையசையானால் 12 எழுத்தும் கொண்ட கலிவிருத்தம்.
எடு:- 'முன்றில் எங்கு'எனத்தொடங்கும் சூளா. 13ஆம் பாடல்
*← த. இ. பே. 247/15*

**சந்தக்குழிப்பு:** சந்தச்செய்யுளின் ஓசை வாய்பாடு. தான, தன, தந்த தய்ய என்பன சந்தம். சந்தங்கள் சில சேர்ந்தது துள்ளல்; பல துள்ளல்கள் சேர்ந்தது ஒரு குழிப்பாகும் மூன்று குழிப்பும் தொங்கலும் சேர்ந்தது கலை.
பல்வகைத்துள்ளல் புணர்ப்பு ஓர் குழிப்பே (வண்ணத். 86)
↑ ஆராரோ, ஆரிரரோ, தானானே, தானனனே தன்னானே, னன்னானே போன்ற நாட்டுப் புறப்பாடல்களின் தொடக்கம் முதலியன பின்னால் சந்தம் மற்றும் வண்ணம் முதலிய இசைப் பாடல்களின் 'சந்தக்குழிப்பு' என்ற அமைப்புக்கு அடி கோலியது.

**சந்தத்தாண்டகம் :** சந்தஅடி மிக்கும் தாண்டக அடி மிகாமலும் வரும் செய்யுள்(சீவக. நச்சர். பக்.1598)
*←யா. வி. 94*

**சந்தத்தில் 'ஐ', 'ஔ' :** 'ஐ' யும்,'ஔ' வும் ஈற்றில் வந்தால் குறிலாகவும், இடையிலும் முதலிலும் அய், அவ் எனக் குறில் அடுத்த ஒற்றாயும், நெட்டெழுத்தின் தன்மை யாண்டும் பெறாது சந்தத்தில் கணக்கிடப்படும்.
*← வண்ணத். 2*

**சந்தப்பா :** பல்வேறு சந்தங்களால் அமைந்த பாடல். தாள அறுதிக்கேற்ப அமைந்த பாடல். இவை கலைவண்ணம், வகுப்புவண்ணம், உடற் கூற்று வண்ணம், வண்ணவிருத்தம், சந்த விருத்தம் என ஐவகைப்படும்.

26 எழுத்தால் நான்கடியான் வருவது (சூடா. 10: 30)

எடு:- சிலம்பு. மங்கல வாழ்த்து.

விரையினர் மலரினர் முதல் முகிழ்த்த மூரலர்முடிய (அடி. 54 – 59)

←வண்ணத் உரை. பக்13 (இ.சுந்தரமூர்த்தி); பாவலர் பண்ணை பக் 100

## சந்தப்பாடல் வகை:

1. சந்தக்கலிவிருத்தம்
2. சந்தக்கலித்துறை
3. சந்தக்கலித்தாழிசை
4. அறுசீர்ச்சந்தவிருத்தம்
5. எழுசீர்ச்சந்தவிருத்தம்
6. பன்னிருசீர்ச்சந்தவிருத்தம்
7. சந்தக்குறள்தாழிசை
8. சந்தவஞ்சிவிருத்தம்
9. சந்தவஞ்சித்துறை (பாவலர் பண்ணை. பக். 100)

**சந்தம் :** தாளத்தில் அமைந்த ஓசைவகைச் சொற்கள். செய்யுளின் வண்ணம் (Musical flow, rhythmic movement of verse). நிராயுத, பராபர என்ற சொற்கள் தனாதன என்ற தாளத்தில் அமைந்துவருதல் சந்தம் சந்தம் = அழகு; வடிவு(shape, form)

←செ. ப. அ. 1263

சந்தமே நிறம் வனப்பு சாற்றியகவிதை (சூடா. 11: 1)

**சந்தம் எட்டுவகை :** தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன,தய்ய என எட்டும் சந்தவகைகள். இவைகளின் இறுதி ஒலி நீட்சி பெற்று, தத்தா, தாத்தா... தய்யா என மேலும் 8 ஆகப் பெருகும் இவை முழுச் சந்தம் எனப்படும்.

## சந்தப்பிரிவு:

ன, னா, ம், த் - 1/2 சந்தம்
தத்த, தந்த - 1 சந்தம்
தந்தம், தந்தன - 1½ சந்தம்

←வண்ணத். உரை பக் 13.

## சந்தமாத்திரை:

| | | |
|---|---|---|
| க | - குறில் | - 1 மாத்திரை |
| கா | - நெடில் | - 2 மாத்திரை |
| கண் | - குறில்ஒற்று | - 2 மாத்திரை |
| காண் | - நெடில்ஒற்று | - 2 மாத்திரை |
| ஐ,ஔ | - நெடில் | - 1 மாத்திரை |

(ஐ, ஔ - குறிலாகவே கொள்ளப்படும்)
(ஒற்றெழுத்துக்கள் சந்தமாத்திரை பெறுவதில்லை)

**சந்த விருத்தம் :** விருத்தயாப்பில் சந்தக் குழிப்பின் படி அமைந்த செய்யுள்

எடு:- திருமழிசை ஆழ்வாரின் திருச்சந்தவிருத்தம். 'பொழிதரு நறுமலரே' முதலிய மூன்று (சிலம்பு) பாடல்களும் (7;(14),(15);(16) கலிநிலை விருத்தத்தான் அமைந்த சந்த விருத்தங்கள். (தன தன தன தனனா)

'சுடரொடு திரிதரு' முதலிய மூன்று பாடல்களும் (12:(18);(19);(20) குறில் வண்ணத்தான் அமைந்த சந்த விருத்தங்கள் (தன தன)

**சந்தவெண்பா :** முதல் இரு அடிகளும் வெண் பாத்தளை பெற்று ஏனைய அடிகள் சந்தப் பாடலாக அமைவது. இப்புது யாப்பினை அமைத்தவர் தஞ்சை வேதநாயகம் சாத்திரியார்.

எடு:- 'சிந்தும் புனல் நீரால் தேய மனைத் தும்புரக்க
வந்த சுதாகிறிஸ்து வள்ளலே – சந்ததமுன்
பாதமகத் திற்பதித்துத் துற்
பாவமகற் றித்திருத்திச் சற்
பாதைவழிக் குட்படுத்திச் சொற்.

(இசையும் தமிழும் பக். 149. வீ. ப. கா. சு)

**சந்தி :**

1. நாடகச்சந்தி, நாடக விலக்கு உறுப்பினுள் ஒன்று.
2. இசைப்பு,

அந்திப் பெயரும், கழையும் தெருவின் சந்தியும் இசைப்பும் சந்தியாகும் (பிங்க. 3474)

3. கூத்துவகையுள் ஒன்று

சிந்துப் பிழுக்கையுடன் சந்தி ... கோத்தவரிக் கூத்தின்குலம் (சிலப். 3: 13அடியார்க். மேற்.)

4. ஒருபெரும்பண்

மருதப்பண்ணின் பெருகியல்பண் (சிலப். 14: 160 – 67அடியார்க்.)

5. அங்கம் (Act) நாடகப்பகுதி.

**சந்திக்கூத்து :**

1. தெருச்சந்தியில் ஆடும் ஆட்டம் (தேநே. 179/1)

↑ தெருக்கூத்து (வீதி நாடகம்) ஆகலாம்.

2. திருவிழாவில் கோயிலின் முன்பாக மகளிர் ஆடும் கூத்து

← செ. ப. அ. 1266 - 67

**சந்திரகாந்தாரி :**

பண்களில் ஒன்று (பரத. இராக. 103)

**சந்திரவளையம்:**=சந்திரப்பிறை,சந்திர மண்டலம் (தெவ) தோல் கருவிகளுள் ஒன்று. நாகசுரத்தின் துணை வாத்தியம். குச்சியால் இயக்கப்படுவது. வளர்பிறை போன்ற தோற்றம் கொண்டது.

பேரிகைபடகம்... சந்திரவளையம்... (சிலப். 3: 27அடியார்க்.)

**சந்திர வலயம் :** சிலம்பு வடிவாய் அமைந்த வாச்சியம். பரல்கள் நிறைந்தது. தெருப்பாடகர்கள் இரு பெருவிரல்களிலும் அணிந்து பாடும் போது பயன்படுத்துவர்.

← செ. ப. அ 1270

**சந்திரிகா பைரவி :**
பண்களில் ஒன்று. (பரத. இராக. 102)

**சந்தியா தாண்டவம்: → இன்பநடம்**

**சந்தினிக் குனிப்பம் :**
கோவிலில் தேவரடியார் ஆடும் நாட்டியத்துள் ஒன்று (M.E.R.1912 பக். 127)

← செ. ப. அ. பிற். 262

**சந்து :** தாளம், பண், இசை
சந்துலாந்தமிழ் (தேவா. 797: 11)

← செ. ப. அ. 1272

**சந்தூர் :** ஒருவகைக் கம்பி (தந்தி) வாத்தியம். தட்டுவாத்திய வகையைச் சேர்ந்தது. உலோகக் கம்பிகளின் மீது மெல்லிய மரச் சுத்திகளால் தட்டி வாசிப்பார்கள். ஐரோப்பாவில் நாட்டுப்புற இசைப்பாடல்களை இசைப்பதற்காகவே இதைப் பயன்படுத்துகின்றனர். இந்துத்தானி செவ்வியல் இசையில் இக்கருவி வழக்கில் உள்ளது.

← த க க. 276 /II

**சந்யாசம்: → முதல்கண்டமுடிவுச்சுரம்**

**சப்தகம்: → தானநிலை**

**சப்தம் :** = சொல், சதி, சலாமு, சலாம்தரு.
நிருத்தமும்,நிருத்தியமும் சேர்ந்த பகுதி. பாடலின் கருத்துக்கள் பலவித அவிநயங்களுடன் விளக்கப்படும் நாட்டியப்பகுதி. இந்த இசை பொதுவாக காம்போதிப் பண்ணில் ஏழன் நடையில் (சாய்ப்புத்தாளம்) மேல் தானக்குரல் (ச்) அதிகமாகப் பயன்படுத்தி அமைக்கப்பட்டிருக்கும். சதி என்ற சொற்கட்டுகளுடன் நாட்டியத்திற்கான இந்த இசை உருப்படி பாடப்படுவதால் இது சப்தம் என்று அழைக்கப் படுகிறது 'சலாம்' என்ற வணக்கத்துடன் முடிவதால் இதற்கு 'சலாமு' என்றும் பெயர் உண்டு பாடல், சதிச்சொல், சுரசதி சதிசுரம், சதியுடன் தீர்மானம் என்ற ஒழுங்கு பெற்றது.

← தெ. இ. பக். 82. ; ப. ஆ. இ. பக். 106

**சப்பாணி :**
1. கை கொட்டுகை (clapping of hands)
ஒன்பதாம் திங்களில் சப்பாணியும்... (திவா. 2468)
சப்பாணி கொட்டியருளே (மீனாட். அம். பிள். தமி. சப்பாணி.1)
2. கையால் தாளமிடுதல்
பாணி = கைத்தாளம்

**ச, ப :** சமன், பட்டடை என்னும் இரு தென் சொற்களின் முதல் எழுத்துக்களே 'ச' 'ப' என்பது சிலர்கருத்து (தே.நே. 303/IX)
மந்தக்குரல், தாழ்குரல் - சமன்குரல் - ச (மத்திமஸ்தாயி சட்சம்)
பட்டடை நரம்பு - ப (பஞ்சமம்)
குரல் மந்தமாக இளி சமன் ஆக (சிலப். 17: 18)
தாழ்குரல் தண்ணுமை (சிலப். 3: 27)
வண்ணப் பட்டடை யாழ்மேல் வைத்து (சிலப். 3:63)

**சபாகானம்: → அரங்கிசைப்பாடல்**

**சபை:**
கோவிலிலுள்ள நாட்டிய அரங்கம் (dancing hall)
எடு:- சித்திரசபை - திருக்குற்றாலம்.

**சபையுள்ளார் :** நாடக அரங்கில் இசைக்கும் பாணர் கூட்டத்தார்.

← செ. ப. அ 1281

**சம்பத்து வேட்டை :**
ஐந்து தாளங்களுள் ஒன்று (பரத. தாள. 14)

**சம்பந்தர் தேவார யாப்பு :**
சம்பந்தர்பாடிய 385 பதிகங்களில் அமைந்துள்ள யாப்புகள்:

| | |
|---|---|
| 1. கலிவிருத்தம் | – பதிகம் 106 |
| 2. ஆசிரியவிருத்தம் | – பதிகம் 88 |
| 3. கலித்துறை | – பதிகம் 79 |
| 4. கொச்சகங்கள் | – பதிகம் 54 |
| 5. ஆசிரியத்துறை | – பதிகம் 27 |
| 6. வஞ்சிவிருத்தம் | – பதிகம் 13 |
| 7. வஞ்சித்துறை | – பதிகம் 9 |
| 8. குறள்தாழிசை | – பதிகம் 3 |
| 9. நாலடிமேல்வைப்பு | – பதிகம் 3 |
| 10. ஈரடிமேல்வைப்பு | – பதிகம் 2 |
| 11. இணைக்குறள் ஆசிரியம் | – பதிகம் 1 |
| இவற்றுள் திருவியமகம் | – 4 |
| திருச்சக்கரமாற்று | – 2 |
| ஏகபாதம் | – 1 |
| எழுகூற்றிருக்கை | – 1 |
| திருக்கோமூத்திரி | – 1 |
| திருமாலை மாற்று | – 1 |

ஆகிய சித்திரக்கவிப் பதிகங்களும், மொழி மாற்றுப் பொருள் கோள் நிலையில் வரும் பதிகம் ஒன்றும் உள்ளன. இவற்றுள் சித்திரகவி சம்பந்தர் படைத்த புதுமை யாப்பு.
←இலக்கணத். முன். பக் 81, 82; த. இ. பே. பக். 73/ 16

**சம்பூரணசாடவம்:** → பண் - பண்ணியல்

**சம்பை:** → செம்படை

**சம்மியம் :** கூத்துவகையுள் ஒன்று (யாழ். அக.)
←செ. ப. அ. 1287

**சம்யுத ஹஸ்தம்:** → இணைக்கை

**சம்வாத தரு :** உரையாடல் தரு வினா, விடை அமைப்பில் வரும் நாடக இசைப் பாடல்.
→ தர்க்கதரு

**சம்வாதிசுரம் :** வாதி சுரத்துடன் ஒத்தொலிக்கும் சுரம். நின்ற நரம்பை விடுத்து ஏழாம் நரம்பும் , (இணைச் சுரம்) ஐந்தாம் நரம்பும்(கிளைச் சுரம்) சம்வாதி சுரங்கள். (Fifth and forth)

ச ரி$^{1}$ ரி$^{2}$ க$^{1}$ க$^{2}$ ம$^{1}$ ம$^{2}$ ப த$^{1}$ த$^{2}$ நி$^{1}$ நி$^{2}$
0 1 2 3 4 5 6 7
சப, சம$^{1}$ - சம்வாதி சுரங்கள் அதாவது 'ச' வுக்கு 'ப'வும் 'ம'வும் சம்வாதி சுரங்கள்

**சம அடைவு :** = சமபாதம்
இருபாதங்களையும் பின்புறம் கூட்டியும், முன் பகுதிகளை அகட்டியும் வைத்துக் கொள்ளும் நிலை. கடவுளையும் பெரியோர்களையும் வணங்கி நிற்கும் போது கொள்ள வேண்டிய அடைவு.
← த. க. க. 22 /I

**சம எடுப்பு :** = சமகிரகம், உடன் எடுப்பு
தாளமும் பாட்டும் சமமாக (உடன்) தொடங்குவது. (Song begins on the principal beat of the time measure)
→ உடன் எடுப்பு

**சமகலி :** அங்கக்கிரியை பதினாறனுள் ஒன்று.
←செ. ப. அ. 1291 & 1295 ; சிலப். 3: 13. அடியார்க். அடிக். (சுத்தானந்தப் பிரகாசம்)

**சமகிரகம்:** → சமஎடுப்பு

**சமசந்தத்தாண்டகம் :**
சந்தஅடியும் தாண்டகஅடியும் சமமாக ஒத்து வரும் பாவினம்.
(சீவக. நச்சர். உ.வே.சா. பக் 1598)
←யாப். வி. 94; செ. ப. அ. 1289

**சமசந்தி :** இயைபு (concord)

**சமசுதி :** நடுத்தானக்குரல் (மத்திய ஸ்தாயி சட்சம்)
ஒரு கட்டை(வழக்கு)க்குப் பாடுதல். பாடகர் தமது ஒத்து(சுருதி)நிலையை நடுத்தானக்குரல் சுரத்திற்கு அமைத்துக் கொள்வது.

**சமசுரம் :** நடுத்தானத்துச் சுரம் (மத்திய ஸ்தாயி சுரம்)
இளி என்னும் நரம்பு சமசுரமாக...
(சிலப். 17: கூத்துள் படுதல் அடியார்க்.)

**சமதாளம் :**
ஒன்பது தாளத்துள் ஒன்று (திவா. 2437)

**சமநிரல்பண் :** = சமன்கிரக ராகம்
ஏறு நிரலிலும், இறங்குநிரலும் சமமான கோவைகள் கொண்ட பண்.
எடு:- முல்லைப்பாணி (மோகனம்)
ஏறுநிரல் - ச ரி$^{2}$ க$^{2}$ ப த$^{2}$ ச்
இறங்கு நிரல் - ச் த$^{2}$ ப க$^{2}$ ரி$^{2}$ ச
← இ. து. த. சொ. பக். 28

**சமநிலை :**
1. அறுவகை நிலைகளுள் (dance pose) ஒன்று;
2. பாதம் ஐந்தனுள் ஒன்று.
(சிலப். 3 : 13. அடியார்க். அடிக். சுந்தானத்தப் பிரகாசம்)
3. நடுத் தானம் (சம ஸ்தாயி)
செந்நிலையாவது – சமநிலை (சிலப். 17: (17) அரும்.)
(செந்நிலை – நடுத்தானம்)

**சமநிலைப்பகுப்பு :** சமப்பகுப்பு அலகுமுறை. (Equal temperament). ஒரு இசை மண்டிலத்தை (octave) பன்னிரு கோவைகள் ஆக்கி, ஒவ்வொன்றையும் ஈரிரு சமபாகம் ஆக்கி 24 பாகங்கள் கொள்ளல். இது மேலைநாட்டு இசை முறை. இப்பகுப்பின் அடிப்படையில் தான் 'ஆர்கன்' (organ) என்னும் ஒத்திசைப் பெட்டகங்கள் செய்யப்பட்டுள்ளன. இதற்கு மாறான இயல் பகுப்பு முறையில் (Just Intonation) இசை இடைவெளிகள் நிலையாக இருப்பினும், ஒவ்வொரு பண்ணிற் கேற்ப அலகுகள் (சுருதி) ஏற்ற இறக்கம் பெறும். அதாவது குறையும் அல்லது கூடும்.
← ப. இ. இ. பக். 70
← Ox.con.dic.of Music.p.499

**சமநிலை மருட்பா :**
வெண்பா அடியும் ஆசிரிய அடியும் ஒத்துவரும் மருட்பாவகை.
(இலக். வி. 749 உரை)
←செ. ப. அ. 1296

**சமநிலை வஞ்சி :** = நேர்நிலை வஞ்சி
இரு சீரடியால் வரும் வஞ்சிப்பாட்டு.
நேர்நிலை வஞ்சிக்கு ஆறுமாம் –
சமநிலை வஞ்சிக்கு ஆறு எழுத்துமாம் (தொ. செ. 42 நச்சர்)
இருசீர் அடிகளான் வரும் வஞ்சியடிக்கண் ஒரு சீரில் ஆறெழுத்தும் வரும். முச்சீரான் வருவது வியநிலை வஞ்சி.
←செ. ப. அ. 1291; → வியநிலைவஞ்சி; சமம்

**சமநிலை வெண்பா :** = சவலை வெண்பா (ச.அ.)
தனிச்சொல் இன்றி இரண்டு குறள் வெண்பாக்களை இணைத்துச்செய்யும் வெண்பா வகை. (மாறனலங். 198 உரை)
எடு:- அட்டாலும் பால் சுவையில்... சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்
என்ற ஔவையின் மூதுரைப் பாடல்
→ சமம்

**சமபாதம்:** → சமஅடைவு

**சமம் ஏழு :** சமன்தானத்துச் சுரங்கள் ச, ரி, க, ம, ப, த, நி என்ற ஏழு.
... சமம் ஏழும்... (சிலப். 3: 80 – 81அடியார்க்.)
சமம் - சமன்தானம் (மத்தியஸ்தாயி)

**சமம் :**
1. இரட்டை எண், (even number) (பன்னிரு. பாட். 140)
2. ஒத்த அடிகளை உடைய விருத்தம் (வீரசோ. யாப். 33)
3. உடன் எடுப்பு, சமன்கிரகம்

**சமப்பால் :** சமநிலப் பெயர்; முல்லை மற்றும் நெய்தல்.
முல்லையும் நெய்தலும் மொழி சமப்பாலே (திவா. 927)
← சூடா. 5: 33 அடிக்குறிப்பு
வன்பால் - குறிஞ்சியும் பாலையும்
மென்பால் - மருதம்
புறவொடு... வன்பால் குறிஞ்சி பாலையா மருதந்தானே நிறையு மென்பாலாம்... (சூடா. 5: 33)

**சமபாதம் :** கலிவிருத்தம்
நாற்சீர் நாலடியுடைய இசைப்பா.
←ப. ம. பக். 294

**சமபாத விருத்தம் :** விருத்தயாப்பில் அமைந்த இசைப்பா வகையுள் ஒன்று
செப்பரிய சிந்து... சமபாதம்...இன்னிசையின்பா
(பஞ்சமரபு. சிலப். 6: 35 அடியார்க். மேற்.)

**சமன் :** சமன்தானம், நடுத்தானம் (மத்தியஸ்தாயி middle octave)
வலிவும் மெலிவுஞ் சமனு மெல்லாம் (சிலப். 3: 93)
மந்தம், மத்திமம் வழங்கும் சமன் இசை (திவா. 1870)
கருது... மருவிய மந்தத்தோடு மத்திமம் சமன் இசைப்பேர்...
(சூடா. 10: 40)

**சமன் மண்டிலம் :** = நடுமண்டிலம், மந்த இயக்கு.
தாழ்மண்டிலம் (மத்தியஸ்தாயி), செந்நிலை
k© o y« (middle octave)
குரல் மந்தமாக... (சிலப். 17)
குரல்மந்தமாக - மந்தக்குரல், சமன் மண்டிலக்குரல்
தாழ்குரல் தண்ணுமை... (சிலப். 3: 27)
தாழ்மண்டிலக்குரல் (ச) தாழ்குரல் என்று கூறப்பட்டுள்ளது. முழவுகள் தாழ் மண்டிலக் குரலுக்கு ஒத்து (சுருதி) சேர்க்கப்பட்டதை இது குறிப்பிடுகின்றது.
வலிவு மெலிவும் சமனும் எல்லாம் (சிலப். 3: 93)

**சமுத்திர கோசம் :** பல்லவ மன்னர்களின் அரச வாத்தியத்துள் ஒன்று
சத்ரி கரிவயும் ஸமுத்ர கோஷமும்
(தெ. இ. க. 4·135, த. க. சொ. 595)

**சமூகப்பாடல் :** சமூகத்திலுள்ள யாவரும் பங்கேற்று ஆடிப் பாடும் பாடல் (communal poetry).
சான்று - குரவை; கும்மி

**சயகண்டி :** = சேகண்டி, சயகண்டை
சங்கமொடு சயகண்டி தக்கை (திருவேங். சத. 66)

**சயகண்டை:** → சயகண்டி

**சயதாளம் :** ஒன்பது தாளத்துள் ஒன்று. (திவா. 2437)

**சயந்தக்கை:** → சயந்தம்

**சயந்தம் :** = சயந்தக்கை.
நாட்டிய இரட்டைக்கை பதினைந்துள் ஒன்று அவையாவன:
அஞ்சலி... சயந்தம்... பதினைந்தென்ப (சிலப். 3: 18 அடியார்க்.)

**சயிந்தவி :** பண்களில் ஒன்று (பரத. இராக. 55)

**சர்வசுர ரக்தி ராகம்: → அனைத்து உள்ளோசைப்பண்**

**சர்வசுர கமக வரிக ராகம்: → அனைத்து உள்ளோசைப்பண்**

**சர்வசுர மூர்ச்சனக்கார ராகம்: → அனைத்துச்சுரப் பெயர்ப்புப் பண்**

**சர்வ வாத்தியம் :**

*அனைத்து இசைக்கருவிகள் முழக்கத்துடன் பிற இசைமுறைகளையும் பாடி ஆடும் ஒரு நிகழ்ச்சி இதில் 72 வகை நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. செங்கைமாவட்டம் செய்யூர் கோவிலில் பெரிய திருவிழாவின் (பிரம்மோத்சவம்) போது மூல வருக்குச் செய்யப்படும் பதினாறு வகைப் பூசனை (சோடச உபசாரம்)நடந்தபின்பு நிகழ்த் தப்படும் நிகழ்ச்சி.*

← *தெ. இ. அ. பக் 83 - 84* /I & 210 -12 / IV

**சரசாங்கி :** *ஒருபெரும்பண் தமிழிசையின் 32 பாலைகளுள் 14 ஆவதாக வருவது (27வது மேளம்). இது ஒரு மெல்லுழை (சுத்த மத்திமம்)ப் பண்.*

**சரசுவதி :** பண்களில் ஒன்று (பரத. இராக. 104)

**சரசுவதி மனோகரி :**

பண்களில் ஒன்று (பரத. இராக. 103)

**சரணம் :**

1. *கீர்த்தனையின் மூன்றாம் உறுப்பு.*

↑ பண்டைய தாழிசையின் பின்னைய பெயர் சரணம்.

2. *வேதப்பகுதி* (section or branch of Veda)

← *செ. ப. அ. 1313*

**சரபத்து :** *தந்தி வாத்தியத்துள் ஒன்று.*

←*செ. ப. அ 1314.*

**சரம்:**

1. *கொறுக்கச்சி, சீவாளி,* (reed)

மணிவடமும், கொறுக்கச்சியும், நடையும்... சரமே (பிங்க. 3481)

2. *இசைச்சுரம்*

பாடுமென்மைச் சரங்கொடு (திருவாலவா. 57: 31)

← *செ. ப. அ. 1314*

**சரமகவி: → இரங்கற்பா**

**சரமண்டலம்: → சுரமண்டலம்**

**சரளி அலங்காரம் :**

*சுரவரிசை பயிலுவதற்கான ஒருமுறை*

**சரளிப்பதம் :** *சுரவரிசை இடை இடையே வரும்படி பாடும் பாட்டு.*

**சரளி வரிசை :** = *சுராவளி*

*சுரவரிசை; இசைப்பயிற்சியில் முதலாவது வருவது.*

அமுதரச மொழுகு சரளிகள் பழகு சங்கீத வித்தை

(திருவேங்கட. சத. 63)

*சுர + ஆவளி > சுராவளி > சரளி*

*(ஆவளி = வரிசை)*

**சரிகை :** *கூத்தின் அங்கக்கிரியை பதினாறனுள் ஒன்று*

அங்கக்கிரியை பதினாறாவன: – 1. சரிகை...

(சிலப். 3: 13 உவேசா. அடிக். (சுத்தானந்தப்பிரகாசம்)

**சல்லகம் :** *'சல், சல்' என்று ஒலிக்கும் தாளக் கருவி இது ஒலியடியாகப் பெற்ற பெயர்*

**சல்லரி :** = *சல்லி, சல்லிகை, அரிக்கூடு இன்னியம்*

*ஒரு வாய் திறந்த ஒருமுகப்பறை; 'சல், சல்' என ஒலித்தலால் பெற்ற ஓசையடிப் பெயர்*

ஒரு வாய்திறந்து உள் கடிப்பு உடல் விசித்த
சல்லரி அங்கைத்தலைவிரல் தாக்க (கல்லா. 8: 17–18)

மத்தளம் தண்ணுமை இடக்கை சல்லிகை...

(சிலப். 14: 151. அடியார்க்.மேற்)

சல்லரி கொக்கரை குடமுழவு (தேவா. 7: 36: 9)

சல்லரி தாளம் தகுணிதம் தத்தளகம் (ஆதிஉலா. 14)

அரிக்கூடு இன்னியம் கறங்க (மதுரைக். 612)

அரித்தெழும் ஓசையையுடைய சல்லி, கரடி முதலிய

(மேலது நச்சர்.)

*பேரிகை படகம்... சல்லிகை... (சிலப் 3: 27அடியார்க்)*

← *த க க. 125* /II; → *எல்லரி*

**சல்லாபத்தரு :** *வினாவிடையாக நாடக அரங்கில் பாடப்படும் பாடல்.*

*ஒப்பு: உறழ்கலி; தர்க்கப்பாடல்*

*குறவஞ்சியின் சிங்கன் சிங்கி உரையாடல் பகுதி*

**சல்லி:** → சல்லரி

**சல்லிகை :** ஒருமுகப் பெரும்பறை வகையுள் ஒன்று.

**சலங்கை :** = சதங்கை, கெஜ்ஜை, கிண்கிணி.
*ஆடலில் பாதத்தின் தாளக் கொட்டலுக்கு இணையாக ஒலிக்கும் சலங்கை*
நாளென் செய்யும்... தாளும் சிலம்பும் சதங்கையும், தண்டையும்
(அருணகிரியார்)

**சலதரங்கம் :** = நீரலை
*பீங்கான் கோப்பைகளில் வெவ்வேறு அளவுகளில் தண்ணீரிட்டு ஒத்துக் (சுருதி)கூட்டி சிறு கழியால் கோப்பையின் விளிம்பைத் தட்டி வாசிக்கும் இசைக்கருவி. இது கஞ்சக்கருவி வகையைச் சேர்ந்தது; தட்டு வாத்தியம்.*
*(சலம் - நீர்; தரங்கம் - அலை)*
*←செ. ப அ. 1326; த. க. க. 283/*II

**சலாம் தரு :** = சப்தம், சலாமு
*நாட்டிய உருப்படிகளுள் ஒன்று*
*→ சப்தம்*

**சலாமு:** → **சப்தம், சலாம்தரு**

**சவணிக்கைத்தரு :**
*நாடக அரங்கில் நடன் (நடிகன்) தோன்றும் போது பாடும் பாடல்.*
*சவணிக்கை, சவணிகை = நாடக அரங்கத்திரை.*
↑ திரைக்குப்பின்னிருந்து நாடக நடிகர் பாடும் நாடகப்பாடலான 'முகம்' ஆகலாம்.

**சவலை :**
1. அடிகுறைந்தும் மிக்கும் வரும் பாட்டு (வீரசோ. யாப். 24)
ஈற்றயலடி முச்சீர்கொண்டும், ஏனைய மூவடிகள் நாற்சீர் கொண்டும் வரும் இசைப்பாடல் (பஞ்சமரபு. பக். 294)
*(சவலை - தேய்வு)*
2. *இசைப்பா வகையுள் ஒன்று*
செப்பரியசிந்து திரிபதை சீர் சவலை... இன்னிசையின் பா
(பஞ்சமரபு. சிலப். 6: 35. அடியார்க். மேற்.)

**சவலை வெண்பா:** → **சமநிலை வெண்பா**

**சவுக்க நடை:** → **சவுக்கம்**

**சவுக்கம் :** *தாளத்தின் விளம்பம். முதல் காலம். முதல் நடை* (slow time-measure)

**சவுக்க வண்ணம் :** *நாட்டியத்திற்குரிய உருப்படி. மெது நடையான முதல் காலத்தில் அமைந்த வண்ணப்பாடல்.*
*←செ. ப. அ. 1338,* → சௌக்கவண்ணம், பதவண்ணம்

**சறுக்கடைவு :** *நாட்டியத்தில் (கூத்து) பாதத்தின் முன்பகுதியைச் சறுக்கி அதாவது சரிந்து தேய்த்துச் செல்லுவதான நாட்டிய அடைவு*

**சறுக்கல் அடைவு :** *நாட்டியத்தில்(கூத்து) தட்டடைவில் இடது காலைப்பின்னோக்கியோ அல்லது முன்னோக்கியோ சறுக்கி வலது காலால் தட்டிச் செல்வது சறுக்கல் அடைவு.*

**சன்னை :** *பெருமுரசு வகையுள் ஒன்று; இது கோயில் முரசு*
*←செ. ப. அ. 1347*

# சா

**சாக்கை :**

1. *நிமித்திகர், வள்ளுவர், உள்படுகருமத்தலைவர்*
பெருகிய... நிமித்திகன் பேர் சாக்கை வள்ளுவன்...
(சூடா: 2 : 22)

வள்ளுவர் சாக்கை எனும் பெயர் மன்னர்க்கு
உள்படு கருமத்தலைவர்க்கு ஒன்றும் (திவா. 189; பிங்க. 843)

2. *வேத்தியல் கூத்தர், கூத்தர், தேவரடியார்*
வெற்றிக்காலத்தும், அமைதிக்காலத்தும் அரசர்க்குக் கூத்தாடி மகிழ்ச்சியை உண்டு பண்ணும் வேத்தியல் கூத்தரைக் குறிக்கும்
(தே.நே. 50 – 51 / 13)
அரசர்க்கே நாடகம் நடிப்பவர் (தே.நே. 126 / 8)
அம்பலவாசி (கோவிலில் வாழ்பவர்). பார்ப்பனருக்கும், நாயருக்கும் இடைப்பட்ட அம்பல வாசிச் சாதியினர் (நித்திய சுமங்கலி. பக். 75)

3. *சாக்கைகூத்து ஆடுபவரின் பட்டப் பெயர்*
*கீத்தி மறைக்காடன் ஆன திருவெள் அறை சாக்கைக்கு நிவந்தம்*
*(தெ. இ. க. 5 718, த. க. சொ. 236)*
*சாக்கை பறை பனர் இளமகன்*
(CHHS,1971 /96; *த. க. சொ. 75)*

கூத்தச் சாக்கையன் ஆடலின்... (சிலப். 28: 77)
*சாக்கையர் குமாரன் ஸ்ரீகண்டன் என்பார் அங்குப் புரட்டாசி விழாவில் நடித்துள்ளார்.* ← ARE 120 /1925

4. *பாணன்*
*பாணன் உத்தமன் தூற்றியான அரிகுல கேஸரிச்சாக்கைக்கு*
*(தெ. இ. க. 2 66)*

**சாக்கைக்காணி :** *சாக்கைக்கூத்து வல்ல கலைஞர்களுக்கு அளிக்கப் பெற்ற நிலம்.*

**சாக்கைக்கூத்து :** *சாக்கையர் ஆடிய கூத்து.*
*கீழைப்பழுவூரில் பரகேசரிவர்மனின் ஆறாம் ஆட்சி ஆண்டில் திருவாலந்துறை நல்லூரில் ஐப்பசித் திங்களில் அசுவதி நாளில் சாக்கைக்கூத்து மூன்று அங்கம் நிகழ்த்த ஆலையூர்ச் சாக்கைக்கு 1 1,2 கழஞ்சு பொன்னும், மூன்று கலநெல்லும் அளிக்கப் பட்டது*
← ARE 250/192
*முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் காமரச வல்லியில் சாக்கைமாராயன் விக்கிரம சோழன் சாக்கைக் கூத்தாடநிலம் பெற்றுள்ளான்.*
← ARE 65/1914.
*அச்சுவதி திருவிழாவுக்கு வந்து சாக்கைக் கூத்து ஆட*
*(தெ. இ. க. 19 171. த. க. சொ. 236,* I)

↑ இக்கூத்தின் பிற்கால மரபு இவ்வாறு ஆகலாம்
சாக்கைக்கூத்து > கொடுகொட்டி (கொட்டிச் சேதம்) > கண்ணன் ஆட்டம் > இராமனாட்டம் > கதகளி
சிலப்பதிகாரம் ஒரு சாக்கைக் கூத்தாகலாம். அது துன்பியல் நாடகம்; சாந்திக்கூத்து; அதுவும் வரிச் சாந்திக்கூத்து; அகக் கூத்தின் வகையுள் ஒன்று.
→ *சாக்கை*

**சாகரி:** *பண்களில் ஒன்று* *(யாழ் அக்)*

**சாகித்தியம்:=**மாது
*இசைப்பாட்டு* (Musical composition, Poetry)
← *செ. ப. அ. 1353*

**சாகுளி:** *பண்களில் ஒன்று* *(பரத. இராக. 103)*

**சாங்கிமம்:**
*மருதயாழ்த்திறன்* *(பிங்க. 1383)*

**சாடவ ஔடவம்:** → பண்ணியல் - திறம்

**சாடவ சதுர்த்தம்:** →பண்ணியல் - திறத்திறம்

**சாடவ சம்பூரணம்:** → பண்ணியல் - பண்

**சாடவம்:** → பண்ணியல்

**சாத்துக்கவி:** *சிறப்புப்பாயிரப்பாடல்; சாற்றுக்கவி*

**சாத்துவதி:**
*கூத்துப்பாணி (தேசி) நான்கனுள் ஒன்று; நால்வகை விருத்தியுள் ஒன்று மானிடர் அல்லது கடவுளர் கதை மாந்தராய் அறம் பொருளாய் வரும்கூத்து*
சாத்துவதியாவது – அறம் பொருளாகத் தெய்வமானிடர் தலைவராகவருவது
(சிலப். 3: 13. அடியார்க்.)

ஆரபடி சாத்துவதி என்றிரு விருத்தியும் (சிலப் 23. கட்டுரை. 10)
சாத்துவதி – Grand style - அவந்திதேசி(அவந்திபாணி)
அவந்தி, சௌராட்டிரம், சிந்து, திரிபுரா முதலிய
வட்டாரங்களில் ஆடப்படும் கூத்துப்பாணி(style)
← பரதரின் நாட்டிய சாஸ்திரம். மொழிபெயர்ப்பு
மனோமோகன் கோஸ்)சுலோகம்36 - 42பக். 197- 99/]
விருத்தி - பாணி, தேசி (style, local usage)
→ஆரபடி, கைசிகி, பாரதி

## சாதகம் பண்ணுதல்:

*கலைப்பயிற்சி செய்தல்(to practise any art). சிறப்பாக இசைப்பயிற்சி செய்தலைக் குறிப்பது.*

## சாதாரணகாந்தாரம்: → மென்கைக்கிளை

## சாதாரி:= முல்லைப்பாணி, முல்லையந்தீம்பாணி

முல்லையந்தீங்குழல், முல்லைக்குழல் (மோகனம்) பண்டைய முல்லைப்பாணியான, இன்றைய மோகனப் பண்ணிற்கு , இடைக்காலத்தில் வழங்கிய பெயர் சாதாரி.

சாதாரி தேசி நாமக்கிரியைமுதல்...(விராலிமலை திருப்புகழ் 350)
பாலையில் எழுப்பி...
தாரியில் காட்டித் தரும் சாதாரி (கல்லா. 43: 29 – 31)
*முல்லையாழ் (அரிகாம்போதி)த்திறமாகவே சாதாரி (மோகனம்)யைக் குறிப்பிடுகிறார்.*

↑ சிலப்பு ஆய்ச். குரவையில் **'எழுவர்இளங் கோதையார்'**– ஏழுஆயமகளிரை ஏழு ஓரை (இராசி) களில் நிறுத்தி ஏழுசுரப் பண்ணான முல்லை யாழ் (அரிகாம்போதி) வருமுறை கூறிய பிறகு **'குரல் மந்தமாக'** என்ற வெண்பாவில் சாதாரி (முல்லைப்பாணி) வருமுறையை இளங்கோ அடிகள் கூறுகிறார். எனவே முல்லையாழின் திறமே சாதாரி. 103 பண்வரிசையில் 98வதுபண்.

சாதாரி என்னும் கானம் பாடினாள் (திருவாலவா. 54: 32)
யாழின்பகுதி என்பது பண். அதுசாதாரி
(தொல். அகத். 20 இளம்.)
விசையொடு... இன்னிசை எழும் சாதாரி (திருவிளை. 2058)
போதாரி வண்டெல்லாம் நெட்டெழுத்தின் மேல் புரிய
சாதாரி நின்றறையும் சாந்து (திணைமாலை150. 95: 4)
*சாதாரிப்பண்ணில் அமைந்த பதிகங்கள்:-*
*தேவா. 3: 67 - 99 & தேவா. 4: 9*
தக்கேசி காந்தாரம் கௌசிகம் சாதாளி (பஞ்ச.80)
*(சாதாளி - சாதாரி என்பதன் பாடபேத மாகலாம்)*
விறகாளாய் சாதாரி பாடுமாறும் (திருவாலவா. பதி. பாயிரம். 8)
பாடுதும் முல்லைத்தீம்பாணி யென்றாள் (சிலப்.17: (17))
முல்லையந்தீங்குழல் கேளாமோ தோழி (சிலப். 17: (21))
பண்:"முல்லைத்தீம்பாணி என்றாள்"(17:செந்நிலை) என்பதனால் சாதாரியும் கூறினார். (சிலப். பதிக. உரை. அடியார்க்.)
→ முல்லைப்பாணி

## சாதி: விலக்குறுப்பு பதினான்கனுள் ஒன்று

விலக்குறுப்பென்பது... சாதியும்... இசைய எண்ணின் ஈரேழ் உறுப்பே
(சிலப். 3: 13 அடியார்க்.)

## சாதிப்பெரும்பண்: → பாலை

## சாந்தி: சாந்திக்கூத்து

*சொக்கம், மெய், அவிநயம், நாடகம் என இது நால் வகைப்படும். மன அமைதி அடைவதற்காக ஆடப்படும் கூத்து.*

பரவிய சாந்தி அன்றியும்... (சிலப் 6: 54 – 5. அடியார்க்.மேற்.)
நாயகன் சாந்தமாக ஆடிய கூத்து, சாந்திக்கூத்து எனப்படும்
(சிலப். 3: 12 அடியார்க்.)
*நாடகம் அவலமாகவும் இறுதியில் அமைதியாகவும் மங்களகரமாகவும் முடிவது(Tragic comedy)*
*எடு:-*
*சிலப்பதிகாரம், இராச இராசேசுவர நாடகம்.*
சாந்திக்கூத்தே... என்மனார்புலவர் (சீவக. 672 நச்சர். மேற்.)
"வாசிகைவைத்து... ஈசனுக்கும், காளிக்கும் சாந்திக் கூத்தாடத்தகும்" (சிலப். 5: 49 அடியார்க். மேற்.)
*இராசஇராசேசுவர நாடகத்தை பெரிய கோவிலில் நடிப்பதற்காகச் சாந்திக்கூத்தன் திருவாளன் திருமுது குன்றனான விசயராசேந்திர ஆச்சார்யனுக்கும் அவன் வர்க்கத்தார்க்கும் உரிமை அளித்து 120 கலம் நெல் அளிக்கப்பட்டது (தெ. இ. க. 2 . 67)*
சாந்திக்கூத்தும் ஆலத்தியும் கண்டு (சீவக. 2468. நச்சர்.)
*திருவேங்கை வாசலில் இராசராசனது 5ஆம் ஆட்சி யாண்டில் சாந்திக்கூத்தில் ஆறுகூத்துக்களை இருபெண்கள் ஆடியுள் ளனர்.* (ARE 254/ 1914)
*இவ்வூரிலேயே சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டியன் காலத்தில் சாந்திக் கூத்தன் அரையன் ஒன்றாயிரம் குடிவார உரிமை பெற்றுள்ளான்*
*(புதுக்கோட்டைச் சாசனங்கள். எண் 275)*
*...சாந்திக் கூத்தாடுகின்ற ஏழுநாட்டு நங்கைக்கு...*
*(மேலது. எண் 128)*
*திருநாளுக்குக் கூத்தாடுகைக்கு சாந்திக்கூத்தாடு கின்ற* (IPS, 128; *த. க. சொ. 202)*

↑ தொல்பழங்குடிச் சடங்கு நடனமான சாந்திக் கூத்தைக் கண்ணுளர் நிகழ்த்தியுள்ளனர்(சிலப். 5:49 உரை); கண்ணகி, கோவலன், இவர்களின் தாயர் மற்றும் இறந்துபட்ட கதை மாந்தர் மாதரி, கவுந்தியடிகள், பாண்டிய மன்னன், அவன்தேவி, மதுரை மக்கள் முதலியோரை மற்றும் பார்வையாளரை அமைதிப்படுத்தும் கூத்தே சாந்திக் கூத்தான சிலப்பதிகாரம். கடந்த நூற்றாண்டுவரை அம்மனை(சத்தி)அமைதிப்படுத்தும் நித்திய சுமங்கலியரின் ஆடலும் , சடங்கும் பண்டைய சாந்திக்கூத்தின் மரபுத்தொடர்ச்சியே.

← *நித்திய சுமங்கலி*

## சாந்திக்கூத்தர்: மதங்கர்

கண்ணுளர் – சாந்திக்கூத்தர் (சிலப். 5: 49. அரும்.& அடியார்க்.)
மதங்கர் என்பாருமுளர் (மேலது அடியார்க்.)

## சாந்திக்கூத்தி: சாந்திக்கூத்தாடும் மகளிர்

*எங்களூர் சாத்திக் கூத்திகளில்...*
*(தெ. இ க. 17 463. த. க. சொ. 238)*

**சாப்:** , (Jhap)
*2 + 3 + 2 + 3 அளவுடைய இந்துத்தானித்தாளம்.*

**சாப்பறை:** *சாக்கொட்டு, சாக்காட்டுப்பறை, நெய்தல், பிணப்பறை, சாமேளம்*(Funeral drum).
ஓரில் நெய்தல் கறங்க (புறம் 194)

**சாப்பா:** *மத்தளவாத்தியத்தில் ஒவ்வொரு கெத்தின் முடிவையும் காட்டி அதன் தொப்பியில் அடிக்கும் அடி* (the concluding stroke)
← *செ ப. அ. 1372*

**சாப்பாக்கொடுத்தல்:** *ஒத்து(சுருதி)டன் இசைய வேண்டி மத்தளத்தைத் தட்டிப்பார்ப்பது*

**சாபம்:** → வில்

**சாம்பு:** *பறை* (Drum)
சாம்பு பொன் பறையாம் (சூடா. 11: 14)

**சாமகண்டம்:** *பண்களுள் ஒன்று(பரத. இராக. 103)*

**சாமகலியாணி:**
*பண்களுள் ஒன்று* *(பரத. இராக. 103)*

**சாமகானம்:**
*சாம வேதத்தைப் பாராயணம்*(chanting) *செய்வது.*
சாமகானம், கரகரப்பிரியா என்னும் இராகத்தைப் பெரிதும் ஒத்திருக்கிறது. (தெ. இ. இ. பக். 70 /IV(1977)
கனகாங்கியை ஒத்துள்ளது
(*ஓ. கோஸ்வாமி* The story of Indian music p9 (1957)
சாமகானம் என்பது விளரிப்பண் (உ. வே. சா.)
← *த வ. பக். 98*
"நல்ல சாரீரத் தோடும் இசை ஞானத் தோடும் எந்த வாத்தியங்கள் இன்றியும் சாமகானம் செய்யும் போது அதில் ஷட்ஜக்கிரமத்தின் சுரங்கள் அமைந்திருப்பதைத் தெளிவாக நான் காண்கிறேன். ஆனால் என் அறிவுக்கு எட்டிய வரையில் அதில் கரகரப்பிரியா அல்லது நடபைரவி இராகங்களின் சுரங்கள் உள்ளன என்று நான் சொல்லமுடியாது"
(மகாபரத சூடாமணி. சங்கீதாதி ராகலட்சணம். முன்னுரை பக் XXVIII)
← *த. ப. வ. பக். 109/ 3)*

**சாமந்தம்:** *பண்களுள் ஒன்று* *(சது. அக.)*

**சாய்ப்புத்தாளம்:**
1. *சாப்புத்தாளம்*
*இருபக்கமும் (மட்டதாளம்போன்று) சமஅளவு இல்லாத தாளம். ஒரு பக்கம் கூடி மறு பக்கம் குறைந்து சாய்ந்து வருவதால் சாய்ப்புத்தாளம். வழக்கமாக இரண்டு தட்டுகள் அல்லது ஒரு தட்டும் ஒரு வீச்சும் கொண்டது.*
*எடு:- ஐந்தன் சாய்ப்பு - 2 + 3 (கண்டசாப்பு)*
*ஒன்பான் சாய்ப்பு - 4 + 5 (சங்கீர்ண சாப்பு)*
2. *ஏழன் சாய்ப்பு (மிசுரசாப்பு) - 3 + 4 = 7*
*முதல் தட்டு 3 அளவும் இரண்டாம் தட்டு (அல்லது வீச்சு) 4 அளவும் கொண்டது.*
*சாய்ப்புத்தாளம் (சாப்பு,சாப்புத்தாளம்) என்று கூறினால் அது ஏழன் சாய்ப்பு (மிசுரசாப்பு) தாளத்தையே குறிக்கும்*
*சாய்ப்பு > சாப்பு - திரிந்த வடிவம்.*

**சாயரி:** *பாலைப்பண் வகையுள் ஒன்று*
தக்கராகம்... சாயரி... பாலையாழ்த்திறம் என்ப (பிங்க. 1381)

**சாயல்பிடித்தல்:** *சரியானபடி பண்ணின் வடிவத்தைக் கொண்டு வருதல்* (toget the right tune). *பண்டையத் தமிழர் இதை 'நிறம் தோன்ற' என்றனர்.*
நரப்படைவால் நிறம் தோன்றப்பண்ணப்படாநின்ற
(சிலப் . 3: 46 அரும்.)
நிற ஆளத்தி நிறம் குறையாமல் (சிலப். 3: 26 அடியார்க்.)

**சாயல்வரி:**
*வரிப்பாட்டு வகையுள் ஒன்று. இயல்பு கூறுவது*
*எடு:- சிலம்பு கானல்வரி 43, 44, 45 ஆம் பாடல்கள். கானல்வரியின்17, 18, 19ஆகிய செய்யுட்கள் மூன்றும் திணைநிலைவரி என்று தலைப்பிடப்பெற்றிருந்தாலும் சாயல்வரி என்று சில மூலப்பிரதிகளில் எழுதப்பெற்றுள்ளன. எனவே திணை நிலைவரியும் சாயல்வரியும் ஒன்றாகலாம்.*
*←சிலப். 7: (17) (18) (19) அடிக்.*

**சாய வேளர் கொல்லி:**= சாய வேளா கொல்லி
மருதத்தின் அருகியல் பண். (சிலப். 14: 160–67அடியார்க்.)

**சாய வேளா கொல்லி:** →சாய வேளர் கொல்லி

**சாயா கௌளம்:**
*பண்களில் ஒன்று* *(பரத. இராக. 55)*

**சாயா சுரம்:** → *உயிர்ச்சுரம்*

**சாயா தரங்கிணி:**
*பண்களில் ஒன்று* *(பரத. இராக. 103)*

**சாயாலகப்பண்:**
= சங்கீர்ண இராகம், சங்கிரம இராகம், சாலக ராகம், மிசுர ராகம், சாளங்கப்பண், சாலகப்பண், சாலகம், சாளரம்.
சாயாலகப்பண்கள் தனிப்பண்வடிவு கொண்டவை. இருப்பினும் வேரோர் பண்ணின் நடையைத் தழுவி வருவதாலோ அல்லது அன்னியசுரம் எடுத்துக் கொள்வதாலோ இவைகளில் பிற பண்களின் சாயலும் வரும்.
எடு:- ஆகிரி, கண்டா, மாஞ்சி, துசாவந்தி, துஜாவந்திப் பண்ணில் கேதாரகௌளை, சகானா, எதுகுலகாம்போதி ஆகிய பண்களின் சாயல் அமைந்துள்ளது.
(மிசுரம் = கலப்பு)

**சார்த்துவரி:** சாற்றுவரி.
பாட்டுடைத் தலைவனின் பெருமைகளை ஊரோடு பேரோடு சேர்த்து வண்ணித்துப் பாடுவது முகம், முரி, கொச்சகச் சாத்து என மூவகைப்படும் சார்த்திப்பாடுவது - சாத்துவரி
எடு:- சிலம்பு கானல் வரி பாடல்கள் 5, 6, 7 மற்றும் 28, 29, 30 (இவை முகச் சார்த்து வரிகளாகும்)
"பாட்டுடைத்தலைவன் பதியொடும் பேரோடும் சார்த்திப்பாடில் சார்த்தெனப்படுமே" (சிலப். 7:(7) அரும்.)

**சாரங்க நாட்டை:**
பண்களில் ஒன்று (பரத. இராக. 102)

**சாரங்கம்:** = சாரங்க வீணை (ச. அ.)
வீணைவகையுள் ஒன்று (பரத. ஒழிபி. 15)

**சாரங்கி:** நரம்புக்கருவி. தற்காலம் வட இந்திய இசையில் பயன்படுகிறது. இது பண்டைக் காலத்தில் தமிழகத் திருக்கோயில்களில் ஓதுவார்கள் திருமுறை பாடுகையில் பக்க வாத்தியமாக இசைக்கப்பட்டுள்ளது. நெல்லை மாவட்டத்துக் கோவில் களில் சாரங்கி பயன் பாட்டில் இருந்துள்ளது
← த. க க 235 - 36/II

**சாரணி:** → ஒற்றுறுப்பு

**சாரதப்பாட்டு:**
இனிய பண் அமைந்த சந்தப்பாட்டு.
←செ. ப. அ. 1386

**சாரல்:** மருதயாழ்த்திறம்; காந்தாரம்
மலையின்பக்கமும் மருதயாழ்த்திறத் தோர் இசைப் பெயரும் சாரல் என்ப (பிங்க. 3501)

**சாரி:**
1. இசைக்கருவியுள் ஒன்று
கரடிகை, பீலி, சாரி (கந்தபு. திருக்கல். 6)
2. நாட்டியத்தில் ஒருபாதத்தால் மட்டும் அவிநயம் செய்தல்.
→சாரி கொள்ளுதல்
↑'ஆகாய சாரி' (சிலப். 3: 109 – 10 அடியார்க்.) என்பது ஓர் அடைவு ஆகலாம்.

**சாரி கொள்ளுதல்:**
நாட்டியத்தில் இடம் வலமாக ஆடுதல்
பதசாரி சாரிகொள்ள (விறலி விடு. 417)
→ சாரி

**சாரியை:** புறக் கூத்துள் ஒன்று
பெருநடை, சாரியை, பிரமரி... (சிலப். 3: 16 உரை)

**சாரீர வீணை:** = சரீர வீணை, கண்டம். மிடறு.
மிடறுமென்றது சாரீர வீணையும் என்றவாறு (சிலப். 3: 26 அடியார்க்.)
யாழ்தான்... சாரீர வீணைக்குரிய நாவாலும் பாடிற்றோ (சீவக. 658 உரை)
...வீணையைச் சாரீர வீணையாக்கி (சிலப். 6: 18 – 25 அடியார்க்.)

**சாரு கருணாட சாரங்கம்:**
பண்களில் ஒன்று (பரத. இராக. 104)

**சாருகேசி:** பெரும்பண்களுள் ஒன்று. தமிழிசைப் பாலைகள் 32 இல், 13 ஆவதாக வருவது (மேளஎண் 26). ஏழுசுரப்பண்
(சாரு = நீளமான; கேசி - கூந்தலையுடையவள்)

**சால்ரா:** →சாலர்

**சாலகப்பண்:** →சாயாலகப்பண்

**சாலர்:** = சால்ரா, சாலரா (cymbals)
கைத்தாளத்துள் ஒன்று. கஞ்சக்கருவி வகையது
←செ. ப. அ 1390

**சாலரா:** →சாலர்

**சாலாபாணி:** →சாளரபாணி

**சாலினி:** = தேவராட்டி
தெய்வமேறப்பெற்றவள்; எயினரின் பெண்பூசாரி.
கருஞ்சூல் மகளிர்பேணி கைதொழுது

பெருந்தோள் சாலினி... (மதுரைக். 609 – 610)
பழங்கடனுற்ற முழங்கு வாய்ச் சாலினி (சிலப். 12: 7)
சாலினி – தேவராட்டி (மேலது உரை)
குயிலுவர்... சாலினி தேவராட்டி... (சூடா. 2:39)
காடுபலிமகிழ் ஆட்டத் தலை மரபின் வழிவந்த
தேவராட்டி தனை அழைமின் (பெரியபு.கண்ணப்ப. 47)
←முருகு. 12 - 41

**சாவகக்குறிஞ்சி:** =சாவகன் குறிஞ்சி(யாழ். அக.)
*குறிஞ்சி யாழ்த்திறம் (நட்டபைரவியின் கிளைப்பண்)*
நட்டபாடை... சாவகக் குறிஞ்சி... குறிஞ்சி யாழ்த்திறமாகக் கூறுவர் (பிங்க. 1382)

**சாவகன் குறிஞ்சி:** →சாவகக் குறிஞ்சி

**சாவளி:** = ஜாவளி(lewd poetry)
*இசை உருவில் ஒன்று. அகப் பாட்டு வகையது. நாயகன், நாயகி, தோழி ஆகியோர் பாடும் வகையில் அமைந்த காதல் சுவை நிறைந்த நாட்டிய அகப் பாடல். நாட்டிய அரங்கில் இறுதிநிலையில் பாடப்படுவது எளிய சொற்களால் இரண்டாம் காலத்தில் அமைவது. இந்துத்தானி கசல் வடிவை ஒத்தது - ஜாவடி - (கன்னடம்)*

**சாவுகொட்டு:**
*சாவைத் தெரிவிக்கும் ஒருவித முழக்குமுறை.*
*← செ. ப. அ பிற். 273*

**சாவேரி:**
*பண்களில் ஒன்று (பரத. இராக. 56)*

**சாழல்:**
1. *மகளிர் பாடி ஆடும் ஒருவகை ஆடல்; சாழல் என்பது சாடல். குற்றம் குறைகளைக் கூறித் தாக்குதல். முதலாமவளின் சாடலும் அடுத்தவளின் மறுப்புமாக அமைந்த பாடலுடன் கூடிய ஒருவகை விளையாட்டு.*
2. வரிக்கூத்து வகையுள் ஒன்று
சிந்துப் பிழுக்கை... நற்சாழல்... கோத்தவரிக் சுத்தின்குலம்
(சிலப். 3: 13அடியார்க். மேற்.)
3. இசைப்பாடல் வகையுள் ஒன்று
*எ-டு:- மாணிக்கவாசகரின் திருச்சாழல்*
வண்ணக் கருங்குழல்... எண்ணற்கரியனிமை யோர்க்கும் சாழலே
(பாசுரம். பெரியதிரு. 11: 5)
*வினாவிடைக்கான செப்பலோசை (வெண்பா), கைகொட்டி ஆடலின்துள்ளல் ஓசை (கலிப்பா) இரண்டும் இப்பாடலில் உள்ளன. சாழல் பாடல்கள் வெண்டளையால் அமைந்த நான்கடித் தரவு கொச்சகக்கலிப்பாக்களால் ஆனவை.*

**சாளக பைரவி:**
*பண்களில் ஒன்று (பரத. இராக. 102)*

**சாளகம்:**= சாளரம்
*இசைப்பாவிற்குரிய சாதியோசைகள் மூன்றனுள் ஒன்று* (one of the types of harmonic tone).
சுத்தம்,சாளகம், தமிழ் என்னும் சாதி யோசைகள் மூன்றனுடன்
(சிலப். 6: 35 அடியார்க்.)
ஆளத்திசெய்யுங்கால் நவ்வினம் சாளரத்திற்குரியது.
(சிலப். 3: 26 அடியார்க்.)
↑ இணை, கிளை, நட்பு என்ற பொருந்து சுரங்கள் மூன்றையும் இது குறிப்பதாகலாம்

**சாளங்கப்பண்:** →சாயாலகப்பண்

**சாளங்கம்:** *பண்களுள் ஒன்று*
*சாளங்கம் > சாளங்கா > சாங்க்ளா > ஜிங்க்ளா*
↑ தற்காலம் 'ஜிங்க்ளா' எனவழங்கும் பண் இதுவாகலாம்.

**சாளர்:** *செவ்வழி யாழ்த்திறம்*
குறண்டி... சாளர்... செவ்வழியாழ்த்திற மென்ப (பிங்க. 1384)

**சாளரபாணி:** = சாளாபாணி, சாலாபாணி
*103 பண்வரிசையில் 94 வது பண்.*
ஐந்துடன் நால்வரும் உரைத்த திருக்கடைக்காப்பின் பண்...
சாளரபாணி ஒன்று வேணாட்டடிகள் (தனிப்பாடல்)
*பூந்துருந்தி நம்பிகாட நம்பியின் திருக் கோவில் - திருவிசைப்பா - முத்து வயிரமணி (9ஆம் திருமறை) இப்பண்ணில் அடைவுபெற்றது.*
ஈசான திக்கில் (சாங்காம்) சாலாபாணிப்பண்
(காமிக ஆகமம். சுலோ. 40)
கொண்டைக்கிரி, சீவளி, யாமை, சாளாபாணி... (திவா. 11)
*← தமிழர் இசை. பக் 434*

**சாளரம்:** → சாளகம்

**சாளா பாணி:** → சாளரபாணி

**சாளையக்கை:**
அவிநயக்கையுள் ஒன்று. பெருவிரல், சுட்டு விரல், நடுவிரல் இம்மூன்றையும் நீட்டி, மோதிரவிரல் சுண்டுவிரல்களின் நுனி உள்ளங்கையில் படும்படி வளைத்து, விரல்களில் இடைவெளி தோன்றும்படி செய்து மணிக்கட்டை வளைத்துக் காட்டும் அவிநயக்கை (பரத. பாவ. 24)
*← செ. ப. அ. 1396*

**சாஸ்திரிய நாடகம்:** → செந்நெறிக்கூத்து



**சிக்காரி:** *சித்தார், சரோட் போன்ற நரம்பிசைக் கருவிகளிலுள்ள ஒத்துத்தந்தி* (drone string)

**சிக்கை:** = சிட்சை (சிக்ஷை)

*இசை.*

... சிக்கை எனும் அங்கத்தை ஆராயும் முதல் நரம்பை உருவி வாசிக்கும் நாரதனார் என்க. சிக்கை என்பது இசை

(சிலப். 17: (25)அடியார்க்.)

இதனை நாரத சிக்ஷை என்பர் வடநூலார். (மேலது. அடிக்.)

**சிகண்டி:** = செய்திறம்

*பாலையாழ்த்திறம்*

பாலையாழ்த்திறத்தோர் இசையும் மயிலும் சிகண்டியாம் என விளம்புவர் (பிங்க. 3512)

ஆசானுக்குப் புறச்சாதி சிகண்டி (சிலப். 13 : 112 அடியார்க்.)

*(புறச்சாதி - புறநிலை)*

செய்திறம் சிகண்டி (பிங்க. 1399)

**சிகரம்:** = விற்பிடி

*ஒற்றைக்கை அவிநயம்.*

"விற்பிடி என்பது விரிக்குங்காலைச், சுட்டொடு பேடி அநாமிகை சிறுவிரல் ஒட்டி அகப்பால் வளையப் பெருவிரல் விட்டு நிமிரும் விதியிற்றாகும்". இதற்குச் சிகரம் என்றும் பெயர்

(சிலப். 3: 18 அடியார்க்.)

**சிங்க நகக்கை:** = சிம்மநகம் *(ச. அ.)*

ஒருகையின் விரல்களைச் சிங்கநகங்கள் போல் அகற்றி வளைத்தலாகிய அவிநயக்கை. (பரத. பாவ. 38)

*←செ. ப. அ. 1403*

**சிங்கி:** → துணங்கை

**சிங்கிள்:** = ஜிங்கிள்

*கஞ்சிராவின் ஓரத்தில் தொங்க விடப்படும் வட்ட வடிவ மெல்லிய உலோகத்தகடுகள். தாளத்துடன் சேர்ந்து ஒலித்து இனிய ஓசையை எழுப்பு வதற்காக இவை இணைக்கப்படுகின்றன.*

**சிங்களக்கூத்தின் உடல் நிலை:**

*சிங்களக்கூத்தின் 'உடல் நிலை'(உடல் அவர்த்தனை - Pose) என்பதைப்பற்றியது. இது 9 வகைப்படும்.*

*1) மெய் சாய்த்தல்*
*2) இடை நெரித்தல்*
*3) சுழித்தல்*
*4) அணைத்தல்*
*5) தூக்குதல்*
*6)அசைத்தல்*
*7) பற்றல்*
*8) விரித்தல்*
*9) குவித்தல்*

மெய்சாய்... தோர்ந்து (சிலப் 3: 16அடியார்க். அடிக்.)

*← த. க. க. 134/III*

**சிங்களக்கூத்து:** → சிங்களம்

**சிங்களம்:** = சிங்களக் கூத்து

இது மெய்க் கூத்துள் ஒன்று. சிங்களர்க்குரியதாய் தமிழில் வழங்கும் கூத்து வகை (சீவக. 672. உரை.)

சிங்களமென வழங்கி வருகின்ற கூத்து... (சிலப். 3: 16. அடியார்க்.)

**மெய்க்கூத்தாவது:–** தேசி, வடுகு, சிங்கள மென மூவகைப்படும்

(சிலப். 3: 12. அடியார்க்.)

**சிங்கி:**

1. *குறமகள்*

   *குறம் மற்றும் குறவஞ்சியில் வருபவள்.*

2. *ஒருவகைக் கூத்து; துணங்கை*

துணங்கையர் குரவையர் அணங்கு எழுந்து ஆடி (சிலப். 5:70)

துணங்கை – சிங்கி; என்னை? "பழுப்புடை இருகை முடக்கி அடிக்கத், தொடக்கிய நடையது துணங்கையாகும்"

(மேலது. அரும்)

**சிங்கிப்பாட்டு:**

கைகளை முடக்கி விலா எலும்புகளில் பொருந்துமாறு அடித்துக் கொண்டே கூத்தாடும் மகளிர் குழாத்தினர், அத்துணங்கைக் கூத்தின் போது பாடும் பாடல்.

(த. இ. பே. 76, 16)

*(சிங்கி - துணங்கைக்கூத்து)*

→ சிங்கி

**சிஞ்சரி:** *கஞ்சரி* (தே.நே.121 /II)

**சிட்டம்:**
*மத்தளத்தின் வலது கண்ணின் நடுமையத்தில் அமைந்துள்ள வட்டவடிவ, நிலையான கறுப்புச் சாந்து.*

**சிட்டாசுரம்:** (solfeggio)
*ஏற்கனவே பாடலில் புனையப்பட்டது. சுரங்களின் பின்னல். பாடல்களில் அமைக்கப்பட்டுள்ள சுரக் கோவை முடிப்பு (சரணம்) அல்லது தொடுப்பு (அனுபல்லவி)யின் இறுதியில் அமைக்கப்படுவது. தொடுப்பு பாடியபின் சுரத்தை முதற்காலத்திலும், முடிப்பு பாடியபின் இரண்டாம் காலத்திலும் சிட்டை சுரம் பாடுவது மரபு. தாள ஆவர்த்தத்தை ஒட்டி வரும்.*
*சிட்டை + சுரம் - சிட்டாசுரம்*
*(சிட்டை - சிறிய அமைப்புடையது; சிறிய குறிப்பு)*
← *த. க. க. 296* / II

**சிட்டிக்கை:** → சிப்ளா

**சிட்டைதானம்:**
*யாழில் விரல் பயிற்சிக்கான இசைப்பகுதி. கீதப்பயிற்சி முடிந்து வண்ண (வர்ண)ப்பயிற்சி தொடங்கும்முன்பு நாட்டை, கௌளம், ஆரபி, ஸ்ரீராகம் முதலிய கன இராகங்களில் யாழ்ப் பயிற்சியாளர்களுக்கு அளிக்கப்படும் சிட்டை தானப்பயிற்சி.*

**சிட்டிகை:** → சிப்ளா

**சித்தர் பாடல் யாப்பு:**
*சித்தர்களின் பாடல்கள் சிந்து, கும்மி, கண்ணி, கீர்த்தனை, வண்ணம், ஆனந்தக்களிப்பு முதலிய யாப்புகளில் அமைந்துள்ளன.*
← *த. இ. பே. 77/ 16*

**சித்தார்:**
*வட நாட்டு நரம்பிசைக்கருவி. நகர்த்தி நிறுத்தும் புரி நரம்பு (மெட்டு) கொண்டது* (A lute with movable frets)
↑ இது சிலம்பில் குறிப்பிடப்படும் **'சகோடம்'**, உரைகளில் மற்றும் பெரியபுராணத்தில் கூறப்படும் **'சகோடயாழ்'** ஆகலாம். **'மேலது உழை'** (சிலப்.3:80) **'உழை முதல்'** (சிலப்8:32) என்று சகோடயாழில் முதல் மெட்டாக, உழை(ம)நரம்பு கட்டப்பட்டதாகக் குறிப்பிடப்படுகின்றது. சித்தாரிலும் இவ்வாறே மெட்டு அமைக்கப்படுகிறது. இது மேலும் ஆய்வுக்குரியது.
← *செ. ப. அ. 1412*

**சித்திரக்கரணம்:**
*முழவுகருவிகளில் கையினால் செய்யும் வினை* (expert playing by hand as in drumming)
சித்திரக்கரணம் சிதை வின்று செலுத்தும் (சிலப். 3: 54)
*தண்ணுமையாசிரியன் அமைதியில் இது கூறப் பட்டது. எனவே இது முழவுக் கரணம் குறித்தது.*
*(கரணம் - தொழில், வினை)*
←*செ. ப. அ. 1413*

**சித்திரகவி:**
1. *நால்வகைக் கவிகளுள் சித்திரத்தில் அமைத்தற்கேற்பப் பாடப்படும் மிறைக்கவி*
← *சூடா 12: 25, 26, 27*
2. *சித்திரக்கவி பாடுவோன்* *(ச. அ.)*

**சித்திரகளை:** → ஞெள்ளல்

**சித்திர குண்டலி:** *கூத்துள் ஒன்று.*

**சித்திரகோஷாவளி:**
*யாழ்வகையுள் ஒன்று* *(பரத. ஒழிபி. 15)*

**சித்திர தாளம்:**
*ஒன்பது தாளங்களுள் ஒன்று* *(பரத தாள. 6)*

**சித்திரவேளாகொல்லி:** → சித்திர வேளாவளி

**சித்திர வேளாவளி:** = சித்திர வேளா கொல்லி
*பண்களுள் ஒன்று* *(பரத. இராக. 104)*

**சித்திரப்புணர்ப்பு:** இயல்பான இசையமைப்பு
சொல்லிய இயல்பினில் சித்திரவஞ்சனை
புல்லிய அறிந்து புணர்ப்போன்... (சிலப். 3: 56 – 57)
இசைகொள்ளும் எழுத்துக்களின் மேலே பண்ணீர்மை நிறுத்தல் (மேலது. அரும்)

**சித்திரவண்ணம்:**
*நெடிலும், குறிலும் விரவிவரும் வண்ணப்பாடல்.*
நெடியவும் குறியவும் நேர்ந்துடன் வருமே (தொ. செய். 220)
*எடு:-*
நேரமான தறி யாமலே மிகவி
னோதமான முர ளீதரா மனம் – அலைபாயுதே
(ஊத்துக்காடு ரா.வேங்கடசுப்பு)

**சித்திராம்பரி:** → பண்களுள் ஒன்று

## சித்து:

1. வரிக்கூத்துள் ஒன்று
சிந்துப் பிழுக்கை... சித்து... கோத்தவரிக்கூத்தின் குலம்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)
2. ஒருவகைச் செய்யுள். சித்தர்களின் இரசவாதம் கூறும் பாடல்.
"பொற்பாவைக்குக் கஞ்சம் பொன்னாக்கிய சித்தரேம்..."
↑ 'சித்து' என்ற இச்சொல்லிலிருந்து 'சித்தர்' என்ற சொல் உருவாகி இருக்கலாம்.
3. கலம்பக உறுப்புகளுள் ஒன்று
← த. இ. பே. 77 /16

## சிந்தடி:

1. முச்சீரடி (metrical line of 3 feet)
முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும் (தொ. செ. 69)
அளவும் சிந்தும் வெள்ளைக்குரிய (மேலது. 57)
"வாழ்த்து வரந்தரு காதையொடு" (அடி. 85) எனச்சிந்தடியும்...
(சிலப். பதிகம். 90. அடியார்க்.)
ஏழ் எழுத்து என்ப சிந்தடிக்கு அளவே (தொ. செ. 36)
2. முச்சீர் மூவடி (triplet, trimetre)

## சிந்தம்: பாவகையுள் ஒன்று

அறிவுடை நம்பியார் செய்த சிந்தம் (யாப். வி.)

## சிந்தாமணி: பண்களுள் ஒன்று (பரத. இராக.103)

## சிந்தாமணி யாப்பு:

சீவக சிந்தாமணியின் பெரும் பகுதி விருத்த யாப்பில் அமைந்தது.
இக்காப்பியத்தில் அமைந்த யாப்புகள்:

| | |
|---|---|
| 1) அறுசீர் ஆசிரியவிருத்தம் | - 1525 |
| 2) கலிவிருத்தம் | - 1291 |
| 3) கலித்துறை | - 255 |
| 4) எழுசீர் ஆசிரியவிருத்தம் | - 40 |
| 5) எண்சீர் ஆசிரியவிருத்தம் | - 16 |
| 6) வஞ்சித்துறை | - 16 |
| 7) கலித்தாழிசை | - 2 |
| 8) ஆசிரியத் தாழிசை | - 1 |
| 9) கொச்சக ஒருபோகு (கலித்தாழிசை) | - 2 |
| 10) ஆசிரியத்துறை போன்ற பாடல் (2578) | - 1 |

ஒருபொருள்மேல் மூன்றடுக்கியும், இடையடி மடக்கியும் வந்தபாடல்களும் உண்டு (இலக்கணத். முன். பக். 93, 94)
← த. இ. பே. 79 / 16

## சிந்தியல் வெண்பா:

மூன்றடியால் அமைந்த வெண்பாவகை.
எடு:- சிலப்பதிகாரம் 'மங்கலவாழ்த்துப்பாடல்' என்ற முதல் காதையின் 'திங்களைப் போற்றுதும்' முதலிய நான்கும் சிந்தியல் வெண்பா.

## சிந்து:

1. ஒன்பது வகை இசைப்பாக்களுள் ஒன்று.
செப்பரியசிந்து, திரிபதை... இன்னிசையின்பா
(பஞ்சமரபு. சிலப்.6:35 அடியார்க். மேற்.)
ஒயில், வழிநடை, காவடி, கும்மி, நொண்டி, வளையல், கொலை என 'சிந்து' பலவகையாக விரியும்
2. வரிக்கூத்துள் ஒன்று
சிந்துப்பிழுக்கை... கோத்தவரிக் கூத்தின் குலம்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)
3. பண்களில் ஒன்று
சிந்து ஒக்கும் சொல்லினார் (கம்ப. இராவண. சோகப். 38)
4. முச்சீரடி
நீரும் தேசமும்... முச்சீரும்... சிந்து (பிங்க. 3522)
← பஞ்சமரபில் இசைமரபு. பக். 169 - 173

## சிந்து ராமக்கிரியை:

பண்களில் ஒன்று (பரத. இராக. 104)

## சிந்தூரம்:

பறைவகையுள் ஒன்று.
பவணம்... சிந்தூரம்... பல்வகைப்பறையே (பிங்க. 1529)

## சிந்தை உடன்பட்டோன் அபிநயம்:

சிந்தையுடன்பட்டோன் அவிநயம் தெரியின் முந்தையாயினும் உணரா நிலைமையும், பிடித்தகை மேலடைந்த கவினு, முடித்தலுறாத கரும நிலையும், சொல்லுவது யாது முணரா நிலைமையும், புல்லுமென்ப பொருந்து மொழிப்புலவர் (சிலப். 3: 13 அடியார்க்.)

## சிப்ளா: = சிட்டிக்கை

சிப்ளாக்கட்டை (castanets)
இரண்டுகட்டைகளால் ஆன தாளக்கருவி. இனிமைக்காக கட்டைகளுள் மணிகள் கோக்கப் பட்டிருக்கும். இசைக்கதைச் சொற்பொழிவில் (கதா காலட்சேபம்) பெரிதும் பயன்படுவது.

## சிம்மகாரம்:

பண்களில் ஒன்று (பரத. இரா. 104)

## சிம்மநகம்: → சிங்கநகக்கை.

## சிம்மநடனம்:

சித்திரநாட்டிய வகையுள் ஒன்று. இந்த ஆட்டத்தின் முடிவில் சிங்கத்தின் உருவம் ஆடுகள மணலில் தோன்றும் படி ஆடுவது. 28 எண்ணிக்கைகள் கொண்ட சிம்மநந்தன தாளத்தில் இந்நாட்டியம் நடைபெறும்.
→ த. க. க. 298 /II

## சிம்மநந்தன தாளம்: → சிம்மநடனம்.

## சிம்மேந்திர மத்திமம்:

*பெரும் பண்களுள் ஒன்று; வல்லுழைப்பண்.*
*26 ஆம் பாலை (57 ஆம் மேளம்)*

## சிம்ஃபோனி:

*பல சிறிய இசை வடிவங்களைச் சேர்த்து அமைக்கப்பட்ட ஒருமுழுமையான பெரிய இசைக்கோலம். பலகருவிகள் பொருந்திசையாக ஒலிக்கும். ஒரேசமயத்தில் பேஸ் (Base), டெனார் (tenor), சோப்ரானோ(Soprano) ஆல்ட்டோ (Alto) எனும் பகுதிகள் ஒத்திசையாகி(Harmony) இனிமையாக ஒலிப்பது சிம்ஃபோனி.*
*← த. க. க. 298 - 99 /II*

## சிமிறுகைச் சாலி: → சிவிறுகை.

## சிரட்டைச்சிலம்பு: = மொரக்கோ, கைச்சிலம்பு

*தேங்காய் ஓட்டுக்குள் மணிகளை நிறைத்துக் குலுக்குவதால், ஒருவகைத் தாளஒலிதரும் இசைக்கருவி.*
*←த. வ பக். 157*

## சிரந்தை:

**உடுக்கை (ச.பொ.க. 30/III)**
**நுண்ணூல் சிரந்தை இரட்டும் விரலன் (தொ.பொ. 81 உரை.)**

## சில்கோவை உள்ளோசைப்பண்:

= அர்த்த கம்பிதராகம்
*பண்ணில் சில கோவைகள் மட்டும் உள்ளோசை (கமகம்) பெற்றுவருவது*
*(அர்த்தம் = பகுதி; ஒப்பு : அர்த்தநாரீஸ்வரர்)*
*← த. வ 96*

## சில்லரி:

*ஒருவகைப்பறை. ஒலியடியால் பெற்ற பெயர் சிற்றோசை உடையது.*
**சில்லரி கறங்கும் சிறுபல்லியத் தொடு. (அகம். 301: 20)**
**சில்லரிச்சிலம்பு (சிலப். பதிகம். 25)**
*சில் - ஆரவாரம்* (Sound, noise (W)
*← த. க. க. 7/I; செ. ப. அ 1431*

## சில்வளை விறலி:

**செறி தொடி விறலியர் கைதொழூஉப்பழிச்ச (மலைபடு. 201)**
**↑ விறலியர் என்போர் செறிந்த வளையல்களை அணிந்த ஆடல் மகளிர். ஆயினும் ஆடலின்போது தாளத்திற்கு இடையூறு ஏற்படா வண்ணம் கைகளில் சில வளையல்களை மட்டுமே அணிந்துள்ளனர். எனவே 'சில்வளை விறலி'என்ற சொல்லாடல். கால்சிலம்பு மற்றும் சலங்கை மட்டுமே தாளத்திற்கானது. 'கைநிலை' என்ற கைஅவிநயத்திற்கு மட்டுமே கை உரியது.**
**சில்வளை விறலியும்... (புறம். 60: 5)**
**சில்வளை விறலி செல்குவை ஆயின் (பதிற். 78:3)**
**தேமாமேனிச் சில்வளை ஆயமொடு (சிறுபாண். 176)**
**செல்லாமோதில் சில்வளை விறலி (புறம். 64)**

## சிலப்பதிகார யாப்பு:

*உரையும், உரைப்பாட்டும், உரைப்பாட்டுமடையும், இசைப்பாட்டும், கூத்து (ஆடல்)ப் பாடல்களும் இயற்பாடல்களும் நிறைந்தது சிலப்பதிகாரம்.*
**பாட்டிடைவைத்த குறிப்பினானும் (தொ. செ. 171)**
**உரையிடையிட்டபாட்டுடைச் செய்யுள் (சிலப். பதிகம். 87)**
*'இவளோ' (வேட். வரி. அடி46 - 47) என்ற உரைச் சொல்லும், ஆய்ச். குரவை 'கொளு' என்ற பகுதியுள் 'சுட்டு' எனும் உரைச்சுட்டும் , குன்றக் குரவையுள் 'இவள் போலும் நம் குலக்கோர் இருந் தெய்வம் இல்லை' என்ற உரைத் தொடரும், 'உரை' என்ற நாடக உறுப்பாய் விளங்குவன.*
*கானல் வரிக்கட்டுரையும், ஆய்ச் குரவையுள் கருப்பமும், வேட்டுவ வரி, ஆய்ச். குரவை, குன்றக் குரவை, வாழ்த்துக்காதை ஆகியனவற்றுள் வரும் உரைப்பாட்டுமடை முதலியனவும் உரை நடைப்பகுதிகள்.*
*(சொல், சொற்றொடர், பாட்டு என வரும் பகுதி - உரைப்பாட்டுமடை)*
*ஆசிரியப்பா (நிலைமண்டிலம்), வெண்பா (குறள், சிந்தியல், இன்னிசை), கலிப்பா (கொச்சக ஒருபோகு, அயல் மற்றும் இயல் மயங்கிசைக் கொச்சகக்கலி) தாழிசை, துறை, மண்டிலம் (விருத்தம்) ஆகிய பா இனங்களும் நிறைந்தது. 'குடப்பால் உரையா' என்பதைத் தொடர்ந்து வரும் குறள் வெண் செந்துறைப் பாடல்கள், இயற்பாவிலிருந்து மாறி இசைப் பாடலுக்கு வித்திட்ட கலிவிருத்தப் பாடல்கள், மலிந்தது சிலப்பதிகாரம். ஆய்ச். குரவை (கயலெழுதிய . தோன்றுமன்)யுள் 'ஆகலின்' என்ற குறளடியைக் கொண்ட குறளடி வஞ்சிப்பாவாகவும், கட்டுரை காதை மூன்று குறட்பாக்களை இடைமிடைந்த குறள்மிடை மண்டிலமாகமும், மூன்று பாவினங்களையும் உள்ளடக்கிய, 'வஞ்சியீர்' 'வஞ்சியிடையீர்' (குறள்வெண் செந்துறை), 'கொங்கையால்' (ஆசிரியத் தாழிசை), 'செங்கோல்வளைய' (கலிவிருத்தம்) என்றெல்லாம் வந்த புதுமையைக் கொண்டது சிலப்பதிகாரம்.*
*"தமிழ் யாப்பியலுக்கு அரும்பணிபுரிந்த அறிஞர் இளங்கோவடிகள். பாட்டுமடை, துறைப் பாட்டுமடை, உரைப்பாட்டுமடை என்று இன்னோரன்ன யாப்புக்குறியீடுகள் பொதுளிய கருவூலமாய்ச் சிலப்பதிகாரம் திகழ்கின்றது. இயற்பாக்களின் இடையே இசைப்பாக்கள் மடுக்கப்படுங்கால் பாட்டுமடை என்றும், புறத்திணைத் துறைக்கருத்துக்களை உள்ளடக்கிய இசைப்பாக்கள் இடையே மடுக்கப் பெறுங்கால் துறைப்பாட்டு மடை என்றும், உரையும் பாட்டும் இடையில் விரவிய இயற்பாக்களை உரைப்*

பாட்டுமடை என்றும் நுட்ப வேறுபாடுகளுடன் இவ்யாப்புக் குறியீடுகளை வழங்கிய இளங்கோவின் நுண்மாண்நுழைபுலம் பாரட்டுதற்குரித்து. இம் முறையிலேயே இயற்றமிழ்ப் பாக்கள் பயின்று வரும் பகுதிகளைக் காதை என்னும் யாப்புக் குறியீட்டுச் சொல்லால் வழங்கும் திறமும் நயத்திற்குரித்து"

(சி யா. பக். 431 - 32)

நாட்டுதும்... பாட்டுடைச் செய்யுள் (சிலப். பதிகம். 60)

மங்கலவாழ்த்துக்காதை என்னாது, பாடல் என்றது இசைப்பாடலான கொச்சகக் கலியால் அது இயன்றதால் அரங்கேற்றுக்காதை நாடகக் கவிக்கூற்றாய் அமைந்த நிலை மண்டிலம். கானல் வரி இசைப்பாவால் பெற்றபெயர் (வரி = இசைப் பாடல்). வேட்டுவ வரி கூத்துப்பாடல்களால் இயன்ற காதையாதலால் கூத்தால் பெற்ற பெயர்.

(வரி = கூத்து)

நாடக வரிப் பெயராய் (சிலப். பதிகம் 73 அடியார்க்.) ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவைஆகியன குரவைப்பாடல் நிறைந்து கூத்தால் பெற்ற பெயர்

(குரவை- குரவைப்பாட்டு, குரவை ஆடல்)

கனாத்திரம் உரைத்த காதையும். வஞ்சினமாலையும் "ஒரு பொருள் நுதலிய" கலிவெண்பாட்டால் அமைந்தவை.

**'கடலாடுகாதையும்'**, **'இவ்வாறைந்தும்'** என்பது போன்ற குறளடியும், **'வாழ்த்து வரந்தரு காதையொடு'** என்ற சிந்தடியும் வருவது. (சிலப். பதிகம். அடியார்க்.)

| காதை எண் | காதை பெயர் | பாடல், யாப்பு |
|---|---|---|
| 1 | மங்கல வாழ்த்துப்பாடல் | இயல்மயங்கிசைக் கொச்சகக்கலி |
| 2 – 6 | மனையறம்படுத்தகாதை – கடலாடுகாதை | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 7 | கானல் வரி | பல்வேறு இசைப்பாடல்கள் |
| 8 | வேனில் காதை | நிலை மண்டில ஆசிரியப்பா |
| 9 | கனாத்திறம் உரைத்தகாதை | கலிவெண் பாட்டு |
| 10 | நாடுகாண் காதை | நிலைமண்டிலஆசிரியப்பா |
| 11 | காடுகாண் காதை | பல் தாழிசைக் கொச்சகக்கலி |
| 12 | வேட்டுவ வரி | பல் தாழிசைக் கொச்சகக்கலி |
| 13 – 16 | புறஞ்சேரி இருத்தகாதை – கொலைக்களக்காதை | நிலை மண்டில ஆசிரியப்பா |
| 17 | ஆய்ச்சியர் குரவை | அயல்மயங்கிசைக் கொச்சகக்கலி |
| 18 | துன்ப மாலை | கொச்சக ஒரு போகு, கொச்சகக்கலி |
| 19 | ஊர் சூழ்வரி | அயல்மயங்கிசைக் கொச்சகக்கலி |
| 20 | வழக்குரை காதை | உறழ் கலி |
| 21 | வஞ்சின மாலை | கலிவெண்பாட்டு |
| 22 – 23 | அழல்படுகாதை கட்டுரை காதை | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 24 | குன்றக்குரவை | கொச்சக ஒரு போகு |
| 25 –28 | காட்சிக்காதை – நடுகல் காதை | நிலை மண்டில ஆசிரியப்பா |
| 29 | வாழ்த்துக் காதை | அயல் மயங்கிசைக் கொச்சகக்கலி |
| 30 | வரந்தரு காதை | நிலைமண்டில ஆசிரியப்பா |

(இழைஇழையாய் இசைத்தமிழாய் பக். 130 - 31)
← த. இ பே. 79 - 81 / 16; சி. யா.

## சிலம்ப: எதிரொலிக்க

சீர் திகழ் சிலம்பகம் சிலம்பப்பாடி (முருகு. 40)
கோழி சிலம்பச் சிலம்பும் குருகு... (திருவெம்பாவை. பா. 8)
ஆடுகளம் சிலம்பப்பாடி (முருகு. 245)

## சிலம்பல்:

1. யாழ்ஓசை (பிங்க.)
2. எதிரொலித்தல்

கோழிசிலம்பச் சிலம்பும் குருகு (திருவெம்பாவை 8)

→சிலம்ப; சிலம்பு; சிலம்பிசை

## சிலம்பிசை: எதிரொலிக்கும் ஓசை

சிலம்பில் சிலம்பிசை ஓவாது (பரிபா. 15: 44)

## சிலம்பு:=கெச்சை, சதங்கை, புட்டில்,நெகிழி, நெகிளம், நூபுரம், பரிபுரம்

1. கால் அணி,

அரிபெய்புட்டில் ஆர்ப்ப (அகம். 122 : 19)
அரிபெய்சிலம்பு (அகம். 6: 1)
தெள்ளரிப் பொற்சிலம்பு (மதுரைக். 444)
அரி, தவளை, நெகிழி, நூபுரம், சிலம்பே (பிங்க. 1184)
பரிபுரம்... நூபுரம்... சிலம்பு... (சூடா. 7:25)

2. எதிரொலித்தல்

பன்றி பறையும் குன்று அகச்சிலம்பு (மலைபடு. 344)
இவ்வோசைகளால் மலையிடத் தெழும் எதிரொலியும் (மேலது.நச்சர்)
சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி (மலைபடு. 26)
மணியரண் மலைச் சிலம்பன்ன (தெ. இ. க. 14 44, த. க. சொ. 244)
நளி மலைச்சிலம்பின் சிலம்பு கோயில் (நெடுநல். 100)
எம்பிராட்டி திருவடிமேல் பொன்னஞ்சிலம்பில் சிலம்பி (திருவாசக. 7: 16)
சிலம்பொடு சிலம்பித் தேனும் திருமணி வண்டும் பாட (யசோதர. 89: 1)
ஈரை... தாகும், புட்டிலும்... (சீவக. 1772 : 3)
சிறாஅர் ஞெகிழும் சிலம்ப (கலித். 90)
வளநகர் சிலம்பப் பாடி (அகம். 22)

3. மலை, சாரல், பக்கமலை, மலைச்சரிவு (Mountain slope)

இரு மலைக்கு இடைப்பட்ட அடர்ந்த காட்டுப் பகுதி; எதிரொலிக்கும் இடம்.

சிலம்புபாய் வருடையொடு (சீவக. 1238)
கறிவளர் சிலம்பில் துஞ்சும் யானையின் (சிலப். 28: 114)
கறிவளர் சிலம்பில்... (கலித். 52: 17)
மால்வரை சிலம்பின் மகிழ்சிறந்து ஆலும் (பெரும். 330)

↑ எனவே பரல்களால் எதிரொலிக்கும் ஓசையை உடைய அணிகலனானது, எதிரொலிக்கும் மலையின் பெயரால் சிலம்பு ஆனது.

4. இசைக்கருவி

ஓர் இசைக்கருவியாகவும் சிலம்பு பயன்படுகிறது.

பாடுசிலம்பும் இசை ஏற்ற (மதுரைக். 90)

## சிலீமுகக்கை: → அம்புக்கை

## சிலை:

1. ஓசை
கடுஞ்சிலை கடவும் தழங்கு குரல் முரசும் (பதிற். 68: 3)
சிலைமான் வல்வில் சுற்றி... (அகம். 69: 15)
சிலைவல்ல இடியேறு (நற். 112: 9)
சிலை, ஒலி, மலை, கல், வில்லாம் (சூடா. 11: 16)
2. → வில்

## சிலைப்ப: *முழங்க, ஒலிக்க*

ஆமா நல் ஏறு சிலைப்ப (முருகு. 315)

## சிலைத்தல்: இசைத்தல்

துவைத்தலும் சிலைத்தலும்... இசைப் பொருட் கிளவி...
(தொ. சொ. உரி. 60)

## சிவதாண்டவம்:

*இது நாலன் அடம் (சதுசுரஅடதாளம்) என்ற தாளத்தில் அமைவது*
*12 எழுத்து - 2 லகு + 2 துரிதம் ( $1_4$ $1_4$ $0_2$ $0_2$ )*
*உமா சம்கார தாண்டவம் - 7 எழுத்து திரிபுடதாளம் (மூன்றன்திரிபுடை)என்ற தாளத்தில் அமைவது.*

## சிவணுதல்: பொருந்துதல்

பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி (தொ. சொ. 2)
செந்தமிழ்நிலத்து வழக்கொடு சிவணி (தொ.சொ. 38)
...இசையொடு சிவணிய நரம்பின் மறை... (தொ.எ. 33)

## சிவன்:

*திருப்பதியம் ஓதும் சிறுத்தொண்டருக்கான பட்டம்.*
*பட்டாலகன் சீருடைக் கழலான பூர்வ்வ சிவனுக்கு*
*(தெ. இ. க. 2 65: த. க. சொ. 589)*

## சிவனின் ஆடல்:

*பாண்டரங்கம், கொடுகொட்டி (கொட்டி) காபாலம் என இம்மூன்றும் சிவனின் ஆடல்கள்*
"கொட்டி கொடுவிடையோன் ஆடிற்று..." "பாண்டரங்கம் முக்கணான் ஆடிற்று..." (சிலப். 3: 14 அடியார்க்.)
இமையவன் ஆடிய கொட்டிச் சேதமும் (சிலப். 28: 75)
*(கொட்டி (பி - ம்) கொடுகொட்டி)*
இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும் (சிலப். 6:43)

## சிவிறுகை: = சிமிறுகைச்சாலி *(மத். இயல்)*

*வலப்புறமாகிய தட்சிணத்தில் 'கிணகிடு'என வாசிப்பது.*
*(சிமிறு என்பதே சரியான வடிவாகலாம்)*
ஒப்பு : புள் சிமிழ்த்தற்று - குறள்
*← ப. ம. பக். 341.*

## சில்கோவை உள்ளோசைப்பண்:

= அர்த்த கம்பிதராகம்
*பண்ணில் சில கோவைகள் மட்டும் உள்ளோசை (கமகம்) பெற்றுவருவது.*
*(அர்த்தம் = பகுதி; ஒப்பு : அர்த்தநாரீஸ்வரர்)*
*← த. வ. 96*

## சிற்றிசை:

1. ஆகணம் (தே. நே. 300 ,IX)
2. வெண்டுறைச் செந்துறையுள் ஒருவகை (யா. வி.)
3. மறைந்துபட்ட இசைநூல்களுள் ஒன்று.

## சிற்றெண்:

இருசீர் ஓரடியாய் வரும் அம்போதரங்க வகை
(யா. கா. செய். 10 உரை.)
*→ அம்போதரங்கம்; எண்*

## சிறப்புச் செலவு: =விசேச சஞ்சாரம்.

*சிறப்பு வழக்கு, சிறப்புப் போக்கு. ஒரு பண்ணிற்குரிய வரிசையில் கோவைகள் ஒலிக்காமல் வேறுவகையில் இனிமை ஊட்டும் பொருட்டுச் சிறப்பாக ஒலிப்பது*
*எடு:- அரும்பாலை (சங்கராபரணம்)யில் 'ச் நி த ப' என்று அமைப்பதைச் 'ச் த ப' என்றும் 'ம த நி ரி' என்றும் அமைப்பது.*
*← த. வ. பக். 86; இ.து. த. சொ. பக். 17*

## சிறப்புநிறக் கோவை: = விசேச சுருதி சுரம்

*ஒரு பண்ணின் சிறப்பு ஒலி வண்ணத்தை (நிறத்தை)த் தெளிவாகக் காட்டும் கோவை. இது அலகு அளவில் கூடியோ குறைந்தோ ஒலிக்கும்.*
*எடு:- தேவகாந்தாரிப்பண்ணில் வன்கைக்கிளை - $க^2$ (காந்தாரக் கோவை)யின் ஒலியைக் குறிப்பிடலாம்.*
*←த. வ. பக். 86 - 87*

## சிறுகுழல்: குழலின் வகையுள் ஒன்று.

பனி இருள் சூழ்தரப் பைதல ஞ்சிறுகுழல் (கலித். 129: 16)
ஆயன் உவந்து ஊதும் – சீர்சால்
சிறுகுழல் ஓசை... (ஐந். 50: 7: 2 – 3)

## சிறுசின்னம்: = பீலி

*ஒருவகைக் குழல்கருவி*
பீலி சிறு சின்னம் (பிங்க. 1267)

## சிறுதனம்:

சிறுதனம், பெருந்தனம், தலைக்கோல்அரிவை என்பவை நாடகக் கணிகையர்க்கு வேந்தன் அளிக்கும் பட்டங்களாகும் (தே. நே. 296 /IX)

→ பெருந்தனம்

## சிறுதுத்திரி:

இரட்டைச்சின்னம் என்ற ஊது கருவி (தக்கயாகப். 344 உரை.)

## சிறுதுடி:

*சிறிய உடுக்கை வகை.*

## சிறுதேவபாணி:

*இசைப்பாவகையுள் ஒன்று.*

சிந்து திரிபதை... சிறுதேவபாணி... இன்னிசையின்பா

(பஞ்ச மரபு. சிலப். 6: 35 அடியார்க். மேற்.)

## சிறுபறை:

1. *பறைவகையுள் ஒன்று; ஒருமுகப்பறை.*

தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின் (சிலப். 24: 16)

மான்தோல் சிறுபறை கறங்கக் கல்லென (மலைபடு. 321)

யாழும் குழலும் அரிச்சிறுபறையும் (பெருங். உஞ்சைக். 37: 90)

2. *பிள்ளைத்தமிழ் உறுப்புகளில் ஒன்று.*

→ தொண்டகம்

## சிறுமுழா: தோற்கருவி வகையுள் ஒன்று

ஒருதலைப் பதலை தூங்க ஒருதலைத் தூம்பகச் சிறுமுழா தூங்கத் தூக்கி (புறம். 103: 1 – 2)

## சிறை:

1. ஒலிஎழாமல் தடைப்படுத்தி வைக்கும் யாழ் நரம்புக் குற்றம்.

(பதிற். 43: 21 உரை.)

2. *வண்டின் வகையுள் ஒன்று.*

அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும் (முருகு. 76)

*←செ. ப. அ. 1465*

## சின்னம்:

*காளம். ஓர் அடையாளக்கருவி. சிறிய வடிவினது.*

சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய் (திருவாசக. 7: 7)

ஆறெறி பறையும் சூறைச் சின்னமும் (சிலப். 12: 40)

இறை... சின்னம்... சிறுமைப் பெயரே (திவா. 1365)

சின்னம் தனிக்காளம் தாரை... (பெரியபு. சம்பந். 283)

*ஒப்பு: நாக சின்னம்; திருச்சின்னம்*

## சின்ன முறை:= பொது முறை

*கருவறைக்கு வெளியே நின்று தேவதாசியர் நிகழ்த்தும் நாட்டியம், சோடசோபசாரம் முதலியன.*

## சின்ன மேளம்:

1. *சதிர், சதிராட்டம், சதிர்மேளம், தாசி ஆட்டம்*
2. *சதிர்க்குழு; நாட்டியக்குழு*

*நாட்டிய நங்கை, நட்டுவனார், தாளக்காரர், ஒத்துக்காரர், பின்பாட்டுப்பாடுவோர், மத்தளகாரர், குழலர் முதலிய ஆடல் குழுவினர்.*

*(மேளம் = கூட்டம்)*

*← த. க. க. 314* /II



**சீகாமரம்:** = காமரம், சுத்ததன்யாசி

*மருதயாழ்த் திறங்களுள் ஒன்று*

தக்கேசி... சீகாமரம்... மருதயாழ்த்திறனே (பிங்க. 1383)

*இது காமரம் என்ற சுத்ததன்யாசிப்பண்.*

*காமரம் - சீகாமரம்*

*ஒப்பு:- காழி → சீகாழி*

*காளத்தி → சீகாளத்தி*

*(சீ என்பது சிறப்புக்குறிக்கும் அடைமொழி)*

↑ தற்காலம் சீகாமரம் என்பது வேறொரு பண்ணிற்கான பெயராக மாறியுள்ளது.

→ காமரம்

**சீங்குழல்:** குழல் வகையுள் ஒன்று

தித்தி சிறு முகவீணை சீங்குழல் (குற்றா. தல. தருமசாமி. 54)

*←செ. ப. அ. 1473*

**சீட்டுக்கவி:** = ஓலைப்பாசுரம் (Epistle or lelter written in verse)

சோற்றுக்குச் சீட்டுக்கவி பாடிக்கொடுத்த சொக்கே (திருவிளை. பயகர. 55)

**சீதமுற்றோன் அவிநயம்:**

"சீதமுற்றோன் அவிநயம் செப்பி, னோதிய பருவர லுள்ளமோ டுழத்தலும், ஈரமாகிய போர்வை யுறுத்தலும், ஆரவெயிலுழந்தழலும் வேண்டலும், உரசியு முறன்று முயிர்த்து முரைத்தலும், தக்கன பிறவுஞ்சாற்றினர் புலவர்". (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**சீபலி:** = சீவேலி, ஸ்ரீபலி

*பரிவாரதேவதைகளுக்கு அன்னமளிக்க (பலிதூவுதல்) உற்சவமூர்த்தியை வெளிப்பிரகாரத்திற்கு எடுத்து வந்து யானைமேல் ஏற்றிக் கோவிலை வலம் வருவது. அப்போது இடக்கை வாசிக்கப்படுகிறது. (ம. வ.) (ஞானாகானம் - கேரளக்கோவில்களில் இடக்கை. கட்டுரை பக். 151)*

**சீர்:**

1. *தாளம்*

சீர், செல்வம், தாள ஒத்து (சூடா. 11: 14)

தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடுவிரைஇ (அகம் 118: 3)

சீர் இனிதுகொண்டு நரம்பு இனிது இயக்கி (மதுரைக். 657)

யாழோர் தாள அறுதியை இனிதாக உட்கொண்டு (மேலது நச்சர்.)

கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ (கலித். கட. வாழ். 7)

சீருடை நன்மொழி நீரொடு சிதறி (பொருந. 24)

சீர் – தாளம் முடியுங்காலத்தைத் தன்னிடம் உடையது (மேலது நச்சர்.)

*(சீர் - தாளமுடிப்பு)*

சீர் அமை பாடல் (பரிபா. 11: 69)

தாளமும்.... சீர்த்தியும்.... சீரெனல் (பிங்க. 35: 39)

கைக்கசடு இருந்த என் கண் அகன் தடாரி இருசீர்ப்பாணிக்கு ஏற்ப (பொருந.70 – 71)

சீர் தரு கேள்வன் உருட்டும் துடிச்சீர் (பரிபா. 21 : 60)

சீரோடும் பாடல் ஆடல் (தேவா. 3: 57: 2)

இன்சீர் கின்னரம் (பெரும்பாண். 493 – 94)

இனியதாளத்திலே கின்னரம்... (மேலது. நச்சர்.)

துணங்கை அம்சீர் தழூஉமறப்ப (மதுரைக். 159 – 60)

சீர் – அழகினையுடைய தாள அறுதி (மேலது. நச்சர்)

யாழும் குழலும் சீரும் மிடறும் (சிலப். 3:26)

சீர் – இருவகைத்தாளக் கூறுபாடுகளும் (மேலது. அரும்)

2. பல்வகை இயங்களின் ஓசை; ஓசை (அ. நி.)

சீர்ததும்பும் அறவமுடன் சிறந்து (பரி. 18: 43)

கொட்டும் பறை சீர் (தேவா. 1: 86: 1)

இமிழ்கண் முழவின் இன்சீர்... (அகம். 66: 22)

பல்வகை இயங்கள் ஓசை... சீர்என்று ஆகும் (திவா. 2045)

நலம் புரீஇ அம்சீர்... (பரிபா. 15: 63 – 64)

3. *வரி, பாட்டு*

யாம் பாடும் அசை வரல் ஊசல்சீர் (கலித். 131: 34)

பண் அமை இன்சீர்க் குரவையுள் (கலித். 102)

4. *ஆட்டம்*

நிணம் வாய்ப் பெய்த பேய் மகளிர்

இணையொலி இமிழ் துணங்கைச்சீர் (மதுரைக். 25 – 26)

தண்குரவைச்சீர் தூங்குந்து (புறம். 24: 6)

5. *செய்யுள் உறுப்புக்களுள் ஒன்று* (Foot). *காய்ச்சீர், மாச்சீர் போல்வன.*

யாத்தசீரே அடி யாப்பு எனா (தொ.பொ. 313)

6. *ஓசை அளவு பெற்ற சொல், சந்தம், வண்ணம்*

சீர் இன்புறும் தமிழ் (தேவா. 2: 78: 11)

சீரின் மலி செந்தமிழ்கள் (தேவா. 3: 75: 11)

..ஞானசம்பந்தன் சீர்செய்த பத்தும்... (தேவா. 2: 11)

போர் மிகுந்த... சம்பந்தன் உரைசெய்த சீர்மிகுந்த தமிழ் வல்லார் (தேவா. 1: 11)
வாரின்மலி... சீரின்மலி செந்தமிழ்கள்... (தேவா. 3: 11)
கண்ணும்... ஞானசம்பந்தன் சொல் வண்ணம் மூன்றும் தமிழில்... (தேவா. 2: 11)
கொந்த... சந்தமார்ந்தய காய தண்தமிழ்மாலை... (தேவா. 2: 11)
அந்தண் சோற்று... சந்தம் பரவு ஞானசம்பந்தன்... (தேவா. 1: 11)

*←த. க. க. 317*

**சீர்அந்தாதி:** = செந்நடைச்சீர் அந்தாதி
*பாடலின் முதல் அடியின் ஈற்றுச்சீர் அடுத்த அடியின் முதற்சீராக அந்தாதித்து வரும் தொடை*
*'இப்பிஈன்ற இலக்குகதிர் நித்திலம்*
*நித்திலம் பயந்த நேர் மணல்எக்கர்'*
*முதலடி இறுதிச்சீர் 'நித்திலம்' இரண்டாமடி முதற் சீராயினமை சீர்அந்தாதியாம்*

*←யா. க. 52 உரை; த. இ பே. 264 / 14*

**சீர்கோடிகம்:**
பாலைப்பண்ணின் அருகியல் (சிலப். 4: 160 – 67அடியார்க்.)

**சீர்த்தாளம்:**
*சீர் என்பது முழவுச்சொற்கட்டினால் ஆகிய காலஅளவினைச் சுட்டுவது; தனித்தனி முழவுச் சொற்கட்டின் வழியாகத் தாளத்தை அமைத்துக் காட்டுவது.*

*← த. க. க. 18/I,→ சீர்*

**சீர்த்தொங்கல்:**
*வண்ணம் மற்றும் சந்தப்பாடல்களின் கண்டிகையில் வரும் ஈற்றுச்சீர்*
அகரமுமாகி – அதிபனுமாகி
அதிகமுமாகி – அகமாகி (திருப்புகழ்)
*அகமாகி - தொங்கல்*
*'அகமாகி' என்ற சீர், சீர்த்தொங்கலாகியது. எனவே இது சீர்த்தொங்கல்*

**சீர்ப்பாணி:** *சீர்த்தாளம்*
கைக்கசடு இருந்த என் கண் அகன் தடாரி
இருசீர்ப்பாணிக்கு ஏற்ப (பொருந. 70 – 71)

**சீர்பாடல்:**
*திருமணத்தின் நான்காம் நாள் திருமணச்சடங்கில் இருவீட்டாரைப் புகழ்ந்து பாடுகை.*

*←செ. ப. அ 1483*

**சீரணி:** *விரைவாகக் காலிடும் கூத்தின் முறை*

*←செ ப. அ. 1484*

**சீராகம்:** = ஸ்ரீராகம்
*பண்களுள் ஒன்று*
ஈரிரு பண்ணும்.... சீராகம்... (பிங்க. 1380)
செவ்வழியின் அருகியல் (சிலப். 14: 160 – 67அடியார்க்.)
*சீ - சிறப்பு முன் அடை*
*ஒப்பு: சீகாரியம் - ஸ்ரீகாரியம் - கோவிற்பணி*
*சீபலி - ஸ்ரீபலி - தெய்வத்திற்கான படையல்.*

**சீருடன் உருட்டல்:** = பரண்
*எட்டுவகை இசைக் கரணத்துள் ஒன்று*
சீருடன் உருட்டல்... (சிலப். 7: 13)
உருட்டல் என்றது – இடக்கைச்சுட்டுவிரல் தானே உருட்டலும், வலக்கைச் சுட்டுவிரல் தானே உருட்டலும், சுட்டொடு பெருவிரல் கூட்டி உருட்டலும், இருபெரு விரலும் இயைந்து உடன் உருட்டலும் எனவரும். (மேலது. அரும்.)
*நாலைந்து சுரங்களைச்சேர்த்து மூன்றாம் நான்காம் காலத்தில் விரைந்து ஒலித்தல் உருட்டல் ஆகும். கோவைகளைத் தாளக்கணக்கில் சேர்த்து உருட்டல், சீருடன் உருட்டல் எனப்படும்*
*(சீர் = தாளம்)*

*←ப இ. இ. 222 - 23*

**சீவசுரம்:** → உயிர்ச் சுரம்

**சீவணி:** = *சீவனி*
*செவ்வழி யாழ்த்திறம்*
சீவணி ஓர்மருந்து செவ்வழித்திறத்து ஓர் ஓசை (சூடா. 11: 6)
*செவ்வள்ளி > சீவனி, சீவணி*
செவ்வள்ளி - Purple yam (மலை. அக.)
செவ்வழியாழ்த்திறத்து ஓரிசைப்பெயரும் உயிர்தரு மருந்தும் சீவனியாகும் (பிங்க. 3540)

**சீவனி:** → சீவணி

**சீவா:** → சீவாளி

**சீவாளம்:** → சீவாளி

**சீவாளி:** = *சீவா, சீவாளம்*
1. *தம்புருவின் இசையை (சுருதி) நுண்ணியதாக, அளவுப்படுத்தற்கு அதன் நரம்பில் தொடுக்கும் சிறுநூல்*
2. *கொருக்கை, நாக்கு, (Reed) நெகிழி, சீவா, தட்டை நாகசுரம், கிளாரிநெட் போன்ற காற்றுக்கருவிகளில் வாய்வைத்து ஊதும் போது தரும்காற்றால், துடித்து ஒலிதரும் உறுப்பு*

*←த. க. க. 181 ; செ. ப. அ. 1489*

**சீவினி:** *யாழின் ஓசைவகை*
*←செ. ப அ. பிற். 283*

**சீவேலி:** → சீபலி

**சீவை:** → சீவையர்

**சீவையர்:** *கூத்தியர் (அ நி.)* (dancing girls)
*(சீவை - கூத்து)*

**சீழ்க்கைக்கூத்து:** = விளிக்கூத்து
*சீழ்க்கை எழுப்பி ஆடும் கூத்து*
பூத்தலை... நாத்தலை மடி விளிக் கூத்தொடு குயில் தர (சீவக. 120)
இளையவர் சீழ்க்கைக் கூத்தோடு நெருங்குதலால் (மேலது. உரை)

**சீறியாழ்:** = கைவழி
*சிறியயாழ்,* (Portable yal, small lute)
கருங்கோட்டுச் சீறியாழ் (புறம். 127)
கையது கடன் நிறையாழே (புறம். 69: 1)
படுமலைநின்ற பயன்கெழு சீறியாழ் (புறம். 135: 8)
வணர் கோட்டுச் சீறியாழ்... (சிலப். 28: 31)
பாணர் கையது பண்புடைச் சீறியாழ் (நற். 30)
பெரிது புலம்பினனே சீறியாழ்ப் பாணன் (ஐங். 475)
விளரி நரம்பின் சீறியாழ் (அகம். 279)
அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ் (அகம். 331: 10)
தீந் தொடைச் சீறியாழ் (புறம். 70)
வணர் கோட்டுச் சீறியாழ் (புறம். 155: 1)
கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப (நெடுநல். 70)
*சிறியயாழ் → சீறியாழ்*
*பெரியயாழ் → பேரியாழ்*

↑ செங்கோட்டுயாழினைப் போன்ற, ஆனால் சிறிய கையடக்கமான வடிவுடையது சீறியாழ். எளிதில் எங்கும் கையில் எடுத்துச்செல்ல ஏதுவாகச் சிறியதாக இருந்ததால் சீறியாழ், கைவழி எனப்பட்டது
வணர் கோட்டுச் சீறியாழ்... புணர்புரி நரம்பில்...
(சிலப்: 28: 31 – 32)

*இங்கு வணரும் கோடும் என்று இரு யாழ் உறுப்பாகப் பிரித்துப்பொருள் கொள்ளல் வேண்டும். வணர் கோட்டுயாழில் புரி நரம்பு கட்டப்பட்டிருந்ததை மேற்காணும் சிலம்பு அடிகள் தெளிவு படுத்துகின்றன. புரிநரம்பு, திவவு எனும் வார்க்கட்டு நேரான யாழ்த்தண்டில் மட்டுமே கட்ட முடியும். →கைவழி, செங்கோட்டுயாழ்,கருங் கோட்டுச் சீறியாழ்*



## சுகிர்:

1. முறுக்கின
2. சுகிர்தல், சுகிர்புரிதல்

வடித்தல் (making the string taut, tuning)
எட்டுவகை இசைத் தொழில்(கரணம்)களுள் ஒன்று
வார்தல் வடித்தல்... இசையோர் வகுத்த எட்டுவகை இசைக்கரணத்து (சிலப்7: 12 – 15)
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி (புறம். 109)
குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பு (மலைபடு. 23)
வீணைச் சுகிர்புரி நரம்பு (சீவக. 728)

←செ. ப. அ. 1498

## சுட்டாமுட்டி: → சுட்டுவிரல்

## சுட்டு: → சுட்டுவிரல்

## சுட்டுவிரல்: = சுட்டாமுட்டி, தர்ச்சனி, சுட்டு

ஆட்காட்டிவிரல் (Index finger, fore finger)
ஆடலின் போது கைமுத்திரை காட்டுவதிலும் மற்றும் புல்லாங்குழல் வாசிப்பதிலும் பங்கு கொள்ளும் விரல்.
சுட்டுவிரல் தனை மாசரை நீட்டி (பரத. பாவ. 30)
...தர்ச்சினி முதலாக விட்டுப்பிடிப்பது (சிலப். 3: 58அரும்.)
தர்ச்சனி – சுட்டாமுட்டி – ஆள்காட்டிவிரல் (மேலது & அடிக்.)
... சுட்டுவிரல்நுனியில் பெருவிரல்... (சிலப் 3: 18. அடியார்க்.)

→ தர்ச்சனி

## சுண்ணம்:

1. பாடலில் பொடிப்பொடியாகச் சிதறிக்கிடக்கும் சொற்களை ஒட்டுவழி அறிந்து ஒட்டிப்பொருள் கொள்ளல்.

(சுண்ணம் - பொடி)

சுண்ணம் தானே... ஈரடி எண்சீர் ஒட்டுவழி அறிந்து துணிந்தனர் இயற்றல் (தொ. சொ. எ. 10)
எடு:– புறம். 113 மற்றும் **'சுரையாழ அம்மி மிதப்ப'** என்ற பாடல் (தொ. சொ. 400 இளம்)
(இது ஆதிதாள வட்டணையுள் அடங்குவது)

2. சொல் வகை நான்கனுள் ஒன்று

சொல்வகை நான்கு வகைப்படும்: சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதக மெனை. (சிலப். 3: 12 அடியார்க்.)

3. நான்கடியான் வரும் இசைப்பாடல்

சுண்ணம் – நான்கடியான் வருவது (மேலது)
ஈரடி எண்சீரைப் பொருள் முறை இன்றித் துணித்துச் செய்யுள் இயற்றும் முறை

←செ. ப. அ. 1507

## சுணங்கை: = துணங்கை

கூத்து வகைளுள் ஒன்று
ஆடுங்கள்ளும் பராய்ச் சுணங்கை எறிந்து (பாசுரம். 4: 6: 7)

→துணங்கை

## சுத்தகாந்தாரம்:

ஆசான் என்ற பண்ணின் பெருகியல் (பெருகுசாதி)
... ஆசானுக்கு... பெருகு சாதி சுத்தகாந்தாரம் எனக்கொள்க (சிலப். 13: 110 – 12அடியார்க்.)

## சுத்தசாரி:

நாட்டிய வகையுள் ஒன்று.
தாளகமே சுத்தசாரி (திருவிளை. கான் மாறி. 8)

## சுத்த சாவேரி: → கொன்றைக்குழல்

## சுத்த சாளங்கம்:

மத்தளவகையுள் ஒன்று (பரத. ஒழிபி. 13)

## சுத்தசுரம்:

= மந்தரசுரம், தொல்லேழிசை நரம்பு, முழுச்சுரம், சுத்தத்துளை, முழுத்துளை(பிரகிருதி சுரம்), இயல் சுரம் (Natural note)
முல்லை - முல்லையாழ் - செம்பாலை என்ற அரிகாம்போதிப் பெரும்பண்ணே தமிழிசையின் தலைமைப் பாலையாகும். அதன் சுரங்களே சுத்த சுரங்கள்
அவையாவன: ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^1$

குரல்துலை வில்துத்தம்... தொல் ஏழிசை நரம்பிற்காம்
(சிலப். 17: (13) அரும். மேற்.)
எனவே இன்றைய அரிகாம்போதியே தமிழிசையின் சுத்த சுரமேளம் (சுத்தமேளம்)
(சுத்தம் - தூய்மையானது, இயற்கையானது, தலைமையானது)
எடு:- சுத்த மேளம், சுத்த மத்தளம்.

**சுத்த சுர மேளம்:** → சுத்தசுரம்

**சுத்தத்துளை:**
= முழுத்துளை, முழுச்சுரம், முழுநரம்பு (Natural note) முல்லை - முல்லையாழ் - செம்பாலை என்ற அரிகாம் போதிக்குரிய சுரங்கள். அதாவது புல்லாங் குழலின் முழுத்துளையில் பிறக்கும் சுரங்கள்
சரிகமபதநி... சுத்தத்துளை (சிலப். 3: 26 அடியார்க்.)
→சுத்தசுரம்
சுத்தத்துளை-முழுத்துளையில் ஒலிக்கும் சுரங்கள் - ஆகுபெயர்.
← ப. இ இ பக் 118 - 119; சிலப் 17: 13. அடியார்க்.

**சுத்ததைவதம்:** → மென்விளரி

**சுத்த நடம்:** → சொக்கம்

**சுத்தநிருத்தம்:**
= சொக்கம், சொற்கட்டு நடனம் (pure dance) பாடலின்றித் தாளத்திற்கு (சொற்கட்டு) மட்டும் ஆடும் ஆடல்.
எடு:- அலாரிப்பு
சொக்கம் என்றது சுத்த நிருத்தம்...
(சிலப். 3: 12 அடியார்க்.)
சாந்திக்கூத்தே... ஈரிரு நடமவை சொக்கம் மெய்யே அவிநய நாடகம்... புலவர் (சீவக. 672 நச்சர். மேற்.)

**சுத்தம்:** → சொக்கம்

**சுத்தமத்தளம்:**
மத்தளவகையுள் உயர்வானது. (A superior drum). கோவில்களில் இசைக்கப்படும் பெரிய வடிவு மத்தளம் அதிக ஒலி கொண்டது கதகளியில் பயன்படுத்தப்படும் ஐந்து இசைக்கருவி (பஞ்சவாத்தியம்)களில் ஒன்று; திருவாரூர்க் கோவிலில் (பஞ்சமுக வாத்தியம்) ஐம்முக முழவுடன் சுத்தமத்தளம் இசைக்கப்படுகிறது.
← த ப. வ 303

**சுத்தமத்திமம்:** → மெல் உழை

**சுத்தமேளம்:** → சுத்தசுரம்

**சுத்த தன்யாசி:** → ஆம்பல்குழல்

**சுத்தரிசபம்:** → மென் துத்தம்

**சுத்தவசந்தம்:**
பண்களில் ஒன்று (பரத இராக. 102)

**சுத்தாந்திரஆட்டம்:** → சொக்கம்

**சுத்தாங்கம்:** தாளம் இன்றிப்பாடுதல்.
(அங்கம் = தாளம்)
→ இலயாங்கம் ; தாளமில் உரு

**சுதந்தன்:**
கூத்தாடி (ச. அ.) (dancer, player, actor)
←செ ப. அ பிற். 285

**சுதி:**
= ஒத்து, குரல், இமிர்பு, ஆர்ப்பு, தாது, அலகு, வீக்கு, மாத்திரை, ஒற்று, பற்று, கேள்வி, பண், பண்ணு(Pitch of a tune, key note, Drone) (சுருதி)
இசையுடன் சேர்த்து எழுப்பப்படும் துணை ஒலி(சுருதி)
பண்ணுசுதி நீ எனக்குப் பாட்டினிமை நான் உனக்கு (பாரதி)
விரும்பும் சுருதி இசைகேட்டு (பாரத. சிறப்பு. 12)
தொடுத்தமுறை ஏழிசையின் சுருதி பெற வாசித்து
(பெரியபு. ஆனாய. 14)
புரி உறுநரம்பும் இயலும் புணர்ந்து சுருதியும் (பரிபா. 18: 51 – 52)
நரம்பு ஆர்த்தன்ன வண்டினம் முரலும் (அகம். 355: 5)
புதைத்து விடு நரம்பின் இம்மென இமிரும் (அகம். 317: 13)
அணிமிகு வரிமிஞிறு ஆர்ப்ப... (குறிஞ்சி. 111)
காந்தள் ஊதிய மணி நிரத்தும்பி தீந்தொடை நரம்பின் இமிரும்
(நற். 17: 10 – 11)
இரங்குஇசை மிஞிறொடு தும்பி தாது ஊத (கலித். 33: 23)
வடிநரம்பு இசைப்ப போல் வண்டொடு சுரும்பு ஆர்ப்ப
(கலித். 36: 3)
மகரத்தின் ஒற்றால் சுருதி விரவும் (பஞ்ச. 45)
இடக்கண் இளியாய் வலக்கண் குரலாய் நடப்பது தோலியற் கருவியாகும். (சீவக. 675 நச். மேற்.)
மாத்திரை கடவா மரபிற்றாகி (பெருங். 1: 37: 125)
(சுருதிவிலகாமல் பாடுவது; மாத்திரை = சுருதி)
வலிவும், மெலிவும், சமனு மென்னும் மூவகைப்பட்ட சுருதியும்...
(சிலப். 8: 42 அடியார்க்.)
நரம்போசைகளில் எஃகுச் செவியாலே சுருதியை அளந்து
(முருகு. 140 – 41 நச்சர்.)
சொற்றமிழ் மாலையின் இசைகள் சுருதியாழ் முறை தொடுத்து
(பெரிபு. சம்பந். 144)
தான நிறை சுருதிகளில் தகும் அலங்காரத் தன்மை (பெரியபு. நாவுக். 419)

வண்ணவண்டு இமிர் குரல் பண்ணை போன்றனவே (பரிபா. 14: 4)
யாணர் வண்டின் 'இம்' மென இமிரும் (நற். 30: 2)
கைகவர் நரம்பின் இம்மென இமிரும்
மாதர் வண்டொடு சுரும்பு நயந்து இறுத்த (குறிஞ். 147– 48)
பண்அமை முழவின் கண் எறி அறிந்து (சிலப். 3: 61)
...பண்ணியங்கருவி வீக்கி (பெரியபு. திருநீல. யாழ். 2)
...கடம் பறுத்து இயற்றிய பண்ணமைமுழவு (அகம். 127: 3 – 5)
பறைநன்று பண்ணமை யாழின் (நான்மணி. 13)
முல்லையாழொடு சுருதிவண்டு அலம்ப (கல்லா. 14: 15)
வண்டுகள் சுருதியாக முரலா நிற்ப (மேலது. உரை)

*செவியுறு - ச்ரு - கேள்*
*ச்ருதி - கேள்வி*, Drone
*சுதி > ஸ்ருதி - சுருதி*
← *தே. நே. 148 / 13 ; 234 /*V

↑ யாழ் நரம்பொலி நின்று நீண்டு ஒலிக்காததினால் (non-sustain) குழலானது, ஒத்து (சுதி)சரி பார்க்கும் கருவியாகப் பயன் பட்டுள்ளது.

நரம்பின் தீங்குரல் நிறுக்கும் குழல் போல (கலித். 33: 22)
குழல் அளந்து நிற்ப (பரிபா. 7 : 79)
ஒத்த குழலின் ஒலி எழ (பரிபா. 12 : 40)

→ ஒத்து

## சுதிபிடித்தல்:

சுதியோடு ஒத்துவருதல் (to accord with the key note)
← *செ ப. அ 1514*

## சுந்தரர் தேவாரம்: = திருப்பாட்டு

*100 பதிகங்கள் கொண்டது; 1026 பாடல்கள்; 17 பண்கள்; 39ஆம்பதிகம் - திருத்தொண்டத்தொகை. இவை கலிவிருத்தம், ஆசிரியவிருத்தம், கட்டளைக் கலித்துறை, ஆசிரியத்துறை, கொச்சகக் கலிப்பா ஆகிய யாப்பில் அமைந்துள்ளன.*
← *த. இ. பே. பக். 86/16*

## சுபசோபனக்கை:

இணைக்கை வகையுள் ஒன்று (பரத. பாவ. 60)
← *செ. ப. அ. 1517*

## சுப பந்துவராளி:

பண்களுள் ஒன்று (பரத. இராக. 103)
*இது வல்லுழை (பிரதிமத்திமம்)ப்பண்; 18 ஆம் பாலை (45வது மேளம்).*

## சும்மை:

1. *ஆரவாரம்*

கலிகொள் சும்மை; ஒலிகொள் ஆயம் (மதுரைக். 64)
கலிசும்மை வியல் ஆங்கண் (புறம். 22: 19)
ஊரேஒலிவரும் சும்மையொடு... (நற். 348: 3 – 4)
...கடல் என, கார் என, ஒலிக்கும் சும்மையொடு (மலைபடு. 483)

2. *ஓசை*

இமுமென் சும்மையிடனுடை வரைப்பின் (பொருந. 65)

3. *யாழ்நரம்போசை*

கலித்தல், சும்மை... யாழ்நரம்போசை (பிங்க. 1441)

## சும்மைப்பூ: = வள்ளைப்பாட்டு

*சும்மேலா, சும்முலக்காய் என்றபாட்டு - இது வள்ளைப்பாட்டு*
*"இப்பாட்டு கலிங்கத்துப்பரணியில்தான் வந்த போதிலும் கூட, சும்மேலா என்ற சொல்லாட்சி பின்னர் 13ஆம் நூற்றாண்டில் தோன்றிய இரணிய வதைப் பரணியில்தான் காண்கிறோம்."*
சிந்து... சும்மைப்பூ... கோத்தவரிக்கூத்தின் குலம்.
(சிலப் 3: 13 அடியார்க். மேற்.)
← *த. இ வ. பக். 59/*VI

## சுயம்பு சுரங்கள்:

= தான்தோன்றிச்சுரங்கள், பரிவாரசுரங்கள், (Harmonic series, overtones, upperpartials)
*நரம்பு இசைக்கருவிகளின் தந்தியின் பாதி நீளம், கால் நீளம், அரைக்கால் நீளஅதிர்வுகளினின்று சுயமாக எழும் சுரங்கள் (நாதம்)*
←*தெ. இ பக் 179;* Ox.Con.Dic. of Music. P565
→ தான்தோன்றிச் சுரங்கள்

## சுரங்களின் குறியீடு: (solfa system)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| *கு* | *- குரல்* | *- ச - சட்சம்* | - C | - Do | (Doh) |
| *து* | *- துத்தம்* | *- ரி - ரிஷபம்* | - D | - Re | (Ray) |
| *கை* | *- கைக்கிளை* | *- க - காந்தாரம்* | - E | - Me | (Mi) |
| *உ* | *- உழை* | *- ம - மத்திமம்* | - F | - Fa | (Fah) |
| *இ* | *- இளி* | *- ப - பஞ்சமம்* | - G | - Sa | (Soh) |
| *வி* | *- விளரி* | *- த - தைவதம்* | - A | - La | (La) |
| *தா* | *- தாரம்* | *- நி - நிஷாதம்* | - B | - De | (Si) |

← *த. க. க. 170/*III; IX/ III; VII/I

## சுரசதி:

*பாடல் வகையுள் ஒன்று இசைப் பயிற்சியில் கீதங்களைக் கற்றபின் சுரசதி பயிற்றுவது வழக்கம். வண்ணங்களை (வர்ணம்)க்கற்பதற்கு சுரசதிகள் வழிகாட்டுவன. எனவே இலக்கண கீத வகையைச் சேர்ந்தது இது தாளக்கட்டுப் பாடுகளுடன் கூடியது. சதிகளுடன் கூடிய நாட்டிய உருப்படியான சதிசுரத்தை (சுரபல்லவி) ஒத்தது. (சதி சுரத்தில் பாடல் இன்றிச் சதிச்சொற்கள் மட்டுமே வரும்) சுரசதியில் சுரக்கட்டமைப்பும், அதற்குரிய தாளச் சொல்லமைப்பும்(சதி) பருந்தும் அதன் நிழலும் போலஅமையும்.*

எடு:- சாம்ப சிவாயனவே – கமாசு – ஆதிதாளம்.

*சுரம் - பண்ணின் உறுப்பு*
*சதி - தாளத்தின் உறுப்பு*
← *த க. க 339/*II; *செ. ப. அ. 1524*

### சுரசிந்து:
*பண்களில் ஒன்று* *(பரத. இராக. 102)*

### சுரணாவளி:
*பண்களுள் ஒன்று* *(பரத. இராக. 55)*

*← செ. ப. அ. பிற். 286*

### சுரத்தல்:
*இடைவிடாது வருதல், ஊருதல்*

சுரத்தல் – இடைவிடாது சொரிதலுமாம்

(சிலப். 1: 7 – 9 அடியார்க்.)

வீற்று வளம் சுரக்கும் அவன் நாடு பல் வல்சியும் (மலைபடு. 68)

வீயாது சுரக்கும் அவன் நாள் மகிழ் இருக்கையும் (மலைபடு. 76)

மேனின்று தான் சுரத்தலான் (சிலப். 1: 9)

↑ இடைவிடாது ஒலி (ஒத்து–சுருதி) வருவதால் – சுரத்தலில் இருந்து சுரம் (Tone- note) – இசைச் சுரத்திற்குப் பெயரானது.

*ஒப்பு : தமிழ் இசை ஒழுகிசை -* (contineous music)

*(ஒழுகு -* sustain)

### சுரத்துடிப்பு:
*கம்பி அல்லது காற்று அதிர்வதால் ஏற்படும் ஒலித்துடிப்பு* (pitch, frequency). *ஒரு வினாடியில் உருவாகும் துடிப்பு எண்ணிக்கையே ஒரு சுரத்தின் ஒத்து (சுருதி)அளவாகும். தந்தியின் துடிப்பு அதன் நீளம் மற்றும் பருமனுக்கு எதிரிடையாகவும், விரைப்புக்கு நேரிடையாகவும் அமைந்திருக் கின்றது.*

**சுரநாடி:** *பண் (இசை) பாடும் குழல்.*

*மகுடியில் தொடர்ந்து நிலைத்த ஒலிவரும் ஒத்து (சுருதி) நாடி தனியாகவும், பண் இசைப்பதற்கான சுரநாடி தனியாகவும் அமைந்துள்ளது.*

**சுரப்பகுதி:** = தாது

*பாடலின் சுரப்பகுதி; 'ம்ர்து' 'என்பது 'பாடல் (செய்யுள்) பகுதி*

### சுரபத்து:
*தந்தக்குச்சியால்* (plectrum) *இயக்கப்படும் நரம்பிசைக்கருவி*

*← செ. ப. அ 1525*

**சுரபல்லவி:** → சதிசுரம்

### சுரம்:
1.*முதுவேனில்பாலைநிலம், சுரன், அருவழி,அருநெறி, காடு*

சுரன் முதல் மராஅத்த வரிநிழல் அசைஇ (சிறுபாண். 12)

இடைச்சுரத்து இறுத்தமள்ள! (புறம். 254: 3)

சுரம் போழ்ந்த இகல் ஆற்றல் (மதுரைக். 58)

இடிச்சுர நிவப்பின் இயவுகொண்டு ஒழுகி (மலைபடு. 20)

சுட்டினும் பனிக்கும் சுரம் தவப்பலவே (மலைபடு. 393)

சுரம் செல் கோடியர் முழவின் தூங்கி (மலைபடு. 143)

2. = நரம்பு, கேள்வி, புகல், கோல், பாலை, தந்தி, தந்திரி, கோவை.

*இசையின் சுரங்கள் துளை வழி காற்று வருவதால், பற்பல ஓசை பெறுவதால், சுரை (துளை)யிலிருந்து சுரம் என்னும் சொல் பிறந்தது என்றும் கூறலாம்.*

*சுரை = துளை; சுரை + அம் = சுரம்.*

*← தே நே. 257/ 12*

*ஒப்பு: சுரைக்காய், (உட்துளை உள்ளது)*

*சுரை - காதணி இடும் இடம் (துளை)*

*சுரம் முதலில் துளையை உணர்த்திப் பின்னர்த் துளையிலிருந்து உண்டாகும், ஒலியைக் குறிப்பதால் சுரம் என்பது ஆகுபெயர்.*

*சுரம் > ஸ் + வரம் > ஸ்வரம்*

*ஒப்பு: சாமி > ஸ்வாமி*

*→ சுரத்தல்*

3. *அரும்பாலை, பாலையாழ், சங்கராபரணம்*

தோடி, நட்டராகம், சுரம், கொடி... (பஞ்ச. 72: 1)

*சுரம் என்ற பாலைநிலப்பெயர் அந்நிலத்திற்கான பாலைக்கும் (பெரும்பண்)ஆகி வந்துள்ளது*

4. *இடைவிடாது கசிந்துவருவது*

*ஒப்பு: பால்சுரத்தல், நீர்சுரத்தல்*

5. *வழி, அரியவழி*

வதி, சுரம், பாதை... யாறு (சூடா. 5: 62)

குருதியே... சுரம் அருநெறி... (சூடா. 11: 26)

6. *உயிர் எழுத்து,* (Vowel)

*← செ. ப. அ பிற் 421*

*← இ. து. த சொ. பக் 4; த க. க 183/*III

### சுரம்பாடுதல்:
*பண் ஆளத்தி (இராக ஆலாபனை) வகையுள் ஒன்று. இசையின் எழுத்துக்களை இசைத்தல்.*

↑ சுரம்பாடுதல் குறித்து இளங்கோவடிகள் மற்றும் அடியார்க். (கி. பி. 12ஆம் நூற்) குறிப்பிட்டுள்ளனர். எனவே பன்னெடும் காலத்திற்கும் முன்னரே தென்னக இசையில் சுரம் பாடும் முறை வழக்கிற்கு வந்திருக்கின்றது.

...எழுத்து எழுத்தாக வழுவின்றி இசைக்கும் (சிலம் 3: 67 – 68)

பாடலிடத்துச் சொல் நீர்மைகளின் எழுத்துக்கள் சிதையாமலே எழுத்து எழுத்தாக இசைக்கும் குழலோன் அன்றியும் சரிகமபதநி என்பாரும் உளர் (மேலது அடியார்க்.)

"குரல் முதலாயுள்ள ஏழிசையிலும் சரிகமபதநி என்னும் ஏழு எழுத்தினையும்... இசைத்துக் காட்டவல்ல

(சிலப். 5: 35 அடியார்க்.)

**சுரமண்டலம்:** = சுரமண்டலி, சர மண்டலம்.

*நரம்பிசைக்கருவிகளுள் ஒன்று*

தம்புருவீணை சரமண்டலம் (மான். விடு. 240)

*(தம்புருவீணை - தம்புரா)*

**சுரமண்டலி:** → சுரமண்டலம்

**சுரமெழுத்து:**
= சுராட்சரம். (சுரஅட்சரம் - சுரமும் சொல்லும்) பாடல் (இயல்)எழுத்துக்களும் அவைகளின் சுரமும் ஒத்து அமைவது சுரமெழுத்து
**சாகா** வரம ருள் வாய் ராமா
**சாகா** *(ச , க என்ற சுரம்)*
*←பாரதி ஓர் இசைக். பக். 29*

**சுராந்தரம்:** → திறத்திறம்

**சுராந்திரம்:** → திறத்திறம்

**சுராந்தியம்:** = சுராந்திரம்
*திறத்திறம், நான்கு சுரப்பண்.*
*← பூர். சங். உண். பக் 42*

**சுராட்சரம்:** → சுரமெழுத்து

**சுராந்திரம்:** → சுராந்தியம்

**சுராவளி:**
*இசைப்பயிற்சியுள் முதலாவது பயிற்சி சுரங்களின் பயிற்சி.*
*சுர + ஆவளி > சுராவளி*
*ஆவளி - வரிசை*
*→ கோவைவரிசை; சரளிவரிசை*

**சுரிதகம்:**
= சுழியம், வாரம், வைப்பு, போக்கு, போக்கியல், அடக்கியல் (Epode)
1. *கலிப்பாவின் இறுதி உறுப்பு.*
ஆசிரியம், வெண்பா எனஇவை தம்முள் ஒன்றாகி அடிபெற்று இறுதிவருவது சுழியம் எனப்பெயர் சுரிதகமாகும் (யா. செய். 29. உரைமேற்.)
↑ கதைப்பாடல் மற்றும் கூத்து ஆகிய நிகழ்வுகளில் தொகுசொற்கோடியனின் இறுதி உரைத் தொகுப்பு போல், கலிப்பாவின் இறுதி உறுப்பான சுரிதகம் அமைந்து வருகின்றது.
*(மேலும் காண்க சிலப்பின் காண்ட இறுதிக் கட்டுரைகள்)*
*வாரம் - கூறிய பகுதியை பின்னும் சுரிதகத்தால் பாடல் இறுதியில் கூறுவதால் வாரம்.*
*வைப்பு - தரவு, தாழிசைகளில் முற்கூறிய பொருள்களை சுரிதகத்தில் இறுதியாக தொகுத்து வைத்தலின் வைப்பு.*
*போக்கு - குறித்த பொருளை முடித்துப் போக்கு வதால் போக்கு*
*அடக்கியல் - தரவு, தாழிசை ஆகிய உள்ளுறுப்பில் கூறிய பொருளை சுரிதகத்தில் அடக்கிக் கூறுவதால் அடக்கியல்*
*← த. இ பே. பக் 275 - 76/14*
2. *எட்டடியால் வரும் இசைப்பாடல் நாடகப் பேச்சுக்களுள் வரும் பாடல்*
*சொல்வகை நான்குவகைப்படும் :- சுண்ணம் சுரிதகம், வண்ணம், வரிதகமென*
சுரிதகம் – எட்டடியான் வருவது... "...சுரிதகமெட்டடி..."
(சிலப். 3: 13 அடியார்க்.)
*← வீ சோ. 117 உரை*

**சுருட்டி:**
*பண்களுள் ஒன்று* *(யாழ். அக.)*

**சுருதிகாந்தாரம்:**
*பாலை யாழ்த்திறத்துள் ஒன்று*
தக்கராகம்... சுருதிகாந்தாரம்... பாலையாழ்த்திறம் என்ப
(பிங்க. 1381)

**சுருதிகூட்டுதல்:** = வீக்குதல்
*சுருதி சேர்த்தல், ஒத்து கூட்டுதல், சுருதி பண்ணல்*
வீக்கிமுன் சுருதி கூட்டி (திருவிளை. விறகு. 27)
....பண்ணியங்கருவி வீக்கி (பெரியபு. திருநீல. யாழ். 2)
குரல்வாய் இளிவாய்க் கேட்டனள் (சிலப். 8: 35)
*(ச, ப முறையில் சுருதி கூட்டுதல்;குரல் - ச; இளி - ப)*

**சுருதித்தந்தி:** → ஒற்றுறுப்பு

**சுருதி நாடி:** → சுரநாடி

**சுருதிப்பெட்டி:**
*சுதிப்பெட்டி.*
*இசைக்கருவியாளர் மற்றும் பாடகர் இசைக்கும் போது, ஒத்து (சுருதி) தரும் இசைக்கருவி.*

**சுருதிபேதம்:** → ஒத்துமாற்றம்; பண்ணுப் பெயர்த்தல்

**சுருதி வழிப்பண் தழுவும்:**
*ஒத்து என்ற சுருதியில் நின்று இசை நிகழ்த்தப் பட்டது மற்றும் சரியான ஒத்து (சுருதி)டன் அமைந்த சுரங்களால் பண்பாடப்பட்டது.*
நல் இசை யாழ்ப்பாணனார் நன்மரபின் வழிவந்த...
சொல்லவள் தனை அழைத்துச் சுருதி வழிப் பண்தழுவும்...
(திருமுறைகண்டபு. 32)

**சுரும்பு:**
1. *ஆண் வண்டு;*

சுரும்பு மூசாச் சுடர்ப் பூங்காந்தள் (முருகு. 43)
...இம்மென இமிரும் மாதர் வண்டொடு சுரும்பு நயந்து இறுத்த (குறிஞ். 148)

2. சுருதி, ஒத்து (drone)
சுரும்பித்தல் - ஒலித்தல் (to hum as bees)
சுரும்பித்த வண்டினங்கள் (தேவா. 969: 4)
சுரும்பு, ஞிமிறு (மிஞிறு) - குரல் (ச) ஊதும்
தும்பி - இளி (ப) ஊதும்
சுரும்பு ஆர்க்கும் குரலினொடு (நெய்தல்கலி. 6: 2)
அரும்பொதி அவிழ்ந்த சுரும்பு இமிர்தாமரை (சிலப். 2: 15)

**சுரையாழ்:** =கின்னாரம்
*சுரக்குடுக்கைக் கின்னரி*
*காய்ந்த சுரைக்காயைக் குடமாகக் கொண்ட ஒற்றைத் தந்திரி யாழ்*

**சுலோகம்:** →தாளமில் உரு

**சுவத்திகம்:** →குறுக்குக்கை

**சுவர்:**
*உச்ச ஒலி*
வானத்து அஞ் சுவர நல்இசைவீழ (குறுந். 323: 3)
*சுவர் < சுவல் - மேலிடம்*
இங்குஉச்சஒலி (உ. வே. சா. உரை.)
*← ச பொ க. 113/ III*

**சுவஸ்திக உடல் நிலை:** → குறுக்கு உடல் நிலை

**சுவஸ்திக ரேசிதம்:** → குறுக்கு உடல் நிலை

**சுவாகத தரு:** (musical soliloquy)
*தனக்குத்தானே நெஞ்சொடு கிளத்தலாக வரும் நாடக உரையாடல் பாடல்.*

**சுவை:** = இரதம், இரசம் (ரஸம்) (ethos, mood, sentiment)
... உருக்களை இசைகொள்ளும் படியும் இரதம் பொருந்தும் படியும்... (சிலப். 3: 27– 8.அரும்.)
...உருக்களை இசைகொள்ளும் படியும் சுவை பொருந்தும் படியும் (மேலது அடியார்க்.)

1. *எண்வகைச்சுவை,*
*மெய்ப்பாடு (உடல்மொழி, பாவம், gesture) எட்டன் மூலம் வெளிப்படுவது சுவை.*
“அர்த்தமே தெரியாதவனுக்கு ‘ரஸம்’ தெரிய நியாயம் இல்லை” (பாரதியின் சங்கீத விசயம். கட்டுரை)

2. *விலக்குறுப்பு பதினான்கனுள் ஒன்று*
விலக்குறுப்பாவன: பொருள், யோனி... சுவை... இவைபதினாலும் (சிலப்.3: 13. அரும்.)
“விலக்குறுப்பென்பது விரிக்குங்காலை... சுவையும்... (மேலது அடியார்க்.)

**சுவைத்தல்:** = இரசித்தல்
*எடு:-புல்லாங்குழல் இசையை அவர்கள் இரசித்தனர்.*

**சுழி:**
= துரிதம் (த்ருதம், துருதம்), வட்டம், விதி, கண், மதி, கதிர், இந்து
*தாள உறுப்பு*
*இதன் அளவு - 2 எண்ணிக்கை*
*இதன் குறியீடு - O (முழுவட்டம்)*
*← த. க க. 53/III; ப. இ. இ. பக். 292 - 93*

**சுழியம்:** → சுரிதகம்

**சுற்றடைவு:**
= மண்டிலப்பாதம்; வடுகுப்பாதம்
*கூத்தில் சுழன்று, சுற்றிச்சுற்றி ஆடும் அடைவு. கரகத்திலும், சிலம்பத்திலும் இது ‘கிறிக்கி’ என்று அழைக்கப்படுகிறது. கூத்திற்கே உரிய அடைவுகளில் இது மிகச் சிறந்த அடைவாகும்.*
*மண்டிலித்தல் - சுற்றிவருவது, வட்டமாகச் சுற்றுவது*
*←த. க க. 23/I; நவம். 99 மண் இதழ் - பா இராசு கட்டுரை*

**சுற்றிவாங்குதல்:**
தேசிக்குரிய கால்கள் (அடைவு) 24 இல் ஒன்று(a kind of leg pose) (சிலப். 3: 16. அடியார்க். அடிக். (சுத். பிரகாசம்)

**சுற்று:**
*ஆவர்த்தனம்*
*எ-டு:-*
*ஓர் ஆதிதாளச் சுற்றில் எட்டு எண்ணிக்கை (முப்பத்திரண்டு கால் மாத்திரை) இடம் பெறுகின்றது.*



**சூசிக்கை:** → ஊசிக்கை

**சூசிகம்:**
*பறைவகையுள் ஒன்று*(a proclamatory drum, tom tom)

**சூத்திரதாரன்:**
*நாடகம் நடத்துவோன்* (stage conductor)

**சூத்திரம்:** =நூற்பா.
*சில்வகை எழுத்தில் பல் வகைப் பொருளும் செறிந்து விளங்க அமைத்து முடிக்கப்படும் யாப்பு. இலக்கணம் கூறுதலுக்குக் கையாளப்படும் அகவல்பா. ஆடிநிழலின் அறியத்தோன்றி, நாடுதல் இன்றிப் பொருள் நன்கு விளங்குமாறு (ஓசையற்ற வெண்பா இயலானும், ஆசிரிய இயலானும்) எடுத்துக் கொண்ட பொருளை விளக்கும் யாப்பு. கட்டளைக் கலித்துறை. ஆசிரியவிருத்தம் சிறுபான்மை அமையும்.*
நூற்பா, அகவல், சூத்திரம் குறித்த... அடிவரையின்றி... நடக்கும் (திவா. 1838)
மேற்கிளந்து... சூத்திரத்து இயல்பு (தொ. பொ. 101)
← *த. இ. பே. 49 & 50/15; 280 - 82/16*

**சூதர்:** = அகவர், கைவாரிகள்
*பாணர் பிரிவினருள் ஒருவர். அரசர் முன்பு நின்று புகழ்பாடுவோர்*(encomiasts). *மன்னர் துயில் எழ, பள்ளி எழுச்சி பாடுவோர்.*
சூதரும் நல்வலந் தோன்ற வாழ்த்த (சிலப். 26: 75)
சூதர், மாகதர், வேதாளிகரொடு (சிலப். 5: 48)
சூதர் – கை வாரிகள்; நின்றேத்துவார் (மேலதுஅரும்.)
சூதர் வாழ்த்த, மாகதர்நுவல, வேதாளிக ரொடு நாழிகை இசைப்ப (மதுரைக். 670 – 71)
மாகதர், சூதர், வேதாளிகர் மறுகும் (மணிமே. 28: 50)
பயில் பூம் பள்ளித்துயில் எடை மாக்கள் (பெருங். 4: 5: 81)
பரசு... சூதர் மாகதர் ஒருபால் பாங்கர் (பெரியபு. திருநகர. 21)
“இடைக்காலச் சமஸ்கிருதப் புலமையே மிகுந்த நிலையில் நச்சினார்க்கினியர் தமிழ்ச் செய்யுளுக்கு அயலான பெயர்களையும், கோட்பாடுகளையும் கொண்ட சூதர், மாகதர், வந்தியர், வேதாளிகர் என்பதை விவாதத்துக்குக் கொண்டு வருகிறார்”
(த. வீ. க. பக். 159)

தாவில் நல் இசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயில் எடைநிலையும் (தொ. பொ. 91)
← *தொல். பொ. 91. நச்சர். உரை.*
↑மன்னர்கள் இடத்தில் தெய்வங்கள் வந்ததும், மன்னருக்கான துயில்எடைநிலை, தெய்வங்களுக்கான திருப்பள்ளி எழுச்சி யானது.
*(துயில் - பள்ளி = தூக்கம்;*
*எடை - எழுச்சி = எழுப்புதல்)*

**சூர்ணிகை:** *(வ.சொ)*
= சுத்தாங்கம்
1. *தாளமின்றிப் பாடுவது.*
*சுத்தாங்கம் x இலயாங்கம் (இலயம் + அங்கம்).*
2. *இசை நாடகங்களில் வழமையாக தேவகாந்தாரிப் பண்ணில் பாடப்படும் ஓர் இசை வடிவம்.*
3. *பரத நாட்டியத் தொடக்க ஆட்டமான அலாரிப்பின் போது பாடப்படுவது. நாட்டை அல்லது ஆரபிப்பண்ணில் இறை வாழ்த்தாக, ஒரு வகை உரைப் பாட்டாகப் பாடப்படும் பாடல்.*
←*த. க. க. 262* /I

**சூர்துங்கராகம்:**
*குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று.*
நட்டபாடை.... சூர்துங்க ராகம்... குறிஞ்சி யாழ்த் திறமாகக் கூறுவர் (பிங்க. 1382)

**சூரங் கோட் பறை:** → பாலைப்பறை

**சூரிய காந்தம்:**
*ஒரு பெரும் பண்; 8 ஆம் பாலை (17ஆம் மேளம்)*
*(சூரியகாந்தம் - பூதக் கண்ணாடி , உருப் பெருக்காடி)*
சூரியகாந்தமும் சூழ்பஞ்சும் போலவாம் (திருமூலர்)
தொந்தமால்... சூரியகாந்தத்தான் மற்றதன் ஒளி தீக்காலும் (சூடா. 6: 11)

**சூரிய காந்தாரி:**
*பண்களில் ஒன்று* *(பரத. இராக. 103)*

**சூறை கோட்பறை:**

= ஆறெறிபறை, நிரை கோட்பறை
வழிப்பறி செய்வோருக்குரிய பாலைப்பறை (Robber's drum)

**பறை – சூறை கோட்பறையும் நிரை கோட்பறையும்**
**(தொ. பொ. 18. நச்சர்.)**
**ஆறெறிபறையும் சூறைச்சின்னமும் (சிலப். 12: 40)**
*(ஆறு - வழி; ஆறெறி - வழிப்பறி)*

## சூறைச்சின்னம்:

சூறை கொள்ளும் போது ஊதும் கொம்பு (Robber's horn)
*(சின்னம் - அடையாளக் கருவி)*

**ஆறெறி பறையும் சூறைச்சின்னமும் (சிலப். 12: 40)**

## சூலம்:

= சூல நட்டம், சூலந்தரு நட்டம்
*இசைக்கூத்துள் ஒன்று.*

**சிந்துப்பிழுக்கை... சூலந்தருநட்டம்... கோத்தவரிக் கூத்தின் குலம்**
**(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)**

## சூளாதி:

*ஏழுபகுதிகளாகப் பிரிக்கப்பட்ட தாளம் இத் தாளங்ளில் அமைந்தவை சூளாதிகீதம்.*
*எடு:- தஞ்சை சாசி மன்னர் இயற்றியுள்ள சூளாதி, கௌளாந்திய பண்களின் தாள மாலிகை.*
*கௌளாந்தியப் பண்களாவன:*
*1) மாயமாளவ கௌளை.*
*2) கேதார கௌளை.*
*3) ரீதி கௌளை.*
*4) கன்னட கௌளை.*
*5) நாராயண கௌளை.*
*6) பூர்வ கௌளை.*
*7) சாயா கௌளை.*

*அன்னமாச் சாரியார் இயற்றியுள்ள சூளாதி கீதம் ஏழுதாளங்களைக் கொண்டது*
*1. துருவம்*
*2. மட்டியம்*
*3. உருவகம் (உரூபகம்)*
*4. செம்புடை (ஜம்பை)*
*5. திரிபுடை*
*6. அடதாளம்*
*7. ஏகம்*

*← த. க. க. 344/I*

## சூளாமணி யாப்பு:

| | |
|---|---|
| மொத்தப் பாடல்கள் | - 2131 |
| கலிவிருத்தம் | - 1210 |
| அறுசீர் ஆசிரியவிருத்தம் | - 735 |
| கலித்துறை | - 92 |
| எழுசீர் ஆசிரியவிருத்தம் | - 40 |
| வஞ்சி விருத்தம் | - 31 |
| எண்சீர் ஆசிரியவிருத்தம் | - 14 |
| தரவு கொச்சகம் | - 8 |
| வஞ்சித்துறை | - 1 |

(ஒரு பொருள் மேல் மூன்றடுக்கிய பாடல் -24)
*← த. இ. பே. பக். 87 - 88/16*

# செ

## செக்கணி:

*கூத்து வகையுள் ஒன்று*

தெள்ளிய செக்கணி ஆடி (குற்றால. தல. தருமசாமி. 55)

← *செ. ப. அ. 1576*

## செகண்டை:

*சேகண்டி*

தண்ணுமை செகண்டை (மேருமந். 1030)

← *செ. ப. அ. பிற். 290*

## செங்கோட்டியாழ்: = செங்கோடு

*சிவந்த பலாமரத்தில் செய்யப் படுவதால் இப்பெயர். கரிய கருங்காலி மரத்தால் ஆனது கருங் கோட்டுச் சீறியாழ்.*

செந்திறம் புரிந்த செங்கோட்டியாழின் (சிலப். 13: 106)

அங்கோல் தீந்தொடைச் செங்கோட்டியாழின் (பெருங்.1: 40: 269)

"இதில் செங்கோட்டியாழ் என்பது செவந்த மரத் தால் செய்யப்பட்டு ஏழுதந்திகளுடன் அதாவது இசை நரம்புகள் நாலும், பக்க நரம்புகள் மூன்றும் உடையதாய் தற்காலத்தில் நாம் வழங்கிவரும் வீணை என்பதாகத் தெரிகிறது... தற்காலத்தில் பலா மரத்தில் செய்யப்பட்டு வருகிறது. (கருணாமிர்தசாகரம். பக். 587)

"இதன்கோடு செந்நிறமாக இருந்திருத்தல் வேண்டு மென அதன் பெயராலேயே நன்கறிகிறோம்" (பா. கை. பக். 98)

"பலாமரத்தில் செய்யப்பட்ட பத்தல்கள் நல்ல ஒலித்தல் அமைந்ததாயும், தட்ப வெப்பங்கட்கு ஊதிச் சுருங்கி நெளியாமல் இருக்குமாதலாலும் தஞ்சாவூரில் பலா மரத்தில் செய்து வருகிறார்கள்" (மேலது. 109)

*யாழ் நால்வகைப்படும்.*

*அவை: பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பன. இவைநாலும் பெரும்பான்மைய.*

"பேரியாழ்... சீர்பொலியும் செங்கோடு... பின்னும் உளவேபிற" (சிலப். 3: 26அடியார்க்.மேற்.)

## செஞ்சு நாடகம்:

*ஆந்திரமாநிலத்து செஞ்சுலு எனும் காடுவாழ் மக்கள் ஆடும் குறவஞ்சி போன்ற இசை நாடகம்.*

## செஞ்சுருட்டி:

*பண்களுள் ஒன்று*

## செடில் ஊசல்: → செடிலாட்டம்

## செடிலாட்டம்: = செடில் ஊசல்

*மாரியம்மன் திருவிழாவில் செடிலில் (கொக்கி) தொங்கி ஆடும் ஆட்டம்.*

## செண்டை: = சண்டை, ஜெண்டை, செண்டா

1. *ஒரு முகத்தில் மட்டும் வாசிக்கப்படும் இருமுக வாத்தியம். இது பண்டைய தமிழிசைக்கருவி. கேரள நாட்டில் தற்காலம் பரவலாகக் கையாளப் படுகின்றது. கதகளி ஆட்டத்தில் சிறப்பாக இடம் பெறுவது.*

*சேடகச் சண்டையுங் கண்டையுங் ...*

*(தெ. இ. க. 7: 863; தெ. க. சொ. 197)*

*ஸ்ரீபலிக்கு கொட்டுவன் நாலு செண்டையும் ஒரு திமிலை ஒரு சேகண்டி* (TAS. 2 P. 173 - 207; *தகசொ. 256*)

கும்பிகை, திமிலை, செண்டை... (கம்ப. 8445)

*திருப்பழனத்து மகாதேவர்க்குச் செண்டை கொட்டுவான் இவர்க்கு முப்பதின் கலமாக*

*(திருப்பழனம் ஆபத்சகாயேசுவரர் கோவில் கல்வெட்டு)*

2. இரட்டை (pair, set)

*ஒப்பு:*

*செண்டை வரிசை; சச, ரிரி, கக, என இசையின் சுரங்களை இரட்டையாய்ப் பயிற்றுவித்தல்.*

← தே.நே. *195*/III; *த. க. க. 346*/II

## செத்தோன் அவிநயம்:

*24 அவிநயங்களுள் ஒன்று.*

"செத்தோன் அவிநயம் செப்புங்காலை, அந்தக அச்சமும், அழிப்பும், ஆக்கலும், கடித்த நிரைப் பலின் வெடித்துப் பொடித்துப், போந்த துணிவுடை மையும், வலித்த உறுப்பு, மெலிந்த வகடு மென்மை மிகவுடைமையும், வெண்மணி தோன்றக் கருமணி கரத்தலும், உண்மையில் புலவர் உணர்ந்தவாறே"

(சிலப். 3: 13. அடியார்க். மேற்.)

## செந்திசை: → செந்து

## செந்திருதி: → செந்திறம்

**செந்துருதி:** → செந்திறம்

**செந்துருத்தி:** → செந்திறம்

**செந்திறம்:**
= செந்துருதி, செருந்தி, செந்திருதி, செந்துருத்தி, துருத்தி, செருந்து, மதுமாதவி, செந்தி, செந்து, செந்திசை, குறிஞ்சிப்பாணி.
*மத்யமாவதி என்ற பண்*
செந்திறம், செந்துருதி (பிங்க. 1395)
செந்திறம், குறிஞ்சியாழ்த்திறம் (சிலப். 13: 106உரை.)
செந்துஇசை பாடும்... (தேவா. 1092)
செந்திறத்த தமிழோசை... (திருமங்கை. நெடுந்தாண்ட. 4)
*சுந்தரரின் 95 ஆம் பதிகம் (திருவாரூர்) பண் செந்துருத்தியில் அமைந்துள்ளது 'துருத்தி உறைவீர்' (95: 4 / 8191) என்ற பாடலிலும், 'செருந்திசெம்பொன்'(95: 10 /8197) என்ற பாடலிலும், 'துருத்தி', 'செருந்தி' என்று இப்பண்ணின் பெயரைச் சுந்தரர் கோடிட்டுக் காட்டுகிறார்*
சிறந்த திருத்தொண்டருடன் எழுந்தருளிச் செந்துருத்தி அறைந்து (பெரியபு. சம்பந்த. 6: 1: 1129)
நாரத சங்கீத மகரந்தத்திலே கண்ட மதுமாதவி... (யா.நூ. 266)
குறத்தியர் பாடிய குறிஞ்சிப்பாணியும் (சிலப். 27:224)
குறிஞ்சியாழ் செந்திறப்பண்ணின்..... செந்திறம் என்னும் திறமே பிற்காலத்தில் செந்துருத்தி என வழங்கப்பட்டது (யா.நூ. 288)
செருந்தி – குறிஞ்சி யாழ்த்திறம் (பிங்க.1382)
செம்பாலையுள் பிறக்கும் பண்கள்: ... செந்துருத்தி... (சிலப். 8: 35.அடியார்க்.)
"திருமுறை கண்ட புராணத்தில் சுந்தரர் அருளிய ஏழாம் திருமுறைப் பண்களை நிரல்படக் கூறுமிடத்துக் குறிஞ்சிப் பண்ணின் பின் செந்துருத்தியும்... (பன்னிரு. திரு. வர. பக். 534)
*எனவே செந்திறம் (மத்யமாவதி) என்ற திறப்பண், குறிஞ்சி (நடபைரவி) யாழின் சேய்ப்பண் ஆகும்.*
*மதுமாதவி > மத்யமாவதி (யா.நூ. 266)*

**செந்து:**
= செந்திசை, செந்திறம், குறிஞ்சிப்பாணி
*மத்யமாவதி என்ற பண்.*
செந்திசைபாடும் சீர்திகழ் கண்ணார் கோயிலே (தேவா. 1: 101: 2)
செந்திசை பாடல் செய்... (தேவா. 1: 114: 10)
செந்து நேர் மொழி யாரவர் சேரும் திருக் களவருள் (தேவா. 2: 51: 11)
செந்திறந்து இசையறு பதமுதல் திருத்தேவூர் (தேவா. 2: 82: 9)
→ *செந்திறம், குறிஞ்சிப்பாணி*

**செந்நடைச்சீர் அந்தாதி:** → சீர் அந்தாதி

**செந்தி, செந்து:** → செந்திறம்

**செந்துறை:**
*இசைப்பாடலினுள் ஒன்று. நாடக இசைப்பாட்டு அல்லாத பாட்டுவகை அரங்கு இசைப்பாட்டு (concert music)*
வண்டுறையும்... வெண்டுறையும் செந்துறையும் வேற்றுமையாக் – கண்டறிய (இறைய. கள. 360)
செந்துறைமார்க்கமும் வெண்டுறை மார்க்கமும் (யா. வி.)
செந்துறை வெண்டுறை என்னப்படாநின்ற இருவகைப் பாடல்களுக்கும்... (சிலப். 3: 27– 8 அடியார்க்.)
*இஃது இசைப்பாவின் பகுதியென்ப. அது பத்துவகைப்படும்:*
"செந்துறை... இசைப்பாச் சுட்டு" (சிலப். 6: 35 அடியார்க்.)
செந்துறைப்பாட்டே பாடற்கு ஏற்பது (திவா. 1881)
முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை வண்ணப்பகுதி வரைவின்று ஆங்கு (தொ. பு. 27: 2 – 3)

**செந்துறைச் செந்துறை:**
இசைப்பாடல் வகையுள் ஒன்று (யா.வி.)

**செந்துறைப் பாடாண்பாட்டு:**
*தலைவனைப் புகழும் பாட்டு; வலி, தோற்றம், புகழ் ஆகிவற்றைப் போற்றல்.*
*எடு:- பதிற். 11 - 17, 21, 27, 31 - 32, 37, 38, 42, 44 - 46, 55, 58, 59, 62, 63, 66, 70 - 76, 79, 85 ,86, 88*
← *த வீ க பக். 270 - 71*

**செந்துறை மார்க்கம்:**
நாற்பெரும் பண்ணிலும் 21 திறப்பண்களிலும் பாடக் கூடிய இசைப்பாடல். (யா. வி)
← *செ. ப. அ. பிற். 291*

**செந்துறை வெண்பா:**
= செந்துறை வெள்ளை
அந்தமில் பாதம் அளவிரண்டொத்துமுடியின் வெள்ளைச் செந்துறை ( யா. கா. செய். 26)
→ குறள் வெண் செந்துறை

**செந்துறை வெள்ளை:** → செந்துறை வெண்பா

**செந்தூக்கு:**
*தாள வகையுள் ஒன்று*
"ஒருசீர்ச் செந்தூக்கு..." (சிலப் . 3: 16. அடியார்க். மேற்.)
...தூக்குமென்றது – இந்தாளங்களின் வழிவரும் செந்தூக்கு... (சிலப். 3: 16 அடியார்க்.)
ஆடலும் வரியும் பாணியும் தூக்கும் (சிலப். 14: 150)
பாணி–தாளம்; தூக்கு – வாச்சியம் (மேலது அரும்.)
பண்ணே பாணி தூக்கு முடமே (சிலப். 3: 46)

**செந்தொடை:** *மோனை முதலிய தொடைகள் அமையாதது.*

## செந்நடை அந்தாதி:

செய்யுளின் இறுதி அடியின் இறுதிச்சீரும், முதலடி யின்முதற்சீரும் ஒன்றாகாமல் அடிதோறும் எழுத்து, அசை, சீர் முதலியன அந்தாதியாக வரும் தொடை (யாப். வி. 52)

← செ. ப. அ 1590

## செந்நிலை மண்டிலம்:

1. கூத்து நிலைவகையுள் ஒன்று

செந்நிலை மண்டிலத்தால் கற்கடகக்கை கோஒத்து(சிலப். 17:(17)
சமநிலையிலே நின்று நண்டுக்கரத்தைக் கோத்து மண்டலமிருந்து... (மேலது அடியார்க்.)

(செந்நிலை - நேர்நிலை - Straight)

2. சமன்தானம், சமன் நிலை (Middle octave)

செந்நிலையாவது – சமநிலை (மேலது உரை.)

## செந்நெறிக்கூத்து:

= வேத்தியல், சாஸ்திரிய நாடகம்

செவ்வியல் கூத்து (classical drama)

| | | |
|---|---|---|
| வேத்தியல் | x | பொதுஇயல் |
| செவ்வியல் கூத்து | x | நாட்டார் கூத்து |
| செந்நெறிக்கூத்து | x | மக்கள்கூத்து |

## செப்பல் ஓசை:

வெண்பாவிற்குரிய ஓசை (Rhythmic flow appropriate to venba)

செப்பல் - சொல்லுதல் - (saying, declaring)

செப்புதலாகிய வாக்கியம் போன்ற ஓசைத்தாகி... (தொ. பொ. 387. இளம்.)

செப்பிக் கூறும் ஓசை... ஒரு பொருண்மை கட்டுரைக்குங்கால் எழும் ஓசை செப்பலோசை (தொ. பொ. 394. பேரா.)

செப்பிக் கூறும் ஓசை எல்லாம் வெண்பா எனப்படும்... கட்டுரைக்குங்கால் எழுந்த ஓசை செப்பலோசை... (தொ. பொ. 82. நச்சர்.)

## செம்பகை:

சுருதி குறைந்து ஒலித்தல் (அபஸ்வரம்), அன்னிய சுரக்கலப்பு.

இன்னிசை வழிய தன்றி இசைத்தல் செம்பகை (பஞ்ச பாரதீயம். சிலப்.8.29–30. அடியார்க்.மேற்.)

செம்பகை என்பது பண்ணொடு உளரா இன்பமில் ஓசை... (சீவக. 716 – 9. நசர்.)

(ஒருசுரத்தின் சுருதிகுறையும் போது அச்சுரம் வேறு சுரம் (அன்னிய சுரம்) ஆகிவிடும்.

செம்பகை ஆர்ப்பே அதிர்வே கூடம் (சிலப். 8: 29)
செம்பகை – நரம்பின்கலப்பு (மேலது. அரும்.)

## செம்பட்டை:

வாத்திய வகையுள் ஒன்று

குடமொடு, பாணி, இடக்கை, செம்பட்டை (வள்ளி. கதை. Ms.)

←செ. ப. அ. பிற். 292

## செம்படை:

= செம்புடை, செம்பை, சம்பை (ஜம்பை), சம்பை தாளம்.

ஏழுதாள வகையுள் ஒன்று இத்தாளம் ஐந்து தாள இனங்களுடன் சேர்ந்து ஐந்து சம்பை தாளங் களாகின்றன ஓர் அலகும், ஒருதுணைதுரிதமும் (அனுதுரிதம்). ஒரு துரிதமும் என்ற உறுப்பு (அங்கம்) களைக் கொண்டது.

இதன் உறுப்பு - IUO

1. மூன்றன் (திசுர) சம்பை = $1_3$ U 0 - 6
2. நாலன் (சதுசுர) சம்பை = $1_4$ U 0 - 7
3 ஐந்தன் (கண்ட) சம்பை = $1_5$ U 0 - 8
4. ஏழன் (மிசுர) சம்பை = $1_7$ U 0 - 10
5. ஒன்பான் (சங்கீரண)சம்பை = $1_9$ U 0 - 12

சம்பைக்கு லகு, அனுதுரிதம், துரிதமாம் (பரத தாள. பக். 21)

பீடமே சச்சபுடம் பேசரிய செம்படையும் (பஞ்ச. 133)
தெண்டபா தந்தனுக்குச் சேர் சம்பை தாளமென (பஞ்ச. 145)

(ஜெம்பை, ஜெம்பே - தவறான வழக்குகள்)

← பஞ்ச. மரபு 367

## செம்பால் வாரம்:

அம்போதரங்க ஒருபோகுச் செய்யுட்கு சிறுமை எல்லை 30 அடியாக வருதல்.

அம்போதரங்கம் அறுபதிற்றடித்தே
செம்பால் வாரம் சிறுமைக்கு எல்லை (தொல். செய். 150)

(செம்பால் = நேர்பாதி ; செம்பாதி)

## செம்பாலை:

1. ஒரு மரம் . சிகப்புப்பாலை, Rosy milk wort -Asclepias rosea (டி.வி. சாம்பசிவம் பிள்ளை அகராதி பக். 483/IV)

2. = முல்லை, முல்லையாழ், பாலையாழ், பாலைப்பண், தொல் ஏழிசை, குலமுதற்பாலை, மங்கலப்பண், குரல், குரல்பண்.

அரிகாம்போதி; தமிழிசையின் தலைமைப்பாலை, அடிப்படைப்பாலை. வலமுறையில் குரல் குரலாக வரும் பெரும் பண்

குரல் குரலாகிற் செம்பாலை என்ப (பிங்க. 1403)
குரல் குரலாயது செம்பாலை (சிலப். 17:(13) அடியார்க்.)

குரல் துலை... தொல் ஏழிசை நரம்பிற்காம் (மேலது அரும். மேற்.)

"குடமுதல்... வேண்டிய பெயரே" (17: 'குடமுத') என்பனால் முல்லையாழும் (சிலப். பதிகம். அடியார்க்.)

தாரத்து உழை தோன்றப் பாலையாழ் (பஞ்ச. 22)
தாரத்துள் தோன்றும் உழை (பஞ்ச. 17)
...இது குலமுதல் பாலைத்திரிவெனக் கொள்க (சிலப். 13: 109 அடியார்க்.)

பாடற்படநின்ற பாலைப்பண் மேல் (சிலப். 3: 149)

...மங்கலப்பண்ணாய் நரப்படைவும் உடைத்தாய் இருக்கிற பாலைப்பண்ணை (மேலது உரை.)

இசை அரங்கில் தொடக்கப் பண்ணாக பாலையாழ்

(செம்பாலை) பாடப்பட்டது. எனவே மங்கலப்பண் என்றார். அரங்கேற்று காதையில் மாதவி முதலில் பாடியது செம்பாலை.

யாழ்மேற் பாலை இடமுறை மெலிய (சிலப். 3: 91)

< செம்மலைப்பாலை - பாலைப்பண் வகை (ச. அ.)

செம்மலைப்பாலை > செம்பாலை என்றாகி இருக்கலாம்.

செம்மல் - large flowered jasmine

செம்முல்லை - Jasmine humile

செம்மல் மணங்கமழ (சிலப். 7:(39)

சேடல் செம்மல் சிறு செங்குரலி (குறிஞ். 82)

செம்மல் – சாதிப்பூ, சாதி முல்லை, பிச்சிப்பூ

...பித்திகை... (குறிஞ். 89)

பித்தி > பிச்சி, பிச்சிப்பூ

செம்மரம் - American red -wood - *4000* ஆண்டு வாழ் நாள் எல்லை உடையது. (தே.நே. *266*/ IX)

குருகும் தளவமும்... (சிலப். 13: 155)

தளவம் -செம்முல்லை - மேலது அடியார்க்.

செம்மல் > செம்மல்லிகை - செம்முல்லை - பவளமல்லி

பிச்சிப்பூ - Jasminum grandiflorum

மல்லிகைப்பூ - jasminum anestomosans

செம்மல் - புதுப்பூ

புதுப்பூஞ்செம்மல் சூடி... (சிறுபாண். 5)

உதிர் பூஞ்செம்மல்... (சிலப். 10: 72)

↑ செம்மல் என்பது புதுப்பூவுக்குப் பெயராயிருந்து வாடிய, காய்ந்த மலருக்குப் பெயரானது பிற்கால வழக்காயிருக்கலாம்.

அரும்பு, போது, மலர், வீ, செம்மல் (மலர்களின் 5வகைநிலை); (தே.நே. *275*/VII)

← செ. ப. அ. பக். *1368, 1597, 1598 , 2646, 2662, 3099*

## செம்பாலைக்கு உழை பெய்தல்:

இது பெய்தல் முறை (Method of substitution) கூறுவது. அதாவது பெய்தல் முறை என்ற புதிய பண் உருவாக்கும் ஒரு முறை.

செம்பாலை என்ற அரிகாம் போதியின் மெல் உழைக்குப்பதில் வல்லுழை பெய்தலைக் கூறுவது. அவ்வாறு பெய்யும் பொழுது 'வாசஸ்பதி' என்ற அரிகாம்போதியின் வல்லுழை (பிரதிமத்திமம்)ப் பண் கிடைக்கின்றது.

| | | | | * | | | |
|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{1}$ | ப | த$^{2}$ | நி$^{1}$ |
| வாசஸ்பதி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{1}$ |

...உழைகுரலாகச் செம்பாலைக்கு உழைபெய்தும்

...பாடப்படும் என்ற வாறு (சிலப். 3: 90 உரை.)

→ உழைகுரலாகச் செம்பாலைக்கு உழைபெய்தல்

## செம்பாலையின் மாத்திரை:

அரிகாம்போதியின் சுதி அளவு.

ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ ப த$^{2}$ நி$^{1}$

கு து கை உ இ வி தா

*4 4 3 2 4 3 2*

இனி நரம்புகளின் மாத்திரைகள் வருமாறு:–

"குரல் துத்த நான்கு, கிளை மூன்று, இரண்டாம் குரையா உழை, இளி நான்கு, விரையா விளரி யெனின் மூன்று, இரண்டு தாரம் எனச் சொன்னார். களரி சேர் கண்ணுற்றவர்"

(சிலப். 17: (13) அடியார்க்.)

(மாத்திரை - ஒத்து, சுருதி)

## செம்முறை:

அறுவகைப்பட்ட வண்ணக்கூறுபாட்டுள் ஒன்று. சீருமென்றது:-

"செம்முறை..." (சிலப். 3: 26. அடியார்க்.)

## செம்மலைப்பாலை:

பாலைப்பண்வகை (ச. அ.)

பாலைப்பண் என்பது செம்பாலை; இது தமிழிசை யின் தலைமைப் பாலையாதலால் சிறப்புக்கருதி பாலைப்பண் - பாலையாழ் என்று இதனை அழைத் துள்ளனர்.

↑ செம்மலைப்பாலை என்பதும் செம்பாலை ஆகி இருக்கலாம்.

→ செம்பாலை.

## செய்திறம்: = சிகண்டி

மருதயாழ்த்திறம்

செய்திறம் சிகண்டி (பிங்க. 1399)

## செய்யுள்:

1. பாட்டு (stanza, verse)

செய்யப்படும் பா, இயற்றப்படும் பா, இயல்பா.

செறுத்தசெய்யுள் (புறம். 53: 11)

புகழ்ந்த செய்யுள் (புறம். 202: 12)

2. இலக்கியம், காப்பியம், (poetic composition, poem, The classics)

நாட்டுதும் யா மோர் பாட்டுடைச் செய்யுள் (சிலப். பதிகம்: 60)

உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் (சிலப். பதிகம்: 87)

பாட்டும் உரையும் கலந்துவந்த காவியம் (மேலது அரும்.)

இவ்வியலிசை நாடகப் பொருள் தொடர் நிலைச் செய்யுளை

(அடியார்க். உரைப்பாயிரம்)

ஓசைநயமும் பொருள் ஆழமும் உடையதாய் குற்றமற்ற முதல்வனால், மெய்யுணர்வற்ற பெரியோர்களால் மாத்திரை முதலாக இழைபு ஈறாகக் கூறப்படும் 34 உறுப்புகளும் (சில பல குறைந்தும்) அமைந்திருக்குமாறு செய்யப்படும் மொழிக்கலைக்குச் செய்யுள் என்று பெயர்.

↑ பாணரின் இசைப்பாடல் (பாடும்) வாய்மொழி மரபிலிருந்து செயற்கையான இலக்கியவழக்கில் புலவர் மரபு எழுதி ஆக்கிக் கொண்டது செய்யுள்.

"வாய்மொழிப் பேணுகை நிலையிலிருந்து எழுத்து நிலையில் மாத்திரமே இயற்றப்படத் தக்கனவான செய்யுள்கள் மேற்கிளம்பு

வதையும் பார்க்கிறோம்'' (ப. த. நா. பக் L XXii)
செய் > செய்யுள் (செய்யப்பட்டது (lack of spontainity)
யாப்பு - யாத்தல், கட்டுதல் - செய்யப்பட்டது.

## செய்யுள் அறுவகை:

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, பரிபாடல்பா, மருட்பா என்பன.

## செய்யுள் கலம்பகம்: → செய்யுள் கோவை

## செய்யுள் கோவை:

= செய்யுள் கலம்பகம்
பலவகைப்பாடல் திரட்டு (Anthology)
எடு:- சிதம்பரச்செய்யுட் கோவை
(கோவை - கோக்கப்பட்டது)

## செய்யுள் குற்றம்: (Defects in poetry)

ஏதுமலைவு, ஐயமொழி, ஒட்டுப்பிரி மொழி, ஒரு பொருள் மொழி முதலியன (யா.வி.)

## செய்யுள் வழக்கு:

= நாடகவழக்கு, இலக்கியவழக்கு
புலவர் வழக்கு; புனைந்துரை வழக்கு (the words used in the language of poetry)
செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும் (தொல். எச்ச. 67)
செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்...
(தொல். செய். 234)

## செயகண்டி, செயகண்டிகை : → சேகண்டி

## செயற்கை அளபெடை:

செய்யுளின் ஓசை நிரப்பப்புலவர் செய்து கொள்ளும் அளபெடை.
கடாஅ உருவொடு... வல்லதே ஒற்று (குறள். 585)
இது அளபெடை அலகுபெற்றது. (தொல். பொ. 325 இளம்)
கண்ண்டண்ண் எனக்கண்டும் கேட்டும் (மலைபடு. 352)

## செயற்கை இன்னோசை:

மாந்தனால் உண்டாக்கப்படும் செயற்கையான இனியஓசை.
எடு:- முழவோசை, யாழோசை, குழலோசை.

## செயிரியர்:

பாணர் (bards, minstrels)
செயிரியர் மகரயாழின் தேம்பிழி தெய்வகீதம் (கம்ப. கார்முக. 40)
தெள்ளரிபாண்டி பாணிச் செயிரியர் (கம்ப. எழுச். 68)

## செருந்தி:

1. வாள் கோரை(A kind of sedge). பஞ்சரம், பஞ்சாங் கோரை, செங்கோடு, நெட்டிக்கோரை
செருந்தி வாட் கோரை (திவா. 819)
செருந்தி காலையே கனகம் மலர்கின்ற சாய்க்காடே (தேவா. 40: 9)
பஞ்சரம், செங்கோடு, செருந்தி, எனப்பகர்வர் (திவா. 649)
பஞ்சரம், செருந்தி, செங்கோடுமாம் (பிங்க. 2692)
செருந்தி, வாட் கோரை எனச் செப்புவர் (பிங்க. 2995)
புன்னையும் செருந்தியும் பொன்னிணர்ஞாழலும்
(பெருங். 1: 48: 154)
அரும்பு அலர் செருந்தி நெடுங்கால் மலர்கமழ (புறம். 390: 3)
தலைநாள் செருந்தி தமனியம் மருட்டவும் (சிறுபாண். 147)
களிறுமாய் செருந்தியொடு... (மதுரைக். 171 –72)
செருந்தி – நெட்டிக் கோரையுமாம் (நச்சர்)
கொழுங்கால் புதவமொடுசெருந்தி நீடி (பட்டினப். 244)
இருஞ்சாய் அன்ன செருந்தி யொடு வேழம் (ஐங். 18: 1)
2. ஒருமலர்
நனைத்த செருந்திப் போதுவாய் அவிழ (அகம். 150: 9)
விரிந்த செருந்தி வெண்மலை முருக்கர் (அகம் 240: 13)
→செந்து
..குறுந்தகடு ஒன்றும், செருந்திப்பூ பதினொன்றும்
(தெ. இ. க. 5: 520. த. க. சொ. 199)
(செருந்திப்பூப்போன்ற ஒருவித நகை)
களிறுவாய் செருந்தி யொடு (மதுரைக். 172)
செருந்தி, அதிரல், பெருந்தண் சண்பகம் (குறிஞ். 75)
சேடலும் செருந்தியும்... (சிலப். 13: 153)
(செருந்தி - ஒருமலர்)
3. குறிஞ்சியாழ்த்திறம் (பிங்க. 1382)
மத்யமாவதி என்ற பண்
→ செந்திறம்

## செருந்து: → செந்திறம்

## செலவு:

= ஆளத்தி, சஞ்சாரம், ஆலாபனை
பண் விரிவாக்கம் (Elaboration of a tune) எண்வகை இசை ஏழால்களுள் ஒன்று.
சஞ்சாரம் - செல்லுதல்
பாலைப்பகுப்புக்கள், கிளைப்பண் பகுப்புக்கள், நடைவகைகள், இயக்கவகைகள், தாளக் கூறு பாடுகள் இவற்றிடையே செல்லுதல் செலவு.
ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல் செலவு (சீவக. 651நச்சர்.)
கண்ணிய செலவு... எண்வகையால் இசை எழீஇ (சிலப். 7: 6–8)
செலவெனப்படுவ... செல்வதுவே (மேலது அரும்.)
← த. க. க 179/I

## செவ்வழி:

= இருமத்திமத்தோடி, செவ்வழிப்பாலை, செவ்வழியாழ்.
மாலை நேரப்பண். அவலச்சுவை தரும் பண். ஏழ் பெரும் பாலைகளுள் மூன்றாவதாக வரும் பாலை. மெல்லுழையும், வல்லுழையும் வரும் பண்.

*செம்பாலையின் கைக்கிளை குரலாயது. (அரிகாம் போதியின் காந்தாரம் சட்சமாகப் பண்பெயர்க்க வரும் பண்). 7சுரப்பண்.*

**கைக்கிளை குரலாயது செவ்வழிப்பாலை** (சிலப். 17:(13)அடியார்க்.)

**கைக்கிளை குரலேற் செவ்வழிப்பாலை** (பிங்க. 1405)
**காந்தள் மெல்விரல் கைக்கிளை சேர்குரல்.**
**தீந்தொடைச் செவ்வழிப்பாலை** (சிலப். 7:(47)

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| செவ்வழிப்பாலை | த$^1$ | | நி$^1$ | | ச | ரி$^1$ | | க$^1$ | | ம$^1$ | ம$^2$ | |

*செம்பாலை (அரிகாம் போதி) - ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^1$*
*செவ்வழிப்பாலை - ச ரி$^1$ க$^1$ ம$^1$ ம$^2$ த$^1$ நி$^1$*
*(இருமத்திமத்தோடி)*
*(கைக்கிளை - க$^2$; குரல் - ச)*

**சீறியாழ் செவ்வழி பண்ணி** (புறம். 144: 2 & புறம். 147: 2)
**செவ் வழிக்கீதம் சிதையப்பாடி** (பெருங். 1: 40: 92)
**சேக்கை நல்யாழ் செவ்வழி பண்ணி** (பெருங் 1: 33: 89)
**சீறியாழ் செவ்வழி பண்ணி நின்வன்புல** (புறம்: 146: 3)
**கைவழி மருங்கில் செவ்வழி பண்ணி** (புறம் 149: 3)
**திவவு மெய்ந் நிறுத்தி செவ்வழி பண்ணி** (மதுரைக். 604)
**பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப** (அகம்.214: 13)
**பையுள் நல்யாழ் செவ்வழி பிறப்ப** (அகம். 314: 12)
**சாயன் கிளவி போல் செவ்வழி யாழ் இசைநிறப்ப** (கலித். 143: 38)
**படுமலை செவ்வழி பகர் அரும் பாலை** (சிலப். 3: 84)
**செவ்வழிப் பண்ணில் சிறைவண்டு அரற்றும்** (சிலப். 11: 88)
**செவ்வழியாழ் நரம்பு அன்ன கிளவியாள்** (கலித். 118: 15)
**நயவன் தைவரும் செவ்வழி நல்யாழ்** (அகம். 212: 6)
**செவ்வழி நல்யாழ் இசைமினன் பையென** (அகம் 14: 15)
**முதல் இசைச் செவ்வழி விதிபெறப்பாடி** (கல்லா. 95: 18)
**சிறகர் வண்டு செவ்வழி பாட** (சீவக. 74: 3)
**செவ்வழியாழினுள் தீஞ்சொலால் குற்றதெல்லாம்** (சீவக. 1407)
**பாலையாழொடு செவ்வழிப்பண்கொள**
**மாலை வானவர் வந்து வழிபடும்** (தேவா. 5: 12: 10)
**தும்பி காலைச் செவ்வழி முரல்வ** (கம்ப. பால. 45)
**செவ்வழி யாழ் பாண் மகனே** (திணை மாலை. 124: 1)
**...குரல் கொண்ட கிளைக்குற்ற உழைச்சுரும்பு** (பரிபா. 11: 126–27)

*(குரல் = முல்லை, முல்லையாழ், செம்பாலை - அரிகாம்போதி; கிளை - கிளைமுறை)*
*ஐந்தன் முறை - 'ச ம' முறை (ச - குரல்; உழைச்சுரும்பு - ம$^1$)*
*ச ம$^1$, ம$^1$ நி$^1$, நி$^1$ க$^1$, க$^1$ த$^1$, த$^1$ ரி$^1$, ரி$^1$ ம$^2$*
*செவ்வழி - ச ரி$^1$ க$^1$ ம$^1$ ம$^2$ த$^1$ நி$^1$*

## செவ்வழிப்பாலை, செவ்வழியாழ்: → செவ்வழி

## செவ்விசை:

*இலக்கண இசை; செந்நெறி இசை; விதிகளுக்கு உட்பட்டஇசை; அறிவு இசை; மூளை உழைப்பு இசை.* (classical music, essentially intellectual music)

## செவ்வேள் ஆடல்:

*குடையும் துடியும் முருகவேள் ஆடிய ஆடல்கள்*
**சூர்த்திறம் கடந்தோன் ஆடிய குடையும்** (சிலப். 6: 51)
**குடைவீழ்த்து அவர்முன் ஆடிய குடையும்** (சிலப் 6: 53)
**கொடுகொட்டி... குடையொடு துடி இரண்டும் குமரனது ஆடலாமே** (சூடா. 9: 50)

## செவி:

*யாழின் முறுக்காணி* (the screw of lute)

## செவிநேர்பு வைத்தல்:

1. *செவியால் கேட்டே ஒத்து (கேள்வி, சுருதி) சேர்க்கும் முறை. செவியால் இசையை அளத்தல்.*

**செவி நேர்பு வைத்த செய்வுறு திவவின்** (முருகு. 100)
**ஏற்றிய குரல் இளி என்றிரு நரம்பின் ஒப்பக் கேட்கும்...** (சிலப். 3: 59 – 60)
**குரல்வாய் இளிவாய்க் கேட்டனள்** (சிலப். 8: 35)

*கேள்வி - யாழ்; காதால் கேட்டு கேள்வி(சுருதி) கூட்டப் படுவதால் யாழுக்கு கேள்வி என்று பெயர்.*
*ஒப்பு:-* **நீடிக்கிடந்த கேள்விக் கிடக்கையின்** (சிலப். 3: 89)

2. *யாழின் முறுக்காணியைச் சரி செய்து ஒத்து (சுருதி)கூட்டுதல்*

→ செவி

## செவியாரப்பாடுதல்:

*காதிற்கு இனிமையாகப் பாடுதல்*
**...செவியாரப்பாடிக் கண்ணார ஆடுதலும்...** (சிலப். 6: 18 – 25 அடியார்க்.)

## செவியின் ஓர்த்து:

*செவியால் கேட்டு; ஓர்த்து - ஆராய்ந்தறிந்து*
**குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பு** (மலைபடு. 23)
**பட்டவகைதன் செவியின் ஓர்த்து** (சிவப். 7: 16)
**ஓர்த்தது இசைக்கும் பறை போல** (கலித். 92 : 21)
*ஒப்பு:- ஓர்மை* (conciousness) **(நினைவு)**

## சென்னியம்:

*பாணர் பிரிவினர்.*
**செவ்வரை நாடன் சென்னியம் என்னே** (பெரும் பாண். 103)

## சென்னியர்: = மண்டைப்பாணர்

*பாணர்பிரிவினர்*(Bard, lyrist)*; சென்னியைச் (மண்டை) கைக் கொண்டு திரியும் பாணர். கூத்தர் (அ. நி.)*
**செவ்வரை நாடன் சென்னிய மேனியனே** (பெரும்பாண். 103)
**சென்னியர் தெறல் அரும் கடவுள் முன்னர்** (நற். 189: 2 – 4)
**குழல் அளந்து நிற்ப, முடிவு எழுந்து ஆர்ப்ப**
**மன்மகளிர் சென்னியர் ஆடல் தொடங்க** (பரிபா. 7: 79 – 80)

*மண்டை - பொன்னால் ஆன பரிசுப் பாத்திரம்.*
*ஸ்ரீராஜராஜ தேவர் நாளதி னாலேய் குடுத்த பொன்னின் மண்டை ஒன்று* (தெ. க. தொ. 2 1, க. க. அ. 401)
*வெள்ளி மண்டை நிரை நகரக்கல்லால் நூற்றுத் தொண்ணூற்றிரு கழஞ்சு* (தெ. இ. க. 5 671)
*வெறுங்காய் முதல் பொன்னின் மண்டை* (தெ. இ. க. 19 346)

← த. க. சொ. 475

# சே

## சேக்கோள்:

தண்ணுமை, ஏறுகோட்பறை, ஆன்நிரை கவர்பறை.
சிறுகுடிமறவர் சேக்கோள் தண்ணுமை... (அகம். 297 : 16)

## சேகடம்: → சேகண்டி

## சேகண்டி:

= சேகண்டிகை, செயகண்டிகை, செயகண்டி, சேமக்கலம், சேமங்கலம், சேமணி, சோமங்கலம், சேங்கலம், சேங்ங்லா(ம.வ.) சேடகம், சேகடம், எறிமணி.
கோல் கொண்டு அடிக்கும் வட்ட மணிவகை; திருப் பலியில் கொட்டப்படுவது. (gong used in temples)
அடிபடு... சேகண்டி, எறிமணிப்பேர்... (சூடா. 7: 35)
எறி மணி சேகண்டி (பிங்க. 1262)
திருப்பணி மூன்று தேசகாலமும் சேகண்டிகை உட்பட
(தெ. இ. க. 12· 114. த. க. சொ. 265)
காளப்புறம் 2ம் செயகண்டிகை புறம்
(தெ. இ. க. 5 660. த. க. சொ. 261)
பள்ளற்கு தவிலும் முரொசும் சேமக்கலமும்
(IPS956. தெ. இ. க. 288)
சேகண்டிகை உட்பட ஐஞ்சாள் கொண்டு திருப்பலி கொட்டுவதற்கு வைத்த நிலம் (வட ஆர்க்காடு கீழ்ப்புறக்கல்வெட்டு)
திருப்பலி - உயிர்ப்பலி - இறப்பு
எனவே இறப்புச் சடங்கில் சேகண்டி கொட்டப் படுகிறது.
சேடகச் சண்டையும் கண்டையுங்... (தெ.இ.க.7:863. த.க.சொ.197)
சேகண்டிகை ஒன்றும் காளம் இரண்டும்
(தெ. இ. க. 3. 128. த. க. சொ. 208)
← த. க. க. 356/II; செ. ப. அ. 1631

## சேகண்டிகை: → சேகண்டி

## சேங்கலம்: → சேகண்டி

## சேடகம்: → சேகண்டி

## சேதம்:

1. வெண்டுறைச் செய்யுள் (யா.க.)
2. விலக்குறுப்பினுள் ஒன்று.(An element of dancing)
விலக்குறுப்பாவன: பொருள், யோனி... சேதம் என இவை பதினாலும் (சிலப். 3: 13 அரும்.)
3. சேதித்தல் - பிரித்தல் (divide, splite)
தாதை தனைத் தாள் இரண்டும் சேதிப்ப (திருவாசக. 15: 7)
(சேதனம் - பிளவு செய்தல், splitting)
எடு:- கொட்டிச்சேதம்
4. சேதாரம், கழியுமானம்
எட்டுஎண் வட்டணையுள்ளே ஏழன் அலகுச் சொல் (7 x ¼= 1¾) நான்கு வைக்கலாம். மீதி ஓர் எண் (8- 1¾ x 4 =1) எட்டு எண் வட்டணையில் 1¾ சொற்கட்டு நாலு முறை முழக்கினால், 7 எண் ஆகி ஈற்றிலே ஓர் எண் மீதமாகிறது. இதுவே சேதம் அல்லது சேதாரம். இந்த சேதத்தை முதலில் (கழித்துக் கொண்டு). முழக்குவதே கழியுமானம். இதை ஓர் இடம் தள்ளி எடுத்தல் என்பர்.
← மத்தள. X L VII - X L IX ,→ கழியுமானம்

## சேதம் இருவகை:

"விலக்குறுப்பினுள் ஒன்றான சேதம் இருவகைப் படும். ஆரியம், தமிழ் என இருவகைத்து; என்னை? ஆரியம் தமிழ் எனுஞ் சீர் நடம் இரண்டனும் ஆதிக்கதையை அவற்றிற் கொப்பச் சேதித்திடுவது சேதமென்றாகும்" (சிலப். 3: 13அடியார்க்.)

## சேமக்கலம்: → சேகண்டி

## சேமங்கலம்: → சேகண்டி

## சேமணி: → சேகண்டி

## சேரிப்பாடல்:

வாயில் கூத்தும், சேரிப்பாடலும்
கோயில் நாடகக் குழுக்களும் வருகென (பெருங். 1: 37:88 – 89)
↑ சேரிப்பாடல் – நாட்டார் பாடலாகலாம்.

## சேவல்: ஆண் வண்டு

கொங்கு கவர் நீலச் செங்கட்சேவல் (சிறுபாண். 184)

## சேவனைக்காரர்:

கோவில் மேளகாரர் (Pipers and drummers attached to a temple)
← செ. ப. அ. 1638

## சேவா காலம் பண்ணுதல்:

ஆழ்வார் பாசுரங்களை திருமால் திருமுன்பு திரள விருந்து ஓதுதல்.
← செ. ப. அ. 3918

## சேவித்தல்:

சேவை; ஆழ்வார் பாசுரங்களை ஓதுதல்.
செய்வித்தல் > சேவித்தல்
← செ. ப. அ. 1638 - 39

## சேனாபதி:

பண்களில் ஒன்று (பரத. இராக. 103)

# சை, சொ

## சைகை:
நாட்டிய அவிநயம் (Gesture)
கையால் செய்யப்படுவது - கைசெய் - கைசை - சைகை ஆகலாம்.

**சைந்தவி:** பண்களில் ஒன்று (ச. அ.)

**சொக்கத்தாண்டவம்:** → சொக்கம்

## சொக்கம்:
= சுத்தநிருத்தம், சுத்தம், நிருத்தம், நிர்த்தம், நிர்த்தனம், நட்டம், சுத்தநடம், சுத்த நட்டம், தனி நடம் (pure danec) சுத்தாந்திர ஆட்டம், சொக்கத் தாண்டவம், தூய நட்டம். கரணக்கூத்து
சாந்திக் கூத்துள் ஒன்று. பாடலின்றித் தனிக் கொட்டு முழக்கு மற்றும் சொற்கட்டுகளுக்கு ஆடும் ஆடல்.
சாந்திக்கூத்தே... ஈரிரு நடமவை சொக்கம்மெய்யே, அவிநயம்நாடகம்... சொக்கமென்றது: சுத்தநிருத்தம். அது 103 கரணமுடைத்து (சிலப். 3: 12 அடியார்க்.)
...சொக்கம், மெய்யே, அவிநய நாடகம் ...சொக்கமாவது சுத்தநிருத்தம் (சீவக. 672 நச்சர்.)
சொக்கம் அது ஆடியும் பாடியும் (தேவா. 3: 9: 9)
பைபருகும் அல்குல் இலயம் பற்றிப் பதனமைத்த பாவை நிருத்த நோக்கி (சீவக. 682)
பதனமைத்த நிருத்தம் - கால் அமைத்த கூத்து(நச்சர்)
பதன்- பதம் - கால் - அடைவு
பதியிலார் சொக்கம் ஆடவேண்டும் (ARE 1913 P 127)
சொக்கன் சொக்கத்தாண்டவம் புரிந்தானன்றே (திருவாலவா. 5: 5)
சொக்கம் அவிநய நாடகம் (சிலப். பதி. 73அடியார்க்.)
சொக்கம் பயின்றீர் (அப்பர்)
சொக்கம் -அழகு, தூய்மை
ஒப்பு:- சொக்கன் - அழகன்; சொக்கத்தங்கம் சொக்கநாதர், சொக்கலிங்கம்
←செ. ப. அ. 1646 ; த. க. க. 186/III

**சொக்க வர்ணம்:** → பதவர்ணம்

**சொடக்கு:** துளைக்கருவி (Wind intrument)

## சொல்:
1. இசைச்சுரம்
2. விலக்குறுப்பு பதினான்கனுள் ஒன்று
விலக்குறுப்பென்பது... சொல்லே... ஈரேழ் உறுப்பே (சிலப். 3: 13அடியார்க்.)
3. → சப்தம்

## சொல்வகை:
கூத்திற்கான வரிப்பாடல் வகை; இவை நான்கு வகைப்படும்.
சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதகம் (சிலப். 3: 13 அடியார்க்.)

## சொற்கட்டு:
சதி, சதிச்சொற்கள், சொற்சதிகள், பதம், அடைவுச் சொற்கள், போல் (இந்துத்தானி) தாளக் கட்டு (Choreographic language, solfasyllables, rhythmic mnemonics).
தாளத்தில் அமைந்த சொற்கள். இச்சொற்களால் இசைப் பகுதிகள் கட்டப்படுவதால் சொற்கட்டுகள் என்றும், இவை வரும் பாடல்களைச் சொற்கட்டுப் பாடல்கள் என்றும் அழைக்கிறோம்.
எடு:- கவுத்துவம் , சப்தம்

**சொற்கட்டுப்பாடல்கள்:** → சொற்கட்டு

**சொற்சீர் வண்ணம்:** = பாஅ வண்ணம்
பாஅ வண்ணம்
சொற்சீர்த்தாகி நூற் பாற் பயிலும் (தொ. செ. 206)
பாஅவண்ணமாவது சொற் சீரடியாகி நூலின்கண் பயின்றுவரும் (மேலது இளம்.)
எடு:– பாஅ வண்ணம் (தொ. செ. 206)
வடவேங்கடம் தென்குமரி (தொல். பாயிரம்)
பதிற். 12 பாடல்கள்: 14, 19, 20, 22, 25, 26, 50, 51, 69, 71, 82, 90 (சொற்சீர் வண்ணமும், ஒழுகு வண்ணமும் கலப்பாக வந்துள்ளன.)

## சொற்சீரடி:
1. சொல் அல்லது சொற்றொடர் மட்டுமே பாடல் அடியாகவருவது.
எடு:- வடவேங்கடம் தென்குமரி (தொல். பாயிரம்)
எடு:- வாயிலோன் - வழக்குரை காதை - 30
பெண் அணங்கே - வழக்குரை காதை - 63
ஒள் இழை - வழக்குரை காதை - 65
மணிகண்டு - வழக்குரை காதை - 72
முகிழ்த்தகை - அழல் படு காதை - 42
2. → அம்போதரங்கம்
←த. இ. பே. 293 - 94 / 14

**சொற் பகுதி:** = மாது (சாகித்தியம்)
பாடலின் சொற் பகுதி(செய்யுள்)

# சோ, செள

## சோ:

*சோணிதபுரம், சோவரணம், வாணபுரம், வாணாபுரம் பாணாசுரன் (வாணாசுரன்) நகர்.*

வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீள் நிலம் அளந்தோன் ஆடியகுடமும் (சிலப். 6: 54 – 55)

காமன்மகன் அநிருத்தனைத்தன்மகள் உழைகாரணமாக வாணன் சிறைவைத்தலின், அவனுடைய சோ என்னும் நகர வீதியில் சென்று நிலங்கடந்த நீனிற வண்ணன் குடம் கொண்டாடிய குடக்கூத்தும் (மேலது. அடியார்க்.)

சோவின் அருமை அழித்த மகன் (நான்மணிக்கடிகை கடவுள். வாழ்.)

வாணபுரத்து வடக்கு வாயிலிடத்து நின்று கடைசியர் வடிவு கொண்டு அயிராணி ஆடிய கடையமும் (சிலப். 6: 62 – 3 அரும்.)

சோ வரணும் போர் மடிய... (சிலப். 17: (35)

சோ வரணம் – அசுரர் நகர் (மேலது. அரும்)

## சோக சாவேரி:

*பண்களில் ஒன்று* *(பரத. இராக. 55)*

## சோடினைக்காரன்:

*நாடகம் நடிப்போருக்கான உடைகளை ஆயத்தம் செய்பவன்.*

## சோபானப்பாட்டு: = சோபானம், செளபானம்

*வாழ்த்துப்பாடல், மங்கலப்பாடல். கோயிலில் அர்த்தமண்டபத்துக்கும் மகாமண்டபத்துக்கும் இடைப்பட்ட பகுதியிலுள்ள படிக்கட்டுகள், இடைநாழிகை எனப்படும். அப்படிகளில் நின்று பாடப்படுவது சோபானப் பாடல்கள்.*

*அர்த்த மண்டபம் இடைநாழிகை மஹாமண்டபம் ஸோபாநம் இவையும் (தெ. இ. க. 5. 762, த. க. சொ. 64)*

*கோயில்கீழைச் சோபானப்பீடத்து (தெ இ. க 8 224, த க சொ. 91)*

*..சோபானத்துக்கு வேண்டும் பொன்னிட்டு (தெ. இ. க. 3· 39)*

*பழங்கல்வெட்டு சோபானத்தில் படிஎடுத்து வெட்டித்து (தெ. இ. க. 7: 854, த. க. சொ 270)*

*சோபானம், செளபானம் - படிக்கட்டு*

பண்புறவே செளபான பட்சங்காட்டி (தாயு. ஆகார. 10)

*(சோபானநிலை - படிப்படியாகச் சிறக்கின்ற நிலை)*

முனிவர் சோபானங்கள் செய்ய (கம்ப. ஊர் தேடு. 170)

## சோபானம்: → சோபானப்பாட்டு

## செளபானம்: → சோபானப்பாட்டு

## சோபான மடித்தல்:

*கும்மியடித்தல்*
*← செ. ப. அ. 1670*

## சோம்பினோன் அவிநயம்:

= மடியின் அவிநயம்

மடியின் அவிநயம் வகுக்குங்காலை, நொடியொடு பல கொட்டாவி மிக வுடைமையு, மூரிநிமிர்த்தலு முனிவொடு புணர்தலும், காரணமின்றி யாழ்ந்து மடிந்திருத்தலும், பிணியுமின்றிச் சோர்ந்த செலவோ, டணிதரு புலவர் ஆய்ந்தன ரென்ப (சிலப். 3: 13 அடியார்க்.)

## சோமங்கலம்: → சேகண்டி

## சோமராகம்:

*பாலையாழ்த்திறம் ஐந்தனுள் ஒன்று*

“தக்கராகம்... சோமராகம்... பாலைத்திறமென்றார்... (சிலப். 4: 72 – 6. அடியார்க்.)

தக்கராகம்... சோமராகம்... பாலைத்திறமென்ப (பிங்க. 1381)

## சோவானை:

*மங்களகரமான ஆரத்திப்பாட்டு*
*← செ. ப. அ. 1676*

## சோறு:

மத்தளத்தின் நடுப்பாகத்தில் பூசும் கலவைச் சாந்து (paste used in drums)
*← செ. ப. அ. பிற். 297*

## செளக்க வண்ணம்: = சவுக்கவர்ணம்

முதல் காலத்தில் அமைந்த வண்ண (வர்ண)ப் பாடல்
→ சவுக்கவண்ணம்

## செளந்தரமுகம்:

*முக அவிநயம்*
*← செ. ப. அ. 1681*

## செளசெள:

*பல -நாடகங்களிலிருந்து ஓரோர் அங்கங்களை எடுத்துக்கொண்டு நடிக்கும் ஒரு வகை நாடகம்*
*← செ. ப. அ. 1681*

# ஸ, ஷ, ஜ, ஸ்ரீ

**ஸ்வகீய சுரம்:** → கிழமைக் கோவை

**ஸ்தாயி:** → தானம்

**ஷட்ஜம் (சட்சம்):** → குரல்

**ஜெண்டை:** → செண்டை

**ஜதி:** → சதி

**ஜதிஸ்வரம்:** → சதி சுரம்

**ஜகன் மோகனம்:**
பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 103)

**ஜண்டை சுரம்:** → இரட்டை அடுக்கு

**ஜண்டைவரிசை:** → இரட்டை அடுக்கு

**ஜாதி:** → பாலை

**ஜம்பை:** → செம்படை

**ஜன்யராகம்:** → கிளைப்பண்

**ஜனகராகம்:** → தாய்ப்பண்

**ஜாரு:** → தைவரல் நான்கு

**ஜிஞ்சிரா:** *கஞ்சிரா*
*← செ. ப. அ. பிற். 420*

**ஜிங்கிள்:** → சிங்கிள்

**ஜெஜெவந்தி:** → துவிசாவந்தி

**ஜோகினி:**
பண்களில் ஒன்று (பரத இராக. பக். 103)
↑ இப்பண், இந்துத்தானிப் பண்ணான சொகினி (அம்சானந்தி) ஆகலாம்.

**ஸ்ரீபலி:** → சீபலி

**ஸ்ரீரஞ்சனி:**
பண்களில் ஒன்று (பரத . இராக. பக். 102)

**ஸ்ரீராகம்:**
*பண்களில் ஒன்று*
↑ இது பண்டைய திருவிராகம் (திரு + இராகம்) ஆகலாம். மற்றும் பண்டைய 'சீராகம்' என்ற பண்ணும் இன்றைய ஸ்ரீராகம் ஆகலாம்.
செவ்வழிக்கு அருகு – சீராகம் (சிலப். 14: 160–67 அடியார்க்.)
*ஒப்பு: திரு அரங்கம் > திருவரங்கம் > சீரங்கம் > ஸ்ரீரங்கம்*

**ஸ்ரீநாக வசந்தம்:**
பண்களில் ஒன்று (பரத இராக பக். 10



**ஞஞ்ஞையுற்றோன் அவிநயம்:**
*மயக்கமுற்றோன் அவிநயம்.*
"ஞஞ்ஞையுற்றோன் அவிநயம் நாடில்... விளங்குமொழிப்புலவர் "
(சிலப். 3: 13 அடியார்க்.)
*(ஞஞ்ஞை = மயக்கம்)*

**ஞரல:** *முழங்க*
வயிர் எழுந்து இசைப்ப வாய் வளை ஞரல (முருகு. 120)

## ஞா

**ஞாழ்:** *யாழ்*
தன் ஞாழ் நவிற்றிய தாமரை அங்கை (பெருங். மகத. 6: 17)

## ஞி

**ஞிமிறு:** = மிஞிறு
1. தேன்வண்டு
வரி ஞிமிறு ஆர்க்கும் வாய்புகுகடாஅத்து (புறம். 93: 12)
2. *ஞிமிர்* - *ஒலி* (Sound)

## ஞெ

**ஞெகிழம்:** *சிலம்பு*
அரைசுறை கோயிலணியார் ஞெகிழம் (சிலப். 18: 25)
ஞெகிழம் – சிலம்பு (மேலது அரும்)

**ஞெகிழி:**
இரவின் மாட்டிய விலங்கு சுடர் ஞெகிழி (பெரும்பாண். 349)

**ஞெள்ளல்:** = சித்திரகளை
*அறுவகை மார்க்கங்களுள் ஒன்று. இரண்டு அலகினையுடைய மூன்றாங்காலம்.*
ஞெள்ளலில் குளித்த இருமாத்திரை (கல்லா. 99: 16)

**ஞெளிர்:** = நெளிர்
1. *அறுவகை உள்ளோசை (கமகம்) களுள் ஒன்று. ஏங்குதல், துயர் உறுதல் போன்று இசைப்பது.*
முரல்வும், நரல்வும், தெளிரும் ஞெளிரும்
விழைவும், நுணுக்கமும் உள்ளோசை என்ப (பிங்க. 1436)
2. *ஒலி*
*எடுத்தல் ஓசையுடன் ஒலித்தல்* (To sound in high Pitch)



**டக்கா:** → டக்கரீ

**டக்கரீ:** = டக்கா
இடக்கை என்ற தோற்கருவி
– விக்கினராஜருக்கு டக்கரீ என்ற தோற்கருவி"
(காமிக ஆகமம் சுலோ. 33)
இடக்கை > டக்கை > டக்கா > டக்கரீ

**டக்கை:** *சிறிய பறை வகையுள் ஒன்று.*
↑ தக்கை அல்லது இடக்கை யாகலாம்.
← *செ. ப. அ. 1693*

**டங்கா:**
*தபேலாவின் இணைக்கருவிகளுள் ஒன்று.*
*(இணைக்கருவிகள்- டங்கா மற்றும் பாயா)*

**டடம்:**
மத்தள வகையுள் ஒன்று (பரத. ஒழிபி. 13)

**டப்பா:**
*இந்துத்தானி மெட்டில் அமைந்த ஒரு வகைத் தமிழ்பாட்டு. பஞ்சாபின் ஒட்டக ஒட்டிகளின் பாடலில் அமைந்துள்ள மெட்டு இவ்வடிவுடையது. மியானஷோரி என்பவரால் இப்பாடல்கள் செவ்வியல் மரபுக்குள் கொண்டு வரப்பட்டுள்ளன.*
← *செ. ப. அ. 1694*

**டமருகம்:**
*உடுக்கை எனும் சிறு பறை.*
*(டமரு - உடுக்கை)*
→ தமருகம் ; உடுக்கை

**டம்மாரம், டம்மானம்:** → டமாரம்

**டமாரம்:** = டம்மாரம், டம்மானம்
ஒட்டகத்தின் மேல் வைத்துக் கொட்டுகின்ற டம்மாரம்
(விறலி. விடு. 67)
↑ இது பண்டைய இடமாரம் ஆகலாம்.
→ இடமாரம்

**டாலு:**
உள்ளோசை (கமகம்) பத்தனுள் ஒன்று. (பரத. இராக. 23)

**டிண்டிமம்:** → திண்டிமம்

**டிமிக்கி:**
*மண்பாண்டத்தால் அமைந்த சிறுபறை*
← *செ. ப. அ. 1698*

**டேக்கா:** → துள்ளுமம், துள்ளல்[4]

**டேப்:** → தப்சு

**டோல்:** *தோற்கருவிகளுள் ஒன்று*
↑ தோல் எனும் பழைய இசைக்கருவியாகலாம்.

**டோல்கி:**
*பெரும்பாலும் பெண்களால் இயக்கப்படும் சிறிய தோற்கருவி.*
↑ பண்டைய தோல் எனும் இசைக்கருவியின் அடியாக வந்ததாகலாம்.
*தோல் > டோல் > டோல்கி*

**டோளக்கை:**
= உடோளம் , உடோளக்கை, தோரம், டோளம்
*இரட்டைக்கைகளுள் ஒன்று.*
தோரம் என்பது... வழக்கிற்றென்ப... (சிலப். 3: 18 அடியார்க்.)
தோரம் – உடோளம் எனவும் இது கூறப்படும். (மேலது அடிக்)
← *செ. ப. அ. 1700,* → ஊஞ்சல்கை

# த

**த:**
*விளரிசுரத்தின் (தைவதம்) குறியீடு.*

**தக்கணம்:**
*தாளப்பிரமாணத்தின் உட்பிரிவு* (யாழ். அக.)

**தக்கணாதி:** *குறிஞ்சியாழ்த்திறம்*
நட்டபாடை... தக்க ணாதி... குறிஞ்சியாழ்த்திறமாகக் கூறுவர் (பிங்க. 1382)

**தக்கராகம்:** *பாலை யாழ்த்திறம்*
தக்கராகம்... இராகப்பெயர் என இசைத்தனர் புலவர் (திவா. 1887)
தக்கராகம்... பாலையாழ்த்திறமென்ப (பிங்க. 1381)
தக்கராகம்... பாலைத்திறமென்றார்... (சிலப். 4: 72 – 6 அடியார்க்.)
மிக்க வீணையை மெய்ந்நரம்பு ஆர்த்துடன்
தக்கராகத்தில் தான் மிக வாசித்தான். (உதயண. 48: 3 – 4)
↑ முதன் முதலில் உதயண குமார காவியத்தில் 'ராகம்' என்ற சொல்வருகிறது. மதங்கரின் 'பிருகத்தேசி'நூல் 'ராகம்' என்ற சொல்லை அறிமுகம் செய்கிறது.
← *தமிழர் இசை. 319*
← Bharatha-The Natyasastra-by Kapila Vatsyayan p.118

**தக்குக்கட்டை:**
*சுருதிக்கட்டை அளவில்* ச ரி[1] ரி[2] க[1] க[2]
1 1½ 2 2½ 3
ஒலிப்பது . குறிப்பாக ஆண்களின் குரல் இவ்வாறான அளவில் அமைந்திருக்கும்.
→ கெச்சுக்கட்டை

**தக்குக்கட்டை மத்தளம்:**
= தக்கு சுருதி மத்தளம்
*சுருதிக்கட்டை அளவில்,* ச ரி[1] ரி[2] க[1] க[2]
1 1½ 2 2½ 3
என ஒலிக்கும் மத்தளம் (மிருதங்கம்). ஆண்கள் பாடும் போது துணைவாத்தியமாகப் பயன்படுவது.
ஒப்பு :– தாழ்குரல் தண்ணுமை (சிலப். 3: 27)
மந்த முழவம் இயம்பும் (தேவா. 7: 73: 1)
→ கெச்சுககட்டை

**தக்குசுருதி:**
*இசையின் தாழ்ந்த ஓசை* (low pitch)
*தக்கு X எச்சு (கெச்சு)*
← செ. ப. அ. 1703

**தக்கு சுருதி மத்தளம்** → தக்குக்கட்டை மத்தளம்

**தக்கேசி:**
*பண் காம்போதி (ஓதுவார்முறை)*

**தக்கை:**
*பெரிய உடுக்கை வடிவான தோற்கருவிகளுள் ஒன்று.*
பேரிகை... தக்கை... என தோலால் செய்யப்பட்ட கருவிகள் (சிலப். 3: 27 அடியார்க்.)
சச்சரி, கொக்கரை, தக்கை (தேவா. 11: 1: 10)
தக்கை, தண்ணுமை, தாளம்... (தேவாரம் 7: 36: 9)
சீர்முழவம், பேரி, திடிமம், ஒலியார்தக்கை (இலஞ்சி முருகனுலா.கண்ணி 127)
*இது சிறுகோலால் அடித்து முழக்கப்படுவது. திருவரங்கக் கோயிலில் வைகுண்ட ஏகாதசித் திருவிழாவில் தக்கை முழக்கப்படுகிறது. திருமெய்யம் பாறையில் தக்கை வடிவமைக்கப் பட்டுள்ளது.*
← *த. க. க* 1/III; 235/II; → தவில்

**தகுணி:**
*இசைக்கருவியுள் ஒன்று.*
*சங்கம், பொற்றாளம், தகுணி, துடி, படிகம்* (செ. ப. அ. பிற். 299)
↑ இது தகுணிச்சம் / தகுணித்தம் ஆகலாம்.

**தகுணிச்சம்:** = தகுணிதம், தகுணித்தம்
1. அகப்புற முழவு மூன்றனுள் ஒன்று (சிலப். 3: 27 அடியார்க்.)
தக்கை தண்ணுமை தாளம் வீணை தகுணிச்சம் (தேவா. 7: 36: 9)
இதழ் அவிழ் தாமரை எனும் தகுணித்தம் (கல்லா. 82: 27)

சச்சரிகொக்கரை தக்கையொடு தகுணிதம் (தேவா. 11: 1: 10)
2. வரிக்கூத்துள் ஒன்று
சிந்துப் பிழுக்கை... தகுணிச்சம்... கோத்தவரிக் கூத்தின்குலம்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)
← த. க. க1/III

## தகுணித்தம், தகுணிதம் → தகுணிச்சம்

## தகைப்பு: = மேரு

யாழ் உறுப்புக்களுள் ஒன்று.
தந்தியினை யாழ்த்தண்டின் மேலாகத் தூக்கி நிறுத்துவது. இதில் குரல்(ச) என்ற முதல் சுரம் ஒலிக்கும்.
தந்திரிகரமே தகைப்புற விலகி (சிலப். 13: 107 அடியார்க். மேற்.)

## தசாக்கரி:

பண்களில் ஒன்று.
ஆசான் என்ற பண்ணின் அருகியல் பண்.
← சிலப். 13: 110–12. அடியார்க்.

## தஞ்சை நால்வர் நாட்டிய முறை:

தஞ்சை நால்வர் என்ற சின்னையா, பொன்னையா, சிவாநந்தம், வடிவேலு ஆகியோர் பண்டைய சதிர் முதலிய ஆடல்களிலிருந்து அமைத்த கீழ்க்கண்ட நாட்டிய முறையிலிருந்தே இன்றைய 'பரத நாட்டியம்' அமைக்கப்பட்டுள்ளது:
1) தோடயமங்கலம்
2) அலாரிப்பு
3) சதிசுரம் (ஜதீஸ்வரம்)
4) சப்தம்
5) பதவண்ணம்
6) பதம்
7) சாவளி
8) தில்லானா
9) சுலோகம்
10) விருத்தம்
11) பத்யம்

## தட்டடைவு:

நாட்டியத்தில் அரைமண்டியில் அமர்ந்து பாதம் நிலத்தில் பதிய இரண்டு பாதங்களையும் மாற்றி மாற்றித் தாளம் அல்லது சொற்கட்டுகளுக் கேற்பத் தட்டுவது தட்டடைவு.

## தட்டழி: = தட்டளி, தப்பட்டை

தாளக்கருவியுள் ஒன்று.
தட்டழி, மத்தளி, கரடிகை, தாளம் (TAS,i,P.1-14; த. க. சொ. 149)
தட்டழி கொட்டிகளுக்குப் பங்கொன்றும் (தெ. இ. க. 2: 99)
தட்டளி கொட்டிகளுக்குக் கொற்றுநெல்லு
(தெ. இ. க. 14. 164; த. க. சொ. 275)

## தட்டழிப்புறம்:

தட்டழி எனும் இசைக்கருவி வாசிப்போர்க்கு இறையிலியாக வழங்கப்பட்ட நிலம்.
பருடை ஓம் நங்கை பூதி ஆதித்த பிடாரியார்க்கு இநிலம் ஆறுமாச்செய்யும் தட்டழிப்புறம் உவச்சர்க்கு பூதி ஆதித்த பிடாரியார் செய்து குடுத்தது.
(முதலாம் பராந்தகன் திருச்சேத்துறைசந்திரசேகர் கோவில்கல்வெட்டு)
← த. ப. ச. 126/III

## தட்டளி: → தட்டழி

## தட்டைத்தண்ணுமை: → கிளிகடி, தட்டை

## தட்டைப்பறை: → கிளிகடி, தட்டை

## தட்டிச்சுற்று:

கோயிலில் குறித்த மண்டபங்களைச் சாமி சுற்றி வரும் போது தவிலை மட்டும் தட்டிக் கொண்டே வருதல் மற்றும் கோயில் விழா இறுதியில் ஊர்வலத்திருமேனி (உற்சவ மூர்த்தி)யைப் பீடத்தில் அமர்த்தும் சடங்கு.

## தட்டி மெட்டடைவு:

அரைமண்டியிலிருந்து வலதுகால் பாதத்தைத் தட்டி மறுகாலின் முன்படத்தைக் குத்தித் தட்டுவது.

## தட்டுதல்:

கொட்டுதல் (to beat, as drum); தாளம் போடுதல் (beating time)
கிணை வள்ளியோன் முன்கடைதட்டி (பு. வெ. 9: 58)

## தட்டை: = தழல்,கிளிகடி, கிளிகடிகோல், தட்டைத் தண்ணுமை, தட்டைப்பறை

1. கிளிகடி கருவி
மூங்கிலைப் பிளந்து செய்யப்படும் கருவி.
கரடிகை, கிளிகடிகருவி, சின்னம், திணைத்தாள், மூங்கில் என்றிவை தட்டை (பிங்க. 3602)
ஐவனச் சிறு கிளிகடியும் நாட (ஐங். 285: 3)
ஒலிகழைத்தட்டை (மலைபடு. 328)
தட்டையும் தழலும் கிள்ளை கடிகருவிப் பேராகும் (சூடா. 7: 13)
2. கரடிப்பறை, கரடிகை
நடுவுநின்று இசைக்கும் அரிக்குரல் தட்டை (மலைபடு. 9)
கரடிநாமம் உறுபறை தட்டையாமே (சூடா. 7: 40)

## தட்டைத்தண்ணுமை: → கிளிகடி, தட்டை

## தட்டைப்பறை: → கிளிகடி, தட்டை

**தடவருதல்:** → தடவுதல்

**தடவாதல்:** → தடவுதல்

**தடா:** → தடவு

**தடவு:** = தடா, இந்தளம்

1. *ஒரு மரம்*

தடவின் ஓங்கு சினை (குறுந். 160)

தடவு வாய்க்கலித்த மா இதழ்க் குவளை (புறம். 105)

2. *தூபமுட்டி, இந்தளம்*

பகுவாய்த் தடவில் செந்நெருப்பு ஆர (நெடுநல். 66)

கள்ளுடைத் தடவில் புள் ஒலித்து (நற். 227: 7)

மடவரன் மகளிர் தடவு நெருப்பமர்ந்து (சிலப். 14: 99)

தடவு நிமிர் முத்தீப் பேணிய (பரிபா. 5: 42)

3. *பண்களில் ஒன்று ; இந்தளம்*

தடவுநிலைப் பலவின் நாஞ்சில் பொருநன் (புறம். 140)

இந்தளம், தடவு என்பன கூதிர்காலப் பண்ணிற்குரிய பெயர்களே (த. க. க. 236, III)

பண் தடவு சொல்லின் மலைவல்லி உமைபங்கன் எமையாளும் இறைவன். (தேவா. 3: 74: 3)

**தடவுதல்:** = தடவாதல், தடவருதல்

துழாவுதல் போல் கையால் தேய்த்தல்

யாழ் போன்ற நரம்புக்கருவியை இயக்குதல் (தேவ. 161/VIII)

←செ. ப. அ. 1725

**தடாரம்:**

*தாள வகையுள் ஒன்று* (a time measure)

எடு:– தாளம் இரண்டுஒத்துடைத் தடாரம் (சிலப். 6: 35 அடியார்க்.)

**தடாரி:** = தெடாரி.

1. *கிணைப்பறை, உடுக்கை, தொண்டகப்பறை, ஒருகண்மாக்கிணை, ஒருகண் இரும்பறை.*

*நுண்கோல் கட்டப்பட்டது; மென்கோலால் பிணிக்கப்பட்டது. கண் அகன்ற பறை.*

கைக்கசடு இருந்த என் கண் அகன் தடாரி (பொருந. 70)

தடாரி – கண் அகன்ற உடுக்கை (மேலது. நச்சர்)

நுண்கோல் சிறுகிணை சிலம்ப ஒற்றி (புறம். 383: 3)

நுண்கோல் தகைத்த தெண்கண் மாக்கிணை (புறம். 70: 3)

கண்டி நுண்கோல் கொண்டு களம் வாழ்த்தும் (பதிற். 43: 27)

தண்ணுமை ஒலியும் தடாரிக் கம்பலும் (பெருங். 1: 48: 165)

அரிக்குரல் தடாரியின் யாமை஖ிளிர (புறம். 249: 4)

சிதாஅர் வள்பின் சிதர்ப்புறத் தடாரி (புறம். 381: 17)

தெடாரித் தெண்கண் தெளிர்ப்ப ஒற்றி (புறம். 368: 14 – 15)

சிதாஅர் வள்பின் என் தெடாரி தழீஇ (புறம். 376: 4)

அரிக்குரல் தடாரி உருப்ப ஒற்றி (புறம். 369: 21)

அரிக்குரல் தடாரி இரிய ஒற்றி (புறம். 390: 8)

ஒரு கண் மாக்கிணை ஒற்றுபு (புறம். 392: 5)

ஒரு கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி (புறம். 394: 7)

2. *பம்பை*

தடாரி, பம்பைப் பறை (பிங்க. 1525)

*திருமெய்யம்பாறையில் இவ்இசைக்கருவி வடிவமைக்கப்பட்டுள்ளது.*

**தண்டகம்:** = உரைப்பாட்டு

*தண்டகம் எனும் இசைவடிவமானது, உரைநடையாக இல்லாமலும் கவிதையாக இல்லாமலும் இருவகைக் குணங்களையும் பெற்றும் வரும் பாவகை.*

எடு:– சேரி முற்றும் சிவபக்தி பண்ணும்படி (கோ. கி. பா.)

நாட்டிலெங்கும் சுதந்திர வாஞ்சையை (பாரதி)

← பாரதி ஓர் இசைக்களஞ்சியம் பக். 70

**தண்டகரேசிதம்:**

*நாட்டியத்தில் அரைமண்டியிலிருந்து வலது காலை நாட்டி இரண்டு கைகளையும் ஊஞ்சலாக (டோளம்) உயர்த்துவது தண்டகரேசிதம்.*

**தண்டி:**

1. *எட்டடி இசைப்பாட்டு*

2. *யாழ்*

பார்ப்பதிப் பாணியைத் துடிமணி எடுப்பச்

சுருதியைத் தண்டி வலிகொண்டமைப்ப (கல்லா. 99: 32 – 3)

**தண்டு:**

1. = கோடு, மருப்பு (stem, cross-bar)

*தந்திக்கருவிகளின் மீட்டுவாத்திய வகைகளில் தந்திகள் செல்லும் உட்கூடுள்ள நீண்டபகுதி யாழ்த் தண்டு ஆகும். இதன் ஒரு முனை யாழ்ப்பத்தர் (குடம், gourd) உடன் இணைக்கப் பட்டிருக்கும்*

பாம்பு அணந்தன்ன ஓங்கு இரு மருப்பின் (பொருந. 13)

பைங்கண் ஊகம் பாம்பு பிடித்தன்ன

அம்கோட்டுச் செறிந்த அவிழ்ந்து வீங்கு திவவின் (சிறுபாண். 221 – 222)

→ மருப்பு

2. *யாழ்* (lute)

தண்டும் தாளமும் குழலும் தண்ணுமைக் கருவியும்... (தேவா. 2: 94: 6)

... தண்டு என்ப... வீணை... (சூடா. 11: 9)

சரிகமபதநிப் பாடல் தண்டு தைவரு செங்கையோன் (பாரத. இந். 42)

3. *தண்டியம், கோல், மாக்கோல் (சர்ஜரை)*

*நாட்டிப்பயிற்சியின் (தட்டுக்கழி) தொடக்கத்தில் கையால் பிடிக்கும் கோல்.*

ஐயாண்டில் தண்டியம் பிடித்து ஏழாண்டு நடம் நவின்ற (சிலப். பதி. 64 – 5 அடியார்க்.)

ஐயாண்டில் தண்டியம் பிடிப்பித்து... (சிலப். 3: 10 – 11 அடியார்க்.)

தண்டியம் சேர்ப்பித்தல் (பஞ்ச. பக். 25)

மதலை மாக்கோல் கைவலம் தம்மின் (புறம். 150)

**தண்டடைவு:** → தவ்வடைவு

## தண்டர்: → தண்டோரா

## தண்டியம்: → தண்டு

## தண்டோரா: = தமுக்கு, தண்டர்

*ஒருமுகத் தோற்கருவி*
*வரிதண்டவும் மக்களிடம் செய்தியை அறிவிக்கவும் பயன்படுவது.*

தவில்முரசு பறை திமிலை டிங்குடிங்குந்து
அடர் தண்டர் பேரி (திருப்புகழ்)

*(தண்டர் - தண்டோரா)*
*← த க க. 8/III*

## தண்ணம்: *ஒருகண் பறை*

தழீம் தழீஇம் தண்ணம்படும் (நாலடி. 6: 4)
மழுவும், ஒரு கண் பறையும் தண்ணம் (பிங்க. 3606)
தண்ணம் ஓர் கண் பறை (சூடா. 11: 11)

## தண்ணுமை:

*இருமுகப்பறை, மத்தளம், மதங்கம் (மிருதங்கம்)*

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ (மலைபடு. 471)
பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை (புறம். 89: 7)
கருங்கண் மறவர் கல்கெழுகுறும்பின்
எழுந்த தண்ணுமை இடங்கண்பாணி
அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சம் துண்ணென (அகம். 87: 7 – 9)
*(இடந்தலையின் 'தொம் தொம்' என்ற ஒலி அச்சத்தைத் தருகின்றது)*
தண்ணுமைப் பின்வழி நின்றது முழவே (சிலப். 3: 140)
சேக்கோள் அரையும் தண்ணுமை (அகம். 63: 18)
மிளை வந்து பெயரும் தண்ணுமைக்குரலே (குறுந். 390: 5)

↑ குறுந்தடிகளால் இருபுறமும் முழக்கப்படுவது தண்ணுமை. இதனுடைய பிற்கால மாற்றமே சிறுகோல் மற்றும் குச்சியால் முழக்கப்படும் தாவில் – தவில் ஆகலாம்.

இருதலை குவிந்த நெட்டுடல் தண்ணுமை (கல்லா. 8: 21)

↑ 'இருதலை குவிந்த நெட்டுடல் தண்ணுமை '(கல்லா. 8: 21) *என்பதால் தண்ணுமை என்பது இன்றைய மிருதங்கத்தின் முந்திய வடிவாகலாம்.*

மடிவாய்த் தண்ணுமை நடுவண் ஆர்ப்ப (நற். 130: 2)
மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே (புறம். 289: 10)
மடிவாய்த் தண்ணுமை நடுவண் சிலைப்ப (பெரும். 144)

*'மடிவாய்த் தண்ணுமை' என்பதால் பல அடுக்கான மடிக்கப்பட்ட தோலை உடைய மிருதங்கத்தை ஒத்ததாகின்றது.*
*"இதன் திருந்திய வடிவை தற்போதுள்ள மிருதங்கத்தில் காணலாம்" (இ. இ. பக். 71)*

*(தண்ணுமை - தாழ்ந்த இனிய ஓசை)*

ஒப்பு :– தாழ்குரல் தண்ணுமை (சிலப். 3: 27)

*தண்ணுமை திருமெய்யம் பாறையில் வடிவமைக்கப் பட்டுள்ளது.*

## தண்ணுமைத் தொழில் இரண்டு:

*ஆக்கல், அடக்கல் என்பன.*

ஆக்கலும்... அடக்கலும்... (சிலப். 3: 53)
ஆக்கல் – மற்றக்கருவிகளின் குறையை நிரப்புகை;
அடக்கல் – மற்றக் கருவிகளின் மிகுதியை அடக்குதல். (மேலது. உரை)

## தண்ணுமை முதல்வன்:

*அரங்கில் தண்ணுமை வாசிப்போன்; தண்ணுமை ஆசிரியன்.*

அத்தகு தண்ணுமை அருந்தொழில் முதல்வனும் (சிலப். 3: 55)
தண்ணுமை முதல்வன் தன்னொடும் பொருந்தி (சிலப். 3: 62)

## தத்தச்சந்தம்:

*வண்ணப்பாடலில் வரும் சந்தங்களுள் ஒன்று.*

பத்தி என்பதும் ஒற்றரும் சிட்டனும்
நெய்த்தென்று உரைப்பதும் மெய்ச்சொலும் கர்த்தனும்
தத்த என்றியங்கும் சந்தத்து உதாரணம் (வண்ணத். 12)

## தத்தளபஞ்சமம்: *மருதயாழ்த்திறம்*

தக்கேசி... தத்தள பஞ்சமம்... மருதயாழ்த்திறனே (பிங்க. 1383)

## தத்தாச் சந்தம்:

*வண்ணப்பாடலில் வரும் சந்தங்களுள் ஒன்று.*

அத்தா என்பதும் கற்றார் என்பதும்
தொட்டான் என்பதும் பொய்க்கோ என்பதும்
நெய்க்கோல் என்பதும் மெய்க்கோன் என்பதும்
தத்தா என்பதின் சந்தத்து உதாரணம் (வண்ணத். 17)

## தத்துற்று: *குதித்து*

தத் + உற்று
த, தத் – என்ற தாள வாய்பாட்டால் உருவான சொல்.
முத்துடை வான்கோடு தழீஇ, தத்துற்று (முருகு. 305)

## தத்தை:

கோயிலிலுள்ள நாட்டியக் கலைமகள்; தானே விரும்பித் தன்னைக் கோயில் சேவைக்கு அர்ப்பணிப்பவள்.
(ஞானாகானம் 240)

## தந்தச் சந்தம்:

*வண்ணப்பாடலில் வரும் சந்தங்களுள் ஒன்று.*

மஞ்சும், கொண்கரும், கந்தனும், மொய்ம்பும்,
மொய்ம்பரும், மொய்ம்பனும் தந்த என்று ஓதும்
சந்தத்து உதாரணம் ஆம் எனத் தகுமே. (வண்ணத். 32)

## தந்தாச் சந்தம்:

*வண்ணப்பாடலில் வரும் சந்தங்களுள் ஒன்று.*

அந்தோ, என்பதும் தங்கார் என்பதும்
வந்தோன் என்பதும் மொய்ம்பா என்பதும்
மொய்ம்போர் என்பதும் மொய்ம்போன் என்பதும்
தந்தா என்னும் சந்தத்து உதாரணம். (வண்ணத். 37)

## தந்தி:

1. = நரம்பு, தந்திரி (string of a lute)
தந்திரி கரத்தொடு (சிலப். 13: 107)
தந்திரி அமைதியும் (சிலப். 3: 26 அடியார்க்.)
2. *யாழ்*
யாழின்பெயர் தந்தி (பிங்க. 1430)

## தந்திரர்: = கந்திருவர்

*கந்தருவர்*
தந்திரர்... கந்திருவர் பெயர் எனக்கருதல் வேண்டும். (திவா. 34)

## தந்திரிகரம்:

*காடிச்சக்கை, காடிப்பலகை, விரல்தளம்.* (finger board)
*தண்டின் மேற்பகுதியில் யாழ் நரம்பு செல்லும் பகுதி; யாழ்த்தண்டில் திறந்த வாயை மூடிக் கொண்டும், தன் குறுக்கிடத்தே புரிநரம்புக் கோல்களை (மெட்டு) ஏந்தப் பெற்றும் உள்ள பலகையே தந்திரிகரம்.*
தந்திரிகரத்தொடு... (சிலப். 13: 107)
← *பா. கை 154,* → தண்டு

## தந்திரி:

1. *தந்தி*
2. *குழல் துளை*
தந்திரிகள் மெலிவித்தும் சமன் கொண்டும் வலிவித்தும் (பெரியபு. ஆனாய. 27)

## தந்தியும் ஒலியும்:

*நரம்புக் கருவிகளின் தந்தி காற்றில் அதிர்வதினால் (துடிப்பு) ஒலி பிறக்கிறது ஒலியின் தரம் மாறுபடக் காரணங்களாவன:*
1. தந்தியின் நீளம் (Vibrating length of the string)
தந்தியின் நீளம் கூடினால் மாத்திரை(சுருதி) *அளவு குறையும். நீளம் குறைந்தால் மாத்திரை (சுருதி) அளவு கூடும்.*
2. தந்தியின் விரைப்பு (Tension of the string)
*தந்தியின் விரைப்பு கூடக்கூட மாத்திரை (சுருதி) கூடும்.*
3. தந்தியின் பருமன் (thickness of the string)
*தந்தியின் பருமன் குறையக் குறைய மாத்திரை (சுருதி) கூடும்.*

## தப்சு: = டேப், தாயிரா

*சிறுபறை வகை.*
இசுலாமியப் பாணர்கள் ஆன பக்கீர்கள் பயன் படுத்துவது.
← பண்பாட்டு அசைவுகள் (இசுலாமியப் பாணர் கட்டுரை)

## தப்பட்டை: → தட்டழி; தப்பு

## தப்பட்டை மேளம்: → தப்பு

## தப்பளாக்கட்டை: → சப்பளாக்கட்டை

## தப்பு மேளம்: → தப்பு

## தப்பை: → தப்பு

## தப்பு:

= தப்பட்டை, தப்பட்டைமேளம், தப்புமேளம், தப்பை, தம்பட்டம், தமிட்டம், தழ்க்கு, தமுக்கை, தம்பட்ட முழவு.
*ஒருகண் பறை. இடந்தோளில் மாட்டி, குறுந்தடியால் முழக்கப்படும் சிறுபறை வகை.*
தப்பு என அங்கை கொட்டி (திருவாலவா. 58: 6)
பறைதிமிலை திமிர் தமிரு தம்பட்டம் (திருப்புகழ்)
தமிட்ட இராணும் பெருக்கி (தனிப்பா. 1: 318: 9)
முரசு தம்பட்ட முழவுமாகும் (பிங்க. 1526)
← *செ. ப. அ* 1749 & 1757

## தப்புவீணை: *வீணை வகையுள் ஒன்று*

## தபலா:

தபிலை, தபிலா, தபேலா, தபலை, (யாழ். அக.)
*ஒரு கண் மாக்கிணை போன்ற ஒருமுக வாத்தியம்*
ஒப்பு : பகுவாய்த்தண்ணுமை
தபலை திமிலைகள் பூரிகை பம்பை (திருப்பு. 616)
பண்ணமை முழவும் பதலையும் பிறவும் (பதிற். 41 : 3)
*பதலை - தபலை > தபலா*
*ஞிமிறு > மிஞிறு ; சிவிறி > விசிறி; ஒலி இடம் பெயரல்*(Metathesis)
தபோலா (நீர்ப்பாத்திரம், பறை) – இந்துத்தானிச்சொல்
தவலை என்பதின் மறுவடிவு தபலா (தே.நே. 122/X )
← *யாழ் அக.*

## தம்பட்டம்: → தப்பு

## தம்பட்ட முழவு: → தப்பு

## தம்பிரான்படி:

*அரையர் சேவையில் சிலபாசுரங்களை உரையோடு வழங்குதல். திருமங்கை (கி. பி 8 ஆம் நூற்.) ஆழ்வார் காலத்திலிருந்து இக்கலை வழிபாட்டு விழா தொடக்கம் கொண்டுள்ளது.*
← கோயிலொ.

## தம்புரா:
= தம்பூர், தம்பூரி, தம்புரு, தம்பூரு, தும்புரு, தும்புருயாழ், தன்பூர்.
ஒத்து (சுருதி)க்கருவி; இசை அரங்கில் தொடக்கச் சுரத்தையும் பொருந்து சுரங்களையும் தொடர்ந்து ஒலித்து, ஒத்து (சுருதி) தரும் இசைக் கருவி. அதிர்வுகளால் ஏற்படும் மடிகள் (Loops) மூலம், தான்தோன்றிச்சுரங்கள் உருவாகி இசையின் அனைத்துச் சுரங்களும் பிறந்து இனிய இசைச் சூழலை ஏற்படுத்தும் நரம்புக்கருவி.
உட்துளையுள்ளது - தும்பு > தும்பி - தேன்வண்டு; யானை; தூம்பு - குழாய்
ஒப்பு:- தூம்புவாய் – புல்லாங்குழலின் திறந்துள்ள ஒருமுனை.
தம்புரு கின்னரங்கள் (குற். குற. 13)
தம்பூரு முழங்க (கொண்டல் விடு. 511)
தும்பு > தும்புரு > தம்புரு > தம்புரா
நன்னரம்புடைய தும்புரு வோடு (பாசுரம். 3: 6: 5)
← செ. ப. அ. 1753; த. க. க 12 & 291 /III

## தம்புரு: → தம்புரா

## தம்பூர்: → தம்புரா

## தம்பூரி: → தம்புரா

## தம்பூரு: → தம்புரா

## தமரகம்: → தமருகம்

## தமரம்: → தமருகம்

## தமருகம்: = தமரகம், தமரம் (டமருகம்)
உடுக்கை
தமரம் - தமரு - ஒலி ; தமரித்தல் - ஒலித்தல்
தமரமதுடன் வளர் சதுமறை (கம்ப)
மொகு மொகென்றொலி மிகும் தமருகங்கள் பலவே (கலிங். 100)
பேரிகை, படகம்... தமருகம்... தோலால் செய்யப்பட்ட கருவிகள் (சிலப். அடியார்க். 3: 27)

## தமார்:
இந்துத்தானித்தாளம்; 5 + 5 + 4 அளவுடையது.

## தமிட்டம்: → தப்பு

## தமிழ்க்குச்சரி:
ஒரு பண்; குறிஞ்சியாழ்த்திறம்
நட்டபாடை... தமிழ்க்குச்சரி ... குறிஞ்சியாழ்த்திறமாகக் கூறுவர் (பிங்க. 1382)

## தமிழ்க்குரிய எழுத்து:
ஆளத்தி (ஆலாபனை)க்குரிய எழுத்துக்கள் ம், ந், த் என்ற மூன்று மெய்களே. அவற்றுள் தவ்வினம் தமிழ்க் குரியது மெய்யெழுத்தாகிய பதினெட்டு எழுத்துள்ளும் மவ்வும் நவ்வும் தவ்வுமென மூன்றெழுத்துமல்லா மற்றை யெழுத்துக்கள் ஆளத்திக்கு வரப்பெறா.
தவ்வினம் தமிழ்க்குரியது (சிலப். 3: 26 அடியார்க்.)

## தமிழ்க்கூத்து:
தமிழ்நாட்டிற்குரிய கூத்து.
இருவகைக் கூத்தாவன:– வசைக்கூத்து, புகழ்க்கூத்து, ஆரியம், தமிழ்... எனப் பலவகைய (சிலப். 3: 12 அடியார்க்.)
முதல் குலோத்துங்கனின் 18 ஆம் ஆட்சியாண்டைச் சேர்ந்த மானம்பாடிக் கல்வெட்டில் குறிப்பிட்டுள்ளது:-
'தமிழ்க்கூத்து விக்ரமாதித்தன் திருமுதுகுன்றன் ஆனவளுதராச பயங்கர ஆச்சாரியான் ஆடினான்ங (ARE. 90/ 1932)
தமிழ்க்கூத்து – தமிழையுடைய கூத்து (தொ. எ. 385 நச்சர்.)

## தமிழ்பாட:
தமிழ்ப்பாடலைப்பாட
தமிழ்பாட ஒருவனுக்குப்பட்டாலகன் காமரப் பேரையனுக்குப் பங்கு ஒன்றையும் (தெ இ. க. 2 66, த. க. சொ. 281)

## தமிழ் மூன்று:
இயல், இசை, நாடகம் எனத் தற்காலம் வழங்கப் பெறும் கூத்துத்தமிழ், இசைத்தமிழ், இயற்றமிழ் என்பன.
... பொப்பணன் காங்கெயர் கோன் அளித்த, சோற்றுச் செருக்கல்லவோ தமிழ் மூன்று உரை சொல்வித்ததே (அடியார்க். உரைச்சிறப்புப்பாயிரம்)
கூடலார், கொண்டாடும் செஞ்சொல் குடக்கோ முனிசேரன் தண்டாவுரை முத்தமிழ் (சிலப். நூல் சிறப்புப்பாயிரம்)
தமிழோரால் எல்லை கூறப்படா நின்ற தமிழ்த்தேசத்தார் அறிய மூன்று தமிழும் (சிலப். 3: 37 – 8 அரும்.)
... இயற்றமிழில் வருங்கால்... இசைத்தமிழால் வருங்கால்... நாடகத்தமிழில் ... (சிலப். 6: 35அடியார்க்.)
... சங்கத்தமிழ் மூன்றும் தா (நல்வழி. கடவுள் வாழ்த்து)

## தமிழ்வேளர் கொல்லி:
பண்களில் ஒன்று ; மருதயாழ்த்திறம்
தக்கேசி... தமிழ்வேளர் கொல்லி... மருதயாழ்த்திறனே (பிங்க. 1383)

## தமிழிசைப்பாலை: → பக். 474–475

## தமுக்கு: → தண்டோரா, தப்பு

## தமுக்கை: → தப்பு

## தய்யச்சந்தம்:

*வண்ணப்பாடலில் வரும் சந்தங்களுள் ஒன்று*

வள்ளியும் செய்தியும் வள்ளலும் செய்தலும்
மெய்யனும் செய்கனும் தய்யச் சந்தத்து... (வண்ணத். 76)

## தய்யாச்சந்தம்:

*வண்ணப்பாடலில் வரும் சந்தங்களுள் ஒன்று.*

மெய்யே என்பதும் நெய்தோ என்பதும்
தள்ளார் என்பதும் செய்தோர் என்பதும்
வல்லோன் என்பதும் ஒல்கேன் என்பதும்
தய்யாச் சந்தத்து உதாரண மாமே (வண்ணத். 79)

## தர்க்கதரு: = சம்வாததரு, தருக்கதரு.

*தர்க்கப்பாடல்; நாடகத்தில் இருவருக்குள் நடக்கும் வாக்குவாதத்தைக் கொண்டிருக்கும் பாடல்.*

*எடு:- 1. வள்ளி திருமண நாடகத்தில் நாரதர் வள்ளி தர்க்கப்பாடல்*

*2. காமன் விழாவில் எரிந்த கட்சி எரியாத கட்சிப் பாடல்.*

## தர்ச்சனி:= சுட்டாமுட்டி, சுட்டு.

*ஆள்காட்டிவிரல்; சுட்டுவிரல் குழல் மற்றும் யாழ் வாசிப்பிலும், ஆடலின் அவிநயத்திலும் பங்கு பெறும் விரல்.*

வங்கியத்து விரல் உளர்ந்து ஊதும் துளைகள்
தர்ச்சனி முதலாக விட்டுப்பிடிப்பது; தர்ச்சனி – சுட்டாமுட்டி
(சிலப். 3: 58. அரும்.)

*சுட்டாமுட்டி - ஆட்காட்டி விரல் (மேலது அடிக்.)*

## தர்பாறு:

*பண்களில் ஒன்று* (பரத. இராக. 104)

↑ இது தற்போதைய பண் 'தர்பார்' ஆகலாம்.

## தர்ம்மி:

*காளம்*

*... தர்ம்மி யூதி பெருங்குறிகொட்டி*
*(தெ. இ. க. 6 57. த. க. சொ. 282)*

## தர்மவதி:

*7 சுரப் பெரும்பண்களுள் ஒன்று ; தமிழிசையின் 28 ஆம் பாலை (மேளம். 59) ; வல்லுழைப் (பிரதிமத்திமம்) பண்.*

## தரங்கம்:

1. ஒரு நாட்டிய உறுப்பு

*குச்சுபுடி நாட்டியத்தின் உறுப்புகளுள் ஒன்று. உலோகத் தாம்பாளத்தில் நின்று தாளத்திற்கேற்பத் தாம்பாளத்தில் அலை எழுப்புவதாகக் கால் அவிநயம் தோன்ற ஆடுதல்.*

*தரங்கம் - அலை*

*எடு:- இராச தரங்கிணி, அம்போதரங்கம்.*

தரங்காடும் தடநீர் (தேவா. 463: 1,461: 1)
நீர்த்தரங்க நெடுங்கங்கை (பெரிபு. தடுத். 165)

2. இசை *அலைவு* (Modulation in Music)

ஒண் தரங்க இசைபாடு மணியரசே (தேவா. 87: 1)

3. கிருஷ்ணலீலா தரங்கிணி.

17 ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த நாராயண தீர்த்தர் இயற்றிய 'கிருஷ்ணலீலா தரங்கிணி' என்னும் இசை நாடக உருப்படிகள் 'தரங்கம்' என்று அழைக்கப்படுகின்றன

## தரவின்றித் தாழிசை பெற்ற கொச்சக ஒரு போகு:

*தரவு இன்றி ஏனைய கலிப்பா உறுப்புகள் பெற்ற கொச்சக ஒரு போகு.*

*எடு:- சிலப். வாழ்த்துக் கதையுள் வரும் பாடல்*

*தாழிசை 1 - தொல்லை வினையால்...*

*தாழிசை 2 - மலையரையன்...*

*தனிச்சொல் - எல்லா நாம் !*

*குறட்பாச் சுரிதகம் - காவிரி நாடனைப் பாடுதும் பாடுதும் பூவிரி கூந்தல் புகார்*

*இருதாழிசைகள் பெற்றுக் கொச்சகமாகியது; தரவு பெறவில்லை.*

## தரவு:

*1. = எருத்து, குட்டம்* (strophe)

*கலிப்பா உறுப்புக்களுள் ஒன்று. கலிப்பாவின் எல்லா உறுப்பின் பொருளையும் தொகுத்துத் தந்து முன் நிற்பதால் தரவு என்று பெயர்.*

இது எடுத்தல் ஓசையால் வரும் (யா. க. 82 உரை.)

*இசைநூலார் இதனை 'முகம்' என்பர்.*

ஒப்பு : முகமுடைவரி (சிலப். 7: (1); (2); (3)
'திங்கள் மாலை' முதலியன மூன்றும் முகமுடைவரி
... முகத்திற்படும் தரவினை முகநிலை எனவும்
(சிலப். 6: 35அடியார்க்.)

↑ இத்தரவின் எடுத்தல் ஓசையே சித்தர் பாடல்களின் எடுப்பு மற்றும் அனுபல்லவியின் (எடுத்தல்ஓசை) எடுப்புப் பெற வழி வகுத்துள்ளது எனலாம்.

*← த. இ. பே. 94 /14*

## தரவு இணைக் கொச்சகம்:

*இரண்டுதரவு கொண்ட கொச்சகக் கலிப்பா வகை.*

*எடு:- 'மாமலர் முண்டகம்' என்ற கலித்தொகை 133-ஆம் பாடல்*

## தரவு கொச்சகக் கலி:

= *இயல் தரவு கொச்சகம், தரவு கொச்சகம்*

*தரவு, தனிச்சொல், சுரிதகம் பெற்று தாழிசையின்றி வருவது.*

*எடு:- ஆய்ச்சியர் குரவையுள் ஆடுநர்ப் புகழ்தல் எனும் தலைப்பில் அமைந்த,* 'மாயவன் தம்முன்னி

னொடும்... உள் வரிப்பாணி ஒன்றுற்று' வரை தரவு கொச்சகக்கலி. இது தரவும், "எல்லா நாம்" என்ற தனிச்சொல்லும் (சொற்சீரடி) மற்றும் "புள்ளூர்" என்ற (குறள்) வெள்ளைச் சுரிதகமும் பெற்றுத் தாழிசையின்றி வந்தது.
← யா. க. 86; யா. கா. செய். 32; த. இ. பே. 298,14

## தரவு கொச்சகக் கலிப்பா:

சீர் ஒவ்வொன்றும் மூவசைச் சீராகவும், நாற்சீர் நாலடியாகவும் வரும் கலிப்பா.
எடு: -
பாரதி - பாயுமொளி நீயெனக்கு
ஆண்டாள் - விண்ணீல மேலாப்பு (மேகவிடுதூது) (பாசுரம் 577– 586)
பெரியாழ்வார் – சுரும்பார் குழலி (பாசுரம் . 43)

## தரவு கொச்சகம்: → தரவுகொச்சகக்கலி

## தரானா:

தில்லானா
சொற்கட்டுகளைக் கொண்ட (தில்லானா போன்ற) இந்துத்தானி இசை உருப்படி

## தரு:

1. நாடக உரு (கீர்த்தனை)
தென்றல்தரு, வெண்ணிலாத்தரு, பிரவேசத்தரு என்பன போன்று தரு பல வகைப்படும்.
குறவஞ்சி போன்ற நாடகங்களில் வரும் கீர்த்தனை களே தருக்கள். நீண்ட வண்ணனையும் பலசரணங் களையும்கொண்டவை. நாடகக் கதையைக் கூறுவன. நர்டகத்தில் வரும் உரையாடல் பாட்டு. தெருக்கூத்து முதல் எல்லா நாட்டார் கூத்துக்களிலும் தரு இடம் பெறுகின்றது. இது இரண்டாம் காலத்தில் அமைந்து வருவது. எடுப்பு (பல்லவி) முடிப்பு (சரணம்) மட்டுமே கொண்டது. இசை நாடகம் மற்றும் நாட்டிய நாடகங்களில் தருக்கள் கையாளப்படு கின்றன
கலித்தொகையின்
"150 பாடல்களில் 32 உரையாடல் பாடல்கள் உள்ளன. அவை 10, 39, 40, 41, 43, 60, 62, 63, 81, 82, 83, 84, 87–94, 101, 102, 105, 107, 108, 110, 112–117 என்பன. இவை எல்லாம் இரண்டு அல்லது மேற்பட்ட பாத்திரங்களின் சொல்லாடல்களாக அமைந் துள்ளன. பாத்திரங்களின் நேரடிப் பேச்சாக இவை உள்ளன..."
(ப. த. நா. பக். 262)
தருக்கியல் தாழிசை (யா. கா. 29)
தருவு (பரத. நாட்டிய சாஸ்திரம் பக். L XI)
செம்பின் மேலும் பந்தத்தின் மேலும் தருக்கின பொன்
(தெ. இ. க. 5· 52, த. க. சொ. 284)
(தருக்கின - கூட்டின, அதிகரிக்கச் செய்த)
தயங்கிணர்க்கோதை தன்னொடு தருக்கி (சிலப். 2: 82)
தருக்கி – மிக்கு (மேலது அரும்.)
2. ஒருவகைச்சந்தம்: சொற்கட்டால் பாடப்படும் இடைநிலைப் பாட்டு. (Interlude)
← செ. ப. அ. 1767 ; தெ. இ. பக். 74

## தருக்கதரு: → தர்க்கதரு

## தருவர்ணம்:

சுரம், பாடல், சதி, பண், தாளம், சுவை என்ற ஆறு உறுப்பு கொண்டது. எடுப்பு, தொடுப்பு, எத்துக்கடை எடுப்பு, சிட்டை சுரம் உடையது.

## தலமுகம்:

நாட்டியக் கைகளுள் ஒன்று. (சிலப். 3: 13அடியார்க். அடிக்.)

## தலைக்கோல்:

நாடக (நாட்டிய) நங்கையரின் திறம்கண்டு மன்னனால் அளிக்கப்படும் பரிசு. அரங் கேற்றத்தின் போது வழங்கப்படும் அடையாள வரிசை. பகைவரின் வெண்கொற்றக்குடைக் காம்பு அல்லது பகைவர் மதிற்புறத்து அகழியின் கண் உள்ள மூங்கில் அல்லது உயர்மலை மூங்கிலில் செய்யப்படுவது
வெண்கொற்றக்குடைக்காம்பைத் தலைக்கோலாக – இது வேத்தியலுக்கு; பொதுவியலுக்கு மலையின் மூங்கிலுமாம்
(சிலப். 3: 114 – 128 அடியார்க்.)
"பிணியும்... தலைக்கோல் கோடறக்க என்ப "
(சிலப். 3: 125 – 8 அடியார்க்.மேற். செயிற்றியனார் பாடல்)
தலைக்கோல் ஏந்தித் தலையரங்கேறி (சிலப். 3: 161)
தன்வரிசைக்குத் தக்கபடியே தலைக்கோல் பெயர் பெற்று என்றவாறு (மேலது அடியார்.)
தலைக்கோல் பட்டம் எய்திய அரிவை
(சிலப். 14: 152 – 4 அடியார்க்.)
தலைக்கோல் பகைவரிடத்துப் பற்றிய குடைக் காம்பால் செய்யப்படுவதென்பது" பேரிசை மன்னர் பெயர் புறத் தெடுத்த, சீரியல் வெண்குடைக்காம்பு நனி கொண்டு (சிலப். 5) என்பதனாலும், அது சயந்தன் வடிவாய தென்பது "இந்திர சிறுவன் சயந்தனாகென, வந்தனை செய்து வழிபடு தலைக்கோல்" (சிலப்.27) என்பதனாலும் அறியப்படும்
(சிலப். 28: 98 – 107 நாட்டார்.)
சயந்தன் வடிவில் தலைக்கோலாம் (சிலப். 28: 100)

## தலைக்கை தருதல்:

ஆடலில், கையால் தழுவி அன்புகாட்டி ஆடுதல்.
எல்வளை மகளிர்த் தலைக்கை தரூஉந்து (புறம். 24: 8)
சிலைப்புவல் ஏற்றின் தலைக்கை தந்து நீ (பதிற். 52: 15)

## தலைக்கோல் அரிவை:

தலைக்கோல் பட்டம் பெற்ற, ஆடல் மகள்.
மலைப்பரும் சிறப்பில் தலைக்கோல் அரிவையும்
(சிலப். 14: 154)
... தலைக்கோல் அரிவை குணத்தொடு பொருந்தி
(சிலப். 3: 133 – 4 அடியார்க்.)

## தலைக்கோல் ஆசான்:

நட்டுவர்; ஆடல் ஆசிரியர்

தலைக்கோல் ஆசான் பின் உளனாக (சிலப். 30: 20)
தலைக்கோல் ஆசான் என்றது நட்டுவனை (மேலது அரும்.)

## தலைக்கோல் தானம்:

ஆடல் அரங்கு; தலைக்கோல் பட்டம் அளிப்பதற்கு அரங்கேற்றம் நடைபெறும் நாட்டிய அரங்கு.
தலைக்கோல் தானத்துச் சாப நீங்கிய (சிலப். 3: 3)
தலைக்கோல் தானம் – நாடக அரங்கு (மேலது அரும்.)

## தலைக்கோலி:

தலைக்கோல் பட்டம் பெற்ற ஆடற்கணிகை.
கூத்தன் நம்பிராட்டியான மணஞ்செய்த பெருமாள் தலைக்கோலி (தெ. இ. க. 5 145)
தேவனார் மகள் நக்கனாச்சி நங்கை ஆட இரண்டாயிரத் தலைக்கோலியார். (தெ. இ. க. 19 92 த. க. சொ. 285)

## தலைநோவுற்றோன் அவிநயம்:

தலை நோவுற்றோன் அவிநயம் சாற்றி, னிலைமை இன்றித் தலையாட்டுடைமையும், கோடிய விருக்கையும் தளர்ந்த வேரொடு, பெருவிரலிடுக்கிய நுதலும் வருத்தி, ஒடுங்கிய கண்ணொடு பிறவும், திருந்துமென்ப செந் நெறிப்புலவர்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## தலைப்பறை:

அதிக ஓசை தரும் பறை வகை; முதல் வரிசையில் கொட்டும் பறை (tom-tom). யானை முதலியவற்றின் முன்னே கொட்டும் பறை.
மத்த கஜமானது முன்னே தலைப்பறை கொட்ட வருமா போலே (ஈடு 10: 3: 5)
உகச்சுத் தலைப்பறை யொன்று (தெ இ. க. 13 170. த. க. சொ 84)
உகச்சுகள் தலைப்பறை ஒன்றும் (தெ இ. க 3 128. த. க. சொ. 84)
பூங்குடியில் அறுமாமுக்காணி உவச்சர் தலைப்பறை (தெ. இ. க. 3 151 - 151ய. த. க சொ. 286)
← செ ப. அ. 1781

## தலைப்பாட்டு:

1. கூத்தில் முதலில் தொடங்கும் பாட்டு
2. தலைமைப் பாடகியின் பாட்டு; முதன்மைப் பாட்டு ; முன்பாட்டு

தலைப்பாட்டுக் கூத்தியும் இடைப்பாட்டுக் கூத்தியும் (சிலப். 14: 156)

## தலைப்பாட்டுக் கூத்தி:

முதன்மைப்பாட்டுக்காரி (பிரதான பாடகி)
தலைப்பாட்டுக்கூத்தியும்.... (சிலப். 14:156)
ஒப்பு: ஓஜா பாலி - அஸ்ஸாமிய சடங்கு நடனம். இதில் பட்டி ராபா பழங்குடியினர் பாம்புத் தெய்வத்தை (மானஸா) வணங்கும் போது ஓஜா முன்பாகவும், பாலிகள் மூன்று வரிசையில் வரிசைக்கு இரு நபராக மொத்தம் 7 பேர் பாடி ஆடுகின்றனர்.
ஓஜா - தலைமைப் பாடகர்
பாலி - துணைப்பாடகர்
(ரெங்கையா முருகன் – கட்டுரை – தீராநதி சூலை. 2007. பக். 49)

## தலைபோகு மண்டிலம்:

இசைப்பாவகையுள் ஒன்று.
இஃது இசைப்பாவின் பகுதி என்ப. அது பத்து வகைப்படும்.
செந்துறை... தலைபோகு மண்டில மென (சிலப். 6: 35 அடியார்க்.)

## தலையம்:

கூத்து வகையுள் ஒன்று
உருள்வாய்க்கொக்கரை உம்பர் நாட்டு ஒலிக்கக்
கரங்கால் நாட்டித் தலையம் இயக்கு (கல்லா. 85: 25 – 26)

## தலையாய எதுகைத் தொடை: →

தலையாகு எதுகைத்தொடை

## தலையாகு எதுகைத்தொடை:

= தலையாய எதுகைத்தொடை.
பாடல் அடிகளின் முதற்சீர்கள் முதலெழுத்து ஒழிய எல்லா எழுத்துகளும் ஒன்றிவரத் தொடுப்பது.
எ–டு:– தயங்கினார்க் கோதை தன்னொடு தருக்கி
வயங்கிணர்த்தாரோன் மகிழ்ந்து செல்வுழி நாள்
(சிலப். 2: 82 – 83)
தயங்கல், வயங்கல் இரண்டும் விளக்கமாதலில் பரியாய மென்னும் அலங்காரமும் தலையாய எதுகைத்தொடை இன்பமும் புலப்படுத்தினமை உணர்க (மேலது அடியார்க்.)
மற்றும் மேலது பாடல் அடி 73 முதல் 80 முடிய உள்ள ஈரடிப் பாடல்களும் தலையாய எதுகைத் தொடை அமைந்தவை.
← யா. கா. ஒழிபி. 6 உரை

## தலையாகு மோனை:

பாடல் அடிகளில் முதற்சீர்களின் எல்லா எழுத்துகளும் ஒன்றிவரத் தொடுப்பது. (யா. கா. ஒழிபி. 6 உரை.)
எ–டு: பற்றுக பற்றற்றான்... (குறள்)
← த. இ. பே. 300,14

## தலையின தாரம்:

தமிழிசையின் தலைமைப்பாலையான செம்பாலை (அரிகாம்போதி)யின் தாரசுரம் (நி')
... தலையின தாரம்... (சிலப். 8: 25 அரும்.)

## தலையின தாரம் செய்யுந்தாரம்:

தமிழிசையின் தலைமைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி)யின் தாரசுரத்தால் (நி') பண் பெயர்க்கக் கிடைப்பது தாரம் (தாரப்பண்) என்ற மேற்செம்பாலை (கல்யாணி).
... மேற்செம்பாலை தாரமுதல் என்பது,
'தலையின தாரம் செய்யும் தாரம்' (சிலப். 8: 25அரும். மேற். நூற்பா.)

தாரம் முதலாயது மேற் செம்பாலை (சிலப். 17: (13) அடியார்க்.)
*ஒப்பு: 103 பண் வரிசையில் 103வது பண். தாரப்பண்திறம். மேற்கண்ட நூற்பாவில் வரும் தாரம் என்பது செம்பாலையின் தார(நி$^{1}$) சுரத்தையும், இறுதியில் வரும் 'தாரம்' என்பது தாரப்பண் என்பதையும் குறித்தது.*

*தலையினதாரம்*
↓

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | * | | * | | * | * | | * | | * | * | |
| செம்பாலை | ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
| மேற்செம்பாலை | ரி$^{2}$ | | க$^{2}$ | | ம$^{2}$ | ப | | த$^{2}$ | | நி$^{2}$ | ச | |

*செம்பாலை(அரிகாம்போதி)-ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ பத$^{2}$ நி$^{1}$*
*மேற்செம்பாலை(கல்யாணி)- ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{2}$ ப த$^{2}$ நி$^{2}$*
*(மேற்செம்பாலை - தாரப்பண் - கல்யாணி)*
↑ செம்பாலையின் தாரசுரத்தால் (நி$^{1}$) பண் பெயர்ப்பில் மேற்செம்பாலை கிடைப்பதால் அதற்கு (கல்யாணி) தாரப்பண் என்று பெயர் – சுரத்தால் பெற்ற பெயர்.

## தலைவரிசை:

*பாணரும், நாடகக்கணிகையரும் பரிசாகப் பெறும் 1008 கழஞ்சுப் பொன்.*
நாடகக் கணிகையார்க்குத் தலைவரிசை ஆயிரத்தெண் கழஞ்சுப் பொன் பரிசு பெறுகை நூல் வழக்கு... (சிலப். 3: 162 – 3அடியார்க்.)
முட்டில் பாணரும் ஆடியன் மகளிரும்
எட்டொடு புணர்ந்த ஆயிரம் பொன் பெறுப (மேலது மேற்.)

## தலைவிரிபறை: = கத்திரி

*பறை வகையுள் ஒன்று*
குழைஉடல் தலை விரிபறை கத்திரியே (பிங்க. 1527)

## தவ்வடைவு:

= தவ்வடைவு, தாண்டடைவு
*தாவி (தாண்டி)ச் செல்வது போன்ற கூத்து அடைவுகளுள் ஒன்று. ஆடலிலும் கூத்திலும் குத்தடைவும், தவ்வடைவும் முதன்மையான அடைவுகள்.*

→ *தவ்விசை*

## தவ்விசை:

*தாண்டவ இசை; தாண்டவ ஆடலுக்கான இசை; தாண்டி ஆடுவதற்கான இசை*
*தவ்வு - தாவு - தாண்டவமாடு*
*தாவுதல் - தாண்டுதல் - தாண்டவமாடல்*
*தாண்டு > தாண்டவம்*
இசையன்றி முன் தோன்றா தவ்விசை யினுள்ளே (பஞ்ச. 95)

## தவண்டை: பெரிய உடுக்கை

*உடுக்கையின் தோலைவிடக் கனத்த தோலால் செய்யப்படுவது. குச்சி கொண்டு இசைக்கப் படுவது. மாரியம்மன் கோயில் உடுக்கை வாசிப்பில் பயன் படுத்தப்படுகிறது.*

## தவலைக்கோலம்:

= கோபுச்சயதி, பசுவால் யதி, தபேலாயதி, கிடுகட்டிக் கோலம்.
*மத்தளச் சொற்கள் தொடக்கத்தில் பெருகியும் வரவரக் குறுகியும் வந்து அமைவது.*
*ததிகிடதொம் தகிடதொம் கிடதொம் தோம்*
*சா;, நீ; தா, பா*
← இ. து. த. சொ. பக். 37

## தவளைச்சங்கு:

*வெண்சங்கு; ஓர் இசைக்கருவியாக முழங்கப் படுவது.*
*இரண்டு தவளைச் சங்கும் ஒரு தாரையும்...*
(IPS : 923; *த. க. சொ.* 288)

## தவில்:

= தாவில், மேளம், கொட்டு, உடல், உடல்கூறு, ஒடக்கூறு, சக்கை, தக்கை
*நாகசுர இசை அரங்கிற்குத் தாள இசை தரும் இருமுகத் தோல்கருவி.*
தாவில் தடாரி (பஞ்ச. மேற்.)
பேரிகை, படகம்... தாவில்... (சிலப். 3: 27அடியார்க்.)
தாவில் (கூத்தநூல்)
தானமாக்கள் முழக்கமும் தாவில் சீர் (பெரியபு. திருமலை. 1:4)
திமித திமிதிமி... டிமுட டிமுடிமு டிட்டி யெனத்தவில் (திருப்புகழ்)
திமிலை தவில் படகம் முரசு மத்தளி (மீனாட். பிள். (4)
*பள்ளற்கு தவிலும் முரொசும் சேமக்கலமும்*
(IPS : 956; *த. க. சொ.* 288)
தவில் முரசு பறை (திருப்பு. 559)
*தாவில் > தவில்*
*(தவுல் - திரிபுச் சொல்; பிழைபட்ட வழக்கு)*
DAVIL - *தவில் - துருக்கிய முழவு*
DAULI.- *டவுளி (தவுளி) - கிரேக்க முழவு*
தவில் கருவியை 'உடல்' என்றும் கூறல் உண்டு
(திருச்சி உறையூர் நாச்சியார் கோயில் மரபு.)
← த. க. க. 183 – 84/III

## தழங்கு:

*யாழ் நரம்போசை*
தழங்கு குரல் முரசமொடு முழங்கும் (அகம். 24)
தழங்கு குரல் முரசம் காலை இயம்ப. (ஐங். 448: 1)
பழஞ்செருக்காளர் தழங்குகுரல் தோன்ற (மதுரைக். 669)
மடிவாயித் தண்ணுமை தழங்குகுரல் கேட்ட (நற். 298: 3)
ஒரு வலம்புரி தழங்கு ஒலி முழங்கி எழவே (கலிங். 283)
*தழங்குதல் - முழங்குதல்*

## தழல்:

*கிளிகடிகருவி. குறமகள் ஏனல் (திணை) புனம் காக்க உதவும் கருவி.*
தழலும், தட்டையும் குளிரும் பிறவும் (குறிஞ். 43)
தழலும் தட்டையும்... (குறுந். 223: 4)
→ கிளிகடி, தட்டை

## தழிஞ்சி:

மேற்செம்பாலை (கல்யாணி)

**குரல்புணர் இன்னிசைத் தழிஞ்சி பாடி (பதிற். 57: 9)**

**← த. க. க. 33/III**

## தழூஉ: → தழுவணி, துணங்கை

## தழுவணி:

= தழூஉ , துணங்கை

குரவைக்கூத்து, துணங்கைக் கூத்து; தழுவி நின்று வட்டமாக ஆடும் ஆடல்.

**ஆயமொடு தழுவணி அயர்ந்தும் (குறுந். 294)**
**துணங்கையந் தழூஉவின் மணங்கமழ்சேரி (மதுரைக். 329)**
**ஆங்கண் அயர்வர் தழூஉ (கலித் 104: 62)**
**அன்புறு காதலர் கைபிணைந்து ஆய்ச்சியர்**
**இன்புற்று அயர்வர் தழூஉ (கலித். 106: 32–33)**
**விழவு ஆடு மகளிரொடு தழூஉ அணிப்பொலிந்து (அகம். 176: 15)**

## தள்ளிஎடுப்பு:

= விசம எடுப்பு (off-beat)

பாடல் அல்லது சுரம், தாளத்துக்கு முன் அல்லது பின்பாகத் தொடங்குவது. இது இரு வகைப்படும். முன் தள்ளி எடுத்தல் மற்றும் பின் தள்ளி எடுத்தல் (முன் எடுப்பு மற்றும் பின் எடுப்பு)

## தளி:

கோயில்

**அலையி னார் பொழில் ஆறை வடதளி (தேவா. 5: 58: 1)**
**திருவாறை வட தளியில் சென்று இறைஞ்சி (பெரியபு.)**
**நன்று தளி சாலை நாட்டல் (சிறுபஞ்ச. 63: 3)**

கற்றளி < கல்தளி - கற்கோவில்

## தளிகை மல்லாரி:

இறைத்திருமேனிக்கு திருஅமுது படைக்கும் போது இசைக்கப்படும் நாட்டைப் பண்ணின் ஒரு வித சுரக்கோர்வைகள்.

## தளிச்சேரி:

கோவில் தாசியர் வாழும் குடியிருப்பு;கோயிற் பணியாளர் வசிப்பிடம். பெரும்பாலும் ஆடல் மகளிர்,இசைக்கருவியாளர்,நட்டுவர்,இசை, நாட்டியம் தொடர்பான தொழிலாளர்களின் வாழிடம்.

*தெற்குத் தளிச்சேரித் தென் இறகு (தெ. இ. க. 2 261)*
*கோயிலுந் திருமுற்றமுந் தளிச்சேரியுஞ் சுடுகாடும் (தெ. இ. க. 2: 5; த. க. சொ. 290)*

**மாதர் வீதி மறுகிடை நடந்து (சிலப். 16: 103)**
**தளிப்பெண்டுகள் தெருவினடுவே போய்... (மேலது அடியார்க்.)**
**தளிப்பெண்டுகள் தெரு – கோயிலில் பணி செய்யும் மகளிர் தெரு தளித்தெரு எனவும் வழங்கும் (மேலது அடிக்.)**

← தஞ்சைப் பெரிய கோவில் வடக்குச் சுற்று வெளிப்புறக் கல்வெட்டு (தெ. இ. க. 1: 66)

## தளிச்சேரிப்பெண்டிர்:

= தளிப்பெண்டுகள், தேவரடியார், தளியிலார், தளியுடையார்(Dancing girls attached to a temple) கோயில் தேவதாசியர்; ஆடல், பாடல்களில் சிறந்த கோயில் பணியாளர்.

**மாதர் வீதி – தளிப்பெண்டுகள் தெரு (சிலப். 16: 103 அரும்.)**

*தளிச்சேரிப் பெண்டுகளுக்கும் (தெ. இ. க. 2. 261)*

**ஆலவாய்ச் சொக்கருக்குத் தட்டது எடுக்கும் தளியிலாள் (விறலி விடு. 151)**

*ராஜ ராஜீச்வரம் உடையார் தளிச்சேரிப் பெண்டுகளாக (தெ. இ. க. 2 66)*

*... தளியுடையாள் இங்கழஞ்சும்... (தெ. இ. க. 7 935; த. க. சொ. 290)*

← கருணாமிர்த சாகரம். பக்;. 157- 166

## தளிப்பாட்டு:

கோயில் மகளிர் (தேவதாசியர்) பாடி ஆடும் கூத்துள் ஒன்று.

**சிந்து... தக்கபிடார்... தளிப்பாட்டு... கோத்தவரிக் கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)**

## தளிப்பெண்டிர்: → தளியிலார்

## தளியிலார்:

= தளிப்பெண்டிர், அம்பலவாசிகள், தளிப்பெண்டு ஆடல், பாடல் மூலம் கோயில்களில் தொண்டு செய்தோர்; நாடக மடந்தையர்.

**எண்ணெண் கலையோர் இருபெரு வீதியும் (சிலப். 14: 167)**
**எண்ணெண் கலையோர் – தளியிலார் (மேலது அரும்.)**
**நாடக மடந்தையர் ஆடரங்கு இழந்தாங்கு (சிலப். 22: 142)**
**நாடக மடந்தையர் – தளியிலார் (மேலது அரும்.)**
**தளி + இல் + ஆர் – தளியையே வீடாகக் கொண்டோர் (அம்பலவாசிகள்) அல்லது தளியைச் சேர்ந்தோர்.**

*... சண்டேச்வரர் பக்கல் பொலிகைக்கு ஊர்களிலார் கொண்ட காசும் (தெ. இ. க. 2. 6. த. க. சொ. 105)*

**ஊர்களிலார் = ஊரார்**

*பள்ளிச் சந்தக்களி முற்றூட்டு ஊரிலார்க்கும்* (EI. 15: 5 ; த. க. சொ. 108)

**ஊரிலார் – ஊரைச் சேர்ந்தவர்**

## தளிப்பெண்டு: → தளியிலார்

## தளை:

அறுவகைச் செய்யுள் உறுப்புகளில் ஒரு சீரின் ஈற்றசைக்கும் வருஞ்சீரின் முதல் அசைக்குமான தொடர்பு.

தளை = கட்டு ; பிணி (tie, bind )

*தன் > தளை (ஒப்பு: காலில் இடும் தளை)*
*தன் - தாள் - தாளம்*
மோகமெனும் பாசத்தான் மிகத்தளைந்து
(குற்றா. தல. தரும. சாமி. 74)
தளைக்கின்ற மாயக்குடும்பப் பெருந்துயர் (அருட்பா. 1 திருவருள் 215)
தாள்தளை இடுமின் (திருவாசக. 3: 143)
"இசைக்கு மிக நெருங்கிய தொடர்புடைய தாளத்தை மிக நுட்பமான முறையில் செவிக்குப் புலனாக்கும் முறையில் சொற்களில் அமைப்பதே தளையாகும். (கவிதையனுபவம். 197)

## தன்பூர்: → தம்புரா

## தனிநடம்: → சொக்கம்

## தனு: → வில்

## தற்கிழமை:

*இன்றியமையா உறவு* (Inseparable relation, as of an object with its parts)
ஒரு பொருளுக்கும் அதன் கிளை, குணம், செயல் முதலியவை களுக்கும் உள்ளது போலப் பிரியாதிருக்கும் சம்பந்தம் (நன். 300 உரை)
குரல்குரலாகத் தற்கிழமை திரிந்தபின் (சிலப். 3: 85)
*தற்கிழமை திரிதல் - ஒரு பண்ணிற்கே உரிய சுரங்களின் மாத்திரை திரிவதால் வேறு பண் உருவாதல்.*
எடு:– விளரி (தோடி) யின் சுரங்கள் – ச ரி¹ க¹ ம¹ ப த¹ நி¹
*இப்பண்ணின் ரி¹ சுரம், 4 மாத்திரை பெற்று (சதுசுருதி ரிசபம்) திரிந்தால், ரி¹ என்பது ரி²ஆகி, ச ரி² க¹ ம¹ ப த¹ நி¹ என்ற நிரல் பெற்றுப் படுமலைப் பாலை (நடபைரவி) யாகத் திரியும்.*
*← செ ப. அ. 1805*

## தறி: = குணில்

*பறையடிக்கும் குறுந்தடி* (drumstick)
*← செ ப. அ. 1807*

## தன்:

*தன் - தன்னம் - ஒத்து (சுருதி)*
*தன்னம் - சிறுமை* (smallness)
தன்னம் சிறிதே துயின்று (சீவக. 2028)
*ஒத்து (தனித்து இயங்காது) பாடலுடன் இயங்கும்.*
தன்னமும் தாரமும் தனிவழிப்படா (சிலப். 3: 72 – 8 அடியார்க்.)
*அம்+தன் > தன்+அம் > தன்னம்* (metathesis)
பண்ணமை முழவின் கண்ணெறி அறிந்து
தண்ணுமை முதல்வன் தன் ஒடும் பொருந்தி (சிலப். 3:61 –66)
தன் ஞாழ் நவிற்றிய தாமரை அங்கை (பெருங். மகத. 6: 17)
*(ஞாழ் - யாழ்; தன் ஞாழ் - ஒத்துக்கூட்டப்பட்டயாழ்)*
*தன் > தன்மம் - வேதம் ( சுருதி)*
புண்ணியமும் வேதமும் தன்மமாகும் (பிங்க. 3621)
*தன்மயம் - வேறு ஒன்றனுடன் ஒன்றுபடுகை* (Becoming absorbed)
*தன்னுதல் - பொருந்துதல்*
நம்பனையே தன்ன வலஞ்செய்து கொள்ளும் (தேவா. 11 வி. நா. திரு. 3)
↑ தன், தன்ன, தன்னா, தனனா என்றெல்லாம் நாட்டார் பாடலில் ஒத்துச் சேர்ப்பது நடப்பில் உள்ளது.
*தன் > துன் - துன்தனா > துந்தனா*
*துந்தனாவின் 'துன், துன்' என்ற ஒலியே சுதியாகின்றது.*
தும்புருக்கருவியும் துன்னி நின்று இசைப்ப (கல்லா. 82: 18)
துன்னகாரர் – பாணர் (சிலப். 5: 32 அரும்)
*← செ. ப அ. 1810*

## தன் உணர்ச்சிக் கவிதை:

*உணர்ச்சிப்பாடல்* (ஆட்சி. அக. பக். 178)

## தன் சந்திரிகை:

*பண்களில் ஒன்று* (பரத. இராக. 103)

## தன்யாசி, தன்னியாசி: → தனாசி

## தன்னச்சந்தம்:

*வண்ணப் பாடலின் சந்தங்களுள் ஒன்று.*
கண்ணி என்பதும் மென்வி என்பதும்
அண்ணன் என்பதும் பொன்வில் என்பதும்
முன்னர் என்பதும் என்வெள் என்பதும்
தன்னச்சந்தத்து உதாரண மாமே (வண்ணத். நூ. 70)

## தன்னாச் சந்தம்:

*வண்ணப் பாடலின் சந்தங்களுள் ஒன்று.*
அண்ணா என்பதும் மண்வா என்பதும்
முன்னோன் என்பதும் அண்னோர் என்பதும்
பொன்வேல் என்பதும் தன்வான் என்பதும்
தன்னாச் சந்தத்து உதாரணமாமே (வண்ணத். நூ. 73)

## தனச்சந்தம்:

*வண்ணப் பாடலின் சந்தங்களுள் ஒன்று.*
குருவும் தவரும் சுதனும் தன என்று
ஓதும் சந்தத்து உதாரணமாமே (வண்ணத். நூ. 50)

## தனாச்சந்தம்:

*வண்ணப் பாடலின் சந்தங்களுள் ஒன்று.*
குகான் என்றுரைப்பதும் சிறார் என்றுரைப்பதும்
கவான் என்றுரைப்பதும் தனா வெனும் சந்தத்து
உதாரணமாம் என்றுரைப்பர் பெரியோர் (வண்ணத். நூ. 53)

## தனாசி: = தன்யாசி, தன்னியாசி.

*பண்களில் ஒன்று* (பரத. இராக. 56)
புணர் இசைத் தனாசி பாடும் பூவையர் (சேதுபு. திருநாள். 90)
*← செ. ப. அ. 1815*

## தனிச்சிறப்புக்கோவை:

= பெருங்கிழமைக் கோவை, உயிர்ச்சுரம், (ஜீவசுரம்) ஒரு பண்ணின் சிறப்பான சுரம். பண்ணில் அடிக்கடி ஒலிப்பதும், நீண்டு ஒலிப்பதும், பண்ணின் சுவை இன்பத்தை வெளிப்படுத்துவது மானசுரம்.
எடு:- நைவளம் (நாட்டை) என்ற பண்ணின் தனிச் சிறப்புக் கோவைகள் - க² நி²

← த. வ. 87

## தனிச்சுர இசை:

= இன்னிசை (Melodic music), ஒற்றைச் சுரவரிசை இசை (Music in succession of single notes )
தென்னக இசையின் முக்கியமான தன்மை என்பது அது தனிச்சுர இசை(melody) அமைப்பை ஆதார மாகக் கொண்டுள்ளது. இவ்வமைப்பில் சுரங்கள் ஒன்றன்பின் ஒன்றாக ஒலித்து இன்னிசையாகின்றது (musical notes are rendered in succession). இது தென்னக இசைமுறை.

← தெ. இ. பக். 10, → **இன்னிசை**

## தனிச்சொல்:

= அடைநிலைக்கிளவி, அடை, அடைநிலை, தனிநிலை, விட்டிசை (detached foot) (பதாந்தம்)
பாடல் அடிகளில் அடங்கும் தனிச்சொல். இது அடிக்குள் அடங்கி அதன் ஒரு சீராகக் கணக்கிடப் பெறும். ஓசை நிறுத்தம் அமையுமாறு வரும் சொல்.
எடு:- நேரிசைவெண்பா, கலிவெண்பா மற்றும் சிந்துப் பாவில் வரும் தனிச்சொல்.
**அடிகளின் அகத்த தாகப் பெறுமே (சிந்துப்பாவியல் நூ. 23)**
**எ-டு:-**
**1. பழனம ருங்கணையும் – புலைப்**
**பாடியது கூரை வீடுதனில்**
**சுரையோ படர்ந்திருக்கும் – அதைச்**
**சுற்றிலும் நாய்கள் குரைத்திருக்கும் (நந். சரி. கீர்த்.)**
புலை, அதை - தனிச்சொல்
**2. வன்னிமரமும் மடைப்பளியும் சான்றாக**
**முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள் – பொன்னி**
**(சிலப். வஞ்சினமாலைக் கலிவெண்பா)**
**வண்டார் வளவயல்சூழ் மள்ளுவ நாட்டெங்கோமான்**
**தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி–கொண்டாடும் (நளவெண்பா)**
பொன்னி, கொண்டாடும் - தனிச்சொல்
**அகநிலை ஒத்தாழிசைக் கலிப்பாவின் உறுப்பாக தாழிசைக்குப் பின்னும் சுரிதகத்திற்கு முன்னும் பெரும்பாலும் வரும்.**
**(யா. வி. 60 உரை)**
(ஓசை நிறுத்தம் - விட்டிசை - விஸ்ராந்தி)

↑ ஓரடியில் அடிதோறும் வரும் தனிச்சொல்:-
**கற்றோர் அறியா அறிவினர் – கற்றோர்க்கு... (முருகு 133)**
**நேரிசை வெண்பாப் போன்று ஆசிரியப்பாவின் அடிகளில் தனிச்சொல்வர நக்கீரர் பாடிய புதுவடிவ ஆசிரியம்.**

← த. யா. வ. பக். 583

## தனி நடிப்பு நாடகம்: = தனியாட்டம்

"பலரைக் குறித்த ஒரு கதையை, ஒருவரே எல்லோரையும் போல நடித்து நடத்தும் நாடகமே தனி நடிப்பு நாடகம் ஆகும்"
**(விடுதலைக்குப் பின் தமிழ்மேடை நாடகங்கள் பக். 33)**
சிலப்பதிகார அரங்கேற்றுக்காதை மற்றும் கடலாடு காதையில் மாதவி ஆடிய 11 ஆடல்கள் மாதவி மட்டுமே, அனைத்துப் பாத்திரங்களாக ஆடிய தனி நடிப்பு நாடகம். கேரள மாநிலத்தில் ஆடப்படும் நங்கையர் கூத்து தனிநடிப்பு நாடகம்.
எடு:- கேரளத்து மார்க்கிசதி மட்டுமே எல்லாப் பாத்திரங்களையும் ஏற்று நங்கையர் கூத்தாக சிலப்பதிகாரத்தை ஆடுவது தனி நடிப்பு நாடகம்.
தனியாட்டம் x கூடியாட்டம்

## தனி நிலை: → தனிச்சொல்

## தனிநிலை ஓரியல்:

= தனிவாசிப்பு, தனி ஆவர்த்தனம், தனிமுழக்கு.
பாடல் முடிந்த பின் மத்தளத்தில் முழக்கப்படும் தனிமுழக்கு.
**... தாள ஓரியல், தனிநிலை ஓரியல் என்பனவும்... (சிலப். 3: 16 உரை)**

## தனிப்பாடல்:

பாடல் முழுவதிலும் ஒருவரே பேசுவதாக அமைவது (Individual Poetry)
எடு:- ஊர் சூழ்வரி

## தனி முழக்கு: → தனிநிலைஓரியல்

## தனி யாட்டம்: → தனி நடிப்பு நாடகம்

## தனி வாசிப்பு: → தனி நிலை ஓரியல்

## தனுக்காஞ்சி:

செவ்வழியாழ்த்திறம்
**குறண்டி.... தனுக்காஞ்சி... செவ்வழியாழ்த்திறமென்ப (பிங்க. 1384)**

# தா

## தாஅ வண்ணம்: = தாவு வண்ணம்

*இடையிட்டு வரும் எதுகையால் அமைந்த வண்ணப் பாடல்*

தாவு வண்ணம் இடையிட்டு வந்த எதுகைத்தாகும்.
(தொ. பொ. 1471)

தாவு வண்ணமாவது இடையிட்டு வந்த எதுகைத்தாவது
(வீர. சோ. யாப். 36)

## தாக்கு: *குறுந்தடி, குணில்*

தாக்கின் தாக்கு உறும் பறையும் (கம்ப. நாட்டு. 88)

## தாசரி தப்பட்டை:

*பண்டாரம், தாசரி ஆகியோரால் இசைக்கப்படும் சிறிய பறை. சேமக்கலம் (gong) மற்றும் சங்கு (conch) இத்துடன் இயக்கப்படும்.*

## தாசரி நடனம்: → தாதர் கூத்து

## தாசி ஆட்டம்: → சதிர்

## தாசியர்:

*கணிகையர்.*

*அரண்மனை நாட்டிய சாலையில் உள்ள நாட்டிய நங்கையர்*

மங்கலத்தாசியர் தன்கலன் ஒலிப்ப (சிலப். 6: 125)

## தாட்:

*இந்துத்தானிப் பெரும்பண். தமிழிசையின் 32 பாலைகள் (பெரும்பண்) போன்று இந்துத்தானி இசையில் '10தாட்' என்பது வழக்கில் உள்ளது.*

| தாட் | தென்னக இசை |
|---|---|
| 1) பைரவி | – மாயா மாளவ கௌளை |
| 2) பிலாவல் | – அரும்பாலை (சங்கராபரணம்) |
| 3) ஏமன் | – மேற்செம்பாலை (கல்யாணி) |
| 4) கமாஜ் | – செம்பாலை (அரிகாம்போதி) |
| 5) மார்வா | – கமனாசிரமம் / கமனப்பிரியை |
| 6) அசாவேரி | – படுமலைப்பாலை (நடபைரவி) |
| 7) பைரவி | – விளரிப்பாலை (தோடி) |
| 8) காஃபி | – கோடிப்பாலை (கரகரப்பிரியா) |
| 9) பூர்வி | – காமவர்த்தினி / பந்துவராளி |
| 10) தோடி | – சுபபந்துவராளி |

↑72 மேளகர்த்தாவில் வரும் 40 பகைமேளங்களில் ஒன்று கூட இந்த 10 தாட்களில் இல்லை. மேலும் இந்துத்தானி இசையில் 72 மேளகர்த்தா முறை பின்பற்றப்படுவதில்லை. 12 சக்கர முறையும் இல்லை.

## தாட்டு வரிசை: → தாண்டு வரிசை

## தாடனக்கை:

அவிநயக்கைகளுள் ஒன்று. வலக்கை இளம்பிறை யாகவும், இடக்கை பதாகையாகவும், மார்பிற்கு நேரே எட்டு விரல் உயர்த்திப்பிடிக்கும் அவிநயக்கை. (பரத. பாவ. 49)

← *செ. ப அ. 1847*

## தாடிச்சி:

*கூத்தாடிச்சி ; கூத்தாடிப் பிரிவினரின் மகளிர்*

← ம. த. பே. 110/I

## தாண்டக அடி:

ஒற்றுநீக்கி இருபத்தாறு எழுத்துகளுக்கு மேற் பட்ட பாடல் அடி.
(யா. வி. 95: 256)

← *செ. ப. அ. 1828*

## தாண்டகச் சந்தம்:

*சந்த அடியும் தாண்டக அடியும் விரவி வரும் சந்தப்பாடல்*

← *செ. ப. அ. 1828*

## தாண்டகப் பண்: → திருத்தாண்டகம்

## தாண்டகம்:

*அறுசீர் அல்லது எண்சீரால் நான்கடியாக வரும் யாப்பு. ஒற்று நீக்கி 26 எழுத்தின் மிக்க அடியான் வருவது*

*எடு:- அப்பரின் திருத்தாண்டகம் மற்றும் திருமங்கை யின் நெடுந்தாண்டகம் (எண் சீரடி)*

தாண்டகச் சதுர ராகும் அலர் புகழ் அரசும் (பெரியபு. குங்கு. 32)
தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்து
(திருமுறை கண்டபு. 40)
← யா. நூ 219. செ. ப. அ. 1828; தே.நே. 95/III ; 18/VIII; த. க. க. 36/III ; திவா. 1853; சூடா 10: 30

## தாண்டடைவு: → தவ்வடைவு

## தாண்டல் அடைவு: = தவ்வடைவு

நாட்டியத்தில் (கூத்தில்) அரைமண்டியிலிருந்து முன்னால் தாண்டிக்குதிப்பது; தெருக்கூத்திற்கே உரிய சிறப்பான குத்தடைவு மற்றும் தவ்வடைவு களில் இதுவும் ஒன்று.

→ தாண்டவம்

## தாண்டவம்: தாவல், தாண்டல், கூத்து; வன்மை யுற்ற ஆடல் வகை (virile dance) தவ்வி (தாவி), தாண்டி ஆடுவது.

தாண்டு > தாண்டவம்

ஈசுரன் தவ்வதாகும் ஈசுவரி திய்யதாகும் (மத் (10): 3)
தவ் + அது + ஆகும் - தவ்வதாகும்.
தவ்வதாகும் என்பது ஈசுவரனின் தாண்டவக் கூத்து.
தாள் தரை தாக்கத் தாண்டவம் தளிர்க்கும் (மத். பக். 27)
(கால் வழிப்பிறந்தது தாண்டவம்)
தாண்டி ஆடுவது - தாண்டல் அடைவு நிறைந்தது தாண்டவம்
தாவலும், ஆடலும், செலுத்தலும், தாண்டவம் (பிங்க. 3624)
தாண்டவக் கூத்துத் தனி நின்ற தற்பரம் (திருமந். 888)
.. தாண்டவம், கூத்தே, தாவல் (சூடா. 11: 14)
... தாண்டவம், நிருத்தம், நாட்டியம் என்னும் மூன்று கூறுபாட்டினும்
(சிலப். 3: 158– 9 உரை)
குதித்தல் - தாவுதல், தாண்டுதல், கூத்தாடுதல்;
தாண்டு – தாண்டவம் – கூத்து (தே.நே 95,3)
←த. க. க 152/I; மத் பக். 14; தே. நே 18/8

## தாண்டியாராஸ்:

குஜராத் மாநிலத்தில் ஆடப்படும் கோலாட்டம்.

## தாண்டு அணி: → தாண்டு வரிசை

## தாண்டு வரிசை:

= தாட்டு வரிசை, தாண்டு அணி.
இசைப்பயிற்சிகளுள் ஒன்று; கோவைகள் வரிசையில் வாராது, சகமா, ரிமபா போன்று தாண்டிச் செல்லும் வரிசையில் பயிற்சி செய்வது.

← இ த. சொ. பக். 10

## தாணு:

செவ்வழி யாழ்த்திறம்
குறண்டி... தாணு... செவ்வழியாழ்த்திறமென்ப (பிங்க. 1384)

## தாத்த சந்தம்:

வண்ணப் பாடலின் சந்தங்களுள் ஒன்று.
காற்றும் பாட்டரும் கூத்தனும் பார்ப்பும்
தூர்த்தனும் காழ்த்தலும் தாத்தவின் உதாரணம்
(வண்ணத். நூ. 22)

## தாத்தாச் சந்தம்:

வண்ணப் பாடலின் சந்தங்களுள் ஒன்று.
சாத்தா ஆற்றார் மாற்றான் வேய்ப்பூ
வாய்த்தோர் சீர்க்கோன் எனும் மூவிரண்டும்
தாத்தா என்னும் சந்தத்து தாரணம் (வண்ணத். நூ. 27)

## தாதக் கூத்து: = தாசரி நடனம்

(தாசரி - பார்ப்பனர் அல்லாத வைணவர்)

## தாதப் பலகை: → கஞ்சிரா

## தாதிரி:

வில்லுப்பாட்டில் போட்டி இட்டுப் பாடுதல்.
← செ. ப. அ. பிற். 308

## தாது:

1 = ஒத்து, கேள்வி, பண், பண்ணி, ஒற்று, பற்று, பயிர். சுருதி (drone).
தாது = கேள்வி (வெப். அக.)
தாழு மலர் வரி வண்டு தாது பிடிப்பன போல
(பெரியபு. ஆனாய. 23)
(தாது பிடித்தல் - அடிப்படைக்குரல் ஓசையைத் தொடர்ந்து ஒலித்தல்)
வண்டுதாது ஊதும் ஊரன் (ஐங். 89)
நறுந்தாது ஊதும் குறும் சிறைத்தும்பி (குறுந். 239)

போதும் நெறியனவே பேசிநின் பொன்தாது ஊதும் வண்டு.
(தொ. பொ. 95 நச்சர்)
தண் நறுங் கடம்பின் கமழ்தாது ஊதும் வண்ண வண்டு இமிர்குரல்
பண்ணை போன்றனவே (பரிபா. 14: 3 – 4)
... சுரும்பி இமிர் தாதுவொடு ... (பரிபா. 16: 14)
... சுனைமலர்த் தாது ஊதும் வண்டு ஊதல் எய்தா
(பரிபா. 17: 38)
நரம்பின் தீங்குரல் நிறுக்கும் குழல்போல்
இரங்கு இசை மிஞிறொடு தும்பிதாது ஊத (கலித். 33 : 22–23)
தாதுடன் உதைந்த மென் தழைச் சிறை வண்டினம்
(கல்லா 95: 19)
2. இசைப்பாடலின் இசைப்பகுதி (musical structure)
← த. க. க. 39/III

## தாதெரு மன்றம்:

ஆடுகளம்; (ஆயர்) குரவை முதலியன நிகழ்த்து மன்றம். சாணம் தெளித்துச் சமைத்த ஆடலிடம்

*என்பதால் தாதெரு மன்றம்.*

தாதெருமன்றத்து அயர்வர் தழூஉ (கலித். 103: 61)
காஞ்சித்தாது உக்கன்ன தாதெருமன்றத்து (கலித்.108: 60)
தாதெருமறுகின் மூதூர் ஆங்கண் (அகம். 165: 4)
தாதெருமறுகின் பாசறை பொலிய (புறம். 33)
ஆயர்பாடியின் தாதெருமன்றத்து (சிலப். 17 கருப்பம்)

← *செ. ப. அ. 1831; ச. பொ. க 284/III*

## தாந்தச் சந்தம்:

*வண்ணப் பாடலின் சந்தங்களுள் ஒன்று.*

வேந்தும் வேந்தரும் பாங்கனும் பாய்ந்தும்
சார்ங்கரும் சார்ங்கமும் தாந்தச் சந்தத்து
உதாரண மாமென் றுரைப் போர் பெரியோர். (வண்ணத். நூ. 42)

## தாந்தாச் சந்தம்:

*வண்ணப் பாடலின் சந்தங்களுள் ஒன்று..*

சேந்தா என்பதும் வாங்கார் என்பதும்
நான்றான் என்பதும் நேர்ந்தோ என்பதும்
சார்ந்தார் என்பதும் மாய்ந்தான் என்பதும்
தாந்தா என்னும் சந்தத் துதாரணம் (வண்ணத். நூ. 47)

## ாம்பிர சூடக்கை: → கோழிக்கை

## தாமரைவணக்கக்கை: = பதுமாஞ்சலி

*இணைக்கை வகையுள் ஒன்று. இரு கையையும் தாமரை வடிவில் கூட்டும் கை.*

"பதுமாஞ்சலியே பதும கோசிகம் என இருகையும் இயைந்து நிற்பதுவே..." (சிலப். 3: 18 அடியார்க்.)

## தாமரைக்கை: = பதுமம்

*அவிநயத்திற்குரிய ஆண்கைகளுள் ஒன்று.*

"முட்டி ... பதுமம்... ஆண்கை நவமாம்..." (சிலப். 3: 18 அடியார்க். அடிக்.)

## தாமரை மொட்டுக்கை:

= பதுமகோசிகம், பதுமகோசிகக்கை, கமல கோசிகம்.

*ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று.*

பதுமகோசிகம் – "பதும கோசிகம் பகருங்காலை, ஒப்பக்கைவளைத்து ஐந்து விரலு, மெய்ப்பட அகன்ற விதியிற்றாகும்" (சிலப். 3: 18 அடியார்க்கு. மேற்.)

## தாய்ப்பண்:

= பண், பாலை, மேளம், மேளகர்த்தா, ஜனகராகம், சனிகராகம், கர்த்தா (Generative).

*ஏறு நிரலிலும் இறங்கு நிரலிலும் ச ரி க ம ப த நி என்ற சுர வரிசை முறை மாறாது வரும் ஏழு சுரப்பண்.*

*எடு: செம்பாலை (அரிகாம்போதி)*

இதன் ஏறு நிரல் – ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ ப த$^{2}$ நி$^{1}$ ச்
இறங்குநிரல் – ச் நி$^{1}$ த$^{2}$ ப ம$^{1}$ க$^{2}$ ரி$^{2}$ ச

நிறை நரம்பிற்றே பண் எனல் ஆகும்.
குறை நரம்பிற்றே திறம் எனப்படுமே (திவா. 1893 பின்.102)

*நிறைநரம்பு - ஏழு நரம்புகளும் நிறைந்தது*
*குறை நரம்பு - ஏழுக்கும் குறைந்த நரம்புகளை உடையது.*

→ மேளம்; மேளகர்த்தா

## தாயி: → தானநிலை

## தாயிரா: = தப்ஸ், டேப்பு

*சலங்கைகள் கோத்த சிறுபறை. இசுலாமியப் பாணர்கள் (பக்கீர்கள்) பெரிதும் பயன்படுத்துவர்.*

... தாயிரா என்ற டேப்பை... (அறியப்படாத தமிழகம். பக். 116)

## தார்: தோற்கருவிகளுள் ஒன்று.

பம்பை, தார், முரசம் (கம்ப. பிரமாத். 5)

## தாரக்குரல்: → இரட்டித்த குரல்

## தாரசட்சம்: → இரட்டித்த குரல்

## தாரத்துள் தோன்றும் உழை:

*இணைமுறை (சட்சக்கிரமம், பஞ்சமபாவம்) என்ற ஏழன்முறை கூறுவது. வலமுறைத்திரியில் தார (நி$^{1}$) முதல் இணை(ஏழன்முறை) தொடுக்க முதலில் உழை (ம$^{1}$) கிடைத்து அவ்வாறே 6 முறை தொடுக்கக் கிடைப்பது செம்பாலை (அரிகாம்போதி).*

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 7 | | | | | 0 | 1 / | 2 | 3 | 4 | 5 | 6 |
| ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | | | | | 0 | 1 |

0 → 7; நி$^{1}$ ம$^{1}$ – தாரத்துள் உழை தோன்றுதல் (உழை–ம$^{1}$)
நி$^{1}$ம$^{1}$; ம$^{1}$ ச; ச ப; ப ரி$^{2}$; ரி$^{2}$ த$^{2}$; த$^{2}$ க$^{2}$
அதாவது – ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ ப த$^{2}$ நி$^{1}$ – செம்பாலை
தாரத்துள் தோன்றும் உழை (பஞ்ச. 17)
தாரத்து உழை தோன்றப் பாலையாழ் (பஞ்ச. 22)
(பாலையாழ் – வலமுறைத் திரிபில் தலைமையான யாழாதலால் சிறப்புக்கருதி செம்பாலைக்குப் பாலையாழ் என்ற பெயர்)

← *சிலப். 3: 39 - 41 அரும். மேற்.*

... தாரத்தில் எழும் உழை, பகர் உழையினுள் குரலுமாம் ...
(பிரபந்த தீபிகை. பா. 50)

தாரத்தில் எழும் உழை – நி$^{1}$ ம$^{1}$ (தாரம்–நி$^{1}$; உழை–ம$^{1}$)
உழையினுள் குரல் – ம$^{1}$ ச (குரல் – ச)

## தார நரம்பின் அந்தரக்கோல்:

*அந்தரக்கோல் என்பது தமிழிசையின் தலைமைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி)ப் பண்ணிற்கு வராத சுரங்கள்.*

*அவையாவன:* ரி$^{1}$ க$^{1}$ ம$^{2}$ த$^{1}$ நி$^{2}$

*எனவே தார நரம்பின் அந்தரக்கோல் என்பது வன்தாரம் - 'நி$^2$' (காகலிநிசாதம்)*

"... தார நரம்பின் அந்தரக் கோலைத்தாரமென்றார்..."

(சிலப். 3: 72 – 8 அடியார்க்.)

## தாரப்பண்:

*= மேற்செம்பாலை (கல்யாணம், கல்யாணி, கலியாணம், கலியாணி)*

*செம்பாலையின் (அரிகாம்போதி), தாரம்(நி$^1$) குரலாகப் பண்பெயர்க்க மேற்செம்பாலை கிடைக்கும். எனவே இப்பண் தாரசுரத்தால் தாரப்பண் என்று பெயர் பெற்றுள்ளது.*

ஒப்பு:– விளரி குரலாக விளரிப்பாலை.

*விளரி என்ற சுரத்தால் பண் பெயர்க்க விளரிப்பாலை கிடைத்ததால் விளரிப்பாலை (தோடி) என்று சுரத்தால் பெயர் பெற்றுள்ளது.*

...தாரம் குரலாக மேற்செம்பாலை என்னும் பண்ணை...

(சிலப். 8: 24 அரும்)

தாரம் குரலாயது மேற்செம்பாலை...

(சிலப். 17: (13) அடியார்க்.)

ஒப்பு : 103 பண் வரிசையில் 101வது பண் 'தாரப்பண் திறம்'

தாரம் பயின்று மந்தம் முரல் வண்டு (திருவாசக. 6: 36)

பாடுகின்ற பண் தாரமே... (தேவா. 3: 116: 3)

மேற்செம்பாலை தாரமுதல் என்பது (சிலப். 8: 25 அரும்.)

" தலையின தாரம், செய்யும் தாரம்" (மேலது மேற். நூற்பா.)

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| மேற்செம்பாலை | ரி$^2$ | | க$^2$ | | ம$^2$ | ப | | த$^2$ | | நி$^2$ | ச | |

## தாரபாகம்:

*= பின்னர்ப்பாகம், உத்தராங்கம்* (uppertetrachord)

ச ரி க ம ப த நி ச் *என்ற ஓர் இயக்கில்* (octave) *உள்ள பின்னர்ப் பாகமான* 'ப த நி ச்' *என்னும் பகுதி.*

வன்மையிற் கிடந்த தாரபாகமும் (சிலப். 3: 72)

தாரபாகமும் குரலின்பாகமும் நேர் நடுவண்கிளை கொள்ள நிற்ப முன்னர்ப் பாகமும், பின்னர்ப்பாகமும் (சிலப். 3: 72 – 8 அடியார்க்.)

*குரலின்பாகம் - முன்னர்ப்பாகம்* (lowertetrachord)

## தாரம்:

1. *இசையின் ஏழு சுரங்களுள் ஏழாவதான இறுதிச் சுரம் (நிசாதம் - 'நி')*

இளி தாரம் இயம்பிய வண்டுகள் (கம்ப. யுத்த. 971)

2. *மேல் இயக்கு, மேல் தானம் (தாரஸ்தாயி)* (upper octave)

மந்தர, மத்திமை, தாரம் இவை மூன்றில் (கல்லா. 21: 50)

*தாரம் - உச்சம், உச்ச நரம்பு*

3. *பண்களில் ஒன்று. மேற்செம்பாலை, கல்யாணி*

→ தாரப்பண்

4. *பண் ஆளத்தி செய்வதில் மேல் தானத்து (தாரஸ்தாயி) சுரங்களைக் கொண்டு ஆளத்தி செய்வது.*

வல்லிசைப்பெயரும்... யாழின் நரம்பும்... தாரம் என்ப.

(பிங்க. 3627)

5. *தேவதாருமரம்.*

## தாரம் குரலாகக் கோடிப்பாலை:

*இடமுறைத் திரிபின் தலைமைப் பாலையான அரும்பாலையில் தார (நி$^1$) சுரத்தை குரலாகக் கொண்டு (இறங்குநிரலில் - இடமுறையில்) பண்பெயர்த்தால் கோடிப்பாலை கிடைக்கும். (அதாவது ஏறுநிரலில்- வலமுறையில் அரும் பாலையின் வன்துத்தை(ரி$^2$)க் குரலாக கொண்டு பண் பெயர்ப்பதை ஒத்தது).*

தாரம் குரலாக ↓

| | | * | | * | * | | * | | * | | * | * |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அரும்பாலை | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ | ச் |
| கோடிப்பாலை | | ச | | ரி$^2$ | க$^1$ | | ம$^1$ | | ப | | த$^2$ | நி$^1$ |

அரும்பாலை (சங்கராபரணம்) – ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^2$ ச்

கோடிப்பாலை(கரகரப்பிரியா) – ச ரி$^2$ க$^1$ ம$^1$ ப த$^2$ நி$^1$

... தாரம் குரலாகக் கோடிப்பாலை ... (சிலப். 3:90 உரை)

## தாரம் குரலாகக் கோடிப் பாலைக்குத் தாரம் பெய்தல்:

*இது பெய்தல் முறை* (Method of Substitution of notes) *பற்றிக் கூறுவது. இடமுறைத் திரிபில் தலைமைப் பாலையாவது அரும்பாலை. தாரசுரத்தை குரலாகக் கொண்டு அரும் பாலையில் பண்பெயர்க்க கோடிப்பாலை கிடைக்கும் அதில் தாரம் (நி$^2$) சுரத்தை பெய்தால் கௌரிமனோகரிப்பண் வரும்.*

கோடிப்பாலை – ச ரி$^2$ க$^1$ ம$^1$ ப த$^2$ **நி$^1$**

கௌரி மனோகரி – ச ரி$^2$ க$^1$ ம$^1$ ப த$^2$ **நி$^2$**

... தாரம் குரலாகக் கோடிப்பாலைக்குத்தாரம் பெய்தும்...

(சிலப். 3: 90 உரை)

→ தாரம் குரலாகக் கோடிப்பாலை; பெய்தல் முறை

## தாரம் குரலாக மேற்செம்பாலை:

*வலமுறைத் திரிபில் தலைமைப்பாலையாவது செம்பாலை (அரிகாம்போதி). அதன் தாரம் (நி$^1$) குரலாகப் பண் பெயர்க்கக் கிடைப்பது மேற்செம்பாலை (கல்யாணி)*

தாரம் குரலாக ↓

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| மேற்செம்பாலை | ரி$^2$ | | க$^2$ | | ம$^2$ | ப | | த$^2$ | | நி$^2$ | ச | |

மேற்செம்பாலை (கல்யாணி) – ச ரி$^2$ க$^2$ ம$^2$ ப த$^2$ நி$^2$

... தாரம் குரலாயது மேற்செம்பாலையென வலமுறையே ஏழுபாலையும் கண்டுகொள்க... (சிலப். 17: (13) அடியார்க்.)

**தார முடிவுப்பண்:** = நிசாதாந்திய இராகம்
*ஏறுநிரலில் நடுத்தானத்து தாரத்தை (மத்திய ஸ்தாயி நிசாதம்) இறுதிச்சுரமாகக் கொண்ட பண்.*
எடு:–
(1) நாதநாமக்கிரியை – ச ரி க ம ப த நி – நி த ப ம க ரி ச நி

(2) புன்னாகவராளி – நி ச ரி க ம ப த நி – நி த ப ம க ரி ச நி

**தாரி:** தேவகாந்தாரி
*பண்களில் ஒன்று*
... உலகவர் பயிலாத் தாரியை (கல்லா. 95: 22)
நில உலகத்தினர் நன்கு பயிலாத தேவகாந்தாரி என்னும் பண்ணை (மேலது உரை)

**தாரை:**
*நீண்ட ஊதுகுழல்* (long brasstrumpet)
தாரை, பேரிகை பொங்கின (கம்ப. கடிமண. 41)
வழியும்... வாத்தியத் தொன்றும்... தாரை (பிங்க. 3628)
*சாந்திக்குந் தாரைக்கும் அய்யனுக்கும் இத்தனைக்கும் அமைஞ்ச பூமி (தெ. இ. க. 5 783 . த. க. சொ. 295)*

**தால்:** = தாலு, தாலம், நா, நாவு
1. *நாக்கு*
பச்சைத் தாலர வாட்டி (திருவாசக. 38: 4)
சத்தாதியை அறியும் தானம் செவி, தோல் கண்
அத்தாலும் மூன்றென்று அறி (உண்மை விளக்கம் 12)
தாலம், தரை, பனை, நா. உண்கலமே (திவா. 2069)
ஞாலமும்... நாவும் ... தாலம் (பிங்க. 3630)
தாலம், தாலு, நா எனச் சாற்றுவர் (திவா. 380)
2. *தாலாட்டு*
= சீராட்டு, ஓராட்டு, ரோராட்டு, லோலாட்டு, ஓல், ஆராட்டு, லாலி(தெ.வ.)
*தால் + ஆட்டு - தாலாட்டு*
*'தாலே லோ' என்று முடியும் ஒரு வகைப்பாட்டு.*
ஒப்பு : தாலப்பருவம் (பிள்ளைத்தமிழ்)
தாலப்பருவம் – தாலாட்டுப்பருவம்
மிடறும் தாலும் அண்ணமும் சிரமும் (திவா. 1886. பின் நூ.)
செங்கீரை, தால், சப்பாணி (இலக். வி. 806)
அஞ்சனவண்ணனை ஆய்ச்சி தாலாட்டிய செஞ்சொல் (பாசுரம். 1: 3: 10)
தாலாட்டு நலம் பல பாராட்டினார் (பெரியபு. திருஞான. 44)
...மணி தால் உறுத்த (கல்லா. 88: 21 – 22)
தால் உறுத்துதல் – தாலாட்டுதல் (செ. ப. அ. 1849)
"... ஏழாம் திங்களில் தாலப்பாட்டும்... (திவா. 2468)
ஓலுடன் நாட்டப் பாலுடன் உண்டு (இறை கள. 2 உரை)
*(ஓல் = தாலாட்டு)*
மன்னுபுகழ்க் கௌசலை – குலசேகர ஆழ்வார். இதுவே இலக்கியத்தில் பதிவு பெற்ற முதல் தாலாட்டு (மு. அ.கை. ப.)
மாணிக் குறளனே தாலேலோ
வைய மளந்தானே தாலேலோ (பெரியாழ் 4: 1)

**தாலம்:** → தால்

**தாலாட்டுப் பாடல்:**
கண்படை கண்ணிய கண்படை நிலையும் (தொ. புறத். 35)
*ஈரடிக் கண்ணிகளாக வருவது.*
எடு:–
1. கொல்லத்திலே யாவாரம் கொத்தமல்லி யாவாரம்
கொத்தமல்லி வித்துப்போட்டு கொலுசு பண்ணி வாராக
2. முத்துச்சிரிப்பழகா முல்லைப் பூப்பல்லழகா
வெத்துக் குடிசையிலே விளையாட வந்தாயோ
→ தால்[(2)]

**தாலு:** → தால்

**தாவில்:** → தவில்

**தாவுவண்ணம்:** → தாஅவண்ணம்

**தாழ்குரல்:**
= மந்தக் குரல் (மத்தியஸ்தாயிசட்சம்), சமன் இயக்கு குரல் ('C' of middle octave )
தாழ முழவமும் தண்ணுமைக் கருவியும் (பெருங்.1: 38: 175)
மந்தமுழவம் இயம்பும் வளவயல் நாவல் ஆரூரன் (தேவா. 7: 73: 1)
தாழ்குரல் தண்ணுமை... (சிலப். 3: 27)
மந்தமாகிய சுரத்தினையுடைய தண்ணுமையும் (மேலது அரும்.)
'இடக்கண் இளியாக வலக்கண் குரலாக நடப்பது தோலியல் கருவி' (சீவக. 675. நச். மேற்.)
*தண்ணுமையின் வலந்தலை சமன் இயக்குகுரலாக ஒத்து (சுருதி) சேர்க்கப்பட்டது. எனவே தாழ்குரல் தண்ணுமை.*

**தாழ்குரல் தண்ணுமை:**
*ஒரு கட்டை அல்லது* 1½ *கட்டை ஒத்து (சுருதி) டைய தண்ணுமை.*
*ஒப்பு : மந்த முழவம், தக்கு சுருதி தம்புரா, தக்கு சுருதி மிருதங்கம்*

**தாழ்தீங்குழல்:** = பெருவங்கியம்
*தாழ்ந்த ஓசையுடைய குழல், நெடுங்குழல், நீண்ட குழல், பெருங்குழல்* (Bass flute)
தண்ணுமைக் கருவியும் தாழ் தீங்குழலும் (மணிமேக. 2: 21)
பறையும் சிறுகுழலும் யாழும் பூதம் பயிற்றவே (சம்பந்தர்)
*(சிறுகுழல் என்றதால் பெருங்குழல் இருந்துள்ளது அறியப்படுகிறது.)*
தண்ணுமை முழவம் தாழ்தரு தீங்குழல் (சிலப். 22: 140)

**தாழ்பீலி:** *சிறு சின்னம்*
இணையில எழுந்த தாழ்பீலி எங்கணும் (சீவக. 2222)

**தாழிசை:** = இடை நிலைப்பாட்டு
1. *கலிப்பாவின் உறுப்புள் ஒன்று.*

↑ 'தாழிசை' யே பின்னர் கீர்த்தனைகளில் சரணம் என்று பெயர் பெறுகின்றது. தாழிசை மூன்றடுக்கிவரல் ஒத்தாழிசை; சரணங்களும் பெரும்பாலன மூன்றடுக்கியே வருகின்றன.

2. பாவினம் மூன்றனுள் ஒன்று [தாழிசை, துறை, மண்டிலம் (விருத்தம்)]

மூன்றாக அடுக்கி வரும் பா- கலித் தாழிசை (Ballad)

தாழ் + இசை > தாழிசை ; தாழ் = நீடல்

ஒப்பு : தாழ் பூங்கோதை தன்காற்சிலம்பு (சிலப். 16: 151)

தாழ்பூங்கோதை - நீண்ட மலர்மாலை

↑ ஒன்றுக்கு மேல் மூன்றடுக்கி, ஆறடுக்கி நீண்டு வருவதால் தாழிசை மற்றும் தழுவிய இசை – இசை தழுவி வரும் பாடல் (தாழிசை < தழிசை). பாவகை போன்ற இயல்பா அல்லாது, பாவினங்கள் என்பன இசைப்பாடல்கள். எனவே தாழிசை யாவது இசை தழுவிய இசைப்பாடல்.

**தாள்:** அடி, காலின் அடிப்பகுதி (foot), முதல், ஆதி.

இயல் இசை என்ற வரிசையில் முதலில் வருவது கூத்து கூத்துக்கு (ஆடல், நாடகம்) அடிப்படை தாளம். தாளம் என்பது தாள் - அடியை முதன்மையாகக் கொண்டது. எனவே தாள் (அடி) என்பது முதன்மை பெற்று 'முதல்' என்று பெயர் பெற்றுள்ளது.

ஆதி, தலை, தாள், அடி, முன், எழுவாய்
மோனை, பிராசயமும் முதல் எனப்படுமே (பிங்க. 2247)

**தாள அங்கம்:**

தாள உறுப்பு ; அங்கம் - உறுப்பு

தாளநெறிமுறை (தாளப்பிரமாணம்) களில் ஒன்று. இது ஆறு உறுப்புகளைக் கொண்டது.

(1) அலகு
(2) துரிதம்
(3) அரைத்துரிதம்
(4) குரு
(5) புலிதம்
(6) புள்ளடி

இவற்றுடன் பண்டையோர் கொண்ட ஒன்றன் நுண் பகுப்புகளான 1/2, 1/4, 1/8, 1/16 இந்நான்கினையும் சேர்த்து தாளம் பத்து உறுப்புகளைக் கொண்டதாகின்றது.

← இ. து. த. சொ. பக். 35, → அலகு

**தாளஅலகு:** இனம், சாதி

இவை ஐந்து வகைப்படும்

(1) மூன்றன் அலகு - திசுரலகு - /3 - தகிட
(2) நான்கன் அலகு - சதுசுரலகு - /4 - தகதின
(3) ஐந்தன் அலகு - கண்டலகு - /5 - தகதகிட
(4) ஏழன் அலகு - மிசுரலகு - /7 - தகிடதகதிமி
(5) ஒன்பான் அலகு - சங்கீர்ணலகு - /9 - தகதிமிதகதகிட

← த. க. க. 43/ III

**தாள அறுதி:**

தாளமுடிவு (end, close, termination)

அறுதி - முடிவு

... தாள அறுதியையுடைய (சிலப். 17: (26) அடியார்க்.)

**தாள இனம்:** → தாள அலகு

**தாள எடுப்பு:** = கிரகம்

தாள நெறிமுறை (தாளப்பிரமாணம்)களில் ஒன்று. தாளத்தின் ஓர் இடத்தில் பாட்டைத் தொடங்குவது. இது சம எடுப்பு, முன் எடுப்பு, பின் எடுப்பு என மூவகைப்படும்.

**தாள எண்ணிக்கை:** தாளமாத்திரை

ஓர் எழுத்து 1/4 மாத்திரை அளவில் 1 மாத்திரை = 1 எண்ணிக்கை கொண்டது.

எடு:- ஆதிதாளம் என்பது 8 எண்ணிக்கை கொண்டது.எனவே அது எட்டன் மட்டம் எனப்பட்டது. (4+4=8)

**தாள ஒத்து:** = தாளஒற்று

தாளம் ஒத்து வருவது (Agreement of time)

சதியும் சீரும் தாள ஒற்றின் பெயரே (திவா. 1769)
சதியும் சீரும் தாள ஒத்தின் பெயரே (பிங்க. 1466)

**தாள ஓரியல்:**

பல தாளச் சொற்களின் சேர்க்கை; பல தாளத்திற்கு முழக்கல்

...தாள ஓரியல், தனிநிலை ஓரியல் (சிலப். 3: 16 உரை)
ஓரி – சேர் (ஒருமி = ஒன்று சேர்) (வெப். அக.)

← த. க. க. 35/III

**தாள ஒற்று:** → தாள ஒத்து

**தாளக்கட்டு:**

தாளத்தை ஒத்து அமைத்தல் (Harmonious effects of drumbeat)

← செ. ப. அ. 1855

**தாளக்காலம்:**

தாளநெறிமுறை (தாளப்பிரமாணம்)களில் ஒன்று. இது தாளத்தின் காலக் கணக்கைக் குறிப்பது. அலகு, துரிதம், அரைத்துரிதம் முதலிய தாள உறுப்புக்களின் எண்ணிக்கை அளவே காலம் ஆகும்.

← இ. து த. சொ. பக். 34

**தாளக்கிரியை:**

தாள நெறிமுறைகளுள் (தாளப்பிரமாணம்) ஒன்று; தாளத்தைச் செயல்படுத்தும் முறை. தாளம் போடும் போது கையால் தட்டுதல், கையை வீசுதல், விரல்களால் எண்ணுதல் முதலிய செயல்களால் தாள எண்ணிக்கைகளைக் கணக்கிடுதல் தாளக்கிரியை எனப்படும்.

கிரியை - செய்கை, தொழில்

... கிரியைகளுடனும் பொருந்தும்... (சிலப். 6 : 35 அடியார்க்.)

கிரியை – தாளக்கிரியை (மேலது அடிக்.)

## தாளக்குறியீடுகள்:

அரைச்சுழி - அரைத்துரிதம் (அனுத்ருதம்) - ஓரெண்ணிக்கை - ஒரு தட்டு மட்டும்

சுழி - துரிதம் (த்ருதம்) - இரண்டு எண்ணிக்கை - ஒரு தட்டும் ஒரு வீச்சும்

கோல் - /- அலகு - தாள இனங்களைப் பொறுத்து மாறுவது.

/3 - மூன்றன் அலகு (திசுரலகு) - ஒரு தட்டும் இரண்டு எண்ணிக்கையும்

/4 - நாலன் அலகு (சதுசுரலகு)- ஒரு தட்டும் மூன்று எண்ணிக்கையும்

/5- ஐந்தன் அலகு (கண்டலகு)- ஒரு தட்டும் நான்கு எண்ணிக்கையும்

/7- ஏழன் அலகு (மிசுரலகு) - ஒரு தட்டும் ஆறு எண்ணிக்கையும்

/9 - ஒன்பான் அலகு (சங்கீரணலகு)- ஒரு தட்டும் எட்டு எண்ணிக்கையும்

← த.க.க. V/I; VIII/III

## தாளக்கூறுபாடு இருவகை:

மட்டதாளம் , சாய்ப்புத்தாளம் என்பன.

... இருவகைத்தாளக் கூறுபாடுகளும்... (சிலப். 3: 26 – 36 அரும்.)

... இருவகைத் தாளங்களும்... (சிலப். 3: 45 – 55 அரும்.)

பாணி என்றது– இருவகைத்தாள விகற்பங்களும் (சிலப். 3: 46 அரும்.)

...ஆறன் மட்டம் எட்டன்மட்டம் என்பனவும் (சிலப். 3: 16. அரும்)

**தாளச்சதி:** தாளச் சொற்கட்டு.

சதி - சொற்கட்டு

சதி > சதிர் - சொற்கட்டுக்கு ஆடும் நடனம் - சொக்கம் (சுத்தநிருத்தம்)

## தாளத் தந்தி: → ஒற்றுறுப்பு

## தாளத்திற்கான ஆடல்:

பாடல், பண் முதலியவைகளை விட, ஆடலுக்கு முதன்மையானது தாளம் ஆடல் என்பது தாளத்திற்கு ஆடுவதே (ஆடல்-தாளத்திற்கேற்ப உடல் அங்கங்கள் ஆடுதல், ஆட்டுதல்)

துடிச்சீர் நடத்த வளி நடன் (பரிபா. 22: 42)

ஒண்ணுதல் விறலியர் பாணி தூங்க (பொருந. 110)

(தூங்க = ஆட; பாணி தூங்க - தாளத்திற்கு ஆட)

பறைக்கண் பேய் மகள் பாணிக்கு ஆட (சிலப். 26: 208)

பேய்மகள் தாளத்துக்கு கவந்தம் ஆட (மேலது அரும்.)

அதிர்குரல்வித்தகர்ஆக்கிய தாள விதிகூட்டிய இயமென் நடைபோல (பரிபால. 10: 24 – 25)

நடுவூர் மன்றத்து அடிபெயர்த்தாடி ... (சிலப். 12: 11)

...அவிநயத்தோடே கூட்டித் தாளத்திற்கு ஒப்ப அடிபெயர்த்துக் காண்வர் வியப்ப ஆடி என்க (மேலது அடியார்க்.)

துடியின் அடிபெயர்த்துத் தோள் அசைத்துத் தூக்கி அடுநறா மகிழ்தட்ப ஆடுவாள்... (பரிபா. 21: 20)

பாடுவார் பாணிச்சீரும், ஆடுவார் அரங்கத்தாளமும் (பரிபா. 8: 109)

நிலவின் அன்னவெள்வேல் பாடினி முழவின் போக்கிய வெண்கை (பதிற். 61: 16– 17)

கோடியர் முழவின் முன்னர் ஆடல் வல்லான் அல்லன் (பதிற். 56: 2–3)

## தாளத்தின் உள் உறுப்புகள்:

இது மூவகைப்படும்

1) கோல் - லகு, அலகு - இதன் குறியீடு

2) சுழி - (த்ருதம்) துரிதம் - இதன் குறியீடு 2 எண்ணிக்கை

3) அரைச்சுழி (அனுத்திருதம்) அரைத்துரிதம் - இதன் குறியீடு - U - 1 எண்ணிக்கை.

கோல் மட்டும் தாள இனத்தைப் பொறுத்து எண்ணிக்கை மாறக்கூடியது.

கோல் - ஒரு தட்டுத்தட்டி அதற்குரிய எண்ணிக்கையுடன் (தட்டுடன் சேர்த்து) எண்ணுதல்

சுழி - ஒரு தட்டுத்தட்டித் திருப்புதல்

அரைச்சுழி - ஒரு தட்டுத் தட்டுதல்.

→ தாளக்குறியீடுகள்

## தாளத்துக்கு ஒக்கமிதித்தல்:

தாளத்திற்கு ஏற்பத் தரையில் மிதித்துத் தாளமிட்டு ஆடுதல்

...கோத்த கைகளில் அணிந்த வளைகள் ஒலிக்கின்ற தாளத்துக்கு ஒக்க மிதித்திட்டு... (சிலப். 17: (27) அடியார்க்.)

**தாளத்துள்ளுமம்:** = டேக்கா

தாளத்துள்ளல்; தாளச் சொற்கட்டின் இடையில் விட்டொலிக்கும் ஓசையே துள்ளும் ஓசை.

← த. க. க. 54/III

**தாளநெறி:** = தாளப்பிரமாணம்

தாளத்தின் பத்துவகை உயிர்நிலைகள்.

(1)காலம்

(2) உறுப்பு (அங்கம்)

(3) செய்கை (கிரியை)

(4) எடுப்பு (கிரகம்)

(5) இனம் (சாதி)

(6) வகை (யதி)

(7) தாளக்கட்டு (இலயம்)

(8) களை

(9) நெறி (மார்க்கம்)

(10) விரிவாக்கம் (பின்னல் - பிரஸ்தாரம்)

← தெ. இ. பக். 49

## தாளம்:

= பாணி, தூக்கு, சீர், ஒற்று, ஒத்து, சதி, கொட்டு,

இலயம், கிட்டி, பாண்டில், கஞ்சம் (tempo, time-measure)
தாள் = கால், அடி; தாள்> தாளம்
**ஆடுபவர் காலால் தட்டும் காலக்கணிப்பு (தே. நே. 24: 8)**
1. இசையின் காலக்கணக்கு; பாட்டின் நடையை நிலை நிறுத்துவதால் பாட்டிற்கும் அனைத்து வகை முழவுகட்கும் தாளம் அடிப்படையாய் நிற்பது.
ஒவ்வொரு தாளமும் குறிப்பிட்ட தட்டுதல் (beat) (கொட்டுதல்) கொண்டது. தாளமுழக்கு என்பது தட்டுதல் (beat) அல்லது வீசுதலாகவும் (rest) கணக்கிடப்படலாம் (Drumming is beating and resting)
**குறக் குறுமாக்கள் தாளம் கொட்டும் (நற். 95: 6)**
**பாடுவார் பாணிச்சீரும் ஆடுவார் அரங்கத்தாளமும் (பரிபா. 8: 109)**
*(பாணிச்சீர் - கையால் இடும் தாளம்; அரங்கத்தாளம் - காலால் இடும் தாளம்)*
**அதிர்குரல் வித்தகர் ஆக்கிய தாள**
**விதிகூட்டிய இயமென் நடைபோல (பரிபா. 1024 – 25)**
2. ஓர் இசைக்கருவி
தட்டழி, மத்தளி, கரடிகை, தாளம்
(TAS 1:P1-14 ; த. க. சொ. 296)
மத்தளம் எட்டும் தாளம் ஒன்றும்
(CHEN.21 P.425-28; த. க. சொ. 144)
**கல்லவடம்... தாளம் (தேவா. 338: 7)**
**கொக்கரை, தாளம்... (தேவா. 66: 9)**

## தாளம் சொல்லுதல்: ஆடலில் சுரக்கட்டுபாடுதல்

## தாளநடை நான்கு:

தாளம் நடைபெறும் காலக்கணக்கு. இது தாளத்தின் நடைவேகத்தைக் குறிப்பது.
1) முதல் நடை - விளம்பம், சவுக்கம் - முதல்காலம்
2) வாரநடை - மத்திமகாலம் - இரண்டாம்காலம்
3) கூடைநடை - துரிதகாலம் - மூன்றாம்காலம்
4) திரள்நடை - அதிதுரிதகாலம் - நான்காம் காலம்

## தாளம் போடுதல்:

= ஒற்றறுத்தல், வட்டித்தல், வட்டணை, தட்டல்
பாடலுக்கோ, தனித்தோ தாளமிடுதல்.
**வட்டித்தல், ஒற்றறுத்தல், வட்டணையுடனே மற்றும் தட்டல் என்று இந்நான்கும் தாளம் போடுதலின் பெயரே. (சூடா. 9: 54)**

## தாளம் முப்பத்தைந்து:

தாளவகை அதாவது இயல்பான தாளங்கள் ஏழு மட்டுமே. அவை ஐந்து தாள இனங்களுடன் உறழ்ந்து 35 தாளங்களாகும் (7x5=35) (Derived talas)

## தாளமார்க்கம்:

தாளநெறிமுறை ; தாளப்போக்கு (தாளச்செலவு)
மார்க்கம் - வழி, போக்கு, செலவு

## தாள மாத்திரை:

தாளத்தின் கால அளவு
ஒரு குறில் சுரம் - 1/4 மாத்திரை ;
ஒரு நெடில் சுரம் - 1/2 மாத்திரை
எடு:- ஆதிதாளம் (எட்டன் மட்டம் - சதுசுர திரிபுடை) - 8 மாத்திரை

## தாள மாலை: = தாளமாலிகை

பல தாளங்களிலும் ஒரே பண்ணிலும் அமைந்த பாடல்.

## தாளமில் உரு:

= சுத்தாங்கம், தொகையறா, விருத்தம், சுலோகம்
தாளத்துணையின்றிப் பாடலை மட்டும் பாடுதல்.

## தாளவகை:

தாளம் ஏழு வகைப்படும்:-
(1) துருவம்
(2) மட்டியம்
(3) உருவகம் (ரூபகம்)
(4) செம்புடை (சம்பை)
(5) திரிபுடை
(6) அடதாளம்
(7) ஒற்றை (ஏகம்)

## தாள வாசிப்பு முறை:

இது இரு முறைகளில் நடைபெறும்.
1. பாடலின் நடைக்கு ஏற்ப அதே நடையில் தாளம் முழக்குவது; இது பொதுவான முறை.
2. பாடலின் நடை (காலம்) எப்படி இருப்பினும், மெது நடை (விளம்ப காலம்) யில் தாளம் முழக்குவது இது சிறப்பான தனிமுறை.
**அதிர்குரல் வித்தகர் ஆக்கியதாள**
**விதிகூட்டிய இயமென் நடைபோல (பரிபா. 10: 24 – 25)**
**"இயங்கள் ஒன்றற்கொன்று கூறுவேறுபாடுடைய வேனும், விளம்பித நடையுடைய தாளகதியால் மென்னடைய வாய்ச்செல்லும் (மேலது உரை)**

## தாளப்பிரிவுகள்:

பண்டைத்தாளப் பிரிவுகள் நான்கு.
கொட்டு, அசை, தூக்கு, அளவு என்பன.
**கொட்டும், அசையும், தூக்கும், அளவும் ஒட்டப்புணர்ப்பு பாணியாகும். (சிலப். 3: 16 அடியார்க்.)**
**கொட்டும், அசையும், தூக்கும் அளவும் என இவை (சிலப். 14: 150 அடியார்க்.)**
1) கொட்டு - 1/2 மாத்திரை - வடிவு - க
2) அசை - 1 மாத்திரை - வடிவு - எ
3) தூக்கு - 2 மாத்திரை - வடிவு - உ
4) அளவு - 3 மாத்திரை - வடிவு - ஃ
**"ககரம் கொட்டே, எகரம் அசையே, உகரம் தூக்கே, அளவே ஆய்தம் – மேலது"**

## தான்தோன்றிச்சுரங்கள்:

= பரிவார சுரங்கள், அந்திய ஒலிகள், சுயம்பு சுரங்கள் (Upperpartials, Overtones). இசைத் தந்திகளை (நரம்பு) மீட்டி நிறுத்தும் போது அவை ஒலித்து நரம்பு அசைவுகள் படிப்படியாகக் குறைந்து ஓயுங்கால், தந்திகளில் இருமடி, மும்மடி என மடிகண்ணிகள் (loops) உருவாகித் தானாகவே புதிய சுரங்கள் தோன்றும். இவையே தான்தோன்றிச் சுரங்கள்

← ப. இ. இ. 84; சங்கீத ஒலி நூல். பக். 47 ; Ox. con. Dic. of music P. 565

## தானக்கோல்:

யாழ் நரம்புகளைத் தெறிக்கப்பயன்படும் கருவி.

... விரல் கவர்பு இசைக்கும் கோல் (கலித். 9)

நரம்பு ஏழும்... தானக்கோலில் அகப்பட்டு (மேலது உரை)

## தானகம்:

1. பண் விரிவு (Elaboration of a tune) (பரத. ஒழிபு. 44)

2. கூத்து வகையுள் ஒன்று

கரகரணம் தானகமே சுத்தசாரி (திருவிளை. கான்மா. 8)

## தானச்சந்தம்:

வண்ணப்பாடலினுள் வரும் சந்தங்களுள் ஒன்று.

காதும் சூதரும் பாதமும் கேள்வியும்
சார்கணும் கூர்முளும் மான்மியும் தேன்வியும்
மாண்மனும் கூன்விலும் ஆன்மரும் மான்வினும்
தானச் சந்தத்து தாரண மாமே (வண்ணத். நூ. 60)

## தானச்சொற்கள்:

தானம் (மத்திமகாலம்) பாடுதல் என்பது ஆளத்தியின் ஒரு பகுதி. இதற்குப் பயன்படும் எழுத்துக்கள் மவ்வும், தவ்வும், நவ்வும்

தானம் இசைத்தலில் இம்மூன்று எழுத்துக்களையும் புணர்ந்து 'ம்ந', 'ம்த', 'ம்தந', ஆநந்த , அம்தநம், தநம், தாநம் என்றெல்லாம் இசைப்பது வழி வழி வருவது.

தானத்தின் பல்லோசைகள் :

தநம் ம் தநம் அம்தநம்
தாநம் ம்தாநம் அம்தாநம்
தநம் தாநம் ம்தாநம்
தாநம் தநம் ம்தாநம்
நந்தம் அநந்தம் தாஆநந்தம் மற்றும்
அ, நம், தம், த, தொம்
அ - னம் - தம்
நம் - தா - தனம் - தா - ஆனம் தம்தா
தா நம்தா, நம்த, நம்த, அநம்த, தொம்த, நம்தா

→ தானம்[4]

## தானசாதி:

பாடல்களில் அமைந்த குறில்களின் அளவு.

## தானசுரம்: = கோல், பாலை

தானநரம்பு; ஒரு தானத்தில் (octave) உள்ள 12 சுரங்களும் தானசுரங்கள் ஆகும். அவையாவன:

ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$

## தானதாயீ:

அரங்கிசையில் ஒத்து (சுருதி) அளிக்கும் முன்னிலை வாத்தியம்

## தானநிலை:

= இயக்கம், வட்டம், தாயி, தானம், மண்டிலம், நிலை, சப்தகம் (Voice Register, Octave)

வலிவு, மெலிவு, சமன் என்பன.

வலிவும், மெலிவும் சமனுமென்று சொல்லப்படா நின்ற தானநிலை... (சிலப். 3: 93 – 14 உரை)

கேள்வியைச் சுருதி என்றும், நிலையை 'ஸ்தாயி' என்றும் மொழிபெயர்த்திருத்தல் காண்க. (தே.நே. 303/IX)

குழல் ஏழதனை ஒன்றினுக்கு ஏழென வீணை பதித்துத் தானம் தெரிக்க (கல்லா. 19: 34 – 35)

## தான நிலைக் கோல்: → புரிநரம்பு

## தான வண்ணம்: = தானவர்ணம்

இசைப்பாடல் வகையுள் ஒன்று. இது இரண்டாம் காலத்தில் (மத்திமகாலம்) அமைந்து மூன்று நடைகளையும் உடையதாக விளங்கும். எடுப்பு, தொடுப்பு, முடிப்புக்கு மட்டுமே பாடல் பகுதி உடையது. பாடலில் சுரத்தானக் கோப்புகளையும் தாளத்தானக் கோப்புகளையும் சிறப்பாக அறிவித்தற்கெனறே இயற்றப்பட்ட இசை உருக்கள் இவை.

← த. க. க 106/IV

## தானவர்ணம்: → தானவண்ணம்

## தானவாத்தியம்:

அரங்கிசையில் ஒத்து (சுருதி) வழங்கும் இசைக்கருவி.

## தானம்:

1. வாய்ப்பாட்டு உள்ளோசைகள் (கமகங்கள்)

2. மத்திமகால ஆலாபனை; மத்திமகாலம் பாடுதல். தானம் பாடுதல், பல்வேறு தான கதிகளைப் பாடுவதற்குத் துணை செய்கிறது.

3. தானம் – தானநிலை

4. தானம் (பாடுதல்)

தானம் என்ற சொல்லின் வகைகளைப் பெரிதும் வைத்து ஒரு பண்ணில் மத்திமகாலத்தில் இசை பாடுவது. பண்ஆளத்தி (இராக ஆலாபனம்) முடித்தபின்பு இரண்டாம் காலத்தில் பாடப் படும் இசைவடிவம்.

தானம என்ற சொல்லின் விரிவு :-
தானம் — தா ஆனம் - தா அஅனஅஅம்அம் - நம்தா ஆஆனனம் முதலியன.
வீணையின் மெட்டுக்களும் அவற்றை ஒட்டிய பள்ளங்களும் தானம் இசைக்க மிக ஏற்றவை.
நின்றார்ந்த மந்நகரம் தவ்வொடு (பஞ்ச. 46)
த, ன, ம் (த, ந, ம்) என்ற எழுத்துக்களின் பல்வேறு பின்னல்களுடன் சுரம் பாடுதல் தானம் ஆகும்.
← த. க. க. 60/III

**தானம் பாடுதல்:** = மத்திமகாலம் பாடுதல்
தாளத் துணையின்றி இரண்டாம் காலத்தில் (medium tempo) பண்பாடும் முறையுள் ஒன்று. தானம் என்ற சொல்லைப் பல்வேறு முறைகளில் பிரித்துத் தாள அளவுகட்கு உட்படுத்திப் பாடுதல் இராகம், தானம், பல்லவி பாடுவதில் பண் ஆளத்தி (ஆலாபனை) செய்து தானம் பாடித் தனிப்பெரும் பல்லவி பாடுதல் இசைமரபு. தானம் பாடுதல் யாழ் இசையிலிருந்து பிறந்தது.
← த. க. க 60 - 61/III,→ தானம், தானச்சொற்கள்

**தானயாழ்:**
யாழ் வகையுள் ஒன்று. (பெருங். உஞ்சை. 35: 5)

**தானாச் சந்தம்:**
வண்ணப்பாடலில் வரும் சந்தங்களுள் ஒன்று.
தாதா என்பதும் போகார் என்பதும்
மேவான் என்பதும் ஓர்பூ, என்பதும்
கூர்வேல் என்பதும் சேர்மான் என்பதும்
கேண்மோ என்பதும் மான்வா என்பதும்
மாண்மான் என்பதும் கூன்வாள் என்பதும்
வான்மேல் என்பதும் தேன்வீண் என்பதும்
தானாச் சந்தத் துதாரண மாமே (வண்ணத்தி. நூ.67)

# தி

## திக்கிராந்தம்:
*கூத்துள் ஒருவகை.*
ஏற்ற திக்கிராந்தம் ஆதியாம் (திருவிளை. கால்மாறி. 12)

## திசுரம்(திஸ்ரம்): → மும்மைநடை

## திடிமம்:
*பறை வகையுள் ஒன்று.*
சீர் முழவம், பேரி, திடிமம், ஒலியார் தக்கை
(இலஞ்சி. முருகனுலா. 127)
*← செ. ப. அ பிற் 310*

## திடும்:
*பறை வகையுள் ஒன்று.* (A kind of kettle drum)

## திண் கோல்: → புரிநரம்பு

## திண்டி: = படகம், பணவம், ஆனகம்
*தம்பட்டம்*
பணவம், திண்டி, ஆனகம் படகமுப்பேர் (சூடா. 7: 39)

## திண்டிமம்: = டிண்டிமம்
*பறைக்கருவியுள் ஒன்று.*
*ஆசுகவிப்புலவர்கள்தம்புலமைக்கு அடையாளமாக திண்டிமம் முழக்கும் உரிமையுடையவர்கள். அருணகிரியார் இவ்வுரிமை பெற்றிருந்தார்*
பண்தரு பெருங்கவிப் புலமைக்கு நீ சொன்னபடி திண்டிமம் முழங்க.
(திருச். முருகன் பிள்ளைத் தமிழ். சப்பா. பரு. 2. (பகழிக்கூத்தர்)
பாவாணர் மங்கலக் கவிமொழி பாடிப் பரிந்து திண்டிமம் முழக்க
(மேலது. சிறுபறை. 4)
*← த. ப. ப. வ. 278/*III

## திணை: *பாட்டுச் சூழல்* (theme)
*ஐவகை நிலனும், காலமும் உயிரிகளும், வழக்கும் ஏனைய நிலப் பொருட்களும் திணைத் தொகுதி (core)யாகக் கொள்ளப்பட்டு 'அதன்மீது இலக்கியம் படைக்கத் திணை என்ற உத்தி கையாளப்பட்டது.'*
... பாட்டுச் சூழல், திணை எனவகுக்கப் பெறலாயிற்று
(த. வீ. க. பக். 266)
திணை = ஒழுக்கம் (தொல். அகத். 5. நச்சர்)
பொதுக்கருத்து அல்லது உள்ளடக்கம் (இளம்)
"... சங்கநூல்களில் திணை என்ற சொல் குடி அல்லது குழுமம் என்பதைக் குறிக்க உபயோகிக்கப்பட்டுள்ளது" (ப. த. நா. 156)
*← புறம். 24, 27, 159, 373; பதிற்.14,31, 72, 85; குறுந்.45*

## திணைநிலைவரி:
*அகப்பாவகையது; ஐந்திணைச் செய்திகளை காமக் குறிப்புத் தோன்றப்பாடும் பாவகை.*
திணை நிலைவரியும் இணைநிலைவரியும் (சிலப். 10: 12 கட்டுரை)
சிலப். 7: (17) – (23) இவை ஏழும் திணை நிலைவரி (அரும்)
மற்றும் 7: (31) – (36) – இவை திணை நிலைவரி (அரும்)
எழுவகை நிலத்தினும் எய்திய வரிக்கும் (சிலப். 14: 153)
... ஆற்றுவரி... திணைநிலைவரி... என்பனவாம் (மேலது அரும்)

## திணைப்பாட்டு:
எடுத்த திணைக்குரிய தொழிலைப் பொதுப்படக் கூறும் பாடல்.
(இலக். விள. 603 உரை)

## தித்தி:
1. *தாளச்சதி*
தித்தி அறுத்தும் (திருப்பு. 417)
2. *துருத்தி*
*குழல் கருவிகளுள் ஒன்று.*
→ துத்தி
தித்தி சிறுமுகவீணை (குற்றாலத். தல. தருமசாமி. 54)
கூறு தித்திக்காரனையும் (விறலி விடு. 288)
"1011 கன்னிமாஸம் 9 – தஞ்சாவூர் நின்னு வன்ன நட்டுவன் வடிவேலுவினும், சின்னய்யாவினும், தித்திக்காரன் பழனியாண்டி என்னவனும் கூடெ இனா மாயிட்டு 700 ரூபாயும்..."
–ஸ்ரீ சுவாதித்திருநாள் பக். 157 (சூரநாடு குஞ்சம்பிள்ளை)
(கொல்லம் ஆண்டு 1011 = கி.பி. 1836)

## திதலை: → துத்தி

## திபதை: = திபிதை, துவிபதை
*இரண்டடிக் கண்ணி* (Distich, Couplet)
*நாடகத்தில் வாதிடும் பாடல் கூறு.*

வணணசசவ்கை ஏறி வந்தான்

(பஞ்சரத்தினமாலை. தொட்டிக்கலை சுப்பிரமணியனார்)

எல்லா வல்லமையும் செய்ய உரியோர் – இவர்

கல்லாக்கலைகள் எல்லாம் சுற்ற பெரியோர்

(இ. நா. கீ. 4வதுகாண்டம்)

← செ. ப. அ. 1878

## திபிதை: → திபதை

## திமிதம்: குதித்தாடல்

கூத்தரின் திமிதம் இட்டு (கம்ப. சேதுப. 43)

## திமிரி:

நாகசுரவகையுள் ஒன்று. நீளம் குறைந்தது. ஒத்து (சுருதி) அளவு கூடியது. ஒலி அளவு உயர்ந்தது.

திமில் = பேரொலி

திமில் > திமிர் > திமிரி

← த. க. க. 62/III

## திமிலை:

தோற்கருவிகளுள் ஒன்று. ஒரு முக முழவு.

சல்லரி திமிலை என்ப (சூடா. 7: 40)

சல்லரி, திமிலை (பிங்க. 1514)

பேரிகை படகம்... திமிலை... (சிலப். 3: 27அடியார்க்.)

சிவிகையும் திமிலையும்... (தெ. இ. க. 3 89, த. க. சொ. 299)

சண்டை ஆறும் திமிலையொன்றும்

(CHEN. 21. P. 425 – 28; த. க. சொ. 144)

## திரச்சீனமுகம்:

நாணத்தால் தலையாட்டும் அவிநயமுக வகை (சது. அக.)

## திரள்: = அதிதுரித காலம்

திரள் நடை; இயக்கம் நான்கனுள் ஒன்று; மிக முடுகிய நடையுடையது; நான்காம் காலம்; பாடல், தாளம் முதலியன இசைக்கப்படும் வேகத்தைக் குறிப்பது.

திரள் மிக முடுகிய நடையினையுடைத்தாகலானும்

(சிலப். 3: 67 அரும்)

## திருப்பாட்டு: → சுந்தரர் தேவாரம்

## திரை இசை:

திரைப்படத்தில் வரும் பின்னணி இசை மற்றும் பாடல்களைக் குறிப்பது. தொடக்கக் காலத்தில் (1930) திரைக்கு வந்த நடிகர், இசையாளர் முதலியோர் நாடகத்திலிருந்து வந்தவர். எனவே அப்போதைய திரை இசை செவ்வியல் வடிவமாகவே இருந்தது. நாட்டுப்புற இசையும், இந்துத்தானி இசையும் தமிழ்த்திரை இசையில் செல்வாக்கு அடைந்தன. ஐரோப்பிய இசை, அராபிய இசை, வட இந்திய இசை மற்றும் ஜாஸ், ராப், ரெகே போன்ற ஆப்பிரிக்க இசை முறைகளும் தற்காலம் திரையிசையில் கலப்புற்றுள்ளன. திரையிசையில் ஒரு பண் அடிப்படையில் பாடல்கள் இசையமைக்கப்பட்டாலும் பண்ணிற்குப் புறம்பான அன்னிய சுரங்களை இனிமைக்காகக் கலந்து இசையமைப்பது என்ற முறையும் உள்ளது.

## திரைச்சீலை: → எழினி

## திரைத்துப் பாடுதல்:

திரும்பத்திரும்ப நீட்டிப் பாடுதல்

திரைத்துப் பாடித் திரிதரும் செல்வரே (தேவா. 168: 6)

திரைத்தல் = அலை எழுதல் (to roll or rise as waves)

திரைத்தெழுந்து... வீழ்வ தேய்க்கு மறிகடலே

(கம்ப. கடல்காண். 8)

## திராடம்:

பாலையாழ்த்திறத்துள் ஒன்று.

தக்கராகம்... திராடம்... பாலையாழ்த்திறமென்ப... (பிங்க. 1381)

## திரிகை:

1. இடக்கை மேளம் (யாழ் அக.)
2. அங்கக்கிரியை பதினாறுள் ஒன்று.

அங்கக்கிரியை பதினாறாவன:-

சரிகை... திரிகை... என்பன (சிலப். 3: 13 அடியார்க். அடிக்.)

## திரிகோணப்பாலை:

பாயப்பாலை நான்கனுள் ஒன்று(Triangular Representation)

... ஆயப்பாலை, சதுரப்பாலை, திரிகோணப்பாலை, வட்டப்பாலை,

(சிலப். 17: (13)அடியார்க்.)

ஒரு முக்கோணத்தைப் பன்னிரண்டு ஓரை (இராசி) களுக்குப் பன்னிரண்டு பிரிவாகப் பிரித்து, பன்னிரு தான சுரங்களைக் குறிப்பிட்டு, அவற்றின் மூலம் பண் உருவாகும் முறையை விளக்குவது.

← த. இ. பக். 257 - 58

## திரிசிர சாதி: = திரிசிரம், திரிசுரம்

திசுரசாதி; தாளத்துக்குரிய சாதி ஐந்தனுள் மூன்று எழுத்துக் (அக்கரம்) காலங் கொண்ட பிரிவு

(பரத. தாள. 47 உரை)

திரிசிரம் < திரிசுரம் (மூன்றுசுரம்)

## திரி சுர நடை: → மும்மை நடை

## திரி சூலக்கை: → உன்னம்

## திரிபங்கம்:
மூன்று வளைவுகளை உடலில் கொண்ட ஒரு நாட்டிய அவிநயம்.

## திரி பதாகக்கை: → முக்கொடிக்கை

## திரி பதாகை: → முக்கொடிக்கை

## திரி பதாகம்: → முக்கொடிக்கை

## திரிபதை: = திரிபாதம்
மூன்றடியுடைய இசைப்பா. இசைப்பாக்கள் ஒன்பதுள் ஒன்று.
"செப்பரிய சிந்து, திரிபதை... இசையின்பா...
(சிலப். 6: 35 அடியார்க்.)
செப்பிய, சிந்து, திரிபாதம்... இன்னிசையின் பா (பஞ்ச. 87)
(பாதம் - செய்யுள் அடி)

## திரிபாதம்: → திரிபதை

## திரிபாலைத்திறம்:
பாலையாழ்த்திறம் (பு. வெ. ஒழிபு. 15 உரை)

## திரிபுச்சம்: = திரியுச்சம்
இசைக்குரிய உள்ளோசை (கமகம்) பத்துள், மும்மூன்று சுரமாக விரைந்து அடுக்கிப்பாடுவது. (பரத. இராக. 24 உரை)
← செ. ப. அ. 1892

## திரிபுடை தாளம்:
ஏழு தாள வகையுள் ஒன்று. இத்தாளம் ஐந்து தாள இனங்களுடன் சேர்ந்து ஐந்து திரிபுடை தாளங்களாகின்றன ஓர் அலகும் இரண்டு துரிதமும் என்ற உறுப்பு (அங்கம்) களைக் கொண்டது.

இதன் உறுப்புகள் | 00

1. மூன்றன் (திசுர) திரிபுடை - $|_3 00$ = 7
2. நாலன் (சதுசுர) திரிபுடை (ஆதி) - $|_4 00$ = 8
3. ஐந்தன் (கண்ட) திரிபுடை - $|_5 00$ = 9
4. ஏழன் (மிசுர) திரிபுடை - $|_7 00$ = 11
5. ஒன்பான் (சங்கீரண) திரிபுடை - $|_9 00$ = 13

←பரத. தாள. பக். 22 ; செ.ப.அ. 1893

## திரிமாத்திரை:
துணைத்தாளங்கள் ஐந்தனுள் ஒன்று (பரத. தாள. 3)

## திரியங்கி:
மூன்று அடிப்பாடல் இசை நாடகங்களில் சுவைமிக்க பகுதிகளில் அவிநயம் செய்வதற் கேற்பப் புனையப்படும் பாடல்.

## திரியுச்சம்: → திரிபுச்சம்

## திரிலிங்கம்:
அவிநயங்களுள் ஒன்று (பரத. பாவ. 36)

## திருஇருக்குக்குறள்:
ஓரடி இரு சீராக நாலடியான் வரும் செய்யுள். திருஞானசம்பந்தர் பாடிய புதிய யாப்பு. குறிஞ்சிப் பண்ணில் பாடியது. ஒன்றாம் திருமுறை திருவிடை மருதூர், திருஅன்னியூர், திருஆரூர், திருப்பிரம்மபுரம், திருஆலவாய், திருமுதுகுன்றம், திருவீழிமிழலை ஆகிய பதிகங்கள் இந்த யாப்பில் அமைந்தவை. இதைப் பிற்காலத்தார் வஞ்சித் துறை என்பர்.

எடு:– வாசி தீரவே
காசு நல்குவீர்
ஈசன் மிழலையீர்
ஏசலில்லையே (தேவா. 1 திருவீழி. 1)

## திரு உந்தியார்:
1. உந்தி பறத்தல் என்பது மகளிர் பாடி ஆடும் ஒரு வகை விளையாட்டு. கைகள் இரண்டையும் மேலே தூக்கி இரு மருங்கும் நீட்டி வானத்தில் பறப்பது போல இரு கால்களைச் சேர்த்துப் பெருவிரல் நுனியில் நின்று கொண்டு மகளிர் பாடி ஆடும் ஓர் ஆட்ட வகை.
பேதையர் விரும்பி ஆடலும்... உந்தியாகும்... (பிங்க. 3196)
எடு:–
நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று உந்தி பறந்த ஒள்ளிழையார் சொல்... (பாசுரம் 317)
பெரியாழ்வார் திருமொழி (பாசுரம் 1: 3: 9 (307 – 317)
திருவாசகப்பகுதி – திருஉந்தியார் – 20 பாடல்கள் – மாணிக்கவாசகர் பாடியது (8 ஆம் திருமுறை)
2. திரு உந்தியார் - சித்தாந்த சாத்திரத்துள் ஒன்று திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனார் பாடியது.
3. உந்தி, ஒரு வகைக்கூத்து
"சிந்து... உந்தி... கோத்தவரிக்கூத்தின்குலம்"
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## திருக்கடைகாப்பு:
1. இறுதிச் செய்யுள்
தேவாரம் முதலியவற்றில் பாடியோர் பெயர் படிப்போர் பெறும் பலன் கூறும் இறுதிச் செய்யுள்.
திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக் காப்புச் சாத்தி
(பெரியபு. திருஞான. 80)

2. திருஞான சம்பந்தரின் திருமுறையானது திருக்கடைக் காப்பு என்று மரபாக வழங்கப்படுகின்றது.

## திருக்குறுந்தாண்டகம்:

திருமங்கை ஆழ்வாரின் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் (20 பாசுரங்கள்) தோடிப் பண்ணில் உருவக (ரூபகம்) தாளத்தில் இசைப் படுத்தப் பட்டுள்ளன. இவ்வாறான அப்பர் தேவாரம் திருநேரிசை என்று அடைவு செய்யப்பட்டுள்ளது.

## திருக்குறுந்தொகை:

அப்பரின் 5 ஆம் திருமுறையின் 100 பதிகங்கள்; நாற்சீர் நாலடியால் வரும் கலிவிருத்தப் பாக்களால் ஆனவை.

ஒருமா, கூவிளம், கூவிளம், கூவிளம் என்பது இதன் கட்டளை அடியாகும். முதற்சீர் தேமாவாயின் (நெடிலாக அல்லது தனிக்குறிலாக) அடியின் எழுத்துத் தொகை 11; புளிமா வாயின் (குறிலிணை) 12 எழுத்துக்கள். மூன்று தளைகளுள் முதல்தளை நேரொன்றாசிரியத்தளை; இரண்டும் மூன்றும் வெண்டளைகள்.

சிலம்பின் வேட்டுவ வரியிலுள்ள (1) நாகநாறு நரந்தம் (11 எழுத்து) (2) செம்பொன் வேங்கை (11 எழுத்து) (3) மரவம் பாதிரிபுன்னை (12 எழுத்து)மேற்கண்ட யாப்பில் அமைந்தவை.

← த. க. க. 190/II

## திருக்கை கோட்டி:

கோயிலில் திருமுறை பாடும் பணி.

இம்மனை னாற் கோலும் திருக்கை கோட்டி பணியும் காணியாகவும் (தெ. இ. க. 4· 309, த. க. சொ. 302)

## திருக்கோத்தும்பி:

1. தும்பிபறத்தல்; மகளிர் விளையாட்டுள் ஒன்று. கைகோத்துத் தும்பி பறத்தல் போன்று பாடி விளையாடல். தும்பி பறத்தல் அல்லது கோத்தும்பி. தரவு கொச்சகக் கலியால் அமைந்து வரும்.

" எனக்குங் கிடைத்தது உனக்கும் கிடைத்தது என்று ஒருவருக்கொருவர் மடிபிடித்துக் கொண்டு வண்டு சுழலுகிறது போலச் சுற்றும் விளையாட்டு"

(பன்னிரு திருமுறை வரலாறு. பக். 195/II)

2. திருவாசகப் பகுதி - திருக்கோத்தும்பி (20 பாடல்கள் - தரவு கொச்சகக்கலி)

## திருச்சந்தவிருத்தம்:

திருமழிசை ஆழ்வார் பாடிய 120 சந்தப் பாடல்கள் (எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்) (பாசுரம் 752 – 871)

## திருச்சாழல்:

1. தலைவனின் புகழ், அழகு, அணி பற்றி ஒருத்தி வினவ, மற்றொருத்தி விடை அளிப்பதான பாட்டுப் பாடி, மகளிர் ஆடும் ஆடல். இது தரவு கொச்சகக் கலியால் அமைந்துவரும்.

2. திருவாசகப் பகுதி - திருச்சாழல் (20 பாடல்கள்- தரவு கொச்சகக் கலி); பெரியாழ்வாரின் பெரிய திருமொழி (11:5 பாடல் 1992 - 2001)யின் தரவு கொச்சகக்கலி 10 பாடல்கள் திருச்சாழல் வகையன. (இரண்டு தோழியர் எம்பெருமானது சௌலப் யத்தையும் பரத்வத்தையும் எதிர் எதிராகக் கூறுதல்)

3. வரிக்கூத்துள் ஒன்று.

"சிந்து... நற்சாழல்... கோத்தவரிக் கூத்தின் குலம்"

(சிலப். 3:13 அடியார்க். மேற்.)

## திருச்சின்னம்:

ஊதுகுழல்; அடையாளக்கருவி

ஆறெறி பறையும் சூறைச் சின்னமும் (சிலப். 12: 40)

சங்கும் காளமும் திருச்சின்னமும் ஊதுவார்பேர் இருவற்கு

(தெ. இ. க. 7 485, த. க. சொ. 317)

## திருஞானம்:

கோயிலில் கருவறை இறைத்திருமுன் (மூலமூர்த்தி) ஓதும் திருப்பாட்டு

← செ. ப. அ. பிற். 312

## திருஞானப்புறம்:

கோயிலில் தேவாரம் முதலிய திருப்பாட்டு ஓதுவதற்கு அளிக்கப்பட்ட மானியம்.

← தெ. இ. க. 5: 248; செ. ப. அ. பிற். 312

## திருத்தாண்டகம்:

நெடுந்தாண்டகமென்பது எண்சீரடியாலமைந்தது. (குறுந்தாண்டகம் அறுசீரடியால் அமைந்தது; அப்பரின் குறுந்தாண்டகமானது, திருநேரிசை என்று பெயர் பெற்றுள்ளது)

எடு:- 1. திருமங்கையின் நெடுந்தாண்டகம்
2. அப்பரின் திருத்தாண்டகம் (6 ஆம் திருமுறை 99 பாடல்கள்)

இவை எண்சீரான் வந்த கொச்சக ஒரு போகு என்ற யாப்பில் அமைந்தவை. எனவே அப்பர் தாண்டக வேந்தர், தாண்டகச் சதுரர் என்றழைக்கப்பட்டார். அப்பரின் தாண்டகம், அரிகாம்போதிப் பண்ணில் பாடப் படுவதால், அரிகாம்போதிப் பண்ணிற்குத் தாண்டகப் பண் என்று ஒரு பெயருமுண்டு.

எடு:– நாமார்க்கும் குடியல் லோம் நமனை அஞ்சோம்

(தேவாரம் மறுமாற்றத் திருத்தாண்டகம்)

→ யாழ் நூல். 218 – 219; த. ப. வ. 208 – 9/III,← தாண்டகம்

## திருத்தாண்டக யாப்பு:

எண்சீரடியால் அமைந்த கொச்சக ஒருபோகு.

"எண் சீரான்வந்த இத்தாண்டக யாப்பில் அடிதோறும் மூன்று, நான்கு, ஏழு, எட்டாம் (3, 4, 7, 8) சீர்களை விலக்கி விட்டு ஏனைய நான்கு சீர்களையும் இணைத்து நோக்கினால் அப்பாடல் கொச்சகக் கலிப்பா என்னும் யாப்புருவில் அமைவதைக் காணலாம். (ப.தி.வ. பக். 419/II)

**"கழிநெடிலடிக்கு உரிய மேல் எல்லையாகிய இருபது எழுத்து என்னும் வரையறையைத் தாண்டி இருபதின் மேற்பட்ட எழுத்தால் மிக்கு வருதலின் தாண்டகம் என்னும் பெயர்த்தாயிற்று" (மேலது 420)**

தாண்டு > தாண்டகம்

← யா. நூ. பக் 219

## திருத்தாளச்சதி:

1. தாளச்சதி என்பது தாளத்தில் அமைந்த சொற்கட்டுகள்.
2. திருஞான சம்பந்தரின் தேவாரப்பகுதி பல்வகைத் தாளச் சொற்கட்டுகளைப் பாடலாக்கிய பகுதி.

## திருத்தெள்ளேணம்:

1. தெள்ளேணம் என்ற சிறுபறை கொட்டி மகளிர் பாடி ஆடுதல் திருத்தெள்ளேணம். இது தரவு கொச்சகக் கலியால் அமைந்து வருவது.
2. திருவாசகப் பகுதி (20 பாடல்கள் - தரவு கொச்சகக் கலி)

**தெள்ளேணம்** - ஒருவகைச் சிறுபறை; ஏணம் = கத்தூரி -

**தெள்ளேணம்** - கத்தூரி மான்தோலால் ஆன பறை

**தெள்** = தெளிந்த ஓசை (ஒப்பு: தெள்விளி)

3. கோலாட்டத்தின் போது பறை கொட்டிப் பாடி ஆடும் ஆடல். **(நித்திய சுமங்கலி பக். 23)**

## திருத்தோள்நோக்கம்:

= தோள் வீச்சு, கொப்பி பாட்டு, தோள், தோள் நோக்கம், தோளி

வரிக்கூத்து வகையுள் ஒன்று; மகளிர் ஆடல்; பால்வரைக் கூத்து.

**சிந்து... தோள் வீச்சு... கோத்தவரிக்கூத்தின் குலம்**
**(சிலப். 3: 13 அடியார்க்.மேற்.)**

**துடியின் அடி பெயர்த்துத் தோள் அசைத்துத் தூக்கி**
**அடியுறை மகளிர் ஆடுந் தோளே (பரிபா. 8: 43)**

**குழலினீர் தோள் நோக்கம் ஆடாமோ (திருவாசக.15: 2)**

2. திருவாசகப் பகுதி - (14 பாடல்கள் - தரவு கொச்சகக்கலி)

திரு + தோள்+ நோக்கம் - திருத்தோணோக்கம்

← PPTI. பக். 472- 73 ; நித்திய சுமங்கலி பக். 81

## திருதம்:

துரிதம் ; தாள வகையுள் ஒன்று (A fast moving time measure)

(திருதி - வேகம், விரைவு)

## திருநடனம்: (sacred dance of siva)

திருக்கூத்து - ஆடவல்லான் சிவன் ஆடும் கூத்து.

## திருநாடகம்:

கோயிலில் ஆடப்படும் கூத்து.

திருநாடகமுட்பட மற்றும் எப்பேர்ப்பட்டதும்

(TAS 7 P.29- 31; த. க. சொ. 305)

## திருநெடுந்தாண்டகம்:

எண்சீரடியால் திருமங்கை யாழ்வார் பாடியது 30 பாசுரங்கள் கொண்டது. மேற்செம்பாலை (கல்யாணி)ப்பண்ணில் அடதாளத்தில் இசைப் படுத்தப்பட்டது. அப்பரின் திருத்தாண்டகத்தையொத்தது.

## திருநேரிசை:

தேவாரத்தில் 4 ஆம் திருமுறையாக (பதிகம் 22- 79) அடைவு பெற்ற அறுசீரடியாக அப்பர் பாடியது (பதிகம் 79 குறைந்த திருநேரிசை எனப்படும்) திருமங்கை ஆழ்வாரின் திருக்குறுந் தாண்டகத்தை ஒத்தது.

## திருப்பதியம் விண்ணப்பம்:

தேவாரத் திருமுறைகளைப் பாடுதல்

தேவர்க்கு முன் திருப்பதியம் விண்ணப்பம் செய்யும்

(தெ. இ. க. 3 43. த. க. சொ. 307)

## திருப்பல்லாண்டு:

சேந்தனார் மற்றும் பெரியாழ்வார் பாடிய இசைப் பனுவல்கள். பெரியாழ்வார் திருமொழியின் முதற்பத்தில் திருப்பல்லாண்டு முதற் பதிகமாக உள்ளது.

பல்லாண்டு பல்லாண்டு என்ற பாடல் பண் நட்டபாடையிலும் (நாட்டை) ஐந்தன்நடை (கண்டம்) தாளத்திலும் உள்ளது. இப்பாடல் குறள் வெண் செந்துறை யாப்பில் அமைந்துள்ளது. மீதியுள்ள 12 பாடல்களும் அறுசீர் விருத்தங்கள். இவை நாட்டைப் பண்ணுக்கும் அடதாளத்திற்கும் உரியவை

சேந்தனாரின் திருப்பல்லாண்டு ஒன்பதாம் திருமுறையுள் அடைவு செய்யப்பட்டுள்ளது. கோயில் (தில்லை) ஆடவல்லானை வாழ்த்திப்பாடும் 13 பாடல் களைக் கொண்டது. பண் - பஞ்சமம் - இளி; (கோடிப்பாலை; கரகரப்பிரியா) இளி – பஞ்சமம் – 'ப'

↑ செம்பாலையின் (அரிகாம்போதி) தார (நி¹) சுரத்தால் பண்பெயர்ப்பில் கிடைக்கும் பண் – 'தாரம்' ; எனவே 'இளி' சுரத்தால் கிடைக்கும் பண் – இளி (பஞ்சமம்)

பல்லாண்டு - வாழ்த்து.

## திருப்பள்ளிஎழுச்சி:

கடவுளைத் துயில் எழுப்பப் பாடப்படும் பாடல் இலக்கியம்

எ-டு:-
தொண்டரடிப்பொடியாழ்வாரின் 10 பாசுரங்கள் (917- 926) (எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்) மற்றும் மாணிக்க வாசகரின் 10 பாசுரங்கள் (எண் சீர் ஆசிரிய விருத்தம்)
**...தென் அரங்கத்து அம்மானைப் பள்ளி உணர்த்தும்...**
**(திருஅரங்கப் பெருமாள் அரையரின் தனியன்)**
**→ துயில் எடை**

## திருப்பறையறைவு:

பறை அடித்து திருவிழாச் செய்தி தெரிவித்தல்
*திருக்கொடி யேற்று நாளன்று திருப்பறை யறைவு கேட்பிக்குங் கடிகையார் இவற்கு (தெ. இ. க. 2 25. த. க. சொ. 307)*

## திருப்பாட்டுப்பணி:

பாசுரங்களை ஓதும் பணி
*இப்பொன் இருகழஞ்சும் பணம் இருபதுக்கும் திருப்பாட்டுப் பணியும் இம்மனையும் (தெ. இ. க. 4· 309. த. க. சொ. 307)*

## திருப்பாலி:

= முளைப்பாலி, முளைப்பாரி, முளைப் பாலிகை, முளைக்குடம்
**முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர் (சிலப். 1:59)**
*... திருப்பாலி வலந்திரு நாள் (தெ. இ. க. 8 43. த. க. சொ. 307)*
முளைப்பாலி – முளைப்பாரி ( திரிசொல்)

## திருப்பாவை:

பாவைப்பாடல்கள் ; ஆண்டாள் பாடிய 30 பாசுரங்களும் (திருப்பாவை) மாணிக்க வாசகர் பாடிய 20 பாசுரங்களும் (திருவெம்பாவை) பாவைப் பாடல்கள் ஆகும். பாவாய் என்று முடிவதால் பாவைப் பாடல்கள். ஆண்டாள் பாடல்கள் வெண்டளையால் வந்த எட்டடி கொச்சகக் கலி யாப்பில் அமைந்தவை. வாசகரின் பாவைகள் வெண்டளையால் வந்த இயல் தரவிணைக் கொச்சகக் கலிப்பா.
பாவாய் < பாவை
← த.க.க. பக். 87-89

## திருப்பாவை நாள்:

பெருமாள் முன்பு திருப்பாவை பாடும் நாள்
*கோவிந்தப் பெருமாள்... திருப்பாவை நாள் பத்துக்கு (TD I 1: 187; த. க. சொ. 307)*

## திருப்புகழ்:

1. தெய்வத்தைப் புகழ்ந்து பாடிய பாடல்.
**... தொண்டர்தங்கள் குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும்பாடி (பாசுரம் 1:1:9)**
2. அருணகிரி நாதர் முருகக்கடவுள் மேல் பாடிய சந்தப்பாடல்களால் ஆன நூல். ஆசிரிய வண்ண விருத்தங்களால் ஆனவை. நாலடிப் பாடல்; ஓரடி 2 கலை கொண்டது. ஆக ஒரு பாடலுக்கு 8 கலைகள். முதல் கலையின் முதல் துள்ளலின் முதல் எழுத்துக்கு மூன்றாம் துள்ளலின் முதல் எழுத்து மோனையாகும்.

## திருப்புகழ்ச்சந்தம்:

3, 4, 5 என பல்வேறு எழுத்துக்களின் எண்ணிக்கையால் ஆனவை.
**3 எழுத்துச்சந்தம் : தனன, தன்ன, தான, தத்த, தாத்த, தந்த, தாந்த, தய்ய – 8**
**4 எழுத்துச் சந்தம் : தனதன, தனனா, தானன , தன்னா, தானா, தத்தா தனத்த, தந்தா, தனந்த, தய்யா – 10**
**5 எழுத்துச் சந்தம் : தனதனன, தனதனா, தனாதன, தானதன தனத்தா, தனதய்ய – 6**
ஆக அடிப்படைச் சந்தங்கள் 24 கொண்டது திருப்புகழ்.
← திருப்பு. உரை (வ.சு. செங்கல்வராயபிள்ளை)

## திருப்பூவல்லி:

மகளிர் மலர் கொய்யும் போது பாடி ஆடும் பாடல். இது தரவு கொச்சகக் கலியால் ஆனது.
**வணங்க... கொய்யோமோ... (திருப்பூவல்லி. 7)**

## திருப்பொற்சுண்ணம்:

= வள்ளைப்பாட்டு, உலக்கைப்பாட்டு
1. நன்னீராடுவதற்காக மணப்பொருட்களை உரலில் இட்டு இடிக்கும் போது பாடப்படும் பாடல்.
2. திருப்பொற் சுண்ணம் - திருவாசகப் பகுதி (20 பாடல்கள் அறுசீர் ஆசிரிய விருத்தம்)
**வையமெல்லாம்... ஆடற் பொற்சுண்ணம் இடித்து நாமே...**
**(திருவாசக. திருப்பொற். 9)**
**சுண்ணமிடிப்பார் தம் சுவை மிகுந்த பண்களிலும்**
**(பாரதி குயில்பாட்டு)**

## திருப்பொன் ஊசல்:

மகளிர் ஊஞ்சலில் அமர்ந்து ஆடியபடியே பாடுவது பொன் ஊசல். இது தரவு கொச்சகக் கலி யாப்பில் அமையும்.
**சீரார் பவளங்கால்... பொன்னூசல்... ஆடாமோ... (திருவாசக. திருப்பொன். 1)**
**→ ஊசல், ஊசல்வரி**

## திருமால் ஆடல்:

**அஞ்சனவண்ணன் ஆடிய ஆடல் பத்துள்...**
**(சிலப். 6: 46 – 8 அடியார்க்.)**
(1) அல்லியம்
(2) மல்லாடல்
(3) குடக்கூத்து
**குடம், மல்லோடு, அல்லியந்தான் கொண்டல் வண்ணன் தன் கூத்தாம் (சூடா. 9:50)**

"அல்லியம் மாயவன் ஆடிற்று..." "நெடியவன் ஆடிற்று மல்லாடல்..."
"குடத்தாடல் குன்று எடுத்தோன் ஆடல்..."
(சிலப். 3: 14 அடியார்க்.மேற்.)

## திருமாலைப்பாடும் தேவபாணி:

= மாயோன் பாணி

1. தேவபாணி என்பது தெய்வங்களைப் பரவிய இசைப்பாடல்கள்.

மாயோன் பாணியும்.... (சிலப். 6:35)

"பதினோ ராடற்கும் முகநிலையாகிய தேவபாணி மாயோன் பாணி அது வருமாறு:– மலர்மிசை த்திருவினை...
இது எண்சீரான் வந்த கொச்சக ஒரு போகு
பண் – கௌசிகம்; தாளம் இரண்டு ஒத்துடைத் தடாரம்
(மேலது அடியார்க்.)

2. முல்லைப்பாணி (மோகனம்)

மாயோன் பாணி என்பது வேலன் பாணி போன்று தெய்வத்தால் ஏற்பட்ட பெயர்

## திருமுக்கால்:

இசைப்பாட்டு வகையுள் ஒன்று முதலடியும் மூன்றாமடியும் நாற்சீர் - அளவடியாயும், இரண்டாமடியும் நான்காமடியும் முச்சீர் - முக்காலடி யாப்பாக அமைந்துள்ளதால் இது திருமுக்கால் என்று பெயர் பெற்றது. ஆசிரியத்துறை யாப்புடையது. தேவாரம் மூன்றாம் திருமுறை. 94-99 பதிகங்கள் இந்த யாப்பில் அமைந்தவை.

← வீரசோ. யா 16 உரை; பன்னிரு திரு. வர. 494/I

## திருமுறை:

சைவ (தோத்திர) நூல்களது வைப்பு முறை.

| | | |
|---|---|---|
| திருமுறை – 1–3 | – திருஞானசம்பந்தர் | – திருக்கடைக்காப்பு. |
| திருமுறை – 4–6 | – திருநாவுக்கரசர் (அப்பர்) | – தேவாரம். |
| திருமுறை – 7 | – சுந்தர மூர்த்தி நாயனார் | – திருப்பாட்டு |
| திருமுறை – 8 | – மாணிக்கவாசகர் | – திருவாசகம், திருக்கோவையார். |
| திருமுறை – 9 | – ஒன்பதின்மர் | – திருவிசைப்பா, திருப்பல்லாண்டு. |
| திருமுறை – 10 | – திருமூலர் | – திருமந்திரம். |
| திருமுறை – 11 | – பதினொருவர் | – திருமுருகப்பாசுரம் முதலியன. |
| திருமுறை – 12 | – சேக்கிழார் | – பெரிய புராணம். |

← த. இ. பே. 103 /116

## திருவகுப்பு:

சந்தக்குழிப்பில் அமைந்த செய்யுள் வகையுள் ஒன்று
எடு:- அருணகிரிநாதர் பாடிய திருவகுப்பு

← த. இ பே. 103 /116

## திருவாதிரைக்களி:

மார்கழித் திருவாதிரை விழாக்களில் ஆடப்படும் ஒருவகைக் கைகொட்டிக்களி. கேரளத்தில் வழக்கில்உள்ளது.

## திருவிசை: → திருவிசைப்பா

## திருவிசைப்பா: = திருவிசை (திரு + இசை)

1. பாடல் வகையுள் ஒன்று; வாழ்த்துப்பா.

சங்கத்தமிழ் அமுதம் மண்டும் திருவிசையும் மந்திரமும்
(சொக்க. உலா. 36)

2. திருவிசைப்பா

... 9 ஆம் திருமுறையிலுள்ள இசைப் பாடல்கள்

## திருவிதி சாநி: கோயில்தாசி

மண்டபக் கொத்தர்பணம் 1 திருவிதி சாநிக்கு பணம் 3
(TDI 3:105 ; த.க.சொ. 313)

## திருவிராகம்: = அராகம், முடுகியல்

முடுகியல்களாக (அராகம்) வரும் பாடல்; எனவே திருவிராகம்

உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும் (தொ.செய்.232)
மேன்மை நடையின் முடுகும் அராகம் (பெரியபு. ஞான. 277)

சம்பந்தர் தேவாரம் இரண்டாம் திருமுறை (பதிகம் 67–88; அடங்கன் 3514–3755) 242 பாடல்கள் திருவிராகம் என அடைவு செய்யப்பட்டுள்ளன.

## திருவிருத்தம்: கட்டளைக்கலித்துறை.

இது ஐஞ்சீரடி நான்கடியான் வந்த தரவு கொச்சகப் பாடல்கள்

எடு:- நம்மாழ்வாரின் திருவிருத்தம் (2478-2577)
அப்பரின் திருவிருத்தம் (4: 80- 113)

## தில்லேலம்:

தில்லேல என்று முடியும் இசைப்பாடல் வகை.

← செ. ப. அ. 1925

## தில்லானா:

தில்லா அல்லது தில்லானா என்று முடியும் இசைப்பாட்டு. விரைவுச் சொற்கட்டுகள் உடைய நாட்டிய உரு. தென்னகத்தில் வழங்கும் நாட்டிய இசை உருக்களில் ஒன்று. இசை அரங்குகள், நாட்டிய அரங்குகள் என இரு அரங்குகளிலும் வழங்கும் சிறப்புடையது. சதிகள் உச்சரித்துச் சொல்லப்படாமல் இனிய இசை அழகோடு பாடப் பெறுவது. சுரங்கள் கலந்த சதிகள், சில இடங்களில் சொற்கள் என அமைந்த இரண்டாம் கால நாட்டியப் பாடல். நாட்டிய அரங்கில், ஆடல் வரிசையுள் ஏழாவதாக ஆடப்படுவது.

← த.க.க. 103/III ; ப.ஆ .இ. 110

## திலதக் கலித்துறை:

கட்டளைக் கலித்துறை வகைகளுள் ஒன்று. (தஞ்சை வாண. 1 உரை)

## திவ்விய நாமசங்கீர்த்தனம்:

*பாகவதர் பலர் விளக்கைச் சுற்றி நாட்டியமாடி இறைத்திரு நாமங்களைப் புகழ்ந்து பாடுதல்.*

*← செ. ப. அ 1927*

## திவ்விய வராடி: *குறிஞ்சியாழ்த்திறம்.*

நட்டபாடை... திவ்விய வராடி... குறிஞ்சியாழ்த் திறமாகக் கூறுவர் (பிங்க. 1382)

*திவ்விய = இனிய*

தேன்தரு மாரி போன்று திவ்விய கிளவிதம் மால் (சீவக. 581)

## திவவு:

*யாழ்க்கோட்டின் மீது சுரத்தானங்களில் கட்டப் படும், புரி நரம்பைக் கட்டும் வார் (*Bands of catgut in a yal) *தந்தியின் சரியான சுர இடத்தின் மீது கட்டுவதற்கு, முன் பின்னாக நகர்த்த ஏதுவுடையது (ஒப்பு: சித்தாரின் நகர்த்த கூடிய மெட்டுக்கள்* (movable frets)

அங்கோட்டுச் செறிந்த அவிழ்ந்து வீங்கு திவவு (சிறுபாண். 222)

தந்திரிகரத்தொடு திவவு உறுத்து யாத்து (சிலப். 13:107)

திவவு என்பது – நரம்புகளை வலிபெறக்கட்டும் வார்க்கட்டு (மேலது அடியார்க்.)

குறுந்தொடி ஏய்க்கும் மெலிந்து வீங்கு திவவின் (பெரும்பாண். 13)

செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின் (முருகு. 140)

(செவியால் கேட்டு ஒத்து (சுருதி) சேர்த்தல்)

தொண்டுபடு திவவின் முண்டக நல்யாழ் (சிலப். 8: 5அடியார்மேற்.)

தொடித்திரி அன்ன தொண்டுபடு திவவின் (மலைபடு. 21)

கண்கூடு இருக்கைத் திண்பிணித் திவவின் (பொருந. 15)

திவவு மெய் நிறுத்துச் செவ்வழி பண்ணி (மதுரைக். 604)

(மெய் நிறுத்தல் – ஒத்து (சுருதி)க்கு அமைத்தல்)

அழியாவிழவின் இழியாத் திவவின் (பதிற். 29: 7)

திவவு, யாழ் வலிக்கட்டு (திவா. 1247)

வலிக்கட்டுத் திவவே (பிங்க. 1432)

## தொண்டுபடுதிவவு:

*புரிநரம்பைக்கட்ட திவவு துளையிடப் பட்டிருந்தது.*

தொடித்திரி அன்ன தொண்டுபடு திவவின் (மலைபடு. 21)

*(மாதர் கையில் அணிந்த வளையல் போன்று திவவு யாழில் வரிசையாகக் கட்டப்பட்டது)*

தொண்டுபடு திவவின் முண்டக நல்யாழ் (ஆசிரியமாலை) (சிலப். 8: 25 அரும். மேற்.)

*(தொடி - வளையல் ; தொண்டு - துளை; முண்டகம் - தாமரை)*

துளக்கற ஒழுகியன்ன துய்யறத் திரண்ட திண்கோல்
கொளத்தகு திவவு (சீவக. 559)

## திவவுயாழ்:

*புரிநரம்பு (மெட்டு) களையுடைய யாழ்.*

*(புரி நரம்பு - இன்றைய வீணையின் மெட்டுக்களை ஒத்தது)*

பண்மொழி நரம்பில் திவவுயாழ் மிழற்றி (சிலப். 5: 222)

↑ நிலைத்த மெட்டுக்களையுடையது இன்றைய வீணை. யாழில் (நகரும்) மெட்டுக்களை புரி நரம்பாகக் கட்டியிருந்தனர். நேர்கோட்டு யாழில் தான் திவவு கட்டமுடியும் எனவே பண்டைய யாழ் நேர் கோட்டு யாழே .

→ திவவு

## திறத்திறம்:

*= சதுர்த்தம், சுராந்தரம், சுராந்திரம்*

*பண்களில் ஒன்று; 4 சுரப்பண்* (Quadratonics)

பண் என்றது – நரப்படைவால் நிறம் தோன்றப் பண்ணப்படா நின்ற... திறத்திறமும் (சிலப். 3:46 உரை)

*(நரப்படைவு - சுர அடைவு ; பண்ணின் ஏறு நிரல், இறங்கு நிரல்; நிறம் = பண்)*

பண், பண்ணியல் திறம், திறத்திறம்... (சிலப். 13:106 அடியார்க்.)

பண்நூற்று மூன்று: அவை நால்வகைப்படும்; பண், பண்ணியல், திறம், திறத்திறமென (சிலப். 13:110 – 12 அடியார்க்.)

திறத்திறம்பகர்ந்து (சிலப். 27: 223)

## திறத்திறம் - திறம்:

*= சதுர்த்த ஔடவம் (4 + 5)*

*ஏறுநிரலில் 4 சுரமாகவும் இறங்கு நிரலில் 5 சுரமாகவும் வரும் பண்.*

## திறத்திறம் - பண்:

*= சதுர்த்த சம்பூரணம் (4 + 7)*

*ஏறு நிரலில் 4 சுரமாகவும் இறங்கு நிரலில் 7 சுரமாகவும் வரும் பண்.*

## திறத்திறம் - பண்ணியல்:

*= சதுர்த்த சாடவம் (4 + 6)*

*ஏறுநிரலில் 4 சுரமாகவும் இறங்கு நிரலில் 6 சுரமாகவும் வரும் பண்.*

## திறம் இருபத்தொன்று:

*பாலை ஒன்றிற்கு (மேளகர்த்தா) 21 திறப் பண்கள் உண்டு. பண்ணியல் (6 சுரப்பண்) ஆறும், திறம் (5 சுரப்பண்) பதினைந்துமாக 21 திறப்பண்கள்.*

மூவேழு திறத்தையும் குற்றமின்றாக இசைத்துக் காட்டவல்ல... பெரிய இசைக்காரர்... (சிலப். 5:35–7 அடியார்க்.)

மூவேழ்திறத் தொடு முற்றக்காட்டி (பெருங். 1: 37: 116)

மூவேழ்துறையும் முறையுழிக்கழிப்பி (புறம். 152)

ஈரிரு பண்ணும் எழு மூன்று திறனும்.. (பிங்க. 1380)

மூஏழ்துறையும் முட்டு இன்று (புறம். 166)

## திறம்:

1. *திறப்பண், சேய்ப்பண், வழித்திறம், கிளைப் பண் (ஜன்யம்). தாய்ப்பண்ணிலிருந்து கிளைக்கும் சிறுபண்கள்.* (Derivativs, minors)

திறத்து வழிப்படூஉம் தெள்ளிசைச் கரணத்து (சிலப். 8: 43)

திறப்பண் பாடுகின்ற ஏல்வை (மேலது அரும்)
திறங்களுக்கு பிறப்பிட மாயுள்ள இச்சாதிப் பெரும்பண்.
(மேலது அடியார்)

நலம்தரு பண்ணும் திறனும் வாய்ப்ப (மணிமேக.28:41)
நோய் சேர்ந்த திறம்பண்ணி (கலித். 77: 16–19)
குறை நரம்பிற்றே திறம் எனப்படுமே (திவா. 1873. புது.)
*(குறை நரம்பு - ஏழு சுரத்திற்கு குறைவான நரம்பு)*
குறைந்த நரம்பு திறம் எனக்கொள்க (பிங்க. 1426)
→ மூவேழ் திறம்

2. *பாணி, குழல் (ஔடவம்), 5 சுரப்பண்* (pentatonic)
*எடு:-*
*(1) முல்லைக்குழல் (முல்லையந்தீங்குழல்) (மோகனம்)*

## திறம் - திறத்திறம்:

= ஔடவச் சதுர்த்தம் (5 + 4)
*ஏறு நிரலில் 5 சுரமாகவும் இறங்கு நிரலில் 4 சுரமாகவும் வரும் பண்.*

## திறம் - பண்:

= ஔடவச்சம்பூரணம் (5 + 7)
*ஏறுநிரலில் 5 சுரமாகவும், இறங்கு நிரலில் 7 சுரமாகவும் வரும் பண்.*

எடு: – பிலகரி – ச ரி² க² ப த² ச்
– ச் நி² த² ப ம¹ க² ரி² ச

## திறம் - பண்ணியல்:

= ஔடவச் சாவடம் (5 + 6)
*ஏறுநிரலில் 5 சுரமாகவும் இறங்கு நிரலில் 6 சுரமாகவும் வரும் பண்.*

எடு:– ஜகன்மோகினி – ச க² ம¹ ப நி² ச்
– ச் நி² ப ம¹ க² ரி¹ ச

# தீ

## தீங்குழல்:
குழல் என்பது பாணி என்ற ஐந்து சுரப்பண்ணைக் குறிப்பது.
எடு:- முல்லையந்தீங்குழல் - முல்லைக்குழல்
முல்லை + அம் + தீம் + குழல்
(அம் = அழகிய; தீம் = இனிய)

## தீந்தொடை:
1. யாழ் நரம்பு
தீந்தொடை மகரவீணை (சீவக. 608)
2. யாழ்
தீந்தொடையின் சுவை... (சீவக. 1328)
(தீம் = இனிய)
ஒப்பு :- தீந்தமிழ், தீம்பண்டம்,(அந்) தீங்குறிஞ்சி
3. சுரவரிசை, நரப்படைவு
தீந்தொடைச் செவ்வழிப்பாலை (சிலப். 7:(47)
← செ. ப. அ 1940 - 43

## தீப்சந்தி:
ஓர் இந்துத்தானித்தாளம் - 3 + 4 + 3 + 4 அளவுள்ளது.

**தீப்தம்:** பண்களில் ஒன்று (பரத. இராக. 47)

**தீபவராடி:** வராடி வகைப் பண்களுள் ஒன்று
ஆரியவராடி... தீபவராடி... ஆகும் வராடிக்கு அடைத்த பல்பெயரே...
(திவா. 1889)

**தீர்க்கசுரம்:** நெடில் சுரம் (யாழ். அக.)
வன்சுரம்
எடு:- ரி$^2$ க$^2$ போன்றவை

## தீர்க்கம் போடுதல்:
நெட்டெழுத்தின் நீட்சிக்கு குறி (அடையாளம்) இடுதல். (to write the mark of length of a long vowel)
← செ. ப. அ 1946

## தீர்த்த மல்லாரி:
இறைத்திருமேனியைத் திருமுழுக்காட்டுச் செய்யும் போது நாட்டைப் பண்ணில் இசைக்கப்படும் ஒருவித சுரக்கோவைகள்.

**தீர்மானம்:** = தீர்வு , தீர்வை
பாடலின் முடிவில் நீளமாக முழக்கப்படும் தாளத் தீர்வு
(Flourishing drumming of the close of a talam)
(தீர் - தீர்ந்து விடல் ; மானம்-அளவு; தீர்வை =முடிவு)
ஒரு தாளத்திற்கு இரண்டு பற்றாகப் பத்தும் தீர்வு ஒன்றுமாக
(சிலப். 3: 145 உரை)
பல்லவி, அனுபல்லவி இவைகளைப் பலமுறை பாடித் தீர்த்தபின் முழக்கப்படுவதே தீர்மானம். தீர்ந்தது என்பதைக் காட்டுவது தீர்மான முழக்கு.
← பஞ்சமர. 352

## தீர்வு:
தாள முழக்கின் தீர்மான வகைகளுள் ஒன்று. தாள வட்டணையின் (மண்டிலம்) புறத்தே வந்து முடிவது. அதாவது கடைசி மத்தளச் சொல் புறத்தே முடிவது. இது மூன்றடுக்கு கொண்டது.
எடு:- நாலு எண்ணிக்கைத் தீர்வு 4/4
தகதின தோம் - 1 ½
தகதின தோம் - 1 ½
தகதின - 1
- 4 தோம்
இதில் 'தோம்' என்பது நாலு எண்ணிக்கையின் இறுதியில் தீர்வாக புறத்தே விழுந்தது.

←ப. இ. இ. 301,→ தீர்மானம்

**தீர்வை:** → **தீர்மானம், தீர்வு**

**தீன்தாள்:** இந்துத்தானித்தாளத்துள் ஒன்று.
4 + 4 + 4 + 4 அளவுடையது

# து

## துக்கடா:

"அற்பமான சிறிய பாட்டு என்று பொருள்படும். 'துக்ரா' என்னும் இந்துத்தானிச் சொல்லினின்றும் தோன்றிய சொல்லே - துக்கடா என்னும் சொல். இசையரங்குகளில் சிறப்பான, தலைமையான இடம் - தெலுங்கு மொழி இசைக்கு நல்கி அவற்றில் மிக விரிவாக்கங்கள் அமைத்துப் பாடுவார்கள்; இம்முறை சென்ற 200 ஆண்டுகளாக இருந்து வருகிறது. இசையரங்கு முடிவதற்கு முன்னரே துக்கடா பாடும் பகுதி' என்று ஒன்று அமைத்துக் கொண்டு, அதிலே தமிழ்க்கீர்த்தனைகளையும், தெய்வீகத் தேவாரம், திருவாசகம், திருப்புகழ்ப் பாடல்களையும், காதற் சுவைப் பாடல்களையும் பாடுவார்கள். அவற்றை எளிய முறையில் விரைந்து பாடி உடனே மங்களம் பாடி முடிப்பார்கள்" இதுவே துக்கடா பாடும்முறை.

← த. க. க. 111 /II

## துக்கராகம்:

இழவுக்குரிய பண் (Mournful tune) பாலையாழ்த்திற வகையது.

தக்கராகம்... துக்க ராகம்... பாலையாழ்த்திறமென்ப (பிங்க. 1381)

← செ. ப. அ. 1953

## துஞ்சாநின்றோன் அவிநயம்:

"துஞ்சா நின்றோன் அவிநயம் துணியின், எஞ்சதலின்றி இருபுடை மருங்கு, மலர்ந்துங்கவிழ்ந்தும் வருபடை இயற்றியும், அலர்ந்து உயிர்ப்புடைய ஆற்றலுமாகும்" (சிலப். 3:13 அடியார்க்.மேற்.)

## துடி:

= உடுக்கை, குடுகுடுப்பை, தமருகம், இழுகுபறை, நுண்ணூல் சிரந்தை

1. பாலை நிலப்பறை (A small drum shaped like an hour-glass) இருமுகத் தோற்கருவி. இதன் வலப்பக்கம் மட்டுமே முழக்கப்படுவது. மிக விரைந்து முழக்கப்படுவது. இடை சுருங்கிய பெரும்பறை

தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில் (உண்மை விளக்கம் 36)

துடிகொட்டும் புலையனும் (சிலப். 12: (15) அடியார்க்.)

... நுண்ணூல் சிரந்தை இரட்டும் விரலன்... (பதிற். கட. வாழ்.)

சிரல் பறவையின் சிறகு அசைவது போல் துடி கொட்டப் படலால் - சிரல் - சிரந்தை
(சிரல் = மீன்கொத்தி)

துடியொடு சிறுபறை வயிரொடு துவை செய (சிலப். 12: (20)

கருந்துடி தூங்கும் கணைக்கால் பந்தர் (பெரும்பாண். 124)

இடை சுருங்கு பறையின் பேர் துடி (சூடா. 7: 42)

துடியே உடுக்கை (பிங்க. 1524)

2. துடிக்கூத்து;
11 ஆடலுள் ஒன்று. முருகவேள் ஆடியது. வீழ்ந்தாடல் வகையது.

சூர்த்திறம் கடந்தோன் ஆடியதுடி (சிலப். 6: 51)

முருகன் அக்கடல் நடுவண், திரையே அரங்கமாக நின்று துடிகொட்டாடிய துடிக்கூத்தும் (மேலது 49–51 அடியார்க்.)

துடியாடல் வேல்முருகன் ஆடல் (சிலப். 3:14 அடியார்க். மேற்.)

3. ஏழ்மாதர் ஆடல்

கால நுட்பமும் குமரன் ஆடலும்... ஏழ்மாதர் நிருத்தமும்... துடி என் கிளவி... (பிங்க. 3650)

துடி என்பது எழுவர் மாதர் தூங்கலின் நாமம் ஆகும் (சூடா. 9: 51)

4. கூதாளம். கூதாளி

துடி, கூதாளம், கூதாளி என்ப (திவா. 801)

நிலத்திணையின் பெயர் நிலத்தின் கருவிக்கு ஆகி வந்தது. (கூதாளி - கூந்தல் பனை)

கால நுட்பமும்... ஏலமும்... துடி என் கிளவி (பிங்க. 3650)

ஏலம் துடியே (திவா. 1075)

(துடி = ஏலம்)

5. 1/2 எண்ணிக்கை
அரை எண்ணிக்கை கால அளவில் கொட்டப்படும் பறை.

← ப. த. நா. 285; தமிழர் தோற்கருவிகள். 71

## துடிக்குடிஞை:

துடியோசை போன்ற ஒலியை உடைய ஆந்தை.

துடிக்குடிஞை குடிப்பாக்கத்து (பொருந. 210)

## துடிநிலை:

வெட்சித் துறையின் ஒருபுறத்துறை
போருக்குச் செல்லும் படை வீரர்களின் மத்தியில் போர்ச்சூழலை ஏற்படுத்த துடிகொட்டும் நிலை.

மறங்கடைக் கூட்டிய துடி நிலை சிறந்த (தொ. செய். 62)

மறவர் துடிகொட்டி கொற்றவையை வழிபட்டு போரில் வெற்றியருள வேண்டி ஆடும் கூத்து.

## துடியர்:

*துடி என்னும் இசைக்கருவியை வாசிப்பவர்.*

துடியன், பாணன், பறையன், கடம்பன் (புறம். 335: 7)
உவலைக் கண்ணித் துடியன் (புறம். 269: 6)
துடிஎறியும் புலைய
எறிகோல் கொள்ளும் இழிசின (புறம்.287: 1)
சிறா அஅர் துடியர் பாடுவல் மகா அஅர் (புறம். 291: 1)
கொல்லன் துடியன் கொளை புணர் சீர் வல்ல
நல்லியாழ்ப்பாணர் தம் முன்றில் நிறைந்தன (சிலப். 12: (15)

## துணங்கை: = தழூஉ, சிங்கி

1. *விழாவில் ஆண் பெண் இருபாலரும் ஆடும் ஆடல். குழுவாக கைகோத்து ஆடுவது.*

முடங்கிய இருகை தானும் பழுப்புடை முறையே ஒற்றி(சூடா. 9: 52)
கணம்கொள் சுற்றமொடு கைபுணர்ந்து ஆடும் துணங்கை
(பெரும்பாண். 234– 35)
மகளிர் தழீஇய துணங்கையானும் (குறுந். 31: 2)
முழவு இமிழ் துணங்கை தூங்கும் விழவின் (அகம். 336: 16)
துணங்கை ஆடலும் திருநாளும் விழவும் (திவா. 2010)
துணங்கை யந்தழூஉ மணம் கமழ்சேரி (மதுரைக். 328)

2. *போர்க்களத்தில் கொற்றவையும் பேய்களும் ஆடுதல். அரசர்க்குரிய போர்க்கள ஆடல்*

குருதி பனிற்றும் புலவுக்களத் தோனே
துணங்கை ஆடிய வலம்படு கோமான் (பதிற். 57: 3–4)
நிணந்தின் வாயள் துணங்கை தூங்க (முருகு. 56)
நின் தமர் பாடும் துணங்கையுள்... (கலித். 70: 13–14)
துணங்கையர் குரவையர் அணங்கெழுந்தாடி (சிலப். 5: 70)
துணங்கை – சிங்கி (மேலதுஅரும்)
துணங்கையே விழாபேய் கூத்தாம் ஆநிரை நாளுஞ் சொல்லும்
(சூடா. 11: 12)

↑ துர் + நங்கை 'துணங்கை' யாகலாம்.

*துணங்கைக்கூத்து > துர்நங்கைக் கூத்து > நங்கைக் கூத்து*

*நங்கையர் கூத்து ; இது இன்றைய கேரளத்தில் கூடியாட்டத்தில் ஒரு வடிவாக ஆடப்படுகின்றது.*

← *செ. ப. அ. 1963; தேவ. 142/*VIII

## துணிவு தூக்கு: = துணிபுத்தூக்கு

*எழுவகைத் தூக்குகளில் ஒன்று.*

தூக்குமென்றது:– இத்தாளங்களின் வழி வரும் துணிவு தூக்கு
(சிலப். 3: 16 அரும்.)
தூக்குமென்றது:– இத்தாளங்களின் வழி வரும் துணிபுத் தூக்கு
(சிலப். 3: 16; 14:150 அடியார்க்.)

## துணை எடுப்பு:

= உயர் எடுப்பு, தொடர் எடுப்பு, இடைநிலை, தொடுப்பு, அனுபல்லவி, உபபல்லவி, துணைப் பல்லவி.

*உருப்படி (கீர்த்தனை)யில் எடுப்பு (பல்லவி)க்கு அடுத்து வருவது. எடுப்பைக் காட்டிலும் துணை எடுப்பு உயர்ந்து ஒலிப்பது. எடுப்பு சமன் மண்டிலத்திலும், துணை எடுப்பு தார மண்டிலத்திலும் இயங்குவது*

(*த. க. க 100/*I)

*(அனு - துணை, பின்னர், போன்ற, அண்மை, உடனிருந்து)*

## துணை தூரிதம்: *(அனுதுரிதம் , அனுத்ருதம்)*

*தாளத்தின் ஓர் உறுப்பு (அங்கம்). ஒருதட்டுதலை உடையது. ஓர் எண்ணிக்கை அளவுகொண்டது*

*இதன்குறி* - U

## துணைப்பல்லவி: → துணை எடுப்பு

## துணுக்கம்:

= துணுக்கு *(- உள் நடுக்கம்)*
உள்ளோசை (யாழ். அக.)

## துத்தம்:

1. *இசையின் ஏழு சுரங்களில் இரண்டாவது சுரம் 'ரி' (ரிசபம்)*

யாழினரம்பும்... ஒரிசையும்... துத்தம் (பிங்க. 3654)

2. *துத்தப்பண்; குறிஞ்சி; படுமலைப்பாலை; நடபைரவி*

வண்டொடு தேன் துத்தம் அறையும் தொடர்ந்து
(திணைமலை 120: 3–4)
வண்டினம் துத்த நின்று பண் செய்யும் சூழ்பொழில்
(தேவா. 2: 98: 10)
(செம்பாலையின் துத்தம் குரலாகிய படுமலைப் பாலையை வண்டினம் பாடியதாகக் கூறுகிறார்.)

## துத்தரி: = துத்தாரி, துத்திரி, துத்தரிக்கொம்பு

நீளமான, நேரான ஊதுகுழல் (A kind of buglehorn)

... ஊதும் சின்னமும் துத்தரிக் கொம்பும்...
(சிலம். 12: 40–42 அடியார்க்.)
மொந்தை, கல்லலகு, துத்திரி யேங்க (கல்லா. 34: 10)
கொம்பு, துத்தரி, கோடு, அதிர்பேரிகை (கம்ப. குகப். 3)
துத்தரிக்கொம்பும் துடியும் (சீவக. 434)
கத்தரிகை... துத்தரி... (தேவா. 3618)

## துத்தகாரம்:

*நாகசுரம், புல்லாங்குழல் முதலிய ஊது கருவிகளில் நாக்கினால் ஒலித்துக் கற்றுக் கொடுக்கும் முறை.*

எடு:–
பாடற் சொல் – கைத்தல நிறைகனி
துத்தகாரம் – குட்டுணு துநு துநு (த. க. க. *116*/III)

## துத்தம் குரலாயது படுமலைப்பாலை:

*வலமுறைத் திரிபில் தலைமைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி)யின் துத்தம் (ரி²)*

*குரலாக (ச) பண்ணுப் பெயர்த்தால் கிடைப்பது.*
*படுமலைப்பாலை (நடபைரவி)*

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| படுமலைப்பாலை | நி$^1$ | | ச | | ரி$^2$ | க$^1$ | | ம$^1$ | | ப | த$^1$ | |

துத்தம் குரலாயது படுமலைப்பாலை (சிலப். 17: 13 அடியார்க்.)

## துத்தம் குரலாகச் செவ்வழிப்பாலை:

*அரும்பாலை (சங்கராபரணம்) யின் குரலை (ச)த் துத்தமாக (ரி1) வைத்துப் பண் பெயர்க்கக் கிடைப்பது செவ்வழிப்பாலை (இருமத்திமத் தோடி)*

| | * | | * | | * | * | | * | | * | | * |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அரும்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| செவ்வழிப்பாலை | ரி$^1$ | | க$^1$ | | ம$^1$ | ம$^2$ | | த$^1$ | | நி$^1$ | | ச |

அரும்பாலை – ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^2$
செவ்வழி – ச ரி$^1$ க$^1$ ம$^1$ ம$^2$ த$^1$ நி$^1$
... துத்தம் குரலாகச் செவ்வழிப்பாலை... (சிலப். 3: 90 உரை)

## துத்தி: = துருத்தி, திதலை, தித்தி

ஒத்துக்கருவி (Bass - Pipe , reed instrument) *முழுமையும் ஆட்டுத்தோலால் இயன்றது. பக்க இசையாக ஊதும்* ஒத்துக்கருவி
பைத்த பாம்பின் துத்தி ஏய்ப்ப (பொருந. 69)
பொன்வரை கடுக்கும் திதலையர் (முருகு. 145)
விளங்குந் தோறும் பொன்னுரை விளங்கினாற் போலும் துத்தியினை யுடையராய் (மேலது நச்சர்)
*இசைத்துருத்தியின் பெயர் பின் வருமாறு திரியும்:-*
துருத்தி – துத்தி – தித்தி (தே.நே. 296/I)
← *செ. ப. அ. 1967; 1982*

## துத்தாரி: → துத்தரி

## துத்திரி: → துத்தரி

## துதை: *செறிவு*

தோடமை முழவின் துதை குரலாக (அகம். 82: 4)

## துந்தனா: = துந்தினா

*ஒற்றை நரம்பு இசைக்கருவி. ஒரே சமயத்தில் தாளக் கருவியாகவும், ஒத்துக்கருவியாகவும் பயன்படுவது.*
↑ இதிலிருந்து பல்நரம்புத் தம்புராவும், யாழின் ஒற்றுறுப்பும் உருமலர்ச்சி அடைந்திருக்கலாம்.
→ தன்

## துந்திநாமா: ஒருவகைத்தம்புரா (செ. ப. அ. 1968)

## துந்துபி: = பேரி, பேரிகை, துந்துமி

*பெரும் முரசு; கூம்பு வடிவானது கோனா என்ற வளைந்த குச்சியால் இயக்கப்படுவது* (Large kettle drum)
அந்தரமருங்கில் துந்துபி கறங்க (பெருங். நரவாண 1: 150)
துந்துமி யொடு குடமுழா (தேவா. 916)
சகண்டை... துந்துபி என்ப தூரிய மாகும் (பிங். 1521)
வானதுந்துபியின் நாதம் (பெரியபு. காரைக். 51)
கொட்டிப்பாடும் இத்துந்துமி யொடு (தேவா. 7: 49: 6)
சருவுங் கடல் துந்துமியும் குடமுழவங்கள்... (திருப்பு. 337)
மந்தமாருதம் துந்துபி வளர் இசை... (யாசோதர. 318: 2)
*தும்தும் என்ற ஒலியால் தும்துமி > துந்துமி*
← த. ப. வ. 290–1/III

## துந்துமி: → துந்துமி

## தும்பி:

1. *வண்டின் ஒரு சாதி*
*தும்பி 'ப' என்ற ஒத்து (சுருதி) பாடக்கூடியது.*
சுரும்பு ஆர்க்கும் குரலி னொடு, இருந்தும்பி இயைபு ஊத (கலித். 123: 2)
தும்பிதாது ஊத (கலித். 33: 23)
*தாது - இளி (ஒத்து) ; இயைபு-இளி;*
*குரல் சுரத்தோடு பெரிதும் இயைவது இளிசுரம்.*
2. *தூம்பு*
அணிவண்டு, தும்பி, வளை, பேரிகை, யாழ், (திருமந். 606)
*(இங்கு தும்பி என்பது தூம்புக் கருவியைக் குறித்தது)*
3. *சில பூச்சிகளின் தும்பி* (Antennae) *(பெ. அ.)*

## தும்பிபறத்தல்: = தும்பீபற

*மகளிரது விளையாட்டு வகை; உந்தி பறத்தல் போன்றது. மகளிர் பாடிக் கொண்டே ஆடும், இவ்விளையாட்டில் அவர் பாடுவனவாக வரும் பாடல்கள் 'தும்பிபற' என ஈற்றடி இரண்டும் முடிவு பெறுவதாக அமையும்.*
*எடு:-* 1. *திருவாசகம் 14 ஆம் பகுதி*
2. அஞ்ஞானம் போயிற்றென்று தும்பீபற – பர
மானந்தம் கண்டோமென்று தும்பீபற
(இடைக்காட்டுச்சித்தர்)

## தும்புரு:

1. *தேவலோக இசையாளர்; கந்தருவர்* (A celestial musician). *நாரதரோடு இணைத்துப் பேசப் படுபவர். தும்புரு என்ற ஒத்து (சுருதி)க்கருவி இசைப்பவர்*
நன்னரம்புடைய தும்புருவொடு நாரதனும் தம்தம் வீணை மறந்து
*(நன்னரம்பு - சுருதி சேர்க்கப்பட்ட நரம்பு)*
தும்புருநாரதர் புகுந்தனர் இவரோ (பாசுரம் திருப்பள்ளி எழுச்சி 8)

2. = *தம்புரு, தம்புரா, தும்புருயாழ், தும்புரு வீணை, தம்பூரா, தம்பூரி, தம்பூரு, தம்பூர், தன்பூர்.*
ஒத்துக்கருவி *(சுருதியாழ்)*
தும்புருக்கருவியும் துன்னி நின்று இசைப்ப (கல்லா. 82: 18)
துதிக்கும் தம்புருமீட்டி – ஸ்ரீ சுவாதி திருநாள் பக். 160
(சூரநாடுகுஞ்சம்பிள்ளை)

*தும்பு - தும்புரு - தம்புரு - தம்புரா ;*
*தும்பு - உட்துளையுள்ளது.*
↑ தும்புரு என்ற பழமையான ஒத்துக்கருவி இக்காலம் தம்புரா என்றழைக்கப்படுகிறது.
*←செ ப. அ. 1972; தெ. இ. அ. 286; த. க. க 118/III*

## தும்புருயாழ்: → தம்புரா

## துய்த்தல்: *நாடகச் சந்தி ஐந்தனுள் இறுதியானது.*

சந்தி ஐந்து வகைப்படும்:– அவை முகம்... துய்த்தல் என இவை
(சிலப். 3:13 அடியார்க்.)

## துயரி: *யாழ் நரம்பு*

தூமம் கமழும் கோதை தொடுத்த துயரி... (சீவக. 921: 1)
*← செ. ப. அ. 1974*

## துயில் உணர்ந்தோன் அவிநயம்:

இன்துயில் உணர்ந்தோன் அவிநயம் இயம்பின் ஒன்றிய குறுங்கொட்டாவியும், உயிர்ப்பும், தூங்கிய முகமும், துளங்கிய உடம்பும், ஓங்கிய திரிபும், ஒழிந்தவும் கொளலே
(சிலப். 3: 13 அடியார்க்.)

## துயிலெடை: *துயில் எழுப்புதல் ; பள்ளி எழுச்சி*

சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் (தொ. செய். 88)
பயில் பூம் பள்ளித் துயிலெடை மாக்கள் இசை கொள் ஓசையின்
(பெருங். 4: 5: 81)
தூயோமாய் வந்தோன் துயில் எழல் பாடுவான்
(பாசுரம் திருப்பாவை 16)
→ சூதர்
↑ துயிலெடை மன்னருக்கானது; திருப்பள்ளி எழுச்சி பின்னர் தெய்வத்திற்காகிவந்தது.

## துயிலெடை மாக்கள்: → சூதர்

## துயிலெழு மங்கலம்:

*அரசர் துயில் எழ, பாணர் முதலியோர் பாடும் மங்கலப்பாட்டு.*
விறலியும் பாணனும் நம் வேந்தற்குத் துயில் எழு மங்கலம் பாட வந்து நின்றார். *(திருக்கோ. 375 உரை)*
*← செ. ப. அ 1975*

## தூர்க்கை ஆடல்: = துர்க்கைக் கூத்து

*கொற்றவை ஆடிய (1) மரக்கால் கூத்து (வாள் அமலை); (2) பாண்டரங்கம்*
அசுரர் வாட அமரர்க்கு ஆடிய (சிலப். 12: (11)
... நங்கை மரக்கால் மேல் வாள் அமலை ஆடும் (சிலப். 12: (12)
... பாரதி ஆடிய வியன் பாண்டரங்கமும் (சிலப். 6: 45)
வடிவமை துர்க்கை தூக்கு மற்றது மரக்கால் என்ப. (சூடா. 9:51)

## தூர்க்கைக் கூத்து: → துர்க்கை ஆடல்

## துரங்கவதனன்: = கின்னரன், கந்தருவன்

*குதிரைமுகம் கொண்ட வானுலக இசையாளன்;*
(a celestial musician, as horse faced)
*(துரங்கம் - குதிரை ; துரங்க வதனன் - குதிரை முகத்தோன்)*

## துரங்கா: குதிரை கதி (நடை)யில் வேகமாக ஆடும் நடனம்

(நித்திய சுமங்கலி. 169)

## துரப்பமை ஆணி:

*யாழின் முருக்காணி; முடுக்குதல் அமைந்த ஆணி.*
துளைவாய் தூர்ந்த துரப்பு அமை ஆணி (பொருந. 10)

## துரம்: ஓர் இசைக்கருவி.

சங்கமும் துரமும் முரசினொடு இயம்ப (பெருங். வக்கூவ. 1:18)

## துரிதம்: (த்ருதம்): = துருதம்

*தாளத்தின் ஓர் உறுப்பு.*
*இரண்டு எண்ணிக்கை உடையது ஒரு தட்டும் ஒரு வீச்சும் கொண்டது இதன் குறி - சுழி, வட்டம் - o - 2 மாத்திரை*
கவனமும் துரிதமும் கடுப்பு ஆகுமே (திவா. 1589)
*(துரிதம் - அதிவிரைவின்பெயர்)*
*← த. க. க.* V/I; → சுழி

## துருத்தி: → துத்தி

## துருதம்: → துரிதம்

## துருபத்:

*துருவபதம் ; தாளத்திற்கு முக்கியத்துவம் தந்து படைக்கப்பட்ட இந்துத்தானி இசை உருப்படி. பாடலுக்குப் பின்பே ஆளத்தி செய்யப்படும் மரபு உடையது.*
*(துருவ பதம் > துருபத்)*
← The music of India P.168; Indian Music P.159

## துருமை: தோற்கருவி வகையுள் ஒன்று.

... முழவு... துருமை... (சிலப். 3: 27 அடியார்க்.)

## துருவதாளம்:

*ஏழுதாள வகையுள் ஒன்று. இத்தாளம் ஐந்து தாள இனங்களுடன் சேர்ந்து ஐந்து துருவ தாளங்களாகின்றன. மூன்றலகும் (லகு) ஒரு துரிதமும் என்ற உறுப்புகளை (அங்கம்) கொண்டது.*

இதன் உறுப்பு - I0I/

1. மூன்றன் (திசுர) துருவம் $- I_3 0 I_3 I_3 = 11$

2. நாலன் (சதுசுர ) துருவம் $- I_4 0 I_4 I_4 = 14$

3. ஐந்தன் (கண்ட) துருவம் $- I_5 0 I_5 I_5 = 17$

4. ஏழன் (மிசுர) துருவம் $- I_7 0 I_7 I_7 = 23$

5. ஒன்பான் (சங்கீரண) துருவம் $- I_9 0 I_9 I_9 = 29$

## துருவம்:

1. துருவதாளம்
2. ஓர் ஆடல் (யாழ். அக.)

## துருவை: *கீத உறுப்பு நான்கனுள் ஒன்று*

நாலுறுப்பாவன:– உக்கிரம், துருவை, ஆபோகம், பிரகலை என இவை (சிலப். 3: 150 உரை)

← *செ. ப. அ. 1985*

## துலாப்பாட்டு: → ஏற்றம்

## துலாம்: → துலை

## துலை: = துலாம், கோல்

*இசையில் குரல் சுரம்(ச) நிற்கும் ஓரைத்தானம். (துலை - கோல், தராசு)*

தெரிகோல் ஞமன்ன் போல (புறம். 6)

ஒருதுலைப்புறவொடு ஒக்கநிறை புக்க புகழும் (கலிங்க இராச. 93)

கொலையே... துலையேறி வீற்றிருந்த சோழன் (குலோத். உலா. 17)

உலகறிய... தூக்கும் துலைபுக்க தூயோனும் (விக்கிரம. உலா. 10–11)

புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை (கம்ப. திருஅவதார. 64)

"இளி இடபம்... குரல்கோல்... மீனமாம்"(சிலப். 17(13) அரும். மேற்.)

"துலைநிலைக் குரலும்... அணைவுறக் கொளளே" (சிலப். 17: (13) அடியார்க்.மேற்.)

## துலைநிலைக்குரல்:

*வட்டப்பாலையின் வல முறையில் குரல் சுரம்(ச) நிற்கும் துலாம் ஓரை (இராசி)யைக் குறிப்பிடுவது.*

"குரல் துலை... தொல் ஏழிசை நரம்பிற்காம் (சிலப். 17: எடுத். அரும். மேற்.)

→ துலை; வட்டப்பாலை பக். 476–77

## துவனி: *தொனி, ஒலி* (sound, noise)

தூய வானவர் வேதத் துவனியே (தேவா. 1)

துவனித்தவர் வெம்படை தூவுதலும் (பாரத. நிவாத. 70)

*துவனி - த்வனி - தொனி ; துவனித்தல் = ஒலித்தல்*

## துவாசந்தி: → துவிசாவந்தி

## துவிஜெவந்தி: → துவிசாவந்தி

## துஜாவந்தி: → துவிசாவந்தி

## துவிசா வந்தி:

= துவாசந்தி, துஜாவந்தி, துவிஜெவந்தி, ஜெஜெவந்தி *பண்களில் ஒன்று*

*ஜெஜெவந்தி - துவிஜெவந்தி*

*(துவி = இரண்டு)*

← *பரத. இராக. 55 & 104*

## துவிதந்திரிகா:

*இரண்டு நரம்புடைய கின்னரம் ஐதராபாத் செஞ்சுமக்கள் பாவிக்கும் கின்னரி.*

*(துவி - இரண்டு; தந்திரிகா - தந்திரி = நரம்பு)*

← *இசையும் யாழும் பக். 238*

## துவிபதை: → திபதை

## துவிகளை: → இருகளை

## துவை: *ஒலி*

துடியொடு சிறுபறை வயிரொடு துவை செய (சிலப். 12 (20)

துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும் இசைப் பொருட் கிளவி என்மனார் புலவர் (தொ. சொ. உரி. 60)

தொண்டகம் துவைப்ப முருகியம் கரங்க (கல்லா. 7:12)

கறங்குமணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை (மலைபடு. 573)

முகன் ஐந்து மணத்த முழவம் துவைக்க (கல்லா. 85: 20)

இதழ் அவிழ் தாமரையெனும் தருணித்தம் துவைப்ப (கல்லா. 27–28)

## துள்ளல்:

1. *ஆடல், கூத்தாடுதல்*

*ஒப்பு:- பேட்டை துள்ளல் - ஐயப்பன்கோவில்*
*ஓட்டந்துள்ளல் - மலைநாட்டு ஆடல்*
*பாம்பின் துள்ளல் - (பாம்பாட்டம்)*
*கோலம் துள்ளல், தும்பி துள்ளல்*

தனிமுக மலர்ந்து தம்மிசை பாடக் கூனியும் துள்ள ஆடிய நாயக (கல்லா. 100: 27– 28)

வானவர்க்கும் காண்ப அரிதாகி நின்ற துள்ளலை (தேவா. 489: 6)

"... கேரளாவில் வழக்கிலுள்ள நடனங்களுடன் தொடர்புள்ளதாக உள்ளது. ஒட்டந்துள்ளல், பாம்பின் துள்ளல், கோலம் துள்ளல் என்பன இதை எடுத்துக் காட்டுகின்றன" (ப. த. நா. 261)

2. *துள்ளல் ஓசை* (Rhythmic cadence peculiar to kaliverse) *கலிப்பாவின் ஓசை ஒழுகு நடைத்தன்றி இடையிடை உயர்ந்து வருதலாகும். வெண்டளையும், கலித்தளையும் கலந்து வருவதால் ஏற்படும் செய்யுள் ஓசை.*

இன்பல் இமிழ் இசை கேட்டு, கலி சிறந்து (அகம். 82: 7)

களிற்றுக் கன்று ஒழித்த உவகையர் கலி சிறந்து (அகம். 83:4)

3. சந்தத்தின் முடுகு இசை

4. டேக்கா

தாளச் சொற்களின் ஊடே எழுத்துக்களை விடுத்துக் காலம் எடுத்து ஒலிப்பது துள்ளல்

← ப. இ. இ. பக். 320

5. நாட்டிய வகையுள் ஒன்று

இரண்டாம் ஏகோஜி என்ற பாபா சாகேப் அரசவையில் முத்து மங்கை என்ற ஆடல் மகள் சிறந்த முறையில் ஜக்கினி, பதசாலி, துள்ளல், அவிநயம் போன்ற நாட்டிய வகைகளை ஆடியுள்ளார்.

(ஞானா கானம் 238)

6. சந்தங்கள்

சந்த, வண்ணப் பாடல்களில் சந்தங்கள் சில சேர்ந்தது துள்ளல்.

தத், தன போன்றவை சந்தங்கள்

தத்தத், தனதன என்று சந்தங்கள் சேர்வது துள்ளல்

முத்தைத்தரு - தத்தத்தன - இதில் தத்தத், தன என்று இரு சந்தங்கள் சேர்ந்து ஒரு துள்ளலாகியுள்ளது.

7. எண்வகை இசை எழால்களுள் (கலைத்தொழில்) ஒன்று

... துள்ளற்கண்ணும் குடக்குத்துள்ளும்... (சிலப். 7: 5-8 அரும்)

8. துள்ளல்வரி

சிலம்பு. கானல்வரியிலுள்ள 'பவள உலக்கை' முதலிய மூன்றும் 7: (20); (21); (22) துள்ளல் வரியாகும்

"இச்செய்யுள் முதலிய மூன்றும் நிலைவரி என்றும், துள்ளல் வரி என்றும் துள்ளல் ஓசை யென்றும் மூலமட்டும் உள்ள சில பிரதிகளில் எழுதப் பெற்றுள்ளன. (மேலது அடிக்.)

## துள்ளல் தூக்கு: → துள்ளுமம்

## துள்ளல் செலவு:

யாழ் வாசிப்பு முறையுள் ஒன்று.

குடகச் செலவும் துள்ளல் செலவும் (சீவக. 657 உரை)

## துள்ளல் வரி: → துள்ளல்[8]

## துள்ளுமம்:

= துள்ளல் தூக்கு, தாளத்துள்ளுமம், டேக்கா

தகதின என்ற முழுச்சொல்லின் நாலு இடங்களுள் ஏதாவது ஓரிடத்தில் அல்லது ஈரிடத்தில் ஒலிக்காமல் சொற்கட்டு துள்ளி நடைபோட்டுச் செல்வது துள்ளுமம். இடையில் விட்டொலிக் கும் ஓசையே துள்ளல் ஓசை.

← த. வ. 140 & 146,→ துள்ளல்

## துளைக்கருவி:

தோல்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி என்ற இசைக்கருவி வகை நான்கனுள் ஒன்று. காற்று அதிர்வினால் இசை தரும் கருவி. நேராகவோ அன்றிச் சீவாளியின் மூலமாகவோ காற்றுத் தருவதினால் துளைக்கருவிகளில் இசை உருவாகின்றது.

எடு:- குழல் - நேரடியாகக்காற்று தருவதால்

நாகசுரம் - சீவாளி மூலம் காற்று தருவதால்

துளைக்கருவியாலும், நரம்புக் கருவியாலும்.

(சிலப். 5: 35 – 7 அடியார்க்.)

துளைக்கை - தும்பிக்கை (உட்துளையுள்ளது)

(துளை = துவாரம், hole)

## துளைக்கருவி 12:

பண்டைக்காலமுதல் வழக்கில் இருந்துள்ள துளைக்கருவிகள் 12:

பூரிகை, நாகசுரம், பொற்சின்னம், எக்காளை

தாரை, நவரி, சங்கு, வாய்வீணை, – வீரியஞ்சேர்

கொம்பு, துத்தி, காளை, குழலுடன் ஈராறும்

இன்பார் துளைக்கருவி என · (த. ப. வ. பக். 345/III)

## துளையரியம்:

ஊது கொம்பு (யாழ். அக.) (trumpet,horn)

← செ. ப. அ. பிற். 319

## துறை:

1. தாழிசை, துறை, மண்டிலம் (விருத்தம்) என்ற மூன்று பாவினங்களுள் ஒன்று.

2. இசைப்பாட்டு வகை

எடு:- கட்டளைக் கலித்துறை, வெண்டுறை

## துறைப்பாட்டுமடை:

துறை சார்ந்த இசைப்பாடல்கள் காப்பியத்தின் இடையே வருவது.

துறைப்பாட்டுக்களை நடுவே மடுத்தல் (சிலப். 12: 17 அடியார்க்.)

சிலம்பு . வேட்டுவவரி பாடல் (15), (16), (17) இவை மூன்றும் துறைப்பாட்டுக்கள்.

துறைப்பாட்டு – வெட்சித்துறை சொன்ன பாட்டு (மேலது அரும்)

## துன்னகாரர்:

1. பாணர்

துன்னகாரர் – பாணர் (சிலப். 5: 32 அரும்)

2. துன்னர், துன்னவினைஞர், தையல்காரர், (மேலது அடியார்க்.)

தோலின் துன்னரும் துன்னவினைஞரும் (மணிமேக. 28: 39)

துன்னகாரரும் தோலின் துன்னரும் (சிலப். 5: 32 அரும்)

துன்னகாரர் – சிப்பியர் – தையல்காரர் (மேலது அடியார்க்.)

துன்னல் = தையல் வேலை ; துன்னகாரர் – தையல்காரர்; துன்னூசி = தையல் ஊசி / துன்னம் – தையல் (ம. வ.)

↑ உரைகாரர்களின் காலமான கி.பி 12 ஆம் நூற்றாண்டளவிலேயே பாணர் மரபு வீழ்ச்சியடைந்து, அவர்கள் தையல் தொழிலை மேற்கொண்டது இதன் மூலம் அறியற்பாலது.

## துன்னர்: → துன்னகாரர் [2]

# தூ

## தூக்கின் வகை ஏழு:

*சீர்வழி வகைப்படுத்தப்பட்ட தாள வகைகள்; அதாவது தாள வழிப்பட்ட தூக்குகள் ஏழு. அவை:-*

| | |
|---|---|
| 1. செந்தூக்கு | 1 சீர் – வா – வா – போ – போ |
| 2. மதலைத்தூக்கு | 2 சீர் – பலபல – நலமிக |
| 3. துணிபுத்தூக்கு | 3 சீர் – இறைமை – ஒன்றே – உளது |
| 4. கோயில்தூக்கு | 4 சீர் – ஞாயிறு – போற்றுதும் – ஞாயிறுபோற்றுதும் |
| 5. நிவப்புத் தூக்கு | 5 சீர் – நீராரும் – கடலுடுத்த – நிலமடந்தைக் – கெழி லொழு – கும் |
| 6. கழால் தூக்கு | 6 சீர் – நலமுறு – செயல்களை – நாளும் – பலமுறச் – செய்வது – பற்றாம் |
| 7. நெடுந்தூக்கு | 7 சீர் – அகர –முதல – எழுத்தெல்லாம் – ஆதி – பகவன் – முதற்றே – உலகு |

ஒரு சீர் செந்தூக்கு... எழுசீர் நெடுந்தூக்கு என்மனார் புலவர்.
(சிலப். 3: 16; 14: 150 அடியார்க். மேற்.)

← *த க. க. 122-23*/III,→ தூக்கு

## தூக்கு:

1. *கூத்து*

நடமே, நாடகம், பரதம், தூக்கு... இலையம்... கூத்தெனப் பகர்வர் (பிங்க 1444)

நடை, நட்டம், ... தூக்கு.... தாண்டவம் (சூடா. 9: 48)

தூக்கு என்ப பாட்டும் கூத்தும் (சூடா. 11: 9)

2. *சொற்கட்டு*

*(கூத்திற்கான) தாளத்தால் அமைந்த சொற்கட்டுகள்.*

தூக்குத்தாளம் தருவானோ (கலித். கடவு. வாழ்)

ஆடலும், பாடலும் பாணியும் தூக்கும் (சிலப். 3: 16)

கூத்தும், பாட்டும், தாளமும், தூக்கும் (மேலது உரை)

கொட்டும், அசையும், தூக்கும், அளவும் ஒட்டப் புணர்ப்பது பாணியாகும். (மேலது அடியார்க். மேற்.)

தாளங்களின் வழிவந்த தூக்குகளுக்கும் (சிலப். 3: 12 – 25 அடியார்க்.)

ஆடலும், வரியும், பாணியும், தூக்கும் (சிலப். 14: 150 அரும்)

3. *உள்ளோசை, உள்ளாளம்*

*தாளக்கால அளவுகளுள் கமகம் இசைத்தல்.*

*11 வகை உள்ளாளங்களுள் (கமகம்) ஒன்று.*

4. *நாட்டிய நிலைகளுள் ஒன்று.*

*நடனக்கலையில் கை மற்றும் காலைத் தாளத்திற்கு ஏற்பத் தூக்கி நிறுத்தல். இது ஆடலில் உடல் உறுப்புகளைத் தூக்குதல் ஆகும்.*

5. *பாட்டு*

துலாமும், உறியும், கூத்தும், பாட்டும், உசாவுதலும் இவை தூக்கு எனலாகும். (பிங்க. 3665)

பாணி, நடை ,தூக்கு (பு.வெ. 12 வென்றிப். 17)

6. *நால்வகைத் தாளங்களுள் ஒன்று.*

தூக்கு – 2 மாத்திரை; அதற்கு வடிவு – உ

தூக்காவது – தாக்கித் தூக்குதல் (சிலப். 3:16 அடியார்க்.)

↑ஆடலும், வரியும், பாணியும், தூக்கும் (சிலப். 14: 150 அரும்)

"பாணியும் தூக்கும்" என்றதில் பாணி – பாடலுக்கான தாளம் கூறிவிட்டார். எனவே தூக்கு என்று தனியே ஒன்று கூறியதால் இது ஆடலுக்கான சொற்கட்டு ஆகலாம்.

## தூங்க: *ஆட, கூத்தாட* (to dance)

நிணம் தின் வாயள் துணங்கை தூங்க (முருகு. 56)

துணங்கைக் கூத்தாட (மேலது நச்சர்)

அறல், குழல், பாணி தூங்கிய வரொடு (சிறுபாண். 162)

மகளிரொடு குரவை தூங்கும் (அகம். 232: 9)

ஒண்ணுதல் விறலியர் பாணி தூங்க (பொருந. 110)

*பாணி தூங்க - தாளத்திற்கு ஆட*

தூங்கல், ஆடல், தாழ்வும் வேழமும் (திவா. 2143)

## தூங்கல்:

1. *அசைவு, ஆடல், கூத்து*

துகில் முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்கு நடை (முல்லைப். 53)

தண்குரவைச் சீர் தூங்குந்து (புறம். 24: 6)

துடி என்பது எழுவர் மாதர் தூங்கலின் நாமம் ஆகும் (சூடா. 9: 51)

மகளிரொடு குரவை தூங்கும் (அகம் 232: 9)

நடமே, நட்டம், பரதம்... தூங்கல்... கூத்து எனப்படுமே... (திவா. 1752)

*தூங்கல் ஓசை - கூத்திற்குரிய ஓசை - வஞ்சிப்பா ஓசை*

↑ கூத்திற்குரிய பாடல் பதிவு இல்லை. எனவே சங்க இலக்கியங்களில் வஞ்சியாப்பு பெற்ற இலக்கியம் எதுவும் கிடைக்கவில்லை.

2. *முதல் நடையில் (மெதுநடை - விளம்பித காலம்) செல்லும் இசை*

← *அ. நி.*

3. வஞ்சிப்பாவின் ஓசை (the slow measure of vanci metre. Rhythm peculiar to vanci verse)

தூங்கல் ஓசை வஞ்சியாகும் (தொ.பொ. 396)

வஞ்சிப்பா - நாடகப்பாவடிவம்
ஒப்பு:- வஞ்சிப்பாட்டு – ஒரு பழைய நாடக நூல்.
(தொ. பொ. 492 பேரா)
← செ. ப. அ. 2012, → தூங்கல் ஓசை
வஞ்சிப்பா - ஆடல்பா
↑ தூங்கல் – ஆடல்; தூங்கலோசை – ஆடற்குரிய இசை. 'ஆடல்' கலையாக இருப்பதால் (கூத்தர்– இழிசினர்) ஆடற்குரிய இசை பதிவு பெறவில்லை. எனவே சங்க இலக்கியங்களில் வஞ்சிப்பாவால் அமைந்த இலக்கியம் உருவாகவில்லை என்று கூறலாம்
→ தூங்கல்

## தூங்கல் வண்ணம்:

வஞ்சியின் ஓசையான தூங்கலோசை பயின்று வரும் சந்தம்.
தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும் (தொ. பொ. 542)
← செ ப. அ. 2012

## தூங்கிசை அகவல்:

நிரையொன்றாசிரியத் தளையான் வரும் அகவல் பாவுக்குரிய ஓசை.

## தூங்கிசைச் செப்பல்:

இயற்சீர் வெண்டளையான் மாமுன் நிரையும், விளமுன் நேருமாக வரும் வெண்பாவுக்குரிய ஓசை.
← செ. ப. அ. 2012

## தூங்கிசைத்துள்ளல்:

கலிப்பாவிற்குரிய ஓசை வகை. (யாழ். அக.)

## தூங்கு கொளை:

மந்தகதியில் அமைந்த இசைப்பாடல்
தூங்கு கொளை முழவின் (பதிற். 43: 30)

## தூங்கும்:

1. ஆடும்
முழவு இமிழ் துணங்கை தூங்கிய விழவின் (அகம். 336:16)
2. பாடும், இசைக்கும்
அறல்குழல் பாணி தூங்கி (சிறுபாண். 162)

## தூசி:

தாளத்தின் மிகமிக நுண்ணிய கால அளவு.
வட்டணையும் தூசியும் மண்டலமும் பண்ணமைய (சீவக. 673. நச்சர்)
← த. க. க 123 /III

## தூண்டில்: வரிக்கூத்து வகையுள் ஒன்று.

சிந்து... தூண்டிலுடன்... கோத்தவரிக் கூத்தின் குலம்..
(சிலப். 3:1 3 அடியார்க். மேற்.)

## தூபம்: → புகைக்கை

## தூபக்கை: → புகைக்கை

## தூபமணி: கைமணி

கடவுளுக்குத் தூபம் காட்டும் போது ஆட்டி ஒலிக்கும் மணி வகை.
தூபமணி 1 (தெ. இ. க. 13 35. த. க. சொ. 327)

## தூம்பு: (Boobam - from Bamboo)) உட்துளை (Tubularity, proboscis)

1. உட்துளைக்கருவி
தூம்புடைத்திரள்தாள் துமித்த வினைஞர் (பெரும்பாண்.231)
தூம்புடைத்தடக்கை (புறம் 19)
2. மூங்கில்
காம்பு... தூம்பு... மூங்கில் எனவகுத்தனரே (திவா. 703)
3. ஒத்துக்குழல்.
வங்கியம், நெடுவங்கியம், கண்விடுதூம்பு, பெருவங்கியம், நெடுங்குழல், குறுந்தூம்பு, நெடுந்தூம்பு, குறுநெடுந்தூம்பு (என வகை வகையான தூம்புக் கருவிகள் வழக்கில் இருந்துள்ளன.)
தும்பு > தூம்பு
தும்பு + உரு – தும்புரு > தம்புரு > தம்புரா என்று ஆகிஇருக்கலாம்.
தும்புரு நாரதர்புகுந்தனர் இவரோ (பாசுரம் திருப். 8)
குறுநெடுந் தூம்பமொடு முழவுப் புணர்ந்து இசைப்ப
(அகம். 301: 17)
கண் இடை விடுத்த களிறு உயிர்தூம்பின் (மலைபடு. 6)
கண்களின் நடுவே வெளியாகத் திறந்த யானையின் கைபோலும் நெடுவங்கியம் (நச்சர்)
கழைவளர் தூம்பின் கண் இடம் இமிர (மலைபடு 533)
கண்ணறுத்து இயற்றிய தூம்பொடு சுருக்கி (பதிற். 41: 4)
கார் தூம்பு அற்றது வான் என ஒரு சார். (பரி. 7: 30)
கண்விடு தூம்பின் களிற்று உயிர் தொடுமின் (புறம். 152: 15)
தூம்பு – பெருவங்கியம் – பழைய உரை
தொகு சொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும் (அகம். 111: 9)
இளிப்பயிர் இமிரும் குறும்பரந்தூம்பொடு (மலைபடு. 7)
வாயிலும், உட்தொளைப் பொருளும், மூங்கிலும், மரக்காலும் மதகும், தூம்பு எனலாகும் (பிங்க. 3669)
தும்பி - உட்துளை உறுப்பை உடைய குளவி, யானை
← Ox. con. Dic. of Music.P. 90

## தூய நட்டம்: → சொக்கம்

## தூரம்: ஓர் இசைக்கருவி (அ.நி.)

தூரம் > தூரியம்

## தூரிய கண்டம்: ஓர் இசைக்கருவி (யாழ். அக.)

## தூரியம்:

*ஓர் இசைக்கருவி; துந்துபி; உவகைப்பறை; முரசு; மங்கலப்பறை* (A large drum)

**தோரணம் நீடுக தூரியம் ஆர்க்க... (திருக்கோவையார் 296)**

**அந்தி விழவில் தூரியம் கறங்க (மதுரைக். 460)**

**உவகைப் பறையே தூரிய மாகும். (பிங்க. 1523)**

**தூரிய மூவகைப் பறை எனச் சொல்ப (திவா. 1232 பின். 98)**

**துகில், பறை, முரசு பேர் எழுதும் தூரியம் (பிங்க. 3670)**

## தூரியாங்கம்:

*விரும்பிய வண்ணம் எல்லாவித இசைக் கருவிகளையும் தரும் கற்பக தருவகை. (தக்கயாகப். 757குறிப்பு)*

## தூவழி: *பண்களில் ஒன்று*

**தும்பி வண்டொடு தூவழி யாழ். (சீவக. 854)**

**↑ தூவழி என்பது செவ்வழியாகலாம்.**

# தெ

## தெடாரி: = தடாரி

தெடாரித் தெண்கண் தெளிர்ப்ப ஒற்றி (புறம். 368: 15)

→ தடாரி

## தெண்கிணை:

*கிணைப்பறை; தடாரி; மருதநிலப்பறை*

பாடு இன் தெண்கிணைப் பாடு கேட்டு அஞ்சி (அகம். 226: 15)

பாடு இன் தெண்கிணை கறங்க (அகம். 301: 10)

## தெண்கண் மாக்கிணை: போர்க்கள முரசம்

நுண்கோல் தகைத்த தெண்கண் மாக்கிணை (புறம். 70: 3)

தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி (புறம். 374: 6)

கிடைக்காழ் அன்ன தெண்கண் மாக்கிணை (புறம். 382: 18)

தெண்கண். மாக்கிணை இயக்கி (புறம் 387: 4)

தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி (புறம். 397: 10)

*தெள் (தேர்ந்த - தெளிந்த) > தெண்*

## தெம்பாங்கு: → தெம்மாங்கு

## தெம்மாங்கு: = தென்பாங்கு, தெம்பாங்கு

*சிற்றூர் மக்கள் பாடும் பாடல். இப்பாடல்களே பின்னர் செவ்விசைப்பாடல்களாக மலர்ந்தன. இடைமடக்கு, அடிமடக்கு, எடுப்பு (பல்லவி, Refrain) முதலியவை தெம்மாங்குப் பாடல் வழி வந்தவை. தென்தமிழ்நாட்டு,நாட்டுப்புற மக்களால் பாடப் படும் பாட்டாகையால் இது தென்பாங்கு (தெம் மாங்கு) என்று பெயர் பெற்றது எனலாம்.*

எடு:- வட்ட வட்டப் பாறையிலே – குட்டி
வரகரிசி தீட்டையிலே
ஆர்கொடுத்த சாயச்சீலை – குட்டி
ஆலவட்டம் போடுதடீ !

தென் இசைபாடும் பாணன் (திருவாலவா. 56: 7)

*பாங்கு = முறை, வழக்கு, பாணி (style)*

*தென்பாங்கு > தெம்மாங்கு (திரிபு வழக்கு)*

↑ தென் – இசை, பாடல்

தென் இசை, வனப்பும், தெற்கும், ஓர்பாடலும் (பிங்க. 3675)

*இசைப்பாடல் பாடும் ஒரு முறையும் ஆகலாம்.*

← *செ. ப. அ. 2030; த. க. க. 125-26*/III

## தெய் தெய்:

*தாளக்குறிப்பு; தாளச் சொற்கட்டு; ஒலிக்குறிப்புச் சொல். தாளக்கட்டுக்குரிய நாட்டுப்புறப் பாட்டுச் சொல். இந்த சொற்கட்டு தெய்ய தெய்ய, தைய தைய, தையர தையர, தெய்யோ தெய்யோ என்றும் மாறி வரும்.*

சொல் இனித் தெய்யயாம் தெரியுமாறே (அகம். 220: 22)

வாராய் ஆராயின் வாழேம் தெய்யோ (ஐங். 239: 5)

↑ மாடு ஓட்டுபவர்கள் **'தெய்தெய்'** என்று கூறி மாடுகளை விரைவாக ஓட்டுவார்கள். ஓடம் விடும்போது இச்சொல் தாளத்துடன் பாடப்படுகின்றது.

← *செ. ப. அ. 2030; த. க. க 126*/III

## தெய்யம்: (ம. வ.)

*சடங்கு ஆட்டம் (தெய்யம் - தெய்வம்)*

## தெய்வகன்னி: தேவரடியாள்

*கோவில்த் தெய்வகன்னிகளில் சிறப்புக்குடி*

(KADDT, *1968/ 203* - *த. க. செ.* 328)

## தெய்வம் சுட்டிய வரிப்பாடல்:

*இறைவனைப் போற்றிப்பாடும் இசைப்பாடல். "பண்ணும் திறமும் செயலும் பாணியும் ஒரு நெறியன்றி, மயங்கச் சொல்லப்பட்ட எட்டன் இயல்பும், ஆறன் இயல்பும் பெற்றுத், தன்முதலும் இறுதியும் கெட்டு, இயல்பும் முடமுமாக முடிந்து, கருதப்பட்ட சந்தியும் சார்த்துப் பெற்றும் பெறாதும் வரும். அதுதான் தெய்வம் சுட்டியும் மக்களைப் பழிச்சியும் வரும்".*

எடு:– அழலணங்கு... சொல்லா வன்றே... (சிலப். 3: 16 அரும்)

↑ மேற்கண்ட இலக்கணம் தரவு இன்றாகி (தொ. செ. 148) என்ற கொச்சகஒருபோகு யாப்பின் இலக்கணத்தை ஓரளவு ஒத்துள்ளது.

## தெய்வமுற்றோன் அவிநயம்:

"தெய்வ முற்றோன் அவிநயம் செப்பில்
கைவிட்டெறிந்த கலக்கமுடைமையு
மடித்தெயிறு கெளவிய வாய்த்தொழிலு டைமையும்
துடித்த புருவமுந் துளங்கிய நிலையும்,
செய்ய முகமும் சேர்ந்த செருக்கும்,
எய்து மென்ப இயல்புணர்ந்தோரே" (சிலப். 3: அடியார்க்.மேற்.)

## தெய்வமுறல்:

தெய்வமேறல் ; ஒருவர் மீது தெய்வம் வரப் பெறல்.

தெய்வமுற்றறெழுந்து மெய்ம்மயிர் நிறுத்து (சிலப். 12: 8)
திருமா மணியெனத் தெய்வமுற்றுரைப்ப (சிலப். 12: 50)
தெய்வமுற்றாள் போலும் தகையள் இது என்கொல் (சிலப். 19: 26)

## தெரிநிலை: = தெரிநிலைக்கை

ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று.

தெரிநிலையாவது – எல்லா விரலும் விரிந்து குஞ்சித்து நிற்பது; என்னை?

"தெரிநிலை என்பது செய்யுங்காலை, ஐந்து விரலும் மலர்ந்து குஞ்சித்த, கைவகை என்ப கற்றறிந் தோரே"
(சிலப். 3: 18 அடியார்க். மேற்.)

## தெருக்கூத்து:

= கம்புக்கூத்து, கட்டைக்கூத்து,நாட்டைக்கூத்து

தெருவெளியில், தெருவே களமாக (அரங்கமாக) நடக்கும் நாடகம். சிற்றூர் மக்கள் கதை தழுவிய நாடகத்தைச் சிற்றூர்ப் பாணியில் நடித்துக் காட்டுவதோர் கூத்து. வட்டமாக வந்து ஆடும் ஆட்டங்கள் (கிறிக்கி) மற்றும் பல்வேறு அடைவுகள் அதிகமிருக்கும். விருத்தங்கள், கண்ணிகள், கீர்த்தனைகள், உரையாடல், பாடல்கள் முதலியன / தெருக் கூத்தில் அமைந்திருக்கும் தெருக்கூத்து தொடங்குமுன் 24 அடி நீளமுள்ள மூங்கில் கம்பு பூசை செய்யப்பட்டு அரங்கின் இடதுபக்கம் நட்டு வைக்கப்படுவதால் கம்புக்கூத்து என்றும் பெயர் பெறும்

↑ ஆடல், கூத்து, நாடகம் இவைகளில் 'மூங்கில்' ஏதோ ஒரு வகையில் இடம் பெறுகின்றது. இந்திரச் சிறுவன் சயந்தன் 'மூங்கில்' பிறப்பு என்ற தொன்மம் இத்துடன் தொடர்புடையதாகலாம். மற்றும் 'தலைக்கோல்' மூங்கிலால் ஆனது என்பதும் எண்ணற்குரியது.

ஒரு வகை மரக்கட்டைகளை அணிகலனாக ஆக்கிகூத்தில் அணிந்து கொள்வதால் கட்டைக் கூத்து என்றும் பெயர் பெறுகின்றது.

ஆடலுக்கென்றே அமைந்த நாட்டைப் பண் கம்பீரமாகவும் அடிக்கடியும் (விழிப்பை ஏற்படுத்தவும்) இசைக்கப்படுவதால் நாட்டைக் கூத்து (நாட்டக் கூத்து) என்றும் அழைக்கப்படுகிறது.

←செ.ப.அ.2037; த.க.க 127 III; நாடகக்கலைக்களஞ்.19

## தெருட்டல்:

எண் வகை இசைக்கரணங்களுள் ஒன்று. இசை நரம்பின் தெளிந்த ஓசை, தெருளல் அல்லது தெருட்டல் ஒலித் தெளிவுக்காலக் கணக்கும் தெளிவும் பொங்க உருட்டல்.

சீருடன் உருட்டல் தெருட்டல் அள்ளல் (சிலப். 7:13)
தெருட்டல் என்றது செப்புங்காலை உருட்டி வருவது ஒன்றே
(கரண ஒத்து– இசைத்தமிழ் 16 படலம்) (சிலப். 7: 12 – 6 அரும். மேற்.)

தெருட்டவும் தெருளாது ஊடலொடு துயில்வோர்
(மணிமேக. 7: 52)

← த. க. க. 128/III; ப. இ. இ. 223

## தெவிட்டல்: ஒலித்தல்

தெவிட்டலே அடைத்தல், கான்றல், நிறைதலும், ஒலியும் செய்யும்
(சூடா. 11: 8)
ஒலித்தலும்... தெவிட்டல் என்னும் கிளவியின் சிறக்கும்
(திவா. 2113)

## தெள்இசை: தெளிந்த இசை; தேர்ந்த இசை

சிறுநா ஒண் மணித் தெள் இசை கடுப்ப (நற். 267: 9)
தேர்மணித் தெள்இசை (நற். 287: 10)

(தெள் - தேர்ந்த , சிறந்த , இனிய)

## தெள்விளி: இசைப்பாட்டு (Lyric)

... தீம்குழல் புலம்பு கொள் தெள்விளி (அகம். 399: 12)
தீந்தொடை மகர வீணைத் தெள்விளி எடுப்பி (சீவக. 608: 1)
நரம்புறு தெள்விழி (மேலது 661)
நெடுங்கால் கணந்துள் அம்புலம்பு கொள் தெள்விளி (நற். 212: 2)
வள்ளுயிர்த் தெள்விளி இடை இடைப் பயிற்றி (குறிஞ். 100)
வறுஞ்சுனை முகந்த கோடைத் தெள்விளி (அகம். 321: 2)
ஆம்பல் அம் தீங்குழல் தெள்விளி பயிற்ற (குறிஞ். 222)
எல்வளை மகளிர் தெள்விளி இசைப்பில் (பதிற். 27: 7)

தெள் - தெளிந்த, தேர்ந்த ; விளி - பாட்டு
தெள்விளி - தெளிந்த பாட்டு (சீவக. 661 நச்சர். உரை. அடிக்.)

↑ விளி – விளித்து (அழைத்து– அகவி) ப் பாடுதல். எனவே தெள்விளி. அகவல் பாடலுக்கு முந்தைய ஓர் இசைப்பாட்டு வடிவாகலாம்.

→ தென் இசை

## தெள்ளேணம்:

தெள்ளுதல் பாட்டு; புடைத்தல் பாட்டு
தெள்ளு + ஏணம்
தெள்ளுதல் - தானியங்களைப் புடைத்தல்; ஏனம் - உயரே செல்லுமாறு தள்ளுதல்
ஒப்பு:- தவிடு தெள்ளுதல் (சிற். வழ.)

→ திருத்தெள்ளேணம்

மகளிர் தானியங்களைப் புடைத்து நேம்பித் தெள்ளும் போது முறத்தில் (சொளவு) அடிப்பகுதியைக் கையால் தாளத்திற்குத் தட்டிக் கொண்டு பாடும் ஒரு வகைத் தொழில் பாட்டு.

தெள்ளேணம் கொட்டோமோ (திருவாசக. 11: 1)

மாணிக்கவாசகர் திருத்தெள்ளேணத்தில் இவ்வகைப் பாடல்கள் 20 பாடியுள்ளார். இவை ஐந்தன் நடையில் (கண்டம்) தரவு கொச்சகத்தால் அமைந்த இசைப்பாடல்கள்

← த. க. க 131

## தெளிர்: = ரவை

பிங்கலம் கூறும் 6 உள்ளோசை (கமகம்) களுள் ஒன்று. ஓசை தூவுதலே தெளிர். இக்காலத்தார் இதை 'ரவை' என்பர். நுண் ஒலிகளை ஒரு நரம்பிலிருந்து தூவுதலே தெளிர் (Vibrating sound of a lute)

**ஒப்பு:– தண்ணீர் தெளித்தல்**

**முரல்வும், நரல்வும், தெளிரும், ஞெளிரும், விழைவும், நுணுக்கமும் உள்ளோசை என்ப (பிங்க. 1436)**

← செ. ப. அ. 2041

## தென்பாங்கு: → தெம்மாங்கு

## தென்ன:

இசைபாடும் போது பயன்படும் சொல்; சந்தத் துள்ளல்.

**தென்ன வென்று வண்டு இன்னிசை முரல தரும் (பாசுரம் 3: 1: 2)**

**வரிவண்டு தேதென என்று இசைபாடும் (பாசுரம் 4: 1: 1)**

**"மண்ணுு மணிகண்... தென்ன என்னும் இசைவளர்த்து"**

**(சிலப். 8: 39 – 41 அரும். மேற்.)**

**→ தன்**

## தென்ன தெனா:

இசைச் சொற்கட்டுகள். தென்னக மக்கள் தம் இசையில் தென்னா என்றும் தெனா என்றும் சொற்கட்டுகளைக் கலந்து பாடுவார்கள். செவ்விசையில் ஆளத்தி பாடுங்கால் இச்சொற்களில் பாடுகின்றனர்.

**தென்னாத் தெனா என்று பாடுவரேல் ஆளத்தி (பஞ்ச. 45: 3)**

**தென்னா தெனா என்று வண்டுமுரல வேங் கடத் தென்னானை**

**(பாசுரம். 2985 – 3: 9: 1 திருவாய்.)**

←சிலப். 3: 26 அடியார்க். செ. ப. அ. 2048; த. க. க132/III

## தென்னிசை:

1. தென்னக இசை ; (South Indian Music)
2. இனிய இசை (Melodic music, sweet music)

தென் = இனிய (Sweet)

தென் - தேன் - தேம் - தீம் - இனிய

**தென்னிசை பாடும் பாணன் (திருவாலவா. 56: 7)**

# தே

## தேசக்கியா: → தேசா

## தேசா: = தேசக்கியா

*பண்களில் ஒன்று*

## தேசாக்கிரி: = தேசாட்சரி

பாலையாழ்த்திறம் (பரத. இராக. 56)

தக்கராகம்... தேசாக்கிரி... பாலையாழ்த்திற மென்ப (பிங்க. 1381)

## தேசாட்சரி: → தேசாக்கிரி

## தேசாட்சி: பண்களில் ஒன்று (பரத. இராக. 55)

*நவசந்திக் கவுத்துவத்தில் தர்ம தேவதையான எமனுக்கு ஆடப்படும் கவுத்துவம் தேசாட்சிப் பண்ணில் அமைந்துள்ளது.*

## தேசி:

1. *நாட்டார்முறை; வட்டார வழக்கு சார்ந்தது.* (Folk, Regional, Parochial)

*ஒப்பு:- மதங்கரின் பிருகத்தேசி (ஒரு இசை நூல்) (பிருகத் - பெரிய; தேசி= வட்டார இசை வழக்கு) இது வட்டாரம் சார்ந்ததால், இடத்துக்கு இடம் மாறுபடும் தன்மையது. எனவே பன்மை வடிவம்* (Poly form) *கொண்டது*

2. *பண்களில் ஒன்று - தேஷ்*

சாதாரி தேசி நாமக்கிரியை முதல் கோலால நாத கீத (திருப்புகழ்)

திறங்கிளர் கொல்லியாம் தேசி... (பஞ்ச. 73: 2)

*மூன்றாம் சாமப்பண்கள் எட்டில் ஒன்றாக இதைப் பஞ்ச மரபு கூறும்.*

3. *கூத்துவகை; தேசிகம்*

இருவகைக் கூத்தாவன ... தேசிக்கூத்து எனப் பல வகைய (சிலப். 3: 12 அடியார்க்.)

இருவகைக் கூத்தாவன: தேசி, மார்க்கம் என இவை (மேலது. அரும்)

தேசிகம்.. திசைச்சொல், ஓர் கூத்து, (சூடா. 11:4)

திசைச்சொல்லும் ஒரு கூத்தின் பெயரும் தேசிகம் என்ப (பிங்க. 3677)

4. *தேசிக்கூத்திற்கான தாளம்*

... கட்டப்பட்ட தேசி ஒத்தை ஒரு தாளத்துக்கு...

(சிலப். 3: 145 அரும்)

## தேசிக்குரிய கால்கள்:

*தேசிக்கூத்திற்குரிய அடைவுகள் 24.*

கீற்று, கடிசரி... கூட்டுதல்... (சிலப். 3: 16 அடியார்க்.)

*(கால் - அடைவு)*

## தேசிகம்

1. *கூத்து வகை (அ. நி.)*
2. இசைபாடுவதில் ஒருமுறை (செ. ப. அ. பிற். 322)

← *தேசி*

## தேசிமுட்டிக்கை:

அவிநயக்கை வகைகளுள் ஒன்று (பரத. பாவ. 28)

## தேசிய்: ஓர் இசை

*எழுபணை தேவநுக்கு இவன் தேசிய்ப்பாட தேசிய் பாடுவாற்கு முன் கல்வெட்டின நிலம் (தெ. இ. க. 19 181 . த. க. சொ. 331)*

↑ இது தேசி என்ற பண் ஆகலாம்.

## தேசு:

1. *ஒளி*

*தேயு (தெய்வம்) > தேசு*

திருமா மணிவண்ணன் தேசு (பாசுரம் இயற். 3:9,2290)

2. *புகழ்*

உம்முடைய திருவும் தேசும் (சீவக. 771)

தேசுடைக் குலத்திற்கு மாசு... (சிலப். 13: 88 – 92 அடியார்க்.)

↑ தேசு என்பதே தேஷ் (தேசி – தேசியம்) என்ற பண்ணின் பெயராக இருக்கலாம்.

## தேமா:

1. *மாவகையில் ஒன்று; பழமா* (sweet mango)

உண்ணுநர் தடுத்தன தேமா (மலைபடு. 138)

தேமா மேனிச் சில்வளை ஆயமொடு (சிறுபாண். 176)

2. *ஒரு மலர்.*

செங்கோடு, வேரி, தேமா, மணிச்சிகை (குறிஞ்சி. 64)

3. *நேர் நேர் என்ற சீரைக்குறிக்கும் வாய்பாடு*

## தேமாங்கனி:

*நேர்நேர் நிரை என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு.*

**தேமாங்காய்:**
*நேர் நேர் நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு.*

**தேமாந்தண்ணிழல்:**
*நேர்நேர் நேர் நிரை என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு*

**தேமாந்தண்பூ:**
*நேர்நேர் நேர் நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்ப் பாடு.*

**தேமாநறுநிழல்:**
*நேர்நேர் நிரை நிரை என்ற சீரைக்குறிக்கும் வாய்பாடு*

**தேமாநறும்பூ:**
*நேர்நேர் நிரை நேர் என்ற சீரைக்குறிக்கும் வாய்ப்பாடு*

**தேர்ச்சி:** தேர்ச்சிவரி
*எண் வகை வரிக்கூத்துள் (அவிநயம்) (நடிப்பு) ஒன்று*
கண்கூடுவரி, காண் வரி... தேர்ச்சிவரி எண் வகை நெறித்தே
(சிலப். 3:13 அடியார்க். & 8: 74 –7 & 14: 150)
"தேர்ச்சி என்பது தெரியுங்காலைக் கெட்ட மாக்கள் கிளை கண்டவர் முன் பட்டது முற்றது நினைஇயிருந்து தேர்ச்சியோடு உரைப்பது தேர்ச்சி வரியாகும்" (சிலப். 8: 102–4அடியார்க்.)

**தேர்ச்சிவரி:** → தேர்ச்சி

**தேர்மணி:** *தேரில் கட்டப்படும் மணி.*
மணிநா ஆர்த்த மான் வினைத் தேரன் (அகம். 4: 12)

**தேர்மல்லாரி:** = பெரியமல்லாரி
*எழுந்தருளும் திருமேனி (உற்சவமூர்த்தி)யைத் தேரில் இட்டு, வீதிஉலாப் புறப்பாட்டின் போது, ஐந்தன் நடையில் (கண்டம்) ஒன்றாம் காலத்தில் நாகசுரத்தில் வாசிக்கப்படும் நாட்டைப்பண்ணின் சுரக் கோவைகள் (Chords).*

**தேரை:**
*தவளை போல் ஒலி எழுப்பும் தாளக்கருவி.*
தேரை வாய்க்கிண்கிணி ஆர்ப்ப (கலித். 86: 9)

**தேரோர்:**
*தேர் ஏறிவந்து ஏர்க்களத்தையும் போர்க்களத்தையும் இசைக்கருவிகளுடன் பாடியாடும் பொருநர்.*
தேரோர் தோற்றிய வென்றியும் (தொ. பொ. 76)
தேர் ஏறிவந்த கிணைப்பொருநர் (மேலது நச்சர்)

**தேவக்கிரியை:**
*பண்களில் ஒன்று* *(பரத. இராக. 56)*

**தேவகாந்தாரி:** *பண்களில் ஒன்று*
→ காந்தாரம்

**தேவதாசியர்:** = தளியிலார்
கோவில்களில் நியமிக்கப்பட்ட நாட்டிய மகளிர்.
மங்கலத்தாசியர் தன்கலன் ஒலிப்ப (சிலப். 6: 125)
↑ இந்த மங்கலம் என்ற சொல்லே '**நித்திய சுமங்கலி**' என்ற ஆட்சிக்கு மூலமாயிருக்கலாம்.

**தேவதாளி:** *பண்களில் ஒன்று*
ஈரிருபண்ணும்... தேவதாளி... பெரும்பண். (பிங்க. 1380)

**தேவபாணி:**
1. *பத்துவகை இசைப்பாடல்களுள் ஒன்று; இறைவனைப் புகழ்ந்த பாட்டு. திருப்புகழ், திருப்பல்லாண்டு, தேவாரம் போல்வன*
தேவர்ப்பராஅய முன்னிலைக்கண்ணே... (தொ. செ. 137)
அருந்திறல் கடவுள் பழிச்சிய பின்னர் (மலைபடு. 538)
மாயோன் பாணி – திருமாலைப்பாடும் தேவபாணி (சிலப். 6: 35 அரும்)

2. *புறநாடக உருக்களுள் ஒன்று; செந்துறைகளுள் ஒன்று*
புறநாடகங்களுக்குரிய உருவாவன: தேவபாணி முதலாக் அரங்கொழி செய்யுள் அந்தமாகச் செந்துறை விகற்பங்களெல்லா மென்றவாறு (சிலப். 3: 14 அரும்)
தெய்வம் கொள்ளுமின்... தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின்... குறிஞ்சி பாடுமின். (சிலப். 24: 15 – 18)

3. பதினோராடலுக்கு முகநிலை
... பதினோ ராடற்கும் முகநிலையாகிய தேவபாணி...
(சிலப். 6: 35 அடியார்க்.)
↑ பிற்கால வழக்கில் தேவபாணியே, தற்காலம் நாட்டியத் தொடக்கத்தில் பாடப்படும் 'தோடய மங்கலம்' ஆகி இருக்கலாம்.
*(தோடயமங்கலம் - மங்கலமாய்த் தொடல் தொடங்குதல்)*

**தேவரடியார்:**
*தேவதாசியர்*
*இசை, ஆடல் போன்ற நுண்கலையை வளர்த் தவர்கள். இந்திய நாட்டில் பல மாநிலங்களிலும் இருந்துள்ளனர். பல்வேறு பெயர்களில் அவர்கள் அழைக்கப்பட்டுள்ளனர்.*

| | |
|---|---|
| தமிழ்நாடு | - தளியிலார், தேவதாசியர், தேவரடியார் |
| ஆந்திரம் | - சானி, மாதங்கி, விலாசினி |
| கருநாடகம் | - சூலி, சானி, பாத்ரா |
| மராட்டியம் | - பாசவி |
| கொங்கணி | - நாயகின் |

உத்தரப்பிரதேசம் - பாவினி
ஒரிசா - மகரி

## தேவரடியார் முறை: → சதிர்

## தேவரடியாள்:

தேவதாசிப்பெண்

திருநெல்வேலித் தேவரடியாள் (தெ. இ. க. 14: 18)

.. தளித்தேவனார் மகள் (தெ. இ. க. 23: 205)

(த. க. சொ. 332- 33)

## தேவராட்டி:

= சாலினி, முதியாள், படிமத்தாள் ஆடுமகள்; வெறியாடுமகள்; தெய்வம் ஏறப் பெற்றவள்; இறை அருள் இறங்கியவள்.

காடுபலி மகிழ்வூட்டத்தலைமரபின் வழிவந்த தேவராட்டி தனை அழைமின் (பெரியபு. கண்ணப்ப. 47)

பழங்கடனுற்ற முழங்குவாய்ச் சாலினி (சிலப். 12: 7)

சாலினி – தேவராட்டி (மேலது உரை)

பெருந்தோள் சாலினி மடுப்ப (மதுரைக். 610)

பெரிய தோளினையுடைய தேவராட்டி யோடே மடுப்ப (மேலது நச்சர்)

சாலினி தேவராட்டி (சூடா. 2: 39)

சாலினி, முதியாள், படிமத்தாள் (பிங்க. 829)

ஆடுமகள் வெறி உறுவனப்பின் (குறுந். 105: 3–4)

→ சாலினி

## தேவராளன்:

வேலன், வெறியாட்டாளன்

வெறியாட்டாளன் சயமுறு தேவராளன் (சூடா. 2: 39)

← வேலன்

## தேவயாழ்: → மருத்துவம்

## தேவார அடங்கன்முறை:

மூவர் தேவாரமும் பண்முறையில் தொகுக்கப் பட்டதே அடங்கன் முறை. இந்த அடங்கலில் மொத்தம் 8250 பாடல்கள் உள்ளன.

| தேவார மூவர் | திரு முறை | பதிகத் தொகை | மொத்தம் | கூடுதல் |
|---|---|---|---|---|
| சம்பந்தர் | 1 | 1–136 | 1–1469 | 1469 |
| | 2 | 1–122 | 1470–2800 | 2800 |
| | 3 | 1–125 | 2801–4158 | 4158 |
| அப்பர் | 4 | 1–113 | 4159–5228 | 5228 |
| | 5 | 1–100 | 5229–6243 | 6243 |
| | 6 | 1–99 | 6244–7224 | 7224 |
| சுந்தரர் | 7 | 1–100 | 7225–8250 | 8250 |

← த. க. க. 141/III

## தேவாரத்தொகை:

மூவர் தேவார வகுப்புகள் :-

| | | | |
|---|---|---|---|
| சம்பந்தர் பதிகம் | 383 | பாடல்கள் | 4158 |
| அப்பர் பதிகம் | 312 | பாடல்கள் | 3067 |
| சுந்தரர் பதிகம் | 100 | பாடல்கள் | 1025 |
| மொத்தப் பதிகம் | 795 | | 8250 |

## தேவாரப் பண்கள்:

சைவத்திருமுறைகளில் பயின்றுவரும் பண்கள்.

↑ நாயன்மார் தேவாரம் பாடிய பண்முறை மறைந்தது.

தில்லையில் ஏடுகண்ட (திருமுறைகண்ட புராணம்) பின்பு, மீண்டும் புதிய பண்முறை வகுக்கப்பட்டது. இப்புதிய பண்முறையும் தற்காலம் மறைந்து விட்டது. எனவே திருமடங்களும் ஓதுவார்களும் வெவ்வேறு பண்களில் தற்காலம் பாடி வருகின்றனர்.

"இக்காலத்து ஓதுவார்கள் சிலர் பழைய ராகங்களை நீக்கிப், புதிய ராகங்கள் சிலவற்றைப் புகுத்தியிருக்கிறார்கள்...காரணமின்றிப் பண்டையோர் வழக்கினை இக்காலத்தார் மாற்றுவது மரபல்ல" (யாழ் நூல். பக். 267–68)

"திருக்கோவில்களிலும் திருமடங்களிலும் பணிபுரிந்த ஓதுவார்கள் சிலர், இன்ன இன்ன பண்ணமைந்த பதிகங்களை இன்ன இன்ன இராகங்களில் பாடுதல் வேண்டும் எனத்தமக்குள் ஒரு வரையறை செய்து கொண்டனர் எனத் தெரிகிறது"... (ப. தி. வ. பக். 592–93)

"ஓதுவார்கள் ஒரு பழம்பண்ணுக்கு இரண்டு மூன்று இராகம் குறிப்பிடுவதும், ஒற்றை இராகத்திற்கு இரு பழம்பண்கள் குறிப்பிடுவதும் தற்காலத்து இராகங் களை முற்காலத்துத் தேவாரத்திற்கு ஏற்றிக் கூறுவதும், ஆகிய முறைகள் தவறானவை" (த. க. க. 146/III)

| வ.எண் | தேவாரப் பண் | ஓதுவார்முறை | இக்காலப் பண் |
|---|---|---|---|
| 1 | புறநீர்மை | பூபாளம், ஸ்ரீகண்டி, பௌளி | சிவரஞ்சனி |
| 2 | காந்தாரம் | நவரோசு, இச்சிச்சி | கர்நாடக தேவகாந்தாரி |
| 3 | பியந்தைக் காந்தாரம் | நவரோசு, இச்சிச்சி | கர்நாடக தேவகாந்தாரி |
| 4 | கௌசிகம் | பைரவி | நடபைரவி |
| 5 | இந்தளம் | மாயாமாளவகௌளை நௌித பஞ்சமி | இந்தோளம் |
| 6 | தக்கேசி | காம்போதி | காம்போதி |
| 7 | நட்டராகம் | பந்துவராளி | கம்பீரநாட்டை |
| 8 | சாதாரி | பந்துவராளி | மோகனம் |
| 9 | நட்டபாடை | கம்பீரநாட்டை, நாட்டைக்குறிஞ்சி | கம்பீரநாட்டை |
| 10 | பழம்பஞ்சுரம் | சங்கராபரணம் | சங்கராபரணம் |
| 11 | காந்தாரபஞ்சமம் | கேதாரகௌளை | ——— |
| 12 | பஞ்சமம் | ஆகிரி | கரகரப்பிரியா |
| 13 | தக்கராகம் | காம்போதி, கன்னட காம்போதி | ——— |
| 14 | பழந்தக்கராகம் | ஆரபி, சுத்தசாவேரி | ——— |
| 15 | சீகாமரம் | நாதநாமக்கிரியா | சுத்ததன்யாசி (காமரம்) |
| 16 | கொல்லி | நவரோசு, சிந்துகன்னடா | நடபைரவி |
| 17 | கொல்லிக் கௌவாணம் | நவரோசு, சிந்துகன்னடா | நடபைரவி |
| 18 | வியாழக்குறிஞ்சி | சௌராட்டிரம் | ——— |
| 19 | குறிஞ்சி | அரிகாம்போதி, மலகரி | நடபைரவி |
| 20 | அந்தாளிக்குறிஞ்சி | சாமா, சைலதேசாட்சி | ——— |
| 21 | மேகராகக்குறிஞ்சி | நீலாம்பரி | ——— |
| 22 | செந்துருத்தி | மத்தியமாவதி | மத்தியமாவதி |
| 23 | செவ்வழி | எதுகுலகாம்போதி | ஈருழைப்பண் |

இருமத்திமத்தோடி – இளி (ப) இல்லாத விளரி (தோடி)யில் வல்லுழை (ம²) சேர்த்துப் பாடப்படும் பண்.ச ரி¹ க¹ ம¹ ம² த¹ நி¹ தற்காலம் இப்பண் பாடும்முறை வழக்கில் இல்லை.

↑ காந்தாரமும், பியந்தைக்காந்தாரமும் ஒன்றாகலாம். கொல்லியும், கொல்லிக் கௌவாணமும் ஒன்றாகலாம்.

*(கொல்லி - மலை)*

யாழ்முரி என்பது ஒருபண் அல்ல.

காந்தாரமாகியபியந்தையாம் கட்டளைக்கு (தி. க. பு. 37)

படுமலை என்பது பகரில் கவ்வாணம் (பிங்க. 1392)

*(கௌவாணம் - கவ்வாணம்)*

→ யாழ்முரி

*← ப. தி. வ. பக். 593- 94; த. க. க. 829/II; 141-146/III: திருமுறை கண்ட புராணம்; யாழ் நூல் (தேவாரவியல்)*

## தேவாரம்:

1. *தெய்வத்தின் மீது பாடப்பட்ட இசைப்பாட்டு*

*தே = தெய்வம் ; வாரம் = இசைப்பாட்டு*

*ஒப்பு:- பள்ளித்தேவாரம் - அரண்மனைத் தெய்வத்திற்குரிய பூசை*

*பள்ளி = அரண்மனை*

*← செ. ப. அ. 2552*

*ஒப்பு:- பள்ளிபடை; பள்ளிமாடம்*

2. *பூசை*

*இசைப்பாட்டால் தெய்வத்தைப் பூசை செய்வது*

பண்பொலிசெந் தமிழ்மாலை பாடிய பத்தும் (தேவா. 2: 48: 11)

3. *வாரம் பாடுதல் என்னும் பாடுதுறையின் முறையிலிருந்து தேவாரம் என்ற சொல் தோன்றியது. வாரம் பாடுதல் என்பது ஒன்றாம் காலம் மற்றும் இரண்டாம் காலம் பாடுதல். இசையியலில் வாரம் பாடுதல் என்னும் துறை மிகமிக முக்கியமானது.*

*← த. க. க. 147/III*

*ஒப்பு:-* வல்லோன் புணரா வாரம் போன்றே (தொ. மரபு. 108)

வாரம் பாடும் தோரிய மடந்தையும் (சிலப். 14: 155)

வாரம் இரண்டும் வரிசையில் பாட (சிலப். 3: 136)

→ வாரம்

## தேற்றேகாரம்:

*உறுதிப் பொருள் தரும் ஏகார ஈறு*

எடு:– எட்டுடன் அன்றே (சிலப். 16: 168)

நாமவேயின் திறங்கண்டே (சிலப். 7: (26)

வெய்யோன் அருளே (சிலப். 7: (27)

மலையருவி ஆடுதுமே (சிலப். 24: (2)

# தை

## தை:

*நாட்டியச் சொற்கட்டுக்குரிய ஓர் எழுத்து*

*தய் > தை*

*நாட்டியப்பயிற்சி தொடங்குகையில் மங்கலச் சொல்லாகிய 'தை தை' எனக்கூறித் தொடங்குதல் மரபு.*

*ஒப்பு:- தமிழ் ஆண்டுத் தொடக்கம் - தைத்திங்கள்*

*← த க. க 148/ III*

## தைவதம்:

1. *தேவதைகளைப் பற்றிய ஆய்வு.*
2. *யாஸ்கர் எழுதிய நிருத்த நூலின் பிரிவுகளில் ஒன்று:*
   1) *நைண்டுகம்*
   2) *நைகமம்*
   3) *தைவதம்*
3. *ஏழிசையுள் ஒன்று; விளரிசுரம் (த)*

ஏழிசையாவன: சட்சம்... தைவதம்... என்ப

(சிலப். 3: 26; 17: (20) அடியார்க்.)

## தைவதாந்தியராகம்: → விளரி முடிவுப்பண்

## தைவரல்:

*எண் வகை இசை ஏழால்களுள் (இசைத் தொழில்கள்) ஒன்று. நரம்பை வழுக்கி வாசித்தல்; அனுசுருதி ஏற்றுதல். நரம்பின் சுரத்தானத்திற்கு மேலிருந்தும் கீழிருந்தும் சுரம் நோக்கித் தைவரல் செய்யப் படுவதுண்டு.*

↑ இம்மரபு குழல் வாசித்தலில் இன்றும் தொடர்கின்றது.

பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல் (சிலப். 7: 5)

"தைவரலென்பது சாற்றுங்காலை..." (மேலது அரும். மேற்.)

அனுசுருதி ஏற்றுதல் (சீவக. 657. நச்சர்)

நரம்பை வழுக்கி வாசித்தல் (த. க. க 292/I)

கல்லா இளையர் மெல்லத் தைவர (சிறுபாண். 33)

மஞ்சள் மெல் இலை மயிர்புறம் தைவர (சிறுபாண். 44)

ஊழணி தைவரல் (தொ. மெய். 14)

நயவன் தைவரும் செவ்வழி நல்யாழ் (அகம். 212: 6)

வல்லோன் தைவரும் வள்உயிர்ப்பாலை (அகம். 355: 4)

தைவரல் இசைந்த தண்பயில் வீணை (பெருங். 1: 36: 365)

பந்தயாழ் முதுகு தைவரல் இட்டு (திருவிளை.இசைவாது.5: 1)

## தைவரல் நான்கு:

1) *மேலிருந்து தைவரல் - இறங்கு ஜாரு*
2) *கீழிருந்து தைவரல் - ஏற்ற ஜாரு*
3) *சுரத்தின் அகத்திலிருந்து தைவரல்*
4) *சுரத்தின் புறத்திலிருந்து தைவரல்*

*← த. க. க. 148 - 49*

# தொ

## தொக்கடைவு:
கூத்தில் பாதத்தைத் தொங்க வைப்பதான ஓர் அடைவு.

←த. க. க. 25/I

## தொகை:
ஆசிரியப்பா ; அகவல்பா

அகவலும் தொகையும் ஆசிரியப்பா (பிங்க.2081)

→அகவல்பா

## தொகையறா:
= விருத்தம், சுலோகம், சுத்தாங்கம்

தாளத்துணையின்றி பண்ணுடன் பாடப்படுவது. நாடகத்தில் தலைமைப் பாத்திரத்தின் இசைத் திறனை வெளிக்கொணர மிகுதியும் பயன்படுவது.

காயாத கானகத்தே நின்றுலாவும்

நற்காரிகையே ...

என்று தொடங்கும் பாடல் தவத்திரு சங்கரதாசு சாமிகளது வள்ளி திருமணம் நாடகத்தில் வரும் தொகையறாவாகும்.

## தொகுசொல்கோடியர்:
கூத்தின் நடந்து முடிந்த நிகழ்வுகளைத் தொகுத்துச் சொல்லும் பாணர் பிரிவினரான கூத்தர் (கோடியர்). தொகு - இணை, சேர், ஒருங்கிணை, முழுமையாக உருவாக்கு, சுருக்கு, மொத்தம் (DED 2861)

"... இச்சந்தர்ப்பத்தில் தொகுசொல் என்பது வினையால் அணையும் பெயராக நின்று கோடியரை விவரிக்கிறது. புலவரும் கோடியரின் பணியைச் செய்துள்ளனர்... இது தொகுத்துக் கூறும் கோடியர் என விளக்கப்படவேண்டும். பெரிய சம்பவம் நடந்து முடிந்த பின் சுருக்கிச் சொல்லுவதே அது" (ப. த. நா. 210)

"...நடந்த நிகழ்ச்சியைத் தொகுத்துக் கூறுதலும் தமிழ் நாடகத்திற்குரியதாதல் வேண்டும். இது போன்ற ஒரு முறைமை சமஸ்கிருத நாடகத்தில் இல்லை"(Tamil Drama பக். 41 – 42)

தொகுசொல் கோடியர் தூம்பின் உயிர்க்கும் (அகம். 111: 9)

↑ சிலப்பதிகாரத்தின் சில காதை முடிவில் (7, 10) இடம் பெறும் கட்டுரைகள், மூன்று காண்டங்களின் இறுதியிலுள்ள காண்டக் கட்டுரைகள், மூன்று காண்ட இறுதியை அடுத்து வரும் நூல் கட்டுரை முதலியன தொகுசொல் கோடியரின் கூற்றாகலாம்.

## தொகுதி:
யாழின் தொகுதி; பகுதி; திறப்பண்கள்

யாழ் - தாய்ப்பண், பாலை, மேளம், கர்த்தா, மேளகர்த்தா (Generative)

தொகுதி - திறப்பண், பகுதி, ஜன்யம் (Derivative)

தெய்வம்... யாழின் பகுதி யொடு... (தொல். அகத். 20)

யாழின் பகுதி என்பது பண். அது சாதாரி (மேலது இளம்)

அணை உறக்கிடந்த யாழின் தொகுதி (சிலப். 10: 13கட்டுரை)

பாடல் பகுதியும் பண்ணின் பயன்களும் (சிலப். 16: 132)

## தொங்கல்:
1. கடைசிப்பகுதி; சந்தப்பாடல்களில் குழிப்பின் முடிவில் தனிச்சொற்களாக, சீராக முடிவன.

... பாடல் வரியினின்றும் விட்டிசையாகிக் கடைசிப் பகுதியாகத் தொங்கிக் கொண்டிருப்பதால் தொங்கல் என்று பெயராயிற்று.

குழிப்பு ஒரு மூன்று கூடிய பின்னர்.

தொங்கல் தாழிசைத் துள்ளல் ஒன்று இசைக்கின்(வண்ணத் நூ. 97)

எடு:- முத்தைத்திரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக் கொரு வித்துக் குருபர – என வோதும்
என வோதும் - தொங்கல்

2. மாலை, சங்கிலியின் தொங்கும் பகுதி

" சங்கிலி நுண்தொடர்.. தொங்கல்.. கழுத்துக்கு அணிந்தாள்

(சிலப். 6: 101–2 அடியார்க். மேற்.)

← ஆளுடை. அருண. நாத. முன்னுரை

## தொடர் இசைக்குறி:
இசை நீட்டத்தில் மாத்திரை அளவை நீட்டும் பொருட்டு இடும் ';' போன்ற குறி. இது அரை மாத்திரையைக் குறிக்கும். தற்கால இசை நீட்டம் குறித்தலில் இது பயன்பாட்டில் உள்ளது.

; - அரை மாத்திரை

, - கால் மாத்திரை

## தொடர் நிலைச் செய்யுள்:
காப்பியம் ; இலக்கியம்

எடு:- சிலப்பதிகாரம், தகடூர்யாத்திரை, பாரதம்

"தொகுக்கப்பட்ட பல துண்டுப்பகுதிகள் ஒரு நீண்ட பாடலின் பகுதிகளேயாம்" (த. வீ. க. பக். 40 மேற்.)

... ஒரு கதை மேல் கொச்சகத்தாலும், ஆசிரியத் தாலும், வெண்பா, வெண்கலிப்பாவாலும் மற்றும் இன்னோரன்ன செய்யுட்களாலும் கூறுக என்றமையான், இத்தொடர்நிலைச் செய்யுள்...

(சிலப். அடியார்க். உரைப்பாயிரம்)

... சொல் தொடர்நிலை, பொருள் தொடர்நிலை என்னும் தொடர்நிலைச் செய்யுட்கும் காப்பியம் என்று பெயர்... (மேலது)

## தொடி மகள்:

*விறலி* (Female Penegyrist)

தொடிமகள் முரற்சி போல் (கலித். 36: 4)

← *செ. ப. அ. 2087*

## தொடுதல்:

*இசைக்கருவி வாசித்தல்; கொட்டுதல்; மீட்டுதல்.*

தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின் (சிலப். 24: 16)

தொடுதல் – வாசித்தல் (மேலது. அரும்)

இயங்கல் ஓம்பினும் இயங்கள் தொடுமின் (மலைபடு. 277)

இயங்கள் தொடுமின் – வாச்சியங்களை வாசிப்பீராக (மேலது. நச்சர்)

## தொடுப்பு:

= துணை எடுப்பு, அநுபல்லவி, உபபல்லவி, துணைப்பல்லவி.

*இசைப்பாட்டில் எடுப்பிற்கு (பல்லவி) அடுத்து வரும் இரண்டாம் உறுப்பு. இது மேற்காலத்தில் அமையும். தொடக்கத்தில் பாடங்களில் தாழிசை (சரணம்) மற்றும் எடுப்பு மட்டுமே இருந்தன. பின்னால் ஏற்பட்டதே தொடுப்பு (அநுபல்லவி)*

## தொடை:

1. *யாழின் புரி நரம்பு, மெட்டுக்கள் இசைச்சுரங்களை ஒன்றோடொன்று தொடுத்து அமைப்பதால் தொடை .*

தொடையமை கேள்வி (பெரும்பாண். 16)

கவர்தொடை நல்யாழ் (பரிபா. 22:38)

வண்டொடு தும்பியும் வன்தொடை யாழ் ஆர்ப்ப (பரிபா. பகுதி 1: 50)

தொடைபடு பேரியாழ் பாலை பண்ணி (பதிற். 46: 4–5)

தேஎம் தீம்தொடை சீறியாழ்ப்பாண (புறம். 70: 1)

வாங்கு இரு மருப்பின், தீம் தொடைச் சீறியாழ் (புறம் 285: 3)

ஏழ்புணர் சிறப்பின் இன்தொடைச் சீறியாழ் (மதுரைக். 559)

2. *செய்யுள் அணி*

*எதுகை, மோனை, இயைபு, முரண், அளபெடை என்று பாடலை அழகுபடுத்தும் ஐந்து அணிகள்.*

3. *வில்லின் நாண்*

பூரி... தொடை... நரம்பு... நாணின் பெயரே (பிங்க. 1537)

4. *பாட்டு* (Verse) (தே.நே. 146,8)

5. *யாழ்*

கேள்வி போகியநீள் விசித் தொடையல் (பொருந. 18)

மென்சொல் கலப்பையர் திருந்து தொடை (பதிற். 15: 26)

← *செ. ப. அ. 2089*

## தொடையல்: → புரிநரம்பு

## தொண்டகம்:

*தொண்டகப்பறை;குறிஞ்சிப்பறை; முருகியம்; வெறியாட்டுப்பறை.*

*சிறுபறை வகையுள் ஒன்று.*

தொண்டகம் தொடுமின்... (சிலப். 24: 16)

தொண்டகச் சிறுபறைக்குரவை அயர (முருகு. 197)

தொண்டகச் சிறுபறைச்சீர் பெண்டிரோடு விரைஇ (அகம். 118: 3)

தொண்டகச் சிறுபறைப் பாணி (நற். 104: 5)

தொண்டகம் துவைப்ப (கல்லா. 7: 12)

திரிகல் ஒப்புடைத்தாய வட்ட வாய்த் தொண்டகம் (கல்லா. 24: 14)

தொண்டகப் பறை துடியோடு ஆர்த்து எழ (சீவக. 418)

## தொண்டு:

= தொள்,தொள்ளை,தொளை,தொள்ளல்,துளை (hole)

*துவாரம், ஓட்டை.*

*புரிநரம்பு கட்டுவதற்கான திவவின் ஒரு முனையிலுள்ள துளை.*

தொண்டுபடு திவவின் (மலைபடு. 21)

தொண்டுபடு திவவின் முண்டக நல்யாழ் (ஆசிரிய மாலை)

*ஒப்பு:- பிள்ளைத்தொண்டு-ஆண்மகவு வேண்டியவள் நுழைந்து செல்லும் கோயில் கதவிலுள்ள துவாரம்*

தொள்ளைக்காது (நாட்டார் வழக்கு)

*தொள் > தொண் > தொண்டு - ஒன்பது*

*ஒப்பு:-*

*தொண்ணூறு(தொள் +நூறு) ; தொள்ளாயிரம் (தொள் + ஆயிரம்)*

← *செ ப. அ. 210; 2104; 2713; தே.நே. 166-67/8*

## தொண்டை: *குரல்* (Voice, Singing Voice)

அவனுக்குக் கீச்சுத் தொண்டை (நாட். வழக்.)

← *தேவ. 168/8*

## தொப்பி:

*மத்தளத்தின் இடப்பக்கம்; 'தொப்பு' 'தொப்பு' என்று இதில் ஒலி வருவதால், தொப்பி. இது ஒலியடியாய்ப் பிறந்த சொல்*

## தொப்பை:

*மத்தளத்தில் அடிக்கும் நடு இடம்.*

← *செ. ப. அ. 2096*

## தொல்:

*பழமை, மரபு, தொன்மை.*

*தொல்லை - பழமையானது, மரபானது.*

தொல்இசை நிறீஇய உரைசால் பாண் மகன் (அகம். 352:15)

"குரல் துலை... தொல் ஏழிசை நரம்பிற்காம்"

(சிலப். 17: (13) :8 அரும்.மேற்.)

## தொல்இசை:

*தொன்மையான இசை; மரபான இசை*

தொல்லிசையாளார் சொல்லெடுத்து ஏத்த (பெருங். 1: 37: 148)
தொல்லிசைத் தொழில்மாக்கள் (பட்டினப். 121)
"குரல்துலை.. தொல் ஏழிசைக்காம்" (சிலப். 17:(13)அரும்மேற்.)
தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய (கலித். 104:5)
தொலையா நேமிமுதல் தொல்இசை அமையும் (பரிபா. 15: 3)
நல்லிசை நிறுத்த நயவரு பனுவல்
தொல்இசை நிறீஇய உரைசால் பாண் மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணினுள்ளும் (அகம். 352: 13–15)

## தொல் ஏழிசை:

*முல்லை; செம்பாலை (அரிகாம்போதி)*
*தமிழிசையின் தொன்மையான (Primordial scale), தலைமையான பாலை என்பதால் தொல் ஏழிசை என்ற அடை.*

"குரல் துலை... கோப்பமைந்த தொல் ஏழிசைக்காம்"
(சிலம். 17: (13) 8: அரும்.மேற்.)

↑ சிலம்பு ஆய்ச் குரவையில் எடுத்துக் காட்டுப் பாடல்கள் (13), (14), (15), (16), ஆகியவற்றில் இத்தொல்ஏழிசை (அரிகாம்போதி)க்கான நரப்படைவு (சுரநிரல்) களை இளங்கோ அடிகள் அமைத்துக் காட்டுகின்றார். உரைகாரர்களும் எடுத்துக்காட்டு மேற்கோள் பாடல்கள் மூலம் இப்பண் செம்பாலை (அரிகாம்போதி) தான் என்று வலுச் சேர்த்துள்ளனர்.

தொல்இசை நிறீஇய உரைசால் பாண் மகன் (அகம். 352)
பாணர் முல்லைபாட... (ஐங். 408: 1)
முல்லை நல்யாழ்ப்பாண... (ஐங். 478: 5)
தூயவன் பாதம் தொடர்ந்து தொல் சீர்துளையால் பரவும்
வேயவன் மேல் மழநாட்டு விரிபுனல் மங்கலக்கோன்
(திருமுறை. 11. 34: 15)

↑ ஆனாயநாயனாரின் புல்லாங்குழல், தொல் ஏழிசையான முல்லைப் பெரும் பண்ணிற்குத் துளையிடப்பட்ட செய்தியை நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதியில் இவ்வாறு குறிப் பிடுகின்றார்.

→ *வட்டப்பாலை. ப்க். 476-77*

## தொழில்:

*பாடல் தொழில். இசைத்தொழில். இசையை எழுப்புதல் யாழின் மீது தொழில் செய்வதால் உருவாகும் இசை முறை. இத்தொழில்கள் எட்டு:-*

பண்ணல், பரிவட்டணை... எண் வகையால் இசை எழீஇ
(சிலப். 7: 5 – 8)

கண்ணுதல் மதுரைப் பிரானை இவ்வாறு கருதிய பாணியால் கரந்து பண்ணுதல் பரிவட்டணைமுதல் இசைநூல் பகர் முதல் தொழில்இரு நான்கும். (பரஞ். திருவிளை. 2184)

## தொழிற்கை:= கை, முத்திரை, (நாட்டிய) வினைக்கை

*நாட்டியத்தில் தொழில்படும் அவிநயக்கை (Hand pose)*

பிண்டியும், பிணையலும், எழிற்கையும், தொழிற்கையும் (சிலப். 3: 18)
எழிற்கை அழகே, தொழிற்கை தொழிலே
பொருட்கை கவியின் பொருளாகும்மே (மேலது. அடியார்க். மேற்.)
தொழில்கை – தொழில் பெறக் காட்டும் கை (சிலப். 3: 18 அடியார்க்.)

## தொன்முறை இயற்கை:= தொன்று படுமுறை

*வலமுறை சுழற்சி, வலமுறைத்திரிபு, ஏறுநிரல்முறை (clockwise rotation). இம்முறையால் பண்களை உருவாக்குதல் மிகத் தொன்மைக்கால வழக்காக இருந்துவந்துள்ளது. தொன்று தொட்டு இயற்கை யாக (இயல்பாக) வரும் மரபு*

*தொல் > தொன் - பழமை*

தொன்னிலை மரபு (புறம். 99: 4)
பாடுகம் வம்மினோ, பரிசில் மாக்கள் தொல்நிலக்கிழமை
(புறம். 32: 6 – 7)
... தொல்லிசை (புறம் 24: 34)
தொல்லிசை நிறீஇய உரை சால் பாண்மகன் (அகம் 352: 14)
தொன்றுபடு மாநகர்த் தோன்றிய நாள் முதல் (மணிமேக. 24: 16)
எழுவர் இளங்கோதையார்
என்று தன் மகளை நோக்கித்
தொன்றுபடு முறையால் நிறுத்தி (சிலப். 17: எடு)
குடமுதலிடைமுறையாக்குரல், துத்தம்... (மேலது)
குரல் குரலாக வருமுறைப்பாலையில்
துத்தம் குரலாத் தொன்முறை இயற்கையின்
அம்தீம் குறிஞ்சி... (சிலப். 28: 33–5)

*தொன்முறை இயற்கை - தொன்று படுமுறை - வலமுறைத் திரிபு*

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | * | | * | | * | * | | * | | * | * | |
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| படுமலைப்பாலை | நி$^1$ | | ச | | ரி$^2$ | க$^1$ | | ம$^1$ | | ப | த$^1$ | |

*படுமலை - குறிஞ்சி - நடபைரவி*

*செம்பாலை (அரிகாம்போதி)யின் வலப்பக்கம் வரும் 'ரி$^2$' சுரத்தை 'ச' வாகக் கொண்டு பண் பெயர்ப்பதால் வருவது 'குறிஞ்சி'ப்பண் என்று சிலம்பு குறிப்பிடுகின்றது. இவ்வலமுறையிலே 'க$^2$' சுரத்தை 'ச'வாகக் கொண்டு செவ்வழிப்பாலையும்,*

*ம$^1$ - அரும்பாலை (சங்கராபரணம்)*
*ப - கோடிப்பாலை (கரகரப்பிரியா)*
*த$^2$ - விளரிப்பாலை ( தோடி)*
*நி$^1$ - மேற்செம்பாலை (கல்யாணி)*

*ஆகிய பாலைகளும் வலமுறை ( தொன்முறை) யால் கிடைக்கும். ஆய்ச்சியர்குரவையிலும் எழுவர் இளங் கோதையாரை 'தொன்று படு முறை 'யான வலமுறை' யிலேயே நிறுத்திக் காட்டி செம்பாலை யின் (அரிகாம்போதி) நரப்படைவைச் சிலம்பு காட்டுகின்றது.*

→ *பக். 476-77*

## தொன்றுபடுமுறை:→ தொன்முறை இயற்கை

## தொனித்தல்: ஓசை எழுப்புதல்

கலித்தல், கனைத்தல்... பிளிறல்,தொனித்தல் (பிங்க. 2111)

*தொனி >த்வனி*

# தோ

## தோடயம்:

= தோடையம், தோடய மங்கலம்

*கடவுள் வாழ்த்தாக நாடகத் தொடக்கத்தில் பாடப்படும் நான்கடி விருத்தப்பா. நாட்டிய நிகழ்ச்சியில் திரைவிலகுமுன் பாடகர் குழு பாடுவது. மாதவியின் அரங்கேற்றத்தில் தோரிய மடந்தையர் வாரம் இரண்டும் வரிசையில் பாடியதை இது நினைவூட்டுகிறது.*

*தோரியம் > தோடயம் (வெ.மு.ஷாஜகான் கனி முனைவர்பட்ட ஆய்வேடு. (கை ப.) பக். 106)*

↑ தோரிய மங்கலம் > தோடய மங்கலம் ஆகி இருக்கலாம். அன்றியும் இத்தோடய மங்கலம் தோடி என்ற பண்ணில் அமைந்து நிகழ்ச்சித் தொடக்கமாவதால் தோடயமங்கலம் ஆகி இருக்கலாம்.

*தொடு > தோடி > தோடய + மங்கலம்*

↑ தோடிப்பண்ணின் எடுப்புச்சுரம், உயிர்ச்சுரம், முடிவுச்சுரம் 'த' ஆகும். இந்த 'த' சுரம் '**தோடயம்**' என்று சிறப்பாகச் சொல்லப்படும்.

## தோடய மங்கலம்: → தோடயம்

## தோடி: *விளரி*

*நாட்டிய நிகழ்ச்சியில் தோடய மங்கலம் இந்தப் பண்ணில் பாடப்படுகின்றது.*

*தொட > தொடு > தோடி - தொடக்கப்பண்.*

செம்பாலையுள் பிறக்கும் பண்கள்:– ... தோடி... என, இவை (சிலப். 8: 35 அடியார்க்.)

→ விளரிப்பாலை; தோடயம்

← *இராம. நாட. பாலகா 1; செ ப. அ. 2108*

## தோடையம்: → தோடயம்

## தோத்திரப்பாட்டு:

1. *புகழ்ச்சிப்பாட்டு; இறைவனின் புகழைப்பாடும் பாடல். துதிப்பாசுரம்* (Songs of praise)
2. *ஏசு மீதான துதிப்பாட்டு*

← *செ. ப. அ. 2109*

## தோமரம்: வாச்சியம் (அ. நி.)

## தோரக்கை:

= தோரம், டோளம் , உடோளம், ஊஞ்சல்கை.

*இரட்டைக்கைகளில் ஒன்று.*

"தோரம் என்று துணியுங்காலை இரு கையும் பதாகை அகம்புறம் ஒன்ற, மருவி முன் தாழும் வழக்கிற்று என்ப". (சிலப். 3: 18 அடியார்க்.)

உடோளமெனவும் இது கூறப்படும் (மேலது அடிக்.)

## தோரம்: → தோரக்கை, ஊஞ்சல்கை

## தோரியம்:

1. *கூத்து, ஆடல்*

ஒப்பு: வாரம் பாடும் தோரிய மடந்தை (சிலப். 14: 155)

தொன்னெறி இயற்கைத் தோரிய மகளிர் (சிலப். 3: 134)

*தோரிய மகளிர் - ஆடல் மகளிர்*

2. *இசைக்கருவி*

*தோர் + இயம் - தோரியம்; இயம் - இசைக்கருவி*

*→ தோரிய மகளிர்*

## தோரிய மகளிர்: = தோரிய மடந்தையர்

*மூத்த ஆடல்மகளிர்; நாட்டியம் ஆடி வயதிலும் கலையிலும் முதிர்ந்த மடந்தையர்; பெண் நட்டுவர்; நாட்டிய அரங்கில் பாடும் மகளிர்* (Expert dancing girl)

தொன் நெறி இயற்கைத் தோரிய மகளிரும் (சிலப். 3: 134)

வாரம் பாடும் தோரிய மடந்தை (சிலப். 14: 155)

*தோரியம் என்பது மரபு முறையில் வரும் வரிசை நிலைமை*

*தோர் + இயம் > தோரியம்*

*தோர் + அணம் > தோரணம்; வரிசையாகத் தொங்கும் மாலை*

தலைக்கோல் அரிவை... தோரிய மகளே (சிலப். 3: 133 – 4 அடியார்க்.)

தோரிய மடந்தை வாரம் பாடலும் (சிலப். 6: 19)

தோரிய மடந்தை – பற்றுப்பாடுவாள் (மேலது அரும்)

ஆடிமுதிர்ந்தபின்பு ஆடல் மகளிர் காலிற்கு ஒற்றறுத்துப் பாடுபவள் (சிலப். 6: 18 –25 அடியார்க்.)

← *த. க க 159/*III

## தோரிய மடந்தை: → தோரிய மகளிர்

## தோல்:

1. ஒரு தோலியல் கருவி. தோலு (தெ. வ.)
பாணன் கையது தோலே (புறம். 285: 4)
↑ தோல் என்பதின் வளர்ச்சி இன்றைய தவில் கருவியாகலாம்.
தோல் > தாவில் > தவில்
(தவுல் - திரிந்த சொல்)
வடித்தோல் கொடும்பறை வால்வளை நெடுவயிர் (சிலப். 26: 193)

2. தாளம்

| நல்ல நரம்பு | குழல் | கண்டம் | தோல் | கூத்து (பஞ்ச.4) |
|---|---|---|---|---|
| நரம்பு | குழல் | கண்டம் | தோல் | கூத்து |
| ↓ | ↓ | ↓ | ↓ | ↓ |
| யாழ் | குழல் | வாய்பாடு | தாள | ஆடல் |
| மரபு | மரபு | மரபு | மரபு | மரபு |

## தோல்பாவை:

= தோல் பாவைக்கூத்து ; பொம்மலாட்டம்
விநோதக்கூத்து ஆறுள் ஒன்று
← சிலப். 3: 12 அடியார்க்.
தோலால் பொம்மை செய்து அவைகளை விளக்கு ஒளியால் திரையில் நிழலாக விழச் செய்து பொம்மைகளை ஆட்டி, பாடி, கதை கூறும் நிகழ்ச்சி. மெல்லவே மறைந்து வரும் ஒரு கலை வடிவம்

## தோல்பாவைக் கூத்து:→ தோல் பாவை

## தோள்: → திருத்தோள்நோக்கம்

## தோள்நோக்கம்:→திருத்தோள்நோக்கம்

## தோள் வீச்சு: → திருத்தோள்நோக்கம்

## தோளி: → திருத்தோள்நோக்கம்

## தோற்றத்தரு:

= தோற்றக்கவி, தோற்றப்பாட்டு.
நாடக அரங்கில் தோன்றும் போது நடிகர் பாடும் முதல் பாட்டு
... தோற்றுதும் பாணி எழுதும் கிணை (பரிபா. 8:81)
ஒப்பு:- கண்ணகி தோற்றம் பாட்டு

## தோற்றம்:

நாடக நடிகர் அரங்கில் புகுதல் (Entrance on the stage, debut)

## தோற்றம்பாட்டு: → தோற்றத்தரு

## தோற்றக்கவி: → தோற்றத்தரு

# ந

## ந்ருத்தம்:

1. சொற்களை ஆராயும் வேதாங்கநூல்
ந்ருத்த பாஷ்யமும் வல்லார்தான் (தெ. இ. க. 6 322)
2. நாட்டிய வகையுள் ஒன்று.

நட்டம் > நத்தம் > நித்தம் > ந்ருத்தம்

## நக்கன்:

1. நாட்டியநங்கை(தளிப்பெண்டிர்)யர்க்கு வழங்கப் பட்ட ஓர் அடை.
இத்தளி நக்கன் சோழகுலச் சுந்தரிக்கும் (தெ. இ க. 2 261)
ஓலோ மாஹாதேவி ஈச்வரத்து நக்கன் சேரமங்கை...
இத்தளி நக்கன் இரணமுகராமி...
(தெ. இ. க. 2 66. த. க. சொ. 342)
2. சிவபெருமான் (சிவனின் பெயர் - நக்கன்)

வெல்வினையறியா நக்க வேடர் (திருவிளை. பாண்டி. 10)

## நகரா: = நகரி

பெருமுரசு வகையுள் ஒன்று (A large kettle drum)
நகரா முழங்க (கொண்டல் விடு தூது. 508)
கோவில்களில் இப்பெருமுரசு பயன்பாட்டில் உள்ளது. இது வைக்கப்படும் இடம் நகரா மண்டபம் இசுலாமியர் பள்ளிவாசலில் தொழுகை முதலியவைகளை அறிவிக்க முழக்கப்படுகிறது.
← த. க. க. 162/III

## நகரி: → நகரா

## நகை: → நகைஅவிநயம்

## நகை அவிநயம்: = நகை

நாட்டிய அவிநயஙகளுள் ஒன்று.
"நகையின் அவிநயம் நாட்டுங்காலை, மிகைபடு நகையது பிறர் நகை உடையது, கோட்டிய முகத்தது..., விட்டுமுரி புருவமொடு விலா உறுப்புடையது, செய்வது பிறிதாய் வேறு சேதிப்ப தென், றையமில் புலவர் ஆய்ந்தனர் என்ப" (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## நகைக்கூத்து:

= விதூடகக் கூத்து, வசைக்கூத்து
நகைச்சுவைக் கூத்து, சிரிப்பு நாடகம்
இருவகைக் கூத்தாவன:- வசைக்கூத்து, புகழ்க்கூத்து ... நகைத்திறச் சுவை என்பதனோடு கூட்டி ஏழென்பாருமுளர்; அஃதாவது விதூடகக்கூத்து. இதனை வசைக்கூத்து என்பாருமுளர். (சிலப். 3: 12 அடியார்க்.)
எண்வகை மெய்ப்பாடுகள் கூறிய தொல்காப்பியர் நகைக்கு முதலிடம் தந்துள்ளார்.
நகையே, அழுகை, இளிவரல், மருட்கை (தொ. மெ. 3)

## நகையர்: நகைச்சுவையாளர்

நகைவர்க்குத் தா இன்று உதவும் பண்பின் (புறம். 373: 35 – 36)
நகைவர் குறுகின் அல்லது (புறம். 398: 9)
நகைவர் ஆர நன்கலம் சிதறி (பதிற். 37: 4,பதிற். 43: 20)
← ப. த. நா. 230

## நகை வேழம்பர்: கோமாளி (Bafoons, Clowns)

நகைவேழம்பரொடு வகைதெரி இருக்கையும் (சிலப். 5: 53)

## நங்கை: = ஆடற்கணிகை

நங்கை பரவையார்க்குக் குடுத்தன... பொன்முக்காலே
← தெ. இ. க. 2: 38, த. க. சொ. 387
சுந்தர்விசுட்கும்.... நங்கைமார்கும்...
(TAS 8: P43-45/ EI 28: 37;11 த. க. சொ. 343)
ஒப்பு : குஞ்ஞையார் கூத்து – நங்கையார் கூத்து (கேரளம்)

## நஞ்சுண்டோன் அவிநயம்:

நாட்டிய அவிநயங்களுள் ஒன்று.
"கொஞ்சிய மொழியில் கூர் எயிறு மடித்தலும் பஞ்சியின் வாயில் பவரை கூம்பலும், தஞ்சமாந்தர் தம்முக நோக்கியோர், இன்சொல் இயம்புவான் போலி யம்பாமையும்;, நஞ்சுண்டோன் அவிநயமென்ப" (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## நட்டபாடை:

= நைவளம், நாட்டை, நட்டராகம், கம்பீர நாட்டை
அரும்பாலையின் (சங்கராபரணம்) திறப்பண்களுள் ஒன்று.

நைவளம் பழுநிய நயம் தெரிபாலை (சிறுபாண். 36)
நைவளம் நவிற்று பொழில் நந்திபுர
விண்ணகரம் நண்ணுமனமே (பாசுரம். 1439)
நைவளம் பழுநிய பாலை வல்லோன் (குறிஞ். 146)
நட்டராகம் முற்றுப் பெற்ற பாலையாழை வாசிக்க வல்லவன் (மேலது.நச்சர்)

(பாலையாழ் - அரும்பாலை)

நைவளம் பூத்த நரம்பியை சீர் (பரிபா. 18: 20)
நைவளம் பூத்த நரம்பு – நட்டபாடை என்னும் பண்ணைத்தருகின்ற யாழ் நரம்பு (மேலது. பரிமேல.)
↑ இப்பண் நாட்டியத்திற் (நட்டம்)குரியது. எனவே, 'நாட்டை' என்ற பெயர்.
ஒப்பு:- நாட்டைக்கூத்து - தெருக்கூத்து;
தெருக்கூத்தில்; அடிக்கடி பாடப்படும்பண்.
நட்டம் - நாட்டம் - நாட்டை
நட்டம் - நட்ட - நட்ட பாஷா - நட்ட பாடை
நாட்டை என்பது தமிழகத்தில் வழங்கிய பண். எனவே பாஷா (தமிழ்) என்ற பின்ஒட்டை சாரங்க தேவர் தந்துள்ளார்.

→ நைவளம்; நாட்டை

## நட்டுவக்காணி:

நாட்டியம் வல்லார்க்கு அளிக்கப்பட்ட நிலம்

| | |
|---|---|
| எடு:- ஆயிரத்தளி (கண்டியூர்) | - தெ. இ. க. 5 579 |
| மேலப்பழுவூர் | - ARE 361/1924 |
| திருச்சோற்றுத்துறை | - ARE 206/1931 |
| திருவிடைமருதூர் | - தெ இ க 5: 76 |
| ஆற்றூர் | - ARE 771/930 |
| திருக்கடவூர் | - ARE 255/1925 |
| சித்தலிங்கமடம் | - ARE 370/1909 |

## நட்டுவச்சாவடி:

1. நட்டுவர்களுக்கு மன்னர்களால் அளிக்கப்படும் மானியக்குடியிருப்பு.
2. இரண்டாம் துளஜா மன்னர், தஞ்சை நால்வரின் தந்தை சுப்பராய ஓதுவாருக்குத் தஞ்சைப் பெரிய கோவிலுக்கு எதிரில் அளித்த பெரிய கட்டடம் நட்டுவச் சாவடி என்று அழைக்கப்படுகிறது

## நட்டுவ தாளம்:

நட்டுவனார்கள் பயன்படுத்தும் (கைம்மணி) கஞ்சக் கருவிகளுள் ஒன்று பித்தளையால் ஒரு பகுதித் தட்டும், இரும்பால் மறுபகுதித் தட்டும் கொண்டது

## நட்டம்:

= நாட்டியம், நடனம், நடம், நடமாட்டம், கூத்து, (நிருத்தம்)
1. தாளத்தோடு பாதத்தைத் தரையில் நட்டி - நாட்டி (ஊன்றி) ஆடும் ஆடல்
முழக்கினுக்கு ஆடுவது நட்டம் (மத்தள. 74)
நட்டம் பயின்றாடு நாதனே (திருவாசக. 1: 89)
நடமாட்டம் காணப்பாவியேன் நானோர் முதல் இலேன் (பாசுரம். நாச். 10: 7)
எங்கும் திருமேனி எங்கும் சிவசக்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம் (திருமந். 2722. திருக்கூத்து தரிசனப்படலம்)
ஞானநடம் தான் நடுவே நாடு (திருவருட்பயன்)
நட்டமாடுவார் நள்ளிருள் பேயோடே (தேவா. 5: 34: 6)
நட்டப்பெருமாள் (தேவா. 1: 80: 10)
நட்டம் ஆடுவார் நள்ளிருள் ஏமமும் (தேவா. 5: 30: 3)
நட்டம் ஆடுவர் (தேவா. 3: 370: 2)
நட்டம் ஆடியை நம்பெருமானை (தேவா. 7: 62: 3 / 7861)
பாடியபாட்டும் பலவான நட்டமும் (திருமந். 2760)
ஆரியம், தமிழ் எனும் சீர் நடம் இரண்டினும் (சிலப். 3:13 அடியார்க்.)

2. கூத்து; வரிக்கூத்துள் ஒன்று.
"சிந்து... நட்டம்... கோத்த வரிக்கூத்தின் குலம்" (சிலப். 3: 13 அடியார்க்.மேற்.)
நடு – நட்டு – நட்டு+அம் – நட்டம் – நட்டு – நட்டுவாங்கம், நட்டுவனார் (த. க. க. 165/III)
நடி – நடம் – நட்டம் (தே.நே. 26 /IX)
3. தண்டியம்: நட்டுவனார் நாட்டியப் பயிற்சியின் போது கையில் வைத்திருக்கும் கோல்.
ஐயாண்டில் தண்டியம் பிடிப்பித்து... (சிலப். 3: 10–11 அடியார்க்.)
நீண்ட கட்டகமான (சதுரம்) தாளக்கட்டையின் மேல் இக்கோலால் (தாளமுழக்குகளை வாயால் சொல்லி) நட்டுவனார் தாளத்தைத் தட்டிக் காட்டுவார் இத்தாளத்திற்கு ஆடுதலே 'நட்டம்' என்பது. இப்பயிற்சிக்குப் பின்னரே பாடலுக்கு ஆடும் நாட்டியம் பயிற்றுவிக்கப்படுகிறது

← த. க. க. 164/III ,→ நட்டடைவு

## நட்டடைவு:

நாட்டிய கால் நிலை (அடைவு)களுள் ஒன்று. குதிக்காலை ஊன்றி முன்விரல் பகுதியை மேலே தூக்கி நிறுத்திக் குதிக்காலை ஊன்றுதல்

← த க. க. 22-23/I

நடு - நட்டு + அடைவு - நட்டடைவு

## நட்டணம்: → நட்டணை

## நட்டணை: நட்டணம்

1. நடிப்பு
2. கோமாளிக்கூத்து

→ நளினம்

## நட்டராகம்: → நட்ட பாடை

## நட்டவம்: → நட்டுவாங்கம்

## நட்டவன்: = நட்டுவன்

ஆடல் ஆசிரியன்
நட்டவனுக்குப் பங்கு நாலும்
(CHEN, 21. P. 425-28; த. க. கொ. 343)

## நட்டு:

1. நாட்டியம் (dance)
2. நாட்டியக்காரர் (dancer)

## நட்டுவப் பெண்டிர்: → பதியிலார்

## நட்டுவம்: → நட்டுவாங்கம்

## நட்டுவர்: = தலைக்கோல் ஆசான்

நடம் பயிற்றுவிப்போர்; நாட்டிய ஆசிரியர்.
உயிரை எல்லாம் ஆட்டுமொரு நட்டுவன் எம் அண்ணல் (திருவாதபு. புத்தரை. 75)
தலைக்கோல் ஆசான் பின் உளன் அக (சிலப். 30: 20)
தலைக்கோல் ஆசான் என்றது நட்டுவனை (மேலது. அரும்.)
நட்டுவன் ஒருவனுக்கு நிலன் இரண்டேய் எட்டுமாவும்
(TNPL 18, P.151-55; த. க. சொ. 343)

## நட்டுவாங்கம்: = நட்டவம், நட்டுவம்

சதிக்கோவைகளை முழக்கி நாட்டியப்பயிற்சி அளிப்பது.
நட்டவம் செய்ய நட்டவம் ஒன்றுக்கு
(தெ இ. க. 2 274, தேவ. 134,9)
(நட்டவம் ஒன்றுக்கு - நட்டவம் - நட்டுவர்)
நட்டம் - நட்டவம் - நட்டுவாங்கம்
பராந்தக தேவீச் வரத்து நட்டவக்காணியும்...
(தெ. இ. க 5 579, த. க. சொ. 343)

## நட்டுவ மேளம்:

1. பெண்கள் மட்டும் ஆடும் ஆடல்; (கோயில்களில் தேவதாசியர் ஆடும் ஆடல்.)
ஒப்பு :– கேரளத்தின் மோகினி ஆட்டம்
2. தாள மற்றும் ஆட்டக்கலைஞர்களின் குழு (மேளம் - கூட்டம், குழு)
அல்லூர் நட்டியத்தார் ... (தெ. இ. க 8 698)
நட்டியத்தார் - கூத்தர்
← த. க. கொ. 343

## நட்புக்கோவை:

இசையின் பொருந்து சுரங்களுள் ஒன்று.
(அனுவாதி, major third)
ஓர் இயக்கிலுள்ள (octave) இசையின் தானசுரங்கள் 12 இல், எடுத்துக்கொண்ட (நின்ற) சுரத்தினின்று அதைவிடுத்து 4ஆவதாக வரும் சுரம் நட்புச் சுரமாகும்

ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$
0 1 2 3 4 5 6 7
சக$^2$ / ரி$^1$ம$^1$ - நட்புக்கோவைகள்

'ச' விற்கு 'க$^2$', 'ரி$^1$' ற்கு 'ம$^1$' நட்புக்கோவை
இணை, கிளை, பகை, நட்பு என்றிந் நான்கின் (சிலப். 8: 33)
நட்பென்றது – நாலாம் நரம்பு (மேலது. அரும்.)
தொட்ட இராசிக்குமேல் நாலாவது நாலாவதாக வரும் சுரங்கள் நட்புச் சுரங்களாகும் (கருணாமிர்த. பக். 663)
அதாவது நின்ற நரம்பிற்கு அதைவிடுத்து நாலாம் வீட்டுக் கோவை நட்புக் கோவையாகும்.
"ஏழா நரம்பிணை நாலு நட்பு ஆகும்..."
(கல்லா – 100 உரை மேற். இசைமரபு நூற்பா)
← த. க. க. 101 & 172/I ; 166/III

## நட:

நட்ட, நாட்ட - ஊன்ற
நட்டி, நாட்டி - ஊன்றி
நட்டு - ஊன்று
ஒப்பு:– நடுதல், நடவு, நடுகை = ஊன்றுதல்
செங்கழுநீரும் உள்ளியும் நடப்பெறுவதாகவும்
(தெ. இ. க. 2 98)
வடக்கு நோக்கி அங்குர நட்டநடுகல்லின்
(TASSI, 1962- 65. P. 32 - 52)
முப்படித் தோரணம் நாட்டப் பெறுவதாகவும்
(EI, 22: 34; த. க. சொ. 343)
கல்லும் கள்ளியுந் நாட்டி
(TASSI, 1958-59. P. 41-83,P. 26-32; த. க. சொ. 352)
நடு - நட- நடம் ; நட - நடன்
நட - நடி ; நட்ட - நாட்டி - நாட்டியம்
காலை (பாதம்) தரையில் நட்டி ஆடுவதால் நட்டம்
ஒப்பு:– நட்டடைவு (நட்டு +அடைவு)

## நட நாராயணம்: பண்களில் ஒன்று

## நடபைரவி: → படுமலைப்பாலை

## நடம்:

= நட்டம், நடனம், நாட்டியம், கூத்து, நட்டணம், நட்டணை
தாளத்திற்கு ஆடுவது, நடிப்பது
நடம் குறையா அழகன் (தேவா. 2: 158: 7)
நடம் அது ஆடலான் (தேவா. 2: 115: 8)
மாநடம் ஆடும் வித்தகன் (தேவா. 3: 238: 7)
நடம் ஆடி (தேவா. 7: 33: 8)
நடம் ஆடியார் (தேவா. 7: 17: 9)
வலம் வந்த மடவார்கள் நடம் ஆட முழவு அதிர (தேவா. 1:130:1)
அதனின் நடிப்பது நடம் ஆகும்மே (திவா. 1770)
... நட நவில் மங்கை மாதவி (சிலப். பதிகம். 64–65)
ஏழாண்டு நடம் நவின்ற மாதவி (மேலது அடியார்க்.)
இசையும் நடமும் இசையத்திருத்தி (சிலப். 6: 18–25 அடியார்க்.)
நாளேது நீயேது நாதன் நடம் (உண்மை விளக். 3)

எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே நட்டம்... (மேலது. 32)
வழி நடம் தனது மரக்கால் அன்றி (கல்லா. 9912)
இடங்கொண்ட சக்தியும் எந்தைபிரானும்
நடங்கொண்டு நின்றமையானும் அறிந்தேன் (திருமந்திரம்)
*நடங்கவின் கொளம்பலத்து நாயகச் சென்தேனின்*
*(தெ. இ. க. 4:228. த. க. சொ. 344)*

## நடமாடுதல்:

*நடம் + ஆடுதல்; கூத்தாடல்*
வலம் வந்த மடவார்கள் நடமாட முழவதிர (தேவா. 278: 1)

→ நட்டம்

## நடமுருடு:

*நடனத்திற்குரிய முருடு எனும் வாத்தியம்.*
*← செ ப. அ. பிற். 327*

## நடவுப்பாட்டு:

*நாற்று நடும்போது மகளிர் பாடும் பாடல்.*
எடு:–
1. சம்பா விதைபோட்டு சரியான நாத்து விட்டு
பம்பாயி சீலக்காரி பக்குவமா நட்டு வாடி
2. மண்வெட்டி தோளில் போட்டு மடதிறக்கப் போறவரே
மடையைத் திறந்து விடு மங்கையர்கள் நாத்துநட
தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும் பக். 226–7 (சோமலெ.)

## நடன்:

= நாட்டியக்காரர், நட்டுவர், நடிகர், கூத்தர், கோடியர், ஆட்டன், நாடகர், கண்ணுளாளர், வயிரியர், பொருநர், அவிநயர் (நிருத்தர்)
துடிச்சீர் நடத்த வளிநடன் (பரிபா. 22: 42)
விடரும் தூர்த்தரும் நடரும் உள்ளிட்ட (குறள் பரிமேல. உரை)
பாரதியாவது :– கூத்தன் தலைவனாக நடன்நடி பொருளாக...
(சிலப். 3: 13 அடியார்க்.)
கோடியர், பொருநர், அவிநயர் (சூடா. 2: 38)

## நடனம்:

ஆடல், நாட்டியம், நர்த்தனம் (வ. சொ.)
பாட்டுக்கு ஆடுவது (மத்தளவி. 74)
கவுத்துவப்பாட்டிற்கு ஆடல் (பஞ்ச. 25)
*நடி + அனம் - நடனம்*
*ஒப்பு :- கண்டி+ அனம் - கண்டனம்*
'அனம்' ஒரு தொழிற்பெயர் விகுதி (தே.நே. 216,III)
பதினெட்டு நடனத் தொழில் பயிற்றி (கொண்டல் விடு. 176)
நன்று நன்று நீ நம்முகைக் காட்டிய நடனம் (கந்தபு. அவைபுகு. 87)

## நடனி: → நடி

## நடி: = நடனி

1. *நடிகை, கூத்தி*
பாரதியாவது:– கூத்தன் தலைவனாக நடன் நடி பொருளாக...
(சிலப். 3:13 அடியார்க்.)
நடித்தெதிர் நடந்ததன்றே நடனியர் தம்பின் மன்னோ
(இரகு. ஆற்று. 20; தே.நே. 135/9)

2. *நடித்தல்,*
*நடித்தல் என்பது இன்னொருவனைப்போல் அல்லது இல்லாததை உள்ளது போலச் செய்து காட்டுதல்*
3. *நடம்* (dance)
நடிகொள் நன்மயில் சேர்திரு நாறையூர் (தேவா. 216: 5)

## நடித்தல்:

*ஒத்து நடத்தல், கூத்தாடுதல், நாடகமாடுதல்,பாசாங்கு செய்தல், கோலம் கொள்ளுதல், போலச்செய்தல்*
*நள் - நளி, நளிதல் - ஒத்தல்* (தே.நே. 133/9)
*நாட நளிய நடுங்க நந்த* (தொ. உ. 11)
*நளி - நடி*
*ஒப்பு :- களிறு - கடிறு*
நடிக்கும் மயில் என்ன வரும் நவ்வி விழியாரும்
(கம்ப. வரைக்காட்சி. 15)

*← தேவ. 215/3*

## நடுத்தானம்:

*சமன் இயக்கு (மத்தியஸ்தாயி*-middle octave)

## நடுநிலைச்சுவை அவிநயம்:

*எண்வகை மெய்ப்பாடு (சுவை)களுள் வராத சமநிலைச் சுவை.*
"நாட்டுக்காலை நடுவுநிலை அவிநயம் கோட்பாடு அறியா... விலக்கார் என்ப வேண்டுமொழிப் புலவர்." (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## நடை:

1. *தாளநடை, பாடல்பாடும் காலம் (நாற்காலம் - சதுர்காலம்)*

| *வ.எண்.* | *தாளநடை* | *பாடல்காலம்* | *குறியீடு* |
|---|---|---|---|
| 1 | முதல் நடை | 1 ஆம் காலம் | 1/1 |
| 2. | வாரநடை | 2 ஆம் காலம் | 2/2 |
| 3. | கூடைநடை | 3 ஆம் காலம் | 4/4 |
| 4. | திரள் நடை | 4 ஆம் காலம் | 8/8 |

2. *கூத்து* (dance)
நடையு நட்டணமும்... ஆடல் பேர் (சூடா. 9: 48)

3. *கதி, இலயம்*
*எடு:- துரித கதி, துரித இலயம் -*
வேகநடை (fast tempo);
*மந்தகதி, சௌக்க இலயம் (விளம்பித இலயம்)*
மெதுநடை (slow tempo).
*கண்ட கதி - கண்ட நடை*
.... முதல் நடை, வாரம், கூடை, திரள் என்று சொல்லப்படா நின்ற...
(சிலப். 3: 67 அரும்.)

**நடைகேளிக்கை:**
ஊர்வலத்தில் நடந்து கொண்டே செய்யும் நர்த்தனம்
(கோயிலொழுகு 95)
*கரகாட்டம், காவடி, ஆலியாட்டம் முதலியன இவ்வகையிலும் நிகழ்த்தப்படுகின்றன.*

**நடைசாரி மேளம்:**
1. *ஊர்வலமாகச் செல்லும் மேளம்* (Pipes music which accompany a procession)
2. *சாப்பறை* (funeral drum )
← *செ. ப. அ. 2146*

**நடைப்பாங்கு வரிசை:**
*சஞ்சாரி வரிசை, நடைநிரல்*
*கோவைப்பயிற்சி (சுராவளி) வரிசையில் 9 முதல் 12 வரையுள்ள வரிசைகளுக்கு நடைப்பாங்கு வரிசை என்று பெயர்.*
*(சஞ்சாரம் - திரிதல், நடத்தல்)*
← இ. து. த. சொ. பக். 10

**நடைநிரல்:** → நடைப்பாங்கு வரிசை

**நடை மூன்று:**
*முதல் நடை, வாரநடை, கூடை நடை.*
*நடை (திரள் நடையுடன்) நான்கு எனப்பட்டாலும், 'திரள்' மிகுந்த வேகமுடையது. கருவி மற்றும் வாய்ப்பாட்டிலும் முதல் மூன்று நடைகளே பெரிதும் பயின்று வருவன.*
பரிவட்டணையின் இலக்கணந்தானே
மூவகை நடையின் முடிவிற்றாகும். (சிலப். 7: 5–8 அரும்.)

**நடையொத்து:** *தாளவகையுள் ஒன்று.*
*நம்மாழ்வாரின் திருவாய்மொழி மற்றும் திருமங்கை யாழ்வாரின் பெரிய திருமொழிப் பாடல்களுக்கு இத்தாளம் வகுக்கப்பட்டுள்ளது.*
எடு: – (1) திருவாய் மொழி மூன்றாம் பத்து முதல் பாடல் – 'முடிச்சோதி'
(2) பெரிய திருமொழி முதற்பத்து நாலாம் பாடல் – 'ஏனமுனாகி'

**நதியதி:** → நாகசுரக்கோலம்

**நந்தி:** *பேரிகை*
பேரிகைப் பேர் நந்தி (சூடா. 7:39)

**நபுரி:** கஞ்சக்கருவியுள் ஒன்று. (அபி. சிந். 318)

**நமரி:** *நீண்ட எக்காள வகை* (long trumpet)

**நயநிலைப்படலம்:** நாடகம் (யாழ். அக.)

**நயம்:**
கனமும் தேசியமும் சேர்ந்து பாடுதல் (கனம். கிருஷ். 1)

**நயவன்:** *இசையாளன்*
நயவன் தைவரும் செவ்வழி நல்யாழ் (அகம். 212: 6)

**நர்த்தன்:** *(நருத்தன்)*
*நிருத்தன்; கூத்தாடுவோன் ; ஆடலன்*

**நர்த்தனம்:** *(நருத்தனம்)*
*நிருத்தனம்; கூத்து, ஆடல்; தாளத்திற்கு ஒத்தபடி அவிநயித்தல்*
*நித்தம் > நருத்தம் > நருத்தனம் > நர்த்தனம்*
*(நர்த்தனம் - அவிநயம்)*
*'மோர்வியக் காணியு முன்பு காணி உடைய நித்தவிடங்கன் மல்லையன்'*
*(திருக்கண்டியூர் வீரட்டத்து மங்களாம்பிகை கோவில் இரண்டாம் கல்வெட்டு)*
← *அபிநயதர்ப்பணம். பா 39*

**நரப்படைவு:** = *இசை வரவு*
*பண்ணின் சுரஅடைவு - பண்ணின் ஏறுநிரல், இறங்கு நிரல் இவற்றுள் வரும் சுரங்கள்.*
இசையாவது நரப்படையால் உரைக்கப்பட்ட 11, 991
ஆதி இசைகளாம் (சிலப். 3: 45 உரை)
... நரப்படைவு கெடாமலும்... (மேலது. 3:93 –4 அரும்.)
நரப்படைவும் உடைத்தாயிருக்கிற பாலைப் பண்ணை
(மேலது 3:148–9 உரை)
(பாலைப்பண் – செம்பாலை)
எடு:–
செம்பாலை (அரிகாம்போதி) யின் நரப்படைவு :– ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^1$

**நரம்பின்மறை:** = *யாழ் நூல்*
*இசைநூல், இசையியல் நூல், இசை இலக்கணம்*
இசையொடு சிவணிய நரம்பின்மறை... (தொ. எ. 33)
*(நரம்பு - இசைச்சுரம்)*
... யாழினது இசைநூற் கண்ணும் (மேலது இளம்.)
யாழ்நூலிடத்தன... (மேலது. நச்சர்)

**நரம்பு:** = *கோவை, பாலை*
1. *சுரம்*
பிழையா மரபின் ஈரேழ்கோவை (சிலப். 8: 31)
பன்னிருகால் திரிக்கப்பன்னிரு பாலையும் பிறக்கும்
(சிலப். 3:72–8 அடியார்க். உரை)
நரம்பு மீது இறவாது உடன்புணர்ந்து ஒன்றி (மலைபடு. 535)
*யாழின் நரம்பு (தந்தி) களில் இருந்து சுரங்கள் பிறந்தமையால் ஆகுபெயராக இசைச்சுரத்தை நரம்பு என்றனர்.*
நிரைந்த நரம்பு நிகழும் பண்ணெனல் (பிங்க. 1425)
மெய்க்கிளை நரம்பில் சைக்கிளை கொள்ள (சிலப். 3:74)

2. *கோல், தந்திரி, குரல், தந்தி* (yal string)
கோலே, தந்திரி, குரல் இவை நரம்பே (பிங்க. 1434)
வடிநரம்பு இசைப்ப போல் (கலித். 36)
சுகிர்புரி நரம்பின் சீரியாழ் பண்ணி (புறம். 109. 15)
இடைநின்ற நரம்பு (கலித். 8:10)
கைகவர் நரம்பின் இம்மென இமிரும் (குறிஞ்சி. 147)
தீம்தொடை நரம்பின் இமிரும் (நற். 17: 11)
ஏழும் யாழின் இசை கெழுநரம்பே (பிங். 1402)
*மானிடன் - பேசும் (மொழி - ஒலி) ஆற்றலுள்ளவன்*
*எனவே நரல் > நரன் (நரம்)*
*ஒப்பு:- வால் + நரம் - வானரம்*
நரல், நரல்வு – ஒலித்தல் (செ. ப. அ. 2165)
*நரல் - நரன் - நரம் - நரம்பு - ஒலித்தலை உடையது.*
லகார இறுதி, னகார இயற்றே (தொ.புள். 71)
ஒப்பு:– சேரல் – சேரன்
ஆடுகழை நரலும் சேட்சிமை (புறம். 120: 18)
வெண்குருகு நரல (அகம். 13: 23)
வளை நரல வயிர் ஆர்ப்ப (மதுரைக் 185)
வளைநரல – சங்கம் முழங்க (மேலது நச்சர்)
← *த க. க. 178*/III

## நரம்பு உளர்தல்:

1. *நரம்பு மீட்டல், யாழ்த்தந்தியைத் தெரித்தல், ஒரு சுரத்தை உள்ளோசை (கமகம்) தோன்ற அழுத்தி, அசைத்து, தேய்த்து, வழுக்கி, வாசித்தல்*
2. *ஒத்து (சுருதி) சேர்த்தல்*
குயிலுவருள் நாரதனார் கொளை புணர் சீர் நரம்புளர்வார். (சிலப். 17: 26)
வங்கியத்து விரல் உளர்ந்து ஊதும் துளைகள் (சிலப். 3: 58 அடியார்க்.)
உளர்... கூந்தல்... (பரிபா. 9: 63)
உளர்... கதுப்பு... (குறுந். 312)
உளர் நரம்பு (பொருந. 17)
கூழை உளர்ந்து (அகம். 207:15)
← *த க. க. 177*/III

## நரம்புக்கருவி:

*தந்தி வாத்தியங்கள்* (string instruments, chordophone) *தந்தி அசையும் போது காற்றில் துடிப்புகளை ஏற்படுத்தி ஒலி உருவாகி இசை பிறக்கிறது.*
*எடு:-யாழ், கின்னரம், கோட்டுவாத்தியம்.*
துணைக்கருவியானும், நரம்புக்கருவியானும்...
(சிலப். 5: 35 – 7 அடியார்க்.)
யாழ் முதலாகிய நரம்புக் கருவிகளையுடையாரு மென்க.
(மேலது. 5: 52 அடியார்க்.)

## நரம்பு நான்கு:

*இசை புணரும் சுரங்கள் நான்காவன:-*
*இணை, கிளை, பகை, நட்பு.*
இணை, கிளை, பகை, நட்பு என்று இந்நான்கின்
இசைபுணர் குறிநிலை எய்த நோக்கி (சிலப். 8: 33 – 34)

## நரல்: → நரம்பு

## நரல்வு:

*ஆறு உள்ளோசை (கமகம்) களுள் ஒன்று*
முரல்வும், நரல்வும், தெளிரும், ஞெளிரும், விழைவும், நுணுக்கமும் உள்ளோசை என்ப (பிங்க. 1436)

## நல்லிசை நிறுத்தல்: → ஒத்துக் கூட்டல்

## நலிதல்:

*'பண்'ணை உருவாக்கும் இசை (கிரியை)த் தொழில் எட்டனுள் ஒன்று.*
கிரியைகள் எட்டாவன:– எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என இவை (சிலப். 3:26 அடியார்க்.)

## நலிபு வண்ணம்:

*ஆய்த எழுத்து அதிகம் பயின்று வரும் சந்தப்பாடல்.*
நலிபு என்பது ஆய்தஒலி (தொ. பொ. 223 நச்சர்.)

## நலுங்கு: *பரிகாசப்பாடல்*

*நலங்கு (தெ. சொ)*
*மணமக்களை ஊஞ்சலில் அமர வைத்து சுற்றி நின்று பாடும் இசைப்பாட்டு; நடை பற்றிக் கருதாது இசையையே சிறப்பாகக் கொண்டமைவது நவரோசு என்ற பண்ணில் பெரிதும் பாடப்படுவது. மகளிர் பாடியதை நாகசுரக்காரர்கள் வாங்கி ஊதுகின்றனர்.*
← *த க க. 180*/III; *த இ. பே. 115/16*, → பரிகாசப்பாடல்

## நவசந்திக் கவுத்துவம்:

*ஒரு வகைச் சடங்கு ஆட்டம். ஒன்பது சந்திகளில் அமைந்துள்ள தெய்வங்களுக்கு 9 வகை நடனம், 9 வகைப்பண்கள், 9 வகைத் தாளங்களால் பாடி, ஆடப்படுவது*

| கவுத்துவப்பெயர் | நடனம் | பண் | தாளம் |
|---|---|---|---|
| 1 பிரம்ம சந்திக் கவுத்துவம் | சமபாதம் | செந்திறம் (மத்யமாவதி) | பிரும்ம தாளம், சச்சபுடம் |
| 2.இந்திரகவுத்துவம் | புயங்கம் | குர்சரி | சமதாளம் சச்சபுடம் |
| 3.அக்னிகவுத்துவம் | மண்டலம் | நாட்டை | சிங்கலீலை,மத்தாபணம் |
| 4. எமன் கவுத்துவம் | தண்டபாதம் | தக்கேசி, தேசாட்சி | பிருங்கி, லலிதம் |
| 5. நிருதி கவுத்துவம் | புசங்க திராசம் | குந்தாலி (குந்தலம்) | மல்லி (நைருத்), பிரதிமத்திமவாத்தியம் |
| 6.வருணகவுத்துவம் | குஞ்சிதம் | ஸ்ரீகாமரம் | நவதாளம்,சிம்மநந்தனம் |
| 7.வாயு கவுத்துவம் | புசங்க லலிதம் | இராமகிரி (மகுடஇராமகிரி) | பலிதாளம், கவத்தியம் |
| 8.குபேர கவுத்துவம் | சந்தியா | மாளவஸ்ரீ(தக்கண்) | கொட்டரி, கந்தர்ப்பம் |
| 9.ஈசான கவுத்துவம் | ஊர்த்துவபாதம் | மலகரி, அந்தாளி | அனுமக்கும்பம், டக்கரி |

(நித்திய சுமங்கலி பக். 171)

## ,வசந்தித்தாளம்:

| எண் | தெய்வம் | திசை | பழைய தாளம் | பின்னாளில் ஏற்பட்டதாளம் |
|---|---|---|---|---|
| 1 | பிரம்மன் | மத்தியம் | பிரம்மதாளம் | ஆதி |
| 2 | இந்திரன் | கிழக்கு | இந்திரதாளம் | மூன்றன்திரிபுடை |
| 3 | அக்கினி | தென்கிழக்கு | மத்தாபனம் (சதுசுர சம்பை) | நாலன்செம்புடை |
| 4 | எமன் | தெற்கு | பிருங்கி | நாலன்அலகு (சதுசுரலகு) |
| 5 | நிருதி | தென்மேற்கு | நைருதி | மூன்றன் அலகு (திசுரலகு) |
| 6 | வருணன் | மேற்கு | நவதாளம் | சிம்மநந்தனம் |
| 7 | வாயு | வடமேற்கு | பலி | பஞ்சவாத்தியம் |
| 8 | குபேரன் | வடக்கு | கொட்டரி | மூன்றன் அலகு (திசுரலகு) |
| 9 | ஈசான்யம் | வடகிழக்கு | டக்கரி | அனுமக்கும்பம் |

## நவதாளம்:

ஒன்பது வகைத்தாளங்கள்

அரிதாளம், அருமதாளம், சமதாளம், சயதாளம், சித்திரதாளம், துருவதாளம், நிவிர்த்த தாளம், படிம தாளம், விடதாளம்.

(பரத. தாள. 6)

அடியினில் சமதாளத்தோடு... நவதாளம் இவைகளாமே...

(சூடா. 12:103)

சேமதாளம்... நவதாளத்தின் நாமமாகும் (திவா. 2437)

சமதாளம்... நவதாளத்தின் நாமமாகும் ... (பிங்க. 439)

## நவரங்கம்: (நவ அரங்கம்)

1. நாடகசாலை (Theatre) (பிங்க. 661)
2. கோயிலிலுள்ள பிரதான மண்டபம்

← (செ. ப. அ. 2179)

## நவரோசு:

பண்களில் ஒன்று; உழை ஒத்து(மத்திமசுருதி)டன் பாட வேண்டிய நாட்டார் பண்; முதல் நடையில் பாடினால் இனிமையாக இருக்கும். கதகளியில் நவரச என்று அழைக்கப்படுகிறது (ச. இ. இ பக். 137-38)

## நவிர்: = நவிரம் (அ. நி.)

தக்கேசிப்பண்.

ஆண்பால் மயிரும்... தக்கேசி இசையும்...

நவிரெனல் (பிங்க. 3712)

நவிர் தக்கேசி (பிங்க. 1396)

## நவிரம்: → நவிர்

## நவில்: நவில்தல் - பாடுதல், இசைபட ஒலித்தல்

தேன் நவின்ற.. அருவிசெய்யாநிற்கும் மாமலைக்கே(பாசுரம் 2527)

நாதப்பெரும்பறை நவின்று (திருவாசக. 2:108)

வரி நவில் கொள்கை மறைநூல் வழுக்கத்து (சிலப். 13: 38)

## நள்ளெனல்: ஓர் ஓசைக்குறிப்பு

நள்ளென் மாலை மருதம் பண்ணி (புறம். 149:1–2)

## நளி:

1. ஒத்தல், ஒத்து நடத்தல், போல (அவிநயம்) செய்தல். நளிநயம் - அவிநயம்

நடித்தல் – ஒத்து நடத்தல், போல அவிநயம் செய்தல்.

(தே. நே. 26, 133, 134,9)

2. நளி – நளம் – அகலம் (சது. அக.)

நளிநடம் - பரந்து ஆடும் ஆடல் - பரத நாட்டியம்

3. நளி - நடி

ஒப்பு:– களிறு – கடிறு

4. நள் - மிகுதிப் பொருள் உணர்த்தும் உரிச்சொல் எடு:-நள்ளிரவு

## நளிநடம்:

=இலையம், இலயம், இலாசியம், நளிநயம், நளினியம்.

தாண்டவம் போன்ற கடுமையின்றி, எளிதாக மகளிர் ஆடும் நடனம்

ஒப்பு:- நளினம் - நளினியம்

← த. க. க. 37/III

## நளி நயம்: → நளி நடம்

## நளின நடனம்: = குழகம், நிருத்தியம்

மெய்ப்பாடும், பாவமும் தோன்ற ஆடும் ஆடல்.

← த. க. 186/III

## நளினம்: = நட்டணை

கோமாளிக்கூத்து

நாட, நளிய, நடுங்க, நந்த (தொ. உ.11)

## நளினியம்: → நளிநடம்

## நளுத்தை: பண்களில் ஒன்று

## நறுக்கு:

சீவாளி (mouth piece of a pipe instrument, reed )

நாகசுரம் போன்ற இசைக்கருவிகளின் நாக்கு.

(செ. ப. அ.2186 ; தே.நே. 100/9)

## நறு நாட்டியம்: → நொறு நாட்டியம்

## நன்கு பாடுவான்:

முதலில் பாடுபவன், தலைமைப்பாடகன்.

நிவந்தத்திற் நன்கு பாடுவான் 3 கூறும் உடன்பாடுவான் 2 கூறும் உண்ணச் செய்தேந் (தெ. இ க. 13 74. த. க. செர. 350)

ஒப்பு: தலைப்பாட்டுக் கூத்தியும் இடைப்பாட்டுக் கூத்தியும்

(சிலப். 14: 156)

# நா

**நா:** *நாகசுரத்தின் ஊதுவாய்*

### நாகசரம்:

= நாகசின்னம், நாயகசின்னம், நாயகசுரம் (யாழ். அக) நாயனம்.
*நாகசுரம் என்ற (தென்னக இசையின் தனித்த அடையாளமான) காற்றுக்கருவி.*
எக்காள நாகசரமே தூது பூரிகையும் (அப்பாண்டை நாதர் உலா)
↑குறுங்குழல்–கட்டைக்குழல்(மோர்வியம்–முகவீணை) என்ற பண்டைய இசைக்கருவியின் வளர்ச்சியே நாகசுரமாகலாம்.
(செ. ப. அ. 2221; தமிழர் இசை பக். 529)
→ நாகசுரம், நாகசின்னம்

### நாகசின்னம்:

*கோயில்களில் சாமி புறப்பாடு, வீதிஉலா, பூசை ஆகியவற்றிலும், திருமணத்தில் மங்கலம்(தாலி) கட்டுவதிலும், அடையாளமாக நாகசுரம் இசைக்க (ஊத) ப்படுவதால் நாகசின்னம் என்ற பெயர்.*
*(சின்னம் - அடையாளம், குறியீடு)*
ஆறுஎறிபறையும் சூறைச்சின்னமும் (சிலப். 12: 40)
→ நாகசுரம், நாகசரம்

### நாகசுரக்கோலம்:

= நதியதி, நாகசுரயதி(ஸ்ரோதோவஹயதி)
*முழவுச் சொற்கள் தொடக்கத்தில் குறுகியும் வரவரப் பெருகியும் அமைவது தவலைக் கோலத்திற்கு எதிரான அமைப்புடையது.*
எடு:– தோம், கிடதோம், தகிடதோம், ததிகிடதோம்.

### நாகசுரபாணி:

*வாய்ப்பாட்டு (மிடற்றிசை) பாடுகின்ற ஒரு முறை. வாய்ப்பாட்டுப் பாடுங்கால் நாகசுரவாசிப்புப் போல் வன்மையாகப் பாடுவது இதற்கு மறுதலையானது யாழ் (வீணை)ப்பாணி*

### நாகசுரம்:

= நாகசின்னம், நாகசரம், நாயனம், மங்கல வாத்தியம், பெரிய மேளம், நாகவர்த்தியம்
*நெகிழி குடும்பத்தைச் சேர்ந்த காற்று இசைக்கருவி.*
பூரிகை, நாகசுரம், பொற்சின்னம், எக்காளை
(பரதசங்கிரகம். பக். 67)
*நாகசுரம் ஒத்துவகைக்கு பணம் 1க்கு*
(TAS, 5, P.116-119; *த. க. சொ. 351*)
*(நாதசுரம் - திரிந்த வடிவம்)*
↑ கட்டைக்குழல் (மோர்வியம்–முகவீணை) – திமிரி – இடைப்பாரி – பாரி என்ற வளர்ச்சி, காலத்தால் ஏற்பட்டதாகக் கொள்ளலாம்.
*நாகசுரம், நாகசின்னம்; நாகம் - சுரபுன்னை (ஆச்சாமரம்)*
↑ இம்மரத்தில் நாகசுரம் செய்யப்படுவதால் நாகசுரம் என்றும் பெயர் பெற்றிருக்கலாம்.
← *த க. க. 116/*IV *; ப. ஆ. இ. பக். 153*

### நாகசுராவளி: *நாதசுராவளி*

*பண்களில் ஒன்று* (பரத. இராக. பக். 103)
*(நாத சுராவளி - திரிந்தவடிவம்)*

### நாகசுரயதி: → நாகசுரக் கோலம்.

### நாகதொனி: *மருதயாழ்த் திறங்களுள் ஒன்று.*

தக்கேசி... நாகதொனி... மருதயாழ்த்திறனே (பிங்க. 1383)

### நாகநாதம்: *பண்களில் ஒன்று* (பரத. இராக. 104)

### நாகபந்தம்:

*ஆடலின் போது இரண்டு கால்களின் படங்களையும் இடம் வலமாக மாற்றி வைக்கும் ஒரு கால் முறை (அடைவு)*

### நாகபாசம்: → கவைக்கடை.

### நாகம்: *குறிஞ்சி யாழ்த்திறங்களுள் ஒன்று*

நட்டபாடை... நாகம்... குறிஞ்சியாழ்த்திறமாகக் கூறுவர். (பிங்க. 1382)

### நாகராகம்:

*செம்பாலையுள் பிறக்கும் பண்களுள் ஒன்று; பெருகியல்.*

... பாலையாழ், நாகராகம்... உதயகிரி என இவை
(சிலப். 8: 35 அடியார்க்.)
பாலைக்குப் பெருகு – நாகராகம் (சிலப். 14: 160–167 அடியார்க்.)

## நாகவராளி: *பண்வகையுள் ஒன்று (யாழ். அக)*

↑இதுவே பின்னாளில் புன்+நாகவராளி – புன்னாகவராளி ஆகி இருக்கலாம்.

*புன் - சிறிய*

## நாக வாத்தியம்: → நாகசுரம்

## நாட்டம்:

= நாட்டை, கம்பீரநாட்டை, நட்டபாடை, நட்டபாஷா, நைவளம், நாட.

*பண்களில் ஒன்று இது நாட்டியத்திற்குரியது.*
*நட்டம் - கூத்து, ஆடல்*
*நடம் - நட்டம் - நாட்டம் - நாட்டை*
*நட்டம் - நட்ட - நட்ட பாஷா - நட்டபாடை*
*(பாஷா - வடமொழியர் தமிழைச் சுட்டும் சொல்)*

தமிழ்நாட்டைச் சேர்ந்த பண் என்பதற்கு சாரங்கதேவர் தந்த பின் ஒட்டு – (நட்ட) பாஷா

நாட்டம்... ஓர் பண்... (சூடா. 11: 15)
நட்டமே நடனம் (சூடா. 11: 25)
நைவளம் பழுநிய பாலை வல்லோன் (குறிஞ். 146)

| | |
|---|---|
| *நைவளம்* | *> பாலை* |
| *நாட்டை* | *> சங்கராபரணம்* |
| *ச க² ம¹ ப நி² ச்* | *> ச ரி² க² ம¹ ப த² நி² ச்* |

*இந்துத்தானியில் இப்பண் ஜோக் (Jog) என்று அழைக்கப்படுகிறது*

நயனமும், பண்ணும், வாளு, நாட்டம் (பிங்க. 3719)

→ நாட்டை, நைவளம், நட்டபாடை

## நாட்டாங்கம்: = நிருத்தாங்கம், நிருத்தானுகம்

*நாட்டியத்திற்கு முழவு முதலிய இசைக்கருவிகளை முழக்குதல்.*

நிருத்தாங்கம் – நிருத்தத்திற்கு வாசிப்பது (சிலப். 3:14 உரை)

*← த க க. 194/III ; செ. ப. அ 2218*

## நாட்டார் இசை:

*மக்கள் இசை, கிராமிய இசை (Popular Music). இது எளிய வடிவுடையது செவ்வியலுக்கு மூலமானது. இயல்பாக உருவானது. எளிய தாள முறையுடையது ஓரளவான தான எல்லை (limited compass) கொண்டது. மூன்று, நான்கு சுரங்கள் மட்டும் கூடப் பயின்று வரும். வல்உழை (பிரதி மத்திமம்) தவிர 11 சுரத்தானங்களும் பயின்று வரும். இது வட்டாரம் சார்ந்தது (தேசிவகை). பெரும்பாலும் ஒன்றன் தாளம் (ஏகம்) மற்றும் மூன்றன் நடை (திசுரம்) யில் பாடல்கள் அமைந்திருக்கும்*

## நாட்டார் இசை வடிவங்கள்:

*நாட்டார் இசை (பாடல்வகை) ஒவ்வொன்றும் தனி வடிவுடையவை*
*நொண்டிச்சிந்து, கரகச்சிந்து, காவடிச்சிந்து, கும்மி, கோலாட்டம், ஆனந்தக்களிப்பு, பள்ளு, கிளிக் கண்ணி, குறத்திப் பாட்டு, பண்டாரப் பாட்டு, பிச்சைக்காரிபாட்டு, பாம்பாட்டிப் பாட்டு, தொம்பச்சிப் பாட்டு, கிளிப்பாட்டு, வண்டிக்காரன் பாட்டு, ஓடக்காரன் பாட்டு, மாரியம்மன்பாட்டு, உடுக்கடிப்பாட்டு, குடுகுடுப்பைக்காரன்பாட்டு, மறவன் பாட்டு, அம்மாக்கண்ணுபாட்டு, தண்டகம், இலாவணி முதலிய பல்வேறு இசைவடிவங்களைக் கொண்டது நாட்டார் இசை முறை.*

→ நாட்டார் பாடல்

## நாட்டார் பண்கள்:

*இவை எளிய வடிவம் கொண்டவை. செவ்வியல் பண்களின் தொன்மை (primordial form) வடிவம் உடையவை 3 அல்லது 4 சுரங்கள்கூடப் பயின்று வருவதால் பண்ணுடன் இனங்காண முடியாதவை. எனினும், செம்பாலை (அரிகாம்போதி), பிலகரி, வராளி, செஞ்சுருட்டி, யதுகுலகாம்போதி, முல்லைப் பாணி (மோகனம்), சிந்துபைரவி, கோடிப்பாலை (கரகரப்பிரியா), ஆனந்த பைரவி, புன்னாகவராளி, நாதநாமக்கிரியை, நவரோசு, நீலாம்பரி, குறிஞ்சி, மாண்டு முதலிய பண்களின் சாயலை நாட்டார் பாடலில் காண முடிகிறது. இப்பண் சாயலில் பயின்று வரும் சுரங்களைக்கண்டு செவ்வியல் பண்கள் (இராகங்கள்) உருவாக்கப்பட்டன. 2000 ஆண்டுகளுக்கு முன்பே, தொழில்முறைக் கலைஞர் களான பண்டைப்பாணர், பாடினியர், விறலியர், மதங்கர், கண்ணுளர், வயிரியர், கோடியர், கூத்தர் முதலிய பாண் குடியினரால் இப்பண்முறை வளர்த்தெடுக்கப் பட்டது.*

*← த. ப. வ பக். 386*

## நாட்டார் பாடல்:

*நாட்டுப்புறப்பாடல். சிற்றூர்ப்புற எளிய மக்களின் பாடல். மோனைக்கும் சந்தத்திற்கும் முதலிடம் தருவது. பாட்டில் 'பண்'ணை விட தாளத்திற்கு முதன்மை தருவது; எனவே ஆடலுடன் கூடியது. இவை,*

" எளிய சொற்கள், எளிய நடை, ஆடம்பரமில்லாத கருத்து, இனிமை, அழகு, இசைத்தன்மை கொண்டவையாகக் காணப்பெறும்" (சிந்து. இலக். பக்.5 (பழ. முத்தப்பன்)

"எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு..."
(பாரதியார் பாஞ். சபத. முன்னுரை)

*பாட்டு, உரை, நூல், பழமொழி (பிசி), விடுகதை, பண்ணத்தி, அங்கதம் போல்வன நாட்டார் பாடல்கள்.*

பாட்டு, உரை, நூலே, வாய்மொழி, பிசியே

அங்கதம், முதுசொல்லொடு... (தொல். செய். 78)
மற்றும் வேலன் வெறியாட்டுப் பாடல், கட்டுவிச்சி, (அகவன்மகள்)பாடல், வள்ளைப்பாடல், ஊசல் பாட்டு, குரவை, தாலாட்டு, ஒப்பாரி, ஏற்றப்பாட்டு, ஓடப்பாட்டு, ஏசல்பாட்டு, நடவுப்பாட்டு, பொலிப்பாட்டு, தென்பாங்கு, உழைப்பாளர்பாடல், விழாப்பாடல்,பொழுதுபோக்குப்பாடல், வண்ணனைப் பாடல், சாழல், அம்மானை, கோத்தும்பி, உந்தி, தோள்நோக்கம், பத்திமைப்பாடல், சடங்குப்பாடல் என்று பரந்து விரிந்த நெடும் பரப்பை உடையது நாட்டார் பாடல் மரபு.

நாட்டார்பாடல் பல்வேறு பெயர்களால் அழைக்கப் படுகிறது. மக்கள் பாடல், பாமரப்பாடல், கிராமியப் பாடல்,நாடோடிப்பாடல், நாட்டுப்பாடல், வாய்மொழிப் பாடல், செவிவழிப்பாடல், பரம்பரைப் பாடல், பாரம்பரியப் பாடல், ஏடறியாதார் பாடல், கல்லாதார் பாடல், எழுதாக் கவிதை, மலையருவி, காட்டுப்பூ, வனமலர், காட்டாற்று வெள்ளம், காற்றிலே வரும் கீதம், (National Song, Folk Song, Popular Song)
"இப்பாடல்மரபு உயிர்ப்புடன் விளங்கியதால் புதுப்புது வகைகள் தோன்றிக் கொண்டேயிருந்தன." (முச்சந்தி. இலக். பக். 43)
எடு:- கானாப்பாடல், குத்துப்பாடல் (தாள, ஆடற்பாடல்)
நாட்டார் பாடலின் சிறப்பு:-
பாரதியைப் போன்ற பெரும் தேசியக் கவிஞரே பாடாத 'ஆர்பத் நாட் வீழ்ச்சி', 'ஜாலியன் வாலாபாக் படுகொலை' முதலானவை பற்றிப் பாடியவர்கள் குஜிலிக் கவிஞர்கள்..." லட்சுமிகாந்தன் கொலைச் சிந்து, சேலத்தில் ஆட்டு வயிற்றில் இரு ஆண் குழந்தை பிறந்தது பற்றிய சிந்து..." "சமகாலச் செய்திகளை உடனுக்குடன் பாடல் கட்டிப் பாடியதே" (முச்சந்தி. இலக். பக். 44, 49, 74)
↑ நாட்டார் மரபிலிருந்து (Folk tradition) தோன்றியதே பாண் (Bardic tradition) மரபு

## நாட்டார் பாடலில் தாளம்:

நாட்டார் பாடல்வடிவங்கள் தாளத்திற்கு முக்கியத் துவம் தருகின்றவை. ஒவ்வொரு நாட்டார் வடிவங் களுக்கும் தனித்த தாள முறைகள் வழக்கில் உள்ளன.
எ–டு:– 1) கும்மி – கைத்தாளம் – பாணி (சப்பாணி)
2) கோலாட்டம் – கம்புத்தாளம்
3) டப்பாங்குத்து – நையாண்டி மேளம்
4) பண்டாரப்பாட்டு – துந்தனா – ஒத்து (சுருதி) மற்றும் தாளம்.

## நாட்டார் வழக்காற்றியல்:

நாட்டுப்புற இயல் (Folklore)
சிற்றூர்ப்புற எளிய மக்களின் கதைப்பாடல், இசை, விடுகதை, புதிர், மக்கள் நம்பிக்கை, வழிபாடு, சடங்கு முதலியதுறைகள் நாட்டார் வழக்காறு எனப்படும். கி.பி. 1846 இல் வில்லியம் ஜான் தாமசு என்பார் தேர்ந்து வழங்கிய சொல் 'Folklore' என்பது.

## நாட்டடைவு:

நாட்டியத்தில் அரைமண்டியில் அமர்ந்து கால்களின் பக்கங்களில் குதிகாலை நாட்டி பின்பு அரை மண்டியிலேயே தட்டுவது. இப்படி இரண்டு கால்களாலும் செய்வது நாட்டடைவு.

## நாட்பறை:

= நாள்முழவு, காலை முழவு, காலை முரசம், நாழிகைப் பறை
ஒரு நாளின் நிகழ்ச்சிகளையும் செய்திகளையும் அந்த நாளில் அறிவிக்க முழக்கப்படும் பறை வகையுள் ஒன்று.
நாண் முழவு ஆவன நாட்பறை; ஆவது நாழிகைப்பறை
(சிலப். 3:27 அடியார்க்.)

## நாட்டியக்கணிகை: → நாடகக்கணிகை

## நாட்டியக்கை: = கைநிலை, கை

ஆடலின் அவிநயக் கைகள்; கைமுத்திரை (நிருத்தக்கை)
அவை:- தொழிற்கை, எழிற்கை, பொருட்கை என்பன.
அவைதாம் எழிற்கை அழகே, தொழிற்கை தொழிலே, பொருட்கை கவியின் பொருளாகும்மே" (சிலப். 3:18 அடியார்க்.)
மேலும் ஆண்கை, பெண்கை, அலிக்கை, பொதுக்கை என்ற வகையும் உண்டு; பிண்டி, பிணையல் என்ற ஒற்றைக்கை, இரட்டைக்கை பிரிவுகளையும் ஆடல் கைகள் பெறுகின்றன.
பிண்டியும், பிணையலும், எழிற்கையும் தொழிற்கையும்
(சிலப். 3: 18–19)
நிருத்தக்கை முப்பதாவன:– சதுச்சிரம்...வலிதையென்பன. இவை சுத்தானந்தப் பிரகாசமென்னும் பழைய தமிழ்ப் பரதநூலிற் காணப்பட்டன. (சிலப். 3:12 அடியார்க். அடிக்.)

## நாட்டிய நன்னூல்:

நாட்டியத்தைப் பற்றிய இலக்கணநூல்.
நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து (சிலப். 3: 40 & 158)
... நாடக நூல்களை நன்றாகக் கடைப்பிடித்தென்றவாறு
(மேலது அரும்.)
நாடகத்தமிழ் நூலாகிய பரதம், அகத்தியம் முதலாக உள்ள தொன்நூல்களும் (சிலப். அடியார்க். உரைப்பாயிரம்)
நாடகக் காப்பிய நன்னூல்... (மணிமேக. 19:80)

## நாட்டிய நாடகம்:

நாட்டியத்தைக் கொண்டு நடத்தப்பெறும் நாடகம். நாட்டியத்தின் மூலம் நடிக்கப்பட்டு நாடகக்கதை கொண்டு செல்லப்படுவது.
எடு:– திருக்குற்றாலக்குறவஞ்சி, அழகர் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சி.

**நாட்டியம்:** = குறிப்பு, நிருத்தம்

1. புறநடம்; பாடல் கருத்தை விளக்கி ஆடுவது பண், சுவை மற்றும் (முதன்மையாகத்) தாளத்திற்கேற்ப பாதத்தைத் (foot) தரையில் நாட்டி ஆடுவதால் நாட்டியம் இது கதைதழுவிய பாடலுக்கு அவிநயித்து ஆடுவது.

நடம் - நட்டம் - நாட்டம் - நாட்டியம்

நடு - நட்டு - நாட்டு - நாட்டியம்

கதையை அல்லது பாடல் கருத்தை குறிப்பால் (அவிநயம்) காட்டி ஆடுவதால் நாட்டியத்திற்கு 'குறிப்பு' என்ற பெயரும் உண்டு.

நாட்டியம், குறிப்பே (திவா. 1458)

நாட்டியம் - நாடகம் (வடவர் வழக்கு)

ஒப்பு:- பரதரின் நாட்டிய சாஸ்திரம்

நாட்டியம் - கதை தழுவிய ஆடல் (தமிழ் வழக்கு) (Ballad)

← த. க. க. 111/I ; (சிலப். 3:158–9 அரும்.)

**நாட்டிய மேளம்:**

ஆண்கள் மட்டுமே ஆடும் நாட்டிய வகை

எடு:– பாகவத மேளம்.

**நாட்டிய வடிவங்கள்:**

பரதநாட்டியத்தில் இடம் பெறும் பல்வேறு நாட்டிய வடிவங்கள்:-

தோடய மங்கலம், அலாரிப்பு, சதிசுரம், சப்தம், பதவண்ணம், பதம், சாவளி, தில்லானா, விருத்தம் ஆகியவை பரதநாட்டியத்தில் இடம் பெறும் வடிவங்கள் இவைகளைத் தஞ்சை நால்வர்களான, சின்னையா, பொன்னையா, சிவானந்தம், வடிவேலு ஆகியோர் அமைத்ததாகக்'கூறுவது மரபு.

**நாட்டியர்கை:** → நாட்டியக்கை

**நாட்டுப்புறஇயல்:**→நாட்டார் வழக்காற்றியல்

**நாட்டுப்புறப்பாடல்:** → நாட்டார் பாடல்.

**நாட்டை:**

= நாட்டம், கம்பீரநாட்டை, நட்டபாடை, நைவளம், நட்டராகம், நாட.

பழமையான பண்களில் ஒன்று. நாட்டியத்திற்கான பண் என்பது இதன் பெயர் வழிப்புலனாவது. மக்கள் தூக்கத்திலிருந்து விழிப்படைய நடுயாமத்தில் கூத்தில் பாடப்படும் பண். எனவே தெருக்கூத்து, நாட்டைக் கூத்து என்றும் அழைக்கப்படுகிறது.

இது ஒரு நாட்டியப்பண் என்பதற்கான சான்றுகளாவன:

1. நாட்டியத் தொடக்கவடிவமான அலாரிப்பு இப்பண்ணில் உள்ளது

2. தோடயமங்கலம் இப்பண்ணில் பாடப்படுகின்றது. (தோடயத்திற்கு - சௌராட்டிரம், நாட - பக். 127. சங்கீத சந்திரிகை)

எடு:- ஜெய ஜானகி ரமணா - தாளப்பாக்கம் சின்னையா.

3. தெருக்கூத்து - நாட்டைக் கூத்து என்றும் அழைக்கப்படுவது.

4. ஆழ்வார் பாசுரத்துள் முதல் ஆயிரம் முதல் பாசுரமான திருப்பல்லாண்டு இப்பண்ணில் அமைந்துள்ளது.

5. 'எட்டியிலவம்' என்ற மூத்த திருப்பதிகம் இப்பண்ணில் அமைந்துள்ளது.

6. சம்பந்தரின் 'தோடுடைய செவியன்' என்ற முதல் திருமுறையின் முதல் பாடல் இப்பண்ணில் அமைந்துள்ளது.

7. இறைவனின் (துன்பக்) காத்தலைத் தெரிவிக்கும் கௌரி தாண்டவம் (புஜங்கதிராசம்) இப்பண்ணில் அமைந்துள்ளது.

(காரண ஆகமம் - மு. அ. கை. ப. பக். 63)

8. கனராக பஞ்ச இரத்தினக் கீர்த்தனையின் முதல் பண் இதுவே.

9. பஞ்சகவுத்துவத்தின் முதல் பண் இதுவே.

→ நாட்டம், நைவளம், நட்டபாடை

**நாட்டைக் கூத்து:** → தெருக் கூத்து

**நாட்டை பைரவி:**

பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 102)

**நாட:** → நாட்டம், நாட்டை

**நாடக அரங்கு:** → அரங்கு

**நாடக உரு:**

நாடகத்தில் வரும் பாடல்.

கண்ணனின் பிள்ளைப்பருவக் கூத்தை (வாலசரிதை நாடகம்) ஆய்ச்சியர் குரவையுள் குரவைக் கூத்தாக ஆடுகின்றனர். அப்போது பாடும் 'கன்றுகுணிலா' முதலிய பாடல்கள் நாடக உருக்கள்.

என்றியாம், கொண்டு நிலைபாடி ஆடும் குரவையை(சிலப். 26:1–2) பாடி ஆடுவதால் இவை நாடக உருக்கள்.

... கூத்துக்களுக்குச் சேரச் செய்த உருக்களை

(சிலப். 3: 27–8 அடியார்க்.)

**நாடக உறுப்பு:**

= விலக்கு உறுப்பு

நாடகத்தின் பல்வேறு உறுப்புகள்.

யோனி என்னும் நாடக உறுப்பும், நாடகமும் தழுவி

(சிலப். உரைப்பாயிரம்)

விலக்குறுப்பாவன:– பதினான்கு வகைப்படும் ; அவை பொருளும் யோனியும் விருத்தியும்... (மேலது 3:13 அடியார்க்.)
நாடக உறுப்பாகிய பாரதி விருத்தி... (சிலப். 10: கட்டுரை 11)

## நாடகக்கணிகை:

= நடி, கூத்தி, ஆடுமகள், நிருத்தமாது, நாடகமகள். நாடகம் (கூத்து) மற்றும் ஆடல் நிகழ்த்தும் நாடக மடந்தையர்.

அரங்கக் கூத்தி சென்று ஐயங்கொண்டதும்
நகுதல் அல்லது நாடகக் கணிகையர் (மணிமேக. 24: 22 – 23)
நல்மனம் பிறந்த நாடகக் கணிகையை (மணிமேக. 24: 75)
நாடகம் ஏத்து நாடகக் கணிகையொடு (சிலப். பதிகம். 15)
நாடகக் கணிகையாகிய அரங்கேறுகின்ற மாதவி (சிலப். 3:131–2 அடியார்க்.)
முப்பத்திருவர் பாடல் பயின்ற நாடகமகளிற்கும் (தெ.இ.க. 7 863: தக.சொ. 353)
கூத்தி, நிருத்த மாது (சூடா. 2:68)
நடி, கூத்தி, நாடகக்கணிகை (திவா. 285)

## நாடகச்சந்தி:

நாடகப் பிரிவு, நாடகத்திருப்புமுனை. இவை ஐவகைப்படும்:- முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என்பன.

சந்தி ஐவகைப்படும்:– அவை முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என்ப. (சிலப். 3: 13 அடியார்க்.)

## நாடகசாலை:

= அரங்கு, களம், மேடை, அவை, நாயகப்பத்தி
கூத்து நிகழ்த்துமிடம் (stage, playhouse, theatre)

தூண்களின் நிழல் நாயகப்பத்தியின் கண்ணும் அவையின் கண்ணும் படாதபடி (சிலப். 3:108 அரும்.)
பதிபாதமூலத்தாரும் நாடகசாலையில் இருந்து (தெ. இ. க. 5 721, த. க. சொ. 353)
அரங்கும் பள்ளியும் ஒருங்குடன் பரப்பி (சிலப். 25: 14)
அரங்கு – நாடகசாலை (மேலது. அரும்.)

## நாடகசாலையர்: = கூத்தர்

நாடக நடிகர்(Actor), நாடகசாலி (Dancer)

கூத்தர், நாடகசாலையர்... (தொ.பொ.168 நச்சர்)

## நாடகத்தமிழ்: நாடகத்தின் இலக்கணம்

இனி, நாடகத்தமிழில் தேவபாணி வருங்கால் (சிலப். 6: 35)
நாடக நூல்களில் அமைந்த முறைமையாதலின் (சிலப். 3: 146)
நாடகத் தமிழ் நூலாகிய பரதம் அகத்தியம்... (சிலப். உரைப்பாயிரம்)
நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து (சிலப். 3: 40)
வேத்தியலென்றும், பொதுவியலென்றும் கூறப்பட்ட இரண்டு கூறுபாட்டினையுடைய நாடக நூலை... (சிலப். 3: 39–40 அடியார்க்.)

→ நாட்டிய நன்னூல்.

## நாடகத்தி: கூத்தி, ஆடல்மகள் (யாழ். அ.)

## நாடகத்து அரம்பையர்:

தேவகணிகையர்

மேனகை, அரம்பை, உருப்பசி, திலோத்தமையான
நால்வரு நாடகத்து, அரம்பையர் (பிங்க. 176)
உருப்பசி - ஊர்வசி

## நாடகம்:

1. ஆடல்; கதை தழுவி வரும் கூத்து
(dance theatre, drama, play)
தாள ஒத்தின் திறத்துக்கு இயைய நடிக்கும் நடம் என்பது நாடகம் (measured dance)

அதனின் நடிக்கு நடம் நாடகம் (பிங்க. 1467)
(தாளத்திற்கேற்ப நடிப்பது, ஆடுவது நாடகம்)
அதனின் - தாள ஒத்திற்கு ஏற்ப)
நாட்டியத்தில் பழங்கதை காட்டி அவிநயம் செய்தல் (அவிநயதர்ப்பணம். பா. 35)
கதை தழுவி வரும் கூத்து (சீவக. 672 நச்சர்.)
நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த... (பெரும். 55)
பாடல் ஓர்ந்தும் நாடகம் நயந்தும் (பட்டினப். 113)
நாடகம் சாராமை நாடுங்கால் – நாடகம் (ஏலாதி. 5:2)
பண்கனியப் பருகிப் பயன் நாடகம் (சீவக. 230)
நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த (மணிமேக. 2:30)
நாடக மடந்தையர் நலம் கெழுவீதி (மணிமே. 4:51)
நாடகத்தால் உன் அடியார்போல் நடித்து...(திருவாசகம் திருச்சதகம்.11)

"பழந்தமிழ் இலக்கியங்கள் நாடகம் குறித்துக் குறிப்பிடும் போது ஆட்டம், கூத்து என்று உள்ளடக்கி இசையை அடித்தளமாகக் கொண்டு அமைகின்றமையை அறிய முடியும்". (இசை நாடக மரபு. பக். 20)

மாயவனுடன் தம்முனாடிய வாலசரிதை நாடகங்களில்... (சிலப். 17: 5 கருப்பம்.)
நாடகம் : கதை தழுவி வரும் கூத்து (சிலப். 3:12 அடியார்க்.)
நாதந்த நாடகத்தை நன்றாய் அருள்செய்தீர் (உண்மை விளக்கம் 40)
நாடகம் உருப்பசி நல்காள் ஆகி (சிலப். 6: 21)
இயல் இசை நாடகம் எழில் பெற வளர (தெ. இ. க. 5. 301)
ராஜராஜேச்வர நாடகமாட நித்த நெல்லு (தெ. இ. க. 2 67: த. க. சொ. 353)
சாந்திக்கூத்தின் நான்கு வகைகளாவன:– சொக்கம், மெய், அவிநயம், நாடகம் (சிலப். 3:12 அடியார்க்.)
'வேல் நெடுங்கண் பிஞ்ஞை யோடாடிய குரவை ஆடுதும்" (சிலப். 17 கருப்பம்.)

என குரவையை ஆடலாகவே இளங்கோ அடிகள் குறிப்பிடுகின்றார். அடியார்க்கு நல்லார் குரவை நாடகம் (சிலப். 17: (5) என்கிறார். எனவே பண்டைய நாளில் 'ஆடல்' என்பது 'நாடகம்' என்றே வழங்கப் பட்டுள்ளது.

2. இலக்கியம்

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் புலமை சான்ற (தொ. அகத். 23)

## நாடக வழக்கு:

1. புனைவு (புனைந்துரை) வழக்கு; இலக்கிய வழக்கு; செய்யுள் வழக்கு

நாடக வழக்கினும், உலகியல் வழக்கினும் (தொ. அகத். 53)

2. நாடகத்திற்குரிய நெறி (Dramatic Usage)

## நாடக விருத்தி:

பதினான்கு விலக்குறுப்பினுள் ஒன்று; இது நால் வகைப்படும்.

'அவை சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி என இவை'

(சிலப். 3:13 உரை)

## நாடகாங்கம்: அவிநயம் (Gesture, Pose)

## நாடகி: நடிகை (Actress) (செ. ப. அ. பிற். 332)

## நாடி:

1. குழல் (Pipe)

எடு:– மகுடியின் சுரநாடி (பண்குழல்)

ஒத்து நாடி (சுருதிக்குழல்)

2. யாழ் நரம்பு (lute - string)

## நாண்குரல்:

அடிப்படைக்குரல்; சட்சம் (ச), ஆதார ஒலி

யாழின் கோட்டுறுப்பிலுள்ள தகைப்பில் (மேரு) ஒலிக்கும் அடிப்படைக்குரல் ஒலி.

நாண்குரல் கொம்மென ஒலிப்ப (பரிபா. 19: 44)

## நாணமுற்றோன் அவிநயம்:

ஆடல் அவிநயங்களுள் ஒன்று.

"நாணமுற்றோன் அவிநயநாடின், இறைஞ்சிய தலையு மறைந்த செய்கையும், வாடியமுகமும், கோடிய உடம்பும், கெட்ட ஒளியும், கீழ்க்கண் நோக்கமும் ஒட்டினர் என்ப உணர்ந்திசி னோரே"

(சிலப். 3: 13 அடியார்க்.)

## நாதக்குடம்: சங்கு (யாழ். அக) (conch)

## நாதக்குழல்: நாதவாகி, ஊதுகருவி (musical pipe)

## நாதம்:

1. ஒலி (sound)

ஓசை, நாதம்,..... ஒலியாகும்மே (பிங்க. 1442)

2. இசையொலி (musical sound)

முதலில் பாடுமிடத்து மகரத்தின் ஒற்றாலே நாதத்தை உச்சரிக்கு மரபு... (சிலப். 3:26 அடியார்க்.)

3. இசை

இசையே புகழும் மொழியும் நாதமும் (பிங்க. 3158)

## நாந்தி:

1. பாயிரம் (Prologue)
2. நாடக முன்னுரை (An invocatory verse, as in a drama)

## நாநிலப்பண்: = நாற்பெரும் பண்; நாற்பண்

நான்கு நிலத்திற்கான பெரும்பண்கள்; பாலைகள். அவைகளாவன:-

| நிலம் | பண் | தற்காலப்பெயர் |
|---|---|---|
| முல்லை | செம்பாலை | அரிகாம்போதி |
| குறிஞ்சி | படுமலைப்பாலை | நடபைரவி |
| மருதம் | கோடிப்பாலை | கரகரப்பிரியா |
| நெய்தல் | செவ்வழிப்பாலை | இருமத்திமத் தோடி |

ஆய இசைப்புகல் நான்கின் (பெரியபு. ஆனாய. 26)

பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என நால் வகையாழாம் நாற்பெரும்பண்ணே. (பிங்க. 1374)

நாற்பெரும்பண்ணும் எழு வகைப்பாலையும் (பெருங். 1: 37.116)

நால்வகைப் பெரும்பண்ணினும் எண்ணிய (கலிங். 11: 10)

ஈரிரு பண்ணும் எழுமூன்றுதிறனும் (பிங்க. 1380)

(பண் - பெரும்பண், ஏழுசுரப்பண், பாலை)

உரவிய பாலையாழே உலவிய குறிஞ்சியாழே
மருதஞ் செவ்வழியாழ் என வகுத்த நால் இசையு நாற்பண்.

(சூடா. 10:32)

நாற்பெரும் பண்ணும் சாதி நான்கும்
பாற்படு திறனும் பண் எனப்படுமே. (சிலப். 8: 35 அடியார்க்.)

பண்நான்காவன: பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன.

(சிலப். 14: 160–67 அடியார்க்.)

பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என
நால்வகைப் பண்ணா நவின்றனர் புலவர்

(வாப்பியனார்; யா.வி. ஒழிபி.)

தாரத்து உழை தோன்றப் பாலையாழ்... (பஞ்சமரபு.22)

பாலையாழ் - செம்பாலை - அரிகாம்போதி

↑ பாலை என்றது தலைமைப்பாலையான (முல்லை) செம்பாலையின் சிறப்பினால்.

## நாப்பண்:

1. யாழ் உறுப்பு ; தந்திரிகரம் (bridge of a lute) காடிப்பலகை, காடிச்சக்கை

நடுவட்டு, தேர்ப்பெயர் நாப்பணும் தட்டும் (பிங்க. 1484)

நாப்பண் என்பது தேர்த்தட்டு, நடுவும், யாழ் உறுப்பும் முப்பேர்

(சூடா. 11: 3)

பல்மீன் நாப்பண் திங்கள் போலவும் (புறம். 13:6)

நடுவு, நடுவல் தேரு நாப்பண் (பிங்க. 372)

2. உழை (மத்திமம்), நடு

நளந்தலை, நாப்பண், மத்திமம்... நடு என்று ஆகும்... (திவா. 1013)

## நாமக்கிரியை: = நாத நாமக்கிரியை

நாட்டார் பண்களுள் ஒன்று (பரத. இராக. பக். 104)

சாதாரி, தேசி, நாமக்கிரியை முதல் (திருப்பு. 327)

## நாயக சின்னம்: → நாகசரம், நாகசுரம்

**நாயகசுரம்:** → நாகசரம், நாகசுரம்

**நாயகப்பத்தி:** → நாடகசாலை

**நாயகி:** *பண்களில் ஒன்று*

**நாயனம்:**
= நாகசுரம், பெரியமேளம், பெருவங்கியம்
*காற்றுக்கருவிகளுள் ஒன்று.*
*நாயி - நாகசுரத்தை ஒத்த பாரசீகக் கருவி*
→ நாகசுரம்

**நாரத சிக்கை:** *நாரத சிட்சை*
*சிக்கை - இசை*
**சிக்கை என்னும் அங்கத்தை ஆராயும் முதல் நரம்பை உருவி வாசிக்கும் நாரதனார் என்க. (சிலப். 17: (25) அடியார்க்.)**

**நாரத சிட்சை:** → நாரத சிக்கை

**நாரதம்:** = நாரதீயம்
*பெரிய யாழ்வகை; நாரதர் கொண்டது.*
**ஆரியப் பதங்கொள் நாரதப் பேரியாழ் (கல்லா. 81)**

**நாரதர்:**
*வான்உலக இசைமேதை; யாழை (தும்புருயாழ்) உடன் வைத்து இசைபாடும் நரப்பிசையாளர்.*
**நாரதன் வீணை நயந்தெரிபாடலும் (சிலப்.6:18)**
**உன்னப்பாடுவார் தும்புருவும் நாரதாதி பரவுவார் (பாசுரம். 6: 25: 8)**
**நாரதனும் தம்தம் வீணை மறந்து (பாசுரம். 3: 6: 5)**
← *த. க. க. 118*/III

**நாரதவீணை:** = பெருங்கலம்
*நாரதயாழ்*
*நாரதயாழ் என்பதே (வீணை என்ற வடசொல்லால்) நாரத வீணை என்றழைக்கப்பட்டது.*
**ஆரியப்பதங்கொள் நாரதப் பேரியாழ் (கல்லா. 82:/10)**
**பெருங்கலமாவது பேரியாழ் (சிலப். உரைப்பாயிரம்)**
**வாக்கமை பேரியாழ் (பெருங்கதை 4: 3: 54)**
↑ **கல்லாடர் கூறுவதன் சாரம் : ஆரியப்பதம் கொண்டது, நாரதப் பேரியாழ்.**
*அதாவது, பதம் -சொல்: ஆரியப்பதம் - வீணை, நாரத வீணை. யாழ் என்பது வீணை என்ற வடசொல்லாகியதைக் கூறுகிறார்.*

**நாரதீயம்:** → நாரதம்

**நாராயண கௌளம்:** = நாராயண கௌளை
*பண்களில் ஒன்று*

**நாராயண கௌளை:** → நாராயண கௌளம்

**நாராயணி:**
*குறிஞ்சியாழ்த் திறத்துள் ஒன்று.*
**நட்டபாடை... நாராயணி... குறிஞ்சியாழ்த்திறமாகக் கூறுவர் (பிங்க. 1382)**

**நாரி:** *யாழ் நரம்பு* (lute string)
*நார் > நாரி*
↑ **மரல் என்ற கற்றாழை 'நாரி'னால் யாழ் நரம்பை உருவாக்கியதால், ஆகுபெயராக யாழ் நரம்பு , 'நாரி' எனப்பட்டது.**

**நால் வகைப்பாணி:**
*வருணப்பூதர் நால்வரைப் புகழும் இசைப்பாடல், தேவபாணி*
**... வருணப்பூதர் நால்வகைப்பாணியும்... (சிலப். 6: 35 – 36)**
**வருணப்பூதர் நால்வரையும் பரவும் நால்வகைத் தேவபாணியும்...**
**(மேலது அடியார்க்.)**

**நாலடி மேல்வைப்பு:**
*நாலடிப்பாடலுக்கு மேல் ஓரடி ஈரடி மிக்கு வைத்துப் பாடுவது.*
**எடு:– சிலப்பில் மேல்வைப்பு**
**ஆய்ச். குரவை – 17: (35):–**
**சேவகன் சீர் கேளாத செவி யென்ன செவியே**
**திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே !**
**17: (36): –**
**கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே !**
**கண்ணிமைத்துக் காண்பார்தம் கண் என்ன கண்ணே !**
**17: (37):–**
**நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே!**
**நாராய ணாவென்னா நாவென்ன நாவே!**
**ஆகியன நாலடியின் மேல் ஓரடி மிக்குவந்த, நாலடி மேல் வைப்புகள். மற்றும் சிலம்பு 29: (16), (17), (18) ஆகிய அம்மானை வரிகளும், 29: (23), (24), (25) ஆகிய ஊசல் வரிகளும் , 29: (26), (27), (28) ஆகிய வள்ளைப்பாடல்களும் இவ்வாறானவையே.**
**அப்பரின் (4:3:1–10) 'மாதர்ப்பிறைக்கண்ணியானை' என்று தொடங்கும் பாடல் முதல் 10 பாடல்களும், 'சுண்ணவெண்' எனத்தொடங்கும் கெடிலப்புனல் பதிகத்தின் 10 பாடல்களும் நாலடிக்கு மேல் ஓரடி மேல் வைப்பாக வந்தவை.**
**சம்பந்தரின் 3 ஆம் திருமுறை – புகலிப்பதிகம் – 'இயலிசை' எனத் தொடங்கும் பாடல் முதல் 11 பாடல்களும், திருவாவடுதுறைப் பதிகம் – 'இடரினும்' எனத் தொடங்கும் பாடல் முதல் 11 பாடல்களும், திரு ஆலவாய் – 'வேதவேள்வியை' எனத் தொடங்கும் பாடல் முதல் 10 பாடல்களும் நாலடிக்கு மேல் ஈரடி வைப்பாக வந்தவை.**

## நாலன் அலகு:

*சதுசுர அலகு - (சதுஸ்ரலகு)*
ஒரு தட்டும் மூன்று விரல் எண்ணிக்கையும் ஆக மொத்தம் நாலு எண்ணிக்கைகள் கொண்டது.
இதன் குறியீடு. |4

← த. க. க V/I ; 269/II

## நாலன்சொல்: = நாலன் அலகுச் சொற்கள்

இசைச் சொல்நடை. நான்கு குறில் அல்லது 2 நெடில் அல்லது இரு குறில் ஒரு நெடில் போல் வருவது நாலன் சொல்நடை.

**ஓரளபு இசைக்கும் குற்றெழுத்தென்ப (தொ. நூல். 3)**
**ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்தென்ப (தொ. நூல். 4)**

நாலன் நடைச் சொல்வகைகள் - தகதின, தாங்கிட, ததீம்த, தாதீ, தகதோம்

தகதின - நான்கு குறில்
தாதீ - இரு நெடில்
**தாங்கிட, ததீம்த, தகதோம் – இருகுறில், ஒரு நெடில்**

**(மத்தள . பக். xxx VIII- IX)**

## நாலன்நடை: *சதுசுர நடை*

பாடல் மற்றும் தாளம் செல்லும் வேகங்களுள் ஒன்று. (Quadruple tune)

**எடு:– தரிகிட, தகதின**

*(சதுரம் - நான்கு ; ஒப்பு: சதுர்காலம், சதுர்வேதம்)*

## நாலன் மட்டம்:

= நாலன் ஒருமைத்தாளம், நான்கன் ஒற்றை, சதுசுர ஏகம்

*நான்கு எண்ணிக்கைத்தாளம் - 2 + 2 = 4*

**ஆறும் நாலும் அம்முறை போக்கி (சிலப். 3: 154)**
**இத்தாளத்தில் அமைந்த பாடல்கள் :–**
**இருபெரும் | குறவரு | மொருபெரு| நாளான் (சிலப். 1: (41)**
**ஞாயிறு | போற்றுதும் | ஞாயிறு | போற்றுதும் (சிலப். 1: (2)**
**ஜனகன | மனஅதி| நாயக| ஜெயகே** - நாட்டு வாழ்த்து
**சொற்றுணை | வேதியன்|...** - *அப்பர்*
**தளரிள | வளரொளி |...** - *சம்பந்தர்*

## நாலிரண்டில் நரம்புறுதானம்:

ஓர்இயக்கில் (octave) உள்ள சுரநிலைகள்.
இவை எட்டாகும்:

*ச ரி க ம ப த நி ச்*
*1 2 3 4 5 6 7 8*

*முன்னர்ப்பாகம் (பூர்வாங்கம்)-4 சுரங்கள்-ச ரி க ம*
*பின்னர்ப்பாகம்(உத்தராங்கம்)-4 சுரங்கள்-ப த நி ச்*

**முந்தை... அந்தமுதல் நாலிரண்டில் அரிந்து நரம்புறு தானம்**
**(பெரியபு. ஆனாய. 13)**

*(தானம் - இயக்கு, நிலை, இடம்)*

## நாலுநிலத்துப்பாணி:

*நால்வகை நிலத்திற்குரிய சிறுபண்கள் (யாழின் பகுதி)*
*(பாணி - ஐந்து சுரப்பண் - திறம்)*

| நிலம் | பாணி | தற்காலப்பெயர் |
|---|---|---|
| குறிஞ்சி | குறிஞ்சிப்பாணி | மத்தியமாவதி |
| முல்லை | முல்லைப்பாணி | மோகனம் |
| மருதம் | மருதப்பாணி | சுத்ததன்யாசி |
| நெய்தல் | நெய்தல்பாணி | இந்தளம் |

**குறத்தியர் பாடிய குறிஞ்சிப்பாணியும் (சிலப். 27: 221)**
**கோவலர் ஊதும் குழலின் பாணியும் (சிலப். 27: 241)**
*(குழலின் பாணி - குழல் பாணி - முல்லைப்பாணி - மோகனம்)*
**தொடுப்பேர் உழவர் ஓதைப் பாணியும் (சிலப். 27: 230)**
*(ஓதைப்பாணி - மருதப்பாணி - சுத்ததன்யாசி)*
**அஞ்சொல் கிளவி அம்தீம் பாணியும் (சிலப். 27: 250)**
*(மேற்கண்ட அடி, நெய்தல் பாணியைக் குறிப்பிடு வதாகக் கொள்ளலாம்.)*
**குறிஞ்சி முதலாக நாலு நிலத்துப் பாணியும்**
**(சிலப். 27: 224–50 அரும்)**
**தெய்வம் உணா, ... யாழின் பகுதி... (தொல். அகத். 18)**
**↑ பாலைநிலப்பாணி – பாலைப்பாணி. அதாவது கொன்றைக் குழல் – சுத்தசாவேரி**

## நாலுநிலப்பாணி: → நாலு நிலத்துப்பாணி

## நாவாய்ப்பறை: *நெய்தல் நிலப்பறை* **(இறை 1)**

## நாவு: *நாக்கு*

**இசைக்குழலின் ஊதுவாய் (தே.நே. 113,9)**

## நாழிகைக் கணக்கர்:

= கன்னலிசைப்பார், கடிகையர்
*[கன்னல் - நீர்சொட்டும் நாழிகைக் கருவி (Hour glass)]*
*நாழிகை கூறுவோர். ஒரு நாளுக்குரிய நாழிகைகளை நாழிகை வட்டில் மூலம் அறிந்து நாழிகை தோறும் கணக்கிட்டு அரசர்க்கு அறிவிப்பவர். வெண்பா முதலிய பாடல்களில் நாழிகைக் கணக்கைப் பாடிக் கூறுவர்.*

**சூதர் வாழ்த்த மாகதர்நுவல**
**வேதாளிக ரொடு நாழிகை இசைப்ப (மதுரைக். 670–71)**
**கடிகையர் கவிதை ஓதை (கம்ப. எழுச். 79)**
**குறுநீர்க்கன்னல் எண்ணு நர் (அகம். 43: 6)**
**குறுநீர்க் கன்னல் இனைத்தென்று இசைப்ப (முல்லைப். 58)**
**குறுநீர்க் கன்னலின் யாமம் கொள்பவர் (மணிமே. 7: 64–65)**
**பொழுது அளந்தறியும் பொய்யாமாக்கள் (முல்லை. 55)**
**.... யாமங்கள் ஒன்று போய் ஒன்று போய் ஒன்று போய்**
**நாழிகையும் ஒன்றுபோய் ஒன்று போய் ஒன்று**
**(சிலப். 5:49 அடியார்க்.மேற்.)**

← த. க. க. 211/III

**நாழிகைப்பறை:** = நாள்முழவு, நாட்பறை
*நாழிகை வட்டில் மூலம் நாழிகையைக் கணக்கிட்டு பறை அறைதல்* - (A kind of hour-drum)
பேரிகை படகம்... நாழிகைப் பறை
நாள் முழவாவன : ... நாட்பறை, ஆவது நாழிகைப்பறை
(சிலப். 3: 27 அடியார்க்.)
தழங்குகுரல் முரசம் காலை இயம்ப (ஐங். 448: 1)
நாள்முரசு இறங்கும் இடனுடை வரைப்பில் (புறம். 161: 29)

**நாற்பண்:** → நா நிலப்பண்

**நாற்பெரும்பண்:** → நா நிலப்பண்

**நான்கன் அலகு:**
*சதுசுரலகு, நான்கன் மட்டதாளம்*
*நான்கு அளவுகள் கொண்டதாளம்*
மூன்றளந்து ஒன்று கொட்டி (சிலப். 3: 151)
... மூன்று ஒத்துடைய மட்டத்திலே எடுத்து (மேலது. உரை)

**நான்கன் ஒற்றை:**
*சதுசுர ஏகம்; நான்கன்ஒருமைத்தாளம், நாலன் மட்டம்*
*அடிக்கு நாற்சீராக வந்து ஓரடியில் பொருள் முற்றுப் பெற்றால் அதை இத்தாளத்தில் அமைக்கலாம்.*
எடு:- போரரு தானைப் பொலந்தார்க் குட்டுவன்
(பதிற். 23: 10-43: 11)
உடங் கொருவர் கைநிமிர்ந்தாங்கு ஒற்றை மேலூக்க (சிலப். 29: (23)
ஒற்றை – ஒற்றைத்தாளம் (மேலது. அரும்.)
→ நாலன் மட்டம்

**நான்கன் திரிபுடை:**
= சதுசுரதிரிபுடை , எட்டன் மட்டம், ஆதி, ஆதிதாளம்
ஆறன்மட்டம், எட்டன் மட்டம் என்பனவும்.. (சிலப். 3: 16 அரும்)
→ எட்டன் மட்டம்.

**நான்கு எழுத்துக்காலம்:** *சதுரட்சரக்காலம்*
*தாளத்தின் நான்கு அக்கரக்காலம் ஓர் எண்ணிக்கை*
*ச ரி க ம*
*1/4 1/4 1/4 1/4 = 1 எண்ணிக்கை.*
*இதன் குறியீடு :- ; ; அல்லது , , , ,*
*சா; அல்லது ச, ;*
← *த. க. க.* V/I

**நான்குவகைச் செய்யுள்:**
*ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்பன.*
*கடும்பா - கடுமையானது - ஆசு*
*இன்பா - இனிமையானது - மதுரம்*
*மிறைப்பா - மிறை - சித்திரம்*
*பெரும்பா - அகலம் - வித்தாரம்*
← *தே.நே. 45,13*

**நான்முகன்:** *மத்தளம்*
இதனை நான்முகன் என்பர் (சிலப். 3:27 அடியார்க்.)

# நி

## நிகழ்கலை:
*சிற்பக்கலை, ஓவியக்கலை போல் அல்லாது நிகழ்த்தப்படுகின்ற கலைகள் நிகழ்கலைகளாகும்.*
(Performing Art)
எடு:– இசைக்கலை, நாட்டியக்கலை

## நிகழ்த்துபனுவல்:
*நாடகத்தில் எழுத்துப் பனுவலிலிருந்து, நிகழ்த்துப் பனுவல் வேறுபட்டது நாடக நடிகர் எழுத்துப் பனுவலோடு தேவைக்கேற்ப கூடுதலாக உரையாடல், மற்றும் பாடல்களைச் சேர்த்து நடிப்பர். அதுவே நிகழ்த்துப் பனுவல்*
*எழுத்துப்பனுவல்* (Literary Text, Script)
*நிகழ்த்துப்பனுவல்* (Performance Text)
ஒப்பு:– நாடக விலக்கு
விலக்குறுப்பு என்ற சொற்குப் பொருள் யாதோ வெனின்:– தலைவன் செலுத்துகின்ற கதையை விலக்கியும், அக்கதையை நடாத்தியும் முன்பு செய்த கதைக்கே உறுப்பாகுவ தென்க.
(சிலப். 3: 13 அடியார்க்.)

## நிசாதாந்தியப்பண்: → தார முடிவுப்பண்.

## நிசாளம்:
*தோற்கருவிகளுள் ஒன்று; ஒரு கண் பறை*
... தண்ணுமை. நிசாளமாகும் (சூடா. 7: 40)
தண்ணுமை நிசாளம் (பிங்க. 1516)
"பேரிகை... தண்ணுமை... நிசாளம்... (சிலப். 3: 27 அடியார்க்.)
↑ அடியார்க்கு நல்லார் தண்ணுமை, நிசாளம் வேறு வேறு கருவியாகக் கூறுவது, நிகண்டுச்செய்திகளுக்கு மாறாக உள்ளது. இது ஆய்வுக்குரியது.
← *செ. ப. அ. 2244*

## நிட்கம்: *பறைவகையுள் ஒன்று* (யாழ். அக.)

## நிட்கிராமியம்: *கூத்து வகையுள் ஒன்று* (யாழ். அக.)

## நிடதக்கை: = நிடதம்
*இரட்டைக் கைகளுள் ஒன்று.*
*முட்டியாக இரண்டு கையும் சமன் செய்வது.*
"நிடதமென்பது நெறிப்படக்கிளப்பின், முட்டி இரண்டு கையும் சமமாகக் கட்டி நிற்கும் காட்சித்தென்ப"...
(சிலப். 3:18 அடியார்க்.)

## நிடாதம்: = நிடதம், நிஷாதம்
1. *நிடதம் - ஏழு பெருமலைகளுள் ஒன்று*
கைலை இமயம்.. நிடதம்... (பிங்க. 508)
2. *தாரசுரம்*
*நிடதம் - உயர்ந்த மலையுள் ஒன்று ; நிடாதம் ஏழு சுரங்களில் உயர்ந்த சுரம்*
*நிடதம் - நிடாதம் - நிஷாதம் - தார நரம்பு*
↑ 'நி' என்ற இசைச்சுர இடு குறிக்கு (Code) – வடமொழிப் பெயரை உருவாக்கிய வரலாறு இது ஆகலாம்.

## நிஷாதம்: → நிடாதம்

## நித்தம்:
*ஆடல்*
நடம் – நட்டம் – நத்தம் – நித்தம் – நிருத்தம் – நிருத்தம்
நித்தம் திகழும் நேரிறை (பரிபா. 12: 43)
*திருமண்டபமும் நித்தமண்டபமும்...*
(IPS *1097; த. க. சொ. 360*)
*நித்த விடங்கன் மல்லையன் (திருக்கண்டியூர் வீரட்டத்து மங்களாம்பிகைக்கோவில் கல்வெட்டு- தமிழகக்கோவில் கலைமரபு பக் 56 - 57)*
*மும்முடிச் சோழ நித்தப் பெரையனுக்கு*
*(தெ. இ. க. 24· 264 - திருவிடை மருதூர் கல்வெட்டு)*

## நித்த மண்டபம்: *நாட்டிய அரங்கம்*
*திருமண்டபமும், நித்த மண்டபமும்..*
(IPS, *1097; த. க. சொ. 360*)

## நித்திய சுமங்கலி:
1. தேவதாசி - *ஆடல்மகள், தேவஅடியாள்*
2. தேவதாசி மரபு பற்றிய நூல் (சஸ்கியா கெர்சன்பும் எழுதியது)
→ *பதியிலார்.*

## நிரம்பம்:
நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று... (சிலப். 3: 13 அடியார்க். அடிக்.)

## நிந்தாஸ்துதிக்கீர்த்தனை:

*பழிப்பது போல் புகழைப்பாடும் பாடல் வகை*
எடு:- 'ஏதுக்கித்தனை மோடிதான்' என்ற மாரிமுத்தா பிள்ளையின் கீர்த்தனை.

## நிமிடம்: *தாளத்தின் காலவகை பத்தனுள் ஒன்று.*

கணலவங் காட்டை நிமிடந்துடியொடு (பரத. தாள. 27)

## நியாச சுரம்: → நிலைச்சுரம், நிறுத்தல் கோவை.

## நியாளம்:

*ஒருவகைப்பறை*
இடக்கை, உடுக்கை, நன்நியாளம் (திருவாலவா. 39: 18)
↑ இது நிசாளம் ஆகலாம்.
→ நிசாளம்

## நியூன சுருதி: குறைந்த சுருதி

நியூனம் – குறைவு (deficiency) (செ. ப. அ. 2258)

## நிர்த்தப்பேரையன்: = நிர்த்தமாராயன்

*நட்டுவனார்க்குக் கொடுக்கப்பட்ட பட்டம்*
*குமரன் வடவாயில் ஆன மும்மடி சோழ*
*நிர்த்தப் பேரையனுக்குப் பங்கு*
*(தெ. இ. க. 2· 66, த. க. சொ. 361)*

## நிர்த்தம்:

= சொக்கம், நிர்த்தனம், நிருத்தம்
1. வரிக்கூத்து வகையுள் ஒன்று
சிந்து... நிர்த்தம்... கோத்த வரிக்கூத்தின் குலம்...
(சிலப். 3: 13 அடியார்க். மேலது)
ஆனந்த நிர்த்தமிகு கருணாகரக்கடவுளே (தாயு. கருணாகர.1)
2. → சொக்கம்
→ நட்டம்

## நிர்த்த மாராயன்: → நிர்த்தப் பேரையன்

## நிர்த்தியம்:

எண் சுவைக்களைக் காட்டி அவிநயித்து ஆடுதல்.
(அவிநயதர்ப்பணம்: பா. 35)

## நிரல் சாய்ப்பு:

*சாய்ப்புத் தாளங்களில் நிரல்கள் முறையாக அமைதல்*
எடு:- 2 + 3 – ஐந்தன் சாய்ப்பு (கண்டம்)
3 + 4 – ஏழன் சாய்ப்பு (மிசுரம்)
4 + 5 – ஒன்பான் சாய்ப்பு (சங்கீரணம்)

## நிரல் மாறிய ஏழன் அலகு:

*ஏழன் அலகு 3 + 4 என்ற அமைப்பை உடையது. இந்த அமைப்பு வரிசை (நிரல்) மாறி 4 + 3 என்று வருவது நிரல் மாறிய ஏழன் அலகு.*
← *த. க. க. 300/II*

## நிரல் மாறிய சாய்ப்பு:

*சாய்ப்புத்தாளங்களில் நிரல்கள் மாறி அமைதல்*
எடு:- 3 + 2 நிரல் மாறிய ஐந்தன் சாய்ப்பு (கண்டம்)
4 + 3 நிரல் மாறிய ஏழன் சாய்ப்பு (மிசுரம்)
5 + 4 நிரல் மாறிய ஒன்பான் சாய்ப்பு (சங்கீரணம்)
*நிரல்மாறிய ஒன்பான் சாய்ப்பு :- எடு:-*
நாகநீ ணகரொடு நாகநா டதனொடு (சிலப். 1:21–24)
*5 + 4 5 + 4*

## நிரவல்: *(சாகித்ய பிரஸ்தாரம்)*

*நிரவல் - இட்டு நிரப்புதல், சமன்படுத்தல், சமனாக்குதல்*
*பண் ஆளத்தியில் (இராக ஆலாபனை) பாடப்படும் ஒரு வடிவம்.*
*கார்வைகள், இடைவெளிகள் ஆகியவைகளைப் புதுப்புது விரிவாக்கங்களால் இட்டு நிரப்புவது. நிரவல் அடி பாடலின் எந்த இடத்திலிருந்தும் தேர்வு செய்யப்படுவது. நிரவலில் தேர்ந்த அடி மீண்டும் மீண்டும் பல்வேறு முறைகளில் வேறுபடுத்தி பாடப்படுவதால் பாடலின் பொருள் தெளிவாக விளங்குகிறது. இது கற்பனை இசைமுறையைச் (Improvisation) சேர்ந்தது.*
*நிர - நிரவு - நிரவுதல் - நிரவல்*
*நிர - நிரப்புதல் - நிரம்புதல்* (to be filled)
*நிரை - நிறை - நிறைதல் - நிரம்புதல்*
உழாஅ நுண்தொளி நிரவிய வினைஞர் (பெரும்பாண். 211)
அடங்கார் புற மூன்றும் நிரவ வல்லார் (தேவா. 777: 2)
நிரப்ப மில் யாக்கை (கலித். 94: 24)
நிறைந்த மனது மாதரும் (திருவாலவா. 38: 5)
↑ பாடும்போது குறிப்பாக ஆளத்தியில் (ஆலாபனை) சுரம்பாடல், தாளப்பின்னல் பாடல் (பிரஸ்தாரம்) எடுப்பு (பல்லவி) பாடல் போன்றவைகளில் ஏதோ ஒன்று குறைந்தோ கூடியோ வந்ததை நிறைவு செய்தலே நிரவல் ஆகும்.

## நிரல்நிறை:

*பொருள்கோள்முறை. சொல்லும் பொருளும் யாப்பில் முறை மாறி வருவது.*
பொருள்கோள்:- செய்யுட்கண் சொற்கள் அமைப்பில் பொருள் கொள்ளும் முறை (யா. க. 95 உரை)
சுரை ஆழ அம்மி மிதப்ப
(சுரை – மிதப்ப; அம்மி ஆழ) (யா. க. 95 உரை)
குழல் வளர்முல்லை... வாய்வைத்து ஊத; இது நிரல் நிறை
(சிலப். 4:15–6 உரை)
உழைகுரல்... ஈறாக உள்ள நான்கும் நிரல் நிறை
(சிலப். 8: 37–41 அடியார்க்.)

இக்குண்ட மிரண்டிற்கும்... பிறத்தலும் நிரல்நிறை...
(சிலப். 9: 54-64 அடியார்க்.)
இருகாமத்திணை யேரி (பட்டினப். 39)

## நிருத்தக்கை: → நாட்டியக்கை

## நிருத்தகீதவாச்சியம்:→கொட்டாட்டப்பாட்டு

## நிருத்தம்: → சொக்கம், நாட்டியம்

## நிருத்தாங்கம்: → நாட்டாங்கம்

## நிருத்தானுகம்: → நாட்டாங்கம்

## நிருபதுங்கராகம்: *பண்களில் ஒன்று*

ஈரிரு பண்ணும்... நிருபதுங்கராகம்... பதினாறும் பெரும்பண்
(பிங்க. 1380)
நிருபதுங்கராகம் (பண் தோடி) (பஞ்ச. 72 உரை)
"இப்பண்ணில் அனைத்து நரம்புகளும் மென் வகையின; கலப்பில்லை. எனவே இதனை வடமொழிப்பற்றாளர்கள் நிருபதுங்கராகம் என்று கூறியிருக்கலாம். துங்கம் – தூய்மை யைச் சுட்டியது. நிருபம் நன்கு கட்டியமைக்கப்பட்டது."
*← தமிழிசை வளம் பக். 23-24 ; பஞ்சமரபு 72 உரை*

## நிரை அசை:

*குறில் நெடில், இணைக்குறில் மற்றும் இவை ஒற்றடுத்து வருவதுமான செய்யுள் அசை.*

## நிரை ஒன்றாசிரியத்தளை:

*ஆசிரியத்தில் நிரை முன் நிரை வந்து ஒன்றும் தளை.*

## நிரை கோட்பறை:

*ஆநிரை கோட்பறை. பகைவர்களின் ஆநிரை கவரும்போது முழக்கும் பாலைப்பறை*
பறை– பூசற்பறையும், ஊரெறிபறையும், நிரைகோட்பறையும்
(இறை. கள. 1)
*நிரை - ஆநிரை*
*கோள் - கொள்* (கல்கொள் – கால்கோள்)

## நிரோட்டை:

= நிரோட்டகம், நிரோஷ்டை, நிரோட்டம், நிரோட்டியம்
இதழ் (உதடு) இயைந்து பிறவா எழுத்துக்களால் *ஆகிய செய்யுள்.*
(A kind of verse with out labials or labio - dental)
எடு:– யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன். (குறள். 341)
*இதழ்க ஜொட்டா தினிய கீர்த்தனையை*
*(வீ. ப. கா. சு. வின் நிரோட்டைக் கவிதை)*
*ஒட்டை - மேல்உதடு; நிரோட்டை உதடு ஒட்டாதது.*
*← செ. ப. அ. 2273; த. க. க. 363/I*
(labials - *ப, ம*) (labio-dental - *வ*)

## நிலத்திற்கான பறைஇசைக்கருவி:

| | | |
|---|---|---|
| 1) முல்லை | ஏற்றுப்பறை | (நம்பி. அகப். 22) |
| 2) குறிஞ்சி | தொண்டகம் | (நம்பி. அகப். 20) |
| 3) மருதம் | நெல்லரிகிணை, மன்றல் முழவம் | (நம்பி. அகப். 23) |
| 4) நெய்தல் | மீன்கோட்பறை, நாவாய்ப்பம்பை | (நம்பி. அகப். 24) |
| 5) பாலை | பகைத்துடி | (நம்பி. அகப். 21) |

## நிலப்பறை: = குழிப்பறை, பூமித்துந்துபி

*பூமிப்பறை*

## நிலம்:

1. *சுரம்*
எழுவகை நிலத்தினும் எய்தியவரிக்கும் (சிலப். 14: 153)
அன்றிகுரல் முதலான ஏழு நரம் பென்றுமாம் (மேலது.அடியார்க்.)
எழுவகைப்பட்ட நிலமாவன:– சரிகமபதநி... (மேலது அடியார்க்.)
2. *இசைப்பாட்டின் மூவகைத்தானங்கள்*
*எழுத்து, இசை, மற்றும் சீர்*
3. *நால்வகை நடை*
கூடைநிலத்தை குறைவின்று மிகுந்தாங்கு
வார நிலத்தை வாங்குபு வாங்கி (சிலப். 3: 48 – 49)
4. *நாநிலம்*
*நால்வகை நிலமாவன:-*
முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல்
குறிஞ்சி முதலாக நாலு நிலத்துப்பாணியும்
(சிலப். 27: 224 – 50அரும்)
5. *ஐவகை நிலம் -*
*முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை*
6. *அவிநய நிலம்*
நிற்றல், இயங்கல், இருத்தல், கிடத்தல்
(சிலப். 14: 152 – 4 அடியார்க்.)
*← செ. ப. அ. 2277*
7. *தாளம்*
"**நிலம், கலம், கண்டம்...**" ... முதலில் தாளம் பின்னர்க் கருவி பின்னர் வாயால் பாடுதல் என்னும் மூவகை நெறிகளைக் காட்டும் இசை இலக்கணத் தொடர்" (த. க. க. 215/III)
*→ நிலம் கலம் கண்டம்*

## நிலம் கலம் கண்டம்:

*தாளம், கருவி, வாய்ப்பாட்டு எனும் மூவகை நெறிகளைக் காட்டும் இசை இலக்கணத்தொடர்.*
நிலம், கலம், கண்டம் என்னும் நெறிமூன்றினும்...
(சிலப். 8: 24 அரும்)
நிலம், கலம், கண்டம் நிகழக்காட்டும் (மணிமேக. 28: 42)

↑ இங்கு கலம் என்பது சிறப்பாக யாழைக் குறித்தது.
← த. க. க. 215/III

## நிலயம்: → நிலை

## நிலயனம்: → நிலை

## நிலை: = நிலையம், நிலயம், நிலயனம்

1. நின்றாடல், நிலை நின்றாடல்
11 ஆடலுள் நின்றாடல் ஆறு:- "அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம் மல்லுடன் நின்றாடல் ஆறு" (சிலப். 6: 68 மேற்.)
... நிலை நின்றாடல்... (சிலப். 6: 62 – 3 அரும்)
2. இசைப்பாட்டு வகை
இசைநூலோர் முகம், நிலை, முரி என்பவற்றுள் நிலை என்ப இதனை (சீவக. 650 நச்சர் உரை)
3. மண்டிலம், வட்டம், தாயி, தானம் (Octave), தானநிலை
ஏழுசுரக் கோவைக்கு நிலை என்று பெயர் (தே. நே. 118/II)
ஆடகத்தியன்ற... மூவகை நிலையத்து ஏழுசுரநிறீஇ (பண்டார. கோவை. 17: 14)

## நிலைக்கிடை: நாட்டியத்தில் உட்காரும் நிலை

(A sitting Pose, in dancing)
நிலைக்கிடை கொண்டாள் (விறலி. விடு. 413)

## நிலைச்சுரம்:

= அம்சசுரம், நியாச சுரம் (Resting note, staying note)
பண்பாடும்போது நிலைத்து (தங்கி) நின்று பாடும் சுரம். இக்கோவையைச் சுற்றிக் கற்பனைச் சுரங்கள் அமைந்து ஒலித்து நிலைச்சுரத்தில் வந்து முடியும்
எடு:- பண் ஆம்சத்துவனியின் நிலைச்சுரங்கள் - பநிச்.
← இ. து. த. சொ. பக். 19

## நிலைமண்டில ஆசிரியப்பா:

= நிலைமண்டிலம்
ஒத்த அடித்தாய் உலையா மரபொடு
நிற்பது தானே நிலைமண்டிலமே (காக்கைபாடினியம்)
எல்லா அடியும் நேரடியாய் வந்து முடிதலின் இதுநிலை மண்டில ஆசிரியப்பா. (சிலப். 2: 84 – 90 அடியார்க்.)
(மனைஅறம்படுத்த காதை - நிலை மண்டில ஆசிரியப்பா என்பதன் விளக்கம்)
நேரடி - நாற்சீராய் வருவது (ஈற்றயலடி முச்சீராய் அல்லாது)... முதல், நடு, இறுதி அளவடியான் முடிதலின் நி.ம. ஆசிரியப்பா (சிலப். 4: 77 – 84 அடியார்க்.)
(அந்திமாலை... காதை - நி. ம. ஆசிரியப்பா என்பதின் விளக்கம்)
← செ. ப. அ. 2281
சங்க இலக்கியங்களில் நி. ம. ஆசிரியத்தால் இயன்றவை:–
ஐங்குறுநூறு – 3 பாடல்கள் – 113, 153, 188
குறுந்தொகை – 4 பாடல்கள் – 16, 18, 113, 221
பதிற்றுப்பத்து – 1 பாடல் – 50
அகநானூறு – 4 பாடல்கள் – 6, 8, 106, 372
புறநானூறு – 15 பாடல்கள் – 33, 44, 60, 76, 113, 147, 175 212, 214, 235, 242, 291, 344, 379, 383
(சங்கப்பாடல்கள் 2381ல் நி. ம. ஆசிரியப்பா 27 மட்டுமே)
சிலம்பின் 19 காதைகள்,
வள்ளலாரின் 'அருட்பெரும் சோதி அகவல்'
இராமராயரின் 'கந்த சஷ்டி கவசம்' முதலியன நி.ம. ஆசிரியத்தால் ஆனவை.

## நிலை மண்டிலம்: → நிலை மண்டில ஆசிரியப்பா

## நிலையம்: நிலயம், நிலயனம் (யாழ். அக.)

1. கூத்து (Acting, Dancing, dramatic exhibition)
முன்கைவந்த நிலயம் (கோயில். பு. பதஞ். 34)
ஒருகால் தூக்கி நிலையம் ஒளிர்வித்து... (கல்லா. 85: 21)
புறக்கால் மடித்துக் குவித்தெறி நிலையம் (கல்லா. 99: 18)
நிலையம் = கூத்து (மேலது உரை)
2. மண்டிலம், தாயி (Octave), நிலை
← செ. ப. அ. 2276,→ நிலை[3]

## நிலைவரி:

= துள்ளல் வரி, துள்ளல் ஓசை, நிலை
இசைப்பாட்டு வகையுள் ஒன்று, பாட்டுடைத் தலைவன் தலைவியின் உள்ள நிலையை உரைக்கும் பாடல்.
சிலம்பு கானல் வரி 20, 21, 22 ஆகியவை நிலைவரிப் பாடல்கள்,
"இச்செய்யுள் முதலிய மூன்றும் நிலைவரி என்றும், துள்ளல் வரி என்றும், துள்ளலோசை என்றும் மூலமட்டும் உள்ள சில பிரதிகளில் எழுதப் பெற்றுள்ளன." (மேலது. அடிக்.)
சிலம்பு கானல்வரி 11, 12, 13 ஆகிய மூன்று பாடல்களும் நிலைவரி.
இவை நிலைவரி; முகமும் முரியும் தன்னொடு முடியும் நிலையை உடையது, நிலையெனப்படுமே" (மேலது அரும்.)

## நிலை விளக்கு:

நாடக அரங்கில் ஏற்றப்படும் விளக்கு
தூண் நிழல் புறப்பட மாண் விளக்கு எடுத்தாங்கு (சிலப். 3: 108)
தூண்களின் நிழல் நாயகப் பத்தியின் கண்ணும் அவையின் கண்ணும் படாதபடி மாட்சிமைப்பட்ட நிலை விளக்கு நிறுத்தி (மேலது. அடியார்க்.)
↑ இம்மரபு மலைநாட்டுக் கதகளியிலும், மோகினி ஆட்டத்திலும் இன்றளவும் பேணப்படுகின்றது.

## நிவப்புத்தூக்கு:

ஐந்து சீருள்ள இசைப்பாட்டின் தாளம்.
ஒரு சீர் செந்தூக்கு... ஐஞ்சீர் நிவப்பாம்... (சிலப். 3: 16 அடியார்க்.)
தூக்குமென்றது – இத்தாளங்களின் வழிவரும்
செந்தூக்கு... நிவப்புத் தூக்கு... ஏழுதூக்குகளும் என்றவாறு (சிலப். 3: 16 அரும் – 14: 150 அடியார்க்.)

நிவப்பு - ஓங்குதல், உயர்ச்சி, வளர்ச்சி
நீர்நிலை நிவப்பின் கீழும் (புறம். 6: 6)
புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பு (சிலப். 13: 130)
உம்பர்,... மேடு... நிவப்பு இவை உயர்ச்சி,... (திவா. 1014)
உவப்பே... நிவப்பே... ஓங்கல்... உயர்ச்சியாகப்பகர்வர்... (திவா. 1369)

## நிவிர்த்தி தாளம்: = நிவிர்த்ததாளம்

நவதாளத்துள் ஒன்று
செயதாளம்... நிவிர்த்தி தாளம்... இவையே நவதாளமென்ப...
(திவா. 2437 (பாடவேறுபாடு)

## நிவிர்த்ததாளம்: → நிவிர்த்திதாளம்

## நிழல் கூத்து: → நிழலாட்டம்

## நிழலாட்டப்பாவை: → நிழலாட்டம்

## நிழலாட்டம்:

= பாவைக்கூத்து, நிழல்கூத்து, பொம்மலாட்டம், தோல்பாவைக் கூத்து, நிழலாட்டப்பாவை.
தோல் பொம்மைகளைப் பாத்திரங்களாக ஆட்டுவிக்கும் ஆட்டக்கலை.

## நிற்குமானம் கழியுமானம்:

தாள வட்டணையுள் அடங்கும் முழவுச்சொற்கள் நிற்குமானம்; மீதி சேதமாக வருபவை கழியுமானம்.
"நிற்குமானம் நிறுத்திக் கழியுமானம் கழிக்கவும் வல்லனாய்..."
(சிலப். 3: 45 – 55 உரை)
தாள அளவில் தகதின, திமித, தகிட, திமித, தகிட - 4 என்ற அளவில் வருவதில் தகதின என்பது கழியுமானம்; முதலில் தனியே முழக்குவது. திமித, தகிட திமித தகிட என்பது நிற்குமானம்; பாடலுடன் முழக்குவது.
← மத். பக். 64

## நிற ஆளத்தி:

மூவகை ஆளத்தி (ஆலாபனை) யுள் ஒன்று. பண் விரிவாக்க வகை.
இவைதாம் காட்டாளத்தி, நிற ஆளத்தி, பண் ஆளத்தி என மூன்று வகைப்படும்.
"நிற ஆளத்தி நிறம் குலையாமல் பாரணையுடன் நிகழும்... பாரணைக்கு எழுவாய் நெட்டெழுத்து... பாரணை கூத்துடன் நிகழும்... (சிலப். 3: 26 அடியார்க்.)

## நிறக்கோவை: = இராகச்சாயா சுரம்

பண் வண்ணக்கோவை; பண்சாயல் கோவை; பண் நிறக்கோவை ஒரு பண்ணிற்குரிய சாயலை (வடிவத்தை) சிறப்பாய்க்காட்டும் சுரம்
(நிறம் - பண்)

## நிறம்:

1. தன்மை, இயல்பு, பண்நீர்மை, பண் வடிவு (Tonal colour)
ஒப்பு:- CHROMATIC SCALE;
KROMATI KOS (கிரேக்கம்) - நிறம்
நிறம் என்பது பண்ணின் தன்மை, இயல்பு
நிறம் – தன்மை (சிலப். 10: 116 நாட்டார்.)
நிறம் தோன்றப் பண்ணப்பட்டமை (சிலப். 3:45 அரும்.)
2. பாட்டின் ஒரு வகைக் கூறுபாடு; வண்ணம் என்றும் கூறுவர்
வரிநிற வண்ணமாலை வலம்பட மிலைச்சி வாளார்
(சீவக. 696 என்ற அடிக்கு நச்சர். உரை. அடிக்.)
வண்ணப்பட்டடை – வண்ணம் என்றது – நிறம்
(சிலப். 3: 63 அரும்)
3. இசை, பண் (Harmony in Music) (ஈடு 2: 6: 11)
4. சுவை, மெய்ப்பாடு, பாவம் (Impression)
நிற ஆளத்தி நிறம் குலையாமல்... (சிலப். 3: 26 அடியார்க்.)
பண் என்றது நரப்படைவால் நிறம் தோன்றப் பண்ணப்படா நின்ற...
(சிலப். 3: 46 அரும்.)
நிறம் என்பது பண்ணின் சிறப்புச்சுவை ஓசை (ப. இ. இ. பக். 93)
... தான நிலையில் எய்தவைத்த நிறம்... (சிலப். 3: 41 – 2 அரும்.)

← த. க. க. 141/I,→ நிற ஆளத்தி

## நிறுத்தல் கோவை:

= பூரண நியாசசுரம், நெட்டியல் கோவை
நீள் ஒலிப்புக்கோவை; நெடுமை ஒலிக்கோவை.
ஒரு பண்ணில் நீண்ட நேரம் நின்று ஒலிக்கும் கோவை.
எடு:- அரும்பாலை (சங்கராபரணம்) யின் 'க$^2$' என்ற சுரமும்
குறிஞ்சிப்பாணி (மத்தியமாவதி)யின் 'ரி$^2$, ம$^1$, நி$^1$' என்ற சுரங்களும் நிறுத்தல் கோவைகள்
← த. வ. பக். 86

## நிறுத்து: முழங்கி

முருகியம் நிறுத்து முரணினர் உட்க (முருகு. 243)

## நிறுத்தி:

இசைப்பாட்டின் சிறுபகுதி (A single unit of a musical piece)
← செ. ப. அ. 2287

## நிறை:

1. இரண்டு தட்டு (beat) உடைய தாளவகை
(A time measure consisting of 2 beats)
2. பஹுத்துவம் - இசையின் ஒரு பகுதியைப் பாடும்போது மீண்டும் மீண்டும் வரும் சுரம்.
← த. க. க. 217/III
"பகுத்துவம், அல்பத்வம் என்பன தமிழில் நிறை , குறையென நின்றன" (யா. நூல். 154)
3. இசைச்சுரத்தின் வன்மை வகை; தீவிர சுரம்
எடு:- வன்துத்தம் (நிறைதுத்தம்) வல்லுழை (நிறை உழை)
நீடு கிளர்கிழமை நிறைகுறை தோன்ற (பரிபா. 17: 18)

நிறைகுறை கிழமை பெறுமென மொழிப (சிலப். 8: 39 – 41 அடியார்க்.)

## நிறைச் சுரங்கள்:→சுத்த சுரம், சுத்தத்துளை

## நிறை நரம்பு:

*ஏழுசுரமுள்ள பண்* (Primary melody, heptatonic)

நிறை நரம்பிற்றே பண் எனலாகும். (திவா. 1872 பின் நூற்பா)

## நின்றபண்:

*பண்பெயர்ப்பு எந்தப் பண்ணிலிருந்து செய்யப் படுகிறதோ அது நின்ற பண். பண்பெயர்ப்பால் புதிதாகக் கிடைக்கும் பண் எய்திய பண்.*

எடு:–

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | * | | * | | * | * | | * | | * | * | |
| செம்பாலை | ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
| படுமலைப்பாலை | நி$^{1}$ | | ச | | ரி$^{2}$ | க$^{1}$ | | ம$^{1}$ | | ப | த$^{1}$ | |

செம்பாலை – நின்றபண் ச ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ ப த$^{2}$ நி$^{1}$

படுமலைப்பாலை – எய்தியபண் ச ரி$^{2}$ க$^{1}$ ம$^{1}$ ப த$^{1}$ நி$^{1}$

← *த. க. க. 250*/III

## நின்றாடல்:

*அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல் என்ற அறுவகைப்பட்ட நின்றாடும் தெய்வக் கூத்து* (Dance in standing posture)

"அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல்லுடன் நின்றாடல் ஆறு" (சிலப். 3: 14 அடியார்க்.)

நின்றாடல் காணும் அருள் மூர்த்தியாக்
கொண்ட திரு அம்பலத்தான் கூத்து (உண்மை. விளக். 38)

## நின்றேத்துவார்: = சூதர்; கைவாரிகள்

*அரசனின் புகழை நின்ற நிலையில் பாடுவோர்.*

சூதர் – கைவாரிகள்; நின்றேத்துவார் (சிலப். 5: 48 உரை)

# நீ

## நீட்டம்:
*நீட்டுதல். இசை ஓசை (சுரம்)யின் நீட்சி*
(Elangation of sound, Prolongation of musical note )
நீட்டம் வேண்டின்... கூட்டி எழூஉதல் (தொ. எழுத். 6)
நீட்டும் வழி நீட்டலும் (தொ. எச். 7)

## நீதி முரசு:
*நியாய முரசு. மும்முரசுகளில் மன்னன் நீதி வழங்குவதற்கு அடையாளமாக முழங்கும் முரசு.*
*← செ. ப. அ. 2258*

## நீர்: →நோதிறம்

## நீர்மைச்சுரம்:
*பண் தருகின்ற உணர்ச்சியை வெளிப்படுத்தும் சுரம்*
*எடு:- அடாணா பண்ணின் விளரி (தைவதம்) தாரம் (நிடாதம்) ஆகிய சுரங்கள்*
*← த. க. க. 338/II*

## நீரலை: *சலதரங்கம்*

## நீலகாம்போதி:
*பண்களில் ஒன்று* (பரத. இராக. பக். 103)

## நீலந்தன்: பாணன் (அ. நி.)

## நீலம்: = நெய்தல்
நீலமணியும் (நீரில் எழு) நெய்தலும்
நீலநிறத்தனவும் நீலம் எனப்படுமே... (திவா. 2248)

## நீலாம்பரி: = நீலாம்புரி
1. *செடிவகை*
2. நீலாம்புரி – பண்வகையில் ஒன்று. (யாழ். அக.)

## நீலாம்புரி:→நீலாம்பரி

# நு

## நுடக்கம்: *கூத்து* (dance)
நல்லவர் நுடக்கம் போல் நயம் வந்த கொம்பொடும் (கலித். 32:10)
*நுடங்குதல் - குழைந்து ஆடுதல்*
மாறி இரியச் சீறி நுடங்கு வான் (பு. வெ. 2: 9)
ஆடும்மடமகள் வெறிஉறு நுடக்கம் போலத் தோன்றி
(பதிற். 51: 10 – 11)

## நுண்ஒலிமம்:
*= உள்ளோசை, உள்ளாளம், கமகம், ( அனுசுருதி )*
(microtone)
*ஒரு சுரத்தின் ஒலியுடன் சேர்த்துக் கூட்டி ஒலிக்கப்படும் மிக நுண்ணிய ஒலிமம். நரம்பைத் தடவுதலால் (தைவரல்) அல்லது வழுக்குதலால் யாழிலும், குழலிலும் நுண் ஒலி கூட்டும் முறை உண்டு.*
அனுசுருதி ஏற்றுதல் தைவரல் (சீவக. 627. நச்சர்)
*அனு- துணை*
*எடு:- அனுபல்லவி, அனுசரணம்*
*'ஒருத்தருக்கொருத்தர் அனுசரணையாக இருங்கள்'*
*(நாட்டார் வழக்கு)*

## நுண் ஒலிமக் கோவை: = அனுசுரம்
*நுண்சுரம், துணைச்சுரம், கமகச்சுரம்*
*கோவைகளை அழுத்தமாக ஒலிக்கும் போது பக்கத்துக் கோவையின் நுண்ஒலிமம் சிறிது கூட்டி ஒலிக்கப்படும். அவ்வாறு ஒலிக்கும்போது தோன்றும் சுரமே நுண் ஒலிமக் கோவை*
எடு:– கொன்றைக்குழல் (சுத்தசாவேரி) பாடுகையில் ' ரி–தா' என்று வழுக்கி ஒலிக்கும் போது இசையில் ஒலிக்கும் 'ச' என்ற சுரம் நுண் ஒலிமக் கோவையாகும்.
(இ. து. த. சொ. பக். 17; த. வ. பக். 86)

## நுண்ணூல் சிரந்தை: →துடி, உடுக்கை

## நுணுக்கம்:
*யாழின் அறுவகை உள்ளோசைகளுள் ஒன்று;* (vibrating note of yal)
முரல்வும், நரல்வும், தெளிரும், ஞெளிரும், விழைவும், நுணுக்கமும் உள்ளோசை என்ப (பிங்க. 1436)
*நுணுக்குதல் - யாழில் நுண்ணிய சுர ஒலிகளை எழுப்புதல்,* (to produce softnotes from the yal)

ஊசி போன்று அல்லது நூல் போன்று நுண்ணிய ஒலியை நீட்டி ஒலித்தல் நுணுக்கம். (ப. இ. இ. பக். 226)

← செ. ப. அ. 2321

## நுண் கோல்: → புரிநரம்பு

## நுண்கோல் அகவுநர்:

1. *நுண்ணிய கோலைக்கையிடையே உள்ள பாணர்.*
நுண்கோல் அகவுநர்ப் புரந்த பேர் இசை (அகம். 152: 4)
நுண்கோல் அகவுநர் வேண்டின் (அகம். 208: 3)
2. யாழ்ப் பாணர்
(நுண்கோல் – புரிநரம்பு)

## நுணுங்குதல்: = மெல்லப்பாடுதல்

அழகை உடைத்தான பண்ணை நுணுங்கி
(பாசுரம். திருநெடுந். 22: 204) (தே.நே. 98/9)

## நுண்கலை:

= கவின்கலை, இலலித் கலை (Fine Art)
*அழகியல் உடைய நுட்பமான கலை*
எடு:– இசை, நாட்டியம்

## நுளையர் விளரி:

*நெய்தல் நிலமக்களான நுளையரின் நிலப்பண். இன்றைய தோடிப்பண்.*
நுளையர் விளரி என்பதனால் விளரிப்பண்ணும்...
(சிலப். பதிகம். அடியார்க்.)
நுளையர் விளரி நொடி தரும் தீம்பாலை (சிலப். 7: (48)

# நூ

## நூபுரம்:
= சிலம்பு, சதங்கை, பரியகம், பாடகம்
பரியகம், நூபுரம், பாடகம், சதங்கை (சிலப். 6: 84)
நூபுரம் – சிலம்பு (மேலது. உரை)

## நூல்கட்டுரை:
*சிலப்பதிகாரத்தின் இறுதிப்பகுதி.*

## நூற்பா:
1. = சூத்திரம் (Aphorism), நூற்பா அகவல், சூத்திரயாப்பு
*இலக்கணம் முதலிய அமைத்ததற்குரிய பாவகை -*
சூத்திரம் குறித்த யாப்பாம்... நூற்பா அகவல்... (சூடா. 10: 25)
அடிவரையின்றி விழுமிதி னடைக்கு நூற்பா அகவல் சூத்திரமென்ப (பிங்க. 2069)

2. *ஆசிரியப்பா*
*இதன் சூத்திரங்கள் நூற்பா எனப்படும், ஆசிரியப்பா யாப்பின.*

← *த. இ. பே. 166,16*

↑ நூற்பாவானது அகவல் (ஆசிரியம்) பாக்களால் தொடக்கத்தில் யாக்கப்பட்டது.

## நூற்பா அகவல்: → நூற்பா

## நூற்று எழுபத்தைந்து தாளம்:
*7 தாள வகைகளையும் 5 தாள இனங்களுடன் உறழ்ந்தால் 35 தாளங்கள் கிடைக்கின்றன. 5 நடை மாற்றம் (கதிபேதம்) கொண்டு 35 தாளங்களையும் உறழ்ந்தால் 175 தாளங்கள் கிடைக்கின்றன.*
*5 x 7 = 35;   35 x 5 = 175*

5 நடைமாற்றம் (கதிபேதம்)
1) மூன்றன் நடைமாற்றம் – திசுரகதி
2) நாலன் நடைமாற்றம் – சதுசுரகதி
3) ஐந்தன் நடைமாற்றம் – கண்டகதி
4) ஏழன் நடைமாற்றம் – மிசுரகதி
5) ஒன்பான் நடைமாற்றம் – சங்கீரணகதி

## நூற்றுமூன்றுபண்கள்:
*103 பண்களாவன:*

| | |
|---|---|
| *1) பெரும்பண்* | *- 16* |
| *2) பாலையாழ்த்திறம்* | *- 20* |
| *3) மருதயாழ்த்திறம்* | *- 16* |
| *4) குறிஞ்சி யாழ்த்திறம்* | *- 32* |
| *5) செவ்வழி யாழ்த்திறம்* | *- 16* |
| | *100* |
| *தாரப்பண் திறம்* | *1* |
| *பையுள்காஞ்சி* | *1* |
| *படுமலை* | *1* |
| | *103* |

*பிங்கல நிகண்டு நூற்பா 1375- 1385 இல் 103 பண்கள் கூறப்பட்டுள்ளன.*
நூற்று மூன்று பண் நீர்மைகளையும் (சிலப். 3: 58 உரை)
... பண்கள் நூற்று மூன்றாதற்கு... (சிலப். 3: 72 – 78 உரை)
இவ்வேழு பாலையினையும் முதலடுத்து நூற்று மூன்று பண்ணும் பிறக்கும் (சிலப். 8: 35 அடியார்க்.)
பண் நூற்று மூன்று (சிலப். 13:110–12அடியார்க்.)
பண்களாவன : பாலையாழ் முதலிய நூற்று மூன்று (குறள் 573. பரிமேல. உரை.)

## நூறு வண்ணங்கள்:
*குறில், நெடில், வலி, மெலி, இடை, இத்துடன் (5) அகவல், ஒழுகல், வல்லிசை, மெல்லிசை என்ற விகற்பங்களை (4) தூங்கிசை, ஏந்திசை, அடுக்கிசை, பிரிந்திசை, மயங்கிசை (5)என்ற வண்ண வகைகளுடன் உறழ 100 வகை வண்ணப்பாக்கள் வரும். (அவிநயனார்.)*

← *யா. கா. ஒழிபியல்*

# நெ

## நெகிழ்த்துப் புணர்த்தல்:

சொல்லிய இயல்பினில் சித்திரம் வஞ்சனை (சிலப். 3:56)

வஞ்சனைப் புணர்ப்பாவது – இசை கொள்ளா எழுத்தின் மேல், வல்லொற்று வந்துழி மெல் ஒற்றுப்போல் நெகிழ்த்துப் புணர்த்தல் (மேலது உரை)

"பாண்டி நாட்டுப் பழங்குடி மக்கள் சிறப்பாக நாட்டுப் புறத்திலுள்ளவர், தமிழ்வல்லின மெய் ஒலிகளைத் திராவிட ஆரிய மொழிகளிற் போல் மிக வலித்தும் எடுத்தும் ஒலிக்காது பழைய முறைப்படியே பலுக்கி (உச்சரித்து) வருகின்றனர்..." (தே. நே. 107/10)

*இசை கொள்ளா எழுத்து - வல்லொற்று - க் ச் ட் த் ப் ற்* (stops, plosives, mute consonants)

## நெகிழி:

= *கொறுக்கை, கொறுக்காய், சீவாளி* (Reed) *நாககரம், செனாய், முகவீணைகளில் ஊதும் பகுதியாக விளங்கும் இசைக்கருவி உறுப்பு.*

→ *வஞ்சனைப் புண;ரப்பு*

## நெட்டிசை:

1. *விருத்தத்தில் நெடிய சந்தம்* (Long metre in virutham verse oppsite to Kurricai)
2. *நெட்டிசை*

'குரல்' சுரத்தைப்போல் 10/9 அளவு அசைவெண் விகிதம் கொண்ட சுரம் (யா. நூ. பக். 84)

## நெட்டியல் கோவை: → நிறுத்தல் கோவை

## நெட்டெழுத்து: *உயிர்நெடில்*

*நீண்ட ஓசை உடைய உயிர் எழுத்து* (long vowel) *நெட்டெழுத்து இசைக்கு ஏற்றது. எழுத்துக்கள் நீட்டம் பெற்று ஒலிப்பதே இசை.*

அளபிறந்து உயிர்த்தலும்... (தொ. எழுத். 33)

பாமேவு சொற் புரப்பார் பாவலரென் நெட்டெழுத்து (முக்கூடல். பள்ளு. காப்புச் செய்யுள்.)

## நெடுஞ்சீர் வண்ணம்: *நெடில் வண்ணம்*

*நெட்டெழுத்து அதிகமும் பயின்றுவரும் சந்தம்*

நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும் (தொ. பொ. 532)

எடு:– காட்டுளாடும் பாட்டுளானை
நாட்டுளாரும் தேட்டுளாரே (சம்பந்தர். தேவாரம்)
வீயா வாமா மாவா யாவீ – யாவா பாரா ராயா வாயா...
(கந்தபுராணம்)

## நெடுந்தூக்கு: *தூக்கு ஏழனுள் ஏழுசீர் கொண்டது.*

... எழுசீர் நெடுந்தூக்கு... (சிலப். 3: 16 – 14: 150 அடியார்க்.)

## நெடும்பல்லியம்: *பல இசைக்கருவிகளின் தொகுதி; பல்வகை வாத்தியங்கள்*

யாழொடு பல்லியம் கறங்க (புறம். 281)

ஒப்பு:– நெடும்பல்லியத்தார்(குறிஞ். 178. பாடிய பெண்பாற்புலவர்)

நெடும்பல்லியத்தனார் (புறம். 64. பாடியவர்)

← *செ ப. அ. 2529*

## நெடுவெண்பாட்டு:

*ஐந்தடிச் சிறுமையும் ஏழடிப் பெருமையும் உடைய வெண்பா வகை.*

நெடுவெண்பாட்டே... வெண்பா யாப்பின... (தொ. பொ. 430)

← *செ. ப அ. 2340*

## நெய்தல்:

*வெள்ளாம்பல், செங்கழுநீர், அல்லி, குவளை, நெய்தலாம்பல்.*

1. *ஒரு மலர்*
2. *கடல்சார் நிலம்* (maritime tract, off shore)
3. *நெய்தல் நிலப்பறை, சாப்பறை, பிணப்பறை, சாக்காட்டுப்பறை* (Funeral drum, Drum peculiar to maritime tract)

சாப்பறை நெய்தற்பறை (திவா. 1232)

சாப்பறையே என்ப நெய்தலின் பறையின் நாமம். (சூடா. 7: 42)

நெய்தல் கேளன்மார்... (புறம். 389: 17)

ஓரில் நெய்தல் கறங்க (புறம். 194: 1)

நெஞ்சு நடுக்குறூஉம் நெய்தல் ஓசையும் (மணிமே. 6: 71)

அன்றவர்க்காங்கே பிணப்பறையாய்... (நாலடி. 23)

புறப்புற முழவு – நெய்தல் பறை முதலாயின (சிலப். 3: 26 அடியார்க்.)

↑ இறப்பு வீட்டில் கொட்டப்படும் பறை. வறண்ட தோலால் அமைவது. எனவே நெஞ்சை நடுங்க வைக்கும் உச்ச ஓசையுடையது.

4. *இரங்கல் என்ற உரிப்பொருள்*

நெய்தல் சான்ற வளம் பல பயின்று... (மதுரைக். 325)
நெய்தல் சான்ற — இரங்கலாகிய உரிப்பொருள் அமைந்த (மேலது. நச்சர்)
நெய்தலே கடல்சார் பூமி,நெய்தல் பூ, சாபறைப் பேர் (சூடா. 11 :10)
நெய்தல் சாபறையும் கடல் சார் நிலனும்... (திவா. 2230)
←டி.வி. சாம்ப சிவம் பிள்ளைஅகராதி. பக். 1940 / V
← *த. க. க. 285/II*

## நெய்தல் பறை: → நெய்தல்

## நெய்தல் பெரும்பண்கள்:

*செவ்வழிப்பாலை மற்றும் விளரிப்பாலை*

திறனில் யாழும் விளரியும் நெய்தல் (சூடா. 10: 34)
திறனில் யாழ்ப்பெயர் நெய்தல் யாழ் (திவா. 1875)
சிறுநா ஒண்மணி விளரி ஆர்ப்ப (குறுந். 336)
விளரிக் கொட்பின் வெள்நரி கடிகுவன் (புறம். 291)
நுளையர் விளரி... என்பதனால் விளரிப்பண்ணும் (சிலப். பதிகம். அடியார்க்.)
நுழையர் விளரி நொடி தரும் தீம்பாலை (சிலப். 7: (45)
திறனில் யாழ், விளரி, நெய்தல் நிலம் சிவணும் (திவா. 1880)
↑ திறனில் யாழ் என்பது செவ்வழிப்பாலை என்று மேற்கண்ட நூற்பாவினால் அறிய முடிகின்றது.

*(விளரி - தோடிப்பண்)*

*(திறனில்யாழ் - செவ்வழிப்பாலை - இருமத்திமத் தோடி - ச ரி¹ க¹ ம¹ ம² த¹ நி¹)*

→ செவ்வழி, விளரி

## நெய்தலந்தீம்பாணி: = நெய்தல் குழல், தடவு, மருள், மருள்இந்தளம்,வடுகு, இந்தளம், நெய்தல் பாணி.

*நெய்தல் நிலத்திற்குரிய செவ்வழிப்பாலை மற்றும் விளரிப்பாலை (தோடி) யின் பிறப்பு இந்தளப்பாணி. முல்லைத்தீம்பாணி நிலப்பெயர் பெறுவதால் இந்தளம் - நெய்தல் பெயரால் நெய்தலந்தீம்பாணி.*

← *பஞ்ச. மர. பக். 293*

## நெல்லரி கிணை: *மருதநிலப்பறை*

பறை – மணமுழவும், நெல்லரி கிணையும் (இறை. கள. 1: 18)

## நெல்லிச்சி: *வரிக்கூத்துள் ஒன்று.*

சிந்து... நெல்லிச்சி... கோத்தவரிக்கூத்தின்குலம்... (சிலப். 3: 13 அடியார்க்.)

## நெளிர்:

எடுத்தல் ஓசை (voice at a high pitch; high tone)

← *செ. ப. அ. 2349*

# நே

## நேத்திர முத்திரை:

சுண்டுவிரலையும் பெருவிரலையும் கூட்டி நடுவண் உள்ள மூன்று விரலையும் உயர நிமிர்த்திக் கண்ணுக்கு எதிரில் காட்டும் முத்திரை வகை

← செ. ப. அ 2354

## நேர் ஒன்றா ஆசிரியத்தளை:

நேர் ஈற்று இயற்சீர் முன் நேர் வரும் தளை

← செ ப. அ 2361

## நேர்கை: = சமன்கை

ஒரு முழவுச் சொற்கட்டினை முழவின் வலப்புரத்தில் ஒலித்தால், அதே அளவுடைய சொற்கட்டினை இடப்புறத்தில் ஒலிப்பதே நேர்கை ஒலிப்பு.

← மத். 44, 45; பஞ்ச. உரை பக் 342

## நேர்கோட்டுயாழ்:

வளையாத நேர்கோட்டுயாழ் என்பது சங்க காலத்திலேயே தோன்றிய இன்றைய யாழின் வடிவை ஒத்த யாழ் புரி நரம்பும் அதைக்கட்டும் திவவும் நேர்கோட்டு யாழிலே தான் அமைய முடியும்.

திவவு மெய் நிறுத்திச் செவ்வழி பண்ணி (மதுரைக். 604)

→ புரிநரம்பு; திவவு; தொண்டு

## நேர்திறம்: = புறநீர்மை, வைகறைப்பாணி

சிவப்பிரியா என்ற சிவரஞ்சனிப்பண். நேர்பாலை (கரகரப்பிரியா) யின் திறப்பண்.

பாணி:- ஐந்து சுரப்பண், திறம் (Pentatonic scale)

பாண்வாய் வண்டு நேர்திறம் பாட
காமருகுவளைக் கண்மலர் விழிப்ப (சிலப். 4: 75 – 76)

வண்டுபாடக்குவளை விழிப்ப இரவு போம் வைகறை யென்க (மேலது அரும்.)

வைகறையின் பண்; எனவே வைகறைப்பாணி.

... புறநீர்மை எனும் திறத்தால் பள்ளி எழுச்சிபாட (மேலது அடியார்க்.)

கிணை நிலைப்பொருநர் வைகறைப் பாணியும். (சிலப். 12: 148)

கிணை – மருதநிலப்பறை

பண். வைகறைப் பாணியும் (சிலப். பதிகம். அடியார்க்.)

... நேர்திறம் எனவும்... (சிலப். 13: 184 – 8 அடியார்க்.)

நேர்திறத்தின் பெயர் புறநீர்மை (பிங்க. 1400)

↑ இன்றளவும் (புறநீர்மை) சிவரஞ்சனிப்பண் – வைகறையில் பாடப்படுகின்றது. எனவே பண்ணின் பெயர் வைகறைப்பாணி. பள்ளி எழுச்சி (துயில்எடை) இப்பண்ணில் பாடப்பட்டதாக அடியார்க். கூறுவது இக்கருத்துக்கு வலிவு சேர்ப்பது.

← த க. க. 218/II

## நேர்நடைப் பண்:

= கிரமகதிப்பண், நேரிய கதிப்பண், கிரக சம்பூர்ண ராகம்

ஒரு பண்ணில் சுரங்கள் (நரப்படைவு) தம் வரிசையில் பிறழாமல் நேராக அமைதல்.

எடு:- செம்பாலை (அரிகாம்போதி) யின் நேர் நடை:-

ச ரி² க² ம¹ ப த² நி¹

← இ. து. த. சொ. பக் 27

## நேர்பசை:

(நேர்பு + அசை)

நேர்பசை - வண்டு

நிரைபசை - களிறு

## நேர்பாலை: = மருதம், மருதயாழ், கொடி, கொடிப்பாலை, கோடி, கோடிப்பாலை, நேர்செம்பாலை, நேர்பஞ்சமம், பண பஞ்சமம். (கரகரப்பிரியா)

ஒரு பண்ணின் இளியை (பஞ்சமம்), குரலாக (ச) வைத்துப் பண் பெயர்த்தால் கிடைக்கும் பாலை முதற் பாலையின் நேர்பாலை எனப்படும்.

ஏத்தும் இடபம்... செம்பாலைநேர்

(பஞ்ச. யாழ் மரபு.வெண்பா. 23; சிலப். 17(13) அடியார்க்.மேற்.)

தலைமைப்பாலையான செம்பாலை (அரிகாம் போதி)யின் இளியைக் குரலாகப் பண் பெயர்த்தால் கிடைப்பது கோடிப்பாலை (கரகரப்பிரியா). தலைமைப் பாலையின் இளி வழிக்கிடைப்பதால் கோடிப் பாலைக்கு நேர்பாலை என்ற சிறப்புப் பெயர். (எனவே பஞ்சமம் என்ற பெயரும் கோடிப் பாலைக்கு ஏற்பட்டது.)

சொல் இரண்டாக்கி மிருதுரங்கிசை
நேர் பஞ்சமத்திற்கு (திருமுறை கண்ட புராணம். 38)

← த. க. க. 224/II; ப இ. பக். 83 - 84

## நேர்நிலை வஞ்சி: சமநிலைவஞ்சி

நேர்நிலை வஞ்சி... (தொ. பொ. 354)
← செ. ப. அ. 2358; → சமநிலை வஞ்சி

## நேரசை:

தனிக்குறிலும், நெடிலும் தனித்தேனும் ஒற்றடுத்து தேனும் வரும் அசைவகை. (யாப். 6)

## நேரடி:

நாற்சீர் அடி; அளவடி

எல்லா அடியும் நேரடியாய் வந்து முடிதலின், இது நிலைமண்டில ஆசிரியப்பா. (சிலப். 2: 84 – 90 அடியார்க்.)

... நேரடிக்கு அளவே (தொ. பொ. 348)
← சி. யா. பக். 2

## நேரிசை:

1. நேரிசை வெண்பா
இரண்டாமடி ஈற்றில் தனிச்சொல் பெற்று வருவது.
2. பண்களில் ஒன்று - கொல்லி - படு மலைப் பாலை
நேரிசையாக வறுபத முரன்று (தேவா. 1: 75: 3)
வண்டினம்.... நேரிசைப் பாணில் யாழ் முரலும்... (தேவா. 2: 53: 10)
நேரிசையாம் கொல்லி (திருமுறைகண்ட. 39)
3. ஒரு யாப்பு
அறுசீர் விருத்த வகையது; விளம், மா, மா எனவரும் யாப்புடையது
தேவார யாப்பு வகையுள் ஒன்று- அப்பரின் நாலாம் திருமுறை பதிகம் 22 - 79.
ஆயமும் காவ லுஞ்சென் (சிலப்.20: 20)
கூவிளம் தேமா தேமா - நேரிசை யாப்பு
← த. க. க. 224/III

## நேரிசைச் சிந்தியல் வெண்பா:

இரண்டாம் அடியில் தனிச்சொல் பெற்றுவரும் சிந்தியல் வெண்பா வகை. (யா. கா. செய். 7)

## நேரிசை ஆசிரியப்பா:

ஈற்றயலடி முச்சீராய் வரும் ஆசிரியப்பா.

## நேரிசை ஒத்தாழிசைக்கலி:

தரவு ஒன்றும் தாழிசை மூன்றும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று வரும் கலிப்பா (யா. க. செய். 16)

## நேரிசை வெண்பா:

இரண்டாம் அடியில் தனிச்சொல் பெற்று வரும் வெண்பா.

## நேரியகதிப்பண்: → நேர் நடைப்பண்

## நேரியசாய்ப்பு: = கிரம சாய்ப்பு

சாய்ப்புத் தாளங்கள் 1 + 2, 2 + 3, 3 + 4, 4 + 5 என குறைந்து, கூடி வருவது நேரிய சாய்ப்பு,
எடு:- ஏழன் சாய்ப்புத் தாளத்தில் முதலில் 3 எழுத்தும் பின்னர் 4 எழுத்தும் வருதல் நேரிய சாய்ப்பு.
பாதி மதிநதி (திருப்புகழ்)
3 4 = 7

# நை

## நையாண்டி:

*நாட்டார் பாட்டு வகையுள் ஒன்று*

**இரண்டு நையாண்டி பாடினாள்** (திருவாலவா. 54: 23)

## நையாண்டி மேளம்:

*கரகம், காவடி, பொய்க்கால் குதிரை முதலிய ஆட்டங்களுக்கு இசைக்கும் நாகசுரக்குழு. இக்குழுவில் நாகசுரம், தவில், ஒத்து, உறுமி, சாலர், கைமாரி, பம்பை, கிரிக்கட்டு, தமுக்கு முதலிய இசைக்கருவிகள் இசைக்கப் படுகின்றன. இதில் சிந்து இசை, தெற்கத்தி நையாண்டி, விளம்ப நையாண்டி, சோலைமலை நையாண்டி, மம்பட்டி வெட்டு நையாண்டி, கட்டபொம்மு இசை, மூக்க வேளார் இசை, கும்மிஇசை முதலிய பல்வகை இசை வடிவங்களை வாசிக்கின்றனர்*

← *த. ப. வ. 486*

## நைவளம்:

= நாட்டை, கம்பீரநாட்டை, நட்டபாஷா, நாட்டியபாஷா நட்டபாடை, நட்டராகம், நாட, நாட்டம்.

**அரும்பாலை (சங்கராபரணம்)யின் திறம் –ச க$^2$ ம$^1$ப நி$^2$ ச்**

*கூத்துக்கும், ஆடலுக்கும், உரிய பண்; மல்லாரி ஐந்து சுரப்பாணியான நைவளத்தில் பாடப்படுகின்றது.*

**நைவளம் நவிற்று மொழி நண்ண வரலோடும்** (கம்ப. 1: 20: 34)

**நைவளம் நவிற்றுபொழில்** (பாசுரம். 5: 10: 2,1439)

**நைவளம் பழுநிய நயம் தெரிபாலை** (சிறுபாண். 36)

**நைவளம் பழுநிய பாலை வல்லோன்** (குறிஞ். 146)

**நட்டராகம் முற்றுப்பெற்ற பாலையாழை வாசிக்கவல்லவன்** (மேலது நச்சர்)

*இங்கு பாலையாழ் என்றது அரும்பாலை (சங்கராபரணம்)*

**நைவளம் பூத்த நரம்பியை சீர்...** (பரிபா. 18: 20)

**நைவளம் பூத்த நரம்பு – நட்டபாடை என்னும் பண்ணைத் தருகின்ற யாழ் நரம்பு** (மேலது பரிமேல்.)

**நைவளம் ஒன்று ஆராயா** (பாசுரம் 2073)

**நைவளமிகு சாய நங்கையைப் புனைநின்றார்.** (சீவக. 2435)

**நைவளம் – நட்டபாடை** (மேலது நச்சர்)

**நைவளமென்பது நட்டபாடை** (பிங்க. 1390)

↑ *'கொங்கை திறங்கி' என்று தொடங்கும் மூத்த திருப்பதிகம், 'தோடுடைய சிவன்' என்ற சம்பந்தரின் முதல் பாடல், நாலாயிரப் பாசுரத்தில் முதல் பாடலான நம்மாழ்வாரின் திருப்பல்லாண்டு மற்றும் தேவா. 1: 1-22 பதிகம்; 7: 78-83 பதிகம் முதலியன இப்பண்ணில் அமைந்துள்ளன இப்பண் அடிக்கடியும், விழிப்பை ஏற்படுத்தவும் பாடப் படுபவதால் தெருக்கூத்தானது, நாட்டைக் கூத்து என்றும் அழைக்கப்படுகிறது. பல்வகை மல்லாரிகள் இப்பண்ணின் சுரங்களால் அமைந்தவை. பஞ்சகவுத் துவம் மற்றும் பஞ்ச ரத்தின கீர்த்தனத்தின் முதல் பண் இதுவே*

*நைவளம் - கம்பீரநாட்டை (பண்ணாராய்ச்சி மாநாட்டின் முடிவு)*

← *பஞ்சமரபில் இசைமரபு பக். 109 - 110*

→ நாட்டை ; நட்டபாடை; நாட்டம்.

## நைவளம் பழுநிய பாலை:

*நைவளம் என்ற பண் முழுமை அடைந்த பாலை என்ற பாலையாழ் (சங்கராபரணம்) குறித்தது இத்தொடர்*

*பழுநிய - சேர்ந்து முற்றுப்பெற்ற; நைவளம் - கம்பீரநாட்டை*

**நைவளம் பழுநிய பாலைவல்லோன்** (குறிஞ். 146)

**நைவளம் பழுநிய நயம்தெரி பாலை** (சிறுபாண். 36)

**நைவளம் முற்றுப் பெற்ற பாலையாழை வாசிக்க வல்லவன்** (மேலது உரை)

**நைவளம் (நாட்டை) – ச க$^2$ ம$^1$ப நி$^2$ ச்**

**பாலை (சங்கராபரணம்) – ச ரி$^2$ க$^2$ ம$^1$ப த$^2$ நி$^2$ ச்**

*நாட்டைப் பண் 'ரி$^2$' மற்றும் 'த$^2$' எனும் சுரங்களைப் பெறுவதால் சங்கராபரணமாக முற்றுப்பெற்றது.*

**ஒப்பு:– 1. பஞ்சுரம் பழுநிய பண்முறை நிற்ப** (பெருங். 1: 52: 89)

*பழுநிய - நிரம்பிய - மேலது - பொ. வே. சோம. உரை*

**2. வளம்பிழைப்பு அறியாது, வாய் வளம் பழுநி** (மலைபடு. 578)

# நொ

## நொக்கு: (தெ.சொ)

அழுத்தம், (stress)
உள்ளோசை (கமகம்)களுள் ஒன்று. ஒரு சுரம் அழுத்த மாகப் பாடப்படுதல் நொக்கு கமகம் எனப்படும்.
← பாலசிக்ஷா; பண்டிதரின் தமிழிசைத் தொண்டு
(ஆசிரியர் கட்டுரை பக். 58)

## நொடி:

கைவிரலை நொடிக்கும் கால அளவு (Second)
ஒருமாத்திரை (அலகு) கால அளவு கொண்டது நுட்பமான தாள அளவுக்காலம். (Instant, as the time - measure of the snap of the fingers)
**கண்ணிமை நொடி என அவ்வே மாத்திரை**
**(தொ. நூ. மரபு. 7)**
**நொடிதரு பாணிய பதலை (மலைபடு. 11)**
(கால அளவு தரும் தாளத்தை உடைய பதலை)
← தொ. க. க. பக். 90 - 91

## நொண்டிச்சிந்து:

ஒரு வகை நாட்டார் பாடல். கண்ணிகளால் அமைந்த சிந்து வகையது. முதல் வரி இறுதிச்சீர் இன்றி முடமாயுள்ளதால் நொண்டிச்சிந்து என்று பெயர். நொண்டி நாடகத்திற்கான பாடல் வடிவம். வழமையாக புன்னகாவராளி, பைரவி போன்ற பண்களில் ஆதிதாளத்தில் பாடப்படுவது.
1. நந்த வனத்திலோர் ஆண்டி - அவன் - என்பது புகழ் பெற்ற நொண்டிச் சிந்து (கடுவெளிச்சித்தர்)
2. ஐய ஒருசேதி கேளும் - உங்கள் (நந்த. சரித் கீர்த்தனையில் வரும் நொண்டிச் சிந்து)

## நொண்டிச்சிந்து அமைப்பு:

நொண்டிச்சிந்து என்பது நொண்டி நாடகத்திற்குரிய சிந்துப்பாடல்
இதன் அமைப்பு:
நந்தவ னத்திலோர் ஆண்டி - அவன்
தாங்கிட தாங்கிட தாங்கிட (ஆ)தன
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
தாங்கிட தாங்கிட தாங்கிட தானா
என்று நாலன் நடையில் ஆதிதாளத்தில் அமைந்துள்ளது.
நந்தவ னத்திலோர் ஆண்டி - அவன்

எடுப்பு நடைச்சொல் அறுதி விட்டிசை தனிச்சொல்

அறுதிவீழ்ச்சி
↑ **கீர்த்தனை வடிவம் நொண்டிச்சிந்து என்ற பாடல் இலக்கணத்தில் அமைந்துள்ளது அறியற்பாலது.**

## நொண்டி: = நொண்டி நாடகம்

இது ஓர் இசை நாடகம் (Opera); ஓரங்க நாடகம். (Monologue). நொண்டி ஒருவனால் மட்டுமே நாடகம் ஆடப்படுவது. கள்வன் ஒருவன் படையிலுள்ள குதிரையைக் களவாட முயல்கையில் மன்னனால் கால் வெட்டப்பட்டு தண்டனை பெற்றபின் திருந்தி தன் வரலாற்றைக் கூறுவதாக நொண்டிச்சிந்தில் அமைந்த நாடகம்.
எடு:- சீதக்காதி நொண்டி நாடகம்.
← செ. ப. அ. 2366

## நொண்டி நாடகம்: → நொண்டி

## நொறு நாட்டியம்:

= நறு நாட்டியம், நோணா வட்டம், நோனா வட்டம்
மிகநுட்பமான அவிநயங்களுடன் ஆடப்படும் ஆடல் (fastidiousness)
நொறு - நுண்மை
'நொறநாட்டியம் பிடித்தவன்' நெல்லை வழக்கு.
(வேண்டாத நுண்ணிய வினைகளைச் செய்யும் ஒருவன்)
ஒப்பு:- நொறுக்குத்தீனி.
← செ. ப. அ. பிற். 331 ; தே. நே. 158,9

# நோ

## நோக்கு:

*வினோதக் கூத்துள் ஒன்று. கழிநுணுக்கம் தோன்ற ஆடுவது*

**விநோதக் கூத்தாவது:– குரவை... நோக்கு... என்பர்...**

**(சிலப். 3: 12 அடியார்க்.)**

**"... விநோதம் விரிக்கும் காலை...நோக்கு..."**

**(மேலது. 6: 54–5 அடியார்க்.)**

**↑ நோக்குவித்யாபாவகளி என்ற கூத்து மலை நாட்டில் ஆடப்படுகின்றது.**

## நோட்டு சுரசாகித்தியம்: →நோட்டு சுரப்பாடல்

## நோட்டுசுரப்பாடல்:

*நோட்டு சுர சாகித்தியம்*

*நம் இசையுடன் ஐரோப்பிய இசையையும் கலந்து முத்துசாமி தீட்சிதரால் இயற்றப்பட்ட பாடல்.*

## நோதிறம்: = நீர்

*நீர்நிலைப்பண், நெய்தல்பாணி, நொந்த திறம், இரங்கல் சுவைப்பண் - இந்தளப்பண்*

**நேர்திறம், செவ்வழி நல்யாழ்த்திறனே (பிங்க. 1379)**

**↑ மேற்கண்ட பிங்கல நிகண்டு நூற்பாவில் 'நோதிறம்' என்பது பாடமாய் இருந்திருக்க வேண்டும்.**

*பரிபாடல் 13 - 17 இப்பண்ணில் இசையமைக்கப் பட்டுள்ளது.*

**நோய் சேர்ந்த திறம் பண்ணி நின் பாணன் (கலித். 77: 18)**

**கிளை முறை என்ற ஐந்தன் முறையில் வரும் பண்கள்:**

**ச ரி$^1$ ரி$^2$ க$^1$ க$^2$ ம$^1$ ம$^2$ ப த$^1$ த$^2$ நி$^1$ நி$^2$**

**0 1 2 3 4 5**

**0 1 2 3 4 5**

**4 சுழற்சி – ச ம$^1$, ம$^1$நி$^1$, நி$^1$க$^1$, க$^1$த$^1$,– ச க$^1$ம$^1$த$^1$நி$^1$–இந்தளம்**

**5 சுழற்சி –ச ம$^1$, ம$^1$நி$^1$, நி$^1$க$^1$, க$^1$த$^1$, த$^1$ரி$^1$– ச ரி$^1$ க$^1$ ம$^1$ த$^1$ நி$^1$**

**– சுத்ததோடி**

**6 சுழற்சி – ச ம$^1$, ம$^1$ நி$^1$, நி$^1$ க$^1$, க$^1$த$^1$, த$^1$ ரி$^1$ ரி$^1$ ம$^2$– ச ரி$^1$க$^1$ ம$^1$ ம$^2$ த$^1$ நி$^1$**

**– செவ்வழி**

*இந்தளம், சுத்ததோடி, செவ்வழி யாவும் இரங்கல் சுவை தரும் நெய்தல் நிலப்பண்களே.*

**காந்தள் மெல்விரல்... செவ்வழிப்பாலை (சிலப். 7: (47)**

*என்று செவ்வழிப்பாலையை 'கானல்வரி'யிலேயே அமைத்துக் காட்டுகிறார்.*

**பண்ணீர் வண்டு பரிந்தினைந்து ஏங்கி**

**கண்ணீர் கொண்டு காலுற நடுங்க (சிலப். 13: 187 – 88)**

*பண்ணீர் - பண் + நீர் - நீர்ப்பண் - நீர்நிலைப்பண்*

**பண்ணீர்மையன்றிப் பண்ணீர் என்றமையால் திறம் பன்னிரண்டனுள் நோதிறம் எனவுமாம் (மேலது அடியார்க்.)**

## நோணா வட்டம்: → நொறுநாட்டியம்

## நோனா வட்டம்: → நொறுநாட்டியம்



### ப:
*இளி (ப) என்ற இசையின் ஐந்தாம் (பஞ்சமம்) சுரத்தின் எழுத்து* (symbol representing the 5th note of the gamut)

சவ்வும், ரிவ்வும்... பவ்வும்... ஏழும் அவற்றின் எழுத்தே ஆகும்.
(திவா. 1886)

### பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா:
*பல தாழிசைகளைக் கொண்டு கொச்சகமாக வரும் கலிப்பாவகை.*
*எடு:- சிலம்பின் 28 ஆம் காதையான வேட்டுவவரி.*

### பஃறொடை வெண்பா:
*நான்கடியின் மிக்குவரும் வெண்பா.*
←யா. கா. செய். 5 உரை

### பக்க அடைவு:
*ஒருகாலை, இடப்பக்கத்து, வலப்பக்கத்து அடையச் செய்யும் நாட்டிய அடைவு.*
← *த. க. க. 25/I*

### பக்கப்பாட்டு:
*துணைப்பாட்டு; தலைமைப் பாட்டுக்காரருக்கு துணையாகப் பக்கப்பாட்டுக்காரர்களால் பாடப் படும் பாட்டு.*

ஒப்பு: தலைப்பாட்டுக் கூத்தியும் இடைப்பாட்டுக் கூத்தியும்.
(சிலப். 14: 156)

### பக்கமண்டலி:
*நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று.*
(சிலப். 3: 13 அடியார்க். அடிக்.சுத்தானந்தப் பிரகாசம்)

### பக்கமீட்டு: → ஒற்றுறுப்பு

### பக்கவாத்தியர்:
*இசை நிகழ்ச்சியில் துணையாக இசைக்கருவி வாசிப்போர்.*

*பக்க வாத்யர் அழகிய சோழத்தெரிந்த*
← *தெ. இ. க. 2· 66 ; த. க. சொ. 379*

### பக்க வாத்தியம்:
*இசை நிகழ்ச்சிக்குத்துணையாக இயங்கும் இசைக் கருவி.*

### பக்கிசைத்தல்: = விஸ்ராந்தி
*விட்டிசைத்தல்*

அதுவும் இதுவும் எனப் பக்கிசைத்து ஓதப்பட்ட
(சி.போ. சிற். 12: 4 உரை.)

← தே. நே. *162/9* , → விட்டிசை

### பக்தை:
அதீதமான பக்தியினால் கோயிலில் ஆடுபவள்.
(ஞானாகானம் பக். 240)

### பகண்டை: *விகடப்பாடல்*
பல்வினை இட்டுப் பகண்டை பாட
(திருவாலங். மூத்த திருப்பதிகம். 11: 1: 11)

### பகலடி:
*சிங்கி அடித்தல்* (Flapping the arms against the sides)

### பகவதியாள்:
*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

சிந்து... பகவதியாள்... கோத்த வரிக்கூத்தின் குலம்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

↑ பகவதி என்பது மலைநாட்டில் ஒற்றைமுலைச்சி அம்மன், குறும்பா தெய்வம் போன்று கண்ணகிக்கான ஒரு பெயர். எனவே மேற்கண்ட கூத்து கண்ணகி பற்றிய ஓர் இசை நாடகமாகலாம்.

### பகற்பண்:
பகற்காலத்தில் பாடப்படும் பண்கள் (சங். அக.)

*காலை, மதியம், மாலை முதலிய நேரங்களில் பாடுதற்குரிய தேவாரப்பண்கள்.*
← *த. க. க. 365/I*

### பகுத்துப்பரப்பல்: = பிரஸ்தாரம், பிரத்தாரம்
*(பிரத்தாரம் - பரப்புதல்)*

ஒரு நீண்ட தாளச் சொற்கட்டைப் பலவாறு பகுத்துத் தொகுக்கலாம்.

இதன் வகைகள்:-
(1) குறைப்புப் பரப்பு – நஷ்டப் பிரத்தாரம்
(2) நிறைப்புப் பரப்பு – உத்திஷ்டப் பிரத்தாரம்
(3) சிற்றளவுப் பரப்பு – பாதாளப் பிரத்தாரம்
(4) மிக நுண் பரப்பு – மகாபாதாளப் பிரத்தாரம்
(5) ஒன்றன் அடுக்கு பரப்பு – அனுத்ருத பிரத்தாரம்
← இ. து. த. சொ. பக். 38 - 39

## பகுதி:

*யாழின் பகுதி; யாழ் என்ற பெரும்பண்ணின் கிளைப்பண்கள் (ஜன்யம்); திறப்பண்கள்.*

தெய்வம்... யாழின் பகுதி... மொழிப (தொ. பொ. 18)

## பகுவாய்ப்பறை:

*அகன்ற வாயையுடைய பறை; பகுவாய் - திறந்தவாய்; பக்கங்களில் விரிந்தவாய்*
*எடு:- பகுவாய்ப் பல்லி*

பகுவாய் வன்பேய் கொங்கை சுவைத்து
(பாசுரம் பெரிய. திருமொ. 6: 5: 6/1493)
பல் எலாம் உறத்தோன்றும் பகுவாயான் (கம்ப. சூர்ப். 138)
→ பதலை

## பகூத்துவம்: → நிறை

## பகை நரம்பு:

*இசையில் பொருந்தாத சுரங்கள். நின்ற நிரம்பிலிருந்து அதைவிடுத்து, ஆறாவதாகவும் மூன்றாவதாகவும் வரும் சுரங்கள், பகைச்சுரங் களாகும்.*

நின்றநரம்பிற்கு ஆறும் மூன்றும் சென்று பெற நிற்பது கூடமாகும்; கூடமெனினும் பகை எனினும் ஒக்கும் (சிலப். 8: 33 – 4 அடியார்க்.)
**இணை, கிளை, பகை, நட்பு** என்றிந் நான்கின் (சிலப். 8: 33)
வெம்பகை நரம்பின் என்கைச் செலுத்தியது (மணிமேக. 4: 70)
நின்ற நரம்பான 'ச'வுக்கு 'ம²' மற்றும் 'க¹' பகை நரம்புகள்

| ச | ரி¹ | ரி² | க¹ | க² | ம¹ | ம² | ப | த¹ | த² | நி¹ | நி² |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | | | | | |
| | | | ↑ | | | ↑ | | | | | |

சம² ; சக¹ – பகை நரம்புகள்
நின்ற நரம்பு – ச – 0
ஆறாம் நரம்பு – ம² – 6
மூன்றாம் நரம்பு – க¹ – 3
← கருணாமிர்த. 663; ப. இ. இ. 178

## பகை மேளம்: விவாதி மேளம்

*சட்சுருதிரிசபம், சுத்தகாந்தாரம், சட்சுருதிதைவதம், சுத்தநிசாதம் என்ற நான்கு பகைச்சுரங்களில் ஒன்று அல்லது இரண்டு சுரங்கள் வரும் மேளம் விவாதி மேளமாகும். இரண்டு பகைச்சுரங்களுக்கு மேல் ஒரு பகை மேளத்தில் வருவதில்லை.*
*(மேளம் - ஏழு சுரப்பண்; விவாதி - பகை)*

*பகை மேளங்கள் மொத்தம் 40.*
*ஒரு பகைச்சுரம் வரும் மேளம்- 8: மேள எண். 1, 6, 31, 36, 37, 42, 67, 72*
*இரண்டு பகைச்சுரம் வரும் மேளம்- 32 மேள எண். 2-5, 7, 12, 13, 18, 19, 24, 25, 30, 32-35, 38-41, 43, 48, 49, 54, 55, 60, 61, 66, 68-71*

↑ தமிழிசை முறையில் தான சுரங்கள் 12 மட்டுமே. மேலே கூறப்பட்ட பகைச்சுரங்கள் நான்கு பற்றிக் குறிப்புகள் இல்லை. எனவே, பகைச்சுரங்கள் வரும் 40 பகை மேளங்கள் குறித்து தமிழிசையில் வழக்கு இல்லை.

## பங்கதாளம்: = பங்கம்

தாளவகையுள் ஒன்று. (பரத தாள. 4 உரை.)

## பங்கம்: → பங்கதாளம்

## பங்களா: → பங்காளம்

## பங்காளா: → பங்காளம்

## பங்காளம்: = பங்காளா, பங்க்ளா

*பண்களில் ஒன்று* (பரத இராக. 56)

## பச்சை:

= போர்வை(covering, as of the body of a yal)
*போர்வைத்தோல்; யாழ்ப்பத்தர் மேல் மூடிய தோல். பத்தரின் வாயைப் போர்த்தி விசித்துத் (சுற்றிலும் ஒழுங்குற இழுத்துத்) தைக்கப்பட்ட தோல்.* (skin, hide)

மின்னேர் பச்சை ஞிமிற்றுக்குரல் சீறியாழ் (புறம். 308)
விளக்கு அழல் உருவின் விசி உறு பச்சை (பொருந. 5)
புகழ் வினைப் பொலிந்த பச்சை (சிறுபாண். 226)
வள்ளிதழ் மாமலர்... உள்ளகம் புரையும் ஊட்டுறுபச்சை
(பெரும்பாண். 5 – 6)
புதுவது போர்த்த பொன்போல் பச்சை (மலைபடு. 29)
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை (பொருந. 8)
உருக்கியன்ன பொருத்துறு போர்வை (பெரும்பாண். 9)
வடகம்... சருமம்... பச்சை... பத்தும் தோலே (திவா. 527)

## பசாசக்கை: → பசாசம்

## பசாசம்: = பசாசக்கை

*ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று.*

பசாசமாவது – பெருவிரலும் சுட்டுவிரலுமன்றி ஒழிந்த மூன்று விரலும் தம்மிற் பொலிந்து நிற்பதெனக் கொள்க.
(சிலப். 3: 18 அடியார்க்.)

## பசை:

*முழவின் மார்ச்சனைப் பண்டம். முழவின் தோல் மீது*

பூசப்படும் சோற்றுப்பசை. (Paste applied to a drum head)

← செ. ப. அ. 2402, → மார்ச்சனை, மண்

## பஞ்சக்கருவி:

= பஞ்சமா சத்தக்கருவி, பஞ்சசத்தக்கருவி

தோல், துளை, நரம்பு, கஞ்சம், மிடறு என்ற ஐந்து இசைக்கருவிகளும் பஞ்சக் கருவிகளாகும்.

**தோல், தொளை, நரம்பு, கஞ்சம், பாடல் பல்பேத பஞ்ச சத்தமாகும்.**

**(பிங்க. 394)**

## பஞ்ச கவுத்துவம்:

*பண், தாளத்துடன் மற்றும் ஆடல் பாடலுடன் நிகழ்த்தப் படும் ஐந்து கவுத்துவங்கள்.*

| கவுத்துவப் பெயர் | பண் | தாளம் |
|---|---|---|
| (1) விநாயகர் கவுத்துவம் | நாட்டை | ஆதி |
| (2) முருக கவுத்துவம் | கௌளை | நான்மை ஒருமை (சதுசுரஏகம்) |
| (3) சம்பந்தர் கவுத்துவம் | ஆரபி | சர்வலகு |
| (4) சண்டிகேசுவரர் கவுத்துவம் | ஸ்ரீராகம் | நான்மை ஒருமை |
| (5) நடராச கவுத்துவம் | வராளி | சர்வலகு |

↑ தியாகராசரின் கனராக பஞ்சரத்தினக் கீர்த்தனையானது மேற்கண்ட ஐந்து பண்களில் அமைந்துள்ளது. பழங்காலந்தொட்டே திருக்கோயில் இசை மரபில் பாடப்பட்ட பஞ்ச கவுத்துவப் பண்களிலே தியாகராசரின் பஞ்சரத்தினம் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. மேற்கண்ட ஐந்து பண்களுக்கு பஞ்சரத்தினம் என்று பெயர்.

## பஞ்சக தாளம்: = பஞ்சதாளம்

*(1) உற்கடிதம்*
*(2) சச்சபுடம்*
*(3) சட்பிதா புத்திரிகம்*
*(4) சாசபுடம்*
*(5) சம்பதி (வேட்டம்)*

**கைச்சதினா முறை விதித்த வா. முற்கடித**
**கச்சபுட சாசபுட சட்பிதா புத்தரிக**
**கண்டச் சம்பதிப் பேதமாம்பல**
**கஞ்சப் பஞ்சகத் தாள மாம்படி**

**(திருவருப்பு 6 பூதவேதாள. 63–66)**

**சச்சபுட முதலான பஞ்சதாளமும்... (சிலப். 3: 16 அரும்.)**

← பரத. தாள. 2

## பஞ்ச சத்தக் கருவி: → பஞ்சக்கருவி

## பஞ்ச தாளம்: → பஞ்சகதாளம்

## பஞ்சபுராணம் பாடுதல்:

*சிவன் கோயில்களில் தெய்வத் திருமேனிக்குப் பலவகைப் பூசைகள் முடிந்த பின்னர் தேவாரம், திருவாசம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் ஆகிய ஐந்து நூல்களிலிருந்து ஒவ்வொரு பாடலை ஓதுவார்கள் பாடுவது பஞ்ச புராணம் பாடுதல். இதற்கு குழல், வீணை, மிருதங்கம் போன்ற பக்க வாத்தியங்களை வைத்துக் கொள்வதுண்டு.*

← த. க. க. 236/II

## பஞ்சமசுருதி: → இளி ஒத்து

## பஞ்சமம்:

**1.** இசையின் ஏழு சுரங்களுள் ஐந்தாவது சுரம்; இளி - 'ப'

**2.** = மருதம், மருதயாழ், கோடிப்பாலை, இளிப்பண், நேர்பஞ்சமம் (கரகரப்பிரியா)

*தலைமைப்பாலையான செம்பாலை (அரிகாம் போதி) யின் இளி (பஞ்சமம்) சுரத்தைக் குரல் (சட்சம்) எனக் கொண்டு பண் பெயர்க்கக் கிடைக்கும் பாலை இது. எனவே, பஞ்சம சுரத்தால் கிடைப்பதால் பண் பஞ்சமம் என்ற பெயர்,*

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| கோடிப்பாலை | ம$^1$ | | ப | | த$^2$ | நி$^1$ | | ச | | ரி$^2$ | க$^1$ | |

**இளிப்பண் என்பது இளி குரலாகிய கோடிப்பாலை.**

**(த. க. க. 90/II)**

**சீருற்ற அகிற்புகை யாழ் நரம்பு பஞ்சமம் தண் பசும் சாந்தணைந்து**

**(பாசுரம். 3651)**

**பஞ்சமம் சிவனும் இன்னிசை... (கம்ப. யுத்த. 817)**

**பஞ்சமம் பாடியாடும் தெள்ளியார் கள்ளம் தீர்ப்பால் (தேவா. 4: 29: 3)**

**பஞ்சமம் முல்லை தன் வாடை யாலோ (பாசுரம்.)**

தேவா. 3 ஆம் திருமுறை பதிகம் 56 - 66, 7ஆம் திருமுறை - பதிகம் 97- 100 முதலிய பதிகங்கள் இப்பண்ணில் அடைவு செய்யப்பட்டுள்ளன.

**சொல் இரண்டாக்கி மிகு தூங்கிசை நேர் பஞ்சமத்திற்கு**

**(திருமுறைகண்ட புராண. 38)**

→ அகப்படுநரம்பு

## பஞ்ச மகாஓசை: → ஐம்முகமுகவு

## பஞ்ச மகாசத்தம்: → ஐம்முகமுகவு

## பஞ்சமாசத்தக்கருவி: → பஞ்சக்கருவி

## பஞ்ச மாசத்தம்:

ஐவகைப்பறை.

*செண்டை, திமிலை, சேகண்டி, கைத்தாளம், காளம் என்றும் தத்தளி, மத்தளி, கரடிகை, தாளம், காகளம் என்றும் இருவிதமாகச்*

சொல்லும் ஐவகைப்பறை. (TAS.V.172)

← செ. ப. அ. பிற். 345

## பஞ்சமாந்தியம்: → இளிமுடிவுப்பண்

## பஞ்சமி:

மத்திய கிரமத்தைச் சேர்ந்த சாதி (பாலை; மேளம்)
(பரத. நாட். சாஸ். பக். 389)

↑ இது பண் பஞ்சமம் ஆகலாம்.

→ பஞ்சமம்

## பஞ்சமுக வாத்தியம்: → ஐம்முகமுழவு

## பஞ்சமேளம்:

சங்கு, சாலர், தவில், மத்தளம், பம்பை என்ற ஐவகை வாத்தியங்கள்.

## பஞ்சரத்தினம்:

1. இசைப்பாடல்கள் ஐந்து வெவ்வேறு பண்ணிலும், தாளத்திலும் அமைந்த தொகுதி.
எ-டு:- தியாகராசரது 'பஞ்சரத்தினக் கீர்த்தனம்'
2. → பஞ்ச கவுத்துவம்

## பஞ்சரம்: செருந்திமரம்

பஞ்சரம் செருந்தி (சூடா. 11 :1)

↑ செருந்தி என்பது ஒரு பண்ணின் பெயர்(மத்தியமாவதி)

## பஞ்சலோகக்கருவி: → ஐம்பொன் கருவி

## பஞ்சாரி: = உருவகம்

கதகளி ஆட்டத்தில் இசைக்கப்படும் ஒரு தாளம் (ரூபகம்)

## பஞ்சுரம்:

= பழம்பஞ்சுரம், பழஞ்சுரம், பாலை, பாலையாழ், அரும்பாலை, மருவின்பாலை.
பண் சங்கராபரணம்

வேங்கை கொய்யுனர் பஞ்சுரம் விளிப்பினும் ஆரிடை செல்வோர்.
(ஐங். 311: 1)

பஞ்சுரம் பழுநிய பண்முறை நிற்ப (பெருங். 1: 52: 89)

பஞ்சுர ஓசையில் பை எனப் பயிரும் (பெருங்.3: 1: 161)

பஞ்சுரம்பாடி வண்டுயாழ் முரலும்... (தேவா. 3: 104: 4)

அணிமலர் அமுதம் மாந்தித் தேன் பஞ்சுரம் பயிற்று...
(தேவா. 3: 14: 3)

உள்ளங்கவர்ந்தார்க்கிடம் போலும் பஞ்சுரம் பாடி..(தேவா. 3: 79: 4)

வேறு வகை மூன்றாக மிகுந்த பழம்பஞ்சுரத்துக்கு
(திருமுறைகண்ட புராணம். 41)

பஞ்சுரம் பாடி ஆடுவார். (தேவா. 3915)

பஞ்சுரமாம் பழையதிறம் கிழமை கொள்ள
(பெரியபு. திருஞான. 1010)

பஞ்சுரம் பழம்பஞ்சுரமாகும்மே (பிங்க. 1391)

இப்பண்ணில் அமைந்த தேவாரப் பதிகங்கள்:-

3 ஆம் திருமுறை - 100 - 117 - சம்பந்தர்
4 ஆம் திருமுறை - 14 - 15 -அப்பர்
7 ஆம் திருமுறை - 476 - 53 - சுந்தரர்

↑ சுரம் என்று பெயர் பெறுவதால் இது பாலை நிலத்திற்குரியது என்பது அறியற்பாலது. பண் + சுரம் > பஞ்சுரம் ஆகலாம்.
(பண்சுரம் - சுரப்பண். அதாவது பாலைநிலப்பண்)

## பட்டடை:

1. பட்டறையிலுள்ள அடிமணை, அடைகுறடு, உலைக்கல், அடைகல் (Anvil).

நோன்குறட்டன்ன ஊன்சாய் மார்பின் (மதுரைக். 762)

குறடு பட்டடை மரமுமாம் (மேலது நச்சர்.)

சீரிடங்காணில் எறிதற்குப் பட்டடை (குறள். 821)

ஊனமர் குறடு போல (சீவக. 2281)

உலைக்கல் அன்ன பாறை ஏறி (குறுந். 12: 2)

உலைக்கல் அன்ன வல்லாளன்னே... (புறம். 170: 17)

அடைகுறட்டின் பெயர் பட்டடையாகும். (பிங்க. 1634)

பட்டடை அடை குறடு (திவா. 1278)

2. இளி (ப) என்ற சுரம், அகப்படு நரம்பு

வண்ணப்பட்டடை யாழ்மேல்வைத்து (சிலப். 3: 63)

பட்டடை என்றது நரம்புகளில் இளிக்கும் பெயர்; என்னை எல்லாப் பண்ணிற்கும் அடிமணையாதலின் (மேலது. அரும்)

ஞெள்ளலில் குனித்த இரு மாத்திரைக்குப் பட்டடை எடுக்க...
(கல்ல.ா. 99: 16 – 17)

பட்டடை எடுத்துப் பாலையில் கொளுவி (கல்லா. 99: 13)

குரல் ஒலியுடன் இளியின் ஒலி இணைந்து ஒன்று படுவதால் பட்டடை (பட்டு+அடை)

3. ஒருவகை யாழ் மீட்டு ; எண் வகை இசைக் கரணத்துள் ஒன்று.

ஏருடைப்பட்டடை.... எட்டு வகையின் இசைக்கரணத்து...
(சிலப். 7: (1): 14)

## பட்டம்: பறை வகையுள் ஒன்று (அ. நி.)

## பட்டாபிசேகதரு:

நாடகத்தில் முடி சூட்டுவிழா நடக்கும் போது பாடப்படும் பாடல்.

## பட்டு:

1. பட்டுக்கள்; இருந்தேத்தும் மாகதர் (சிலப். 5: 48அரும்.)

2. கட்டியம்

மன்னர் மற்றும் பெரியோர்களின் வருகையின் போது வாழ்த்திக் கூறுவது.

← செ. ப. அ. 2427

## படகம்: தோற்கருவி வகையுள் ஒன்று.

பேரிகைபடகம்... (சிலப். 3: 27 அடியார்க்.)

அன்னம் படகத்து அளவு (பஞ்ச. 107)
ஒரு விரல் தெரித்தும் ஐவிரல் குவித்தும்
பெருவாய் ஒரு முகப் படகம் பெருக்க (கல்லா. 8: 13 – 14)
இதனை முழக்குவோர் ஒற்றைவிரலால் தெரித்தும் ஐந்து விரல்களையும் கூட்டிப் புடைத்தும் முழக்குவர்... (மேலது. உரை.)
பணவம், திண்டிமம், ஆனகம், படகம், (திவா. 1241 & பிங்க 1511)
– படகம் ஒன்றும், சேகண்டிகை ஒன்றும்
(தெ. இ. க. 13: 3 த. க. சொ. 388)
– படகம் குளிறு மத்தளங்களும்
(தெ. இ. க. 7: 863, த. க. சொ. 197)
→ பதலை

## பட கோட்டிப் பாடல்: → ஏலப்பாட்டு

## படர்க்கைப் பரவல்:
*தாம் வாழ்த்தும் பொருளைப் படர்க்கையிடத்து வைத்துப் பராவுதல்.*
சிலம்பு, ஆய்ச். குரவையுள். 'மூவுலகும் ஈரடியான்' முதலிய மூன்று பாடல்களும் படர்க்கைப் பரவல் (சிலப். 17: (37) அடியார்க்.)
*(பரவல் - தொழுதல், போற்றுதல்)*
← *த. க. க. 244/III*

## படமஞ்சரி: *பண்களில் ஒன்று* (பரத. இராக. 56)

## படர (படா): *செல்லாத*
இவ்விடத்துத் தார நரம்பின் அந்தரக்கோலைத் தாரமென்றது... "தன்னமும் தாரமும் தனிவழிப்படர" என்னும் சூத்திரத்தாலென்க. (சிலப். 3: 72 – 8 அரும்.)
படா என்பது அடியார்க். கொண்ட பாடம்... (மேலது)
படர என்பது அரும். கொண்ட பாடம் (சிலப். 8: 35)

## படலிகை: *கைம்மணி*
கிளையொடு படலிகை கிளையொடு கிளர்தர (சூளா. 936: 2)
படலிகை என்பது... கைம்மணியும் (பிங்க. 3754)
படலிகை, பீர்க்கு, வட்டம், பரந்தகைமணி (சூடா. 11: 28)

## படலை: = பதலை
*வாய் அகன்ற பறை* (broad headed drum)
படலையே படர்தல், மாலை, பதலையே (சூடா. 11: 27)

## படவம்: → பதலை

## படாமுரசு:
*பெரிய முரசு;*
ஓயாது ஒலிக்கும் முரசு. (ம. த. பே. 108/II)
படாமுரசு ஆர்ப்ப (சீவக. 1687)

## படிதம்: = படுதம்
*கூத்து*
நடமே, நாடகம்... படிதம்... கூத்தெனப்பகர்வர் (பிங்க. 1444)
கடுவன் இருங்கழைப்படிதம் பயிற்றும் என்ப. (யா.வி. பக். 90)
பாடல் இசை கொள்கருவி படுதம் பலவும் பயில்வார்.
(தேவா. 528: 3)

## படிமத்தான்: → வேலன்

## படிமத்தாள்: → தேவராட்டி

## படிம தாளம்:
*நவதாளத்துள் ஒன்று*
சேமதாளம்... படிமதாளம்... நவதாளத்தின் நாமம் ஆகும்
(திவா. 2437)

## படு:
1. *மிக, நன்று, ஆழமான, பொருந்திய*
எடு:– படுபாதாளம், படுமலைப்பாலை; மலைபடுகடாம்.
*(படு - மிகுதிப் பொருள்உணர்த்தும் உரிச்சொல்)*
*படுமலைப்பாலை - மலைபடுபாலை - மலைக்கு (குறிஞ்சி நிலத்துக்கு)ப் பொருந்தியது; மலையில் ஒலிப்பது.*
கல்லுறுத்து இயற்றிய வல் உவர்ப் படுவில் (அகம். 79: 3)
2. *மருதயாழ்த் திறத்துள் ஒன்று.*
பெரு, நவிர், படு... மருதயாழ்த்திறனே (சூடா. 9: 34)
3. *ஒலிக்கின்ற*
பண்கனிந்து இனிய பாடல் படு நரம்பு இளகி (சீவக. 1398)
படுநரம்பு – ஒலிக்கின்ற யாழ் நரம்பு... (மேலது. அடிக்.)

## படுகண்:
*தோல் வாத்தியங்களில் ஒலி எழுப்பப்படுகின்ற பகுதி.*
படுகண் இமிழ் கொளை (பரிபா. 16: 12)
*(படுகண் - தாளம் படும் இடம்)*

## படுகண் முழவு: *மார்ச்சனை இட்ட முழவு*
படுகண் முழவின்... இடுமண் முழவின் இசை (சீவக. 2172)

## படுஞமன்: → பருமணன்

## படுத்தல்:
1. *இசைத்தொழில் (கரணம்)களுள் ஒன்று; தாழ்த்தி ஒலித்தல்* (Grace accent, to prononunce in a low pitch)
*கிரியைகள் எட்டாவன:-*
எடுத்தல் படுத்தல்... என இவை (சிலப். 3: 26 அடியார்க்.)
எடுத்தல், படுத்தல், நலிதல்... (வீர. சந்திப். 4)
2. *பறை அறைதல்*
*துடிபடுத்து* (பு.வெ. 1: 3)
←*தெ. க. க. ப. 91*

## படுதம்: → படிதம்

## படுமலை:

= படுமலைப்பாலை, குறிஞ்சி, குறிஞ்சியாழ், யாமம், யாமயாழ், கவ்வாணம், கொல்லி, கொல்லிக் கவ்வாணம்

*தலைமைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி) யின் துத்தம் (ரி$^{2}$) குரலாகப் பண் பெயர்க்கக் கிடைக்கும் பாலை.*

*'ரி$^{2}$' குரலாக (ச)*

↓

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
| படுமலைப்பாலை | நி$^{1}$ | | ச | | ரி$^{2}$ | க$^{1}$ | | ம$^{1}$ | | ப | த$^{1}$ | |

செம்பாலை (அரிகாம்போதி) – சரி$^{2}$க$^{2}$ம$^{1}$பத$^{2}$நி$^{1}$

படுமலைப்பாலை (நடபைரவி) – சரி$^{2}$க$^{1}$ம$^{1}$பத$^{1}$நி$^{1}$

*(ரி$^{2}$- துத்தம்; ச - குரல்)*

*நடபைரவி என்ற பெரும்பண்; ஏழ்பெரும் பாலைகளுள் ஒன்று.*

பாணர் படுமலை பண்ணிய ஏழாலின் (குறுந். 323: 2)
படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு (நற். 139: 4)
படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ் (புறம். 135: 7)
படுமலை செவ்வழி பகர் அரும்பாலை என (சிலப். 3: 84)
படுமலை என்பது பகரிற் கவ்வாணம் (பிங்க. 1392)
துத்தம் குரலா கிற் படுமலைப் பாலை (பிங்க. 1404)
பாலை படுமலை பண்ணி (பு. வெ. பொருள். 52)
கொடிச்சி, பெருவரை மருங்கில் குறிஞ்சிபாட (அகம். 102: 6)
நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சிபாடி (மலைபடு. 359)
உருகெழு மரபின் குறிஞ்சிபாடி (நற். 255)
வில்யாழ் இசைக்கும் விரல் எறி குறிஞ்சி (பெரும்பாண். 182)
குறிஞ்சி பரதவர் பாட (பொருந. 218)
குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின் (சிலப். 24: 18)
அம்தீம் குறிஞ்சி அகவன் மகளிர் (சிலப். 28: 35)
யாம நல்யாழ் நாப்பண் நின்ற (மதுரைக். 584)
நல்யாழ் யாமம் (நற். 335: 9 – 10)
யாம யாழ் மழலையாழ் (கம்ப. நாடவிட்ட. 34)
... செம்பாலை, படுமலைப்பாலை... எனப்பட்ட ஏழுபாலையினையும் (சிலப். 3: 70 – 71 அடியார்க்.)
துத்தம் குரலாயது படுமலைப்பாலை (சிலப். 17: (13) அடியார்க்.)

*படுமலை > மலைபடு - மலைக்குப் பொருந்திய*
*படு - பொருந்திய*

← *த. க. க. 25/*IV; → படு

## படைத்தம்பூர்:

*போர்ப்பறை வகையுள் ஒன்று* (Kettle drum)

## படைத்துக் கோள் பெயர்:

*படைத்துக் கொள் பெயர் - படைத்துக் கொள்கின்ற பெயர், புனை பெயர், இடுகுறிப்பெயர்.*

*கூத்தில் நடிகர்களுக்கு இட்டு வழங்கும் பெயர்* (assumed name)

இடைமுது மகளிர்க்குப் படைத்துக்கோள் பெயரிடுவாள் (சிலப். 17: 6–7)

படைத்துக்கோள் பெயரிடுவாள் – இனி ஆடுதற்கு இட்ட இடுகுறிப்பெயர் கூறுவாள் (மேலது. அடியார்க்.)

↑ கோள் – ஓரைப் (இராசி) பெயரை இட்டு என்பதும் ஆகலாம்.

← *செ. ப. அ. 2446*

## படைப்புவரி:

*இசைப்பாட்டு வகையுள் ஒன்று; யாப்பாலும், பொருளாலும் புதியனவாகப் படைக்கப்பட்ட இசைப்பாடல்.*

இனி வரியாவது:– முகமுடை வரி, முகமில் வரி, படைப்பு வரி, என மூன்று வகைப்படும்... படைப்பு வரியாவது – எல்லா உறுப்பும் ஒன்றானும் பலவானும் வெள்ளையானும், ஆசிரியமானும் கொச்சகம் பெற்றும் பெறாதும் வேறு வேறாகி... வருவது (சிலப். 7: (4) அரும்.)

புத்தம் புதிதாகப்படைத்துக்
கொண்டவகையே – படைப்புவரி (பஞ்ச. பக். 304)

## படையணி:

*தீப்பந்தம் வைத்துக் கொண்டு ஆடும் ஆட்டம்*

← *செ. ப. அ. 2447*

## படையுள் படுவோன்:

*காளம், சின்னம் ஊதுவோன்*

படையுள் படுவோன் பண்மொழி கூற (சிலப். 8: 13)
படையுள் படுவோன் – காளம் ஊதி (மேலது. அரும்.)
சின்னம் ஊதி (மேலது. அடியார்க்.)

## படை வாத்தியம்:

*போருக்குப் போகும் போது வழங்கும் இசைப் பாட்டு)* (Martial music)

← *செ. ப. அ. 2448*

## பண்:

1. = வண்ணம், நிறம் (இராகம்)

*குறிப்பிட்ட (தேர்ந்த) சுரங்களை ஒலிக்கும் போது உருவாகும் இனிய ஒலி* (Tamil melody, mode, scale)

"சரிகமபதநி யென்று ஏழு எழுத்தால் தானம்
வரி பரந்த கண்ணினாய் வைத்துத் – தெரிவரிய
ஏழிசையும் தோன்றும் இவற்றுள்ளே பண் பிறக்கும்
சூழ் முதலாம் சுத்தத் துளை" (சிலப். 3: 26 அடியார்க். மேற்.)

"பாவோடு அணைதல் இசை என்றார் பண் என்றார்
மேவார் பெருந்தானம் எட்டானும் – பாவாய்
எடுத்தல் முதலா இரு நான்கும் பண்ணிப்
படுத்தமையால் பண் என்று பார்" (மேலது.)

*இவ்வாறு பண்ணப்படுவதால் பண்; ஆகுபெயர்.*
*பண் - செய்யப்பட்ட*

... பண் அமை நெடுந்தேர்... (அகம். 234: 8)

பாலை, திறம் என்று அனைத்து வகைப் பண்களையும் குறிக்கும் பொதுச்சொல்.

"பண் என்றது நரப்படைவால் நிறம் தோன்றப் பண்ணப்பட்டா நின்ற பண்ணும், பண்ணியல் திறமும், திறமும், திறத்திறமும் ஆகியது..." (சிலப். 3: 46 அரும்.)

2. *நிலத்தின் கருப்பொருளில் ஒன்று.*
தெய்வம். . . யாழின் பகுதி (தொ. அகத். 18)

3. *பெரும்பண்*
= யாழ், பாலை, தாய்ப்பண் (மேளம், மேளகர்த்தா, கர்த்தா ராகம், அராகம், சம்பூர்ண இராகம், ஜனகராகம்) (Heptatonic scale, Generative)
*ஏறு நிரலிலும் இறங்கு நிரலிலும் வரிசையாக ஏழு சுரங்கள் சரிகமபதநி என்ற நிரல் மாறாது வரும் பண், பெரும்பண் ஆகும். தமிழிசைப் பெரும்பண்கள் (தாய்) 32யும் இம்முறையில் அமைந்தவை. → பக். 474-75*
*எடு:- செம்பாலை - ஏறுநிரல் - ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^1$ ச்*
*இறங்குநிரல் - ச் நி$^1$ த$^2$ ப ம$^1$ க$^2$ ரி$^2$ ச*
நிறைந்த நரம்பு நிகழும் பண் எனல் (பிங்க. 1425)
*(நிறைந்த நரம்பு, நிறை நரம்பு - ஏழு சுரம்)*
நிறை நரம்பிற்றே பண் எனவாகும் (திவா. 1873 புது.)

4. *ஒத்து, சுதி (சுருதி)*
பண்யாழ் மறப்ப (புறம். 65: 1)
பண்ணமை முழவும் பதலையும் பிறவும் (பரிபா. 41)
பண்ணமை முழவு – ஒத்துக்கூட்டப்பட்ட (சுருதி) முழவு
பண் அமை சீறியாழ் (பொருந. 109)
பறை நன்று பண்ணமை யாழின் (நான்மணி. 13)
பண் அமையா யாழின் கீழ்ப்பாடல் பெரிது இன்னா
(இன்னா. 40: 22)
அதிர்விலாச் சீர்முழாப் பண்ணமைப்பான் போன்ற
(களவழி. 40: 20: 3)
பண்ணமை யாழ் இசை கூடப் பெரும்பாணர் பாடிய பின்
(பெரியபு. திருஞான. 137)
பரவையாழ்குல பண்ணமை மென்முழா (சீவக. 530)
விண்ணதிர் இமிழ் இசை கடுப்ப பண் அமைத்து
திண்வார் விசித்த முழவொடு ஆகுளி (மலைபடு. 2–3)
"இடக்கண் இளியா வலக்கண் குரலா நடப்பது தோலியல் கருவியாகும்" என்பதனால் பண்ணமைத் தென்றார்
(சீவக. 675, 2596 நச்சர் மேற்.)

5. *இசை*
*-பண்ணமர் கோஇல் (தெ. இ. க. 14· 45 , த. க. சொ. 391)*
*சோலைவயல் தொறும் கரும்பினங்கள் பண்பாட*
(Ec,1Oct.83; *த. க. சொ. 393)*
வயிரிய மாக்கள் பண் அமைத்து... (பதிற். 29: 8)
பாட்டின் பெயரும்... நாட்டிய பண்ணும் பண் என நவில்வர்
(பிங்க. 3767)
*(நாட்டியபண்- இசை.)*

6. *இசைப்பாட்டு*
பாட்டின் பெயரும்... நாட்டிய பண்ணும், பண் என நவில்வர்
(பிங்க. 3767)
*(பாட்டின் பெயர் = இசைப்பாட்டு)*
பண் என்ப பாட்டும் பண்ணும் (சூடா. 11: 11)
பாணி... பண்... பாண்... இசைப்பாட்டு ஆகும். (திவா. 1866)

7. *ஒலி, ஓசை*
பண்ணமை சிலம்பு பகர்தல் வேண்டி (சிலப். பதிகம். 18)

8. கூத்து வகை (ச. அ.)

9. *நரம்பு, தந்தி*
தொட்டு எழீஇப் பண் எறிந்தாள் (சீவக. 647: 4)
பண்ணை எழுப்பி நரம்பைத் தெறித்தாள் (நச்சர்)
பண் – பண்ணை உடைய நரம்பு ; ஆகுபெயர்
(மேலது உவேசா. அடிக்.)

10. *இயை, சேர், செய்*
*புல் - ஒன்றுகைக் கருத்து வேர்*
*புல் - பல் - பள் - பண்*
*ஒப்பு:- பண்+ ண்+ ஐ > பண்ணை - ஆயம் (கூட்டம், ஒன்று கூடுகை)*
*←பண்டைய பதலையும் பழைய முழவும். கட்டுரை ப. அருளி; த. வ. பக். 90 - 91; இ. து. த. சொ. பக். 21 - 22*

## பண் அமைத்தல்:

*ஒரு பாடலுக்கு பண், தாளம் முதலியன அமைத்தல்; இசைப்படுத்துதல்*
விண்ணதிர் இமிழ் இசை கடுப்பப் பண் அமைத்து (மலைபடு. 2)
பல இயற்பாக்களுடனே நிறத்தை இசைத்தலால் இசை என்று பெயர். (சிலப். 3: 26 அடியார்க்.)
(நிறம் – பண்)

## பண் ஆளத்தி:

*= இராக ஆலாபனை, பண்செலவு, இராக சஞ்சாரம். பண் விரிவாக்கம். பண்களை விரிவாக இசைக்கும் முறை. ஒரு பண்ணினை முதன்மையாக எடுத்துக் கொண்டு பல்வேறு முறைகளில் அதை விரிவாக்கம் செய்தல்* (Prolongation of a tune, Elaborisation, Improvisation of a melody, Extempore)
நிறத்தை இசைத்தலால் இசை என்று பெயராம்.
(சிலப். 3: 26 அடியார்க்.)
(நிறம் – பண்)
"குன்றாக்குறில் ஐந்தும், கோடா நெடில் ஐந்தும்,
நின்றார்ந்த மந்நகரம் தவ்வொடு – நன்றாக,
நீளத்தால் ஏழு நிதானத்தால் நின்று இயங்க,
ஆளத்தி யாம் என்றறி" (மேலது.)
பண் ஆளத்தி பண்ணையே கருதி வைக்கப்படும் (மேலது.)
↑ பண் ஆளத்தியில், தானம், எடுப்பு (பல்லவி), கற்பனைச்சுரம், நிரவல் பாடுதலும் அடங்கும்.

## பண் ஆளத்தி இலக்கணம்:

*பண்ணினை விரிவாக்கம் செய்யும் போது அறியப்பட வேண்டிய இசை நெறிமுறை. அவையாவன:-*
1. *பண்ணின் ஏறுநிரல், இறங்குநிரல்*
2. *உயிர்ச்சுரம் - சீவசுரம்*
3. *முடிவுசுரம் - நியாசசுரம் (நின்று பாடும் சுரமும் முடிவுச் சுரமும்* - (Both staying and ending note, cadence)
4. *பண் இனிமைச் செயல்பாடு - இராக இரஞ்சகப் பிரயோகம்.*
5. *பண்ணின் சிறப்புப் போக்கு (செலவு) விசேச சஞ்சாரம்*
6. *உள்ளோசை - கமகம்*
7. *சுவை - இரசம்*

8. பண்பாடும் காலம்
9. பண்ணிற்கான எடுப்புச்சுரங்கள்- கிரக சுரங்கள் (clef)
10. பண் வகை அறிவு - பெரும்பண், சிறுபண், பிறழ்ச் சிப்பண் (வக்ரம்), இடைப்பிறவரல்பண் (பாசாங்கம்) ஒரூஉப்பண்(வர்ஜராகம்) முதலியன பற்றிய அறிவு.
11. பண்ணின் தான அளவு - (scale register)
12. குறை நிறைச் சுரங்கள் (அல்பத்துவம், பகுத்துவம்)

பண் இலக்கணம் பதினொன்று :- முதல், முறைமை, முடிவு, நிறை, குறை, கிழமை, வலிவு, மெலிவு, சமன், வரையறை, நீர்மை

← சிலப். 3: 41-2 அரும். 3: 66 அடியார்க்.

## பண் சாயல் கோவை:

= பண் வண்ணக்கோவை, பண்நிறக்கோவை, (இராகச்சாயா சுரம்)

ஒரு பண்ணிற்குரிய ஒலி வண்ணத்தைச் (சாயல், வடிவம்) சிறப்பாய்க் குறித்துக் காட்டும் கோவை.

எடு:- ஆரபிப் பண்ணின் – ரி, த

## பண்செலவு: → பண் ஆளத்தி

## பண்சுவை:

பண்கள் தரும் எண் வகைச் சுவைகள்

1. இரக்கம் – ஆகிரி, கண்டாரவம், நீலாம்பரி, பேகடை, புன்னாகவராளி, சக்கரவாகம், ரேவதி, சிவரஞ்சனி, அம்சானந்தி, தோடி, இந்தளம், படமஞ்சரி
2. அவலம் – வராளி, சீராகம்
3. மகிழ்ச்சி – தன்யாசி, சாவேரி, பூபாளம்
4. வீரம் – நாட்டை, அடாணா, காம்போதி, ஆபேரி
5. நகை – வசந்தா
6. அச்சம் – மாளவி
7. வெகுளி – பைரவி
8. வியப்பு – பங்காளம்

## பண்டர்:

பாடுகின்றபழமையான பாடு வகுப்பார் (Bards); பாட்டுப் பாடும் வகுப்பைச் சேர்ந்தோர்; பாணர்.

பண்டரும் ஒவரும் பாடற்கீழ் மக்கள் (திவா. 214)

பண்டர் குழுக்களும் குலை குலைந்திட (திருவிளை. விறகு. 48)

↑ கோவிலில் பாட்டுப்பாடும் 'பண்டாரம்' என்ற சொல் இதனின்றும் வந்தது ஆகலாம்.

ஒப்பு:- பண்டாரப்பாட்டு – நாட்டார் பாடல் (மக்கள் வழக்கு)

## பண் நரம்பு: → விரல் உளர் நரம்பு

## பண்டார மேளம்:

அரசு ஆணைகளைத் தெரிவிக்கும் பறை

(Drum beaten in proclaiming govt. notification)

பண்டாரம் - அரசாங்கம்

← செ ப. அ. 2450

## பண்டிதன்: வரிக்கூத்து வகையுள் ஒன்று.

சிந்து... பண்டிதன்... கோத்தவரிக் கூத்தின் குலம்...

(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## பண்ணத்தி: நாட்டார் பாடல்; உரையும் பாட்டும் போலச் செய்யப்படும் ஒரு வகைப் பனுவல்.

பாட்டிடைக் கலந்த பொருளவாகிப்
பாட்டின் இயல பண்ணத்திய்யே (தொ.செய். 178)

(பொருள் - பண்)

பண்ணைத் தோற்றுவித்தலால் பண்ணத்தி என்றார்... இசை நூலின் பாவினம் (மேலது இளம்.)

"இஃது எழுதும் பயிற்சியில்லாத புற உறுப்புப் பொருள்களைப் பண்ணத்தி என்ப என்பது; அவையாவன நாடகச் செய்யுளாகிய பாட்டும், மடையும், வஞ்சிப்பாட்டு, மோதிரப்பாட்டு, கடகண்டும் முதலாயின ..." (மேலது. பேரா.)

"எழுத்துப் பயிற்சியில்லாது பாட்டும் உரையும் போல அமைந்த சமுதாயப் பாடல்களாகிய நாடோடிப் பாடல்களையே இங்கு பண்ணத்தி என்ற பெயரால் பேரா. குறிப்பிட்டுள்ளார் என்பது தெளிவு... (சி. யா. ப. 102)

... தமிழ் யாப்பும் சங்க காலத்தில் பாவாயிருந்து பிற்காலத்தில் பாவினமாகத் திரிந்தது" – ஜி. தேவநேசன் ( ஞா. தேவநேயப் பாவாணர்) 'பாவினம்' (செந்த.செல்வி. சிலம்பு. 12 பரல் 1 பக்.11)

"...தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள பண்ணத்தி நாட்டுப்புறப்பாடல் வகையினைச் சேர்ந்தது என்னும் முடிவுக்கு வரலாம்" (சி. கா. இ. பக். 21)

## பண்ணமை முழவு:

ஒத்து (சுருதி) சேர்க்கப்பட்ட முழவு.

பண்ணமை முழவின் கண்ணெறி அறிந்து (சிலப். 3: 61)

... கடம்பறுத்து இயற்றிய பண்ணமை முழவு... (அகம். 127: 3 – 5)

பண்ணமை முரசின் கண் அதிர்ந்தன்ன (அகம். 347: 3 – 5)

## பண்ணல்:

பட்டடை பண்ணல். யாழ்த் தொழில் எட்டனுள் ஒன்று.

பண்ணல், பரிவட்டனை, ஆராய்தல், தைவரல் (சிலப். 7: 5)

... இளி வழி கேட்டும் இணைவழி ஆராய்ந்து இணை கொள முடிப்பது வினைப்படும் மரபில் பண்ணல் ஆகும். (சிலப். 7: 5)

பண்ணல் : பாடநினைத்த பண்ணுக்கு இணை, கிளை, பகை, நட்பான நரம்புகள் பெயரும்தன்மை மாத்திரை யறிந்து வீக்குதல் (சீவக. 657. நச்சர்)

பண்ணிய பண்ணல்... வைப்பு (பஞ்ச. 11)

## பண்ணவர்:

1. கடவுளின் பொதுப்பெயர் (ஒலி - நாத வடிவாக இருப்பவன் இறைவன்).

ஓசை ஒலி எலாம் ஆனாய் நீயே (தேவா. 6623)

பண்ணவர்... என்பவும் கடவுளர் பொதுப்பெயர் (திவா. 29)

2. பாணர்

மதங்கர், சூதர், பண்ணவர், பாணர் ஆமே (சூடா. 2:31)

## பண்ணவன்:

1. கடவுள் (சிலப். 10: 188 அடியார்க்.)
பைந்துழாய் மவுலிப் பண்ணவன் உவப்ப (சிதம்பர செய்யுள் கோவை. 68)
பண்ணவன் – அருகன் பேராகும்... (சூடா. 1: 2 – 5)
2. *பாணன்* (Bard, Lyrist)

## பண்ணறை: *இசை ஞான மற்றவன்*

பண்ணறை அடிமையின்கண் (திருவாலவா. 54: 35)

## பண்ணி:

= ஒத்து, கேள்வி, சுதி (சுருதி), பண், வீக்கம்.
பாலை ஈரேழு கோத்த பண்ணி அம் கருவிவீக்கி (பெரியபு. திருநீல. யாழ். 2)
பண்ணி அதிர்ப்பின் பாடல் அதிர்ந்து விடும் (நான். மணிக். 19)
யாழின் கண் வீக்கம் கெடுமாயின் பாடலும் கலங்கும் (மேலது உரை.)
பண்ணியாழ் எனமுரலும் (தேவா. 2: 91: 3 / *2455*)

## பண்ணியம்: *இசைக்கருவி*

குயிலுவர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ (மணி. 7: 123)

## பண்ணியல்: = சாடவம்; பண்ணியல்திறம்

*இசையின் ஏழு சுரங்களில் வரிசையாக ஏறு நிரலிலும், இறங்கு நிரலிலும் ஆறு சுரங்கள் கொண்ட பண்* (Hexatonic).
எடு:– சீரஞ்சனி
பண்ணியல் கதியே (பெரியபு. சம்பந்த. 93)
பண்ணியல் பாணி நுண்ணிசை ஓர்வார் (பெருங். 111: 44: 17–18)
... நரப்படைவால்... பண்ணியல் திறமும் (சிலப். 3: 46 உரை.)
... பண்ணியல்திறம்... சாடவம்... என வடமொழிப் பெயரா லும் (சிலப். 13: 106 அடியார்க்.)
பண்ணியல் யானை மேலோன் பதுமுகன் பரவைத்தானை (சீவக. 747)

## பண்ணியல் திறம்: → பண்ணியல்

## பண் - பண்ணியல்:

= பாலை பண்ணியல் (சம்பூரண சாடவம்)(7 + 6 சுரங்கள்)
*ஏறுநிரலில் ஏழு சுரமாகவும் இறங்கு நிரலில் 6 சுரமாகவும் வரும் பண்.*
எடு:– பைரவம் (பைரவி)

## பண்ணியல் - பண்:

= சாடவ சம்பூரணம் (6 + 7 சுரங்கள்)
*ஏறுநிரலில் ஆறு சுரமாகவும் இறங்கு நிரலில் 7 சுரமாகவும் வரும் பண்.*
எடு: – தக்கேசி (காம்போதி)
ஏறுநிரல் – ச ரி² க² ம¹ ப த² (பூர்ணகாம்போதி)
இறங்கு நிரல் – நி¹ த² ப ம¹ க² ரி² ச (செம்பாலை – அரிகாம்போதி)

## பண்ணியல் - திறம்:

= சாடவ ஔடவம் (6 + 5 சுரங்கள்)
*ஏறு நிரலில் ஆறு சுரமாகவும், இறங்கு நிரலில் ஐந்து சுரமாகவும் வரும் பண்.*
எடு:– பகுதாரி
ஏறு நிரல் – ச க² ம¹ ப த² நி¹
இறங்கு நிரல் – நி¹ ப ம¹ க² ச

## பண்ணியல் - திறத்திறம்:

= சாடவ சதுர்த்தம் (6 + 4 சுரங்கள்)
*ஏறுநிரலில் ஆறுசுரமாகவும் இறங்குநிரலில் நான்கு சுரமாகவும் வரும் பண்.*

## பண்ணியல் திறம்:

= சாடவ ஔடவம் (6 + 5 சுரங்கள்)
*ஏறுநிரலில் ஆறுசுரமாகவும், இறங்கு நிரலில் ஐந்து சுரமாகவும் வரும் பண்.*
எடு:– நாட்டக்குறிஞ்சி
ஏறுநிரல் – ச ரி² க² ம¹ த² நி¹ – 6 சுரம்
இறங்கு நிரல் – நி¹ த² ம¹ க² ச – 5 சுரம்

## பண்ணியன் மடந்தையர்:

*இசையறிவார்*
பண்ணியன் மடந்தையர் பயங்கெழு வீதி (சிலப். 22: 139)
பண்ணியன் மடந்தையர் – இசையறிவார் (மேலது அரும்.)

## பண்ணீர்மை:

*பண்ணின் அழகு, சுவை(இராகபாவம்), அழகியல். பண்ணின் பதினோரு பாகுபாட்டில் ஒன்று.*
இசைப்புலவன் ஆளத்தி வைத்த பண்ணீர்மையை (சிலப். 3: 41 – 2 அரும்.)
*நீர்மை = அழகு*
மெய்நீர்மை தோற்றாயே (திருவாய்மொழி. 2: 1: 6)

## பண்ணு: *பண்*

பாங்கினில் பாடியோர் பண்ணுப் பெயர்த்தாள் (சிலப். 7: (47)
*பண்ணு - பண்ணை* (*மேலது அரும்*)
*பண் > பண்ணு*
*ஒப்பு: கல் - கல்லு; நெல் - நெல்லு; ஒற்றெழுத்தின் முடிப்பொலியை நீக்க, எளிதாக்கும்* (easifying) *உகரம் சேர்த்து ஒலித்தல்.*
பரிபாடல் 2–12 ஆகிய பாடல்களின் பண் – பண்ணுப் பாலையாழ்
பையுள் உறுப்பின் பண்ணுப் பெயர்த்தாங்கு (பதிற். 65:15)
கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப (நெடுநல். 70)

## பண்ணுக்கு அடைத்தபாட்டு:

*மெட்டுக்குப் பாட்டு*
அப்பண்ணுக்கு அடைத்த பாட்டின் (சிலப். 8: 43 – 4 அரும்.)

*பாடலுக்கு ஏற்ற பண் உரு (மெட்டு) வை முதலில் உருவாக்கிக் கொண்டு பின் பாடலை அப்பண் உருவுக்கு அமைத்தல்... அல்லது ஏற்கனவே பழக்கத்தில் உள்ள நன்கறிந்த பாடலின் பண் உருவை புதிய பாடலுக்கு அமைத்தல்.*

← *த. க. க. 249*/III , → மெட்டுக்குப் பாட்டு

## பண்ணுப் பெயர்த்தல்:

= பாலைபண்ணல், பாலை பெயர்த்தல், மாறு முதல் பண்ணல், குரல் திரிபு, பாலைத்திரிபு (கிரகபேதம், கிரகசுரபேதம், சுருதிபேதம்) (shift of tonic)

*பண் பெயர்த்தல். ஒரு பண்ணின் ஏனைய சுரத்தைக் கொண்டு புதிய பண் உருவாக்குதல்.*

"பாங்கினில் யாடியோர் பண்ணுப் பெயர்த்தாள் (சிலப். 7: (47)

பையுள் உறுப்பில் பண்ணுப் பெயர்த்து (பதிற். 65: 15)

பாலைப்பண்கள் பலவற்றையும் ஒரோ வொன்றாகப் பெயர்த்து வாசிக்குமாறு (மேலது உரை.)

... நல்லியாழ்ப் பண்ணும் பெயர்த்தன்ன காவும் பள்ளியும் (மலைபடு. 450 – 51)

கணை குரல்கடுப்பப் பண்ணுப் பெயர்த்து (மதுரைக். 559)

கூடுகொள் இன்னியம் குரல் குரலாக,
நூல் நெறி மரபில் பண்ணி (சிறுபாண். 229 – 30)

விரல்கவர் பேரியாழ் பாலை பண்ணி (பதிற். 57: 8)

மாறு முதல் பண்ணியபின் (பெரியபு. ஆனாய. 25)

குரல் குரலாக வருமுறைப்பாலையில்
துத்தம் குரலா (சிலப். 28 : 33 – 34)

குரல் குரலாகப் பண்ணி (சீவக. 723)

கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப (நெடுநல். 70)

பண்ணியாழ் நரம்பில் பண்ணுமுறை நிறுப்போர். (மணி. 19:81)

இதுகுல முதல் பாலைத்திரிபு (சிலப். 13: 109 அடியார்க்.)

*(பண்ணு - பண்)* → *பண்ணு*

## பண்ணும் கிளையும்:

*பெரும் பண்களும் (மேளகர்த்தா) அவற்றில் கிளைத்த திற (கிளை)ப் பண்களும்*

பண்ணும் கிளையும்... (சிலப். 14: 166)

கிளை – பண்ணின் திறமுமாம்... (மேலது. அரும்)

## பண்ணும் பாடலும்:

*அகவல், வெண்பா முதலிய பாடல்கள் சில குறிப்பிட்ட பண்ணில் வழி வழியாகப் பாடப்பட்டு வருகின்றன.*

*அவையாவன:*

(1) அகவல் – விளரிப்பாலை (தோடி)
(2) வெண்பா – அரும்பாலை (சங்கராபரணம்)
(3) வஞ்சி – பந்துவராளி (காமவர்த்தினி)
(4) கலிப்பா – பயிரவி
(5) தாழிசை – விளரிப்பாலை (தோடி)
(6) விருத்தம் – மேற்செம்பாலை (கல்யாணி); தக்கேசி (காம்போதி) குறிஞ்சிப் பாணி (மத்தியமாவதி)
(7) உலா – வியாழக்குறிஞ்சி (சௌராஷ்டிரம்)
(8) பிள்ளைத் தமிழ் – கேதாரம்
(9) பரணி – கண்டாரவம்

## பண்ணுமுறை: → பண்ணுப் பெயர்த்தல்

## பண்ணுமை:

*இசையின் இனிமை* (Quality of melody)

பண்ணுமை நிறீஇயோர் பாணிக் கீதம் (பெருங். மகத. 14: 245)

## பண்ணை:

1. *மகளிர் விளையாட்டு. ஓரை*

பன்நெறிப்பண்ணை (கல்லா. 28: 32)

ஒண்ணுதல் அரிவை பண்ணை பாய்ந்தென (ஐங். 73: 2)

பண்ணைபாய்வோள் (ஐங். 74: 4)

ஓரை, பண்ணை... மகளிர் விளையாட்டு (திவா. 1561)

ஓரை, பண்ணை... மகளிர் விளையாட்டு (பிங்க. 950)

கெடவரல், பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு (தொ. சொ. 313)

2. *இசை, கூத்து, ஆடல்*

*மகளிர் குழுவாகக் கூடிப்பாடி ஆடுதல்*

பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும் (தொ.மெய். 1)

3. *ஆயம், கூட்டம், குழு*

ஒப்பு: பண்ணையார், பண்ணைமாடு

ஓரையும், பண்ணையும், ஆயமும், குழுவும் கூறுவர் மாதோ மக்கள் கூட்டம் (திவா. 341)

ஆயமும், மகளிர் விளையாடல் தொழிலும்... பண்ணை என்று ஆகும்... (திவா. 1910)

சபையும், பண்ணையும்... ஆடவர் கூட்ட மென்றாகும் (பிங்க. 948)

ஓரையும், பண்ணையும், ஆயமும், குழுவும்... தெரிவையர் கூட்டம் (பிங்க. 949)

4. *மருதநிலப் பெயர்; பணை*

*பண்படுத்தப்பட்ட நிலம். எனவே பண்ணை, பணை*

படினமே... பணை... பண்ணை... (சூடா. 531)

மருத நிலமும்.. மகளிர் விளையாட்டும், கூட்டமும்.. பண்ணை (பிங்க. 3770)

5. *பண், பண்இசை* (melody)

வண்ணவண்டு இமிர்குரல் பண்ணை போன்றனவே (பரிபா. 14: 4)

*குறிப்பிட்ட சுரக்கூட்டத்தால் பண்ணப்படுவது பண்.*

"பண் என்னும் வினைச்சொல்லினின்றும், திருந்த அல்லது இனிதாய்ச் செய்யப்பெற்றது என்னும் பொருளில் 'பண்ணை' என்னும் நிலப்பெயரும், 'பண்' என்னும் இசைத்தமிழ் அமைப்பின் பெயரும் தோன்றியுள்ளன." (தே. நே. 71/10)

## பண்தாள மாலை: = இராகதாளமாலிகை

*பல பண்களிலும் பல தாளங்களிலும் அமைந்துள்ள பாடல். (மாலிகை - மாலை)*

எடு:– இராமசாமி தீட்சிதரின் 108 இராக தாள மாலிகை.

← *த. க. க. 203*/I

## பண் நரம்பு: = விரல் உளர் நரம்பு, பண்மொழி நரம்பு.

*யாழில் உந்தி வழியாகப் பத்தரிலிருந்து மாடகம்*

செல்லும் நாலு மீட்டு நரம்புகள்.
ஆய்தினை அரிசி அவையல் அன்ன, வேய்வை போகிய
விரல் உளர் நரம்பின் தொடையல் (பொருந. 16–17)
பண்மொழி நரம்பில் திவவுயாழ் மிழற்றி (சிலப். 5: 222)
(மொழிதல் - வாசித்தல்)
பண்ணைச் சொல்லுகின்ற யாழ் நரம்பு போல (மேலது. அரும்.)

## பண் திறத்திறம்:

= சம்பூரண சதுர்த்தம் (7 + 4 சுரம்)
ஏறுநிரலில் 7 சுரமாகவும் இறங்கு நிரலில் 4 சுரமாகவும் வரும் பண்.

## பண் - திறம்:

= சம்பூரண ஔடவம் (7 + 5 சுரம்)
ஏறுநிரலில் 7 சுரமாகவும் இறங்கு நிரலில் 5 சுரமாகவும் வரும் பண்.
எடு:– கருடத்தொனி
ஏறு நிரல் – ச ரி² க² ம¹ ப த² நி² – அரும்பாலை (சங்கராபரணம்) – 7சுரம்
இறங்குநிரல் – ரி² க² ப த² ச் – முல்லைப்பாணி (மோகனம்) – 5சுரம்

## பண்நாடி:

பண்குழல் (chanter, melody pipe, tune pipe)
மகுடி வாத்தியத்தில் ஒத்துநாடி (Drone pipe) மற்றும் பண் நாடி (tune pipe) என்ற இரண்டு குழல்கள் அமைந்துள்ளன. பண்பாடுவதற்கான பண்குழல் என்பது பண் நாடியாகும்.
→ ஒத்து நாடி

## பண்நிறக்கோவை: → பண்சாயல் கோவை

## பண்பகுப்பு:

பண் என்பது பெரும்பண் (பாலை, மேளகர்த்தா, Generative, ஜனகம்) என்றும் திறப்பண் (Derivative, ஜன்யம்) என்றும் இரு பெரும் பிரிவுகளையுடையது. திறப்பண் என்பது மேலும் பண்ணியல் (6 சுரம் - சாடவம்) திறம் (5 சுரம் - ஔடவம்) திறத்திறம் ( 4 சுரம் - சதுர்த்தம்) எனும் மூவகையாகவும் பகுக்கப்படும். மேலும் பிறழ்சிப்பண் (வக்ர இராகம்), இடைப் பிறவரல்பண் (பாஷாங்கம்), ஒருஉப்பண் (வர்ஜராகம்) என்ற பகுப்புகளும் உண்டு.
← த. வ. 92

## பண்பெயரிடல்:

பண்களுக்கான பெயர்கள் பல்வேறு முறைகளில் இடப்பட்டிருக்கின்றன.
(1) மலர்களின் பெயரால் – குறிஞ்சி, நெய்தல்
(2) நிலத்தால் – (திணை) – முல்லை, முல்லையாழ் (அரிகாம்போதி)
(3) தெய்வப் பெயரால் – மாயோன் பாணி
(4) வினையால் – காமரம் (சுத்ததன்யாசி)
(5) சிறுபொழுதால் – யாமயாழ் (நடபைரவி)
– வைகரைப்பாணி (சிவரஞ்சனி)
(6) பெரும்பொழுதால் – வேனல்பாணி
(வேனல் - வேனில்)

## பண்மகள்:

விறலி (songstress, dancer)
பண்மகளும்... தேர்ப்பவனி உண்டென்றாள் (திருவாரூர். 319)
← செ. ப. அ. 2455

## பண்மாறு:

முடித்தல்; முதல் நடையிலும், வார நடையிலும் தேசிக்கூத்தை ஆடி முடித்தல். முடிக்கை – பண்மாறு. (சிலப். 3: 153 அடியார்க்.)

## பண்மொழி நரம்பு: → பண் நரம்பு

## பண் வகை:

சுரங்கள் பெறும் அளவில் பண்கள் நால் வகைப்படும்.

| நிரல் | தமிழ்ப் பெயர் | ஆங்கிலப் பெயர் | வடமொழிப் பெயர் | ஏறுநிரல் சுரங்கள் | இறங்குநிரல் சுரங்கள் |
|---|---|---|---|---|---|
| 1 | பண் | Heptatonic | சம்பூரணம் | 7 | 7 |
| 2 | பண்ணியல் | Hexatonic | சாடவம் | 6 | 6 |
| 3 | திறம் | Pentatonic | ஔடவம் | 5 | 5 |
| 4 | திறத்திறம் | Quadratonic | சதுர்த்தம் | 4 | 4 |

## பண் வண்ணக் கோவை: →பண்சாயல் கோவை

## பண்வரவு:

பண்ணிற்கு உரிமையான சுரங்கள்; நரப்படைவு
எ–டு:– மேற்செம்பாலை (கல்யாணி) க்கு
உரிமையான சுரங்கள் :– ச ரி² க² ம² ப த² நி²
இப்பண்ணின் அயல்
(அன்னிய) சுரங்கள் :– ரி¹ க¹ ம¹ த¹ நி¹
வந்தது வளர்த்தென்றது... பாடுகின்ற பண் வரவுகளுக்குச் சுரம் குறைவுபடாமல் நிறுத்தி என்க. (சிலப். 3:65 உரை)
→ இசை வரவு

## பணவம்: → திண்டி

## பணி: தோற்கருவி

தொழிலும், தொழில்படு கருவியும்... பணியே (பிங்க. 3764)
பணியே தோற்கருவி... ஆகுமே (சூடா. 11: 13)

## பணிக்கர்: கூத்துப் பயிற்சியாளர், ஆடல் ஆசிரியர்

(dancing master), படைக்கலம் பயிற்றுவோர். பணி - வினைத்திறமை; பணிக்கர் - வினைத்திறமையுடையோர். பணி - பணிக்கம் (தொழில் திறமை) -
பண்புடையானொடு பணிக்கன் தோன்றி (திருவாலவா. 35: 1)

## பணிக்கொட்டு:

இறைத்திருமேனிக்குப் பூ அணிவித்து அழகு செய்யும் போது சுத்தமத்தளம் வாசிப்பது பணிக் கொட்டு ஆகும்

← செ. ப. அ. 2458

## பணி மூப்பிமார்:

தேவரடியார், பதியிலார் (temple dancing girls)

மூப்பிமாரில் ராச ராசீச் சுரத்துப் பதியிலாரில்

(தெ. இ. க. 5. 297)

## பணிலம்: சங்கு (conch)

பணிலமே, சலஞ்சலம், சங்கு... (சூடா. 11: 13)
வெண்மணிப்பணிலம் கொழித்து (திருவாசகம் 6: 47)
சலஞ்சலமும் ஒளிசேர் சங்கும் பணிலம் (பிங்க. 3765)

## பணு: → உருப்படி

## பணை:

1. மருதநிலம், தண்பணை
தண்பணை தழீஇய தளரா இருக்கை... (சிறுபாண். 78)
2. மருதநிலப்பறை, முரசு, பேரிகை.
படைப்பரி சாரந் தந்து போகத் தண்பணை முழக்கு...
(தெ. இ. க. 3 206 த. க. சொ. 396)
பணைகெழு வேந்தரை இறந்தும் (புறம். 119: 6)
பணைமருள் நெடுந்தாள் (புறம். 371: 19)
வியன் பணை உருமென அதிர்பட்டு (பதிற். 39: 5)
பணை சார்தரும் இடக்கரம் (திருவாலவா. 32: 14)
பணையே... பழனமும்... முரசும் (திவா. 2004)
முரசின்பெயரு... மருதநிலமும், அந்நிலப்பறையும், பணை எனல் (பிங்க. 3767)
உழவர் களிதூங்க முழவு பணை முரல (பரிபா. 7)
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும் (சிலப். 15: 214)
பணை – முரசென்பாருமுளர் (மேலது அரும்.)
பணை பரந்து ஆர்த்தன பம்பைவெம்பின (சீவக. 2222)
வென்றெறி முழங்கு பணை செய்த வெல் போர் (பதிற். 11:14)

← செ. ப. அ. 2460

## பணையவர்:

முரசு அறைவோர்
பணையவர் உறைபதி அதுகுறுகி (சீவக. 602)

## பத்ததி: பாணி(Style),முறை(procedure), கரானா (இந்துத்தானி); இசை அல்லது ஆடலில் முதன்மை ஆசிரியரின் வழிமுறை.

## பத்தர்:

= பத்தல், அகளம், குடம், அகடு, பானை, வயிறு.
யாழின் வயிற்றுப் பகுதி. ஒலியைக் கூட்டவும் எதிரொலிக்கவுமான ஒரு உறுப்பு.
பத்தரும் கோடும் ஆணியும் நரம்பு மென்று (சிலப். 7 கட்டுரை)
யாழ்ப்பத்தர் புறங்கடுப்ப (புறம். 136: 1)
இன்னிசை நல்யாழ்ப்பத்தரும் (மலைபடு. 381)
சிலம்பு அமை பத்தல் (மலைபடு. 26)
சிலம்பு – எதிரொலிப்பு உடையது. (Resonater)
குளப்பு வழியன்ன கவடுபடு பத்தல் (பொருந. 4)
வயிறு சேர்பு ஒழுகிய வகையமை அகளத்து (சிறுபாண். 224)
↑இன்றைய தம்புரா வாசிப்பு போல் யாழ் நட்டுக்குத் தலாக (செங்குத்து) வைத்துவயிற்றுடன் சேர்த்து அணைத்து வாசிக்கப் பட்டது.
அகடு சேர்பு பொருந்தி (மலைபடு. 33)

→ அகடு

## பத்தல்: → பத்தர், அகடு

## பத்யம்:

1. செய்யுள், விருத்தம், சுலோகம் (வீ. சோ. யாப். 6)
ஒருவகை நாடக இசைஉரு.
எடு:– சத்துவ குணத்தினி லுற்றதிரு வத்சலன்
இது சங்கரதாசு சாமிகளின் பிரகலாதன் சரித்திர நாடகப் பத்யப்பாடல்.கோ. கி. பா. நந். சரித். மற்றும் இசைக்கதைச்சொற்பொழிவு (கதாகாலட்சேபம்) களில் பத்யப்பாடல்கள் காணப்படுகின்றன.
2. தெலுங்கில் வழங்கும் இசைப்பாட்டுவகை. நாட்டியக் கச்சேரியின் இறுதியில் தாளமின்றி இப்பாடலுக்கு அவிநயம் செய்யப்படும். இவ்வகைத் தமிழ்ப்பாடல் 'விருத்தம்' எனவும், வடமொழிப் பாடல், 'சுலோகம்' எனவும் அழைக்கப்படும்.

← செ. ப. அ. 2463; ப. ஆ. இ. 111.

## பதக்கிரமம்:

நடன நடைமுறை (regularity of step in a dance).
பதம் + கிரமம்
பதம் - நடை (step)

## பதகர்ப்பம்: → அறுதி

## பதகர்ப்ப வீழ்ச்சி: → அறுதி

## பதசதி வண்ணம்: = பதசதி வர்ணம்

சதிகள் அமைந்த பத வண்ணம்

## பத சதி வர்ணம்: → பத சதிவண்ணம்

## பதசாரி:

நாட்டியத்திற்குக் காலடி இடும் வகையுள் ஒன்று (A kind of movement of steps).
பதசாரி சாரி கொள்ள (விறலி விடு.)

## பத வண்ணம்:

= பதவர்ணம், சொக்க வர்ணம், சௌக்கவர்ணம், சவுக்கவர்ணம், முதல்கால வண்ணம்,ஆட்டவர்ணம் மெதுவான நடையில் (முதல்காலம்) பாடப்படும் தாளக்கட்டுகள் மிகுதியாக அமையும் நாட்டிய அகப்பாடல். இதன் சுரப்பகுதி ஆடுவதற்கும், சொற்பகுதி அவிநயத்திற்கும் ஏற்றதாக அமைந்திருக்கும். சிட்டைசுரங்கள் உடையது. அனைத்து அங்கங்களும் பாடல் பகுதியும் கொண்டது.

## பதவர்ணம்: → பதவண்ணம்

## பதம்:

பாதம் > < பதம்

பாதத்தொழிலால் தாளத்துக்கு ஆடும் ஆடல் (Ballad).

தாழ்ந்த செலவினையுடைய முதல் நடையில் (விளம்ப காலம்) சுர அசைவுகளுடன் (கமகம்) மிக அழுத்தமாகவும், நிதானமாகவும் பாடப் பெறுவது. பாட்டும் அவிநயமும் உடைய காதற் சுவைமிக்க அகப்பாடல். வீழ்ந்தாடல் வகையது.

மது நுக ரறு பதமுரல (தேவா. 568: 5)

பாமாலை வாய்பாடிக் கைகொட்டிப் பதம் பெயர்த்து

நாமாட வம்மின் காள் தொண்டராய் நமரங்காள்

(திருக்கருவைப்பதிற்றுப் பத்தந்தாதி, அதிவீர ராமபாண்டியன்)

ஒலி கதிர்க்கழனி... தண்பதம் கொண்டு தவிர்ந்த இன்னிசை

(அகம். 374)

தூக்கல் வளையுடன் தொடர்பதம் எறிந்து (கல்லா. 99: 5)

எறி பதத்தான் இடங்காட்ட (புறம். 4)

பதங்கள் ஏழும் (தக்க. 147)

பதம் – வீழ்ந்தாடல் (சிலப். 6: 62 – 3 அரும்.)

சரணம், பதம், கால், அடி, கழல், தாள், பாதம் (திவா. 345)

வரிசையும் ... மொழியும்... பாதமும்... பொழுதும்...

பதம் எனல் (பிங்க. 3772)

↑ அடைவுகள், தாண்டவம், கரணம் முதலிய கலைத்தொழில்களையுடைய நாட்டியத்தில் பாதமே முதலிடம் வகிப்பது.

ஒப்பு:- ஆடவல்லானின் - குஞ்சிதபாதம், தூக்கிய திருவடி, எடுத்த பொற்பாதம்

ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்து நின்று

ஊட்டுவதாகும் நின் ஊன்றிய பதமே (சிதம்பரமும்மணிக்கோவை)

← த. க. க 9/I ; 254/III ; தே. நே. 78/10; ப. ஆ. இ. 108

## பதலை:

= ஒரு கண் மாக்கிணை, ஒரு கண் பகுவாய்ப்பறை, படவம், படகம்

ஒருமுகப்பறை வகையுள் ஒன்று.

நொடிதரு பாணிய பதலையும் பிறவும் (மலைபடு. 11)

பதலைப் பாணிப் பரிசிலர் கோமான் (குறுந். 59: 1)

பண்ணமை முழவும் பதலையும் பிறவும் (பதிற். 41: 3)

நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கி (புறம். 64: 1)

ஒருதலைப் பதலை தூங்க (புறம். 103: 1)

பதலை ஒருகண் பையென இயக்குமின் (புறம். 152: 16)

ஒரு கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி (புறம். 394 : 6 – 7)

பதலை அரியல் பாசிலைப் பருகிய (பெருங். 1: 48: 163)

பெருவாய் ஒரு முகப் படகம் பெருக்க (கல்லா. 8)

பாங்கமை பதலை (கந்தபு. திருப்பர. 9)

↑ பதலை – தபலை – தபேலா

தபலை, திமிலைகள், பூரிகை, பம்பை (திருப்புகழ். 620)

'**பதலை**' என்னும் இவ்வழக்கு, விரை ஒலிப்புத் திரிபு வழக்காகிய '**இடம் பெயரல்**' (Metatheis) நிலையில் '**தபலை**' எனத் திரிபெய்தி..."

(பண்டைய பதலையும் பழைய முழவும் – ப. அருளி. கட்டுரை)

பதலை ஒருகண் பகுவாய்ப்பறையே (பிங்க. 1520)

பகுவாயாம் ஓர்கட்பறை பதலைதானே (சூடா. 7: 40)

'தபலா' அடிவிரிந்து பின்கூம்பி மலைபோல் இருப்பதால் பதலை என்று பெயர் பெற்றது.

பதலை தாழியும் பரந்த வாய்ப்பறையும்... (திவா. 2079)

இறும்பு... பதலை... குன்றே (திவா. 860)

பரந்தவாய் > பாய் > பாயா

↑ பகுவாய்ப்பறை எனப்பட்டதாலும், வடிவத்தை நிகண்டுகள் மாறுபடக் கூறுவதாலும் பதலையானது கூம்பிய 'தபேலா' வும் பரந்த வாய்ப்பறை 'பாயா'வும் ஆகலாம்.

## பதாகம்: → கொடிக்கை

## பதாகை: → கொடிக்கை

## பதாகைக்கை: → கொடிக்கை

## பதாகை முத்திரை:

வணக்கத்தைத் தெரிவிக்கும் கைமுத்திரை வகையுள் ஒன்று.

## பதாந்தம்: → தனிச்சொல்

**பதிகம்:** பத்துப்பத்துப் பாடல்களால் இயன்றது.

எடு:– பதிற்றுப்பத்து, மூத்த திருப்பதிகம், தேவாரப் பதிகம்.

**பதியம்:** பதிகம்; தேவாரம்; பாசுரம்

திருப்பதியம் பாடுவாருள்ளிட்ட. . .

(தெ. இ. க. 3· 43. த. க. சொ. 397)

பன்னு திருப்பாவைப் பல்பதியம்... (திருப்பாவை தனியன்)

## பதியார்:

1. = பதியிலார்

தேவரடியாரில் ஒரு வகையினர்

பதியார் முப்பத்திருவர்க்கும் பஞ்சாசாரியர் உள்ளிட்ட காந்தர்வர்க்கும் (TAMIZ, 18, பக். 151 – 55; த. க. சொ. 397)

2. சிவன் கோவில் பூசாரிகளுள் ஒரு வகையினர்

அகநாழிகையாரும் பதியாரும் பஞ்சாசார்ய்யரும்

(தெ. இ. க. 14· 74 , த. க. சொ. 398)

## பதியிலார்:
= தேவரடியார், மாணிக்கத்தார், தளிச்சேரிப்பெண்டு, நித்தியசுமங்கலி, நட்டுவப்பெண்டிர், சதிர்ப்பெண்டிர், மூப்பிமார்.

*கலைஞர்; கோயிற் பணியாளர், நாடகக் கணிகையர் கோயில் ஆடல் கணிகையர்; கோவில் தாசியர்.*

அறுபத்து நான்கென்று தொகுத்த கலைகளை வல்லவராகிய பதியிலாருடைய இருவகைப்பட்ட வீதிகளும்
(சிலப். 14: 160 – 67 அடியார்க்.)

*மூப்பிமாரில் ராச ராசீச் சுரத்துப் பதியிலாரில்*
(தெ. இ. க. 5. 297)

இவளை நாடகக் கணிகை என்றார்; பதியிலாள் என்பது தோன்ற
(சிலப். பதிகம் அடியார்க்.)

ஆடற் கூத்தியர் – அகக்கூத்தாடும் பதியிலார்.
(சிலப். 5: 50 அடியார்க்.)

பதியிலாரில் குடிக்குற்றப் பட்டாரை (சிலப். 14: 146–7 அடியார்க்.)

உருத்திர கணிகைமாறாம் பதியிலார் குலத்தில் தோன்றி பரவையார் என்னும் நாமம் (பெரியபு. தடுத். 132)

*நாயகரும் ஏறி அருளினால் முற்பாடு திருத்திரை எடுத்தல் பதியிலார் ஆடவும்...* (தெ. இ. க. 8 333. த. க. சொ. 509)

பதி - கோயில்

பதி + இல் + ஆள் – பதியிலாள் – கோவிலுக்கு உரியவள்.

ஒப்பு :– இல் + ஆள் – இல்லாள் – இல்லுக்கு உரியவள்.

## பதினெண் கீழ்க்கணக்கு யாப்பு:
*பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் பெரும்பாலும் நீதி இலக்கியங்களைக் கொண்டதாக உள்ளதாலும், அவை தொடர் கூற்றுத் தேவை இல்லாமையாலும் நீதி ஒப்புதலை உடைய வெண்பா யாப்பில் உள்ளன.*

*18 கீழ்க்கணக்கு வெண்பா வகை.:*

| | |
|---|---|
| குறள் வெண்பா | - 1330 + 1 |
| சிந்தியல் | - 53 |
| நேரிசை வெண்பா | - 1067 |
| இன்னிசை வெண்பா | - 666 |
| பஃறொடை வெண்பா | - 31 |
| குறள்வெண்செந்துறை | - 100 |
| மொத்தம் | - 3248 |

← *த. யா. வ. 611 - 12 (சோ. ந. க.)*

## பதினோராடல்: இவை தெய்வ ஆடல்கள்
பதினோராடலும் பாட்டின் பகுதியும்... (சிலப். 6: 66)

(1) கொடுகொட்டி (கொட்டிச்சேதம்) - சிவனாடல்
(2) பாண்டரங்கம் - சிவனாடல்
(3) அல்லியம் - மாயவனாடல்
(4) மல் - மாயவனாடல்
(5) துடி - முருகனாடல்
(6) குடை - முருகனாடல்
(7) குடம் - மாயவன் ஆடல்
(8) பேடி ஆடல் - மன்மதன்
(9) மரக்கால் - மாயவள் ஆடல்
(10) பாவை - திருமகள் ஆடல்
(11) கடையம் அயிராணி (இந்திராணி) ஆடல்

"கடையமயிராணிமரக் கால் விந்தை கந்தன்
குடை துடி மாலல்லியம் கும்பம், – சுடர் விழியாற்
பட்ட மதன் பேடு திருப்பாவை அரண் பாண்டரங்கம்
கொடியிவை காண்பதினோர் கூத்து"
(சிலப். 3: 14 அடியார்க். மேற்.)

இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும்... அயிராணி மடந்தை ஆடிய கடையமும் (சிலப். 6: 43 – 63)

## பதுமகோசிகக்கை: →தாமரை மொட்டுக்கை

## பதுமகோசிகம்: →தாமரைமொட்டுக்கை

## பதுமம்: → தாமரைக்கை

## பதுமாஞ்சலி: → தாமரைவணக்கக்கை

## பதுமுகம்:
*நாட்டிய இருத்தல் வகையான ஒன்பது திரிதர வில்லனுள் ஒன்று.*

ஒன்பான் இருத்தியுள் தலைக்கண் இருத்தி... (சிலப். 8: 25)

இருத்தல்:– திரிதர வில்லன ஒன்பது வகைப்படும்... அவை: பதுமுகம்... என இவை (சிலப். 8: 23 – 6 அடியார்க்.)

## பதுமையாட்டம்: *பாவைக்கூத்து* (Puppet show)

## பந்தடிப்பாட்டு: →கந்துகவரி

## பந்துவராளி: = காமவர்த்தனி
*பண்களில்ஒன்று*

## பப்பரப்பெண்டு:
*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

சிந்து... பப்பரப்பெண்டு... கோத்தவரிக்கூத்தின் குலம்...
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

பப்பரம் – 18 மொழியுள் ஒன்று; 56 தேசத்துள் ஒன்று.

பப்பரர், யவனர், சோனகர் (கம்ப. மிதிலை. 99)

## பப்பறை:
*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

சிந்து... பப்பறை... கோத்தவரிக் கூத்தின் குலம்...
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## பம்பை:
*பண்டைய நாளிலிருந்து இன்று வரை வழங்கி வரும் இருமுக இரட்டைத் தோற்கருவி.*

கருங்குரல் பம்பை கதநாய் வடுகர் (நற். 212: 5)

பம்பை பம்பின (கம்ப. 1809)

பம்பை தார்முரசம் சங்கம் (கம்ப. 8445)
இன்கண் பம்பை (பெருங். 3: 26: 36)
கருங்கண் பம்பை நெருங்கக் கொட்டி (பெருங் 1: 49: 4)
பைதல் பம்பை இடங்கண் நெருக்கி (பெருங். 1: 36: 159)
நாவாய்ப் பம்பை (நம்பி அகப்பொருள் 24)
பொங்கிய பம்பை வலம்புரி கண்டை முதல் பொற்பார் (சேக்கிழார் புரா. 73)
தழங்குரல் பம்பையில் சாற்றி (சீவக. 40)
பம்பை ஏறங்கோட்பறை முல்லைக்காகும் (சூடா. 7: 41)
பணை பரந்து ஆர்த்தன பம்பை வெம்பின (சீவக. 2222)
செல்வ நூராயிரம் சிலைக்கும் பம்பை (சீவக. 42)
தடாரி பம்பைப்பறை (பிங்க. 1525)

## பயச்சுவை அவிநயம்: = அச்ச அவிநயம்

"அச்ச அவிநயம் ஆயுங்காலை, ஒடுங்கிய உடம்பு, நடுங்கிய நிலையும், மலங்கிய கண்ணும், கலங்கிய ஊனும், கரந்துவரல் உடைமையும், கையெதிர் மறுத்தலும், பரந்த நோக்கமுமிசை பண்பினவே..." (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## பரசு: = பரஸ்

↑ பரிசு என்ற பண்ணின்திரிபாகலாம்.

பரசுதல் என்பது தெய்வங்களை விளித்துப் போற்றிப் பாடுதல். பரவு எனும் வினையடியின் இன்னொரு வடிவம். (ப. த. நா. IV)

ஒப்பு:- தெய்வம் பராஅயது

*பரவு > பரா; புறவு - புறா ; நிலவு - நிலா*

*இசை மூவருள் மூத்தவரான சியாமா சாஸ்திரியின் தமிழ்க் கீர்த்தனையான 'சந்ததமும்என்னைரட்சிப் பாய்' இப்பண்ணில் தொடங்குகின்றது.*

## பரஸ்: → பரசு

## பரண்: → சீருடன் உருட்டல்

## பரணி:

1. *கூத்து* (சது. அக)
2. *சிற்றிலக்கியம்*

## பரத்தை:

*பொதுமகள் - பரம் என்பதை வீடாக உடையவள்*

மாயப்பரத்தை உள்ளிய வழியும் (தொ. பொ. 147)

*பரத்தை ஆடியதால் பரத்தம் > பரதம்*

பரம் + அத்து + ஐ – பரத்தை
ஒப்பு:– மரம் + அத்து + ஐ – மரத்தை

பாட்டும் செய்யுளும் கோத்திடு வீரே
பரத நாட்டியக் கூத்திடுவீரே (பாரதி)

← *நித்திய சுமங்கலி ப. 177*

## பரத நாட்டியம்: → பரதம்

## பரதம்: = சதிர், தாசி ஆட்டம், சின்னமேளம், பரவை, சதிர்க்கச்சேரி, சதிர் மேளம், பரதநாட்டியம்

1. *தமிழர் ஆடற் கலை; கடந்த நூற்றாண்டு வரை தேவதாசியர் ஆடிய சதிரின் இன்றைய வடிவம்.*

பாவமொடு, அராகம், தாளம் இம்மூன்றும்
பகர்ந்திடும் முறையினால் பரதம் (திருவிளை. கால்மாறி. 8)
பரவிய சாந்தியன்றியும் பரதம் விரவிய விநோதம். (சிலப். 6: 54 – 55அடியார்க்.)
நடமே, நாடகம்... தாண்டவம், பரதம்... கூத்தெனப் பகர்வர் (பிங்க. 1444)
நடமே, நாடகம்... பரதம்... கூத்தெனப் படுமே (திவா.1752)
பரதச் சிலம்பு விதமிகு பரத சுரவநிதையர் (திருப்புகழ்)
பண்ணும் பரதமும் கல்வியும் தீஞ்சொல்பனுவலும் (சகலகலா வல்லிமாலை 6)
பரதம் காட்டும் சிதம்பரம் நிதம் பரதம் பயின்று (தில்லைத் திருவாயிரம், வண்ணச். தண்ட)
ரம்பெ ஊர்வசி ரமணிய ரெல்லரு சந்ததிம் பரத நாட்ய கள நடிசி ஆடித ஜொரங்க (தேவர் நாமா: புரந்தரதாசர்)
அண்டர் பிரான்... பரதவிதம்... (பஞ்ச. 146)
பாடல்சால் சிறப்பின் பரதத்து ஓங்கிய (மணி. பதிகம். 22 & 18: 57)
... களிகூர அரிய பரதக் கருவியோரால் பாடி.... (கும்பேசர் குறவஞ்சி. பாபநாச முதலியார்)
நிலைக்கிட... வலைக்கிடை கொண்டாள் என் மனத்தைக் கலைப்பரத (விறலிவிடு. 411)
*.. பரதம் வல்ல பெருமாளென்னுந் திருவாசிகையும் (தெ. இ. க. 8· 69, த. க. சொ. 401 கல்வெட்டு ஆண்டு. கி.பி. 1279)*
தருமப் பரதச் சவுதத்து அடைவே (திருவாலவா. 28:52)

2. *ஒரு நாடகத் தமிழ் நூல்*

"நாடகத்தமிழ் நூலாகிய பரதம் அகத்தியம் முதலாக உள்ள தொன் நூல்களும் இறந்தன" (சிலம்பு. அடியார்க். உரைப்பாயிரம்.)
(நாடகம் – நாட்டியம்)

பரதரின் வடமொழி நூலான நாட்டிய சாஸ்திரம் ஒரு தொகுப்பு நூல் (பரதநாட். சாஸ். IXVIIIஎஸ். என். ஸ்ரீராமதேசிகன்)

பரதரின் நாட்டிய சாஸ்திரம் முதல் நூலல்ல என்றும் வழிநூலாகும் என்றும் தெரிய வருகிறது. (மேலது. பக்.XIX)

## பரதன்:

*கோவலனின் முன் பிறவிப் பெயர். இதுகடல் வணிகத்தோடும் மன்னர் குலத்துடனும் பரதத் துடனும் தொடர்புடையது.*

பரதன் என்னும் பெயரெனக் கோவலன் (சிலப். 23: 154)
பார்த்திபன் தொழில் செய்யும் பரதன் (மணி. 5: 34)

## பரதேசிப்பாடல்:

*இந்த உலகமே (பரம்) தமது தேசமாகச் சுற்றித் திரிபவர்கள் பாடும் பாடல். இவர்கள் பொதுவாக* குதம்பைச் சித்தர், பட்டினத்தார், தாயுமானவர், வள்ளலார் பாடல் களைப் பாடுவர். இசுலாமியப் பாணர் (பக்கீர்) பெரிய கஞ்சிரா (தாயிரா) வாசித்தபடி பாடி வருகின்றனர். (பண்பாட்டு அசைவுகள் 70)

**பரந்த வட்டம்:** = வட்டம், படலிகை

*கைம்மணி* (Gong)

பரந்தவட்டம், கைம்மணி, படலிகை... (திவா. 1224)

படலிகை, பரந்த வட்டம், கைம்மணி, பகர்ந்த பேரே (சூடா. 7: 35)

படலிகை, வட்டம், பகரில் கைம்மணி (பிங்க. 1260)

**பரவை:**

1. *திருமகள் ஆடியது*

கொடுகொட்டி... பரவை செய்யாள் (சூடா. 9: 50)

பரவைக்கிளவி... திருமகள் ஆடலும் (பிங்க. 3788)

பரவை வாரிதி பரப்புப் பங்கய மாதின் கூத்தே (சூடா. 11: 4)

*பதினொரு ஆடல்களுள் திருமகள் ஆடியது பாவை*

பாவை திருமகள் ஆடிற்று... (சிலப். 3: 14. அடியார்க். மேற்.)

*பாவை - பரவை - ஏடுபெயர்த்தலின் தவறும் ஆகலாம்.*

2. *பரந்தாடும் ஆடல், பரத நாட்டியம்*

அணுக்கியார் பரவை நங்கையார்

(திருவாரூர் திருக்கோயில் பக். 421)

*பரவை நாச்சியார் - சுந்தரரின் காதல் மனைவி*

பேர் பரவை (பெரியபு. தடுத்.148)

3. *பேரியாழ்*

பரவையாழ் குழல் பண்ணமை மென்முழா (சீவக. 530)

பரவை – பேரியாழ் (மேலது நச்சர்.)

**பரவையாழ்:** → பெருங்கலம், பரவை

**பரிவட்டணை:**

1. *எண் வகை எழால்களுள் ஒன்று*

*(எழால் - இசைக்கலைத்தொழில்)*

*யாழ் நரம்பை அகவிரலாலும் புறவிரலாலும் தொழில் செய்து தடவிப் பார்த்தல்.*

பண்ணல் பரிவட்டனை ஆராய்தல் தைவரல் (சிலப். 7:5)

பரிவட்டணை இலக்கணந்தானே... வலக்கை இருவிரல்... இடக்கை இருவிரல் (மேலது அரும்.)

பண்ணல், பரிவட்டணை (சீவக. 657 நச்சர்)

2. *தாள நடைச்சொற்கள் தொடர்ந்து வட்டணைக்குள் வந்து முடிவு கொள்வது.*

← த. க. க. *178 & 290/I*

**பயனொடு கேட்டல்:**

*இசையின் பயன் இன்பம் அடைதல் முதலியன. தாளமும் பண்ணும் இனிய இசையை உருவாக்கும். பண் உருவாக்க முறையில் இணை நரம்பு தொடுக்கும் இணை வழி முதன்மையானது. அவ்வாறான இணைவழி இல்லையெனில், கிளைவழி முதலிய பிற வழிகளில் பண் உருவாக்குவதே பயனொடு கேட்டல்.*

... ஏழுபாலையினையும் இணை நரம்பாகத் தொடுத்து நிரம்ப நிறுத்திக் காட்டல்... (சிலப். 3: 70–71 உரை.)

"ஆராய்தல் என்பது அமைவரக்கிளப்பில், குரல் முதலாக இணை வழி கேட்டும், இணையிலா வழிப் பயனொடு கேட்டும்

(சிலப். 7: 5–8 அரும்.)

**பயா:** *தக்கா என்னும் முழவு*

↑ இது தபேலாவுடனான பாயா ஆகலாம்.

← *செ. ப. அ. பிற். 350*

**பயிர்:**

1. *குரல்; விலங்கு மற்றும் பறவையின் குரல்*

குரலது புகலின் பயிராகும்மே (பிங்க. 2406)

பயிர், ஒலி, பயிலே... (சூடா. 11: 4)

பைங்கூழும் புட்குரலும் பயிரெனல் (பிங்க. 3783)

விதந்து... விலங்கொடு புற்குரலும்... பயிரென்றாகும் (திவா. 2128)

2. *இசைத்தல், பாடுதல்*

பண்ணுக்கிளை பயிரும் பண்ணி யாழ் (மணி. 7:46)

பயிர் அருமிடறு வீங்கல் (திருவிளை. விறகு. 29 / 2058)

3. *இசைக்கருவி; வாச்சியம்*

பயிர்கள் ஆர்ப்பெடுக்க... (கம்ப. சம்புமாலி. 22)

4. *ஓசை, ஒலி*

இளிப்பயிர் இமிரும் குறும்பரந் தூம்பொடு (மலைபடு. 7)

ஆம்பல் குழலால் பயிர் பயிர்... (கலித். 108: 62)

பயிர் – ஒலிக்கின்ற (சிலப். 7:11 அரும். அடிக்.)

நாட்டிறை பயிரும் காலை முரசம் (சிலப். 26:52)

5. *ஒத்து, சுருதி*

பயிர்ப் பறச் சிறகால் புல்லி (சீவக. 1624)

பயிர் வண்டின் கிளைபோலப் பன்னரம்பின் மிசைப்பட(சிலப். 7: 11)

இளிப்பயிர் இமிரும் குறும்பரந்த தூம்பொடு (மலைபடு. 7)

*(இளிப்பயிர் - இளி ஒத்து - பஞ்சம சுருதி)*

பயிரிலா நரம்பின் கீதம் (சீவக. 2048)

பண்ணுக்கிளை பயிரும் பண்ணி யாழ்ப் பாணியொடு (சிலப். 22: 141)

பண்ணுக்கிளை பயிரும் பண்யாழ் (மணி. 7: 46)

*கிளை- ஐந்தாம் நரம்பு - உழை ;*

*கிளை பயிரும் - உழை ஒத்து தரும் (மத்திம சுருதி) ;*

*பண்ணு - பண் ; உழை ஒத்தில் (மத்திம சுருதி) அமைந்த பண்*

*பண்யாழ் - ஒத்து (சுருதி) யாழ் - தம்புராவை ஒத்தது.*

6. *இளி - (ப) என்ற சுரம்*

பெடைபயிர் குரலொடு இசைக்கும் (புறம். 370: 8)

(பருந்தின் சேவல் தன்பெடையை அழைக்கும் ஒலி இளியாகும்)

இளிதேர் தீங்குரல் இசைக்கும் அத்தம் (அகம். 33: 7)

*(தேர் மணியின் ஒலி 'இளி' எனும் சுரமாக ஒலித்தது)*

**பயிரவி:**

1. *பண்களில் ஒன்று; கௌசிகம்*

*72 மேளமுறையில் 'நட' எனும் முன் ஒட்டுப் பெற்று நடபயிரவியானது*

... பிலகரி, பயிரவி, காம்போதி என்னப் பண்ணும் திறமும் பிறவும் பண்ணே (திவா. 1894)

கால... பயிரவி... கயிசிகை... (திருப்புகழ் பூதவேதாள வகுப்பு)

↑ இக்காலம் பயிரவி (பைரவி) என்று வேறொரு பண் பெயர் பெற்றுள்ளது.

2. முடக்கொற்றான், உழிஞை, சிறுபூளை(lesser baloon vine)
(செ. ப. அ. 2489)
உழிஞை சிறு பூளை (பிங்க. 2890)
→ உழிஞை

**பயிலல்:** எடுத்தல், ஓசை (High tone)
தெளிறலே... பயிலல்... எடுத்தல் ஓசை (சூடா. 10: 45)

**பயிற்சிப் பாடல்:**
= அப்பியாச கானம்; இலட்சணகீதம்.
*இசைப்பயிற்சிக்கு உரிய இலக்கணப்பாடல்*

**பயின்ற:** தேர்ந்த
*பாடல்பயின்ற நாடக மகளிற்கும்*
*(தெ. இ. க. 7 863, த. க. சொ. 400)*

**பரண்:** → சீருடன் உருட்டல்

**பராரை:** உள்ளோசை (கமகம்) (சது. அக.)
*← செ. ப. அ. 2507*

**பராரைக்கண்பறை:** → பறைக்கட் பராரை

**பராவர்த்திதம்:**
*கூத்து உறுப்பு; சுற்றி வருதல் வகையுள் ஒன்று* (A kind of turning movement)
வருத்தனை நான்காவன: அபவேட்டிதம்.. பராவர்த்திதம் என்ப
(சிலப். 3: 12 அடியார்க்.)
கைவட்டணையாவன: அபவேட்டிதம்...பரிவர்த்திதம் (சீவக. 1257 உரை.)

**பராவிருத்த முகம்:**
முக அவிநயம் பதினான்கனுள் விருப்பமின்மையைக் குறிக்க முகத்தைத் திருப்பும் அவிநயம் (சது. அக.)

**பரிகாசப்பாடல்:** = நலுங்கு
*திருமணநாளில் மணமக்களின் தமக்கையர் மணமக்கள் வீட்டாரைக் கேலி செய்து பாடும் பாடல்.*
*← த. ப. வ. 423 - 4/III*

**பரிகாச முத்திரை:**
*வலக்கைப் பெருவிரல் மூக்கைத்தொட அதன் சிறு விரல் இடக்கைப் பெரு விரலைச் சாண் அளப்பது போலத் தொட அவ்விடக்கைச் சிறுவிரல் நுனியை நாபியில் வைக்கும் முத்திரை வகை.*
*← செ ப. அ. 2509*

**பரிசாயநிலை:** → பைசாசம்

**பரிபாடல்:**
ஒரு வகை இசைப்பாடல். வெண்பாவின் யாப்பாகவும், கலப்புப் பாவாகவும் கொச்சகம், அராகம், சுரிதகம், எருத்து (தரவு) மாகிய நான்கையும் உறுப்பாகப் பெற்றுக் காமப் பொருள் நுதலியும், சொற்சீரடியும் முடுகியலடியும் எய்தி நானூறடி உயர்வையும், இருபத்தைந்தடி இழிவையும் பெற்று வரும் இசைப்பாடல்
(ச. பொ. க. 400/IV)
பரிபாடல்லே... இதுபா என்னும் இயல் நெறியின்றி... உரித்தென மொழிப (தொ. செ. 119)

**பரிமுகமாக்கள்:** = கின்னரர்
*மானிட உடலும் குதிரை முகமும் கொண்ட தேவலோக இசையாளர்கள்.*
பளிக்கு அறைச் சிலபரிமுக மாக்களைப் – பாராய்
(கம்ப. சித்திர. 11)

**பரிவாகித முகம்:**
முகஅவிநயம் பதினான்கனுள் செருக்கால் தலையை ஒருபுறம் சாய்த்துச் சிறிது சுற்றி ஆட்டுகை. (சது. அக.)
*← செ. ப. அ. 2518*

**பரிவாதினி:**
*யாழ் வகையுள் ஒன்று.*
*குண ஸேணப் ரமாணஞ் செய்த வித்யா பரிவாதிநி.*
(IPS 4 - 5; *த. க. சொ. 405.)*
*←பரத. ஒழிபி. 15*

**பருந்தும் நிழலும்:**
*இசையில் பயின்று வரும் சீரிய ஓர் உவமை. வாய்ப்பாட்டும், கருவிஇசையும் இயைந்து செல் லுதல்.*
பருந்து நிழலும் போல் பாட்டும் எழாலும் (சீவக. 730)
பாட்டு... கண்டப்பாடல்; ஏழால் – வீணைப்பாடல்
(மேலது நச்சர். உரை அடிக்.)
பறவை நிழலில்... (பெருங். 3 :14: 276)
பாற்றி யக்கமும் நீழலு மாமெனப்பாட (கந்த. திருக்கல்யாண.1)
... குயிலுவக் கருவிகள் அனைத்தும் பருந்தும் நிழலும் போல ஒன்றாய் நிற்ப என்றவாறு... (சிலப். 3: 143 அரும்.)
பருந்து நிழலு மெனப் பாவும் உரையும்
(சிலப். அடியார்க்கு நல்லார். உரை சிறப். பாயிரம்.)

**பருமணன்:** = படுஞமன்
*வரிக்கூத்து வகையுள் ஒன்று*
சிந்து... பருமணன்... கோத்தவரிக்கூத்தின் குலம்
(சில்ப். 3:13 அடியார்க். மேற்.)

**பவித்திர விரல்:** → அணிவிரல்

### பவுரி:
1. ஒரு பண்.
ஈரிரு பண்ணும்... பவுரி ... பதினாறும் பெரும்பண் (பிங்க. 1380)
2. மண்டலமாய் (வட்டமாய்) ஆடும் கூத்து
பவுரி திருப்பாகையால் நடம் குஞ்சித்தான் (காளத். உலா. 107)
← செ. ப. அ. 2544

### பழங்கண்: ஒலி, ஓசை
... பழங்கணோ, துன்பம், ஓசை... (சூடா. 11: 14)

### பழஞ்சுரம்: → பஞ்சுரம்

### பழந்தக்க ராகம்:
பண்களில் ஒன்று. குறிஞ்சியாழ்த்திறம்.
தேவார ஓதுவார் மரபில் இப்பண் இன்றைய சுத்த சாவேரியாகக் கொள்ளப்படுகின்றது.
நட்டபாடை... பழந்தக்கராகம்... குறிஞ்சியாழ்த் திறமாகக் கூறுவர்... (பிங்க. 1382)

### பழம்பஞ்சுரம்: → பஞ்சுரம்

### பழுநிய: முதிர்ந்த, முற்றுப் பெற்ற
வண்டுபடப் பழுநிய தேன் ஆர் தோற்றத்து (மதுரைக். 475)
நைவளம் பழுநிய நயந் தெரிபாலை... (சிறுபாண். 36)
(நாட்டை முற்றுப் பெற்ற அரும்பாலை சங்கராபரணம்)
நைவளம் (நாட்டை) – ச க$^2$ ம$^1$ ப நி$^2$
பாலை (சங்கராபரணம்) – ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^2$
→ நைவளம்

### பள்: = பள்ளு, பள்ஏசல், பள்ளுப்பாட்டு
1. நாடக இலக்கியம் (இசை நாடகம்) (A dramatic poem dealing with the life of Pallas, Opera)
பள்ளர் வேளாண் பணி செய்யும் போதும், மற்றும் குடியிருப்புப் பகுதிகளில் பாடி ஆடியதும் பள்ளுப் பாடல். இது சிந்து வகையது.
எடு:– முக்கூடற்பள்ளு
'பள்' உகரச் சாரியை பெற்றுப் பள்ளு எனவரும்.
பள்ளு – உழவு (வேளாண்மை); பள்ளர் – உழவர்
அரையர் சேவையில் பள்ளு இடம் பெற்றது. (ஞானாகானம் 223)
பறைச்சேரியில்... பாடச் செய்தான் (கோயிலொழுகு)
பள்ளுப்பாடல் : எடு – பள்ளன் எழுந்து நிலை தரித்தான் – நிறை பள்ளியர் முகம் பார்த்துச் சிரித்தான் (முக். 120)
2. கொற்றவை முதலிய தெய்வங்களுக்குப் பலி கொடுக்கும் காலத்துப் பாடப்படும் பாடல்.
← செ. ப. அ. பிற். 354; த. இ. பே. 133 ,16

### பள்ஏசல்: → பள்

### பள்ளி:= கூத்தப்பள்ளி, கூத்தறாத பள்ளி
நாடக சாலை
கூத்தறாத பள்ளியும் கொற்றமன்ன மங்கையர் (சீவக. 154: 3)
கூத்தப் பள்ளிக் குச்சரக் குடிகையுள் (பெருங். 4: 13: 147)
கொற்றவன் தன்னொடு கூத்தப்பள்ளியுள் (பெருங். 4: 14: 4)
அட்டில், கொட்டகாரம், பண்டசாலை, உரிமை இடம், கூடகாரம், பள்ளியம்பலம், கூத்தப்பள்ளி... (இறைய. 21 உரை.)

### பள்ளி எழுச்சி:
1. துயில் நீங்குகை
2. திருப்பள்ளி எழுச்சி, துயில் எடை.
அரசர் மற்றும் தெய்வங்களைத் துயில் எழுப்பப் பாடப்படும் பாடல்; தெய்வத்தைக் காலையில் எழுந்தருளப் பண்ணும் பூசை.
மூன்று சந்தியும் அர்த்தயாமமும் பள்ளி எழுச்சியுங் கொட்ட கடவார்களாகவும் (தெ. இ. க. 19. 326. த. க. சொ. 411)
எடு:– மாணிடக்கவாசகர் மற்றும் தொண்டரடிப் பொடியாழ் வாரின் திருப்பள்ளியெழுச்சி
உரவு நீர்ப்பரப்பின் ஊர் துயில் எடுப்பி (சிலப். 4: 79)
புறநீர்மை என்னும் திறத்தால் பள்ளி எழுச்சி பாட (மேலது. அடியார்க்.)
சூதர் ஏத்திய துயில் எடைநிலையும் (தொ. புறத். 36)
மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலை போல்
எல்லாம் துயிலோ எடுப்புக... (கலித்.70: 20 – 21)

### பள்ளி எழுச்சி முரசம்:
அரசர் துயில் நீங்கி எழுதலைக் குறிக்கும் முரசு (morning drum)
காலை முரசக்கனை குரல் ஓதையும் (சிலப். 13: 40)
காலை முரசக்கனை குரல் இயம்புமாகலின் (சிலப். 17: 6)

### பள்ளு: → பள்

### பள்ளுப்பாட்டு: → பள்

### பற்பறை: கரடியின் இடிக்குரல்
இடிதரும் உளியமும் இனையாது ஏ கென (சிலப். 13: 32)
இடிப்பு – அதிர்ப்பு; உற்டட்ட டட்டெனப் பற்பறை கொட்டல் (மேலது அடியார்க்.)

### பற்றாசு: = ஆசு
நேரிசை வெண்பாவின் முதல் குறளின் இறுதிச் சீரொடு தனிச்சொல்லைப் பற்றச் செய்யும் (பொருந்தும்) அசை. இந்த அசையே ஆசு எனப்படும்.
← த. இ. பே. 75 - 76,15

## பற்று:

1. தாளம்

ஒற்றுப்புடைமையின் பற்றுவழிச் சேர்த்து (சிலப். 13: 108)

(ஒற்று - ஒத்து - தாளம்)

ஒற்றுறுப்பு - தாளத்தந்தி ; தாளம் மற்றும் ஒத்து (சுருதி) தருகின்ற உறுப்பு.

வாரம் - பற்று - தாளம்

ஒரொற்று வாரம், ஈரொற்று வாரம் (தாளத்தின் முதல் மற்றும் இரண்டாம் நடை);

(யாழின்) ஒற்றுறுப்பு - தாளத்தந்தி

2. ஒத்து (சுருதி), அடிப்படைக்குரல், ஆதாரசுருதி

ஒற்றுறுப்புடைமையின் பற்று வழிச்சேர்த்து (சிலப். 13: 108)

ஒற்றுறுப்பு - ஒத்து (சுருதி)த்தந்தி

பற்று வழிச்சேர்த்து - ஒத்து (சுருதி) வழிச்சேர்த்து

பற்று-துணை;ஒத்துவிலகாதுபாடுவதற்குத் துணையாகத் தொடர்ந்து வருவது.

இது இறக்குவதற்குப் பற்றானான இவன்

(தெ. இ. க. 7 802. த. க. சொ. 413)

3. வாரப்பாடல்

வாரம் பாடும் தோரிய மடந்தையும் (சிலப். 14: 155)

வாரமாவது – பற்று (மேலது அடியார்க்.)

## பற்றுப்பாடுதல்:

1. பின்பாட்டுப் பாடுதல் (to sing accompaniment) இடைப்பாட்டுப் பாடுதல். ஒருவர் பாடியதை மாற்றான் பற்றிப் பிடித்துப் பின்பாடுதல்.

தோரிய மடந்தை வாரம் பாடலும் (சிலப். 6: 19)

தோரிய மடந்தை... பற்றுப்பாடுவாள் (மேலது. அரும்)

தலைப்பாட்டுக் கூத்தியும் இடைப்பாட்டுக் கூத்தியும் (சிலப். 14: 156)

மன்னும் இசை வடிவான மதங்க சூளா மணி யாரும்

பண்ணிய ஏழிசை பற்றிப் பாட (பெரியபு. 6: 1: 278)

(திருஞானசம்பந்தர்பாட, மதங்க சூளாமணியார் பின்பாட்டுப் பாடினார்)

தோரியமடந்தையர் – பற்றுப் பாடுவார் (சீவக. 680 நச்சர்.)

ஒரு பாட்டினை பிற்கூறு சொல்வார் (தொ. மரபு. 107 பேரா.)

↑ பற்றுப்பாடுதல் என்பது முதன்மைப் பாடகருடன் தாளச் சொற்கட்டுகளைப் பாடுவது அல்லது சுரம் பாடுவது அல்லது ஆடலுக்குத் தனித்துப் பாடுவது. இதன் ஒருவகைத் தொடர்ந்த மரபே கொன்னக் கோல் பாடுவது.

2. வாரம் பாடுதல்

→ பற்று.

## பற்றொலி: ஒருவரின் ஒத்து (சுருதி)அளவு

'ச'வின் ஒலியையே பற்றாக(சுதியாக). (பா. கை. ப. 39)

(பற்று = ஒத்து, சுதி)

## பறை:

தோல் கருவிப் பொதுப் பெயர்

← தே. நே. 300/9

தெய்வம், உணா, மா, மரம், புள், பறை (தொல். அகத். 18)

1. முரசு (Drum)

எடுத்து எறி அனந்தல் பறைச்சீர்தூங்க (புறம். 62: 5)

கொட்டும் பறைக் கோடியர் கடும்புடன் வாழ்த்தும் (மதுரைக். 523)

2. ஒரு நாடக இலக்கியம்; இசை நாடகம்.

அவர்பாடின பள்ளும், பறையும் இசையிலே கேட்டருளும்படி (கோயிலொ. 109)

3. வரிக்கூத்துள் ஒன்று.

சிந்து... பறைக்குரும்பு... பறைமை... கோத்தவரிக் கூத்தின் குலம் (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

← த. க. க. 263/III

4. பறவை, வண்டு

பருவத்தேன் நசை இப்பல் பறைத்தொகுதி (குறுந். 175: 1)

கிண்கிணி... வண்டும்... பறையு... அரி எனலாகும் (பிங்க. 3085)

5. சொல்

முரசு, புள்ளிறகு, மொழி இவை பறை எனல் (பிங்க. 3802)

(மொழி – சொல்)

கதையும்... பறையும்... இயம்பலாகும் (பிங்க. 2002)

6. அருள் (Grace)

நாராயணனே நமக்கே பறை தருவான் (திருப்பாவை.1)

அங்கப்பறை கொண்ட வாற்றை (மேலது. 30)

7. இசை

... பறையும்... குயிறலும்... இசையும் இயமும் (பிங்க.2002)

இயம்பல்... சொல்... குயிலல்... பறைதல் (பிங்க. 2009)

## பறைஇசை அருவி:

பறையின் ஓசை போன்றது அருவியின் ஓசை.

பறையிசை அருவிப் பயங்கெழும் ஓதையும் (சிலப். 25: 28)

பறையிசை அருவி முள்ளூர்ப் பொருநன். (புறம். 126: 9)

பறையிசை அருவி நன்னாட்டுப் பொருநன். (புறம். 229: 14)

பறைக்குரல் அருவி (பதிற். 70: 24)

## பறைக்கட் பராரை: = பராரைக் கண்பறை

நிறைக்கோல் துலாத்தர் பறைக்கண் பராரையர் (சிலப். 14: 208)

பரிய அரையையும் இரும்பால் வாய்மட்டாக வட்டமாய்க் கட்டின கண்ணையுமுடைய பறை என்றபடி; பறைக்கட்பராரை... பராரைக்கண்பறை என்க (மேலது அடியார்க்.)

## பறைக் கூத்து: → பறைத் தொம்பம்

## பறண்டை: ஒருவகை இசைக்கருவி

பாடும் பறண்டையும் ஆந்தையும் ஆர்ப்ப... (தேவா. 4: 92: 9)

## பறைத்தொம்பம்: = பறைக்கூத்து

பண்ணைகளில் வேலை செய்யும் பெண்கள், குறிகாரி, தொம்பச்சி முதலிய வகுப்பினர் தமக்கென்று தனியாக மெட்டுக்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் (பாரதி)

(பாரதியார் கட்டுரைகள்-பெண்ணின்பாட்டு)

தொம்பம் - கூத்து

## பறைப்பாரி: இராக்காவலரின் பாடல் வகை

## பறையர்:

பறை என்ற இசைக்கருவி வாசிப்போர்.
பறை என்பது முழவு (தோல்)க்கருவிகளுக்கான பொதுப்பெயர். எனவே பறையர் என்போர் அனைத்து தோல்கருவியாளர் (Percussion instrumentalist) களுக்குமான பொதுப்பெயர்.
துடியன், பாணன், பறையன், கடம்பன் (புறம். 335: 7)

## பல்லதி: பண்களில் ஒன்று (பரத. இராக. 56)

## பல்லவம்:

துளிர்; தளிர்; பாடல் துளிர்ப்பது பல்லவி.
பல்லவம் > பல்லவி
சினைபோழ் பல்லவம் தீஞ்சுனை உதிர்ப்ப (பரிபா. 19: 68)
வல்லரி... பல்லவம்... தளிர் ஆகும் (திவா. 737)
வல்லரி, குழை, பல்லவம்... தளிர் எனல் (பிங்க. 2800)
பல்லவம், குழை, தளிர்... (சூடா. 4: 47)
பல் - பல; பன்மை - ஒன்றிற்கு மேற்பட்டது; பல்லவம் - ஒரு பேரெண்
திரும்பத் திரும்பப் பலமுறை பாடப்படும் (உருப்படியின்) முதல் உறுப்பு (தே. நே. 217: 10)
பல்லவம் என்பது அசோகமரத்தின் துளிர் (ஞானாகானம் 87)

## பல்லவி:

= எடுப்பு, முதல் நிலை, முகம் (Refrain)
கீர்த்தனை, கிருதி, பதம், சுரசதி, சதிசுரம், வண்ணம், சாவளி, முதலிய இசைப்பாடல்களின் முதற்பகுதி; திரும்பத்திரும்பப் பாடப்படும் முதல் உறுப்பு.

## பல்லவி பாடுதல்:

இது கற்பனை இசையின் பாற்பட்டது (மனோதர்ம சங்கீதம்). பாடகர் தமது பண் அறிவு, தாள அறிவு முதலிய நுணுக்கங்களைக் காட்டவல்ல இசை முறை. பாடலின் தேர்ந்த இரண்டு வரிகளை எடுத்துக் கொண்டு அதனைப் பல காலங்களில் வித்தியாசப் படுத்திப்பாடுதல்.
பல்லவி பாடுதலில் அடங்குவன:
1. பண் விருத்தி
2. தானம்
3. பல்லவி பாடுதல்
4. விரிவாக்கம் (சங்கதி)
5. காலம் பாடுதல்
6. கற்பனைச் சுரம்பாடுதல்
7. பண்மாலை (இராக மாலிகை) பாடுதல்
← தெ. இ. அ. 27/IV

## பல்லாண்டு: வாழ்த்து

எடு:– பெரியாழ்வார் திருப்பல்லாண்டு; தேவாரத் திருப்பல்லாண்டு (சேந்தனார்)
பல்லாண்டு பல்லாண்டு... காப்பு. (பாசுரம் 1: 1 திருப்பல்லாண்டு)
பல்லாண்டு என்று.. பல்லாண்டே... (பாசுரம் 1: 12)
பல்லாண்டு ஏத்தப் பரந்தன ஒரு சார் (சிலப். 28: 24)
பாடுவார் பணிவர் பல்லாண்டு இசை கூறுபக்தர்கள் (தேவா.)
'பல்லாண்டு கூறுதுமே' என்று பாடல் தொறும் முடியும் சேந்தனார் திருப்பல்லாண்டு
பண் பல பாடிப் பல்லாண்டு இசைப்ப (பாசுரம் 112)
பல்லாண்டு செலச்செல்லா (சிதம்பர செய்யுட் கோவை 64)
← த. க. க. 261/III

## பல்லிசை:

பல குரல் இசை, பல் ஒலி இசை (Poly Phony).
இது ஐரோப்பிய இசை முறையில் கடைப்பிடிக்கப் படுகிறது. அடிப்படையாக ஒரு பாடலை எடுத்துக் கொண்டு, இதைச் சுற்றி பொருந்து சுரங்களினால் (Chords)உண்டாக்கப்பட்ட பல இசைப்பகுதிகளைச் சேர்த்து 4 குழுக்களாகப் பிரிந்து சேர்ந்தோ அல்லது குழுவினர் அடுத்தடுத்தோ பாடுவது. நான்கு குழுவினர் வருமாறு:-

| Bass | Tenor | Alto | Soprano |
|---|---|---|---|
| மிகத்தாழ்ந்த குரலில் பாடுபவர் | முன்னைய குழுவைவிட மேலோங்கிப் பாடுபவர் | இன்னும் மேலோங்கிய குரலில் பாடுபவர் | மிகமிக மேலோங்கிய குரலில் பாடுபவர் |

← தெ. இ. ப. 10

## பல்லியக் கூட்டிசை: → ஆமந்திரிகை

## பல்லியம்:

1. = ஆமந்திரிகை, கூட்டின்னியம்
பல இசைக்கருவிகளைக் கூட்டாக வாசிப்பது (Ensomble, Archestra)
பாடுபாணியர் பல்லியத் தோளினர் (சிலப். 26: 227)
பல் இயக் கோடியர்... (சிறுபாண். 125)
அந்தரப் பல்லியம் கறங்க... (முருகு. 119)
சிறுபல்லியத்தின் நெடுநெறிக்கறங்க (அகம். 154: 3)
சில்அரி கறங்கும் சிறுபல்லியத்தொடு (அகம். 301: 20)
கழைபாடு பல்லியம் கறங்க (நற். 95: 1)
குழலன், கோட்டன், குறும்பல்லியத்தன் (முருகு. 209)
யாழொடு பல்லியம் கறங்க (புறம். 281: 2)
இயவரும் அறியாப் பல்லியம் கறங்க. (புறம். 336: 6)
... பல்லியம் ஆனந்த வாச்சியம் (திருமந். 2725)
2. பல இசைக்கருவிகள் (பல்+இயம்)
செல்லரிய பராசிவன் பம்மநுக்குப் பல்லியங்கள் வாசிக்க
(EC, X, Ct. 83; த. க. சொ. 406)

## பல்லிய வல்லுனர்:

பல தாளக்கருவிகளை வாசிக்கும் திறன் பெற்றவர்(all round)
← த. வ. 158

### பல்வகை எடுப்பு:

*பாடும்போது தாளம் தொடங்குவது எடுப்பு எனப்படும். இது முன் எடுப்பு, பின் எடுப்பு, சம எடுப்பு என மூவகைப்படும்.*

← *த க. க. 280/*I

### பலகை:

1. *ஒரு பறை*

**வீணை, பலகை, தித்தி, வேணுசுரம் (விறலிவிடு)**

2. *வரிக்கூத்துள் ஒன்று.*

**சிந்துப் பிழுக்கை... பலகை... கோத்தவரிக் கூத்தின்குலம் (சிலப். 3: 13 அடியார்க்.)**

### பலாக்கணம்:

= பிலாக்கணம், பிணக்கானம், முதுபாலை

*ஒப்பாரி. இறப்பு வீட்டில் மகளிர் பாடும் புலம்பல் பாடல்* (Song of lementation by women in a house of mourning)

← *செ. ப அ. 2536,* → ஒப்பாரி

### பவனி: → உலா

### பழஞ்சுரம், பழம் பஞ்சுரம்: → பஞ்சுரம்

### பன்முறைக்கருவியர்:

*படைக்கும் விழவுக்கும் கொட்டும் கலைஞர்.*

**பயிறொழிற் குயிலுவர் பன்முறைக் கருவியர் (சிலப். 5: 52)**

### பன்னிரு நிலம்: → பன்னிரு பாலை

### பன்னிருபாலை: = பன்னிருவீடு, பன்னிரு நிலம்

*தானசுரம், கோவை.*

*இணைமுறை (ஏழன் முறை) மற்றும் கிளைமுறை (ஐந்தன் முறை)யில் சுரம் தொடுத்துச் சென்றால் ஓர் இயக்கில்* (Octave) *உள்ள பன்னிரு தான சுரங்களும் கிடைக்கும். இதுவே பன்னிரு பாலை என அழைக்கப்பட்டது.*

**பன்னிரு கால் திரிக்கப் பன்னிருபாலையும் பிறக்கும் (சிலப். 3: 72 – 8 உரை.)**

**ஒரு கயிறு மேலோட்டி ஒன்பானும் மூன்றும் வருமுறையே மண்டலத்தைவை (பஞ்ச. பாடல். 14)**

*மண்டலம் - இயக்கு* (octave)

→ இணை முறை; கிளை முறை

### பன்னிரு வீடு: → பன்னிரு பாலை

### பன்றிப்பறை: = குடப்பறை

*காட்டுப்பன்றிகளை வெருட்டக் கொட்டப்படும் ஒருவகைப்பறை.*

**பன்றிப்பறையும் (மலைபடு. 344)**

**பன்றிப்பறையே குடப்பறையாகும் (பிங்க. 1518)**

### பன்னுதல்:

1. *ஒன்றைத் திரும்பத் திரும்பச் சொல்லுதல்*

**பன்னிப்பன்னிச் சொல்லிச்சென்றான் (நெல்லை வழக்கு)**

2. *பாடுதல்*

**பல்கீதமும் பன்னினார் (தேவா. 408: 3)**

*ஒப்பு : பன் > பனு > பனுவல்*

### பனித்தலைப் பட்டோன் அவிநயம்:

**பனித்தலைப் பட்டோன் அவிநயம் வகுக்கின்... எழுதலுமுண்டே (சிலப். 3: 13 அடியார்க்.)**

### பனுவல்:

1. *பாட்டு, கிருதி* (Stanza, musical composition) *உயர்ந்த இசையமைப்புப் பாடல்களைப் 'பனுவல்' என்றனர்.* (ப. இ. இ. 18)

**வரி நவில் பனுவல் புலம் பெயர்ந்து இசைப்ப (புறம். 135: 6)**

**நல்லிசை நிறுத்த நயவரு பனுவல் (அகம். 352: 13)**

**பா என்ப பனுவல்.. ஆகும் (சூடா. 11: 13)**

**கைகவர் நரம்பின் பனுவல் பாணன் (நற். 200: 18)**

**பாடின் பனுவல் பாணர் உய்த்தென (புறம். 127: 2)**

**தும்புரு நாரதர் பனுவரைப்பிசை (த. க. சொ. 415)**

**பல்கீதமும் பன்னினார் (தேவா. 408: 3)**

*பன் - பனு - பனுவல்*

→ பன்னுதல்

2. *நூல்*

**பணிவரை மார்பன் பயந்த நுண்பொருள் பனுவலின் (சிறுபாண். 240 – 41)**

**வனப்பியல் தானே வகுக்கும் காலை, சின்மொழியால் தாய பனுவலோடு (தொ. பொ. 547)**

3. *கேள்வி*

**பொய்த்தல் அறியா உரவோன் செவி முதல் வித்திய பனுவல் (புறம். 237: 4 – 5)**

# பா

## பா:

*தூக்கு, யாப்பு, செய்யுள், கவி, கவிதை, பாட்டு, தொடர்பு, நூற்பா*(verse, stanza, poem)

தூக்கும், யாப்பும், செய்யுளும், கவியும், பாட்டும், கவிதையும் பா எனப்படுமே (திவா. 1846)

அத்தொடை பாவி நடத்தலின் பாவே (இலக். விள. 711)

தூக்கும், யாப்பும், செய்யுளும், கவியும், பாட்டும், தொடர்பும், பாவென்றாகும் (பிங்க. 2093)

பா என்ப பனுவல், நூற்பா, பரவுதல், பரப்பும் ஆகும் (சூடா. 11: 13)

*தமிழின் பாத்தொகுபொருள் பயனுணர் வோன்*

*(தகசெ. 415)*

↑ எனவே பா என்பது செய்யுளையும் இசைப்பாட்டையும் குறிக்கின்றது.

← *த. இ. பே. 85,15*

## பாஅ வண்ணம்: → சொற்சீர் வண்ணம்

## பா இனம்: (Auxiliary Metre)

*தாழிசை, துறை, மண்டிலம் (விருத்தம்) என்ற மூன்றும் பா இனங்களாகும் இவை மேலும் 29 பாவினங்களாக விரிபெறும்.*

1) வெண்பா இனம் – வெண்செந்துறை, குறள்தாழிசை, வெண் ஒத்தாழிசை, வெண் தாழிசை, ஓரொலி வெண்துறை, வேற்றொலி வெண்துறை, வெளிநிலை விருத்தம், வெளி மண்டில விருத்தம் 8

2) ஆசிரிய இனம் – ஆசிரிய ஒத்தாழிசை, ஆசிரியத்தாழிசை, ஆசிரிய நேர்துறை, ஆசிரிய இணைக் குறள்துறை, ஆசிரியநிலை விருத்தம், ஆசிரிய மண்டில விருத்தம் 6

3) கலிப்பா இனம் – கலி ஒத்தாழிசை, கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம், கலிநிலைத்துறை, கலிமண்டிலத்துறை, கட்டளைக் கலித்துறை, கலிநிலை விருத்தம், கலிமண்டில விருத்தம் 9

4) வஞ்சிப்பா இனம் – வஞ்சி நிலைத்தாழிசை, வஞ்சி மண்டிலத் தாழிசை, வஞ்சி நிலைத்துறை, வஞ்சி மண்டிலத்துறை, வஞ்சி நிலை விருத்தம், வஞ்சி மண்டில விருத்தம் 6

← *த. இ. பே. 87,15*

## பாக்களின் ஓசை:

*சீர்களின் சேர்க்கையால் உருவாகும் தளை ஓசையே பாக்களின் ஓசையாகின்றது. அவையாவன: -*

ஆசிரியம் – அகவல் ஓசை
வெண்பா – செப்பல் ஓசை
வஞ்சி – தூங்கல் ஓசை
கலி – துள்ளல் ஓசை

## பாக்கழி:

*மருதயாழ்த்திறம் ( கரகரப்பிரியாவின் சேய்ப்பண்).*

தக்கேசி... பாக்கழி... மருதயாழ்த்திறனே... (பிங்க. 1383)

## பாகம்: தோற்கருவியுள் ஒன்று.

விரலேறு, பாகம் (சிலப். 3: 27 அடியார். மேற்.)

## பாகவதர்:

1. *இசையுடன் சமயச் சொற்பொழிவாற்றும்பாடகர்*
2. *பாகவதத்தை மேற்கண்டவாறு பாடும் வைணவப் பாடகர்.*
3. *கிருஷ்ணபக்தர், வைணவஅடியார்.*

→ பாகவத மேளம்

## பாகவத நடனம்: → பாதவத மேளம்

## பாகவத மேள நாடகம்:→பாகவத மேளம்

## பாகவத மேளம்:

= பாகவத மேள நாடகம், பாகவத நடனம்

ஒருவகை நாட்டிய நாடகம்.

மெலட்டூர், ஊத்துக்காடு, சூலமங்கலம், சாலிய மங்கலம், நல்லூர், தேப்பெருமாள்நல்லூர் ஆகிய இடங்களில் பாகவதர் என்ற பக்தர்களால் ஆடப்படும் பக்தி நடனம். தஞ்சை நாயக்கர்கால கலை வடிவம்.

பாகவதர் - கிருஷ்ணபக்தர், வைணவ அடியார்
மேளம் - குழு, கூட்டம்

← *த. க. க. 269*/III

## பாசுரப்பத்து:

*ஆழ்வார்களின் நாலாயிரப்பாசுரத்தின் ஒரு திருமொழி என்பது பத்துப் பாடல் கொண்டும், ஒரு பத்து என்பது பத்து திருமொழிகளைக் கொண்டும்*

*அமைவது.*
*1 திருமொழி - 10 பாடல்*
*1 பத்து - 10 திருமொழி, 100 பாடல்*

**பாசுரம்:** புல்லாங்குழல் ஓசை (யாழ். அக.)
(musical sound of flute)
↑ கண்ணன் கையில் குழல், ஆயர் குழல், ஆகியவைகளுடன் வைணவமானது மரபு வழி உறவு கொண்டதை இது காட்டுகின்றது.

**பாஷாங்க இராகம்:** → இடைப்பிறவரல் பண், அயல் விரவுப்பண்

**பாஞ்ச சத்திகம்:** ஓர் இசைக்கருவி

**பாஞ்சால மட்டியம்:**
*தாள வகையுள் ஒன்று* (யாழ். அக.)
← *செ. ப. அ. 2558*

**பாட்டாங்கம்:** → கீதாங்கம்

**பாட்டி:** *பாண்மகள், பாடினி, பாணிச்சி, பாணினி*
வேட்டம் மறந்து துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி (அகம். 196: 4)
பாணர் வருக பாட்டியர் வருக (மதுரைக். 749)
... பாணர் வருவாராக பாணிச்சியர் வருவாராக (மேலது நச்சர்.)

**பாட்டிடை வைத்த குறிப்பு:**
= குறிப்புமொழி
*செய்யுளின் ஊடே வைக்கப்பட்ட உரை (சொல்); உரைநடைப்பகுதி; ஒலிக்குறிப்பு*
பாட்டிடை வைத்த குறிப்பினானும் (தொ. செய். 171)
எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிப்
பொருள் புறத்ததுவே குறிப்புமொழி என்ப (தொ. செய். 177)

**பாட்டு:**
*பாடல், வரி, செய்யுள், உரு, உருப்படி, பனுவல், பா, யாப்பு* (Stanza, Lyric, Verse, Song, Hymn, Poem)
*பண் மற்றும் தாளத்துடன் பாடப்படுவதால் பாடல்.*
பதினோராடலும், பாட்டும், கொட்டும் (சிலப். 3: 14)
பாட்டுமென்றது அகநாடகங்களுக்கும் புற நாடகங்களுக்கும் உரிய உருக்களும் என்றவாறு. (மேலது அரும்.)
ஆடலும், பாடலும் பாணியும் தூக்கும் (சிலப். 3: 16)
பாடலுமென்றது பண்ணல் முதலான எட்டு வகைப்பட்ட குறிக்கோளும் (மேலது அரும்.)
*பாடல் வரிகளை, தாளம், ஒத்து, பண்ணுடன் வரிவரியாகப் பாடுவதால் வரி.*
*எழுத்து, அசை, சீர், தளை, அணி, வனப்புகளால் செய்யப்படுவதால் செய்யுள்.*
*பண் தாள முதலிய இசை வடிவாக உருவாக்கப் படுவதால் உரு, உருப்படி.*
பாட்டுடைச் செய்யுள் – இசைப்பாட்டுக்களை இடையே உடைய தொடர்நிலைச் செய்யுள் (சிலப். பதிகம். 60 – 61 நாட்டார்.)
பாட்டு, உரை, நூலே (தொ. செய். 78)
கூத்தும், பாட்டும், தூக்கும் துணிவும் (மணி. 2: 19)
யாப்பு, தூக்கு, கலி, கவிதை, செய்யுள், பா (சூடா. 10: 29)
இவையோடு சொல்லும் சேர்ந்தது பாட்டு... (தே.நே. 270/*8*)
பாட்டு முரலுமாம் பண் (திணைமாலை 150) 143: 14)
பாட்டரவம் பண்ணரவம் (மேலது. 145: 1)
ஆடலும் ஒல்லார்தம் பாடலும் மறந்தே (புறம். 153: 12)
பாடல் பற்றிய பயனுடைய எழாஅல் (பொருந. 56)
அறல்வாழ் கூந்தல் கொடிச்சியர் பாடல் (மலைபடு. 304)
பண் என்னாம் பாடற்கு இயைபின்றேல் (குறள் 573)
பண்ணமையா யாழின் கீழ்ப்பாடல் பெரிது இன்னா (இன்னா. 40: 31: 1)
பாடல் பாணி அளை இயவரொடு (சிலப். 13: 113)
பலபாக்களோடு, உரைப்பாட்டையும், இசைப் பாட்டையும் ... (சிலப். பதிகம். 55 – 60 அடியார்க்.)

**பாட்டுக்கட்டுதல்:** *பாடல் புனைதல்* (Composing)
*(கட்டுதல் - யாத்தல்)*

**பாட்டுக்கு மெட்டு:**
*மெட்டு என்பது இசை வடிவம்*
*இசையமைப்பதிலுள்ள இரு முறைகளுள் ஒன்று சொல் உருவுக்கு இசைப்படுத்தல். பாடலை முதலில் இயற்றிக் கொண்டு பின்னர் அதற்கு இசையமைத்தல். அதாவது பாடலுக்குரிய பண், தாளம், எடுப்பு, சுர அமைப்பு முதலியவைகளைத் தேர்ந்து பாடலை இசைப் படுத்துதல்.*
← *த. க. க. 133/*II ,→ மெட்டுக்குப் பாட்டு

**பாட்டுமடை:**
*குரவைக்கூத்து முதலியவற்றின் இடையே மடுக்கும் (பாடும்) பாடல்.*
எடு: சிலம்பு குன்றக்குரவை பாடல் 7 – 25

**பாட்டுவாளி:** உடுக்கையடித்துப் பாடுவோன்.

**பாட்டுவித்தல்:** இசைகற்பித்தல்
*பாட்டுவித்தால் ஆரொருவர் பாடாதாரே (அப்பர்)*
*தேவரடியாரைப் பாட்டுவிக்கவும்*
*(தெ. இ. க. 5 705 . த. க. சொ. 417)*

**பாட்டை:** இசையின் நடை (Style of music)
கானவித்தை பாட்டை எல்லாம் கற்ற பனிமொழியே (விறலி. விடு. 18)

**பாட்டொலி:** இசை
*பாட்டொலிக்கருங்கைக் கடையர்*
*(தெ. இ. க 7. 863. த. க. சொ. 417)*

## பாடலடிகள்:

*செய்யுள் மற்றும் இசைப்பாடலின் வரிகள்*

எடு:– நாலடிச் செய்யுள் (வெண்பா)

| | | |
|---|---|---|
| வண்டார் வளவயல் | – முதல் அடி | – முகவடி |
| தண்டார் புனை | – இரண்டாம் அடி | – எருத்தடி |
| பாவலன்பால் | – மூன்றாம் அடி | – ஈற்றயலடி |
| காவலன் பால் | – நான்காம் அடி | – ஈற்றடி |

## பாடலமுதம்:

*அலகு (சுருதி) கூடியோ அன்றிக் குறைந்தோ வரும் சுரம். சில பண்களில் ஒரு சுரம் அல்லது இரு சுரம் அலகு குறைந்தோ அல்லது கூடியோ நுண் அலகு களாக பண்ணின் இனிமை மிக்க இடமாக அமையும். இச்சுரங்கள் பாடலமுதம் ஆகும்.*

சான்று: தேவகாந்தாரிப் பண்ணின் – ரி, த சுரங்கள்

*← கருணாமிர்த பக். 709-719;*

*நுண்ணலகுகளும் இராகங்களும். பக்.* 111 & 364

## பாடலுக்கு முழக்கல்:= *கீதானுகம்,பாட்டாங்கம்*

*பாடலுக்கு இசைக்கருவி வாசித்தல்.*

→ பாட்டாங்கம்

## பாடவியம்:

*துளை மற்றும் நரம்பு இசைக்கருவிகள்; அதாவது பாடலை இசை (வாசி) க்கக்கூடிய கருவிகள்.*

*குழல் யாழ் முதலிய பாடவியங்கள் (தெ.இ. க. 2. 275)*

பாடவியம் வாசிக்க மூவருக்கு நிவந்தம் தந்த செய்தி (தஞ். பெரி. கல்வெட்டு)

*நெல் நூற்றைங்கலம் அகப்பட பாடவியன் ஒருவனுக்கு (த. க. சொ. 417)*

*(பாடவியன் - பாடவியம் வாசிப்போன்)*

*... பாடவியம் வாசிக்க நித்தநெல்லு... (தெ. இ. க. 24. 264)*

## பாடல் பாணர்: *இசை அமைக்கும் பாணர்*

பாடல் பாணர் – புணர்க்கும் பாணர் (சிலப். 5: 185அரும்.)

*புணர்ப்பு - இசைப்புணர்ப்பு*

ஒப்பு: சித்திரப்புணர்ப்பு, வஞ்சனைப்புணர்ப்பு.

## பாடல் மகடூஉ:

*பாடினி, பாடன்மகள்,* (Songstress)

## பாடுகள மகளிர்:

*பாடல் மகளிர்; பாடல் பாடுவதற்கென்றே ஏற்பட்ட மகளிர்*

ஆடுகள மகளிரும் பாடுகள மகளிரும் (சிலப். 6: 157)

...ஆயமகளிரும் ஆடல் மகளிரும் பாடல் மகளிரும் தொகுதி கொண்ட... (மேலது அடியார்க்.)

## பாடுதுறை:

1. *இசை நிகழ்த்துத்துறை; இசை பாடப்படும் துறை* (Performing music, Applied music, Practical Music )

பாடுதுறை முற்றிய பயன்தெரி கேள்வி (சிறுபாண். 225)

இசை பாடுமுறையில் முதிர்ந்த நிலையை அடைதல்

↑ ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இசை நிகழ்த்துக் கலையில் தமிழர் உச்சநிலையை அடைந்திருந்த செய்தியை மேற்கண்ட பாடலடி தெரிவிக்கின்றது.

2. *அரசவாகை என்ற புறத்துறை*

பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே (புறம். 21: 11)

பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தன் (சிலப். 27: 46)

வீரரைப்பாடும் புறத்துறை எல்லாம் முடித்துப் பாடுண்ட வேந்தன் (மேலது அரும்.)

## பாடுநர்:

*பாணர், இசை பாடுவோர்* (Performing musician, minstrels)

| | |
|---|---|
| பாணர், பாடுநர், பரிசிலர் | (புறம். 135) |
| நின் பாடுநர் கையே | (புறம். 14: 19) |
| பாடுநர் கொளக்கொளக் குறையாச் செல்வத்து | (பதிற். 82: 12) |
| உலைந்த ஒக்கல் பாடுநர் செலினே | (அகம். 349: 5) |
| பாடுவார் பாக்கம் கொண்டென | (பரிபா. 7: 31) |
| பாடுவார் பாடல், பரவல், பழிச்சுதல் | (பரிபா. 10: 116) |
| பாடுநர் வஞ்சி பாட... | (புறம். 33: 10) |
| பாடுநர்க்கு அரியை ... | (புறம். 99: 11) |
| அருள் பாடுநர்க்கு நன்கு அருளியும் | (புறம். 361: 8) |
| பாடுநர் புரவலர் | (பதிற். 86: 8) |

## பாடுவார் பாணிச்சீரும்:

*பாடும் போது கைத்தாளமிடுதல்.*

பாடுவார் பாணிச்சீரும்; ஆடுவார் அரங்கத்தாளமும்(பரிபா. 8: 109)

*(பாணி- கை; சீர் - தாளம்)*

## பாடுவிச்சி: *பாடினி, விறலி, மதங்கி.*

மதங்கி, எய்திய விறலி, என்ப திட்டமாம் பாடுவிச்சி (சூடா. 2: 65)

## பாடி: *பண்களில் ஒன்று* (யாழ். அக.)

## பாடினி:

*பாண் மகள், இசைபாடும் பாண் மரபினள்.*

| | |
|---|---|
| பாணன் சூடான்; பாடினி அணியாள் | (புறம். 242: 3) |
| பசும்பூண் மார்ப! பாடினி வேந்தே | (பதிற். 17: 14) |
| பெடைமயில் உருவின், பெருந்தகு பாடினி | (பொருந. 47) |
| ஒரு திறம் பாடினி முரலும் பாலை அம்குரலின் | (பரிபா. 17: 17) |
| வயவேந்தன் மறம்பாடிய பாடினி யும்மே | (புறம். 11: 11) |
| பாடினி பாடிய வஞ்சிக்கு | (புறம். 15: 24) |

## பாடை:

*குறிஞ்சி யாழ்த்திறம்*

| | |
|---|---|
| நட்டபாடை... குறிஞ்சியாழ்ந்திறமாகக் கூறுவர் | (பிங்க. 1382) |
| தக்கராகம் அந்தாளி, பாடை | (திவா. 8) |
| குறிஞ்சி, கௌவாணம், பாடை | (திவா. 9) |

↑ கேரளக் கதகளியில் பாடப்படும் பண்களில் ஒன்று

## பாடைப்பாடல்:

*அகநாடகங்களுக்கும் புறநாடகங்களுக்கும் உரிய செய்யுள் உருக்கள்.* (Musical Pieces)

பண்ணி யாழ்க்கரணமும் பாடைப்பாடலும் (மணி. 2: 20)

## பாண்:

1. *பாணர் பிரிவினர் (பாண் சாதி)*

அரும்பெறன் மரபிற் பெரும்பாண் இருக்கையும் (சிலப். 5: 37)

பாண் – பாண் சாதி (சிலப். 4: 72 –6 அடியார்க்.)

பாண்யாழ் கடைய... (நற். 186: 6)

பண் அமை நல் யாழ்ப் பாணனொடு (அகம். 346: 13)

பாண் முற்றுக (புறம். 29: 5)

பாண் ஆதரித்துப் பலபாட (பரிபா. 7: 66)

2. இசைப்பாட்டு, பாணி (song, vocal music, melody)

தகை வண்டு பாண்முரலும் கானம் (கார். 29: 2)

படாமகிழ்வண்டு பாண்முரலும் கானம் (கார். 32: 3)

பாணி... பண்... பாண்... இசைப்பாட்டு ஆகும் (திவா. 1866)

*பண் - பாண்; பண்ணை உடைய இசைப்பாட்டு*

பூணினான் தன் பாண் வலைச் சென்றுபட்டாள் (சீவக. 2040)

3. *இசை*

*எ(டு:- மாயோன் பாணி*

பாணி – இசையயையுடையது, பாட்டு; பாண் – இசை (சிலப். 6: 38 நாட்டார்.)

தீங்குயில் மணந்து தேன்துஞ்ச வண்டு பாண் செய (சீவக. 149)

4. *பாண்மை, பாண் தொழில், இசைத்தொழில்*

பாண் தலையிட்ட (கலித். 85: 22)

பண்டர், ஓவர் பாண் தொழில் கீழ்மக்கள் (பிங்க. 816)

5. *பாண் சுற்றம், பாண்குடி, பாண் கடும்பு*

இசையைத் தொழிலாக உடைய மக்கள் பிரிவினர்

பாண் முற்றுகை (புறம். 29:5–6)

அழுந்து பட்டிருந்த பெரும்பாண் இருக்கையும் (மதுரைக். 342)

ஊன் சோற்று அமலை பாண்கடும்பு அருத்தும் (புறம். 33: 14)

6. *பாணாற்றுப்படை, பாணர்களை புரவலர் களிடம் ஆற்றுப்படுத்தும் புறத்துறை*

பாணிரண்டுமுல்லை (பத்துப்பாட்டுமுகவுரை.)

கூத்தரும், பாணரும்... பெற்ற பெறுவளம் பெறார்க்கு அறிவுறீஇ... (தொ. புறத். 30)

தெண்கடல் முத்தமொடு நன்னலம் பெறுகுவை... செல்வக் கோமான் பாடினை செலினே... (பதிற். 67)

*← புறம். 67-70; 138, 141, 155, 180, 181.*

## பாண்கடன்:

1. *பாணர்களுக்கு மன்னர் ஆற்றும் கடமை (உதவி)*
2. *நடுகல் எடுத்தபோது பாணர் ஆற்றிய கடமை.*

கடன் அறி மரபின் கைவல் பாண (பதிற். 67)

துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று இந்நான்கல்லது குடியும் இல்லை (புறம். 335: 7–8)

*நடுகல்லிற்கு பாண்கடன் ஆற்ற இந்நான்கல்லது வேறு குடிகள் போரில் பாழ்பட்ட அவ்வூரில் இல்லை.*

பாண்கடன் இறுக்கும் வள்ளி யோய் (புறம். 203: 11)

ஆண்கடன் உடைமையின் பாண்கடன் ஆற்றிய (புறம். 201: 14)

வெண்கோட்ட களிறு எறிந்து செங்களத்து வீழ்ந்தார்க்குக் கைவல் யாழ்ப்பாணர் கடன் இறுத்தன்று (பு. வெ. 7: 11)

## பாண்கடும்பு: → ஒக்கல்

## பாண்செய்து: *இசைபாடி*

அன்று... பத்திரன் அடிமையாம் என்று பாண் செய்து... (திருவிளை. விறகு. 51/*2080*)

## பாண்சேரி: *பாணர் குடியிருப்பு*

மீன்சீவும் பாண்சேரி (புறம். 349: 4)

## பாண்டரங்கம்:

1. *சுடுகாடு ; சிவனாரின் ஆடுகளத்துள் ஒன்று.*

சுடகாட்டு அரங்கு (சீவக. 309)

2. *சிவனார் ஆடிய ஆடலுள் ஒன்று; நின்றாடல் வகையது: 11 ஆடலுள் திரிபுரத்தை அழித்தபின் காடுடைய சுடலைப் பொடி பூசி சிவனார் ஆடிய கூத்து;*

பாண்டரங்கம் முக்கணான் ஆடிற்று (சிலப். 3: 14–15)

பாரதி ஆடிய வியன் பாண்டரங்கமும் (சிலப். 6: 45)

*(இங்கு உமை ஆடியதாகவும் குறிப்பிடப்படுகிறது) பாரதியால் தேரின்முன் திசைமுகன் காண ஆடியது.*

சிவன் பாரதி உருவெடுத்து ஆடியது (மேலது அடியார்க்.)

*ஒப்பு:- (பாண்டரங்கம்) - பாண்டு - வெள்ளை ; வெண்குட்டத்தால் நோவுற்றவன்.*

*சுடுகாட்டுச் சாம்பலை (வெண்ணீறு)ப் பூசி ஆடிய தாலும், சுடுகாட்டை ஆடுகளமாகக் கொண்ட தாலும் பாண்டரங்கம்.*

*அரங்கம் - களம், கூத்து* (Theatre)

*பாண்டரங்கம் - பாண்டுக்கூத்து*

அரன், சிவன்,... பாண்டரங்கன்... (பிங்க. 94)

பசுபதி பாண்டரங்கா என்றேன் நானே (தேவா. 297: 6)

மண்டு அமர் பண் கடந்து, மதுகையால் நீறு அணிந்து பண்டரங்கம் ஆடுங்கால்... (கலித். கடவுள்வாழ்த்து)

*← செ ப. அ. 2597 - 98*

## பாண்டி: → பாண்டிபாணி

## பாண்டிகம்: *பறை வகையுள் ஒன்று.*

பணவம், திண்டிமம், பாண்டிகம்,... பல்வகைப் பறையே (பிங்க. 1529)

## பாண்டிகன்: *திருப்பள்ளி எழுச்சி பாடுவோன்*

## பாண்டிப்பிழுக்கை:

*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

சிந்து... பாண்டிப்பிழுக்கை... கோத்தவரிக்கூத்தின் குலம். (சிலப். 3: 13 அடியார்க். மேற்)

**பாண்டிபாணி:** *தக்கேசிப்பண்*

தெள்ளரி பாண்டிபாணிச் செயிரியர் இசைத்தேன் சிந்த (கம்ப. எழுச்சி 65)

காம்போதி, பாண்டி, தக்கேசி (திவா. 1892)

**பாண்டில்:**

1. *கஞ்சதாளம் ; வட்ட வடிவுடையது*

நுண் உருக்கு உற்றவிளங்கு அடர்ப்பாண்டில் (மலைபடு. 4)

*(உருக்கினால் செய்த கெட்டியான தாளக்கருவி)*

இரும்பொலம் பாண்டில், மணியொடு தெளிர்ப்ப (அகம். 376: 9)

பகர்குழல் பாண்டில் இயம்ப (பரிபா. 15: 42)

இடிக்குரல் முரசம் இழுமென்பாண்டில் (சிலப். 26: 194)

விசைத்தெறி பாண்டிலொடு (பெருங். 1: 37: 93)

2. *கூத்தில் பயன்பட்ட விளக்கு*

பாண்டில் விளக்குப் பரூஉச் சுடர் அழல் (பதிற். 47)

3. *வட்டம்*

பொலம் பசும் பாண்டில்காசு (ஐங். 310)

வட்டம்... கஞ்சம்... பாண்டில்... (பிங்க. 3813)

கிட்டி, பாண்டில், கஞ்சதாளம் (திவா. 1225. புது. 94)

பாண்டில், வட்டம், தாளம் (சூடா. 11: 19)

← *தே. நே. 4,13*

**பாண்பாட்டு:** *புறத்துறையுள் ஒன்று.*

*யானையை எறிந்து போரில் பட்ட வீரர்களுக்கு யாழ் வல்ல பாணர் சாப்பண் பாடித் தாம் உரிமை செய்தலைக் கூறுவது*

வெண்கோட்ட களிறு எறிந்து செங்களத்து வீழ்ந்தார்க்குக்

கைவல் யாழ்ப்பாணர் கடன் இறுத்தன்று (பு. வெ. 7: 11)

பலர் குறை செய்த மலர்தார் அண்ணற்கு

ஒருவரும் இல்லை மாதோ (புறம். 311: 4 – 5)

புறம். 283, 284, 311 முதலியன – பாண்பாட்டு என்ற துறையைச் சேர்ந்தவை.

← *த வீ. க. - ப. 40; புறம் 260 - 61*

**பாண்மகன்:**

*பாணன்*

பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையின் யாழினம் (மணி. 18: 17)

குரல் புணர்ச்சீர்க்கொளைவல் பாண் மகனும்மே (புறம். 11: 15)

பனிச்சுரம் படரும் பாண்மகன் உவப்ப (பதிற். 59: 2)

கைவல் பாண்மகன் கடன் அறிந்து இயக்க (சிறுபாண். 37)

தொல் இசை நிரீஇய உரைசால் பாண்மகன் (அகம். 352: 14)

*பாண் மகனேய் பண்டெல்லாம்* (EI,13:10 *த. க. சொ. 418*)

பாண்மகன் தலைவலித்து யாத்த (பெரும்பாண். 284)

வலைவல் பாண் மகன் (ஐங். 48: 1)

**பாண்மகள்:**

*விறலி , பாடினி, பாட்டி, மதங்கி, அகவன் மகள்.*

பாடினி, விறலி, பாட்டி, மதங்கி

பாடல் மகடூஉப் பாண்மகள் ஆகும் (திவா. 286)

பாடினி, விறலி, பாட்டி, மதங்கி, பாடன் மகடு (பிங்க. 817)

செல்லாமோதில் பாண்மகள் (பதிற். 60: 3)

காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு

அவ்வாங்கு உந்தி அம்சொல் பாண்மகள் (அகம். 126: 8 – 9)

நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்(அகம். 216: 1)

மீன்சீவு பாண் சேரியொடு (மதுரைக். 269)

அசைநடைப் பாண்மகள் சின்மீன் சொரிந்து (ஐங். 49: 1 – 2)

கோள்வல் பாண் மகள்... தூண்டில் நடுங்க (பெரும்பாண். 284 – 85)

→ அகவன் மகள்

**பாண் மரபினர்:**

*பாணர், அகவலர், அகவுநர், அகவர், ஆடுநர், இயவர், கண்ணுளர், கலப்பையர், கிணைவர், கூத்தர், கோடியர், துடியர், கடம்பர், கொல்லர், பறையர், பாடுநர், பாண்மகன், செயிரியர், பொருநர், புலவர், முழவர், வயிரியர், சூதர், மாகதர், அம்பணவர், ஆடுமகள், பாணினி, கிணைமகள், பாட்டியர், பாடுமகள், பாடினி, பாண்மகள், விறலி, சென்னியர், மதங்கர், பண்ணவர், கம்மியர், ஓவர்,வண்டர், பண்டர், பண்டவர், பாடுவிச்சி, பாணிச்சி, மதங்கி, அம்பணத்தி, இசைகாரர், பெரிய இசைகாரர், இன்னிசைக்காரர், வைதாளிகர், யாழ்ப்பாணர், குழல்ப்பாணர், குழலர், குழலர் பாணர், கோட்டர், பெரும்பாணர், பாடுநர், பாடல் மகடூ, பாடன் மகள் முதலியன பாண் மரபைக் குறிக்கும் சொற்கள்.*

பாணர் வருக ! பாட்டியர் வருக! வயிரியர் வருக! (மதுரைக். 749)

படைஏர் உழவே! பாடினிவேந்தே (பதிற். 14: 17)

துடிய, பாண, பாடுவல் விறலி (புறம். 280: 8)

துடியன், பாணன், பறையன், கடம்பன் (புறம். 335: 7)

சென்னியர், வயிரியர், செயிரியர், மதங்கர், இன்னிசைக்காரர் (பிங்க. 815)

சென்னியர், பண்டர், ஓவர், வந்தித்து நிற்போர், மதங்கர், சூதர், பண்ணவர் (சூடா. 2: 34)

சென்னியர், வயிரியர், சூதர், மாகதர், இன்னிசைகாரர், மதங்கர் பாணர் (திவா. 213)

பாணினியும் இன்னிசையால் பாடுவாள் (கடம்ப உலா 295)

கம்மியர்கள் மும்மைத் தூரியம் அடங்கின (கம்ப. ஊர்தேடு. 158)

← *செ. பஅ. பிற். 357*

**பாணபத்திரர்:**

*இசைவல்ல பாண் மரபினர்; விபஞ்சியாழையுடையவர்*

பண்தரு விபஞ்சி பாணபத்திரன் அடிமை யென்றான் (திருவிளை. விறகு. 24)

**பாணர்:** (Bard, Minstrel)

*இசைப்பாடகர்; கருவி இசையாளர் யாழ்ப்பாணர், குழல்ப்பாணர், வாய்ப்பாணர், மண்டைப்பாணர் முதலிய பல வகையினர்.*

*பண் - இசை, இராகம்; பண் - பாண் - பாணர்; பாண்-பாணி*

பண் என்பது பாடலையும் இசையையும் குறிக்கும். (DED. 3351)
பண்ணினால் களிப்பிக்கும் பாணன்... (கலித். 72: 10)
கூத்தரும் பாணரும்... (தொ. பொ. 91)
மலையர், புள்ளுவர், மாரார், மன்னான் (கேரளப் பாணர் பிரிவினர்)
↑ மேஸ்திரி (தையல்காரர்), சவளக்காரர்(நன்னீர் மீன் பிடியாளர்), கம்பர் என்ற பிரிவினராகப் பண்டைப்பாணர் திருநெல்வேலி, மதுரை வட்டாரங்களில் வாழ்ந்து வருகின்றனர்.
ஒப்பு: மீன்சீவு பாண் சேரியொடு (மதுரைக். 269)
கோள்வல் பாண் மகள்... தூண்டில் நடுங்க(பெரும்பாண். 284–85)
பாணர்க்குச் சொல்லுவதும்... தை *(காளமேகப்புலவர்)*
துன்னகாரர் – பாணர் (அரும்.உரை.)
*துன்னம் - தையல்; துன்னகாரர் - தையல்காரர்*

## பாணர் கைவழி: → யாழ்

## பாணர் மாலையர்:

மாலையங்குழல் சேர் பாணர் மாலையர் (திருவாலவா. 54: 26)

## பாணி:

1. *கை*
பாணியில் சிரம் பதித்து ஒரு நடை பதித்து (கல்லா. 99: 8)
கையிலே தலையினைத் தாங்கி (மேலது உரை.)
பாண் – பாணி (கை) (தேவ. 246/V)
நொடித்தல் பொழுதும், நீரொடு, கையும், பாடல், பல்லியம், பாணி என்று ஆகும்... (திவா. 1919)
அத்தம், பாணி, கரம், தோள், கைத்தலம் (திவா. 362)
கை, ஓசை, பற்று, காலம், வாச்சியப் பொது (சூடா. 11: 14)
பாணி தலம் – உள்ளங்கை (செ. ப. அ. 2601)

2. *கைத்தாளம் (முதல்கஞ்சக்கருவி)*
பாடுவார் பாணிச் சீரும் (பரிபா. 8: 109)
தாமரைச் செங்கைகளினால் சப்பாணி கொட்டினார் (பெரியபு. திருஞான. 46)
சப்பாணி:– கையால் சப்பு, சப்பு என்று கொட்டும் தாளம்.
கைப்பாணி ஒத்தி (தேவா. 11 ஆளுடைய திருஉலா. 82)
*(ஒத்து - ஒத்துதல் - கொட்டல்)*

3. *கூத்து, ஆடல்*
ஒண்ணுதல் விறலியர் பாணி தூங்க (பொருந. 110)
நடமே, நாடகம், கண்ணுளர், நட்டம்,... தூங்கல், பாணி(திவா. 1752)
நடமே, நாடகம், நடனம், நட்டம்.. அவிநயம் இலையம், பாணி, குரவை, கூத்து எனப்பகர்வர் (பிங்க. 1444)

4. *திருவிழா*
முருகயர் பாணியும் (சூளா. நாட். 7)

5. *செவ்வழியாழ்த்திறம்*
குறண்டி... பாணி... செவ்வழியாழ்த்திறமென்ப (பிங்க. 1384)

6. *ஓர் இசைக்கருவி*
ஆசு, பாணி, என்னும் வாத்தியங்களை இசைக்கும் மாரான்கள் (தென். குல. குடி. 1 பக். 80)
← *பெ. அ. 52/II*
நொடித்தல், பொழுதும், பல்லியம்... பாணி என்று ஆகும்... (திவா. 1919)

7. *பாணிச்சி, பாடினி, பாணன் மனைவி*
என்கொணர்ந்தாய், பாணாநீ என்றாள் பாணி (தனிப்பாடல்–தே.நே. 259,10)

8. *தாளம்; நெடிய தாளம் (பாணித்தாளம்)*
தண்ணுமைப்பாணி தளராது எழுஉக (கலித். 102)
பாணி செய்ய (தேவா. 4392)
ஏவலன்பின் பாணியாது என (சிலப். 6: 35)
வாசிக்கும் தாளம் யாது... (மேலது அரும்.)
பாடுவார் பாணிச்சீரும் ஆடுவார் அரங்கத்தாளமும் (பரிபா. 8: 109)
ஐதுஅமை பாணி இரீஇ கைபெயரா (அகம். 98: 17)
நொடி தரு பாணிய பதலையும் பிறவும் (மலைபடு. 11)
... தாளத்தையுடைய ஒருகண் மாக்கிணையும் (மேலது நச்சர்.)
பாடல் தண்ணுமைப் பாணியில் பிழையா (பெருங். 1: 44: 47)
மேலாய நான்முகன் செய் பாணியையும் (பஞ்ச. அவை அடக்க வெண்பா)
செருகச் செய்து... சிலம்பொலி கலந்த பாணி (சீவக. 2082)
பண்புகொள் குணங்கொள் கீதம் பாணியில் பாடுகின்றாள் (சீவக. 1241)
பாட்டைத்தாளத் தோடே பாடா நின்றாள் என்க (மேலது நச்சர்.)
கயிறு ஊர் பாணியின் தளரும் சாரல் (குறிஞ். 194)
ஆடலும் வரியும் பாணியும் தூக்கும் (சிலப். 14: 150)
பணியுமென்றது – தாளங்களுமென்றவாறு (சிலப். 3: 16 அரும்.)
பொற்புடை பாணி நடைப்புரவி (இலக். விளக். 608 உரை.)
கொட்டும், அசையும், தூக்கும், அளவும், ஒட்டப் புணர்ப்பது பாணியாகும்... (சிலப். 3: 16 அடியார்க். மேற்.)

9. *சொற்கட்டு, தாளத்தை வாய்(மிடற்று) ப்பாட்டாகப் பாடுவது.*
பாடின பாணிக்கு ஏற்ப (பொருந. 48)
பாடின தாளத்திற்குக் பொருந்த (மேலது. நச்சர்)

10. *ஓசை*
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப (புறம். 194: 2)
தொண்டகச் சிறுபறைப்பாணி (நற். 104: 5)
எழும் தண்ணுமை இடம் கண் பாணி (அகம். 7: 8)

11. *பாடல், இசைப்பாட்டு*
தாளத்தை உடைய பாட்டு; இலயாங்கப்பாடல்
பாடுவார் பாணிச்சீரும் (பரிபா. 8: 109)
*(பாணி - பாட்டு) ; பாணிச்சீர் - பாட்டின் தாளம்*
கானல் பாணி கனக விசயர்தம் (சிலப். 27: 50)
விருந்தின் பாணி கழிப்பி... (மலைபடு. 539)
... புதிதாகப் பாடும் பாட்டுக்களைப் பாடி (மேலது நச்சர்.)
பாணி என்றது பாட்டு – தேவபாணி (சிலப். 6: 35 அடியார்க்.)
பாணி... பண்... கானம்... என்று இவை இசைப்பாட்டு ஆகும் (திவா. 1866)
தொடிமான் உலக்கைத் தூண்டு உரல்பாணி (அகம். 9: 12)
உரல்பாணி – வள்ளைப்பாட்டு

12. *இசை ; இன்னிசை*
பாணி யாழ ! (சீவக. 1500)
ஆய்குழல் பாணியின் ஐதுவந்து இசைக்கும் (அகம். 225: 8)

13. *காலம்; நெடுநேரம்*
எஞ்சொல் பாணி நின்றனளாக (குறிஞ், 152)
மாண் இழை நெடுந்தேர் பாணி நிற்ப (அகம். 50: 4)
*பாணி நிற்ப - காலம் தாழ்ந்து*

ஒரு மரப்பாணியில் தூங்கி யாங்கு (பெரும்பாண். 433)
பாணித்தல் – காலம் தாழ்த்தல் (தே. நே. 2191/13)
தெரி இழை மகளிர் பாணி பார்க்கும் (புறம். 209: 17)
இளமையும் காமமும் நின் பாணி நில்லா (கலித். 12: 12)
நெடித்தல், பாணித்தல், பொழுது போக்கல் (பிங்க. 2244)

14. *பல்லியம்*
பதியொடு... இயமும் பாணி... (பிங்க. 3812)
பாணி.. பல்லியம்... (சூடா. 11: 14)
நெடித்தல்... கையும்... பாடல், பல்லியமும், பாணி என்று ஆகும் (திவா. 1919)

15. *திறம், ஐந்து சுரப்பண்*
பாடுதும் முல்லைத்தீம்பாணி என்றாள். (சிலப். 17: (17)
*(முல்லைத்தீம்பாணி) முல்லைப்பாணி- பண் மோகனம்- ஐந்து சுரப்பண்-பாணி*
குறத்தியர் பாடிய குறிஞ்சிப்பாணியும் (சிலப். 27:224)
*குறிஞ்சிப்பாணி - பண்மத்தியமாவதி - ஐந்து சுரப்பண் -பாணி*
முறையால் வரும்... இந்தள முதலில்... நிறை பாணியில். (பெரியபு. தடுத்தாட். 75)
*நெய்தல்பாணி (இந்தளம்) - பண்இந்தோளம் - ஐந்து சுரப்பண் - பாணி*

16. *முறை, பாங்கு, பத்ததி* (style, type, preceptor) *காயகி, கரானா (இந்துத்தானி)*
*ஒப்பு: பந்தணை நல்லூர்பாணி, வழுவூர் பாணி.*

17. *கை அவிநயம்*
ஆடலும், பாடலும், பாணியும், தூக்கும் (சிலப். 3: 16)
பண்ணே, பாணி, தூக்கே, முடமே (சிலப். 3: 46)

18. *சொல்*
குயில்... நுவல், பாணி, வாக்கு... என்பவுஞ் சொல்லின் பால (திவா. 1773 புது. 258)
மாற்றம், மொழி, .. பாணி, நுவல் (சூடா. 10: 2)
நொடியும், கதையும்... பாணியும்... ஓசைச் சொல் (திவா. 1772)

19. *மொழி*
*எடு:- பாணினி - மொழி இயலாளர்.*

**பாணித்தல்:** *காலம் நீட்டித்தல், தாழ்த்தல்*
*பாணி = காலம்*
நெடித்தல், பாணித்தல், பொழுது நீட்டித்தல் (திவா. 1704)

**பாணி தூங்கல்:** *தாளத்திற்கேற்ப ஆடுதல்*
ஒண்ணுதல் விறலியர் பாணி தூங்க (பொருந. 110)
*(தூங்க = ஆட)*
அழல்குழல் பாணி தூங்கிய வரொடு (சிறுபாண். 162)

**பாணி மாறிக் கொட்டுதல்:**
*தாளம் மாறிக் கொட்டல்* (to play differently on a drum)
*← செ. ப. அ. 2601*

**பாணியர்:** *பாடகர்*
பாடுபாணியர் பல்லியத் தோளினர் (சிலப். 26: 227)

**பாணி வரி:** *ஒரு வகை இசைப்பாடல்.*
மாதர்ப் பாணிவரியொடு தோன்ற (சிலப். 26: 115)
பாணிவரி... இப்பொருள் வைத்த உரு... (மேலது அரும்)

**பாணினி:**
*பாடினி.* (songstress, woman of the Panar class)
பாணினியும் இன்னிசையால் பாடுவாள் (கடம்ப. உலா. 295)
*← செ. ப. அ. பிற். 357*

**பாணு:** *பாட்டு*
பாணுவண்டு அரற்றும் கோலச் சிகழிகை (சீவக. 2447)
*பாண் > பாணு*

**பாத்திர பிரவேச தரு:**
*நாடகத் தொடக்கத்தில், நாடகத்தின் ஒரு பாத்திரம் மேடையில் நுழையும் போது பாடும் பாடல். இது அந்நடிகரின் ஆடல் திறன் மற்றும் பாடல் திறனைக் காட்டுவதாக அமையும்.*

**பாத்திரம்:**
*நாடகத்தில் வேடம்பூண்டு ஆடும் நடிகர்* (character)
நட்டுவக் குறையோ... பாத்திரக் குறைவோ... (மதுரைப் பதிற். 25)
*← செ ப. அ. 2603*

**பாதம் ஐந்து:** *ஆடலின் ஐவகைப் பாதநிலைகள்.*
ஐவகைப் பாதமாவன: – சமநிலை, உற்கடிதம், சஞ்சாரம், காஞ்சிதம், குஞ்சிதம் என்ப. (சிலப். 3: 13 அடியார்க். அடிக். (சுந்தானந்த.)

**பாத மயக்கு:**
*அடிமயக்கு; அடிமுறை மாற்றக்கூடிய செய்யுள்; வேறு புலவர் பாடிய மூவடிகளோடு தான் ஓரடி பாடி முடிக்கும் மிறைப்பா வகை.*
*← யாப். வி. 96; தே. நே 79,10*

**பாம்பாட்டி:** *வரிக்கூத்து வகையுள் ஒன்று.*
சிந்து... பாம்பாட்டி... கோத்தவரிக்கூத்தின்குலம்... (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)
↑ நாட்டியக் கலைஞர்கள் ஆடும் பாம்பு நடனம் அல்லது மகுடியில் பாட்டுப்பாடி பாம்பை ஆடவைப்பது ஆகலாம்.

**பாம்பு:** *தாளக் கருவியுள் ஒன்று* (பரத. தாள. 35)

**பாம்பு நட்டம்:**=*புயங்க நட்டம்*
அந்த வெண்புயங்க நட்டம் (திருவாலவா. 32: 8)
*(புயங்கம் - பாம்பு)*

**பாம்பு பிடித்தன்ன:**
*கருங்குரங்கின் கையில் சுற்றிய பாம்பின் வரிசைச் சுற்றுபோல் யாழ்க்கோட்டில் வரிசையாக கட்டப் பட்ட திவவைக் குறிப்பது.*

பைங்கண் ஊகம் பாம்புபிடித்தன்ன
அம்கோட்டுச் செறிந்த அவிழ்ந்து வீங்கு திவவின்
(சிறுபாண். 221 – 22)
நெடும் பணைத்திரள் தோள் மடந்தை முன்கைக்
குறுந்தொடி யேய்க்கு மெலிந்து வீங்குதிவவு(பெரும்பாண்.12 – 13)
மாயோள்முன்கை ஆய்தொடிகடுக்கும்
கண்கூடு இருக்கை திண்பிணித் திவவு (பொருந. 14 – 15)
(தொடி – வளையல்; வளையல் அணிந்த கை போல)

↑யாழ் என்ற 2000 ஆண்டுப் பழமையுடைய தமிழரின் யாழ்க்கருவியானது, நேர்கோட்டுயாழ் என்பதற்கு இவ்உவமைகளே சான்றாகின்றன. நேர்கோட்டு யாழில் மட்டுமே புரிநரம்பு (மெட்டு) மற்றும் புரிநரம்பைப் பிணிக்கும் திவவைக் கட்டமுடியும்.

*← பாணர்கைவழி பக் 144 - 46*

## பாயம் பாடுதல்:

*காமம் நிறை பாடல்களை நீள் ஒலியால் தூரத் திலிருப்பவற்குப் பாடுதல்.*

பன்மயிர்ப்பிணவொடு பாயம் போகாது (பெரும்பாண். 342)

*பாயம் போதல் - புணர்ச்சி விருப்பால் விலங்குகள் ஓடி விடுதல்*

*பாயம் - புணர்ச்சி விருப்பு அறிவிக்கும் நீள்ஒலி* (mating call)

ஒளிபடு சிலம்பில் பாயம் பாடி (குறிஞ். 58)

*← த. க. க 90/IV*

## பாயல் ஆட்டம்:

*கன்னடத்தின் யட்சகானம் ; திறந்த வெளி அரங்கில் நிகழ்த்தப்பெறுவது.*

*← தெ. இ அ. 40/I*

## பாயா:

*தபலாவுடன் இணைத்து வாசிக்கப்படும் (இரட்டை வாத்தியத்துள் ஒன்றான) ஒருமுக வாத்தியம்*

## பார்வதி லோசனம்:

ஐந்து துணைத்தாளங்களுள் ஒன்று. 16 மாத்திரைகள் கொண்டது.
(பரத. தாள. 3)

... பதினாறு மாத்திரையுடைய பார்வதி லோசனம் ஈறாக...
(சிலப். 3: 16 அடியார்க்.)

*← செ. ப அ. 2618*

## பாரசவர்: *கூத்தர்*

பாரசவ முனிவரில் யாமளேந்திரர் செய்த இந்திர காளியமும்
(சிலப். அடியார்க். உரைப்பாயிரம்)

'கூத்தராயின் பாரசவரும் வேளாளரும் பிறரும்... பாரதி விருத்தியும், விலக்கியல் கூத்தும், கானகக்கூத்தும், கழாய்க் கூத்தும், ஆடுபவராக... (தொ. பு. 91 நச்சர்)

## பாரதன்: *கூத்தாடி* (Dancer, Actor)

## பாரதி: → பாரதி விருத்தி

## பாரதி அரங்கம்:

1. *சுடுகாடு*

பாரதி (உமை) ஆடலுக்கான அரங்கம்
பாரதி ஆடிய பாரதி அரங்கத்து (சிலப். 6: 39)
பாரதி – பைரவி; அவள் அரங்கம் – சுடுகாடு. அவள் ஆடுதலால் பெற்ற பெயர். (மேலது அடியார்க்.)

2. பாரதி ஆடிய கூத்து
அரங்கம் – ஆடல். கூத்து, நாடகம் (Theartre)

## பாரதிக்கை: *இணைக்கை வகை* (பரத. பாவ. 58)

## பாரதி: = பாரதி விருத்தி

*கூத்து வகையுள் ஒன்று.*

கூத்தன் தலைவனாக, நடன், நடி பொருளாகக் காட்டியும் உரைத்தும் வருவது (சிலப். 3: 13 அடியார்க்.)

பரந்திசை எய்திய பாரதி விருத்தியும் (சிலப். 10 கட்.11)

*பாரதி* - verbal style; *அர்த்த மகதி தேசி (பாணி)* (Odra-Magadhi)

*வங்கம், கலிங்கம், மகதம், நேபாளம் முதலிய வட்டாரங்களில் ஆடப்படும் கூத்துப்பாணி* (style)

*←பரதரின் நாட்டிய சாஸ்திரம்(மனோமோகன் கோஸ்) மொழிபெயர்ப்பு* (சுலோகம் 36–42, பக். 197–99/I)

*விருத்தி - பாணி, தேசி* (Style, local usage)

→ ஆரபடி, கைசிகி, சாத்துவதி

## பாரணை ஆளத்தி:

*ஆளத்தி (ஆலாபனை) வகையுள் ஒன்று. இது நெட்டெழுத்தால் நிகழுவது; இது கூத்துடன் நிகழும்.*

பாரணைக்கு எழுவாய் நெட்டெழுத்து... பாரணை கூத்துடன் நிகழும்... (சிலப். 3: 26 அடியார்க்.)

↑ நாடகத்தில் நெடில் எழுத்துக்களால் நீட்டிச் செய்யப்படும் பண் விரிவாக்கம்.

## பாரி:

1. *கொட்டு முழக்குடன் புரியும் இராக்காவல்*

விளம்பும் பாரியும் அடங்கின (கம்ப. ஊர்தே. 158)

2. *இராக்காவலர் பாடல்*

*எடு:- சங்கீதப்பாரி, பறைப்பாரி, மணிப்பாரி*

*← செ. ப. அ 2624*

## பால்:

1. *வேற்றுமை, பாகுபாடு*
2. *வன்பால், பாலை, பாலைவனம்*

அன்பகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பால்கண் (குறள். 78)

## பால சரிதை: → வாலசரிதை

## பாலவம்: *கரணம் பதினொன்றனுள் ஒன்று*

*← செ. ப. அ 2629*

**பாலிகை:=** முளை, முளைக்குடம், முளைப் பாலிகை (முளைப்பாரி)
*முளைப்பாலிகை முன்னை நாளில் வதுவை நாளிலும் எடுக்கப்பட்டது.*
*எடு: சிலம்பு, மங்கல வாழ்த்துப்பாடல்*
விரிந்த பாலிகை முளைக்குட நிரையினர் (சிலப். 1: 58 – 59)
வதுவை, முளை, வட்டம், வாயிதழ், பாலிகை (பிங்க. 3821)

**பாலை:**
1. *ஒருமரம்; குடசப்பாலை* (DED 3773)
பாலை மரச்சிரப்பால் பாலை எனப்பட்டது (தே. நே. 113/11)
*எடு:- பாலைக்காடு - பாலக்காடு* (Palghat)
பாலைநின்ற பாலை நெடுவழி (சிறுபாண்.11)
கொடிறுபோல் காய வால் இணர்ப்பாலை (நற். 107: 3)
வேனிற்காலம்.. தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை...
(தொல். அகத். 5 இளம்)
நிரையேழ் அடுக்கிய நீள் இலைப்பாலை (பரிபா. 21: 13)
பாலையின் பேர் சீவந்தி, சீவனி... (சூடா. 4: 34)
2. *பாலை யாழ், அரும்பாலை, சங்கராபரணம்* (melody of the Barren tract)
*பாலை நிலப் பெரும்பண். இடமுறைத்திரிபின் தலைமைப்பாலை*
வேனில் குன்றத்துப் பாலை (மதுரைக். 313)
அந்நிலப்பாடலும், பாடற்சுவையும் பாலை (திவா. 2211)
நைவளம் பழுநிய பாலை வல்லோன் (குறிஞ். 146)
பாலை என்றது அரும்பாலையையும் சுட்டும் (ப. இ. இ. 31)
தொடைபடு பேரியாழ் பாலை பண்ணி (பதிற். 46: 5)
விரல் கவர் பேரியாழ் பாலை பண்ணி (பதிற். 57: 8)
வல்லோன் தைவரு வள்ளுயிர்ப்பாலை (அகம். 355: 4)
தீம்தொடை நரம்பின் பாலை வல்லோன் (பதிற். 65: 14)
மாறுதலைப் பெயர்க்கும் மருவின் பாலை (பொருந. 22)
↑ மலை நாட்டு இலக்கியமான பதிற்றுப்பத்தில் 'பாலை' என்ற பண் வழக்கு பெரும்பாலும் அரும்பாலையைச் சுட்டுவதாகும்.
3. *தானசுரம்* (semitones)
பன்னிரு கால் திரிக்கப்பன்னிரு பாலையும் பிறக்கும்
(சிலப். 3: 70 – 71 அடியார்க்.)
பாலை ஈரேழு கோத்த பண்ணிஅம்கருவி வீக்கி
(பெரியபு. திரு. நீல. யாழ்ப். 2)
4. *தாய்ப்பண், ஏழுசுரப்பண் (மேளம், கர்த்தா, மேளகர்த்தா* Generative; Hepatonic)
"தற்போதைய நிலையில் மேளகர்த்தா என்று கூறப்படுவது பண்டைய இசைத்தமிழின் பாலை என்பதே..."
(பஞ்சமரபில் இசைமரபு. பக். 197)
5. *பாலைநிலம்*
முல்லையும், குறிஞ்சியும் முறைமையில் திரிந்து ... பாலை என்பதோர் படிவம் கொள்ளும்... (சிலப். 11: 64 – 66)
கோலமுல்லையும் குறிஞ்சியும் அடுத்த சில்லிடங்கள்
நீலவாட்படை நீலி கோட்டங்களும் நிரந்து
காலைவேனிலில் கடும்பகல் பொழுதினைப் பற்றிப் பாலையும்
(பெரியபு. திருக்குறிப். 15)
*குறிஞ்சி திரிந்து பாலையானது :*
சீரருங் கணிச்சியோன் சினவலின் அவ்வயில்
ஏறுபெற்று உதிர்வனபோல் வரை பிளந்து இயங்குநர்
ஆறுகெட விலங்கிய அழல் அவிர் ஆரிடை (கலித். 2: 6 – 8)
*முல்லை திரிந்து பாலையானது :*
வானம் ஊர்ந்த வயங்கு ஒளி மண்டிலம்
நெருப்பு எனச் சிவந்த உருப்பு அவிர் அம்காட்டு
இலைஇல மலர்ந்த முகைஇல் இலவம் (அகம். 11: 1 – 3)
6. *திணை*
பாலை சான்ற சுரம் சேர்ந்து ஒரு சார் (மதுரைக். 314)
7. *ஒரு மலர்* (silvery leaved ape flower)
தில்லை, பாலை, கல் இவர் முல்லை (குறிஞ். 77)
8. *பாலையாழ் - முல்லை - முல்லையாழ் - செம்பாலை அரிகாம்போதி. முல்லைநிலப்பெரும்பண்; தமிழிசையின் (வல முறைத்திரிபு) தலைமைப் பாலை.*
செந்தீத்தொட்ட கருந்துளைக் குழலி இன்தீம்பாலை
(பெரும்பாண். 179 – 80)
தாரத்து உழைதோன்றப் பாலையாழ் (பஞ்ச. 22)
பாலையாழ் பழித்த (கம்ப. சூர்ப்பன. சூழ்ச். 95)
... பாலையாழுள்ளே ஏழு பாலை இசை பிறக்கும்
(சிலப். 17: (13) அடியார்க்)
பாலையாவன: செம்பாலை... விளரிப்பாலை என ஏழும்
(சீவக. 619 உரை.)
இடனுடைப் பேரியாழ் பாலை பண்ணி (பதிற். 66: 2)
பாலை, நெய்தல் பாடியதும் (திருக்களிற்றுப்படியார்.)
பாலையாழொடு செவ்வழி பண்கொள,
மாலை வானவர் வந்து வழிபடும் (தேவ. 5: 12: 10)
மாலைநேரம் குறிப்பிடப்படுவதால் இங்கு மாலைக்குரிய முல்லையாழையே 'பாலை' என்ற சொல் குறிப்பிடுகின்றது.
காரும் மாலையும் முல்லை (தொல். அகத். 6)
பண்ணின் இன்மொழியாழ் நரம்பில் பெற்ற பாலையாகி இங்கே புகுந்து (பாசுரம். 7: 3: 7)
பண்வர்க்கத்திலே இனிய பேச்சையுடைய யாழ் நரம்பிலே யாழிலே பிறக்கப்பட்ட பாலையாகிய பண்ணாம் (பெரியவாச்சான்பிள்ளை)
பாலையாழ் மழலை யானைக் காப்பணி பயின்ற செல்வம்
(சூளா. 1547: 3)
பாலையாழ்ப் பாட்டுகந்தான் (தேவா. 1: 108: 10)
பாலையாழ்ப்பாண் மகனே (திணைமாலை 133: 1)
பாலையாழ் (கம்ப. ஆரண்ய. 654)
பாற்பட நின்ற பாலைப்பண் (சிலப். 3: 149)
மங்கலப் பண்ணாய் நரப்படைவும் உடைத்தாயிருக்கிற பாலைப்பண்ணை (மேலது உரை.)
ஒருதிறம் பாடினி முரலும் பாலை அம் குரலின் (பரிபா. 17: 17)
*(பாலை அம்குரல் - குரல்பாலை- குரல் பண் - குரல் - குரல் குரலாக வரும் பாலையாழ் - அரிகாம்போதி)*
குரல்குரலாக வருமுறைப்பாலையில் (சிலப். 28: 33)
↑ 'பாலையாழ்' என்பது வலமுறைத்திரிபில் அதன் தலைமைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி) யையும், இடமுறைத் திரிபில் அதன் தலைமைப் பாலையான அரும்பாலை யையும் (சங்கராபரணத்தை) குறிப்பது. எனவே இரு முறைகளின் தலைமை கருதி இரு பண்களுக்கும் 'பாலையாழ்' என்ற சிறப்புப்பெயர்.
← *த. க. க. 286*/III

**பாலை ஏழு:** → ஏழ்பெரும் பாலை

**பாலை ஈரேழு:**
*யாழில் புரிநரம்பு (மெட்டு) கட்டிய முறை)*

*ம ப த நி - ச ரி க ம ப த நி - ச ரி க*

*4 + 7 + 3 = 14*

மேலது உழை கீழது கைக்கிளை (சிலப். 3)
பாலை ஈரேழு கோத்த பண்ணி அம்கருவி வீக்கி
(பெரியபு. திருநீல. யாழ். 2)
*(பாலை - சுரம், சுரத்தானம்)*

**பாலைத்திரிபு:** → பண்ணுப்பெயர்த்தல்.

**பாலைத்திறம்:** → பண் - திறம்

**பாலைப்பண்ணியல்:** → பண் - பண்ணியல்

**பாலைப்பழம்:** *முறோளம் பழம் 600க்கு பணம் 6 பாலை பழம் 3 மரக்காலுக்கு பணம் 1* (TDI *5:92; த. க..சொ. 423*)

**பாலைப்பறை:** = ஆறெறிபறை; சூரங்கோட்பறை *துடி , பாலைநிலப்பறை*
துடியே பாலை வேடர் தம் பறை (சூடா. 7: 41)
துடியே, பாலை வேடர் தோற்பறையே (திவா. 1229)
ஆறெறி பறையும் சூறைச் சின்னமும் (சிலப். 12: 40)

**பாலை பண்ணல், பாலை பெயர்த்தல்:**
→ பண்ணுப் பெயர்த்தல்

**பாலையாழ்:** → பாலை[8]

**பாவகை:** (Major Metre)
*ஆசிரியம், வெண்பா, வஞ்சி, கலிப்பா, மருட்பா என்ற ஐந்தும் பாவகைகளாகும். இவை மேலும் 25 உள் வகைமை பெறும்:*
ஆசிரியம், வஞ்சி, வெண்பா கலியென
நாலியற்றென்ப பாவகை விரியே (தொ. செ. 101)
1) வெண்பா வகை
குறள், சிந்தியல், நேரிசை, இன்னிசை, பல்தொடை,
கலி வெண்பா – 6
2) நேரிசைஆசிரியம், இணைக்குறள், நிலைமண்டிலம்,
அடிமறிமண்டிலம் – 4
3) கலிப்பா – நேரிசைஒத்தாழிசை, அம்போதரங்கஒத்தாழிசை, வண்ணகஒத்தாழிசை, வெண்கலிப்பா, தரவுகொச்சகம், தரவிணைக்கொச்சகம், சில்தாழிசைக்கொச்சகம், பல்தாழிசைக் கொச்சகம், மயங்கிசைக்கொச்சகம் (இயல் மற்றும் அயல்) – 9
4) வஞ்சிப்பா – குறளடி, சிந்தடி – 2
5) மருட்பா – புறநிலை, வாயுறை, செவியுறை, கைக்கிளை – 4
← *த. இ. பே. 83,15*

**பாவம்:** *அவிநயம்* (Gesture expressive of emotions)
பாவமோடு அராகம் (திருவிளை. கால்மாறி. 8)

**பாவரசம்:** → முத்திரைச்சுவை

**பாவனி:** *பெரும்பண்களுள் ஒன்று* (சங். சந். 47)

**பாவை:**
1. = பொம்மலாட்டம், பாவைக் கூத்து, நிழலாட்டம், தோல் பாவையாட்டம், தோல் பாவை.
*பொம்மலாட்டப் பொம்மைபோல் ஆடும் கூத்து.*
2. *திருமகள் ஆடியது*
திருவின் செய்யோள் ஆடிய பாவையும் (சிலப். 6: 61)
திருவின் செய்யோள் ஆடிய பாவையின் (மணி. 5: 4)
*பதினொரு ஆடலில் அவுணர்வீழ கொல்லிப்பாவை வடிவில் திருமகள் ஆடிய ஆடல்.*
பாவை என்பது திருமகள் ஆடல் (திவா. 1756)
3. *ஆண்டாள் பாடிய திருப்பாவை*
தொல்பாவை பாடி அருளவல்ல பல்வளையாய்
(திருப்பாவை தனியன்.)
4. *ஆடல் மகள்*
முழவு முகம் புலர்ந்து முறையின் ஆடிய
விழவு ஒழி களத்த பாவை போல (நற். 360: 2)
5. *தெய்வம் ஏறப்பெற்று ஆடும் பெண் பூசாரி*
வெறி கொள் பாவையின் (அகம். 370: 14)
அல்லிப்பாவை ஆடுவனப்பு ஏய்ப்ப (புறம். 33: 17)
பொறி அமை பாவையின் தூங்கல் (அகம். 98: 1. 98)
*(பாவை - பொம்மை, பெண்; தூங்கல் - ஆடல்)*

**பாவைக் கூத்து:** → நிழலாட்டம், பாவை

**பாவைப்பாட்டு:**
*வெண்பா யாப்புடன் நாற்சீரடி எட்டால் இசையுடன் துயிலெடை நிலையாகப் பாடப்படும் பாடல்.*
எடு: ஆண்டாளின் திருப்பாவை; வாசகரின் திருவெம்பாவை
அவிரோதி நாதர் (சமணர்) – திருவெம்பாவை.
← *த. இ. பே. 139-140/16,*→ பாட்டாங்கம்

**பாவோட்டம்:** *நாட்டியம்*
பாவோட்டம் ஓடுவது நட்டுவன்மார்... (பணவிடு 190)

**பாழ்த்தல்:** *இனிமை அல்லாதல்*
*பாழ் - பாழ்த்த - இனிமையற்ற*
பாழ்த்த குரல் எடுத்துப் பாடினாள் – தனிப்பாடல்
← *தே. நே. 288/10*

**பானை:** → பத்தர்

# பி

## பிகு:
எடுப்பான குரல், எடுத்த குரல் (high pitch, strong voice)
← செ. ப. அ. 2645

## பிசாசம்: → பசாசம்

## பிடாரர்:
ஓதுவார்; தேவாரம் பாடுவோர்; திரும்பதியம் விண்ணப்பம் செய்வோர்.
திருப்பதிகம் விண்ணப்பஞ் செய்ய உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத் தெண்மரும். . .
(தஞ்சைப் பெரிய கோவில் வடமேற்கு மூலைக்கல்வெட்டு)
(தெ. இ. க. 2 65, த. க. சொ. 426)
இக்கல்வெட்டில் 48 பிடாரர் பெயரும் பொறிக் கப்பட்டுள்ளது.
ஆதித்த பிடாரர்க்கு இவரேப் பகல் விளக்கும்
(தெ. இ. க. 23 314)
← கருணாமிர்த. 155 - 56

## பிடாரன்: இசைகாரன்
பிடாரன் நாராயணன் (தெ. இ. க. 2 488)

## பிடிகள்: (Catchphrase); பகாட் (இந்துத்தானி)
சில சுரக்கூட்டங்கள் (தொகுதி) பண்ணின் சாயலைத் தெற்றெனக் காட்டும். அவை அப்பண்ணிற்குரிய பிடிகள் எனப்படும்.
சான்று: அம்சத்தொனியின் 'பநிச்' என்ற பிடி.

## பிண்டி:
= ஒற்றைக்கை, இணையாவினைக்கை, ஒற்றைக்கை வண்ணம், பிண்டிக்கை (அசம்யுதஹஸ்தம்)
நாட்டியத்தில் ஒரு கையால் செய்யும் அவிநயம் (முத்திரை)
பிண்டியும், பிணையலும் எழிற்கையும் தொழிற்கையும் (சிலப். 3: 18)
பிண்டி – ஒற்றைக்கை (மேலது. அரும்.)
இணையாவினைக்கை எனினும், ஒற்றைக்கை எனினும், பிண்டிக்கை எனினும் ஒக்கும் (மேலது. அடியார்க்.)
(பிண்டி = பிடி, வடிவம்)

## பிண்டிக்கை: → பிண்டி

## பிண்டிபந்தம்: → குழுநடனம்

## பிணப்பறை: சாப்பறை
இறப்புக்குக் கொட்டப்படும் பறை.
அன்றவர்க்கு ஆங்கே பிணப்பறையாய் (நாலடி. 23)

## பிணக்கானம்: → ஒப்பாரி

## பிணைக்கை:
= பிணையல்கை, இரட்டைக்கை, பிணையல், இரட்டைக் கை வண்ணம், இணைக்கை.
இரண்டு கைகளையும் இணைத்து நாட்டியத்தில் செய்யப்படும் அவிநயம் (முத்திரை) இரு கைகளும் இணைதல் ஆதலால் இணைக் கையாயிற்று.
பிண்டியும், பிணையலும் எழிற்கையும் தொழிற்கையும் (சிலப். 3:18)
பிணையல் - இரட்டைக்கை
இணைக்கை எனினும், இரட்டைக்கை எனினும், பிணையல் எனினும் ஒக்கும். (மேலது அடியார்க்.)

## பிணையல்: → பிணைக்கை, இணைக்கை

## பிணையல்கை: → பிணைக்கை, இணைக்கை

## பின்பாட்டு:
1. = இடைப்பாட்டு
முதலில் ஒருவர் பாடியதும் அதனையோ அல்லது அதனை ஒட்டியோ மற்றவர் பாடுவது; தலைமைப் பாடகனுடன் இயைந்து (அனுசரித்து) பாடுவது.
ஒப்பு: தலைப்பாட்டுக் கூத்தியும் இடைப்பாட்டுக் கூத்தியும்
2. பின்பாட்டுப் பாடுவோன் (vocal accompanist)

## பித்தம்: கூத்தின் வகையுள் ஒன்று.

## பித்தளைக்குழல்:
பித்தளை என்ற உலோகத்தால் செய்யப்பட்ட

ஊதுகருவி.
எடு:– எக்காளம், கௌரிகாளம், திருச்சின்னம்.

**பிபாசு:** பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 104)
இன்றைய பூபாளம் ஆகலாம்
↑ பூபாளம் – பிபாசு (இந்துத்தானி)

## பியந்தை:
பண்களில் ஒன்று; தேவாரத்துள் வருவது.
நவிர், படு, குறிஞ்சி, பியந்தை இந்நான்கும்
மருதயாழின் திறன் ஆகும்மே . (திவா. 1879)
காந்தாரமாகிய பியந்தையாம் (திருமுறைகண்டபுராணம் 37)
→ பியந்தைகாந்தாரம்; காந்தாரம்

## பியந்தை காந்தாரம்:
ஒரு பண்; தேவாரத்துள் வருவது
காந்தாரமாகிய பியந்தையாம் (திருமுறைகண்டபுராணம் 37)
↑ பியந்தை, காந்தாரம், காந்தாரமாகிய பியந்தை என்ற சொல்லாட்சிகளால் இங்கு குறிப்பிடப்படும் பண் – காந்தாரம் ஆகலாம்.
மேலும் இன்று வழக்கிலுள்ள கர்நாடகதேவகாந்தாரி (ஆபேரி, பீம்ப்ளாஸ்) மருதயாழ்த் (கரகரப்பிரியா) திறனே (திவா. 1879)
கர்நாடக தேவகாந்தாரி – சுத்ததன்யாசியும், கரகரப்பிரியாவும் சேர்ந்தது.
சுத்ததன்யாசி– ச க[1] ம[1] ப நி[1] ச் – ஏறுநிரல்
கரகரப்பிரியா– ச் நி[1] த[2] ப ம[1] க[1] ரி[2] ச – இறங்குநிரல்
(காந்தாரம் > காந்தாரி > கர்நாடகதேவகாந்தாரி)
ஒப்பு:– கல்யாணம் > கல்யாணி
→ பியந்தை

**பியாக்:** → பியாக்கடை

## பியாக்கடை:
= பேக்கடை, பேக்கடா, பியாகடம், பியாக்
பண்களில் ஒன்று (சங். அக; பரத. இராக. 102)

**பியாகடம்:** → பியாக்கடை

## பிர்க்கா:
ஆளத்தியுள் வரும் இசைச்சுருள்; பாடுகையில் வேகமாக வைக்கப்படுவது; தானத்தில் மேலே சென்று கீழே இறங்கும் இசைச் சுரத்தொடர். (raising to a high pitch and then lowering )
← செ. ப. அ. 2667

**பிரகதி:** = பிரதிகை
தும்புருவினுடைய யாழ் (பரத. ஒழிபி. 15)

**பிரகஸ்தம்:** → விரிந்தகை

## பிரகலை:
பாடல் உறுப்பு நான்கனுள் ஒன்று.
உக்கிரம், துருவை, ஆபோகம், பிரகலை என இவை (சிலப். 3: 150 உரை)

**பிரகாலம்:** → மருப்பு

**பிரடை:** = பிருடை
முருக்காணி என்ற யாழ் உறுப்பு (tuning key of a yal string; screw )

**பிரத்தாரம்:** → பகுத்துப்பரப்பல்

## பிரத்தி ஆலீட நிலை:
அறுவகை ஆடல் நிலையுள் ஒன்று. (நிலை - Pose)
வலக்கால் முந்துற்று இடக்கால் மண்டிலித்தல்.
வலக்கால் முந்துற்று இடக்கால் மண்டிலித்தல் பிரத்தி ஆலீட நிலையே (பிங்க. 1472)
← சிலப். 3: 12 அடியார்க். அடிக்.

## பிரத்தி யாகதம்:
உள்ளோசை (கமகம்) பத்தனுள் ஒன்று (பரத. இராக. 24)
விட்டுவிட்டுப் பாடவேண்டிய உள்ளோசை (succession of staccato notes)
← ஆங்கிலம் - தமிழ்ச் சொற்களஞ்சியம் பக். 989

**பிரதிகை:** → பிரகதி

**பிரதி மத்திமம்:** → வல்உழை

**பிரதிமுகம்:** நாடகச் சந்தி ஐந்தனுள் ஒன்று.
பிரதிமுகமாவது:– அங்ஙனம் முளைத்தல் முதலாய் இலை தோன்றி நாற்றாய் முடிவது போல்வது (சிலப். 3: 13 அடியார்க்.)

**பிரந்தாரவ சாரங்கம்:** = பிருந்தாவன சாரங்கா
பண்களில் ஒன்று (பரத. இராக. 104)

## பிரபந்தம்:
அகக்கூத்திற்குரிய 28வது இசைஉரு (musical composition)
அகக்கூத்திற்குரிய உருவாவன:–
கந்தமுதலாகப் பிரபந்த உரு ஈறாக இருபத்தெட்டும் (சிலப். 3: 14 அரும்)
பிரபந்த மென்றது – அடிவரையறையின்றிப் பலதாளத்தாற் புணர்ப்பது (மேலது அடியார்க்.)
↑ தற்கால தாளமாலிகை ஆகலாம்.

**பிரபந்தம் சேவித்தல்:**
*பெருமாள் கோவிலில் மாலவன் திருமுன் நாலாயிரப் பாசுரங்களை (பிரபந்தம்) ஓதுதல்.*

**பிரமதாளம்:** *சச்சரி என்ற தாளம்*

**பிரமரம்:** → வண்டு

**பிரமரி:**
*ஆடல் (கூத்து); புறக்கூத்து வகையுள் ஒன்று.*
புறக்கூத்திற்குரிய கூத்தாவன:– பெருநடை, சாரியை, பிரமரி, இவை முதலாயினவும் பதினோராடலுமான கூத்துக்களுமாம் (சிலப். 3: 16 உரை)

**பிரலாபதரு:**
*நாடகத்தில் பாடப்படும் புலம்பல்பாடல் அரிச்சந்திரன் கூத்தில் வரும் சந்திரமுகியின் பாடல் பிரலாபதரு வகையைச் சேர்ந்தது.*

**பிரவிசாரம்:** *பரதநாட்டிய வகையுள் ஒன்று.*
விருத்தியே, பிரவிசாரம், பூமண்டலம்... (திருவிளை. கால்மாறி. 9)

**பிரவேசதரு:**
= பிரவேசிகதரு, அறிமுகதரு, வருகைத்தரு
*நாடகத்தின் தொடக்கத்தில் நாடக உறுப்பினர்களை அறிமுகப்படுத்தும் பாடல்.*

**பிரவேசிகதரு:** → பிரவேசதரு

**பிரஸ்தாரம்:** → பகுத்துப்பரப்பல், பின்னல்

**பிராங்கணம்:** = பிராங்கம்
*பறை வகையுள் ஒன்று* (யாழ். அக.)

**பிராங்கம்:** → பிராங்கணம்

**பிரிங்க நடனம்:**
*மலரின் மேல் வண்டு ரீங்காரமிட்டுச் சுற்றிச் சுற்றி வருவது போல் ஆடும் நடனம்.*

**பிரிந்திசை:**
*பலதளைகளும் விரவி வருவதால் உருவாகும் செய்யுள் ஓசை வகையுள் ஒன்று* (a rhythm in verse)
*← செ. ப அ. 2702*

**பிரிந்திசைக்குறள்:** → அம்போதரங்கம்

**பிரிந்திசைத்துள்ளல்:**
*பலதளைகளும் விரவி வரும் கலிப்பா ஓசை வகையுள் ஒன்று.*
*← யா. கா செய். 1*

**பிரிந்திசைத்தூங்கல்:**
*பலதளைகளும் விரவிவரும் வஞ்சிப்பா ஓசை வகையுள் ஒன்று.*
*← யா. கா. செய். 1*

**பிரிய தரிசனம்:** → கண்கூடுவரி

**பிருகதீ:**
*யாழ் வகையுள் ஒன்று.* (தக்கயாக, 623 விசேடஉரை.)

**பிருட்டகம்:**
*கூத்தின் அங்கக்கிரியை பதினாறனுள் ஒன்று.*
ஈரெண் வகைய அங்கக்கிரியையும் (சிலப். 3: 13அடியார்க்.)
அங்கக்கிரியை பதினாறாவன: – சரிகை... பிருட்டகம்... என்பன. (மேலது அடியார்க்.)

**பிருடை:** → பிரடை

**பிருந்தாவனச் சாரங்கா:** →பிரந்தாரவ சாரங்கம்

**பிரும்மமுத்திரை:**
*கையை விரித்தும் பெருவிரலினை நடுப்பணித்திடப் பிடிப்பதாகிய முத்திரை வகை.*
*← செ. ப. அ. 2706*

**பிந்திய எடுப்பு:** → பின் எடுப்பு

**பில்லங்குழல்:** → புல்லாங்குழல்

**பில்லாங்குழல்:** → புல்லாங்குழல்

**பிலகரி:** *பண்களில் ஒன்று*

**பிலாக்கணம்:** → ஒப்பாரி

**பிள்ளங்குழல்:** → புல்லாங்குழல்

## பிள்ளைக்கவி: → பிள்ளைத்தமிழ்

## பிள்ளைச்சரித நாடகம்: → வாலசரிதை

## பிள்ளைத்தமிழ்:

= பிள்ளைப்பாட்டு, பிள்ளைக்கவி

*சிற்றிலக்கியங்களுள் ஒன்று. ஆண்பால் பிள்ளைத் தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என இரு வகைப்படும். பாட்டுடைத் தலைவனை அல்லது தெய்வத்தை குழந்தையின் பல பருவங்களாகப் பாடும் இலக்கிய வகை.*

எடு:– குமரகுருபரரின் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் மற்றும் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்.

## பிள்ளைப்பாட்டு: → பிள்ளைத்தமிழ்

## பிள்ளையாட்டு:

*புறத்திணைத் துறைகளில் ஒன்று. காளைப் பருவத்தான் ஒருவன் போரில் வெற்றியுறின் அவனுக்கு நாட்டின் பகுதியைப் பறைகள் கொட்டி ஆரவாரித்துக் கொடுத்து மகிழ்வது.*

வாள் மலைந்து எழுந்தோனை மகிழ்ந்து பறை தூங்க நாடவற்கு அருளிய பிள்ளையாட்டு. (தொல். புறத். 5)

*← த. க. க. 197/II*

## பிறக்கும்: = தோன்றும்

*இணையாகி ஒலிக்கும்; இரண்டறக் கலந்து ஒலிக்கும் ஏழாம் நரம்பு (இணை) நின்ற நரம்புடன் இணைந்து ஒலிக்கும்.*

தாரத்து உழை பிறக்கும்; உழையில் குரல் பிறக்கும்...

(சிலப். 17 (13) அடியார்க்.)

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 7 | | | | | 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | | | | | 0 | 1 |

*நி$^1$ ம$^1$ - நி$^1$ (தாரம்) ; ம$^1$ (உழை)*

*0→ 7*

*ம$^1$ ச - ம$^1$ (உழை) ; ச (குரல்)*

*0→ 7*

ஒப்பு: – தாரத்து உழை தோன்ற... (பஞ்ச. 22)

தாரத்துள் தோன்றும் உழை, உழையுள் தோன்றும் ஒருங்குரல் (மேலது 17)

## பிறநிலக்கோவை: = அந்நிய ஸ்தானசுரம்

*ஒரு சுரம் அதற்குரிய இடத்தை விடுத்து, அடுத்த கோவையின் இடத்தில் ஒலித்தால், அச்சுரம் பிறநிலக் கோவையாகும்.*

எடு:– கானடா பண்ணில் 'சரிபக' என்ற இடத்தில் கைக்கிளை (க) யானது இளி (ப) தொடங்கி ஒலிப்பதால், இக்கைக்கிளை பிறநிலக் கோவையாகின்றது.

*← இ. து. த. சொ. பக். 18*

## பிறழ்ச்சிப்பண்: = வக்ரராகம் (tortuous scale)

*ஒரு பண்ணில், இசையின் சுரங்கள், வரிசையில் செல்லாது முன் பின்னாக இடம் மாறி வந்தால் அப்பண் பிறழ்ச்சிப்பண் ஆகும்.*

எடு.:– ஆனந்தபைரவி

இப்பண்ணின் ஏறுநிரல் – ச க ரி க ம ப த ப ச்.

*←த. வ. பக். 96;இ. து. த. சொ. பக். 24-25; த. க. க. 118/II*

## பிறைக்கை: = இளம்பிறை

*பெருவிரல் ஒழிய ஆள்காட்டி விரலும், நடுவிரலும், மோதிர விரலும் சேர்ந்து அகம் வளைவது.*

இளம்பிறை:– "சுட்டும், பேடும், அநாமிகை, சிறுவிரல், ஒட்டி அகம் வளைய ஒசித்த பெருவிரல், விட்டு நீங்கும் விதியிற்றென்ப" (சிலப். 3: 18 அடியார்க்.)

(சுட்டு – ஆள்காட்டி விரல்; பேடு – பேடி – நடுவிரல்; அணிவிரல் – அநாமிகை – பவித்திர விரல் – மோதிர விரல் (மேலது அடிக்.)

*(சிறுவிரல் - சுண்டு விரல்)*

## பிறைக்கொம்பு:

*அரைவட்டவடிவான பித்தளை ஊதுகொம்பு. பஞ்ச வாத்திய இசையிலும் மற்றும் கேரளக் கோவில்களிலும் இக்கருவி இசைக்கப்படுகின்றது. இது ஒரு சின்னமாக (அடையாளமாக)ப் பயன் படுத்தப்படுகிறது.*

## பின் இயைபு:

*இரண்டாம், நான்காம் சீரில் இயைபு வரப்பாடுவது.*

(யா. கா. ஒழிபி. 5 உரை.)

## பின் எதுகை:

*இரண்டாம், நான்காம் சீரில் எதுகை வரும்படி பாடுவது.* (யா. கா. ஒழிபி. 5 உரை.)

## பின்எடுப்பு:

= பிந்திய எடுப்பு, அதீத எடுப்பு, அதீதகிரகம்

*பாடலை முன்தொடங்குதல்; தாளத்தைப் பின்பு எடுத்தல். அதாவது பாட்டைத் தொடங்கிய பின் தாளம் முழக்குதல்.*

*(கிரகம் - எடுப்பு - clef)*

## பின்தித்தித்தெய் அடைவு:

*அரைமண்டியிலிருந்து வலதுகாலை இடது காலின் பின்குத்தி வைத்து, இடது காலை அதன் இடத்திலேயே தட்டி, பின்பு வலது காலை அதன் பழைய அரை மண்டி நிலையிலேயே தட்டுவது.*

**பின்தேர்க்குரவை:** = பேய்க்குரவை

*போர் வெற்றிக்குப் பிறகு தேரின் பின்னின்று கொற்றவை முன் பேய்மகளிர் ஆடும் பேய் நடனம். இது வாகைத்திணையின் பாற்பட்டது.*

ஒன்றிய மரபின் பின் தேர்க்குரவையும் (தொ. புறத். 76: 6)
பின்தேர்க்குரவை பேயாடு பறந்தலை (சிலப். 26: 241)
பின்தேர்க்குரவையிலே ஆடுதலில் பேய்க்குரவையாயிற்று (மேலது அரும்.)
பேய்மகள் குரவையில் தொடுத்து (சிலப். 27: 31)

← *புறம் 371*

**பின்முடுகு வெண்பா:**

*வெண்பாவின் பின்னிரண்டு அடிகள் வெண்டளை பயிலாது முடுகியலாக அமைந்து வருவது*

எடு:– அன்னமே முநாள் அணைந்து கலவிதந்த
மன்னன்வி நாயகன்மால் வாரானேல் – என்ன சுகம்
நானொருத்தி யேதனித்து நாதனற்று மேதினிக்குள்
ஏனிருக்கி றேனிதைச்சொ லாய்.
(நேரிசை வெண்பா. இலக்கி. களஞ். பக். 70)

**பின்னப் பகுப்பு முறை:** → விகிதப்பகுப்பு முறை, இயல்பகுப்பு முறை

**பின்னம்:**

*துளைக்கருவிகளுள் ஒன்று.*

தட்டை தண்ணுமைப் பின்னர் இயவர் (ஐங். 215: 3)
*(பின்னர் - பின்னம் வாசிப்பவர்)*

↑ பின்னம் – நாகபின்னம் – நாக்பின் என்றாகியிருக்கலாம்.

**பின்னர்ப்பாகம்:** = உத்தராங்கம், தாரபாகம்

1. *முடிப்பும், முடிப்பு சுரங்களும் ஆகிய இரண்டு பகுதியும் சேர்ந்தது.*
2. *தாரபாகம், உத்தராங்கம்* (Upper Tetrachord).

'சரிகம, பதநிச்' *என்ற சுர வரிசையில்* 'பதநிச்' *என்பது பின்னர்ப்பாகம்.*

வன்மையில்கிடந்த தாரபாகமும் (சிலப். 3: 72)
பின்னர்ப்பாகம் ஸ்தாயியில் உத்தராங்கம் (சிலப். இசை நுணுக். பக். 38)

→ தாரபாகம்

**பின்னல்:** = பிரஸ்தாரம்

*தாளம் மற்றும் சுரப்பின்னல்கள்; உறழ்ச்சிகள்* (Permutation & Combination of notes/time units)

எடு:– சுரப்பின்னல் – சுரப்பிரஸ்தாரம்
தாளப்பின்னல் – தாளப்பிரஸ்தாரம்

**பின்னல் கோலாட்டம்:**

*பாடிக்கொண்டும், கோலாட்டம் ஆடிக்கொண்டும் கயிறுகளை அழகிய வடிவில் பின்னி பிறகு அவிழ்க்கும் ஒருவகை நாட்டார் கோலாட்டம்.*

# பீ, பு

## பீபிலகயதி: → எறும்புக்கேளலம்

## பீலி: *சிறு சின்னம் ; முக வீணை போன்ற கருவி.*

பீலி சிறுசின்னம் (பிங்க. 1267)
பீலி சின்னம் (சூடா. 7: 35)
பீலி சிறுசின்னம் (திவா. 1227)
கதிர்த்த தண்பூணி கம்புதாழ் பீலி (சீவக. 2108)
இணையில் எழுந்த தாழ்பீலி (சீவக. 2222: 3)
பீலி – சிறுசின்னம் (மேலது நச்சர்)

## புகல்:

1. *சுரம்.*
*புல்லாங்குழலில் காற்று புகுந்து சுரமாகி வருவதால் சுரத்திற்குப் புகல் என்று பெயர். யாழின் வழியாக நரம்பு என்பது சுரத்தைக் குறிப்பது போல், குழலின் வழியாகப் புகல் எனப்பட்டது.*
ஆய இசைப்புகல் நான்கின் அமைந்த புகல் வகை எடுத்து (பெரியபு. ஆனாய. 26)
புரிகுழல் அளகத்துப் புகல் ஏக்கற்று (சிலப். 2: 20)
புகல் – புகுதற்கு (மேலது அடியார்க்.)
← *த. க. க.* 288/III
2. *பாடுகின்ற ஒருமுறை* (mode of singing)
ஆய இசைப்புகல் நான்கின் (பெரியபு. ஆனாய. 26)
புகல் நான்காவன:– ஸ்திதி, பிரக்கிரமம், சஞ்சாரம், மூர்ச்சனை

## புகழ்க்கூத்து: = வென்றிக்கூத்து

*ஒருவரின் புகழை ஏத்திப்பாடி ஆடுவது.*
புகழ்க் கூத்தியன்ற மதிவாணர் நாடகத்தமிழ் நூல் (அடியார்க். சிலம்பு. பாயிர உரை)
இது வசைக்கூத்திற்கு மறுதலையானது.
இருவகைக் கூத்தாவன:– வசைக்கூத்து, புகழ்க்கூத்து (சிலப். 12 அடியார்க்.)
... மாற்றான் ஒடுக்கமும் அன்ன உயர்ச்சியு மேம்படக் கூறும் வென்றிக் கூத்தே. (சிலப். 13 அடியார்க்.)

## புகழ்வோர்:

*மன்னரின் புகழைப் பாடும் சூதர், மாகதர், வந்தியர் முதலியோர்* (Prof. Penegyrists)
மாகதர், வந்தியர், சூதர்... புகழ்வோர் பெயரே (திவா. 266)

## புகைக்கை: = தூபம், தூபக்கை

*ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று.*
*"நிமிர்ந்த நடுவிரலும் சுட்டுவிரலும் பாதிப்பட வளைய நிற்பது; என்னை*
"தூபமென்பது துணியுங்காலை விளங்கு கத்தரிகை விரலகம் வளைந்து, துளங்கு மென்ப துணிபறிந் தோரே "
(சிலப். 3: 18 அடியார்க்.)

## புங்காரம்:

*மத்தளத்தின் வலக்கைப் பக்கம்* (the rightside of a drum)

## புஜங்கலளிதம்: → இன்பநடம்

## புட்கரம்:

1. பறையில் அடிக்கும் இடம் (யாழ். அக.) (drum head)
2. வாத்திய வகையுள் ஒன்று (யாழ். அக.)
3. நாட்டியநூல் (யாழ். அக.)(a treatise on dancing)

## புட்பறை: *பறை வகையுள் ஒன்று.*

கிணை– தடாரி ; புட்பறை என்பதும் கொள்க.
(சிலப். 10:139 அடியார்க்.)

## புஷ் பாஞ்சலி: → மலர் வணக்கக்கை

## புட் பாஞ்சலி: → மலர் வணக்கக்கை

## புட்பபாணம்: *வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

சிந்து... புட்பபாணம்... கோத்தவரிக்கூத்தின் குலம்.
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## புட்பபுடம்:→ மலர் கூடைக்கை

## புட்பாஞ்சலி: →அலாரிப்பு

## புதுவது புனைந்த திறம்:

*புதிய புதிய பண்களை உருவாக்கும் திறம்.*

எண்ணுமுறை நிறுத்த பண்ணினுள்ளும்
புதுவது புனைந்த திறத்து (அகம். 352: 15 – 16)
*(எண்ணுமுறை நிறுத்த பண் - ஏற்கனவே உருவாக்கி அறுதி செய்யப்பட்ட பண்.)*
↑ பண்டைத்தமிழர் புதிய பண்களை உருவாக்கிய வரலாற்றை இத் தொடர் சுட்டுகிறது.

## புயங்க நட்டம்: → பாம்பு நட்டம்

## புரவித்தாளம்:
*குதிரையோட்டம் தாளத்தில் அமைந்தது.*
பாணி பிழையா மாண்வினைக் கலிமா (அகம். 360: 11)
பந்துபிழைப்பன்ன பாணிப்பல் அடிச் சில்பரிக்குதிரை...
(அகம். 105: 9 – 10)
வயங்குசிறை அன்னத்து நிரை பறை கடுப்ப
நால்குடன் பூண்ட கால் நவில் புரவி (அகம். 234: 3 – 4)
*(இது நாலன் நடை தாளத்தில் குதிரையோட்டம் அமைந்ததைக் காட்டுவது)*
பாய் நிரைப்புரவி அன்னப் புள்ளெனப் பாரில் செல்ல
(கம்ப. எழுச்சி. 68)

## புரி:
1. *சங்கு*
புரி ஒருகைபற்றி (பாசுரம். 2112)
2. *சுருள்*
புரிகுழன் மடந்தை (சீவக. 2688)
புரிகுழன் மாதர் (சிலப். 14: 37)
3. *யாழின் புரிநரம்பு*
சுகிர்புரி நரம்பின் (மலைபடு. 23)
மரல்புரி நரம்பின் (பெரும். 181)
புரியடங்கு நரம்பு (சிறுபாண். 34)
புரிநெகிழ்ப்போர் போன்றனகை (பரிபா. 18: 27)
4. *முறுக்கு*
பொன் வார்த்தன்ன புரி அடங்கு நரம்பின் (பெரும்பாண். 15)

## புரிதம்:
*உள்ளோசை (கமகம்)களுள் ஒன்று.* (பரத. இராக. 24)
(Tremolo)
← *செ. ப அ. 2773*

## புரிநரம்பு:
= கோல், தொடை, தொடையல், நுண்கோல், திண்கோல், கணைக்கோல், தானநிலைக்கோல், மெட்டு (Fret)
*நேர்கோட்டு யாழில் சுரங்களைக் காட்டும் சரியான இடங்களில் திவவோடு சேர்த்துக் கட்டப்படும், முறுக்குடைய (புரி) நரம்பு; இதை நேர்கோட்டு யாழில் மட்டுமே கட்டமுடியும்.*
துய்யறந் திரண்ட திண்கோல் (சீவக. 559)
தொடை அமை கேள்வி இடவயின் தழீஇ (பெரும்பாண். 16)
கேள்வி போகிய நீர்விசிச் தொடையல் (பொருந. 18)
புரிநரம்பின் கொளைப்புகல் (பரிபா. 7: 77)
அவிழ்து பொதிந்து இயற்றும் அடங்குபுரி நரம்பின்(சிறுபாண். 227)
குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின் (மலைபடு. 23)
... புரிநரம்பில் பொருள் படுபத்தர் (சிலப். 28: 32)
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி (புறம். 109: 15)
பொன் வார்ந்தன்ன புரி அடங்கு நரம்பின். (புறம். 308: 1)
வீணைச் சுகிர்புரி நரம்பு (சீவக. 723)
பொன் வார்ந்தன்ன புரியடங்கு நரம்பின்
இன்குரல் சீறியாழ் (சிறுபாண். 34)

## புரியம்:
*கூத்து வகையுள் ஒன்று.*
கரணம்... புரியம்... கூத்தின் விகற்பமாகும்... (பிங்க. 1445)

## புரைத்தல்:
*அபசுரம் இசைத்தல் ; ஒரு சுரம் வாசிக்க நினைத்து நழுவி இன்னொரு சுரம் வாசித்தல்.*
← *திருவாலவா. 14, 26, 57*
*(புரை - குற்றம் ; புரை தீர்ந்த நன்மை - குறள்.)*

## புல்லாங்கழி: → புல்லாங்குழல்

## புல்லாங்குழல்: = குழல்
*படுக்கை நிலையில் வைத்து நேரே துளையில் காற்று ஊதி இசைக்கப்படும் காற்றுக்கருவி. செம்பாலை (அரிகாம்போதி) நரம்புகள் ஒலிக்குமாறு புல்லாங் குழல் துளை இடப்படுகிறது.*
செந்தீத்தொட்ட கருந்துளைக்குழலின் இன்தீம்பாலை
(பெரும்பாண். 179)
*(பாலை - செம்பாலை)*
வழுவின்று இசைக்கும் குழலோன் தானும் (சிலப். 3: 69)
குழலினும் யாழினும் குரல் முதல் ஏழும் (சிலப். 5: 35)
பெறுதற்கு அரிய இசை மரபை அறிந்த குழலர், பாணர் முதலாய பெரிய இசைக்காரர் (சிலப். 5: 35–7 அடியார்க்.)

## புல்லுதம்: → புலிதம்

## புலம்ப:
*இசைக்க*
நன்னர் கொள் அன்பான்முகம் புலம்ப (கல்லா. 82: 11)
*(முகம் புலம்ப - யாழின் நரம்பு இசைக்க)*

## புலம்பல்: → ஒப்பாரி

## புலவர்:
*கவிஞர், கூத்தர், புலமையோர், அறிஞர், இயற்பா இயற்றுபவர்* (poet)

"அறிஞரும்... கவிஞரும் கூத்தரும் கலைவல்லாளரும்... புலவர்...
(பிங்க. 3862)

அமரரும், கவிஞரும், ஆடுநரும், பாடுநரும், பொருநரும்
அறிஞரும், புலவர் எனப்படுமே (திவா. 2051)

புலவர், பாடுநரே, கூத்தர், புதன், உம்பர், கவிகள், ஔவர்
(சூடா. 11: 1)

புலவர் பூநுதல் யானை யொடு புனைதேர் பண்ணவும் (புறம். 12)

*நெல்லை வட்டாரத்தில் வில்லுப்பாட்டுத் தலைமைப் பாடகர் புலவர் என்றும் அண்ணாவி என்றும் அழைக்கப்படுகிறார்.*

"பாணர், புலவர் வேறு பாட்டினுள் சமஸ்கிருத மயவாக்கப் பண்பு காணப்படுவதனையும் அவதானித் துள்ளோம்... வாய்மொழியாக வழங்கிய பாணர் இசை (பாடல்) எழுத்துருவான போது அது புலவர் கைக்கு மாறியது. இலக்கியத்தைப் பொறுத்த வரையில், இது பாணரிலிருந்து புலவருக்கு வருவதான ஒரு மாற்றமாகப் பார்க்கலாம்... சங்க இலக்கியத் தொகுதியினைப் பார்க்கும்பொழுது பாணர்களின் முக்கியத்துவம் படிப்படியாகக் குறைந்து புலவர்களின் நிலை பெருமதிப்புடைய ஒன்றாக வளர்ந்து வருகின்றது... சங்க இலக்கியத் தொகுதியென நாம் கொள்ளும் பாடல்கள் யாவுமே புலவர்களின் ஆக்கங்கள் என்ற அடிப்படையிலேயே நமக்குக் கையளிக்கப்பட்டுள்ளன. சங்கப்பாடல்கள் நாட்டார் பாடல்கள் எனக்கூற முடியாத அளவுக்கு வளர்ச்சி பெற்றவை... தொழிற் பாணர்களைப் போலன்றிப் புலவர்கள் இசையோடும் ஆடலோடும் இணைந்திருக்கவில்லை... அவர்களுடைய முத்திரை அறிவு என்பதாக இருந்தது... புலவர்களின் அதிகாரமும் தகுதியும் பாணர்களின் அதிகாரத்திற்கும் தகுதிக்கும் காலத்தால் பிற்பட்டன...புலவனது திறன்கூட பாடுதலோடு அதிகமாக சம்பந்தப்பட்டதல்ல. எனவே, நடனம் நாடகம் பற்றிய ஆய்வில் புலவனுக்கு நேரடியான ஒரு வகிபாகம் இல்லை என்றே கூறல் வேண்டும்." (த. வீ. க.)

↑ புலவர், பாணர் வேறுவேறானவர். புலவர் பாணராக இருந்ததில்லை. ஆனால் பாணர் பாடினியர், புலவராக இருந்துள்ளனர்.

*எடு:- புலவராக வீற்றிருந்த சங்ககாலப் பாடினி ஔவை.*

*புலவர், பாணர் வேறுபாடு:-*

| புலவர் | பாணர் |
|---|---|
| அறிவு உழைப்பு | உடல் உழைப்பு |
| யாப்பு | சந்தம் |
| ஓசை | இசை |
| செய்யுள் | இசைப்பாடல் |
| புலவர் ஆக்கம் – | பாணர் ஆக்கம் – |
| மூளையின் உற்பத்தி | உள்ளத்தின் உற்பத்தி. |

← த.வீ.க. பக்/VIII-IX; XVIII;109;163:175;207

## புலிதம்:

= ப்லுதம், புல்லுதம், உயிர், புலுதம்.

*தாளஅங்கம்; 12 எண்ணிக்கை கொண்டது. இது பெயரளவில் பயன்பாட்டில் உள்ளது.*

இதன் குறியீடு – பணி (பாம்பு) – S

பட்டடை எடுக்கப் புலிதம் பரப்பி (கல்லா. 99: 17)

நாலலகு கொண்ட இரண்டாங்காலம் (மேலது உரை.)

← *த. க. க.*V/I ; 53/III ; *ப இ. இ. 293; பரத. தாள. 35*

## புலி உறுமி:

*புலிபோல் முழங்கும் பறைவகை*

## புலுதம்: → புலிதம்

## புலை மகள்: → அகவன் மகள்

## புலையர்:

= புலைமகன், புலையாளர்

*பாணர்; துடி முதலிய தோற்கருவி வாசிப்போர்.*

... புலையன் பெருந்துடி கறங்க... (நற். 77: 1 – 2)

...புலையன் பேழ்வாய்த்தண்ணுமை... (நற். 347: 5 – 6)

துடிஎறியும் புலைய, எறிகோல் கொள்ளும் இழிசின
(புறம். 287: 1 – 2)

புலையன் தன் யாழின்... (கலித். 95: 10)

புலையர் போலப் புன்காண் நோக்கி (கலித். 55: 19)

புலைச் சிறுமகனே ! (மணிமேக. 13: 44)

புல்லல் ஓம்பன்மின் புலைமகன் இவன் (மணிமே. 13: 91)

## புவிசாரி:

*நாட்டியத்தில் பாதத்தை நிலத்தில் வைத்து அவிநயம் செய்தல்*

## புள்ளடி:

=காகபாதம்,காக்கைப்பாதம், காக்கையடி, காக்கைக் கால்.

*தாள உறுப்புள் ஒன்று; இதன் அளவு 16 எண்.*

*இதன் குறியீடு* - +

## புளிமா:

1. *புளிப்புக்கனி உண்டாகும் மாமரம்; மாம்புளிச்சி, மாம்புளி* (Indian hogplum)

திருத்தி வளர்த்ததோர் தேமாங்கனியை (திருமந். 202)

2. நிறை நேர் வாய்பாடு (யா. க. உறுப்.7)

← *செ. ப. அ. 87/*I

## புழற்கோடு:

*உட்துளையுடைய யாழ்க்கோடு; யாழின் கோட்டு உறுப்பு.*

புழற் கோட்டுத் தொடுத்த... (பெரும்பாண். 181)

ஒப்பு:– கோட்டு வாத்தியம்

## புறஅறுதி:

*தகதினதோம் தகதினதோம் தகதின (தோம்)*

1½ 1½ 1 (½) = 4(½)

*கடைசியாக வரும் 'தோம்' நாலுகடந்து, தாளத்தின் அடுத்த ஆவர்த்தனத் தொடக்கமாகிறது. புறத்தில் சென்று 'தோம்' விழுவதால் இது புற அறுதி அல்லது*

*தீர்மானம்.*

← *த. க. க. 109*III; *இ த. சொ. 41; ப. இ இ. 302*

## புறக்கூத்து:

*கூத்து வகையுள் ஒன்று.*

புறக்கூத்துக்குரிய ஆடல்களாவன:– பெருநடை, சாரியை, பிரமரி இவை முதலாயினவும், பதினோ ராடலிற் கூத்துக்களுமாம். (சிலப். 3: 16 அடியார்க்.)

## புறச்சொல்:

*நாடகத்தில் தனக்குள் பேசிக்கொள்ளாமல் எல்லோரும் கேட்கும்படியாக உரைக்கும் சொல். அவை நெஞ்சொடு கூறல், கேட்போர்க்குரைத்தல், தானே கூறல் என்பன.*

நெஞ்சோடு கூறல், கேட்போர்க்குரைத்தல்... என்பசெம்மைச் சொல்லே (சிலப். 3: 13 அடியார்க்.)

## புறப்பாட்டு வண்ணம்:

*தொல்காப்பியர் கூறும் 20 வண்ணங்களுள் ஒன்று.*

புறப்பாட்டு வண்ணம் முடிந்தது போன்று முடியாதாகும். (தொ. செ. 223)

புறப்பாட்டு வண்ணமாவது முடிந்தது போன்று முடியாதாகி விடும். (மேலது இளம்)

*புறப்பாட்டு வண்ணமாவது இறுதியடிப் புறத்தாகவுந்தான் முடிந்தது போன்று நிற்றல்.*

எடு:–

இன்னாவைகல் வாராமுன்னே

செய்ந்நீ முன்னிய வினையே

முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே

'முன்னிய வினையே' முடிந்தது போன்று முடியாதாயிற்று (மேலது நச்சர்.மேற்.)

← *செ. ப. அ. 2808*

## புறமுழவு:

*வெளி அரங்குத் தோற்கருவி; போர்முரசு, கணப்பறை, பேரிகை போன்றன.* (Open air percussion instrument )

↑ தவில் என்பது புறமுழவாக இருந்து இன்று அகமுழவாகவும் பயன்படுகிறது.

← *த. க. க. 11*/I

## புறவரி:

1. *தலைவனுடன் ஆடாது, புறத்தே தனித்து நின்று ஆடுவது*

புறத்து நின்றாடிய புன்புற வரியும் (சிலப். 8: 93)

புறவரி – இவனுடன் அணையாது வாயில் புறம்பே நின்றாடு நடிப்பு (மேலது அரும்.)

வரி என்றது – நடத்தை (சிலப். 8: 77 – 108 அரும்.)

புறவரியாது – "புறவரி என்பது புணருங்காலை, இசைப்ப வந்து தலைவர் முற்படாது, புறத்து நின்றாடி விடை பெறுவதுவே" (சிலப். 8:90–93 அடியார்க்.)

2. *நகரின் எல்லைக்கு வெளியே காதலர் ஆடும்ஆடல்* (PPTI.p.586)

## புறநடம்: *புறநாடகம்.*

*தேசி, மார்க்கம் என்ற அகக்கூத்திற்குப் புறம்பானது புறக்கூத்து.*

இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்து (சிலப். 3: 12)

தேசியும் மார்க்கமும் என்று சொல்லப்படா நின்ற இரண்டு வகைப் பட்ட அகக்கூத்தினது இலக்கணங்களை அறிந்து பலவகைப்பட்ட புறநடங்களையும்.. (மேலது அரும்.)

## புறநாடக உரு:

*புற நாடகத்திற்குரிய பாடல்கள்.*

தேவபாணி முதலாக அரங்கொழி செய்யுள் ஈறாக உள்ள செந்துறை விகற்பங்கள். (சிலப். 3: 14அடியார்க்.)

## புறநிலை:

*பண்களை உருவாக்கும் முறைகளுள் ஒன்று.*

அகநிலை மருதமும் புறநிலை மருதமும் (சிலப். 8: 39)

## புறநீர்மை: = நேர்திறம், வைகறைப்பாணி

*மருதப்பாணிகளுள் ஒன்று. சிவரஞ்சனி (சிவப்பிரியா) என்ற பண்.*

பாண் வாய் வண்டு நேர்திறம் பாட

காண்வரு குவளைக் கண்மலர் விழிப்ப (சிலப். 4: 75 – 76)

*குவளை மலரும் பொழுதான வைகறையில் நேர் திறம் பாடப்பட்டதால் வைகறைப்பாணியாயிற்று.*

... புறநீர்மை என்னும் திறத்தால் பள்ளி எழுச்சி பாட (மேலது அடியார்க்.)

... புறநீர்மை நேர்திறம் என (பிங்க. 1400)

கிணை நிலைப்பொருநர் வைகறைப் பாணியும் (சிலப். 13: 148)

திருக்கிளரும் அகல்கோயில்

அரிக்கிணைவன் வளம் உரைத்தன்று (பு.வெ. 206)

*சம்பந்தர் விடியற்காலையில் பாடியது 'மங்கையர்க்கரசி' எனத் தொடங்கும் புறநீர்மைப் பதிகம்.*

↑ நேர்திறம் என்பது நோதிறம் என்று தவறாகப் பதிப்பிக்கப் பட்டுள்ளதாகலாம். கதகளியில் இப்பண் 'புறநீர்' என்ற பெயரிலேயே பாடப்பட்டு வருகின்றது.

← *த. க. க.* 242/I ; 226/II; 228/III

→ நேர்திறம், நோதிறம், வைகறைப்பாணி

## புறாக்கை: = *கபோதம், கபோதக்கை*

1. *ஒற்றைக்கை அவிநயத்துள் ஒன்று.*

பதாகையில் பெருவிரல் விட்டு நிமிர்வது, என்னை? "காணுங்காலைக் கபோதம் என்பது, பேணிய பதாகையில் பெருவிரல் நிமிரும்" (சிலப். 3: 18 அடியார்க்.)

2. *இரட்டை ஒற்றைக்கை அவிநயத்துள் ஒன்று கபோதம் என்றது இரண்டுகையும் கபோதமாகக் கூட்டுவது; என்னை? "கருதும் காலைக் கபோத இணைக்கை, இருகையும் கபோதம் இசைந்து*

*நிற்பதுவே".*
↑ கபோதம் என்பதை ஒற்றை மற்றும் இரட்டைக் கைகளாகவும் அடியார்க். குறிப்பிடுகின்றார்
(சிலப். உரை. பக். 96 – 97)

## புன்னாகவராளி:

*நாகவராளி என்ற பண்.*
*புன்னாகம் என்பது மலைப்பகுதிக்கண்ணுள்ள புன்னையின் மலர்.*
வரையன புன்னாகமும் (பரிபா. 11: 16)
புன்னாகம், நாகம் (சூடா. 4: 4)

## புனக்கரணம்:

*தாளத்தின் ஆவர்த்தம்* (repetition of a mode of beating time)
← *செ. ப. அ. 2814*

## புனவேடு:

*வரிக்கூத்து வகையுள் ஒன்று*
சிந்து... புனவேடு... கோத்தவரிக் கூத்தின்குலம்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## புனை:

*ஒப்பனை செய்தல்; அழகு, பொலிவு, அணி, (அலங்காரம்) செய்தல்*
*பனை > புனை - புனைதல்*
*புனை - புனைவு* (Romance )
*பனை > ஒப்பனை - போலச் செய்தல்*
*இளவரசி போலச் செய்தல் - இளவரசியாக ஒப்பனை செய்தல்*
புனையென்பது அழகினோடு பொலிவும் ஒப்பனையும் ஆகும்.
(சூடா. 11: 17)

# பூ

## பூசல்பறை:
*பூசல்துடி*
பாலைநிலப் பறையுள் ஒன்று. (இறை. கள. 1உரை)
பூசல்துடி, பூசல் அறாப் புனவாயில் (தேவா. 899: 7)

## பூசாரி கைச்சிலம்பு: → கைச்சிலம்பு

## பூசைக்கொட்டு: *(ம. வ.)*
*கோயில் பூசைகளின் போது கருவறைக்குச் செல்லும் படிக்கட்டுகளுக்கு வடக்குப் புறமாக நின்று கொண்டு இடக்கை வாசிப்பது*

## பூதநிருத்தம்:
*ஒரு காலை உயர்த்திமுடக்கி ஆடுகை* (ச. அ.)
← *செ. ப. அ. 2833*

## பூபாளம்:
*பண்களில் ஒன்று; இது விளரி (தோடி)ப்பாலையின் திறப்பண்.*
காலையில் பாடும் பண். (பரத. இராக. 56)
இதன் நரப்படைவு - ச ரி'க'ப த'ச்
← *செ. ப. அ. 2839; பஞ்ச பக் 282; த. க க. 242/I*

## பூமித்துந்துபி:
*பூமியையே ஒரு குடம் போல் குடைந்து அதன் மேல் காய்ந்த தோலைப் போர்த்தி இசை எழுப்புவர். இது தொடக்க காலமுறை.*
→ நிலப்பறை

## பூர்ணச் சந்திரிகை: *பண்களில் ஒன்று*

## பூர்ண சட்சம்: *பண்களில் ஒன்று*

## பூர்ண நியாச சுரம்: → முழு முடிவுச் சுரம்

## பூர்வ கௌளம்: = பூருவ கௌளம் (யாழ். அக.)
*பண்களில் ஒன்று* (பரத. இராக. 103)

## பூர்வாங்கம்: → குரலின்பாகம், முன்னர்ப்பாகம்

## பூர்வி: *பண்களில் ஒன்று*

## பூர்விகல்யாணி: → பூரிகல்யாணி

## பூரண சூத்தரி:
*பண்களில் ஒன்று* (பரத இராக. 103)

## பூரிகல்யாணி: = பூர்வி கல்யாணி
*பண்களில் ஒன்று*

## பூருவ கௌளம்: → பூர்வகௌளம்

## பூவிலை மடந்தையர்:
*கணிகையர்*
பூவிலை மடந்தையர் ஏவல் சிலதியர் (சிலப். 5: 51)
பூவிலை மடந்தையர் – பரிசங்கொள்வார் (மேலது அரும்.)
பூவிலை மடந்தையர் – அற்றைப் பரிசங் கொள்வார்.
(மேலது அடியார்க்.)
பூவிலை ஈத்தவன் பொன்றினன் என்று (மணி. 24: 19)

# பெ

## பெட்டா அளவை:
*பாடுவதற்கு முன்பே தாளம் தொடங்குதல்.*
கைச்சுகடு இருந்த என் கண் அகந் தடாரி,
இருசீர்ப் பாணிக்கு ஏற்ப
... ஒன்றுயான் பெட்டா அளவையின் ஒன்றிய (பொருந. 70 – 73)
↑ பெட்டா அளவை என்பது பாடுவதற்கு முன்பே தாளம் தொடங்கும் முன் எடுப்பு (அதீத கிரகம்) ஆகலாம்.

## பெட்டி போடுதல்: *(இசை வழக்கு)*
*ஆர்மோனியம் வாசித்தல்.*

## பெண்: = பெண் கை
*எட்டுவகை நாட்டிய முத்திரைகள்.*
*ஆண்கை, பெண்கை... ஆறென்பாறுமுளர்..*
"கடகம், சுகதுண்டம், காங்கூலம், மன்னும் அடைவாம் பிறைக்கை அராளம் – தடமருவும் அன்னபக்கம் தாம்பிர சூடமொடு மான்தலையே இன்ன எட்டும் பெண்ணாகுமே
(சிலப். 3: 18 அடியார்க்.)

## பெண்கலை:
*வண்ணப்பாவின் பிற்பகுதி* (latter half of a Vannam verse)

## பெண்கை: → பெண்

## பெரிய இசைக்காரர்:
= பெரும்பாணர், குழலர் பாணர்.
*ஏழு பாலைகளையும் அவற்றின் வழிவரும் 21 திறங்களையும் குழலிலும், யாழிலும் வாசித்துக்காட்ட வல்ல பாணர்; இவ்வல்லமையில் குறைந்தவர் சிறுபாணர்.*
குழலினும், யாழினும் குரல் முதல் ஏழும்,
வழுவின்று இசைத்து வழித்திறம் காட்டும்
அரும்பெறன் மரபின் பெரும்பாண் இருக்கையும் (சிலப். 5: 35 –37)
துளைக்கருவியாலும், நரம்புக்கருவியாலும் குரல் முதலாகவுள்ள ஏழிசையிலும்... மூவேழு திறத்தையும் குற்றமின்றாக இசைத்துக் காட்டவல்ல... குழலர் பாணர் முதலாகிய பெரிய இசைக்காரர்
(மேலது அடியார்க்.)
*ஒப்பு:- பெரிய மேளம்*
→ பெரும்பாண்

## பெரிய உடல்:
*ஒரு வகைத் தோற்கருவி.*
*திருவரங்கம் பெருமாள் கோவில்லில் கார்த்திகை (கைசகி) ஏகாதசி மற்றும் வைகுண்ட ஏகாதசியன்று நைவேத்தியத்தின் போது பெரிய உடல் இசைக்கப் படுகின்றது.*

## பெரிய மல்லாரி: → தேர்மல்லாரி

## பெரியமுறை:
*கோவில் கருவறையில் சிவ தீட்சை பெற்ற தேவ தாசியர் பூசை நிகழ்த்தும்முறை*

## பெரிய மேளம்: *நாகசுரக்குழு.*
*நாகசுரம், துணை நாகசுரம், இரட்டைத்தவில், ஒத்து, கைம்மணி, கினி கிட்டு ஆகிய குழுவுக்கு பெரிய மேளம் என்று பெயர். நையாண்டி மேளமாக வாசிக்கும் போது இத்துடன் பம்பை வாத்தியத்தையும் இணைத்துக் கொள்வதுண்டு.*
*(மேளம் - குழு, கூட்டம்)*
← *செ. ப. அ. 2867; த. க. க. 314*/II

## பெரிய வராடி:
*பாலையாழ்த்திற வகையுள் ஒன்று.*
தக்கராகம்... பெரிய வராடி... பாலையாழ்த்திறமென்ப (பிங்க. 1381)

## பெருக்குரல்:
*பாடுகையில் தோன்றும் வெடித்தகுரல்* (cracked voice)
*புனை பெருக்குரல் கடத்தல்...* (திருவாலவா. 57: 26)
பெருக்குரல் – வெடித்தகுரலாகிய வெள்ளோசை (மேலது அடிக்.)

## பெருகியல்: = பெருகுசாதி
*பண் ஆக்க முறைகளுள் ஒன்று.*
... ஆசானுக்கு ... பெருகு சாதி... (சிலப். 13: 110–12 அடியார்க்.)
*பெருகு - அளவு மிகுதல், நிறைதல்* (to become full)

## பெருகு சாதி: → பெருகியல்

## பெருங்கலம்:

= பேரியாழ், ஆதியாழ், பரவையாழ், பேர்யாழ்.
*ஆயிரம் புரிநரம்பு கொண்டயாழ்*
பெருங்களிறு அடக்கிய பெறற்கரும், பேரியாழ் (பெருங். 1: 36: 44)
தீந்தொடைப் பேரியாழ் திவவொடு கொளீஇ (பெருங். 1: 52: 85)
ஓங்கிய பெருங்கலம் தருக்கிய உதயணன்
(பெருங்.இலாவாண. 1: 74)
ஆரியப்பதங்கொள் நாரதப் பேரியாழ் (கல்லா. 82: 10)
பேர்யாழ் முறையுளிக்கழிப்பி (பொருந. 168)
இடனுடைப் பேரியாழ் (பெரும்பாண். 462)
களங்கனி அன்ன... வள்ளுயிர்ப் பேரியாழ் (மலைபடு.37)
*(களங்கனி என்றதால் பேரியாழும் கருங்கோட்டு யாழே)*
தொடைபடு பேரியாழ் பாலைபண்ணி (பதிற். 46: 5)
விரல்கவர் பேரியாழ் பாலைபண்ணி (பதிற். 57: 8)
இடனுடைப் பேரியாழ் பாலை பண்ணி (பதிற். 66: 2)
பரவையாழ் (சீவக. 530)
... பெருங்கலம் ஆவது பேரியாழ் (சிலப். அடியார்க். உரைப்பாயிரம்)
... ஆயிரம் கோல் தொடுத்து இயல்வது; என்னை? ஆயிர நரம்பிற்று ஆதியாழாகும்.. (மேலது)
புரி நரப்பாயிரம் வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ்
(பெருங். 4: 3: 52 – 53)
ஆயிரநரம்பிற்று ஆதியாழாகும் (பிங்க. 1435)
தமிழ்க்குன்றில் வாழும் சடாதரி பேர்யாழ் தழங்கும் திருக்கை
(தக்கயாக. 539)
... நரம்பு கொள்ளுமிடத்துப் பேரியாழிற்கு இருபத்தொன்றும் மகரயாழிற்குப் பத்தொன்பதும், சகோடயாழிற்குப் பதினாலும், செங்கோட்டியாழிற்கு ஏழும் கொள்ளப்படும்
(சிலப். 3: 26அடியார்க்.)
↑ ஏனைய யாழிலும் கூடுதலாக ~~21நரம்புகள் பேரியாழில்~~ கட்டப்பட்டதால், ஆயிரம் நரம்பு பெற்றது என்றனர். ஆயிரம் என்பது அதிகம் என்பதின் ஒரு சுட்டு ஆகலாம்.
*ஒப்பு:-*
*ஆயிரக்கால் மண்டபம், ஆயிரம் காலத்துப்பயிர்*

## பெருங்குறி: *பறை*

- *தர்ம்மியூதி பெருங்குறி கொட்டி*
*(தெ. இ. க 6 57. த க. சொ. 282)*

## பெருங்கோடனை:

*ஒரு கண் பறை வகையுள் ஒன்று*

## பெருங்கூத்து:

*ஊர்த்துவ தாண்டவம்*
*நீடும் அதிகையரன் நித்தப் பெருங்கூத்தை யாடும் அரங்கமைத்தான்.* (CHEN, 23. P. 93 - 96; *த க. சொ. 26)*
→ ஊர்த்துவ தாண்டவம்

## பெருந்தனம்:

*கணிகையின் ஒரு பிரிவினர் பெறும் பரிசம்.*
எண்ணெண்கலையோர் இருபெரு வீதியும் (சிலப். 14: 167)
இருபெரு வீதி – சிறுதனம் பெருந்தனம் பெறுவார் வீதி
(மேலது உரை.)

## பெருந்தானம்:

*பண் உருவாகும் 8 இடங்கள்.*
நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணாக்கு, உதடு, பல், தலை
(சிலப். 3: 26)
பெருந்தானம் எட்டினும், கிரியைகள் எட்டாலும் பண்ணிப் படுத்தலால் பண் என்று பெயராயிற்று. (மேலது. அடியார்க்.)

## பெருந்தேவபாணி:

1. *கடவுளரைப் போற்றிப் பாடப்படும் இசைப் பாவகைகளுள் ஒன்று.*
செப்பிய சிந்து... தேவபாணி ... இன்னிசையின்பா (பஞ்ச மரபு. 87)
2. *பதினோராம் திருமுறையில் நக்கீரர் பாடிய ஒரு பத்திமை இலக்கியம்.*

## பெருநடை:

*புறக்கூத்திற்குரிய ஆடல்களுள் ஒன்று*
... பெருநடை... முதலாயினவும்... (சிலப். 3: 16 அடியார்க்.)

## பெரும் பண்: → பாலை

## பெரும்பறை:

*தோற்கருவி வகையுள் ஒன்று* (a kind of large drum)
பேரிகை படகம்... பெரும்பறை என (சிலப். 3: 27 அடியார்க்.)

## பெரும்பாண்:

= பெரும்பாணர், பெரிய இசைக்காரர்.
*குழலினும், யாழினும் ஏழ்பெரும்பாலைகளையும், அவைகளின் திறப்பண்களையும் வாசிக்கவல்ல பாணர்*
அழுந்து பட்டிருந்த பெரும்பாண் இருக்கையும் (மதுரைக். 342)
அரும்பெறன் மரபின் பெரும்பாண் இருக்கையும் (சிலப். 5: 37)
பெரும்பாண் காவல் பூண்டென (நற். 40: 3)
திருநீலகண்டத்துப் பெரும்பாணர் தெள் அமுதின்
(பெரியபு. திருஞான. 131)
இன்னிசைபாடின எல்லாம் யாழ்ப்பெரும்பாணனார் தாமும்
(பெரியபு. திருஞான. 278)
பெரும்பாணர் வரவறிந்து பிள்ளையார் எதிர்கொள்ள
(பெரியபு. திருஞான. 132)
அருள் பெரும்பாணனாரை (பெரியபு. திருநீல. யாழ்ப். 3)
நல்ல இசை யாழ்ப்பெரும்பாணர் (பெரிய. திருநீல. யாழ். 11)
*(பெரும்பாணர் - இங்கு திருநீலகண்டயாழ்ப்பாணர்)*
நினை ஒப்பரும் நீலகண்டப் பெரும்பாணனை நீர்
(தேவா.11: 34: 83)
நீடுசீர் திருநீல கண்டப்பெரும்பாணர் (திருத். திருவந்தாதி. 83)
→ பெரிய இசைக்காரர்

## பெரும் பாணர்: → பெரும் பாண்

## பெரும்பாலை:

*பெரும்பண்.*

செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற் செம்பாலை என்ற ஏழும் ஏழ்பெரும் பாலைகளாகும்.
இவ்வேழு பெரும் பாலையினையும் அடுத்து
(சிலப். 8: 35 அடியார்க்.)
புரி நரம்பின் கொளைப்புகல் பாலை ஏழும் (பரிபா. 7: 77)
→ ஏழ்பெரும்பாலை

## பெரும்பிழுக்கை:

வரிக்கூத்து வகையுள் ஒன்று.
சிந்து... பெரும்பிழுக்கை... கோத்தவரிக் கூத்தின்குலம்
(சிலப். 3: 13 அடியார்க். மேற்)

## பெருமங்கலம்:

1. வாழ்த்துப் பாடல் (benedictory song)
பெருமங்கலம் பாடுவார் (சீவக. 308 நச்சர்.)
2. அரசன் தன் பிறந்த நாளில் குடிகட்கு அருள் செய்வதைக் கூறும் புறத்துறை.
பிறந்தநாள் வயிற் பெருமங்கலமும் (தொ.பொ. 191)

## பெருமணி:

காண்டாமணி, கண்டைமணி.
பெருமணி, கண்டைமணி, யானை மணி என்ப (பிங்க. 1261)

## பெருமத்தளி: = பெருவாயன்

ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி (பாசுரம் 925)
மத்தளி – முழவம் (மேலது வ்யாக்கியானம்.)
(பெருமத்தளி - மத்தளி)

## பெருமுளை:

இசைப்பாட்டு வகையுள் ஒன்று. இசையில் புதுமை உண்டாகப் பாடும் பாட்டு.
வெங்கட் தொலைச்சிய விருந்திற் பாணியும் (சிலப். 10: 131)
விருந்திற்பாணி – தம் இசையில் புதுமை உண்டாகப் பாடும் பாட்டு எனினும் அமையும்; இதனைப் பெருமுளை யென்பாரும் உளர்.
(மேலது அடியார்க்.)

## பெருவங்கியம்:

நீண்ட புல்லாங்குழல் (bass flute)
வங்கியம் - புல்லாங்குழல்
↑ இந்துத்தானிக்குழல்கலைஞர் பண்டிட் அரிபிரசாத் சௌராசியா இவ்வகை வங்கியத்தையே பயன்படுத்துகிறார்.

## பெருவண்ணம்:

மூவகை வண்ணப்பாடல்களுள் ஒன்று.
எண்ணியநூற் பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பென்னும்
(பெரியபு. ஆனாய. 28)
வண்ணம் ஒரு வகையான் மூன்று வகைப்படும்: பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ணம் என. அவற்றுள் பெருவண்ணம் ஆறாய் வரும். (சிலப். 3: 13 அடியார்க்.)

## பெருவாயன்: → பெருமத்தளி

## பெய்தல் முறை:

பண் உண்டாக்கும் முறைகளுள் ஒன்று. (Method of Substitution).
ஒரு பண்ணின் ஒரு சுரத்தை நீக்கி விட்டு அதன் இனமான வேறொரு சுரத்தை இட்டுப் பண் உருவாக்கும் முறை.
எடு:– முல்லைப்பாணி – ச ரி$^2$ க$^2$ ப த$^2$
இதில் க$^2$ நீக்கி விட்டு க$^1$ பெய்தால், வளர் முல்லையாகி விடும்.
முல்லைப்பாணி – மோகனம் – ச ரி$^2$ க$^2$ ப த$^2$
வளர்முல்லை – சிவரஞ்சனி – ச ரி$^2$ க$^1$ ப த$^2$
... செம்பாலைக்கு உழைபெய்து.:–
அரிகாம்போதி > வாசஸ்பதி
இங்கு உழை என்றது - வல்லுழை (ம$^2$)
... படுமலைக்குக் கைக்கிளை பெய்து:–
நடபைரவி > சாருகேசி
இங்கு கைக்கிளை என்றது - வன்கைக்கிளை (க$^2$)
... செவ்வழிக்குத் துத்தம் பெய்து:– ச ரி$^2$ க$^1$ம$^1$ ம$^2$ த$^1$ நி$^1$
இங்கு துத்தம் என்றது - வன்துத்தம் (ரி$^2$)
... கோடிப்பாலைக்குத் தாரம் பெய்து:–
கரகரப்பிரியா > கௌரி மனோகரி
இங்கு தாரம் என்றது - வன்தாரம் (நி$^2$)
... விளரிப்பாலைக்கு விளரி பெய்து:–
தோடி > நாடகப்பிரியா
இங்கு விளரி என்றது - வன்விளரி (த$^2$)
← சிலப். 3: 90 உரை

## பெயர்க்கும்: பண் பெயர்க்கும்

கொட்கப் பெயர்க்கும் குழகன் (திவாசக. திருஅண்டப். 12)
பெயர்க்கும் - திரிக்கும்.
ஒப்பு:– குரல் திரிபு - பண் பெயர்ப்பு

## பெயர்தல்:

1. கூத்தாடல்
அகவல், தாண்டல், ... பெயர்தல், ... கூத்தாடல் (பிங்க. 1464)
நடித்திடல், பெயர்தல்... ஆடல்பேர் (சூடா. 9: 48)
2. தாளமாறுதல்
வேறுபட்ட பகுதி பொருந்திய சிறப்புடைய காலை முரசமாகிய பேரிசைப் பல்லியம் பெயர்ந்து கூடி ஒலிக்கும் ஒலியும்
(சிலப். 13: 136 – 40 அடியார்க்.)
பெயர்தல் - தாளமாறுதல் (மேலது அடியார்க்.)
வேறுபட்ட பகுதி - தாளவகை, பிரிவு.

## பெயர்திறம்:

செவ்வழி யாழ்த்திறத்துள் ஒன்று.
நேர்திறம், பெயர்திறம்... செவ்வழி நல்யாழ்த்திறனே (பிங்க. 1379)

# பே

## பேக்கடா: → பியாக்கடை

## பேக்கடை: → பியாக்கடை

## பேடி: → பேடு

## பேடிஆடல்: = பேடு

*11 ஆடல்களுள் ஒன்று. வாணா (பாணா) சுரனால் சிறைப்பட்ட தன்மகன் அநிருத்தனைச் சிறை மீட்டுப் பிரதியும்நன் (காமன்) பெண்மைக்கோலத்தோடு ஆடிய கூத்து. வீழ்ந்தாடல் வகையது.*

ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக்
காமன் ஆடிய பேடி ஆடலும் (சிலப். 6: 56 – 57)
பேடிக்கோலத்துப் பேடு காண்கு நரும் (மணி. 3: 125)

↑ கண்ணன் மகன் – காமன் ; காமன்மகன் –அநிருத்தன்.
மாவலி மகன் – வாணன் – வாணாசுரன் – பாணாசுரன்

*பாணாசுரன் மகள் - உழை - (உசை - உஷா); உழை மீது காதல் கொண்டதால் பாணாசுரன் நகரான சோநகர் (சோணிதபுரம்)க்கண் அநிருத்தன் சிறைப்பட்டான்.*

காமனது ஆடல் பேடு ஆடல் (சிலப். அடியார்க்.)

## பேடு: = பேடி

1. நடுவிரல்
... சுட்டும் பேடும் (சிலப். 3: 18 அடியார்க்.)
பேடு – நடுவிரல்; இது பேடி எனவும் வழங்கப்படும். (மேலது அடியார்க்.)
2. → பேடியாடல்

## பேர் யாழ்: → பெருங்கலம்

## பேரணி நாட்டியம்:

*சதிர் ஆடல் வகையுள் ஒன்று.*
*நடனம் ஆடிக் கொண்டே மணல் மீது காலால் சித்திரம் வரைவது. இதில் சிங்கம், புலி, யானை, குதிரை, அன்னம், குயில், பாம்பு ஆகிய உருவங்களை நடனமாடுபவர் வரைந்து காட்டுவார்.*

எடு:– சிம்மநந்தனம்
(*ஆடல் மூலம் மணல் மீது சிம்மம் வரைவது).*
↑ நிருத்த ரத்னாவளி குறிப்பிடும் 'பேரிணி' இது ஆகலாம்.
← *பரத . நாட். சாஸ். பக்.* XXVI

## பேரி: = பேரிகை, துந்துபி

*பெரும்பறை வகையுள் ஒன்று.*
*பெரிய - பேரி (பேரிகை)* (compensative lengthening)
*பெரிய ஆறு - பேரியாறு*

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்... (உமாபதி. சேக். 4: 73)
சகண்டை, முழவம்... பேரிகைத் தொடுபெயர் ஆகும் (திவா. 1240)
சங்கு பேரி முழங்கிய தானையே (கம்ப. எழுச்சி. 27)
பேரிகை படகம்.. பெரும்பறை என... (சிலப். 3: 27 அடியார்க்.)
சீர்முழவம், பேரி, திடிமம், ஒலியார்தக்கை (இலஞ்சி முருகனுலா 127)

→ துந்துபி

## பேரிகை: → பேரி, துந்துபி.

## பேரிசை:

*ஐவகைப்பட்ட வெண்துறைச் செந்துறையுள் ஒன்று.* (யா.வி. 538)

## பேரியாழ்: → பெருங்கலம்

## பேரெண்:

*நாற்சீர் ஈரடியாய் வரும் அம்போதரங்க வகை.* (யா.க. செய். 10)

→ அம்போதரங்கம்

## பேய்க்குரவை: = துணங்கை, பேய்த்துணங்கை

*பொருகளத்தில் தேரின் முன்னும், பின்னும் நின்றாடிய ஒருவகைக் குரவை*

மன்னர் ஊரும், மறம்மிகு மணித்தேர்ப்
பின்னும் முன்னும் பேய் ஆடின்று (பு.வெ. 7: 19)
பேய் மகள் குருதி ஆடிய... நிணம் தின் வாயள் துணங்கை தூங்க (முருகு. 51 – 56)
உருகெழு பேய் மகள் அயர (புறம். 371)
முன்தேர்க்குரவையும் ஒன்றிய மரபின் பின் தேர்க்குரவையும் (தொ. பு. 21)

## பேய்த்தாரை:

*ஊதுகருவி வகையுள் ஒன்று* (A large trumpet)

# பை, பொ

**பைசாச நிலை:** → பைசாசம்

**பைசாசம்:** = பைசாசநிலை; பரிசாய நிலை
*ஒரு கால், நிலை நின்று, ஒரு கால் மடக்கல்*
ஒரு கால் நிலை நின்று ஒரு கால் முடக்கும் பரிசாய நிலையது
பைசாச நிலையே (பிங்க. 1469)
வில் ஏந்தி அம்பினை எய்வார்க்கு உரிய நால்வகை நிலையாக பிங்கலம் கூறுவது:–
நவையறுபைசாச நிலையும், மண்டிலமும், ஆலீடநிலையும், பிரதியாலீடமும் எனக்கொளு நிலையும் ஒரு கால் வகையே (பிங்க. 1468)
(நிலை – Pose)

**பையுள் காஞ்சி:**
*காஞ்சி என்ற பண்; துன்பத்தை (பையுள் - நொடி - நோய்) ஏற்படுத்தும் பண். 103 பண் வரிசையில் வரும் 102 வதுபண்.*
பையுளும் சிறுமையும் நோயின் பொருள (தொ.சொ. 335)

**பைரவம்:**
= பைரவி, பயிரவி
*பண்களில் ஒன்று* (பரத. இராக. 56)

**பைரவி:** → பைரவம்

**பொங்கத்தம் பொங்கோ:**
*கூத்து வகையுள் ஒன்று.*
*தோல்வியாலே பறையடித்து ஆடுவதோர் கூத்து.*
இரக்கமின்றி... அஞ்சினோர்தடம் பொங்கத்தம் பொங்கோ (பாசுரம் திருமங்கை.)
← *திருமங்கை. பெ. தி.* 10: 1 – 10 (1858 – 1867)

**பொல்லம் பொத்துதல்:**
*சேர்த்துத் தைத்தல்*
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை (பொருந. 8)
பொல்லம் – தைத்தல்; பொல்லர் – தையல்காரர், சக்கிலியர்
தைத்தல்... பொல்லம், துன்னம் (சூடா. 9: 59)
அத்தும், பொல்லமும், தைத்தல், துன்னம் (பிங்க. 2302)
குயினர், பொல்லர் துன்னராகும் (பிங்க. 812)

**பொதியில்:**
= அம்பலம், மன்றம், மன்று, மன்றல், கோயில், பொதுவில்
*பொதுமன்றம், ஊர்ப்பொது இடம்*
பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை (புறம். 89: 7)
பொதியிலு மன்றமும் பொருந்துபுநாடி (மணி. 21: 121)
வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில் (பட்டினப். 249)
கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப்
பலிகண் மாறிய பாழ்படு பொதியில் (புறம். 52: 12 – 13)
புற்றுடைச் சுவர புதல்இவர் பொதியில்
கடவுள்போகிய கருந்தாள் கந்தத்து (அகம். 307 : 11–12)
*கந்தம் = கல் (தூண்)*
தொல்மூ தாலத்து அரும்பணைப் பொதியில் (அகம். 251 : 8)
சுரை இவர் பொதியில் அம்குடிச்சீறூர் (அகம். 287 : 5)
செதுகாழ் சாய்ந்த முதுகாள் பொதியில் (அகம். 373 : 4)

**பொது வியல்:**
1. மக்கள் வழக்கு
*பொது மக்கள் முன்பு ஆடும் ஆட்டம் போல்வன.*
இருவகைக் கூத்தாவன:–
... வேத்தியல், பொதுவியல் (சிலப். 3: 12 அடியார்க்.)
வேற்றியல் பொதுவியல் என்றிரு திறத்து (மணி. 2: 18)
வேத்தியல் பொதுவியல் என்று இவ்விரண்டின் (மணி. 28: 46)
வேத்தியல் பொதுவியல் என்றிரு திறத்தின் (சிலப். 3: 39)
வேத்தியல் பொதுவியல் என இரு திறத்து (சிலப். 14: 148)
வேத்தியல் – அரசர்க்கு ஆடும் கூத்து; பொதுவியல் – எல்லார்க்கும் ஒப்ப ஆடுங்கூத்து (மேலது அரும்.)
2. *புறத்திணையுள் ஒன்று.*
*இத்துறையில் அமைந்த புறப்பாடல்கள்:*
*புறம். 24,27, 28, 29, 112-121, 185-195.*

**பொதுக்கை:**
*பல கூத்துக்கும் பொதுவான அவிநயக்கை வகை.,*
... ஆண்கை... பொதுக்கை. என (சிலப். 3: 18 அடியார்க்.)
உன்னமா... மண்டல பொதுக்கை என (மேலது அடியார்க்.)

**பொதுப்பண்:** *இரவும் பகலும் என எந்நேரமும் பாடுவதற்குரிய பண்.*

**பொதுமாதர்:**
*பரத்தை, கணிகை, சூளை*
பரத்தையும், கணிகையும், சூளையும் பொதுப்பெண். (திவா. 284)

**பொது முறை:** → சின்னமுறை

## பொது வில்: → பொதியில்

## பொம்மலாட்டம்: = பொம்மை வாசாப்பு

அல்லிப்பாவை ஆடுவனப்பு (புறம். 33: 17)

← *செ. ப. அ. பிற். 375,* → தோல் பாவை; நிழலாட்டம்

## பொய் உரு: → உள் வரிக் கோலம்

## பொருட்கை:

*பாடலின் பொருளை நாட்டியத்தில் பொருள்பட இரு கைகளாலும் அவிநயித்துக் காட்டுவது.*

எழிற்கை அழகே தொழிற்கை தொழிலே
பொருட்கை கவியின் பொருளாகும்மே
(சிலப். 3: 18 அடியார்க். மேற்.)

பிண்டி செய்த கை ஆடலில் களைதலும் (சிலப். 3: 22)

புறக்கூத்தினிடத்துப் பிண்டி என்றது பொருட்கை (மேலதுஅரும்.)

*பொருட்கை - பொருளுறக்காட்டும் கை*

## பொருதல்:

*தடவுதல், யாழ் மீட்டல்*

வீணைபொரு தொழிலும் (சீவக. 1795)

## பொருந்து சுரம்:

*பொருந்து இசைச்சுரம்* (consonants, concordants, chords) *எடுத்துக் கொண்ட சுரத்துடன் பிற சுரங்கள் பொருந்துவது இசை. இச்சுரங்களின் மூலம் பண் உருவாகின்றது.*

இணை, கிளை, பகை, நட்பு என்று இந்நான்கின்
இசைபுணர் குறிநிலை எய்த நோக்கி (சிலப். 8: 33 – 34)

இந்நான்கனுள் இசை புணரும் குறிநிலையைப் பொருந்த நோக்கி என்க. (மேலது அடியார்க்.)

கிளையில் காட்டி ஐம்முறை கிளத்தி (கல்லா. 100: 14)

உறவு இணை, நட்பு, கிளை இயல் பெய்த (கல்லா. 14: 13)

ஏழா நரம்பு இணை, நாலு நட்பாகும், ஐந்துகிளை, ஆறு மூன்றும் பகையே (கல்லாடம் 14: 13; 100: 14) உரைமேற். இசைமரபு நூற்பா.)

ஏற்றிய குரல் இளி என்றிரு நரம்பின் ஒப்பக் கேட்கும் (சிலப். 3: 59 – 60)

குரல்வாய் இளிவாய்க் கேட்டனள் (சிலப். 8 : 35)

... இணை, கிளை, நட்பொடு, பொருபகை பிரிவின் யாத்த புரி நரம்புடைய... (நாகூர்ப்பு. விவாகப். 84)

ஆடுசிறை அறுத்த நரம்பு சேர் இன்குரல் (பதிற். 43: 21)

← *கருணாமிர்த. பக். 656,*→ இணை, கிளை, நட்பு

## பொருநர்: = கோடியர், கூத்தர்.

*ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என மூவகையினர்.*

பண்ணிமை அடைத்த பலகட் பொருநர் பாடல் (கம்ப. ஊர். 162)

பொருநரும், ஏர்க்களம் பாடுநரும், போர்க்களம் பாடுநரும், பரணி பாடுநரும் எனப்பலராம்... (தொ. புறத். 36நச்சர்.)

1. கிணை வாசிப்பவர்
(புறம். 377, 382, 384, 395, 397; சிலப். 10: 138 – 9)

2. வைகறை பாடுவோர் (புறம் 385; சிலப். 13: 148)

3. தடாரி கொட்டுவோர் (புறம். 395, 398)

பெரும்போர்த் தலைவரும் பெருங்கூத்தின் கோடியரும் (திவா. 2052)

கொற்றவன் பெயரும், தலைவனும், கூத்தனும், வீரனும் திண்ணியோனும் பொருநன். (பிங்க. 3896)

4. *மற்றவர் போல் கோலம் கொள்பவர்.*

*போர்க்களம் பாடும் பொருநர், படைவீரர் போன்றே கோலங்கொண்டிருந்தனர்.*

பொருநர் – வேறொருவர் போல வேடம் கொள்பவர்
(நன். 208. நமச். உரை)

...அவர்கள் போர்வீரர்களாக மாற்று உருக் கொண்டனர் எனலாம்... பொருநர் என்ற சொல் மற்றவரைப் போல ஒப்பீடு கொள்பவன் என்ற பொருளைத் தெளிவாக்கும்... இந்நிலையில் அவர்கள் போர்ப்பாணர் எனப் பொருத்தமுறக் குறிக்கத் தக்கவராவர் (த. வீ. க. பக். 142 – 3)

↑ பொருநர் எனும் சொல் வெற்றி வீரர்களைப் போலக் கோலம் புனைந்து பாடும் போர்ப்பாணர் எனப் பொருள்படுவது. ஆயினும் அவர்கள் போர் புரிவதில்லை.

அன்னல் நல்நாட்டுப் பொருநம், யாமே,
பொரா அப்பொருநரேம் (புறம். 386: 18 – 19)

*(போர்வீரர் போல் வேடமணிந்த, ஆனால் போரிடாத பொருநன்.)*

← *தே. நே. 51/13*

## பொருமுக எழினி: = இருமுக எழினி

*அரங்கின் ஒருபுறம் அன்றி இருபுறமும் இருந்து வந்து பொருந்தும் திரையானதால் பொரு முகஎழினி*

ஒருமுக எழினியும் பொருமுக எழினியும் (சிலப். 3: 109)

*(பொரு முகம் - பொருந்தும் பக்கம்)*

## பொருள் தொடர்நிலைச் செய்யுள்:

*காப்பியம்* (Narrative or Epic poem)

சொல் தொடர்நிலை, பொருள் தொடர்நிலை என்னும்
தொடர்நிலைச் செய்யுட்கும் காப்பியமென்று பெயர்...
(சிலப். உரைப்பாயிரம்.)

*(செய்யுள் - இலக்கியம்)*

## பொலிப்பாடல்: = முகவைப்பாட்டு, முகவை

*பயிர்த்தொழிலில் நாடு சிறக்க நில அன்னையைப் 'பொலிக' என வாழ்த்திப் பாடும் பாடல்.*

பொலிப்பாட்டுப் பாடப்புகுந்தாள் (விறலி விடு. 785)

முகவை பாடுதல் – பொலி பாடுதல்; முகவை என்றார் நெல்லு முகந்து கொடுக்கப்படுதலாலே (சிலப். 10: 137 உரை.)

புகர்முக முகவை (புறம். 371: 20)

## பொற்பூ: பொன் தாமரைப்பூ

*பாணர் சூடுவதற்காக அரசர் அளிக்கும் தாமரை வடிவான பொன் அணி.*

பைம் பொற்றாமரை பாணர்ச்சூட்டி (பதிற். 48)

*←பொருந. 159நச்சர். உரை. அடிக்குறிப்பு)*

## பொற்றாளம்: → ஐம் பொன் கருவி

# போ, பௌ

**போக்கியல்:** = போக்கு, வைப்பு

*சுரிதகம்*

இடைநிலைப்பாட்டு, தரவு, போக்கு (தொ. செ. 131)

போக்கியல் வகையே வைப்பு எனப்படுமே. (தொ. செ. 135)

→ அடக்கியல்

**போக்கு:** → போக்கியல்

**போதரல்:** → உலா

**போர்ப்பறை:**

*போர்முரசு, இரணபேரி* (war-drum)

போர்ப்பறை முழுங்கி எங்கும் (சீவக. 758)

போர் முரசுஎழ எழப் பொங்கி (பாரத. நான்காம். 3)

**போர்வை:** = பச்சை

*தோல், மேல்போர்வை; யாழ் உறுப்புள் ஒன்று. யாழின் பத்தரை மூடித்தைத்த தோல் போர்வை.*

தோலும், மீக்கோளும் போர்வையாகும் (பிங்க. 3908)

பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை (பொருந. 8)

உருக்கியன்ன பொருத்துறு போர்வை (பெரும்பாண். 9)

*(பொல்லம் - தைத்தல்)*

→ பச்சை

**பௌளி:**

*பண்களில் ஒன்று* (பரத. இராக. 56)

# ம

## ம்:
*'ம்' என்பது ஒத்து கூட்டுகின்ற ஒலி*
இம்மென இமிரும் (அகம். 318: 6)
சுரும்பு இமிர்ந்து இம்மென (கலித். 119: 8)
வண்டு இமிர் நறுங்கானல் (கலித். 123: 5)
"மகரத்தின் ஒற்றால் சுருதிவிரவும்..." (சிலப். 3: 26 அடியார்க்.மேற்.) (பஞ்ச. 45)

→ மகரத்தின் ஒற்று

## ம:
*உழை (மத்திமம்) என்ற இசைச் சுரத்தைக் குறிக்கும் எழுத்து.*
அன்றியும் சரிகமபதநி என்பாரும் உளர் (சிலப். 3: 67– 8 அடியார்க்.)

## மகதி:
*நாரதருடைய யாழ்*
தும்புருநாரதர் மகதி விபஞ்சி நரம்புளர (பிரமோத். 2: 62)
*பரதரின் நாட்டிய சாத்திரமும், அரபத்த நாவலரின் பரதசாத்திரமும் 'மகதி' யாழ் பற்றிக் குறிப்பிடுகின்றன*
← *செ. ப. அ. 2978*

## மகரக்கை: → மீன்கை

## மகரம்: → மீன்கை, மகரயாழ்

## மகரத்தின் ஒற்று:
*'ம்' என்ற எழுத்தால் ஒத்து (சுருதி)க் கூட்டிக் கொள்ளுதல்*
மகரத்தின் ஒற்றால் சுருதி விரவும் (பஞ்ச. 45)
முதலில்பாடுமிடத்து மகரத்தின் ஒற்றாலே நாதத்தை உச்சரிக்கு மரபு (சிலப். 3: 26 அடியார்க்.)
→ ம்

## மகரமுகக்கை: → மீன்முகம்

## மகரமுகம்: → மீன்முகம்

## மகரயாழ்: = மகரம்
*கொம்பன் சுறாமீன் வடிவ யாழ்.*
*இதற்கு நரம்புகள் 19.*
மகரம் சுறாமீன் ஆகும் என்ப. (திவா. 598)
மகரயாழின் வான்கோடு தழீஇ (மணி. 4: 56)
தீந்தொடை மகரவீணைத் தெள்விளி (சீவக. 608. நச்சர்)
மகரவீணை கிளை நரம்பு வடித்த (மணிமே. 19: 25)
மாணப்புணர்ந்ததோர் மகரவீணை (பெருங். 3: 15: 23)
பேரியாழ் பின்னும் மகரம் சகோட முடன் (பஞ்ச. 7)
எறிசுறா வான்மருப்புக்கோத்து நெறிசெய்த
நெய்தல் நெடு நார்ப்பிணித்து யாத்தகை உணர்வின்
யாழிசை கொண்ட இனவண்டு இமிர்ந்து ஆர்ப்ப (கலித். 131: 7 – 9)
↑ இன்றைய கிட்டார், சரோட், மாண்டலின் முதலியன மகரவடிவுடையன.

## மகளிர் விளையாட்டு:
*மாந்தரின் விளையாட்டுக்களில் இருந்தே ஆடல்கள் பிறந்தன. விளையாடலின் பெயர் வினோதம் (பொழுது கழித்தல்).*
வினோதம் (பொழுது கழித்தல்) விளையாட்டு (திவா. 1563)
*இதிலிருந்து வினோதக்கூத்து மலர்ந்திருக்கலாம்.*
ஓரை, பண்ணை, கெடவரல், பொய்தல், உண்டாட்டு, கிரீடை, உப்பு, கேளி, வண்டல், தொடலை, மகளிர் விளையாட்டு (திவா. 1561)
தொடலை, உண்டாட்டு, பொய்தல், விலாசனை, வண்டல், கெடவரல், பண்ணை, உப்பு, கிரீடை, கேளி, உரை (சூடா. 9: 3)
*(பண்ணை - ஓரை - கூட்டம்)*
↑ மகளிர் விளையாட்டைக் குழுவாக நிகழ்த்தியதை இச்சொற்கள் குறித்தன.
ஒப்பு:– குரவை

## மகாசூதம்:
*போர்ப்பறை* (யாழ். அக.)

## மகாதுந்துபி:
*போர்ப்பறை* (யாழ். அக.)

## மகிடி: → மகுடி

## மகிடிக்குழல்: → மகுடி

**மகிழி:** → மகுடி

**மகிழிசை:**
செந்துறைப்பாட்டு வகையுள் ஒன்று (யா.வி. 538)

**மகுடம்:**
1. பறை வகையுள் ஒன்று
2. மத்தளம் முதலியவற்றின் விளிம்பு(ச. அ.)(Edge of Drums)
← தே. நே. 122/11

**மகுடராமக்கிரியம்:** → மகுடராமக்கிரி

**மகுடராகம்:** → மகுடராமக்கிரி

**மகுடராமக்கிரி:**
= மகுடராகம், மகுடராமக்கிரியம்
பண்களில் ஒன்று
இராமக்கிரி... மகுடராமக்கிரி.... பண்ணே (திவா. 1894)

**மகுடாட்டம்:** → கணியான் கூத்து

**மகுடி:**
= மகிடி, மகிடிக்குழல், புஞ்சி(வடநாடு), மகிழி, மகுளி
பாம்பாட்டியின் ஊதுகுழல். இது ஒத்துக்குழல் (சுருதிநாடி - Drone pipe) சுரக்குழல் (சுரநாடி - Tune pipe) என்று இருகுழல் கொண்டது. சுரக்குழல் பாடுவதற்கும் அதற்கேற்றவாறு சீரான சுருதி தருவதற்காக ஒத்துக்குழலும் பயன்படுவன. இது (மத்திம சுருதி) உழை ஒற்றில் அமைந்த கருவி. புன்னாகவராளிப் பண்ணிற்கு ஏற்றதாகத் துளையிடப் பட்ட வாத்தியம்
மகுடியின் கிளை இமிழ்த்தன்ன (பாரத. அணி. 15)
மகுளி (ஓசை) > மகுடி
← த. க க 4/IV, → மகுளி

**மகுளி:** = மகுடி
ஓர் இசைக்கருவி
மத்தரி, தடாரி, தண்ணுமை, மகுளி (பரிபா. 12: 41)
உருந்துடி மகுளியின் பொருள் தெரிந்து இசைக்கும் (அகம். 19: 4)
மகுளி - ஓசை
→ மகுடி

**மங்கல கௌசிகை:** → மங்கல கௌசிகம்

**மங்கல கௌசிகம்:** = மங்கல கௌசிகை
பண்களில் ஒன்று

**மங்கலத்தாசியர்:**
தாசியர் மங்கலத்துடனே இணைத்துக் கருதப் பட்டனர்.
மங்கலத்தாசியர் தங்கலன் ஒலிப்ப (சிலப். 6: 125)
தாசியர் மலரையும் அறுகையும் நெல்லையும் மங்கலமாகச் சிந்தி... (மேலது அடியார்க்.)

**மங்கல தூரியம்:**
மங்கள வாத்தியம். திருநாளுக்கு முழக்கப்படும் இசைக்கருவி

**மங்கல நாடகம்:**
இன்பியல் நாடகம் (Comedy)

**மங்கலப்பண்:**
மங்கலப்பண் என்பது பாலைப்பண் என்ற செம்பாலை (அரிகாம்போதி)
பாற்பட நின்ற பாலைப் பண்மேல் (சிலப். 3: 149)
மங்கலப்பண்ணாய் நரப்படைவும் உடைத்தாயிருக்கிற பாலைப் பண்ணை... (மேலது உரை)
↑ தமிழிசையின் தலைமைப் பாலையாக செம்பாலை விளங்குவதால் அதற்கு பாலைப்பண் என்ற சிறப்புப்பெயர்.

**மங்கலப்பாடகர்:**
வாழ்த்திப்பாடுவோர்.
பெருநம்பிகள், மங்கலப்பாடகர், எட்டர் ஆகியோர் கடிகைமாக்கள் (சூடா. 787)

**மங்கலவாழ்த்து:**
1. திருமண வாழ்த்துப்பாடல்; திருமணத்திற்கு முன்பும், பின்பும் பாடப்படும் பல்வேறு வாழ்த்துப் பாடல்கள்.
மங்கல வாழ்த்துப்பாடலும் (சிலப். பதிகம் 63)
மங்கலம் – கலியாணம் (சிலப். பதிகம் 62 – 3 அடியார்க்.)
2. சிலப். முதல் காதை ( மங்கல வாழ்த்துப்பாடல்). முதுபெண்டிர் கோவலனையும், கண்ணகியையும் வாழ்த்திப் பாடிய திருமண வாழ்த்துப்பாடலாக உள்ளது. கொச்சகக்கலியால் வருவதாலும் பாடல் என்று அடிகள் கூறுதலாலும் இது இசைப்பாட்டு வகையது.
... பாடலுமென்றது என்னையோவெனின், – இஃது ஆசிரியப்பாவால் வாராது கொச்சகக்கலியால் வருதலாலும்... வாழ்த்தும், உரையும், பாடலுமாய் வருவதாலும் இங்ஙனம் பெயர் கொடுத்தார் என உணர்க. (மேலது. அடியார்க்.)
இது அரச வாழ்த்தாக சிந்தியல் வெண்பாவால் முதலில் தொடங்குகின்றது. கும்மிச்சந்தத்தில் அமைந்த, சிந்தியல்வெண்பா யாப்பில் வெண்டாழிசையாய் வருவன இவை. வாழ்த்து என்பது

வெண்பாவில் தொடங்க வேண்டும் என்று மரபு.
.. மூவடி முக்கால் வெள்ளையின் மொழிப
( மதிவாணனார்) (சிலப். 6: 35 அடியார்க் மேற்.)
3. இலக்கியத்தின் முதல் அல்லது இறுதியில் வாழ்த்திப்பாடப்படும் வேட்டல்.

## மங்கள பௌளம்:

பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 103)
↑ இது தற்காலத்திய பௌளி ஆகலாம்.

## மங்களம் பாடல்:

இசை நிகழ்ச்சிகளில் இறுதியில் பாடப்படுவது. இதற்குரிய சில பண்களாவன:-
1. குறிஞ்சிப்பாணி (மத்தியமாவதி)
2. சுருட்டி
3. வியாழக்குறிஞ்சி (சௌராட்டிரம்)
← த. க. க 4/IV

## மஞ்சரி:

பண்களில் ஒன்று (பரத. இராக. 102)
↑ இது தற்காலத்திய படமஞ்சரி ஆகலாம்.

## மஞ்சிகை: கூத்தப்பள்ளி

"கொட்டகாரம் (கொட்டாரம்) அட்டில், பண்டசாலை, கூடகாரம் (கூடாரம்), பள்ளிஅம்பலம், உரிமையிடம், கூத்தப்பள்ளி.
(இறை. க. 21 உரை)
கூழுடைக் கொழு மஞ்சிகை (பட்டினப். 163)

## மஞ்சிரா: காற்சிலம்பு

உட்கூடான இக்கால் அணியின் உள்ளே பரல்கள் (Pallets) இடப்பட்டிருக்கும். ஆடலின் போது பாதத்தால் தரையைத்தட்டுதலால் (stamping of the foot) இனிய ஒலி தாளத்துடன் எழும்.

## மட்டத்தாளம்:

இருபக்கமும் சம எண்ணிக்கையில் வரும் தாளம்
எ-டு:-
1) நாலன் மட்டம் – 2+2=4 நாலன் ஒற்றை (சதுசுர ஏகம்)
2) ஆறன் மட்டம் – 3+3= 6 மூன்றன் ஒற்றை (திசுர ஏகம்)
3) எட்டன் மட்டம் – 4+4=8 நாலன் திரிபுடை (சதுசுரதிரிபுடை)
4) பத்தன் மட்டம் – 5+5=10 ஐந்தன் ஒற்றை (கண்டஏகம்)
5) பன்னிரண்டன் மட்டம் 6+6=12 ஆறன் ஒற்றை–உருவகம்(ரூபகம்)
மூன்று ஒத்துடைய மட்டதாளத்திலே எடுத்து...(சிலப். 3: 151 உரை)
... ஆறன் மட்டம், எட்டன் மட்டம் என்பனவும்... (சிலப். 3: 16 உரை)
← த. க. க. 187/III

## மட்டிய தாளம்:

ஏழுதாள வகையுள் ஒன்று. இத்தாளம் ஐந்து தாள இனங்களுடன் சேர்ந்து ஐந்து மட்டிய தாளங்களாகின்றன. இரண்டு அலகும் (லகு) ஒரு துரிதமும் என்ற உறுப்புகளை (அங்கம்)க் கொண்டது.
இதன் உறுப்புகள் - 101
1. மூன்றன் (திசுர) மட்டியம் - $1_3 0 1_3$ = 8
2. நாலன் (சதுசுர) மட்டியம் - $1_4 0 1_4$ = 10
3. ஐந்தன் (கண்ட) மட்டியம் - $1_5 0 1_5$ = 12
4. ஏழன் (மிசுர) மட்டியம் - $1_7 0 1_7$ = 16
5. ஒன்பான் (சங்கீரண) மட்டியம் - $1_9 0 1_9$ = 20

## மட்டுகம்: தவில், மத்தளம்

## மடக்கு: (Pun)

1. செய்யுளில் ஒரே சொல் பல பொருளில் மடங்கிவரல்
2. செய்யுளில் எழுத்தும் சீரும் சொல்லும், அடியும் திரும்பத்திரும்ப வருமாறு அமைத்தல்.
எடு:– நடந்தாய் வாழி காவேரி, நின் நடந்த வெல்லாம்.

## மடிகண்ணிகள்: → தான்தோன்றிச் சுரங்கள்.

## மடியின் அவிநயம்: = சோம்பினோன் அவிநயம்

மடியின் அவிநயம் வகுக்கும் காலை, நொடியொடு பல கொட்டாவி மிகவுடைமையு, மூரிநிமிர்ந்து முனிவொடு புணர்தலும், காரணமின்றி யாழ்ந்து மடிந்திருத்தலும், பிணியுமின்றிச் சோர்ந்த செலவோடு, அணிதரு புலவர் ஆய்ந்தனர் என்ப
(சிலப். 3: 13 அடியார்க்.)

## மடிவாய்:

தோலை மடித்துப் போர்த்தவாய்.
தண்ணுமை மிருதங்கம் முதலிய தோற்கருவிகளின் வாய்ப்பகுதியானது மூன்று தோலால் மடித்துப் போர்த்தப்படுவது. இதனால் எதிரொலிப்பு ஏற்பட்டு தாள இனிமை கூடுகின்றது.
மடிவாய்த் தண்ணுமை நடுவண் சிலைப்ப (பெரும்பண். 144)
தோலை மடித்துப் போர்த்த வாயையுடைய மத்தளம்
(மேலது நச்சர்.)
வெண்ணெல் அரிநர் மடிவாய்த் தண்ணுமை (அகம். 204: 10)
மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே (புறம். 289: 10)
மடிவாய்த் தண்ணுமை நடுவண் ஆர்ப்ப (நற். 130: 2)
மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பி (பெரும். 166)
சீழ்க்கைபிடித்தலாலே மடித்த வாயையுடைய இடையர்
(மேலது நச்சர்.)
மடிவீடு வீளையர் (குறிஞ்சி. 161)
இடையன்மடிவீடு வீளை கடிது சென்றிசைப்ப (அகம். 274: 8 – 9)
நாத்தலை மடிவிளிக் கூத்தொடு குயிறர (சீவக. 120)
செந்நா மடிவிளி (கூர்ம. பிலக்கமுத. 30)
↑ தற்காலத்திய மதங்கம் ( மிருதங்கம்) மூன்று வகைத் தோலாலேயே மடித்து உருவாக்கப்படுகின்றது.

## மண்: = மார்ச்சனை, சோறு, கரணை, மருந்து, பசை.

மத்தளம் முதலிய தோற்கருவிகளில் பூசும்

*மார்ச்சனை. இதன் மூலம் வேண்டிய அளவு ஒத்து (சுருதி) சேர்க்கப்படுகிறது.*
விசிபிணிக்கொண்ட மண்கணை முழவு (புறம். 23)
மண்ணமை முழவு (பொருந. 109)
மண்கணை முழவின் தலைகோல் கொண்டு (மலைபடு. 370)
மண் ஆர் முழவின் (மலைபடு. 382)
மண்கணை முழவின் மகிழிசை ஓதையும் (சிலப். 10: 139)
மண்கணை முழவும் வணர்கோட்டுயாழும் (சிலப். 28: 55)
மண்... முழவின் மார்ச்சனையும் ஆமே... (சூடா. 11: 11)
முழவின் மண்ணார் கண்ணின் அதிரும்.. (நற். 100: 10 – 11)
முழவின் மண் ஆர்கண்ணின் இம்மென இமிரும் (நற். 139: 5 – 6)

## மண்கணை முழவு: → மண்

## மண்டலக்கை: = மண்டலம்

*ஒற்றைக்கை அவிநயம்.*
மண்டலமென்பது மாசரக்கிளப்பின், பேடுநுனியும் பெருவிரல் நுனியும், கூடிவளைந்து தம் முகிர்நுனை கௌவி, ஒழிந்த மூன்றும் ஒக்க வளைவதென மொழிந்தனர்... (சிலப். 3: 18 அடியார்க்.)

→ மண்டலம்

## மண்டலம்:

1. *வட்டம்*
"...தன் கையால் குளிர்ந்த நீரைத் தெளித்துத் தடவி மண்டலமிட்டு..." (சிலப். 16: 35 – 43 அடியார்க்.)
மண்டலம், பரி, ஊர், வட்டம்... (சூடா. 11: 15)
2. *கூத்தின் வகை; சிலகரணங்களை இணைத்து இடையின்றி நாட்டியத்தில் அவிநயம் செய்வது.*
3. *ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று.*
மண்டல மென்பது... பேடு நுனியும், பெருவிரல் நுனியும், கூடி வளைந்து தம் முகிர்நுனை கௌவி, ஒழிந்த மூன்றும் ஒக்க வளைவதென மொழிந்தனர்... (சிலப். 3: 18 அடியார்க்.)

## மண்டலியாழ்:

1. வட்டவடிவான யாழ் (தே. நே. 263/V)
*மண்டலி - வட்டவடிவம்*
2. *பெரும்பண்களுள் ஒன்று*
ஈரிரு.... மண்டலியாழ்... பெரும்பண்... (பிங்க. 1380)

## மண்டி அடைவு:

*காலை மண்டியிடும்போது அடைகின்ற பாதநிலை.*

## மண்டில ஆசிரியம்:

*அடிமறி மண்டிலம், நிலைமண்டிலம் முதலியன எல்லா அடியும் நாற்சீராய் வரும் ஆசிரியப்பா*
மண்டில ஆசிரியத்தினை, நிலை மண்டிலமெனவும்
அடிமறி மண்டிலமெனவும் பெயரிட்டு வழங்குவாரும் உளர் (தொ. செ. 429. பேரா.)
*மண்டலம், மண்டிலம் - முழுமையாதல், நிரம்புதல்*
← *தே. நே. 252/III* ; யா. வி. 73 – 74.

## மண்டிலப்பாதம்: → சுற்றடைவு

## மண்டிலயாப்பு:

*விருத்தயாப்பு; நாற்சீரடிச் செய்யுள். அடிக்கு நாற்சீராய் நாலடியாய் வருவது.*
ஒத்தாழிசையும் மண்டிலயாப்பும்... (தொ. செ. 114)
மண்டிலம், குட்டம்... (தொ. செ. 116)
↑ மண்டிலயாப்பானது ஆசிரியத்துடன் நிலைமண்டிலம், அடிமறி மண்டிலம் என்று தொன்றுதொட்டு வருவது. பின்பு விருத்தயாப்பு என்று பெயர் ஏற்பட்டது.
*விருத்தம் - பல்கிப்பெருகுவது.*
ஒப்பு:– விருத்த அசுரன்(விருத்தாசுரன்)
ஒத்தாழிசையும் மண்டிலயாப்பும் (தொ. பொ. 427)
நாற்சீரடி யாத்துவருவன மண்டிலயாப்பு எனப்படும் (மேலது பேரா.)

## மண்டிலவிருத்தம்:

*அடிகளில் சீர்கள் மண்டிலித்து (மீண்டும் மீண்டும்) வரும் விருத்த யாப்பு.*
எடு:– சிலப். கானல்வரி. திங்கள் மாலை முதலிய (7: (1); (2); (3)) ஆற்றுவரிப் பாடல்கள் மண்டிலவிருத்தங்கள்.

## மண்டிலம்:

1. = *இயக்கு, வட்டம், தாயி, தானம், நிலை, தான நிலை.* (Octave, Register, ஸ்தாயி)
*இசை இயங்கும் நிலைகள். ஏழுசுரம் அல்லது பன்னிருதான சுரங்களின் தொகுப்பு.*
வட்டம் என்பது வகுக்கும் காலை ஓரேழ் தொடுத்த மண்டிலமாகும். (சிலப். 17: 13 அடியார்க்.)
"... ஈராறு இராசிகளை இட்டடைவே நோக்கவே ஏரார்ந்த மண்டிலம் என்று எண்..." (மேலது அடியார்க்.)
மூவகை இயக்கமு முறையுளிக் கழிப்பி (சிலப். 8: 42)
வலிவும், மெலிவும், சமனும் எனப்படா நின்ற தானநிலை (சிலப். 3: 93 – 94 அரும்)
வரன்முறை வந்த மூவகைத்தானத்து (சிலப். 13: 110)
மந்தர மத்திமை தாரமிவை (கல்லா. 21: 50)
↑ கீழ்மண்டிலம், நடுமண்டிலம், மேல்மண்டிலம் ஆகிய மண்டிலங்களில் இசையின் ஏழுசுரங்களும் மண்டிலித்து (மீண்டும் மீண்டும் வரல்) வருவதால் மண்டிலம் எனப்பட்டது. மீண்டும் மீண்டும் வட்ட மடித்து வருவதால் வட்டம்.
2. *தேசிக்கூத்தின் மண்டில நிலை.*
*இருகாலும் பக்கல்வளைய மண்டிலித்தல்*
இருகால் மண்டிலித்தல் இடுதல் மண்டில நிலை (பிங்க. 1470)
வியன் கண் முதுபொழின் மண்டில முற்றி (மதுரைக். 190)
மண்டலம், மண்டிலமென மருவிற்று (மேலது நச்சர்.)
ஐது மண்டிலத்தால் என்றது – அழகிய மண்டில நிலையால் என்றவாறு (சிலப். 3:152 அரும்.)
தேசிக்கூத்தெல்லாம் மண்டில நிலையாதலின்...(மேலது.அடியார்க்.)
← *சிலப். 8: 25 அடியார்க்.*
3. வெண்டுறைச் செய்யுள். (யா.க.)
4. தேசிக்குரிய கால் (அடைவு)களுள் ஒன்று. (சிலப். 3: 16 அடியார்க். அடிக்.)

## மண்டை:

1. *பாணர்க்குப் பரிசாக வழங்கப்பட்ட பொன்னால் ஆன உணவுப் பாத்திரம் அல்லது அணிகலன்.*

பசும்பொன் மண்டை இவற்கு ஈக... (புறம். 289: 6 – 7)
பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார் (புறம். 115)
ஏலாது கவிழ்ந்த என் இரவல் மண்டை (புறம். 179: 2)
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யார் என (புறம். 103: 3)

2. *பறைவகையுள் ஒன்று*

*மண், மரம், பித்தளை முதலிய பாத்திரங்களில் தோலால் கட்டப்பட்டது, மண்டைப்பறை.*
*மண்டை - மொந்தை என்று திரிந்ததாகலாம்.*

இமிழ்இசை மண்டை உறியொடு தூக்கி (கலித். 106: 2)
↑ இக்கருவியை வாசிப்போர் மண்டைப்பாணர்.
இசைப்பாணரும், யாழ்ப்பாணரும், மண்டைப்பாணரும்..
(தொ. பொ. 91 நச்சர்.)

3. *கலம்*

அக்காளி மண்டை – அக்காளிப் பிரசாதம் வைக்கும் கலம்.
(பெ.அ. 9/I )

*வெள்ளி மண்டை நிறை நகரக்கல்லால்..*
*(தெ. இ. க. 5 671)*

*. விற்றுச் செய்த பொன்னின் மண்டை....*
*(தெ இ. க. 19 346. த க. சொ. 475)*

4. *கபால ஓடு*

← *ப. இ. இ 21 ;* தே. நே *122,10*

## மண்டைப்பாணர்: → மண்டை

## மண்ணார் முழவு:

*மார்ச்சனை இடப்பட்ட முழவு.*

ஒரு திறம் மண்ணார் முழவின் இசை எழ (பரிபா. 17: 13)
மண்ணார்ந்து இசைக்கும் முழவொடு... (பரிபா. திர. 4: 1)

## மண்ணி: ஒப்பனை

மணம் கமழ் மாதரை மண்ணி அன்ன (பொருந. 19)
*(மண்ணி அன்ன - ஒப்பனை செய்தால் போல)*

## மண்ணுமங்கலம்:

*ஒருவகை மங்கலப்பாட்டு - பகைவர் மதிலை வெற்றி கொண்டதற்குப் பாடும் பாடல்.*

மண் எயில் அழித்த மண்ணுமங்கலமும் (தொ. புறத். 36)
இகன் மதில் குடுமி கொண்ட மண்ணுமங்கலம் (தொ. புறத். 13)
குடுமிகொள்ளு மண்ணுமங்கலம் (கூர்ம)

## மணப்பறை:

*மணமுழவு; திருமணம் அறிவிக்கும் முரசு,* (Marriage drum)

மன்றம்கறங்க மணப்பறையாயின் (நாலடி. 23)
மணமுரசு எறிதர (பரிபா. 22: 15)
படுமணமுழவொடு (அகம். 136: 6)
நிர்மண முழவந்து எடுப்புமே (கலித். 70: 10)
மருதத்திற்கு... பறை, மணமுழவும் .... (தொ. பொ. 18 நச்சர்)

## மணி:

1. *கஞ்சதாளக்கருவி*

*எடு:- கைம்மணி, பெருவட்ட மணிப்பலகை* (gong) *சிறுவட்ட மணிப்பலகை (சேகண்டி), சாலர், சிங்கி. மணிகள் யாவும் வெண்கலத்தால் செய்யப்படுபவை; கஞ்சம் - வெண்கலம் ; வெண்கல ஓசை முழங்கி நீண்டு நிற்பது*

கஞ்சம், உறை, வெண்கலமாகும்மே (பிங்க. 6: 140)

2. *பறைகளில் ஓசை நயத்திற்காகக் கட்டப்படும் மணிகள்*

மன்றல் கலந்த மணிமுரசின் ஆர்ப்பு எழ (பரிபா. 8: 30)
← தே. நே. *56 ,3*

## மணித்தாளம்:

*சிறு மணிக்கொத்து. மணிகளைக் கோத்து தாளக் கருவியாகப் பயன்படுத்துதல்.*

இரும்பொலம் பாண்டில் மணியொடு தெளிப்ப (அகம். 376: 9)

## மணிப்பாரி:

*மணியடித்து இரவுக்காவல் செய்வோர் பாடும் பாடல்*

## மணிப்புரி நடனம்:

*இந்தியாவிலுள்ள மணிப்பூர் மாநில நடனம் இது தாண்டவம், இலயம் (இலாசியம்) என்னும் இருவகை ஆடல்களாலும் அமைந்திருப்பது.*

## மணிரங்கு: *பண்களில் ஒன்று*

## மணிவட்டம்: *சேகண்டி*

## மத்தம்: → மத்தளம், மத்தளி

## மத்தரி: *மத்தளம்*

*ஒரு தோல் இசைக்கருவி இருமுகப்பறை.*

முழவு இமிழ் மத்தரி தடாரி தண்ணுமை மகுளி (பரிபா. 12: 40 – 41)

## மத்தலம்: *மத்தளம், மத்தளி*

*இருமுகத் தோல் இசைக்கருவி*

*தலைப்பறை ஒன்றும் திமிலை ஒன்றும் மத்தலம் ஒன்றும்*
*(தெ. இ. க. 17 243. த. க. சொ. 477)*

## மத்தளக்கட்டை:

*மத்தளத்தின் மரத்தால் செய்த பகுதி* (Wooden frame of a drum)

← *செ. ப. அ. 3046*

## மத்தளக்கோலம்: = மிருதங்கயதி

*முழவுச் சொற்கள் தொடக்கத்தில் குறுகி நடுவில்*

பெருகி இறுதியில் குறுகி வருவது.
எடு: தோம், கிடதோம், தகிடதோம், கிடதோம், தோம் / நிச், தநிச், பதநிச், தநிச், நிச்.

← இ. து. த. சொ. 37

## மத்தளப்பனுவல்:

மத்தளத்தில் முழக்கப்படும் கோர்வைகள், மோராக்கள், தீர்மானங்கள், அறுதிகள், நடைச் சொல் விரிவுகள், நடை (கதி) வேறுபாடுகள் முதலியன மத்தளப் பனுவலாகும்.
பனுவல் என்பது செம்மையாக, ஆழமாகப் பின்னிய மைக்கப்பட்ட ஒன்று.
ஒப்பு:– கிருதி – பனுவல்.

← மத். 67

## மத்தளம்:

= தண்ணுமை, மதங்கம், மிருதங்கம், மத்தரி, மத்தளி, மத்தம்.
பறை (முழவு) வகையுள் ஒன்று. இருமுகத் தோற்கருவி
மத்தளங்கொட்ட வரிசங்கம் நின்றூத (நாச்சியார். திரு. 6: 6)
... நிலையாய்க் கொட்டி மத்தளம் வாசிப்பான் ஒருவனும் கொட்டி மத்தளம் வாசிக்கும் குணப்புகழ் மருதனான சிகா சிவனுக்கு
(தஞ்சைப் பெரியகோவில் கல்வெட்டு)
யாழ்ப்பாடலின் வழியே அதற்குத் தகத் தண்ணுமை யாகிய மத்தளம் நின்றது. (சிலப். 3: 139 – 40 அடியார்க்; 140–41 அரும்.)
மத்தம்: மத்து ஓசைப்பெயர், இசையிடனாகிய கருவிகட்கெல்லாம் தளமாதலான் மத்தளமென்று பெயராயிற்று...
(சிலப். 3: 26 அடியார்க்.)

## மத்தளி: மத்தளம்

உகச்சுகள் தலைப்பறை ஒன்றும் மத்தளி இரண்டும். . .
(தெ. இ. க. 3 128, த. க. சொ. 84)
உகச்சுத் தலைப்பறை ஒன்று மத்தள மூன்றும்
(தெ. இ. க. 13 170, த. க. சொ. 84)
மத்தளம் - மத்தளி
ஒப்பு:– சங்கு > சங்கம்

| | |
|---|---|
| ஏதமில் தண்ணுமை எக்க மத்தளி | (பாசுரம். 925) |
| கொக்கரை, சச்சரி, மத்தளி | (திருப்பு. 278) |
| தண்ணுமை,எக்கம், மத்தளி, தாழ்பீலி | (பாசுரம் 3: 4: 1,254) |

← த. க. க. 275/I

## மத்திமக்கிரமம்:→ கிளைமுறை, ஐந்தன்முறை

## மத்திமகாலம்: → இரண்டாம் காலம்,வாரநடை

## மத்திமகாலம் பாடுதல்: → தானம் பாடுதல்

## மத்திமசுருதி: → உழை ஒத்து

## மத்திம பாவம், மத்திமக்கிரமம்: → கிளை முறை

## மத்திமசுருதி,மத்யம சுருதி: → உழை ஒத்து

## மத்தியமயதி: → உடுக்கைக் கோலம்

## மத்தியமாவதி: →குறிஞ்சிப்பாணி

## மதங்கம்: மிருதங்கம்

மதங்கம் - ம் + ரு + தங்கம் - ம்ருதங்கம் - மிருதங்கம்
ஒப்பு:– நித்தம் > ந் + ரு + த்தம் > நிருத்தம்
வடமொழியாக்கத்தில் தமிழிலுள்ள உயிர்மெய், மெய் ஆக்கப்பட்டு பின் 'ரகரம்' சேர்க்கப்படும்.
தரித்த மதங்கமொடு, மத்தளம்,... கருவியாம்
(சுத்தானந்தப் பிரகாசம். சிலப். 3: 26 அடியார்க். மேற்.)
மதங்கமொடு துந்துபி... முழங்கவே... (திருவாத. பு. கடவுள். 1)
மதங்கர் - பாணர்; மதங்கி - பாடினி;
மதங்கமுனிவர்- கலைமகளின் தந்தை.
மாதங்கி - யாழ்த் தெய்வம்; மதங்கர் - கூத்தர்

| | |
|---|---|
| மதங்கர்–பெரும்பாணர் | (சிலப். 5: 184 அடியார்க்.) |
| மதங்கியரை ஒத்தமயில் | (கம்ப. கார்கால. 79) |
| சென்னியர்...மதங்கர்... பாணர் | (பிங்க. 5: 90; தி. வா. 2: 53/213) |
| மதங்கர், சூதர், பண்ணவர், பாணர் ஆமே | (சூடா. 2: 34) |
| பாடினி... மதங்கி.. பாண்மகள் ஆகும்... | (திவா. 286) |
| பாடினி... மதங்கி... பாண் மகள் பெயரே | (பிங்க. 5:92) |
| மதங்கி எய்திய விறலி என்ப | (சூடா. 2: 65) |
| குமரி, சண்டிகை,... மாதங்கி... காளி பெயரே | (பிங்க. 2: 27) |

← தே. நே. 14/9; 139/11 ; மதங்கர்

## மதங்கர்:

பாணர், மதங்க (மிருதங்க) முழக்குநர், கண்ணுளர், சாந்திக்கூத்தர்
கண்ணுளர் – "வாசிகை... சாந்திக்கூத்தர்... மதங்கர் என்பாருமுளர்..." (சிலப். 5: 49 அடியார்க்.)
கண்ணுளாளர் – மதங்கர் (சிலப். 5: 184–6அடியார்க்.)
மதங்கர் (மதங்கமுனிவர்) - பிருகத்தேசி எனும் வடமொழி நூலாசிரியர்

← ப. இ. இ. 208,→ மதங்கம்

## மதங்கி:

1. பெண்பூசாரி, தேவரடியார், பாண்மகள், சடங்காடல் மகள், பாடுவிச்சி (Ritual Dancer)

| | |
|---|---|
| நசைமிகு வண்புகழ் பயிலு மதங்கிதன் | (தேவா. 11: அ. 39: 32) |
| மதங்கி எய்திய விறலி என்ப | (சூடா. 2: 65) |
| மடவரல் மதங்கி தானும் | (திருவிளை. இசைவாது 21/2168) |

ஆந்திரத்தின் தேவரடியார் - சானி, மதங்கி, விலாசினி
2. மதங்கியார், மதங்கம், மதங்கு - கலம்பக உறுப்பு
இரண்டு கைகளிலும் வாளெடுத்துச் சுழற்றி யாடும் இளம்பெண்ணான மதங்கிமீது ஒருவர் காதல் கொள்வதாகப் பாடும் கலம்பக உறுப்பு.

வருபுயம், மதங்கம், அம்மானை, காலம்... (இல. விள. 812)
வைக்கும்... அம்மானை... பாண், மதங்கு (வெ. பா. செய். 10)
*மதுரைக்கலம்பகம் பாடல் 16-ன் பாடல் தலைப்பு - மதங்கியார்*
*மதங்கியின் மூன்று செயல்கள்:*
*(i) வாள்வீசுதல்*
*(ii) கதிர் வேலைப் பாடுதல்*
*(iii) தண்ணுமை வாசித்தல்*
← (யா. கா. செய். 9)
3. *யானை இனத்தின் மூதாய்- ஆசீவகர்கள் ஆகலாம்.*
4. *வசிட்டரின் மனைவி*
5. *கிராதகர் (பழங்குடியினர்) மற்றும் சந்தால இனத்துப் பெண்டிர்; (மதம்கா - யானை);*
தும்பி... மாதங்கம்...யானைப்பெயரே... (திவா. 414)
← *மோனியர்வில்லியம்ஸ் (சமஸ். அக.)*
← *செ. ப. அ. 3051; த. இ. பே. 158/ 16*

## மதலைத்தூக்கு:
*எழுவகைத் தூக்குகளில் ஒன்று; இரு சீருடைய இசைத்தூக்கு.*
இத்தாளங்களின் வழிவரும் செந்தூக்கு, மதலைத்தூக்கு... ஏழு தூக்குகளும் ...
"ஒரு சீர் செந்தூக்கு, இருசீர் மதலை... என்மனார் புலவர்...
(சிலப். 3: 16 அடியார்க்.)

## மதனகீதம்: *காமப்பாடல் (Amorous song)*
மதனகீதமே திரிதரப் பிறந்ததோர் சிலம்பிற்று (சீவக. 1211)

## மதி:
1. = ஓரை, கோள்
*இராசி*
படைத்துக் கோள் பெயரிடுவாள் (சிலப். 17: (13)
ஆறிரு மதியினும் காருக வடிப்பயின் (சிலப். 26: 25)
ஆறிருமதியினும் – இராசி பன்னிரண்டிலும்
(காருக வடி – கிரகநிலை) (மேலது.அரும்)
2. → *சுழி*

## மதுமாதவி: *மத்யமாவதி; குறிஞ்சிப்பாணி*
குருகே, மாதவி, குருக்கத்தி ஆகும்... (திவா. 684)
மதுமாதவிக்குச் சங்கீரண காங்கூலக்கை (ம. சூ. 711)
நாரதசங்கீத மகரந்தத்திலே கண்ட மதுமாதவி...
(யாழ். நூல். பக். 266)
மாதவீ–3ஆம் நூற். வழங்கி வந்த பண்;
(இசைத்தமிழ் இலக்கண விளக்கம். பக். 116)
'குருகத்ய' எனும்பண் – (கானவித்தியாபிரகாசினி)
(இசைத். இலக். விளக். 100 மேற்.)
*குருகத்ய என்பது குருக்கத்தி ஆகலாம்*
மதுமாதவி என்ற இப்பண்பெயரில் புரந்ததாசர் பாடல் இயற்றியுள்ளார். (இந்திய. இசைக்கருவூலம். பக். 550)

## மதுரகவி: = மதுரம்
*பொருட் சிறப்புடனும் சொற்சிறப்புடனும் பாடவல்ல கவிஞன்.*
பொருளினில்... மதுரம்... ஆமே... (சூடா. 12: 24)

## மதுரம்: → மதுரகவி

## மந்தஇசை: = மந்தரம், காகுளி
*தாழ் ஓசை (low octave); கரகரப்பான ஓசை.*
மந்தரம், காகுளி, மந்த இசையே (பிங்க. 1419)
காகுளி, மந்த இசை (திவா. 1868)
மந்தரம், காகுளி (சூடா. 10: 40)

## மந்தக் கட்ட மகுடம்:
*கணியான்கூத்து எனப்படும் மகுட ஆட்டத்தில் எருமையின் (கழுத்துப் பகுதித் தோல் தவிர ஏனைய பகுதி) தோலால் ஒரு அடி விட்டத்துடன் செய்யப்படும் மகுடம். இது 'தொம்' என்ற மந்த ஓசையை எழுப்புவதால் இதற்கு மந்தக்கட்ட மகுடம் என்று பெயர்.*
→ *உச்சக்கட்ட மகுடம்*

## மந்தக்குரல்: = சமன் குரல், அடிப்படைக்குரல், ஆதார சட்சம் (middle octave 'c') மந்தோச்ச சமம், சமநிலைக்குரல் (மத்தியஸ்தாயி சட்சம்), தாழ்குரல், சமன் இசை
மெலிவிற் செல்லை மந்தக்குரலே... (சிலப். 8: 43 – 4)
குரல் மந்தமாக... (சிலப். 17: (18)
மந்தோச்ச சமம் கூறுவார் (மேலது. அடியார்க்.)
ஒப்பு: மந்த முழவம் (தேவா. 7: 73: 11)
தாழ்குரல் தண்ணுமை (சிலப். 3: 27)
*(தண்ணுமையின் வலக்கண் சமன்தானத்துக் குரலுக்கு (மத்தியஸ்தாயி சட்சம்) ஒத்து (சுருதி) சேர்க்கப் பட்டது.)*
மந்தம், மத்திமம் வழங்கும் சமன் இசை (திவா. 1870)

1. *மெலிவு மண்டிலம் - ச ரி க ம ப த நி* (dots below each note)

2. *சமன் மண்டிலம் - ச ரி க ம ப த நி*
↑
*மந்தக்குரல்*

3. *வலிவு மண்டிலம் - ச ரி க ம ப த நி* (dots above each note)

## மந்தரக்கோல்:
= இயல்சுரம்; சுத்தசுரம்(natural note)
*தமிழிசையின் தலைமைப் பாலையான முல்லையாழ் (செம்பாலை, அரிகாம்போதி) பெற்றுள்ள சுரங்கள் மந்தரக்கோல்களாகும்* அவை:– ச $ரி^2$ $க^2$ $ம^1$ ப $த^2$ $நி^1$

## மந்தரஸ்தாயி வரிசை: → கீழ் மண்டில வரிசை

## மந்தரத்தாரம்:

*மென்தாரம், குறைதாரம், இறங்கியதாரம் (கைசகி நிசாதம்). தமிழிசையின் ஏழ்பெரும் பாலைகளில் தலைமைப் பாலையான செம்பாலை (அரிகாம் போதி)யில் பயின்று வரும் சுரம்.*
*இதன் குறியீடு. 'நி'*

ததும்பும் மந்தரத்தின் தாரம் பயின்று
மந்தரம் முரல் வண்டு (திருவாச .6: 36)
தாரத்து உழை தோன்றப் பாலையாழ் (பஞ்ச. 22)
தாரத்துள் தோன்றும் உழை (மேலது. 17)
*மேற்கண்ட பஞ்சமரபுப் பாடல்களில் கூறப்படுவது மந்தரத்தாரம்.*

## மந்தரம்:

1. *படுத்தல் ஓசை, மந்தரஸ்தாயி* (lower octave)
2. *இசையின் ஏழாவது சுரம்* (7th note of the gamut)
   *தாரம் - 'நி'*
3. *பண் ஆளத்தியில் (இராக ஆலாபனை) கீழ்த்தானத்து (மந்தரஸ்தாயி) சுரங்களில் ஆளத்தி செய்வது (மந்தரஸ்தாயிப் பிரயோகம்)*

## மந்தோச்சசமம்: → மந்தக்குரல்

## மந்தமுழவம்:

*சமன்தானக்குரல் (மத்திய சட்சம்) சுரத்திற்கு ஒத்து சேர்க்கப்பட்ட முழவு.*
மந்த முழவம் இயம்பும் வளவயல் நாவல் ஆரூரன்(தேவா. 7: 73: 11)
மந்தமுழவம் இயம்ப மலைமகள் காணநின்றாடி(சம்பந்த. திருவே. 1)

## மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா:

= *மயங்கிசைக் கொச்சகம்*
*தரவு, தாழிசை, அராகம், தனிச்சொல், சுரிதகம் ஆகிய உறுப்புக்கள் உறழ்ந்தும் பிறழ்ந்தும் வரும் கலிப்பா. இது தொல்காப்பியர் காட்டாத காக்கைபாடினியார் இலக்கணம் கூறும் கலிப்பா வகை.*
*எடு:- சிலம்பு. மங்கல வாழ்த்துப்பாடல் - இயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.*
பா – மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா
பா – ஊர்சூழ்வரி (அயல் மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா)
(அடியார்க்.)
எருத்தியல் இன்றி... கொச்சகம் என்னும் குறியின் ஆகும்...
(காக்கைபாடினியம். 78 – யா. வி. 86 மேற்.)
*மயங்கு - மயங்குதல் - கலத்தல்.*
← *சி. யா. 95, 96, 402; யா. க. 86 உரை; த. இ. பே. 112/*15

## மயங்கிசைக் கொச்சகம்: → மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

## மயங்கு திணைநிலைவரி:

*திணைக்கான வரிப்பாடல்களில் திணை மயக்கம் வருவது. சிலம்பு. கானல்வரி - 7: 37 முதல் 42 முடிய உள்ள 6 பாடல்களும் மயங்கு திணைநிலை வரிப்பாடல்கள்*
இவை ஆறும் மயங்குதிணை நிலைவரி (மேலது. அடியார்க்.)
எழுவகை நிலத்தினும் எய்திய வரியாவது – ஆற்றுவரி... மயங்கு திணை நிலைவரி ... என்பனவாம்... (சிலப். 14: 153 அரும்.)

## மயன்: *கின்னரன்*

## மயிர்க்கண் முரசம்:

*புலியைப் பொருது கொன்ற ஏற்றின் மயிர் சீவப்படாத தோலால் கட்டிய முரசம்* (drum made of raw hide of a bull that has killed a tiger)
மயிர்க்கண் முரசமொடு மாதிரம் அதிர (சிலப். 26: 196)
மயிர்க்கண் முரசொடு வான் பலியூட்டி (சிலப். 5: 88)
புலியைப் பொருது கொன்று நின்று சிலைத்துக் கோடு மண் கொண்ட ஏறு இறந்துழி
அதன் உரிவையை மயிர்சீவாமல் போர்த்த முரசு
(மேலது. அடியார்க்.)
விசித்து விளைமாண்ட மயிர்க்கண் முரசும் (புறம். 63: 7)
ஓடாநல்லேந்து உரிவை தைஇய பாடுகொள் முரசம்.
(அகம்.334: 1 –2)
ஏற்றுரி போர்த்த முரசம் (மணி. 1: 31)
ஏற்றுரி முரசம் (சீவக. 2142)
ஏற்றுரி போர்த்த வள்வார் இடிமுரசு (சீவக. 2152)
கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த,
மயிர்க்கண்முரசம் ஓவில கறங்க (மதுரைக். 732– 33)
ஏற்றுரியின் இமிழ் முரசம் (யா. வி. செய். 40 மேற்.)
சாற்றிடக் கொண்ட ஏற்றுரி முரசம் (பெருங். 1: 38: 100)
ஏற்றுரி முரசின் இறைவன் (பெருங் 1: 43: 195)
ஏற்றுரி போர்த்த முரசம் (பெருங். 2: 2: 26)
மயிர்க்கண் முரசுமுழங்க (பு. வெ. 171)
← *செ. ப. அ. 3075*

## மரக்கால்:

= *மரக்கால் கூத்து, மரக்கால் ஆடல்*
*பதினொரு கூத்துள் ஒன்று; வீழ்ந்தாடல் வகையது.*
மாயவள் ஆடிய மரக்கால் ஆடலும் (சிலப். 6: 59)
மன்றின் மரக்கால் கூத்தாடினான் காணேடீ (பாசுரம். 11: 5: 6)
மரக்கால் ஆடி அரக்கர்க் கொன்ற (கல்லா. 41: 18)
மாயஞ்செல் வாளவுணர்வீழ நங்கை மரக்கான்மேல் வாளமலை யாடும் (சிலப். 12: (12)
... காலிலே மரத்தைக் கட்டி வாளை எடுத்து நின்றாடும் கூத்து
(மேலது அரும்.)
மாயவன் ஆடல் மரக்கால்... (சிலப். 3: 145 உரை மேற்.)
← *செ. ப. அ. 3082; த. க. க 23/IV ; ப. த. நா. 286*

## மரக்கால்ஆடல்: → மரக்கால்

## மரக்கால்கூத்து: → மரக்கால்

## மரக்கால் பறை:
*மரக்கால் வடிவான பறை* (A cylindrical drum)

## மரம்: = இயமரம்.
*போர் முரசு* (War drum)

→ இயமரம்

## மரல்:
*மரல்நார்; கற்றாழை நார். வில்யாழில் மரல் நாரைத்திரித்து நாண் (தந்தி) ஆகக்கட்டினர்.*

புழற்கோட்டுத் தொடுத்த மரல் புரி நரம்பின் (பெரும்பாண். 181)
மரையா மரல் கவர (கலித். 6: 1)
வரி மரல் திரங்கிய... (சிலப். 11: 77)

## மருட்பா:
*அறுவகைச் செய்யுளில் ஒன்று. வெண்பாவும் ஆசிரியமுமாய் வருவது. வெண்பா அடியும் ஆசிரிய அடியும் சமமாக வரின் சமநிலை மருட்பா; (சமமருட்பா); சமமின்றி வருவது வியனிலை மருட்பா (வியமருட்பா)*

செய்யுள் அறுவகை: வெண்பா... மருட்பா என்பன...
(சிலப். பதிகம். அடியார்க்.)

← *யா. க. 55 உரை*

## மருத்துவம்: = மருத்துவ யாழ், தேவயாழ்
*முயல் தோலால் இயன்ற பத்தரில் ஒரு நரம்பு கட்டி இடக்கையில் ஏந்தி வலக்கை விரல்களால் இயக்கப்படும் யாழ்*

மருத்துவப் பெயர் பெறும் வானக்கருவி (கல்லா. 82: 28)
(வானக்கருவி – தேவயாழ்)

## மருத்துவயாழ்: → மருத்துவம்

## மருதப்பறை:
= கிணைப்பறை; நெல்லரி கிணை; கிணை
*மருதநிலத்திற்குரிய பறை*

கிணையே, மருதக்கிளர் பறை ஆகும் (திவா. 1231)
... மருதமுற்றகிளர் பறை கிணை என்றாமே (சூடா. 7: 41)
பறை – மணமுழவும், நெல்லரி கிணையும் (இறைகள.1)
தெண்கிணைப் பொருநர் செருக்குடன் எடுத்து (சிலப். 10: 138)

## மருதம்:
1. = மருதயாழ், கோடி, கோடிப்பாலை
*மருதநிலப் பெரும்பண், காலைப்பண், நாற்பெரும் பண்களுள் ஒன்று மருதப்பண் - கரகரப்பிரியா*

பண் நான்காவன: பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன.
(சிலப். 14: 160 – 67 அடியார்க்.)
... மருதம் பாடுப பிணி கொள் யாழ்ப்பாணர் (பரிபா. திரட்டு. 2: 73)
மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ் (மலைபடு. 534)
யாழோர் மருதம் பண்ண.. புலர்ந்து விரிவிடியல் எய்த
(மதுரைக். 658 – 664)
மருதம் பண்ணி அசையினிர் கழிமின் (மலைபடு. 470)
கானவர் மருதம் பாட (பொருந. 220)
*(கானவர் மருதம் பாடுவது - திணை மயக்கம்)*
அகநிலை மருதமும்.... பெருகியன் மருதமும்... (சிலப். 8: 39–40)
மாலை மருதம் பண்ணி (புறம். 149: 2)
மங்கையர் பண்ணிய மருதயாழ், குழல் (சீவக. 1991: 1)
மருதம் – காலைப்பண் (மேலது நச்சர்.)
கோடி, விளரி, மேற் செம்பாலை (சிலப். 3: 88)
கூறியபட்டடை குரலாய் கோடிப்பாலை... (பெரிய.பு.ஆனாய. 25)
பட்டடை எடுத்துப் பாலையில் கொளுவி (கல்லா. 100: 13)
*(பட்டடை; இளி (பஞ்சமசுரம்); பாலை - செம்பாலை (அரிகாம்போதி)*
*(செம்பாலையின் இளி குரலாயது - கோடிப்பாலை)*
இளிகுரலாயது கோடிப்பாலை (சிலப். 17: (13)அடியார்க்.)

**இளி (ப) குரலாக**
↓

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
| கோடிப்பாலை | ம$^{1}$ | | ப | | த$^{2}$ | நி$^{1}$ | | ச | | ரி$^{2}$ | க$^{1}$ | |

**செம்பாலை (அரிகாம்போதி) – ச ரி$^{2}$க$^{2}$ம$^{1}$ப த$^{2}$நி$^{1}$**
**கோடிப்பாலை (கரகரப்பிரியா) – ச ரி$^{2}$க$^{1}$ம$^{1}$ப த$^{2}$நி$^{1}$**

மருதத்துக்கு யாழ் – மருதயாழ் (இறை. கள. 1)
யாழோர் மருதத்து இன்னரம்புளர (மணி. 5: 135)
மருதவானவர் வைகுமிடம் (தேவா. 7: 50: 2)
வாங்குசினை மருதத் தூங்கு தணர் உதிரும் (நற். 350: 3)
மருதத்திற்கு யாழ் – மருதயாழ் (தொ. பொ. 18 நச்சர்)
மருதத்திற்குப் பண். – மருதம் (தொ. பொ. 20 இளம்)
தடம்பொழில் மருதயாழ் உதிப்ப (தேவா. 9: 17: 10)

2. *மருதநிலப்பாடல்* (Lyric and melody of the Agri. tract)
பழன நிலனும், அந்நிலப்பாடலும்
மருதம் என்னும் பெயரின் வழங்கும் (திவா. 2213)

3. *ஊடல்*
மருதநில உரிப்பொருளான ஊடல் என்ற ஒழுக்கம்
மருதம் சான்ற தண்பணை சுற்றி ஒரு சார் (மதுரைக். 270)
மருதம் சான்ற – ஊடலாகிய உரிப்பொருள் அமைந்த
(மேலது நச்சர்)

4. *ஒரு மலர்*
மரவமும், நாகமும், திலகமும், மருதமும், (சிலப். 13: 152)

→ மருது

## மருதயாழ்: →மருதம்

## மருது:
*மருதமலர்; மருதமரம்*

மருதமரநிழல் (அகம். 37: 16)
தாழ்சினை மருதம் தகைபெறக் கவினிய (அகம். 366: 1)
குருகிலை, மருதம் (குறிஞ். 73)
உழைப்பூ மருதின் (முருகு. 28)
தேம்கமழ் மருது (முருகு. 34)
மரவமு நாகமுந் திலகமு மருதமும் (சிலப். 13: 152)
சேடல், நெய்தல், பூளை, மருதம் (சிலப். 22: 69)

## மருந்து: →கரணை

## மருப்பு:

1. = தண்டு, கோடு, தந்திரிகரம்
*யாழ் உறுப்பு*
நல்லியாழ் மருப்பின் மெல்லவாங்கி (புறம். 242: 2)
மணி வார்ந்தன்ன மா இரு மருப்பின் (பெரும்பாண். 14)
வாங்குமருப்பு யாழொடு பல்இயம் கறங்க (புறம். 281: 2)
வாங்கு இரு மருப்பின் தீந்தொடைச் சீறியாழ் (புறம். 285: 3)
பாம்பு அணந் தன்ன ஓங்கு இரு மருப்பின் (பொருந. 13)
2. *யாழ்*
தொன்றொழுகு மரபின்நும் மருப்பு இகுத்து (மலைபடு. 391)
பழமை நடக்கின்ற முறைமையினையுடைய நும்முடைய யாழை வாசித்து... (மேலது நச்சர்)
*(இகுத்து - வாசித்து; மருப்பு - தந்தம்)*
↑ யாழ் உறுப்பு ( மருப்பு) தந்தத்தால் செய்யப்பட்டதால், மருப்பு எனப் பெயர்.

→ தண்டு

## மருவின்பாலை:

*அரும்பாலை, சங்கராபரணம்*
மாறுதலை பெயர்க்கும் மருவின்பாலை (பொருந. 22)

## மருள்: = வடுகு, தடவு, இந்தளம், மருள் இந்தளம்.

*இந்தோளம் என்ற 5 சுரப்பண்*
காலை எழுந்திருந்து... மருள் பாடுதல் மெய்ம்மை கொலோ? (நாச். திருமொழி. 9: 8/594)
குறவர் மாதர்களோடு வண்டுகுறிஞ்சி மருள் இசைபாடும் வேங்கடத்து (திருமங்கை 2: 1: 2/பெ. தி. 102)
குறப்பெண்டிரோடே வன்டுகளானவை குறிஞ்சிஇந்தளம் என்னும் பண்ணைப் பாடா நின்ற திருமலை... (பெரிய வாச்சான்பிள்ளை)
நட்டபாடை.... மருள்.. குறிஞ்சியாழ்த்திறம்... (பிங்க. 1382)
மருள் – குறிஞ்சி யாழின் திறன். (பிங்க. 3934)
மருட்கள் வண்டுகள் பாடும் (பெரிய. திருமொழி 107)
"மருள் இந்தளம் என்கிற பண்ணை வண்டுகள் பாடா நின்ற" (பெரிய வாச்சான்பிள்ளை)
கலிமயில் அகவும் வயிர் மருள் இன்னிசை (நெடுநல். 99)
நிறைந்திடும் .. மருள் குறிஞ்சி என்ப. (சூடா. 10: 33)
மருள் என்ப குறிஞ்சியாழின் திறத்தொடு... (சூடா. 11: 28)
... மருள்... குறிஞ்சியாழ்த்திறனே... (திவா. 1876)
இந்தளம் மருள் இந்தளமே ஆகும்... (திவா. 1893)

## மல்:

*மல் ஆடல். மல்லின் ஆடல். பதினோறு ஆடல் களுள் ஒன்று; மாயவன் ஆடியது. திருமால் மல்லனாய் பாணாசுரனை வென்றாடிய கூத்து. நின்றாடல் வகையது*
அவுணற் கடந்த மல்லின் ஆடல் (சிலப். 6: 48 – 49)
பதினோராடலானவை: கடையம்... மல்... காண்பதினோர் கூத்து... (சிலப். 3:14 அடியார்க்.)

*← ப த நா 285*

## மல்லயுத்தக்கை:

இணைக்கை வகையுள் ஒன்று. (பரத. பாவ. 162)

## மல்லரி:

பறை வகையுள் ஒன்று. (ச. அ.)

## மல்லாரி:

*1 நாட்டைப் பண்ணின் சுரக்கோவைகளைப் பாடுதல் இது ஆதிதாளத்தில் நாகசுரத்தில் இசைக்கப் படுவது*
*எ-டு:-* (1) *தீர்த்தமல்லாரி - இறைத்திருமேனியின் திருமஞ்சனத்தின் போது இசைப்பது*
(2) *தளிகைமல்லாரி - இறைத்திருமேனிக்குத் திருஅமுது படைக்கும் போது வாசிப்பது.*
(3) *பெரிய மல்லாரி - தேர் மல்லாரி - இறைத் திருமேனி திருவீதி உலாப்புறப்பாட்டிற்காகத் தேரில் எழுந்து ஊர்வலமாகப் புறப்படும் போது பாடுவது*
*ஆரி - ஆரித்தல் - பாடுதல்*
பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல் (சிலப். 29: 26)
↑ *கோவில் மற்றும் அரண்மனை விழாக்களில் மல்லாடுதல் முக்கியமாக விளங்கியது இறைவனைத் திருவீதிஉலாவுக்கு மல்லாடி (→மல்லாரி?) அழைப்பது மல்லாரி மயில் + ஆரி > மயிலாரி > மல்லாரி என்றும் ஆகி இருக்கலாம்.*
"வெற்றி முரசும் கஷீண வீரபத்திரமல்லாரி முதலாய மேளங்களும் சேவிப்பிச்சு"
(Art and Archi. I I Ts. Madras.1983. P.92)
*← நித்திய சுமங்கலி பக். 77; த க. க. 234/II*

## மலகரி:

*இசைப்பயிற்சிக்குரிய பண்களுள் ஒன்று.*

## மலப்பு:

*கடவுளர் திருமுன் ஆடும் ஒருவகைக்கூத்து.*
எம்பெருமானார் அடியாள் மலப்பு சேவிக்க (கோயிலொ. 80)

## மலர் காங்கூலம்: → விரிகாங்கூலம்

## மலயக்கால்: → மலையம்

## மலயசம்: → மலையம்

## மலயம்: → மலையம்

## மலய மாருதம்: → மலையம்

## மலர் அஞ்சலி: → அலாரிப்பு

**மலர்ந்த தாமரைக்கை:** = அலாபத்திரக்கை, அலாபத்திரம்,அலபதுமம்.
*ஆடலின் ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று*
சிறுவிரல் முதலாகிய ஐந்தும் வளைந்து மறிவது; என்னை? "அலாபத்திரமே ஆயுங்காலைப் புனரமையின் மிகுந்த சிறுவிரல் முதலா, வருமுறை ஐந்தும் வளைந்து மறிவதுவே" என்றாராகலின் (சிலப். 3: 18 அடியார்க்.)

**மலர் கூடைக்கை:** =புட்பபுடம்,புஷ்பபுடம்
*இணைக்கை வகையுள் ஒன்று.*
"புட்பபுடம் என்பது புகலுங்காலை, ஒத்த இரண்டு குடங்கையும் இயைந்து பக்கம் காட்டும் பாண்மைத்து என்ப" (சிலப். 3: 18 அடியார்க்.)

**மலர் வணக்கக்கை:** = புஷ்பாஞ்சலி,புட்பாஞ்சலி
*இணைக்கை வகையுள் ஒன்று*
இரண்டு கையும் குடங்கையாய் வந்து ஒன்றுவது; என்னை? "புட்பாஞ்சலியே பொருந்த இரு குடங்கையும், கட்டி நிற்கும் காட்சியது என்ப" (சிலப். 3: 18 உரை)
*குடங்கை - கும்பக்கை; சர்ப்பசிரம்*
*← பரத. பாவ. 48*

**மலாரம்:**
*பண்களில் ஒன்று* (பரத. இராக. பக். 103)

**மலைத்தலை முன்றில்:**
*மலை உச்சியில் அமைந்த முற்றம்; வேலன் வெறியாடுகளம்*
மூவிரு திருமுகத் தொரு வேலவற்கு
வானுற நிமிர்ந்த மலைத்தலை முன்றின் (கல்லா. 7: 8 – 9)

**மலைப்பு:** *கூத்து வகையுள் ஒன்று.*
புறப்பாடு முதலாக மலைப்பு, கேளிக்கை... முதலானதுகள் சேவிக்கிறதும். (கோயிலொழுகு95)

**மலையம்:** = மலயம், மலயசம், மலயக்கால்
*மலய மாருதம் என்ற பண்*
*மலயம் + கால் — மலயக்கால்*
*மலயம் - பொதிய மலை, மாருதம் — தென்றல்*
நைவளம்... மலையம்... குறிஞ்சி யாழ்த்திறனே (திவா. 1876)

**மழைப்பாட்டு:**
*மழை வேண்டி மாரியம்மனுக்குப் பூசையிடுவதும், முளைப்பாரித் திருவிழா எடுப்பதும் அப்போது மழைப்பாட்டுப்பாடுவதும் சிற்றூர் வழமை*
எடு:– சந்திரரே சூரியரே
சாமி பகவானே
இந்திரரே வாசுதேவா
இப்ப மழை பெய்ய வேணும்

**மழை பெய்யப்பட்டோன் அவிநயம்:**
"மழை பெய்யப்பட்டோன் அவிநயம் வகுக்கின்... நடுங்கு பல்லொலி... கனவு கண்டு ஆற்றான் எழுதலும் உண்டே" (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**மள்ளர்:** *பொருநர்*
கிணைநிலைப் பொருநர் வைகறைப் பாணியும் (சிலப். 13: 148)
"கிணைப் பறையையுடைய மள்ளர் மருதநிலந் தோறும் வைகறைக் காலத்தே கொட்டும் ஓதையும்... (மேலது அடியார்க்.)

**மறக்கள வாழ்த்து:**
*போர்க்கள வாழ்த்துத் துறையுள் ஒன்று.*
வாளேர் உழவன் மறக்களம் வாழ்த்தி (சிலப். 26: 234)
களத்து ஆள்அழியப் படுத்த வாள் ஏர் உழவ (புறம். 368: 12 – 13)
*(மறக்கள வழி - ஒரு துறை)*
*← புறம்: 368- 371, 373*

**மறுகு:** → ஆடுகளம்

**மறுகுசிறை:** இசை (musical mode)
மன்றம் போந்து மறுகுசிறை பாடும் (பதிற். 23: 5)
மன்றம் நண்ணி மறுகுசிறை பாடும் (பதிற். 29: 9)
மன்றம் படர்ந்து மறுகுசிறைப்புக்கு (பதிற். 43: 26)

**மன்மகளிர்:**
*தலைக்கோல் அரிவை* -
மன்மகளிர் சென்னியர் ஆடல் தொடங்க (பரிபா. 7: 80)

**மன்றம்:**
= மன்று, மன்றில், அம்பலம், சபை, களம்,பொதியில், அரங்கம்
*குலக்குழுவின் மைய இடம்; ஆடுகளம்; சிவன் கோவில் முன்புள்ள ஊர்ப்பொது இடம்.*
மன்றில் வதியுநம் சேண்புலம் பரிசிலர் (மலைபடு. 492)
அம்பலங்களிலே தங்குவாராகிய ... (மேலது நச்சர்)
மற்றவள் இருந்த மன்றப் பொதியிலுள் (மணி. 20: 79)
மைந்தற்கு உற்றதும் மன்றப் பொதியில் (மணி. 21: 6)
மாதவர் இடங்களும் மன்றமும் பொதியிலும் (மணி. 20: 30)
மன்றமும் பொதியினும் சந்தியும் சதுக்கமும் (மணி. 28: 59)
கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில் (சிலப். பதிகம். 40)
வல்வில் எயினர் மன்று பாழ்பட்டன. (சிலப். 12: 13)
மன்றினும் மறுகினும் சென்றனள் பூசலிட்டு (சிலப். 23: 162)
எனைத்தும்... மன்றில் பழிப்பார் தொடர்பு (குறள் 820)
நிறை அரியர்.. மறை இறந்து மன்றுபடும் (குறள் 1138)
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர (குறிஞ்சி. 218)
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும் (முருகு. 226)
மன்றமும் – ஊருக்கு நடுவில் எல்லாரும் இருக்கும் மரத்தடி.... (மேலது நச்சர்.)
மல்லன் மன்றத்து... (பெரும்பாண். 143)
கொன்றையந் தீங்குழல் மன்று தோறும் இயம்ப (நற். 364: 10)

வெள்ளி அம்பலத்து நள்ளிருள் கிடந்தேன் (சிலப். பதிகம். 41)
புன்தலை மன்றம் (அகம். 301: 24)
புன்தலை மன்றத்து அம்குடிச் சீறூர் (அகம். 321: 10)
பெருவிழாக்கழிந்த பே எம்முதிர் மன்றத்து (பட்டினப். 255)
மன்று தொறும் நின்ற குரவை (மதுரைக். 615)

← *த. வீ. க. 149*

## மன்றல்:

*பாலை யாழ்த்திறத்துள் ஒன்று.*

பாலை யாழிசையும்... மன்றலாகும். (பிங்க. 3946)
தக்கராகம்... மன்றல்... பாலையாழ்த்திறமென்ப... (பிங்க. 1381)

## மன்றில்: → மன்றம்

## மன்று: → மன்றம்

## மனவணி மடந்தை:

*வெறியாட்டாளன் (வேலன்) மனைவி*

மனவணி மடந்தை வெறியாட்டாளன்
வேல் மகள் குறத்தி மாமதி முதியோர் (கல்லா.7:10 – 11)

## மனவிழி:

இசைப்பாட்டு வகை (சது. அக.)

## மனோதர்ம சங்கீதம்: → கற்பனை இசை

## மனோரஞ்சனி:

*பண்களில் ஒன்று* (பரத. இராக. பக். 102)

# மா

## மாக்கிணை:

*துடி; இடை சுருங்கு பறை. இவ்வகைப்பறைகளில் குடுகுடுப்பையானது வடிவில் மிகச் சிறியது உடுக்கை சற்றுப்பெரியது துடி பெரிய அளவிலானது*

*(கிணை - துடி)*

நுண்கோல் தகைத்த தெண்கண் மாக்கிணை (புறம். 70: 3)

## மாகதர்: = ஓவர், பட்டுக்கள்

*இருந்து ஏத்துவார்; அமர்ந்த நிலையில் இருந்து அரசன் பெருமைகளைப் பாடுவோர்*(மதுரைக். 676 நச்.)

சூதர் ஏத்த, மாகதர் நுவல வேதாளிக ரொடு (மதுரைக். 670 – 71)

மாகதப்புலவரும் வைதாளிகளும்

சூதரும் நல்வலந் தோன்ற வாழ்த்த (சிலப். 26: 7–5)

சூதர் மாகதர் வேதாளிகரோடு (சிலப். 5: 48)

மாகதர் – இருள்தேத்துவார்; பட்டுக்கள் (மேலது அரும்.)

மாகதர், சூதர், வேதாளிகர் மறுகும் (மணி. 28: 50)

*கதை > கத > கதர் > மாகதர்*

*ஒப்பு:- கதைகளி - கதகளி*

↑ மாகதர் என்பவர் நாட்டாரின் நெடுங்கதைப் பாடல்களைப் பாடுவோர் ஆகலாம்.

← *செ. ப. அ. 3143*

## மாகேசம்:

*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

"சிந்து... மாகேசம்... கோத்தவரிக் கூத்தின் குலம்"

(சிலப். 3: 13 அடியார்க்.மேற்.)

## மாச்சீர்: *நேர் அசையால் முடியும் இயற்சீர்*

(metrical foot of 2 acai ending in ner)

1. *தேமா - நேர் நேர் - தனிநெடில் தனிநெடில்*
2. *புளிமா - நிரை நேர் - குறில் இணை தனிநெடில்*

## மாஞ்சி:

*பண்களில் ஒன்று*

*(மாஞ்சி - வாசனைப்பண்டம்)*

தகரம், தக்கோலம்... மாஞ்சி... வாசந்தரும் பண்டப்பெயரே...

(பிங்க. 2943)

## மாடகம்: = மாடம், பிரடை, பிருடை, மிரிகை.

*யாழின் முறுக்காணி; வீக்கும் கருவி (சுருதி சேர்க்கும் கருவி) யாழ் நரம்பின் விரைப்பைக் கூட்டிக்குறைக்க உதவுவது. கோட்டின் முடிவில் வணர் என்ற உறுப்புக்கு முந்தி அமைவது*

இடக்கை நால்விரல் மாடகம் தழீஇ (சிலப். 8: 28)

மணிகடை மருப்பின் வாளார் மாடகம் (சீவக. 722: 2)

மாடகம் – நால்விரல் அளவான பாலிகை வடிவாய் நரம்பை வலித்தல் மெலித்தல் செய்யும் கருவி... 'இடக்கை நால்விரல் மாடகம் தழீஇ' என்றார் பிறரும் (மேலது நச்.)

மாடகமென்பது வகுக்குங்காலை கருவிளம் காழ்ப்பினை நால்விரல் கொண்டு, திருவியல் பாலிகை வடிவாகக் கடைந்து சதுர மூன்றாகத் துளையிடற் குரித்தே (சிலப். 8: 27– 8 அரும். மேற்.)

*(கருவிளம் = கருங்காலி)*

மாடகம் என்ற சொல்லைக் குறுக்கி 'மாடம்' எனத் தற்காலம் வழங்குகிறோம். (பா. கை. பக். 133)

முறுக்காணி, மாடகம் (பிங்க. 1433)

கோடே, பத்தர், ஆணி, நரம்பே, மாடகம் எனவரும் வகையின தாகும். (பொருந. 21 – 2நச்.)

மாடகம் செறியும் யாழ் வழி பாடி (திருவிளை. இசைவாது. 1: 4)

வீணை வாங்கினள் மாடகம் முறுக்கினள் விசித்து (மேலது. 1: 16)

மாடகத்திவவுயாழ் மருமமீது அணைத்து (ப. மு. கோ. 17: 13)

→ பிரடை

## மாடம்: → மாடகம்

## மாட்டு: = கொண்டுமாட்டு

அகன்று பொருள்கிடப்பினும்., அணுகிய நிலையினும்
இயன்று பொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டு என மொழிப பாட்டியல் வழக்கின் (தொ.செ. 208)

மொழிமாற்றாவது கேட்போர் கூட்டி உணருமாற்றான் ஈரடிக் கண்ணே வருவதென்றும், மாட்டென்னும் உறுப்பாவது இரண்டிறந்த பலவடிக்கண்ணும் பல செய்யுள் தொடரின் கண்ணும் அகன்றும் அணுகியும் வருமென்று உணர்க. (தொ. எ. 13 நச்.)

→ கொண்டு மாட்டு

## மாணிக்கத்தார்: → பதியிலார், மாணிக்கம்

## மாணிக்கத்தாள்: → பதியிலார், மாணிக்கம்

## மாணிக்கம்: = மாணிக்கத்தார், மாணிக்கத்தாள்

1. கும்ப ஆரத்தி, ஆலத்தி, ஆலம், தீச்சுற்றல்.
கண்ணேறு கழிக்க, தேவதாசியரால் செய்யப்படும் தீச்சுற்றல் முறைக்கு மாணிக்கம் என்று பெயர்
2. சிவன்கோவில் தேவதாசி, உருத்திரகணிகை.
மேற்கண்ட தீச்சுற்றல் செய்யும் தேவதாசியர்
சான்று:-
1. சதுரி மாணிக்கம் - தென்னிந்தியக் கல்வெட்டு - டி.என்.சுப்பிரமணியம், முன்னுரை
2. தஞ்சைக்கோவில் கல்வெட்டு
3. கி பி. 1612 வட ஆர்க்காடு மாவட்டம்.
நெடுங்குன்றம் ராமச்சந்திர மாணிக்கம் - ARE 707, 1904
4. வீரபத்திரமாணிக்கம், சுந்தரமாணிக்கம், மருதவேதிய மாணிக்கம், சீகாரண மாணிக்கம், திருஉண்ணாழிகை மாணிக்கம், எதிரில் சோழ மாணிக்கம், வண்டார் குழலிமாணிக்கம் (இவர்கள் நாகை மாவட்டம் திருவு சாத்தனாம் கோவில் ஆடல் நங்கையர்)

↑ தீச்சுற்றல் பணியாலும் மற்றும் ஆடலரசன் சிவனாரின் பெயரான **'நக்கன்'** என்பதை சிவன் கோயில் தேவரடியார் ஏற்பதுபோல, சிவனார் மாணிக்கம் விற்பவராகத் திருவிளையாடல் புரிந்ததாலும் தேவரடியார் **'மாணிக்கத்தார்'** என்ற பெயரையும் ஏற்றனர் என்று கொள்ளலாம்
சான்று:
நக்கன் புவலோக மாணிக்கம்
நக்கன் திகை மாணிக்கம்
நக்கன் குல மாணிக்கம்

## மாத்திரை:

1. அலகு, அளவு (unit)
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின் (திருமந்திரம் 1631)
எல்லாரும் துஞ்சும் அரையிருள் யாமத்தும்
ஒரு மாத்திரைப் பொழுதும் துஞ்சாமல் (சிலப். 4: 81 அரும்)
எழுத்தொலியின் கால அளவு (தொ.க.க பக். 103)
2. சுதி, சுருதி (Intervel in musical scale; quarter tone); இசைச்சுரப்பகுதி
கணமே மாத்திரை (திவா. 131)
தாறு... மாத்திரை... அளவு ஆகும். (திவா. 1414)
இவ்வேழு எழுத்தினையும் மாத்திரைப்படுத்தித் தொழில் செய்ய (சிலப். 3 வங்கியம் அடியார்க்.)
மாத்திரை கடவா மரபிற்றாகி (பெருங். 1: 37: 125)
இந்நரம்புகளின் மாத்திரைகள்... (சிலப். 17: 13 அடியார்க்.)
3. நொடிப் பொழுதான கால அளவு
கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை (தொல். எழுத். 6)
அரை மாத்திரையில் அடங்குமடி (தேவா. 970: 7)
நொடிப்பது மாத்திரை... (சுந்தரர் 7 முடிப்பது கங்கை பாடல்1)
மா - அளவு; மா - மை - இமை- இமைப்பொழுது நொடி - கண் இமைத்தல் (கண் நொடித்தல்)
இயல்பாக கண்ணிமைப்பொழுதும், கைந்நொடித்தல் பொழுதும் ஒரு மாத்திரை (யா. க. 2 உரை)
கண் இமைத்தல் - கண் + அம் - கணம் - ஷணம்
குணம் என்னும்.. கணமேயும் காத்தல் அரிது. (குறள். 29)
மாத்திரையைச் சொல்லும் தாளத்தையுடையது ஒரு கண்மாக்கிணை (மலைபடு. 11 நச்.)
4. தட்டு (beat)

## மாத்திரை குறைத்துப்பாடுதல்:

ஒரு பண்ணிற்குரிய மாத்திரையைக் குறைத்து இன்னொரு பண் ஆக்கிப் பாடுதல்
மாத்திரை குறைந்ததில் பண்ணைப் பாடுமேல் வைக்கண் (சிலப். 8:27–44 அரும்)
எடு:– ச ரி² க² ப த² ச் — முல்லைப்பாணி (மோகனம்)
↓
ச ரி² க¹ ப த² ச் — வைகறைப்பாணி (சிவரஞ்சனி)
ச ரி¹ க¹ ப த¹ ச் — (பூபாளம்)

## மாத்திரை குறைந்த பண்:

= அர்த்தபாசாங்கப்பண்
ஓரிரு சுரங்கள் சுருதி அளவில் குறைந்து ஒலிக்கும் பண்கள். சாவேரிப்பண்ணில் 'சரிகரிச' என்ற கோப்பில் 'க'மென் கைக்கிளையோ வன்கைக் கிளையோ அன்று. இடைப்பட்ட ஓசையுடைது. அது போன்று. 'பதநிதப' என்ற கோப்பில் 'நி'யும் அவ்வாறானதே.

## மாதங்கி:

யாழ்த்தெய்வம்
இத்திறத்துக் குற்ற நீங்கிய யாழ் கையில் தொழுது வாங்கி (சிலப். 7: 4)
மடுத்து அவன் புகுவழி மறையேன் என்று யாழொடும்
எடுத்துச் சூள் பல வுற்ற பாணன்... (கலித். 71: 13 – 14)
அணங்குமெய்நின்ற அமைவரு காட்சி (பொரு. 20)
சிலையினது அகலமும் வீணைச்செல்வமும் (சீவக. 411: 2)
வீணைச்செல்வம் – மாதங்கி (மேலது நச்.)
காசில் யாழ்க்கு அணங்கு (சீவக. 550: 4)
யாழ் அணங்கு – யாழ்த்தெய்வம் – மாதங்கி (மேலது நச்.)
கதிர்வேல் பாடு மாதங்கி (காரிகை. செய். 9 உரை)

## மாதர் வீதி:

தளிப்பெண்டுகளின் தெரு
மாதர் வீதி மறுகிடை நடந்து (சிலப். 16: 103)

## மாதவ மனோகரி:

பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 103)

## மாதவி: குருக்கத்தி

அதிகம், முத்தகம், மாதவி, வாசந்தி, குருகு, நாகரி
இவைகுருக்கத்தியாகும். (பிங்க. 2703)
மதுமாதவி – ஒரு பண் – நாரதரின் சங்கீத மகரந்தம் (யாழ் நூல் பக். 266)
மாதவி > மதுமாதவி > மத்யமாவதி

**மாது:** = செய்யுள், பாடம் (சாகித்யம்)
(the text of a song, libretto)
*இசைப்பாடலின் செய்யுள் பகுதி*

**மாதுங்கராகம்:**
*மருதப்பண் வகை*
தக்கேசி... மாதுங்கராகம்... மருதயாழ்த்திறனே. (பிங்க. 1383)

**மாந்தாளி:**
*பண்களில் ஒன்று* (பரத இராக. பக். 104)

**மாயா மாளவகௌளம்:**
1.= *மாயா மாளவ கொளை; மாளவ கௌளம் (கௌளை)*
*தாய்ப்பண்களுள் ஒன்று; 6 ஆம்பாலை (15 ஆம் மேளம்)*

**மாயோன் ஆடல்:** → மாலவன் ஆடல்

**மாயோன் பாணி:**
*1. = முல்லைத்தீம்பாணி, ஆயன்பாணி, முல்லையந் தீங்குழல்.*
*பண் மோகனம்*
*இது நிலத்தெய்வவழிப் பெற்ற பெயர்.*
மல்லர் மூதூர் மகிழ்விழாக்காண்போன்
மாயோன் பாணியும் (சிலப். 6: 35)
↑இதைப் பண்பெயர்க்க 4 வருணப்பூதருக்குரிய 4 வகைப்பாணிகள் கிடைக்கும்.
*2. மாயோனைப்பாடும் தேவபாணிச்செய்யுள்*
மாயோன்பாணி – திருமாலைப்பாடும் தேவபாணி
(சிலப். 6: 35 உரை)
← *த. க. க. 14/II* , → நாலுநிலத்துப்பாணி

**மார்க்கத்தின் கைத்தொழில்:**
*மார்க்கக் கூத்திற்குரிய அவிநயங்கள்*
மார்க்கத்தின் கைத்தொழில் தேசியில் புகுதாமலும்(சிலப். 3: 21 உரை)

**மார்க்கப்பண்:**
*தொன்று தொட்டுப் பாடப்பட்டு வரும் பண்.*
(Musical modes in Vogue from ancient times)
← *செ. ப. அ. பக். 3169*

**மார்க்கம்:**
1. பத்துவித தாளப் பிராணத்துள் ஒன்று. (சது. அக.)
2. *செந்நெறி, செவ்வியல், சாஸ்திரீயம்* (classical)
*செவ்வியல் - ஒற்றைத்தன்மையானது* (monoform)
*மேட்டிமை வடிவமானது; வரையறுக்கப்பட்ட, இலக்கணப்படுத்தப்பட்ட முறை.*
3. *இருவகைக் கூத்துள் ஒன்று*
இருவகைக்கூத்தின் இலக்கணம் அறிந்து (சிலப். 3: 12)
இருவகைக்கூத்தாவன:– தேசி, மார்க்கம் என இவை
"மார்கம் என்பது வடுகின்பெயரே" (மேலது அரும்.)

**மார்ச்சனை:** = மண், சோறு, கரணை, மருந்து
*தோற்கருவிகளில் தோலின் மீது இடும் மண். இந்த மண் அதிர்வினால் இனிய ஒலி ஏற்படும்.*
(Black paste smeared on the head of a drum to increase its resonance)
மண்ணே மார்ச்சனை (திவா. 1236 புது நூற்பா. 99)
மார்ச்சனை பகரின் மண்ணாம் (சூடா. 7: 42)
மண் ஆர்ந்து இசைக்கும் முழவொடு கொண்டதோள் (பரி. திரட். 4: 1)
விசிபிணிக் கொண்ட மண் கனை முழவின் (புறம். 15: 23)
நுண்கோல் தகைத்த தெண்கண் மாக்கிணை (புறம். 70: 3)
மண் ஆர் கண்ணின் இம்மென இமிரும் (நற். 139: 6)
மண் ஆர் முழவின் கண்ணகத்து அசைத்த (அகம். 155: 14)
மண் ஆர் முழவின் கண் அதிர்ந்து இயம்ப (அகம். 346: 14)
மண் ஆர் முழவின் இசை எழ (பரி. 17: 13)
மண்கனை முழவின் தலை கோல் கொண்டு (மலைபடு. 370)
மண் அமை முழவின் பண் அமை சீரியாழ் (பொருந. 107)
மண் முழாமறப்பப் பண் யாழ் மறப்ப (புறம். 65: 1)
முழா மார்ச்சனை இடுதல் ஒழிய (மேலது. உரை)
மண் முழா அமைமின் பண்யாழ் நிறுமின் (புறம். 152: 14)
மண் இன் முழவினானொலி இன்னா (இன்னா. 40: 31)

**மாரடிப்புப் பாட்டு:** → ஒப்பாரி

**மாரார்:**
*கேரளப் பாணர் பிரிவினருள் ஒருவர்; கோவில்களில் சோபானம் பாடுவோர். ஆசுபாணி என்னும் வாத்தியங்களை இசைக்கும் மாரார்.*
← தென். குலகுடி 1 பக். 80 (பெ. அ. 52/II)
எடு:– சட்கால கோவிந்த மாரார் – தியாகராசரைச் சந்தித்த கேரளப் பாணர்.

**மாருவ தன்யாசி:**
*பண்களில் ஒன்று* (பரத. இராக. பக். 103)

**மாலவன் ஆடல்:** = மாயோன் ஆடல்
*குடம், மல், அல்லியம் என இம்மூன்றும் திருமால் ஆடிய ஆடல்கள்.*
*(அல்லியம் – பாவைக்கூத்து)*
குடம், மல்லோடு, அல்லியந்தான் கொண்டல்வண்ணன் தன்கூத்தாம்... (சூடா. 9: 50)
அல்லியம், மல்கூத்து, குடக்கூத்து எனத்
திருமால் ஆடிய கூத்து வகைகள் ← சிலப். 6: 48, 49, 55

**மாலை:** *பாண்குடிப்பெண்*
பாணர் மாலையர் மாலையெய்தி (திருவாலவா. 54: 26)

## மாலைப்பண்:

அந்திநேரத்திற்குரிய பண்
(melody - type suited to evening)

## மாலையர்: விறலியர்

பாணர் மாலையர் மாலையெய்தி (திருவாலவா. 54 – 26)

## மாவு:

சோறும், சாம்பலும் நீருடன் கலந்து செய்த சாந்து. இது மதங்கத்தின் (மிருதங்கம்) இடந்தலையில் தற்காலிகமாக அப்பப்படுவது.

வலந்தலை ஒத்தின் (சுருதி) இளி (பஞ்சமம்) அல்லது கீழ்க்குரல் (சட்சம்) ஒத்திற்கு இடந்தலையை ஒத்துக்கூட்டுதல் என இருமுக முழவுக் கருவிகளில் சில ஒத்துக் கூட்டப் பெறுகின்றன. (ப ச அல்லது ச்ச என்பது போன்று)

(The left head is exactly an octave below or a panchama below the note given by the right head)

இவ்வாறு ஒத்துக் கூட்டுவதற்கு இம்மாவு துணை செய்கிறது.

"இடக்கண் இளியாக வலக்கண் குரலாக நடப்பது தோலியற் கருவியாகும். (சீவக. 675 நச். மேற்.)

## மாளவப் பஞ்சமம்:

பண்களில் ஒன்று

மாளவப் பஞ்சமபண் மகிழ்ந்தவன் (யசோ. 100: 1)

... மாளவப் பஞ்சமத்தேன் (யசோ. 102: 1)

## மாளவி:

பண்களில் ஒன்று (பரத.இராக. பக்.56)

## மாறல்: கூத்தாடுதல்

மாறல் – கூத்தாடல் (பிங்க. 1465)

மறு – மாறு – மாறுதல் (தே. நே. 84/12)

→ மாறியாடுதல்

## மாறிய சாய்ப்பு:

= முறைமாறிய சாய்ப்பு, விலோமச் சாய்ப்பு

ஏழன் சாய்ப்புத் தாளத்தில் (மிசுர சாப்பு) முதலில் 4 எழுத்தும் பின்னர் 3 எழுத்தும் வருதல் மாறிய சாய்ப்பு; ஐந்தன் சாய்ப்பில் 3 + 2 என்று வருவதும் மாறிய சாய்ப்பு.

சான்று: மாறிய ஏழன் சாய்ப்பு

| | | |
|---|---|---|
| அகரமு | மாகி | – திருப்புகழ் |
| 4 | 3 | |

## மாறியாடுதல்:

காலை மாற்றி கூத்து (நாட்டியம்) ஆடுதல்
(to change the leg in dancing, as Siva at Madurai.)

கூத்தனார்... மாறியாடினார். (திருவாவா. 32: 13)

மாறல் – கூத்தாடல் (பிங். 1465)

→ மாறல்

## மாறுகால்:

தேசிக்கூத்திற்குரிய கால் வகையுள் ஒன்று.

← சிலப். 3: 16 உரை அடிக்.

## மாறுமுதல் பண்ணல்: → பண்ணுப் பெயர்த்தல்

## மான்தலை: = மான்தலைக்கை

33 ஒற்றைக்கை ஆடல் முத்திரையுள் ஒன்று.

மான்தலைக்கரத்தினில் கூட்டினை வயக்கி (கல்லா. 99: 4)

"... மான்தலையாவது..." (சிலப். 3: 18 அடியார்க்.)

## மான் தலைக்கை: → மான் தலை

# மி

### மிகுதிக்கை:

= வருத்தமானக்கை, வருத்தமானம்
*ஆடலின் இரட்டைக் கையுள் ஒன்று.*
முகுளக்கையில் வருத்தமானம்... நெறியிற் றென்ப...
(சிலப். 3: 18 அடியார்க்.)

### மிசுரராகம்: → கலப்புப்பண்

### மிசுர சாய்ப்பு:

*மிசுர சாய்ப்பு — மிசுர சாப்பு (திரிந்த வடிவம்)*
*ஏழன்தாளம் - மூன்றன், நாலன் தாளங்களின் கலப்பு.*
*எனவே கலவைச் சாய்ப்பு (மிசுர சாய்ப்பு)*
*(மிசுரம் = கலவை)*
*2 + 2 ; 4 + 4 என்பது போல் இரு புறமும் மட்டமாக இன்றி வியன்நிலையாக வருவதால் சாய்ப்புத்தாளம்.*
→ சாய்ப்புத்தாளம் (சாப்புத்தாளம்)

### மிசுர சாப்பு: → மிசுர சாய்ப்பு

### மிசுர மேளம்: → கலப்புப் பண், சாயாலகப்பண்

### மிடற்றுக்கருவி:

*சாரீரக்கருவி; உடற்கருவியாகிய கண்டம் ; சாரீர வீணை (throat considered as a musical instrument)*

### மிடற்றுப்பாடல்:

*கண்டப்பாடல்; வாய்ப்பாட்டு (vocal singing)*
யாழும் குழலும் சீருமிடறும் (சிலப். 3: 26)
யாழ்ப்பாடலும், வங்கியப்பாடலும்... மிடற்றுப்பாடலும்... (மேலது அரும்.)
யாழ்ப்பாடலும், குழல் இசையும், கண்டப்பாடலும்...
(சிலப். 3: 50 – 52 அடியார்க்.)

### மிரிகை:

*யாழ்ப்பிருடை*(tuning key for the strings of a lute)

### மிருக சீரம்:

*அவிநயக்கையுள் ஒன்று.*
ஆட்காட்டி விரலையும், சுண்டுவிரலையும் நிமிர்த்து மற்றை விரல்களை ஒரு சேர வைக்கும் அவிநயக்கை. (பரத. பாவ. 18)

### மிருதங்கம்:

*சங்ககாலத்தில் தோன்றிய தண்ணுமை எனும் இரு முகமுழவு வடிவிலும் நுண் அமைப்பிலும் வளர்ந்து மத்தளம் ஆனது, (7ஆம் நூற்); மத்தளத்தைக் கடைக் காலத்தவர்கள் (15ஆம் நூற்.) மிருதங்கம் எனும் பெயரால் குறிப்பிட்டனர்.*
மிருதங்க... வேணு, வீணை... (பாரத வெண்பா 667, 813)
↑மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத. (திருப்பாவை. பாசுரம் 561)
எனவே, மத்தளம் என்பது 7ஆம் நூற்றாண்டில் மங்கள முழவாக, மணமுழவாகப் பயன்பட்டதை அறியலாம். (த. க. க. 36/IV)
→ மதங்கம் (மேலது அரும்.)

# மீ

## மீத்திறம் படாமை:

வாய்ப்பாட்டினை விஞ்சி இசைக்கருவிகள் ஒலித்தல் கூடாது; (பொருள்தரும்) பாடலே தலைமையாக ஒலிக்க வேண்டியது. பக்க வாத்தியங்கள் பாடலை இனிமை கூட்டுவதற்கு என அமைந்தவை.

ஆக்கலும் அடக்கலும் மீத்திறம் படாமையும் (சிலப். 3: 53)

மீ = மிகுந்த ; திறம் - ஒலி (மிகுதி)

ஒப்பு:– மீக்கூற்று – மேற்பட்ட சொல்

மீத்திறம் - மேற்பட்ட திறம் - தூக்கலாக அமைதல்

← த. க. க. 37/IV

## மீட்டடைவு:

நாட்டியத்தில் அரைமண்டிலிருந்து வலது காலை முதலில் அதே இடத்தில் தட்டி, பின் வீசித்தட்டிய பிறகு இடது காலை அவ்வலது காலின் பின்னால் குத்தி வைத்து மீண்டும் வலது காலால் வீசித்தட்டிய இடத்திலேயே தட்டுவது மீட்டைவு.

## மீட்டு:

யாழ் மீட்டு முறை ; யாழ் மீட்டுதல்

## மீட்டுதல்:

1. யாழ் முதலியவற்றின் நரம்பைத் தெறித்தல் (சுண்டுதல்)

எடு:– தம்பூர் மீட்டினாள்

2. யாழ்வாசித்தல் (to play on the lute)

## மீண்டும் மீண்டும் வரல்:

இசையில், தாளம், சுரம், சொல், பாடல்அடி முதலியன இனிமைக்காக மீண்டும் மீண்டும் வருவது.

இன்பமும் கவினும் அழுங்கல் மூதூர்
நன்பல நன்பல நன்பல வையை
நின்புகழ் கொள்ளதிம் மலர்தலை உலகே (பரிபா. 12: 100 – 2)

## மீன்கை: = மகரம், மகரக்கை.

இணைக்கை வகையுள் ஒன்று.

"மகரமென்பது வாய்மையின் உரைப்பின் கபோதம் இரண்டு கையும் அகம் புறம் ஒன்றசைப்பது என்று உரைத்தனர் புலவர்"

(சிலப். 3: 18 அடியார்க்.)

## மீன்கோட்பறை:

நெய்தல் நிலப்பறை (drum of the maritime tract)

சிலப்பதிகாரப் பதிக உரையில், நெய்தல் நிலத்திற்கான கருப்பொருள் கூறும்போது... மீன் கோட்பறை... என்பார் அடியார்க்கு நல்லார்.

← உவே. ச. சிலப். பக். 16

மீன்கோடல், மீன் விற்றல், பகிர்தல், குவிக்கப்படல் முதலிய தொழிற்பாடுகளை அறிவிக்கக் கொட்டப்படுவது.

மீன்கொள்பறை – மீன்கோட்பறை

ஒப்பு:– கல்கொள் – கால்கோள்

← த க. க 37/IV

## மீன்பிடி:

பாணருள் ஒரு பிரிவினர்.

## மீனம்:

இசையில் உழை (ம[1])ச்சுரத்தைச் சுட்டும் ஓரை (இராசி)

குரல்துலை ... உழை மீனமாம். (சிலப். 17: 13 அரும்.உரை)

குரல் (ச) துலாம் ஓரைவில் நிற்கையில், உழை (ம[1]) ஆறாம் ஓரையான மீனத்தில் நிற்பது.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| ச | ரி[1] | ரி[2] | க[1] | க[2] | ம[1] |
| ↓ | | | | | ↓ |
| (குரல்) | | | | | (உழை) |
| துலை | | | | | மீனம் |

(துலை – துலாம்)

## மீன் முகம்: = மகர முகம், மகரமுகக்கை, மீன் முகக்கை.

ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று. மீன்முக வடிவுடையது.

"மகரமுகமென்பது வகுக்கும் காலைச் சுட்டொடு பெருவிரல்கூட ஒழிந்தவை ஒட்டி நிமிர்ந்து ஆங்கு ஒன்றாவாகும்"

(சிலப். 3: 18 அடியார்க்.)

# மு

**முக்கொடிக்கை:** = திரிபதாகக்கை; திரிபதாகம்
*முப்பத்து மூன்று ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று.*
பதாகைக்கையின் அணிவிரல் முடக்குவது; என்னை? "திரிபதாகை தெரியுங்காலை அறை பதாகையின் அணிவிரல் முடக்கினது அஃதாமென மொழிப அறிந்திசினோரே "
(சிலப். 3: 18 அடியார். மேற்.)

**முக்தாங்க ராகம்:** → அனைத்து உள்ளோசைப்பண்

**முக அவிநயம்:**
*முக அவிநயங்கள் 14*
அஞ்சிதமுகம்... திரச்சினமுகம்... (சது. அக.)
← செ ப. அ. 3228

**முகவணை:** முகவீணை
*காற்றுக்கருவிகளுள் ஒன்று.*
முகவணையை வாசி (பணவிடு. 183)
→ முகவீணை; மோர்வியம்

**முகச்சார்த்து:** = சார்த்து வரி
*முகச்சார்த்து, முரிச்சார்த்து, கொச்சகச் சார்த்து என முகச்சார்த்து மூவகைப்படும். இது இசைப்பாட்டு வகையுள் ஒன்று.*
"பாட்டுடைத்தலைவன் பதியொடும் பேரொடும் சார்த்திப்பாடின் சார்த்தெனப்படுமே" (சிலப். 7 : (7) அரும்)
*சிலப். 7: (5), (6), (7) மற்றும் (28), (29), (30) ஆகிய சார்த்து வரிப்பாடல்களில் 'புகாரே எம்மூர்' என்பது முகமாக வருவதலின் இவை முகச்சார்த்து வரியின் பாற்படும்.*
↑ சார்த்துவரியின் இம்முகங்களே பின்னாளில் '**எடுப்பு**' (பல்லவி) என்ற அமைப்பு தோன்ற வழிகோலியிருக்கலாம்.

**முகநிலை:** *தரவின் வகையுள் ஒன்று.*
அங்ஙனம் வரும் தரவினை நிலை என அடக்கி முகத்தில் படும் தரவினை முகநிலை எனவும்... (சிலப். 6: 35 அடியார்க்.)

**முகநிலை பசாசம்:** = முகநிலை பசாசக்கை
*மூவகைப் பசாசக் கையுள் ஒன்று*
அவ்விரல் முகங்கூடி உகிர்விட்டு நிற்பது. பசாசமாவது – பெருவிரலும் சுட்டுவிரலுமின்றி ஒழிந்த மூன்று விரலும் தம்மில் பொலிந்து நிற்பதெனக் கொள்க (சிலப். 3: 18 அடியார்க்.)

**முகர்சங்கு:** = மோர்சிங்.
*சதிக்கோவைகளை (தாளம்) வாசிக்கவல்ல ஓர் இசைக்கருவி*
← தெ. இ. அ. 7/III

**முகவணை:** முகவீணை
*காற்றுக்கருவிகளுள் ஒன்று.*
முகவணையை வாசி (பணவிடு. 183)
→ முகவீணை; மோர்வியம்

**முகவீணை:** = மோர்வியம்
*காற்றுக்கருவிகளுள் ஒன்று.*
தித்தி சிறு முகவீணை... மிழற்ற (குற்றா. தல. தரும. சா. 54)
↑ தற்கால நாகசுரத்தின் முந்திய வடிவ இசைக்கருவி. 10 அங்குல நீளமுடைய இவ்விசைக்கருவி நாட்டார் இசையிலும், வடதமிழ்நாட்டில் வழங்கும் தெருக் கூத்திலும் இசைக்கப்படுகிறது. முன்பு சதிர் ஆட்டத்தில் இசைக்கப்பட்டது.
→ மோர்வியம்

**முவகை:** → முகவைப்பாட்டு

**முகவைப்பாட்டு:** = பொலிப்பாட்டு, முகவை.
*களத்தில் நெல் சூடடிக்கும் போதும், பொலி போடும் போதும், முகக்கும் போதும் பாடும் பாடல்.*
*முகவை - மொண்டுகொள்ளல், முகத்தல் அளவை,*
நெற்பொலி அரிந்து கால்குவித்தோர் அரிகடா உறுத்த பெருஞ் செய்ந் நெல்லின் முகவைப்பாட்டும் (சிலப். 10: 137)
முகவை பாடுதல் – பொலிபாடுதல்; முகவை என்றார். நெல்லு முகந்து கொடுக்கப்படுதலாலே; "புகர் முக முகவை"(புறம். 371: 20) (சிலப். 10: 137 அரும்.)
நெல்லை அரிந்து போரிட்டார் சூட்டைக் கடா விடுதலால் உண்டான முகவைப்பாட்டும், ஆவது பொலி பாடுதல். முகக்கக் கொடுத்தலின், முகவையாயிற்று (மேலது அடியார்க்.)
நெல்முகந்து கொடுக்கப்படுதலான் முகவை ஆயிற்று (மேலது. நாட்டார்.)

தண்பணை வயல் உழவனைத் தெண்கிணைவன் திருந்து புகழ்கிளந்தன்று (பு. வெண்பா. வாகை 32)
← நன்னூல் 289 . மயிலை நாதர் உரை; புறம். 395

## முகாரி:

அவலச் சுவைதரும் பண்களுள் ஒன்று.
முகர் – மூக்கின் அடி... (தே.நே. 9,12)
மூக்கால் அழுதல் முகாரி (முகர் > முகரி > முகாரி)

## முகம்:

1. அந்தரக்கொட்டு, கூறு, ஒத்து
நடிகர்கள் அரங்கத்திற்குள் வருமுன் நிகழும் கூத்து
அந்தரக் கொட்டென்றும், முகமென்றும், ஒத்து என்றும் இதற்குப் பெயர். (சிலப். 3: 147 அரும்)
இந்த ஒத்து ஆடினபின்னர் அல்லது உருக்காட்டுதல் வழக்கல்ல – என்ப (மேலது. அடியார்க்.)
2. நாடகச்சந்தி ஐந்தனுள் முதலாவது
அவை முகம்... துய்த்தல் என இவை (சிலப். 3: 13 அடியார்க்.)
3. யாழ்நரம்பு
ஆரியப்பதங்கொள் நாரதப் பேரியாழ்
நன்னர் கொள் அன்பான் இனிமுகம் புலம்ப (கல்லா. 82: 10–11)
4. முகமுடை வரி
நிலைவரி – முகமும், முரியும்... நிலையெனப்படுமே...
(சிலப். 7: 13 அரும்.)
5. எடுப்பு (பல்லவி)
← த. க. க. 39/IV

## முகம் ஆடல்: = ஒத்து ஆடல்

நாடகம் தொடங்குமுன் திரைக்குப் பின்னிருந்து நடிகர் பாடல் பாடி ஆடி வரும் முறை.
ஒத்து ஆடிய பின்னரல்லது உருக்காட்டுதல் வழக்கல்ல என்ப
(சிலப். 3: 147 அடியார்க்.)
← த. க. க. 161/III

## முகமாடுதறிரியோகப் பொருட்டு:

முகம் ஆடுதல் திரியோகப் பொருட்டு
முகம் என்ற ஒத்து ஆடுதல் மூன்று நோக்கங்களைக் கொண்டது.
← சிலப். 3: 147 உரை; த. க. க 39 - 40/IV

## முகமில் வரி:

இசைப்பாடல் வகையுள் ஒன்று.
முகம் ஒழிந்து ஏனை உறுப்புக்களால் வருவது (சிலப். 7: (4) அரும்)
எடு:–சிலம்புகானல் வரிப்பாடல் எண். (8); (46), (48),(49),(50),(51)

## முகமுடைவரி:

வரிப்பாட்டுக்கு முகமாக நிற்றலின் முகமெனப்படும்.
வரிக்கு முகமாய் நிற்றலின் முகமெனப்படுமே (சிலப். 7:(4) அரும்.)
எடு:– திங்கள் மாலை (7: (2), (3), (4) முதலிய மூன்று பாடல்களில் 'வாழிகாவேரி' என்பது முகமாய் வருவது.
→ முகம்(4)

## முகர் சங்கு: = மோர்சிங்(திரிந்தவடிவம்)

வாயால் பிடித்துக் கொண்டு கைவிரலால் தட்டி வாசிக்கப்படும் தட்டு வாத்தியம்

## முகிழ் காங்கூலம்:

மூவகைக் காங்கூலத்துள் ஒன்று; ஒற்றைக்கை வகை.
முகிழ்காங்கூலமுந்துற மொழிந்த, குவிகாங்கூலங் குவிவிழுந்ததுவே (சிலப். 3: 18 அடியார்க்.)

## முகுளக்கை, முகுளம்: →மொட்டுக்கை

## முட்டு:

இசைக்கருவிகளின் தொகுதி. குறிப்பாக ஆடலுக்கு இசைக்கப்படும் மத்தளம், (மதங்கம் , மிருதங்கம்) முதலிய தோற்கருவிகள்
(முட்டு - தோல் கருவி)
முட்டுக்காரர் - இசைக்கருவியாளர்
விடிவைகறை ஆட்டத்துக்கு வாசிக்கும் போது முட்டினால் தலைப்பறை உழக்கும் (தெ. இ. க.19 254. த. க. சொ. 547)
→ முட்டுக்காரர்

## முட்டுக்கட்டி ஆடுதல்:

பொய்க்கால் கட்டையில் நின்று ஆடுதல்
முட்டு - தாங்கல்
← தே. நே. 60,12

## முட்டுக்காரர்: = முட்டில் பாணர்

மத்தளக்காரர், நாட்டியத்திற்குத் தோற்கருவி வாசிப்போர்.
முட்டில் பாணரும் ஆடியல் மகளிரும்
எட்டொடு புணர்ந்த ஆயிரம் பொன் பெறுப
(சிலப். 3: 162 – 3 அடியார்க்.)
நட்டுவர் முட்டுக்காரர்க்கு பணம் 2 . . .
(TDT 2: 135. த. க. சொ. 503)
பழந்தமிழரின் குடமுழா (பஞ்சமுக வாத்தியம்) திருவாரூர் சங்கரமூர்த்தி முட்டுக்காரரால் மரபு முறையில் இசைக்கப்படுகிறது
(ப. ஆ. இ. பக். 49)
நட்டுவர் முட்டுக்காரர்(திருமலை திருப்பதி கல்வெட்டு 1 506)
... வாச்சிய முட்டுக்களையுடைய... (மலைபடு. 13. நச்சர்)
(முட்டு - தோற்கருவி)
← ச. பொ. க. 234/II, → முட்டு

## முட்டி:

ஒற்றைக்கையுள் ஒன்று.
"முட்டி என்பது மொழியுங் காலைச் சுட்டுவிரல் அநாமிகை சிறுவிரல் இறுக முடக்கி இவற்றின் மிசைப்பெருவிரல் முறுகப் பிடித்த முறைமைத்தென்ப" (சிலப். 3: 18 அடியார்க்.)

## முட்டிகச் சுவத்திகம்:

*நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று.*

*← சிலப். 3: 13 அடியார்க். அடிக்*

## முட்டில் பாணர்: → முட்டுக்காரர்

## முடக்கொற்றான்:

*உழிஞை; பயிரவி; முடக்காத்தான் (பேச்சுவழக்கு)*

(Lasser Baloon vine - செ. ப. அ. பக். 2489)

1. ஒரு கொடி, முடக்கொற்றான்.

பொலங்குழை உழிஞை யோடு பொலியச் சூட்டி (புறம். 50: 4)

வேறுபல் பூளையொடு உழிஞை சூடி (பட்டினப். 235)

2. ஒருபண்

பணியா மரபின் உழிஞை பாட (பதிற் .46: 6)

← இ. இ. இ. பக் 60

## முடிக்கை:

*பண்மாறு* (சிலப். 3: 153 அடியார்க்.)

## முடியாட்டம்:

*தலைமுடியைச் சுழற்றி, பம்பரமாகச் சுழன்று ஆடும் மிகச்சிக்கலான பறையர்குலக்கலை.*

*மலைநாட்டு, கோட்டயம் செங்கணாச்சேரி மேரியம்மா இந்த ஆட்டத்தில் நிபுணராய் விளங்கியவர்.*

## முடிவு:

1. *முடிவுச்சுரம், நியாச சுரம்*

(tonic at the conclusion of a musical piece)

→ முடிவுச்சுரம்

2. *இசைப்பாகுபாட்டினுள் ஒன்று.*

இசைப்புலவன் ஆளத்தி வைத்த... முடிவும்... வைக்க வல்லனாய்.

(சிலப். 3: 41–2 அடியார்க்.)

## முடிவுச்சுரம்: = நியாச சுரம் (Cadence)

*பண் ஆளத்தி (இராக ஆலாபனை) மற்றும் பாடல் முடியும் சுரம்.*

← *யா. நூா. 154,* → முடிவு

## முடுகியல் அடி:

*வேறு அடிகளோடு கூடி பாடல் யாத்தற்கு உதவுவது; தான் தனித்து நில்லாதது; பிற அடிகளோடு கூடி வருவது; பெரும்பாலன குற்றெழுத்துக்களால் தொடர்ந்து வருவது*

எடு:– 1. நெறியறி, செறிகுறி, புரிதிரி... (கலித். 39: 46)

2. செகமெச்சிய, மதுரக்கவி, அதனைப்புய, வரையில் புனை

*(சென்னிகுள நகர்வாசன் எனத் தொடங்கும் அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்து)*

← *த இ. பே. 123/15*

## முடுகியல்: = அராகம்

*கலிப்பா உறுப்புள் ஒன்று.*

முடுகியல் அராகம் ஆமே. (சூடா. 10: 29)

→ அராகம்; முடுகியல் வண்ணம்.

## முடுகியல் வண்ணம்:

= முடுகியல், முடுகுவண்ணம்

*முடுகிச் செல்லும் சந்தவகை; அராகம் தொடுத்த அடியோடு பிற அடிசேர்ந்து தொடர்ந்தோடும் சந்தம்*

உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும்... (தொ. செ. 230)

முடுகுவண்ணம் அடியிறந்தோடி அதனோ ரற்றே (தொ. செ. 231)

## முடுகியல் தாழிசைக் கொச்சக ஒருபோகு:

*குற்றெழுத்துக்களால் இயன்ற முடுகியலாய் வரும் கலிப்பா.*

சுடரொடு, அணிமுடி, துடியொடு இவை மூன்றடுக்கி முடுகியலாய் வந்த தாழிசைக் கொச்சக ஒரு போகு...

(சிலப். 12: (18), (19), (20) அரும். அடிக்.)

இவை மூன்றடுக்கி முடுகியலாய் வந்த தாழிசைக் கொச்சக ஒரு போகு... (தொ. செ. 149 நச்சர்)

## முடுகு:

*குறில் அல்லது குறிலும் - நெடிலும் கலந்த விரைவு நடைப்பாடல் வரி இது குறிலால் அமைந்திருப்பது தாளச்சிறப்பு; ஊடே நெடில் சேர்ந்து இருப்பது, ஓசை நய நிறைப்பு. முடுகு நடையினைச் 'சீருடன் உருட்டல்' (சிலப். 7: 13) என்றதனால் தாளத்தில் உருட்டு அமைதல் வேண்டும்.*

எடு:– வேட்டுவவரி குருதிப்பலிக்கொடைத் தாழிசைகள் 12: (18), (19), (20) குறில்வண்ணமாய் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கிய கொச்சக ஒரு போகாய், முடுகுகளாய் வந்தவை.

↑ ஒருகால நடைச்சொல்லை அதற்கடுத்த மேற்கால நடைச் சொல்லாக மாற்றுங்கால் முடுகுகள் கிடைக்கும்.

ஒரோர் உருவை இரட்டிக்கிரட்டி சேர்த்த விடத்து...

(சிலப். 3: 45 – 55அடியார்க்.)

என்ற மரபு முடுகியல் அடிகளுக்கு வழி வகுத்தது எனலாம்.

← *த. க க 60/III; 41/IV*

## முடுகு வண்ணம்: → முடுகியல் வண்ணம்

## முடுகுவெண்பா:

*வெண்பா முழுவதுமோ அன்றி பகுதியோ சந்தமுடுகு களால் வரும் வெண்பா வகை.*

*எ-டு:-*

ஆனாவி யாசர்புரிக் காதிபவி நாயகனை
மானே யழைத்துவர மாட்டாயோ – கானாருஞ்
சோலைகண்டு தேனையுண்டு தூதுகொண்டு போனவண்டு
மாலைகண்ட தோமருண்ட தோ – *இரட்டையர்பாடியது*

(நே. வெ. இ. பக். 70)

## முண்டிதம்:

வரிக்கூத்து வகையுள் ஒன்று.

"சிந்து... முண்டிதம்... கோத்த வரிக்கூத்தின் குலம்"

(சிலப். 3: 13 அடியார்க்.)

## முத்தகம்: = முற்றகம்

இசைப்பாடல் வகையுள் ஒன்று. பாடலின் ஓர் அடியில் பொருள் முடிந்து நிற்கும் இசைப்பாடல். எனவே ஒருமைத் தாளத்தில் (ஏகதாளம்) இசையமைக்கவும், பண் விரிவாக்கத்திற்கும் (சங்கதி), திரும்பத் திரும்ப பாடவும் ஏற்ற அமைப்புடைய பாடல் வகை.

... இஃது இசைப்பாவின் பகுதி என்ப. அது பத்து வகைப்படும். செந்துறை... முத்தகம்... மண்டிலமென... (சிலப். 6: 35 அடியார்க்.)

## முத்தமிழ்மாலை:

இயல், இசை, நாடகம் என்ற மூன்று தமிழ்களாலும் இயற்றப்பட்டநூல்.

முத்தமிழ் மாலை மும்மையும் நிறைந்த

(தெ. இ. க. 8 291. த. க சொ. 504)

## முத்தமிழ் யாப்புக்கூறு:

இயல்தமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழின் யாப்புக் கூறுகள் சேர்ந்து வருவது.

எடு:– சிலம்பில் "இயற்றமிழின் பாகுபாடான வெண்பா. அகவல்பா, கலிப்பா என்பவைகளும், இசைத்தமிழின் பாகுபாடான ஆற்றுவரி, ஊசல்வரி, கந்துகவரி முதலிய பாக்களும் நாடகத்தமிழின் பாகுபாடான உரைப்பாட்டுக்களும் வந்துள்ளன." (சி. யா. 7)

உரைப்பாட்டு - உரையும் பாட்டும்

உரை = சொல் (இரட்டைக்காப்பியம் வ. சுப. மா)

## முத்தாய்ப்பு: = தீர்மானம், அறுதி, அந்தரி

தாளப்பகுதியின் மற்றும் கற்பனைச் சுரம் பாடுதலின் முடிவுப்பகுதி. முழவுத்தனி வாசிப்பில் (தனி ஆவர்த்தனம்) மோராக்களுக்குப் பின்னர் வரும் முதிர்ந்த மூன்று அமைப்புக்கள்.

← இ. து. த. சொ. 41 : ப. ம. 352; மத்தளவியல் 137

## முத்தாயி சுரம்: முக்தாயி சுரம்

பண் பாடுதலின் முடிப்புச்சுரம்

## முத்தாயி பாகம்: = முக்தாயி பாகம்

முத்தாயி பாகம். பண்பாடுதலில் முடித்து விடும் பகுதி (finale)

## முத்தாவளி: பண்களில் ஒன்று

## முத்திரை: = கை ; அவிநயம் (ஹஸ்தம்)

1. நாட்டியத்தில் கையால் காட்டும் அவிநயக்குறி.

(அவிநயம் - முத்திரை)

2. பாடல், செய்யுளில் ஆக்கியோன் பெயர்ப்பதிவு.

எடு:- காரைக்கால் அம்மையார் - 'காரைக்கால் பேய்'

மாரிமுத்தாப்பிள்ளை - 'தில்லை'

3. முத்திரைத்துளை

நாகசுரம் மற்றும் குழல் வாசிக்கும் போது தொழிற் படாத துளை. தேவைக்கு அதிகமான காற்று இதன் வழி வெளிப்படும்.

இவ்வங்கியம் ஊதுமிடத்து வளைவாய் சேர்ந்த துளையை முத்திரை என்று நீக்கி முன்னின்ற ஏழினையும் எழுவிரல் பற்றி என்க. (சிலப். 3: 26 அடியார்க்.)

முத்திரையே முதலனைத்தும் முறைத்தானம் சோதித்து

(பெரியபு. ஆனாய. 24)

## முத்திரைச்சுவை: = பாவரசம்

அவிநயச்சுவை (Aesthetic excellence of gesture)

← செ. ப. அ. 2633

## முத்திரைத்துளை: → முத்திரை(3)

## முத்திரைப் பல்லவம்: = முத்திரைப் பல்லவி

இசைப்பதத்தின் அடிதோறும் ஒட்டிப் பாடப்படும் எடுப்பு (பல்லவி)

(யாழ். அக.)

← செ. ப. அ. 3255

## முத்திரைப் பல்லவி: → முத்திரைப் பல்லவம்

## முதல்:

1. இசைப்பாகுபாட்டு வகையுள் ஒன்று.

... முதலும், முறைமையும், முடிவும்... பதினொரு பாகுபாட்டினாலும்...

(சிலப். 3: 41 – 2 உரை)

2. தலைமை

இக்கோவில் முதல் கணக்கு வேட்கோவன்

(தெ. இ. க. 17: 601)

3. குலமுதல்பாலை தமிழ்க்குலத்திற்குத் தலைமையான பாலை.

... இதுகுல முதல் பாலைத் திரிவெனக்கொள்க...

(சிலப். 13: 109 அடியார்க்.)

## முதல் அவய முடிவுச்சுரம்: விந்யாசம்

பாடலின் முதல் (அவயத்தின்) பகுதியின் இறுதியிலுள்ள சுரம்...

← யா. நூ. 154

## முதல் எழுத்துக்கள்:

வாய் திறந்தும் மற்றும் வாய் திறவாததுமான நிலைகளில் பிறக்கும் ஒலிகளே முறையாக குரல்(சட்சம்) மற்றும் உழை (மத்திமம்) ஒத்து (சுருதி) களாகின்றன. (phonemes)

"மாந்தன் தன் வாயைத் திறந்தவுடன் இயல்பாக ஒலிக்கும் ஒலி அகரம் அல்லது ஆகாரம்" (தே.நே. 85/7)

இதுவே இசையின் அடிப்படை ஒலியான 'ச'

என்பது.

"வாய் திறவாத நிலையில் மூக்குவளியால் ஒலிக்கும் ஒலி மகரம்" (மேலது.)

இதுவே கேள்வி கூட்டுவதற்காக இசையாளன் 'ம் ம் ம்'... என்று ஒலிப்பது. அதாவது 'ம்' என்ற உழை ஒத்து (மத்திம சுருதி)

"மகரத்தின் ஒற்றால் சுருதி விரவும்" (சிலப். 3: 26 அடியார்க். மேற்.)

## முதல் ஐந்திசைப்பண்கள்:

*ஐந்து முதன்மையான, ஐந்து சுரப்பண்கள் (பாணி - ஔடவம்). குரல் முதல் ஐம்முறை இணை தொடுக்க முல்லைத் தீம்பாணி (மோகனம்) கிடைக்கும். இதுவே ஐந்து சுர ஆதிப்பண். இதன் ஏனைய சுரங்களால் பண் பெயர்க்க ஏனைய நான்கு பாணிகள் கிடைக்கும்.*

*(பாணி = 5 சுரப்பண்)*

*சப; பரி$^{2}$; ரி$^{2}$த$^{2}$; த$^{2}$க$^{2}$; - ச ரி$^{2}$ க$^{2}$ ப த$^{2}$ - முல்லைப்பாணி (மோகனம்)*

| பழம் பெயர் (இக்காலப் பெயர்) | ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| முல்லைப் பாணி (மோகனம்) | ச | | ரி$^{2}$ | | க$^{2}$ | | | ப | | த$^{2}$ | | |
| குறிஞ்சிப் பாணி (மத்தியமாவதி) | நி$^{1}$ | | ச | | ரி$^{2}$ | | | ம$^{1}$ | | ப | | |
| நெய்தல் பாணி (இந்தளம்) | த$^{1}$ | | நி$^{1}$ | | ச | | | க$^{1}$ | | ம$^{1}$ | | |
| பாலைப் பாணி (சுத்த சாவேரி) | ம$^{1}$ | | ப | | த$^{2}$ | | | ச | | ரி$^{2}$ | | |
| மருதப் பாணி (சுத்த தன்யாசி) | க$^{1}$ | | ம$^{1}$ | | ப | | | நி$^{1}$ | | ச | | |

← *த. க. க. 324/I*

## முதல் கண்ட முடிவுச்சுரம்:

*(சந்யாசம்)*

பாடலின் முதற்கண்டத்தை முடிக்கும் சுரம் (யா. நூ. 154)

## முதல்கதி:

*முதல் நடை (விளம்பகாலம் ; சௌக்ககாலம்); முதல் காலம்.*

நண்ணிய பாணியும் இயலும் தூக்கு நடைமுதல் கதியில் (பெரியபு. ஆனாய. 28)

→ முதல் காலம்; முதல் வாரம்

## முதல்கருவி:

*ஆடல்பாடல்களின் தொடக்கத்தில் வாசிக்கப்படும் மத்தளம்.*

இவற்றுள் முதலில் கரங்கொள்வது மத்தளமாதலின் முதற்கருவியாயிற்று. (சிலப். 3: 27 அடியார்க்.)

தரித்த மதங்கமொடு மத்தளம்... முதற்கருவியாம்... (சுத்தானந்தப் பிரகாசம்.)

## முதல் காலம்:

*முதல் நடை; (விளம்பகாலம்; சௌக்ககாலம்)* (slow measure in keeping time; first tempo)

→ முதல் கதி; முதல் வாரம்

## முதல் கால வண்ணம்: → பதவண்ணம்

## முதல் நடை:

= ஒன்றாம் காலம், சௌக்ககாலம், விளம்பகாலம்; *முதல் வாரம் இசையின் இயக்கம் (வேகம்) நான் கனுள் முதலாவது. தாழ்ந்த (வேகம் குறைந்த) செல வினையுடையது.*

முதல் நடை மிகவும் தாழ்ந்த செலவினை உடைத்து. (சிலப். 3: 36 அரும்.)

சான்று: ஆபோகிப் பண்ணில் அமைந்த 'சபாபதிக்கு நிகர் சமான மாகுமோ' என்ற கோ.கி.பாரதியின் பாடல். இது முதல் நடையில் அமைந்தது.

## முதல் நடை, வாரநடை:

*முதல் காலம் மற்றும் இரண்டாம் காலத்திற்கு ஆடுதல் மற்றும் பாடுதல் (முதல் நடை - ஒன்றாம் வாரம்) (விளம்ப/சவுக்ககாலம்) (வாரநடை இரண்டாம் வாரம், மத்திமகாலம்)*

முதல் நடையினும், வாரத்தினும் தேசிக்கூத்தெல்லாம் ஆடி முடித்தென்க. (சிலப். 3: 153 அடியார்க்.)

முதல் நடை வார முதலாயினவு மென்றவாறு (சிலப். 3: 16 அரும்.)

வாரம் இரண்டும் வரிசையில் பாட (சிலப். 3: 136)

வாரம் பாடும் தோரிய மடந்தையும், (சிலப். 14: 155)

↑இன்றைய ஆடல் அரங்கில் '**பதம்**' முதல் நடையில் ஆடப்படுகின்றது. மற்றும் இரண்டு காலங்களிலும் இன்றைய பரதம் ஆடப்படும் நடப்பு தொடர்வது பண்டைய ஆடல் முறையின் மரபுநீட்சி.

## முதல் நிலை: → எடுப்பு(பல்லவி)

## முதல், வழி வங்கியம்:

*இசை நிகழ்ச்சியில் இசைக்கப்படும் முதன்மையான வங்கியமும் (குழலும்), அதற்குத் துணையான துணை வங்கியமும்.*

தோற்பொலி முழவும் யாழும் துளைபயில் குழலும் (சீவக. 675: 1)

துளை பயில்குழல், – துளையிடத்தே வாச்சியமும் யாழ்ப்பாடலும், கண்டப்பாடலும், பயிலப்பட்ட முதல் வங்கியமும், வழிவங்கியமும் (மேலது நச்சர்.)

ஒப்பு: முதல், வழியாயினும் (தொ. ம. 108)

(வழி – துணை)

## முதல்பா: வெண்பா

முதற்பா வெண்பா (பிங்க. 2079)

## முதல் வாரம்: = ஒரொற்றுவாரம்

முதல் நடை (சிலப். 3: 136 & 14: 155 அடியார்க்.)

*(சௌக்கம்; விளம்பம் first tempo)*

*இசையின் நடை நான்கனுள் ஒன்று.*

வாரம் இரண்டும் வரிசையில் பாட (சிலப். 3: 136)

வாரம் இரண்டாவன : (1) முதல் வாரம் (முதல் காலம்) (2) இரண்டாம் வாரம் - (வாரம்) (இரண்டாம் காலம்)

## முதாரிப்பாணர்: *முதுபாணர்*

*(முதாரி = முதுமை)*

கணிக்காய் – முதாரிக்காய் (சிலப். 16: 22 – 8 அடியார்க்.)
முதாரிப்பாண (புறம். 198)

## முதிர்ந்த இந்தளம்:

*குறிஞ்சியாழ்த்திற வகையுள் ஒன்று.*

நட்டபாடை... முதிர்ந்த இந்தளம்... குறிஞ்சியாழ்த் திறமாகக் கூறுவர். (பிங்க. 1382)

## முதிர்ந்த குறிஞ்சி:

பண் வகையுள் ஒன்று... (பாசுர. திருவாய்.1 :1 தலைப்பு)

## முதியாள்: → தேவராட்டி

## முதுபாலை: *ஒப்பாரி*

'என்னுறு துயர்' முதலான மூன்றும் முதுபாலை.
(சிலப். 19: 39 அரும்.)

*இது கொலையுண்ட கோவலுக்கான கண்ணகியின் ஒப்பாரி.*

இஃது அழுகையைச் சார்ந்த வெகுளி (மேலது அடியார்க்.)
தனிமகள் புலம்பிய முதுபாலையும் (தொல். புறத். 24)

## முதுவாய்ப் பெண்டிர்: → அகவன் மகள்

## முதுவாய் வேலன்:

*வேலன் வெறியாட்டில் வரும் (கையில் எப்போதும் வேலையுடைய) முதுசொல் (குறி) கூறும் வேலன்.*

முருகு அயர்ந்து வந்த முதுவாய் வேல! (குறுந். 362: 1–2)
அன்னை தந்த முதுவாய் வேலன் (அகம். 388: 19)

## முந்தியஎடுப்பு: →முன் எடுப்பு

## முப்பத்தைந்து தாளங்கள்:

*ஏழுதாள வகைகளுடன் தாளத்தின் ஐந்து இனங்கள் இணைந்து உருவாவது முப்பத்தைந்து தாளங்கள். (7 x 5=35)*

*← புதிய இராகங்கள் பக். 93*

## மும்மணிக்கோவை:

*அகவலும், வெண்பாவும், கலித்துறையும் முறையே மாறி வர அந்தாதித் தொடையாகப் பாடப் பெறும் 30 பாடல் கொண்ட சிற்றிலக்கியம்.*

சான்று: திருவாரூர் மும்மணிக்கோவை

*← இலக். வி. 815; செ. ப. அ. 3271*

## மும்மணி மாலை:

*வெண்பாவும், கலித்துறையும், அகவலும் முறையே மாறிவர அந்தாதித் தொடையாகப் பாடப்பெறும் முப்பது பாடல் கொண்ட சிற்றிலக்கியம்.*

*← இலக். வி. 820; செ. ப. அ. 3272*

## மும்முரசு:

*போர் முரசு, கொடை முரசு, ஈகை முரசு*

மும்முரசு முத்தமிழும் (வள்ளுவ மாலை. 10)

## மும்மை நடை: = திரிசுரநடை, திஸ்ரம், மூன்றன் நடை

*தகிட, தகிட என்று செல்லும் தாளநடை.*

சான்று:–

நீல | விதா | னத்து | நித்தி | லப்பூம் | பந்தர்க் | கீழ் (சிலப். 1: 49)
பொன்னி | லங்கு | பூங்கொ | டிபொ | வன் செய் | கோதை | வில்லிட
மின்னி | லங்கு | மேக | லைக | ளார்ப்ப | வார்ப்ப | எங்கணும்
(சிலப்.29:(20)

## முரசம்:

1. *முரசு - பறை (Drum)*

உத்திரட்டாதியும் பறையு முரசெனல் (பிங்க. 3974)

2. *மருதநிலப்பறை வகை*

அரி, கிணை, முரசம், பணை, மருதப்பறை (பிங்க. 570)

3. *போர்ப்பறை (war drum)*

இடியென முழங்கு முரசின் (புறம். 17)
முரசமிடைப் புலத் திரங்க (புறம். 288)

## முரசு: = *முரசம், முரைசு*

*ஒருமுகத் தோற்கருவி*

கடிப்பிகுமுரசின் ... (குறுந். 270: 3)
குணில்வாய் முரசின்... (குறுந். 328: 3)
மயிர்க்கண் முரசின்... (மதுரைக். 733)
வாச்சியப்பொது (பிங்க. 3974)

## முரல்வு:

1. *உள்ளோசை (கமகம்) களுள் ஒன்று.*

*(முரல்வு = எதிர் ஒலித்தல்; சிலம்புதல்)*

*செறிந்த இன்னோசையை அடிவயிற்றினின்றும் எழுப்பி மேல்வாய். அன்னம், மூக்கு இவற்றில் எதிரொலிக்கச் செய்தல்.*

ஒப்பு:– முரலி – இரு மூங்கிலால் இணைத்துச் செய்த ஊதுகுழல்
குடுமிக் கூகை குராலொடு முரல ... (மதுரைக். 170)
நரம்பின் முரலும் நயவரு முரற்சி விறலியர் (மதுரைக். 217)
முரல்வும் நரல்வும்.. உள்ளோசை என்ப... (பிங்க. 1436)

2. *யாழின் மெல்லிய ஓசை (Soft sound, as of a lute)*

## முரலி: → முரல்வு[1]

## முரலும்: *பாடும்*

கின்னரம் முரலும் அணங்குடைச் சாரல்... (பெரும்பாண். 494)

## முரவம்:

*பறை வகையுள் ஒன்று.*

முரவ, மொந்தை (தேவா. 385)

## முரளி:

*1. புல்லாங்குழல், வேய்ங்குழல்*
(flute or pipe made of bamboo )

*2. மூக்கால் வாசிக்கும் சிறுகுழல்*

↑ முரலி என்பது முரளி ஆகியிருக்கலாம்.

→ முரல்வு

## முரற்கை:

*1. கையால் போடும் தாளம் ; பாணி*

இன்புறு முரற்கை நும் பாட்டு (மலைபடு. 390)

நின்ற முரற்கை நீக்கி (புறம். 376: 13)

2. *ஒலி*

பாணர் நரம்புளர் முரற்கை போல (ஐங். 402)

3. *கலிப்பா*

முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும் (தொல்.செய்.69)

முரற்கை – கலிப்பாவினுள்... (மேலது நச்சர்.)

கலிப்பாமூட்டிய பேர் முரற்கை... (சூடா. 10: 29)

## முரற்சி:

1. *ஒலி*

கொன்றைத் தீங்குழல் முரற்சியர் (கலித். 106)

2. *பாட்டு*

நரம்பின் முரலும் நயவரு முரற்சி விறலியர் (மதுரைக். 217)

## முரன்று பாடுதல்:

*ஆளத்தி (ஆலாபனை) என்ற பண் விரிவாக்கம் செய்தல்*

களிவண்டு முரன்று பாட (சீவக. 1959)

## முரி:

1. *முரிபாடுதல் என்பது பாடும் முறைகளுள் ஒன்று.*

எடுத்த இயலும் இசையும் தம்மில்
முரித்துப் பாடுதல் முரி எனப்படுமே (சிலப். 7: 14–16 அரும்.)

*இயலில் முரித்தல் - வெவ்வேறு யாப்பில் மற்றும் சந்தத்தில் பாடுதல்.*

*இசையில் முறித்தல்- பண், தாளம், எடுப்பு, காலம், நடை முதலியனவற்றுள் மாற்றம் செய்து பாடுதல்.*

...முகநிலை முரிகளால் பயந்த வேறுபடு பொருண்மை யெல்லாம். தன்கைத்தடக்கி... (சிலப். 7:51 அரும்.)

*வரிமுரிபாடி - அப்பர்*

*யாழ்முரி - பண்முரி*

↑ யாழ்முரி என்பது தற்காலத்தில் பாடப்படும் பண்மாலை (இராகமாலிகா) ஆகலாம். மேலும் 'மாதர் மடப்பிடியும்' என்ற பாடலில் வேறுபட்ட சந்தங்கள், தாளங்களில் பாடலைச் சம்பந்தர் அமைத்துள்ளார். எனவே, இது முரிப்பாடல் வகையது. முரி எனப்படுவது தாளமாலை (தாளமாலிகா)யும் ஆகலாம்.

2. *இசைப்பாவின் இறுதிப்பகுதி* (the closing section of a musical composition)

இசைத்தமிழில் வருங்கால் முகநிலை, கொச்சகம், முரி என்ப ஒரு சார் ஆசிரியர் ... (சிலப். 6: 35 அடியார்க்.)

3. *நாடகத் தமிழில் இறுதியில் வரும் சுரிதகம்.* (closing part of a dance song)

"கூத்தநூலார்... இறுதிக்கண் முரிந்து மாறும் சுரிதகத்தினை முரி எனவுங் கூறினாரென்பது" (தொ.பொ. 444 பேரா.)

வரிமுரிபாடி என்றும் வல்லவா றடைந்து நெஞ்சே (தேவா. 4: 25: 6/4412)

முரிபுருவம் சிலப். 3:13 (நகையின் அவிநயம்) அடியார்க்.

(முரி – வளைவு, முழுதில் குறைவானது)

← த. க. க. 48/IV ; பஞ்ச. 27–28; தே.நே. 78/*12;* செ. ப. அ. 3278; சி.கா. இ. பக். 77 – 78.

↑ நல்லமுரியார் (பரிபாடல் 16, 17) என்ற பாடகர் (புலவர்) முரி பாடுவதில் வல்லவராக இருந்திருக்கலாம்.

→ முரிவரி

## முரிச்சார்த்து:

*சார்த்து வரிப்பாடல் வகையுள் ஒன்று குற்றெழுத்தால் அமைவது.*

முரிந் தவற... குற்றெழுத்தியலால் குறுகிய நடையால்... (சிலப். 7: (7) அரும்.)

## முரித்துப்பாடுதல்: → முரி

## முரிவரி:

*இசைப்பாடல் வகையுள் ஒன்று*

பொழில்தரு நறுமலரே முதலிய சிலப். 7: (14), (15), (16) மூன்றும் முரிவரி எனும் இசைப்பாடல்கள். 14 ஆம் பாடலில் 'முரிபுரு வில்லினையே' என்பதில் இது முரிவரி என்பதை அடிகள் காட்டியுள்ளார்.

"முரிவரியாவது, முன்னே தொடங்கப்பெற்ற இயலமைதியாகிய யாப்பும், இசையமைதியாகிய பண்ணீர்மையும் பாட்டின் இடையிலே முரிந்துமாறும் வண்ணம் இயற்றப்பெறும் இசைப்பாட்டாகும்" (ப. தி.வ.பக். 442)

← *முரி*

## முருகயர்தல்:

*வெறியாடல்*

முருகு அயர்ந்து வந்த முதுவாய் வேலன் (குறுந். 362)

## முருகன் ஆடல்:

*துடிக்கூத்தும், குடைக்கூத்தும் முருகன் ஆடியது.*

அறுமுகத்தோன் ஆடல்குடை.... துடியாடல் வேல்முருகன் ஆடல் ... (சிலப். 3:14 அரும்)

## முருகியம்:

1. *முருகனுக்கு உரிய இசைக்கருவிகள். சிறுபறை, தொண்டகம், துடி முதலியன முருக வழிபாட்டிற் குரியவை.*

↑ முருகியம் என்பது தொன்மையான சிறுபறை அல்லது துடியைக் குறித்ததாகலாம்.

2. *குறிஞ்சி நிலப்பறை; வெறியாட்டுப்பறை.*

பறைமுருகியமும், தொண்டகப்பறையும்
(தொல். பொ. அகத். 18நச்சர்)
தொண்டகம் துவைப்ப முருகியம் கறங்க (கல்லா. 7: 12)
பிணிதர விசித்த முருகியம் துவைக்க (கல்லா. 16: 25)
முருகியம் போல வானம் முழங்கி (கார் நாற்பது. 27: 1)
முருகியம் நிறுத்து முரணினர் உட்க... (முருகு. 243)
தொண்டகம், முருகியம், துடி... (திவா. 1228)
*(கறங்க, துவைக்க, துவைப்ப - ஒலிக்க)*

## முருகன்: → வேலன்

## முருடு:

*பெருமத்தளம்; பறை வகையுள் ஒன்று; அகன்று நீண்டு, பெரிய வடிவும் வலிவுமுடைய தோற்கருவி.*
முரசும் சங்கும் முருடும் ஒலிப்ப (பெருங்க. 3: 19: 195)
முரசு இயம்பின முருடு அதிர்ந்த (சிலப். 1: 46)
முருடு –மத்தளம் (மேலது அரும்.)
முருடு –பத்தல்; மத்தளமுமாம் (மேலது அடியார்க்.)
முருடு அதிர்ந்தன – மத்தளம் முதலியன அதிர்ந்தன
(மேலது நாட்டார். பக். 52)
முரசு முருடு முன் முன் முழங்க
(செயிற்றியனார். சிலப். 3: 125 – 8 அடியார்க்.மேற்.)
*← த. க. க 49-50/IV*

## முருகு:

1. *(வேலன்) வெறியாட்டு*
2. *விழா.*

↑மானிடர் தோன்றிய, குறிஞ்சி நிலத்தின் வேலன் வெறியாட்டே விழாக்களின் தோற்றுவாய். எனவே முருகு என்பது விழாவின் பெயராயிற்று.
விழவும் குமரவேளும் இளமையும்... வெறியாட்டாளனும்
முருகு என இசைப்பர் (திவா. 2167)

3. *முருகன், வெறியாட்டாளன்*

## முரைசு: → முரசு

## முல்லை:

= *முல்லையாழ், செம்பாலை, குலமுதல்பாலை, மங்கலப்பண், பாலையாழ் (அரிகாம்போதி), குரல், குரல் பண், தொல் ஏழிசை, குழல்பண், முல்லைப் பண். முல்லை நிலத்திற்குரிய பெரும்பண். (7 சுரப்பண்) இது குரல் குரலாக வரும் பண்.*
முல்லை நல் யாழ்ப்பாண (ஐங். 478: 5)
பாணர் முல்லை பாட (ஐங். 408: 1)
தாரத்து உழை தோன்றப் பாலை யாழ்.. (பஞ்சமரபு. 22)
முலையாழ் கெழும மொந்தை கொட்ட (தேவா. 1: 63: 7)
*(முல்லையாழ் > முலையாழ்)*
*பரிபாடலின் முதல் பன்னிரு பாடல்களும் முல்லை (பாலை) யாழில் இசையமைக்கப்பட்டவை.*
முல்லைக்கு யாழ் – முல்லையாழ் (தொ. அகத். 18 நச்சர்)
பாற்பட நின்ற பாலைப்பண் மேல் (சிலப். 3: 149)
கூடுகொள் இன்னியம் குரல்குரலாக (சிறுபாண். 229)
குரல்குரலாயது செம்பாலை (சிலப். 17: (13) அடியார்க்.)
குரல் குரலாகப் பண்ணி... (சீவக. 723)
செம் பாலையைப்பண்ணி (மேலது நச்சர்)
குரல் குரலாகின் செம்பாலை (பிங்க. 1403)
குரல்துலை... தொல் ஏழிசை நரம்பிற்காம்...
(சிலப். 17: (13)அரும். மேற்.)
ஏழிசை ஒலிக்கும் முல்லையாழொடு (கல்லா. 15: 15)
குடமுதல் வேண்டியபெயரே... என்பதனால் முல்லையாழும்
(சிலப். பதிகம். அடியார்க்.)
குழல் வளர் முல்லை – குழலில் உண்டாகிய முல்லைப்பண்ணை
(சிலப். 4: 15 அரும்.)
முல்லை – மலரும், பண்ணும் (மேலது அடியார்க்.)
குரல்வாய் – குரல் என்னும் இசையைப்பாடும் (சிலப். 5: 200 அடியார்க்.)
குரல் குரலாக வருமுறைப் பாலையில் (சிலப். 28: 33)
முல்லை நல்யாழ் (புறம். 339, 352)
*முல் - மலர்தல், வளர்தல்*
*முல் - முல்லை; முல் > மல் - மல்லிகை*
*முல் - மல் - மால் - கருமை, கரிய நிறத்தெய்வம்*
*மல் - மால் - மாலை - இருள், கருமை*
குழல்வளர் முல்லையில் (சிலப். 4: 15)
குழல் வளர்.... ஊத என்புழி 'குழல் வளர்முல்லை' என்று கூறியபொழுதே ஆயர் ஊதும் குழலிலே எழுந்த 'முல்லை' என்னும் பண்ணையும் (தொ. எச். 64. நச்சர்.)
*→ வட்டப்பாலை பக். 476-77*

## முல்லைக்குழல்:

= *முல்லைப்பாணி, சாதாரி, குரல்பாணி, குழல்பாணி (மோகனம்),மாயோன் பாணி.*
*முல்லை நிலச் சிறுபண். 'குரல் மந்தமாக' என்று தொடங்கும் ஆய்ச்சியர் குரவை வெண்பாவில் இப்பண்ணிற்குரிய ஐந்து சுர நிரல்களை இளங்கோ அடிகள் கூறியுள்ளார்.*
யாழின் பகுதி என்பது பண். அது சாதாரி.
(தொல் அகத். 20 இளம்.)
கோவலர் முல்லைக்குழல் மேற்கொள்ள (மணிமேக. 5: 136)
முல்லைத் தீம்பாணி என்றார்.... என்பதனால் சாதாரியும் கூறினார்...
(சிலப். பதிகம் அடியார்க்.)
*'ச' முதல் நான்கு முறை இணை தொடுக்க இப்பண் வரும் சப, பரி$^2$, ரி$^2$த$^2$, த$^2$க$^2$ - ச ரி$^2$க$^2$ப த$^2$ - முல்லைப் பாணி (மோகனம்)*
. . . பாடுதும் முல்லைத் தீம்பாணி என்றாள் (சிலப். 17: (17)
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி (மேலது. (21)
முல்லையாழ்த்திறம் – நேர்திறம், பெயர் திறம், யாமை, சாதாரி
(சூடா. 10: 34)

## முல்லைநிலப்பறை:

*ஏறங்கோட்பறை மற்றும் பம்பை*
முல்லையாளர் ஏறங்கோட்பறை
சொல்லிய பம்பையாகலும் உரித்தே (திவா. 1230)
ஏறங்கோட்பறை, பம்பை (சூடா. 7: 41)

**முல்லைப்பாணி:** → முல்லைக்குழல்

**முல்லையாழ்:** → முல்லை

**முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து:**

*முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் கோடையில் நீரின்றி தற்காலிகமாக பாலை நில வடிவம் கொள்ளும்.*

முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும்... (சிலப். 11: 64 – 66)
வானமூர்ந்த வயங்கொளி மண்டிலம் நெருப்பெனச் சிவந்த
உருப்பு அவிரங்காட்டி, இலையில் அமர்ந்த முகையில் இலவம்
(அகம். 111 – 3)

*(இது முல்லை திரிந்தது கூறும்)*

சீறருங் கணிச்சியோன்.... வரைபிளந்து இயங்குநர்
ஆறுகெட விலங்கிய அழல் அவி ஆரிசை (கலித். 2:6–8)
(இது குறிஞ்சி திரிந்தது கூறும்) (சிறுபாண் 177 நச்சர்)
← மதுரைக். 314 நச்சர்; சீவக. 2106 நச்சர்

**முலை:** = கொம்மி, கொம்மை

*கும்மி*

சிந்துப் பிழுக்கையுடன் சந்தியோர் முலை
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**முழக்கு:**

*தாளமுழக்கு - தட்டுதலும்* (beat), *வீச்சும்* (rest, pause, off beat) *கொண்டது. இரண்டும் சமகாலம்* (time measure) *கொண்டவை* (drumming is beating and resting)

**முழவம்:** → முழவு, ஐம்முக முழவு

**முழவு:** = முழா, முழவம், மிழவு

*தோற்கருவிகளுள் ஒன்று. தொல்காப்பியத்தில் பறை என்பது தோற்கருவிகளுக்குப் பொதுப்பெயராய் வழங்கியது போல், சங்ககாலத்தில் முழவு என்பது பொதுப்பெயராய் வழங்கியுள்ளது. முழக்கப்படுவது முழவு. நடுவிலிருந்து பலாப்பழம் போல் வளைந்து அமைவது. பின்னர் குடமுழாவைக் குறித்தது.*

மிழவு – குடமுழா (ம. வ.)
நந்தி முழவம் கொட்ட நட்டன் நாதன் ஆடும் (திருவிசைப் 7: 4)
மண்முழா மறப்ப, பண்யாழ் மறப்ப (புறம். 65: 1)
நெடுநகர் வரைப்பில் படுமுழா ஓர்க்கும் (புறம். 68: 17)
தூம்பு ஆகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கி (புறம். 103: 2)
கலை உணக்கிழிந்த, முழவுமருள் பெரும்பழம் (புறம். 236: 1)
மண் ஆர் முழவின் கண் அதிர்ந்து இயம்ப (அகம். 346: 14)
நாறுகமழ் வீயும் கூறும் இசை முழவமும் (பரிபா. 8: 99)
மண்கணை முழவின் இன் கண் இமிழ் விற்கு.. (பரிபா. 22: 36)
கட்டுவடம் எட்டுமுறு வட்ட முழவத்தில் (தேவா. 2: 32 :3)
முழவுத் தோள் முரண் பொருநர்க்கு (மதுரைக். 99)
நிலவு காலை முழவுத்தாழை (மதுரைக். 114)
குடமுழாப் போலும்... (மேலது நச்சர்)
திண்வார் விசித்த முழவொடு (மலைபடு. 3)
யாழும் குழலும் முழவும் இயைந்தென (திணைமொழி. (50)7: 1)
சீர்முழாப் பண்ணமைப் பான். (களவழி. 20: 3)
தண்ணுமைப் பின்வழி நின்றது முழவே – மத்தளக்கருவியின் வழியே குடமுழவு நின்றது... (சிலப். 3: 140 – 1அரும்.)
முழவின் முழக்கு ஈண்டிய (சீவக. 2399)

*மிழா - மேழம் -செம்மறியாட்டுக் கடா*
*முழா - மிழா - பருத்த ஆண்மான்*

↑ ஆட்டுத்தோல், மான்தோல் ஆகியவைகளால் முழவுக்கருவிகள். செய்யப்பட்டதால் மிழா, முழா என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம்.
← *மத்* XXVII; *தே.நே.* 52/XII; *த. க. க.* 53/IV

**முழவுச் சொற்கட்டுகள்:**

*முழவில் முழக்கப்படும் தாள நடைச் சொற்கட்டுகள்.*

1) மும்மைநடை– தகிட, கிடதொம், தொம்கிட, ததீம், தீம்த
2) நான்மைநடை – தகதிமி, ததிங்கிண, தா தீம், தகதீம், தாம்கிட, ததீம்த
3) ஐம்மை நடை– தகதகிட, தரிகிடதொம், தகதீம்த, தாதீம்த, தோம்கிடதொம், திதீம்தா
4) எழுமை நடை –தகிடதகதிமி, தீம்ததகதிமி, ததீம் தாதிமி, தகிடதாம்தக, தகிடதகதீம்
5) ஒன்பான் நடை – தகதிமிதகதகிட, தாதீம்தகிடதீம்.

← *சிந்துப்பாவியல் பக். 50-51*

**முழவு மண்:** → மார்ச்சனை

**முழா:** = முழவு, முழவம், மிழவு

*தோற்கருவிகளுள் ஒன்று.*

திருமணி அம்பலத்து இமிழ் முழாத்ததும்பும் (பெருங். 1: 34: 140)
மாடவாய் மணி முழா இசையும் (சூளா. 43: 1)
மாறுகொண்ட கோடியர் மணிமுழா முழங்கலில் (சூளா. 796: 2)
← *முழவு*

**முழுச்சுரம்:** → சுத்தசுரம், சுத்தத்துளை

**முழுத்துளை:** → சுத்தசுரம், சுத்தத்துளை

**முழுமண்டி சுற்றல் அடைவு:**

*நாட்டியத்தில் முழுமண்டியில் அமர்ந்து முழங்கால் தரையில் பட சுழன்று ஆடும் அடைவு.*

**முழு முடிவுச்சுரம்:**

*பூர்ண நியாச சுரம்,* (staying note)

*ஒரு பண்ணின் இறுதியில் நின்றுபாடி முடிக்கும் சுரம். இளி (பஞ்சமம்) சுரம், கௌசிகப்பண் (பயிரவி) ணில் நின்று பாடி முடிக்கும் சுரம். எனவே இப்பண்ணின் முழு முடிவுச்சுரம் இளி சுரம்.*

## முழவன்:
*முழவு வாசிப்போன்.*
விழவு கொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல (அகம். 352: 6)
↑ சதிர் ஆட்டக்காலத்தின் இறுதிவரை கருவி இசைப்பவர்கள் ஆடல் மகளிரின் பின்புறம் நின்று கொண்டே வாசித்துள்ளனர்.

## முள்ளிப்பூ:
*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*
சிந்துப் பிழுக்கை ... முள்ளிப்பூ ... வரிக்கூத்தின்குலம்.
(சிலப். 3:13 அடியார்க். மேற்.)

## முளைக்கொட்டு:
*மகளிர் முளைப்பாலிகை (முளைப்பாரி) யைச் சுற்றி ஆடும் கும்மிக்கூத்து.*
← *செ. ப. அ. 3291*

## முளைக்குடம்: = முளைப்பாலிகை, முளைப் பாரி, முளைப்பாலி, திருப்பாலி.
முளைக்குடம் தூபம் நல் தீபம் வைம்மின்
(திருவாசக. திருப்பொற்சுண். 1)
... விரிந்த பாலிகை முளைக்குட நிரையினர் (சிலப். 1: 58 – 59)
... முளைப்பாலிகையினராய்... (மேலது அடியார்க்.)
*(முளைப் பாலி > முளைப்பாரி (திரி சொல்)*

## முளைப்பாரி, முளைப்பாலி, முளைப் பாலிகை: → திருப்பாலி, முளைக்குடம்

## முற்கட்டு:
*பாட்டின் தொடக்கத்திலுள்ள எடுப்பு*
(the opening section of a song)
முற்கட்டும் பாகமும் சீர்மோனைகளும் (விறலிவிடு. 493)

## முற்றகம்: → முத்தகம்

## முற்றம்: → ஆடுகளம்

## முற்று எதுகை:
*அளவடியின் எல்லாச் சீர்க்கண்ணும் எதுகை வரத் தொடுப்பது.*
← *யாப் வி. 48*

## முற்றுத்தொடை:
*அளவடி நான்கு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது.*
← *இலக். விள.723 உரை*

## முற்று முரண்:
*அளவடியின் சீர்முழுதும் முரண் வரத்தொடுப்பது.*
← *யாப். வி. 48*

## முற்று முடுகுவெண்பா:
நான்கடியும் முடுகுச்சந்தமாக வரும் வெண்பா (சங். அக)
← *செ. ப. அ. 3295*
எடு:– மேகநிற மான்மருக வீறுதணி கேசவிது
வாகடின மேவுமிவ நாவியருள் – வாகுவளை
நத்தத்தத் திற்பற்றி நச்சுப்பைக் குட்டத்து
நிர்த்தத்திற் கிச்சித்த நீர் (நே. வெ. இ. பக். 71)

## முற்றுமோனை:
*அளவடியின் எல்லாச் சீர்க்கண்ணும் மோனைவரத் தொடுப்பது.*
← *யாப். வி. 48*

## முறுக்காணி:
*யாழ் முதலியவற்றின் நரம்பை மெலிவிக்கும் வலிவிக்கும் மாடகத்திலுள்ள ஆணி.*

## முறை:
*வரிசை, நிரல்*
குரல் குரலாக வரு முறைப் பாலை (சிலப். 28: 33)
*பன்னிரு சைவப்பனுவல்களை நிரலாய நிறுத்தியுள்ள தால் பன்னிரு திருமுறை.*

## முறைத்தானம் சோதித்தல்:
*குழலின் துளைகளை ஊதி ஒலி அளவில் குறை யாமலும், கூடாமலும் ஒலித்தலை ஆராய்ந்து பார்த்து அறிந்து கொள்ளும் முறை.*
முத்திரையே முதலனைத்தும் முறைத்தானம் சோதித்து
(பெரிய. பு. ஆனாய. 24)
← *த. க. க 292/*III

## முறை மாறியசாய்ப்பு: → மாறிய சாய்ப்பு

## முன் எடுப்பு:
= அனாகத எடுப்பு, அனாகத கிரகம், முந்திய எடுப்பு
*பாடலுக்கு முன்பு தாளம் தொடங்குதல், பாடல்களில் எழுத்தளவு கூடும் நிலையில் ¼, ½, ¾, 1, 1¼, 1½ இடம் தள்ளி (தாளத்திற்குப் பிந்தி) பாடல் பாடுவது.*
இயம் வெளிப்படுத்தபின் இசை வெளிப்படீஇய. (பெருங். 1: 37: 118)
*(கிரகம் - எடுப்பு)*

## முன் தித்தித் தெய் அடைவு:
*அரை மண்டியிலிருந்து வலதுகாலை முன் பக்கம் வலப்பக்கத்திற்கும் இடைப்பட்ட பகுதியில் நாட்டி, பின் இடது காலை அதன் இடத்திலேயே தட்டி, பின் வலது காலை பழைய அரை மண்டி நிலையிலேயே தட்டுவது.*

## முன் தேர்க்குறவை:

*போரில் வெற்றியடைந்த மன்னன் படைத் தலைவர்களுடன் தேர்த்தட்டின் மீது நின்று ஆடும் ஆடல். இது வாகைத்திணையின் பாற்படும்.*

**வென்ற கோமான் முன்தேர்க் குரவையும் (தொ. பு. 76: 5)**
**முன்தேர்க் குரவை முதல்வனை வாழ்த்தி (சிலப். 26: 240)**

## முன்முடுகு வெண்பா:

*முன்னிரண்டி அடிகள் முடுகிய சந்தம்கொண்டு வரும் வெண்பா.*

## முன்னதம்:

*நாட்டியத்தில் ஆட்காட்டி விரலை மற்றை விரல்களினின்றும் பிரித்துச் செய்யும் கைவகை. (முத்திரை)*

*← செ. ப. அ. 3304*

## முன்னர்ப்பாகம்:

1. = குரலின் பாகம்

*பூர்வாங்கம்*

*ஓர் இயக்கில் குரல் முதல் நான்கு சுரங்கள்*
(lower tetrachord of the octave)
*சரிகம - முன்னர்ப்பாகம் (tetra - நான்கு)*

2. *எடுப்பு (பல்லவி), தொடுப்பு (அனுபல்லவி), முக்தாயிசுரம் ஆகிய மூன்றும் சேர்ந்த பகுதி*

**"தாரபாகமும் குரலின் பாகமும்**
**நேர்நடு வன்கிளை கொள்ளநிற்ப**
**முன்னர்ப்பாகமும் பின்னர்ப்பாகமும்...**
**(சிலப். 3: 72–8 அடியார்க் மேற்.)**

**முன்னர்ப்பாகம் – ஸ்தாயியில் பூர்வாங்கம்**
**(சிலப். இசைநுணுக். பக். 38)**

## முன்னிலைப்பரவல்:

*கடவுளை முன்னிலைப்படுத்தி பராவுதல் (வாழ்த்துதல்). சிலம்பில் ஆய்ச்சியர் குரவையுள் 'வடவரையை மத்தாக்கி' முதலிய மூன்று (32, 33, 34) பாடல்களும் வேட்டுவவரி 'ஆனைத்தோல் போர்த்து' முதலிய மூன்று (8, 9, 10) பாடல்களும் முன்னிலைப் பரவல் .*

# மூ

## மூங்கில் குழாய்:
*புல்லாங்குழல்* (flute of bamboo)

## மூட்டு:
*வளையம், தோல், சாட்டைவார் மூன்றும் சேர்ந்த மிருதங்கத்தின் பகுதி.*
← *செ. ப. அ. பிற். பக். 396*

## மூடாம்பரக்கண்:
அவிநயக்கண் வகையுள் ஒன்று. (பரத. பாவ. 94)
*அரைக்கண் பார்வையான அவிநயக்கண் வகை* (seeing with half - closed eyes; squinting eyes)
← *செ. ப. அ. 3319*

## மூதானந்தம்:
*மூதானந்தக்காஞ்சி. கணவன் மடிந்ததும் உடன் இறந்த மனைவிக்கான இரங்கற்பாடல்.*
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதானந்தமும் (தொ. புறத். 24)

## மூப்பிமார்: → பதியிலார்

## மூர்ச்சனை:
1. உள்ளோசை (கமகம்) பத்தனுள் ஒன்று (பரத. இராக. 24)
*பண்ணில் அளவான ஏற்ற இறக்கம் வருமாறு பாடுவது.* (modulation)
2. *மூர்ச்சனைக்கார மேளம்.*
*'பண்பெயர்ப்பு' மூலம் பிற பண்களை உருவாக்கும் பண்.* (a scale which generates new scales by modal shift of tonic note)
எடு:– செம்பாலை (அரிகாம்போதி)யின் ஏனைய சுரங்களால் படுமலைப்பாலை (நடபைரவி), செவ்வழி (இருமத்திமத்தோடி) முதலிய பண் உருவாகும். எனவே செம்பாலை ஒரு மூர்ச்சனைக்கார மேளம்.

## மூரிநிமிர்த்தல்:
*கை அல்லது விரல்களின் வளைவை நிமிர்த்தி நேராக்கிக் காட்டும் அவிநயம்.*
மடியின் அவிநயம் வகுக்குங்காலை... மூரி நிமிர்த்தலும்...
(சிலப். 3: 13 அடியார்க்.மேற்.)
அச்சாலினி... மூரி நிமிர்த்த கைகளை ஒற்றையும் இரட்டையு மாக்கி அவிநயத் தோடேகூட்டித் தாளத்திற்கு ஒப்ப அடிபெயர்த் துக் கானவர் வியப்ப ஆடியென்க... (சிலப். 12: 8–11 அடியார்க்.)
... மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு (பாசுர. திருப்பாவை. 23)
பொய்த்ததோர் மூரியால் நிமிர்ந்து (கம்ப. உண்டாட். 35)
*முரி - வளைவு, நீங்குதல்*
*முரி > மூரி - சோம்பல் நீக்குதல்*
ஒப்பு:– யாழ்முரி > யாழ் மூரி

## மூவகை ஆடல்: *சுத்தம், மிசுரம், கேவலம்*
*சுத்தம் (சொக்கம்,* Pure dance*) என்பது தாளத்திற்கு அவிநயித்து ஆடுவது. இதுவே கைகாட்டு முறை. இதை உருத்திர கணிகையர் (மாணிக்கம்) ஆடுவர். மிசுரம் என்பது பழங்கதை கலந்து ஆடுவது. இதை உருத்திர கன்னிகையர் ஆடுவர். கேவலம் என்பது உலக நடப்புகளைக் கலந்து ஆடுவது. இதை உருத்திர தாசியர் ஆடுவர்.*

## மூவகை இயக்கம்: =*மூவகைத்தானம்; மூவகை நிலையம்*
*வலிவு, மெலிவு, சமம் என்பது நம் இசை இயங்கும் மூவகை இயக்கமாகும்.*
*வலிவு - மேல், உச்சம், தாரம், எச்சு* (upper octave)
*மெலிவு - கீழ்* (lower octave)
*சமம் - மந்தம்* (middle octave)
மந்தரம், மத்திமை, தாரமிவை மூன்றில் (கல்லா. 21: 55)
மூவகை இயக்கமும் முறையுளிக்கழிப்பி (சிலப். 8: 42)
மூவகை இயக்கமாவன வலிவு, மெலிவு, சமம் (மேலது அரும்.)
வலிவு, மெலிவு, சமனுமெல்லாம் ... (சிலப். 3: 93)
இப்படியாய் வலிவும், மெலிவும், சமனுமெனப்படா நின்ற
தான நிலையினை (மேலது அடியார்க்.)
வலிவும், மெலிவும் சமனும் ஆகும்... (திவா. 2312)
வரன் முறைவந்த மூவகைத்தானத்து (சிலப். 13: 110)
ஆடகத்தியன்ற .. மூவகை நிலையத்து ஏழு சுர நிறீய
(பண்டாரமும்மணிக்கோவை – குமரகுருபரர்)

## மூவகைத்தானம், மூவகை நிலையம்:
→ மூவகை இயக்கம்.

## மூவடி முக்கால் வெண்பா:
*சிந்தியல் வெண்பா. மன்னரையும், நாட்டையும் புகழ்ந்து பாடுவதற்கு உரிய வெண்பா வகை.*
... சிறு தேவயாணி வருணப்பூதரையும் மூவடிமுக்கால் வெண்பாவால், துதிக்கின்றுழி...
... பூதரை மூவடிமுக்கால் வெண்பா மொழிந்து...
(மதிவாணனார். சிலப். 6: 35 அடியார்க்.மேற்.)
எடு:– சிலம்பு. முதல்காதை. திங்களைப் போற்றுதும் முதலிய பாடல்கள்

## மூவலகு: → புலிதம்

## மூவிசை:
1. வலிவு, மெலிவு, சமன் என்ற மூன்றான சுரவகைகள்
2. குரல், குழல், நரம்பு இசைகள்
"நரம்பொடு குழலே மிடற்றினது இசையே
இரங்கிய மூவிசை யாகு மென்ப" (பஞ்சமரபு. 1 உரை மேற்.)

## மூவிலை வேல்கை: → உன்னக்கை

## மூவேழ்திறம்: = மூவேழ் துறை
ஒவ்வொரு பாலை (மேளகர்த்தா) யிலும் தோன்றும் (3 x 7) 21 திறப்பண்கள். 6 பண்ணியலும் (சாடவம்), 15 திறங்களும் (ஔடவம்) மூவேழ்திறமாகும்
இசை ஏழுடன் பகுத்து மூவேழ் பெய்த... தொண்டு மீண்ட பன்னீராயிரம் கொண்டனர் இயற்றல் கொளை வல்லோர் கடனே. (சிலப். 3: 45 அடியார்க்.)
நாற்பெரும் பண்ணும் எழுவகைப்பாலையும்
மூவேழ் திறத்தொடு முற்றக்காட்டி (பெருங். 1: 37: 115–16)
ஈரிரு பண்ணும் எழு மூன்று திறனும் (பிங்க. 1380)
மூவேழுதிறம் (சிலப். 5: 35 – 7 அடியார்க்.)
மூவேழ் துறையும் முறையுழிக்கழிப்பி (புறம். 152: 20)
மூவேழ் துறையும் முட்டு இன்று போகிய (புறம். 166: 8)
... இருபத்தொரு மூர்ச்சனைகளையும் ஒரே நரம்பிலே வாசித்துக் காட்டுவதற்கு (The legacy of India. Ox.Press. P. 329) (யாழ் நூல் பக். 37 மேற்.)

## மூவேழ்துறை: → மூவேழ்திறம்

## மூன்றங்கம்:
சாக்கைக் கூத்தின் மூன்று அங்கம்
அடலையூர்ச் சாக்கைக்கு மூன்றங்கம்மாட நிவந்தம் செய்த பொன்கழஞ்சரை (தெ. இ. க. 19 171. த. க. சொ. 515)
அங்கம் - நாடகப் பெரும்பிரிவு. (Act)

## மூன்றடிக்கண்ணி: → கண்ணி

## மூன்றளந்து ஒன்று கொட்டி:
மூன்று வீச்சும் ஒரு தட்டும் ஆகிய மட்டத்தாளம். தற்காலம் மூன்று வீச்சு என்பது மூன்று விரல் எண்ணிக்கை முறையில் உள்ளது.
மூன்றளந்து ஒன்று கொட்டி (சிலப். 3: 151)

## மூன்றன் அலகு:
தாளக்குறியீடு; திரிசுர அலகு (திசுரலகு)
ஒரு தட்டும் இரண்டு எண்ணிக்கையும்
இதன் குறியீடு : /3
← த. க. க. V/I

## மூன்றன் சொல்: → மூன்றன் அலகுச்சொல்

## மூன்றன்அலகுச்சொல்: = மூன்றன் சொல்
இசைச்சொல் நடை. மூன்று குறில் அல்லது ஒரு குறிலும் ஒரு நெடிலுமாக வரும் சொல்நடை
எடு:–
தகிட, ததீம், தாங்கு, தீன்தின், தாதின், கிணதொம், தோம்தொம்
தகிட, கிணதொம், – மூன்று குறில்
ததீம், தாதின், தோம்தொம் –ஒருகுறிலும் ஒரு நெடிலுமாக
← மத். பக். xxxviii - ix

## மூன்றன் தாளம்:
= மூன்றன் நடை, மும்மை நடை
திரிசுரம் (திசுரம்)
கானக் | கோழி | கதிர் | குத்த - ¾ x 4 = 3
மனைக் | கோழி | தினைக் | கவர = 3
3 + 3 - 6 (ஆறன் மட்டம்) 6
(பொருந. 222–3)
எடு:– 1. பொன்னார் மேனி யனே – சுந்தரர்
2. மாதர் பிறைக் கண்ணி – அப்பர்
3. மடையில் வாளை – சம்பந்தர்
4. தமரு மமரு மனையு மினிய
தனமு மரசம் அயலாக
5. நீல விதா னத்து... (சிலப். 1: 49)

## மூன்றன் நடை:
= மூன்றன் தாளம் (திஸ்ரம்), திசிரம், மும்மை நடை
வெகுளிச் சுவைக்குரிய தாளம்
ஒரு நடை என்றது ஈண்டு (இது வெகுளிக் கூத்தாகலின் அதற்கியன்ற) திசிர நடையை என்க. (கல்லா. 99: 8 உரை)
(வெகுளிக்கூத்து - இங்கு கொடு கொட்டி)
→ மூன்றன் தாளம்

## மூன்றன் நடை ஒற்றைத்தாளம்:
திசுர சாதி ஏகதாளம் (திஸ்ரஏகம்)
தகிட தகிட தகிட ததீம்
¾ ¾ ¾ ¾ – 3 எண்ணிக்கை
எண்ணிக்கை – எழுத்து எண்ணிக்கை – (அட்சர எண்ணிக்கை)
(1 குறில் – ¼)
← த. க. க. 272/II

## மூன்று எழுத்துக்காலம்:
தாளத்தின் மூன்று எழுத்துக் (அட்சரக்காலம்) காலம் ¾ எண்ணிக்கை
, , , அல்லது , ;
சா, அல்லது ச , ,

## மூன்று சுரப்பண்:
மூன்று சுரங்கள் பயின்று வரும் இசையை பண் என்று நம் முன்னோர் பாகுபடுத்தவில்லை. நாட்டார் மரபில் ஒப்பாரி முதலியன மூன்று சுரங்கள் (ச ப ரி²) பயின்று வரும் பாடல் அமைப்பிலுள்ளன 4, 5, 6, 7 சுரப்பண்களின் தோற்றுவாயாக நாட்டார் பாடல்கள் அமைந்துள்ளன
"மூன்று ஓசைகளைப் பயன்படுத்திப் பாடல்களைப் பாடுவதை மேற்குத் தொடர்ச்சி மலைப் பளியர்களிடமும், தோடர்கள், சந்தாலியர்கள், கோண்டாக்கள் –இவர்களிடமும் சென்று கேட்டு மகிழ்ந்தேன்..."
(ப. இ. இ. பக். 94)

# மெ

## மெட்டு:
இசை (tune). பாட்டின் பண் போக்கு; இசை வடிவம்.
மெட்டுப் போடுதல் - ஒரு பாட்டை பண்ணில் அமைத்தல், இசையமைத்தல்
→ மெட்டு அமைத்தல்

## மெட்டு அடைவு:
நாட்டியத்தில் அரைமண்டிலிருந்து காலைத் தூக்கி விரல்களின் அடிப்புறம் அதாவது மெட்டி அணிகின்ற பகுதி தரையை நன்றாகப் பதியத் தட்டுவது மெட்டடைவு.

## மெட்டு அமைத்தல்:
1. இசை அமைத்தல் பண், தாளம், எடுப்பு, முடிப்பு முதலியன அமைத்து ஒரு பாடலை இசைப் படுத்துதல்.

வாழிகுலசேகரன் வகுத்த இசையின் (கலிங். 272)

பரிபாடலுக்குப் 'பண்வகுத்தோர்' குறிப்பிடப் படுகின்றனர்.

2. இசையில் போலச் செய்தல்

ஏற்கனவே வழங்கும் புகழ்பெற்ற பாடலின் இசை அமைப்பை (மெட்டு) மற்றொரு பாடலுக்கு அப்படியே அமைத்தல்

எ‌டு:– 'தொன்று நிகழ்ந்தத னைத்தும் உணர்ந்திடு' என்ற பாடலுக்கு ஆறுமுக வடிவேலனே என்ற மெட்டிலும், 'தாயின் மணிக்கொடிபாரீர்' என்ற பாடலுக்குத் தாயுமானவரின் ஆனந்தக்களிப்பு மெட்டிலும் பாரதியார் இசைப்படுத்தியுள்ளார்.

## மெட்டுக்குப் பாட்டு:
இசைக்குப் பாடலை உருப்படுத்துதல். அதாவது இசை உருவை அமைத்து அதற்கான பாடலைச் சொற்படுத்துதல். (இசை வடிவை முன்பாக அமைத்துக் கொண்டு பாடலைப் பிறகு இயற்றல்)

.. உருவுக்குச் சொற்படுத்தியும்... (சிலப். 3: 150 அடியார்க்.)

↑இசை உருவுக்குச் சொற்படுத்தல் என்பதை 'மெட்டுக்குப் பாட்டியற்றல்' எனலாம்.

← த. க. க.133/II,→ பாட்டுக்கு மெட்டு

## மெட்டுப் போடுதல்: → இசை அமைத்தல்

## மெய்க்கூத்து: = மெய்த்தொழிற்கூத்து
தேசி, வடுகு, சிங்களம் என மெய்க்கூத்து மூவகைப்படும். அகச்சுவை பற்றி வருவதால் இது அக மார்க்கத்தைச் சேர்ந்தது. சாந்திக் கூத்து நான்கனுள் ஒன்று மெய்க்கூத்து மெய்க்காட்டு அடைவுகளுடன் கூடியது.

← சிலப் 3: 12 அடியார்க்.

## மெய்த் தொழிற் கூத்து: →மெய்க்கூத்து

## மெய் நிறுத்தல்:
ஒத்துக்கு அமைத்தல் (சுருதி கூட்டல்)

திவவு மெய் நிறுத்திச் செவ்வழி பண்ணி (மதுரைக். 604)

## மெய்ந்நிலை: = மெய்ந்நிலைக்கை
ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று.

மெய்ந்நிலையாவது - சிறு விரலும்... பெரு விரல் சேரும் பெற்றித்தென்ப...

← சிலப். 3: 18 அடியார்க். மேற்.

## மெய்ந்நிலைக்கை: → மெய்ந்நிலை

## மெய்ப்பாடு: = சுவை, இரதம், இரசம் (ரஸம்), உடல்மொழி, விறல்
உள்ளத்து உணர்வுகளை உடல் மொழியான சைகைகளால் (gesture) வெளிப்படுத்துவது.

நால் இரண்டு ஆகும் பாலுமா ருண்டே (தொ.மெய். 2)

நகையே, அழுகை, .. எட்டேமெய்ப்பாடு என்ப... (தொ.மெய். 3)

பெருமையும் சிறுமையும் மெய்ப்பாடு எட்டன். (தொ.உவம. 19)

நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என மெய்ப்பாடு எண் வகையாகும். நவரஸங்கள் எனப்படும் ஒன்பதில் சாந்த ரஸத்தைத் தவிர்த்து ரஸங்கள் எட்டு என்பது பிரம்மதேவரின் கருத்து என்று பரதர் தன் நூலில் கூறுகிறார். (பரத. நாட். சாஸ்;. பக். XIII)

தொல்காப்பியரும் எண்வகை மெய்ப்பாடே கூறியுள்ளார். அடியார்க்கு நல்லார் 'நடுவுநிலை அவிநயம்' (சாந்தரஸம்) என்ற ஒன்றைச் சேர்த்து சுவை ஒன்பது வகைப்படும் என்பார்

← சிலப்.3: 13உரை

அவிநவகுப்தர் (நாட்டிய சாஸ்திர உரையாளி) சாந்தரஸத்தைச் சேர்த்துக் கூறியுள்ளார்.

← த. க. க. 186/III

## மெய்ம்மட்டி:
*நட்டுவத்திற்கு மத்தளம் வாசிப்பவன்.*

*கரணனுக்குப் பங்கு இரண்டும் மெய்ம்மட்டிக்குப் பங்கு இரண்டும்* (CHEN, XXI, P.425-28; *த. க.சொ. 516*)

## மெய்மட்டு: *மத்தளம் (மிருதங்கம்).*
*நாட்டியத்திற்கு வாசிக்கப்படும் மத்தளக் (மிருதங்கம்) கருவி*

*ஸ்ரீ பராந்தக தேவேஸ்வரத்து நட்டவக்காணியும் மெய் மட்டுகாணியும்....*

*.......நட்டவமும், மெய்மட்டும்,மோர்வியமும் காணியா-*

*(திருக்கண்டியூர் வீரட்டத்து மங்களாம் பிகைக் கோவில் கல்வெட்டு: தமிழகக்கோவில் கலைமரபு பக் 56 - 57)*

## மெய்வசை:
*ஏசல் பாட்டு, வசைப்பாட்டு*

← *இ. விள. 753*

## மெய்வாழ்த்து:
*வாழ்த்துப்பா*

← *இ. விள. 753*

## மெல் உழை:
*இசையின் நாலாம் சுரமான உழை சுரத்தின் மென்வகை*

*சுத்த மத்திமம் ம¹ - என்ற சுரம்.*

*ச ரி¹ ரி² க¹ க² ம¹*

↑

## மெல்லிசை:
*பண்வடிவில் மென்மையான இசை* (light music). *பண் இசையில் 'பண்' என்பது பாடலை முந்தி நிற்கும். ஆனால் பண்ணிற்கு முதன்மை இடம் அளிக்காது பண்ணின் ஓரளவு சாயலுடன் எளிமைப்படுத்தி உருவாக்கப்படும் இசை மெல்லிசை நாட்டார் பாடல்கள், இசைத்தொழுகை (பசனை)ப் பாடல்கள் முதலியனவும் மெல்லிசை வடிவிலுள்ளவையே.*

## மெல்லிசை வண்ணம்:
*மெல்லின எழுத்துக்கள்* (nasals) *மிகுதியும் பயின்று வரும் சந்தப்பாடல்.*

மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே... (தொல். செ. 215)

எடு:– 1. கங்கையும் நிறைந்தசிவ கங்கையும் படித்துறையும்
மங்கை சிவ காமியம்மை வாசல் மணி மண்டபமும்
காணாமலே வீணில் (முத்துத்தாண்டவர்)

2. பொன்னின் அன்ன புன்னைநுண் தாது
மணியின் அன்ன நெய்தலங்கழனி (யாப்.வி. இளம். மேற்.)

## மெலித்தல்:
1. *வல்லின எழுத்தை இனம் ஒத்த மெல்லின எழுத்தாக இசை ஓசைக்காக மாற்றுதல்.*

மெலிக்கும் வழி மெலித்தலும் (தொ. சொல். 403)

*'குழைத்த' என்பது 'குழைந்த' என மெலிந்து நின்றது புறம் 21 உரை.*

*மெலித்தல் விகாரம் - நன். 155*

2. *சுரத்தைத் தாழ்த்தல்* (to lower the pitch)

← *செ ப. அ. 3342,*→ மெலிதல்

## மெலிதல்:
*சுரத்தில்* (Pitch ) *தாழ்தல்*

யாழ்மேல் பாலை இடமுறை மெலிய (சிலப். 3:92)

## மெலிவு:
= கீழ்த்தானம், மெலிவுத்தானம், கீழ்இயக்கு (கீழ்ஸ்தாயி, மந்தர ஸ்தாயி, மந்தர மண்டிலம் - lower octave) படுத்தலோசை, மெலிவு இயக்கு, மெலிவு மண்டிலம், கீழ் மண்டிலம்.

வலிவும், மெலிவும், சமனுமெல்லாம் (சிலப். 3: 93)

வலிவும், மெலிவும், சமனும் எனப்படா நின்ற தான நிலை (மேலது அரும்.)

## மெலிவு மண்டிலம்: → மெலிவு

## மென்கைக்கிளை:
*சாதாரண காந்தாரம்* (E flat, minor third, minor chord )

*க¹ - என்ற சுரம்.*

| ச | ரி¹ | ரி² | க¹ | க² | ம¹ | ம² |
|---|---|---|---|---|---|---|
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| | | | ↑ | | | |

*நின்ற சுரத்திற்கு அதை விடுத்து மூன்றாம் சுரம் பகைச்சுரம். எனவே குரல் (ச) சுரமும் மென்கைக்கிளை (க¹)ச் சுரமும் இசையில் சேராத பகைச் சுரம் (ஓரளவு சேரும்; முற்றிலும் சேராதது ஆறாவது சுரம். எனவே ஆறை முதலில் கூறி மூன்றை பின் கூறினார்.)*

பகை –ஆறும் மூன்றும்;

"நின்ற நரம்பிற்கு ஆறும் மூன்றும் சென்று பெற நிற்பது கூடமாகும்." – கூடமெனினும் பகை எனினும் ஒக்கும்

(சிலப். 8. 33–4 அடியார்க்.)

## மென்தாரம்:
*இசையின் ஏழாம் சுரமான தார சுரத்தின் மென்வகை. கைசிகி நிசாதம். நி¹ - என்ற சுரம்.*

*ச ரி¹, ரி²... த¹ த² நி¹*

↑

## மென்துத்தம்:

இசையின் இரண்டாம் சுரமான துத்தசுரத்தின் மென்வகை

சுத்தரிசபம் - $ரி^1$ - என்ற சுரம்

ச $ரி^1$ $ரி^2$ $க^1$ $க^2$ $ம^1$ $ம^2$ . . .

↑

## மென்பா: ஆசிரியப்பா (யா.வி.)

## மென் பால்: → சமப்பால்

## மென்விளரி:

இசையின் ஆறாம் சுரமான விளரி சுரத்தின் மென்வகை.

சுத்த தைவதம். $த^1$ - என்ற சுரம்.

ச $ரி^1$ $ரி^2$ $க^1$ $க^2$ ம ப $த^1$

↑

## மென்னடை:

இசையின் மெதுவான வேகம்; மந்தகதி (processional music in first tempo, slow tempo)

விதிகூட்டிய இயமென்னடை போல (பரிபா. 10:25)

## மென்னிலை:

நடனத்திற்குரிய நளிநயக் கைவகை

# மே

## மேகக்குறிஞ்சி: → மேகராகக் குறிஞ்சி

## மேகரஞ்சி: → மேகராகக் குறிஞ்சி

## மேகராகக் குறிஞ்சி:

= மேகரஞ்சி, மேகக் குறிஞ்சி

*குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று.*

நட்டபாடை... மேகராகக் குறிஞ்சி... குறிஞ்சி யாழ்த்திறமாகக் கூறுவர்... (பிங்க. 1382)

*ஓதுவார் முறையில் இப்பண் நீலாம்பரி இராகமாகப் பாடப்படுகின்றது.*

← *பரத. இராக. பக். 103*

## மேச பௌளி:

பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 104)

## மேல் குரல்: → இரட்டித்த குரல்

## மேல் மண்டிலக் குரல்: →இரட்டித்த குரல்

## மேல்மண்டிலம்:

= வலிவு மண்டிலம், தார மண்டிலம், மேல்தானம், எச்சுஸ்தாயி, தாரஸ்தாயி (upper octave)

## மேல்மண்டில வரிசை:

= உயர்குரல் வரிசை, வலிவு மண்டில வரிசை, மேல்தான வரிசை, எச்சுஸ்தாயி வரிசை, தாரஸ்தாயி வரிசை

*இசைப்பயிற்சியின் போது மேல்தான சுர வரிசையில் மேல் இளி (ப்) வரை உள்ள பயிற்சிக்கு மேல்மண்டில வரிசை என்று பெயர்.*

← *இ. து த. சொ. பக். 10*

## மேல்வைப்பு:

சிலம்பு ஆய்ச்சியர் குரவை 35, 36, 37 ஆம் பாடல்கள் படர்க்கை பரவலாய் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி நான்கடி இற்றபின் ஓரடிமிக்கு வந்த கொச்சக ஒருபோகு (தொ. செ. 149 நச். மேற்.)

*அப்பர் தேவாரம் திருவையாறுப் பதிகத்தில் "கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்' என்பதும், திரு அதிகை வீரட்டானப் பதிகத்தில் 'அஞ்சுவது யாதொன்று மில்லை அஞ்ச வருவதும் இல்லை' என்பதும் ஓரடி மேல் வைப்புகளே.*

↑ இந்த ஓரடி மேல் வைப்பே பின்னாளில் 'எடுப்பு' (பல்லவி) என்ற அமைப்புக்கு அடிகோலியிருக்கலாம்.

→ ஈரடி மேல் வைப்பு, நாலடி மேல்வைப்பு

## மேலது உழை கீழது கைக்கிளை:

*இன்றைய தம்புரா போல் யாழானது பண்டைக் காலத்தில், நட்டுக்குத்தலாக (erect position) வைத்து வாசிக்கப் பட்டது. எனவே மேலே மெலிவுச் சுரத்தானங்களும் அடியில் வலிவுச்சுரத்தானங்களும் அமைந்து இருக்கும்.*

மேலது உழை கீழது கைக்கிளை (சிலப். 3: 80)

உழை முதல் கைக்கிளை இறுதியாக மெலிவு நான்கும், சமம் ஏழும், வலிவு மூன்றுமாய்ச் செம்பாலை ஆயதென்க (மேலது அரும்.)

| | | |
|---|---|---|
| *மெலிவு* | *- ம ப த நி* | *4* |
| *சமம் ஏழு* | *- சரிகமபதநி* | *7* |
| *வலிவு மூன்று* | *- ச் ரி க்* | *3* |

## மேலொருக்கல்:

இசைக் குற்ற வகைகளுள் ஒன்று (திருவாலவா. 57: 26)

## மேவலர்:

*கந்தருவர்*

மென்மொழி மேவலர் இன் நரம்பு உளர... (முருகு. 142)

## மேழம்:

*மேழம் - செம்மறியாட்டுக்கடா;*

*முழா- மிழா - பருத்த ஆண்மான்.*

↑ ஆட்டுத்தோலாலும், மான்தோலாலும் தோல் இசைக்கருவிகள் செய்யப்பட்டதால் முழா,. முழவு, மிழவு என்ற பெயர்கள் ஏற்பட்டிருக்கலாம்.

பவழம் – பவளம் ; தாழம் – தாளம் ; மேழம் – மேளம்

என மேளம் என்ற சொல் உருவாகியிருக்கலாம். மேளம் என்றால் கூட்டம். (இசைக்கருவிகளின் கூட்டம்) என்ற பொருளும் உண்டு.

இது மேலும் ஆய்வுக்கு உரியது.

(மேழம்–மேஷம்–மேடம்; பாழை–பாஷை–பாடை)

ஏழகத்தார் – மேழகம் (சிலப். 10: 5 அரும்)

வெம்பரி மேழக மேற்றி (சீவக. 521)

## மேளக்கச்சேரி:

*நாகசுர அரங்கிசை. நாகசுரம், ஒத்து, தவில், கைம்மணி ஆகிய இசைக்கருவிகளின் கூட்டமாக (குழு) அமைந்து வாசித்தல்.*

*(மேளம் - கூட்டம், தொகுதி, குழு)*

*← செ. ப. அ. 3361*

## மேளப்பிராப்தி: → மேளக்கட்டு

## மேளக்கட்டு:

1. *மேளப்பிராப்தி; இசைச்சூழல்; நாட்டியத்திற்கு முன்பு திரைக்குப்பின்புறமாக நட்டுவரால் சதிகள் பாடப்பட்டு ஏற்படுத்தப்படும் இசைச்சூழல்.*
2. *ஒலிநன்கு கேட்கும்படி இசை அமைவு பெறுந்தன்மை.* (Acoustics)

## மேளகர்த்தா: → தாய்ப் பண், மேளம்

## மேளகாரர்: =இசை வேளாளர்

*நாகசுரக்குழுவினர்; நாகசுரம், ஒத்து, தவில், கைம்மணி ஆகிய இசைக்கருவிகள் குழுவாக அமைந்து இசைப்பதால் மேளகாரர் என்ற பெயர்; இவர்கள் இசைவேளாளர் என்றும் அழைக்கப் படுகின்றனர்.*

கூத்தராயின் பாரசைவரும் வேளாளரும் (தொல். புறத். 91 நச்சர்)

*வேளாளர் > இசை வேளாளர்*

*(மேளம் - கூட்டம்; குழு, தொகுதி)*

↑ பண்டைய பாணர் மரபின் நீட்சியே மேளகாரர் என்றாகி இருக்கலாம்.

## மேளப்பிராப்தி: → மேளக்கட்டு

## மேளம்:

1. *கூட்டம், தொகுதி, குழு*

எடு:– பெரிய மேளம், சின்ன மேளம்

2. *கட்டப்பட்டது.* (Composed of)
3. *தாய்ப்பண் (சுரங்களால் கட்டப்பட்டது* composed of notes)

சான்று:–மேளம் (மேளகர்த்தா, hepatonic scale)

4. *தவில்*
5. *நாகசுரக்குழு. நாகசுரம், ஒத்து, தவில், கைம்மணி கொண்ட குழு.*

## மேளம் கட்டுதல்: வீணை போன்ற நரம்புக் கருவிகளில்...மெட்டுக்கள் (frets)அமைக்கும் செய லுக்கு 'மேளம் கட்டுதல்' என்னும் சொல் வழங்கப் படுகிறது (இ. இ. பக். 149)

## மேற்செம்பாலை:

= தாரம், தாரப்பண், தழிஞ்சி, குரல் புணர் நல்யாழ், (கல்யாணி)

*ஏழ்பெரும் பாலைகளுள் ஒன்று. தலைமைப் பண்ணான செம்பாலை (அரிகாம்போதி) யின் தாரம் (நி$^1$) குரலாக பண்ணுப் பெயர்க்கக் கிடைக்கும் ஏழ்பெரும் பாலையின் ஏழாவதான இறுதிப்பண். எனவே தாரப்பண் என்ற பெயர்.*

தாரம் குரலாயது மேற்செம்பாலை (சிலப். 17:(13) அடியார்க்.)

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| மேற்செம்பாலை | ரி$^2$ | | க$^2$ | | ம$^2$ | ப | | த$^2$ | | நி$^2$ | ச | |

*செம்பாலை (அரிகாம்போதி)* - ச ரி$^2$ க$^2$ ம$^1$ப த$^2$ நி$^1$

*மேற்செம்பாலை (கல்யாணி)* - ச ரி$^2$ க$^2$ ம$^2$ப த$^2$ நி$^2$

103 பண்களில் 101 ஆம் பண் – தாரப்பண் திறம்.

தலையினதாரம் செய்யும் தாரம் (சிலப். 8: 25 அரும். மேற்.)

அவ்வொலி மேற்செம்பாலை என்னும் பண்போல் தோன்றும் – பழைய உரை. (ச. இ. பொ. பக். 35/I)

இளிதேர் தீம்பாலை இசைக்கும் அத்தம் (அகம். 33: 3–7)

இளிதேர் – இளிமுறை; சப, பரி$^2$, ரி$^2$த$^2$, த$^2$க$^2$, க$^2$ம$^2$, ம$^2$நி$^2$

*சரி$^2$க$^2$ம$^2$பத$^2$நி$^2$ - மேற்செம்பாலை - கல்யாணி*

கூடுஇயத்து அன்ன குரல்புணர்புள்ளின் (மலைபடு.269)

குரல்புணர் நல்யாழ் முழவொடு ஒன்றி (மதுரைக். 605)

குரல்புணர் இன்னிசைத்தழிஞ்சி பாடி (பதிற். 57:9)

மதுரகீதம் பாடினள் மயங்கி (சிலப். 8:24)

தாரங்குரலான மேற்செம்பாலை என்னும் பண்ணைக் கண்டத்தால் பாடி... (மேலது அரும்.)

தாரம் குரலேன் மேற்செம்பாலை (பிங்க. 1409)

# மொ, மோ, மௌ

## மொகர் வைத்தல்:
*மத்தளம் முதலியவற்றில் தாளத் தீர்மானம் இடுதல்.*

## மொகரா: → அலாரிப்பு

## மொட்டுக்கை: = முகுளக்கை
*ஒற்றைக்கை வகையுள் ஒன்று.*

ஐந்து விரலும் தம்மில் தலை குவிந்து உயர்ந்து நிற்கும்.
(சிலப். 3: 18 அடியார்க்.)

## மொந்தை: = மோந்தை
*ஒருகண்பறை ; யானைக்கால் வடிவானது*

ஒருகட் பறையே மொந்தை என்ப. (பிங்க. 1515)
ஒருகட்பறை மொந்தை (திவா. 1234)
கரிக்காலன்ன மொந்தை... (கல்லா. 85:29)
முரலும் மொந்தை கின்னரம் முழங்கவே (தேவா. 5: 55: 9)
மோந்தை முழா குழல் தாளம் ஓர் வீணை... (தேவா. 349: 5)

## மொரக்கோ: → சிரட்டைச் சிலம்பு

## மோகனம்: → முல்லைப்பாணி

## மோகன நாட்டியம்:
மகளிர் கூத்துள் ஒன்று (யாழ். அக.)

## மோகினி ஆட்டம்:
*மலைநாட்டு ஆட்ட வகையுள் ஒன்று. பரத நாட்டியம் மற்றும் கதகளி ஆட்டங்களிலிருந்து தஞ்சை நால்வருள் ஒருவரான வடிவேலு நட்டுவனரால் உருவாக்கப்பட்ட ஆட்டவகை. வெண்ணிற ஆடை அணிந்து பெண்கள் மட்டுமே ஆடும் ஆட்டம். பரதநாட்டியத்தைப் போன்றே இசையும், இசைக்குழுவும் கொண்டது.*

## மோந்தை: → மொந்தை

## மோனை:
*பாடல் அணிகளுள் ஒன்று* (alliteration); *யாப்பில் அடிமுதலில் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது*

*முகம் - முகன் - முகனை - மோனை*
*எகனை மொகனை - நாட்டார் வழக்கு.*

மோனை எதுகை முரணே இவை என (தொல். செ. 87)

## மோர்சிங்: → முகர்சங்கு

## மோதிரப்பாட்டு:
*நாடகப் பாடல் வகையுள் ஒன்று.*

நாடகச் செய்யுளாகிய... மோதிரப் பாட்டும்...
(தொ. பொ. 492. பேரா.)

## மோர்வியம்: முகவீணை
*நட்ட வமும், மெய் மட்டும், மோர் வியமும்.*
*(திருக்கன்டியூர் வீரட்டத்து மங்களாம்பிகைக் கோவில் கல்வெட்டு. தமிழகக் கோவில் கலைமரபு பக். 56 - 97)*
*முகர் + இயம் > முகர் வியம் > மோர் வியம்*
*முகர் - முகம்; இயம் - இசைக்கருவி*

## மோரா:
*தனி ஆவர்த்தனத்தில் கடைசியில் முழக்கப்படுவது. பல்வேறு பகுப்பு அமைப்புக்கள் கொண்ட உருட்டுச் சொற்கட்டுகளால் ஆன நீண்ட முழக்குக் கோப்பு; மத்தளம், கடம், கஞ்சிரா இணைந்து வாசிக்கப் படுவது.*

← *த. க. க. 57*/III

## மௌசாளி:
பெரும்பண் பதினாறனுள் ஒன்று. (பிங்க. 1380)

## மௌடி: → மகுடி

# ய     யா

**யக்சகானம்: → யட்சகானம்**

**யட்சகானம்:**

= யக்ச கானம், இயக்கி கானம், பாட்டி பாடல், அச்சி கானம்

*கர்னாடக மாநிலம் பெங்களூருக்கு அருகில் ஆடப்படும் ஆடல் வகை. பழைய தெருக்கூத்து மற்றும் சதிரின் கலை நுணுக்கங்கள் நிறைந்தது.*

(*இசக்கி - இயக்கி - யக்கி - யட்சி*)

*இயக்கி (இசக்கி) சமண சமயப் பெண் தெய்வத்துள் ஒன்று.*

*திருவயிறை பாரிச்வ படாரரையு மியக்கி*

(*தெ. இ. க. 14 22. த. க. சொ. 66*)

*அச்சி - பாட்டி: அச்சி > அச்ச - யட்ச*

*அச்சிகானம் > யட்ச கானம் = பழம் (பாட்டி) பாடல்*

*சிரவண பெளிகுளம் (சரவணபெலகோவா) காவல் தேவதை - கூசுமாண்டியட்சி*

*குல்லி அஜ்ஜி - குல்லி அச்சி - குல்லிப்பாட்டி*

*தியாகராசரின் பிரகலாத பக்தி விசயம் மற்றும் நௌகா சரித்திரம் யட்சகான வகையைச் சேர்ந்தது*

**யதி:** → **கோலம்** (*கொட்டு முழக்குக் கோலம்*)

**யதி தமரு:** → **உடுக்கைக் கோலம்**

**யதிதாளம்:**

*யதிக்கணக்கின் படி அமைந்த தாளம்.*

←*செ. ப. அ. 3392*,→ யதி

**யமுனா:** பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 103)

**யமுனாகல்யாணி:** பண்களில் ஒன்று

**யவனர்:** *தோற்கருவியாளர்*

தோற்கருவியோர் யவனர் (நாம. தீப. 176)

**யாத்திரை:** கூத்து (யாழ். அக.)

**யாம பேரி:**

*இரவில் ஒவ்வொரு சாமத்தின் தொடக்கத்திலும் கொட்டும் பேரிகை. சிறப்பாக கடையாமத்தில் கொட்டும் முரசு*

யாம பேரி இசைத்தலால் (கம்ப. கைகேசி. 61)

*(யாமம்- சாமம்); யாமபேரி - கடையாமத்திற்குரிய முரசு*

← *செ. ப. அ 3401*

**யாமம் கொள்பவர்:**

*நாழிகைக் கணக்கர்*

நடுநாள் கோமகன் கோயில் குறுநீர்க்கன்னலின் யாமம் கொள்பவர் ஏத்து ஒலி அரவமும் (மணிமே. 7: 63 – 65)

நாழிகைக்கணக்கர் நலம்பெறு கண்ணுளர் (சிலப். 5: 49)

*நாழிகைக்கணக்கர் - கடிகையார்*

*(கடிகை > கடிகாரம்)*

**யாம யாழ்:**

1. = யாமை, குறிஞ்சி, படுமலைப்பாலை, யாமையாழ்.

*அர்த்த சாமத்தில் பாடப்படும் பண்; குறிஞ்சி நிலப் பெரும் பண் (நடபைரவி)*

*யாமையாழ் - காலப்பண்; குறிஞ்சிநில சிறுபொழுதான 'யாமம்' என்பதால் பெற்ற பெயர்.*

யாம யாழ் மழலை யாழ் (கம்ப. நாடவிட். 34)

யாம நல்யாழ் நாப்பண் நின்ற (மதுரைக். 584)

முதல் சாமத்தில் வாசித்தற்குரிய... (மேலது நச்சர்)

யாம யாழ்ப் பெயர் குறிஞ்சியாழாகும் (திவா. 1874)

விரல் கவர்ந்து... நல்யாழ் யாம முய்யாமை (நற். 335: 9 – 10)

விளரிப்பாலையில் தோன்றும் யாமயாழ்

(பரிபாடல் 11: 128–30 உரை)

*விளரியின் (தோடி) உழை (ம$^1$) குரலாக வைத்துப் பண் பெயர்த்தால் யாமயாழ் (நடபைரவி) கிடைக்கும்*

| | * | * | | * | | * | | * | * | | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| விளரி (தோடி) | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| யாம யாழ் | ப | த$^1$ | | நி$^1$ | | ச | | ரி$^2$ | க$^1$ | | ம$^1$ | |

*பெய்தல் முறையில் விளரி (தோடி) யின் மென் துத்தத்தை நீக்கி வன்துத்தம் பெய்தால் யாம யாழ் கிட்டும்.*

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| விளரி (தோடி) | ச | ரி$^1$ | க$^1$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^1$ |
| யாமயாழ் (நடபைரவி) | ச | ரி$^2$ | க$^1$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^1$ |

*(மென் துத்தம் - ரி1 ; வன்துத்தம் - ரி2)*
*விளரியின் குரலை (ச) இளியாக (ப)க் கொண்டு பண்பெயர்க்க யாமயாழ் கிடைக்கும்*

| | * | * | | * | | * | | * | * | | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| விளரி (தோடி) | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| யாம யாழ் | ப | த$^1$ | | நி$^1$ | | ச | | ரி$^2$ | க$^1$ | | ம$^1$ | |

2. *கூர்மவீணை, வயலின்*
*ஆமை போன்றுவடிவுடைய யாழ். இன்றைய வயலின் (பிடில்) ஆமை போன்ற தோற்றம் உடையதாகவே உள்ளது.*
ஒப்பு: இன்றைய சரோட் மீன்வடிவுடையது (மகர யாழ்)
"... செவ்வியல் ஆடலில் பக்க இசையாக இடம் பெறும் சிதம்பரம் கோவில் சிற்ப வயலின் கி.பி. 17 ஆம் நூற்றாண்டுக்குரிய சிற்பக் கூட்டத்தைச் சேர்ந்தது. ஆக பாலுச்சாமி தீட்சிதர் மற்றும் தஞ்சை வடிவேலு ஆகியோர் காலத்திற்கு முன்னரே வயலின் கருவி செவ்வியல் ஆடலில் சிறப்புற இசைக்கப் பெற்றி ருக்கிறது..."
(ப. ஆ. இ. பக். 161)

→ வயலின்

## யாமை,யாமையாழ்: → யாம யாழ்

## யாப்பினால் வேறுபட்ட கொச்சக ஒரு போகு:

தரவு இன்றாகி... யாப்பினும். பொருளினும்
வேற்றுமையுடையது. கொச்சக ஒருபோகு ஆகும் என்ப.
(தொ. செ. 148)

*எடு:- ஆய்ச்சிக்குரவையுள் படர்க்கைபரவல், குன்றக் குரவையுள் கொளுச்சொல், சிறைப்புறம், பாடுகம் வா என்ற பாட்டுமடை, வாழ்த்துக் காதையுள் சொல், அரற்று, அம்மானை வரி, ஊசல் வரி வள்ளைப் பாட்டு ஆகியவை இவ்யாப்பில் அமைந் தவை.*

## யாப்பிலக்கணம்:

*மாத்திரை, எழுத்து, அசை, சீர்... வண்ணம் என்ற யாப்பியல் வகையால் அமைந்த 26 உறுப்புக்களும், அம்மை, அழகு... இழைபு என்ற செய்யுள் மற்றும் செய்யுள் தொகுதிகளுக்கான உறுப்புக்கள் குறித்த இலக்கணம் யாப்பிலக்கணமாகும்.*
மாத்திரை, எழுத்தியல்... வகுத்து உரைத்தனரே (தொ. செ. 1)
← *த. க. க. 64/IV*

## யாப்பு:

1. *செய்யுள் இலக்கணம்* (Prosody), *அசை* (Syllable), *சீர்* (foot), *தளை* (metric link), *அடி* (line), *ஓசை* (rhythm) *இவைகளால் கட்டப்படுவது யாப்பு.*
2. *யாழின் ஓர் உறுப்பு. யாழ்ப்பத்தரின் குறுக்கே வலிவுறச் செய்யும் கட்டு.*
இலங்குதுளை செறிய ஆணி முடுக்கிப்
புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்து (மலைபடு. 27– 28)
3. *பொருத்தம், பொருந்துதல்*
*சுவை, இசை, அணிகள்ஐந்து பொருந்தயாப்பது யாப்பு.*
கோப்பெருந்... யாப்புறவில்லை... (சிலப். பதிகம் 23: 24)
யாப்புறவில்லை – பொருத்தமில்லை (மேலது அரும்)
4. *செய்யுள்* (Poem, Poetry)
*அடிவரையறுத்த மொழிநடை*
5. *பா*
*சொற்களைப் பாவாக இசைத்தல்; செய்யுள் வகை (பாவகை)* (variety of metre; metrical composition; Poetic metre)
6. *பாட்டு* (ode)
7. *தூக்கு* (Metrical rhythm)
8. *கட்டு*
*ஒப்பு: பாட்டுக்கட்டுதல், இட்டுக்கட்டுதல் இட்டுக்கட்டிய பாட்டு.*
யாப்புடை யாழ் மிடறு... (சீவக. 2011)
யாப்பு – கட்டு (மேலது அடிக். உ.வே.சா)
யாப்பென்ப கவிதைக் கட்டாம்... (சூடா. 11: 3)
9. *பாவினம்*
*இலக்கணம் நிரம்பாத பா தாழிசை துறை, விருத்தம் முதலிய பாவினங்கள் பாவகையோடே சேர்ந்து இலக்கணம் பெறும்*
"ஒலிகள் அளவாலும், தன்மையாலும், முயற்சியாலும் வேறுபட்டு, ஒழுங்காக அமைந்து வந்த அமைப்பே திரும்பத் திரும்ப வந்து இனிமை பயப்பது ஒலி நயம்.
... இயற்கையான இந்த ஒலிநயத்தை வளர்த்து வாய்பாடுகளாக்கி ஒரு வகைச் செயற்கை அமைப்பைத் தந்தனர் முன்னோர். அதற்கு யாப்பு (metre) எனப் பெயர் இட்டனர் "
(இலக்கியத்திறன். பக். 194)
← *செ. ப. அ. 3400*

## யாழ்:

1. = *கலம், பாணர்கைவழி, கோடம், தண்டு, கருவி, தந்தி, வாரி*
*நரம்புக்கருவி. பண்டைநாளில் யாழ் செங்குத்தாக வைத்து வாசிக்கப்பட்டது. புரிநரம்பு (மெட்டு) என்ற உருப்பைக் கொண்டது. கி. பி. 8 ஆம்நூற். புதுக்கோட்டை வீணாதரதட்சிணாமூர்த்தி சிற்பயாழ் மெட்டுக்களுடன் கூடியது.*
வீணை, கின்னரம், தண்டுமாகும் (பிங்க. 1429)
தந்தி, வீணை, கின்னரம், கோடம், கோடவதி, விபஞ்சி
யாழ்ப்பெயர்கூறும் (பிங்க. 1430)
அறிகலமும் கருவியும் அப்பெயர்க் குரித்தே (பிங்க. 1431)
மகர யாழின் வான் கோடு தழீஇ (மணிமே. 4:56)
தெய்வம்... யாழின் பகுதியொடு... (தொல். அகத். 18)
நெற்றிக்... கொற்றத்தனி யாழ் – (நளவெண்பா)
செவி நேர்புவைத்த செய்வுறுதிவவின் நல்யாழ்...
(முருகு. 140 – 41)
ஆடகத்... மாடகத்திவவியாழ் (பண்டாரமும் மணிக்கோவை)
வாரி, கின்னரம் வீணையின் பேர் கிளத்திய தண்டும் ஆகும்

மன்னிய யாழ்ப்பேர்... கருவியோடு... கலமும் அப்பேர் (சூடா. 10:42)
யாழென் மிதுனம், வீணை, இரலைநாள், ஆதிரைப் பேர் (சூடா. 11: 8)
விசித்தல்... யாப்பே... யாத்தல்... கட்டல் ஆர் என அறைவர் (திவா. 1682)
மிதுன விராசியும், வீணைக்கருவியும் அசுபதி நாளும் யாழெனலாகும் (பிங்க. 4005)
*'யாழ்' - சொற்பிறப்புப் பலவாறாகக் கூறப்படுகிறது.*

2. *யா, யாத்தல் -கட்டுதல் ; யாழ் - நரம்புகளால் கட்டப்பட்டது;*
பாட்டுக்கட்டுதல் (நாட்டார் வழக்கு)
இறுகிறுக யாத்துப் புடைப்ப (பரிபா. 9: 40)
இழையினைக் கையாத்து இறுகிறுக்கி (பரிபா. 12: 59)
*யா - யா + அள் > யாழ்*

3. *யா - சிவப்புநிற முடையது (யாழ் செந்நிற முடையது; செங்கோட்டுயாழ்)*
*யா - செந்நிறமரம்; யாமரம் - பாலை நிலத்தது.*
அத்த யாஅத்து (குறுந். 255: 1)
செந்நிலை யா (அகம். 33: 3)
யாஅ ஒண்தளிர் (அகம். 333: 1)
உம்பல் அகைத்த ஒண்முறி யாவும் (மலைபடு. 429)

4. *ஏழிசையுடையது யாழ்*
*ஏழ் > யாழ் ; ஏழ் - ஒலிஎழுப்பல்*
← தே.நே. 39/IV
*ஏழ் > ஆழ்> யாழ் (ஒப்பு: யானை < ஏனை - (பேச்சுவழக்கு)*
யாழ் என்ற சொல்லின் வடமொழிப் பெயராகிய வீணை (மு. அ. கை.ப. பக்.40)
ஏழிசை மழலை வீணை (திருவிளை. 2033)
மழலையாழ் இடந்தோளிட்டபாணர் (திருவிளை. 2036)
நாரதன் வீணை நயந் தெரிபாடலும் (சிலப். 6: 18)
யாழாசிரியனாகிய நாரதமுனிவன் யாழின்... (மேலது அடியார்க்.)
*வீணை என்பதை அடியார்க். யாழ் என்றே கூறுகிறார்.*
↑இடைக்காலத்தில் வீணை, யாழ் சேர்த்தும் வழங்கப் பட்டுள்ளது.
வீணை, யாழ், குழல், தண்ணுமை வல்லவர் (கலிங்.)
இன்னிசை வீணையர், யாழினர் ஒருபால் (திருப்பள்ளி.எழுச்சி.4) (திருவாசகம்)
→ வீணை

5. *பெரும்பண் , பாலை (ஏழுசுரப்பண்)*
தெய்வம்... யாழின் பகுதி... (தொல். அகத். 18)
*யாழினின்று பண் பிறந்ததால் பண் என்பது யாழ் எனப்பெயர் பெற்றது (ஆகுபெயர்)*
அரவவண்டினம் ஆர்த்துடன் யாழ் செய்யும் (சிலப். 12: (4)
↑ ஐந்து சுரப்பண் 'குழல்' என்றும் ஏழுசுரப்பண் 'யாழ்' என்றும் பண்டை நாளில் சிறப்பாகப்பெயர் பெற்றுள்ளன.

6. *பண்*
*ஏழு சுரம் மற்றும் ஐந்து சுரப்பண்களும் யாழ் என்று பெயர் பெற்றுள்ளன.*
பின்னுமோர் காமரம் யாழ் அமைத்து... (ஆதி உலா. 11: 8: 125)
*(காமரம் - ஆம்பல்குழல் - சுத்ததன்யாசி; இது ஐந்து சுரப்பண்; காமரயாழ் என்றே குறிப்பிடுகிறார்)*
ஏழ்புழை ஐம்புழை யாழ் இசை கேழ்ந்தன்ன (பரிபா. 8: 22)
*ஏழ்புழையாழ் - 7சுரப்பண்;*
*ஐம்புழையாழ் - 5 சுரப்பண்*

7. *யாழ்ப்பாடல்*
யாழும் குழலும் சீரும்மிடறும் (சிலப். 3: 26)
யாழ் – யாழ்ப்பாடல் என்க (மேலது நாட்டார்)
→ யாழ்ப்பாடல்

## யாழ்க்கரணம்:
*யாழில் செய்யும் இசைத்தொழில்(இசைக்கரணம் String work).*
எட்டுவகை இசைக்கரணத்து (சிலப். 7: 15)
வார்தல் வடித்தல்... (சிலப். 7;12 – 14)
பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், கண்ணிய செலவு, விளையாட்டு, கையூழ், நண்ணிய குறும்போக்கு (சிலப். 7: 1)
கலைத்தொழில் பட எழீஇப்பாடினாள் (சீவக. 657 நச்சர்)
வடிப்பு உறு நரம்பில்... (அகம். 142: 26)
வாரியும்,வடித்தும், உந்தியும், உறழ்ந்தும் (பொருந. 23)
பண்ணி யாழ்க் கரணமும் (மணிமே. 2: 20)
யாழின்கண் வார்தல் முதலிய எட்டும் பண்ணல் முதலிய எட்டும் (குறள். 573 பரிமே. உரை.)
*(கரணம் = தொழில்)*

## யாழ்க்கலைஞர்: → யாழ்ப்புலவர்

## யாழ்க்குற்றம்:
*யாழ் செய்யப்படுதலில் குற்றம் ஏற்படக் காரண மானவை.*
நோய் நான்கு நீங்கி (சீவக. 720)
இத்திறத்துக்குற்ற நீங்கிய யாழ்... (சிலப். 7: 4)
குற்றமாவன:– ஆதவ, வாத, பய, சாயை (மேலது அரும்)
ஆதவ வாத பய சாயை – வெயில், காற்று, நீர், நிழல்; யாழுக்குக் குற்றம் வருவதற்குக் காரணமானவை இவைநான்காம் (மேலது அடிக்.)

## யாழ்த்துணைமையோர்:
= கந்தர்விகள், யாழோர்
*யாழ் வாசிப் போர்*
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே (தொ. பொ. 92: 5)
முதலொடு புணர்ந்த யாழோர் மேன (தொ. பொ. 106: 1)
மைத்துனன் முறைமையால் யாழோர் மணவினைக்கு (மணிமே. 22: 86)
யாழோர் மருதம் பண்ண (மதுரைக். 658)
யாழோர் மருதத்து இன்னரம் புளர (மணிமே. 5: 135)

## யாழ் நரம்பு: = கோல், தந்திரி, குரல்
*யாழின் நரம்பு (தந்தி)*
கோலே, தந்திரி, குரல், யாழ் நரம்பே (திவா. 1248)

## யாழ்ப்பாட்டு:

1. *யாழில் எழும் இசை*
2. *யாழிலிட்டபாட்டு. மிடற்றுப்பாடலுடன் யாழும் உடன் இசைத்துப்பாடுதல்* (Lyric)

*(Lyre - நரம்புக்கருவி)*

நரம்பு மீது இறவாது உடன் புணர்ந்து ஒன்றி
கடவது அறிந்த இன்குரல் விறலியர் (மலைபடு. 535 – 6)
யாழின் நரம்பின் ஓசைக்கு மேற் போகாது அவ்வோசை யுடனே கூடி ஓரோசையாய் இனிதாகிய பாட்டினையுடைய விறல்பட ஆடும் மகளிர் (மேலது நச்சர்)
புரியுறு நரம்பும் இயலும் புணர்ந்து... (பரிபா. 18: 51)

கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தால் பாடத் தொடங்குமன் (சிலப். 7: 24 கட்டுரை)
யாழின் இசையோடு கலந்து ஒன்றுபட்ட கண்டத்தினாலே பாடத் தொடங்கினாள் (மேலது. நாட்டார்)
நரம்பு ஆர்த்தன்ன இன்குரல்... (முருகு. 212)
இருங்கடல் பவளச் செவ்வாய் திறந்தவள் பாடினாளோ
நரம்பொடு வீணை நாவில் நவின்றதோ என்றுநைந்தார் (சீவக. 658)

பருந்தும் நிழலும் போல் பாட்டும் எழாலும்
யாழும் மிடறும் உடன் நிகழ்ந்த இசை (சீவக. 730)
தன் மிடற்றாலும் யாழாலும் பாடினாள் (மேலது நச்சர்)
*(பாட்டு - கண்டப்பாடல் ; எழால் - யாழ்ப்பாடல்)*
யாழ்ப்பாட்டு நிகழ்த்திய கானல் வரியும் (அடியார்க். பதிக உரை)
யாழ்ப்பாடலு மென்றவாறு (சிலப். 3: 26 அரும்)
நரம்பின் முரலும் நயம்வரு முரற்சி விறலியர் (மதுரைக். 217)
*இதன் பழைய உரை: "யாழ் வாசித்தால் போலப் பாடும் நயப்பாடுதோன்றும் பாட்டினை யுடைய விறல் பட ஆடுதலையுடையார்".*
ஆடுசிறை அறுத்த நரம்பு சேர் இன்குரல்
பாடுவிறலியர்... (பதிற். 43: 21 – 22)

*←தமிழிசைவேர்கள் பக். 45*

புரி நரம்பிசை கொள்பாடல்... (சீவக. 662)
நரம்பிசை கொள்பாடல் – நரம்பின் இசையைக் கொண்ட கண்டப்பாடலை (மேலது நச்சர்)
நரம்பு ஆர்த்தன்ன தீம்கிளவியளே (ஐங். 185: 4)
சூழ்மணிக் கோட்டு வீணைச் சுகிர்புரி நரம்புநம்பி
ஊழ்மணி மிடறும் ஒன்றாய்ப் பணிசெய்தவாறுநோக்கி (சீவக. 728)
இதனால் கருவியும் கண்டமும் உடன் நிகழ்த்தினமையைக் கேட்டோர்வியந்தபடி கூறினார் (மேலது நச்சர்)
யாழும் பாடலும் மாற்றமின்றி (பெருங். 1: 37: 134)
மிடறும், நரம்பு மிடை தெரிவின்றி (பெருங். 3: 14: 275)
யாழில் எழும் ஓசையுடன் இருவர் மிடற்றிசை ஒன்றி (பெரியபு. திருஞான. 136)
"இலியது காவியத்தில் அக்கிலஸ் வீரப்பாட்டையாழுடனாக (Lyre)இசைக்கிறான்... பியோவுல்ப் காவியத்தில் அரசன் வத்ரோத்கார் என்பவனும் வில் யாழினுடன் கூடி இசைக்கிறான்" (த. வீ. க. பக். 80 மேற்.)
எழுஉப்புணர் யாழும் (பரிபா. 7: 78)
அங்கையும் மிடறும் கூட்டி நரம்பு அளைந்து அமுதம் ஊறும்
மங்கையர் பாடல்... (கம்ப. வரைக் 9)
யார்க்கும் நசைதரு நரம்பு கண்டம் ஒற்றுமை நயம் கொண்டார்ப்ப (திருவிளை. விறகு. 28)
முந்தி யாழ் இடம் தழீஇக் குரல் வழிமுகிழ்
விரல் போய் (மேலது இசைவாது. 15 / 2162)
ஆடல்மகளிர் பாடல் கொளப்புணர்மார் (நெடுநல். 67)
ஆடற்தொழிலையுடைய மகளிர் தாம்பாடுகின்ற பாட்டினை யாழ் தன்னிடத்தே கொள்ளும்படி நரம்பை கூட்டுவதற்கு (மேலது நச்சர்)
விரல் கவர்ந்தெடுத்த கீதம் மிடறு எனத் தெரிதல் தேற்றார் (சீவக. 723)
எனமுடிக்கப்பட்ட யாழ்ப்பாடலும் என்றவாறு (சிலப். 3: 26அரும்)
"விளையாட்டுக்களின் இடைவெளியில் சிறிதுபின்பாக பாணன் பாடும்போதுஅவன் 'யாழிசைஞன்' (போமிசான்) எனக்குறிக்கப் பெறுகிறான்" (த. வீ. க. பக்167 மேற்.)
"Also Thamyris, the bard whose art of singing and harping was taken away by the Muses" (மேலது அடிக்.)

## யாழ்ப்பாணம்:

*யாழ்ப்பாணரால் பெயர் பெற்ற ஊர். இன்றைய இலங்கையில் உள்ள தமிழ்ப் பண்பாட்டு நகரம். இங்கிருந்த யாழ் நூலகத்தில் ஏராளாமான இசை நூல்கள் இருந்தன. இந்த நூலகம் சிங்கள இன வெறியர்களால் தீயிடப் பட்டதால் அங்கிருந்த அரிய இசை நூல்கள் அழிந்து போயின.*

## யாழ்ப்பாணர்:

↑யாழ்ப்புலவர், யாழ்ப்பாண்(வைணிகர்)
*யாழ்மீட்டும் பாணர்*
*எடு:- திருநீலகண்ட யாழ்ப்பாணர்,*
தெரி மருதம் பாடுப பிணிகொள் யாழ்ப்பாணர் (பரிபா. திரட்டு. 2: 73)
ஒருதிறன் பாணர் யாழின் தீங்குரல் எழ (பரிபா. 17: 9)
தொல் இயல் புலவ நல்யாழ்ப்பாண (பரிபா. 3: 86)
பாணர் நரம்பினும் இன்கிளவியளே (ஐங். 100: 4)
பாணர்கையது பண்புடைச் சீறியாழ் (புறம். 127: 1)
பண்ணி யாழ்ப்புலவர் பாடற்பாணரொடு (புறம்5:185)
வெண்டுறை யாழ்ப் பாணர்... (பு. வெ. 9: 19)
நல்லியாழ்ப்பாணர் தம் முன்றில் நிரைந்தன (சிலப். 12:(15)
... பாடவும் புணர்க்கவும் அடைக்கவும் வல்லயாழ்ப்பாணரும்... (மேலது அடியார்க்.)

## யாழ்ப்பாணி:

*வீணைபாணி. பாடும் முறைகளுள் ஒன்று. யாழ் வாசித்து அத்துடன் பாடுவது யாழ்ப்பாட்டு அல்லது யாழிலிட்ட பாட்டு. அவ்வாறு யாழுடன் வாய்ப்பாட்டுப் பாடும் போது யாழோசை போன்று வாய்ப்பாட்டை மென்மையாகப் பாடுதல் வேண்டும். அவ்வாறு மென்மையாக யாழுடன் பாடுவது, யாழ்ப்பாணி முறை.*

*யாழ்ப்பாணி x நாகசுரபாணி*

*(பாணி - முறை)*

## யாழ்ப்புலவர்:

*யாழ்ப் பாணர், யாழ்க்கலைஞர்*

பண்ணியாழ்ப்புலவர் பாடற் பாண ரொடு (சிலப். 5: 185)

பண்ணியாழ்ப்புலவர் – கட்டப்பட்ட யாழ் வாசிக்கவல்ல அறிஞர் (மேலது அடியார்க்.)

*கட்டப்பட்ட = கேள்வி கூட்டப்பட்ட (சுதி சேர்க்கப்பட்ட)*

*(பண்யாழ்- பண்ணியாழ் - பண்ணமையாழ் - ஒத்துக் கூட்டப்பட்ட யாழ்)*

*பண்ணி, பண் = ஒத்து (சுதி)*

## யாழ்முரி:

*யாழ் என்பது பண். பண்ணினை முரித்துப் பாடுதல் யாழ்முரி. அதாவது இசை பாடும் போது எடுத்த பண்ணினைப் பாடி அதை விடுத்து வேறு பண் பாடுதல்.*

'எடுத்த இயலும், இசையும் தம்மில் முரித்துப் பாடுதல் முரியெனெப்படுமே' (சிலப். 7: (14)– (16) அரும் மேற்.)

மொந்தை முழாக்குழல் தாளமோர் வீணை முதிர

ஓர் வாய் முரிபாடி (தேவா. 1: 45: 5)

↑ இன்றைய '**இராக மாலிகை**' ஆகலாம்

## யாழ் வாசிக்கும் முறை:

*இன்றைக்குத் தம்புரா வாசிப்பது போல் பழங்காலத்தில் யாழை இடப்பக்கம் வைத்து செங்குத்தாக நிறுத்தி வாசித்துள்ளனர்.*

*யாழ் வாசிக்கும் முறை:*

'நல்லிசை மடந்தை... இடவயின் இரீஇ' (சிலப். 8: 23–6 அடியார்க்.)

ஏழிசை மழலை வீணை இடந்தழீ இச் சுருதி கூட்டி (திருவிளை. 2032)

மழலையாழ் இடந் தோளிட்ட பாணர்கோன் (மேலது 2035)

*(இடப்புறத் தோளில் சார்த்தி யாழ் வாசிக்கப்பட்ட முறை)*

## யாழாசிரியர்:

= யாழ்க்கலைஞர், யாழ்ப்புலவர், யாழோர். வைணிகர்

'யாழாசிரியன் அமைதி' (சிலப். அரங். காதை உரையின் உட்தலைப்பு)

இயக்கர், கந்தருவர், கின்னரர், தந்திரர், காந்தருவர் (சூடா. 205)

யாழோர் – கந்தர்வர் (தே. நே. 23/IX)

## யாழிலிட்ட பாட்டு:

1. *பண்ணுடன் பாடப்படும் இசைப்பாட்டு*

*யாழ் = பண்*

2. *யாழ்ப்பாட்டு ; வாய்ப்பாட்டுடன் யாழையும் மீட்டிப் பாடப்படும் பாடல்*

இவை கண்டன கூறிற்றாக யாழினிட்டபாட்டு (சிலப். 7: (4) அரும்)

→ யாழ்ப்பாட்டு

## யாழின் பகுதி:

1. *யாழின் பகுதி - யாழ்த் தொகுதி - பண் கூட்டம்*

*(பகுதி - அணி வகுப்பு)*

*கைம்மணிப்பகுதியு, முருடியல், திமிலை முழக்கமும் கரடிகைத் தொகுதியும்* *(தெ. இ. க. 7. 863 த. க. சொ. 380)*

2. *சேய்ப்பண், திறம் (ஜன்யராகம்)*

*பகுதி = பாகம்; யாழின் பகுதி பெரும்பண்ணின் பகுதி (ஜன்யராகம்)*

*ஒப்பு:- வர்ஜ ராகம் (தாய்ப்பண்ணிலிருந்து ஒன்றிரண்டு சுரங்கள் குறைந்தது)*

தெய்வம் உணா... யாழின் பகுதியொடு... (தொல். அகத். 18)

3. *யாழும், பகுதியும்*

*யாழ் - பெரும்பண் (7 சுரப்பண்); கர்த்தாராகம்)* (Generatives)

*பகுதி - திறப்பண்* (Derivatives)

*பகுதி - கூறு*

... யாழின் தொகுதியும் (சிலப். 10: கட்டுரை 13)

*யாழின் தொகுதி - யாழின் பகுதி (பாடபேதம்)*

## யாழோர்: → யாழ்த்துணைமையோர்

## யாளி:

1. *ஆளி, அரி, சிங்கம்*

அணங்குடை யாளி தாக்கலின் பல உடன் (பெரும்பாண். 258)

*தஞ்சைக்கோன் கோளாளி மொய்ம்பிற் கொடும் பாளூர்*

*(EI 13: 10; த. க. சொ. 57)*

2. *யாளி முகம்*

*இன்றைய வீணையின் வணர் என்ற உறுப்பை அடுத்த உறுப்பு.*

## யானை மணி:

*யானை வருவதின் அடையாளமாக யானையின் இருபுறமும் தொங்கவிடப்பட்டு ஒலி எழுப்பும் மணி.*

கயிறு பிணிக் கொண்ட கவிழ் மணி மருங்கின்

பெருங்கையானை... (புறம். 3: 10 – 11)

மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்தல் இன்னா (இன்னா 40: 14)

யானை வரும் பின்னே மணி யோசை வரும் முன்னே (பழமொழி)

## யோகினிச்சி:

*இசை நாடகத்துள் (ஆடல்) ஒன்று.*

"சிந்து... யோகினிச்சி... வரிக்கூத்தின்குலம்"

(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## யோனி:

*நாடக உறுப்பு(விலக்குறுப்பு) பதினான்கனுள் ஒன்று*

விலக்குறுப்பாவன:– பதினான்கு வகைப்படும். அவை, பொருள்... யோனி... சேதம் என இவை

யோனி நான்கு வகைப்படும்:–

உள்ளோன் தலைவனாக .. என இவை. என்னை?

"உள்ளோர்க்குள்ளது... யோனியாகும்"... (சிலப். 3: 13 அடியார்க்.)

.. யோனி என்னும் நாடக உறுப்பும்.

(சிலப். உரைப்பாயிரம் அடியார்க்.)

## யோனி முத்திரை:

முக்கோணமாகக் காட்டும் கை முத்திரை (ச. அ.)

# ர

**ரக்தி:** =ரக்தி வாசிப்பு, ரக்திமேளம்

*நாகசுரத்தில் வாசிக்கப்படும் தனியான பண் விரிவாக்கம். சுரக்கோப்புகளை விரைவுக் காலத்தில் தாளமாறுதலுடன், இரட்டித்தலும், அடுக்குத லுமான வாசிப்பு முறை. 'தீம் தக்க தத் தித்தோம்' பேன்ற சதி (தாள)க் கோவைகளுடன் ஏழன்கதியில் தொடங்கி, மூன்றன்கதிக்கு வந்து பின்பு நாலன் கதியில் மூன்றாம் காலத்தில் இசைக்கப்படும் நாகசுரத்திற்குமட்டுமே உரிய ரக்தி. தனியான மரபு முறையே.*

**ரக்தி மேளம்:** → ரக்தி

**ரக்தி வாசிப்பு:** → ரக்தி

**ரகுப்தி:** → ரேகுப்தி

**ரஞ்சனி:** பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 102)

**ரணகாளி:** ஊதுகொம்பு வகையுள் ஒன்று(bugle)

**ராகம்:** → பண்

**ராகமாலிகை:** → பண்மாலை

**ராமகேளி:** பண்களில் ஒன்று

**ராமப்பிரியை:** *பண்களில் ஒன்று*

**ராமளி:** *பண்களில் ஒன்று* (பரத. இராக. பக். 103)

**ராராட்டு:** → தாலாட்டு

**ரி:**

*இசையின் ஏழு சுரத்துள் இரண்டாவது சுரமான துத்த சுரத்தின் குறியீடு (ரிஷபம்)*

'ச' வ்வும், 'ரி' வ்வும்... அவற்றின் எழுத்தே ஆகும் (திவா. 1886)

*ருஷப > ரிசப > ரிசபம்*

*வ்ருஷப > ருஷப - காளை*

**ரிசபம்:** → துத்தம்

**ரிடபம்:** → துத்தம்

**ரீங்காரம்:** *வண்டின் ரீங்காரம்* (Humming)

*இது தொடர்ந்து வருவதால் ஒத்து (சுருதி) போன்று ள்ளது.*

செவ்வழி நரம்பு அன்ன கிளவியார் பாராட்டும் (கலித். 118: 15)

சாய என் கிளவிபோல செவ்வழியாழ் இசை நிறப(கலித் 143: 38)

சுரும்பு ஆர்க்கும் குரலினொடு இருந்தும்பி இயையு ஊதும்

(கலித் 123: 2)

*(குரல் 'ச' என்ற ஒத்து; இயைபு -'ப' என்ற ஒத்து)*

சிறுவெதிர்ங் குழல்போலச் சுரும்பு இமிர்ந்து 'இம்' மென

(கலித். 119: 8)

**ரீதிகௌளை:** *பண்களில் ஒன்று*

**ருஷபம்:** → துத்தம்

**ரூபகதாளம்:** → ரூபகம், உருவகதாளம்

**ரூபகம்:**

1. *உருவக தாளம். ஏழு தாள வகையுள் ஒன்று.*
2. *நாடக வகை (பிரிவு) பத்தனுள் ஒன்று.*

அவை நாடகம், பிரகரணம்... ஈகாமிருகம் என்ற பத்து வகைப்பட்ட நாடகம்' (சிலப். 3: 13 அடியார்க். அடிக்.)

ரூபகம் பத்தனுள்... ஓர் அங்க முடைய ரூபக வகை

(செ. ப. அ. 3753)

← *செ. ப. அ. 3430*

# ரே

**ரேகுப்தி:** = ரகுப்தி

பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 104)

# ல

**லகு:** → அலகு

**லகுலாட்சி:**

யாழ் வகையுள் ஒன்று (பரத. ஒழிபி. 16)

**லதாங்கி:**

1. கொடி போன்ற உடல்வாகு கொண்ட பெண். (women of slender, creeper like form)
2. பண்களில் ஒன்று

**லலிதா:** → லலிதை

**லலிதை:** = லலிதா

1. உமை
2. பண்களில் ஒன்று

**லாலி: (தெ. சொ.)**

1. தாலாட்டு (lullaby)
2. திருமணப்பாட்டு

திருமணப்பாடல்கள் லாலி என்ற சொல்லுடன் முடிவடைவன.

**லாவணி: (மராட்டியச் சொல்)**

இசைப்பாட்டு வகையுள் ஒன்று (Musical genre) காமன் திருவிழாவில் எரிந்தகட்சி, எரியாத கட்சி என்று இருபிரிவினராக நின்று வாதிட்டுப் பாடுவது. தப்பு, தம்பட்டம், டேப்பு, சிப்லாக் கட்டை (சப்ளாக்கட்டை) ஆகிய இசைக்கருவிகள் உடன் மீட்டி இசைக்கப்படும்.

# வ

## வக்கரணம்:
= வக்கரனை, வக்கிரித்தல், வக்காணம்.
ஆளத்தி (ஆலாபனை) செய்தல் (Elaboration of a tune)
வக்கரனை வழி போக்கி (பெரியபு. ஆனாய. பு. 24)
மீத்திறம் படாமை வக்காணம் வகுத்து (சிலப். 3: 148)
இசையோன் வக்கிரித்திட்டத்தை... (சிலப். 3: 41)
← த. க. க. 84 /IV

## வக்கரணை: → வக்கரணம்

## வக்கரனை: → வக்கரணம்

## வக்கிரித்தல்: → வக்கரணம்

## வக்ரகதி: → பிறழ்ச்சிப்பண்

## வக்ரராகம்: → பிறழ்ச்சிப்பண்

## வக்ர சுரம்:
சரிகமபதநி என்ற இயல்பான வரிசை முறையில் வராது வரும் சுரம். (Irregular succession of notes)
வக்கிரம் - வரிசையற்ற செலவு (irregular course)

## வகுணை:
தாளப்பகுப்பு; பண்பகுப்பு
தூய சுருதியுடன் ஏடாயம் வகுணை (பஞ்ச.62)

## வகுப்பு:
1. சந்தம், சந்த ஓசை, வண்ணமாகப் பாடுவது.
2. செய்யுள் இசை ஒழுக்கு (Uniform Rhythmic flow of a stanza)
மங்கல் வள்ளை வகுப்பொடு (வச். மா. செய். 32)
← செ. ப. அ. 3449; த. இ. பே. 289/15

## வகுப்பு வண்ணம்:
8, 16, 32, 64 என நால்வகையில் கலைகள் பெற்று எதுகை, மோனை ஆகிய தொடையுடன் ஒரு பொருளின் மேல் வரும் வண்ணப்பாடல்கள்.
எடு: அருணகிரியாரின் வேல் வகுப்பு, மயில் வகுப்பு கலம்பக உறுப்புக்களில் ஒன்றாகிய 'புயவகுப்பு'
← வண்ணத். உரை பக். 14
எட்டுப் பதினாறு எண்ணான்கு எட்டெட்டு
என்னும் நாற்பகுப்பிற் கலை வகுத்து ஒருநால்
எதுகையும், மோனையும் இயங்கக் காட்டி
ஒரு பொருட்புகழே உரைப்பது வகுப்பே
(வண்ணச்சரபம் அறுவகை இலக் வண்ணவியல்பு நூற் 26)

## வகுளாபரணம்:
32 தாய்ப்பண்களுள் ஒன்று. 5 ஆம் பாலை(14 ஆம் மேளம்)
வகுளம் - மகிழம்பூ
மகிழம்பூ அணிவதால் மாலவன் வகுளாபரணன்
குரவமும் வகுளமும் கோங்கமும் வேங்கையும் (சிலப். 13: 151)

## வகைநிலைக் கொச்சகம்:
கொச்சக வகையுள் ஒன்று (சீவக. 2514 உரை (பிம்)

## வகை பெறாக்கோவை:
= அசலசுரம்.
அசைவிலாச்சுரம். ச, ப என்ற சுரங்கள். இசையில் ச, ப என்ற இரு சுரங்களும் ரி[1], ரி[2], த[1], த[2] போன்று இருவகை பெறுவதில்லை.
← ப. இ. இ. பக். 49; சிலப். இசை நுணுக். பக் 71

## வகைபெறு கோவை:
அசைவு பெறும் சுரங்கள். இசையில் **ரி, க, ம, த, நி** என்ற சுரங்கள். இவை முறையே **ரி[1], ரி[2], க[1], க[2]** போன்று இருவகை பெறுவதால் இவை வகை பெறு கோவைகளாகும்.

## வகையுளி:
இசை நோக்கி செய்யுளை அசையும், சீருமாகப் பிரித்தல்.
அசைமுதலுறுப்புகளைச் சொல்நோக்காது இசைநோக்கி வண்ணமறுக்கை (யாப். வி. 375 & தண்டி. 111)
← தே. நே. 161/IX

## வங்கா:

வளைந்த ஊது கொம்பு வகையுள் ஒன்று.
வங்கு > வங்கா
வங்கு - வளைந்த
வங்காக் கடந்த செங்கால் பேடை (குறுந். 151)
வங்காவரிப்பறை (நற். 341)
← தே. நே. 32/ 13

## வங்காளம்:

பண்களில் ஒன்று (சது. அக.)
↑இந்துத்தானிப்பண் ஆன வங்காளி (பங்க்ளா); இப்பண் இன்றைய சுத்ததன்யாசி ஆகலாம்..
← யா. நூ. பக். 193

## வங்கியம்:

1. இசைக்குழல் . ஊது (துளைக்) கருவிகளின் பொதுப் பெயர். ஆதலால் புல்லாங்குழல் வங்கியம் எனப் பட்டது.
பஞ்சமரபில் வங்கிய மரபு என்பது துளைக்கருவி களின் மரபு குறிப்பது.
2. புல்லாங்குழல்
ஏழு விரலிடையிட்ட இன்னிசை வங்கியம் (பெரியபு. ஆனாய. 23)
குழலுமென்றது – வங்கியப்பாடலுமென்றவாறு (சிலப். 3: 26 அடியார்க்.)
குழல் வழி நின்றது யாழே... (சிலப். 3: 139)
குழல் வழி நின்றது யாழே என்றது – வங்கியத்தின் வழியே நின்றது. யாழ்ப்பாடலென்ற வாறு (மேலது அரும்)
குழல் அகவ யாழ் முரல முழவு அதிர முரசு இயம்ப (பட்டினப். 1567)
... வங்கியம் இசையுண்டாக்க (மேலது நச்சர்)
← ப. இ. இ. பக். 324

## வங்கியர்:

குழலோர் ; புல்லாங்குழல் கலைஞர்
வங்கியம் – புல்லாங்குழல்
.. வங்கியனுக்குப் பங்கு இரண்டும்
(CHEN, XXI, P. 425 - 28)
← த. க. சொ. 530

## வசந்த தூதம்:

பண்களில் ஒன்று
(வசந்த தூது - குயில்)

## வசந்த பைரவி:

பண்களில் ஒன்று

## வசந்தம்:

பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 56)

## வசந்தன்:

கூத்து வகையுள் ஒன்று. (யாழ். அக.)

## வசந்தன்பாட்டு:

கோலாட்டம் என்பது வசந்தன்பாட்டு என்று ஈழத்தில் வழங்கப்படுகிறது. முயிற்று வசந்தன், கிறுகு வசந்தன், களரி வசந்தன், கயிற்று வசந்தன் எனப் பல்வகை வசந்தன் பாடல்கள் வழங்கப்பெறுகின்றன. கண்ணகி வழிபாடு நடைபெறும் நாள்களில் கண்ணகியின் வரலாற்றைப் போற்றும் விதமாகவும் வசந்தன் பாடல்கள் அமையும்.

## வசந்தா:

பண்களில் ஒன்று
↑ வசந்தம் > வசந்தா
ஒப்பு:- மோகனம் > மோகனா

## வசவி:

தேவதாசி, ஆடல் மகள் (dancing girl attached to a temple)

## வசனகவிதை:

உரை நடைப்பாட்டு (Prose-Poetry)
மரபான யாப்பு, ஒலிநயம், தொடைகள் இல்லாதது.

## வசைக்கூத்து:

விதூடக்கூத்து. நகைத்திறச்சுவையொடு கூடிய கூத்து.
பல்வகை உருவமும் பழித்துக்காட்ட வல்லவனாதல் வசை எனப்படுமே (சிலப். 3: 13 அடியார்க்.)
... வசைக் கூத்தினுள் கண்டுகொள்க (தொ. பொ. 437 பேரா.)
.. வசையே அன்றி அவ்வசையானே நகை தோன்றச் செய்வது (மேலது 411. பேரா.)
← த. க. க. பக். 195

## வஞ்சனைப்புணர்ப்பு:

இசையமைப்பு மற்றும் பாடுகின்ற முறைமை.
இசைகொள்ளா வல்லின மெய் எழுத்துக்கள் பாடலில் பயின்று வரும் போது மெல்லின ஒற்றுப் போல் நெகிழ்த்துப் பாடுதல்.
இசைகொள்ளா எழுத்தின் மேல் வல்லொற்று வந்துழி, மெல்லொற்றுப் போல் நெகிழ்த்துப் புணர்த்தல்.
(சிலப். 3: 56 – 57 அரும்)
வல்லினமெய்கள் (stops, plosives, mute consonants) இசையின் 'ஒழுகிசை' (continuous)த் தன்மையை நிறுத்தம் செய்பவை. அவை வருங்கால் பாடும் முறை:-
'எப்படி பாடினரோ' என்று பாடும் போது எப்படி என்பதில் 'ப்' அழுத்தம் தராது 'எ.படி' என்று மெல்லொற்றுப் போல் நெகிழ்வாகப் பாடுதல்.

*சிலம்பு கானல் வரி 7 ஆம் பாடல்.*

*'திங்கள் மாலை வெண்குடையான் சென்னி செங்கோல் அது வோச்சி 'க்' என்ற வரியில் 'அது வோச்சிக்' என்ற சீரில் 'ச்' என்ற இசைகொள்ளா எழுத்தின் மேல் 'க்' என்ற மற்றோர் இசை கொள்ளா வல்லெழுத்து வந்தது காண்க. பாடகர் இதைப் பாடும் போது அது வோச்சி... கங்கை என்று அடுத்து வரும் 'க்' என்ற எழுத்தை ஒலிக்காமல் நெகிழ்த்துப் பாட வேண்டும்.'*

'முத்தைத்தரு' என்ற திருப்புகழில் 'முத்' என்று இரண்டாம் எழுத்து வல்லொற்றாக வருவதால் 1/2 இடம் தள்ளி எடுப்பது காண்க. (சிலப். த. ப. க. பக். 26–27 (இரா.திருமுருகன்)

## வஞ்சி:

1. *மருதயாழ்த்திறத்துள் ஒன்று.*

மற்றும் வஞ்சி – மருத யாழ்த்திறத்தோர் ஓசையும் வகுப்பர் (பிங்க. 4016)

நவிர், வடுகு, வஞ்சி, பியந்தை... (திவா. 18)

2. *பாக்கழி*

வஞ்சித்துறைசார்ந்த ஒரு பண்; வஞ்சி பாக்கழி (பிங்க 1398)

வஞ்சி பாக்கழி (திவா. 23)

வஞ்சி பாடுது மடவீர் யாமெனும்
அஞ்சொற்கிளவி அந்தீம் பாணியும் (சிலப். 27: 249 – 50)

3. *ஒரு புறத்துறை*

பாடுனர் வஞ்சிபாட (புறம். 33: 10)

பாடினி பாடும் வஞ்சி (புறம். 15: 24)

அஞ்சாமரபின் வஞ்சிபாட (புறம். 378: 9)

வாடாவஞ்சி பாடினேன் ஆக (புறம். 394: 9)

4. *வஞ்சிப்பா*

## வஞ்சி உரிச்சீர்:

*வஞ்சிச்சீர்*

*தேமாங்கனி, புளிமாங்கனி, கூவிளங்கனி, கருவிளங் கனி என்று நான்கு வகைப்பட்ட நிரை அசை முடிவு பெறும் மூவசைக்கனிச் சீர்கள்.*

நிரையீறு நான்கும் வஞ்சியுரிச்சீர் (யாப். வி. 12)

## வஞ்சித்தாழிசை:

*இருசீரடி (குறளடி) நான்காய் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வரும் பாவினம்.*

← *யா. கா செய். 14; த. இ பே 70/15*

## வஞ்சித்துறை:

*இருசீரடி (குறளடி) நான்காய் ஒருபொருள் மேல் ஒரு செய்யுள் வருவதாகிய வஞ்சிப்பாவினம் நாமாவளி, பக்திப்பாடல் பாட ஏற்றது.*

*எடு:-* 1. நீதியின் நிறைபுகழ்
மேதகு புலிமகன்
மாதமிழ் விரகனை
ஒதுவ துறுதியே (தேவா. 11: 39: 38)

2. கண்ணன் திருவடி
எண்ணுக மனமே (பாரதியின் கண்ணன் பாட்டு)

3. நம்மாழ்வார் திருமொழி :–
2686 – 2696; 2752 – 61; 3711 – 3721

← *யா. கா. செய். 14; த. இ. பே. 70/15*

## வஞ்சிப்பா: = வஞ்சி

*ஆசிரியப்பா விகற்பித்து வருவது.*

ஆசிரிய நடைத்தே வஞ்சி... (தொல். செய். 107)

அதனின் விகற்பம் வஞ்சியாகும் (பிங்க. 2082)

*(அதனின் - ஆசிரியத்தின்)*

*291 அடிகள் கொண்ட பட்டினப்பாலை 153 வஞ்சியடிகளும் 138 அகவல் அடிகளும் கொண்டது. எனவே பட்டினப் பாலையை வஞ்சி நெடும்பாட்டு என்பர்.*

" கேட்போரை மகிழ்விக்கும் வகையில் ஓசை மாற்றத்தை உண்டாக்க வஞ்சியடிகள் இப்பாட்டில் ஆளப்பெற்றுள்ளன. அகவல் அடிகளுக்குத் தெளிவான ஒரு மாறுபாடாக அமைவதோடு, நீண்ட பாடல்களில் காணப்பெறுவது போல் பொருள்களைப் பட்டியலிட சிறு சிறு அளவில் துடிப்புடன் செல்லும் வஞ்சியடிகளின் ஊசலிடும் இயக்கம் பொருத்தமுற அமைந்துள்ளது" (த. வீ. க. பக். 58)

*மதுரைக்காஞ்சி வஞ்சியடிகள் விரவியது.*

*வஞ்சிப்பாவில் இயன்ற புறப்பாடல்கள்: 4, 11, 16, 17, 22, 97, 98, 136, 239*

↑வஞ்சியடிகள் சங்க இலக்கியங்களில் கலந்துவரினும் வஞ்சியால் இயன்ற பத்துப்பாட்டு போன்ற தனி இலக்கியங்களோ தனிநெடும் பாடல்களோ எழவில்லை.

*பாவலர் பெருஞ்சித்திரனார் 'மகபுகுவஞ்சி' என்ற இலக்கியத்தை வஞ்சியாப்பில் பாடியுள்ளார்.*

## வஞ்சிப்பாட்டு:

1. *ஓடப்பாட்டு*

← *செ ப. அ 3465*

2. *நாடகப் பாட்டு* (A dramatic Poem)

3. ஒரு பழைய நாடக நூல் (தொ. பொ. 492 பேரா.)

## வஞ்சிவிருத்தம்:

*ஓரடி முச்சீராக நான்கடி கொண்ட பாவினம். பத்திமைப்பாடல்கள் பாட ஏற்றது.*

எ–டு :– 1. பெரிய திருமொழி – 1448 – 1457

2. நம்மாழ்வார் – 2730 – 2740; 2818 – 2828

3. திண்ணம் காணீர் பச்சை
வண்ணன் பாதத் தானை
(பாரதியின் பாரதமாதா நவரத்தினமாலை)

← *த. இ. போ. 71/15*

## வட்டப்பாலை:

*வட்டத்தை 12 கோணமாகப் பிரித்து, பன்னிரு ஓரைகளில் (இராசி) இசையின் 12 சுரத்தானங்களை நிறுத்தி, பாலை (பண்)களுக்குரிய ஏழு சுரங்களைத் தேர்ந்து அமைத்தல்.*

வட்டப்பாலை வருமாறு:– "வட்டமென்பது வகுக்குங்காலை, ஓரேழ்

தொடுத்த மண்டலமாகும்"
"எதிரும் இராசி... பன்னிரண்டு கோணத்தில் பன்னிரண்டு இராசிகளை நிறுத்தினால் இவற்றுள் நரம்புடன் இயல்வன ஏழென்பது உணர்த்துதல்நுதலிற்று" (சிலப். 17. (13) அடியார்க்.)
வட்டப்பாலைவருமாறு: – "... இப்படி ஏழு நரம்புகளையும் நிறுத்தி ... ஏழு பெண்களையும் ஏழு நரம்பாக்கி... " (மேலது அரும்)
← த. க க. 85 /IV

## வட்டம்:

1. *கைம்மணி* (hand-bell), *பரந்த வட்டம்*
பரந்த வட்டம், கைம்மணி,படலிகை (திவா. 1224)
பரிசை... கைம்மணி... வட்டம் (பிங்க. 4021)
2. *மண்டிலம், இயக்கு, தானம், தானநிலை* (Octave, *ஸ்தாயி)*
வட்டமும், நாடும், குதிரையும் மண்டிலம் (பிங்க. 3919)
3. → சுழி

## வட்டணை:

1. = (*தாள*) ஆவர்த்தம் (one cycle of a tala), *வட்டம், மண்டிலம்.*
*தாளவட்டணை. தாளம் வட்டமடித்து (வட்டணையாக) மீண்டும் மீண்டும் வருவதால் வட்டணை; தாளத்தின் முழு எண்ணிக்கையும் நிகழ்ந்து முடிவது.*
வட்டித்தல், ஒற்றறுத்தல்,வட்டணையுடனே.., தாளம் போடுதல்... (சூடா. 9: 54)
*எடு:- ஆதிதாளம் 8 எண்ணிக்கை கொண்டது. அது ஒரு வட்டணையாகிறது.*
சுற்றி வரும் வட்டணையில் (பெரியபு. ஏனாதி. 29)
மாப்புண்டர வாசியின் வட்டணைமேல் (கம்ப. படைத். 97)
*(வட்டணை - விரைந்தநடை)*
வட்டவடிவில் கொட்டிய பெயரே வட்டணையாகும் (பழஞ்செய்யுள்)
வட்டித்தல், தட்டல், வட்டணை, ஒத்தறுத்தல் (பிங்க. 1459)
வட்டணையும் தூசியும் மண்டலமும் (சிலப். 3: 10 – 11 உரைமேற்.)
கொட்ட முழவு இட்ட வடிவட்டணைகள் (தேவா. 3: 75: 4)
2. *தாளம் கொட்டல்* (beating time)
வட்டித்தல், தட்டல், வட்டணை, ஒத்தறுத்தல் (பிங்க. 1459)
வட்டித்தல், தட்டல், வட்டணை, ஒற்றறுத்தல் (திவா. 1764)
3. *அவிநயம்; கமலவர்த்தனை; தாளத்திற்கு ஏற்றவாறு கைக்குறி காட்டி சுற்றி வந்து நாட்டியம் ஆடல்*
*(வட்டணை காட்டல்)*
வகைதெரி மாக்கட்கு வட்டணை காட்டி (மணிமே.7:43)
மாண் இழை வளைக்கை தம்மால் வட்டணை போக்குகின்றாள் (சீவக. 1257)
கைகால்களின் வட்டணை அவிநய முதலியன... (சிலப். 6: 46 – 8 அடியார்க்.)
← தே. நே. 5/13; 256/III

## வட்டுடை:

*ஒரு வகை நாடக உடை*
இகந்த வட்டுடை எழுதுவரிக்கோலத்து (மணிமே. 3: 122)

## வட்டிகை:

கைம்மணி (யாழ். அக.)
*(வட்டிகை - வட்டம்; வட்டி > வட்டிகை)*
← தே. நே 37/13

## வட்டித்தல்:

*ஒத்தறுத்தல்; தாளம் கொட்டல்; தாளம் வட்டமடித்து மீண்டும் மீண்டும் வருவதால் வட்டித்தல்.*
வட்டித்தல், தட்டல், வட்டணை ஒத்தறுத்தல் (பிங்க. 1459)
வட்டித்தல், ஒற்றறுத்தல், வட்டணை... தாளம் போடுதல் (சூடா. 9: 54)

## வட இந்திய இசை: → இந்துத்தானி இசை

## வடஎழுத்து ஒரீஇ:

*சிலப்பதிகார அரங்கேற்று காதை உரையில் 'ஆடல்பாடல்' இசையேதமிழே (3: 45) என்று வருகின்ற இடத்துத் 'தமிழ்' என்பதற்கு உரைகாரர்கள் கூறியுள்ள பொருள்:-*
'வடஎழுத்து ஒரீஇ வந்த எழுத்தானே கட்டப்பட்ட வாக்கியக்கட்டளைக் கூறுபாடுகளும்'.
'தக' 'ஜணு' என்றலில் 'ஜ' நீக்குதல் வேண்டும். 'ஜாம் ஜாம்' *என்று அடிவயிற்று ஓசையில் கூறுதல் கூடாது என்ற நெறி பண்டைக்காலத்தில் இருந்து பெரிதும் பின்பற்றப்பட்டு வந்தது.*
எனவே, இசைத்தமிழில் வரும் கட்டளைச் சொல்கள் தனித்தமிழ் ஓசையாலே திகழல் வற்புறுத்தப்பட்டது. (த. க. க. பக். 6–7/II)

## வடித்தல்:

வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல் (சிலப். 7: 12)
*வடித்தல் என்றது:- சுட்டுவிரலும் பெருவிரலும் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல்*
மகரவீணையின் கிளை நரம்பு வடித்த (மணிமே. 19: 25)

## வடித்தும்: உருவியும்

*யாழ் நரம்பை உருவி வாசித்தல்.*
'... தாள அறுதியை உடைய நரம்பை உருவி வாசிக்கும்... (சிலப். 17: (26) அடியார்க்.)
வாரியும், வடித்தும், உந்தியும், உறழ்ந்தும் (பொருந. 23)
வடித்தல் – யாழ் நரம்பை உருவுதல் (செ. ப. அ. 3476)

## வடித்தோல்:

*மயிர்சீவி வடிக்கப்பட்ட தோல்.*
வடித்தோல் கொடும்பறை (சிலப். 26: 193)

## வடிம்புப்பாதம்:

நாட்டியத்தில் பாதத்தின் இருபுற விளிம்புகளையும் இருபக்கங் களிலும் நீரை வடிப்பது போல சாய்த்து வைத்தல். (த. க. க. 23/I)

## வடிமணி:
தெளிந்த ஓசையையுடைய மணி
வடிமணி நின்று இயம்ப (பு. வெ. 10: 14/253)
← செ. ப அ 3477

## வடிவெழுத்து:
ஒலியின் குறியாக எழுதப்படும் எழுத்து (அட்சரம்)
பெயர் எழுத்து வடிவு தன்மையில் எழுத்தாம் (சூடா. 10: 31)
வடிவெழுத்து... என எழுத்தின் பெயர் இயம்பினரே (திவா. 1856)
← நன். 256 (மயிலை)

## வடுகப்பறை: ஒரு வகைப்பறை.
குடையும், வடுகப்பறையும், மகா காளமும் (EI, 3: 2)
← த. க. சொ. 533

## வடுகிற்குரிய கால்கள்:
இவை 14
சுற்றுதல்... கூட்டுதல்... (சிலப். 3: 16 அடியார்க். அடிக்.)
கால் = அடைவு
→ அடைவு

## வடுகு:
1. இந்தளம், மருதயாழ்த்திறம்
நவிர், வடுகு, வஞ்சி... மருதயாழ்க்கு வரும் திறனாகும்(பிங்க. 1378)
மருதயாழோர்குலம் இந்தளமும் வடுகே (பிங்க. 4020)
2. மெய்க்கூத்து வகையுள் ஒன்று.
மெய்க்கூத்தாவது:– தேசி, வடுகு சிங்களம் என மூவகைப்படும். (சிலப். 3: 12 அடியார்க்.)
தேசி போல வடுகும்... ஆடி... (மேலது. 155 – 6 அரும்)

## வடுகுப்பாதம்: → சுற்றடைவு

## வண்டர்:
1. பாணர்; மங்கலப்பாடகர் (Panegyrist,bard)
2. அரசனுக்கு நாழிகை அறிவிக்கும் கடிகையார் (கடிகைமாக்கள்)
வண்டரும் ஓவரும் பாட (சீவக. 1844)
← செ. ப. அ. 3481

## வண்டிக்காரன் பாடல்:
இரவு நேரங்களில் பொருட்களை ஏற்றிச் செல்லும் காளை மாட்டு வண்டிக்காரர்கள் பாடும் பாட்டு.

1வது ஆள்: சாலையிலே ஆலமரம் - இது
சலுக்காரு வச்சமரம்
ஓங்கிப்படர்ந்த மரம் - இங்க
ஒத்தையாய் நிக்கு மரம்

2வது ஆள்: விழுது நெறஞ்சமரம் - இது
வெறகுக்கு ஓதவும் மரம்
வெயிலுக்கு நல்லமரம் - எங்க
வேலப்பர் தங்குமரம்

3வது ஆள்: ஒத்த கொம்பு மயிலக்காள - என்
ஒரு காது அறுந்த காள
ஒத்தப்பட்டி காரிக்காள - என்
ஒழவிலே சண்டிக்காள

(தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும் பக். 157)
(ஆலமரம் - வேலப்பர் தங்குமரம் - ஆலமர் செல்வன்)

## வண்டு: = வண்டுக்கை; பிரமரம்
இணையா வினைக்கை வகையுள் ஒன்று.
பெருவிரலும் அணிவிரலும்... பயன் தெரிந்தோரே (சிலப். 3:18 உரை)

## வண்டுக்கை: → வண்டு

## வண்ணப்பட்டடை:
நின்ற நரம்பிற்கு ஏழாம் நரம்பு. அதாவது இளி நரம்பு பட்டடை நரம்பாகும். சப, பரி[2] போன்று பொருந்து சுர (Consonants) நிலையில் முதல் நரம்பிற்கு ஏழாம் நரம்பாகிய இளி (பஞ்சமம்) முதல் நரம்புடன் முழுதும் பொருந்தி, வண்ணம் என்ற பண் வடிவம் (இராக சாயல்) தருவதால் வண்ணப் பட்டடை.
வண்ணப்பட்டடை யாழ் மேல் வைத்து (சிலப். 3: 63)
பட்டடை என்றது நரம்புகளில் இளிக்குப் பெயர்.
என்னை ? எல்லாப் பண்ணிற்கும் அடிமணை யாதலின்... (மேலது அரும்)

## வண்ணப்பா:
சந்தக்குழிப்பு சிறிதும் தவறாமல் பாடப்படும் இசைப்பாடல். மூவின எழுத்துக்களைக் கொண்டு, ஓரின எழுத்து உள்ள இடத்தில் மற்றோர் இன எழுத்து வராமல் அமையப் பெற்று, குறில் வந்த இடத்தில் குறிலும், நெடில் வந்த இடத்தில் நெடிலுமாகப் பொருந்தப் பாடுவது வண்ணப்பா. இது 8 கலைகள் கொண்டதாக விளங்கும். இரண்டு கலை ஓர் அடியென, நான்கடிகள் ஓர் எதுகையில் தொகுக்கப்படுவது.
எண்கலைப்புணர்ப்பு ஓர் வண்ணப்பாவே... (வண்ணத். நூ. 88)
← த. இ. பே. 295/15

## வண்ணப்பா அடி:
எதுகை ஒன்றிய இரண்டு கலைகளுடன் மூன்றாம் குழிப்பு மோனையால் இணைந்தது அடியாகும்.

எடு:- இரவு பகற் - பலகாலும்
இயலிசைமுத் - தமிழ்கூறித்
திரதமனைத் - தெளிவாகத்
திருவருளைத் - தருவாயே

மூன்றுகுழிப்பும் ஒரு தொங்கலும் கொண்டது - கலை;
இரண்டு கலைகள் கொண்டது - ஓர்அடி;
வண்ணப்பா 4 அடிகள் அதாவது 8 கலைகள் கொண்டது.

## வண்ணப்பா உறுப்புகள்:

சந்தம், துள்ளல், குழிப்பு, தொங்கல், கலை, அடி என வண்ணப்பாடல் உறுப்புகள் ஆறு.

← வண்ணத். உரை. பக். 18

## வண்ணக்குழிப்பு:

= வண்ணக்குனிப்பு; சந்தக்குழிப்பு
வண்ணப்பாடலின் சந்த வாய்பாடு
எடு:- முத்தைத்தரு பத்தித்திருநகை
இதன் வண்ணக்குழிப்பு:-
தத்தத்தன தத்தத் தனதன

## வண்ணக்குனிப்பு: → வண்ணக்குழிப்பு

## வண்ணகஒத்தாழிசை:

அராகம், தாழிசை, எண், வாரம், என்னும் உறுப்புகளைச் சிறப்பாகக் கொண்ட கலிப்பா வகை.

← தொ பொ. 444 இளம்

எடு:– சிலம்பொலிக்கும் இணையடியும் (யா. வி.)

## வண்ணக ஒருபோகு:

அம்போதரங்கம் நீங்கி, வண்ணக உறுப்பு பொருந்தி வரும் கலிப்பா வகை.

(வண்ணகம் = அராகம்)

← த. யா. வ. பக். 538

## வண்ணகம்: அராகம்

← வீரசோ. யாப். 11

## வண்ணத்தில் நீள்வன நீளாதன:

தத்த என்ற குழிப்பு தாத்த என்றும்
தந்த என்ற குழிப்பு தாந்த என்றும்
தன என்ற குழிப்பு தான என்றும்
இம்மும்மூன்றும் நீள்வன; தன்ன, தய்ய என்ற
இரண்டு குழிப்புகளும் நீளாதன. (வண்ணத். நூ. 14)

## வண்ணம்:

1. சந்தம்; ஓர் இசைப்பாடல் வகை
வனப்பும் சந்தமும் குணமும் வண்ணம் (பிங்க. 4023)
வண்ணம், சந்தம் (திவா. 1401)
வண்ணம் ஓசையும், வடிவும் ஆகும் (திவா. 2147)
வண்ணம் சந்தம் (சூடா. 8: 27)
வண்ணம் ஓசை நோக்கி வரும் (தொ. செ. 227 நச்சர்)
வண்ணமாவது சந்தம் (தொ. செ. 234 நச்சர்)
பாடுவல் விறலியோர் வண்ணம் (புறம். 152)
2. ஒரு சிற்றிலக்கியம்
எ-டு:- சிற்றம்பலவாணர் வண்ணம்
அண்ணாமலையார் வண்ணம்
செண்டலங்காரப்பெருமாள் வண்ணம்
3. வர்ணம்
இசைப்பயிற்சிக்குரிய இன்றியமையாத பாடல் வகை. பாடல் அளவு குறைவாக இருக்கும். இசைப் பயிற்சியில் இறுதியாகக் கற்பிக்கப்படுவது
4. அரங்கிசைப் பாட்டு.
கோதை தானேயிட்ட தோர் வண்ணந்தன்னை (சீவக. 1996)
5. பண்
நிறம், வண்ணம் என்று பண் பெயர் பெறும்
வண்ணப்பட்டடை யாழ் மேல் வைத்து (சிலப். 3: 63)
6. தாளம் (Rhythm) (E.T.L. P.138/I)
7. விலக்கு உறுப்பினுள் ஒன்று.
விலக்கு உறுப்பு என்பது... பொருளும்... வண்ணமும் (சிலப். 3: 13 அடியார்க்.)
8. அராகம், முடுகியல், வண்ணகம்
அராகம், முடுகியல், வண்ணம் ஆகும் (திவா. 1850)
↑ தளைகளின் சேர்க்கையால் ஏற்படுவது ஓசை
எடு :– அகவல் ஓசை
எழுத்தின் மாத்திரை அளவால் ஏற்படும் ஓசை – சந்தம்.
மாத்திரையும், எழுத்தினமும், சீரும் ஒத்துவருவதால் ஏற்படும் ஓசை – வண்ணம்.
எனவே, அனைத்து வண்ணப்பாடல்களும் சந்தப்பாடல்கள்; எல்லாச் சந்தப்பாடல்களும் வண்ணப்பாடல்கள் அல்ல.

## வண்ணமகள்:

ஒப்பனை புனைபவள்
கோலம்புனைபெண் வண்ணமகள் என்ப (திவா. 282)

## வண்ணமாலை: பண்மாலை (இராகமாலிகா).

பல பண்களால் தொடுக்கப்படும் பாடல். அதாவது ஒரு பாடலுக்கு பல பண்களை இசைப்படுத்தியது.

## வண்ணமெட்டு: = வர்ணமெட்டு

பண் அமைப்பு. பாடலுக்குப் பண் அமைத்தல் (melody of a tune)

வண்ணம் - பண்; வண்ணம் > வர்ணம்

## வண்ணனைதரு: = வர்ணனைதரு

ஒரு நிகழ்ச்சி, இயற்கைக் காட்சி, ஒருவரின் பண்பு முதலியவைகளை வண்ணித்துப்பாடும் பாடல் வகை.
எடு:- 1. குறிஞ்சிப் பாட்டின் பல்வேறு மலர்வண்ணனை
2. கோவலனின் நற்பண்புகளை சிலப்பதிகாரம் வண்ணிப்பது.
3. முக்கூடற் பள்ளுவின் நெல்வண்ணனை

## வணக்கக்கை: தொழுதகை; நாட்டிய

இணைக்கை வகையுள் ஒன்று.
... இரண்டு கையும் பதாகையாய் அகமொன்றுவது; என்னை?
“அஞ்சலி என்பது அறிவுறக் கிளப்பின், எஞ்சலின்றி

இருகையும் பதாகையாய், வந்தகம் பொருந்து மாட்சித் தென்றனர்... (சிலப்: 3: 18 அடியார்க். மேற்.)
வணங்கல், பணிதல், அஞ்சலி, வந்தனை
இறைஞ்சல், பரவுதல், தாழுதல், தொழுதல் (திவா. 1637)

## வணர்: = வாங்கு

*யாழ்க்கோட்டின் இறுதியில் உள்ள வளைந்த உறுப்பு; இன்றைய வீணையின் யாளி முகத்தை ஏந்தும் வளைந்த உறுப்பு.*
வணர்ந்தேந்து மருப்பின் (மலைபடு 37)
*வள் - வண் - வணர் - வளைவு*
*ஒப்பு :- வணர் - வணரி - வளைதடி*
*வாங்கு - வளைந்தது; வாங்கரிவாள்*
வாங்குஇரு மருப்பின் தீந்தொடைச் சீறியாழ் (புறம். 285)
வணர் அமை நல்யாழ் (பதிற். 41: 2)
வணர் கோட்டுச் சீறியாழ் (புறம். 155: 1)
*(வணரும், கோடும் அமைந்த சீறியாழ்)*
வணர் அளவு சாணும் (சிலப். பாயி. 9)
வணர் கோட்டுச் சீறியாழ் (மேலது. 28: 31)
*← தே.நே. 239/3; பா. கை. பக். 128*

## வணர்கோடு:

*வணர் என்ற யாழின் வளைந்த உறுப்பும், கோடு என்ற யாழின் நேரான தண்டு என்ற உறுப்பும் என்று பொருள். இது யாழ்க்கோடு வளைந்திருப்பதாகக் குறிப்பதல்ல.*
புணர்புரி நரம்பின் தீந்தொடை பழுநிய
வணர் அமை நல்யாழ்... (பதிற். 41: 1 – 2)
↑ புரிநரம்பு (மெட்டு) வளையாத நேர்கோட்டு யாழில்தான் கட்ட முடியும். வணர் அமை என்பதால் வணர் என்ற வளைந்த இறுதி உறுப்பு அமைந்துள்ள யாழ் என்றே பொருள்படும்.
→ வணர்

## வந்தது வளர்த்தல்:

*இசை விரித்தி; பண் விரிவாக்கம் பாடுதல்; விருத்தி அமைத்தல்*
வந்தது வளர்த்து வருவது ஒற்றி (சிலப்.3:65)
பாடுகின்ற பண்வரவுகளுக்குச் சுரம் குறைவு படாமல் நிறுத்தி என்றவாறு. (மேலது அரும்)

## வந்தி:

*வந்தித்து நிற்போர் (வந்தனை செய்வோர்); அரசர் புகழ் கூறும் சூதர்.*
வந்தியோ கங்கைமகன் (பாரதவெண்பா. 48)

## வந்திபாடம்: புகழ்ந்து பாடும் பாட்டு (யாழ். அக.)

## வம்புறுமரபு:

*புதிய மரபு* (வம்பே புதுமை – தொல்.)
மேலது உழையுளி கீழது கைக்கிளை
வம்புறு மரபில் செம்பாலை யாயது (சிலப். 3: 81)
↑ கீழ்த்தான உழை (ம) யை முதல் நரம்பாகவும் (மெட்டு) மேல்தான கைக்கிளையை முடிவு நரம்பாகவும் கொண்டு யாழில் பாடிய புதிய மரபாகலாம். இவ்வாறு யாழில் மெட்டமைத்த (புரி நரம்பு; Fret) புதிய மரபாகவும் வம்புறுமரபு ஆகலாம். இது மேலும் ஆய்வுக்குரியது.

## வயலின்:

*இன்றைய வயலின் வடிவம் ஆமையை ஒத்துள்ளது. ஆமையாழ் (யாமை யாழ்) > கூர்மவீணை*
*கி. பி. 1800 இல் ஐரோப்பிய வயலின் சென்னை வந்தடைந்தது. தஞ்சை நால்வருள் ஒருவரான வடிவேலு நட்டுவனரால் வயலின் நம் இசையில் துணை இசைக்கருவியானது. 1784 திப்புசுல்தான் ஸ்ரீரங்கப்பட்டின அரண்மனை ஓவியத்தில் பெண்பாடகர் குழுவில் வயலின் மீட்டும் பெண் வரையப்பட்டிருக்கிறார்.*
*→யாம யாழ்*

## வயிர்:

*ஊதுகொம்பு* (Large trumpet, horn, bugle), *கொம்பு*
திண்காழ் வயிர் எழுந்திசைப்ப (முருகு. 120)
*(வயிர் = மூங்கில்)*
கலிமயில் அகவும் வயிர் மருள் இன்னிசை (நெடுநல். 99)
கொம்பு என்று மருளும் இனிய ஓசை (நச்சர்)
வயிர் இடைப்பட்ட தெள்விளி இயம்ப (அகம். 269: 18)
வியங்குகதிர் வயிரொடு வலம்புரி ஆர்ப்ப (பதிற். 67: 6)
துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய (சிலப். 12: (20)
துடியுடனே சிறுபறையும் கொம்பும்... (மேலது அடியார்க்.)
*(வயிர் - கொம்பு)*
ஆடுகள வயிரின் இனிய ஆலி (அகம். 378)
*(வயிரின் ஓசை, பறக்கும் மயிலின் அகவலை ஒத்தது)*
↑ வயிரம்பாய்ந்த மரத்தால் செய்யப்பட்டதால் வயிர்
*← த. க. க 97/IV*

## வயிரவி:

*பயிரவி (பைரவி) என்ற பண்.*

## வயிரியம்:

*வயிர் என்ற இயம் (இசைக்கருவி)*
மானவிறல்வேள் வயிரியம் எனினே (மலைபடு. 164)

## வயிரியர்:

1. *பாணர், கூத்தர்*
விழவின் ஆடும் வயிரியர் மடிய (மதுரைக் 628)
யாணர்ப்புலவரொடு வயிரியர் வருக... (மதுரைக். 750)
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்கு ஈத்த (புறம். 9: 9)
அருங்கறை அறைஇசை வயிரியர் (பரிபா. 10: 130)
வயிரியமாக்கள் பண்ணமைத் தெழீஇ (பதிற். 29)
2. *முழவு வாசிப்போர்*
புலம்புரி வயிரியர் நலம்புரி முழவின் (நற். 100:10)

மண்ணமை முழவின் வயிரியர் (புறம். 164)
(இயம் - இசைக்கருவி; இயர் - இசைக்கருவியாளர்)
↑வயிர் (ஊதுகருவி) வாசிக்கும் கருவியாளரும் ஆகலாம்.

## வயிறு: → பத்தர்

## வர்த்தனை:

1. = வட்டணை.
வட்டித்த்து
வர்த்தனை வட்டணையா... யிற்று (சிலப். 21: 45அரும்)
→ வட்டணை
2. ஏறு, இறங்குநிரலில் சுரம் பாடுதல்
வர்த்தனை நான்கு மயலறப் பெய்தாங்கு (சிலப். 3:58)
ஆரோகணமாதலானும்... அவரோகணமாதலானும் இரண்டு கூறும் இப்படிச் செய்தல் வர்த்தனை யாதலின்... (மேலது அரும்)
3. ஓர் அடைவு; தேசிக்குரிய கால்களுள் ஒன்று.
← சிலப். 3: 16 அடியார்க். அடிக்.

## வர்ணம்: → வண்ணம் [(3)]

## வர்ணமெட்டு: → வண்ணமெட்டு

## வர்ணனை தரு: → வண்ணனை தரு

## வர்ஜசுரம்: → ஒரூஉக்கோவை

## வர்ஜப்பிரயோகம்: → இடைவிட்டொலித்தல்

## வர்ஜராகம்: → ஒரூஉப்பண்

## வரவுசுரம்:

சுரம் பாடுதலில் உரிமையான சுரங்கள் இயல்பாக வருவது.

## வராடி:

1. பாலையாழ்த்திறத்துள் ஒன்று
தக்கராகம்... வராடி... பாலையாழ்த்திறமென்ப (பிங்க. 1381)
2. வராடி என்பது பண்களின் பின் ஒட்டு (suffix)
ஆரியவராடி கொல்லிவராடி
தீபவராடி என ஒரு மூன்றும்
ஆகும் வராடிக்கு அடைத்த பல்பெயரே (திவா. 1889)
↑ வராடி பின்னாளில் வராளி ஆகியிருக்கலாம்.
எடு:- புன்னாக வராளி, பந்துவராளி

## வராளி:

1. பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 56)
→ வராடி
2. யாழ்வகை (பரத. ஒழிபி. 15)

## வரி:

1. வண்டு
அரியே... வரியே... வண்டு எனப்படுமே... (திவா. 578)
அறுபதம், ஞிமிறு... வரி, வண்டே... (பிங்க. 2382)
2. இசையின் நரம்பு (சுரம்)
எழுவகை நிலத்தினும் எய்திய வரிக்கும் (சிலப்.14:153)
... குரல்முதலான ஏழுநரம்பு என்றுமாம் (மேலது அரும்)
3. கூத்து, நடிப்பு, நாட்டியம்
எடு:- எண்வகை வரி - சிலம்பு (வேனில்காதை); வேட்டுவவரி
4. இசை நாடகம்
வரி – வரிக்கூத்து (சிலப். நாட்டார் பக். 37/I)
5. இசை
வரிநவில் கொள்கை (சிலப். 13: 38)
... சொல், வரி, பாண்... இசை (நாம. தீப. 678)
(வரி = இசை; பாட்டு)
6. இசைப்பாட்டு, உரு, ஆற்றுவரி, சார்த்துவரி, கானல்வரி.
வரியே, பாடலும் ,எழுதலும், வடிவும் (திவா. 2222)
ஆடலும், வரியும், பாணியும், தூக்கும் (சிலப். 14: 150)
'வரி' என்பது பாட்டுக்கும் கூத்துக்கும் உரிய பொதுப் பெயர். (சி. கா. இ. பக். 58)
7. கூத்திற்குரிய வெண்டுறைப் பாட்டுள் ஒரு வகை.
எடு:– தரு (யா.வி.)
8. ஓர் இசைமுறை
வரிப்பாடலாவது பண்ணும், திறமும்... ஒரு நெறியன்றி... எட்டன் இயல்பும் ஆறன் இயல்பும் பெற்று... சந்தியும் சார்த்தும் பெற்றும் பெறாதும் வரும். (சிலப். 7: 16 அரும்)
9. நாடகக் காப்பிய உறுப்புகளுள் ஒன்று.
← E.T.L. பக். 138/I
10. விலக்கு உறுப்புள் ஒன்று
விலக்குறுப்பாவன: ... பொருள், யோனி... வரி, சேதம் என இவை (சிலப். 3: 13 அடியார்க்.)
11. நடம், நடனம்
வரி என்றது நடத்தை (சிலப். 8: 77–108 அரும்)

## வரிக்கூத்தின்குலம்:

பல்வகை வரிக்கூத்துகளை 19 கண்ணிகளால் (கலிவெண்பா) அமைந்த மேற்கோள் பாடல் மூலம் (சிலப். 3: 13 உரையில் அடியார்க்கு நல்லார்) குறிப்பிடுகின்றார்.
"சிந்துப்பிழுக்கையுடன் சந்தியோர் முலை... கோத்தவரிக் கூத்தின் குலம்"

## வரிக்கூத்து:

கூத்து வகைகளுள் ஒன்று; இசைநாடகம் (Opera)
குரவையும் வரியும் விரவல செலுத்தி (சிலப். 3: 24)
குரவைக் கூத்திற்குரிய கால்களும் வரிக்கூத்திற்குரிய கால்களும். (மேலது. அடியார்க்.)
குரவைக்கூத்தும், வரிக்கூத்தும் தம்மில் விரவாத படியும் (மேலது. 3: 12 – 25)

**வரிச்சாந்திக்கூத்து:**
*கொலைப்பட்ட மாந்தரைப் பற்றிய துன்பியல் உணர்வை அமைதிப்படுத்தும் இசை நாடகம்.*
எடு: சிலப்பதிகாரம்
இருவகைக்கூத்தாவன:–... வரிக்கூத்து, வரிச்சாந்திக்கூத்து
(சிலப். 3: 12 அடியார்க்.)

**வரிசை மகளிர்:** *விறலியர், வரிசைமாதர்*
அடுப்புத் தொழிற்கு உரியரல்லாத வரிசைமகளிர்
(பதிற். 18: 6 உரை)
வரிசை மாதர் சிலம்போசை (திருவாலவா திருநகரச்.6)

**வரிதகம்:**
*32 அடியால் வரும் இசைப்பாட்டு.*
வரிதகம்... முப்பதிரண்டடியான் வருவது... வரிதகம் எண்ணான்கு...
(சிலப். 3: 13 அடியார்க்.)

**வரிநவில்கொள்கை:**
*இசைபாடும் கொள்கை*
*வரி - ஈண்டுக் காமங்கண்ணிய இசைப்பாட்டு.*
வரிநவில் கொள்கை மறைநூல் வழுக்கத்து
புரிநூல் மார்பர் உறை பதிச் சேர்ந்து (சிலப். 13: 38–9)
வரிப்பாட்டைப் பயிலும் கொள்கையோடு பொருந்தி வேதநூல் கொள்கையினின்றும் வழுவுதலையுடைய முப்புரிநூல் அணிந்த மார்பினையுடையோர் வதியும் பதியைச் சேர்ந்து.
(மேலது நாட்டார்)
"பிரமாணர் பாட்டுப்பாடுவது கூத்தாடுவது... இப்படிக் கொத்த சாத்திர விருத்தமான கருத்தினால் பொருளைத் தேடிக் கொள்ளக் கூடாது" (மனுதர்மசாத்திரம் 4ஆம் அத். 15 ஆம் விதி)
← தே.நே. *120*/II

**வரிப்பாடல்:**
*இசைப்பாடல்; வண்ணனைப் பாடல் (வரிப்பது = வண்ணிப்பது); ஆற்றை வண்ணிக்கும் இசைப்பாடல் ஆற்றுவரி.*
← *தமிழர் இசை. பக். 306*

**வருகைத்தரு:** = பிரவேசதரு, பிரவேசிக தரு, அறிமுகதரு.
*நாடகத்தின் கதைமாந்தர் முதன்முதலில் மேடைக்கு வரும்போது தம்மை அறிமுகப்படுத்தும் பாடல். திரைக்குப்பின் இருந்து பாடிய பின்னர், திரைக்கு வெளியில் வந்து பாடுவர். இதுவே வருகைத்தரு.*
← *த. க. க. 269*/III

**வருணப்பிரியை:**
பண்களில் ஒன்று (பரத இராக. பக். 104)
↑ இது இன்றைய அமிர்தவர்சனியாகலாம்

**வருத்தமானக்கை:** → மிகுதிக்கை

**வருத்தமானம்:** → மிகுதிக்கை

**வருத்தமுற்றோன் அவிநயம்:**
*24 அவிநயங்களுள் ஒன்று.*
வருத்தமுற்றோன் அவிநயம் வகுப்பின்... உணர்ந்திசி னோரே.
(சிலப். 3:13 அடியார்க்.)

**வருத்தனை:**
*கூத்தாடும் போது சுற்றி மீண்டும் திரும்புவது*
(Turing movemnet in dancing)
... வருத்தனை நான்கு... (சிலப். 3: 12 அடியார்க்.)

**வருத்தனை நான்கு:**
அபவேட்டிதம், உபவேட்டிதம், வியாவர்த்திதம், பராவர்த்திதம்
(சிலப். 3: 12 அடியார்க். அடிக்.)
→ வருத்தனை

**வருமுறைப்பாலை:** *முறையாக வரும் பாலை.*
குரல் குரலாக வருமுறைப்பாலை (சிலப். 28: 33)
*(குரல்குரலாக வருமுறைப்பாலை - செம்பாலை - அரிகாம்போதி)*
*(முறை - வலமுறை மற்றும் இடமுறையையும் சுட்டுவது)*
← *தமிழிசைத்தளிர்கள் பக். 94*

**வருவது ஒற்றி:**
*பண்ணிற்கு அயலான சுரங்களை (பகைச்சுரங்கள்) விலக்கி இசைத்தலே வருவது ஒற்றல்.*
வந்தது வளர்த்து வருவது ஒற்றி (சிலப். 3: 65)
வருவது ஒற்றி என்றது – அந்தப்பண்ணுக்கு அயல்
விரவாமல் நோக்கி என்றவாறு (மேலது அரும்)
ஒத்தி < ஒற்றி; ஒத்து = விலகு; விலகு என்ற பொருளில் சென்னையில் 'ஒத்து' என்பது இன்றும் வழமையில் உள்ளது.
← *ப. இ. இ. 205*

**வரைவில்லி:**
*பொதுமகள் (வரைவு + இல்லி)*
வேசி.... வேசை... வரைவில்லி... (நா.நி. 185)
*(வரைவு = திருமணம்)*

**வரைவின் மகளிர்:** *பொதுமகளிர்*
*(வரைவு - திருமணம்; வரைவு + இல் + மகளிர் வரைவின் மகளிர்)*
← *திருக்குறள் 'வரைவின் மகளிர்' என்ற அதிகாரம்.*

**வல் உழை:**
ஏழுஇசைச் சுரங்களில், நான்காவதாக வரும், உழை நரம்பின் வன்மைவகை

வல்உழை - (பிரதிமத்திமம் ) - ம²

**வல்லகி:** → வல்லரி

**வல்லசி:** → வல்லரி

**வல்லபம்:** கடினமான அவிநயம்.
கைகாட்டி வல்லபம் செய்யும்... (சிலப். 3: 12 அடியார்க்.)
வல்லபங்கள் காட்டி (திருவாலவா. 13: 8)

**வல்லரி:** = வல்லசி, வல்லகி
யாழ்
தந்திரி, வீணை... வல்லரி என... யாழின் பெயரே
(திவா. 1245 புது நூற்பா)
(வல்லசி, வல்லகி - பாடபேதம்)

**வல்லிகை:** யாழ் (அக. நிக.)

**வல்லிசை:**
1. மேல் இயக்கு, தாரத்தானம் (upper octave )
2. உச்ச இசை (treble or high note)
தார, நீண்ட, உச்சமே வல்லிசைப்பேர் (சூடா. 10: 40)
தாரமு முச்சமும் வல்லிசையாகும் (பிங்க. 1421)
உச்சம், தாரம் ஓங்கும் வல்லிசை (திவா. 1867 புது)

**வல்லிசை வண்ணம்:**
வல்லெழுத்து மிகுதியாகப் பயின்று வரும் சந்தப்பாடல்.
வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே (தொ.செய். 214)
எடு:– 1. பிச்சைக்கே இச்சித்து...
உச்சித்தா ணச்சிப்போல்
வச்சத்தா ணச்சுச்சேர்
கச்சத்தான் மெச்சிப்பூ (தேவா. 1: 126: 2)
2. முத்தைத்தரு பத்தித்திருநகை (திருப்புகழ்)
3. எச்சிற்படுத்திக் கடித்துக் கொடுப்பான்
– தீராத விளையாட்டுப்பிள்ளை (பாரதி)

**வலங்காரம்:**
மத்தளத்தின் மார்ச்சனை பூசிய பக்கம் (யாழ். அக.)

**வலசாரி:**
கூத்து முதலியவற்றில் வலமாகச் சுற்றி வருகை

**வலத்தூண் இடத்தூண்:**
நாட்டிய நிகழ்ச்சிக்கு முன்பு ஆடல் மகளிர் அரங்கின் வலதுபக்க தூண் அருகிலும் தோரிய மகளிர் இடதுபக்க தூண் அருகிலும் நிற்க வேண்டும் என்ற மரபு.
வலத்தூண் சேர்தல் வழக்கெனப் பொருந்தி
இந்நெறி வகையால் இடத்தூண் சேர்ந்த (சிலப். 3: 132 – 33)
மாதவி அரங்கத்திலே வலக்கால் முற்பட... வலப்பக்கத்துத் தூணிடத்தே சேர்தல் வழக்கு... இடத்தூணிலையாகிய... தோரிய மடந்தை (மேலது அரும்)
(தோரிய மகளிர் - ஆடிமுதிர்ந்த கணிகையர்; முதிர்ந்த காலத்தில் நாட்டியத்திற்குப் பாடுவோர்)

**வலந்தானை:**
ஆண்கோலாட்டம். ஆடவர் வட்டமாகச் சுற்றி வந்து கோல் அடித்தாடும் ஆட்டவகை.

**வலம்புரி:** = வலம்புரிக்கை
நாட்டியத்தின் ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று.
வலம்புரியாவது சிறுவிரலும் பெருவிரலும்... தொன்னூல் குறிப்புணர்ந்தோரே (சிலப். 3: 18 அடியார்க்.)

**வலம்புரிக்கை:** →வலம் புரி

**வலமுறை:** →வல முறைத்திரிபு

**வலமுறை இடமுறை மெலிய:**
பண்டைக்காலத்தில் யாழ் செங்குத்தாக நிறுத்தி வாசிக்கப்பட்டது.
"குழல் வாசிப்பவனுக்கு ஆரோதரணம் இடமுறையாகவும், யாழ் வாசிப்பவனக்கு வலமுறையாகவும் வழங்கி வருவதை நாம் அனுபவத்தில் இன்றும் காணலாம். (கருணா. பக். 697)
யாழ்மேல் பாலை இடமுறை மெலியக்
குழல்மேல் கோடி வலமுறை மெலிய (சிலப். 3: 91– 92)

**வலமுறைத்திரிபு:**
= தொன்முறை இயற்கை, தொன்றுபடு முறை, வலமுறை, ஏறு நிரல் முறை (Clockwise rotation).
வல முறையில் புதிய பண் உருவாக்கும் முறை.
குரல் குரலாக வருமுறைப் பாலையில்
துத்தம் குரலாத் தொன்முறை இயற்கையின்
அம்தீம் குறிஞ்சி... (சிலப். 28: 33 – 35)
செம்பாலையின் குரல் (ச) சுரத்தை அடுத்து வரும் துத்தம் (ரி²) என்ற சுரத்தால் அதாவது வலப்புறம் வரும் (ஏறுநிரல்) சுரத்தால் பண் பெயர்க்கக் கிடைப்பது குறிஞ்சிப்பண். இது வலமுறைத் திரிபு.
(செம்பாலை - அரிகாம்போதி; குறிஞ்சி - நடபைரவி)
எழுவர் இளங்கோதையார்... தொன்று படுமுறையால் நிறுத்தி
(சிலப். 17: (13)
"இதனை வலமுறை என்றாம் (மேலது அடியார்க்.)
இங்கு வலமுறையில் குரல், துத்தம் என்ற சுரநிரல்கள்

அமைவதைக் குறிப்பிடுகிறார்.

← ப. இ. இ. பக். 236,→ குறிஞ்சி

## வலவன்பாடி:

1. வில்லுப்பாட்டில் வீசு கோல்காரனுக்கு வலப்பக்கத்திலிருந்து பாடுபவன்.
2. ஒத்துப்பாடுவோன் (Sycophant)

← செ. ப அ. பிற். பக். 408

**வலிக்கட்டு:** புரி நரம்புகளை (மெட்டு) இணைக்கு யாழ் திவவின் வலிந்தகட்டு

வலிக்கட்டுத் திவவே (பிங்க. 1432)

**வலிக்குரல்:** → இரட்டித்தகுரல்

## வலிசுரம்:

மேல்தானசுரம் (Uppr octave note)

ச ரி¹ ரி² க¹ க² ம¹ ம² ப த¹ த² நி¹ நி² ச ரி¹ ரி²
0 1 2 3 4 5 6 7
0 1 2 3 4 5 6 7

இணைமுறையில் (ஏழன்முறை) ச-ப இணைச்சுரம்

ப - ரி² இணைச்சுரம்

ஆனால் ரி² – மேல் தானதுத்த சுரம் – வலிசுரம்

வரன்முறையே துத்தம் வலியா (சிலப். 17: (18)

... துத்தமென்னும் நரம்பு வலி சுரமாக... (மேலது அடியார்க்.)

## வலிதை:

ஆடல் கைகள் முப்பதுள் ஒன்று.

← சிலப். 3: 13 அடியார்க். அடிக்.

## வலிவிற்கெல்லை:

தமிழ்இசைமுறைப் பாடல்களின் மேல் எல்லை மற்றும் பாடுபவரின் மேல்தான குரல் எல்லை. அதாவது மேல்தான கைக்கிளை (க²)

வலிவிற்கெல்லை வன்கைக்கிளையே

(சிலப். 8: 43 – 4 அரும்மேற்.)

## வலிவு:

= மேல்தானம், மேல் இயக்கு, வலிவு மண்டிலம் வலிவுத்தானம் என்ற மேல்தானம் (uppr octave / தாரஸ்தாயி)

வலிவும், மெலிவும், சமனுமாக (பொருந. 55 உரை)

வலிவும், மெலிவும், சமனுமெல்லாம்... (சிலப். 3: 93)

... வலிவும், மெலிவும், சமனுமென்று சொல்லப்படா நின்றதானநிலை...

(மேலது அரும்)

மெலிவு நான்கும், சமம் ஏழும், வலிவு மூன்றுமாய்

(சிலப். 3: 80 – 81 உரை)

மூவகை இயக்கமுமுறையுளிக் கழிப்பி (சிலப். 8: 42)

மூவகை இயக்கமாவன வலிவு மெலிவு சமம். (மேலது அரும்)

**வலிவுத்தானக்குரல்:** → இரட்டித்த குரல்

## வலிவும் மெலிவும் சமனும்:

இசையின் மூன்று தானமாவது: வலிவு, மெலிவு, சமன் (Upper, lower and middle octave).

நமது இசைமுறை மற்றும் பாடல்கள் கீழ்த்தான (மெலிவு) உழை முதல் மேல்தான கைக்கிளை வரைஅமைந்துள்ளன.

(ம¹ ம²... ச ரி¹ ரி²... ச ரி¹ ரி² க¹ க²)

உழை முதல் கைக்கிளை இறுவாய்க்கட்டி... (சிலப். 13: 109)

மேலது உழை கீழது கைக்கிளை (சிலப். 3: 80)

மேல்தான ம¹ ம² ப என்ற சுரங்களைத் தொடுவது பாடகரின் குரல் வளம், பாடுதிறன் மற்றும் பயிற்சியைப் பொறுத்தது.

கீழ்த்தான 'ப' முதல் மேல்த்தான 'ப' வரை பாடுவது.

வலிமையான குரல்வளம் கொண்ட பாடகர்களால் மட்டுமே முடிகின்ற திறன்.

வலிவும் மெலிவும் சமனுமென்று சொல்லப்படா நின்ற தான நிலையினையுடைய இசைக்கூறுபாடு (சிலப். 3: 93 – 94 அரும்)

← வலிவு

**வலிவு மண்டிலம்:** → வலிவு

## வழக்கடிப்பாட்டு:

தொன்று தொட்டு வரும் பாட்டு.

தொழிற்படக்கிளத்தலும் வழக்கடிப்பாட்டிற்குரித்து

(நன். 399 மயிலை)

**வழங்கு:** கூத்து

பேய் மகள் வழங்கும் பெரும் பாழாகும் (பதிற். 22: 37)

## வழி எதுகை:

அடுத்தடுத்த சீர்களிலும் எதுகை தொடையாக அமைவது.

எடு:-

1. மண்டலம் பண்டு உண்ட திண்டேர் வரகுணன்.
2. இடித்தலை வானவன் முடித்தலை உடைத்த
தொடித்தோள் தென்னவன் கடிப்பிகுமுரசே (சிலப். 17: (38)

(வழிமொழி - சம்பந்தர் சொல்லாட்சி)

← செ. ப. அ. 194; 3547; → வழிமொழி

## வழித்திறம்:
*கிளைப்பண்கள்; சேய்ப்பண்கள் (வர்ஜராகம் ஜன்யராகம்; Derivatives)*
ஒரு பெரும் பண்ணினின்றும் (மேளகர்த்தா) பிறந்து அப்பெரும்பண்ணின் சுரங்களில் சிலவற்றையே எடுத்துக் கொள்ளும் சிறு பண்கள்.
எடு:– முல்லைப்பாணி (மோகனம்) என்ற கிளைப்பண், முல்லையாழ் (அரிகாம்போதி) என்ற பெரும் பண்ணிலிருந்து பிறந்த வழித்திறம்.
குழலினும் யாழினும் குரல் முதல் ஏழும்
வழுவின்றி இசைத்து வழித்திறம் காட்டும் (சிலப். 5: 35–6)
முல்லையாழ் (அரிகாம்போதி) - ச ரி$^2$ க$^2$ ம$^1$ ப த$^2$ நி$^1$
முல்லைப்பாணி (மோகனம்) - ச ரி$^2$ க$^2$ ப த$^2$
← *த. க. க. 17/I*

## வழிநடம்: *மரபுக்கூத்து.*
வழி வழியாகத்தான் ஆடுகின்ற கூத்து. (கல்லா. 99: 2 உரை)
*(உமையவள் ஆடுகின்ற மரக்கால் கூத்து)*
*(நடம் = கூத்து, ஆடல்)*

## வழிநடைச்சிந்து:
ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்லும் பொழுது ஒருவர் தன்னோடு வரும் பெண்ணுக்கு வழியிலுள்ள காட்சிகளையெல்லாம் காட்டிச் செல்லும் பாங்கில் அமைந்திருக்கும் சிந்துப்பாடல்.
எடு:- *சங்கரநயினார் கோவில் வழி நடைச்சிந்து (1915) கச்சுப்பிள்ளையம்மாள் வழி நடைச்சிந்து*
← *முச். இலக். பக். 42,* → வழி நடைப்பதம்

## வழிநடைப்பதம்:
*வழிநடைச்சிந்து போல் பதமாகப் பாடுவது.*
எடு:- 1. *கள்ளக்குறிச்சி தாலுக்கா நல்லாற்றூர் மகம் மாரியம்மன் இரதோற்சவ வழிநடைப்பதம் (1916)*
2. *சென்னை கந்த சுவாமி வேடர்பறி மஹோற்சவ வழி நடைப்பதம்.*
3. *சிலப்பதிகாரத்து நாடுகாண் காதையுள் இவ்வண்ணனைப் பகுதி நெடிய ஆசிரியத்தால் பாடப் பட்டுள்ளது.*
← *முச். இலக். பக். 28&42;* → *வழிநடைச்சிந்து*

## வழிபறித்துக்கொட்டும்பறை:
= ஆறெறி பறை
வழிச்செல்வோரைச் சூறை கொள்ளும் போது கொட்டும் பறை.
ஆறெறி பறையும்... (சிலப். 12: 40)
ஆறெறி பறை – வழி பறித்துக் கொட்டும் பறை. (மேலது அரும்)

## வழிமொழி:
1. *பாடல்களின் சீர்களில் அமைந்த எதுகை.*
← *வழி எதுகை*
2. ஒருவகைச் சந்தப்பாட்டு
**'சுரருலகு நரர்கள்பயில் தரணிதல முரணழிய அரணமதில்'**
என்று தொடங்கும் (சம்பந்தரின் மூன்றாம் திருமுறை 67ஆம் பதிகம்) பாடல் முதலியன வழிமொழிச் சந்தப்பாடல்கள். வழி எதுகை (வழிமொழி) நான்கடியிலும் எல்லாச் சீர்களிலும் வருகின்றது. இப்பதிகம் 'வழிமொழித் திருவிராகம்' எனப் பெயர் பெறும்.
தமிழ்விரகன் வழிமொழிகள் (தேவா. 3: 67: 12)
← *த. இ. பே. 296/15*

## வழிமொழித்திருவிராகம்:
*சம்பந்தரின் மூன்றாம் திருமுறை 67 ஆம் பதிகம் இவ்வகையான சந்தப்பாடல்களில் அமைந்தது.*
சுரருலகு நரர்கள்பயில் தரணிதல முரணழிய (67 ஆம் பதிகம்)
*எல்லாச் சீர்களிலும் வழி எதுகை வந்தமையாலும் அராகம் தொடுத்ததாலும் இது வழிமொழித் திருவிராகம்*
← *வழிமொழி*

## வழிமோனை:
இனஎழுத்தால் வரும் மோனைத்தொடை
*(அனுமோனை)*
← *செ. ப. அ. 196 & 3546*

## வழியசை:
கலிப்பாவின் ஓர் உறுப்பு (கலித். 90 உரை)

## வழிவங்கியம்: → முதல், வழிவங்கியம்

## வழுக்கடைவு:
*பாதத்தின் குதிக்கால் பகுதி சேற்றில் வழுக்குவது போன்ற (இழுத்து வழுக்குவது போன்ற) நாட்டிய (கூத்து) அடைவு.*

## வள்ளி:
1. ஒரு கொடியின் பெயர்
இலதை, வள்ளி, வல்லி (சூடா. 4: 30)
2. *மரம் மற்றும் கொடித் தொகுதியின் பெயர்.*
எடு:- *மரவள்ளி, சக்கரைவள்ளி, வெற்றிலை வள்ளி*
3. *பழந்தமிழர் ஆடிய ஒரு வகை வரிக்கூத்து; குறிஞ்சி மகளிரின் கூத்து.*
வாடா வள்ளி வயவர் ஏத்திய (தொ. பொ. 56)
கொடிநிலை கந்தழி வள்ளி (தொல். புறத். 33)
வாடா வள்ளியின் வளம் பல தரூ உம் (பெரும்பாண். 370)
↑ வள்ளி என்ற குறிஞ்சிநிலக் கொடிப்பெயர், மரம் மற்றும் கொடித்தொகுதிக்கு ஆகி, தெய்வத்திற்கு ஆகி, கூத்திற்கு ஆகி, வள்ளைப் பாட்டிற்கு ஆகி திணைத்தொகுதி(core) ஆகின்றது.

## வள்ளிக்கூத்து: = வாடாவள்ளி, வள்ளி
வள்ளி தன் கோலம் கொண்டு ஆடும் கூத்து.
சிலம்பு வேட்டுவவரி 12: (5) (6) (7) ஆகிய மூன்று

பாடல்களும் வள்ளிக்கூத்தின் பாற்படுவன.
இவை மூன்றும் " வாடா வள்ளி வயவர் ஏத்திய" (தொ. பு. 5)
என்பதனான், வள்ளிக்கூத்து... மண்டம ரட்ட... வள்ளிதன்.
கோலம் கொண்டு ஆட...
.(மேலது நச்சர்.மேற். சிலப். 12: 7 அடியார்க். மேற்.)
← சி. கா. இ. பக்.87; தொ. பு 5. நச்சர்; → வள்ளி

## வள்ளை:

1. ஒரு கொடி
வள்ளை மென்கால் அறுக்கும் ஊரன் (ஐங். 26: 2)
வள்ளைத்தாள் போல்வடி காது இவை காண் (மணிமே. 20: 53)
அம்தூம்பு வள்ளை ஆய்கொடி மயக்கி (அகம் 6: 17)
அரில் படு வள்ளை ஆய்கொடி மயக்கி (அகம் 36: 5)
2. = வள்ளைப்பாடல், உரல், உலக்கை, அவலிடி
உரல்பாட்டு; உலக்கைப்பாட்டு;
மகளிர் நெல்குத்தும் போது பாடும் பாட்டு.
குன்றாச்சிறப்பின் கொற்ற வள்ளையும் (தொல். பொ. 65)
தினை குறுமகளிர் இசைபடு வள்ளையும் (மலைபடு. 342)
பாவடி யுரல பருவாய் வள்ளை (குறுந். 89: 1)
துன்றக்கிடக்கும் துறைதுறை வள்ளை (திருக்கோவையார். 221)
சிலம்பு கானல் வரி 7 : (20) (21) (22), 29: (26); (27); (28)மற்றும் திருப்பொற் சுண்ணம் - மாணிக்க வாசகர் ஆகியன வள்ளைப்பாட்டு.
பன்மலர்க்காவின் அம்மனை வள்ளையும் (பெருங். 1: 40: 85)
உலக்கைப்பாட்டே வள்ளைப்பாட்டென்ப (பிங்க. 2094)
வகைசால் உலக்கை வயின்வயின் ஓச்சி (கலித். 4: 5)
வெதிர் நெற்குறுவா நாம் வள்ளை அகவுவம்வா(கலித். 42: 7 – 8)
அவலிடி யூராளி யோ கினிச்சி (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)
துளை அரைச்சீர் உரல்தூங்க (பெரும்பாண். 54)
உறங்குகின்ற கும்பகர்ண (கம்ப. யுத்த கும்ப. 45)
பைப்பொன்றை .. அம்மனை வள்ளையுடன்... (சூளா. 1660)
தினைக்குறு வள்ளையும் (சிலப். 25. 26)

## வளர்முல்லை:

= வைகறைப்பாணி,புறநீர்மை,நேர்திறம்
மருதப் பாணியுள் ஒன்று; சிவரஞ்சனி, சிவப்பிரியா.
கிணை நிலைப்பொருநர் வைகறைப்பாணியும் (சிலப். 13: 148)
கிணை – மருதப்பறை; பொருநர் –வைகறைபாடுவார்
(மேலது உரை)
மாறு முதல் பண்ணியபின் வளர் முல்லைப் பண்ணாக்கி
(பெரியபு. ஆனாய. 25)
← த. க. க. 242/I, 227/II, 228/III, 282/III, 118/IV, 93/V,

## வளை: சங்கு; ஓர் இசைக்கருவி

வயிரும் வளையும் இணைத்தே இலக்கியங்களில் பேசப்படுகின்றன.
வயிரும் வளையும் ஆர்ப்ப... (முல்லை. 92)
வளைநரல வயிர் ஆர்ப்ப (மதுரைக். 185)
பயிர்வளை அரவமொடு வயிர் எடுத்து ஊதி. (பெருங். 1: 38: 4)
வயிர் எழுந்து இசைப்ப வால்வளை ஞரல (முருகு. 120)
திமிலை முழக்கமும் மருவரு வால் வளைத்துணையு
(தெ. இ. க. 7 863; த. க. சொ. 544)

## வளைந்தகை: ஒற்றைக்கை முத்திரை.

"பெருவிரல் குஞ்சித்து சுட்டுவிரல் முடக்கி ஒழிந்தவிரல் மூன்றும் நிமிர்த்தி வளைவது என்னை? 'அராள மாவ தறிவரக் கிளப்பிற் பெருவிரல் குஞ்சித்துச் சுட்டுவிரல் முடக்கி, விரல்கள் மூன்று நிமிர்த்தகம் வளைத்தற்குரிய தென்ப வுணர்ந்திசினோரே"
(சிலப். 3: 18.அடியார்க்.)
← த. க. க. 58/I.

## வளையல் சிந்து:

மகளிர் பூப்புச் சடங்கு, வளைகாப்புச் சடங்குகளில் பாடப்படும் சிந்துப்பாடல் வகை.
(சங்கு அறுத்து வளையாக அணிந்ததால் வளையல்)
(வளை = சங்கு)

## வளையின் வாய்க்கை:

= கடகம், கடகமுகம், கடகக் கை
ஒற்றைக்கைகளுள் ஒன்று.
கடகமுகமே கருதும் காலைப், பெருவிரல் நுனியும் சுட்டுவிரல் நுனியு, மருவ வளைந்து அவ்வுகிர்நுனி கௌவி, ஒழிந்த மூன்றும் வழி வழி நிமிர,
மொழிந்தனர் என்ப முடிபறிந்தோரே (சிலப். 3: 18 அடியார்க்.)
(வளை - சங்கு)

## வறுவாய்:

யாழ் உறுப்புள் ஒன்று; யாழ்ப்பத்தலின் உள்ளே இருக்கும் காலி இடத்தில் ஒலி எதிரொலித்து வெளியே வரும் வாய்ப்பகுதி (sound hole).
சுனை வரண்டன்ன இருள் தூங்கு வருவாய் (பெரும்பாண். 10)
எண் நாள் திங்கள் வடி விற்றாகி
அண் நா இல்லா அமைவரு வறுவாய் (பொருந. 11– 12)
மணி நிரைந்தன்ன வனப்பின் வாய் அமைத்து (சிறுபாண். 223)
← பா. கை. பக். 114 - 17

## வன் குரல்: →இரட்டித்த குரல்

## வன்கை:

தோற்கருவி வகையுள் ஒன்று
மத்தளம், கரடிகை, வன்கை ( திருவாலவா. 1: 9)

## வன்கைக்கிளை:

நின்றநரம்பிலிருந்து (ச), அதைவிடுத்து நாலாம் நரம்பாக வருவது (அந்தரகாந்தாரம்)
ச ரி¹ ரி² க¹ க²
0 1 2 3 4
இது நட்பு நரம்பு எனப்படும் (major third chord)
இணை, கிளை, பகை, நட்பு என்று இந்நான்கின் (சிலப். 8: 33)
நட்பென்றது நாலாம் நரம்பு (மேலது அரும்)
"ஏழா நரம்பு இணை, நாலு நட்பு... ஆகும்"

(இசைமரபு நூற்பா : கல்லா. 100: 14 உரை. மேற்.)
வலிவிற் கெல்லை வன்கைக்கிளையே (சிலப். 8: 43 – 4 அரும். மேற்.)
← த. க. க 73/II

## வன்தாரம்:

காகலி நிடாதம், 'நி²'
ச ரி¹ ரி²... நி¹ நி²
↑

## வன்துத்தம்:

ஏழு இசைச்சுரங்களில், இரண்டாவதாக வரும், துத்த நரம்பின் வன்மைவகை.
வன்துத்தம் (சதுசுருதிரிடபம்) - ரி²

## வன் பால்: → சமப்பால்

## வன்விளரி:

ஏழு இசைச்சுரங்களில், ஆறாவதாக வரும் விளரி நரம்பின் வன்மை வகை
வன்விளரி (சதுசுருதிதைவதம்) - த²

## வனப்புவண்ணம்:

வண்ண (சந்த)ப்பாடல் வகையுள் ஒன்று.
எண்ணிய நூல் பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு என்னும்.
(பெரியபு. ஆனாய. 28)
வண்ணம் ஒரு வகையான் மூன்று வகைப்படும். பெருவண்ணம், இடைவண்ணம், வனப்புவண்ணமென... வனப்புவண்ணம் நாற்பத்தொன்றாய் வரும் (சிலப். 3: 13 அடியார்க்.)

## வனம்: = வனமாலி

ஒருவகைத்தாளம்; ஏழு அலகுடையது.
வனமும் பிதாவும் பாணியில் வகுத்து (கல்லா. 99: 20)

## வனமாலி: →வனம்

# வா

## வாக்கேயக்காரர்:
*பாடல் இயற்றல், இசையமைத்தல், பாடுதல் என மூன்று இசை வினைகளையும் தான் ஒருவரே ஆற்றும் வல்லமையுடையோர்.*

வாக் - சொல் (word); இயற்பாடல்
கேயம் - இசை (music)
காரர் - செய்பவர் (one who makes)
← Indian Music (B.C. Deva) P.65

## வாகை:
*வெற்றி பெற்றவரைப் புகழ்ந்து பாடும் ஒரு துறை.*
*எடு:- பதிற். 35*
*(வாகை = வெற்றி)*
*← த. வீ. க. பக். 271*

## வாங்கா:
*ஊதுகொம்பு வகையைச் சேர்ந்த ஓர் இசைக்கருவி.*
**வாங்காவும் கானாவும் (மான். விடு. 239)**

## வாச்சியக்கூறு:
*தாளம் இயக்கும் முறை. பாடல் மற்றும் கூத்துகளுக்கான தாள வாசிப்பு முறை.*
**அகக்கூத்துக்குரிய பாடல்களும் அவற்றுக்கு அடைத்த வாச்சியக்கூறும் (சிலப். 3: 12 – 25 அரும்)**
**கொட்டுமென்றது – கூத்து விகற்பங்களுக்கு அமைந்த வாச்சியக்கூறுகளும் என்றவாறு.**
**(சிலப். 3: 14 அடியார்க்.)**
**முழவொடு கூடிநின்று வாச்சியக்கூறுகளை அமைத்தது...**
**(மேலது. 3: 141 – 2 அடியார்க்.)**

## வாச்சியங்கள்:
*வாத்தியங்கள், இசைக்கருவிகள்*
*ஒற்றைச் சங்கும் இரட்டைத்தாரையும் மற்றும் பல வாச்சியங்களும்* (EC, X, Kl, *132; த. க. சொ. 546*)

## வாச்சிய மாராயன்:
*தலைமை வாத்தியக்காரன்*
*← செ. ப. அ. 3576*

## வாச்சிய வகைகள்:
*(1) நரம்புக்கருவி*
*(2) தோல் கருவி*
*(3) துளைக்கருவி*
*(4) உலோகக் கருவி (கஞ்சக்கருவி)*

## வாசகப்பா: *நாடகக் காப்பியம்*

## வாசாப்பு:
*இயேசுவின் பாடுகள் (வியாகுல செபங்கள்) நீட்டி பண்ணுடன் வாசிக்கப்படுவது.*
*(எம். எஸ். காந்திமேரி முனைவர்பட்ட ஆய்வேடு பக். 239-40)*

## வாசாப்புநாடகம்:
**கதை வாசிப்புக்கு ஏற்ப பொம்மைகளை அசைத்தும் ஆட்டியும் நடத்தப்படும் நாடகம். (இசை நாடகமரபு பக். 53)**

## வாசி:
1. *குழல் (வங்கியம்)*
**வாசியே குழல் (சூடா. 11:12)**
**வங்கியம், குதிரை வாசியென்ப (பிங்க. 4048)**
**2. இசைப்பாட்டு (யாழ். அக.)**

## வாசிக அவிநயம்:
*பேச்சுக்களால் அவிநயம் செய்வது*
*← த. க. க. 187*/III

## வாசித்தல்:
*இசைக்கருவி இயக்குதல் (ஒலித்தல்)*
**மாதவி தன் மனம் மகிழ வாசித்தல் தொடங்குமன் (சிலப். 7: 20)**

## வாசிப்பு:
*தேசிக்குரிய கால்கள் (அடைவு) 24இல் ஒன்று.*
*← சிலப். 3: 16 அடியார்க். அடிக்.*

**வாட்கூத்து:**
*வாள் ஏந்தி ஆடும் ஆடல் (கூத்து) வகை.*
கழித்து வாளமலை ஆடிக்காட்டு வார். (சீவக. 783)

**வாடாவள்ளி:** = வள்ளி, வள்ளிக்கூத்து
*ஒரு சடங்காட்டம். ஆடலை உள்ளடக்கிய வளச் சடங்கு.*
வாடாவள்ளி (தொ. பு. 5)
வள்ளி என்பது ஒரு கூத்து; அஃது அந்நிலத்தின் நிகழ்தலின்
வாடாவள்ளி என்றார் (மேலது இளம்)
மண்டமரட்ட மறவர் குழாத்திடைக்
கண்ட முருகனும் கண்களித்தான் – பண்டே
குறமகள் வள்ளிதன் கோலம் கொண்டாடப்
பிறமகள் நோற்றாள் பெரிது (மேலது நச்சர். மேற்.)
வாடா வள்ளி – வாடும் கொடி அல்லாத வள்ளிக்கூத்தும்
(மேலது நச்சர்)
வாடாவள்ளி வளம் பல தரூஉம் (பெரும்பாண். 370)
கந்தழி வள்ளி (தொ. பு. 33)
வாடா வள்ளியங்காடு (குறுந். 216: 2)
← *வள்ளி ; வள்ளிக்கூத்து*

**வாடாத்தாமரை:**
*அரசர் பாணர்க்கு அளிக்கும் பொன்னால் ஆன தாமரைப்பூ.*
வாடாத்தாமரை சூட்டுவன் நினக்கே (புறம். 319:15)

**வாடாமாலை:** பொன்னரி மாலை
*பாடினிக்கு மன்னன் அணிவிக்கும் பொன்னால் ஆன மாலை.*
வாடா மாலை பாடினி அணிய (புறம். 364: 1)

**வாணன்:**
*வாணாசுரன்; பாணாசுரன்; ஓர் அவுணன்; ஒரு சிற்றரசுக்குலம்.*
*மாதிரமும் விளங்கவந்த வாணர் குலநிலை விளக்கு*
*(ஊ. தூ. இ. 14 பக். 362-64)*
*வள்ளிவிடும் அயிராபதம் வாணன் வரவிடு நாளையே*
*(தெ. இ. க. 7: 123; த. க. சொ. 548)*

**வாணபுரம்:** = வாணாபுரம்
*வாணனின் பேரூர்; சோ என்னும் நகர்*
வாணர் பேரூர் மறுகிடை நடந்து (சிலப். 6: 54)
வாணபுரத்து ... அயிராணி ஆடிய கடையமும்
(சிலப். 6: 62–3அரும்)
...சோவென்னும் நகர வீதியிற்சென்று... (மேலது. 54–5 அடியார்க்.)

**வாணா புரம்:** → வாணபுரம்

**வாணி:** *கூத்து வகையுள் ஒன்று.*
பாரதிப்பெயரும்.... ஓர் கூத்தும் வாணியாகும் (பிங்க. 4050)
வாணியே ஓர்கூத்தின் பேர் (சூடா. 11: 4)

**வாணினி:**
*நாடகக்கணிகை* (Dancing Woman)

**வாத்தியம் சேவித்தல்:**
*கோயிலில் தெய்வத்திற்கு இசைக்கப்படும் கருவி இசைச்சேவை.*

**வாத்தியம்:** *வாச்சியம்; இசைக்கருவி*

**வாத்தியார்:**
*அண்ணாவி. நாடகம், கூத்து முதலியன பயிற்றுவிப் போர்.*

**வாதி:** *நின்ற சுரம்; எடுத்துக் கொண்ட சுரம்; தொடக்க சுரம்.*

**வாதி சுரம்:** →தொடக்க சுரம்

**வாமனரூபம்:**
*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*
சிந்துப்பிழுக்கை... வாமனரூபம்.. கோத்தவரிக் கூத்தின் குலம்.
(சிலப். 3: 12 அடியார்க். மேற்.)
↑ வாமனரூபம் என்பது வாமனஉருவகம் – வாமனனாகக் கூத்தாடல் ஆகலாம்.

**வாய்ப்பறை:**
*வாய்மொழியால் அறைந்து சொல்வது.*
நாக்கடிப்பாக வாய்ப்பறை அறையினும் (சிலப். 14: 29)
... வாயாகிய பறையை அறைந்து சாற்றினும் (மேலது அடியார்க்.)
நாக்கடிப்பாக வாய்ப்பறை அறைந்தீர் (மணிமே. 25: 51)
*(நாக்கு - குறுந்தடி; வாய் - பறை)*

**வாய்ப்பாட்டு:**
*கண்டப்பாடல். வாயால் பாடும் பாட்டு* (Vocal Song)

**வாய்வதின் வந்த குரவை:**
வாய் வதின் வந்த குரவை... (சிலப். 18: 47)
புத்தி பூருவமாக எடுத்த குரவை (மேலது அரும்)
வாய்ப்புடைத்தாகிய உற்பாத சாந்திப் பொருட்டு ஆடிய இக்குரவை
(மேலது அடியார்க்.)

**வாயில்:**
1. *கரணம்*
வாய், புலம், திறம், கரணம், துவாரம், வாயில் (பிங்க. 4052)

2. *வாயில்*
*வாயில் -- காரணம், வழி, காதலர்க்கு இடைநின்றார்* (Messenger, Mediater)
பாணர், கூத்தர், விறலி, தோழி
வருந்தொழிற்கருமை வாயில் கூறினும் (தொ. பொ. 111)
பரத்தை, வாயில் என இரு வீற்றும் (தொ. செ. 196)
வாயில் உசாவே (தொ. செ. 197)
3. *ஒரு வகைக்கூத்து*
வாயிற்கூத்தும் சேரிப்பாடலும் (பெருங். உஞ். 37: 88)

## வாயிலோர்:

= கூத்தர், பாணர், விறலி, தோழி
வாயிலோர் தமிழ்க்கூத்தர் (திவா. 215)
வாயிலோரே நெடுந்தமிழ்க் கூத்தர் (சூடா. 2:38)

## வாயொலி: *பாடல்*

கவியின் வாயொலிகள் (பெரியதிருமொழி. 4: 5: 10)
← *செ. ப. அ. 3605*

## வார்த்திகம்: நான்கு மாத்திரை கூடிய கனை (பரத. தாள.28)

## வார்தல்:

*நெடுமையாதல், அள்ளுதல், கொழித்தல், உயர்தல், அதிகமாதல், நீளுதல்* (to be long); நெடுமை (length, elongation). *யாழ் இசைக்கரணங்களுள் ஒன்று.*
வாரியும் வடித்தும் (பொருந. 23)
வார்தல், வடித்திடல் முதலாம் எட்டிசைக் கரணமும் (திருவிளை. இசைவாது.7)
வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல் (சிலப். 7: 12)
உறியொடு வாரியுண்டு (கம்ப. ஆற்றுப். 15)
*(வாரு + உண்டு = வாரியுண்டு)*
*வாரு - தல் - மிகுதியாகக் கொண்டு செல்லுதல்*
வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள (தொ. உரி. 19)
வரன்றல், வாருதல், வார்தல், கொழித்தல் (திவா. 1662)
.. வார்தல் .. நெடில்... நீளப்பேர்... (சூடா. 8: 13)
உவப்புப்புரை ... ஓங்கல், வார்தல், உறை, உயர் என்ப (பிங்க. 1760)
வார்தல்... வடிதல், நெடில், இவை நீளம் (திவா. 1374)
நீர்வார் கூந்தல் (புறம். 247: 5)
*(வார் - நீளமான)*

## வார்தல் சுரம்: = வாருதல்சுரம், நியாசசுரம்

*பண் பாடும்போது நிறுத்தி நீண்டு ஒலிக்கும் சுரம்*(staying note)
துத்த (ரி) வாருதல் பண். – பைரவி, சகானா
கைக்கிளை (க) வாருதல் பண் – அரும்பாலை (சங்கராபரணம்)
உழை (ம) வாருதல் பண் – குந்தலவராளி, கமாசு
இளி (ப) வாருதல் பண் – ஆனந்த பைரவி
விளரி (த) வாருதல் பண் – காம்போதி, அடாணா
தார (நி) வாருதல் பண் – நாட்டை, அம்சத்துவனி
(வாருதல் – அள்ளுதல்)
← *த. க. க. 337*/II,→ வார்தல்

## வாரநடை:

*இரண்டாம் நடை; இரண்டாம் காலம், மத்திம காலம், சமகாலம். பாடல், தாளம் ஆகியவை இசைக்கப்படும் வேகத்தைக் குறிப்பது. பாடலின் சொல் புரியும்படியும், இசை இனிமை பயின்று வரும்படியும் இசைக்கப்படும் நடை.*
வார நிலத்தைக் கேடின்று வளர்த்து... (சிலப். 3:67)
வாரப்பாடல் சொல்லொழுக்கமும் இசையொழுக்கமும் உடைத்தாதலானும் (அரும்.)
↑ வார நடைஎன்ற இரண்டாம் நடையில் பாடப்படுவது வாரப்பாடல்.

## வாரநிலம்:

*இரண்டாம் காலம் பாடும் நேரம்.*
*பாடல் அடியை இரண்டாம் காலத்தில் பாடுவதற்கு எடுத்துக் கொண்ட நேரம். இது முதல் காலத்தில் பாடும் நேரத்திற்குச் செம்பாதி நேரம் ஆகும்.*
வார நிலத்தைக் கேடின்று வளர்த்து... (சிலப். 3: 67)
← *த. க க. 107*/IV

## வாரப்பாடல்:

= மத்திமகால சாகித்தியம், வாரநடைப்பாடல்
*முதல் நடையில் அமைந்த பாடல்களின் தொடுப்பு (அனுபல்லவி) அல்லது முடிப்பு (சரணம்) ஆகியவை களின் இறுதியில் இரண்டாம் காலத்தில் (மத்திமகாலம்) சில பாடல் பகுதிகள் அமைந் திருக்கும். அவ்வகைப்பாடல் மத்திமகாலசாகித் தியம் எனப்படும். முதல் வாரம், இரண்டாம் வாரம் (முதல் நடை மற்றும் இரண்டாம் நடை - வாரநடை) பாடும் பண்டைய மரபின் வழி வந்தது. முத்துசாமி தீட்சிதரின் கிருதிகள் பல இம்முறையில் அமைந் தவை.*
வாரம் இரண்டும் வரிசையில் பாட (சிலப். 3: 136)

## வாரம்:

1. *காலம், காலம் பாடல், நடை*
*முதல் இரு நடைகளில் பாடப்படும் பாடல்.*
*முதல்வாரம் - முதல் காலம் - முதல் நடை*
*இரண்டாம் வாரம் - இரண்டாம் காலம் - வாரநடை*
*ஒப்பு : சதுர்காலம் பாடுதல்*
வாரம் இரண்டும் வரிசையில் பாட (சிலப். 3: 136)
வல்லோன் புணரா வாரம் போன்றே (தொ. ம. 108)
வாரம் பாடும் தோரிய மடந்தையும் (சிலப். 14: 155)
2. *சுரிதகம், அடக்கியல், வைப்பு, போக்கியல், சுழியம், போக்கு.*
*கலிப்பா உறுப்புள் ஒன்று.*
எருத்தே... வாரமொடு அந்நிலைக்கு உரித்தே (தொ. செய். 151)
... கூறிய பொருளை அடக்கும் இயல்பிற்றாகலின் அடக்கியல் வாரம் (மேலது பேரா.)
அடக்கியல் வாரம் தரவொடு ஒக்கும் (தொ. செ. 143)
3. *இடைப்பாடகர்*
வாரமென்பது கூறு; என்னை ? ஒரு பாட்டினைப்

பிற்கூறுசொல்லுவாரை (தொ. பொ. 662 பேரா.)
4. பற்று
தாளமிடல்; ஒற்றறுத்தல்
ஓரொற்றுவாரம், ஈரொற்றுவாரம்; தாளத்து ஒரு மாத்திரையும், இரண்டு மாத்திரையும் பெற்று வரும் (சிலப். 6: 18 – 25 அடியார்க்.)
ஓரெழுத்து வாரம், ஈரெழுத்து வாரம் எனப் பொருள்படுவது.
ஓரொற்றுவாரம் - 1 மாத்திரை - ச, ரி, க, ம
ஈரொற்றுவாரம் - 2 மாத்திரை - சரி, கம, பத, நிச்
வாரம் இரண்டும் வரிசையில் பாட (சிலப். 3: 136)
தோரிய மடந்தை வாரம் பாடலும் (சிலப். 6: 19)
தோரிய மடந்தை – பற்றுப்பாடுவாள் (மேலது. அரும்)
வாரம் பாடும் தோரிய மடந்தையும் (சிலப். 14: 155)
5. நடனமுறையுள் ஒன்று
வந்த வாரம் வழி மயங்கிய பின்றை (சிலப். 3: 153)
முதல் நடையிலும், வாரத்திலும் தேசிக்கூத்தெல்லாம் ஆடிமுடித்தென்க. (மேலது அடியார்க்.)
6. இசைப்பாடல், இசை, பின்பாட்டு,காலப்படுத்திப் பாடுதல்
... வார நிலத்தைக் கேடின்று வளர்த்தாங்கு (சிலப். 3: 67)
... வாரப்பாடலை அளவு நிரம்ப நிறுத்த... (மேலது அரும்)
மண்டபம் ஒண்டொளி அனைத்தும் வாரம் ஓத
(பெரியதிருமொழி 2: 10: 5)
வாரமென்பது வகுக்குங்காலை.. தொன்மைத் தென்ப.
(சிலப். 7: 12 – 6 அரும்)
7. அகக்கூத்தின் கையுள் ஒன்று.
கூடை செய்த கை வாரத்துக் களைதலும்
வாரம் செய்த கை கூடையிற் களைதலும் (சிலப். 3: 20 – 21)
8. இரண்டாம் நடை
முதல் நடை, வாரம், கூடை, திரள் என்பன நான்கு நடைகள்
முதல் நடை, வாரம்... இயக்கம் நான்கினும் (சிலப். 3: 67 அரும்)
9. வாழ்த்து
பல்லாண்டு, ஆசிகை, வாரம், சோபனம் சொல்லிய
நான்கும் வாழ்த்தினைச் செப்பும் (திவா. 1778 புது)
10. இரட்டைக்கை, ஆடலின் இணைக்கை.
வாரம் செய்த கை கூடையில் களைதலும் (சிலப். 3: 21)
இரட்டையில் செய்த கைத்தொழில் ஒற்றையில் புகாமலும் களைதல்.
(மேலது நாட்டார்)

← த. க. க. 35/IV

## வாரம் இரண்டு:

இசைப்பாடல்களை முதல் வாரம் (முதல் நடை), இரண்டாம் வாரம் (இரண்டாம் நடை) ஆகிய இரு நடைகளில் காலப்படுத்திப் பாடும் முறை
ஒப்பு:- மத்திமகால சாகித்தியம்
எடு:-
எடுப்பு:-
ஆடிக்கொண்டார்அந்த வேடிக்கை காணக்கண்
ஆயிரம் வேண்டாவோ
தொடுப்பு:-
நாடித் துதிப்பவர் பங்கில் உரைபவர்
நம்பர் திருச்செம்பொன் அம்பலவாணர்
முடிப்பு:-
ஆரநவமணி மாலைகளாட
ஆடுமரவம் படம் விரித்தாட
மேற்கண்ட முத்துத்தாண்டவர் பாடலின் எடுப்பும், தொடுப்பும் முதல் வாரத்திலும், முடிப்பு (சரணம்) இரண்டாம் வாரத்திலும் பாடப்படுகின்றது.
வாரம் இரண்டும் வரிசையில் பாட (சிலப். 33: 136)
வல்லோன் புணராவாரம் போன்றே (தொல்.பொ.109)
↑ இசைத்துறையில் ஒன்றாம் காலம் பாடுதல் மற்றும் இரண்டாம் காலம் பாடுதல் என்ற இன்றைய முறையை பண்டையோர் வாரம் பாடுதல் என்றனர்.

## வாரம் பாடுதல்: → வாரம் இரண்டு

## வாரக்கதி: = வாரம்

இரட்டைக்கை; நாட்டிய இணைக்கை
... வாரக்கதியாகச் செய்த கை கூடைக்கதியில் புகுதாமலும்...
(சிலப். 3: 12 – 25 அரும்)
வாரம் செய்த கை கூடையிற் களைதலும் (சிலப். 3: 21)
இரட்டியில் செய்த கைத்தொழில்... ஒற்றையில் புகாமலும்
(மேலது நாட்டார்)

## வாரவாணி:

1. வேசி(யாழ். அக.) (harlot)
2. இசைப்பாட்டுப் பாடுவதில் வல்லவள்
(வாரம் - இசைப்பாட்டு) (மேலது. அரும்)

## வாரி:

1. யாழ் வகையுள் ஒன்று (A kind of yal)
2. இசைக்குழல் (Flute, pipe)
← செ. ப. அ. 3613

## வாரிச்சி:

வரிக்கூத்து வகையுள் ஒன்று.
சிந்துப்பிழுக்கை... வாரிச்சி... கோத்தவரிக்கூத்தின் குலம்
(சிலப். 3: 12 அடியார்க்.மேற்.)

## வாருதல் சுரம்: → வார்தல் சுரம்

## வாலசரிதை: = பாலசரிதை, பிள்ளைச்சரித நாடகம்

பாகவதத்தில் கூறப்பட்டுள்ள கண்ணனின் இளமைக்கால நிகழ்ச்சிகள்.
... மாயவனுடன் தம் முனாடிய வாலசரிதை நாடகங்கள்
(சிலப். 7 கருப்பம்)
... மாயவன் தமையனோடாடிய பாலசரித நாடகங்கள் பலவுள
(மேலது அடியார்க்.)
வாலசரிதை நாடகம் – பிள்ளைச் சரித நாடகம் (மேலது அரும்)
← சிலப். 17 கருப்பம் ; PPTI P754

## வாவல்:

1. கூத்தில், ஆடலில் தாண்டுகை
2. கூத்து

← செ. ப. அ. 3619

## வாழ்த்து:

மங்களம் பாடுதல் (ச. அ.) (Singing songs of benediction) எடு:- சிலப்பதிகார மங்கலவாழ்த்துப் பாடல். இது திருமண வாழ்த்தாய் அமைந்தது.

## வாள் அடைவு:

ஆடலில் வாள்போல் பாதத்தை முன் நீட்டும் அடைவு.

← த. க. க. 25/I

## வாள் அமலை: → வாள்கூத்து

## வாள்கூத்து:

= வாள்அமலை, அமலை, ஒள்வாள் அமலை, அமலைக் கூத்து.
கையில் வாளேந்தி ஆடும் கூத்து.

மாயஞ்செய் வாளவுணர் வீழ நங்கை மரக்கால் மேல்
வாளமலையாடும்... (சிலப். 12: (12)
... வாளை எடுத்து நின்றாடும் கூத்து (மேலது அரும்)
நங்கைமரக்கால் மேல் நின்று வாட் கூத்தை ஆடா நிற்கும்
(மேலது அடியார்க்.)
வாளோர் ஆடும் அமலையும் (தொ. பு. 17)
வாளமலை ஆடிக்காட்டுவார். (சீவக. 783)
வலம்படு முரசம் துவைப்ப வாள் உயர்த்து... ஆடும் கோவே
(பதிற். 56: 4 – 8)

வலிகெழு தோள் வாள் வயவர்
ஒலிகழலான் உடன் ஆடின்று (பு. வெ. 147)

## வாள் மங்கலம்: நீராட்டு மங்கலம்

மாணார்ச் சாட்டிய வாள் மங்கலமும் (தொ. பு. 36)
குடைமங்கலமும் வாள் மங்கலமும் வகுத்து
(TAS, i, P. 115-16; த. க. கொ. 189)

## வான்கோடு:

தற்காலம் தம்புரா வாசிப்பது போல், முன்னாட்களில் யாழ் செங்குத்தாக வைத்து (Erect position) வாசிக்கப்பட்டது. கோடு வான் நோக்கி இருந்ததால் வான்கோடு என்றனர்.

முத்துடை வான்கோடு தழீஇ... (முருகு. 305)
மகரயாழின் வான்கோடு தழீஇ (மணிமே. 4: 56)

## வான்சாரி: = ஆகாயசாரி

நாட்டியத்தில் பாதத்தை மேலே தூக்கி அசைத்துச் செய்யும் அவிநயம்.

## வானகம்:

வேய்ங்குழல் , புல்லாங்குழல், வங்கியம்

← செ. ப. அ. 3585

## வானவர் மகளிர்:

கோயில் தேவதாசியர்.

மலைப்பரும் சிறப்பின் வானவர் மகளிர் (சிலப். 3:4)
வானவர் மகளிர் – தளிஇலார் (மேலது அரும்.)

# வி

## விக்ருதை:

கோவிலுக்குத்தன்னை விற்றவள் (ஞானகானம் பக். 240)

## விகடம்:

*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

சிந்துப்பிழுக்கை... விகடநெடும் பத்திரம்... கோத்தவரிக் கூத்தின்குலம் (சிலப். 3:12 அடியார்க். மேற்.)

## விஸ்ராந்தி: → விட்டிசை

## விசிவீங்கு இன்னியம்:

*வாரால் பிணித்து இறுக்கின முழவு*

விசி வீங்கு இன்னியம் கடுப்பக்கயிறு பிணித்து (பெரும்பாண். 56)

## விகிதப் பகுப்பு முறை:

= பின்னப்பகுப்பு முறை (Just Intonation), இயல் பகுப்பு முறை. *குரல் (சட்சம்) சுரத்தின் விகிதங்களே ஏனைய சுரங்கள். இவ்விகிதங்கள் குரல் - இளி (ச ப முறை, இணைமுறை) முறையில் அமைகின்றன.*

| சுரத்தானம் | ச | ரி$^{1}$ | ரி$^{2}$ | க$^{1}$ | க$^{2}$ | ம$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | த$^{2}$ | நி$^{1}$ | நி$^{2}$ | ச் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அதிர்வு எண் விகிதம் | 1 | 16/15 | 9/8 | 6/5 | 5/4 | 4/3 | 45/32 | 3/2 | 8/5 | 27/16 | 9/5 | 15/8 | 2 |
| | 1 | 1.0667 | 1.1250 | 1.2000 | 1.2500 | 1.3330 | 1.4062 | 1.5000 | 1.6000 | 1.6875 | 1.8000 | 1.8750 | 2 |
| அதிர்வு எண் | 264 | 282 | 297 | 317 | 330 | 352 | 371 | 396 | 422 | 445 | 475 | 495 | 528 |

குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின் (மலைபடு.23)

*குரல் சுரத்தின் இளியைக் கண்டு, அந்த இளியைக் குரலாகக் கொண்டு, அதற்கு இளிகண்டு - என்ற இந்த முறையில் யாழின் புரிநரம்பு (மெட்டு) கட்டப்பட்டதை மேற்கண்ட பாடல்வரி குறிப்பிடுகின்றது.*

*→ இயல் பகுப்பு முறை*

## விச்சாத்தி: உடன்பாடுவோர்

*திருப்பதியம் பாடுவார்களுக்கும் சேவிக்கவந்த விச்சாத்திகளுக்கும் (தெ. இ. க. 5. 228, த. க. சொ. 554)*

## விசம எடுப்பு:

*நான்கு வகைத் தாள எடுப்புகளில் ஒன்று. முன் எடுப்பு, பின் எடுப்பு, சம எடுப்பு என்ற மூன்றும் கலந்து வரும் தாள எடுப்பே விசம எடுப்பு.*

*← செ. ப. அ. 3743*

## விசமயதி:

யதி வகையுள் ஒன்று (பரத. தாள. 54)

## விசித்திர வேளாகொல்லி:

பண்களில் ஒன்று (யாழ். அக.)

## விசுப்பலகை: =வேதிகை, விசிப்பலகை

*விசி - பலகை (Bench)*

*தெருக்கூத்து மேடையில் இசைக்குழு அமரும் இருக்கை. ஆட்டக்குழு ஏறி நின்று ஆடும் ஆடலிடமாக, தேராக, மலையாக, அரசவையாக, சூதாட்டக்களமாகப் பயன்படுவது.*

பவளத்திரள்கால் பைம்பொன் வேதிகை (சிலப். 5:148)

வெண்கால் அமளியும் விதான வேதிகைகளும் (சிலப். 28: 45)

அன்பினில் பாணர் பாடும் சந்த யாழ்த்தரையில்

சீதந்தாக்கில் வீக்கழியும் என்று சுந்தரப் பலகை முன்நீர் இடும் (பெரியபு. திருநீல. யாழ்ப்.6)

இதன் மேல் நின்று பாடுவாய், உனக்கே இந்தப் பலகை (திருவிளை. 13)

இன்னிசைக்கு அரசைஇட்ட பலகை (மேலது. 17)

↑ பெரியபுராணம் மற்றும் திருவிளையாடலில் கூறப்பட்ட பலகை என்பது தற்காலத் தெருக்கூத்து விசுப்பலகையுடன் சேர்த்து எண்ணத்தக்கது.

## விசேச சஞ்சாரம்: → சிறப்புச் செலவு

## விசேச சுருதி சுரம்: → சிறப்பு நிறக்கோவை

## விட்டாளம்:

எடுத்துக் கொண்ட ஒரு சொற்கட்டில் எழுத்துகட்கு இடையே சிறிது நேரம் (இசை அல்லது தாளம்) விட்டு ஒலிப்பது.

← மத்தள பக். 50

## விட்டிசை:

1. பாட்டில் வரும் தனிச்சொல்லுக்கு முன்பு இசை விட்டு இசைப்பது (விஸ்ராந்தி)
2. அசையுள் எழுத்து முதலியன பிரிந்திசைக்கை
 ← தொ. செ. 101 நச்சர் உரை
3. பாட்டில் வரும் தனிச்சொல்
 ← யாக.செய். 10 உரை & ஒழிபி. 2 உரை
4. இளைப்பாறுகை (ச. அ) (rest, repose, relaxation)

## விட்டுப்பாடுதல்:

குரலை அடக்காது முழுக்குரலுடன் பாடுதல்
(to sing freely with full voice)

## விட்டுப்பிடித்தல்:

இசைக்கருவிகளின் துளையை அல்லது கட்டைகளை விரலால் தடவி வாசித்தல்.

தர்ச்சனி முதலாக விட்டுப் பிடிப்பது ஆரோகணம் (சிலப். 3: 58 அரும்)

## விடதாளம்:

ஒன்பது தாளத்துள் ஒன்று (பரத. தாள. 6)

## விடமம்:

தாள அங்கங்கள் விரவி வரும் நிலை (பரத. தாள. 54)
(Irregularity of time - measure)

## விடுகதைப்பாடல்:

விடுகதைகளை அமைத்துப் பாடும் பாடல் வகை.

பூவாமலே நிதம் காய்த்த இடத்தும் (திருவரு. 4962)

(பலாமரத்தை விடுகதை அமைப்பில் பாடுகிறார்.)

## விடுதிக் கீர்த்தனைகள்:

இசை நாடகக் கீர்த்தனைகள் அல்லாத பிற கீர்த்தனைகள். பலதரப்பட்ட பாடு பொருள் கொண்டவையாக இக்கீர்த்தனைகள் அமையும்.

எடு:– பக்தி பண்ணிக் கொண்டிருந்தால் (கோ. கி. பா)

## விடுநிலைப்பாடல்:

மரபான யாப்பிற்குக் கட்டுப்படாத பாடல். புதுக்கவிதை; வசன கவிதை; உரைப்பா; செந்தொடை யாப்பு திகம்பர கவிதா (தெலுங்கு) (Neopoetry, Verse-Libre, prose- poetry, un-rhymed poetry) முதலியன விடுநிலைப் பாடல் வகையைச் சேர்ந்தவை.

## விடுபாட்டு:

தனிப்பாடல் (stray, occational verse)

← செ ப. அ. 3661

## விடுமாத்திரை:

கழியுமானம். பாடல் கூடுதல் அலகுபெறின், தாள அமைப்பிற்காகச் சில அலகுகளைக் கழித்துக் கொள்ளல். தற்காலம் இவை 'தள்ளி எடுத்தல்' என்று வழங்கப்பெறும்.

பதினான்கமைத்து விடுமாத்திரைக்கு (கல்லா. 99: 19)
பதினான்கு அலகுகள் அமைத்து அவற்றுள் கழியுமானமாக விடும் இரண்டு அலகிற்கு (மேலது உரை)

→ கழியுமானம்

## விண்ணபஞ்செய்வான்:

இறைத்திருமுன்பு பாசுரம் ஓதும் உரிமையுள்ளவன். (ஈடு 6: 9: 3)

## விண்ணப்பம்:

இறைத்திருமுன்பு தேவாரம் மற்றும் பாசுரம் ஓதுகை

திருப்பதியம் விண்ணப்பஞ் செய்யவும். (தெ. இ. க. 2. 254)

தேவர்க்கு முன் திருப்பதியம் விண்ணப்பம் செய்யும் அடிகள் மார்க்கு (IPS 90; த. க. சொ. 306)

## விண்ணாலம்: → ஒப்பாரி

## வித்தகக்கவி:

... தமது முத்தமிழ் கல்வியும் வித்தகக்கவியும் காட்டுவதற்கு... (சிலப். உரைப்பாயிரம்)

## வித்தாரகவி:

1. = விருத்த கவி, அகலக்கவி.
 விரிவான, நீண்ட கவிதை
 வித்தாரமாக மதுராபுரியின் முந்நீரை விட (திருவிளை. பய்கர. 9)
2. = கவி நான்கனுள் வித்தார கவி பாடுவோன்
 தெறித்தமும்மணியின் கோவை.... விரித்துப்பாட வல்லோன் வித்தார கவி என்றாமே (சூடா. 12: 28)

## விதானம்:
*பண்களில் ஒன்று* *(யாழ். அக.)*

## விதி: → சுழி

## விதுதமுகம்:
முகஅவிநயம் பதினான்கனுள் வேண்டாமையைக் காட்ட குறிப்பாகத் தலையசைக்கும்அவிநயம் (சது.அக.)
*(விதுதம் = தள்ளப்பட்டது)*

## விதூடக்கூத்து:
= வசைக்கூத்து; நகைத்திறக் கூத்து
*சிரிப்பு வரவழைக்கும் கூத்து வகை.*
இன்னும் நகைத்திறச்சுவை என்பதனோடு கூட்டி ஏழு என்பாரும் உளர்; அஃதாவது விதூடக்கூத்து இதனை வசைக்கூத்து என்பாருமுளர். (சிலப். 3: 12 அடியார்க்.)

## விந்யாசம்: → முதல் அவய முடிவுச் சுரம்

## விநோதக்கூத்து:
= வென்றிக்கூத்து; நகைத்திறக்கூத்து, வசைக்கூத்து
*இது ஏழு வகைப்படும். புறக்கூத்து வகையது. அரசர்முன் நடிக்கும் வெற்றிக் கொண்டாட்டக் கூத்து.*
"... குரவை, கலிநடம், குடக்கூத்து, ஒன்றிய கரண, நோக்கு, தோற்பாவைக்கூத்து என்றிவை யாறு நகைத் திறச்சுவையும், வென்றியும் விநோதக் கூத்தென இசைப்ப"
(சிலப். 6: 54 – 5 அடியார்க்.)
... வென்றி விநோதக் கூத்தென விளம்புவர்"
(சிலப். 3: 13 அடியார்க்.மேற்.)
... கொடித்தேர் வேந்தர்க்கும்... பகைவென்றவிடத்து விநோதம் காணும் கூத்து என்பதாம். (மேலது அடியார்க்.)
*எடு:- கேரளத்து ஓட்டந்துள்ளல்.*

## விப்பிர கீர்ணம்:
நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று. (சிலப். 3: 12 அடியார்க். அடிக்.)

## விபஞ்சி:
1. = விபஞ்சிகை
யாழ் வகையுள் ஒன்று (பரத. ஒழிபி. பக். 15)
2. *குறிஞ்சி யாழ்த்திறத்தொன்று*
நட்டபாடை.... விபஞ்சி... குறிஞ்சி யாழ்த்திறமாகக் கூறுவர் (பிங்க. 1382)
*(குறிஞ்சி - நடபைரவி)*

## விபஞ்சிகை: → விபஞ்சி

## விபாங்கதாளம்:
தாளவகையுள் ஒன்று (பரத. தாள. 4)

## விம்மல்:
1. *ஒலித்தல்; யாழ் நரம்போசையுள் ஒன்று.*
பொருமலும், அழுதலும், ஒலித்தலும் விம்மல் (பிங்க. 4077)
2. *இரு சுரங்களின் அதிர்வு எண் வேறுபாடு*
*← ஸங்கீத ஒலிநூல். பக். 89 - 90*

## வியஞ்சகம்:
*அவிநயம்* (Panto-mime)

## வியந்தம்:
*பண் வகையுள் ஒன்று.*
*← திருவாய் 1, 7 பண் குறிப்பு*
↑ இது தேவாரப் பண் பியந்தையாகலாம்.
*பியந்தை < பியந்தம் >< வியந்தம்*

## வியனிலை மருட்பா:
*வெண்பா அடியும் ஆசிரிய அடியும் ஒவ்வாது வரும் மருட்பா வகை*
*← செ. ப அ. 3689*

## வியாவர்த்திதம்:
வருத்தனை நான்கனுள் ஒன்று (சிலப். 3: 13 அடியார்க். அடிக்.)

## வியாழக்குறிஞ்சி:
*குறிஞ்சி (நடபைரவி) யாழ்த்திறத்துள் ஒன்று.*
நட்டபாடை.... வியாழக்குறிஞ்சி... குறிஞ்சி யாழ்த்திறமாகக் கூறுவர் (பிங்க. 1382)
↑ ஓதுவார் முறையில் வியாழக்குறிஞ்சி என்பது சௌராட்டிரம்.

## வியநிலைச்சிந்து:
*சமமற்ற சிந்துப்பாடல் வகை.*
*வியம - சமமற்ற* (Uneven ), *விரிவு, அகலம்*
வியம்பெறு தோற்றமும் (திருக்காளத். ஞான. 62)
வியல் என்கிளவி அகலப்பொருட்டே (தொ. சொ. 354)
*வியநிலைச்சிந்து x சமநிலைச்சிந்து*

## விரல் உளர்தல்:
*குழல், யாழ் முதலியவற்றில் நரம்பையோ அன்றித் துளையையோ விரல் இயக்கத்தால் இசைத்தல்.*
... விரலிடை இட்ட விரல் உளர் துளையும், ஊது துளையும்...
(சிலப். 3: 26 அரும்)
.. வங்கியத்து விரல் உளர்ந்து... (மேலது. 58 அரும்)
வங்கியத்து விரல் உளர்ந்து ஊதும் துளைகள் (மேலது அடியார்க்.)
கேள்வி போகிய விரல் உளர் நரம்பின் (பொருந. 18)

## விரல் உளர் நரம்பு: = பண் நரம்பு
*விரல் இயக்கத்தால் இசைக்கப்படும் நரம்புக் கருவி களின் நரம்பு.*
கேள்வி போகிய விரல் உளர் நரம்பின் (பொருந. 18)

## விரலேறு:

தோற்கருவி வகையுள் ஒன்று (hand drum)
பேரிகை, படகம்... விரலேறு... தோலால் செய்யப்பட்ட கருவிகள்.
(சிலப். 3: 27 அடியார்க்.)

## விரிகாங்கூலம்: = மலர்காங்கூலம்

ஆடலின் ஒற்றைக்கை அவிநயமான மூவகைக் காங்கூலத்துள் ஒன்று.
"... மலர்காங்கூலமது மலர்ந்ததுவே "
(சிலப். 3: 18 அடியார்க்.மேற்.)

## விரிச்சி:

தெய்வத்திடமிருந்து அறியப்படும் மறைவான செய்திகள் (Oracle)
1. நல் நிமித்தம் (Auspices)
திருந்து இழை மகளிர் விரிச்சி நிற்ப (நற். 40: 4)
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப (முல்லைப். 11)
2. நற்குறி (நற்சகுனம்), நற்சொல்
விரிச்சியும் வாய்ப்புள்ளு நற்சொல் நிமித்தம் (பிங்க. 2026)
3. கெடுகுறி (துர்ச்சகுனம்)
படைஇயங்கு அரவம் பாக்கத்து விரிச்சி (தொ. புறத். 4)

## விரிந்தக்கை: = பிரகஸ்தம்

விரல்கள் விரிந்த நிலையிலுள்ள (நீட்டிய) நாட்டியக்கையுள் ஒன்று (the open hand with the fingers extended)

## விரிமுரண்:

இசைப்பாவகையுள் ஒன்று.
செந்துறை... விரிமுரண்... (சிலப். 6: 35 அடியார்க்.)

## விருத்தக்கலித்துறை:

கலித்துறைப்பா வகையுள் ஒன்று (சீவக. 1: உரை)
→ காப்பியக் கலித்துறை

## விருத்த கவி: → வித்தாரகவி

## விருத்தம்:

1. வட்டம், மூப்பு, பெருக்கம்
விருத்தமே வட்டம் மூப்பாம் (சூடா. 11)
2. விருத்தப்பா
= மண்டிலயாப்பு
இசை மற்றும் தாளம் மீண்டும் மீண்டும் வட்டமடித்து (மண்டிலித்து) வந்து முடிவு பெறுவதற்கு ஏற்றபா இனம்.
எடு:- கலிவிருத்தம், ஆசிரிய விருத்தம், சந்தக் கவி விருத்தம், வண்ண விருத்தம்.
↑ புலவர் மரபு முதலில் கைக்கொண்ட நால்வகைப் பாவிலிருந்து நாட்டார் மரபான இசைக்கு தமிழ்ப்பாடல் மரபு நகர்ந்த காலத்தில் முதலில் பிறந்த பா இனம் விருத்த யாப்பு. (பா இனத்தில் முதலில் தோன்றியது தாழிசை என்ற கருத்தும் உண்டு. இது ஆய்வுக்குரியது)
3. பத்யம் (தெ. சொ.); சுலோகம் (வ. சொ.), தாளமில் உரு. தாளமுழக்கின்றிப் பாடலைப் பண்ணோடு பாடுதல்.

## விருத்தி:

1. நாடக விருத்தி; நாடகக் கதையின் குறிக்கோள்; நாடகபாணி.
விருத்தி நான்கு வகைப்படும். அவை சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி என இவை (சிலப். 3: 13 அடியார்க்.)
2. பதினான்கு வகை விலக்கு உறுப்புள் ஒன்று.
பொருள், யோனி, விருத்தி... சேதம் என் இவை (மேலது)
3. கூத்துப்பாணி (Style)
→ ஆரபடி, கைசிகி, சாத்துவதி, பாரதி
4. தாமரை இருக்கை (பதுமாசனம்)
யாழ் வாசிப்போர் அமரும் நிலை.
ஒன்பான் விருத்தியுள் தலைக்கண் விருத்தி (சிலப். 8: 25)
விருத்தி என்பது இருப்பு...
... தலைக்கண் விருத்தியாவது – பதுமாசனம் (மேலது அடியார்க்.)
பன்னாள் கழிந்தபின்னர்... ஓவியர் கண்ணிய விருத்தியுள்...
(பெருங். 1: 35: 44 – 8)
5. வந்தது வளர்த்தல் – பல்வேறு இசை விரிவாக்கம். விருத்தியே தொழில்... வளர்ச்சிக்கும் பேர் (சூடா. 11: 13)

## விருத்திச் செய்யுள்: நீண்ட செய்யுள் :

"நீண்ட பலி பீடத்தில்"(கலிங்க. கோயில். 16)என்றாற் போல் வரும்
(சிலப். 5: 76 – 88 அடியார்க்.மேற்.)

## விருந்திற்பாணி:

1. புதிய பண்.
விருந்தின் பாணி கழிப்பி (மலைபடு. 539)
வெங்கண் தொலைச்சிய விருந்திற் பாணியும் (சிலப். 10: 131)
(பாணி - 5 சுரப்பண்)
2. பெருமுளை
புதுமையாகப் பாடும் பாட்டு; கற்பனையாகத் தானே சில சுரங்களைச் சேர்த்து புதிய பண்களை உருவாக்கிப் பாடுதல்
விருந்திற்பாணி – தம் இசையில் புதுமையுண்டாகப் பாடும் பாட்டு, எனினும் அமையும்; இதனைப் பெருமுளை என்பாருமுளர்
(மேலது அடியார்க்.)
(விருந்து - புதியது)
← த. க. க. 110/IV ; → ஒளியுடைப் பாணி

## விருச்சிக ரேசிதம்:

நாட்டியத்தில் அரைமண்டியில் இடதுகாலை ஊன்றி வலதுகாலைப் பின்புறமாகத் தலைவரை உயர்த்தி இரண்டு கைகளையும் பறவை போல் வைப்பது விருச்சிகரேசிதம்.

## வில்:

1. = தனு, சிலை, சாபம், குரு
தாள உறுப்புக்களுள் ஒன்று.
இதன் அளவு எட்டு எண்ணிக்கை
இதன் குறியீடு - வில்
← த. க. க. 53/III ; ப. இ. இ. பக் 293; → குரு
2. வில் → வில்லுப் பாட்டு

## வில்லுப்பாட்டு:

= வில், வில்பாட்டு, வில்லு,வில்லடிப்பாட்டு, வில்லடிச்சான் பாட்டு.
ஒற்றைத் தந்தி யாழை வீசும் கோலால் தட்டிப் பாடும் ஆசான் (அண்ணாவி, புலவர்) மற்றும் ஆறுபேர் கொண்ட குழுவால் பாடப்படுவது வில்லுப்பாட்டு. தென்பாண்டி நாட்டில் மட்டும் வழங்கும் கலை. சிற்றூர்த் தெய்வங்களுக்கான திருவிழா (கொடை) வில் தெய்வ வரலாறு மற்றும் வீர மரணமுற்றவர் களின் வரலாறுகளைப் பாடுபொருளாக வில்லுப் பாட்டில் பாடுகின்றனர்.
← த. ப. வ பக். 549 - 551

## வில்யாழ்:

1. வில்வடிவ யாழ் (Lyre)
2. வில் வடிவத்திலுள்ள வில் (Bow) மூலம் வாசிக்கப் படும் யாழ்.
"விரலால் நரம்பைத் தெறித்து ஒலி உண்டாக்கும் நிலைமாறி – ஒரு நீண்ட வில் நாணால் தேய்த்து இழுத்து ஒலிக்கும் முறை மலர்ந்தது. செங்கோட்டு யாழில் விரலால் தெறித்து இசைக்காமல் வில்போட்டு வாசிக்கப்பட்ட நிலை மலர்ந்தது. இதுவே 'வில்யாழ்' எனப்பட்டது. பெரும்பாண். 180 – ஆம் வரிக்குப் பழம் உரை உண்டு. அவ்வுரையில் விரலால் மீட்டுவதற்குப் பதில் வில்லால் மீட்டினர் என்று பழம் குறிப்பு உரை கூறுவதால் வில்யாழை அறியலாகும்".
(பஞ்ச. பக். 20)
சிரட்டைக் கின்னரி இவ்வாறான வில் போட்டு வாசிக்கும் கருவி.
குமிழின் புழற் கோட்டுத் தொடுத்த மரல் புரிநரம்பின்
வில்யாழ் இசைக்கும் விரல் எறிகுறிஞ்சி
(பெரும்பாண். 180 – 182)
மரல்கயிறாகிய விரலாலே தெறித்து வாசிக்கும் (மேலது நச்சர்)

## விலக்கியல் கூத்து: கூத்துள் ஒருவகை

பாரசவர்... விலக்கியல் கூத்தும்... ஆடுபவராக ...
(தொ. பு. 91 நச்சர்)

## விலக்கு:

1. கிளைக்கதை (Episode)
என்றிவை அனைத்தும் பிறபொருள் வைப்போடு
ஒன்றித்தோன்றும் தன் கோள் நிலைமையும்
(சிலப். 10: 17–18 (கட்டுரை); 23: 12–13 (கட்டுரை)
பாடலும், எழாலும், பண்ணும், பாணியும்
அரங்கு, விலக்கு, ஆடல் என்றனைத்தும் (சிலப். நூற்கட்டுரை. 10–11)

↑ சிலப்பதிகாரம் என்ற வரிச் சாந்திக்கூத்தில் வரும், பாசண்ட சாத்தான் கதை, சிபி கதை, கீரிப்பிள்ளை கதை முதலியன விலக்குகள் (கிளைக்கதைகள்)
2. நாடகப்பாடல், தரு
பலவகைக்கூத்தும் விலக்கினில்புணர்த்து (சிலப். 3: 13)
... விலக்குகளாகிய பாடல்களுக்கு (மேலது நாட்டார்)
எடு:-
வேந்து விலக்கு – மன்னனைப்பற்றிய நாடகப் பாடல்
படை விலக்கு – போர்வீரர் பற்றிய நாடகப்பாடல்
ஊர்விலக்கு – நாட்டைப்பற்றிய நாடகப்பாடல் (சிலப். பக். 58, 82)
← சிலப் 3: 13 உரை
விலக்குகளாகிய பாடல்களுக்கு (சிலப். 3: 13 அரும்)
விலக்கும் விடையும் விதியின் அறிந்து (பெருங். 1: 37: 135)
பலவகைக்கூத்தும் விலக்கினில் புணர்த்தலாவது ,
நகைக் கூத்து முதலாகப் பல வகைப்பட்ட புறநடங்களையும் வேந்து விலக்கும் படை விலக்கும் ஊர் விலக்கு மென்று சொல்லா நின்ற விலக்குகளாகிய பாட்டுக்களுக்கு உறுப்பாய் வருவனவற்றுடனே பொருந்தப்புணர்த்தல் (சிலப். 3: 13 அரும்)
3. விலக்குறுப்பு
விலக்கினிற்புணர்த்து – விலக்கு உறுப்பினோடு பொருந்துவித்து
(சிலப். 3: 13 அடியார்க்.)
4. ஆடல், கூத்து, நாடகம், இசை நாடகம்
"இருவகை பல்வகை என்னும் விலக்கோடு அரிய உறுப்புப் பதினொரு ஆட்டுக் குரவை, வரி, சொக்கம், அவிநயம், நாடகம் என்றிவற்றால் தக்கவனே ஆடலாசான்"
(சிலப். பதிகம். 73 அடியார்க்.)
↑ விலக்கு என்பதைப் பாடலுடன் கூடிய ஆடல் என்றும் கூறலாம். அதாவது வரிக்கூத்து (இசை நாடகம்). விலக்கு உறுப்புக்களில் அவிநயமும் வரியும் (இசைப்பாடல்) குறித்து அடியார்க். கூறுகின்றார்.
→ விலக்குறுப்பு

## விலக்குறுப்பு:

நாடகத்தின் உட்பகுப்பு.
பல்வகைக்கூத்தும் விலக்கினில் புணர்த்து (சிலப். 3: 13)
"விலக்குறுப்பென்பது விரிக்குங்காலைப் பொருளும் யோனியும்... ஈரேழுறுப்பே..." (மேலது அடியார்க். மேற்.)
விலக்குறுப்பு என்ற சொற்குப் பொருள் யாதோவெனின்:– தலைவன் செலுத்துகின்ற கதையை விலக்கியும் அக்கதையை நடாத்தியும் முன்பு செய்த கதைக்கே உறுப்பாகுவ தென்க
(மேலது அடியார்க்.)
விலக்குறுப்பு 14 வகைப்படும்:- பொருள், யோனி... சேதம் என இவை
(விலக்கு = நாடகம்; விலக்குறுப்பு = நாடக உறுப்பு )
விலக்குறுப்பாவன: (1) பொருள் (2) கதை (யோனி) (3) தலைமை (விருத்தி) (4) நிலை (சந்தி) (5) சுவை (6) வகுப்பு (சாதி) (7) குறிப்பு (8) விறல் (சத்துவம்) (9)நளிநயம் (அவிநயம்) (10) சொல் (11) சொல்வகை (12) வண்ணம் (13) வரி (14) சேதம்.
← தே நே. 1&2/X; சிலப். 3: 13 நாட்டார் உரை; அபி. சிந் பக். 1471- 72

## விலங்கல்:
*பண் மாறி நரம்பு இசைத்தல்* (Abrupt change of tune)
காகுளி விலங்கல் (திருவாலவா 57: 26)
*(விலங்குதல் = மாறுபடுதல்)*
*← செ. ப. அ. 3712*

## விலாசம்: (வ.சொ.)
*நாடகம்; நாடகக்கீர்த்தனைகளால்* (dramatic composition) *இயன்ற இசை நாடகம்*
*எடு:- டம்பாச்சாரி விலாசம், அரிச்சந்திர விலாசம்*

## விலைக்கணிகை:
= விலைமகள், விலைமாது, விலைக்காமர், விலை நலப்பெண்டிர், விலைப்பெண்டிர், பொருட் பெண்டிர், வேசையர்
விலைநலப் பெண்டிரில் பலர் மீக்கூற (புறம். 365: 8)
மாயப் பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை (பரிபா. 20: 49)
பொருட்பெண்டிர் பொய்மை முயக்கம் (குறள். 913)

## விலோமச் சாய்ப்பு: → மாறிய சாய்ப்பு

## விவாதிசுரம்: → பகைச்சுரம்

## விவாதி மேளம்: → பகை மேளம்

## விழவுக்களம்:
*விழா நடைபெறும் இடம்*
விழவுக்கள நந்தி (குறிஞ். 192)

## விழைவு:
*யாழின் உள்ளோசை (கமகம்)*
முரல்வும் நரல்வும் தெளிரும் ஞெளிரும்
விழைவும் நுணுக்கமும் உள்ளோசை என்ப (பிங்க. 1436)
*உயர்ந்த ஒலியினின்றும் தாழ்ந்த ஒலிக்குத் திடீரென விழுதலே விழைவு. கேதாரகௌளை, ஆந்தோளிகா முதலிய பண் அமைந்த பாடல்களில் விழைவு எனும் உள்ளோசை கேட்டு இன்புறத்தக்கது.*

## விழுந்தான்கொட்டு:
*ஒருவன் இறந்ததைக் குறிக்கும் தனித்த பறை முழக்கு.*

## விளக்கத்தார் கூத்து:
*ஒரு வகை நாடகப்பாடல்.*
அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன. (தொ. செ. 553. பேரா.)

## விளக்குநிலை:
*விளக்கினை ஏற்றி வைத்து, வேலை நிறுத்தி வழிபட்டு ஆடும் கூத்து*
வேலின் நோக்கிய விளக்கு நிலையும் (தொ.பொ.87)
*← த. க. க. 198 / 11*

## விளச்சீர்:
*நிரையசையில் முடியும் இயற்சீர்(கருவிளம்,கூவிளம்)*
*← யாப். வி*

## விளர்:
= விளரி, விளரிப்பாலை, விளரியாழ், விளரிப்பண்.
*நெய்தல் நிலப்பெரும்பண்(தோடி)*
... இரண்டிரண்டு அணைத்து விளர் நிறீஇ (கல்லா. 8: 24)
விளரி ஈறுகெட்டு விளர் என நின்றது (மேலது உரை)
விருந்தினர் பாணர் விளர் இசை கடுப்ப (நற். 172: 7)
விளரி மிழற்றுஅளி குமுறுகுழற்கொடி (மீனாட்சிபிள்ளைத். 81)
விளரியாழ்ப்பாண் மகனே (திணைமாலை 126: 1)
*(விளர் = கொழுப்பு)*
விளரென்பது... கொழுப்பு மாகும் (சூடா. 11: 2)
*ஒப்பு:- நெய்தல்*
→ விளரி, விளரிப்பாலை

## விளரி:
1. *ஏழிசையுள் ஒன்று 'த' (தைவதம்)*
குரலே, துத்தம்... விளரி... என்ப எழுவகை இசைக்கும் எய்தும் பெயரே (திவா. 1884)
2. *விளரிப்பாலை; நெய்தலுக்குரிய பெரும் பண்; இரங்கற் பண்; துன்பச் சுவைப்பண்; தோடி .*
விளரி யுறுதரும் தீந்தொடை நினையா (புறம். 260: 2)
நுளையர் விளரி நொடி தரும் தீம்பாலை (சிலப். 7: (48)
காம்புபொதி நறவம் விளரி யொடு அருந்தி (கல்லா. 17: 29)
சிறுநா ஒன்மணி விளரி ஆர்ப்ப (குறுந். 336: 3)
விளரி நரம்பின் நயவரு சீறியாழ் (அகம் 279: 11)
துவைத்து எழு தும்பி தவிர் இசை விளரி (அகம். 317: 12)
விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப (நற். 172: 7)
விளரியாழ்ப் பாண் மகனே (திணைமாலை 126)
விளரிக்குரல் அன்றில் (நம்மாழ்.திருவிருத். 83)
*இப்பண்ணின் சுரங்கள் அனைத்தும் மென்மை யானவை* - சரி¹ க¹ ம¹ ப த¹ நி¹
*இதைத் தெரிவிக்கும் பாடல்கள்:-*
மழலை மென்கிளவியில் விளரியுள் விளைக்கும் (கல்லா. 88: 9 – 10)
சிறுநா ஒண்மணி விளரி ஆர்ப்ப (குறுந். 336: 3)
மெல்லிசை விளர் இசை (நற். 310)
*விள - விளர் - இளமை ; விளர் - கொழுப்பு, நெய்;*
*நெய் > நெய்தல்*
விளாமரம், இளமை, கமர் இவை விள எனல் (பிங்க. 4086)
இளமையும், கொழுப்பும் விளர் என்றிசைக்கும் (பிங்க. 4085)
யாழ்க்கண்ணது ஓர் நரம்பும்... இளமையும் விளரி (திவா. 2258)
→ விளரிப்பாலை
3. யாழ் (அக. நி.)
4. *மரவகையுள் ஒன்று; விளா* (Woodapple)
விளாத்தி (ம. வ.)

5. விளரி = கூப்பிடுதல்;
வையமுற்றும் விளரியதே (பாசுரம். திருவிருத். 82,2559)

## விளரி குரலாக விளரிப்பாலை:

இடமுறைத்திரிபில் தலைமைப் பாலையாவது அரும்பாலை (சங்கராபரணம்). அரும்பாலையின் குரல் (ச்) சுரத்தை மென்விளரி (த$^1$) யாகக் கொண்டு பண் பெயர்க்கக் கிடைப்பது விளரிப்பாலை (தோடி)

| | | * | | * | * | | * | | * | | * | * |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அரும்பாலை | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ | ச் |
| விளரிப்பாலை | | நி$^1$ | | ச | ரி$^1$ | | க$^1$ | | ம$^1$ | | ப | த$^1$ |

விளரி குரலாக விளரிப்பாலை... (சிலப். 3: 90 உரை)

*(இது வலமுறைத்திரிபில் அரும்பாலையின் கைக்கிளைகுரலாக விளரிப்பாலை வரும் முறையை ஒத்தது)*

↑ வலமுறைத் திரிபிலும் அதன் தலைமைப் பாலையான செம்பாலை (அரிகாம்போதி)யின் விளரி குரலாகப் பண் பெயர்த்தால் விளரிப்பாலை (தோடி) யே கிடைக்கும்.

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| விளரிப்பாலை | க$^1$ | | ம$^1$ | | ப | த$^1$ | | நி$^1$ | | ச | ரி$^1$ | |

... விளரி குரலாயது விளரிப்பாலை... (சிலப். 17: (13) அடியார்க்.)

## விளரி குரலாக விளரிப்பாலைக்கு விளரி பெய்தல்:

இது பெய்தல் முறையில் புதியபண் உருவாக்கும் முறைபற்றியது. இப்பெய்தல் முறையில் பண் 'நாடகப் பிரியா' கிடைக்கும்.

விளரிப்பாலை (தோடி) – ச ரி$^1$ க$^1$ ம$^1$ ப **த$^1$** நி$^1$
நாடகப்பிரியா – ச ரி$^1$ க$^1$ ம$^1$ ப **த$^2$** நி$^1$

தோடியின் 'த$^1$' என்ற சுரத்திற்குப் பதில் 'த$^2$' என்ற சுரத்தைப் பெய்தால் நாடகப்பிரியா கிடைக்கும்

... விளரி குரலாக விளரிப் பாலைக்கு விளரி பெய்தும்... (சிலப். 3: 90 உரை)

→ விளரி குரலாக விளரிப்பாலை

## விளரிப்பண்: →

விளரிப்பாலை

## விளரிப்பாலை: = விளரி

நெய்தல் நிலப்பெரும்பண்; தோடி

விளரி குரலாயது விளரிப்பாலை (சிலப். 17: (13அடியார்க்.)

செம்பாலை (அரிகாம்போதி) யின் விளரி (த$^2$) குரலாகப் பண்பெயர்க்க எய்தும் பண் விளரிப் பாலை.

| | * | | * | | * | * | | * | | * | * | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
| விளரிப்பாலை | க$^1$ | | ம$^1$ | | ப | த$^1$ | | நி$^1$ | | ச | ரி$^1$ | |

ச ரி$^1$ க$^1$ ம$^1$ ப த$^1$ நி$^1$ - விளரிப்பாலை (தோடி)

விளரி குரலாகின் விளரிப்பாலை (பிங்க. 1408)

நுளையர் விளரி நொடி தரும் தீம்பாலை
இளி கிளையில் கொள்ள (சிலப். 7: (48)

*(கிளை - ஐந்தாம் சுரம்; ஐந்தன்முறை என்ற கிளை முறை கூறுகிறார்)*

*இளி கிளையில் கொள்ள: -*

| ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 5 | | | | | | | 0 | 1 | 2 | 3 | 4 |
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | | | | | | |

*பச, சம$^1$, ம$^1$நி$^1$, நி$^1$க$^1$, க$^1$த$^1$, த$^1$ ரி$^1$ - ச ரி$^1$ க$^1$ ம$^1$ ப த$^1$ நி$^1$*
*- விளரிப்பாலை (தோடி)*

*(இளி - 'ப')*

துத்தம் கைக்கிளை அளவையின் விளைப்ப (கல்லா. 38:13–15)

*(துத்தம் - 'ரி' ; கைக்கிளை - 'க')*

*இங்கு ஏழன்முறை கூறுகின்றார்.*

| ச | ரி$^1$ | ரி$^2$ | க$^1$ | க$^2$ | ம$^1$ | ம$^2$ | ப | த$^1$ | த$^2$ | நி$^1$ | நி$^2$ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | | | |
| 4 | 5 | 6 | 7 | | | | | 0 | 1 | 2 | 3 |

*ரி$^1$ த$^1$, த$^1$ க$^1$, க$^1$நி$^1$, நி$^1$ ம$^1$, ம$^1$ ச, ச ப - ச ரி$^1$ க$^1$ ம$^1$ ப த$^1$ நி$^1$*
*விளரிப்பாலை (தோடி)*

↑ விளரி – விளரிப்பாலை – சுரத்தால் பண் பெயர் பெற்றுள்ளது.

*ஒப்பு: தாரப்பண் - தார (நி) சுரத்தால் பெயர் பெற்றது.*
*(தாரப்பண் - மேற்செம்பாலை; கல்யாணி.)*

## விளரி முடிவுப்பண்: = தைவதாந்திய இராகம்

ஏறு நிரலில் நடுத்தானத்து விளரியை (மத்திம ஸ்தாயி தைவதம்) இறுதிச் சுரமாகக் கொண்டபண்.

எடு:-
குறிஞ்சி - ச நி ச ரி க ம ப த - த ப ம க ரி ச நி ச

## விளரியாழ்,விளரிப்பண்: → விளரி,

விளரிப்பாலை

## விளவு: ஒலித்தல்

விளவு என்ப... ஒலித்தல்... (சூடா. 11: 1)

## விளம்பனம்:

ஆதிகாலத்து மக்களின் வழக்க ஒழுக்கம் முதலியவைகளை ஆடியும் பாடியும் காட்டுகை. (யா. வி. கப். 526)

விளம்பனத்து இயற்கை... ஆடியும் பாடியும் அறிவுவரக் கிளத்தல் (திவா. 2467)

## விளம்பகதி:

= விளம்பம், சவுக்கம், சவுக்கநடை, விளம்பநடை முதல் நடை. தாளத்தின், பாடலின் மெதுவான நடை
(விளம்பம் = தாமதம்)

← ஈடு 6; 1

## விளம்பநடை, விளம்பம்:: →

விளம்பகதி

**விளாம்பழக்கை:** = கபித்தம், கபித்தக்கை;

*ஒற்றைக்கை அவிநயத்துள் ஒன்று.*

சுட்டுவிரல் நுனியும், பெருவிரல் நுனியும், உகிர்நுனை கவ்விப்பிடித்து ஒழிந்த மூன்று விரலும் மெல்லெனப் பிடிப்பது; என்னை? கபித்தம் என்பது காணுங்காலைச் சுட்டு பெருவிரல் ஒட்டி, நுனி கௌவி, அல்ல மூன்று மெல்லப் பிடிப்பதுவே (சிலப். 3: 18 அடியார்க்.)

**விளி:**

1. *ஓசை*

வளை வாய்க்கிள்ளை மறைவிளி பயிற்றும் (பெரும்பாண். 300)

2. *இசைப்பாட்டு; ஆலோலப்பாடல்.*

புதைத்தெழு விளியும் (சிலப். 25: 26)

*(தினைப்புனத்தில் கிளி முதலிய பறவைகளை ஓட்டப் பாடப்படும் பாடல்)*

3. *இளி (ப) ஏழிசையின் ஐந்தாம் நரம்பு.*

இளிவாய்ப்பிரசம்... விளியாகக் கொண்டு... (சீவக. 2691)

4. *அழை (த்தல்)*

குறுநரி நெடுங்குரல் கூவிளி கேட்டு (சிலப். 10: 235)

*(கூவிளி > கூவி)*

**விளித்தல்:** *பாடுதல்*

பஞ்சுரம் விளிப்பினும் (ஐங்குறு 311)

விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும் (திரிகடு. 11)

*பஞ்சுரம் - அரும்பாலை (சங்கராபரணம்)*

**விளிக்கூத்து:**

*சீழ்க்கைக்கூத்து* (Dancing with whistling)

நாத்தலை மடிவிளிக்கூத்தொடு (சீவக. 120)

**விளையாட்டு:**

1. *ஒளிந்து விளையாடும் ஆட்டு; எளிய மாந்தரின் ஒளிந்து ஆடும் விளையாட்டிலிருந்தே பல்வேறு ஆடல்கள்பிறந்தன.*

*வளை + ஆட்டு > வளையாட்டு > விளையாட்டு - ஒளிந்து விளையாடும் ஆட்டு. (வளை - பொந்து)*

*ஆடு > ஆட்டு; பாடு > பாட்டு; ஆட்டு > ஆட்டம் - கூத்து*

உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ (மதுரைக். 616)

மடல் அவிழ் கானல் கடல் விளையாட்டு (சிலப். 6: 113)

*(விளையாட்டு - ஆடல்)*

*ஒப்பு : கடல் ஆடுகாதை*

2. *யாழ்க் கலைத்தொழில் (எழால்) எட்டனுள் ஒன்று. எழுவகை இசை எழால்களைப் பலவாறு கலந்தும் உறழ்ந்தும் அமைப்பது*

விளையாட்டு என்பது விரிக்கும் காலை

கிளவிய வகையின் எழுவகை எழா அலும்

அளவிய தகையது ஆகும் என்ப. (சிலப். 7: (1) 5 – 8 அரும்)

**விளைவு:**

*நாடகச் சந்தி ஐந்தனுள் ஒன்று.*

விளைவாவது: கருப்பமுதலாய் விரிந்து கதிர் திரண்டிட்டுக் காய் தாழ்ந்து முற்றி விளைந்து முடிவது போல்வது (சிலப். 3: 13 அடியார்க்.)

**விற்பிடி:** = சிகரம்

*ஆடலின் ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று.*

"விற்பிடி என்பது... நிமிரும் விதியிற்றாகும்" இதற்குச் சிகரம் என்றும் பெயர் (சிலப். 3: 18 அடியார்க்.)

**விற்புரமுத்திரை:**

*கைமுத்திரை வகையுள் ஒன்று.*

**விறல்:** *சைகை; அவிநயம், நளிநயம் (சத்துவம்). மனத்தின் இயல்பு புறத்தே தோன்றச் செய்யும் திறம்* (Dexterity) → விறலி

**விறலி:**

*=ஆடல் மகள், பாட்டி, மதங்கி, பாடினி, பாணிச்சி. பாண்குலப் பெண்*

மதங்கி, பாடன் மகடூஉ பாண் மகள் பெயரே (பிங்க. 817)

*விறல்(சத்துவம்) பட ஆடுபவள் விறலி. விறல் என்பது உள்ளக் குறிப்பால் உடம்பில் தோன்றும் வேறுபாடு. அவை கண்ணீர்வார்தல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலியன*

← தே. நே. *250/9*

விறல் (சத்துவம்) பட ஆடும் பாண் மகள் (மேலது *250/ 8*)

கூத்தரும், பாணரும், பொருநரும், விறலியும் (தொ.பு. *36*)

விறல்படப் பாடி ஆடுவார் மார்ச்சனை அமைந்த முழவினது தாளத்திற்கு ஆடும்படி(பொருந. 109 – 10 நச்சர் உரை)

பாடுவிறலியர் பல்பிடி பெறுக (பதிற். 43: 22)

பாடுவல் விறலி ஓர் வண்ணம் நீரும் (புறம். 152: 13)

**விறற்களப்பாடல்:**

*போர்க்களத் துணங்கைப்பாடல்*

வென்றடு விறல் களம் பாடித் தோள் பெயரா (முருகு 55)

**வினயம்:** *தேவபாணி*

"நல்லிசைமடந்தை... வினயமாட்டுதல் கடனே" ;

வினயம் – தேவபாணி (சிலப்.8.25 – 26 உரை)

**வினாயகத்தாளம்:**

*நாட்டியத் தொடக்கத்தில் வினாயகர் துதிப்பாடற்குக் கொட்டும் தாளம்*

← *கோயிலொ. 95; செ. ப. அ. 3736*

**வினைக்கை:**

*ஒற்றைக்கை, இணையா வினைக்கை -*

*ஆடலின் போது முத்திரை முதலிய அவிநயங்களை ஒற்றைக்கையால் காட்டுவது.*

இணையாது இயல்வது இணையா வினைக்கை (சிலப். 3: 18 அடியார்க்.)

**வினைஞர்:** = வினைநர்

*கூத்தர்*

தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடி (மணிமேக. 19: 109)

அரியலார்கை வன்கை வினைநர் (பதிற். 62: 16)

**வினைநர்:** →வினைஞர்

**விஸ்ராந்தி:** →விட்டிசை, பக்கிசைத்தல்

# வீ

## வீக்கம்: → வீக்கு

## வீக்கு:

= வீக்கம், பண், பண்ணி, ஒத்து, கேள்வி, சுதி (சுருதி)
பண்ணி அதிர்ப்பின் பாடல் அதிர்ந்து விடும் (நான்மணிக். 19)
யாழின்கண் வீக்கம் கெடுமாயின் பாடலும் கலங்கும் (மேலது உரை)
சந்தயாழ் தரையில் சீதம் தாக்கில் வீக்கு அழியும் (பெரியபு. திருநீல.யாழ்ப். 6)
... தண்ணுமை வீக்கின் தாக்குறும் விளியும் (கம்ப. நாட். 88)
வீக்கி மென் சுருதி கூட்டி (திருவிளை.விறகுவிற். 27)
→ வீக்குதல்

## வீக்குதல்:

*கேள்விகூட்டல் (சுதி சேர்த்தல்)*
பாலை ஈரேழ் கோத்த பண்ணி அம் கருவி வீக்கி (பெரியபு. திருநீல. யாழ்ப். 2)
வீக்கு நரம்புடையாழினால் விளைந்ததிது (பெரியபு. திருஞான. 450)
மேயதொடைத் தந்திரியாழ் வீக்கி இசை விரிக்கின்றார் (மேலது. 134)
மாடகம் – வீக்கும் கருவி (சிலப். 8: 27– 8அடியார்க்.)
→ வீக்கு

## வீங்கை:

*ஆடல் வகையுள் ஒன்று* (A mode of dancing)
*← செ. ப. அ. 3746*

## வீச்சு:

*தாளப்பகுதி. தாளமிடலில் கையை வீசும் நிலை* (Wave of hand, off beat, resting). *தட்டுதல்* (beat) *தாளப்பகுதியைக் குறிப்பது. அது போன்று கை வீசுவதும்* (rest) *தாளப்பகுதியைக் குறிப்பதாகும். தாளமிடல் என்பது தட்டுதலும் வீசுதலும் இணைந்தது.*(Drumming is beating and resting)

## வீசிய கை:

*நாட்டியத்தின் ஒற்றைக்கை அவிநயங்களுள் ஒன்று*
(கஜஹஸ்தம்)

## வீசுகோல்:

*வில்லுப்பாட்டு பாடும்போது வில்லின் நாணை தட்டப் பயன்படும் கோல்.*
*← செ. ப. அ. 3748*

## வீணை:

1. *யாழ்*
"யாழ் என்னும் தென் சொற்குப் பதிலாக வீணை என்னும் வடசொல் வழங்கி வருகின்ற தென்க" (ஒப்பியன் மொழி நூல் பக் 131 /I)
மகர யாழின் வான்கோடு (மணிமே. 4: 56)
மகர வீணையின்கிளை நரம்பு வடித்த (மணிமே. 19: 26)
நாரதன் வீணை நயந்தெரிபாடலும் (சிலப். 6: 18)
நாரதன் வீணை – நாரதமுனி வீணை (மேலது அரும்)
நார முனிவன் யாழின் (மேலது அடியார்க்.)
வடமொழி வித்த இசை நூல் வழக்குடன்.
ஆரியப் பதங்கொள் நாரதப் பேரியாழ் (கல்லாடம்)
↑நாரதயாழ் வடமொழிச் சொல்லான(ஆரியப்பதம்) 'வீணை' என்பதுடன் நாரத வீணை என்று பெயர் பெற்றது.
மிதுனராசியும், வீணைக்கருவியும், அசுபதி நாளும் யாழ் எனலாகும் (பிங்க. 4005)

2. *யாழ்ப்பாட்டு; வாய்ப்பாட்டுப் பாடிக் கொண்டே யாழும் இசைப்பது.*
விருந்தாக யாழ் பண்ணி வீணைதான் தோற்பான் (சீவக. 730)
வீணை என்றது யாழையும் பாட்டையும் (மேலது நச்சர்)
கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தால் பாடத் தொடங்குமன். (சிலப். 7: 24)
மிடற்றுக் கருவியாலே முந்துறப்பாடிப் பின்பு யாழ்க்கருவியோடு பாடத் தொடங்கினாள் என்க. (சிலப். 8: 24 அரும்)
→ *யாழ்; யாழ்ப் பாட்டு*

## வீதி:

*நாடக வகையுள் ஒன்று.*
அவை : நாடகம்... பாணம்.. வீதி... என இவை
(சிலப். 3: 13 அடியார்க். அடிக்.)

## வீதிப்போக்கு:

*இசையின் நேர்செலவு; ஒரே ஒத்தில் (சுருதி) செல்லும் இசை.*
அசையொடு வீதிப்போக்கு முடுகியல் (திருவிளை. விறகு. 28)

## வீரச்சுவை அவிநயம்:

*ஆடலில் காட்டப்படும் வீரச்சுவையின் அவிநயம்*

"வீரச்சுவை அவிநயம் விளம்பும் காலை... நன்குணர்ந் தோரே

(சிலப். 3: 13 அடியார்க்.)

...காப்பியத்துக்கு அங்கமான நவச்சுவையுள் வீரச்சுவை அவிநயமும் என்க (சிலப். 5: 76 – 88 அடியார்க்.)

## வீரமாகேசம்:

*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*

"சிந்துப்பிழுக்கை... வீரமாகேசம்... கோத்தவரிக் கூத்தின் குலம்"

(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## வீரமுழவு: *வீரமுரசு*

*முரசு, நிசாளம், துடுமை, திமிலை என்ற நால்வகைப் போர்ப் பறையும் வீரமுழவாகும்.*

முரசெழுந்து இயம்ப. (சிலம்ப. 3: 125)

வீரமுரசு முதலாயினவும் (மேலது அரும்)

முன்சொன்ன வீரமுழவு நான்கும் (சிலப். 3: 27அடியார்க்.)

## வீரசயந்திகை:

*வீரர் நிகழ்த்தும் கூத்து வகையுள் ஒன்று.*

*← செ. ப. அ. 3755*

## வீரசின்னம்:

*ஊது கொம்பு; வீரர் விருதுகளில் ஒன்றான ஊதுகொம்பு.*

வீரசின்னந்தான் முழங்க (கூ.நா.கா. 48)

## வீரவசந்தம்:

பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 102)

## வீராணம்:

*பெரிய வகைப் பறையுள் ஒன்று.*

வீராணம் வெற்றிமுரசு (திருப்பு. 264)

## வீழ்ந்தாடல்: = படிதம், பதம்.

*படிந்து ஆடுதல்*

பதினொரு ஆடலுள் வீழ்ந்தாடல் ஐவகையானது. துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை வடிவுடன் வீழ்ந்தாடல் ஐந்து

(சிலப். 3: 14 அடியார்க். மேற்.)

நிலையும் படிதமு நீங்கா மரபில் (சிலப். 6: 65)

நிலை நின்றாடல், பதம் வீழ்ந்தாடல் என இரு வகைய

(மேலது அரும்)

## வீரன்:

கூத்தாடி (Dancer) (யாழ். அக.)

# வெ

## வெகுண்டோன் அவிநயம்:
வெகுண்டோன் அவிநயம்... கொளலே... (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

## வெஞ்சமம்:
*பாலைப்பண்வகையுள் ஒன்று.*
பாலையாழ், பஞ்சுரம், வெஞ்சமம்... பாலைக்கருப்பொருளே...
(நம்பியகப் 21)

## வெடிகுரல்:
*இனிமையற்ற (இன்னா) ஓசை* (Discordant note or voice)
வெள்ளை, காகுளி, கீழோசை, வெடிகுரல், நாசி...
(திருவிளை. விறகு. 30)

## வெண்கலிப்பா:
*வெண்டளையும், கலித்தளையும் கலந்து வரும் பாவினம். 12 அடிகளுக்கு மேல் வந்து வெண்பா போல் முடிவது.*

## வெண்கை:
*அவிநயமிடாது தாளம் இடும் கை.*
முழவிற் போக்கிய வெண்கை (பதிற். 61: 7)

## வெண்சீர்:
*வெண்பா உரிச்சீர்*

## வெண்சீர் வெண்டளை:
*வெண்பா உரிச்சீர் முன் நேர் வந்து ஒன்றும் தளை.*
← *யா. கா. உறுப். 10*

## வெண்செந்துறை:
இரண்டடிகள் தம்முள் அளவொத்து வரும் செய்யுள் வகை.
(வீ. சோ. யாப். 14)

## வெண்டுறை:
1. வெண்பா வகையுள் ஒன்று; இசைப்பாவகையது மூன்றடிச் சிறுமையாக ஏழடிப் பெருமையாக வந்து இறுதியடிகளில் சில சீர் குறைந்து வருவது.
2. *ஆடற்குரிய பாடல் வகை; நாடகப் பாடல்*
செந்துறை வெண்டுறை... இசைப்பாச்சுட்டு..
(சிலப். 6: 35 அடியார்க். மேற்.(*இசை நுணுக்கம்*)
ஒப்பு:- நாடகக்கவி செய்யவல்ல... (சிலப். 3: 44 உரை) ← *த.இ.பே.70/15 ;பு.வெ. 12வென்றிப். 18; யா.வி.பக்.537,*
→ வெண்டுறைப்பாடல்

## வெண்டுறைச்செந்துறைப்பாட்டு:
*கலி, வரி, சிற்றிசை, பேரிசை, சிற்றிசைச் சிற்றிசை என்ற பகுதிகளையுடைய இன்னிசைப் பாட்டு வகை.*
← *செ. ப. அ. பிற். 416; யா. வி. பக். 538*

## வெண்டுறைப்பாடல்:
*கூத்து (நாடக) இசைப்பாட்டு.*
*நாட்டியத்திற்குரிய தாளக்கட்டுகள் நிறைந்த இசைப்பாடல். தாளத்தொடும் பண்ணொடும் பாடப்படுவது (இலயாங்கம்).*
வண்டுறையும்... வெண்டுறையும்... செந்துறையும் வேற்றுமையாக் கண்டறிய (இறை. கள. 360)
செந்துறை மார்க்கமும் வெண்டுறை மார்க்கமும் (யா. வி. 96: 25)
வெண்டுறைப்பாட்டே பாடற்கு ஏற்பது (பிங்க. 1439)
வெண்டுறை என்பது கூத்தின் மேற்றே (யா. வி.)
வெண்டுறைப்பாட்டே ஆடற்கு ஏற்பது. (திவா. 1882)
வரி, குரவை,மண்டிலம், சேதம் முதலாகிய பகுதிகளையுடைய கூத்திற்குரிய பாட்டு வகை (யா. வி. பக். 538)
← *பஞ்ச 295-6;*→ வெண்டுறை

## வெண்டுறை மார்க்கம்:
*கூத்து, நாட்டியம், நாடகம் முதலிய நிகழ் கலைகளில் பாடப்படும் பாட்டு.*
ஒன்பது மேற்புறத்திற்கும், பதினோராடலுக்கும் உரிய பாட்டு வகை
(யா. வி.)
← *செ. ப. அ. பிற். 416;*

## வெண்தாழிசை:
*மூன்றடியான் வந்து வெண்பாவே போல் முடிவது. சிந்தியல் வெண்பா. ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வருவது வெள் ஒத்தாழிசை.*
*எடு:- சிலம்பு. மங்கல வாழ்த்துப்பாடல் 'திங்களைப் போற்றுதும்' முதலிய நான்கும் வெண் ஒத்தாழிசை.*
தன்பா அடித் தொகை மூன்றாய் இறுமடி
வெண்பாப் புரைய இறுவது வெள்ளையின்
தன்பா இனங்களில் தாழிசையாகும்.
(யா. வி. செய். 13உரை மேற். காக்கைபாடினியம்)
←*யா. வி. 66 உரை; த. இ. பே. 70/15*

**வெண்பா:** = வெள்ளை, வெளி.
*நால்வகைப் பாக்களுள் ஒன்று.*
ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என நால் இயற்று என்ப பாவகை விரியே (தொ. செ. 104)
வெள்ளை முற்பா (சூடா. 10: 29)
முதற்பா வெண்பா (திவா. 1847)
↑ இசை, ஆடல் பண்பைக்கொண்ட அகவல் மற்றும் கலி யாப்பினை விடுத்து, சமணர் தம் அறநூல்களில் அறிவிப்பு (statement) மற்றும் கட்டளை (Mandate) வடிவான வெண்பா யாப்பினை மேற்கொண்டனர்.
*எடு:- பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்*

**வெண்பா இயல்பு:**
*வெண்பா யாப்பிற்குரிய, பாடுபொருள் இயல்பு:-*
*1) கட்டளை* (Declarative, Mandate)
*2) ஏவல்* (Imperative)
*3) சாற்றுதல்* (Assertive)

**வெண்பாஉரிச்சீர்:**
*நேர் நேர் நேர், நிரைநேர் நேர்,நேர் நிரை நேர், நிரை நிரை நேர் என வெண்பாவுக்குரியவாய் வரும் நேர் ஈற்று மூவகைச் சீர்.*
← *யா. வி. 12, 61*

**வெண்பாவிருத்தம்:**
= வெளிவிருத்தம்; வெள்ளை விருத்தம்
*மூன்று அல்லது நான்கடிகளைக் கொண்ட ஒரே தனிச்சொல்லால் முடியும் பாவினம்.*
*எடு:-*
சொல்லல் சொல்லல் தீயவை சொல்லல் – எஞ்ஞான்றும்
புல்லல் புல்லல் தீநெறி புல்லல் – எஞ்ஞான்றும்
கொல்லல் கொல்லல் செய்நலம் கொல்லல் – எஞ்ஞான்றும்
நில்லல் நில்லல் நீரை சார்ந்திங் – எஞ்ஞான்றும்.
(கானல் வரி ஒரு கேள்விக்குறி பக். 96)
← *த.இ. பே. 71/15; வீ.சோ. யாப் 15; யா.கா. செய். 7 உரை*

**வெப்பின் அவிநயம்:** →வெப்பமுற்றோன் அவிநயம்

**வெப்பமுற்றோன் அவிநயம்:**
= வெப்பின் அவிநயம்
*ஆடல் அவிநயங்களுள் ஒன்று.*
வெப்பின் அவிநயம் விரிக்கும் காலை. உணர்ந்தனர் கொளலே
(சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**வெயில் தலைப்பட்டோன் அவிநயம்:**
*ஆடல் அவிநயங்களுள் ஒன்று.*
உச்சிப் பொழுதில் வந்தோன் அவிநயம்...
பண் புணர்ந்தோரே (சிலப். 3: 13 அடியார்க். மேற்.)

**வெருப்பறை:** *போர்முரசு* (War- drum)
வென்றி யெய்துதல் வேண்டு நாமென வெருப்பறை கொட்டி
(பெருங். மகத . 24: 209)

**வெரூஉப்பறை:**
*அச்சம் தரும் பறை,*
வெரூஉப்பறை நுவலும் பரூஉப் பெருந்தடக்கை (பொருந. 171)

**வெள்ளடி:**
*வெண்பாவிற்குரிய அடி* (Metrical line pertaining to venba)

**வெள்ளை:** = வெளி
1. *வெண்பா; பிறதளை விரவாது வரும் பாவகை.*
வெண்பா, வெண்மை (பிங்க. 4098)
வெள்ளாடு, வெண்பா, வெள்ளை நிறத்தன
வெள்ளை என்னும் பெயரோடு விரியும். (திவா. 2249)
2. *இசையில் உண்டாகும் இனிமையற்ற (இன்னா) ஓசை*
வெள்ளை காகுளி (திருவிளை. விறகு. 30)

**வெள்ளை விருத்தம்:** →வெளி விருத்தம்

**வெள்ளைச் சுரிதகம்:**
*வெண்பாவில் அமைந்த சுரிதகம். வெண்டளையால் வரும் கலிப்பாவின் இறுதி உறுப்பு.*
← *கலித். 143 உரை*

**வெள்ளொத்தாழிசை:** →வெண்டாழிசை

**வெள்ளோசை:**
1. *வெண்பாவிற்குரிய செப்பலோசை* (Rhythm peculiar to Venba)
2. *பாடும் போது தோன்றும் வெடித்தகுறலாகிய இசைக்குற்றம்.*
இவற்றின் த்வனியில் வெள்ளோசை யாய்க் கழியுண்பதில்லை.
(ஈடு. 5, 9, 6)
3. பெருக்குரல் (திருவாலவா. 57: 26 அடிக்குறிப்பு)

**வெளி:** → வெண்பா , ஆடுகளம்

**வெளி விருத்தம்:** → வெண்பாவிருத்தம்

**வெற்றிமுரசு:**
*வெற்றியின் அடையாளமாக முழக்கப்படும் பேரிகை.*

## வெறி:

1. = வெறியாட்டு, வெறிகோள்,வேலனாடல், வெறியெடுத்தல், கழங்கு, வெறிக்கூத்து, அணங்காடல்.
*தெய்வத்திற்கு ஆடும் கூத்து, சடங்கு நடனம்*

வெறிபுரி ஏழில்வேலன். (அகநா. 292)
வெறியாட்டு அயர்ந்த காந்தளும் (தொ. பு. 5)
வல்லோன் தைஇய வெறிக்களம் கடுப்ப (மதுரைக். 284)
... வெறிக்கூத்தையுடைய களத்தை ஒப்ப (மேலது நச்சர்)
கட்டினும் கழங்கினும் வெறி என (தொ. களவு 24)
*← மேலது நச்சர் உரை*
*சிலம்பு குன்றக்குரவை பாடல் 8-20 ஆகியன வெறியாட்டுப் பாடல்கள்.*
வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து (சிலப். 24: (15)
வெறிகோள் பண்ணியும்... (பெருங் உஞ்சை. 32: 94)
அறியாமையின் வெறி என மயங்கி (ஐங். 242)
வேலன் வெறி அயர் வியன்களம் (அகம். 97)
வெறியே நாற்றம் விரையொடு அணங்காட்டு (திவா. 1926)
வெறியாட்டு முதலாய தெய்வமேறி ஆடுகின்ற அத்திறக் கூத்துக் களும் கூட்டி ஏழென்பாருமுளர் (சிலப். 3:12 அடியார்க்.)
வேலன் கழங்கினால் அறிகுவது (ஐங். 248)
வெறி,கழங்கு, அணங்கு (சூடா. 9: 52)

2. *வெறிப்பாட்டு*
வேலன் ஏந்தும் வெறியும் உளவே (பரிபா. 5: 15 உரை)

3. *வட்டம்*
அணங்காட்டும் வட்டமும்... வெறி எனல். (பிங்க. 4099)
வெறி... வெறியாட்டு, வட்டம்.. பேய்... (சூடா. 11: 9)
↑ பண்டைய கூத்துக்களம் வட்டவடிவானது என்பதை வெறிஎனும் சொல் வட்டவடிவுப் பொருள் கொள்வதால் அறியலாகும்.
*← ப. இ. இ. பக். 16*

## வெறிஅயர்களன்:

= வெறிமனை, வெறிக்களம்
*வெறியாடுமிடம்*

வேலன் தையிய வெறி அயர்களனும் (முருகு. 222)
வெறி அயர் வியன்களம் பொறப்ப (அகம். 98: 19)
வெறி அயர் களத்துச் சிறுபல தாஅய (அகம். 114: 2)
வெறி அயர் வியன்களம் கடுக்கும் (அகம். 182: 17)
வெறி அயர் வியன்களம் பொலிய ஏத்தி (அகம். 242: 11)
வேலன் புனைந்த வெறி அயர் களந்தொறும் (குறுந். 53: 3)
வெறி அயர் களத்தினின் (குறுந். 318: 3)
வேலன் கண்ட வெறிமனை (நற். 34: 9)
வெறிக்களம் கடுப்ப. (பெருங். இலாவண. 2: 104)
*(அயர்தல் - ஆடல்; அயர் - ஆடும்)*
*← த. வீ. க. பக். 92*

## வெறிஅயர்தல்:

*வெறி, வெறியாட்டு, வேலனின் வெறியாடல்*

வெறிஅயர் வெங்களத்து வேல்மகன் பாணி (நாலடி. 16: 1)
வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும் (தொ. பொ. களவு 20)
வேலனார் வந்து வெறி ஆடும் வெங்களத்து (சிலப். 24 (15)

## வெறிக்களம்: →வெறி அயர்களன்

## வெறிமனை: →வெறி அயர்களன்

## வெறியாட்டாளர்:

*வெறியாட்டு நிகழ்த்துவோர்*

வேலன், முருகன், வெறியாட்டாளன் (திவா. 229)
வேலன், முருகன் ,தேவராளன், படிமத்தவன். (பிங்க. 828)

## வெறியாடு மகள்:

= கணி, கணிக்காரிகை, கணிக்கை, புலைத்தி, கட்டு விச்சி.
*முதுவாய்ப்பெண்டிராலும் வெறியாட்டுச் சடங்குகள் செய்யப்பட்டன.*

வேலன் புனைந்த வெறிஅயர் களந்தொறும்.. சூரர மகளிரொடு உற்ற சூளே (குறுந். 53: 3 – 7)
ஆடுமகள் வெறிஉறு வனப்பின் வெய்துற்று (குறுந். 105: 3 – 4)
வெறிகொள் பாவையின் பொலிந்த (அகம். 370: 14)
... பெண்பால் மாட்டு நிகழும் வெறி 'காந்தள்' எனவும் பெயராம். தலைமகள் தானே முருகு மேல் நிறீஇ ஆடியது.
(தொ. பு. 5இளம்)
வேலனைக் கூறினமையின் கணிக்கையையும் கொள்க.
(தொ. பு. 5 நச்சர்)
முருகு மெய்ப்பட்ட புலைத்தி. (புறம். 259)
*(முருகன் ஏறப்பட்ட தாழ்த்தப்பட்ட பெண்)*
வெறியாடு மகளி ரொடு செறியத் தாஅய்
குழல் அகவ யாழ் முரல (பட்டினப். 155– 156)

## வெறுத்திசை:

*வெறுத்திசைப்பு; யாப்பின் ஓசைக்குற்றவகை* (Discordant rhythm in a stanza)

இன்னோசைத்தாய் வெறுத்திசை யின்றாம்.
(தொ. பொ. 323 பேரா.)
*← யா. வி. பக். 403*

## வென்றாடு துணங்கை:

*போர் வெற்றிக்குப் பின் ஆடும் துணங்கை ஆட்டம்.*

கொன்று தோள்ஒச்சிய வென்று ஆடு துணங்கை. (பதிற். 8: 4)
*பதிற்றுப்பத்தின் 8ஆம்பத்தின் 4ஆம்பாடல்- வென்றாடு துணங்கை*

## வென்றிக்கூத்து:

*புறநடங்களுள் ஒன்று. புகழ்க்கூத்து. மாற்றான் ஒடுக்கமும் மன்னன் உயர்ச்சியும் காட்டும் கூத்து.*

வென்றிக்கூத்து. (சிலப். 12: (11)
*← சிலப். 3: 13 அடியார்க்.*

## வென்றிமுரைசம்: வெற்றிமுரசம்

*பார்த்திவர் யிறைஞ்ச வென்றி முரைசம் மூன்றில்.*
(TAS. 7; பக் 54-55 த. க. சொ. 578)
*(முரசு > முரசம் > முரைசம்)*

# வே

## வேகவாகினி:
பண்களில் ஒன்று (பரத. இராக. பக். 103)

## வேசி: → வேசை

## வேசி ஆசாரியன்:
நட்டுவன். ஆடல் ஆசிரியன். (யாழ். அக.)

## வேசை: = வேசி (வேஷி)
*கணிகை*
*ஆடல், கூத்து முதலியவற்றுக்கு வேடம் புனைபவள்*
விளக்கு ஒளியும் வேசையர் நட்பும். (நாலடி 371:1)
*வேடம் - வேஷம் > வேஷி (வேசி, வேசை)*

## வேட்டனம்:
*கூத்தின் அங்கக்கிரியைகளுள் ஒன்று* (A gesture or movement in dancing)
*← சிலப். 3: 12 அடியார்க். அடிக்.*

## வேடு:
*வரிக்கூத்து வகையுள் ஒன்று.*
சிந்துப்பிழுக்கை... வேடு... கோத்தவரிக்கூத்தின் குலம்
(சிலப். 3: 13 அடியார்க்.மேற்.)
*வேடு - வேடர் தொழில், வேட்டை* (hunting)

## வேணியனம்:
மத்தளவகையுள் ஒன்று. (பரத ஒழிபி. 13)

## வேணு:
1. *உள்தொளை*
2. *மூங்கில்*
உட்தொளைப் பொருளு, மூங்கிலும் வேணு. (பிங்க. 4105)
... மாணா விறலோய் வேணு வாகென...(சிலப். 6: 18 – 25 அடியார்க்.)
3. *இசைக்குழல், புல்லாங்குழல்*
சுடர்மணி வேணுச் சரி சங்கின் ஓசை (திருமந். 607)

## வேத்தியல்:
1. *வேந்தியல்.*
*அரசர் முதலிய மேலோர் எனப்பட்டோர்க்கு ஆடும் கூத்து. அகக்கூத்து வகையது; செவ்வியல் ஆடல்.*
வேத்தியல் பொதுஇயல் என இரு திறத்துக் கூத்தும். (சிலப். 14: 148 உரை)
வேத்தியல் – அரசர்க்கு ஆடும் கூத்து; பொது இயல்
எல்லார்க்கும் ஒப்ப ஆடும் கூத்து. (மேலது அரும்)
வேத்தியல் பொதுஇயல் என்றிரு திறத்தின் (சிலப். 3: 39)
வேத்தியல் அகம் பொதுஇயல் புறம் என்பாரும். (மேலது)
வேத்தியல் பொதுஇயல் என இருதிறத்து. (சிலப். 14: 148)
இசை பெறுத்திருவினை வேத்தவை ஏற்ப. (மலைபடு. 39)
வேத்தியல் பொதுஇயல் என்றிரு திறத்தின் கூத்தும்.
(மணிமே. 11: 18 – 19)
வேத்தியல் பொதுவியல் என்று இரு திறத்து. (மணிமே. 2: 18)
வேத்தியல் பொதுஇயல் என்று இவ்விரண்டின். (மணிமே. 28: 46)
வேத்தியன் மண்டபம் பிரதிபேதம் – வேந்தியன் மண்டபம்.
(சிலப். 28: 79 அடிக்.)
2. *ஒருபுறத்துறை*
*வீரமிக்க வேந்தனின் பெருமையைப் புகழ்ந்து பேசும் சிறப்புடைய வாளோரைக் குறிக்கும் துறை.*
*← புறம். 286, 291; த. வீ க. பக். 40*

## வேத்தியல் மண்டபம்:
*அரசனது ஓலக்க மண்டபம்; அரசவை அரங்கு.*
வேத்தியல் மண்டபம் ஏறிய பின்னர் (சிலப். 28: 79)

## வேத்திரதரன்: = வேத்திரதாரகன்(Panegyrist)
கட்டியங்காரன் (யாழ். அக.)

## வேத்திரதாரகன்: →வேத்திரதரன்

## வேதமத்தியம்:
தாளத்திற்குரிய யதியுள் ஒன்று (பரத. தாள. பக். 52)

## வேதவீணை:
*வீணை வகையுள் ஒன்று*
நாரதாதிகள் வேதவீணை தொடங்கவே.
(தக்கயாகப். 623 (விசேடக்)

## வேதாளி: = வேதாளிகர் , வைதாளிகர், வேதாளியர்
1. *அரசவைப் பாடகர், கூத்தர்*
மாகதர், சூதர், வேதாளிகர். (மணிமேக. 28: 50)
வேதாளிகரொடு நாழிகை இசைப்ப. (மதுரைக். 671)
சூதர், மாகதர், வேதாளிகரொடு. (சிலப். 4: 48)
சூதர், மாகதர், வேதாளிகரொடு. (சிலப். 5: 48)
மாகதப்புலவரும் வைதாளிகரும். (சிலப். 26: 74)
வேதாளிகர் – வைதாளியாடுவார். (சிலப். 5: 48 உரை)
2. *வரிக்கூத்துள் ஒன்று.*
சிந்துப்பிழுக்கை... வேதாளி... கோத்தவரிக்கூத்தின் குலம்.
(சிலப். 3: 13 அடியார்க்.மேற்.)

## வேதாளிகர்,வேதாளியர்: → வேதாளி

## வேதிகை: → விசுப்பலகை

## வேந்துவிலக்கு:
*மன்னனைப் புகழ்ந்து பாடும் நாடகப்பாடல்*
... பல வகைப்பட்ட புறநடங்களையும், வேந்து விலக்கும்... விலக்குகளாகிய பாட்டுக்களுக்கு (சிலப். 3: 13 உரை)

## வேய்:
1. *உட்துளையுடையது*
2. *மூங்கில்*
*உட்துளையுள்ளதால் மூங்கில் 'வேய்' என ஆகு பெயரால் வழங்கியது.*

## வேய்ங்குழல்: *புல்லாங்குழல்*
ஆயர்கள் வேய்ங்குழல் ஓசையும் விடைமணிக்குரலும் (பாசுரம் திருப். 4)
→ வேய்

## வேய்ந்துணி:
*புல்லாங்குழல் ; ஊதுகுழல்* (Bamboo Pipe)
வேய்ந்துணி அலமரும் புறத்தர் வெஞ்சுடர். (சீவக. 1848: 3)

## வேய்வை:
*யாழ் நரம்புக் குற்றவகை* (A defect in a lute string)
வேய்வை போகிய விரலுளர் நரம்பின் (பொருந. 17)

## வேல்மகன்:
*பூசாரி*
மனவணி மடந்தை, வெறியாட்டாளன்
வேல்மகன் குறத்தி மாமதி முதியோர் (கல்லா. 7: 10–11)
*மனவணி மடந்தை - வெறியாட்டாளன்(வேலன்) மனைவி வேல்மகன் - பூசாரி; குறத்தி - கட்டுவிச்சி.*
*← கல்லா 7: 10-11 உரை (பொ. வே. சோ.)*

## வேலன்: = குமரன், படிமத்தான், படிமத்தவன், தேவராளன், முருகன்.
*வெறியாட்டாளன், பேயாடுபவர், மந்திரவாதி, அரைகுறை வைத்தியர்.*
அருங்கடி வேலன் முருகொடு வளைஇ. (மதுரைக். 611)
... வேலை எடுத்தலின் வேலன் என்றார். (மேலது நச்சர்)
வெறியறி சிறப்பின் வெல்வாய் வேலன் (தொ. பு.5)
வேலன் தைஇய வெறி அயர்களனும். (முருகு. 222)
'படிமத்தான்' இழைத்த வெறியாடு களத்தினும். (மேலது நச்சர்)
வேலன், முருகனும் வெறியாட்டாளனும். (திவா. 2068)
↑ இன்றைய கேரளத்தில் கொச்சி முதலிய இடங்களில் வேலன், வேலத்தி சாதியினர் வாழ்ந்து வருகின்றனர். களம் அமைத்து வெறியாட்டு நிகழ்த்துகின்றனர். இவர்கள் மலையர், பாணருடன் தொடர்புடையவர்.

## வேலன் ஆடல்: = வெறி, அணங்கு, கழங்கு
*வெறியாடல், வேலன் வெறியாட்டு*
வெறியும், அணங்கும், கழங்கும் வேலன் ஆடல். (திவா. 1763)

## வேலன்பாணி: = குறிஞ்சிப்பாணி, செந்திறம்
*குறிஞ்சிநிலச் சிறுபண் (மத்யமாவதி) குறிஞ்சிநிலத் தலைவன் (தெய்வம்) வேலன். எனவே வேலன்பாணி என்பது நிலத்தெய்வத்தால் பெற்றபெயர்.*
வென்றிச் செவ்வேள் வேலன் பாணியும் (சிலப். 25: 25)

## வேழம்:
1. *இசை*
2. *கொறுக்கை (சீவாளி)*
குஞ்சரமும், கொறுக்கைச்சிப்பெயரும், இசையும், கரும்பும், மூங்கிலும் வேழம். (பிங்க. 4113)

## வேழம்பர்: = கழாயர்
*கழைக்கூத்தர்*
கழாயர், கழைக்கூத்தர். (சூடா. 2: 38)
நூற்றுவர் நகை வேழம்பரும். (சிலப். 26: 130)
வேழம்பர் கழைக்கூத்தர். (திவா. 216)

## வேளாவளி:
*பண்களில் ஒன்று*
செவ்வழிக்கும் புறம் – வேளாவளி. (சிலப். 14: 160 – 67 அடியார்க்.)

## வேற்றிசைப்பா:
*வேறுபட்ட சந்த நடையில் அமையும் பாடல்.*
சருக்க முடிவிலும், இலம்பக முடிவிலும்.
விருத்த நடையது வேற்றிசைப்பாவே. (திவா. 1841)

## வேனல்பாணி:
= மருதப்பாணி,வேனில்பாணி, ஆம்பல், ஆம்பல்குழல்
*இன்று வழங்கும் சுத்ததன்யாசி.*
*மருதநிலப்பெரும்பொழுது இளவேனில். வேனல் (வேனில்) பாணி என்பது மருதநிலச்சிறுபண்ணிற் கான, நிலத்தின் பெரும் பொழுதால் ஏற்பட்ட பெயர்.*
வேனில்பாணி பாட நினைந்தாள். (சிலப். 8: 43–44 அரும்)
குரல்வாய் இளிவாய்க் கேட்டனள். (சிலப். 8: 35)
↑குரல்வாய் – குரல் குரலாகச் செம்பாலை (அரிகாம்போதி) பாடுகின்றாள்; பின்பு இளிவாய் – செம்பாலையின் இளியை (ப) குரலாகக் கொண்டு பண் பெயர்ப்பால் கோடிப்பாலை (கரகரப்பிரியா) பாடுகின்றாள்; பின்பு அதன் வழித்திறமான வேனல்பாணி (சுத்ததன்யாசி) பாடுகின்றாள்.
வேனல்பாணி கலந்தாள். (சிலப். 8: வெண்பா 2)
↑ மேற்கண்ட நுட்பங்களை சிலப்பதிகார '**வேனில்காதை**' யில் அடிகளார் அமைத்துக் காட்டியுள்ளார்.
*(வேனில் > வேனல்);*
இளவேனல் வந்ததா... (மேலது 8: வெண்பா1)
வேனல் – வேனில் – மேலது அரும். அடிக்.
வேனல் – வேனில் – இளவேனில் – மேலது நாட்டார்.
வேனல் வாய்ப்பாட்டு. (சீவக. 2382)
வேனல் மல்கிவென் தேர்சென்ற வெந்நிலம். (சீவக. 2578)
வேனலங்கிழவனொடு வெங்கதிர் வேந்தன். (சிலப். 11: 62)
வேனல் வீற்றிருந்த வேய்கரிகானத்து. (சிலப். 13: 36)
வேனல் – கோடைக்கால வெப்பமென்காற்று;
வேனில் கோடைக்காலம். (தே.நே. 145,13)
வேனல் வரி. (புறம். 307: 4)

# வை

## வைகறைப்பாணி:

= வளர்முல்லைப்பண், புறநீர்மை, நேர்திறம் சிவரஞ்சனி, சிவப்பிரியை, சங்கரானந்தப்பிரியை.

*மருநிலச் சிறுபண்ணினுள் ஒன்று. மருதநிலச் சிறுபொழுதான வைகறையால் 'வைகறைப் பாணி' என்று பண் பெயர் பெற்றுள்ளது.*

கிணைநிலப் பொருநர் வைகறைப் பாணியும் (சிலப். 13: 148)

*(கிணை - மருதப்பறை)*

... மருதயாழும், பண்: வைகறைப்பாணியும் (சிலப். பதிகம். அடியார்க்.)

பாண்வாய் வண்டு நேர்திறம் பாட (சிலப். 4: 75)

புறநீர்மை என்கின்ற பண்ணைப்பாட (மேலது அரும்)

மாறுமுதல் பண்ணியபின் வளர்முல்லைப் பண்ணாக்கி (பெரியபு. ஆனாய 25)

வைகறைக்குரியப்பண் - மருதம் - கரகரப்பிரியா

– ச ரி$^2$ க$^1$ம$^1$ ப த$^2$ நி$^1$ (நேர்பாலை)

இதன் திறம்... – ச ரி$^2$ க$^1$ ப த$^2$ (நேர்திறம்)

← *த. க. க. 242-43/I*

## வைகுந்த அம்மானை:

*ஈழத்தில் இறப்பு வீடுகளில் பாடப்படும் அம் மானைப்பாடல். இதை எட்டு நாட்கள் பாடுகின் றனர். இறந்தவர் சாகாமல் வைகுந்தம் போனதாக வைகுந்த அம்மானை மரபாகப் பாடப் படுகின்றது.*

## வைசாகநிலை:

*கூத்தின் 'நிலை' ஆறனுள் ஒன்று* (A Pose in dancing)

←*(சிலப். 3:12 அடியார்க். அடிக்.)*

மட்டதாளமுதலாக ஏகதாளம் ஈறாக வைசாக நிலையிலே ஆடி (சிலப். 3:155–6 உரை)

## வைசாகமுறை:

*தாள வகைகளின் இறங்கு நிரல் முறை; 8, 7, 5, 4, 3 என்று குறைந்து வரும் முறையாகும்.*

← *த. க. க. 323/I*

## வைசூரி மாலா தோற்றம் பாட்டு:

*கண்ணகியை அம்மனாக, தாய்த்தெய்வமாக வணங்கியதால் கண்ணகிபாட்டு, வைசூரி (அம்மை) மாலா தோற்றம் பாட்டாக பெயர் பெற்று வழங்குகிறது.*

*வைசூரி = அம்மை, முத்துப்போடுதல், (ஒப்பு:- முத்துமாரி)*

## வைணவநிலை:

*கூத்தின் 'நிலை' ஆறனுள் ஒன்று* (A pose in dancing)

←*சிலப். 3: 12 அடியார்க். அடிக்.*

"ஆடலின்றி நிற்பவை யெல்லா, மாயோனாடும் வைணவ நிலையே"

(சிலப். 6: 46 – 8 அடியார்க். மேற்.)

## வைணவி:

வேய்ங்குழல், புல்லாங்குழல் (யாழ். அக.)

## வைத்துப்பாடுதல்:

*மகப்பேற்றுமங்கையரை மணமகள் போல் ஒப்பனை செய்து மணையில் வைத்து மங்கலம் பாடுதல்.*

← *செ. ப. அ. 3853*

## வைதாளி:

புகழ்ந்து பாடும் பாட்டு (Panegyric Song).

பொதுவாக அரசரைக் காலையில் துயில் எழுப்புமுன் புகழ்ந்து பாடும் பாட்டு. (மதுரைக். 671 நச்சர்)

## வைதாளிகர்:

= வேதாளிகர், வேதாளியர், புத்த சமயப்பாடகர் (The Music of India P.175)

*அரசரைப் புகழ்ந்து பாடுவோருள் ஒரு வகையினர்.*

மாகதப் புலவரும் வைதாளிகரும் (சிலப். 26: 74)

(பிம்) வேதாளியரும்

சூதர் மாகதர் வேதாளிகரொடு (சிலப். 5: 48)

(பிம்) வேதாளியரொடு

சூதர் ஏத்த மாகதர் நுவல வேதாளிகரொடு (மதுரைக். 670–71)

## வைதாளியாடுவார்:

*அரசரைப் புகழ்ந்து பாடுவோர்.*

வேதாளிகர் – வைதாளியாடுவார் (சிலப். 5: 48 அரும்)

வேதாளிகரொடு – வைதாளியாடுவார் (மேலது அடியார்க்.)

↑ வைதாளி பாடுவார் என்பது பாடமாய் இருந்திருக்கலாம்.

## வைப்பு:

= சுரிதகம், அடக்கியல் வாரம், போக்கு, போக்கியல்

*கலிப்பாவின் இறுதி உறுப்பு*

போக்கியல் வகையே வைப்பு எனப்படுமே (தொ. செ. 135)

## வையம்: யாழ் (அரு. நிக.)

← *செ. ப. அ. 3856*

## வைரியர்: → வயிரியர்

## வைரம்: இசைக்கருவி

தூரியம்... வைரம்... வாச்சியப் பொதுப் பெயரென்ப (பிங்க. 1530)

# ஏழ்பெரும்பாலை

1. செம்பாலை - அரிகாம்போதி

2. படுமலைப் பாலை - நடபைரவி

3. செவ்வழிப் பாலை - ஈருழைப்பண்

4. அரும்பாலை - சங்கராபரணம்

5. கோடிப் பாலை - கரகரப்பிரியா

6. விளரிப் பாலை - தோடி

7. மேற்செம்பாலை - கல்யாணி

**செம்பாலை.... படுமலை... செவ்வழி... அரும்பாலை...**
**கோடி,விளரி, மேற் செம்பாலை... (சிலப். 3:81 —88)**

## ஏழு வகைப் பாலைத் தாவரங்கள்

**ஏழு பாலை, ஏழு விதப் பாலைகள் அவையாவன: *(1)* செம்பாலை, *(2)* படுமலைப் பாலை, *(3)* செவ்வழிப் பாலை, *(4)* கரும்பாலை, *(5)* ஏழிலைப் பாலை, *(6)* விளரிப் பாலை *(7)* கொடிப் பாலை, the seven kinds of Paulai (milky plants) as enumerated above.**

**NOTE: The correct botanical names of these cannot be determined with accuracy as the term பாலை, refers to names of different botanical groups and the plant பாலை, it itself in general, called by 15 different botanical names viz (1) Mesua ferrea, (2) Sideroxylon tomentosum, (3) Dichopsis ellipitca (4) Mimusops hexandra, (5) Mimusops kauki (6) Mimusops balata, (7) Alstonia scholaris (8) Holarrhena antidysenterica (9) Tabernaemontana dichotoma (10) Wrightia tinotoria (11) Wrightia tomentosa, (12) Cryptostegia grandiflora (13) Dregea volubilis (14) Crytocarya wightiana and (15) Litsaea Zeylanica**

- T.V.Sambasivam pillai Dictionary p.1514/I

*(*கரும்பாலை - அரும்பாலையாக இருக்கக்கூடும்)*

## தமிழிசைப் பாலைகள்

மெல்லுழை (சுத்த மத்திமம்)

| பாலை எண் | மேள எண் | பண் பெயர் | கோவைநிரல் (சுரவரிசை) | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 8 | தோடி | ச | ரி$^1$ | க$^1$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^1$ | ச் |
| 2 | 9 | தேனுகா | ச | ரி$^1$ | க$^1$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^2$ | ச் |
| 3 | 10 | நாடகப்பிரியா | ச | ரி$^1$ | க$^1$ | ம$^1$ | ப | த$^2$ | நி$^1$ | ச் |
| 4 | 11 | கோகிலப்பிரியா | ச | ரி$^1$ | க$^1$ | ம$^1$ | ப | த$^2$ | நி$^2$ | ச் |
| 5 | 14 | வகுளாபரணம் | ச | ரி$^1$ | க$^2$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^1$ | ச் |
| 6 | 15 | மாயாமாளவ கௌளை | ச | ரி$^1$ | க$^2$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^2$ | ச் |
| 7 | 16 | சக்கரவாகம் | ச | ரி$^1$ | க$^2$ | ம$^1$ | ப | த$^2$ | நி$^1$ | ச் |
| 8 | 17 | சூரியகாந்தம் | ச | ரி$^1$ | க$^2$ | ம$^1$ | ப | த$^2$ | நி$^2$ | ச் |
| 9 | 20 | நடபைரவி | ச | ரி$^2$ | க$^1$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^1$ | ச் |
| 10 | 21 | கீரவாணி | ச | ரி$^2$ | க$^1$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^2$ | ச் |
| 11 | 22 | கரகரப்பிரியா | ச | ரி$^2$ | க$^1$ | ம$^1$ | ப | த$^2$ | நி$^1$ | ச் |
| 12 | 23 | கௌரிமனோகரி | ச | ரி$^2$ | க$^1$ | ம$^1$ | ப | த$^2$ | நி$^2$ | ச் |
| 13 | 26 | சாருகேசி | ச | ரி$^2$ | க$^2$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^1$ | ச் |
| 14 | 27 | சரசாங்கி | ச | ரி$^2$ | க$^2$ | ம$^1$ | ப | த$^1$ | நி$^2$ | ச் |
| 15 | 28 | அரிகாம்போதி | ச | ரி$^2$ | க$^2$ | ம$^1$ | ப | த$^2$ | நி$^1$ | ச் |
| 16 | 29 | சங்கராபரணம் | ச | ரி$^2$ | க$^2$ | ம$^1$ | ப | த$^2$ | நி$^2$ | ச் |

## தமிழிசைப் பாலைகள்

### வல்லுழை (பிரதி மத்திமம்)

| பாலை எண் | மேள எண் | பண் பெயர் | கோவைநிரல் (சுரவரிசை) | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 17 | 44 | பவப்பிரியா | ச | ரி$^{1}$ | க$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | நி$^{1}$ | ச் |
| 18 | 45 | சுபபந்துவராளி | ச | ரி$^{1}$ | க$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | நி$^{2}$ | ச் |
| 19 | 46 | சட்விதமார்க்கினி | ச | ரி$^{1}$ | க$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{1}$ | ச் |
| 20 | 47 | சொர்ணாங்கி | ச | ரி$^{1}$ | க$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 21 | 50 | நாம நாராயணி | ச | ரி$^{1}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | நி$^{1}$ | ச் |
| 22 | 51 | காம வர்த்தினி | ச | ரி$^{1}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | நி$^{2}$ | ச் |
| 23 | 52 | இராமப்பிரியா | ச | ரி$^{1}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{1}$ | ச் |
| 24 | 53 | கமனா சிரமம் | ச | ரி$^{1}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 25 | 56 | சண்முகப்பிரியா | ச | ரி$^{2}$ | க$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | நி$^{1}$ | ச் |
| 26 | 57 | சிம்மேந்திரமத்திமம் | ச | ரி$^{2}$ | க$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | நி$^{2}$ | ச் |
| 27 | 58 | ஏமவதி | ச | ரி$^{2}$ | க$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{1}$ | ச் |
| 28 | 59 | தர்மவதி | ச | ரி$^{2}$ | க$^{1}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 29 | 62 | ரிசபப்பிரியா | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | நி$^{1}$ | ச் |
| 30 | 63 | லதாங்கி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{1}$ | நி$^{2}$ | ச் |
| 31 | 64 | வாசஸ்பதி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{1}$ | ச் |
| 32 | 65 | கல்யாணி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |

# வட்டப்பாலை

(முல்லை - செம்பாலை - அரிகாம்போதி உருவாகும்முறை)

| கோவை | குரல் | மென் துத்தம் | வன் துத்தம் | மென் கைக் கிளை | வன் கைக் கிளை | மெல் உழை | வல் உழை | இளி | மென் விளரி | வன் விளரி | மென் தாரம் | வன் தாரம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | * | | * | | * | * | | * | | * | * | |
| சுரம் | ச | $ரி^1$ | $ரி^2$ | $க^1$ | $க^2$ | $ம^1$ | $ம^2$ | ப | $த^1$ | $த^2$ | $நி^1$ | $நி^2$ |
| ஓரை (இராசி) | துலை | விருச் சிகம் | வில் | மகரம் | கும்பம் | மீனம் | மேடம் | ஏறு (இடபம்) | மிதுனம் | கடகம் | அரி | கன்னி |
| சுரத்தானம் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

மாயவ னென்றாள் குரலை விறல்வெள்ளை
ஆயவ னென்றா ளிளிதன்னை - யாய்மகள்
பின்னையா மென்றாளோர் துத்தத்தை மற்றையார்
முன்னையா மென்றாண் முறை
மாயவன் சீருளார் பிஞ்ஞையுந் தாரமும்
வால்வெள்ளை சீரா ருழையும் விளரியும்
கைக்கிளை பிஞ்ஞை யிடத்தாள் வலத்துளாள்
முந்தைக்கு நல்விளரி தான். - சிலப். 17:(14),(15)

மாயவன் - துலை(கோல்) - குரல் - ச
பின்னை - வில்(தனு) - துத்தம் - $ரி^2$
ஆய மகள் - கும்பம் - கைக்கிளை - $க^2$
ஆயமகள் - மீனம் - உழை - $ம^1$
வெள்ளை - ஏறு(இடபம்) - இளி - ப
ஆயமகள் - நண்டு(கடகம்) - விளரி - $த^2$
முந்தை - அரி(சிம்மம்) - தாரம் - $நி^1$

**குரல் துலை, வில் துத்தம், கைக்கிளையே கும்பம்**
**பரிய உழைமீனம், பாவாய் – அரிதாரம்**
**கொல் ஏறுஇளி, விளரி கற்கடகம் கோப்பமைந்த**
**தொல் ஏழிசை நரம்பிற்கு ஆம். (சிலப். 17:(13)அரும்.மேற்.1)**

**இளிஇடபம், கற்கடக மாம்விளரி, சிங்கம்**
**தளராத தாரம் அதுவாம் – தளராக்**
**குரல் கோல், தனுத்துத்தம் கும்பம் கிளையாம்**
**வரலால் உழைமீனமாம். (மேலது மேற். 2)**

**துலை நிலைக்குரலும், தனுநிலைத்துத்தமும்**
**நிலை பெறு கும்பத்து நேர் கைக்கிளையும்**
**மீனத்து உழையும் விடை நிலத்து இளியும்**
**மானக் கடகத்து மன்னிய விளரியும்**
**அரி இடைத் தாரமும் அணைவுறக் கொளலே. (மேலது அடியார்க். மேற்.)**

மாயவன் என்ற குரல் நரம்பிற்கு அருகில் பின்னையான துத்தமும் முந்தையான தாரமும் நின்றன. வெள்ளை என்ற இளி நரம்பிற்கு அருகில் ஆயமகள்கள் என்ற உழையும் விளரியும் நின்றன. பின்னையாகிய துத்த நரம்பிற்கு இடதுகைப்பக்கம் ஆயமகள் என்ற கைக்கிளை நரம்பு நின்றது. முந்தை என்ற தார நரம்பிற்கு வலது கைப்பக்கம் ஆயமகள் என்ற விளரி நரம்பு நின்றது .

**(முந்தை – முத்தை ; விகாரம்)**

**"முத்தை முதல்வி அடி பிழைத்தாய் (மணி. 19:13) என்றார் பிறரும்"**

← சிலப் 17: (15) அடியார்க்.

# வட்டப்பாலை

## (வலமுறை)

வடக்கு












களஞ்சியம் என்ற நிலையில் சொற்களுக்குரிய பொருள் எந்தெந்த நூல்களிலெல்லாம் காணப்படுகிறதோ அவையெல்லாம் அரிதின் முயன்று தொகுக்கப்பட்டுள்ளன.

– போா. முனைவர் இ. அங்கயற்கண்ணி, இசைத்துறைத்தலைவர், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

இந்த அகராதி பொதுவாசிப்பாளர், தமிழிலக்கியம் பயிலும் மாணவர்கள், கற்பிக்கும் ஆசிரியர்கள், இசையும் இயலும் பயிலும் மாணவர்கள், பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள் ஆகிய அனைவர்க்கும் பயன்படும் வகையில் ஆக்கப்பெற்றுள்ளது.

– போா. முனைவர் தொ. பரமசிவன், ஆட்சிக்குழு உறுப்பினர், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

அகரவரிசையிலுள்ள சொற்பொருள் விளக்கங்கள் சிறப்பாக அமைந்துள்ளன.

– போா.முனைவர் தி. அருட் செல்வி, இசைத்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.